கோவைத் தமிழ்ச்சங்க வெளியீடு – 12

உ

சிவமயம்

திருத்தொண்டர் புராணம் என்னும்

# பெரியபுராணம்.

அருண்மொழித்தேவர் என்னும் சேக்கிழார் நாயனர்

அருளியது

(ஏழாம் பகுதி – 3747—4281)

வார்கொண்ட வனமுலையாள் சருக்கம் – (2) முதல்

வெள்ளானைச் சருக்க முழுதும்

[படங்களுடன்]

கோவைத் தமிழ்ச்சங்கத் தலைவர் – வழக்கறிஞர்

சிவக்கவிமணி-C.K. சுப்பிரமணிய முதலியார், B.A. அவர்களது

உரையுடன்

சாது அச்சுக்கூடம்

இராயப்பேட்டை, சென்னை – 14

கோவைத் தமிழ்ச்சங்கம்

கோயமுத்தூர்

6—5—1954



[விலை ரூபா 13-8-0

உ
சிவமயம்

**எழுத்துச்சுவடி நிறைவு விழாவில் வெளியீட்டின்**

# முன்னுரை

## (1948)

### பின்னுரையின் முன்னுரை.

### பெரியபுராண உரை எழுத்து நிறைவு.

அன்பர்களே! அடியேன் திருவருட்டுணை கொண்டு பெரியபுராண உரை எழுதத் தொடங்கி இப்போது 14 ஆண்டுகளாயின. எழுதினதோடமையாது கோவைத் தமிழ்ச்சங்கச் சார்பில் அவ்வப்போது அச்சிட்டு வெளியிட்டும் வந்தேன். முதற் சஞ்சிகை 5-6-1935 தேதி சேக்கிழார் திருநாளன்று சிதம்பரத்தில் பல பெரியார்கள் முன்னிலையில் வெளியிடப் பெற்றது. முதற் பகுதியாகத் திருமலை தில்லைவாழந்தணர் சருக்கங்கள் 15-9-37 தேதி நிறைவேறின. அப்போது முகவுரைக்கு முன்னுரை என ஒன்று எழுதினேன். அதனுள் இவ்வுரை எழுத நேர்ந்த வரலாறுகளை எழுத நேர்ந்தது. II பகுதியாக இலைமலிந்த-மும்மையாலுலகாண்ட சருக்கங்கள் 25-12-1940 தேதியிலும், III முதற்பாகம் 26-11-43 தேதியிலும், இரண்டாம் பாகம் 23-3-46 தேதியிலும் வெளிப்போந்தன. அவைகட்கும் அவ்வப்போது முன்னுரைகள் எழுதி அவ்வவை போந்த வரலாறுகளினளவு வரை அவ்வவற்றுள் எழுத நேர்ந்தது. IV பகுதி இன்னும் 2 திங்களில் நிறைவாகுமென்று நம்புகிறேன். அதற்கும், பின் வரும் V-VI பகுதிகளுக்கும் திருவருள் கூட்டிவைக்குமாறு அவ்வப்போது முகவுரைகள் எழுத நேரும். ஆனால் இப்போது எழுதும் முடிப்புரையின் முன்னுரை என்ற இது வேறு; இஃது அச்சுப் பிரதிகளுக்குச் சம்பந்தப்பட்டதன்று. புராணவுரை எழுத்துத் திருப்பணி நிறைவாகின்ற நிலையில் எழுதப்படுவதாகும். ஆயினும் அச்சு உருவத்தில் ஆறுவது பகுதி நிறைவாகும்போதுதான் முடிப்பாகிய பின்னுரை எழுதலாகும். அதன் முன் அதுபற்றி எழுதலாயினமையில் இதனைப் பின்னுரையின் முன்னுரை என்று மேற்குறியிட்டேன். எனது பணிகள் யாவும் எனது குறைபாடுகளைப் பின்பற்றியே தடுமாற்றமுடையனவாதல் இயல்புதானே?

"எண்ணிலுடலொழியவுயரெழிற்றில்லையம்பலத்தே, புண்ணியமன்றினிலாடும் போதுசெயா நடங்காண, நண்ணுறுமுடலிதுவன்றோ நமக்குடலாய் நயந்தவுடல்" என்றபடி முன்னுரைகளும் பின்னுரைகளும வந்த தேதிகளிலோ எழுதச் சமயம் நேர்ந்தனவாயினும், இவ்வுரை எழுதும் பேறுபெற்றதனால், அடியேனது எழுபதாண்டு நீண்ட வாழ்க்கையில் மிகச் சிறந்த நாளென வொன்றிருக்குமாகில் அஃது இந்நாளே என்பேன்; பெரிய

புராணத்தின் பெருமை எங்கே? அடியேனது சிறுமை எங்கே? மலையுச்சியும் கடலாழமும் ஒவ்வினும் ஒவ்வாதே! இப்பெரும் பணியை எண்ணாது துணிந்த எனது பேதைமையினையும் பொறுத்தருளி அடியேனது சிறு தகுதிக்கேற்றவாறு இப்பெரும் பணியினைச் சிறியேனையும் ஒரு கருவியாக் கொண்டு நிறைவேற்றியருளிய ஸ்ரீ நடராசப் பெருமானது பெருங் கருணையினை என்னென்று போற்றிசைப்பேன்? — "இத்தனையு மெம்பரமோ வைய வையோ வெம்பெருமான் றிருக்கருணை யிருந்த வாறே"; அடியேன் பொருட்டுத் தமது அற்புதமாகிய சிற்சபையினின்றும் போந்து தேவியுந் தாமுமாக இந்த ராசசபையிற் கொலுவமர்ந்து எளிய எனது எழுத்துத் திருப்பணியினையும் ஏன்றுகொண் டருளியது எம்பெருமானது கருணையின் பெருக்கேயன்றோ? இப்பணியின் இடையே எத்தனை விகாதங்கள்! ஒன்றன்று. பலவே; உயிருக்காபத்தான பிணிகளுக்கும் அளவில்லை. தொடக்கத்தில் 1936-ம் ஆண்டு திருநீலகண்ட நாயனார் புராணம் அச்சிலிருக்கும் போது அடியேனது மூக்கினுள் ஒரு பரு வந்து முகம் வீங்கி விகாரப்பட்டு நினைவும் மாறும் நிலை; அன்று அந்த ஒரு புராணமாவது நிறைவாயிற் றென்றிருக்கட்டுமே என்ற ஏக்கத்தால் மருத்துவராணையினையும் மீறிப் படுக்கையினின்றும் எழுந்து என்வீட்டாரும் அறியாத நிலையில் புரூப் திருத்தினேன். அன்று அவரறியாதே ஒரு மரண சாசனமும் எழுதினேன். இறைவரருளால் அந்நோயினின்றும் தப்பினேன். அதன்பின் அவ்வாறு உயிர்க்காபத்தான பிணி நிலைகளும் பல. ஆனால் எந்நாளும் விடாது தமது பூசையினை மட்டும் வழுவாமல் எளியேன்பாற் கொண்டருளியது இதுவரை இறைவனருள். சிவபூசையில் வேண்டியவற்றை விண்ணப்பிக்கும் இடமொன்றுண்டு. தினமும் அடியேனது பிரார்த்தனைகள் மூன்று. அவற்றுள் ஒன்று இப் புராண முற்றும் உரை எழுத்திலாவது நிறைவேற்றுவிக்க வேண்டுமென்பதாகும்; அதனை நாடோறும் கேட்டுவந்த அடியேனது ஆன்மார்த்த நாயகராகிய பட்டிப்பெருமான் "பன்னாளழைத்தால், இவனெனைப் பன்னாளழைப்பொழியானென் றெதிர்ப்படுமே" என்றபடி இன்று அதனை முற்றுப் பெறவும் அன்பர்கள் ஆசி புரியவும் அருள் புரிந்தனர். எனது தந்தையார் மிகுந்த பணம் செலவிட்டு எனக்கு அட்டவர்க்கம் முதலானவை கணக்கிட்டநீண்டதொரு சாதகக் குறிப்பு எழுதி வைத்துள்ளார். அதன் கடைசியில் இவ்வாறு எழுதப்பட்டுள்ளது:—"இதன்மேல் புதன் திசையில் சுக்கிரன் புத்தி ௵2 ௴10க்குச் சர்வதாரி௵ பங்குனி௴ சஉ வரைக்கும் நடந்துவரும பலன் குணதோட மிசிரம். விசேஷம் சென்மாதி வயது ௵எ0 ௴0 தினம் உக; இதன்மேல் பெரியோர்கள் சாவகாசத்தில் ஆலோசித்து எழுத வேண்டியது. சுபமஸ்து. தீர்க்காயுஷ்மஸ்து" என்று முடித்திருக்கிறது. ஆனால் அக்காலத்தின் பலனும் அவ்வாறுதானிருந்தது. அந்தச் சாதகக் குறிப்பின்படி உண்மை நிகழ்ந்திருப்பின் இவ்வுரை எழுத்து நிறைவும் காண இயலாமற் போயிருக்கும். வேறு ஒரு சோதிடர் சில ஆண்டுகளின் முன்னர் அடியேன் சாதகத்தைப் பார்த்து வயது 66 ஆண்டு நிச்சயித்தார். மற்றொருவர் கைரேகை

பார்த்து " உமக்கு வயது 42 தான்; அதற்கு மேல் உள்ளதெல்லாம் மறு சென்மங்கள்; ஒரு பிறப்பிலே மறு சென்மங்கள் பல எடுக்கலாமென்பதற்கு விதியுள்ளது; நீர் 2-3 முறை இயமனை ஏமாற்றியிருக்கிறீர்; 2-3 மறுசென்மங்கள் எடுத்திருக்கிறீர். புராண உரை முடியும் வரை உமது ஆயுள் நீடிக்கும்" என்று தைரியங் கூறினார். எது எவ்வாறாயினும் பெரிய புராண உரை எழுத்து நிறைவுகாணும்படி அடியேனுக்கு அறிவும் ஆற்றலும் ஆயுளும் இறைவர் அருள் செய்தார் என்பது உண்மை. இவ்வழிபாட்டுக்குதவியருளிய தில்லைவாழந்தணர்களுக்கும், மற்றும் அடியார்கள் எல்லாருக்கும் அடியேனது வணக்கம் உரித்தாகுக.

இனி, இதன் அச்சின் நிலை வேறு; இப்போது 2500 பாட்டுக்கள் வரை அச்சேறியுள்ளன. இனியும் 1780 பாட்டுக்கள் உரை அச்சேற உள்ளன. அவை 26 சஞ்சிகைகள் வரை ஆகும். அச்சுவேலைக்கு உள்ள முட்டுப்பாடுகள் பல; காகிதமின்மை பெருந்தொல்லை; அச்சுக்கும் பிற சாதனங்களுக்குமாக உள்ள நிதியின்மை முதலிய தங்கடங்களும் உண்டு. முன் இருந்த அளவுக்கு 4 மடங்கு தொகை இப்பொழுது நிலவரப்படி வேண்டியிருக்கின்றது. அடியேனது எழுத்துப்பணியுடன் எனது கடமையினை ஒருவாறு நிறைவேற்றியுள்ளேன். இதுவரை அச்சுவேலைகளில் உதவியும், காகிதம் வாங்கி உதவியும், புரூப்கள் திருத்தியும், மற்றும் பற்பல உதவிசெய்தும் உதவிய பெருமக்கள் எல்லாருக்கும் அடியேன் கடப்பாடுடைய நன்றி செலுத்துகிறேன். இவ்வுரை எழுத்துப்படி சைவவுலகத்துக் குரித்தாகும். இனி இப் புராண உரை அச்சுவேலை நிறைவேறிச் சைவத்தமிழ் உலகிற் பரவிப் பயன்படும் நிலை சைவவுலகத்தைச் சார்ந்தது.

இறைவரருள் சிறக்க. சேக்கிழார் சேவடி வாழ்க.

இராசசபை — சிதம்பரம்.
ஆனித் திருவிழா 12—7—18
சாவதாரி ஆனி 29உ திங்கட்கிழமை

அடியேன்
C. K. சுப்பிரமணிய முதலியார்

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# ஏழாம்பகுதியின் முன்னுரையும் புராணத்தின் பின்னுரையும்

## (1954)

ஆறும் பகுதி 1 – 2 – 1953-ந் தேதி. வெளியாயிற்று. அதன்பின் 1¼ ஆண்டுகளின்பின் (6–5–54) இவ்வேழாம் பகுதி வெளிவரத் திருவருள் கூட்டியுள்ளது. இதனுடன் புராண உரை முழுதும் நிறைவேறுகின்றது.

இதற்கு முன் 6 பகுதிகளுக்கும், புராண எழுத்து நிறைவுவிழா வெளியீடாகிய சிறு நூலுக்குமாக ஏழுமுறை முன்னுரைகள் எழுதநேர்ந்தது. ஆனால் அப்போதெல்லாம் மனக்கவலையுடன்தான் எழுதினேன். புராண உரை முற்றும் நிறைவெய்தவேண்டுமே! அதனைக் காண இறைவன் எனக்கு ஆயுளும் ஆற்றலும் அறிவும் ஈந்தருளுவாரா? என்கின்ற ஐயம் தான் அக்கவலைக்குக் காரணம். காலஞ்சென்ற தமிழ்ப்பெரியார், Rev. G.U போப் ஐயர் என்னும் ஆங்கிலேயர் தமது 75-வது வயதில் திருவாசகத்தை ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கத் தொடங்கினர். அப்போது அந்தப் பெரிய வேலையை நிறைவேற்றும் வரைக்கும் தமக்கு ஆயுள் இருக்குமோ என்று தம்மினும் மூத்த வயதுசென்ற ஒரு நண்பரிடம் பேசிக்கொண்டிருந்த போது, "ஒரு நல்ல பெரிய காரியத்தைத் தொடங்கினல் அது முடியும்வரை அவருக்குக் கடவுள் ஆயுள் கொடுப்பார்" என்று அவர் கூறினாராம். அம் மொழிபெயர்ப்புத் தமது 80-வது வயதில் நிறைவேறியபோது அது தமக்கு நினைவுக்கு வந்தது என்று Rev. போப் அவர்கள் திருவாசக மொழிபெயர்ப்பின் முகவுரையில் எழுதியிருக்கிறர். அதுபோலவே எனக்கும் ஐயம் வந்தது. அதன் காரணமாகவேதான் புராணவிரிவுரை சில பெரும் பகுதிகள் நிறைவேறியவுடன் அவ்வப்போது நிறைவு விழாக்களும் கொண்டாடப்பட்டன. திருநாவுக்கரசு நாயனர் புராண நிறைவின்போது தருமபுரம் ஆதீனம் அப்போதிருந்த ஸ்ரீலஸ்ரீ சண்முகதேசிகபரமாசாரிய மகாசந்நிதானங்களின் 10-ம் ஆண்டு ஆட்சி நிறைவு விழாவில் 6–9–43 தேதி அம்மகாசந்நிதானங்களின் திருமுன் அவ்வுரைப் பகுதிக்கும் அரங்கேற்றம் கொண்டாடப்பட்டது. அந்நாயனர் புராணவுரை அவர்களது அருளாணை உதவியினல் வெளிவந்ததும் அன்பர்களுக்கு நினைவிருக்கலாம். அதுபோலவே மற்ருெரு பெரும் பகுதியாகிய திருஞானசம்பந்த நாயனர் புராண உரை நிறைவின்போதும் திருநல்லூர்ப்பெருமணம் என்னும் ஆச்சாள்புரத்தில் அவ்வாதீனம் இப்போது எழுந்தருளியிருக்கும் ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிக பரமாசாரிய மகாசந்நிதானங்களின் அருளாணைகொண்டு 1–6–50 தேதி திருஞானசம்பந்த நாயனரது திருநாளில் அரங்கேற்றுவிழாக் கொண்டாடப்பட்டது. ஆனல் அதற்குமுன்பே

புராணஉரை கையெழுத்துப்பணி நிறைவேறிவிட்டமையால் அதற்காக 13–7–48-ல் ஆனியுத்திரப் பெருவிழாவின்போது சிதம்பரத்தில் ஒருவிழாக் கொண்டாடப்பட்டது. இவையெல்லாம் பின்னே முற்றும் நிலை எவ்வாறிருப் பினும் அவ்வப்போது அந்தந்த அளவில் இப்பேருரைப்பணி நிறைவாயினமை பற்றி அறிவித்து அடியேனதுமனம் அமைதி அடைதற்பொருட்டும், அன்பர் களும் மன ஆவல் அமைதி கொள்ளும் பொருட்டுமே செய்யப்பட்டன. அடி யேன் இப்பெரும் பணியை எனது 58-ம் வயதில் 1935-ம் ஆண்டில்தான் தொடங்கினேன். எல்லா நற்காரியங்களுக்குப்போலவே இதற்கும் பற்பல இடையூறுகள் ஏற்பட்டன. எனது உயிருக்கு ஆபத்தான நிலையில் பல பிணி களுக்கும் உள்ளாயினேன். தொடக்கத்திலேயே எனது மூக்கினுள் ஒரு பரு வந்து மிக வருந்தினேன்: நினைவு மாறும் நிலையும் வந்தது. உலக யுத்தங்கள் இரண்டு நிகழ்ந்தன. அதனால் காகிதமும் பொருளும் கிடைக்காத நிலையில் பல காலம் அச்சுவேலை முற்றிலும் நின்றுவிடவும் நேர்ந்தது. இன்னும் பணமின் மை, காகிதமின்மை முதலிய பல தொல்லைகளும் வந்தன. ஆனால் "தனக் குவமை யில்லாதான் றாள்சேர்ந்தார்க் கல்லால், மனக்கவலை மாற்ற லரிது" என்னும் முதுமொழியைக் கடைப்பிடித்துக் கொண்டு "என்செய லாவ தியா தொன்று மில்லை" என்று இறைவரது திருவருளையே சார்ந்து இடைவிடாது சலியாது முயன்று வந்தேன். மனக்கவலையும மாறிற்று. மிக அரிய இத் திருப்பணியும் நிறைவேறிற்று. இம் முன்னுரையை எவ்விதமான கவலையும் சோர்வுமின்றி எழுதுகின்றேன் என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவிக்கின் றேன். இறைவன் திருவருளுக்கும் அன்பர்களுடைய ஆசிக்கும் வணக்கம். புராண உரை நிறைவுவிழாத் தில்லைமாநகரில் ஆயிரக்கால் மண்டபத்தில் 1954 மேமீ 6, 7 தேதிகளில்(ஜய–சித்திரை 24, 25, தேதிகளில்) மிகச் சிறப்பாக நடந்தேறியது. அதன் விரிவு புராண இறுதியில் சேர்க்கப்பட்டுள்ளது. "அத்தனெனக் கருளியவா றார்பெறுவா ரச்சோவே" என்று பெரு மகிழ்ச்சியடைகின்றேன். தில்லைவாழந்தணர்களும் சைவப் பெரு மடத் தலைவர்களும் ஆசிர்வதித்துச் சிறப்புச் செய்தார்கள். அன்பர்கள் ஆசி கூறி அருமைப்படுத்தினார்கள். உலகம உவந்தது. அடியேனும் உய்தி பெற்றேன். ஏறக்குறைய 50 ஆண்டுகளாக அரும்பாடுபட்டு முயன் றும், அதில் 18-ஆண்டுகளாகப் பற்பல இன்னல்களிடையே அச்சியற்றிப் பணியாற்றி வந்ததன் சங்கடங்கள் எல்லாம் தில்லை அம்பலவாணன் திருமுன்னர் ஒருநாளிலே மறைந்து பேரின்ப வாழ்வினை அடைந்து மகிழ்ச்சிபெறச் செய்தது திருவருட் செயல். உரை நிறைவு விழாவுக்காகச்

**நன்றி**

செயற்குழு அமைத்து அது வெற்றிகரமாக நிறைவேற எல்லா முயற்சிகளும் செய்த என் நண்பர்களுக்கும், சிறப் புச் செய்து ஆசி யருளிய தில்லைவாழந்தணர்களுக்கும, பற்பல அரிய சிறப் புக்களும் செய்து ஆசியருளி வாழ்த்திய சைவப் பெருமடத் தலைவர்களுக்கும், சிவஞானச் செல்வர்களுக்கும், வாழ்த்துப் பத்திரங்கள் வழங்கி அளவளாவிப் பற்பல சிறப்புக்கள் தந்த சமூகத்தினர் அனைவர்களுக்கும், வாழ்த்துரை

வழங்கிய புலவர் பெருமக்களுக்கும், விழா நிகழ்ச்சிகளைச் சிறக்கச் செய்த எல்லாப் பெருமக்களுக்கும், நெடுந்தூரங்களிலிருந்து வந்து விழாவிற் கலந்து கொண்டு மகிழ்ச்சி தந்த எல்லா அன்பர்களுக்கும் எனது கடப்பாடுடைய நன்றியை தெரிவித்துக் கொள்கின்றேன்.

இமய மலைச்சாரலில் உள்ள திருக்கேதார நாதர் படங்களையும் அடி யாத்திரை வரலாற்றையும் அங்கு நேரிற் சென்று வழிபட்டுவந்த பேரன்பர் திரு. சொ. திருநாவுக்கரசு செட்டியார் உதவினர். திருவொற்றியூர், திருக்கச்சூர் ஆலக்கோயில், திருமுல்லைவாயில், ஞாயிறு, திருமயிலை இந்தப் பதிகளின் படங்களை அன்பர் திரு. P. E. காபாலி அவர்கள் (சென்னை விவசாய இலாகா உத்தியோகஸ்தர்) எடுத்துஉதவினர். ஸ்ரீலஸ்ரீ தருமபுரம் மகாசந்நிதானங்கள் 22 படங்கள் பிளாக்குகளாகவே உதவியருளினர்கள். பாண்டிநாட்டுத் திருச்சுழியல், திருக்கானப்பேர் இவற்றின் படங்களை எனது மைத்துனர் அன்பர் திரு. S. தருமலிங்க முதலியார் உதவினர்கள். திருமருகல், திருச்செங்காட்டங்குடி, நாகப்பட்டினம் என்னும் பதிகளுக்குத், தாமே சென்று படங்கள் எடுத்து உதவியவர் எனது உறவினரும் பேரன்பருமாகிய, திருச்சி சில்லா, கொகூர் கர்னம் B. வைத்தியலிங்க முதலியார் ஆவர். சீகாழிக் கணநாதர் கோயிலை அடியூர் மிராசுதாரரும பேரன்பருமாகிய திரு. C. சீனிவாச முதலியார் தாமே எடுத்து உதவினர். அவிநாசி, திருமுருகன் பூண்டிப் படங்களை அடியேன் நேரில் போய் எடுத்துவந்தேன் ; அதற்கு உதவியாகத் தமது (மோட்டார்) விசை வண்டியைக் கோயமுத்தூர் மிராசு தாரரும் என் உறவினரும் ஆகிய அன்பர் திரு R. பசுபதி முதலியார் உதவி னர். இவர்கள் எல்லோருக்கும் என் மனமார்ந்த நன்றி செலுத்துகின்றேன். சென்னை விவசாயத்துறையில் அரசாங்கத்தில் வெளியிடும " மேழிச் செல் வம் " என்றப் பத்திரிகையின் ஆசிரியர் என்ற உத்தியோகத்திலமர்ந்து இப் புராண உரைக்கு வேண்டிய, தொண்டை நாட்டுப்படங்களும் பிறவும் எடுக்கவும, பிளாக் செய்யவும், மற்றும அச்சுக்கு வேண்டிய பலபல உதவிகள் செய்து அரிய பணிபுரிந்து வந்தவர் எனது இளைய மைத்துனரும் அன்பரு மாகிய ஸ்ரீ இராசரத்தின முதலியார் ஓராண்டின்முன் சிவபதமடைந்து விட்டார். அவர் செய்துதவிய அரிய சேவைகளைப் பாராட்டி நன்றி கூறி, அவரது இன்னுயிர் இறைவன் திருவடிக்கீழ் அமைதிபெற்று இன்புறுவதாக என்று திருவருளைச் சிந்திக்கின்றேன். அவர்கள் மேலும தொடர்ந்து செய்ய நின்ற பல உதவிகளையும் இவ்வெளியீடு இழந்துபட நேர்ந்தமை பற்றி எனது வருத்தத்தையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

புராண உரைப்பகுதிகளை நமது சென்னை அரசாங்கத்தாருடைய அதி காரத்தின் கீழுள்ள எல்லாப் பள்ளிக்கூடங்களிலும், புத்தகசாலைகளிலும் வாங்கி வைக்கலாமென்று சிபார்சு செய்து சென்னை கல்வியிலாகா பேரதி காரி (Director of Public Instruction) அவர்கள் (Roc. No. 265

J2/54 dated 22—6—54.)* உத்தரவு செய்துள்ளார்கள். மேற்படி உத்தரவின் நகல் இதில் தனியாய்க் குறிக்கப்பட்டிருக்கிறது. அதுபற்றி எனது மனமார்ந்த நன்றியைச் செலுத்துகிறேன். மேலதிகாரியின் இவ்வித மான உத்தரவு இதுவரை இல்லாமையினாலே நகரசபைகள், (Municipality) ஜில்லா சபைகள், (District Board) தனிப்பட்ட அதிகாரத்தில் உள்ள பள்ளிக்கூடத்தார்கள், (Private Management Schools and Colleges) பொதுப்புத்தகசாலைகள் (Public Libraries) இவைகளின் உபயோகத்திற்கு இந்தப் பேருரைகளை வாங்குவதற்கு ஒரு தடை இருந்தது. மேற்படி உத்தரவினால் தடை நீங்கிவிட்டதனால் மேலே குறித்த எல்லாத் தாபனங்களின் அதிகாரிகளும் இப்பேருரையின் பிரதிகளை வாங்கிப் பயன் படுத்துவார்களென்று நம்புகிறேன். இதுபோலவே இந்து சிவ-வைஷ்ணவ-தேவஸ்தானத்தின் புத்தகசாலைகளுக்கும் இப்பிரதிகளை வாங்கிப் பயன்படுத்திக்கொள்ள அதிகாரிகள் உத்தரவு செய்வார்கள் என்று நம்புகிறேன்.

**பொருள் உதவிகள்**

இவ்வேழாம் பகுதிக்குமுன் இவ்வுரை வெளியீட்டுக்குப் பற்பல பொருளுதவிகள் பல பெருமக்களிடமிருந்து பெற்றேன். அவற்றைப்பற்றி அவ்வப்போது முன்னமே தெரிவித்து நன்றி செலுத்தியிருக்கின்றேன். சைவ ஞானத் திருப்பெரு மடங்களின் அதிபர்களும், சென்னைப் பல்கலைக் கழகமும் மற்றும் பல அன்பர்களும் பெரும் பொருளுதவி செய்துள்ளார்கள். அவையெல்லாம் காலத்தினாற் செய்த நன்றியாக இவ்வெளியீட்டுக்குப் பேருதவி புரிந்தன. இனி,

*Proceedings of the Director of Public libraries Madras. Roc. No. 265 J2/54 dated 22—6—54.

*Sub* :—Libraries - Books and publications. **"Periyapuranam"** by Sri. C. K. Subramanya Mudaliar purchase of copies for use in public libraries commended.

The Director commends the purchase of copies of the book mentioned below for use in all public libraries in the State.

Periyapuram - in Tamil in 4 Volumes by Sri C. K. Subramanya Mudaliar.

The Cost of the each of the volumes is as detailed below :—

| | | | |
|---|---|---|---|
| Vol. III | Rs. 13—8—0 | Vol. IV | Rs. 12—8—0 |
| Vol. V | Rs. 13—8—0 | Vol. VI | Rs. 13—8—0 |

Vols I and II of the above book are out of stock.

2. Copies of the book may be obtained from C K Subramanya Mudaliar, B. A., Vysiyat St., Coimbatore.

3. The undermentioned officers are requested to bring this circular to the notice of the Managements of all public libraries in their jurisdiction.

(Sd.) **N. R. Perumal Mudaliar.**

*For* Director of public libraries.

To

The District Educational officers.

A

இறுதிப் பகுதியாகிய இவ்வேழாம் பகுதிக்குப் பேராதரவும் பரிசுமாகப் பலர் வழங்கிய உதவிகளை இங்கே நன்றியுடன் தெரிவிக்க வேண்டியதவசியம். சென்னைப் பல்கலைக்கழகத்தார்கள் தொடக்கத்தில் 1000 ரூபாய்கள் நன்கொடை தந்து இவ்வெளியீட்டினைத் தொடங்கி வைத்து ஆதரித்தார்கள். அதுபற்றி முன்னமே அறிவித்துள்ளேன். இப்போதும் புராண உரைநிறைவின்போது 1000 ரூபாய் பரிசிலாகத் தந்து, அதனைத் தங்கள் பிரதிநிதியாக அங்கத்தினர் திவான்பகதூர் – திரு. T. M. நாராயணசாமி பிள்ளை எம்.ஏ., பி.எல். அவர்களை அனுப்பி நிறைவு விழாவிற் பொது மக்களின் திருக்கூட்டத்தின் முன்பு வழங்கச் செய்து கௌரவித்தார்கள். சென்னைப் பல்கலைக்கழகத் துணை வேந்தர் திரு. சர். A. லட்சுமணசாமி முதலியார் அவர்கள் என்னிடத்தில் மிக அன்பு பூண்டவர்கள். இவ்வுரையின் நிறைவு காண்பதில் ஆர்வமுள்ளவர்கள். நிறைவு விழாவுக்கு அவர்கள் நேரில் வரக்கூடாதபடி (Geneva) ஜெனிவா நகரத்தில் ஒரு பெருங்கூட்டத்தில் பணியாற்றச் செல்ல நேரிட்டமையால் தமது நண்பராகிய ஷை திரு. T. M. N. பிள்ளையவர்களை நேரில் இப்பரிசு வழங்கச் செய்தமை தமிழுலகுக்கும் சைவவுலகத்திற்கும் அவர்செய்த பெருங் கௌரவமாகும். இனி, எனது பெருநண்பர் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தின் துணை வேந்தராயிருந்து காலஞ் சென்ற திரு. சர். R. K. சண்முகம் செட்டியார் அவர்களும் இவ்வுரை நிறைவு காணும் நிலையில் மிகவும் அக்கரை கொண்டார். அதனால் VII பகுதி முடிக்கும் பொருட்டென்றே குறியிட்டு 1500 ரூபாய் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்திலிருந்து நன்கொடையாக உதவினார்கள். அவர்கள் இவ்வுரை நிறைவு விழாவின் முன் காலஞ்சென்றுவிட்டமை பற்றிப் பெரிதும் வருந்துகின்றேன். இனிக், கோயமுத்தூரில் எனது நீண்டகால நண்பரும், பெருநிலக்கிழாரும், கௌரவ மாஜிஸ்திரேட் நீதிமன்றத் தலைவருமாகிய திரு. C. N. நாகப்ப கவுண்டர், B. A., B. L., அவர்கள் தாமாகவே இவ் வேழாம் பகுதிக்கு 500 ரூபாய் மனமுவந்து உதவினார்கள். இதுபற்றி முன்னமே அறிவிப்புச் செய்திருக்கின்றேன். இனிக், கோவையில் பெருநிலக்கிழாரும் என் நண்பருமாகிய திரு. N. கோனே கவுண்டர் அவர்கள் இதற்கு ரூபாய் 250 நன்கொடை யளித்தார்கள். இவ்விரு பெருமக்களும் தங்கள் ஆர்வ மிகுதியால் தமர்களுடன் திருத்தில்லை போந்து நிறைவு விழாவையும் சிறப்பித்தார்கள். எனது மற்றுமொரு நண்பர் கோவை – திரு. ஸ்ரீமான் நாதமுனிக் கவுண்டர் அவர்கள் ரூ. 50/- (ஐம்பது) ரூபாய் தாமாகவே நன்கொடை அளித்தார்கள். மேலே குறித்த எல்லாருக்கும் எனது கடப்பாடுடைய நன்றி உரியது.

பிரிவாற்றமை

இந்த வெளியீடு தொடங்கியபின் இதில் மிகுந்த ஆர்வங்கொண்ட பல அன்பர்கள் பிரிந்துவிட்டார்கள். அவர்களை எண்ணும்போது மனம் பெரிதும் வருந்துகின்றது. அவர்களுட் பலபேர் இவ்வுரையின் நிறைவு காண்பதில் என்னினும் மிக்க ஆர்வத்தோடிருந்தனர். சிலர் "நாங்கள் எல்லாரும் கண்டுகளிக்கும்படி இவ்வுரையை விரைவில்

முடியுங்கள்' என்றார்கள். சிலர், "முதற்பகுதியின் முன்னுரையில் 12–12-ஆண்டு எல்லையாக மூன்று பாகங்கள் கூறியதுபோல இதற்கும் 12 ஆண்டுகள் கூறுவீர்களோ" என்றார்கள். மற்றும் சிலர், உரையைச் சுருக்கி முடிக்கும்படி வேண்டினார்கள். இவ்வாறு பேராவலுடன் விரும்பிய அன்பர்கள் பலரும் பிரிந்துவிட்டார்கள். ஆனால் அவர்களுடைய இன்னுயிர்கள் பரமுத்தி நிலைக் கூடாவிட்டால், இப்போது எந்தப் பிறவியிலோ எந்த உலகிலோ சஞ்சரித்துக் கொண்டுதானிருக்கும். அவர்கள் எண்ணிய இந்த விருப்பங்கள் கன்ம சேடங்களாகையினாலே, "எங்கேனும் யாதாகிப் பிறந்திடினும் தன்னடியார்க், கிங்கேயென் றருள்புரியு மெம்பெருமான்" என்றபடி, அவ்வுயிர்கள் எங்கெங்கே எவ்வாறிருப்பினும் அங்கங்கே கன்ம சேடங்களை அனுபவிக்கும்படி செய்வான் இறைவன் என்பது ஞான நூல்களின் துணிபாம். ஆகையினாலே இந்த அன்பர்கள் அங்கங்கிருந்தேயும் இந்நிறைவு விழாவினைக் கண்டு அமைதிபெறும்படி இறைவன் அருள்புரிவாராக. இனி, இவ்வாறு பிரிந்தோர்களுள்ளே உரைப்பணியில் பெருவிருப்பங் கொண்டு அரியபெரிய ஊக்கத்தையும் உதவிகளையும் புரிந்த பெருமக்களின் பெயர்களை யெண்ணும்போது, முதலில் எண்ண வருவது, சிதம்பரத்தில் வாழ்ந்த, சூரியனார் கோயிலாதீனம் ஸ்ரீமத் முத்துக்குமார முனிவர் பெருமானுடைய திருப்பெயரேயாகும்; இப்பெருமானை முன்னர் நான் நெருங்கிப் பழகிக்கொள்ளவில்லை. ஆனாலும் 1935-ம் ஆண்டு இப்பேருரையின் முதற் சஞ்சிகையினை வெளியிட்டு அரங்கேற்றியபோது வந்திருந்த சிறு கூட்டத்தில் கருணையினால் அவர்களும் வந்து எழுந்தருளியிருந்து அச்சஞ்சிகையினைக் கண்காணித்தார்கள். முதல் சஞ்சிகையில் பலதிறத்தனவாகிய பிழைகளும் விரவியிருத்தலைக் கண்டு பரிவு கூர்ந்தார்கள். உயர்ந்ததும் நிலைத்ததும் ஆயின திருப்பணியாகிய இது இயன்ற அளவில் பிழைகளில்லாமல் நன்றாய் வெளிவரவேண்டுமே என விரும்பினார்கள். என்னைத் திருத்துபவர்கள் வேறில்லாமையால், திருத்துமாறு அவர்களையே வேண்டிக்கொண்டேன். அவர்களும் கருணையினாலே இசைந்தார்கள். அது முதல் ஏயர்கோன் கலிக்காம நாயனார் புராணம் 234வது பாட்டு வரையில் அவர்களுடைய அரிய திருத்தங்களுடன் உரை வெளிவந்திருக்கிறது என்பதை நீங்களெல்லாரும் அறிவீர்கள். அதுவேயுமன்றி, அடியேனைப் பல மாதங்கள் சிதம்பரத்தில் தங்கச் செய்து, ஸ்ரீமாதவச் சிவஞான யோகிகளது சிவஞானபோதச் சிற்றுரையினையும், மாபாடியம் என்னும் பேருரையினையும் பெருங் கருணையினாலே பரம்பரைக் குருமரபுப்படி அடியேனுக்குப் போதித்து உபதேசித்தும் அருளினார்கள். அவர்கள் இறைவன் திருவடி எய்திவிட்டபடியால் அதற்கு மேலுள்ள பகுதியில் அவர்களின் அருமையான திருத்தங்கள் பெற இயலாமலிருந்தது பற்றி என்னுடைய துயரத்தை முன்னமேயே அன்பர்களுக்கு அறிவித்துக் கொண்டிருக்கிறேன். சிதம்பரத்திலிருந்த ஸ்ரீமத் செப்பறைச் சுவாமிகளின் மாணக்கர், பறங்கிப்பேட்டை வித்துவான் திரு. பெரியசாமி பிள்ளை அவர்களும், பச்சையப்பன் ஹைஸ்கூல் தமிழாசிரியராயிருந்த வித்துவான் - திரு.

தருமலிங்கம் பிள்ளை யவர்களும் இப்புராண உரைப் புரூப்களைப் பார்த்து அவ்வப்போது அரிய திருத்தங்கள் செய்து உதவிவந்தார்கள். இவர்களும் புராண உரை நிறைவெய்துவதற்குமுன் இறைவன் திருவடி எய்தி விட்டார்கள்.

**திருப்பணி செய்துதவிய அன்பர்கள்**

சிதம்பரம் உலகமூர்த்தி தேசிகர் மடம், வித்வான் திரு. ந. சிவப்பிரகாசக் குருக்களையா அவர்கள் தொடக்க முதல் உரை நிறைவுவரை புரூப்களைத் திருத்தியும் அரிய திருத்தங்கள் உதவியும் மற்றும் பல வகையாலும் இவ்வுரைக்கு வேண்டிய எல்லா உதவிகளும் செய்துள்ளார்கள். அவர்கள் எனது தீட்சா குருவினுடைய தம்பியாரின் மகனுவார். அவர்களுக்கு என் நன்றியும் வணக்கமும் உரியது. தருமபுர ஆதீன வித்துவான் திரு. முத்து, மாணிக்கவாசக முதலியார் அவர்களும் பல ஆண்டுகள் புரூப்கள் திருத்தி உதவினார்கள். சென்னை திரு. R. சண்முகசுந்தரஞ் செட்டியாரவர்கள் புராண அச்சுத் தொடக்கமுதல் பல ஆண்டுகள் இவ்வுரை வெளியீட்டுக்கு வேண்டிய எல்லா உதவிகளும் செய்தார்கள். திருத்துறையூர் அன்பர் திரு. K. ஆறுமுக நாயனர் அவர்கள் புராண உரைக்குப் படங்களெடுத்துதவியும், காகிதம முதலிய பெறுவதற்கு வேண்டிய உதவிகள் செய்தும் தலக்குறிப்பு பெயர்க்குறிப்பு முதலியவைகளைத் தொகுத்தும், மற்றும அச்சுக்கூடத்தார் மூலம் பெற வேண்டிய உதவிகளை எல்லாம் செய்தும், கொடுத்தும இவ்வுரையை நிறைவு காணவேண்டுமென்னும் பேரவாவினுலும் அளவிடற்கரிய பல பணிகள் இந்நிறைவுவிழாவின் நிறைவுவரை உடனிருந்து உதவியுள்ளார்கள். விழாவிலும் நேரில்வந்து சிறப்பித்தார்கள். வறுமையிற் செம்மை என்பது இவர்களிடம் காணும் அரிய சிறப்புக்களுள் ஒன்றுகும்.

தணிகைமணி - திரு. V. S. செங்கல்வராய பிள்ளை எம்.ஏ., அவர்கள், பல அருமையான கருத்துக்களையும் திருத்தங்களையும தமது முதுமையையும உடல்நிலைத் தளர்ச்சியையும் கருதாமல் உதவியுள்ளார்கள். இவ்விதமான பணிகளுடன் தமது மனம, மொழி, மெய்களால் உரைத்தொடக்க முதல் புராண உரை நிறைவு விழாவரையில் பற்பலவிதமான பேருதவிகளும் செய்த பேரன்பர்கள் பலருண்டு. அவர்கள் எல்லோரையும் இங்கே குறித்துக் கூறுதல் இயலாமையால் பொதுவகையால் அவர்களுக்கு நன்றி கூறுதல் மட்டில் அமைகின்றேன். உதாரண முகத்தால் சில அன்பர்களை மட்டும் எடுத்துக்கூறி மேலே கூறிய பேரன்பர்களுக்கும, தொண்டர்களுக்கும் எனது மனமார்ந்த கடப்பாடுடைய நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன் முன்பு,கோயமுத்தூரில் உத்யோகத்தில் இருந்து,இப்பொழுது திருநெல்வேலி சில்லா அம்பாசமுத்திரத்தில் ஆதீன இன்ஸ்பெக்டராக இருக்கும் அன்பர் திரு தா. ஆறுமுகம் பிள்ளை அவர்களுடைய பெயர் இத் தொண்டர் கூட்டத்தில் முதலாவதாக நினைக்கவருகின்றது. கோயமுத்தூரில் லைப் பெனிபிட் சொஸைடியில் அலுவல் பார்த்துவரும் திரு S.நமசிவாயம் அவர்களும், கோயம்புத்தூர் முனிஸிபல் ஹைஸ்கூல் தமிழாசிரியர் வித்வான் திரு·

S. அருணாசலம் பிள்ளை அவர்களும், கோவையில் எனது உறவினர்களில் ஒருவ ராகிய திரு D. ஞானசம்பந்தம் அவர்களும், புராணம், சஞ்சிகை முதலியவற் றின் பொருள் வருவாய்க்குரிய எழுத்து, (தபால்) அஞ்சல் முதலிய எல்லாப் பணிகளையும மனமாரச் செய்துவருகின்றார்கள். புராணப் புத்தகத்தின் கட்டிட வேலைகளை அழகாகவும, லகுவான செலவிலும், உறுதியாகவும் அப் போதுக்கப்போது அன்பர்களுக்கு மனமகிழ்ச்சி தருமபடி செய்து கொடுத்து அவர்களது நூல்நிலயத்தை அணிபெற உதவி வருகின்றவர் கோவை திரு D. சோமசுந்தர முதலியார் ஆவர். அவர்களுக்கு என் உள் ளிட்ட எல்லா அன்பர்களுடைய நன்றியும் உரியது. இனி, இவை எல்லா வற்றிற்கும் மேலாய்ப் புராணத்தை அழகாகவும், அன்பர்கள் எல்லாம மகிழும்படியாகவும எனது மனம்போல் செய்துகொடுத்த சாது அச்சுக் கூடத்தாருக்குக் கடப்பாடுடைய எனது மனமார்ந்த நன்றியைச் செலுத்து கிறேன். சென்ற 19 ஆண்டுகளாய் நீண்ட பெருங்கால எல்லையுள் புராண உரை அச்சுவேலைக்கு நேர்ந்த சங்கடங்களும, இடையூறுகளும கணக்கில் அடங்காதன. இரண்டு பெரிய உலகப் போர்களினால் காகிதங்களும், அச்சு வேலைக்கு உரிய சாதனங்களும கிடைக்காமல் வருந்தின காலங்கள் பல. பொருள் முட்டுப்பாட்டுக்கு அளவே இல்லை. என்னுடைய காமதங் களினால் அச்சுக்கூடத்தாருக்கு நேர்ந்த இன்னல்களும பல உண்டு. இவை எல்லாவற்றையும தங்கள் பெருமையினால் பொறுத்து இவ்வெளியீடு வெற்றி கரமாக முடிவுபெறுவதில் என்போலவே கவலை கொண்டு உதவிய என் நண்பர்கள் இவ் அச்சுக்கூடத் தலைவர்கள் காலஞ்சென்ற திரு.வி. உலகநாத முதலியார் அவர்களும், திரு. வி. கலியாணசுந்தர முதலியார் அவர்களும செய்த அன்பு உதவிகள் மிகப் பெரியன. இப்பொழுது அச்சுக் கூடத்தின் உரிமையாளர்களாகிய ஸ்ரீமதி - மங்கையர்க்கரசியம்மையார், ஸ்ரீமதி புனிதவதி அம்மையார் இவர்களின் செயலாளராகி நடத்திவரும அன்பர் திரு. மு. நாராயணசாமி முதலியார் அவர்களும், இவ்வெளி யீட்டை விரைவாக நிறைவேற்றிக் கொடுத்ததுமன்றி, நிறைவு விழாவில் வந் திருந்து சிறப்பித்தார்கள். இவர்கள் எல்லாருக்கும என் கடப்பாடுடைய நன்றி. இத்துணையும உடனிருந்து புராணப் பேருரையை முற்றுவித்து எனை என்றுகொண்டருளிய கூத்தப்பெருமான் திருவடிகளை வணங்குகின்றேன்.

வாழ்கவே வாழ்க சிவபிரான் திருவடி
வாழ்கவே வாழ்க சேக்கிழார் சேவடி
வாழ்கவே வாழ்க திருத்தொண்டர் மாக்கதை
வாழ்கவே வாழ்க அடியவர் வாழ்கவே.

திருச்சிற்றம்பலம் திருச்சிற்றம்பலம் திருச்சிற்றம்பலம்

சேக்கிழார் நிலயம்
கோயமுத்தூர்
29—6—54

அடியார்க்கடியேன்
சிவக்கவிமணி,
C. K. சுப்பிரமணிய முதலியார்

உ

சிவமயம்

# படங்களின் அட்டவணை

[எண்கள் - பாட்டு எண்]

1. திருச்செங்காட்டங்குடி.
   1. வண்ணமலர் ஆத்தி - (3700).
   2. சந்தனத் தாதியார் - சீராளதேவர் - திருவெண்காட்டு நங்கையார் சிறுத் தொண்ட நாயனார்.
   3. கணபதீச்சரக் கோயில் கோபுரம் - (3746).
   4. சிறுத்தொண்ட நாயனார் திருமடம் - (3730).
   5. திருவெண்காட்டு நங்கையார் - சீராளதேவர் - சிறுத்தொண்ட நாயனார் - திருமடத்தில் உள்ளவை - (3730).
   6. சீராளதேவர் - (பள்ளித் திருக்கோலம்) - (3681).
2. திருச்சுழியல் : கோயிலும் குளமும் - (3858)
   1. " கௌவைக்கடல் " (பதிகம்) திருக்குளம்.
   2. " காளையார் கோயில் " (திருச்சுழியலில் உள்ளது) - (3863).
3. திருநாகைக்காரோணம் - (3992).
   1. திருநாகை - அதிபத்தர் - மீன்கொண்ட நுளைப்பாடி - (3996).
   2. அதிபத்த நாயனார் (திருக்கோயிலில் உள்ள திருவுருவம்) - (4000).
4. சீகாழி.
   1. கணநாதர் கோயில் (கோயிலினுள் உள்ளது).
   2. ஷை தெற்கு வீதியில் உள்ளது.
5. திருமுருகன்பூண்டி.
   1. கோயில் முன்பார்வை.
   2. சுவாமி கோயில் விமானம்.
   3. வேடர் கோலம் (சிவகணம்).
   4. நம்பி ஆரூரர்.
6. திருப்புக்கொளியூர் அவிநாசி.
   1. குளக்கரை - நம்பிகள் கோயில் - முதலைவாய்ப் பிள்ளை அழைத்த மடு.
   2. அம்மை விமானம்.
   3. முதலைவாய்ப் பிள்ளை அழைத்த திருக்கோலம்.
   4. சுவாமி விமானம்.
7. திருமூலதேவ நாயனார்.
   1. திருவாவடுதுறை அரசடியில் ; தேவிருக்கைத் திருக்கோலம் - (3588).
8. திருமுறை அருளிய ஆசிரியர்கள் 27 பேர்.
9. தென்னாட்டு ரயில்வே படம்.

---

குறிப்பு :—இன்னும் சில படங்களும் நிறைவு விழாப் படங்களும் உண்டு. அவற்றைப் பிற்சேர்க்கை 4-ல் பார்க்க.

சிவமயம்

## ஏழாம் பகுதி—(வார்கொண்ட வனமுலையாள் சருக்கம் 2-ம் பாகமும், பொய்யடிமை யில்லாத புலவர் சருக்கம் முதல் வெள்ளானைச் சருக்க மீறாக உள்ளவையும்)

# பொருளடக்கம்

# படங்களின் அட்டவணை (தொடர்ச்சி)

(புராணத்துள் அங்கங்குச் சேர்க்கவேண்டியவை)

1. திருவதிகை வீரட்டானம்.
2. திருக்குறுக்கை (வீரட்டம்)
3. திருப்பனந்தாள் இறைவர் (தாடகைக்காகத் தலை சாய்ந்த திருக்கோலம்)
4. ஷை குங்குலியருக்காகத் தலை நிமிர்ந்த திருக்கோலம்.
5. திருப்பறியல் வீரட்டம் கோயில் (பரசலூர்)
6. வைத்தீஸ்வரன்கோயில்—சித்தாமிர்த தீர்த்தம்.
7. திருவாரூர்ச்சித்தீச்சுரம்—தட்சணாமூர்த்தி (கமலை ஞானப்பிரகாசருக்கு அருள் செய்த மூர்த்தி)
8. ஸ்ரீ ஆதி குமரகுருபர சுவாமிகள் (ஸ்ரீகாசியில் குமாரசாமி மடத்தில் உள்ள திருவுருவம்)
9. சிதம்பரம் ஸ்ரீ கற்பக விநாயகர்.
10. ஷை பாண்டிநாயகம் சண்முகப்பெருமான்.
11. திருத்த சபையில் ஊர்த்துவ தாண்டவமூர்த்தி.
12. சீகாழி தோணியப்பர் — திருத்தோணி. (கும்பாபிஷேகத்தின்போது எடுத்த படம்)
13. யாழ்மூரிநாதர் (திருஞானசம்பந்த நாயனார்?) திருக்கருமபுரம்.
14. திருஞானசம்பந்த நாயனார் 5-ம் யாத்திரைப் படம் (சோழநாடு)
15. ஷை (பாண்டிநாடு)

(புராண உரை நிறைவு விழாப் படங்கள்)

1. திருவம்பலத்தில் போர்த்திய பொன்னாடையுடன் உரைச் சுவடிகளுடன் உரையாசிரியர்.
2. சிதம்பரம் நகர்வலம்: (1) யானையின்மேல் உரைச் சுவடிகள். (2) முத்து விமானத்தில் சேக்கிழார் பெருமான்.
3. நகர்வலம் வந்தபின் கீழைக்கோபுரம் உட்புறம் அன்பர்கள் உரையாசிரியருடன்.
4. நகர்வலத்தின் பின் உரைச் சுவடிகளை யானையினின்றும் இறக்கித் திருச்சிற்றம்பலவன் திருமுன்புக்கு கொண்டுபோகும் காட்சி.
5. உரை நிறைவு விழாத் தலைவர் ஸ்ரீலஸ்ரீ மதுரை ஆதீனம் மகா சந்நிதானங்களும் உரையாசிரியரும் அன்பர்களுடன் - ஆயிரக்கால் மண்டபம் முன்பு.
6. திருப்பேரூர்: உரை நிறைவுவிழா; உரைச்சுவடிகள் யானையின்மீதும்; விமானத்தில் ஸ்ரீ சேக்கிழார் பெருமான்; உரையாசிரியரும் அன்பர்களுடன்.

உ

சிவமயம்

# தெய்வீகச் சான்றுகள் சிலவற்றின் குறிப்புக்கள்

1. **திருக்காளத்தி:**—சுவாமியின் மூல லிங்கத் திருமேனியில் இடது கண்ணும் அதன்கீழ் இரத்தத் துளிகள் சிந்திய தோற்றமும் இன்றும் காணலாம்.

2. **பொன்முகலி ஆறு:**—சித்தூர் சந்திரகிரி முதலிய இடங்களிலிருந்து வரும் இந்த ஆறு வேனிற் காலத்தில் மேலும் கீழும் வறண்டு போனாலும் திருக்காளத்தி அண்மையில் காளத்திக்குத் தெற்கே 3 நாழிகையும் வடக்கே 3 நாழிகையும் அளவில் தண்ணீர் கண்டு வற்றாமல் நீர் ஓடிக்கொண்டிருப்பது இன்றும் காணத்தக்கது.

3. பழைய மண்டபங்களில் கண்ணப்ப நாயனாரின் தந்தை, தாய் இவர்களின் உருவங்கள் காண உள்ளன.

இக் குறிப்புக்கள் இக் கோயில் திருப்பணி செய்த பெரியார் மெ. இராமநாதன் செட்டியாரவர்களின் தவப் புதல்வர்களில் ஒருவரான திரு. மெ. அரு. நா. கண்ணப்ப செட்டியாரவர்களால் தரப்பட்டன.

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# பெயர் விளக்கம் (VII பகுதி)

**அதிகன் - 3958.** கருவூர்ப்பக்கத்தில் மலையரணைச் சார்ந்து அரசாண்ட சிற்றரசன். புகழ்ச் சோழருக்குத் திறைகொடாது மறுக்கப் போர்புரிந்து தோற்றோடினன்.

**அதிபத்தர் - 3991.** அறுபத்துமூன்று நாயன்மார்களுள் ஒருவர்.

**அநபாயன் - 3949.** குலோத்துங்கசோழர் II ஆசிரியரைக்கொண்டு இப் புராணம் இயற்றுவித்த முறை வகுத்த பெருமகனார்.

**அயிராவதக் களிறு - 3947.** இந்திரனது வெள்ளையானை.

**அறுவையர் தலம் - 1193** துணி நெய்வோர் தலம்; சாலியர் என்பவர்.

**ஆதித்தன் (குலம்) - 4111** ஆதித்தச் சோழர் மரபு.

**ஆதிரை நாள் - 3986.** சிவனுக்குகந்த நாள், திருவாதிரை.

**ஆழித்தேர் - 4122.** திருவாரூர்த் தேர்.

**இசைஞானிப் பிராட்டியார் - 4228** நம்பியாரூரருடைய தாயார்.

**இடங்கழியார் - 4108.** அறுபத்துமூன்று நாயன்மார்களுள் ஒருவர்.

**இருக்குவேளூர் - 4055.** கணம்புல்ல நாயனாரது பதி. வடவெள்ளாற்றுத் தென்கரையில் உள்ளது. சேலம் ஜில்லாவில் உள்ளது. பேளூர் என வழங்குவது.

**இருக்குவேள் மன்னர் - (வேளிர்) - 4116.** ஒரு அரச மரபு.

**உதியர் - 3775.** சேரர்.

**எருக்கத்தம்புலியூர் - 4215.** நடுநாட்டுப் பதி; திருநீலகண்டயாழ்ப்பாண நாயனாரது பதி.

**ஐயடிகள் காடவர்கோன் - 4015** பல்லவசேகரர் அறுபத்துமூன்று நாயன்மார்களுள் ஒருவர். சைவத்திருநெறியால் அரசளித்தவர்; அரசாட்சி இன்னலெனை இகழ்ந்து துறந்து பதிதோறும் சென்று ஓர் ஓர் வெண்பா பாடினர். அவை க்ஷேத்திரத் திருவெண்பா என்னும் நூலாகத் தொகுக்கப்பட்டிருக்கின்றன.

**கணநாதர் - 3922.** அறுபத்துமூன்று நாயன்மார்களுள் ஒருவர்.

**கணம்புல்லர் - 4083.** ஷை.

**களந்தை - 3930.** கூற்றுவ நாயனாரது பதி.

**கமலவதி - 4203.** கோச்செங்கட்சோழ நாயனாரது தாயார்.

**கருவூர் - 3953.** கொங்குநாட்டுப்பதி. சோழர்களது தலைநகரங்களுள் ஒன்று. புகழ்ச்சோழ நாயனார் சரிதம் நிகழ்ந்த பதி.

**கலிக்கம்பர் - 4011.** அறுபத்துமூன்று நாயன்மார்களுள் ஒருவர்.

**கலிநீதியார் - 4021.** ஷை

**கழறிற்றறிவார் - 3763.** சேரமான்பெருமாணுயனருக்கு வழங்கிய காரணப் பெயர். **சேரலனர் - 3820 ; சேரர்தலைப்பெருமாள் - 3819 ; கேரளனுர் - 3874 ; கழறிற்றறியும் திருவடி - 3897 ; பெருமாள் - 3899 ; உதியர்பிரான் - 3899 ; வானவரம்பனர் - 3904 ; சேரர்பெருமாள் - 4231 ; மலையர்கள் தலைவர் - 4254 ; புவி முதல் வேந்தர் - 3264 ; வில்லவர் பெருமான் - 4266 ; சேரலன் - 4272.**

**கழற்சிங்க நாயனர் - 4085.** காடவர்சோழர் ; பல்லவர் குலம்

**காஞ்சி - 4052.** காஞ்சிபுரம். தொண்டைநாட்டின் முதற்பதி.

**காடவர்கோன் - 4179** இராசசிம்மன் என்னும் பல்லவ சோழர் என்பர். காஞ்சிபுரத்திற் கைலாசநாதர் கோயிலை எடுப்பித்தவர் கயிலைமலையின் அமைப்புடன் விளங்குவது இத்திருக்கோயில்.

**காடுகாள் – 3436.** துர்க்கை.

**காம்பீலி - 4192** பல்லாரிச் சில்லாவிலுள்ள பழய சிவக்கலம். நேசநாயனரது பதி.

**காரியார் - 4063.** அறுபத்துமூன்று நாயனமார்களுள் ஒருவர்.

**காளையார் - 3862.** திருக்கானப்பேர் என்னும் காளையார்கோயில் இறைவரது பெயர்.

**குடக்கொங்கு - 4232.** கொங்குநாட்டின் மூன்று பகுதிகளுள் ஒன்று மேல் கொங்கு என்பது "மீகொங்கு" எனப்படுவதாம். வடகொங்கு, கீழ் கொங்கு என்பன மற்றையவை.

**கூத்தர் – 3854.** திருக்குற்றாலத்தில் இறைவர் பெயர் "குறும்பலாநாதர்" என்பவர் வேறு.

**கூற்றுவனர் - 3929** அறுபத்துமூன்று நாயனமார்களுள் ஒருவர்.

**கொங்கர் நாடு - 3797.** கொங்குநாடு. கொங்கர் என்ற குறுநில மன்னர்கள் ஆண்டுவந்ததனல் போந்த பெயர். சேரநாடு–சோழநாடு–பாண்டிநாடு என்பன போல.

**கொடுங்கோளூர் - 3718.** சேரமான் பெருமாள் தலைநகர் ; அவர்களது அரண்மனையிருந்த பதி ; இதிலுள்ள திருவஞ்சைக்களக்கோயில் சிறப்புடையது தேவார வைப்புத்தலங்களுள் ஒன்று.

**கொடும்பாளூர் - 4110.** கோனாட்டின் தலைநகரம்.

**கோச்செங்கட்சோழர் - 4196.** அறுபத்துமூன்று நாயனமார்களுள் ஒருவர்.

**கோட்புலியார் - 4333** ஷை

**கோனாடு - 4109.** சோழநாட்டின் உட்பிரிவுகளுள் ஒன்று. கானாடு – என்பதுபோல.

**சக்கரப்பாடித்தெரு - 4026.** தயிலவினையாளர் தெரு.

**சடையனர் - 4225.** ஆரூருடைய நம்பிகளது தந்தையார்.

**சத்தியார் - 4038.** அறுபத்துமூன்று நாயனமார்களுள் ஒருவர் பெயர்க்காரணம் நாவரியும் சத்தியுடையவர் (4041 - 4045).

**சந்திர தீர்த்தம் - 4197.** காவிரிக்கரையில் திருவானைக்காவின் பக்கம் உள்ளதோர் தீர்த்தம்.

**சாலியர் - 4191.** துணிசெய்யும் குலத்தவர். அறுவையர்.

**சிவகாமியாண்டார் - 3956** சிவகாமியாண்டார் என்னும் அடியவர் ; திருக்கருவூரில் திருவானிலையுடைய இறைவருக்குப் பூத்திருப்பணி செய்பவர் ; இவர் கையில் தாங்கிய பூக்கூடையை அரசனது யானை பறித்துச் சிந்தியதனால் அதனையும்

**திருக்கேதீச்சுரம் - 3856.** ஈழநாட்டுப்பதி. இராமேச்சுரத்தி லிருந்தபடியே இதனை வணங்கி வழிபட்டு நம்பிகள் திருப்பதிக மருளினர்.

**திருநீலகண்ட யாழ்ப்பாணர்-4214.** அறுபத்துமூன்று நாயன்மார்களுள் ஒருவர்.

**திருநின்றவூர் - 4171.** தொண்டை நாட்டிலுள்ள தலம். தின்னனூர் என வழங்கும் (இரயில) நிலயத்தின் அணிமையில் தெற்கில் ½ நாழிகை யளவில் உள்ளது. தேவார வைப்புத்தலங்களுள் ஒன்று.

**திருப்பிடவூர் - 4280** சேரனார் கயிலையில் அரங்கேற்றிய ஞான வுலாவைக் கேட்ட மாசாத்தனார் அதனை இப்பதியில் உலகவறிய வெளிப்படுத்தியருளினர்.

**திருப்புக்கொளியூர் - 4232** இது அவிநாசி என வழங்கும் கொங்கு நாட்டுப் பதி. நம்பிகள் முதலைவாய்ப் பிள்ளை அழைத்தருளிய அற்புதம் நிகழ்ந்த பதி.

**திருமயிலாபுரி - 4079** மயிலாப்பூர்.

**திருமலை - 4266** திருக்கயிலைமலை.

**திருமுருகன் பூண்டி - 3911.** கொங்கு நாட்டுப் பாடல் பெற்ற பதிகளுள் ஒன்று; நம்பிகளது வேடர்பறி அற்புதம் நிகழ்ந்த பதி.

**திருமுனைப்பாடி நாடு - 3883** நடு நாட்டின் ஒரு பகுதி; முனையர் - முனையதரையர் என்ற சிற்றரசர்களால் ஆளப்பட்டமையால் இப்பெயர் பெற்றது. திருநாவுக்கரசு நாயனாரும் ஆரூர நம்பிகளும் அவதரிக்கப்பெற்ற நாடு.

**திருவஞ்சைக்களம் 3718** சேரர் தலைநகரின் ஒரு பகுதி. நம்பிகளும் இப்பதியில் வழிபட்டனர். மலைநாட்டில் பாடல் பெற்ற பதி இதுவொன்றே; நம்பிகளும் சேரமானாரும் இங்கு நின்றும் முறையே யானைமீதும் குதிரைமீதும் ஏறிச் சென்று திருக்கயிலை யடைந்தனர்.

**திருவானிலைக் கோயில் - 3959.** கருவூரில் உள்ள திருக்கோயிலின் பெயர்.

**திருவுலாப்புறம் - 4275** திருவுலா என்னும் பிரபந்தம்.

**திருவொற்றியூர் - 4022.** தொண்டை நாட்டில் 20-வது பதி.

**தில்லைவாழந்தணர் - 3933** தில்லையில் இறைவருக்கு அணுக்கத் தொண்டுரிமை பூண்டோர். இறைவரையுள்ளிட்டு இவர்கள் தில்லை மூவாயிரவர் எனப் பெறுவார்கள். இப்போது தீட்சிதர்கள் என்று வழங்கப் பெறுகின்றார்கள்.

**தேவாசிரியன் - 3815** திருவாரூரில் கோபுர வாயிலினை அடுத்துள்ள பெருமண்டபம். அடியார்கள் நிறைந்து உறைந்துள்ளது; ஆங்கு நம்பிகள் திருத்தொண்டத் தொகை அருளினர்.

**தொண்டை நன்னாடு - 4074 - 4022** தொண்டை நாடு, ஆதொண்டைச் சக்கரவர்த்தியால் ஆளப்பட்டதாற் போந்த பெயர்.

**நரசிங்க முனையரையர் - 3982.** அறுபத்து மூன்று நாயன்மார்களுள் ஒருவர்.

**நெடுமாறர் - 4068.** நின்றசீர் நெடுமாற நாயனார். அறுபத்து மூன்று நாயன் மார்களுள் ஒருவர்.

**நெல்வேலிச் செருக்களம் - 4071.** திருநெல்வேலிக் கருகில் நின்றசீர் நெடுமாறர் வடபுலத்துப் பகைவரை வென்ற போர்க்களம்.

**நேசர் - 4191.** அறுபத்து மூன்று நாயன்மார்களுள் ஒருவர்.

**பஞ்சவனார் - 4075.** பாண்டியர்

**படம்பக்கநாயகர் - 4035.** திருவொற்றியூரில் புற்றுவடிவத்துள் எழுந்தருளிய திருமூலட்டான நாதர்

**பரவையார் - 3820.** முன்னை நிலையில் கமலினியார் என்ற பெயருடன் கயிலையில் உமையம்மையாருக்குப் பணி செய்த சேடியார்; திருவாரூரில் அவதரித்து இப்பெயருடன் விளங்கியவர். ஆளுடைய நம்பிகளது முதல் தேவியார்.

**பாணபத்திரர் - 3773.** திருவாலவாயிறைவரிடத்து மிக்க அன்பு பூண்டொழுகியவர். அவரது திருமுகங் கொண்டு சென்று சேரமானிடம் பொருள் பெற்றவர்.

பாண்டி நாட்டுப்பதிகள் :—

**திரு ஆப்பனூர் - 3848.** மதுரையின் அண்மையில் வைகையாற்றுக்கு வடகரையில் உள்ள பதி. பாண்டி நாட்டுத் தேவாரம் பெற்ற பதிகளில் 2-வது பதி.

ஆலவாய் - 4215. மதுரை; பாண்டி நாட்டு 1-வது பதி.

இராமேச்சுரம் - 3855. பாண்டிய நாட்டில் 8-வது பதி. இராமன் தாபித்துப் பூசித்தபதி.

ஏடகம் - 3848. பாண்டி நாட்டில் 4-வது பதி. சமண வாதத்தில் ஆளுடைய பிள்ளையார் அருளிய திருப்பாசுரத் திருப்பதிகம் வைகை ஆற்றில் எதிரேறிச் சென்று அவர் ஆணைப்படி தங்கிய பதி.

கானப்பேர் - 3860. பாண்டி நாட்டின் 10-வது பதி. காளையார் கோயில் என்று விளக்கமாக அறியப்படுவது. ஆளுடைய நம்பிகள் திருச்சுழியலில் தங்கியபோது இப்பதியின் இறைவர் காளையாய்த் திருவடியில் அவர் கனவில் தோன்றி "யாமிருப்பது கானப்பேர" என்றருள, அவர் உணர்ந்து வந்து தொழுதபதி.

குற்றாலம் - 3853. பாண்டி நாட்டு 13-வது பதி. இறைவர் கூத்தர். இப்பதியில் உள்ள குறும்பலா வேறு தனிக்கோயில். அது அகத்தியரால் விட்டுணு மூர்த்தியைச் சிவரூபமாக்கிய பதி. அதுவும் ஆளுடைய பிள்ளையாரது பாடல்பெற்றபதி.

சுழியல் - 3857. பாண்டி நாட்டில் 12-வது பதி.

பரங்குன்றம் - 3549. பாண்டி நாட்டில் 3-வது பதி. தமிழ் மூவேந்தர்களுடனே நம்பிகள் வழிபட்ட பதி.

புத்தூர் - 3837. பாண்டி நாட்டில் 6-வது பதி.

புனவாயில் - 3864. பாண்டி நாட்டில் 7-வது பதி. பாண்டி நாட்டு 14 பதிகளின் மூர்த்திகளும் இங்குத் தனித்தனிக் கோயில் கொண்டருளியுள்ளார்கள்.

பூவணம் - 3814. பாண்டி நாட்டில் 11-வது பதி. தமிழ் மூவேந்தர்களும் நம்பிகளுடனிருந்து வழிபட்டனர்.

நெல்வேலி - 3854. பாண்டி நாட்டில் 14-வது பதி.

பாண்டிமா தேவியார் - 4188. மங்கையர்க்கரசி யம்மையார். அறுபத்து மூன்று நாயன்மார்களுள் ஒருவர். மங்கையர்க்கரசியார் - 4076. மானி - 4189.

புகழ்த்துணையார் - 4116. ஷை.

புகழ்ச் சோழர் 3941. ஷை.

பூசலார் - 4171. ஷை.

பெண்ணாகட முதூர் - 4012. தூங்கானை மாடம் என்னும்பதி. நடுநாட்டில் 2-வது பதி.

பெருமாக்கோதையார் - 3752. சேரமான் பெருமாணாயனாரது இயற்பெயர்.

பொய்யடிமையில்லாத புலவர் - 3938 திருத்தொண்டத் தொகையுட் போற்றப்பட்ட தொகையடியார்களுள் ஒரு பகுப்பினர். சங்கப்புலவர்களுள் நக்கீரர் கபிலர் பரணராதி பல்புலவோர்.

முற்சேர்க்கை - 2

உ

சிவமயம்

# மேற்கோள் நூலகராதி

[எண்கள் - பாட்டு எண்கள்]

கந்தபுராணம் - 3993.

சங்கற்பநிராகரணம் - 4237.

சிலப்பதிகாரம் - 3930.

சிவஞானசித்தியார் - 3872, 4122, 4147, 4158, 4213, 4251.

சிவஞானபோதம் - 3935, 4067, 4077 4155, 4158, 4191, 5204, 4238, 4243.

சுந்தரமூர்த்தி நாயனார் தேவாரம் - 3856, 3927, 3937, 4013, 4035, 4095, 4131, 4160, 4186, 4190, 4197, 4232, 4237, 4240, 4343, 4214, 4245, 4279.

திருக்களிற்றுப்படியார் - 4146, 4213.

திருக்குறள் - 3873, 3901, 3923, 3924, 3526, 3932, 3937, 3938, 3949, 3955, 3983 3990, 3993 4013, 4027, 4056, 4084, 4091, 4108, 4116, 4175, 4172 4213, 4257.

திருக்கோவையார் - 3993, 4206, 4227.

திருஞானசம்பந்தர் தேவாரம் - 3856, 3857, 3878, 3880, 3989, 3995, 3998, 4013, 4055, 4076, 4086, 4109, 4131, 4157, 4171 4181 4182, 4188, 4189, 4190, 4198, 4256.

திருத்தொண்டர் புராண வரலாறு - 3862, 3871, 3181, 3918, 3932, 3983, 3986, 4005, 4014, 4015, 4043, 4014, 4063, 4086, 4125, 4160, 4170, 4215, 4216, 4251.

திருநாவுக்கரசு நாயனார் தேவாரம் - 3920, 3930, 3989, 4014, 4020, 4032, 4075, 4122, 4131, 4155, 4157, 4164, 4175, 4213, 4259, 4270, 4273.

திருமந்திரம் - 3859, 3924, 4086, 4161, 4178.

திருவாசகம் - 3859, 3862. 3873, 3990, 4017, 4049, 4052, 4152, 4175, 4194, 4243.

திருவாதவூரர் புராணம் - 4157.

திருவிசைப்பா - 4045.

திருவிளையாடற் புராணம் - 3925.

திருவுந்தியார் - 4146, 4157.

தொல்காப்பியம் - 3864, 3930, 4111.

நாலடியார் - 4002.

பதினோராம் திருமுறை -

அற்புதத் திருவந்தாதி - 4053, 4062, 4117, 4154.

நம்பியாண்டார் நம்பி - விநாயகர் இரட்டைமணிமாலை - 3862.

திருவிடை மருதூர் மும்மணிக்கோவை - 3872.

நாரையூர் பொல்லா பிள்ளையார் அந்தாதி - 3940.

மேற்கோள் நூலகராதி தொகுத்தவர் - K. ஆறுமுக நாயனார், திருநாவுக்கரசு சுவாமிகள் சைவ சித்தாந்தக் கழகம், திருத்துறையூர், (நடுநாடு).

I பாகம்


திருஞானசம்பந்தநாயனர் - 5-ம யாத்திரை
(சோழநாடு)
குறிப்பு
இருப்புப்பாதை
கற்சாலை
ஆறு
திருஞானசம்பந்தர யாத்திரை மார்க்கம்
சிதம்பரம் RS
சீகாழி
காவேரி
நெடுங்காடு
தரங்கம்பாடி RS.
காரைக்கால் RS.
புகலூர்
திருவாரூர்
தேவூர்
கைச்சினம்
திருமறைக் -காடு
கோடிக்குழகர்
அகத்தியான் - பள்ளி
திருத்துறைப்பூண்டி RS
பட்டுக்கோட்டை RS
கொடுங்குன்றத்திற்கு
மணமேற்குடியிலிருந்து
அறந்தாங்கி
கடல்
PEK.

# II பாகம்

## திருஞானசம்பந்த நாயனார்—5-ம் யாத்திரை

(தொடர்ச்சி)

திருவாரூரிலிருந்து திருமறைக்காடு சென்று, அங்கிருந்து கொடுங்குன்றம் வழியாக ஆலவாயடைந்து, சமண்வென்று, இராமேச்சரந் தொழுது, மணமேற்குடி வழியாகச் சீகாழிக்குத் திரும்புதல்.

(புராணம்-பாட்டெண் 519—950)



“ வண்ணமலர் ஆத்தி ”
உத்தராபதியார் சந்நிதி-
திருக்கோயிலில் உள்ளது.

—பாட்டு - 3700





இத் திருவுருவங்கள்
உத்திராபதியார் சந்நிதியில்
சேவித்த நிலையில் உள்ளன.

—பாட்டு - 3746

சந்தனத் சீராள திருவெண்காட்டு சிறுத்தொண்ட
தையர் தேவர் நங்கையார் நாயனர்



திருச்செங்காட்டங்குடி - திருக்கணபதீச்சுரக்கோயில் கோபுரம்
முன்பார்வை



சிறுத்தொண்ட நாயனார்
திருமடம்

தெற்குமாடவீதியின்
மேல் கோடியில் உள்ளது.

—பாட்டு - 3730

ய நாயனார் திருமனை
யிருந்த இடத்தில்
இப்போது உள்ள அவரது
திருமடத்தில் உள்ள
திருவுருவங்கள்

—பாட்டு - 3730



திருவெண்காட்டு நங்கையார் சீராள நாயனார்



சீராளதேவர் பள்ளித்திருக்கோலம்

—பாட்டு - 3661



பரசலூர் என வழங்கும் திருப்பறியலூர் (வீரட்டம்)
கோயில் தோற்றம்



வைத்தீஸ்வரன் கோயில் - சித்தாமிர்த தீர்த்தம்

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# பெரிய புராணம்

என்னும்

# திருத்தொண்டர் புராணம்

## இரண்டாங் காண்டம் (தொடர்ச்சி)

ஏழாவது

## வார்கொண்ட வனமுலையாள் சருக்கம்—II

(தொடர்ச்சி)

திருச்சிற்றம்பலம்

(வார்கொண்ட வனமுலையா ளுமைபங்கன் கழலே
மறவாது கல்லெறிந்த சாக்கியர்க்கு மடியேன்
சீர்கொண்ட புகழ்வள்ளல் சிறப்புலிக்கு மடியேன்
செங்காட்டங் குடிமேய சிறுத்தொண்டர்க் கடியேன்)
கார்கொண்ட கொடைக்கழறிற் றறிவார்க்கு மடியேன்
கடற்காழிக் கணநாத னடியார்க்கு மடியேன்
ஆர்கொண்ட வேற்கூற்றன் களந்தைக்கோ னடியேன்
ஆரூர னாரூரி லம்மானுக் காளே.

திருச்சிற்றம்பலம்

—திருத்தொண்டத்தொகை (௬)

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# 37. கழறிற் றறிவார் நாயனார் புராணம்

## தொகை

" கார்கொண்ட கொடைக்கழறிற் றறிவார்க்கு மடியேன் "

—திருத்தொண்டத் தொகை (6)

## வகை

மன்னர் பிரானெதிர் வண்ணா னுடலுவ ரூறியநீற்
றன்ன பிரான்றமர் போல வருதலுந் தாள்வணங்க
" வென்ன பிரானடி வண்ணா "னென," வடி யேன் அடிச்சே ரா"னென்னுந்
தென்னர் பிரான்கழ றிற்றறி வோனெனுஞ் சேரலனே. (44)

சேரற்குத் தென்னா வலர்பெரு மாற்குச் சிவனளித்த
பாரக் கடகரி முன்புதன் பந்தி யிவுளிவைத்த
வீரர்க்கு வெண்பிக் கருப்புவில் வீரனை வெற்றிகொண்ட
சூரற் கெனதுள்ள நன்றுசெய் தாயின்று தொண்டுபட்டே. (45)

—திருத்தொண்டர் திருவந்தாதி

## விரி

3748. மாவீற் றிருந்த பெருஞ்சிறப்பின் மன்னுந் தொன்மை மலைநாட்டுப்
பாவீற் றிருந்த பல்புகழார் பயிலு மியல்பிற் பழம்பதிதான்
சேவீற் றிருந்தார் திருவஞ்சைக் களமு நிலவிச் சேரர்குலக்
கோவீற் றிருந்து முறைபுரியுங் குலக்கோ மூதூர் கொடுங்கோளூர். க

புராணம் :—இனி, நிறுத்த முறையானே, ஆசிரியர், ஏழாவது வார்கொண்ட வனமுலையாள் சருக்கத்தில் நான்காவது கழறிற்றறிவார்நாயனார் புராணங் கூறத் தொடங்குகின்றார் ; கழறிற் றறிவார் நாயனாரது சரித வரலாறும் பண்பும் கூறும் பகுதி.

தொகை:—கொடைத் தன்மையினில் மேகத்தினை வெற்றி கொண்ட கழறிற் றறிவார் நாயனாருக்கும் நான் அடியேனாவேன்.

கார் - மேகம்; கொள்ளுதல் - வெற்றி கொள்ளுதல்; காரின் தன்மையை மேற் கொள்ளுதல் என்றலுமாம். காரின் தன்மையாவது கைம்மாறு கருதாது கொடுத்தல். " கைம்மாறு வேண்டா கடப்பாடு மாரிமாட், டென்னாற்றுங் கொல்லோ வுலகு " (குறள்); வெல்லுதலாவது சிவத்தன்மையிற் பொருந்த வைக்கும் சிறப்

புடைமை. கொண்ட - அடிமை - ஏவல - கொண்ட என்றகுறிப்புமாம். என்னை ? இவரது நாட்டில் இன்றைக்கும் பருவந்தவறாது மழை பெய்யவும், அம்மழையினுதவி கொண்டே (அணை - ஏரி - கால் - முதலியவற்றினுதவியின்றி) மேட்டு நிலங்களினும நெல் முதலியவை விளையக் காணலாம எனபது ; கொடையினைச செய்து அதற்காகக் காரினை விலைக்குக் கொண்ட எனபதும் குறிப்பு ; " கார கனிகர்க்க வரியகொடைக் கையார் " (3803) எனறு ஆசிரியா இதனை விரிததனா , " பருவக கொண்மூப் படியெல " என்ற திருமுகப பாசுரமும காணக. கழறிற் றறிவார் - இபபெயர்க் காரணம் " யாவும் யாருங கழறினவும் அறியு முணர்வும " (3761) என்று ஆசிரியர் விரிபபது காண்க. உமமையின் பொருள முன விரிககபபட்டது.

வகை :—மனனர் பிரானெதிர்...வருதலும - அரசா பெருமானுக முடிசூடி வருபவரின் எதிரே வணணன் உவர் மண்ணினால் உடல் ஊறிய தன்மையினால் திருநீறு பூசியது போல விளஙகிச சிவனடியார் போல வருதலும் , தான வணஙக - அவரது திருவடிகளில் வணஙக , எனனபிரான் ! அடிவண்ணன் என - (அவன்) எனது பெருமானே ! அடியேன அடிவணணன் எனறு சொல்ல , அடிச்சேரன் என்னும்...சேரலனே - அகற குசுதரமாக அடியேன அடிசசேரன் எனறு சொல் லும் ஆற்றலுடைய தெனனா பெருமான, கழறிறறறிவாா எனறு சொல்லபபெறும் சேரலரேயாவா. 44

சேரறகு - சேரமனனருககு தெனனவலா. ..வீரறகு - தென நாவலூர் பெருமானாகிய நமபிகளுககுச சிவபெருமான அளிததருளிய பெரிய மதமுடைய வெளளை யானையின முனனே செலலுமபடி கனது பககிபில உளளதொரு குதிரை யினைச செலுததிய வீரருககு ; கருபபுவில ..சூரறகு - கருமபுவிலலை உடைய வீர னாகிய காமனை வெற்றிகொணட சூராகிய மன்னவருககு , எனதுள்ளம...தொணடு பட்டே - தொணடு பூணட அதனாலே எனதுளளமே நீ நலலதொரு காரியததைச செய்தாய. 45

மன்னர்பிரான் எதிர் - மனனா பிரானாக முடிசூடிச செலகின்றபோது (3764); உவர் ஊறிய - உவாமண ஊறியதனால , நீற்றன்ன (பிரான்) தமர் - நீறு பூசிய அடி யவர் போல - அதசோறறமபோல ; உவர்மண ஊறிய வெணமை திருநீறுபோலத தோன்றுதல் பககுவமுடையாரது கணணுககு அமைவது , முககின ஒளியினை வெணணீற ெருளியாகக கணடு போறறினா ஆளுடைய பிளளையாா. "வெணணீற ெருளி போறறி " (2114) ; பககுவ மிலலாத மாக்களுக்கு நீறறொளியும உவா மணணாகவும சுண்ணமபாகவும புலபபடும , என்ன - எனனுடைய ; அகரம ஆற னுருபு; பிரான் - பிரானே! விளி வேறறுமை (3766) , தென்னர் - தென் - அழகு ; தென்னர் - அழகிய சேரநாட்டவா.

சேரற்கு - வீரற்கு - சூரற்கு - வீரரும சூரரும்ஆகிய சேரருக்கு என்க ; உள்ளம்- உள்ளமே; விளிவேற்றுமை ; உள்ளமே! தொண்டுபட்டே இன்று நன்று செய்தாய் - என்று கூட்டுக ; தொண்டுபட்டே - தொண்டு பட்டதனால ; ஏகாரம் தேற்றம் ; நன்று - நல்ல செயல் ; தென்நாவலர் பெருமான் - திருநாவலூரா ; நம்பி ஆரூரர் ; தென் - அழகு ; நாவலர் - நாவலூரா; நாவின வன்மை குறிகததென்றலுமாம். பெரு மாற்கு - பெருமானுக்காக ; பெருமாற்கு அளித்த எனக ; நானகாம் வேற்றுமை கொடை பொருளில் வநதது. கரி முன்பு - கரியின முன்பு , பந்தி - குதிரைப பநதியில உளள ; இவுளி - குதிரை ; கரிமுன்பு - இவுளி வைத்தலாவது - கரியின முனனே குதிரையைச செலுததுதல , பாரம் - பெருமைத திறமை ; சிவனளித்த

**பாரக் கடகரி** - என்றது கரியினது உயர்வும் பெருஞ் சிறப்பும், **தன்பந்தி இவுளி** - என்றது அதனை நோக்கக் குதிரையினது எளிமையும் குறிக்க நின்றன. முறையே உயர்வும் இழிவுமாகிய சிறப்பும்மைகள் தொக்கன. "சிரமலியானை" (தேவா.) **வீறந்த** - வீரத்தின் காரணங் காட்டியவாறு; **கருப்பு வில்வீரன்** - மன்மதன்; **வென்றி** - வீரனை - வெற்றிகொண்ட **சூரன்** - ஏனையோர்பால் வெற்றி கொள்வா ராயினும் இவர்பால் தோல்வி யுற்றனன் என்பது; தேவியர்பால் வைத்த பெண் ஆசையையும், மண் ஆசையையும் துறந்து தோழருடன் குதிரையில் சென்றருளிய நிலையும், சிவயோக நிலையினராகும் தன்மையும் குறித்தது; **சூரன்** - பெருவிற லுடையோன்.

கொடையின் தன்மையாகிய பண்பும் பேரும் முதனூல் பேசிற்று; அடிச்சேர னென்றதும், கரிமுன்பு இவுளி வைத்தலும், ஆகிய வரலாறுகளும், கருப்புவில் வீரனை வெற்றிகொண்ட பண்பும் பேரும் வகைநூல் வகுத்தது. இவை விரிந்தவாறு விரி நூலுட் கண்டுகொள்க.

**விரி :—3748.** (இ - ள்) **மா...மலைநாட்டு** - திருமகள் வீற்றிருக்கும் பெரிய சிறப்பினுள் நிலைபெற்ற பழமையினை யுடைய மலைநாட்டிலே; **பா...பதிதான்** - பழந்தமிழ்ப் பாட்டுக்களிலே விளங்கிய பல புகழ்களையுடைய சேர அரச மரபினரும் குடிகளும் தொன்றுதொட்டுப் பயின்று வரும் இயல்பினையுடைய பழம் பதியாவது; **சே...நிலவி** - இடபத்தில் எழுந்தருளிய சிவபெருமானது திருவஞ்சைக் களத் துடனே நிலவப்பெற்று; **சேரர் குலக்கோ...கொடுங்கோளூர்** - சேரமரபின் அர சர்கள் அரசு கட்டிலேறியிருந்து வழிவழி அரசாட்சி செய்துவரும் பெரிய தலைநகர மாவது கொடுங்கோளூர் என்பதாகும்.

(வி - ரை) **மா** - திருமகள்; **மாவீற்றிருந்த** - திருமகள் விளக்கத்துடன் இருந்த; **தொன்மை** - "பாசிராமன் பெறுநாடு" (491);

**பா வீற்றிருந்த பல்புகழார்** - **பா** - பதிற்றுப்பத்து, சிலப்பதிகாரம், புறநானூறு முதலிய சங்கம் மருவிய பழந்தமிழ்ப் பாட்டுக்கள்; பா வீற்றிருந்த பல்புகழாவது சங்கப்பாட்டுக்களில் சேரமன்னர்களது கொடைத் தன்மை பேசப்பட்ட திறம்; பதிற் றுப்பத்து சேர மன்னர்களைப் பற்றியே பாராட்டுவது; **சிலப்பதிகாரம்** - சேர மரபின் இளங்கோ அரசரால் பாடப்பட்டது; சேரன் செங்குட்டுவனது சிறப்பைச் சிறப்பாய்ப் பேசுவது; புறநானூற்றில் பெருஞ்சோற்று உதியன் சேரலாதன் - மாந்தரஞ்சேர லிரும்பொறை முதலாகப் பாடப்பட்ட சேர மன்னர்கள் பலர்; இவற்றுள் சேர மன்னர்களின் பல்புகழ் விளங்கும்; புகழாவது பெரும்பான்மை ஈகைத்திறம் பற்றியதாம். "உரைப்பா ருரைப்பவை யெல்லாம்...ஈவார்மே னிற்கும் புகழ்" (குறள்); "போந்தை ஆரே வேம்பென வரூஉம்" (தொல்) சேரரது தொன்மையும் முதன்மையும் குறித்தது.

**பதிதான்-திருவஞ்சைக் களமும் நிலவி-கொடுங்கோளூர்** - திருவஞ்சைக் களமும் கொடுங்கோளூரும் சேர்த்து ஒரே பதியாகக் கொண்டு வழங்கப்படுதலின் பதிதான் என ஒருமையாற் கூறினர்; "அஞ்சைக்களங் கொடுங்கோளூர்" என்று தேவாரத் துட் சேர்த்துப் போற்றப்பட்டது காண்க. அரசரது தலைநகரமும் அவர்களது வழிபடு கோயிலும் கூறியவாறுமாம். **சேவீற்றிருந்தார் திருவஞ்சைக்களம்** என்றும், **கோ... மூதூர்** - என்றும் கூறிய அடைமொழிகளின் கருத்துமிது; "அரசர் தொழில் புரியார், தெண்ணீர் முடியார் திருவஞ்சைக் களத்திற் றிருத்தொண்டே புரிவார்" (3754) என்பதும் இக்கருத்துடையது. **குலம்** - மரபு; **முறை புரியும்** - அரசாட்சி

புரியும். நிகழ்காலத்தாற் கூறியது ஆசிரியரது காலத்தில் சேரநாடு சேரமன்னர்களால் ஆளப்பட்டுவந்தமை குறித்தது ; குலமுதூர் - குலம்-மேம்பாடு ; கோமுதூர் - அரசரது தலைநகர்.

இப்பாட்டினால் நாட்டுச் சிறப்பு, நகரச் சிறப்பு, பழஞ்சரிதம், குடிவளம் முதலிய பலவும் கூறிய திறம் கண்டு கொள்ளற்பாலது. நாட்டுவளம் முதலியவை முன்னர் விறன்மிண்ட நாயனார் புராணத்துள் விரித்தமையால் ஈண்டுச் சுருக்கிக் கூறினார்.

பல்புகழின்—சொல்புலவர்—என்பனவும் பாடங்கள். 1

3749. காலை யெழும்பல் கலையினொலி களிற்றுக் கன்று வடிக்குமொலி
சோலை யெழுமென் சுரும்பினொலி துரகச் செருக்காற் சுலவுமொலி
பாலை விபஞ்சி பயிலுமொலி பாட லாடன் முழவினொலி
வேலை யொலியை விழுங்கியெழ விளங்கி யோங்கும் வியப்பினதால்.

(இ - ள்) காலை...கலையினொலி - காலையிலே பயிலப்படும் வேதம் முதலிய கலைகளின் ஒலியும் ; களிற்று...வடிக்குமொலி - யானைக் கன்றுகளின் பிளிற்றின் ஒலியும்; சோலை...சுரும்பினொலி - சோலைகளினின்றும் எழுகின்ற மெல்லிய வண்டுகள் பண் பாடும் ஒலியும் ; துரக...சுலவுமொலி குதிரைகளின் செருக்கினாலே கனைத்துச் சுழலும் ஒலியும் ; பாலை...ஒலி - பாலை விபஞ்சியாழ் பயிலும் ஒலியும் ; பாடல்...ஒலி - பாடல்கள் ஆடல்களுக்கிசைய முழக்கப்படும் முழவின் ஒலியும் ; வேலை.. வியப்பினதால் - (அங்கு மிகும்) கடலின் ஒலியினையும் கீழ்ப்படுத்தி மேல் எழுந்து விளக்கம் பொருந்தி மேலோங்கும் வியப்பை யுடையது (அப்பதிதான்).

(வி - ரை) அப்பதி - வியப்பினது - என்று எழுவாய் முன் பாட்டினின்றும் வருவிக்க.

காலை எழும் பல்கலையின் ஒலி - கலைகளின் பயிற்சிக்கு உரிய காலம் அதிகாலை என்பவாதலின் காலை எழும் என்றார் ; பல்கலை - வேதமும் கலைஞானங்களும். "கலை ஒலியால் துயிலெழுவ கனறிக் கோழியின எழாது எம்மூர" (பரிபா.)

வடிக்குமொலி - வடிக்கும் - திருந்திய - சிறந்த ; வசமாக்கப் பழகும் என்பாருமுண்டு ; யானைகள் புறநகரில் உள்ளனவாதலால் அவற்றின் கன்றுகள் நகரில் இருத்தல் கூறினார்.

துரகச் செருக்காற் சுலவும் ஒலி - துரகம் — குதிரை ; செருக்கு - மிக்க களிப்பு ; மிகுந்த வலிமையும், அவ்வன்மையினைச் செலுத்துதற்கு இடம் பெறாமை கருதிக் கனைத்தலும் மேம்பாடும் குறித்தது. சுலவுதல் - இக்குதிரைப் பந்தியின் ஓர் குதிரையினையே பின்னர் இந்நாயனார் மேல்கொண்டு கயிலையினை அடைந்த சரிதக் குறிப்பும் காண்க.

பாலை விபஞ்சி - பாலை விபஞ்சி யாழ் முதலிய வகைகள் ; பாலை எழுவகையாய் 103 பேதங்களுடையது ; இவற்றின் விரிவு இசை நூல்களுட் காண்க. விபஞ்சி என்பது யாழ் - வீணை - பண் என்ற பொதுப் பொருளில் வந்தது ; பாலை - யாழினைக்கூறியது கடலினின்றும் கொள்ளப்பட்டுத் திருந்திய நிலனும் குறிஞ்சியும் முல்லையும் மயங்க நிற்கும் முறைமை பற்றிப் போலும் என்பதும் கருதப்படும். இது பற்றி விறன்மிண்ட நாயனார் புராணத்துள் (491 - 492) உரைத்தவை பார்க்க ; இனி விபஞ்சி - குறிஞ்சி யாழ்த்திறத் தொன்றெனக் கொண்டு (பிங்கலம்) பாலை யாழும் குறிஞ்சித் திணைக்கேற்ற குறிஞ்சி யாழும் என எண்ணும்மை விரித்துரைத்தலுமாம்.

பாலை - குறிஞ்சி - யிரண்டற்கும் யானை கருப்பொருளாதல் பற்றிக் களிற்றுக்கன்று வடிக்கும் ஒலி என்று முன்கூறிய குறிப்பும் காண்க.

வேலை ஒலி - வேலை - இந்நகரினைச் சூழ்ந்த மேல்கடல்; "மலைக்குநிக ரொப்பன வன்றிரைகள் வலித்தெற்றி முழங்கி வலம்புரி கொண், டலைக்குங் கடலங் கரைமேன் மகோதை யணியார்பொழி லஞ்சைக்களம்" (தேவா); ஒலி - ஒலியினையும்; உயர்வு சிறப்பும்மை தொக்கது; இக்கடல் ஒலியின் மிகுதிபற்றி தேவாரத்துட் காண்க.

விளங்கிப் பொங்கும்—என்பதும் பாடம்.　2

3750. மிக்க செல்வ மனைகடோறும் விழையு மின்பம் விளங்குவன;
பக்க நெருங்கு சாலைதொறும் பயில்சட் டறங்கள் பல்குவன;
தக்க வன்பர் மடங்கடொறுஞ் சைவ மெய்ம்மை சாற்றுவன;
தொக்க வளங்கொ ளிடங்கடொறு மடங்க நிதியந் துவன்றுவன. ௩

(இ - ள்) மிக்க...விளங்குவன - செல்வமிக்க வீடுகள் தோறும் விழைகின்ற இல்லற இன்பங்கள் விளக்கம் பொருந்தியன; பக்கம்...பல்குவன - மனைகளின் பக்கங்களில் நெருங்கிய சாலைகள் தோறும் செய்யப்படுகின்ற செப்பமாகிய அறங்கள் பெருகுவன; தக்க...சாற்றுவன - தகுந்த அன்பர்கள் வாழும் திருமடங்கள் தோறும் சைவத்தின் உண்மைப் பொருள்கள் எடுத்துக் கூறுவனவாம்; தொக்க.. துவன்றுவன - தொகுதியாகக் கூடிய வளங்களைத் தம்மிடத்துக் கொள்கின்ற இடங்கள் தோறும் நிறம்பிய நிதியங்கள் தோன்றுவன.

(வி - ரை) இன்பம் – அறங்கள் - சைவமெய்ம்மை - நிதியம் - இப்பாட்டில் அறம் பொருள் இன்பம் வீடு என்னும் உறுதிப் பொருள் நான்கும் அந்நாட்டின் விளங்கும் நிலையினைக் கூறிய கவிநலம் கண்டு கொள்க; நிதியம் - பொருள்; சைவ மெய்ம்மை - வீடு.

இன்பம் - அறம்-(வீடு) சைவமெய்ம்மை - பொருள் என்று இம்முறையில் வைத்தார். உயிர்கள் எல்லாம் விழைவதும் விழையத் தக்கதும் இன்பமே யாதலின் அது முதற்கண் வைக்கப்பட்டது. அவ்வின்பந்தானும் அறத்தின் வழி வருதலும் துய்த்தலும் படுவதாதலின் அறம் அதனை அடுத்து வைக்கப்பட்டது; "அறத்தான் வருவதே இன்பம்" (குறள்); அழியா இன்பமாகிய பேரின்ப வீடு அதன்பின் வரும் முறைபற்றி அதனை அடுத்துக் கூறினார்; "முனிவரும் மன்னரும் முன்னுவ பொன்னுன் முடியும்" "நடுவண தெய்த விருதலையும் எய்தும்" என்றபடி அறத்திற்கும் இன்பத்துக்கும் வீடுகாட்டும் திருமடங்களுக்கும் ஒரு வகையால் சாதனமாய் நிற்பது பொருள் என்ப வாதலின் காரிய காரண முறையால் இறுதிக்கண் வைத்துக் கூறினார்; அன்றியும், இங்கு நகரச் சிறப்பாகிய நகர வளங் கூறுதலே முறையும் கருத்துமாதலின் அம்முறை பற்றி முடித்துக் கூறும் வகையால் தொக்கவளங்கொள் என்று இறுதியில் வைத்த கருத்துமாம். இடங்கள் - முன்கூறிய மூவகையிடங்களையும் குறிப்பாலுணர்த்துதலும் காண்க. இவ்வாறன்றி, இதனை அடிமாற்றும் ஓர் பொருள் கோளாய் நின்றதென்று கொண்டு அதற்கேற்ப அடிகளை மாற்றிப் பொருள் கொண்டனர் ஆறுமுகத் தம்பிரானார். அடிமறி மண்டில ஆசிரியமுமாம்.

செல்வ மனைகள் - செல்வம் - அறத்தாற்றின் ஈட்டப்பட்டதாய் வருவது. "தம் பொருள் என்ப தம்மக்கள்" (குறள்) என்றபடி, செல்வம் - நன்மக்களுடைமை என்றலுமாம். தோறு - இடம் காலங்களின் இடையீடின்மை தரும் இடைச்சொல்.

விழையும் இன்பம் - விழைதல் - விரும்புதல் ; விரும்பத்தக்க என்றபடி ; நூல்களுள் விதித்தவாறே அமைந்தொழுகித் துய்க்கப்படும் நிலை குறித்தது.

விளங்குவன - இன்பம் மனநிகழ்ச்சியாதலின் அது புறத்தும் காணப்படும்படி உள்ள அடையாளங்கள் வெளிப்படுவன.

பக்கம் - மனைகளின் பக்கமும், நகரின் பக்கமும்; சாலை - அறச்சாலைகள்.

சட்டறங்கள் - செப்பமாகிய அறங்கள் ; சட்ட அறங்கள் என்றது சட்டறங்கள் என நின்றது ; சட்ட என்பது "செப்பப் பொருட்டாயதோர் அகரவீற் றிடைச் சொல்" என்று "சட்ட வினியுளது சத்தே காண்" (போதம், 9 - 2) என்றவிடத் துரைத்தனர் எமது மாதவச் சிவஞான முனிவர். பயிலுதல் - வழங்குதல் ; பல்குதல் - மிகுதல். "சட்டவிக் கதவம்", "சட்டகலை யெட்டு", "சட்ட நேர்பட".

அன்பர் - சிவன்பா லன்புடைய அடியார்கள் ; அன்பர்கள் வாழும் இடங்களே மடங்கள் எனப்படும்.

சைவ மெய்ம்மை சாற்றுவன - மெய்ம்மைகள் சாற்றப்படுவன என்று பிறவினையாகப் பொருள் கொள்க ; சாற்றுதலாவது விதிவழி உபதேசித்தலும், ஒழுக்கத்தால் அறிவித்தலுமாம். சைவநெறியே வீட்டு நெறியைக் காட்டவல்ல தென்பது முடித்துக் காட்டப்பட்டவாறு காண்க. "வீடு காட் டுந்நெறி, மண்ணுலாவுந் நெறி" (பின் - தேவா - கொல்லி - திருந்து தேவன்குடி - 5) நகரச் சிறப்புக் கூறுமாற்றால் சைவத்தின் மேனிலை காட்டுவது உட்குறிப்பு ; "கருத்தின் பயனு மெழுத்தஞ்சும்... வேதப்பயனும் சைவமும்போல்" (1214) என்று இவ்வாறே உவமை முகத்தால் நகரச்சிறப்பினைக் கூறும் வகையால் சைவச் சிறப்புக் கூறிய திறம் இங்கு நினைவு கூர்தற்பாலது. விளங்குவன - பல்குவன - சாற்றுவன போல இடங்கடோறும் நிதியம் துவன்றுவன என்றலுமாம்.

தோக்கவளங் கோள் இடங்கள்-கொகுதியாகச் செறிந்த வளங்களைச் சேமித்து கொண்ட வைப்பு இடங்கள். வளங்கள் - விளைபொருள்கள் ; நிதியம் - அவற்றாற் பெற்ற மணி, பொன், வெள்ளி முதலியவை.

அடங்க - நிறைய ; துவன்றுவன - விளங்குவன. தோன்றுவன.

விளையும் இன்பம்—பயினேட்டறங்கள்—பயிலுவன—அணிசெய் மடங்கள்—சைவமேன்மை—என்பனவும் பாடங்கள். 3

3751. வேத நெறியின் முறைபிறழா மிக்க வொழுக்கந் தலைநின்ற
சாதி நான்கு நிலைதழைக்குந் தன்மைத் தாகித் தடைமதில்சூழ்
சூத வகுள சாளநிரை துதைபுஞ் சோலை வளநகர்தான்
'கோதை யரசர் மகோதை'யெனக் குலவு பெயரு முடைத்துலகில். ச

(இ - ள்) வேத...தன்மைத்தாகி - வேதங்களின் விதித்த நெறியினது முறைகளின்றும் வழுவாத மிகுந்த நல்லொழுக்கத்திலே சிறந்த நான்கு சாதிகளும் தத்தம் நிலைகளில் நிலைத்து ஓங்கும் தன்மையை உடையதாகி ; தடமதில்சூழ்...நகர்தான்- பெரிய மதில் சூழ்ந்த மா - மகிழ் - சாளம் முதலிய மரங்களின் வரிசை நெருங்கிய சோலைகள் சூழ்ந்த வளப்பமுடைய அந்நகரம் ; கோதை அரசர்...உலகில் - உலகத்தில் கோதை எனப்படும் சேர அரசர்கள் ஆளும் தலைநகராகிய மகோதை என்ற விளக்கமாகிய பெயரும் உடையது.

(வி - ரை) நகர்தான் - தன்மைத்தாகிப் - பெயரும் உடைத்து - என்று கூட்டுக.

வேதநெறியின்...சாதி நான்கு தன்மை - அந்தணர், அரசர், வணிகர், வேளாளர் என்பன; இவையும், இவற்றின் ஒழுக்கமும், நிலைபெறும் வேதங்களுள் விதிக்கப்படுவன; நகரத்தின் நன்னிலைக்கு இவை இன்றியமையாது வேண்டப்படுவன; இவை பற்றி இந்நாளில் மாறுபட்ட கருத்துக்கள் பல பரவி மக்கட் கூட்டத்தை அலைக்கின்றன; எவ்வாற்றானும் ஓரோர் வகையால் சாதிகளும், அவற்றின் உரிய நல் ஒழுக்கங்களின் வழுவாத நிலைபேறும் சமூக நல்வாழ்வுக்கு இன்றியமையாதன என்பது அறிவோர் கருத்து; இப் பாகுபாடுகள் பிறழ்ந்த நிலையே இந்நாளில் உலக முழுதும் காணும் அல்லல்களுக்குக் காரணமாவது என்பது ஊன்றிப் பார்ப்போர்க்கு விளங்காமலிராது. ஆசிரியர் இதனைப் பல விடத்தும் வற்புறுத்திக் காட்டியருளுதல் காண்க; நெறியின் முறைபிறழா என்றும், மிக்க ஒழுக்கம் என்றும், நிலைதழைக்கும் என்றும் கூறியவாற்றால் இவற்றால் மாறுபட்ட பூசல்களுக்கும் அல்லல்களுக்கும் இடமின்மையும் உடன் கூறியபடியும் கண்டுகொள்க. தழைக்கும் என்றதனால் சாதிகள் எல்லாவற்றுக்கும் உள்ள ஆக்கப்பாடும் செழிப்பும் அறிவித்தபடியும் காண்க.

சரளம் - நீண்ட இலைகளையுடைய தேவதாரு வகையுட்பட்டதொரு பெருமரம்.

கோதை அரசர் - சேரமரபின் அரசர்கள்.

மகோதை - தலைநகரின் பெயர்; பெயரும - முன்னர்க்கூறிய கொடுங்கோளூர் என்ற பெயரேயன்றி இதுவும் என்று உம்மை இறந்தது தழுவிய எச்சவும்மை "கடலங் கரைமேன் மகோதை" (தேவா). அரசர் மகோதை - ஆறாம் வேற்றுமைத் தொகை.

சோலை வள நகர்தான் - இவ்வழகிய காட்சி இன்றும் சிறபபாய்க் கண்டனுப விக்க வுள்ளது. 4

3752. முருகு விரியு மலர்ச்சோலை மூதூ ரதன்கண் முறைமரபின்
அருகி யழியுங் கலிநீக்கி யறங்கோள் சைவத் திறந்தழைப்பத்
திருகு சினவெங் களியானைச் சேரர் குலமு முலகுஞ்செய்
பெருகு தவத்தா லரனருளாற் பிறந்தார் பெருமாக் கோதையார். ௫

(இ - ள்) முருகு...அதன்கண் - மணம் வீசும் மலர்களையுடைய சோலைகள் சூழ்ந்த பழைய அந்நகரத்தில்; முறைமரபின்...திறம்தழைப்ப - சிறுகி அழிவு செய்யும் கலியினை, விதிமுறை மரபு வழிவரும் ஒழுக்கத்தினாலே நீக்கி அறத்தினை நாட்டும் சைவத்திறம் தழைத்தோங்கும்படி; திருகு...தவத்தால் - மாறுபட்ட கோபமிகுந்த மதமுடைய யானைப் படையினையுடைய சேரர் குலமும் உலகமும் செய்த பெருந் தவத்தினாலே; அரனருளால்...பெருமாக் கோதையார் - சிவனருளாலே பெருமாக் கோதையார் என்பவர் அவதரித்தனர்.

(வி - ரை) அருகி அழியும் கலி - அருகச் செய்து அழிவிக்கும் கலி என்க; அழியும் - பிறவினைப் பொருளில் வந்தது; கலி - தீநெறியின் விளைவு - "கலியை வாராமே செற்றார்" (தேவா.) முருகு - மணம்; "முருகலர் தாமரை".

முறைமரபின் - நீக்கி - என்க; முறை மரபு - வேத நூன்முறை ஒழுக்கம்; மரபின் - மரபினால்.

அறங்கோள் சைவத்திறம் - அறம் வளரப் பாவம் (கலி) தேயும்; ஆதலின் அவ்வறத்தினை மேற்கொண்டு பெருக்கும் சைவத்திறம்; ஈண்டுக்குறித்த அறம் சிவநெறியாகிய அறம்.

யானைச் சேரர்குலம் - யானை - யானைப் படை; "வேழ முடைத்து மலைநாடு" என்றபடி யானைகள் மிகுந்த மலைநாட்டினை ஆளும் சேரர் குலம் என்றலுமாம்;

"யானை யணிகள்...செல்வன, மான மலைநாட் டினின்மலிந்த மலைக ளுடன்போ துவ போன்ற" (3795)

சேரர் குலமும் உலகும் செய் தவத்தால் - சேரர்குலம் விளங்கவும் உலகம் சிவ நெறியில் ஓங்கி நலம் பெறவும் தாம்தாம் தவஞ் செய்ததன் பயனுக ; பெருந்தவம் - அளவு படாது மேன்மேற் பெருகும் தவம்.

அரனருளால் - தவத்தின் பயன் கொடுக்கும் சிவனருளாலே என்பதாம்.

பெருமாக் கோதையார் - கோதையார் - சேர அரசர்களது மரபுப் பெயர் ; ஆர் - சிறப்புப பன்மை ; பெருமாக்கோதை - சேர அரசர்கள் பெயர் வழங்கு முறை. 5

3753. திருமா நகரந் திருவவதா ரஞ்செய் விழவின் சிறப்பினால்
வருமா களிகூர் நெய்யாட லெடுப்ப வான மலர்மாரி
தருமா விசும்பின் மிகநெருங்கத் தழங்கு மொலிமங் கலந்தழைப்பப்
பெருமா நிலத்தி லெவ்வுயிரும் பெருகு மகிழ்ச்சி பிறங்கினவால். ௬

(இ - ள்) திருமாநகரம்...எடுபப - செல்வ நிறைந்த அப்பெரு நகரத்தவர் பெருமாக்கோதையார் திருவவதாரஞ் செய்த திரு விழாவின் சிறப்பினாலே வரும் பெருமகிழ்ச்சி மிக்கு நெய்யாடல் விழாக் கொண்டாட ; வானம்...நெருங்க - கற்பகப் பூமாரி மழை பொழியும் ஆகாயத்தில் மிக நெருங்க; தழங்கும்...தழைப்ப - ஒலிக்கும் மங்கல வொலிகள் ஓங்கி முழங்க ; பெரு...பிறங்கினவால் - பெரிய இவ்வுலகத்தில் எல்லாவுயிர்களும் மேன்மேலும பெருகுகின்ற மகிழ்ச்சி பெற்று விளங்கின.

(வி - ரை) விழவின் சிறப்பினால் - நகரம் - நெய்யாடல் - எடுப்ப என்க. நெய்யாடல் - நெய்யணி விழா ; "திருமலிநெய் யாடல்விழாச் செங்காட்டங்குடி யெடுப்ப" (3677); "மீதணியு நெய்யணி விழாவொடு திளைப்பார்" (1933).

தழங்கும் மங்கல ஒலி - தழைப்ப - தழங்குதல் - ஒலித்தல்; முழங்குதல்; இவை இயங்களின் தொழிலேயாயினும் மங்கலங்காட்டி எழுதலால ஒலி என்றார் ; மங்கல வொலி என்னாது ஒலிமங்கலம் என்றதன் குறிப்புமிது. தழைத்தல் - மேன்மேல் எழுதல்.

எவ்வுயிரும் ..மகிழ்ச்சி பிறங்கின - யாவம் யாருங் கழறினவும் மறிந்து நீதி முறை புரியும் அரசர் பெருமான் அவதரித்தமையால் எல்லாவுயிர்களும் மகிழ்ச்சி யடைந்தன என்பது குறிபபு. கழறிற்றறிவார் என்ற பெயர்க்காரணம் காண்க. பிறங்குதல் - விளங்குதல் ; மகிழ்ச்சியில் விளங்கின. 6

3754. மண்மேற் சைவ நெறிவாழ வளர்ந்து முன்னை வழியன்பாற்
கண்மேல் விளங்கு நெற்றியினர் கழலே பேணுங் கருத்தினராய்
உண்மே வியவன் பினராகி யுரிமை யரசர் தொழில் புரியார்
தெண்ணீர் முடியார் திருவஞ்சைக் களத்திற் றிருத்தொண் டேபுரிவார்,

3755. "உலகி னியல்பு மரசியல்பு முறுதி யல்ல" வெனவுணர்வார்
புலரி யெழுந்து புனன்மூழ்கிப் புனித வெண்ணீற் றினுமூழ்கி
நிலவு திருநந் தனவனத்து நீடும் பணிகள் பலசெய்து
மலரு முகையுங் கொணர்ந்துதிரு மாலை சாத்த மங்

3756. திருமஞ் சனமுங் கொணர்ந்துதிரு வலகு மிட்டுத் திருமெழுக்கு
வருமன் புடனின் புறச்சாத்தி மற்று முள்ள திருப்பணிகள்
பெருமை பிறங்கச் செய்தமைத்துப் பேணும் விருப்பிற் றிருப்பாட்டும்
ஒருமை நெறியி னுணர்வுவர வோதிப் பணிந்தே யொழுகுநாள், கூ

3757. நீரின் மலிந்த கடலகழி நெடுமால் வரையின் கொடிமதில்சூழ்
சீரின் மலிந்த திருநகர மதனிற் செங்கோற் பொறையனெனுங்
காரின் மலிந்த கொடைநிழன்மேற் கவிக்குங் கொற்றக் குடைநிழற்கீழ்த்
தாரின் மலிந்த புயத்தரசன் றரணி நீத்துத் தவஞ்சார்ந்தான். ௧௦

3754. (இ - ள்) மண்...வளர்ந்து - உலகத்தில் சைவநெறி ஓங்கி வளரும்படி வளர்ந்து; முன்னைவழி...கருத்தினராய் - முற்செய் தவத்தின் வழியே தொடர்ந்து வந்த அன்பினாலே, மேலே கண் விளங்கும் நெற்றியினையுடைய சிவபெருமானது திருவடிகளையே பேணுகின்ற கருத்தினை உடையாராகி; உண்மேவிய அன்பினராகி - உள்ளத்திற் பொருந்திய அன்புடையாராய்; உரிமை...புரியார் - தமது உரிமையாகிய அரசாட்சிக்குரிய தொழிலைச் செய்யாது; தெண்ணீர்...புரிவார் - தெளிந்த நீரினைச் சடையிற்றரித்த சிவபெருமான் விளங்க எழுந்தருளிய திருவஞ்சைக் களத்தில் திருத்தொண்டினையே செய்வாராய், எ

3755. (இ - ள்) உலகின்...உணர்வார் - உலகவாழ்வும், அரசவாழ்வும் நிலையில்லாதன என்று உணர்வாராகி; புலரி...மூழ்கி - விடியற்காலையில் எழுந்து தண்ணீரில் முழுகிக் குளித்துத் தூய்மை தரும் திருவெண்ணீற்றினும் குளித்து; நிலவு...செய்து - நிலைபெற்ற திருநந்தன வனத்திலே நீடுகின்ற திருப்பணிகள் பலவற்றையும் செய்து; மலரும்...அமைத்து - பூக்களையும் முகைகளையும் கொணர்ந்து திருமாலைகளைச் சாத்துவதற்கு மகிழ்ச்சியுடனே அமைத்து, அ

3756. (இ - ள்) திருமஞ்சனமும்...சாத்தி - திருமஞ்சனமுங் கொண்டு வந்து திருவலகும் இட்டுத் திருமெழுக்கும் வருகின்ற அன்போடும் இன்பம் பொருந்தச் சாத்தி; மற்றும்...அமைத்து - மேலும் உள்ள திருப்பணிகளையும் பெருமை விளங்கச் செய்து அமைத்து; பேணும்...ஒழுகுநாள் - பேணுகின்ற விருப்பத்தினாலே ஒன்றித்துச் செல்லும் ஒழுக்கத்தின் உணர்வுவரத் திருப்பாட்டுக்களையும் ஓதிப் பணிந்தே இவ்வாறு ஒழுகுகின்ற காலத்தில், கூ

3757. (இ - ள்) நீரின்...திருநகரமதனில் - நீரினால் நிறைந்த கடல்போன்ற அகழியும் நீண்ட பெரிய மலைபோன்ற கொடிமதிலும் சூழ்ந்த சிறப்புமிக்க அத்திருநகரத்திலே; காரின்...கீழ் - மேகத்தின் மிகுந்த கொடையின் நிழல் மேலேயும் அதன் கீழே கவிக்கும் வெண்கொற்றக் குடையின் நிழலுமாக அதன்கீழேயிருந்து; செங்கோற்பொறையனெனும் - செங்கோற்பொறைய னென்னும் பெயரையுடைய; தாரின்...சார்ந்தான் - மாலையணிந்த தோள்களையுடைய சேர அரசன் இவ்வுலகந் தாங்கும் செயலை நீத்துத் தவநெறிசாரத் தவ ஒழுக்கத்தினைச் சார்ந்தனன். ௧௦

இந்நான்கு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

3754. (வி - ரை) மண்மேற் சைவநெறி வாழ என்றது உயிர்கள் சைவநெறியில் நின்று வாழ்வடைய என்றதாம்.

முன்னை வழி அன்பு - முற்செய்தவத்தால் உடன் வந்த அன்பு; "முன்பு செய் தவத்தி னீட்ட முடிவிலா வின்ப மான அன்பினை யெடுத்துக் காட்ட" (751) என்

றது காண்க. "தவத்தினில்" (போதம். 8) என்ற விடத்து, "இனி இவ்வான் மாக்களுக்கு முற்செய்தவத்தால் ஞான நிகழும்" என்று அதிகாரணம் வகுத்து ஓதியதும் கருதுக. வழி - வழியே வந்த; முன்னைவழி - அவ்வரசமரபின் முந்தையோர் வழி வந்த ஒழுக்கம் என்ற குறிப்புமாம்; "மன்னிய சைவத்துறையின் வழிவந்த குடிவளவர்" (1900).

மேல் - மேனோக்கியதாக; அக்கினி மேனோக்கும் தன்மை குறித்தது; "ஊர்த்துவ ரேதசு" என்பது வடமொழி வழக்கு. "விரூபாட்சன்" என்னும் நாமமும் காண்க.

கழலே — தொண்டே - ஏகாரங்கள் பிரிநிலை.

அரசர் உரிமைத் தொழில் - என்க. உரிமையாவது அரசர் மரபின்வந்து வழி வழி தமக்கு உரிமையாய்ப் பெறுதல்.

புரியாராகிப் - புரிவார் - என்க; புரியார் - முற்றெச்சம். புரியாது.

திருத்தொண்டே - இவை மேல்வரும் இரண்டு பாட்டுக்களில் விரிக்கப் படுவன.

முன்னைவழி அன்பால் - இளமை தொட்டே சிவனன்பில் விளங்குதல் அரிது; அரசர்மரபில் வந்தோர் அரசுரிமை ஆட்சித் தொழில் புரியாது சிவனது அடிமைத் தொழில் புரிதல் அதனினும் அரிது; இந்நிலை முன்னைத் தவத்தாலன்றி வாராது என்பது கருத்து. "தவத்தினில்" "முற்செய்தவத்தால்" (போதம். 8) 7

3755. (வி - ரை) உலகின்...அல்ல - இயல்பு - இயலுதல்; வாழ்தல்; வாழ்க்கை செலுத்துதல் என்ற பொருளில் வந்தது. உறுதி - நிலைபேறான குறிக்கோள்; உறுதிப் பொருள்; உறுதியல்ல - நிலைபேறுடையன வல்ல; அழியுந்தன்மையுடையன; இவை உறுதியல்ல என்று உணர்ந்தமையால் உறுதியான இறைவன் திருத்தொண்டினையே புரிந்தனர் என்பது.

புலரி - விடியற்காலம்; இருள் புலரும் காலம். புலர்தல் - நீங்குதல்; மெலிதல்.

புனித வெண்ணீற்றினும் மூழ்கி - திருநீற்றினை உத்தூளனமாக மேனி நிறைய அணிதல் இங்கு மூழ்குதல் எனப்பட்டது; உம்மை உயர்வு சிறப்பு; குளித்தல் எண் வகைப்படும் - அவை வருமாறு: வாருணம் (நீரின் மூழ்குதல்); ஆக்கினேயம் (தீச் சம்பந்தமான திருநீறணிதல்); சந்தியா வந்தனத்தில் பஸ்ம ஸ்நானம் என்பதோர் அங்கமாதலும் காண்க. மந்திரம் (மந்திரங்களை உச்சரித்தல்); மானதம் (பிரணவத் தியானம்); திவ்வியம் மகேந்திரம் (சூரிய கிரணத்துடன் தோற்றிய மழையில் கிழக்கு நோக்கி எழுடி நடத்தல்); மாருதம் (வாயவ்யம்) (காற்றுக் கலந்த பசுப்பாத தூளிபட எதிரிட்டு நடத்தல்); பார்த்திபம் (சிவன்கோயில், அல்லது ஆறு இவற்றின் மண்ணைக் குழைத்துத் தரித்தலும் குழைத்த நீரைத்தெளித்துக் கொள்ளுதலும்); கௌரவம் (ஆசாரியர் பாததீர்த்தத்தில் மூழ்குதல் - அதனை மேலே தெளித்தல்; உட்கொள்ளுதல்). இவற்றுள் முன் நான்கும் நித்தியம் எனவும், பின்னைய நான்கும் நைமித்திகம் (நிமித்தம் பற்றிச் செய்யப்படுவது) எனவும் படும். (சைவபூஷணம்). இவற்றுள், இங்குக் கூறியது ஆக்கினேயஸ்நானம் (தீயிற்குளித்தல்). மண்முதலிய ஐம்பூதங்களின் பொருத்தத்தாலும் தூய்மை செய்யப்படும்; அவை ஒன்றற்கொன்றேற்றமாய் வருதலும் உலகியலிலும் வைத்துக் கண்டு கொள்க. புனித வெண்ணீறு - புனிதம் செய்யும் நீறு; "சுந்தரமதாவது நீறு" (தேவா). வெண்ணிறமுள்ள நீறே அணியத்தகுந்தது.

நீடும் பணிகள் - மரம் செடி கொடிகளுக்கு நீர்பாய்த்துதல், களை பிடுங்குதல் முதலாயின.

மலரும் முகையும் - மலர்கள் அன்றலர்ந்த புதிய பூக்கள்; முகைகள் - சாத்தும் அவ்வக்காலங்களுக் கேற்ப மலரும் பருவமுள்ள அரும்புகள். "கமழ்முகை யலரும் வேலைத், தெய்வநா யகர்க்குச் சாத்தும் திருப்பள்ளித் தாமம்" (559); "நகைக்கும் பதத்தி னுடன்பறித்த" (1023).

சாத்த - மாலை - அமைத்து - என்று கூட்டுக. அமைத்தல் - தாமம், பிணையல், கண்ணி என்றிவ்வாறு பல வகையும் அமைக்தல் (1025). 8

3756. (வி - ரை) திருமஞ்சனம், திருவலகு, திருமெழுக்கு, ஏனைய அனைய திருப்பணிகளும், திருப்பாட்டு முதலியவையுமாகிய இவை பெருமாக் கோதையார் இளவரசராயிருந்தபோது திருவஞ்சைக்களத்தில் தங்கிச் செய்து ஒழுகிய திருத்தொண்டுகள்.

திருமஞ்சனமும் கொணர்ந்து - திருமஞ்சனத்துக்குரிய நீரினை எடுத்துக்கொண்டு வந்து.

திருமெழுக்க ..சாத்தி - திருமுற்றத்தினை அன்பும் இன்பமும் பொருந்த மெழுகி; அன்பும் இன்பமும் இவர்பாலும் வரும் அடியார்பாலும் நிகழ.

மற்றும் உள்ள திருப்பணிகள் - திருக்கோயில் உள்ளும் புறம்பும், திருமதில் மண்டபம் முதலிய தலங்களையும தூய்மையாக்குதல், திருவிளக்கிடுதல் முதலாயின.

பேணும் விருப்பில் - பேணுகின்ற விருப்பத்தினாலே; பேணுதல் - பாராட்டுதல்; அன்பு செலுத்துதல்.

ஒருமை நெறியின் உணர்வுவர - ஒன்றித்த நினைவுடனே; "ஒரு நெறிய மனம் வைத்துணர்", "ஒன்றியிருந்து நினைமின்கள்" (தேவா).

திருப்பாட்டும் - ஓதி - என்று கூட்டுக; இவை இந்நாயனார் அவ்வப்போது துதிக்கும் வகையில் தாமே அருளியவை போலும்; இப்போது கிடைக்கில! அன்றியும், அம்மையார் திருப்பதிகங்கள், திருமந்திரம், ஆளுடைய பிள்ளையார் அரசுகள் தேவாரங்கள் முதலாயின முன்னோர் திருப்பாட்டுக்களும், கீதங்களும், என்றலுமாம்.

திருப்பாட்டும் - ஓதி - முன் கூறியவை மெய்யினாற் செய்வன; அவற்றினின்றும் வேறு பிரித்து இவை வாக்கினாற் செய்வன என்பார் உம்மை கொடுத்துப் பிரித்தோதினார்; ஒருமை நெறியின் உணர்வு - என்பது மனத்தாற் செய்யும் பணியினைக் குறித்தது; உணர்வு வர - உணர்வுடனே; உணர்வு வந்ததனாலே; வரும் பொருட்டாக என்றலுமாம்.

"நிலை பெறுமா றெண்ணுதியே னெஞ்சே நீவா, நித்தலுமெம் பிரானுடைய கோயில் புக்குப், புலர்வதன்முன் னலகிட்டு மெழுக்கு மிட்டுப் பூமாலை புனைந்தேத்திப் புகழ்ந்து பாடித் தலையாரக் கும்பிட்டுக் கூத்து மாடிச் சங்கரா சயபோற்றி போற்றி யென்றும், அலைபுனல்சேர் செஞ்சடையெம் மாதீ யென்று மாரூரா வென்றென்றே யலறா நில்லே" (தேவா - அரசு); "ஆமாறுன் றிருவடிக்கே யாகங் குழையே னன்புருகேன், பூமாலை புனைந்தேத்தேன் புகழ்ந்துரையேன் புத்தேளிர், கோமானின் றிருக்கோயில் தூகேன் மெழுகேன் கூத்தாடேன், சாமாறே விரைகின்றேன் சதுராலே சார்வானே" (திருவா. சத - 14); "ஆடுவதும் பாடுவது மானந்த மாகநின்னைத், தேடுவது நின்னன்பர் செய்கை பராபரமே" (தாயுமானார்). 9

3757. (வி - ரை) கடலகழி - வரையின் மதில் சூழ் நகரம் என்க; கடல் போன்ற அகழியினாலும், மலை போன்ற மதிலினாலும் சூழப்பெற்ற நகரம்; இனி, இந்நாடு கடல் சூழ்ந்த நாடாகவும் மலைகள் நிரம்பிய மலை நாடாகவும் உள்ளமையின் கடலே அகழியாகவும் மலையே மதிலாகவும் சூழ்ந்த என்று உரைக்க வைத்ததுவும் கவிநயம்; கோடிமதில்-கொடிகள் மதிலுக்கும் அரசுக்கும் உரிய அங்கங்களுள் ஒன்று.

செங்கோற் பொறையன் - நாயனாருக்கு முன் அரசு புரிந்த சேர அரசரது பெயர்; பெருஞ்சேரலிரும்பொறை, இளஞ்சேரலிரும்பொறை முதலியனவாக வரும் சேரமன்னர்களின் பெயர்கள் ஈண்டுக் கருதத்தக்கன. செங்கோலைத் தாங்கி அரசு செலுத்துபவன் என்பது பெயர்க்காரணப் பொருள். பெருமாக் கோதை என்பதும் இவ்வாறே காரணம் பற்றிய பெயராய் நிற்றலும் காண்க. பெருமாள் எனவழங்கும் சேர மன்னர் மரபுப் பெயரும் இப்பொருள் தருவது போலும்.

செங்கோல் - செவ்விய கோல்போறலின் நீதி இப்பெயர் பெற்றது; கோல் அதற்கறிகுறியாக வுள்ளது.

காரின்...கீழ் - இவ்வரசன் இரண்டு நிழல்களின் கீழ்இருந்து அரசுபுரிந்தான்; ஒன்று கொடை நிழல்; மற்றொன்று குடை நிழல்; அவற்றுள் மேலே நிற்பது கொடை நிழல்; குடைநிழல் அதனின் கீழ்ப்பட்டது என்பதாம்; மேல் - மேம்பட்டது என்ற குறிப்புடனும் நின்றது; நிழலின்கீழ் அரசு புரிதல் என்பது வெயில் மழை பனித் துன்ப நீக்கிக் குடைநிழல் காத்தல் போல, நாட்டினைத் துன்ப நீக்கி யின்பம் பொருந்தக் காத்தல்; குடை - வெண் கொற்றக்குடை. இது முடியுடை அரசர்க்குரிய சிறப்பு அடையாளங்களுள் ஒன்று; அரசன் நாட்டின் நலத்திற்கு ஒருங்கே காரணமாயிருத்தற்கு அறிகுறியாம் என்ப. "பிரபஞ்சமெல்லாவற்றிற்கும் மூலகாரணமா மியல்பாகிய ஒரு பெரு வெண்கொற்றக்குடையும்...பிறரொருவருக் கின்றித் தனக்கே யுரிமையாகச் சிறந்தமைபற்றி...முதல்வனை மன்னவனாகவும்" (போதம். 8. சிற்றுரை); கொடைநிழல் - கொடையின் பயனாகிய தருமத்தின் நன்மை; காரின்மலிந்த - பயன் கருதாது பெய்து உலகளிப்பது மேகம்; மலிதல் - அதனினும் நன்மையால் மேம்படுதல்; இன் - உவமவுருபு; உம்மை தொக்கது; கார்-இந்நாட்டினை அளிக்கும் இரண்டனுள், பருவந் தவறாது மிக்குப் பெய்யும் இயல்புடைய (மேகம்) கார் ஒன்று; அரசனது கொடை மற்றொன்று. அவற்றுள் நற்பயனால் மிக்கது கொடை என்பதாம். "கார் கொண்ட கொடை" என்ற திருத்தொண்டத் தொகையும் காண்க. சேரர்களது கொடைத்திறம் பற்றிப் பதிற்றுப்பத்து, புறநானூறு முதலிய பழந்தமிழ் நூல்களுள் உரைத்தவையும் பார்க்க

மேல் - கீழ் - உலகளிக்கும் நிழல் இரண்டனுள் கண்ணாற் காணப்படாது பயனால் மேம்பட்டு நாடு எங்கும் பரவியது கொடை நிழல்; கண்ணாற் காணப்பட்ட அறிகுறியாக அரசன்முடிமேல் அளவுபட நிழற்றுவது குடைநிழல் என்ற குறிப்பும்பட மேல் - கீழ் என்ற சொன்னயமும் காண்க. இவ்விரண்டும் கவிநயம் எனப் படுதலும் அறிக.

தரணி நீத்துத் தவஞ்சார்ந்தான் - உலக அரசாட்சியினைத் துறந்து தவஞ் செய்யும் ஒழுக்கத்தினை மேற் கொண்டனன். தபோவனம் சென்றான் என்பாருமுண்டு; அது மேற்பாட்டிற் கூறப்படும். இவ்வாறு அரசாட்சியினைத் தாமாகவே நீத்துத் துறவு சார்தல் இம்மரபினில் இன்றும் காணும் சிறப்பு நிலையாம்; கொச்சி அரசர் மரபு நிலைகள் காண்க; ஐயடிகள் காடவர்கோனாயனார், அரசாட்சி "இன்னலென விகழ்ந்ததனை யெழிற்குமரன் மேலிழிச்சி, நன்மைநெறித் திருத்தொண்டு நயந்

தளிப்பா ராயினர் " (4048) என்னும் வரலாறும் " படிமுழுதும் வெண்குடைக் கீழ்ப் பாரெலா மாண்ட, முடியரசர் செல்வத்து மும்மைத் - தொடியிலங்கு, தோடேந்து கொன்றையந்தார்ச் சோதிக்குத் தொண்டுபட் டோடேந்தி யுண்ப துறும் " (11-ம் திருமுறை - க்ஷேத்திரத் திருவெண்பக - 10) என்ற அவரது திரு வாக்கும், ஈண்டு நினைவுகூர்தற்பாலனவாம். முடிமன்னராகும் நிலையினையும் துறந்து தவஞ்சாரும் பெருநிலை எமது தமிழ்நாட்டுப் பெருவேந்தர்க்கே சிறப்பாய் உரியது ; இந்நாளில், இதனோடொப்பின், ஒன்றுக்கும் பற்றாத சிறிய அமைச்சு முதலிய சின்னாட் சிற்றதிகார பதவிகளுக்கும் விடாமுயற்சியினுடன் பேய்போல அலையும் உலக மாக்களின் கீழ்மை யிதனுடன் ஒப்பிட்டு உண்மை கண்டுகொள்ளத்தக்கது. 10

3758. வந்த மரபி னரசளிப்பான் வனஞ்சார் தவத்தின் மருவியபின்
சிந்தை மதிநூ றேரமைச்சர் சிலநா ளாய்ந்து தேளிந்தநெறி
முந்தை மரபின் முதல்வர்திருத் தோண்டு முயல்வார் முதற்றாக
இந்து முடியார் திருவஞ்சைக் களத்தி லவர்பா லெய்தினார். கக

(இ - ள்) வந்த...பின் - வழிவழி தொடர்ந்து வந்த அரசமரபில் அரசு செய் வானாகிய மன்னன் முன் கூறியபடி தபோவனத்திற் சார்கின்ற தவநெறியினைச் சேர்ந்தபின்பு ; சிந்தை...நெறி - சிந்தை செய்யும் கூர்த்த மதியினையுடையவராய்த் தாய உரிமை அறிதற்கு உரிய நூல்களைத் தேரும் அமைச்சர்கள் சில நாட்கள் ஆராய்ந்து தெளிந்த துணிபாவது ; முந்தை...முதற்றாக - முன்னை மரபினாலே முழு முதல்வனாரது திருத்தொண்டு புரிவாராகிய பெருமாக் கோதையார்பால் அம் முதன்மை நின்றதாக ; இந்து...எய்தினார் - பிறையணிந்த திருமுடியினை உடைய இறைவர் எழுந்தருளிய திருவஞ்சைக் களத்தில் அவரிடம் சென்று சேர்ந்தனர்.

(வி - ரை) வந்த மரபு - வழிவழி உரிமைபபட்டு வந்த அரச மரபு.

அரசளிப்பான் - அரசு செய்ப வேண்டியவனான மன்னவன் ; வினைப்பெயர்.

வனஞ்சார் தவத்தின் மருவுதலாவது - நாட்டினை விட்டுத் தபோவனத்தினை அடைந்து தவத்தின் நிற்றல்.

சிந்தை...நேறி - சிந்தையினாலே தேர் என்று கூட்டுக.

மதிநூல் - அறநூலும் அரசநூலும்.

சிலநாள் ஆய்ந்து தேளிந்த நேறி - அரசுவழி காணுதல் மலைநாட்டுச் செய்தி யாதலின் மதிநூல் தேர் அமைச்சர்க்கும் விரைவில் தெளிய வியலாது சில நாட்கள் ஆராய்ந்து துணிய வேண்டியதாயிற்று ; நேறி - முதற்றாக - அந்நெறி - தாய உரிமை யின் வழி - அவரே முதன்மையினராகச் சென்று நின்றது என்க.

முதற்று - முதலாக உடையது.

அவர்பால் எய்தினார் - அவ் அமைச்சர் என்ற எழுவாய் தொக்கு நின்றது. 11

3759. எய்தி யவர்த மெதிரிறைஞ்சி "யிருந்தண் சாரன் மலைநாட்டுச்
சேய்தி முறைமை யாலுரிமைச் சேங்கோ லரசு புரிவதற்கு
மைதீர் நேறியின் முடிசூடி யருளு மரபால் வந்த"தெனப்
பொய்தீர் வாய்மை மந்திரிகள் போற்றிப் புகன்ற பொழுதின்கண்,

3760. " இன்பம் பெருகுந் திருத்தோண்டுக் கிடையூ றாக விவர்மோழிந்தார் ;
அன்பு நிலைமை வழுவாமை யரசு புரக்க மருளுண்டேல்

என்பு மரவு மணிந்தாரை யிடைபெற் றறிவே" னெனப்புக்கு
முன்பு தொழுது விண்ணப்பஞ் செய்தார்; முதல்வ ரருளினால், கரு

3761. மேவு முரிமை யரசளித்தே விரும்பு காதல் வழிபாடும்,
யாவும் யாருங் கழறினவு மறியு முணர்வு, மீறில்லாத்
தாவில் விறலுந், தண்டாத கொடையும், படைவா கனமுதலாம்
காவல் மன்னர்க் குரியனவு மெல்லாங் கைவந் துறப்பெற்றார். கச

3759. (இ - ள்) பொய்தீர் வாய்மை மந்திரிகள் - பொய்யினைத் தீர்க்கும் வாய்மையினையுடைய (அந்த) மந்திரிகள்; எய்தி...இறைஞ்சி - முன் கூறியவாறு திருவஞ்சைக் களத்திற் சேர்ந்து அவர் திருமுன்பு வணங்கி; இருந்தண் சாரல் ...வந்தது என - பெரிய குளிர்ந்த சாரல்களையுடைய மலை நாட்டின் அரசர் மரபு வழிவழி வரும் செய்தி முறையினாலே உரிமைச் செங்கோல் அரசு செலுத்துவதற்குக் குற்றமற்ற வழியினால் முடிசூடியருளும் தாய மரபால் (தேவரீர்) வந்தது என்று; போற்றி...பொழுதின் கண் - துதித்துச் சொல்லியபோது, கஉ

3760. (இ - ள்) இன்பம்...மொழிந்தார் - இன்பம் மேன்மேலும் பெருகுதற் கேதுவாகிய திருத்தொண்டிலே நான் முயலுதற்கு இடையூறாக இவ்வமைச்சர்கள் கூறினார்கள்; அன்பு நிலைமை...அறிவேன் என - சிவன் அன்பின் நிலையினின்றும் வழுவாமலே அரசு புரிவதற்குத் திருவருள் கிடைக்குமாயின், எலும்பும் பாம்பும் புனைந்த இறைவரைக் காலம் பார்த்து அவரது திருவுள்ளத்தை அறிவேன் என்று; புக்கு...செய்தார் - திருக்கோயிலினுள்ளே புகுந்து திருமுன்பு வணங்கி விண்ணப்பித்தனர்; முதல்வர் அருளினால் - இறைவரது திருவருளினாலே, கரு

3761. (இ - ள்) மேவும்...வழிபாடும் - பொருந்திய உரிமையுடைய அரசாட்சியினை அளித்தவாறே தாம் விரும்பிய காதல் விளையும் இறைவரது வழிபாடும், யாவும்...உணர்வும் - அஃறிணை உயர்திணை என்ற இருதிறத்துயிர்களும் சொல்வன வெல்லாவற்றையும் அறியும் உணர்வும்; ஈறில்லாத் தாவில் விறலும் - அளவில்லாத ஒப்பற்ற வெற்றியும்; தண்டாத கொடையும் - தடையில்லாத ஈகையும்; படைவாகனம்...உரியனவும் - படையும் ஊர்திகளும் முதலாக உலகங்காவல் புரியும் அரசர்க் குரித்தான அங்கங்களும்; எல்லாம்...பெற்றார் - ஆகிய இவை எல்லாம் தம்மைச் சேர்ந்து பொருந்தும்படி அருள் பெற்றனர். கச

இம்மூன்று பாட்டுக்களும் தொடர்ந்து ஒருமுடிபு கொண்டன.

3759. (வி - ரை) இருந்தண்...வந்தது - இஃது அமைச்சர் நாயனாரிடம் மொழிந்தது.

மலைநாட்டுச் செய்தி முறைமை - மலைநாட்டுச் சட்ட ஒழுங்கின்படி வழிவழியில் தாயபாகம் வரும் முறைமை; இதனை மருமக்கட் டாயம் எனவும் வழங்குவர். தமிழ் நாட்டினுள் ஏனைச் சோழர் பாண்டியர் முதலாகிய நாடுகளிற்போல மலைநாட்டுத் தாயமுறை மகன் - மகன்மகன் முதலாக வரும் ஆண் மரபு வழி வருவதில்லை; உடன் பிறந்த பெண் வழியாகத் தாயம் வருவது இம் முறை என்பர். இதன் விரிவெல்லாம் இன்றும் அந் நாட்டில் வழங்கும் சட்டங்களின் மூலம் அறியத் தக்கன. இம்முறைமையாலேதான் அந்நாட்டிற் பெண்களுக்கு அதிக உரிமை பெருமைகள் இருக்கக் காண்கின்றோம். "பெண் மலையாளம்" என்ற பெயரும் வழங்கும்.

முடிசூடி யருளும் மாபால் வந்தது - இந்த அரசரிடம் மந்திரிகள் விண்ணப்பிக்கு முறை.தாயமுறை, மரபினால் தேவரீரிடம் வந்து நின்றது என்றும், மரபால் தேவரீரது திருவவதாரம் வந்தது என்றும் உரைக்க நின்ற பணிவுச் சொன் மரபு வழக்குக் காண்க.

பொய்தீர் வாய்மை - பொய்யினைத் தீர்க்கும் சொல் நலம் : பொய் - பொய்ச் சொல்லும் அதுகாரணமாக வரும் தீமைகளுமாம். அமைச்சரது பண்புகளையும் கடமைகளையும் குறித்தவாறு.

போற்றிப் புகன்று - பெரியோர் - அரசர் - முதலாயினவர் முன்பு எச் செயலை யும் விண்ணப்பிக்கும் முன்பு அவர்களைப் போற்றித் தொடங்குதல் முறை. இங்கு நாயனார் அரசராதலுடன் போன்புடையாராய்ச் சிவனடிமைத் திறத்தினின்ற பெரி யோராதலானும் போற்றுதல் வேண்டப் பட்டது.

பொழுதின் கண் - அறிவேன் எனப் புக்கு - விண்ணப்பஞ் செய்தார் - என மேல் வரும் பாட்டுடன் முடிபு கொள்க. 12

3760. (வி - ரை) இன்பம்...மொழிந்தார்-இது நாயனாரது திருவுள்ளக்கிடை. பிறவியாலே அரச உரிமை பெற்றிருந்தும் நாயனார் அவ்வுரிமைகளையும் போகங்களை யும் விரும்பாமல் இளமையிற்றானே, கொடுங்கோளூரில் உள்ள அரண்மனையிற் றங் காது, திருவஞ்சைக்களத்திற் றங்கிச் சிவன் றிருப்பணிகள் செய்து வந்தனர். (3754 - 3756); இப்போது அரசப் பட்டம் தம்மேலதாகக் கிடைக்கப் பெற்ற போதும் அவர் திருவுள்ளம் அவ்வாறே நிலைநது நின்றது. அரசு முதலாகிய உலக போகங்களை யெல்லாம் வெறுத்து இறைவர் கழலே பரவுவதும் அடியார்களைப் பேணுவதுமே குறிக்கோளாகக் கொண்டு.வாழ்ந்து ஒழுகுவது சிவனடியார்களின் தன்மை. "போகம் வேண்டி வேண்டி லேன்புரந்த ராதி யின்பமும்" (திருவா); "இந்திரச் செல்வமு மெட்டுச் சித்தியும், வந்துழி வந்துழி மறுத்தன ரொதுங்கி" (11-ம் திருமுறை - திருவிடை - மும் - கோ - 7); "கூடு மன்பினிற் கும்பிட லேயன்றி, வீடும் வேண்டா விறலின் விளங்கினார்" (143) என்பன முதலிய எண் ணிறந்த திருவாக்குக்கள் காண்க, இக் கருத்தே பற்றி நம்பியாண்டார் நம்பிகள் இந் நாயனாரை "வென்றிக் கருப்புவில் வீரனை வெற்றிகொண்ட, சூரன்" (திருத் - திருவந்தாதி - 45) என்று துதித் தருளினர்.

"அன்பு நிலைமை...அறிவேன்" எனப்புக்கு - விண்ணப்பஞ் செய்தார் - நாயனாரது திருவுள்ளக்கிடை அவ்வாறாயின், மந்திரிகள் கூறியதற்கு உடனே மறுத்து விடாது, இறைவர்பாற் சென்று அருளை அறிய விண்ணப்பஞ் செய்த தென்னையோ ? எனின், அற்றன்று ; இதுவரை நல்லறிவு தந்து சிவன் பணியிற் செலுத்தியதும், இனியும் அவ்வாறே மறவாது செலுத்த நிற்பதும் திருவருளேயாம் என்பதனை யுணர்ந்து ஒழுகினார். ஆனால் அப்போது அற்றை நாளில், தம்மை அரச மரபில் வரச்செய்தும், செய்தி முறைமையால் அரசதாயம் தம்மேலதாக வரும் நிலையிற் காட்டியும், அதனால் உலகியலில் அக் கடமைகளைத் தம்மேற் சேர்த்தியும் நிகழ்வித்ததும் திருவருளேயாம் என்பதனையும் உணர்ந்தார். அக் கடமைகளை மறுத் தலும் கூடாதென்றும் உளங் கொண்டனர். "கடனிதென் றுணர்ந்தும்" என்று இராமன் வரலாறு கூறும் கம்பன் பாட்டும் ஈண்டுக் கருதத் தக்கது. தாம் எண் ணியவாறு "என் கடன் பணிசெய்து கிடப்பதே" என்று (தேவா - அரசு) அதனையே மேற்கொள்வதா ? அன்றி அருள் வழியே இப்போது வந்த அரசினையும் அதற்கு மாறின்றி ஏற்று உலகியற் கடமைகளையும் அந்த அருள் வழியே மேற்

கொள்வதா ? எது செய்யத் தக்கது ? என்று ஐயங்கொண்டனர். திருத்தொண்டுக்கு இடையூறாக அரசு இருக்கும்—ஆதலின் அதனை ஏற்க அஞ்சினர் ; சாதி - ஆயு - போகம் என்பன முன்னைவினைக் கீடாக வருவன வாதலின் அக் கடமைகளை மறுத்தலும் திருவருட்கு மாறாகும் ஆதலின் அருள் வழியே வந்த அரசினை மறுக்கவும் அஞ்சினர். அன்பு நிலைபிணின்றும் வழுவாது அரசு செய்யும்படி திருவருள் ஆணை பிறக்குமாகில் அதனை இறைவரிடம் விண்ணப்பித்து அறிவேன் என்றெழுந்தனர் என்பதாம். "வேண்டத் தக்க தறிவோய்நீ வேண்ட முழுதும் தருவோய்நீ... வேண்டி நீயா தருள்செய்தாய் யானு மதுவே வேண்டினல்லால், வேண்டும் பரிசொன் றுண்டென்னி லதுவு நின்றன் விருப்பன்றே" என்ற திருவாசகம் ஈண்டுச் சிந்திக்கற்பாலது. ஆளுடைய பிள்ளையார் திருவாலவாயில் சமணர் வாதத்துக்குச் சென்றருளு முன்பு, இறைவரது திருவுள்ளமறிய விண்ணப்பித்த வரலாறும் கருதுக. "பொன்னார் திருவடிக் கொன்றுண்டு விண்ணப்பம் போற்றிசெய்யும், என்னாவி காப்பதற் கிச்சை யுண்டேல்" (தேவா - அரசு) என்பது முதலிய திருவாக்குக்களும் கருதுக. ஈண்டு, இனி, அரசு புரிந்தும் கடமையிற் றிருவருள் தம்மைச் செலுத்தினும், அஃது, "அன்பு நிலைமை வழுவாமை" யிருக்க வேண்டும் என்பதே நாயனாரது திருவுள்ளமாகும் என்பதனையும் கருதுக.

விடைபெற்று - இறைவரிடம் விண்ணப்பிப்பதற்கும் உரிய நேரங்களும் இடையும் உண்டென்பது சிவாகம விதியாம். சிவபூசை நியமங்களும் சிவாலய தரிசன விதிகளும் காண்க. "மேய கால மலாமையின்" (17) என்பன முதலியவைகாண்க.

இன்பம் பெருகும் திருந்தோங்கி என்றதனால் அரசாட்சியின் பண்பு அத்தன்மைத் தன்று என்பது குறிப்பு. இன்பம் - சிவனருளிற் றிளைத்தலால் வருவது. இஃது அன்பினால் உளதாவதாம் என்பார் மேல் அன்பு - வழாமை என்றார். "அன்பினா லின்ப மார்வார்" (342) என்று திருத்தொண்டர் தன்மையை இறைவர் அறிவித்தமை காண்க. "இறவாத வின்ப அன்பு" (1776) ; "இன்பமே யென்னுடை யன்பே" (திருவா). ஐயடிகள் காடவர் கோனாயனார் "பாரளிப்பார் அரசாட்சி, யின்னலெனவிகழ்ந்ததனை யெழிற் குமரன்மேலிழிச்சி, நன்மைநெறித் திருத்தொண்டு நயந்தளிப்பா ராயினார்" (4048) என்ற சரித வரலாறும் இங்கு நினைவு கூர்க. "முடியரசா, மத்திற்கு மும்மை நன்றாலரற் காயைய மேற்றம்" (க்ஷேத்-வெ).

3761. (வி - ரை) வழிபாடும், உணர்வும், விறலும், கொடையும், உரியனவும் (ஆகிய) எல்லாம் என்று கூட்டுக ; உம்மைகள் எண்குறித்தன.

அரசளித்தே - வழிபாடு - "அன்பு நிலைமை வழுவாமை அரசுபுரக்கும் அருளி" னையே (3760) நாயனார் விரும்பி வேண்டினாராதலின் அதனை முதலிற் கூறினார். பின்வருவன எல்லாம் அவ்வரசாட்சிக்குரிய அங்கங்களாய் வேண்டத் தக்கன ; இவை அரண் அளித்தன. அரசளித்தே-அரசு புரிந்து கொண்டே ; ஏகாரம் தேற்றம்.

யாவும்...உணர்வும் - அரசர்கள் தம் கீழ்வாழும் மக்களுக்கே யன்றி, மற்றெல்லா வுயிர்களையும் காக்கும் கடமைப்பாடுடையவர்கள் ; அஃது அவ்வுயிர்கள் எல்லாம் சொல்லும் மொழிகளை அறியும் உணர்வு பெற்றிருந்தாலன்றி யியலாது ; அதன் பொருட்டே இந்நாயனாருக்கு இறைவர் இவ்வாறருளினர் என்பது மேல் (3763 - 3787) உரைக்கப்படுதல் காண்க ; அன்றியும், இந்நாயனார் சிவயோக நிலையினர் ; சிவயோகங் கைவரப்பெற்றார்க்குப் புலப்படும் நாத ஒலியினுள் எல்லாவுயிர்களின் ஒலியும் அடங்கும் என்பர் ; அரசர், மக்கள் முதலாகிய எல்லாவுயிர்களையும் காக்கும் கடப்பாடுடைமை பற்றி முன் திருநகரச் சிறப்பில் (121) உரைத்தவை பார்க்க ;

இவ்வுணர்ச்சியின் பயனாலே இந்நாயனார் தமது குதிரையின் செவியிலே சிவமந்திர மோதி, அதன் மீதில் ஏறித், திருக்கயிலை சென்று சேர்கின்றார் எனவரும் சரிதவரலாறும் காண்க. யாவும் - அஃறிணையும், யாரும் - உயர்திணையும் குறித்தன.

விறல் - வெற்றி; வல்லமை; தாவில் - அழியாத; கெடாத; தண்டாத - நீங்காத; தடைபடாத ; கோடை - " கார்கொண்ட கொடை " (திருத்தொண்டத் தொகை).

கைவருதல் - பொருந்துதல் ; தம் வசமாகுதல்.

யாவும் யாரும் கழறினவும் அறியும் உணர்வு பெற்ற இக் காரணத்தால் இந் நாயனாருக்கு கழறிற் றறிவார் என்ற பெயர் வழங்கலாயிற்று ; இதனை " அளவில் பெருமை யகிலயோனிகளுங் கழறிற் றறிந்தவற்றின், உளமன் னியமெய் யுறுதுயர மொன்று மொழியா வகையகற்றி " (3787) என்று அரசாட்சி புரிதலில் இதனைப் பயன்படுத்திய நிலையில் வைத்துக் கூறுவது காண்க. 14

3762. ஆன வருள்கொண் டஞ்சலிசெய் திறைஞ்சிப் புறம்போந் தரசளித்தல்
ஊன மாகுந் திருத்தொண்டுக் கெனினு முடையா னருளாலே
மேன்மை மகுடந் தாங்குதற்கு வேண்டு மமைச்சர்க் குடன்படலும்
மான வமைச்சர் தாள்பணிந்தவ் வினைமேற்கொண்டு மகிழ்ந்தெழுந்தார்.

(இ - ள்) ஆன...புறம் போந்து - முன்கூறியவாறு பெறலாயின திருவருளினைக் கைக்கொண்டு கும்பிட்டு வணங்கித் திருக்கோயிலினின்றும் புறத்தே வந்து ; அரசளித்தல்...எனினும் - அரசாட்சி செய்தல் திருத்தொண்டுக்கு இடையூறு செய்வதேயானாலும் ; உடையான்...உடன்படலும் - இறைவரது திருவருள் பெற்றமையாலே மேன்மையாகிய அரசமுடியினைத் தாங்குதற்கு விண்ணப்பித்து நின்ற மந்திரிகளுக்குத்தம் உடன்பாட்டினை சொல்லுதலும் ; மான...எழுந்தார் - பெருமையுடைய அவ்வமைச்சர்கள் நாயனாரது திருவடிகளில் வணங்கி அதற்கு வேண்டிய செயல்களை மேற்கொண்டு மகிழ்ச்சியோடும் சென்றார்கள்.

(வி - ரை) ஆன - முன் கூறியவாறு கைவந்துறப் பெறலான.

அரசளித்தல்...எனினும் - அரசாட்சி திருத்தொண்டுக்கு இடையூறாகும் என்று (3760) தாம் வருந்தினாராயினும் ; தெரிந்தாராயினும் ; ஊனம் - இடையூறு.

அருளாலே - அருள் காட்டிய வழி நிற்றலே கடன் என்றமையாலே ; அருளாலே - தாங்குதற்கு - உடன் படலும் என்று கூட்டுக. எனினும் - அருளாலே - முன் (3760) கூறியபடி, அரசு புரிதலில் இவருக்கு விருப்ப மில்லாதிருந்தும், திருவருள் ஆணை செலுத்தியபடி அமைந்து நிற்றலே கடன் என்றதனால் இசைந்தனர் என்பது ;

வேண்டும் - விண்ணப்பித்த ; மானம் - பெருமை.

அவ்வினை - முடிசூட்டுதற்குரிய சடங்குகள் ; மேல்வரும் பாட்டுப் பார்க்க.

அரசளித்தால்—என்பதும் பாடம். 15

3763. உரிமை நாளி லோரைநல னெய்த மிக்க வுபகரணம்
பெருமை சிறக்க வேண்டுவன வெல்லாம் பிறங்க மங்கலஞ்செய்
திருமை யுலகுக் கோருமைமுடி கவித்தா ரெல்லா வுயிருமகிழ்
தரும நிலைமை யறிந்துபுவி தாங்குங் கழறிற் றறிவார்தாம். கசு

(இ - ள்) உரிமை...மங்கலஞ் செய்து - முடிசூட்டுதற் குரியதாய் விதித்த நாளில் ஓரையின் நலமும் பொருந்த, மிக்க உபகரணங்களை எல்லாம் சிறப்புட

னமையும்படி வேண்டிய எல்லாப் பொருள்களும் விளங்க அமைத்து மங்கலச் சடங்குகள் செய்து; எல்லாவுயிரும் மகிழ் ..தாம் - உயர்திணை அஃறிணை என்னும் பகுப்பில் அமைந்த எல்லா வுயிர்களும் மகிழ்தற் கேதுவாகிய அறநீதியின் தன்மை யறிந்து உலகு புரக்கும் கழறிற்றறிவார் தாம்; இருமை...கவித்தார் - இம்மை வீடு என்ற இரண்டு உலகுக்கும் பொருந்துவதாகிய ஒரே முடியினைச் சூடிக்கொண்டனர்.

(வி - ரை) உரிமை நாள் - அரசர் முடிசூடுதற்குரியதாகக் கணித நூல்களில் விதித்த நன்னாள்.

ஓரை - நல்வேளை; இலக்கினம், முகூர்த்தம் என்பர். நல்ல ஓரையில்.

உபகரணம் - முடிசூட்டும் சடங்கிற்கு வேண்டிய பொருள்கள்.

மங்கலம் செய்து - மங்கல வினைகளாகிய சடங்குகளை எல்லாம் செய்து.

இருமை உலகு - இவ்வுலக ஆட்சியும், இறை வழிபாட்டு நெறியில் வரும் வீட்டு நெறியாட்சியும்; "அன்பு நிலைமை வழுவாமை யரசு புரக்கும்" (3759); "உரிமை அரசளித்தே விரும்பு காதல் வழிபாடும்" (3761). இவ்வாறன்றி, இதற்கு, அஃறிணை உயர்திணை உலகு; சித்தும் அசித்துமாகிய பிரபஞ்சம் என்றிரண்டாகிய உலகு என்றுரைத்தார் முன் உரைகாரர்கள். அது பொருந்தாமை அறிக.

ஒருமை முடி - இவ்வுலக உரிமை அரசாட்சியுடனே அன்பு வழிபாடும் பொருந்த ஆளும் முடி. இருமை - ஒருமை - சொல்லணி.

எல்லா...நாங்தம் கழறிற்றறிவார் - கழறிற்றறிவார் என்ற பெயர்ப்பொருளையும் காரணத்தையும் விளக்குவார் உடம்பொடு புணர்த்தி ஓதினார்; யாவும்...உணர்வும் (3761) என்ற வரம் பெற்ற காரணம் காண்க.

எல்லா உயிரும் - உயர்திணை அஃறிணை என்ற பகுதிகளுள் அடங்கிய எல்லா உயிர்களும்; உம்மை முற்றும்மை; தருமநிலை - அறநூல் விதி; மகிழ் தருமம் - மகிழ்தற் கேதுவாகிய தருமம்.

கவித்தார் - சூட்டப்பெற்றார். செயப்பாட்டுவினை. 16

3764. தம்பிரானார் கோயிலவலங் கொண்டு திருமுன் றாழ்ந் தெழுந்து
கும்ப யானை மேல்கொண்டு கொற்றக் குடையுஞ் சாமரையும்
நம்பு முரிமை யவர்தாங்க, நலங்கொ ணகர்சூழ் வலங்கொள்வார்
மொய்ம்பி லுவரின் பொதிசுமந்தோர் வண்ணான் முன்னே வரக்கண்டார்.

(இ - ள்) தம்பிரானார்...எழுந்து - இறைவரது திருக்கோயிலினை வலங்கொண்டு திருமுன்பு நிலமுற வணங்கி எழுந்து; கும்ப யானை...தாங்க - மத்தகத்தினை உடைய யானையினை மேல்கொண்டு வெண்கொற்றக் குடையினையும் சாமரையினையும் நம்பும் உரிமையுடைய பரிசனங்கள் தாங்கி ஏற்றவாறு பணிசெய்ய; நகர்...கொள்வார் - திருநகரத்தினைச் சுற்றி வலமாக வருகின்றாராகிய நாயனார்; மொய்ம்பில்...கண்டார் - தோள்கட்டில் உவர்மண் பொதியினைச் சுமந்துகொண்டு ஓர் வண்ணான் தம்முன்பு வருதலைக் கண்டனர்.

(வி - ரை) தம்பிரானார்...எழுந்து - முன்கூறிய முடி சூட்டுஞ் செய்தி திருவஞ்சைக் களத்தில் தங்கி நாயனார் எழுந்தருளியிருந்த அரண்மனையில் நிகழ்ந்தன என்பது கருதத்தக்கது. முடிசூடிய உடனே அங்கு நின்றும், திருக்கோயிலுக்கு எழுந்தருளி இறைவரை வழிபட்டு விடைகொண்டு புறப்பட்டனர் என்பது குறிப்பு; நாயனார் இளவரசராகத் திருவஞ்சைக்களத்தில் தங்கித் திருத்தொண்டு செய்திருந்

தனர் என்பது முன் கூறப்பட்டது; அக்காலத்தில் அங்குத் தனியாகத் திருமடம் அமைத்து வாழ்ந்திருந்தனர். அந்த மனை இடம் திருக்கோயிலுக்குத் தெற்கில் சிறிது தூரத்தில் (½நாழிகை யளவில்) உள்ளது; அதனைக் கொச்சி அரசாங்கத்தின் ஆராய்ச்சியாளர் கண்டு, அதற்கு அடையாளமாக நினைவுத் தூண் ஒன்று நிறுவி, அதில் (The Site of the palace of St Cheraman) "சேரமான் பெருமாள் நாயனாரது அரண்மனை யிருந்த இடம்" என்று எழுத்துப் பொறித்து வைத்திருக்கின்றார்கள். அதில் நான்கு சிவலிங்கங்களும் பதிததுள்ளார்கள்; இந்நாளிலும் கொச்சி மன்னர்கள் முடிசூடிக்கொண்டபின் முதலில் திருவஞ்சைக்களத்தில் வழிபாடு செய்து யானை தந்து சிறப்புச் செய்யும் வழக்கம் நிலவுகின்றது.

தும்பயானை...நகர்சூழ வலஞ்சேர்வார் - யானை மீதில் அமர்ந்து அரசர் நகர் வலம் கொள்ளும் வழக்கம் இன்றும் கொச்சி திருவாங்கூர் முதலிய மலைநாட்டில் காண நிகழ்வதாம். யானைமேல் குடை சாமரைகள் இரட்டும் மரபு நிலையும் காணலாம். தும்பம் - மத்தகம். கும்பம் போன்றிருத்தலின் கும்பம் எனப்பட்டது; வடிவு காரணமாகப் போந்த பெயர். இதுபற்றிக் கும்பி என்றோர் பெயருமுண்டு.

நம்பும் உரிமையவர் - இப்பணிக் கென்று வழி வழி வந்த உரிமையுடையவர்கள்; நம்பும் - அரசனது மெய்க்காவலுக்கு நம்பிக்கையுடைய அணுக்கமுடையவர்களே இப்பணியில் அமர்க்கப்படுவர்.

நகர் வலம் - முடி சூடிய அரசர் அக்கோலத்துடன் நகர் வலம் வருதல் வழக்கு; இது திருவஞ்சைக் களத்தினின்றும் அரசர் தலைநகராகிய கொடுங்கோளூருக்கு செல்லும் நகர்வலம்.

மொய்ம்பு - இங்குத் தோள்கட்டு என்ற பொருளில் வந்தது; மொய்ம்பு - வலிமை; சுமைதாங்கி நடத்தற்கு வலிமைகொண்ட உடற்பகுதி தோள்கட்டு.

உவரின் பொதி - அறுவையில் ஏற்றி அழுக்குப் போக்கும் உவர் மண்ணின் சுமை (மூட்டை). உவரேற்றிய அறுவைச் (துணி) சுமை என்றலுமாம்.

வண்ணான் முன்னே வர - பொதியுடன் வண்ணான் எதிரில் வரக்காணுதல் (நன்னிமித்தம்) நற்சகுனங்களில் ஒன்றென்பர். 17

3765. மழையிற் கரைந்த வுவரூறி மேனி வெளுத்த வடிவினால்
"உழையிற் பொலிந்த திருக்காத்தா ரடியார் வேட" மென்றுணர்ந்தே
இழையிற் சிறந்த வோடைநுதல் யானைக் கழுத்தி னின்றிழிந்து
விழைவிற் பெருகுங் காதலினால் விரைந்து சென்று கைதொழுதார்.

(இ - ள்) மழையில்...வடிவினால் - மழையினாலே; உவர்மண் கரைந்து ஊறிய தனால் மேனி வெளுத்து இருந்த வடிவத்தினாலே; உழையில்...உணர்ந்தே - மானுடன் விளங்கும் திருக்கரத்தினை உடைய இறைவரது அடியார் திருவேடம் இஃது என்னும் உணர்ச்சி பெற்றே; இழையில்...இழிந்து - அணிகளிற் சிறந்த பட்டத்தினை அணிந்த யானையின் கழுத்தினின்றும் கீழே இறங்கி; விழைவில்...கைதொழுதார் - ஆசையினாற் பெருகிய பெருவிருப்பத்தினோடும் விரைவாக முன் சென்று கைகூப்பித் தொழுதனர்.

(வி - ரை) மழையினால்...வடிவினால் - மழையினால் உவர்மண் ஊறி வடிதலினால் மேனி வெண்மை நிறங்கொண்டு விளங்கிய காரணத்தால். மழைக் காலத்தில் ஒருநாளிற் பல முறையும் மழை பெய்து போதல் இன்றும் இந் நாட்டு நிகழ்ச்சி.

உழையில்...வேடம் என்று உணர்ந்தே - உடலில் வெண்மை நிறம் காணப் பட்ட தன்மை சிவன் அடியார் திருவேடத்தினைக் காட்டிற்று ; இஃது இவரது உணர்வின் பக்குவநிலை ; அடியார் திருவேடமாவது திருநீற்றின் விளக்கத்தால் நிச்சயிக்கப்படும் என்பதாம் ; "வெண்டிருநீற் றின்பொலிவு மேற்கண்டேன் ; வேறினியென் ?, அண்டர்பிரான் சீரடியா ராயினர்" (645) என்று கொண்ட ஏனாதி நாதனார் வரலாறும், மெய்யெலாம் நீறுபூசி வந்த வஞ்சகனையும் "நமர்" (482) என்று கொண்ட மெய்ப்பொருளார் வரலாறும் ஈண்டு நினைவு கூர்தற் பாலன. வயிரவ அடியாரை ஊட்ட, உடன் உண்ண ஓரடியார் காணக்கிடையாத போது, நீறு சாத்தி யிடுவார்தமைக் கண்டே யானு மிடுவேன் (ஆதலின் என்னைச் சிவனடியாருள் ஒருவனாக ஏற்கத்தக்கது) (3736) என்ற குறிப்புடன் கூறிய சிறுத் தொண்ட நாயனார் சரிதமும் காண்க. ஈண்டுத் திருநீறின்றியும் வெண்மை நிறம் திரு நீற்றினை நினைவூட்ட, அஃது அடியார் வேடத்தினைக் காட்ட உணர்ந்தனர் னர் நாயனார் ; திருநீற்றின் வெண்மையினைக் கண்டும் சுண்ணாம்பின் வெண்மையினை நினைவு கூறும் கயவரும் இந்நாளில் உளர் ; அவ் வயதூற்றினைக் கேட்டும் வாளா வமர்போலிருக்கும் சைவர் என்போரும் உளர் ; இவை இக்காலக் கொடுமை ! "எவரேனுந் தாமாக விலாடத்திட்ட திருநீறும்" (தேவா - அரசு) என்ற திரு வாக்கு இங்கு நினைவு கூர்தற்பாலது.

யானைக் கழுத்தி னின்றிழிந்து காதலினால் - கைதொழுதார் - அடியார் திரு வேடங் கண்டபோது காதலுடன் கைதொழுதல் உண்மை யன்பின் றன்மை. "வேட மும் அரனெனத் தொழுமே" (போதம் - 12); உழை - மான். உழையிற் பொலிந்த கரம் - மானேந்திய கை.

இழையிற் சிறந்த ஓடை - இழை - பொன்னிழைகள் ; இவற்றால் யானைப் பட்டத்தை அணி செய்வர். ஓடை - யானைப்பட்டம். கிம்புரி முதலாக யானைக் கிடும் அணிகள் பல ; அவற்றுட் சிறந்தது ஓடை என்னும் முக படம்.

கழுத்தினின்றும் இழிந்து - யானையின் மேனின்றும் கீழ் இறங்குவோர் அதன் கழுத்தினின்றும் அதன் காது, துதிக்கை இவற்றின் உதவி கொண்டு கீழிறங்குதல் அவ்வினை அறிந்தோர் வழக்கு ; ஊர்திகளின் இருந்தபடி வணங்கலாகாது என்பது விதியாதலின் இறங்கினர்.

விழைவு - ஆசை ; காதல் - பெருவிருப்பம். விழைவு - காதல் மிகுதியினால் வருவது. இங்கு நாயனார்தாம் அரசமுடி கவித்து நகர்வலம் வரும் உலகியற் சிறப் பினைச் சிறிதும் மனத்தில் வையாது, மறந்து, சிவவழிபாட்டிலே முனைந்தனர். இஃது "அன்பு நிலைமை வழுவாமை யரசுபுரக்கும் அருளைப்" பெற்று (3760), வேண்டிய வாறே "அரசளித்தே விரும்பு காதல் வழிபாடு செய்யும் தன்மை" (3761) யில் நின்ற நிலையினை, ஒழுக்கத்தில் அறியக் காட்டியவாறு கண்டு கொள்க. 18

3766. சேரர் பெருமான் றொழக்கண்டு சிந்தை கலங்கி முன்வணங்கி
"யாரே னடியே னைக்கொண்ட ; தடியே னடிவண் ணா" னென்னச்
சேரர் பிரானு "மடிச்சேர னடியே" னென்று, "திருநீற்றின்
வார வேட நினைப்பித்தீர் ; வருந்தா தேகு" மெனமொழிந்தார். ௧௯

(இ - ள்) சேரர் பெருமான்...வணங்கி - சேரர் பெருமான் முன் கூறியவாறு கைதொழக் கண்டு (அவ்வண்ணான்) மனங்கலங்கி முன்னே வணங்கி ; யாரென்று... என்ன - தேவரீர் அடியேனை யாவர் என்று நினைந்துகொண்டு இவ்வாறு செய்தருளி

ற்று? அடியேன் தேவரீரது அடிப்பணியாளனாகிய வண்ணான்" என்று சொல்ல; சேரர் பிரானும்...என்று - சேரர் பெருமானாகிய நாயனாரும் அடியேன் அடிச் சேரன் என்று சொல்லி; திருநீற்றின்...என மொழிந்தார் - (நீர் உண்மையில் நீறு பூசிய அடியா ரல்லாவிடினும்) திருநீற்றின் பொலிவுடைய இனிய அன்புக் கிருப் பிடமாகிய திருவேடத்தினை அடியேனுக்கு நினைப்பூட்டினீர்; ஆதலின் வருந்தாது செல்வீராக என்று மொழிந்தருளினர்.

(வி - ரை) யாரேன்று...என்ன - சேரனார் தன்னைத் தொழக்கண்ட அவ் வண்ணான் தன்னை வேறு யாவர் என்றோ தவறாக எண்ணியதனால் அரசர் இவ்வாறு செய்திருத்தல் வேண்டுமென்று துணிந்தவனாய் உண்மை புலப்படுத்த இவ்வாறு கூறி னான். அவரது தவற்றினைக் கூறிய நயமும், தனது உண்மை நிலை கூறிய பணிவும் இவனது உயர்ந்த மனப் பான்மையையும் பண்பாட்டையும் குறிக்கன. இஃது அந் நாட்டுத் தமிழர்களது உயர்ந்த உலகியல் நாகரிகத்தினைக் காட்டுவதாம்.

சேரர் பிரானும்...வருந்தாதேதும் என மொழிந்தார் - இஃது இந் நாயனாரது மிக உயர்ந்த அன்பினியல் மேம்பாடும், உலகியலில் உயர்ந்த நாகரிகமும், சமயோசித மாக வரும் இன்மொழி நிலையம் ஒருங்கே குறித்தநயம் கண்டுகொள்க. அடிச் சேரன் அடியேன் - என்றது அவ் வண்ணான் "அடியேன் அடி வண்ணான்" என்ற தற்கு மறுமொழியாக அமைதி கூறியது. "அடிச்சேரன் எனனும் சேரனார்" (1081)

திருநீற்றின் - நினைப்பித்தீர் - "இஃது அடிச்சேரன் அடியேன்" என்று தாம் கூறியதற்கும், அவனைத் தொழுததற்கும் அமைதி கூறியது. வண்ணான் வேடம் உண்மையிற் திருநீற்றின் வாரவேடமல்லாவிடினும் அதனை நினைவுக்குக் கொண்டு வரும் குறியாகி நின்றமையால் அவ் வேடங் கண்ட அப் பயனையே தந்தது. ஆகலின் அந் நினைவுக்குறி வணங்கற் குரியதாயிற்று என்றபடி.

வருந்தாது ஏதும் - இக் காரணத்தால் அரசர் முடிசூட்டி நகர் வலங் கொள்ளும் சிறப்பில் குறுக்கிட்டமைக்கும், இடையில் அதற்குப் பழகாகிய நிகழ்ச்சிக்குக் காரண மாயினமைக்கும் வருந்தாது என்க?. இந்நாளில்இவ்வாறு வரும் அரசர் பவனியை யும், சிறு அதிகாரிகள் வருகையினையும், வேறு மக்கள் குறுக்கிடா வண்ணம் நெடுநேர மும் நெடுந்தூரமும் காவல் புரியும் நிலையும், அறியாது குறுக்கிடுவாரையும் நீக்கி ஒறுக் கும் நிலையும் ஈண்டு வைத்து ஒப்புநோக்குக. தமிழ் அரசின் மேம்பாடும் நதுக. 19

3767. மன்னர் பெருமான் திருத்தொண்டு கண்டு மதிநீ டமைச்சரெலாஞ்
சென்னி மிசையஞ் சலிசெய்து போற்றச் சினமால் களிறேறி
மின்னு மணிப்பூண் கொடிமாட வீதி மூதூர் வலங்கொண்டு
பொன்னின் மணிமா ளிகைவாயில் புக்கார் புனைமங் கலம்பொலிய.

(இ - ள்) மன்னர் பெருமான்...போற்ற - அரசர் பெருமானுடைய திருத் தொண்டினைக் கண்டு மதிநீடிய அமைச்சர்களெல்லாரும் தலையின்மேலே கைகூப்பி அஞ்சலி செய்து துதிக்க; சினமால் களிறு ஏறி - சினமுடைய பெரிய யானையின் மேல் ஏறி; மின்னும்...வலங்கொண்டு - ஒளி வீசும் மணிகளினாலே அணியப்பட்ட கொடிகள் கட்டிய மாடங்கள் நிறைந்த வீதிகளையுடைய பழைய நகரத்தினை வலம் கொண்டு; புனைமங்கலம் பொலிய - புனையப்பட்ட மங்கலம் விளங்க; பொன்னின்... புக்கார் - பொன் பூண்ட மணிகளை யுடைய திருமாளிகையின் வாயில் புகுந்தனர்.

(வி - ரை) திருத்தொண்டு கண்டு - திருத்தொண்டின் உறைப்பினை நேரே கண்டு; தொண்டாவது ஈண்டு அடியார் திருவேடத்தினை அரசாது திருவினும் பெரி தென மதித்து வணங்கி வழிபடுதல் : திருவேடத்தினை அரனெனவே கண்டு வழி படுக என்பது ஞானநூல்.

களிறு ஏறி - ஏறிவந்த களிற்றினின்றும் இறங்கி வழிபட்டாராதலின் மீண்டும் ஏறி.

கோடிமாட முதூர் - பெருந்திரு நகரங்களுக்குக் கொடிகள் இன்றியமையாத சிறப்புக்களாம் "விதானமும் வெண்கொடியு மில்லா வூரும்...அவையெல்லா மூரல்ல அடவி காடே" (தேவா); அரசாது முடிசூட்டு விழாவின் பொருட்டும் கொடிகள் கட்டி அணிந்தனர் என்றலுமாம் "வீதிக டோறும் வெண்கொடி யோடு விதானங்கள்" (தேவா). கொடிகளுள் வெண்கொடிகளே சிறப்புடையனவாகப் பெரியோர் கருதுவர். கறுப்புக்கொடி அமங்கலக் குறியாம் (474).

மாளிகை - அரசரது திருமாளிகை. இது கொடுங்கோளூரில் உள்ளது : "கோமூதூர் கொடுங்கோளூர்" (3748); இங்குமூதூர்என்றது அதனைக் குறித்தது.

புனைமங்கலம் போலிய - புனைதல் - அணிசெய்தல். மங்கலம் - நகர அலங்காரங்களும் மங்களங்களாகிய நிறைகுடம் தூபம் விளக்கு முதலியவையுமாம்; இவை போலிய என்றது முடிசூடிக்கொண்டு அரசரது வருகையினாலே இவை விளக்கமுற்றன என்பதாம். "அம்பலம் பொலிய" (கோயினான் - 32). இனிப், புனைமங்கலம் போலிய என்றதற்கு அன்று சூட்டிக்கொண்ட முடி விளங்கி அதனால் உலகம் விளங்கி ஓங்க என்றுரைத்தலுமாம்

மாளிகை வாயில் - அரண்மனையின் முன் வாயில்; இது யானை தேர் முதலிய ஊர்திகளின்மேல் இருக்கும் நிலையில் அரசர் புகும்படி உயர்ந்த அமைப்புக்களை உடையது. Portico என்பர் நவீனர். அங்குப புகுந்த பின்னரே யானையினின்றும் இறங்குதலை மேற்பாட்டிற் கூறுவது காண்க. 20

3768. யானை மிசைநின் றிழிந்தருளி யிலங்கு மணிமண் டபத்தின்கண்
மேன்மை யரியா சனத்தேறி விளங்குங் கொற்றக் குடைநிழற்றப்
பானல் விழியார் சாமரைமுன் பணிமா றப்பின் மலர்தூவி
மான வரசர் போற்றிடவீற் றிருந்தார் மன்னர் பெருமானார். ௨௧

(இ - ள்) யானைமிசைநின் றிழிந்தருளி - யானையின் மேனின்றும் இறங்கியருளி; இலங்கு...ஏறி - விளங்கும் மணிகளையுடைய மண்டபத்தில் மேன்மை பெற்ற சிங்காசனத்தின் மீது ஏறி; விளங்கும்...பணிமாற - விளங்குகின்ற வெண் கொற்றக் குடைமேலே நிழல் செய்யவும், குவளை போன்ற கண்களையுடைய பெண்கள் வெண்சாமரைகளை ஏந்தி யிரட்டவும்; பன் மலர்...போற்றிட - பூக்கள் பலவும் தூவிப் பெருமையுடைய அரசர்கள் துதிக்கவும்; மன்னர் பெருமானார் - அரசர் பெருமானாராகிய நாயனார்; வீற்றிருந்தார் - வீற்றிருந்தருளினார்.

(வி - ரை) யானைமிசைநின் றிழிந்தருளி - 'மாளிகை வாயிலின் முன்பு உள்ள பித்திகையில்' யானைமேனின்றும் இறங்கி.

மணிமண்டபம் - அரசர் கொலு வீற்றிருக்கும் அத்தாணி மண்டபம். அரிய ஆசனம் - சிங்காதனம்.

குடை - அரசரது சிங்காசனத்தின்மேல் கவிக்கும் வெண் கொற்றக் குடை; அரச அடையாளங்களுள் ஒன்று.

பானல்...பணிமாற - இவ்விழாக்களில் பெண்கள் சாமரை வீசுதல் மரபு. மலர் தூவி...போற்றிட - திறையளக்கும் சிற்றரசர் மலர் தூவித் துதித்து வணங்க; மானம் - பெருமை; அரசர் பெருமானார் - இவர் பேரரசராதலின் அவ்வரசர் போற்றினர் என்பது குறிப்பு; இவருக்குக் கீழ்ப்பட்ட அளவிற் சிற்றரசர்களேயாயினும் தாமும் பெருமையுடையார் என்பது. பெருமுக் கோக்களாய் என மேற்பாட்டிற் கூறுவது காண்க. 21

3769. உலகு புரக்குங் கொடைவளவ ருரிமைச் செழிய ருடன்கூட
நிலவு பெருமுக் கோக்களாய் நீதி மனுநூ னெறிநடத்தி
அலகி லரசர் திறைகொணர வகத்தும் புறத்தும் பகையறுத்து
மலருந் திருநீற் றொளிவளர மறைகள் வளர மண்ணளிப்பார், உஉ

3770. "நீடு முரிமைப் பேரரசா னிகழும் பயனு நிறைதவமுந்
தேடும் பொருளும் பெருந்துணையுந் தில்லைத் திருச்சிற் றம்பலத்துள்
ஆடுங் கழலே" யெனத்தெளிந்த வறிவா லெடுத்த திருப்பாதங்
கூடு மன்பி லர்ச்சனைமேற் கொண்டார் சேரர் குலப்பெருமாள். உ௩

3769. (இ - ள்) உலகு...நெறி நடத்தி - உலகத்தைக் காக்கின்ற கொடையினையுடைய சோழரும், உரிமையுடைய பாண்டியரும் என்றிவருடனே கூட நிலவுகின்ற பெரிய மூவேந்தர்களாகி நீதியினை மனுநூல் வழியே நடைபெறச் செய்து; அலகில்...கொணர - அளவில்லாத அரசர்கள் திறை கொண்டுவந்து செலுத்த; அகத்தும் புறத்தும் பகையகற்றி - உள்ளும் புறம்பும் பகைகளை அறுத்து நீக்கி: மலரும்...மறைகள் வளர - விளங்கும் திருநீற்று நெறி வளரவும் வேதங்கள் வளரவும்; மண் அளிப்பார் - நிலவுலகத்தைக் காவல்புரிவாராகி, உஉ

3770. (இ - ள்) நீடும்...கழலே என - நீடுகின்ற உரிமை பொருந்திய பேரரசு செலுத்துவதனால் நிகழ்கின்ற பயனும், நிறையவுள்ள தவமும், தேடியடையும் பொருளும், பெருந்துணையும் ஆக வுள்ளது தில்லையில் திருச்சிற்றம்பலத்தினுள்ளே ஆடுகின்ற திருப்பாதமே யாம் என்று; தெளிந்த அறிவால் - தெளிந்து துணிவு கொண்ட அறிவினாலே; எடுத்த...குலப் பெருமாள் - மேலே தூக்கிய அந்தத் திருவடியினையே பெருகும் அன்பினாலே அருச்சிக்கும் செயலினை மேற்கொண்டனர் சேரர் குலப் பேரரசராகிய நாயனார். உ௩

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

3769. (வி - ரை) உலகு...முக்கோக்களாய் - பெருமுக் கோக்கள் - முடி மன்னர்களாகிய தமிழ் மூவேந்தர்கள், சேர சோழ பாண்டியர்கள் எனப்படும் அரச மரபினர்; இம்மரபுகள் படைப்புக்கால முதல் நிலவின என்பர்; இம்மரபுகள் தமிழ் நாடு முழுமையும் அரசாண்டனர்; சில காலங்களில் இமாலயம் வரையும் கடல் கடந்தும் இவராட்சிகள் சென்றன; உலகுபுரக்கும் என்றும், நிலவும் என்றும், நடத்தி என்றும் நிகழ்காலத்திற் கூறியவதனால் ஆசிரியர் காலத்து இம் மூன்று மரபினர்களும் முடி மன்னர்களாய் உலக ஆட்சி புரிந்தனர் என்பதறியப்படும்.

வளவர் - சோழர்; செழியர் - பாண்டியர்; பெரும் முக்கோக்கள் - முடிமன்னர்களாகிய மூவேந்தர்கள். வளம் - செல்வம்; "வளவ னாயினும் அளவறிந் தழித்துண்" (ஔவை)

**உலகுபுரக்கும் கோடை வள்ளவர்** - சைவத் துறையிற் பிறழாது வழிவந்த குடியாதலும், அத்துறையிற் பிறழாது உலகை நிறுத்தும் தன்மையும் குறிப்பு; கோடை - உயிர்க்குறுதியும் உடற்குறுதியும் ஒருங்கே பயக்கும் தன்மை பற்றிய குறிப்பு ; வளவர் - வளத்தினை உடையவர். "கரிகாற் பெருவளத்தான்" என்பது முதலிய வழக்குக்கள் காண்க.

**உரிமைச் செழியர்** - வளவருடன் மணஞ்செய் குடியாகிய உரிமையுடைய என்பது குறிப்பு ; இந்நாயனாரது காலத்தில் பாண்டியாது மகளாரை மணந்த சோழர் மதுரையில் வந்து தங்கியிருந்த நாட்களில், சோழரும் பாண்டியரும் இந்நாயனார் நம்பிகளுடன் சென்றபோது, கண்டு மகிழ்ந்து அளவளாவினர் (3842) என்றும், இவருடன் கூடிப் பல பதிகள் சென்று வணங்கினர் (1852) என்றும் பின்னர்ப் பெறப்படும் வரலாற்றுக் குறிப்பும் காண்க ; பின்னர்ப் பாண்டியர் குலமுதல்வராகிய சோமசுந்தரப் பெருமான் பாணபத்திரனாரைத் திருமுகம் அளித்து இந்நாயனார்பால் அனுப்பி யாட்கொண்ட உரிமைப்பாட்டின் குறிப்பும் காண்க.

**உடன்கூட நிலவும் பெருமுக்கோக்களாரி** - இக்காலத்தில இம் மூவேந்தர்களும் உள் நாட்டுப்போர் முதலியனவாக தம்முள் மாறுபட்ட நிலைகளின்றி நட்புடனிருந்தனர் என்பதாம் ; பின்னர்ச் சோழநாடு பாண்டி நாடுகளில் சேரமன்னராகிய இந்நாயனார் தடையின்றி நட்புரிமையுடன் செய்யும் யாத்திரை வரலாற்றினாலும், சோழ பாண்டியர்களால் விருந்து உபசரிக்கப் பெறும் நிலையினாலும் இது விளங்கும்.

**அரசர் திறை கோணா** - முடிமன்னராதலின் இவர்கீழ் அமைந்த சிற்றரசர் குறுநிலமன்னர்கள் அவ்வவர்க் களந்த திறை கொணர்ந்து செலுத்தி இவர் வழி ஒழுகினார்கள்.

**அகத்தும் புறத்தும் பகை அகற்றி** - புறத்துப் பகையாவது பணியாத நட்பில்லாத பகையரசர்களால் வருவது ; அகப்பகை தன்னாற், றன்பரிசனத்தால், கள்வரால், உயிர் தம்மால் வருவன (121) ; பணிந்துவந்த மன்னரைத் திறை கொண்டு, நல்வழி நிறுத்தியும், பணியாதாரை ஒறுத்து அகற்றியும் என்பதாம்; நாட்டு மக்களுள்ளே இந்நாளில் காணும் அரசாங்கப் பகை களாகிய அராசகம், ராசத் துரோகம், பலவகைக் கட்சிக் கலகங்கள் முதலாயின அந்நாளில் தமிழ்நாட்டில்

¶, அகத்துப் பகை என்பது அஞ்ஞானம் காமம் முதலிய தீமைகளால் வருவதென்றும், புறப்பகை ஐம்பொறிகளால் வருவதென்றும், கொண்டு, அவற்றையும் நல்லொழுக்கம் நற்கேள்வி முதலியவற்றில் மக்களை நிறுத்துதலாற் போக்கி என்றலுமொன்று ; யான் எனது என்னும் அகங்கார மமகாரங்கள் என்றலுமாம். எல்லாப் பகைகட்கும் இவையே மூலமாதலும் காண்க. இஃது நல்ல அரசாட்சியின் உயர்ந்த நிலை பெற்ற குறிக்கோள்களுள் ஒன்று.

**மலரும்** - உலகெங்கும் விளங்கும். "அண்டமெலாம் பரந்து" (3087). சிவத்துவத்திலே விளங்கச் செய்கின்ற - (மலர்த்தும்) எனப் பிறவினையாக உரைப்பதுமாம். **திருநீற்றொளி வளர** என்றது "மிகுசைவத் துறைவிளங்க" (1899) என்ற கருத்துடையது; சிவாகம நெறி ஒழுக்கம் விளங்க என்றதாம் ; மேல், **மறைகள் வளர** என்றது "வேதநெறி தழைத்தோங்க" என்ற கருத்துடையது. **மண் அளிப்பார்** - உலகை ஆட்சி புரிவாராய் ; மண் - உலகம் ; நிலமும் நீரும் பலவுமுடைய உலகத்தை மண் என்றது ஆகுபெயர் ; மண்ணை அளித்தலாவது அதனில் வாழ் உயிர்களைக் காத்தலாதலின் ஆகுபெயர் ; மண்ணளிப்பார் - மேற்கொண்டார் - என

வரும் பாட்டுடன் முடிந்தது; மண்ணளிப்பாரியே அதனுடன் அதன் சிறந்த பயனாக அருச்சனை மேற்கொண்டார் என்பதாம்.

மறைகள் பெருக—என்பதும் பாடம். 22

3770. (வி - ரை) "நீடும்...கழலே" என - இந்த நாயனார் மனத்துள் தெளிந்த துணிபு. நீடும் உரிமை - படைப்புக் காலமுதல் வழிவழி வந்த; பேரரசு - முடிமன்னராகும் நிலை.

நிகழும் பயனும் - நிறை தவமும் - தேடும் பொருளும் - பெருந்துணையும் - முன் பாட்டிற் கூறிய நீதி நடத்தல் - பகையறுதல் - நீற்றி னொளி வளர்தல் - மறைகள் வளர்தல் என்ற இவை இவரால் காக்கப்படுகின்ற உலகுக்கு - (மக்களுக்கு) - வரும் பயன்கள். இங்குக் கூறியவை அவ்வாறு மண்காவல் செய்கின்ற அரசராகிய தமக்கு வருகின்ற பயன்கள். இந்நாள் அரசாங்க உலகம் முதற்கண் கூறிய உலகுக்கு வரும் பயன்களைத் தானும் உணர்கின்றதில்லை; பிற்கூறிய தமது பயனைச் சிறிதும் உணர்கின்றதில்லை; அரசாங்க உலகம் இவ்விரண்டினையும் உணர்ந்து ஒழுகுமாயின் மக்கட் கூட்டத்தின் நிகழும் கேடுகளும், உயிர்களுக்கு நேரும் தீமைகளும் ஒழியும்; அரசாங்க உலகம் உணருமோ? இறைவ ரருள்வாராக.

பேரரசால் நிகழும் பயன் - அரசு புரிவதனால் தமக்கு வரும் பயன். நிகழ்தல் - வருதல் - பெறுதல்; நிறைதவம் - முன்னை த் தவஞ் செய்தாரே அரசு செய்யும் உரிமை பெறுவர்; அத்தவம் குறைவுடையதாதலின் உலகப் பிறவியும் உலகபோகமும் தந்தது; அதனை நிறைவாக்குதல் இப்போகங்களை இறைவன் வசமாக்கி வீடு பெறும் சாதனமாக்குதலே யாதலின் பேரரசின் பயன் நிறை தவம் என்றார்; தேடும் பொருள் - தவத்தால் தேடியடையப்படும் உறுதிப் பொருள்; பெருந்துணை; ஏனைத் துணை யெனப்பட்ட பொருட்சார்பு உயிர்ச்சார்புகள் எல்லாம் துணையில்லா தொழியப், பெத்த நிலையில் பிறவிகள் தோறும் நீங்காது உயிர்த்துணையாய் உள்ள வரும், முத்தி நிலையில் திருவடிக்கீழ் இருத்தி மீளாத மாளாத இன்பம் தருபவருமாகிய துணைவர்; இத்துணையே தேடும் பொருளாம் என்பது. "பெருந்துணையைப் பெரும் பற்றப் புலியூ ரானை" (தேவா) என்றலின், நாயனார் அவ்வாறே தில்லைத் திருச்சிற் றம்பலத்துள் ஆடுங்கழலின் அருச்சனை மேற்கொண்டார் என இத்திருப்பாட்டின் கருத்துக்களைத் தொடர்ந்து முடிபுபடுத்திக் கொள்க. "செல்லுந் தேஎத்துக் குறுதுணை தேடுமின், மல்லன்மா ஞாலத்து வாழ்வீ ரீங்கென" (சிலப) என்று இம்மரபில் முந்தையோராகிய இளங்கோவடிகள் தமது அரும் பெரும் காவியத்தை முடித்துக் காட்டியது ஈண்டு நினைவுகூர்தற்பாலது.

ஆடுங்கழலே - ஆம்-என ஆக்கச் சொல் வருவிக்க; ஆடும் - ஐந்தொழில்களுள், அருளும் தொழில் குறித்தது. கழல் - அருளும் தொழில் குறித்தது.

எடுத்த திருப்பாதம் - குஞ்சிதபாதம் என்பர்; எடுந்த - தூக்கிய; உயிர்களை மலக்குழியினின்றும் எடுத்த என்பதும் குறிப்பு. "எடுத்த மாக்கதை";

கூடும் - பெருகும்; அர்ச்சனை - வழிபாட்டுமுறைகளின் தொகுதி; அர்ச்சனை மேற்கொண்டவகை மேல்வரும் பாட்டில் விரிக்கப்படும்.

சேரர் குலப் பெருமாள்—பெருமாக் கோதையார்.

பொறைசால நிகழும் - என்பதும் பாடம்; அது சிறப்பிலது. 23

3771. வாசத் திருமஞ் சனம்பள்ளித் தாமஞ் சாந்த மணித்தூபம்
தேசிற் பெருகுஞ் செழுந்தீப முதலா யினவுந் திருவமுதும்

ஈசர்க் கேற்ற பரிசினு லருச்சித் தருள வெந்நாளும்
பூசைக் கமர்ந்த பெருங்கூத்தர் பொற்பார் சிலம்பி னொலியளித்தார்.

(இ - ள்) வாசத்திருமஞ்சனம்... திருவமுதும் - மணமுடைய திருமஞ்சனமும், திருப்பள்ளித் தாமமும், சாந்தமும் அழகிய தூபமும், ஒளிபெருகும் செழிய தீபங்களும் முதலாயின உபசாரங்களும் திருவமுதும் அமைத்து, ஈசர்க்கு... அருச்சித் தருள - இறைவருக்குத் தகுதியாக விதிக்கப்பட்ட தன்மையினாலே அருச்சனை செய்தருள; எந்நாளும் - ஒவ்வோர் நாளும்; பூசைக்கமர்ந்த... அளித்தார் - பூசைக்கு விரும்பி எழுந்தருளிய பெருங்கூத்தராகிய இறைவர் அழகிய சிலம்பின் ஒலியினைக் கேட்கும்படி அளித்தருளினர்.

(வி - ரை) வாச... திருவமுதும் - இவை இறைவழிபாட்டில் புறப்பூசைக் குரிய பொருள்களும் அங்கங்களுமாம்; திருமஞ்சனம் - திருமஞ்சன நீராட்டுதல்; வாசம் - திருமஞ்சன நீரினுள் மணமலர்களையும் பசுங்கற்பூரம் குங்குமப்பூ முதலிய வாசனைப் பண்டங்களையும் இட்டு மணங் கூட்டும் மரபு குறித்தது.

மஞ்சனம் - திருமுழுக்கு என்னும் அபிடேகத்தினையும், பள்ளித்தாமம் - சாந்தம்; இவை அலங்கரித்தலையும் குறிப்பன. மணித்தூபம் - தீபம் - இவை உபசாரவகைக ளாதலின் உரிய அடைமொழிகள் தந்தும் வேறு பிரித்தும் கூறினார்; இவற்றின் வேறாதலின் திருவமுதினையும் உம்மை தந்து பிரித்துக் கூறியதிலையும் கண்டுகொள்க.

வாசம் - என்பதனைப் பள்ளித்தாமம், சாந்தம், தூபம் என்றவற்றினுடனும் கூட்டுக; முதனிலைத்தீபம்.

தேசில்... தீபம் - தேசு - ஒளி; ஞானம் என்றதும் குறிப்பு; "விளக்கிட்டார் பேறு சொல்லின் மெய்ந்நெறி ஞான மாகும்" (தேவா) என்றபடி தேசிற்பெருகும் - ஞான ஒளி மிகும் என்றுரைக்கவும் நின்றது.

ஈசர்க்கேற்ற பரிசு - சிவனது பூசைக்குத் தக்கனவென்று சிவாகமங்களில் விதித்தபடி. சிவார்ச்சனைக்கு அங்கமாகிய ஐந்து உபசாரங்களும் சொல்லியவாறு; அவை :—(1) பிருதுவி சம்பந்தம் - பார்த்திவோபசாரங்கள். திருப்பள்ளித் தாமம், சந்தனம், திருவமுது முதலியன :—(2) நீர் சம்பந்தம் - ஜலோபசாரங்கள். திருமஞ்சனம் - பால் - இளநீர் முதலியன :—(3) தீ சம்பந்தம் - தைஜசோபசாரங்கள். தீபம், கற்பூரம், பொன், மணிப்பணிகள் முதலியன :—(4) காற்று சம்பந்தம் - வாயவ்யோபசாரங்கள். தூபம், சாமரை முதலியன;—(5) ஒலி சம்பந்தம்-ஆகாசோப சாரங்கள். மணி, வாத்தியம், துதி முதலியன; (சிவப்பிரகாச தேசிகர் குறிப்பு).

அர்ச்சித்தல் - இங்கு, வழிபடுதல் என்ற பொருள் தந்தது;

எந்நாளும் - அர்ச்சித்தருள என்றும், எந்நாளும் அளித்தார் - என்றும் கூட்டிச் சாதனத்துக்கும் பயனுக்கும் பொருந்த உரைக்க நின்றது.

அமர்தல் - விரும்பி எழுந்தருளியிருத்தல்.

கூத்தர் - நடராசப்பெருமான்; இவ்வாறு நாயனாருக்கு நாளும் சிலம்பொலி கேட்பித்தருளிய இம்மூர்த்தி இன்றும் திருவஞ்சைக்களத்தில் திருக்கோயிலில் வைத்து வழிபடப்படுகின்றனர்; அவரது பீடத்தில் "திருவஞ்சைக்களம் சபாபதி" என்று தமிழில் பெயர் பொறிக்கப்பட்டுள்ளது.

சிலம்பி னொலியளித்தார் - சிவயோகிகளுக்குப் புலனாகும் நாதச் சிலம்பின் ஓசை; நாயனார் சிவயோகங் கைவந்தவராதலும் காண்க; சிலம்போசை பத்து வகை நாதங்களுள் ஒன்று; "தூமணி ஓசை", "சங்குதிரண்டெழுமோசை"(திருவா). 24

3772. நம்பர் தாளின் வழிபாட்டா ளுரு மின்புற் றமர்கின்றார்
இம்ப ருலகி லிரவலர்க்கும் வறியோ ரேவர்க்கு மீகையினாற் [ருந்தி
செம்பொன் மழையா மெனப்பொழிந்து திருந்து வென்றி யுடன்பொ
உம்பர் போற்றத் தம்பெருமாற் குரிய வேள்வி பலசெய்தார் ; ௨0

(இ - ள்) நம்பர்...அமர்கின்றார் - இறைவருடைய திருவடிகளிற் செய்யும் வழிபாட்டினாலே நாடோறும் இன்பம் பெற்று எழுந்தருளி யிருக்கின்றாராகிய நாயனார் ; இம்பருலகில்...பொழிந்து - இவ்வுலகிலே தம்பால் வந்து இரந்தோர்களுக்கும் வறியவர்களுக்கும் எல்லாருக்கும் வேண்டியவாறே ஈகின்ற தன்மையினாலே செம்பொன்னை மழைபோலப் பொழிந்து ; திருந்து...பொருந்தி - திருந்தும் வெற்றியுடனே கூடி ; உம்பர்...செய்தார் - தேவர்கள் போற்றத் தமது பெருமானாகிய இறைவருக்கு உரிய வேள்விகள் பலவற்றையும் செய்தனர்.

(வி - ரை) நாயனார் உலகங் காவல் பூண்டு அரசளிக்கு நிலையினை "மண்ணளிப்பார்" (3769) என்ற பாட்டானும், அவ்வரசாட்சியினை இறைபணிக்கு முட்டுப்பாடின்றி நிகழ்த்திய நிலையினை அதன்பின் இரண்டு பாட்டுக்களானும் கூறிய ஆசிரியர், அந்நிலைகளினால் தாமும் உலகும் பெற்ற பயனாகிய இன்பத்தினை இப் பாட்டாற் கூறுகின்றார்.

நம்பர்...அமர்கின்றார் - நாளும் - நாடோறும் இன்பமுற்று என்றும், நாடோறும் செய்யும் வழிபாட்டால் என்றும் உரைக்க ; வழிபாடு - இதன் விரிவு முன் பாட்டில் உரைக்கப்பட்டது. இச்சொல் இன்றும் மலையாள நாட்டில் இப்பொருளில் வழங்குகின்றது. அமர்கின்றார் - அமர்கின்றாராகி ; அமர்கின்றார் - செய்தார் - என்று முடிக்க.

இம்பர் உலகில் - உம்பர் போற்ற - இவரது அரசாட்சியினால் மண்ணுலகமேயன்றி விண்ணுலகமும் இன்பம் பெற்றது என்பதாம். வானோரும் இவ்வுலகில் செய்யப்படும் வேள்வி முதலியவற்றால் மகிழ்ச்சிபெற வுள்ளார்கள் என்பது உண்மை. "மண்ணுலக மேயன்றி வானுலகுஞ் செய்தபெரும், புண்ணியத்தின் படையெழுச்சி போலெய்தும் பொலிவெய்த" (2549); "சிறப்பொடு பூசனை செல்லாது வானம், வறக்குமேல் வானோர்க்கு மீண்டு" (குறள்) என்பன முதலிய கருத்துக்கள் காண்க. இவ்வேள்விகளிற் கலந்துகொண்டு வானோர் போற்ற என்றலுமாம். 'மேலை யிமையோர்களும்...சீலமறை யோர்களுட னேமவினை செய்தார்" (1928).

இரவலர்க்கும் வறியோ ரேவர்க்கும் - இரவலர் - தம்மிடம் வந்து இரப்போர்; யாசிப்போர் ; வறியோர் - அவ்வாறு யாசிக்காமல் வறுமையினாலே துன்பப்பட்டு வாழ்வோர் ; இத்தகையோர் பலதிறத்தின ராதலின் எவர்க்கும் என்றார்.

ஈகையினால் - ஈயும் தன்மையினால் ; கொடைப் பெருக்கினாலே ; மழையாம் என - மழைபோல ; மழையாம் எனச் செம்பொன் பொழிந்து என்க. "கார் கொண்ட கொடைக்கழறிற் றறிவார்" என்பது முதநூல்.

வென்றியுடன் பொருந்தி - யாண்டும் தடைபடாது செல்லும் வெற்றிகொண்டு ; இஃது அரசாட்சியின் விறலும் மேன்மையும் குறித்தது ; திருந்தும் - உலகம் திருந்துதற் கேதுவாகிய என்று காரணப்பொருளில் வந்தது ; இவர் கொண்ட வெற்றிகள் மண்ணாசை காரணமாகப் பெற்றன வல்ல ; அவ்வந் நாட்டு மக்களின் திருத்தம் காரணமாகவே நிகழ்ந்தன என்பதாம். இந்நாட் காணும் பேராசைக் கொடும் பூசல்களின் காரணங்களைக் கருதினால் இதன் மேன்மை நன்கு விளங்கும்.

ஈகை - வென்றி - "ஈறில்லாத் தாவில் விறலும் தண்டாத கொடையும்" (3761) என இச்சிறப்புக்களை அரசர்க் கின்றியமையாத தன்மைகளாக இவர் இறைவர் பால் வேண்டிப் பெற்றனர் ; அவ்வாறே ஆட்சியும் நிகழ்த்தினர் என்க.
வேள்வி - இவை சிவவேள்விகள். இறைவழிபாட்டின் சிறப்புக்கள் ; உம்பர் போற்ற - அவ்வேள்விகளாற் பயன் பெற்று வானோர்கள் மகிழ்ந்து துதிக்க. 25

3773. இன்ன வண்ண மிவரொழுக வெழில்கொள் பாண்டி நன்னாட்டு
மன்னு மதுரைத் திருவால வாயி லிறைவர் வருமன்பாற்
பன்னு மிசைப்பா டலிற்பரவும் பாண னார்பத் திரனார்க்கு
நன்மை நீடு பெருஞ்செல்வ நல்க வேண்டி யருள்புரிவார், உசு

3774. இரவு கனவி லெழுந்தருளி "யென்பா லன்பா லெப்பொழுதும்
பரவு சேரன் றனக்குனக்குப் பைம்பொன் காணம் பட்டாடை
விரவு கதிர்செய் நவமணிப்பூண் வேண்டிற் றெல்லாங் குறைவின்றித்
தரநம் மோலை தருகின்றோந் தாழா தேகி வரு"கென்று, உஎ

வேறு

3775. அதிர்கழ லுதியர் வேந்தற் கருள்செய்த பெருமை யாலே
"எதிரில்செல் வத்துக் கேற்ற விருநிதி கொடுக்க" வென்று
"மதிமலி புரிசை" யென்னும் வாசகம் வரைந்த வாய்மைக்
கதிரொளி விரிந்த தோட்டுத் திருமுகங் கொடுத்தார் காண. உஅ

3773. (இ - ள்) இன்ன வண்ணம் இவர் ஒழுக - முன்கூறிய இத்தன்மையாக இவர் ஒழுகியிருக்க ; எழில்கொள்...இறைவர் - அழகுடைய பாண்டி நன்னாட்டில் நிலைபெற்ற மதுரையில் திருவாலவாயில் எழுந்தருளியிருக்கும் இறைவராகிய சோமசுந்தரப்பெருமான் ; வரும் அன்பால்.....அருள்புரிவார் - வருகின்ற அன்பினாலே சொல்கின்ற இசைப்பாட்டுக்களாற் றுதிக்கும் பாணனாராகிய பத்திரனாருக்கு நன்மைபொருந்திய பெருஞ் செல்வம் தரவிரும்பி அருள் புரிவாராகி, உசு

3774. (இ - ள்) இரவு கனவில் எழுந்தருளி - இரவில் அவருடைய கனவில் வெளிப்பட்டருளி ; என்பால்...தனக்கு - நம்மிடம் எப்பொழுதும் பரவும் தன்மையுடைய சேரமானுக்கு ; உனக்கு...தர - பசியபொன்னும் காசும் பட்டாடையும் பொருந்திய ஒளி செய்யும் கதிர்மணிகளையுடைய அணிகளும் இன்னும் வேண்டியவற்றையெல்லாம் குறைவில்லாமல் உனக்குத் தரும்படி ; நம்...என்று - நமது திருமுகம் தருகின்றோம்; தாமதமின்றிச் சென்று வருக என்று அருளிச்செய்து, உஎ

3775. (இ - ள்) அதிர்...பெருமையாலே - சத்திக்கின்ற கழலையணிந்த சேரர்பெருமானுக்கு அருள் செய்த பெருமையினாலே ; எதிரில்...என்று - ஒப்பற்ற செல்வத்துக்கேற்றவாறு பெருநிதியினைக் கொடுக்க என்று ; மதிமலி...காண- காணும்படி மதிமலிபுரிசை என்று தொடங்கும் வாய்மை வாசகத்தினை எழுதிய கதிர் ஒளி விரிந்த இதழினில் ஆகிய திருமுகத்தினைக் கொடுத்தருளினர். உஅ

இம்மூன்று பாட்டுக்களும் தொடர்ந்து ஒருமுடிபு கொண்டன.

3773. (வி - ரை) பாண்டி...இறைவர் - பாண்டி நன்னாட்டு - நாடு கூறியது; மன்னும் மதுரை - நகரம் கூறியது ; திருவாலவாயில் - கோயில் கூறியது ;

வர் - சோமசுந்தரக் கடவுள் ; அதில் விளங்க எழுந்தருளி யிருக்கும் கடவுளைக் கூறியது ; வநும் - உறைப்புடைய திருத்தொண்டின் ஒழுக்கத்தினால் எழுகின்ற.

பன்றும் இசைப்பாடல் - கீதங்கள் ; பன்றுதல் - பல முறையும் சொல்லுதல். இசைப்பாடல்களைப் பலமுறையும் பன்னிப்பாடும் மரபு குறித்தது ; இசை - இயற் பாடலிற் பிரித்துணர இசைப்பாடல் என்றார்.

பாணனார்...நல்கவோலை - பாணபத்திரருக்குத் திருமுகம் கொடுத்த வரலாறு திருவிளையாடற் புராணத்துட் கூறப்படும் ; அஃது :— பாணபத்திரனார் பொருட்டு இறைவர் விறகு விற்ற திருவிளையாடல் செய்தருளினர் ; அத்திருவிளையாடல் நிகழ்ந்த பின்னர்ப் பத்திரனார் இறைவர் வழிபாடன்றி வேறு ஒன்றும் செய்யாராகி நிகழவே இலம்பாடெய்தி வருந்தினர் ; சில நாள் இறைவர் பாண்டியனது சேமத்தி லிருந்த செல்வங்களைக் கொணர்ந்து ஈந்தனர் ; பின் "மதிமலி புரிசை" என்ற பாசுரம் எழுதிய ஓலை தந்து சேரர்மன்னவர்பா லனுப்பினர் ; அம்மன்னவர்க்கும் கனவிலுணர்த்தினர் ; அவர் உணர்ந்து தூதர்களை அனுப்பி நகருள் தேடுவித்துக் கண்டு சென்று வணங்கி திருமுகத்தையும் பத்திரனாரையும் யானைமீ தேற்றி நகர் வலஞ்செய்வித்து அரண்மனைக்கு அழைத்துச் சென்று உபசரித்து மகிழ்ந்து தமது சேமநிதியறையினை திறந்து வேண்டியன எல்லாங் கொள்ள நல்கி வழியனுப்பினர் என்பதாம். இதனுள் சேரனாருக்குக் கனவில் அருளிச்செய்தார் என்றதும், அவர் பத்திரனாரைத் தூதரை அனுப்பி நகரினுட் டேடிக் கண்டு சென்று அணைந்தனர் என்றதும் வேறுபாடுகள். இவை இறை திருவாக்காகிய முதனூலேயாகிய இப் புராணத்துடன் வேறுபடும் நிலையில் மொழிபெயர்ப்புத் தலபுராணங்களுள் உபசாரம் பற்றிக் காணும் சிற்சில மாறுபாடுகள் என்ற அளவில் கொள்ளத்தக்கன.

நன்மை நீடு பெருஞ்செல்வம் - இறைவர் அருளால் வருவதாதலின் நீண்ட நலமும் பெருமையும் பெற்ற செல்வம் ; ஏனைய எந்தச்செல்வமும் இவ்வாறாகா என்பதாம் ; பிறிதினியைபு நீக்கிய விசேடணம்.

அருள்புரிவார் - முற்றெச்சம் ; அருள் புரிவாராய - என்று (3774) - திரு முகம் கொடுத்தார். (3775) என்று மேல் வரும் பாட்டுக்களுடன் முடிக்க.

பாணனார் பத்திரனார் - பாணபத்திரர் ; பாணர் - மரபு குறித்தது ; பத்திரனார்- இவரது பெயர் குறித்தது.

இவர் வேறு ; திருநீலகண்ட யாழ்ப்பாணர் வேறு ; இருவரும் ஒருவரேயென மயங்கியறிவார் சிலர் ; அவ்வாறு மயங்கி யறிந்து பூச லிடுவாருமுண்டு. 26

3774. (வி - ரை) கனவில் - பத்திரனாரது கனவில்.

என்பால்...வருக - இஃது இறைவர் பத்திரனாருக்குக் கனவில் அறிய அருளிச்

என்பால்...சேரன் - "தன்போ லென்பா லன்பன்" என்பது திருமுகப் பாசுரம். சிவன்பாலன்புடையார் செல்வம் தூய்மையுடையது ; அது பெறத் தகுதியுடையது என்பது குறிப்பு. "அறத்தாற்றி னீட்டப்பட்ட அனையவை புனிதம்" (திருவிளை).

காணம் - பொன் - காசு ; "கையி லொன்றுங் காண மில்லை" (தேவா).

தாழா தேகி வருக - விரைந்து சென்று வருக என்றது இலம்பாடு நீக்கும் விரைவு. என்று - என்று கூறி யறிவித்தருளி. 27

3775. (வி - ரை) அதிர்...பெருமையாலே - இத்திருமுகம் அருளியது பத்திர னார்க்கருளிய அளவன்று; இதனால் சேரர்க்கு அருளியதே பெருமை பெற விளங்கும் என்பது குறிப்பு ; "அடியேன் பொருளாத் திருமுகம் கொண்டு" (3778); "உம்பர்

பெருமா னருள் போற்றி " (3779); " அடிமை கொண்டருளும் பான்மையரு பெருமையினை நினைந்து பலகாற் பணிந்தேத்தி " (3786); " வாரம் பெருகத் தமக் கன்று மதுரை யால வாயமர்ந்த, வீர ரளித்த திருமுகத்தால் விரும்பு மன்பின் வணங்குதற்கு " (3820); " அடியேனைப் பொருளாக அளித்ததிரு முகக்கருணை, முடிவேதென் றறிந்திலேன் " (3841) என்பன முதலியவை காண்க. வழியடிமை யாகப் பாண்டியனும் சோழனு மிருப்பவும் சேரருக்கு அருளியபெருமையும் குறித்தது. உதியர் - சேரர்; உதியர் வேந்தன் - சேரமான்.

அருள் செய்த பெருமையாலே - திருமுகம் அருளியதன்றி அதனுள் " பருவக் கொண்மூப் படியென...சேரலன் " எனவரும் பொருள்களும் காண்க.

செல்வத்துக்கேற்ற இருநிதிகொடுக்க - " மாண் பொருள் கொடுத்து " என்ற திருமுகப் பாசுரத்துக்குப் பொருள் விரித்தபடி; கொடையானது கொள்வோர் தகுதியேயன்றிக் கொடுப்போரது செல்வ நிலையினுக்கும் ஏற்றவாறு அமைதல் வேண்டுமென்பது கருத்து.

மதிமலிபுரிசை - இது திருமுகப்பாசுரத்தின் தொடக்கம்; முதற்குறிப்பு.

தோட்டுத் திருமுகம் - பனை ஓலையிதழின் வரைந்தெழுதிய திருமுகம்; திருமுகம்- பெரியோர்கள் எழுதும் ஓலைகளுக்கு வழங்கும் உபசார வழக்கு; " சீரச னுரை தங்கு மோலைதிரு முகமென்று சூடு செயலே " (சித்தி. பாபக் - பட்டாசாரியன் மத மறுதலை - 5); தோடு - இதழ்.

காண - இரவில் கனவில் அருள் செய்ததற்கேற்ப நனவிலும் காணும்படி.

மேலுங்கீழுந் தொடர்ந்த ஓர்வகை அறுசீர்விருத்தங்களுள் இப்பாட்டுத் தனிப் படத் திருமுகப் பாசுரத்துக்காக வந்தது போலும்! 28

திருவாலவாயுடையார் அருளிய திருமுகப்பாசுரம்

திருச்சிற்றம்பலம்

மதிமலி புரிசை மாடக் கூடற், பதிமிசை நிலவு பானிற வரிச்சிற,
கன்னம் பயில்பொழி லால வாயின், மன்னிய சிவன்யான் மொழிதரு மாற்றம்!
பருவக் கொண்மூப் படியெனப் பாவலர்க், குரிமையி னுரிமையி னுதவி யொளிதிகழ்
குருமா மதிபுரை குலவிய குடைக்கீழ்ச், செருமா வுகைக்குஞ் சேரலன் காண்க!
பண்பா லியாழ்பயில் பாண பத்திரன், றன்போ லென்பா லன்பன் றன்பாற்
காண்பது கருதிப் போந்தனன்; மாண்பொருள் கொடுத்து வரவிடுப் பதுவே.

திருச்சிற்றம்பலம்

(இ - ள்) மதிமலி...மொழிதருமாற்றம் - சந்திரன் பயிலும் மதில்கள் சூழ்ந்த மாடங்களையுடைய நான்மாடக் கூடலம்பதியில் நிலவுகின்ற, பால்போன்ற வெள்ளை யாகிய வரிகளோடு கூடிய சிறகுடன் கூடிய அன்னங்கள் பயிலும் பொழில்கள் சூழ்ந்த திருவாலவாயில் நிலைபெற வீற்றிருக்கும் சிவன்யாம் சொல்கின்ற இச் செய்தியினை; பருவக்கொண்மூ...காண்க - பருவகாலத்து மேகம் போலப் பாவ லர்களுக்கு இருபாலும் உரிமையுடனே வேண்டுவனவற்றை யெல்லாம் உதவி, ஒளி விளங்கிய பெரிய முழுமதி போன்று விளங்கும் வெண்கொற்றக் குடையின்கீழ் வீற்றிருந்து போர் வல்ல யானையினைச் செலுத்தும் சேரமன்னனே! காண்பாயாக; பண்பால்...போந்தனன் - உரிய பண்பினாலே யாழினைப் பயிற்றும் பாணபத்திரன், உன்னைப் போலவே எம்மிடம் அன்புடையவன்; உன்னைக் காண்பதனைக் கருத்தில் வைத்து உன்னிடம் (இத்திருமுகத்தினைக் கொண்டு) வருகின்றான்;

மாண்...விடுப்பதுவே - மாட்சிமையுடைய பொருளினைக் கொடுத்து வர விடுப் பாயாக!

(வி - ரை) மதிமலிபுரிசை - மதில்களின் மிக்க உயர்ச்சி குறித்தது. இம் மதில் நகரஞ் சூழ்ந்த மதில். மாடங்களைச் சூழ்ந்த மதில்கள் என்றலுமாம்; "கபாலி நீள் கடிமதிற் கூட லாலவாய்" (தேவா) என்று திருவாலவாயினைச் சூழ்ந்த மதி லினைச் சிறப்பித்தமையும் காண்க.

மதி - பாண்டியர் மரபு மதியின் வழிவந்ததென்ற குறிப்புடன் தொடங்கிய நிலையும் காண்க. மதி - அறிவின் நுணுக்கம் என்ற குறிப்புடனும் நின்றது "மதியினாலே" (2373)

மாடக்கூடல் - நான்மாடக் கூடலான திருவிளையாடலின் வரலாற்றுக் குறிப் பும் காண்க.

ஆலவாய் - திருக்கோயிலினைக் குறித்தது; ஆலவாயான திருவிளையாடலின் வரலாற்றுக் குறிப்பு.

ஆலவாயின் மன்னிய சிவன் யான் மொழிதருமாற்றம் - இது திருமுகம் எழு தும் முகப்பு மரபு; உலக வழக்கிலும் இந்நாளில்...இன்னாரிடமிருந்து...இன்னாருக்கு என்று எழுதும் மரபு காண்க. மேல் "சேரலன் காண்க" என்றதும் பார்க்க.

பருவக் கொண்மூப் படியேன - பருவகாலத்தின் நீர் சுமந்த மேகம் மிக்குப் பொழிதல் போல. கொண்மூ - மேகம்; 'கார் கொண்ட கொடை" (தேவா) என்ற முதனூல் இக்கருத்துடையது. பாவலர் - பாணர் இசைப்பா வல்லராதல் குறிப்பு.

உரிமையின் உரிமையின் உதவி - கொடுப்போன் - கொள்வோன் என்ற இரு பாலினும் உரிமை குறிக்க இருமுறை அடுக்கிக் கூறினார்; "எதிரில் செல்வத்துக் கேற்ற" (3775) என்றது காண்க. அடுக்கு மிகுதிகுறித்த தென்றலுமாம்.

தருமர் மதிபுரை - குடை - வெண்கொற்றக் குடை முழுமதி போன்ற தென் பது; நிறமும் வடிவமும் குளிர்ச்சியும் குறித்தது. வினை பயன் மெய் யுரு நான்கும் பற்றி எழுந்த உவமை. 3757 - பார்க்க.

சேருமா உகைக்கும் - "வேழ முடைத்து மலை நாடு" என்றபடி சேரநாடு யானை வளத்தால் மிக்கது; பின்னர்ச் சேரர்பெருமான் நம்பிகளை யானையின்மேல் எழுந்தருளுவித்து உபசரிக்கும் நிலைகள் முதலியவையும் காணக. "மலைநா டினின் மலிந்த மலைகள்" (3795); சேருமா - நால்வகைப படைகளுள் சிறந்தது யானை என்றதாம்; "பூசல்முனைக் களிறுகைத்துப் போர்வென்று" (3664) என்று யானைப்படைப் போரின் சிறபபுக் குறித்தமை காண்க உகைத்தல் - செலுத்துதல். மா - குதிரை என்றும் பொருள்படுதலால் மாவுகைக்கும் என்பது பின்னர், இந் நாயனார் குதிரையில் ஏறித் திருக்கயிலை செல்லும் சரித விளைவுக் குறிப்பும்பட நிற்றல் காண்க.

பண்பு - யாழ்; இசைநூல் இயல் முழுதும் குறித்தது. அதனுடன் அடிமைப் பண்பும் குறித்தது. மேல் "அன்பன்" என்பதும் காண்க.

தன் போல் - நின் போல; தன்பால் - நின்னிடம்.

காண்பது கருதி - அரச சமூகம் காண எண்ணி; கருதிய பொருளாவது பொருள் பெறுதலே என்பதனை மேல் (கருதிய) பொருள் கொடுத்து - என்றதனாற் பெறவைத்தார் பாணர் இரவார் என்று குறித்தற்பொருட்டு.

மாண்பொருள் - மாண்பாவது - அறத்தாற்றி னீட்டப்படுதலும், அன்பினா லீயப் படுதலும், காவில் ஈகைக்கே பயன்படுதலும், இவ்வாறு வரும் பிற நலங்களுமாம்.

வரவிடுப்பது - செல்ல விடை கொடுக்க. வியங்கோள் வினைமுற்று. "அறிவது" (சித்தி - 8 - 38); "கொள்ளப்படாது மறப்பது" (கோவை - 87). இப்பாசுரம் 11-ம் திருமுறையுள் முதற்கண் வைத்து நம்பியாண்டார் நம்பிகளாற் கோவை செய்யப்பட்டுள்ளது.

வேறு

3776. சங்கப் புலவர் திருமுகந்தந் தலைமேற் கொண்டு பத்திரனார்
அங்கப் பொழுதே புறப்பட்டு மலைநா டணைய வந்தெய்தித்
துங்கப் புரிசைக் கொடுங்கோளூர் தன்னிற் புகுந்து துன்றுகொடி
மங்கு றொடக்கும் மாளிகைமுன் வந்து மன்னர்க் கறிவித்தார். ௨௯

(இ - ள்) பத்திரனார் - பாணபத்திரர்; சங்கப்புலவர்...தலைமேற் கொண்டு - தலைச் சங்கப் புலவனாராகிய சோமசுந்தரமூர்த்தி அளித்தருளிய திருமுகத்தினைச் சிரமேற் றாங்கிக்கொண்டு; அங்கு அப்பொழுதே புறப்பட்டு - அங்குநின்றும் அப்பொழுதே புறப்பட்டுச் சென்று; மலைநாடு...எய்தி - மலைநாட்டினைச் சேரவந்து சேர்ந்து; துங்கப்புரிசை...புகுந்து - பெரிய மதிலையுடைய கொடுங்கோளூரினிற் புகுந்து; மங்குல்...வந்து - மேகந் தொடும் அளவு உயர்ந்த அரசரது திருமாளிகையின் முன்னர் வந்து; மன்னர்க்கு அறிவித்தார் - அரசருக்கு அறிவித்தனர்.

(வி - ரை) சங்கப்புலவர் : சோமசுந்தரமூர்த்தி; தலைச் சங்கத்தில் தலைவராயிருந்தவர்; இறையனார் என்ற பெயருடன் விளங்கியவர் திருவாலவாய்ச் சிவபெருமான் என்பது வரலாறு. "திருந்தியநூற் சங்கத்துள் அன்றிருந்து தமிழாராய்ந் தருளிய வங்கணர்" (1668); "தலைச் சங்கப்புலவனார்" (2565); பாசுரமாகப் பாடித் திருமுகம் அளித்தமையால் புலவர் என்றார். புலவர் திருமுகம் - ஆறும் வேற்றுமைத்தொகை.

அங்கு - அங்குநின்றும்; அப்பொழுதே - "தாழா தேகி வருக" (3774) என்று இறைவர் அருளியமையால் அப்பொழுதே புறப்பட்டனர் என்பதாம்.

புறப்பட்டு - நாடு - எய்தி - ஊர் - புகுந்து - மாளிகை முன்வந்து - என்று "தாழாது" என்றதற் கேற்ப பாண்டி நாட்டினின்றும் சேரநாடு சேர்ந்ததும், தலைநகரத்தினை எய்தியதும், திருமாளிகையின்கண் வந்ததும் ஒவ்வோர் வினையெச்சங்களால் விரைந்து இங்குச் செலுத்திக் கூறிய கவிநயம் கண்டு கொள்க. பத்திரனார் மதுரையினின்றும் சேர நாடு புகுந்த வழி, கண்ணகி போந்த வழியாகச் சிலப்பதிகாரத்திற் கருதும் வழிபோலும் என்பது ஆராய்ச்சிக்குரியது.

கொடிமங்குல் தொடக்கும் - மாளிகைமேற் கட்டிய கொடிகள் மேகமண்டலத்துள் விளங்கும்படி உயர்ந்த என்பது. "மாளிகைக் கொடி, யருக்கன் மண்டலத் தணுவும்" (பிள் - ஆரூர் கட்டளை - 1).

அறிவித்தார் - வாயில் காவலரால் அறியச் செய்தனர். இறைவரது திருமுகத்துடன் தாம் போந்த செய்தியினை எனச் செயப்படுபொருள் விரிக்க; மேல் வரும் பாட்டுப் பார்க்க.

திருமுகத்தை—என்பதும் பாடம். 29

3777. கேட்ட பொழுதே கைதலைமேற் கொண்டு கிளர்ந்த பேரன்பால்
நாட்டம் பொழிநீர் வழிந்திழிய வெழுந்து நடுக்க மிகவெய்தி
ஓட்டத் தம்பொன் மாளிகையின் புறத்தி லுருகுஞ் சிந்தையுடன்
பாட்டின் றலைமைப் பாணனார் பாதம் பலகாற் பணிகின்றார், ௩௦

3778"அடியேன் பொருளாத் திருமுகங்கொண் டணைந்த" தென்ன,வவர்தாமும்
கொடிசேர் விடையார் திருமுகங்கைக் கொடுத்து வணங்கக், கொற்றவனார்
முடிமேற் கொண்டு கூத்தாடி மொழியுங் குழறிப் பொழிகண்ணீர்
பொடியார் மார்பிற் பரந்துவிழப் புவிமேற் பலகால் வீழ்ந்தெழுந்தார்.

3777. (இ - ள்) கேட்ட பொழுதே...மிகவெய்தி - அச் செய்தியினைச் சொல்லக் கேட்டபோதே கைகளைத் தலைமேற் கூப்பிக் கிளர்ந்த பேரன்பினாலே கண்களினின்றும் பொழியும் கண்ணீர் வழிந்து கீழே வர எழுந்து மிகவும் நடுங்கி; ஓட்டத்து...புறத்தில் - ஓடவிட்ட அழகிய பொன் பூண்ட திருமாளிகையின் புறத்திற் போந்து; உருகும்...பணிகின்றார் - உருகும் மனத்துடனே பாட்டின் தலைவனாராகிய பாணபத்திரருடைய திருவடிகளைப் பல முறையும் வணங்குகின்றாராய், கூ௦

3778. (இ - ள்) அடியேன்...என்ன - அடியேனையும் பொருளாகக் கொண்டு திருமுகத்தினைக் கொண்டணைந்ததே! என்று கூற; அவர்தாமும்... வணங்க - அந்தப் பாணனாரும் கொடியிலே சேர்ந்த விடையினை உடைய இறைவர் அளித்த திருமுகத்தினைக் கையிற் கொடுத்து வணங்குதலும்; கொற்றவனார்... வீழ்ந்தெழுந்தார் - அரசனாரும் அத்திருமுகத்தினை வாங்கி, அதனைத் தமது திருமுடிமேற் கொண்டு ஆனந்தக் கூத்தாடி மொழிகுழறிக் கண்களினின்றும் பொழியும் ஆனந்தக் கண்ணீர் பெருகித் திருநீறிட்ட மார்பில் வழிந்து பரவிவீழ நிலத்தில் பல முறையும் வீழ்ந்தெழுந்து வணங்கினார். கூக

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபுகொண்டன.

3777. (வி - ரை) கேட்டபொழுதே - வாயில்காப்போர் சொல்லக் கேட்ட அப்போதே.

கண்ணீர் வழிந்திழிதல் - நடுங்க மெய்துதல் - முதலியவை அன்பு மிகுதியிற் காணும் மெய்ப்பாடுகள். இங்குக் கூறியவை, செய்தி கேட்டவுடன் நிகழ்ந்தவை; மேற் பாட்டிற் கூறுபவை கண்டபோது நிகழ்பவை

நாட்டம் பொழிநீர் - கண்ணீர்; நாட்டம் - கண்; நடுக்கம் - உடல் கம்பித்திடுதல்; "திருமேனி தன்னி லசைவும்" (2164); "பதைப்பதுஞ் செய்கிலை" (திருவா).

ஓட்டத்து அம்பொன் மாளிகை - உருக்கி ஓடவிட்ட பொன் ஒளி மிக விளங்கும்; பொன்னால் சிகரமும் பிற வேலைப்பாடுகளும் அமைந்த அரசமாளிகை.

புறத்தில் - புறத்திற் போந்து; செய்தி கேட்டவுடன் பாணனாரை உள்ளே வரவழைக்க என்னாது தாமே ஓடி அவரிருக்குமிட நாடி வெளிப்போந்து என்பது அன்பின் பெருக்குக் குறித்தது; "அவரழைக்க வெட்டா, நீச ரானன்பர் தம்பா லெய்தினன் வெய்ய வேலான்" (பூசலார் - புரா - 13-4183) என்னும் காண்க.

பாட்டின் தலைமை - பாட்டு - கீதம். "இசைப்பாடலிற் பரவும்" (3773).

தலைமைப் பத்திரனார் தம்மைப் பலகால்—என்பதும் பாடம். 30

3778. (வி - ரை) "அடியேன்...அணைந்தது" - இது, அற்புத மெய்திச் சேரர் பெருமான் கூறிய மொழி; பொருளா - பொருட்படுத்தி; ஒரு பொருளாக எண்ணி; அடியேனையும் என்று இரண்டனுருபும் இழிவு சிறப்பும்மையும் தொக்கன; "அடியேனைப் பொருளாக வளித்ததிரு முகக்கருணை, முடிவேதென் றறிந்திலேன்" (3841), "என்னை யும்பொரு ளாகவின் னருள்புரிந் தருளும்" (2125),

" என்னையோர் பொருளாக் கொண்டே யெம்பிரா னருள்செய் தானேல் " (4185) என்பனவாதியாக வருபவை காண்க.

கொடிசேர் விடையார் - விடைசேர் கொடியார் என்பதாம் ; இடபக்கொடி யினை உடையவர் ; சிவபெருமான்.

முடிமேற் கொண்டு - அத்திருமுகத்தினைத் தம் சிரத்தில் ஏற்றிக்கொண்டு.

கூத்தாடி - " ஆடுகின்றிலை கூத்து " (திருவா).

பலகால் - 3 - 5 - 7 முதலாக நிலமுற வீழ்ந்து வணங்கும் முறைகள் சிவாகமங் களுள் விதிக்கப்படுவன ; இங்கு ஆராமையால் அவ் விதியினுள்ளும் அமையாது பல முறையும் என்றபடி ; மேலும் " பலகால் தொழுது " (3779) என்பது காண்க.

வீழ்ந்தயர்வார்—என்பதும் பாடம். 31

3779. பரிவிற் போற்றித் திருமுகத்தைப் பலகாற் றொழுது படியெடுக்க
உரிய வகையா லெடுத்தோதி யும்பர் பெருமா னருள்போற்றி
விரிபொற் சுடர்மா ளிகைபுக்கு மேவு முரிமைச் சுற்றமெலாம் [வார்,
பெரிதும் விரைவிற் கொடுபோந்து பேணு மமைச்சர்க் கருள்செய்

3780 "நங்கள் குலமா ளிகையிதனு ணலத்தின் மிக்க நிதிக்குவையாய்ப்
பொங்கி நிறைந்த பலவேறு வகையிற் பொலிந்த பண்டாரம்
அங்க ணொன்று மொழியாமை யடையக் கொண்டு புறப்பட்டுத்
தங்கும் பொதிசெய் தாளின்மேற் சமைய வேற்றிக் கொணரு"மென,

3781. சேரர் பெருமா னருள்செய்யத் திருந்து மதிநூன் மந்திரிகள்
சாரு மணிமா ளிகையுள்ளாற் றனங்க ளெல்லா நிறைந்தபெருஞ்
சீர்கொ ணிதிய மெண்ணிறைந்த வெல்லாம் பொதிசெய் தாளின்மேற்
பாரி னெருங்க மிசையேற்றிக் கொண்டு வந்து பணிந்தார்கள். ௩௪

3779. (இ - ள்) பரிவிற் போற்றி...தொழுது - அன்பினாலே துதித்துத் திரு முகத்தினைப் பலமுறையும் வணங்கி ; படி....ஓதி - அதன் சுருளினை நீக்கி எடுத்தற் குரிய வகையினாலே எடுத்து விரித்து வாசித்து ; உம்பர்...அருள் போற்றி - தேவ தேவராகிய இறைவரது திருவருளினைத் துதித்து ; விரி...புக்கு - ஒளி வீசும் பொன் மாளிகையினுள்ளே புகுந்து ; மேவும்...போந்து - பொருந்தும் உரிமைச் சுற்றத்தார் கள் எல்லாரையும் மிக விரைவிற் கொண்டு சார்ந்து ; பேணும்...அருள் செய்வார் - காக்கும் மந்திரிகளுக்கு அருள் செய்வாராய், ௩௨

3780. (இ - ள்) நங்கள்...பண்டாரம் - நமது இந்த அரச மாளிகையி னுள்ளே நலமிக்க செல்வக் குவியல்களாய் மேன்மேல் வளர்ந்து நிறைந்த பலவேறு வகைகளில் விளங்கிய சேமத்தினுள் ; அங்கண்...கொணரும் என - அங்கு ஒன்றும் எஞ்சாமல் முழுதும் எடுத்துப் புறப்பட்டுத் தங்கத் தக்கபடி பொதி செய்து ஆள்களின் மேலே அமையும்படி ஏற்றிக்கொண்டு வாருங்கள் என்று, ௩௩

3781. (இ - ள்) சேரர் பெருமான் அருள் செய்ய - சேரமான் பெருமாள் நாயனார் இவ்வாறு அருளிச் செய்தாராக ; திருந்து...ஏற்றிக்கொண்டு - திருந்து மதியும் நூலறிவுமுடைய அமைச்சர்கள் சார்ந்த அழகிய மாளிகையினுள் தனங்கள் எல்லாவற்றாலும் நிறைந்த பெரிய சிறப்புடைய அளவற்ற நிதியங்களை எல்லாம்

பொதி செய்து ஆளின்மேலே நிலம் நெருங்க ஏற்றிக் கொண்டு; வந்து பணிந்தார்கள் - அரசரிடம் வந்து வணங்கினார்கள். கூச

இம்மூன்று பாட்டுக்களும் தொடர்ந்து ஒருமுடிபு கொண்டன.

3779. (வி - ரை) பரிவு - அன்பின் மிகுதி.

படி எடுக்க உரிய வகை - படி - சுருண்ட அதன் படியினை; எடுக்க உரிய - நீக்கி எடுத்தற்குரிய என்பது; " சுருள்பெறு மடியை நீக்கி விரித்து " (204) என்றதும், ஆண்டுரைத்தவையும் பார்க்க. இதற்கு இவ்வாறன்றிப் " பிரதி எடுத்தற்குரிய படி பிரித்து " என்று உரைத்து, "வந்த திருமுகம் சிதைவுறினும் பிரதி வேண்டுமாகலின் " என்று விசேடமும், இயைபின்றி உரைத்தனர் முன் உரைகாரர்; படி எடுத்தலால் அதற்குரிய வகையாய் என்றும், முத்திரையை உடைக்க என்றும் உரைப்பர் என்பர் இராமநாதச் செட்டியார்.

மாளிகை புக்கு - திருமாளிகையினுள் பாணபத்திரனாரை அழைத்துக் கொண்டு இருத்தி உபசரித்து என்றும், சுற்றமெலாம் - கொடுபோந்து பணிவித்து என்றும் வருவித்து உரைத்துக்கொள்க.

அருள் செய்வார் - என (3780) - அருள் செய்ய - மந்திரிகள் - கொண்டுவந்து பணிந்தார்கள் (3781) என்று இம் மூன்று பாட்டுக்களையும் கூட்டி முடிக்க.

பேணும் - உலகம் பேணும்; பேணற் குதவியாய் நிற்கும். 32

3780. (வி - ரை) நிலமாளிகை - வழிவழி வரும் அரச மாளிகை.

பலவேறுவகை - வெள்ளி - பொன் - மணி - முதலாயின.

பண்டாரம் - சேமம்; பொக்கிசம் என்பர்.

அங்கண் ஒன்றும் ஒழியாமை - அங்கு ஒன்றும் எஞ்சாமல்; அடைய - முழுதும், நிறைய. புறப்பட்டு - அப்புறப்படுத்தி எடுத்து.

தந்தும் பொதி செய்து - வழிப்பயணத்தில் நீடு செல்லத்தக்க வகையாற் பொதிந்து (well packed); சமைய - அமையும்படி

என - சேரர் - அருள் செய்ய - என்று மேல் வரும் பாட்டுடன் கூட்டுக. 33

3781. (வி - ரை) திருந்தும் - உலகம் திருத்தும் எனப் பிறவினைப் பொருளில் வந்தது.

மதிநூல் - மதிநுட்பமும் நூலறிவும் உடைய. " மதிநுட்ப நூலோ டுடையார்க்கு " (குறள்).

தனங்கள் எல்லாம் - நிதியம் எண்ணிறந்த - நிதியங்களின் வகையாலும் தொகையாலும் மிகுதி குறித்தன.

பாரில் நெருங்க - நிலத்தின் மேல் நெருங்கி வரும்படி. 34

3782. பரந்த நிதியின் பரப்பெல்லாம் பாண னார்பத் திரனார்க்கு
நிரந்த தனங்கள் வெவ்வேறு நிரைத்துக் காட்டி "மற்றிவையும்
உரந்தங் கியவெங் கரிபரிகண முதலா முயிருள் ளனதனமும்
புரந்த வரசுங் கொள்ளு"மென மொழிந்தார் பொறையர்க் கிறையவனார்.

(இ - ள்) பரந்த...காட்டி - வெவ்வேறு வகைகளாகப் பெருகிய நிதியின் பெருக்கை எல்லாம் பாணபத்திரனாருக்கு வரிசை பெற்ற நிதிக் குவியல்களை அவ்வவ் வரிசைபெறக் காட்டி; பொறையர்க்கிறையவனார் - சேரர்களின் மன்னவராகிய சேரமான் பெருமாள்; மற்றிவையும்...கொள்ளும் என - இவைகளையும்

மற்றும் வலிமை பொருந்திய வெவ்விய யானைகள் முதலாக உள்ள உயிருள்ள பொருள்களாகிய செல்வங்களையும், அடியேன் காவல்புரியும் அரசாட்சியினையும் ஏற்றுக் கொள்ளுங்கள் என்று ; மொழிந்தார் - சொன்னார்.

(வி - ரை) பரந்த நிதியின் பரப்பு எல்லாம் - நிரந்த தனங்கள் வெவ்வேறு நிரைத்து - வகைகளாற் பலவாதலும் தொகையாற் பலவாதலும் குறித்தன.

இவையும் மற்றும் - உயிருள்ளன தனமும் - அரசும் என்க ; மற்றும் - இவையே யன்றி என்ற பொருளில் வந்தது; உயிருள்ளன தனமும் - யானை, குதிரை, பசுக்கள் முதலியவை உயிருள்ள செல்வங்கள் ; இதனால் நிரைத்துக் காட்டிய இவை உயிரில்லாத பொருள்கள் என்றது குறிப்பு.

புரந்த அரசு - அரசு - அரசாட்சி புரியும் நாடு முழுமையும் ; புரக்கும் என்னாது புரந்த என்று இறந்த காலத்தாற் கூறியது, அதன்மேல் உள்ள தமது ஆட்சியினை நீங்கி அவர்பால் ஒப்புவித்த குறிப்பு. 35

3783. பாண னார்பத் திரனாரும் பைம்பொன் மௌலிச் சேரலனார்
காணக் கொடுத்த நிதியெல்லாங் கண்டு மகிழ்வுற் றதிசயித்துப்
"பேண வெனக்கு வேண்டுவன வடியேன் கொள்ளப், பிஞ்ஞகனார்
ஆணை யரசு மரசுறுப்புங் கைக்கொண் டருளு" மெனவிறைஞ்ச, ௩௬

3784. இறைவ ராணை மறுப்பதனுக் கஞ்சி யிசைந்தா ரிகல்வேந்தர் ;
நிறையு நிதியின் பரப்பெல்லா நிலத்தை நெளிய வுடன்கொண்டே
உறைமும் மதத்துக் களிறுபரி யுள்ளிட் டனவேண் டுவகொண்டோர்
பிறைவெண்கோட்டுக் களிற்றுமேல் கொண்டு போந்தார் பெரும்பாணர்.

3783. (இ - ள்) பாணனார்... அதிசயித்து - பாணபத்திரனாரும் பசிய பொன் மகுடம் சூடிய சேரர் பெருமான் முன் கூறியபடி தாம் காணக் காட்டிக் கொடுத்த நிதிகள் எல்லாவற்றையும் கண்டு மகிழ்ந்து அதிசயப்பட்டு ; பேண... கொள்ள - எனக்குப் பேணுதற்கு வேண்டுவனவற்றை அடியேன் பெற்றுக்கொள்ள; அரசும்...கைக்கொண்டருளும் - அரசாட்சியும் அதற்குரிய அங்கங்களும் நீரே கைக் கொண்டருளுங்கள் ; பிஞ்ஞகனார் ஆணை - இஃது இறைவரது ஆணை ; என இறைஞ்ச - என்று சொல்லி வணங்க. ௩௬

3784. (இ - ள்) இறைவர்...இகல்வேந்தர் - வலிய வேந்தராகிய சேரலனார் இறைவரது ஆணையினை மறுப்பதற்கு அஞ்சி அதற்கு இசைந்து நின்றார் ; நிறையும்...கொண்டே - நிறைந்த நிதியின் பெருக்கங்களை யெல்லாம் நிலம் நெளியும்படி உடனே கொண்டு ; உறை...கொண்டு-துளிக்கின்ற மும்மதங்களையுடைய யானையும் குதிரையும் உள்ளிட்டவற்றிலும் வேண்டுவனவற்றைக் கைக்கொண்டு ; பெரும்பாணர்-பெரிய பாணராகிய பத்திரனார் ; ஓர்...போந்தார் - தாம் ஒரு பிறைபோன்ற வெள்ளிய கொம்பினையுடைய யானையினை மேல்கொண்டு போந்தனர். ௩௭

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒருமுடிபு கொண்டன.

3783. (வி - ரை) மௌலி - மகுடம் - முடி - கிரீடம். இது மோலி எனவும் வரும்.

காணக்கொடுத்த நிதி எல்லாம் கண்டு - "காட்டி என" முன்பாட்டிற் கூறியபடி காணக் கொடுத்த என்க.

கண்டு - சிறப்புக் காட்சி ; அதிசயித்து - "அதிசயம் கண்டாமே" (திருவா).

எனக்குப் பேண வேண்டுவன என்க. பேணுதல் - ஈண்டு விரும்பிக் கொள்ளுதல் என்ற பொருளில் வந்தது.

கைக்கொண்டருளும் - (இது) பிஞ்ஞகனாரது ஆணை என்க - "குறைவின்றித்தர" (3774); "நிதி கொடுக்க" (3775) என்ற அளவே இறைவர் ஆணையிட்டருளியமையினாலும், அரசு பெறுதல் தமக்குத் தகாமையினாலும், "மாண்பொருள் கொடுத்து வரவிடுப்பதுவே" என்ற திருமுகப் பாசுரத்தினை உட்கொண்டு "பிஞ்ஞகனார் ஆணை" என்றார். ஆணைப்படி வந்த அரசு என்றுரைத்தலுமாம்.

அரசும் அரசு உறுப்பும் - அரசு - அரசாட்சியும் அரசராந் தன்மையும்; உறுப்பு - அதற்குரிய படை குடி கூழ் அமைச்சு நட்பு அரண் என்னும் அரச அங்கங்கள் ஆறு.

கைக் கொண்டருளும் - புரந்த அரசும் கொள்ளும் (3782) என்று நினைந்து கூறிக் கொடுத்துவிட்டாராதலின் அவ்வாறு கொடுத்தவனை மீளவும் கைக்கொள்ளும் என்றார். கொடுத்த பொருளை மீண்டும் கைக்கொள்ளுதல் அறநூல்விதியிற் கூடாதென்று மறுக்கவும் கூடுமாதலின் அவ்வாறு மறாத வண்ணம் பிஞ்ஞகனார் ஆணை என்றார் ; ஆணை எல்லாவற்றுக்கும் மேலாய் நிற்பதாம் என்பது குறிப்பு.    36

3784. (வி - ரை) இறைவராணை...இகல்வேந்தர் - இறைவரது ஆணை என்றமையால் அதனை மறுப்பது அடாது என்றஞ்சினார். இகலுடையாராயினும் ஆணைக்கு உட்படவேண்டும என்பது குறிக்க இங்கு இகல்வேந்தர் என்றார். இகல் - தடுக்கலாகா வலிமை ; "தாவில் விறலும்" (3761).

நிலத்தை நெளிய - பாரம் தாங்கமாட்டாது நிலமும் நெளிவுபட ;

களிறு பரி உள்ளிட்டன வேண்டுவன - "உயிருள்ளன தனமும்" (3782) என்று கூறிக் கொடுத்தாராதலின் அவற்றுள் தமது தேவைக்கு வேண்டுவனவற்றை மட்டும் ஏற்றுக்கொண்டார் என்பதாம். "வேண்டிற் றெல்லாம் குறைவின்றித் தர" (3774) என்பது இறைவராணை யாதலின் வேண்டுவன மட்டில் பெற்றுக் கொண்டனர்.

ஓர் - களிறு - என்று கூட்டுக. பிறை வெண் கோடு - பிறை போன்ற வெள்ளிய கொம்பு ; மெய்யும் உருவும் பற்றி வந்த உவமை.

களிற்று மேல் கொண்டு - மலைநாட்டரசரது கொடையாகலின் அச்சிறப்புக் காட்ட அந்நாட்டிற் கொண்டு போந்தார்.

பெரும்பாணர் - பாணருள் ஒரு பிரிவினர் ; யாழ்பற்றி வந்தவென்பர் ; "பெரும்பாணர்வரவு" (2030).

அஞ்சி இருந்தார்—என்பதும் பாடம்.    37

3785. பண்பு பெருகும் பெருமாளும் பாண னார்பத் திரனார்பின்
கண்கள் பொழிந்த காதனீர் வழியக் கையாற் றொழுதணைய
நண்பு சிறக்கு மவர்தம்மை நகரின் புறத்து விடைகொண்டு
திண்பொற் புரிசைத் திருமதுரை புக்கார் திருந்து மிசைப்பாணர். ௩௮

(இ - ள்) பண்பு...அணைய - சிவனடிமைத் திறத்தின் பண்பு பெருக நிகழும் சேரமான் பெருமாளும் பாணபத்திரனார் பின்னே கண்கள் பொழிந்த ஆனந்தக்கண்ணீர் முகமெலாம் வார்ந்து மார்பின் வழியக் கைகள் கூப்பித் தொழுதபடியே அணைய ; நண்புசிறக்கும்...விடைகொண்டு - நண்பிற் சிறந்த அவர் பாலின் அந் நகரின் புறத்தே விடைபெற்றுக்கொண்டு ; திண்...பெரும் பாணர் - திருந்திய

இசையினையுடைய பாணபத்திரனார் திண்ணிய பொன் பூண்ட மதில் சூழ்ந்த திரு மதுராபுரியினிற் சேர்ந்து உள்ளே புகுந்தனர்.

(வி - ரை) பண்பு - சிவன்பால் அடிமைத்திறம்.

பத்திரனார் பின்- தொழுதணைய - பெரியோர்களை வழி விட்டனுப்புங்கால் அவர் பின் பதினான்கடியேனும் எழடியேனும் நடந்து சென்று வழிவிட்டு விடை பெறுதல் வேண்டு மென்பது விதி ; ஆனால் இங்கு அன்பின் மேம்பாட்டினால் சேரனார் நகரின் புறம் வரையிற் பின்சென்றனர் ; அங்கும் தாம் விடைகொடாது பத்திரனார் தின் மின் நின்மின் என்று அமைத்து விடைகோள்ளும் வரையிற் சென்றனர் என்க. அன்பின் மேம்பாடு கண்கள்...தொழுது - என்றதனால் அறியப்படும்.

காதல்நீர் - காதல் மிகுதியால் வரும் கண்ணீர் ; வழிய - முகத்தினும் மார் பினும் வழிய ; "முகமெலாங் கண்ணீர் வார" (தேவா) ; "காத லாகிக் கசிந்து கண்ணீர் மல்கி" (தேவா); "மார்பாரப் பொழிகண்ணீர் மழைவாரும்" (1490).

நகரின் புறத்து - விடைகொண்ட எல்லையினைக் குறித்தது.

புரிசை - "மதிமலி புரிசை" (திருமுகப் பாசுரம்).

நிருந்தும் இசை - நிருந்துதல் - அன்பு மேலீட்டினால் எழுதல் ; இசை - இங்கு யாழிசையினையே யன்றிப் புகழினையும் குறித்தது. 38

3786. வான வரம்பர் குலம்பெருக்கு மன்ன ரூரு மறித்தேகிக்
கூன விளவெண் பிறைக்கண்ணி முடியா ரடிமை கொண்டருளும்
பான்மை யருளின் பெருமையினை நினைந்து பலகாற் பணிந்தேத்தி
மேன்மை விளங்கு மாளிகைமண் டபத்து ளரசு வீற்றிருந்தார். ௩௯

(இ - ள்) வானவரம்பர்...மறித்து ஏகி - சேரர் குலத்தைப் பெருகச் செய்யும் மன்னராகிய சேரமானாரும் திரும்பிச் சென்று ; கூனல்...ஏத்தி - வளைந்த இளைய வெள்ளிய பிறையாகிய கண்ணியை முடித்த சிவபெருமான் அடியவர்களை ஆட் கொண்டருளும் திறத்தின் திருஅருட் பெருமையினை எண்ணி எண்ணிப் பல முறையும் பணிந்து துதித்து ; மேன்மை...வீற்றிருந்தார் - மேன்மை பொருந்த விளங்கும் திரு மாளிகையில் அரச மண்டபத்தினுள்ளே அரசு வீற்றிருந்தனர்.

(வி - ரை) வானவரம்பர் - சேர மன்னர்களின் மரபுப் பெயர் ; "வான வரம்பனை நீயோ பெரும !" (புறநா - 2). "பெருவான வரம்பனார்" (3904).

மறித்து ஏகி - பத்திரனார் விடைகொண்டபின் அந் நகர்ப்புறத்தினின்றும் மீண்டு சென்று.

அடிமை கொண்டருளும்...பெருமையினை நினைந்து - சோமசுந்தரக் கடவுள் பத்திரனார் பொருட்டுத் தமக்குத் திருமுகங் கொடுத்தருளிய செய்தியினை எண்ணி எண்ணி என்க. அடிமை கொண்டருளும் - பெருமையாவது திருமுகங் கொடுத்தது பத்திரனாருக்கு நிதியம் தருவதற்கு மன்று ; தமது நிதியம் வேண்டியபடியுமன்று ; என்னை ? அவர் தாமே உலவாக்கிழியும் உலவாக் கோட்டையும் அருளிய திரு விளையாட்டுடையார் ; உலக மெல்லாம் தாமே உடைய பெருஞ்சித்தர் ஆதலின் என்க ; ஆயின் பின் என்னையோ ? எனின், பத்திரனார் மூலம் தம்மை ஆட்கொண் டருள வைத்த கருணையின் பெருமையே என்பதாம்.

நினைந்து - எண்ணி எண்ணி ; மண்டபம் - அரசர் கொலு வீற்றிருந்து அரசு புரியும் அத்தாணி மண்டபம்.

அரசு வீற்றிருத்தலாவது - அரசகாரியம் பார்த்தல். 39

3787. அளவில் பெருமை யகிலயோ னிகளுங் கழறிற் றறிந்தவற்றின்
உளமன் னியமெய் யுறுதுயர மொன்று மொழியா வகையகற்றிக்
களவு கொலைகண் முதலான கடிந்து கழறிற் றறிவார்தாம்
வளவர் பெருமா னுடன் செழியர் மகிழுங் கலப்பில் வைகுநாள், ௪0

3788. வானக் கங்கை நதிபொதிந்த மல்கு சடையார் வழிபாட்டுத்
தூநற் சிறப்பி னர்ச்சனையாந் தொண்டு புரிவார் தமக்கொருநாள்
தேனக் கலர்ந்த கொன்றையினா ராடற் சிலம்பி னொலிமுன்போன்
மானப் பூசை முடிவின்கட் கேளா தொழிய மதிமயங்கி, ௪க

3789. பூசை கடிது முடித்"தடியே னென்னோ பிழைத்த?" தெனப்பொருமி
"ஆசை யுடம்பான் மற்றினிவே றடையு மின்ப மியா?"தென்று
தேசின் விளங்கு முடைவாளை யுருவித் திருமார் பினினாட்ட
ஈசர் விரைந்து திருச்சிலம்பி னோசை மிகவு மிசைப்பித்தார். ௪உ

3787. (இ - ள்) அளவில்...வகை அகற்றி - அளவில்லாத பெருமையுடைய எல்லா யோனிகளில் வந்த உயிர்களும் சொல்வனவற்றை யெல்லாம் அறிந்து அவற்றின் மனத்தில் உள்ள மெய்யுறும் துன்பங்கள் ஒன்றும் ஒழியாதபடி நீக்கி; களவு...கடிந்து - களவும் கொலைகளும் முதலாகிய தீமைகளைக் கடிந்து; கழறிற்றறிவார்தாம்...வைகும்நாள் - கழறிற் றறிவாராகிய இந்நாயனார் சோழ மன்னருடனே பாண்டிய மன்னரும் கூடி மகிழும்படியாகிய கூட்டத்துடனே வாழும்நாளில், ௪0

3788. (இ - ள்) வானக் கங்கை...தமக்கொரு நாள் - ஆகாய கங்கையாறு தங்கிய சடையினையுடைய இறைவரது வழிபாடாகிய தூய நல்ல சிறந்த அருச்சனையாகிய திருத்தொண்டு செய்து வருவாராகிய அவருக்கு ஒரு நாளில்; தேன் நக்கு அலர்ந்த...ஒலி - தேன் வழியும்படி மலர்ந்த கொன்றைமாலை சூடிய இறைவரது ஆடலின் சிலம்பொலியானது; முன் போல...மதிமயங்கி - பெருமையுடைய பூசையின் முடிவிலே முன்பு போலக் கேளாதொழியக் கண்டு மனம் மயங்கி, ௪க

3789. (இ - ள்) பூசை கடிது முடித்து - பூசையினை விரைவில் முடித்து; அடியேன்...பொருமி - அடியேன் என்ன பிழை செய்தனனோ? என்று துக்கித்து அழுது; ஆசை...என்று - ஆசைகொண்டு தாங்கும் இவ்வுடம்பினாலே இனி மற்று அடையும் இன்பம் வேறு யாது? என்று துணிந்து; தேசின்...நாட்ட - ஒளியுடன் விளங்கும் - உடைவாளை உருவித் தமது திருமார்பினிலே நாட்ட; ஈசர்... இசைப்பித்தார் - இறைவர் மிக விரைவுடனே திருச்சிலம்பின் ஓசையினை அதிகமாக இசைப்பித்தருளினர். ௪உ

இம்மூன்று பாட்டுக்களும் தொடர்ந்து ஒருமுடிபு கொண்டன.

3787. (வி - ரை) அளவில்...அறிந்து - இஃது அரசு ஏற்றருளும்போது இறைவர்பால் இவர் வேண்டிப் பெற்ற வரத்தாலாகியது. "யாவும் யாருங் கழறினவு மறியு முணர்வும்" (3761) இதனைத் தம் கோலின்கீழ் வாழும் எல்லாவுயிர்களின் துன்பங்களையும் அறிந்து போக்கும் பொருட்டே இவர் வேண்டிப் பெற்றனர். முன் உரைத்தவை பார்க்க. அவற்றின்...அகற்றி - இவ்வாறு பெற்ற கருத்தினைத் தம் அரசாட்சியிற் கொண்டு செலுத்தினர் என்பதாம். இந்நாளின் நாகரீக உலக அரசாங்கம் என்று தம்மைச் சொல்லிக்கொண்டு பெருமிதம் பேசும்

உலகர் இதனை உய்த்துணர்ந்து தமது கீழான நிலையினை உணர்ந்து ஒழுகுவார்களாயின் உலகம் நலம் பெறும். ஒன்றும் ஒழியாவகை - உம்மை முற்றும்மை. "உள்ளத்துறு துய ரொன்றொழியா வண்ணமெல்லாம், தெள்ளுங்கழல்" (திருவாசகம்) என்றபடி. இத்தன்மை இறைவரருள் தர வருவதன்றி மனித்தராலியல்வதன்று; இதுவே இறைமைத் தன்மையாம்.

களவு சோர்லைகள் முதலான கடிந்து - இது மக்கட் கூட்டத்தின் காவல் குறித்தது; "மாநிலங்கா வலனுவான்...அறங்காப்பா னல்லனோ?" (121) என்றதும், "இனிதுண்டு தீங்கின்றி" (695) என்றதும், பிறவும் காண்க.

கழறிற்றறிவார் தாம் - பெயர் போந்த காரணத்துக்கேற்ப அரசு செய்தனர் என்பது.

மகிழும் கலப்பில் - தமிழ் மூவேந்தர்களுள் ஏனை இருவருடன் நட்புடையராய் இகலின்றி வாழ்ந்தனர். புறப்பகை யின்மை குறிப்பு. முன்னர் "முக்கோக்களாய் நீதி மனுநூ னெறிநடத்தி, அகத்தும் புறத்தும் பகையறுத்து" (3769) என்றது காண்க; கலப்பு - நட்புரிமைக் கூட்டம். பின்னர் இந்நாயனார் நம்பிகளுடன் பாண்டிநாடு சென்று மீளும் சரித வரலாறும் காண்க. 3842 முதலியவை பார்க்க. 40

3788. (வி - ரை) வழிபாட்டுத் தொண்டு புரிவார் தமக்கு - வழிபாடு செய்கின்ற வகையால் உரிய பலவாற்றாலும் தொண்டுகளைச் செய்யுமிவருக்கு; இவை முன்னர் விதிக்கப்பட்டன (3771); வழிபாடு - இச்சொல் இன்றும் மலைநாட்டின் கோயில்களில் வழக்கிலிருக்கின்றது: தமக்குக் - கேளாதொழிய என்று கூட்டுக.

ஆடற்சிலம்பின் ஒலி - இறைவரது அருட்கூத்தின் காற்சிலம்பின் ஒலி; முன்போல் - முன் (3771) கூறப்பட்டது போல; ஆடற் சிலம்பின் ஒலி - ஆடுதலால் சிலம்பின் எழும் ஒலி. பூசை ஏற்றருளிய பொருள் பற்றியதாதலின் ஒலி என்றார்.

தேன்நக்க அலர்ந்த கோன்றை - நகுதலால் தேன் அலர்ந்த; நகுதல் - விரிதல்; தேன் அலர்தல் - தேன் துளித்தல்; "தேனக்க மலர்க்கொன்றைச் செஞ்சடையார்" (2627).

மதிமயங்கி - மயங்குதற்குக் காரணம் மேற்பாட்டிற் கூறுவார். இறைவரது திருவருள் பெறவில்லை எனில், அதற்குத் தன்மேல் நின்ற குறைபாடு காரணம் என்று எண்ணித் திருந்த நினைப்பது பெரியோர் தன்மை. "உன்னுறு லொன்றுங் குறைவில்லை" (திருவா) என்பது முதலிய திருவாக்குக்கள் காண்க. 41

3789. (வி - ரை) பூசை கடிது முடித்து - "பூசை முடிவின் கண்" என முன்னர்க் கூறியமையால் அஃது சிவபூசைமுறையில் இறைவர்க்குரிய வழிபாட்டு அங்கங்களின் முடிவு என்பதும், இங்கு முடித்து என்றது அவ்வங்கங்களுள் இறைவர் பூசையின் முடிவின்மேற் சிவாகம விதிப்படி செய்ய நின்ற சண்டேசுர பூசையும் பூசை ஒடுக்கமும் முதலாகிய அங்கங்களின் நிறைவு என்பதும் ஆம்.

அடியேன் என்னோ பிழைத்தது? எனப் பொருமி - பூசையிற் பிழைபடினன்றி, இறைவர், அதனை ஏற்றலும், அதற்கடையாளமாகத் திருச்சிலம்பின் ஒலியளித்தலும் செய்தருளா திராரதலின் பூசையில் என்னால் நேர்ந்த பிழை என்னோ? என்று வருந்திப் பொருமி அழுதனர்; பொருமி - துக்கித்து; அழுது.

"ஆசை...யாது" என்று - ஆசை உடம்பு - ஆசைப்பட்டுத் தாங்கித் திரியும் இவ்வுடம்பு; ஆசையாவது இழிவுடைய வஞ்ச வினைக் கொள்கலமாகிய புலாலுடம்பை நன்றென மதித்து மயங்குதல். இனி மற்று அடையும் வேறு இன்பம் யாது? என்க - மற்று - உடம்பாற் செய்யும் பூசையினால் அருள் பெறாத இந்நிலை

யில் என்றதாம்; வேறு - பூசை செய்து சிலம்பின் ஒலி கேட்கும் இன்பத்தின் வேறாக; உடல் கொண்டு வாழ்வது சிவனைப் பூசித்து அவனருள் பெறும் தூய இன்பம் பெறும் பொருட்டேயாம் என்ற உண்மைநூல்களின் துணிபு கூறியபடி; " ஊனடைந்த உடம்பின் பிறவியே, தானடைந்த உறுதியைச் சாருமால் " என்றதும், ஆண்டுரைத்தவையும் பார்க்க.

உடைவாளைத் திருமார்பினின் நாட்ட - இறைவருக்கு ஏற்கும் பூசை செய்யப் பெறாத இவ்வீண் உடம்பு சிதைத்தொழிக்கத் தகுந்ததேயன்றித் தாங்கத் தக்கதன்று என்று துணிந்தார் என்க. உடைவாள் - உடையிற் செருகியுள்ள வாள்.

ஓசை மிகவும் இசைப்பித்தார் - மிகவும் - முன்போற் கேட்கச் செய்யும் அளவின் மிகுதியாக; இசைப்பித்தார் - இங்குக் கேட்கும்படி ஒலியை உளதாக்கினார் என்பதாம். இசைப்பித்தது இறைவர் செயல்; அதனை நாயனார் கேட்ட நிலை மேற்பாட்டிற் கூறுவார்.

உடம்பானு மினிவேறு—என்பதும் பாடம். 42

3790. ஆடற் சிலம்பி னொலிகேளா வுடைவா ளகற்றி யங்கைமலர்
கூடத் தலைமேற் குவித்தருளிக் கொண்டு விழுந்து தொழுதெழுந்து
நீடப் பாவி மொழிகின்றார் " நெடுமால் பிரம னருமறைமுன்
தேடற் கரியாய் திருவருள்முன் செய்யா தொழிந்த தேன்"னென்றார்.

(இ - ள்) ஆடல்...அகற்றி - திருக்கூத்தின் சிலம்பொலியினைக் கேட்டு உடைவாளினைப் போக்கி; அங்கைமலர்...மொழிகின்றார் - அழகிய கைமலர்களைச் சேரத் தலைமேற் கூப்பி யருளிக்கொண்டு நிலமுற விழுந்து தொழுதெழுந்து நெடிது துதித்துச் சொல்வாராகி; நெடுமால்...என்றார் - நெடிய விட்டுணுவும் பிரமதேவனும் அருமறைகளும் முன்னே தேடுதற்கு அரியவரே! முன்பு திருவருள் செய்யா தொழிந்த காரண மென்னை? என்றார்.

(வி - ரை) ஆடற் சிலம்பின் ஒலி - ஆடுதலின் எழுந்த பாதச் சிலம்பின் ஒலி. உடைவாள் - தம்மைத் துறக்கும் பொருட்டு மார்பினின் நாட்டிய உடைவாள். குவித்தருளிக் கொண்டு - கூப்பியருளியபடியே.

தேடற் கரியாய் - அரியயனும் அருமறையும் தேடியும் காண்டற் கரியவரே! சிறிய யானோ உமது பெருமையை அறிய வல்லவன் என்றவாறு.

முன் திருவருள் செய்யா தொழிந்ததேன் - என்க; நீ அறிவித்தாலன்றி உயிர்கள் அறியா; ஆதலின் நீயே அறிவித்தருளல் வேண்டும் என்றதாம். இறைவரைக் காரணம் வினவியது தமது பிழையினை அறிந்து நீக்கிக்கொள்ளும் பொருட்டு. 43

3791. என்ற பொழுதி னிறைவர்தா மெதிர்நின் றருளா தெழுமொலியான்
" மன்றி னிடைநங் கூத்தாடல் வந்து வணங்கி வன்றொண்டன்
ஒன்று முணர்வா னமைப்போற்றி யுரைசேர் பதிகம் பாடுதலால்
நின்று கேட்டு வரத்தாழ்த்தோ " மென்றா ரவரை நினைப்பிப்பார். சச

(இ - ள்) என்ற...ஒலியான் - முன் கூறியவாறு சேரர் பெருமான் கேட்ட பொழுது இறைவர் தாம் நேரே தம்முருக் காணக் காட்டியருளாது ஆகாயத்தில் எழும் அசரீரியாகிய ஒலியினாலே; மன்றினிடை...நினைப்பிப்பார் - திருவம்

பலத்தி னிடத்திலே நமது ஆனந்தக் கூத்தாடலை வன்றொண்டன் வந்து வணங்கி நம்பால் ஒன்றித்த உணர்வினாலே நம்மைத் துதித்து உரைசேரும் பதிகத்தினைப் பாடுதலால், அதனை நின்று கேட்டபடியினாலே இங்கு வரத் தாழ்த்தோம் என்று, இதன் மூலம் அவரை இவர்பால் நினைவூட்டுவாராய் அருளினார்.

(வி - ரை) எதிர்நின்றருளாதெழும் ஒலியால் - வெளிப்பட்டு முன்னின்று காட்சிப்பட் டருளாமல் ஆகாயத்தினின்றும் அசரீரியாக எழுகின்ற ஒலியினாலே செவிப் புலப்படும்படி.

மன்று - தில்லைத் திருச்சிற்றம்பலம். வந்து - எங்குஞ் சிதம்பரமாயினும் சிறப்பு வகையால் தில்லையம்பலத்தையே குறிக்கும்; யோக நிலையில் எப்போதும் எவ்விடத்தும் இடைவிடாது அகத்தினுள் கண்டு கும்பிட்டிருக்கும் பண்புடையார் ஆளுடைய நம்பிகள்; ஆனால் இங்கு வந்து போற்றி என்றதனால் புறத்திலே அண்ட நிலையில் பல பதிகளையும் சென்று கும்பிட்டுத் தில்லை என்னும் பதியில் வந்து உணர்ந்து துதித்துப் பாடினார் என்றதாம்; "குஞ்சித்த சேவடியுங் கும்பிட்டே யிருப்பர்" (சித்தி - 11 - 5); "அந்நிலைமை யிந்நிலையி னடைந்தமுறை யாலே மாய மெலா நீங்கியரன் மலரடிக்கீ ழிருப்பன், மாறாத சிவானுபவ மருவிக் கொண்டே" (ஷை - 11 - 1); "சீவன் முத்தர் சிவமே கண்டிருப்பர்" (11 - 2); மெய்யே கண்டுகொண் டிருப்பர் ஞானக் கடலமு தருந்தி னோரே" (சிவப்பிரகாசம், 98) என்பனவாதி திருவாக்குக்களிற் கூறும் பண்பு ஆளுடைய நம்பிகள் இவ்வுலகிற் சரித்த நிலையின் பண்பாகும். அந்நிலையின் வேறு பிரித்துணர வந்து என்றார்.

வன்றொண்டன் - தாமே தடுத்து வலிந்தாட்கொண்ட வரலாறும், பிறவுமாக நம்பிகளது சரிதக் குறிப்புக்களை உணர்த்த இப்பெயராற் கூறினார்.

ஒன்றும் உணர்வு - ஒன்றுபட்ட; பிரிப்பின்றி அத்துவிதமாகக் கலந்த; "ஒன்றி யிருந்து நினைமின்கள்" (தேவா - அரசு.).

உரைசேர் பதிகம் பாடுதலால் - உரையுணர் விறந்த சிவானுபவத்தில் மருவி நிற்கும் நிலையினின்றும் பிரிந்து அதனையே சொல்லால் உரைக்கும் நிலையில் நின்று பாடினார் என்பார் உரைசேர் என்றார்; இபபதிகம் நம்பிகள் திருப்பேரூரை வழிபட்டு இரண்டாம் முறை திருத்தில்லையினை அணைந்து "பேரூர் பெருமானைப் புலியூர்ச்சிற் றம்பலத்தே பெற்றா மன்றே" என்று பேரூரிற் கண்ட நிலை சிறப்பித்துப் பாடியருளிய "மடித்தாடும்" என்ற தொடக்கமுடைய திருப்பதிகம் என்பது கருதப்படும் (3269).

நின்று கேட்டு - அப்பதிகத்தினுள்ளே நின்று அதனைக் கேட்டு; நிற்றலாவது அதுவே பொருளாக அதனுள் நிலைத்து விளங்குதல்; நின்ற திருத்தாண்டகத்துள் "நின்றவாறே" என்ற கருத்து. இவ்வாறே "பண்ணி னேரு மொழியாளென் றெடுத்துப் பாடப் பயன்றுய்ப்பான், றெண்ணீ ரணிந்தார் திருக்காப்பு நீக்கத் தாழ்க்க" (1533) என்ற கருத்துக்கள் இங்கு வைத்து நினைவு கூர்தற்பாலன; நினைப்பித்தற்கு ஒரு காரணம் கூறும் அளவே இது நின்றதென்க.

அவரை நினைப்பிப்பார் - இவ்வாறு காரணங் கூறுதல் அவரை இவருக்கு அறிவுறுத்தி நினைப்பிக்கும் திருவுள்ள அருட்குறிப்பேயாம் அன்றி மற்றில்லை என்பார் நினைப்பிப்பார் என்றார். நினைப்பிப்பார் - என்றார் என்று கூட்டுக. நினைப்பிப்பார் - முற்றெச்சம்; இறைவர் திருவுள்ள மிதுவே என்று இங்கு நாயனார் உணர்ந்தனர் என்பது மேல் "என்னே! அடியார்க் கிவரருளுங் கருணை யிருந்தவாறு" என்று கூறுதலால் விளங்கும்; எங்கும் நிறைந்து எல்லாம் ஒருங்கே செய்யவல்லவர்

இறைவர் என்பது நாயனார் அறிந்தவான்றோ? ஆதலின் இவ்வுண்மையினை உணர்ந்தனர் என்க. 44

3792. "என்னே! யடியார்க் கிவரருளுங் கருணை யிருந்த வா"றென்று
பொன்னேர் சடையார் திருநடஞ்செய் புலியூர்ப் பொன்னம் பலமிறைஞ்சித்
தன்னே ரில்லா வன்றொண்டர் தமையுங் காண்ப" னெனவிரும்பி
நன்னீர் நாட்டுச் செலநயந்தார் நாமச் சேரர் கோமானார். சுரு

(இ - ள்) என்னே...என்று - இவ்விறைவர் அடியார்களுக்கு அருள் செய்யும் கருணைத் திறம் இருந்தவாறுதான் என்னே? என்று அதிசயித்து; பொன்னேர்... என விரும்பி - பொன்போன்ற சடையினையுடைய கூத்தனார் திருநடஞ் செய்கின்ற பெரும்பற்றப்புலியூரில் சென்று பொன்னம்பலத்தினை வணங்கித், தமக்கு எவரும் ஒப்பில்லாதவராகிய வன்றொண்டரையும் கண்டு வணங்குவேன் என்று விருப்பங் கொண்டு; நன்னீர்...கோமானார் - நல்ல நீர்நாடு எனப்படும் சோழ நாட்டிற்கு எழுந்தருளப் பெரிய சேர மன்னராகிய நாயனார் மனங்கொண்டனர்.

(வி - ரை) "என்னே...இருந்தவாறு" என்று - இஃது இறைவர் முன் கூறியபடி அசரீரி மொழியால் அருளிய மொழி கேட்டு அரசர் துணிந்த மெய்ம்மை.

புலியூர்ப் பொன்னம்பலம் - புலியூர் - பெரும்பற்றப்புலியூர் - சிதம்பரம்; புலியூரின்கண் உள்ள பொன்மன்றம்; பொன்னம்பலம் எங்கும் உள்ளது என்பது நூற்றுணிபு; ஆதலின் இங்கு நாயனார் காண விரும்பியது புலியூரின்கண் உள்ள அதனை என்பார் இவ்வாறு கூறினார். என்னை? அங்குத் தமது ஆடலை வணங்கி நம்பிகள் பாடியதனைக் கேட்டருளி இறைவர் இங்கு வரத் தாழ்த்தோம் என்றருளினாராதலின் அதனைச் சென்று தாமும் காண விரும்பினர் என்பதாம். நாயனார் இங்கிருந்தவாறே அங்குச் செல்லாமலே யோக நிலையில், வழிபாட்டின் முடிவில், திருச்சிலம்பொலி நாடோறும் கேட்டு வந்தாராயினும் அப் பெருமானை நாடோறும் சிலம்பொலி கேட்பித்தாராதலானும் இப்போது இவ்வருட் பெருமையினை ஒட்டிக் கண்டு வணங்க விரும்பினர் என்பதுமாம்.

தன் நேர் இல்லா வன்றொண்டர் தமையும் காண்பன் - தமையும் - அருட்கூத்தாது பொன்னம்பலத்தினைக் கண்டு வணங்குதலே யன்றி, அவரையும் என்க; தன் நேரில்லா - தமக்கு ஒப்பில்லாத; "தனக் குவமை யில்லாதான்" (குறள்) எனப்படும் இறைவரைப் போலவே அவரால் ஆட்கொள்ளப்பட்ட தோழராகிய நம்பிகளும் ஆவர் என்பது. தமது பாட்டைக் கேட்டதனாலே இறைவரை இங்கு வரத் தாழ்த்தோம் என்று சொல்லுமாறு செய்ய வல்ல பெருமை யுடைமையும் குறிப்பு. நம்பிகளை நினைப்பித்தல் இறைவரது திருவுள்ளக் குறிப்பாக (3791) நின்றதாதலின் சேரனார்பால் இந் நினைவும் உடனே போந்ததென்க.

நீர்நாடு - காவிரி நாடு - சோழநாடு. நாமம் - பெருமை; புகழ் என்றலுமாம். 45

3793. பொன்னார் மௌலிச் சேரலனார் போற்று மமைச்சர்க் கஃதியம்பி
நன்னாட் கொண்டு பெரும்பயண மெழுக வென்று நலஞ்சாற்ற,
மின்னா ரயில்வேற் குலமறவர் வென்றி நிலவுஞ் சிலைவீரர்
அந்நாட் டுள்ளா ரடையநிரந் தணைந்தார் வஞ்சி யகநகர்வாய். சுசு

(இ - ள்) பொன்னார்...இயம்பி - பொன்னாற் செய்த மகுடந் தாங்கிய சேரனார் போற்றும் அமைச்சர்களுக்கு அவ் விருப்பத்தினைச் சொல்லி; நன்னாட்

கொண்டு...நலம் சாற்ற - நல்ல நாளினை மேற்கொண்டு பயணம் புறப்படச் செய்க என்று நன்மையான ஆணையினைச் செய்ய ; மின்னார்...அகநகர்வாய் - ஒளியுடைய கூரிய வேல்களை ஏந்திய வீரர்களும், வெற்றி பொருந்திய வில் வீரர்களும், மற்றும் அந்நாட்டுள்ளார்களும் நெருங்க வஞ்சியின் அகநகரிலே கூடி அணைந்தனர்.

(வி - ரை) போற்றும் அமைச்சர் - தமது அரச காரியங்களை வழுவாமற் காக்கும் உரிமைப்பாடுடைய அமைச்சர் ; போற்றுதல் - காத்தல் ; இங்கு அரசியல் நெறியைக் காத்தலைக் குறித்தது. அரசர் இங்குத் தமது நாட்டினைக் கடந்து பிறிதொரு அரசரது (சோழர்) நாடு புகுகின்றமையின் அரசாங்க முறையில் அதற்காவனவும், அரசரது பயணத்துக்காவனவும் அமைச்சர்களே தெரிந்து செய்தற்குரியார் ; அன்றியும், அரசர் அவ்வாறு பிற அரசரது நாடு சென்று மீண்டும் வரும்வரையில் இடைபட்ட காலத்தில் இந் நாட்டின் அரசியற் காவற் காரியம் நடைபெறுதற்கு வேண்டுவனவும் அமைச்சர்களே தெரிந்து செய்தற்குரியார் ; இவற்றை யெல்லாம் மனங்கொண்டு அரசர் தாம் விரும்பிய நிலையினை அமைச்சர்க் கியம்பினர் என்பதாம். ஆசிரியரும் ஓர் அமைச்சராதலின் இத்திறம் தெரித்துச் செப்பினர் என்பதுமாம்.

நன்னாட்கொண்டு பெரும் பயணம் எழுக ! என்று நலம் சாற்ற - பயணங்கள் நன்னாளில் தொடங்கத்தக்கன என்பது நமது நாட்டில் ஆன்றோர்களின் பண்டை வழக்கு ; அவ் வழக்கு நற்பயனும் தந்தது ; ஆயின் இந்நாளில் மக்கள் அதனைக் கை நழுவ விடுவாராயினர் ; பயனும் அற்றே யாய நழுவி வருதல் காணலாம் ; பெரும் பயணம் - நீண்ட தூரமும் நீண்ட நாட்களும் கொண்ட பயணம். இறைவழிபாடும் குருவழிபாடுமாகக் குறித்த பயனும் பெரிதென்க. வினைப் பயணங்கள் எவையும் சிறுமையுடையனவேயாம் என்பது.

நலம் சாற்ற - நல்ல ஆணை செய்ய.

வேல் - மறவர் - சிலை வீரர் - வேல் வீரர்களும் வில் வீரர்களும் ; தலமறவர் - தலம் - சிறப்புக் குறித்தது ; குலமகன் - குலமகள் - குலநகர் என்பன போல ; தலம் மரபு குறித்த தெனக் கொண்டு மறவர் மரபினர் என்றுரைத்தலுமாம் ; "குல வேடர்" (2916), குலத்தளவில மறவர என்பதேயன்றிக் குணத்தால் அறவரேயாம் என்பதும் குறிப்பு ; என்னை ? இவர்கள் பின்பு தமது உடல் வீழ்த்துச் சேரனாரைச் சாரக் கயிலை சென்று சேவகமேற்கும் கூட்டத்தவராதலின் எனக. நாட்டுள்ளார் - நாட்டுக் குடிமக்களுட் டலைசிறந்தோர் ; மறவரும், வீரரும், உள்ளாரும் என உம்மை விரிக்க. அந்நாட்டுள்ள மறவரும் வீரரும் என்றலுமாம்.

வஞ்சி - கொடுங் கோளூர் ; வஞ்சி என்பது பற்றி இந்நாளில் ஆராய்ச்சியிற் புலவர்க்குட் பெரும் இகல் விளைந்துள்ளது. ஆசிரியர் கருத்து இதனுல் விளங்கும் ; சிலப்பதிகாரத்துள்ளும் வஞ்சிக் காண்டம் என்பதும் இதனை வலியுறுத்தும். இங்ஙனமிருப்பவும் பூசல் விளைந்தமை வருந்தத் தக்கது.

அமைச்சர் தமக்கியம்பி—அமைச்சர்க் கீதியம்பி—என்பனவும் பாடங்கள். 46

3794. இட்ட நன்னா ளோரையினி லிறைவர் திருவஞ் சைக்களத்து
மட்டு விரிபூங் கொன்றையினார் தம்மை வலங்கொண் டிறைஞ்சிப் போயிப்
பட்ட நுதல்வெங் களியானைப் பிடர்மேற் கொண்டு பனிமதியந்
தொட்ட கொடிமா ளிகைமூதூர் கடந்தா ருதியர் தோன்றலார். சஎ

(இ - ள்) இட்ட நன்னாள் ஓரையினில் - குறித்த நல்ல நாளில் நல்ல வேளையிலே ; இறைவர்...போய் - தமது இறைவராகிய திருவஞ்சைக் களத்தில் எழுந்

தருளி யுள்ள மணமுடன் விரியும் கொன்றைப் பூக்களைச் சூடிய பெருமானை வலமாகச் சுற்றி வணங்கிப் போய்; பட்டம்...மேற் கொண்டு - பட்டத்தை யணிந்த நெற்றியினையுடைய யானையின் கழுத்தினை ஏறி; பனிமதியம்...தோன்றலார் - குளிர்ந்த சந்திரன் தீண்டும் கொடிகளையுடைய மாளிகைகள் நிறைந்த பழய ஊராகிய கொடுங்கோளூரினைச் சேரர்பெருமானார் கடந்து சென்றனர்.

(வி - ரை) இட்ட நன்னாள் ஓரையினில் - இட்ட - குறித்த; கணிதநூல் வல்லோர் அளவிட்டுச் சொல்லிய இடமாகிய; இறைவர்க்குகந்த என்றுரைக்கவும் நின்றது. இறைவர்க்கு உவப்பாவது இன்ன நன்னாட் கொண்டு இன்ன நற்செயல் செய்க என்று திருவுளங் கொண்டு விதித்தல்; "ஆதிரை நாளுகந் தானும்" (தேவா); நல்ல என்பதனை ஓரையினுடனும் கூட்டுக. ஓரை - வேளை; முகூர்த்தம் - இலக்கினம் என்பர். பயணத்துக்கு இட்ட நாட்களைப் பற்றி "ஒன்பதொ டொன்றொ டேழு பதினெட்டொ டாறு முடனாய நாள்க ளவைதா, மன்பொடு நல்ல" (தேவா) என்று ஆளுடைய பிள்ளையார் அருளிய திருவாக்கு ஈண்டு நினைவு கூர்தற்பாலது; சோதிட நூற்படி கணித்துக் காரியஞ் செய்யும் நிலைகள் இன்றும் மலைநாட்டு ஒழுக்கத்தில் மிக்கிருப்பதனைக் காணலாம். கொன்றை - இங்குத் தலமரமுமாம்.

இறைவர் - தமது மரபின் ஆன்ம நாயகராகக் கொண்டு வழிபட்ட ஆளுடைய பெருமான் என்பது. இவ்வாறு பயணம் முதலாகிய சிறப்புக் காரியங்கள் செய்யப் புகுமுன் தம்மை உடைய இறைவரை வணங்கிப் புகுதல் நல்ல ஒழுக்கம்.

யானைப் பிடர்மேற் கொண்டு - இது மலை நாட்டு அரசர் வழக்கு. "யானை யெருத்தம் பொலிய" (நாலடி).

மதியம் தோட்டகோடி - சந்திர மண்டலம் வரை உயரத் தூக்கிய கொடிகள் என்று அவற்றின் உயர்ச்சி குறித்தது. சந்திர மண்டலத்தைத் தொட்ட என்றும், சந்திரனால் தொடப்பட்ட என்றும் உரைக்க நின்றது. தோட்ட - தோண்டிய - என்று கொண்டு கொடி நிரையினை ஊடுருவிச் சென்ற என்ற குறிப்புமாம்; "வெண் மதியஞ் சோலைதொறு நுழைந்து" (1906) என்ற கருத்துக் காண்க.

மூதூர் - அரசர் தலைநகராகிய கொடுங்கோளூர்; பழமையாவது - "திரு வஞ்சைக் களமு நிலவிச் சேரர்குலக், கோவீற் றிருந்து முறைபுரியுங் குலக்கோ மூதூர்" (3748) என முன்னர்க் கூறப்பட்ட பெருமை; அரசுகள் திருவாக்கிற் "கொடுங்கோளூ ரஞ்சைக்களம்" என்று போற்றப்பட்ட பழமையும் காண். 47

3795. யானை யணிகள் பரந்துவழி யெங்கு நிரந்து செல்லுவன
மான மலைநாட் டினின்மலிந்த மலைக ளுடன்போ துவபோன்ற;
சேனை வீரர் புடைபரந்து செல்வ தங்கண் மலைசூழ்ந்த
கான மடைய வுடன்படர்வ போலுங் காட்சி மேவினதால். சஅ

(இ - ள்) யானை...செல்லுவன - அணிவகுத்த யானைக் கூட்டங்கள் பரவி வழியெங்கும் செல்லுவன; மான...போதுவபோன்ற - பெரிய *மலைநாட்டில் மலிந்த பொருள்களாகிய மலைகள் தமது மன்னருடனே செல்கின்றன போன்றன; சேனை...செல்வது - சேனை வீரர்கள் பக்கங்களிற் பரவிச் செல்லும் நிலை; அங்கண் ...காட்சி மேவினது - அந்நாட்டில் அம்மலைகளைச் சூழ்ந்த காடுகளெல்லாம் உடனே போகின்றன என்பது போன்ற காட்சி பொருந்தியது; ஆல் - அசை.

(வி - ரை) மலைகள் போதுவ - கானம் படர்வ - அரசரது பயணத்துடன் அணிவகுத்து யானைகள் செல்வது மலைகள் செல்வன போலவும், படை வீரர்கள்

செல்வது மலை சூழ்ந்த காடு செல்வது போலவும் விளங்கின என்று உவமை கூறு முகத்தால் அரசரது பயணச் சிறப்பும், படைச்சிறப்பும் உடன் கூறியவாறு. வினையும் உருவும்பற்றி வந்த தொடர் உவமம். யானை அணிகளைச் சூழ்ந்து படைவீரர்களின் அணி அமைப்பு மலையைச் சூழ்ந்த கானம் போல என்பது உவமப்பொருளிரண் டற்கும் தொடர்புபடுத்தியவாறு. கைமலை என்பது யானைக்கு வழங்குவதும் காண்க.

மலைகள் - கானம் - யானைகள் மலைகளைப் போன்றன; வீரர்படை அந்த மலைகளைச் சூழ்ந்த கானம் போன்றன என்று படைகளின் சிறப்பும் உடன் கூறியவாறு.

மலைகள் உடன் போதுவ - கானம் உடன் படர்வ - இவ்வரசர் யாவும் யாருங் கழறினவற்றை யறிந்து அவற்றின் உளமன்னிய துயர மொன்று மொழியாவகை யகற்றிக் காத்தலின் உயிர்வருக்கங்களுள் அறிவு பெற்றவை எல்லாம் அவர்பால் அன்பு கொண்டு உடன்போதுதல் சாலும்; ஆயின் அறிவுமிக்கில்லாத மலையும் அறிவு முதிர்ச்சியில்லாத கானமும் உடன் போதுவ என்பதென்னை? எனின், இதனால் அவரது குடைநிழற் காவலின் சிறப்புக் குறித்தபடி என்க. அவரது அறத்தின் வழி நின்ற அரசகாவலின் ஆணை மலையினும் அவை சூழ்ந்த கானத்தினும் சென்று நிகழ்ந்தது என்பதும் குறிப்பு. அந்நாட்டு மலைகள் நெருங்கிய கானங்களாற் சூழப்பட் டன, என்று நாட்டு வளமு முடன்கூறியவாறு; "மலைசூழ்ந்த" என்ற கருத்துமிது.

யானைப் படையும் சேனை வீரரும் அரசரை வழியனுப்ப உடன் சென்றனர் என்பதாம்.

இப்பாட்டுத் தற்குறிப்பேற்ற அணி.

அடைய - முழுதும் - எல்லாம்.

மலைகள் - கானம் - மலைநாட்டில் பரசுராமர் தமது வரத்தினால் கடலைப் புடைபெயர்த்து, நிலங்கண்டு, நாடாக்கி வயல்கள் திருத்துமுன், இருந்தவை குறிஞ்சியும் முல்லையும் நெய்தலுமேயாம். இங்கு அவற்றுள் முன்னைய இரண்டன் பொருளுங் கூறி, ஏனை நெய்தலினை மேல்வரும் பாட்டிற் கூறுதல் காண்க.

போவன—என்பதும் பாடம். 48

3796. புரவித் திரள்க ளாயோகப் பொலிவி லசைவிற் போதுவன
அரவச் சேனைக் கடற்றரங்க மடுத்து மேன்மே லடர்வனபோல்
விரவிப் பரந்து சென்றனவான்; மிசையு மவனு மொன்றாக
நிரவிப் பரந்த நெடுஞ்சேனை நேமி நெளியச் சென்றனவால். சக

(இ - ள்) புரவி...போதுவன - குதிரைப் பந்திகள் கரையில் சேரும் விளக்கம் போல அசைவுடன் செல்பவை; அரவச் சேனை...சென்றனவால் - சத்திக்கின்ற சேனையாகிய கடலின் அலைகள் மேன்மேல் வந்து தாக்குவன போலப் பொருந்திப் பரவிச் சென்றன; மிசையும்...சென்றனவால் - மேடும் பள்ளமும் ஒன்றாக அவ்வாறு நிரல்படப் பரவிய பெருஞ்சேனை பூமி நெளியும்படி சென்றன.

(வி - ரை) ஆயோகப் பொலிவு - கரையிற் சேர்வன போன்ற காட்சி; ஆயோகம் - கரை.

ஆயோகப் பொலிவின் அசைவில் - கரை சேர்கின்ற தோற்றம் போன்ற அசைவுடனே.

சேனைக் கடற்றரங்கம் - சேனையின் பரப்புக் கடல் போன்றதென்றும், அதன் அலைகள் கரையிற் சேரும்போது உயர்ந்து பரவி மேன்மேல் நிரவிச் செல்வன

போலக் குதிரைப் பந்திகள் மேன்மேற் பரந்து தலை நிமிர்ந்து பரந்து சென்றன என்றும் உவமிக்கப்பட்டன. இக்காட்சி கடற்கரையில் அலைகள் மேன்மேல் உயர்ந்து மோதிப் பரவும் நிலையினை நேரிற் கண்டோர்க்கு நன்கு புலப்படும்.

அடர்வனபோற் - போதுவன(வாகிய)-புரவித்திரள் - சென்றன - என்று கூட்டி முடிக்க.

இவ்வாறன்றி ஆயோகம் என்று பாடங்கொண்டு பாம்பின் கூட்டங்கள் என்றுரைப்பர் சுப்பராய நாயகர்; திரள்களாய் யோகப் பொலிவு - என்று பிரித்து யோகப் பொலிவு - நற்சுழி என்றுரைப்பது இராமநாதச் செட்டியார் குறிப்புரை.

மிசை - மேடு; அவல் - பள்ளம். "அங் கொருசூழ லவலோடு மடுப்பது கண்டு" (1058). "இரலை தெறிக்கப் பால் அவல் அடைய" (அகம்).

மிசையும் அவலு மொன்றாக நிரவி - மேடும் பள்ளமும் ஒரு தன்மையனவாகவே தோன்றும்படி; ஒருதன்மைப்படுத்து என்றலுமாம்; நிரவி - நியமித்துப் பரப்பி; மலைநாட்டு வழியாதலின் மேடுபள்ளங்களுள்ளன என்பதாம். இந்நாளில் (tanks) இடாங்கிகள் என்னும் படைக் கருவிகளால் முன்னர் வழிநிரவிப் படைகள் செல்லும் நிலையைக் கருதுக.

நேமி நெளிய - நேமி - பூமி; நெளிதல் - பக்குவிட்டு இளகி வளைதல்.

நெடுஞ் சேனை - சேனை வீரர்களின் கூட்டம் - வரிசை.

ஆல் - இரண்டும் அசை.

விரவிப் படர்ந்து - நிரவிப் படர்ந்த—என்பனவும் பாடங்கள். 49

3797. அந்நாட் டெல்லை கடந்தணைய வமைச்சர்க் கெல்லாம் விடையருளி,
மின்னார் மணிப்பூண் மன்னவனார் வேண்டு வாரை யுடன்கொண்டு,
கொன்னா ரயில்வேன் மறவர்பயில் கொங்கர் நாடு கடந்தருளிப்
பொன்னாட் டவரு மணைந்தாடும் பொன்னி நீர்நாட் டிடைப்போவார், 50

3798. சென்ற திசையிற் சிவனடியார் சிறப்பி னோடு மெதிர்கொள்ளக்
குன்றுங் கானு முடைக்குறும்ப ரிடங்க டோறுங் குறைவறுப்பத்
துன்று முரம்புங் கான்யாறுந் துறுகற் சுரமும் பலகடந்து
வென்றி விடையா ரிடம்பலவு மேவிப் பணிந்து செல்கின்றார், 51

3799. பொருவில் பொன்னித் திருநதியின் கரைவந் தெய்திப் புனிதநீர்
மருவுந் தீர்த்த மகிழ்ந்தாடி மருங்கு வடபாற கரையேறிக்
திருவிற் பொலியுந் திருப்புலியூர்ச் செம்பொன் மன்று ணடம்போற்ற
உருகு மனத்தி னுடன்சென்று ரோழியா வன்பின் வழிவந்தார். 52

3797. (இ - ள்) அந்நாட்டெல்லை...அருளி - அந்த மலை நாட்டின் எல்லை கடந்து செல்ல அமைச்சர்களுக்கெல்லாம் விடை கொடுத்தருளி; மின்னார்...உடன் கொண்டு - ஒளி பொருந்திய மணியணிகளையுடைய சேரர் பெருமானார் தமது பயணத்தின் உதவிகளின் பொருட்டு வேண்டும் பரிசனங்களை மட்டில் உடன் அழைத்துக் கொண்டு; கொன்னார்...கடந்தருளி - அச்சமூட்டும் கூர்மையுடைய வேலேந்திய மறவர்கள் வாழ்கின்ற கொங்கு நாட்டினைக் கடந்து சென்றருளி; பொன்னாட்டவரும்...போவார் - தேவ வுலகத்தவர்களும் வந்து படிந்து ஆடும் காவிரி நீரின் வளத்தினையுடைய (சோழ)நாட்டினிடைப் போவாராகி, 50

3798. (இ - ள்) சென்ற...எதிர்கொள்ள - போயின திசையில் எங்கும் சிவனடியார்கள் வந்து எதிர்கொள்ள ; குன்றும்...குறைவறுப்ப - குன்றுகளையும் காடுகளையும் தம் இடமாகக் கொண்டு ஆளும் குறுநில மன்னர்கள் அவ்வவரிடங்கள் தோறும் தமக்கு வேண்டும் குறைகளை யெல்லாம் நிரப்பி உபசரிக்க ; துன்றும்... பல கடந்து - பரல்கள் நெருங்கிய பாலை நிலங்களும் காட்டாறுகளும் துன்பம் தரும் கற்கள் நிரம்பிய கல் அதர்களும் ஆகிய இவை பலவற்றையும் கடந்து சென்று ; வென்றி...செல்கின்றார் - வெற்றி பொருந்திய இடபத்தையுடைய இறைவர் வெளிப்பட எழுந்தருளிய இடங்கள் பலவற்றையும் சென்று பணிந்து போகின்றாராய், ௬௪

3799. (இ - ள்) பொருவில்...மகிழ்ந்தாடி - ஒப்பற்ற காவிரித் திருநதியின் தென்கரையில் வந்து சேர்ந்து பக்கத்தில் வடபாலின் கரையினில் ஏறித் தூய நீர் பொருந்திய அத்தீர்த்தத்தில் மகிழ்ந்து குளித்து ; ஒழியா அன்பின் வழி வந்தார் - நீங்காத அன்பின் வழியிலே வந்தவராகிய அம் மன்னவனார் ; திருப்புலியூர்... உடன் சென்றார் - திருப்பெரும்பற்றப்புலியூரில் செம்பொன்னம்பலத்தில் ஆடுகின்ற திருக்கூத்தினைப் போற்றும் பொருட்டு உருகுகின்ற மனத்தினுடனே சென்றருளினர். ௬௨

இம்மூன்று பாட்டுக்களும் தொடர்ந்து ஒருமுடிபு கொண்டன.

3797. (வி - ரை) அந்நாட்டு. விடையருளி - சேனையும் அமைச்சரும் தமது நாட்டின் எல்லைவரை வழியனுப்ப உடன் வந்தனராக, அவ்வெல்லை கடந்தபின் வேற்று நாட்டினுள் அவர் உடன்வருதல் தகாமையினாலும், வேண்டப்படாமையாலும் அங்கு அவர்களுக்கு விடைகொடுத்தனர் என்பதாம்.

வேண்டுவார் - தமது மெய்காவலுக்கும், பணிவிடைகளுக்கும் இன்றியமையாது வேண்டப்படுவார் ; வேண்டுவார் - வேண்டப்படுவார். படுவிகுதி தொக்கு வந்த செயப்பாட்டு வினைப்பெயர்.

மறவர் - மறம் - வல்லமை ; இங்குச் சாதிப் பெயரா யன்றி வலிமையுடையோர் என்ற காரணப் பெயராய் நின்றது ; மறம் - அறத்தின் மாறுபட்டது என்ற குறிப்புடனும் நின்றது ; “கொங்கே புகினுங் கூறைகொண் டாறலைப் பாரிலை” (தேவா – நம்பி - அவிநாசி) ; முன், “மின்னு ரயில்வேற் தல மறவர்” (3793) என்றார். இங்குக் “கோன்னு ரயில்வேல்” என்ற குறிப்புமது. இந்நாளினும் இந்நாடு கொலை கொள்ளையாதி கொடுந்தொழில் பலவற்றுக்கும் மிகுதியும் நிலைக்களமாயிருப்பதும் காணப்படும்.

கொங்கர் - ஒருவகைச் சிற்றரச மரபினர். இவர்களால் ஆளப்பட்டமையின் இந்நாடு கொங்குநாடு எனப்பட்டது. கொங்கர்நாடு - சோழர் நாடு - சோழ நாடு என்பது போலக் கொங்கர்நாடு கொங்க நாடு என வழங்குவது ; இந்நாட்டின் அரசர், வடக்கில் சோழர்நாட்டினரசர்க்கும், தெற்கிலும் மேற்கிலும் சேரநாட்டினரசர்க்கும் உட்படாமல் தனி அரசாட்சி செய்து வந்தனர் என்பது நாட்டுச் சரித வரலாறு ; இந்நாட்டின் நாற்புற எல்லை அமைப்புக்களும், சூழ்ந்த குன்றுகளும், நில அமைப்பும் இவர்களது தனி யரசுக்குச் சாதகமா யிருந்ததென்பர் ; சில காலங்களில் இவர்கள் சேர சோழர்களின் ஆட்சிக்குட்பட்டுத் திறை செலுத்தியும், அம்மரபினர்களால் இந்நாடு ஆளப்பட்டும், வந்ததென்பதும் சரிதத்தால் அறிகின்றோம். சேரமான் பெருமாள் நாயனார் அரசியற் காலத்தில் இவர்கள் தனியாட்சி செய்தனர் என்பது இதனாற் கருதப்படும். “அந்நாட் டெல்லை” என்றும், “மறவர் பயில் கொங்கர் நாடு” என்றும் கூறியது காண்க.

**பொன்னாட்டவர்** - தேவ வுலகத்தவர்கள்; தேவர்கள்; அவர்கள் பொன்னி அணைந்தாடுதல் காவிரிக்கரையில் தேவர்கள் பலரும் போந்து தவஞ் செய்து தாபித்து வழிபட்ட சிவன்பதிகள் பலவற்றாலும் அறியலாம். மயேந்திரப்பள்ளி, திருப்பிரமபுரம், திருச்சக்கரப்பள்ளி, திருக்கண்ணார் கோயில், திருப்பருதி நியமம், திருநள்ளாறு முதலியவற்றின் வரலாறுகள் காண்க; "புவனியிற் போய்ப்பிற வாமையி னாளும் போக்குகின் றோமவ மேயிந்தப் பூமி, சிவனுய்யக் கொள்கின்ற வாறு" (திருவா) என்ற திருவாக்கின் கருத்தும் காண்க.

**பொன்னாட்டவரும் - அணைந்து - ஆடும் பொன்னி** - தேவருலகப் பொன்னினும் மிக்கது இந் நன்னீர்ப் பொன் என்றது குறிப்பு; முன்னையது வினையை ஆக்கிப் பிறப்பிற் கேதுவாகும்; இஃது அவ்வாறன்றி வினையைக் கழுவிப் பிறவியைப் போக்கும் என்பதாம்.

**பொன்னி நீர் நாடு** - பொன்னி நீரினால் வளம் செய்யப்பெறும் சோழ நாடு.

**போவார்** - போவாராய்; முற்றெச்சம்; போவார் - செல்கின்றார் - (3798) எய்தி - ஏறிச் சென்றார் (3799) என்று மேல் வரும் பாட்டுக்களுடன் கூட்டி முடித்துக்கொள்க.

**கொங்கு நாடு**—என்பதும் பாடம். 50

3798. (வி - ரை) **சென்ற...எதிர் கொள்ள** - **சென்றதிசை** - "புலியூர்ப் பொன்னம்பலம் இறைஞ்சி - வன்றொண்டரையும் காண்பன்" (3792) என்று விரும்பி அத்திசையினை நோக்கியே எழுந்தருளினாராதலின் சென்ற திசை என்று ஒருமையிற் கூறினார்.

**சிவனடியார்...எதிர்கொள்ள** - மன்னர் என்ற நிலையினன்றிப் போடியார் எனக் கண்டு சிவனடியார் சிறப்பினோடும் எதிர்கொள்ள என்க.

**துறும்பர்** - குறு நில ஆட்சியுடைய சிறு மன்னர்கள். **துறும்பு** - ஆறலைத்தல் முதலியவை எனக்கொண்டு, வேடர்கள் என்பாருமுண்டு.

**குன்றும் கானும் உடைக் குறும்பர்** - குன்றுகளையும் கானங்களையும் தமக்கு உரிய வாழ்விடமாகக் கொண்டு அங்கங்கும் ஆட்சி புரியும் அவ்வத் தலைவர்கள்; பொத்தப்பி நாட்டில் உடுப்பூரில் வேடர் தலைவனான நாகனது தலைமையினை "உங்கள் வரையாட்சி" என்பதும், அவ்வாறு வரும் பிறவும் காண்க; உடை - இவ்விடங்களைத் தம் உடைமையாக் கொண்டவர்; வேறு அரசர் முதலிய எவருடைய ஆட்சியும் செயலும் இங்குச் செல்லா என்பது; உருஷியா நாட்டு மலைகளும், தென் ஆப்பிரிக்கா நாட்டுக் காடுகளும், பிறவும் அங்கங்கு வாழும் தலைவர்க்கு ஒப்பற்ற அரண்களாய் விளங்குதல் இந்நாட் பெரும்போர்களிலும் கண்ட உண்மை; **குறும்பர்** - குறுநிலங்களாகிய தமது எல்லை யளவில் அமைவர்; **குறும்பு** - இவர்களது தொழில்களாகிய ஆறலைத்தல் அயற்புலங் கவர்தல் முதலிய சிறு குற்றங்கள் என்ற குறிப்பும் பெறக்கூறிய கவிநயம் கண்டுகொள்க. "ஆறலைத் துண்ணும் வேட ரயற்புலங் கவர்ந்து கொண்ட" (655).

**இடங்கள் தோறும்** - இத்தகைய இடங்கள் பற்பலவற்றையும் இடையிற் கடந்து சென்ற நிலை குறித்தது:

**குறைவறுப்ப** - பயண உதவிக்கு வேண்டிய பொருள்களாலும் செயல்களாலும் குறைவு நேராமற் செய்ய; "பாண்டிமா தேவி யார்மெய்க் குலச்சிறையார் குறை வறுத்துப் போற்றிச் செல்ல" (2789).

துன்று முரம்பு - துன்றுதல் - செறிதல் ; இங்குப் பரல் செறிதல் குறித்தது ; முரம்பு - பாலை நிலம் ; மேட்டு நிலங்கள் என்றலுமாம் ; துறு கற்சுரம் - துறு - செல்லுதற்கியலாதபடி வருத்தம் விளைக்கும் ; கற்சுரம் - கற்கள் மிகுதியாக உடைய காடுகள். கல்லாங்காடு என்பர் ; பல - இவை பற்பலவும் இடையிட்டிருந்தன என்பது.

வென்றி விடையார் இடம்பலவும் மேவி - இப்பதிகள் நாயனார் செல்லும் வழியில் இடையிட்டவை ; இவை ஆளுடைய பிள்ளையார் - ஆளுடைய அரசுகள் - ஆளுடைய நம்பிகள் சரிதங்களால் அறியக் கிடத்தலின் இங்கு விரித்துக் கூறாதமைந்தார் ; திருப்பைஞ்ஞீலியி னின்றும் ஆளுடைய பிள்ளையாரும், திருவீங்கோய் மலையினின்றும் ஆளுடைய நம்பிகளும் காவிரியைக் கடந்து அதன் தென்கரையாங் கொங்கினிடை எழுந்தருளினர். இங்குக் கூறிய இடம்பல என்றவை பொன்னித் தென் கரையிற் சாரும் அளவும் கொங்கு நாட்டில் உள்ள திருக்கொடுமுடி - திருக் கருவூ ரானிலை - முதலாயின என்பது கருதப்படும். காவிரித் தென்கரை சேர்ந்து வடகரை ஏறிச் சென்ற நிலைகளை மேல் வரும் பாட்டிற் கூறுவார்.

பணிந்து செல்கின்றார் - தில்லையினைக் குறித்துச் சென்றாராயினும் இடைப் பட்ட பதிகளிலும் வணங்கிச் செல்லும் மரபு பற்றி வணங்கினர் ; செல்கின்றார் - நிகழ்காலம், வழிச் செலவு ஆர்வமேலீட்டினால் இடையீடின்றி நிகழ்ந்து செல்லும் நிலை குறித்தது. 51

3799. (வி - ரை) பொன்னித் திருநதியின் கரைவந்தெய்தி - இது சோழ நாட்டின் காவிரித் தென்கரை ; மருங்கு வடபாற் கரை ஏறி என்றதனால் நாயனார் காவிரியின் தென்கரை வழியே சென்று தில்லையின் அணித்தாக அதனைக் கடந்து வடகரை ஏறினர் என்பது கருதப்படும்.

புனித நீர் மருவும் தீர்த்தம் - என்றதனால், நீர் என்பவை யெல்லாம் தீர்த்த மாகா; அவற்றுள் இறை நிறைவுடைய திருமேனியாக எண்ணுதலால் புறமும் உள்ளும் புனிதம் செய்வனவே தீர்த்தம் எனப்படும் என்றறிவித்த நிலை கண்டுகொள்க.

புலியூர்ச் செம்பொன் மன்றுள் நடம்போற்ற - இந் நாயனார் நித்தமும் நடம் போற்றிச் சிலம்பொலி கேட்பவராதலின் இங்கு அந்நிலைப புலியூர் மன்றினுள்ளே கண்டு போற்ற வந்தனர் ; இடத்தின் வேறுபாடே யன்றி மற்றில்லை என்பதாம்.

ஒழியா அன்பின் வழி வந்தார் - வழி - இடையறாத அன்பினாலே இத்துணை தூரமும் வழி நடந்து என்றும், ஒழியா அன்பின் வழி - இடையறாப் பேரன்பு பூண்ட வழி - மரபு பிறழாது என்றும் உரைக்க நின்றது

திருவிற் பொலியும் திருப்புலியூர் - "உலகுக் கெல்லாம், திருவுடை யந்தணர் வாழ்கின்ற தில்லை" (தேவா - அரசு ), "செல்வர் வாழ்தில்லை" (தேவா - பிள்) ; என்பவை முதலியன காண்க ; திரு - சிவச் செல்வம் ;

மருங்கு வடபாற்கரை ஏறி - நாயனார் சென்ற வழி, கொடுங்கோளூரினின்றும் வடகிழக்கு நோக்கிச் செல்லும் கற்சாலைவழியே பொள்ளாச்சி, தாராபுரம், கரூர், வழியாகக் காவிரித் தென்கரையில் திருச்சிராப்பள்ளியை அடைந்து, அங்குநின்றும் காவிரியைக் கடந்து லாலுகுடி - திருப்பழுவூர், இப்போது அறியப்படும் கங்கை கொண்ட சோழபுரம் வழியாய் வடக்கும் கிழக்குமாகச் செல்லும் சாலை என்பது கருதப்படும். கொள்ளிடத்தைக் கடந்தேறி என்னாது காவிரியைக் கடந்து என்ற தனாலும், இதுவே தூரத்தாற் சுருக்கமாகிய வழியாதலாலும் இவ்வாறு கருதப் பட்டது. 52

3800. வந்து தில்லை மூதூரி னெல்லை வணங்கி மகிழ்ச்சியினால்
அந்த ணாளர் தொண்டர்குழா மணைந்த போதி லெதிர்வணங்கிச்
சந்த விரைப்பூந் திருவீதி யிறைஞ்சித் தலைமேற் காமுகிழ்ப்பச்
சிந்தை மகிழ வெழுநிலைக்கோ புரத்தை யணைந்தார் சேரலனார் ௫௩

(இ - ள்) வந்து...வணங்கி - முன் கூறியவாறு அன்பின் வழியே வந்து தில்லையாகிய பழம்பதியின் எல்லையினைச் சேர்ந்து அதனை வணங்கி ; மகிழ்ச்சியினால்...எதிர் வணங்கி - மகிழ்ச்சியினாலே எதிர்கொள்ளும்பொருட்டுத் தில்லைவாழந் தணர்களும் திருத்தொண்டர் கூட்டங்களும் வந்து அணைந்த போதில் அவர்களை எதிர் பணிந்து ; சந்த...இறைஞ்சி - திருநகரத்தினுள்ளே புகுந்து அழகிய மண முடைய பூக்களால் அணி செய்யப்பெற்ற திருவீதியினைப் பணிந்து ; தலை மேல்...மகிழ - தலையின் மேலே கைகள் கூட மனம் களிப்ப ; சேரலனார் - சேரமான் பெருமாள் ; எழுநிலை...அணைந்தார் - எழுநிலைக் கோபுரத்தை அணைந்தருளினர்.

(வி - ரை) எல்லை - திருத்தில்லையின் நாற்புறமும் காத தூரத்தில் உள்ள திரு எல்லை என்னும் சிறப்பாகிய அமைப்பு. இதுபற்றி முன் உரைத்தவை பார்க்க.

அந்தணாளர்...எதிர் வணங்கி - அந்தணாளர் - தில்லைவாழந்தணர்கள் ; இவர்களுக்குரிய தனிச் சிறப்புப் பற்றித் தொண்டர்குழாத்தின் முன்வைக்கப்பட்டனர். அணைந்த போதில் - அரசரை எதிர்கொள்ளும் பொருட்டு என்பது குறிப்பெச்சம். எதிர் வணங்கி - என்றதனால் அந்தணர்கள் தொண்டர்கள் வணங்கா முன் என்பது பெறப்பட்டது. 244 - 1484 - 2405 - முதலியவை பார்க்க.

திருவீதி - தில்லையின் திருவீதிச் சிறப்புப்பற்றி முன் உரைத்தவை யெல்லாங் கொள்க ; "மாதவங்க ணல்குந் திருவீதி நான்குந் தொழுது" (2053) ; "பொய்ப் பிறவிப் பிணியோட்டுந் திருவீதி" (1444). 53

3801. நிலவும் பெருமை யெழுநிலைக்கோ புரத்தின் முன்னர் நிலத்திறைஞ்சி
மலருங் கண்ணீர்த் துளிததும்பப் புகுந்து மணிமா ளிகைவலங்கொண்
டுலகு விளக்குந் திருப்பேரம் பலத்தை வணங்கி யுள்ளணைந்தார்
அலகி லண்ட மளித்தவர்நின் றாடுந் திருச்சிற் றம்பலமுன். ௫௪

(இ - ள்) நிலவும்...இறைஞ்சி - நிலவுகின்ற பெருமையினையுடைய எழுநிலைக் கோபுரத்தின் முன்பு நிலமுற விழுந்து வணங்கி ; மலரும்...வலங்கொண்டு - மலர்கின்ற கண்களின் நீர்த்துளிகள் பெருக வுள்ளே புகுந்து திருமாளிகையினை வலமாக வந்து : உலகு...வணங்கி - உலகத்தை விளக்கம் செய்கின்ற திருப்பேரம்பலத்தை வணங்கி ; அலகில்...திருச்சிற்றம்பல முன் - அளவில்லாத அண்டங்களை யெல்லாம் அளித்தருள்வாராகிய கூத்தப்பிரான் நின்று அற்புதக்கூத் தாடுகின்ற திருச் சிற்றம்பலத்தின் முன்னர் ; உள்ளணைந்தார் - உள்ளே அணைந்தனர் (சேரலனார்).

(வி - ரை) கோபுரத்தை அணைந்த சேரலனார் அதனை முறையால் வணங்கி, உட்புகுந்து முறைப்படி வழிபட்டுத் திருமுன்பு சேர்ந்த நிலையினைக் கூறுவது இத் திருப்பாட்டு.

நிலத்திறைஞ்சி - திருக்கோபுரத்தின் முன்னர் நிலமுற வீழ்ந்து வணங்குதல் வேண்டுமென்பது விதி.

மாளிகை - திருமாளிகை ; இறைவரது திருக்கோயில் திருமதிலுக்குள் ளிடம். திருமாளிகைப் பத்தி என்ற வழக்குக் காண்க.

உலகு விளக்கும் திருப்பேரம்பலம் - "பேரம்பலம் மேரு" (250). பேரம்பலம் வேறு ; சிற்றம்பலம் வேறு ; தனி மன்றங்கள்.

அண்டம் அளித்தவர் - அண்டங்களை யெல்லாம் ஈன்று உயிர்களை அளிப்பவராகிய அம்பலவர்.

நின்றுடும் - நின்று அருட்கூத் தியற்றும். 54

3802. அளவி லின்பப் பெருங்கூத்த ராட வெடுத்த கழல்காட்ட
உளமும் புலமு மொருவழிச்சென் றுருகப் போற்றி யுய்கின்றார்
களனில் விடம்வைத் தளித்தவமு தன்றி மன்றிற் கழல்வைத்து
வளருந் திருக்கூத் தமுதுலகுக் களித்த கருணை வழுத்தினார். ருரு

(இ - ள்) அளவில்...கழல்காட்ட - அளவுபடாத இன்பந் தருகின்ற பெருங் கூத்தர் ஆடுதற்கெடுத்த திருவடியைக் காட்டியருள ; உளமும்...உய்கின்றார் - உள்ளமும் புலன்களும் ஒரு படித்தாய்க் கூடி உருகியிடத் துதித்து உய்தி பெறுகின்றாராகி ; களனில்...அமுதன்றி - கழுத்திலே விடத்தினை வைத்துத் தேவர்களுக்கு அளித்துக் காத்த அமுதமேயன்றி ; மன்றில்...வழுத்தினார் - திருவம்பலத்திலே திருவடியினை வைத்து வளர்கின்ற திருக்கூத்தாகிய அமுதத்தினை உலகுக்கு அளித்தருளும் கருணைத் திறத்தினைப் போற்றினார்.

(வி - ரை) அளவில் இன்பப் பெருங்கூத்தர் - இங்குக் கூறியது இறைவரது பேரானந்தப் பெருங்கூத்தி னியல்பு ; இஃது யோகியர்களும் ஞானியர்களும் கண்டு பயன் பெற்று அழுந்தி அனுபவித்து நிற்பது. உய்கின்றார் - என்பது காண்க.

ஆட எடுத்த கழல்காட்ட - தூக்கிய திருவடி; குஞ்சிதபாதம் என்பர். "முத்தி, ஈன்ற மலர்ப்பதத்தே நாடு" என்றபடி முத்திப் பேறளித்தற் கிலக்காகிய இடம் ; காட்ட - காட்டக் காணும் உயிரின் இயல்பு குறித்தது.

உளமும் புலமும் ஒருவழிச் சென்றுருக - உளம் - மனமாதி உட்கரணங்கள் ; புலம் - சத்தமாதி புறக்கரணங்கள் ; ஒருவழிச் செல்லுதல் - ஒன்றுதல் ; "ஒன்றியிருந்து நினைமின்கள்" (தேவா); "ஐந்துபே ரறிவுங் கண்களே கொள்ள" (252); "பூண்டவைம் புலனிற் புலப்படா வின்பம்" (3244) ; "உணர்வினோர் பெறலரும் சிவபோகம்...ஒழிவின்றி - ஐம்பொறி யளவினு மெளிவர" (2059) ; "கையுந் தலைமிசை" (1432).

களனில்...உலகுக்களித்த - இறைவர் அருளிய அமுது இரண்டு ; விடத்தினைக் கழுத்தில் வைத்துத் தேவர்களுக்கு அளித்த அமுதம் ஒன்று ; திருவம்பலத்திலே திருவடியினை ஊன்றி வைத்து உலகுக்கு அளித்த அருட்கூத்தாகிய அமுதம் மற்றொன்று ; அவற்றுள் முன்னையது தேவர்களுக்கு ஒரு காலத்தில் அருளியது ; அப்போதைக்கு அவர்கள் மரணந் தவிர்த்து ஆயுள் பெற்றாலும் இறப்பினைத் தவிர்ந்து எஞ்ஞான்றும் இறவாநிலை பெறவில்லை. அதுபோலன்றி, இங்குஉலகருக்கு அருளும் அருள் நடத்தின் அமுதம் எஞ்ஞான்றும் பிறவாத இறவாத நிலை தருவது என்ற இவைபோன்ற கருத்துக்கள் பலவும் பெறவைத்த கவிநயம் கண்டுகொள்க. வளரும் - எக்காலத்தும் நீடியிருக்கும். நித்தமாகிய. களன் - களம் - கழுத்து ;

விடம் வைத்து - விடத்தினை மறைத்து வைத்து.

கழல் வைத்து - ஒரு திருவடியினை ஊன்றி ; ஊன்றிய திருவடியே ஆடுகின்ற தூக்கிய திருவடியினால் வரும் முத்திப் பேற்றுக்கு ஆதாரமாய் நிற்றலின் கழல் வைத்து வளரும் திருக்கூத்து என்றார் ; "ஊற்றமா, ஊன்று மலர்ப்பதத்தே யுற்ற திரோதம்" என்றபடி ஊன்றிய திருவடி மறைப்புச் சத்தியைத் தந்து பின் அருட்

சத்தி விளக்கத்துக் கேதுவாம்; இக்கருத்தினையே முன் கழுத்தில் வைத்து மறைத்த விடத்தினால் அமுதம் பெறக் காரணமாயிற்று என்று உவமையினை உள்ளுறுத்துக் கூறிய நயமும் கண்டுகொள்க. "களனில் விடம் வைத் தலகளித்த வமுதன்" என்பது பாடமாயின் தேவர்க்கு அமுதளித்த இறைவர் உலகர்க்கு அருட்கூத்தாகிய வளாமுத மளிக்கும் இறைவன் என்றுரைத்துக் கொள்க; "விடம்வைத் தவாளித்த வமுதமன்றில்" என்ற பாடமுமுண்டு.

கருணை - இறைவரது திருக்கூத்துக்கு முண்டு; உயிர்களின் மேல் வைத்த கருணையே காரணமாம் என்பது; "என்னே! யடியார்க் கெவாருளுங் கருணை" (3792) என முன்னரும் இக்கருத்தினையே பற்றிப் போற்றியது காண்க. 55

3803. ஆரா வாசை யானந்தக் கடலுட் டிளைத்தே யமர்ந்தருளாற்
சீரா வண்ணப் பொன்வண்ணத் திருவந் தாதி திருப்படிக்கீழ்ப்
பாரா தரிக்க வெடுத்தேத்திப் பணிந்தார், பருவமழை பொழியுங்
காரா ளிகர்க்க வரியகொடைக் கையார் கழறிற் றறிவார்தாம். ருசு

(இ-ள்) ஆரா...அமர்ந்து - நிறைவெய்தாத ஆசை மிகுதியினாலே ஆனந்தமாகிய கடலினுள்ளே முழுகி அதனுள்ளே பட்டு விரும்பி யிருந்து; அருளால் - சிவன் திருவருளினாலே; பருவ...தாம் - பருவந் தவறாது வேண்டிய மழையினை வரையாது பொழியும் மேகத்தினாலும் ஒப்பாதற்கரிய கொடையினைப் பொழியும் கையினை உடைய கழறிற் றறிவார் தாம்; சீரா...பணிந்தார் - சிறப்பு நிறைந்த வண்ணத்தினையுடைய பொன்வண்ணத் திருவந்தாதியினை திருப்படியின் கீழே உலகம் அன்புடன் ஏத்தி இன்புறும்படி எடுத்துப் பாடித் துதித்துப் பணிந்தருளினார்.

(வி-ரை) ஆரா ஆசை - ஆரா - எத்தனை செலுத்தினும் நிறைவு பெறாத; ஆர்தல் - நிறைதல்.

ஆனந்தக்கடல் - ஆனந்த மிகுதியினைக் கடல் என் றுருவகிக்தார்; கடல் என்றதற்கேற்பத் திளைத்து என்றார்; திளைத்தல் - மூழ்கி யின்புறுதல். "ஆனந்த வெள்ளத் தழுந்துமோ ராருயிர்" (கோவை - 307).

வண்ணம் - யாப்பமைதியின் உறுப்பு; ஆனாய நாயனார் புராணம் (953) பார்க்க. பார் ஆதரிக்க - உலகத்தோர் விரும்பி உய்யும்படி.

பொன்வண்ணத் திருவந்தாதி - "பொன்வண்ணம்" என்று தொடங்கும் முதற் குறிப்பாற் போந்த பெயர்; "ஆத்திசூடி" என்பதுபோல; அந்தாதி - திருப் பொன்வண்ணத் தந்தாதி என்க. "அடியுஞ் சீரு மசையு முடிவு முதலாச், செய்யுள் மொழியினஃ, தந்தாதித் தொடையென்றறைதல் வேண்டும்"; அந்தாதியின் வகை பல; அவற்றுள் இது செய்யுளந்தாதியாகும். அஃதாவது, நின்ற செய்யுளின் ஈற்றினின்ற எழுத்து, அசை, சீர், அடிகளுள் ஒன்று, வருஞ் செய்யுட்கு முதலாக வருவதாம். இது கலித்துறை அந்தாதி; அந்தம் + ஆதி = அந்தாதி - வடமொழித் தீர்க்க சந்தி என்பர். 2-ம் வேற்றுமைத் தொகைப புறத்துப் பிறந்த அன்மொழித் தொகையாய் நூலுக்குக் காரணக் குறியாயிற்று. முதற் செய்யுளின் முதலடி முதற் சீராகிய ஆதியும் ஈற்றடியின் ஈற்றுச் சீராகிய அந்தமும் மண்டலித்து அந்தம் ஆதியாயிருத்தலும் காண்க. "பொன்வண்ணம்" (1) என்று தொடங்கிப் "பொன்வண்ணமே" (100) என்று முடிகின்றது. வெண்பாவந்தாதியாய் இவ்வமைப்புடைய அற்புதத் திருவந்தாதியும் காண்க. அந்தாதி தமிழ்ப் பிரபந்த வகைகளுள் ஒன்று.

திருப்படி - திருக்களிற்றுப்படி ; திருப்படிக் கீழ் (நின்று) ஏத்தி - என்க ; திருப்படிக்கீழ்ப் பணிந்தார் - என்றும் கூட்டி உரைக்க நின்றது.

பருவமழை - கையார் - " பருவக் கொண்மூப் படியென...உதவி" என்ற திருமுகப் பாசுரக் கருத்தினை விரித்துரைத்தவாறு ; பருவ மழை - வேண்டுங் காலத்தில் வேண்டிய அளவு தவிராது, பெய்யும் மழை ; மழை வேண்டத்தக்கதே யாயினும், பருவமின்றி முன்பின்னாகப் பெய்தாற் பயனற்றதோடு கேடும் விளைவிக்கு மாதலின் பருவ மழை என்றார் ; மழைக்கார் - மழை பெய்யும் மேகம் ; மேகம் மழை பெய்யாது காட்டிய மட்டில் வந்து போதலு முளதாதலின், அதுபோலன்றி, மழை பெய்யுங் கார் என்றார். பருவம் - அளவும் குறித்தது.

நிகர்க்க அரிய தன்மையாவது காலத்தாற் பெய்யினன்றிக் கேடு விளைக்கும் மழை போலல்லாது, இக்கொடை எக்காலத்தும் கேடுவிளைக்காமற் பயனே விளைக்கும் பண்பும், நீர் ஒன்றினையே தரும் மழைபோலல்லாது வேண்டின வெல்லாவற்றையும் வேண்டியவாறே தரும் நிலையும், பிறவும் ஆம். நிகர்க்க அரிய - என்றது படியென என்ற திருமுகப் பாசுரப் பகுதிக் குறிப்பினை விளக்கியவாறு ; கொண்மூவும் இதனைப் படிஎடுத்தொழுகப் பழகும்படி என்றது அக்குறிப்பு.

கழறிற்றறிவார் - இப்பெயர் குறிக்கும் தன்மை யெல்லாம் நினைவுகூர்தற் பொருட்டு ஈண்டு இப்பெயராற் கூறினார். 3761-3787 பார்க்க. உலக மோதியின் புறதற்பொருட்டு இத்திருவந்தாதியினைத் தந்தருளிய கொடையின் சிறப்புக் குறிப்பு. 56

பொன்வண்ணத் திருவந்தாதி

*திருச்சிற்றம்பலம்*

***சிவதரிசனம்***

பொன்வண்ண மெவ்வண்ண மவ்வண்ண மேனி ; பொலிந்திலங்கு
மின்வண்ண மெவ்வண்ண மவ்வண்ணம் வீழ்சடை ; வெள்ளிக்குன்றந்
தன்வண்ண மெவ்வண்ண மவ்வண்ண மால்விடை ; தன்னைக்கண்ட
வென்வண்ண மெவ்வண்ண மவ்வண்ண மாகிய வீசனுக்கே. 1

***மாலிருக்கும் பாதியன் (சங்கரநாராயணத் திருவடிவம்)***

இடமால் வலந்தா னிடப்பா றுழாய்வலப் பாலொண்கொன்றை
வடமா லிடந்துகி ரேல்வல மாழி யிடம்வலமான்
இடமால் கரிதால் வலஞ்சே தினனுக் கெழினலஞ்சேர்
குடமா லிடம்வலங் கொக்கரை யாமெங்கள் கூத்தனுக்கே. 6

***அன்புடையாரை அறிவன் சிவன்***

நெஞ்சந் தளிர்விடக் கண்ணீர் ததும்ப முகமலர
வஞ்செங் கரதலங் கூம்பவட் டாங்க மடிபணிந்து
தஞ்சோன் மலரா லணியவல் லோர்கட்குத் தாழ்சடையோன்
வஞ்சங் கடிந்து திருத்திவைத் தான்பெரு வானகமே. 11

***அடியரும் அல்லாதாரும் இவ்விவர்***

வானக மாண்டுமந் தாகினி யாடிநந் தாவனஞ்சூழ்
தேனக மாமலர் சூடிச்செல் வோருஞ் சிதவல்சுற்றிக்
கானகந் தேயத் திரிந்திரப் போருங் கனகவண்ணப்
பானிற நீற்றற் கடியரு மல்லாப் படிறருமே. 12

உடல் எடுத்த பயன்

படிறு யினைசொல்லிப் பாழுட லோம்பிப் பலகடைச்சென்
றிடறு தொழிது மெழுநெஞ்ச மேயெரி யாடியெம்மான்
கடறு யினஞ்ச முண்ட பிரான்கழல் சேர்தல்கண்டாய்
உடற னுளபய னுவசொன் னேனிவ் வுலகினுள்ளே. 13

அடியாரை அலேத்தலின் கொடுமை

உலகா ளுறுவீர் தொழுமின்;விண் ணாள்வீர் பணிமினித்தம்
பலகா முறுவீர் நினைமின்; பரமனொ டொன்றலுற்றீர்
நலகா மலரா லருச்சிமின்; றுணர கத்துநிற்தும்
அலகா வுறுவீ ரரனடி யாரை யலைமின்களே. 14

இறைவன் பக்குவம் அறிந்து வினை தீர்ப்பன்

இருந்தன மெய்தியு நின்றுந் திரிந்துங் கிடந்தலைந்தும்
வருந்திய வாழ்க்கை தவிர்த்திடு போகநெஞ் சேமடவாள்
பொருந்திய பாகத்துப் புண்ணியன் புண்ணியல் சூலத்தெம்மான்
திருந்திய போதவன் றானே களையுநந் தீவினையே. 17

விசுவரூபம் - (பேருருவம்)

பாதம் புவனி சுடர்நய னம்பவ னம்முயிர்ப்போங்
கோத முடுக்கை யுயர்வான் முடிவிசும் பேயுடம்பு
வேத முகந்திசை தோண்மிகு பன்மொழி கீதமென்ன
போத மிவற்கோர் மணிநிறந் தோற்பது பூங்கொடியே. 19

இடையறாத அகக்காட்சி

கொடிமே லிடபமுங் கோவணக் கீளுமோர் கொக்கிறகும்
அடிமேற் கழலு மகலத்தி னீறுமை வாயரவும்
முடிமேன் மதியு முருகலர் கொன்றையு மூவிலைய
வடிவேல் வடிவுமென் கண்ணுளேப் போதும் வருகின்றவே. 20

அன்புநெறியில் திளைத்தல்

ஒழித்தேன் பிறவியை; யூர்ந்தே னுவகையை, யோங்கிற்றுள்ளம்
இழித்தே னுடம்பினை; யேலேன் பிறரிடை; யிம்மனையும்
பழித்தேன்; பழியே விளைக்கும்பஞ் சேந்தியக் குஞ்சரமுந்
தெழித்தேன்; சிவகதி சேர்ந்தே; னினிமிகத் தெள்ளியனே. 23

கவி பாடுதல்

தெள்ளிய மாந்தரைச் சேர்ந்திலன்; தீங்கவி பாடலுற்றேன்;
ஒள்ளிய சொல்லும் பொருளும் பெறே;னுரை தாருரைத்த
கள்ளிய புக்காற் கவிகளொட் டார்;கட னஞ்சயின்றாய்
கொள்ளிய வல்லகண் டாய்புன்சொ லாயினுங் கொண்டருளே. 24

சிவ பரஞ்சுடரின் தூலதரிசனம் ; (உவமை யற்றதனைத்
தொடர்நிலை யுள்ளுறை யுவமை முகத்தான் விளக்கியது)

விரிகின்ற ஞாயிறு போன்றது மேனி;யஞ் ஞாயிறுசூழ்ந்
தெரிகின்ற வெங்கதி ரொத்தது செஞ்சடை; யச்சடைக்கீழ்ச்

சரிகின்ற காரிருள் போன்றது கண்ட;மக் காரிருட்கீழ்ப்
புரிகின்ற வெண்முகில் போன்றுள தாவெந்தை யொண்பொடியே. 26

**சிவனது புகழ் - வீரங்கள் - முறைநிரனிரை மூவணிச் சுவைபடக் கூறியது**

1 2 3 4 5 6 1 2 3
பல்லுயிர் பாக முடறலை தோல்பக லோன்மறல்பெண்
4 5 6 1 2
வில்லியோர் வேதியன் வேழ நிரையே பறித்துதைத்துப்
3 4 5 6
புல்லியுஞ் சுட்டு மறுத்து முரித்துங்கொண் டான்புகழே
சொல்லியும் பாடியு மேத்தக் கெடுங்கள் சூழ்துயரே. 36

1பல் - பகலோனைப் பறித்துக் கொண்டான் ; 2உயிர் மறலியை உதைத்துக் கொண்டான் என்றிவ்வாறு நிரல் நிரையாகக்கூட்டி உரைத்துக் கொள்க.

**சிவனை வணங்காத மனிதர் அசேதனர்**

சொல்லா தனவொழு நாவல்ல; சோதியுட் சோதிதன்பேர்
செல்லாச் செவிமரந் ; தேறித் தொழாதகை மண்டிணிந்த
கல்லா ; நினையா மனம்வணங் காத்தலை யும்பொறையாம்
அல்லா வவயவந் தானு மனிதர்க் கசேதனமே. 42

**அருளால் வருவதே பெரிதின்பமாம்**

தனக்குன்ற மாவையஞ் சங்கரன் றன்னரு ளன்றிப்பெற்றால்
மனக்கென்று நஞ்சிற் கடையா நினைவன் ; மதுவிரியும்
புனக்கொன்றை யானரு ளாற்புழு வாகிப் பிறந்திடினும்
எனக்கென்றும் வானவர் பொன்னுல கோடொக்க வெண்ணுவனே. 43

**இதோபதேசம் - வாழ்க்கைநலங் கூறல் - (அகத்துறை - தோழிகூற்று)**

ஓதவ ளும முனையவன் பல்குண முன்னைவிட்டேன்
போதவன் பின்னே பொருந்தவன் வாழ்க்கை திருந்தச்சென்று
மாதவ மாகிடு மாதவ மாவளர் புன்சடையான்
யாதவன் சொன்ன னதுகொண் டொழியினி யாரணங்கே. 44

**பொய்த்துறவு**

தொடங்கிய வாழ்க்கையை வாளா துறப்பர் துறந்தவரே
அடங்கிய வேட்கை யரன்பா லிலாறு காற்பறவை
முடங்கிய செஞ்சடை முக்கண ஞர்க்கன்றி யிங்குமன்றிக்
கிடங்கினிற் பட்ட கராவனை யார்பல கேவலரே. 64

**மாதிருக்கும் பாதியன் - (அர்த்தநாரீசுரத் திருவுருவம்)**

வலந்தான் கழலிடம் பாடகம் ; பாம்பு வலமிடமே
கலந்தான் ; வலநீ றிடஞ்சாந் ; தெரிவலம் பந்திடமென்
பலந்தார் வலமிட மாடகம் ; வேல்வல மாழியிடஞ்;
சலந்தாழ் சடைவலந் தண்ணங் குழலிடஞ் ; சங்கரற்கே. 65

**தெறிப் படுத்தல்**

கூறுமி னீசனைச்; செய்ம்மின்குற் றேவல் ; குளிர்மின்கண்கள்
தேறுமின் சித்தந் ; தெளிமின் சிவனைச் ; செறுமின்செற்றம்

ஆறுமின் வேட்கை ; யறுமி னவல ; மிவைநெறியா
வேறுமின் வானத்; திருமின் விருந்தா யிமையவர்க்கே. 70

**யாக்கையி னிழிபுரைத்து வழிப்படுத்தியது**

உறைகின் றனவைவ ரொன்பது வாயிலோர் மூன்றுளதான்
மறைகின்ற வென்பு நரம்போ டிறைச்சி யுதிரமச்சை
பறைகின்ற தோல்போர் குரம்பை பயனிலைப் போயடைமின்
அறைகின்ற தெண்புனல் செஞ்சடைக் கொண்டோன் மலரடிக்கே. 72

**சிவன் கருணையி னெளிமை தேற்றி அவனை யடையார்க் கிரங்கியது**

குன்றெடுத் தான்செவி கண்வாய் சிரங்க ணெரிந்தலற
வன்றடர்த் தற்றுகச் செற்றவ "னற்றவர்க் கற்றசிவன்"
மன்றிடைத் தோன்றிய நெல்லிக் கனிசிற்ப மாறுடர்போய்
யொன்றெடுத் தோதிப் புகுவர் நரகத் துறுகுழியே.
அற்றவர்க் காரமுதன்—என்பதும் பாடம். 74

**சங்காரத் திருக்கூத்து - தரிசனம்**

மலங்கின மால்கடல் வீழ்ந்தன கார்வரை யாழ்ந்ததுமண்
மலங்கின நாக மருண்டன பல்கணம் வானங்கைபோய்
இலங்கின மின்னொடு நீண்ட சடையிமை யோர்வியந்தார்
அலங்கனன் மாநட மார்க்கினி யாடுவ தெம்மிறையே. 86

**சாதனவியல்**

சிந்தனை செய்ய மனமமைத் தேன்;செப்ப நாவமைத்தேன்
வந்தனை செய்யத் தலையமைத் தேன்;கை தொழவமைத்தேன்
பந்தனை செய்வதற் கன்பமைத் தேன்,மெய் யரும்பவைத்தேன்
வெந்தவெண் ணீறணி யீசர்க் கிவைபான் விதித்தனவே. 92

**மறவா வரம் வேண்டுதல்**

பொய்யா நரகம் புகினுந் துறக்கினும் போந்துபுக்கிங்
குய்யா வுடம்பினொ டூர்வ நடப்ப பறப்பவென்று
கையா விளியினு நானில மாளினு நான்மறைசேர்
மையார் மிடற்று னடிமற வாவரம் வேண்டுவனே. 98

**ஆயுள் நிலையாமை கூறி ஆற்றுப்படுத்தல்**

வேண்டிய நாள்களிற் பாதியுங் கங்குன் மிகவவற்றுள்
ஈண்டிய வெந்நோய் முதலது பிள்ளைமை மேலதுமூப்
பாண்டின வச்சம் வெகுளி யவாவழுக் காறிங்ஙனே
மாண்டன சேர்தும் வளர்புன் சடைமுக்கண் மாயனையே. 99

**தொண்டர் இன்பம் பெறுதல்**

மாயனன் மாமணி கண்டன் வளர்சடை யாற்கடிமை
யாயின தொண்டர் துறக்கம் பெறுவது சொல்லுடைத்தே;
காய்சின வானை வளருங் கனக மலையருகே
போயின காக்கையு மன்றே படைத்தது பொன்வண்ணமே. 100

திருச்சிற்றம்பலம்

**திருவந்தாதி:**—தமது பூசையினை ஏற்றருளி நாடோறும் சிலம்பொலி கேட்பித் தாண்டருளிய திருவம்பலமுடையாரை நேரே கண்டு, அவரது கருணைப்பெருக் கினைப் பற்பல வகையாலும் பாவித் துதித்து உலகரை வழிப்படுத்தியது.

**திருவந்தாதிப் பாட்டுக் குறிப்பு** :—முன் குறித்த தலைப்புக்களாலும், பின் சேர்க் கையில் உரைக் குறிப்புக்களாலும் கண்டுகொள்க.

**தலவிசேடம்:**—தில்லைத் திருச்சிற்றம்பலம்—முன்னர் அங்கங்கும் உரைத் தவை காண்க. (41 - 250 - 1431 - 2058 முதலியவை பார்க்க.)

3804. தம்பி ரானூர்க் கெதிர்நின்று தமிழ்ச்சொன் மாலை கேட்பிக்க
உம்பர் வாழ நடமாடு மொருவ ரதற்குப் பரிசிலெனச்
செம்பொன் மணிமன் றினிலெடுத்த செய்ய பாதத் திருச்சிலம்பின்
இம்பர் நீட வெழுந்தவோலி தாமு மெதிரே கேட்பித்தார். ருஎ

(இ - ள்) தம்பிரானூர்க்கு...கேட்பிக்க - தமது பெருமானாராம் கூத்தப்பெரு மான் திருமுன்பு நின்று செந்தமிழின் சொன்மாலையாகிய திருவந்தாதியினைச் சேர லனூர் கேட்பிக்க ; உம்பர்...பரிசிலென - தேவர்களும் வாழும்படி திருக்கூத்தாடு கின்ற ஒருவராகிய இறைவர் அப்பாட்டுக்கு ஏற்ற பரிசிலாக ; செம்பொன்... ஒலி - செம்பொன்னாலாகிய அழகிய திருவம்பலத்தினில் எடுத்தருளிய செம்மை தருவதாகிய திருவடியின் திருச்சிலம்பினின்றும் இவ்வுலகத்தோர் வாழ எழுந்த ஒலியினை ; தாமும்...கேட்பித்தார் - தாமும் அவர்க்கெதிரே கேட்கும்படி செய் தருளினார்.

(வி - ரை) தமிழ்ச் சொன்மாலை - ஒன்றையொன்று அந்தாதியாத் தொடரும் படி யாக்கப் பட்டமையின் திருவந்தாதியினை மாலை என்றார்.

கேட்பிக்க - கேட்கும்படி விண்ணப்பம் செய்ய.

அதற்குப் பரிசிலெனத் - தாமும் ஒலி - கேட்பித்தார் - பாட்டுப்பாடி வரும் புலவோர்க்குப் பாடப்பட்டோர் பரிசில் தருதல் மரபு ; அதுபோலச் சொன் மாலைக்கு ஒலி கேட்பித்தலே பரிசிலாக நின்றது என்பதாம். ஒலிக்கு ஒலியே பரிசிலாவ தெங்ஙனமோ எனின், இத்திருச் சிலம்பொலி எல்லாப் பேரானந்தங்களை யும் விளைக்குமாதலின் ஏற்ற பரிசிலாம் என்பார் இம்பர் நீட எழுந்த ஒலி என்றார். எதிரே - பிரதியாக ; தகுதியாக ; நேராக.

கேட்பிக்கத் - தாமும் கேட்பித்தார் என இரண்டினையும் ஒப்பக் கூறுதல் காண்க; "ஆடிய நடனம் பாடிய பாட்டுக் கருளிய பரிசிலே யாமால்" (பள் - பட - 49) என்று பேரூர்ப் புராணத்தினுள் கச்சியப்ப முனிவர் இக்கருத்தினை நம்பிகள் தேவாரத்தினைக் குறித்து விரித்தல் காண்க.

உம்பர் - உம்பர்களும் வந்து வழிபட்டு உய்ய ; உம்மை தொக்கது. இம்பர் - இவ்வுலகில் உள்ளோர் ; நீடுதல் - பெருவாழ்வு பெறுதல் ; "வெறிவிசும்பு வறி தாக, விம்ப ருய்ய வம்பலம் பொலியத், திருவளர் தில்லை மூதூர, ரருநடங் குயிற்று மாதிவா னவனே" (கோயினூன் - 32). உம்பர் வாழ - அயன்மால் முதலாகிய தேவர்கள் வாழ்வடைதலாவது அவர்கள் செய்யும் படைப்பு முதலிய தொழில்கள் நன்கு நிகழ்தல். அவை நிகழ்வது இறைவரது ஐந்தொழிற் கூத்தினாலாவது என்பார் வாழநடமாடும் என்றார். ஒருவர் - ஐந்தொழில் செய்தல் இவர்க்கே உரியது என்பது.

எடுத்த செய்ய பாதம் - எடுத்த - தூக்கிய ; குஞ்சித்த ; செய்ய - செம்மை தருவதாகிய ; செம்மையாவது முத்தி ; " முத்தி, நான்ற மலர்ப்பதத்தே நாடு "

தாமும் - அவர் கேட்பித்தது போலத் தாமும் என உம்மை இறந்தது தழுவிற்று. 57

3805. ஆடற் சிலம்பி னொலிகேட்பா ரளவி லின்ப வானந்தங்
கூடப் பெற்ற பெரும்பேற்றின் கொள்கை வாய்ப்பக் கும்பிடுவார்
நீடப் பணியுங் காலமெலா நின்று தொழுது புறம்போந்து
மாடத் திருமா ளிகைவீதி வணங்கிப் புறத்து வைகினார். ௫௮

(இ - ள்) ஆடற்சிலம்பின் ஒலி கேட்பார் - முன்கூறியபடி இறைவர் ஆடும் சிலம்பின் ஒலியினைக் கேட்டவராகிய சேரலனார் ; அளவில்...கும்பிடுவார் - அளவில்லாத இன்பமிக்க ஆனந்தம் சேரப் பெற்ற பெரும்பாக்கியத்தினது கொள்கை வாய்ப்பக் கும்பிடுவாராகி ; நீட...புறம்போந்து - நெடிது பணியும் காலங்களெல்லாவற்றினும் நின்று பின்னர்ப் புறத்திலே போந்து ; மாடத்திருமாளிகை... வைகினார் - மாடங்களையுடைய திருமாளிகை வீதியினை வணங்கிப்போய் அதன் புறத்திலே தங்கியருளினார்.

(வி - ரை) கேட்பார் - கும்பிடுவாராய்த் - தொழுது - வணங்கி - வைகினார் என்று முடிக்க. கேட்பார் - வினைப்பெயர்.

கொள்கை வாய்த்தலாவது கொள்ளப்பட்ட நிலைமை கைவருதல்.

பணியும் கால மெலாம் - வழிபாட்டுக்குரிய பூசாகாலங்களெல்லாவற்

புறத்து - திருவீதியின் வெளிப்புறத்திலே. " அங்கண் அல்குந்திற மஞ்சுவார்" (2063) என்ற மனநிலையும், ஆண்டுரைத்தவையும் காண்க. 58

3806. பாவுந் தில்லை வட்டத்துப் பயில்வார் பைம்பொ னம்பலத்துள்
அரவும் புனலுஞ் சடையாட வாடு வார்கூத் தாராமை
விரவுங் காதன் மீக்கொங்க வேதம் படியுந் திருப்படிக்கீழ்
இரவும் பகலும் பணிந்தேத்தி யின்பஞ் சிறக்கு மந்நாளில், ௫௯

3807. ஆடும் பெருமான் பாடல்கேட் டருளித் தாழ்த்த படிதமக்குக்
கூடும் பரிசான் முன்பருளிச் செய்த நாவ லூர்க்கோவை
நீடும் பெருங்கா தலிற்காண நிறைந்த நினைவு நிரம்பமால்
தேடும் பாத மருளினாற் றிருவா ரூர்மேற் செலவெழுந்தார். ௬0

3806. (இ - ள்) பரவும்...பயில்வார் - யாவர்களும் பரவுகின்ற தில்லை வட்டத்தினுள்ளே தங்குவாராகிய சேரலனார் ; பைம்பொன்...மீக்கொங்க - பசிய பொன்னாலாகிய திருவம்பலத்தினுள்ளே பாம்பும் கங்கையும் சடையினுள் தங்கி ஆடும்படி ஆடுகின்ற இறைவரது திருக்கூத்தினை ஆராமையினாலே பொருந்தும் பெருவிருப்பம் மிக்கு மேன்மேல் எழ ; வேதம்...அந்நாளில் - வேதங்கள் போற்றிப் பணிகின்ற திருக்களிற்றுப்படியின் கீழே இரவும் பகலும் பணிந்து துதித்து அதனால் மிக்க இன்பம் சிறக்கப் பெற்றிருந்த அந்நாட்களில், ௫௯

3807. (இ - ள்) ஆடும் பெருமான்...நாவலூர்க்கோவை - ஆடுகின்ற பெருமானாகிய இறைவர், 'பாட்டினைக் கேட்டருளியபடியினாலே சிலம்பொலி கேட்பிக்கத் தாழ்த்தோம்' என்று தமக்கு அவரது நட்புக் கூடும் தன்மையினாலே முன்னாளில் அருளிச் செய்து நினைவூட்டிய திருநாவலூர் மன்னனை; நீடும்...நிரம்ப - நீண்டு செல்லும் பெருவிருப்பத்தினாலே காணவேண்டுமென்ற மனத்துள் நிறைந்த நினைவு மிகுதலினால்; மால்...எழுந்தார் - திருமால் தேடுகின்ற திருவடியினையுடைய இறைவரது திருவருள் பெற்றுத் திருவாரூரை நோக்கிச் செல்வதற்கு எழுந்தனர். கூ0

இந்த இரண்டுபாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

3806. (வி - ரை) பரவும் - எல்லாரும் பரவுகின்ற; எங்கும் பரந்துள்ள என்றலுமாம்; "எங்குஞ் சிதம்பரம்" (திருமந்); "எப்புவனங் களுநிறைந்த திருப்பதி" (1444). தாம் நாடோறும் வழிபட்டுத் துதிக்கின்ற என்றலுமாம்.

தில்லைவட்டம் - திருவீதிகளின் புறத்தே தில்லையின் எல்லைக்குட்பட்ட இடம். "தில்லை வட்டந்திசை கைதொழுவார்" (தேவா).

ஆராமை - நிறைவுபெறாத நிலைமையினாலே.

திருப்படிக்கீழ்க் கூத்துப் - பணிந்தேத்தி - என்று கூட்டுக. கூத்தினை - என இரண்டனுருபு விரித்துக் கொள்க.

வேதம் படியும் திருப்படி - பஞ்சாக்கரப்படி; திருக்களிற்றுப்படி என வழங்குவது; முன் (251) உரைத்தவை பார்க்க; வேதங்கள் படிதலாவது துதித்தல். திருஐந்தெழுத்தே இப்படிகளாக அமைந்து இறைவர் திருவடிகளைத் தாங்கி நிற்பன என்பது. வேதங்கள் திருவைந் தெழுத்தாலே சிவனைத் துதிக்கின்றன என்பர்.

இரவும் பகலும் - இடையறாது; ஏத்தி - இன்பம் சிறந்தல் - மிக்க இன்பத்துள் திளைத்தல்.

இன்புற்றிருக்கும்—என்பதும் பாடம். 59

3807. (வி - ரை) ஆடும்...முன்பு அருளிச் செய்த - இவ்வாலாறு முன் (3791) உரைக்கப்பட்டது. கேட்டருளி - கேட்டருளியதனால் என்று காரணப் பொருளில் வந்தது.

அருளிச் செய்த - அருளிச் செய்ததற்குப் பொருளாய் நின்ற; கூடும்பரிசு - அவரது நட்பினைக் கூடும் தன்மை; "அவரை நினைப்பிப்பார்" (3791). எத்துதலால் - தமக்கு அருளிச் செய்த என்று கூட்டுக.

அருளினால் - அருள் விடைபெற்று.

திருவாரூர் மேற் செல - திருவாரூரை நோக்கிச் செல்ல; எழுதல் - பயணத்தை மேற்கொள்ளுதல். 60

3808. அறிவி னெல்லை யாயதிருத் தில்லை யெல்லை யமர்ந்திறைஞ்சிப்
பிறிவி லாத திருவடியைப் பெருகு முள்ளத் தினிற்பெற்றுச்
செறியு ஞான போனகர்வந் தருளும் புகலி சென்றிறைஞ்சி
மறிசேர் கரத்தார் கோயில்பல வணங்கி மகிழ்ந்து வழிக்கொள்வார்,

3809. வழியிற் குழியிற் செழுவயலின் மதகின் மலர்வா விகளின்மடுச்
சுழியிற் றாளந் திரைசொரியுந் துறைநீர்ப் பொன்னி கடந்தேறி
விழியிற் றிகழுந் திருநுதலார் விரும்பு மிடங்க ளிறைஞ்சியுகக்
கழிவிற் பெருவெள் ளமுங் கொள்ளாக் கழனி யாரூர் கண்ணுற்றார்,

3808. (இ - ள்) அறிவின்...இறைஞ்சி - ஞானமுடிபாகிய எல்லை என்படும் தில்லைத் திருவெல்லையினை விரும்பி வணங்கி; பிறிவிலாத...பெற்று - என்றும் பிறியாத திருவடியினை மேன்மேலும் அன்பு பெருகும் உள்ளத்தினில் வைத்து இருக்கப் பெற்று; செறியும்...இறைஞ்சி - நிறைந்த சிவஞானத்தை உண்டவராகிய ஆளுடைய பிள்ளையார் திருவவதரித் தருளுதற்கிடமாகிய சீகாழிப்பதியினைச் சென்று வணங்கி; மறிசேர்...மகிழ்ந்து - மானேந்திய கையினையுடைய இறைவரது கோயில்கள் பலவற்றையும் வணங்கி மகிழ்ந்து; வழிக்கொள்வார் - வழிச்செல்வாராகி, கூக

3809. (இ - ள்) வழியில்...கடந்தேறி - வழியிலும், குழியிலும், செழுவிய வயல்களிலும், மலர்களையுடைய வாவிகளிலும் மடுக்களின் சுழியிலும் முத்துக்களை அலைகள் சொரிகின்ற துறையினையுடைய நீர் நிரம்பிய காவிரியினைக் கடந்து தென் கரையினை ஏறி; விழியில்...இறைஞ்சி - கண்ணுடன் கூடிய திருநெற்றியினையுடைய இறைவர் விரும்பி எழுந்தருளியுள்ள பதிகளை வணங்கிச் சென்று; யுகக்கடையில்... கண்ணுற்றார் - நீர் ஊழி முடிவில் வரும் பெரிய வெள்ளத்தாலும் கொள்ளப்படாத அழிவின்றியுள்ள வயல்கள் சூழ்ந்த திருவாரூரினைக் கண்ணுற்றனர். கூ௨

இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

3808. (வி - ரை) அறிவின் எல்லை ஆய திருந்தில்லை எல்லை - அறிவின் எல்லை - ஞானங்களின் முடிபு இச்சிதம்பரம் என்ற பெயர்க்காரணம் பற்றியுணர்த்தியவாறு. "அலகில் கலையின் பொருட்கெல்லை ஆடுங் கழலே" (1220); "உலகுய்ய நடமாடும் எல்லையினைத் தலைப்பட்டார்" (1075) என்பன முதலியவை காண்க. எல்லை - எல்லை - சொல்லணி; எல்லை யிரண்டனுள் முந்தியது பதியின் சூக்கும நிறைவாகிய சிறப்பும், பிந்தியது பதியின் தூலமாகிய அளவு காணும் அமைப்பும் குறித்தன; இங்குக் குறித்தது இத் திருவெல்லை. (256)

பிறிவிலாத திருவடியை...பெற்று - தில்லையினின்றும் உடம்பாற் பிரியினும் மனத்துள் முன்னரும் எப்போதும் கொள்ளுதலாற் பிறிவிலாத திருவடி என்றார். உள்ளத்தினிற் பெறுதலாவது மனத்துள் அழுந்த நினைததுக்கொண்டே - தியானித்து - இருத்தல்.

செறியும் ஞானம் - செறிதலாவது எல்லா ஞானங்களையும் தன்னுள் அடக்கி மேனிற்றல்; இது சிவஞானம். "சிவனடியே சிந்திக்குந் திருப்பெருகு சிவஞானம்' "எண்ணரிய சிவஞானம்": வந்தருளுதல் - அவதரிததருளுதல் போனகம் - உணவு.

கோயில் பல - இவை சீகாழிக்கும் காவிரி வடகரைக்கும் இடையில் உள்ளவை; திருப்புள்ளிருக்கு வேளூர் - திருநின்றியூர் முதலாயின என்பது கருதப்படும்.

வழிக்கொள்வார் - வழியே புறப்பட்டுச் செல்வாராகி: வழிக்கொள்வாராகிக் - கடந்து ஏறி என மேற்பாட்டுடன் கூட்டுக வழி - இவ்வழி சீகாழியினின்றும் தெற்கில் திருவாரூர் நோக்கி மாயவரம் வழியாய் செல்லும் சாலை என்பது கருதப்படும்.

3809. (வி - ரை) வழியில்...துறை நீர்ப்பொன்னி - வழியிலும் குழியிலும் மதகிலும் வாவிகளிலும் மடுச்சுழியிலும் திரை தாளம் சொரியும் நீர்த்துறை என்க. உம்மைகள் விரிக்க; வழி - வரும் வழி: குழி - நீர் தங்கும் குழிகள்; பள்ளங்கள்: மடுச்சுழி - மடுக்களில் நீர் ஓடுவதனால் உண்டாகும் நீர்ச்சுழிகள்: தாளம் - முத்துக்கள். இவை, மலைமேலிருந்து காவிரி அலைத்து வருவனவும், வழியில் மூங்கில்கள் இப்பிகள் கரும்பு நெல் முதலியவற்றின் விளைந்து சார்வனவுமாம்.

விரும்பும் இடங்கள் - இவை சீகாழிக்குத் தெற்கில் காவிரி கடந்தேறிய துறைக்கும் திருவாரூருக்கும் இடைப்பட்ட பதிகள் : திருவழுவூர் வீரட்டம், திருமீயச்சூர், மீயச்சூரிளங்கோயில், திருத் திலதைப் பதிமுற்றம், திருவம்பர் மாகாளம், திருவிற்குடி முதலியவை என்பது கருதப்படும்.

யுகக் கழிவில் பெருவெள்ளமுங் கொள்ளா - யுகக் கழிவு - கற்பாந்தம் ; சீரூழி : பெருவெள்ளம் - வெள்ளமுங் கொள்ளா - நீர்ப்பிரளயமும் பெருகித் திருவாரூரினை ஆழ்த்திவிடாதபடி காத்த இறைவர் பரவையுள்மண்டளி யம்மானூர் என்பது வரலாறு : பரவை உண் - என்ற பெயரும் காண்க. தல விசேடம் பார்க்க. 62

3810. நம்பி தாமு மந்நாட்போய் நாகைக் காரோ ணம்பாடி
அம்பொன் மணிப்பூ ணவமணிக ளாடை சாந்த மடற்பரிமா
பைம்பொற் சுரிகை முதலான பெற்று மற்றும் பலபதியிற்
றம்பி ரானைப் பணிந்தேத்தித் திருவா ரூரிற் சேர்ந்திருந்தார். ௬௩

(இ - ள்) நம்பி தாமும்...பெற்று - நம்பிகளும் அந்நாள்களினிடையே திருநாகைக்காரோணத்திற் சென்று திருப்பதிகம்பாடி, அழகிய பொன்னாலும் மணிகளாலுமியன்ற அணிவகைகளையும் நவமணிகளையும், ஆடை, சாந்து, வலிமையுடைய குதிரைகள், பசிய பொன்னாலான சுரிகை முதலானவற்றையும் இறைவர் தரப் பெற்று ; மற்றும்...ஏத்தி - மேலும் பல பதிகளிலே இறைவரைப் பணிந்து துதித்து ; திருவாரூரிற் சார்ந்திருந்தார் - மீண்டு திருவாரூரில் சேர்ந்து எழுந்தருளியிருந்தனர்.

(வி - ரை) இப்பாட்டினால் நம்பிகள் ஏயர்கோன் கலிக்காமனாரது கூட்டத்தினைத் திருவருளாலே பெற்று இருவரும் திருவாரூரில் ஒருங்கிருந்து இறைவரை வணங்கியிருந்த பின் (3561), இங்குக் கழறிற்றறிவார் நாயனாரைச் சந்திக்கின்றவரை உள்ள நம்பிகளது சரித வரலாற்றைச் சுருக்கிக் கூறி முடித்தவாறு : இந்த இரண்டு நாயன்மார் புராணங்களுடன் ஒருங்கே விரவி நம்பிகளது சரிதமும் நிறைவாகத் தொடர்ந்து கூறபபட்டுவருதலும், இவ்வாறே திருத்தொண்டத் தொகையமைப்பினுள் திருவருளால் வைக்கப்பட்டுள்ள தெய்விக நிலையும் கண்டுகொள்க.

நம்பி தாமும் - "திருமுனைப்பாடி நாடர், மலர்புகழ்த் திருவாரூரின் மகிழ்ந்துடன் வந்த வேயர், குலமுதற் றலைவ னாருங் கூடவே குளிர்பூங் கோயில், நிலவினார் தம்மைக் கும்பிட் டுறைந்தனர்" (3561) என்று முன்னர்க் கூறிய அந்த-என்று உம்மை இறந்தது தழுவியது.

அந்நாட்போய் - ஏயர்கோனாயனார் தமது பதியில் விடைபெற்று மீண்ட பின்னரும், இங்குக் கழறிற்றறிவார் வருதற்கு முன்னருமாகிய முன்னாளிலே சென்று.

நாகைக் காரோணம்பாடி...பெற்று - இக்கருத்துப் பதிக ஆதாரவு பெற்றன என்பது கருதப்படும்.

மணிப்பூண் - நவமணிகள் - மணிகளிழைத்த பூண் வருக்கமே யன்றி வேறாக நவமணிகளையும் என்க. இவை வேறாகச் சிவபூசையிற் பயன்படுதற் குறிப்பாம்.

மற்றும் பல பதி - இவை திருநாகைக்காரோணத்துக்கும் திருவாரூருக்கும் இடையிட்டவையும், அணிமையிலுள்ளவையும் ஆம் என்பதும், இவை திருக்கீழ் வேளூர், திருச்சிக்கல் முதலாயின என்பதும் கருதப்படும்.

குறிப்பு - இப்பாட்டுச் சில பிரதிகளில் இல்லை. பின்னர்க் கழறிற்றறிவார் நாயனாருடன் போந்து "திருநாகைக்காரோணம் பணிந்து, சிந்தையினை யுருக்கார்வச்

செந்தமிழ்மாலை சாத்திச் சில நாளுறைந்து" (3832) என்று இத்திருப்பதிகச் சிறப்புடன் கூட்டிக் கூறப்படுகிறது. இக்கருத்துக்கள் ஆராய்தற்குரியன.

முன்னாட்போய்—என்பதும் பாடம். 63

3811. வந்து சேரர் பெருமானார் மன்னுந் திருவா ரூரெய்த,
அந்த ணாளர் பெருமானு மரசர் பெருமான் வரப்பெற்றுச்
சிந்தை மகிழ வெதிர்கொண்டு சென்று கிடைத்தார் ; சேரலனார்
சந்த விரைத்தார் வன்றொண்டர் முன்பு விருப்பி னுடன்றாழ்ந்தார். ௬௪

(இ - ள்) வந்து...எய்த - சேரமான் பெருமாளும் வந்து நிலைபெற்ற திருவாரூரினைச் சார ; அந்தணாளர் பெருமானும்...கிடைத்தார் - அந்தணர்களின் தலைவராகிய நம்பிகளும் அரசர் தலைவர் வரும்பேறுபெற்று மனம்மிக மகிழ எதிர்கொண்டு போய் அவரை அணுகினார் ; சேரலனார்...தாழ்ந்தார் - சேரமான் பெருமாளும் அழகிய மணமுடைய மாலை யணிந்த வன்றொண்டரின் முன்பு விருப்பத்துடனே தாழ்ந்து

(வி - ரை) அந்தணாளர் பெருமானும் அரசர்பெருமான் வரப்பெற்று - "சேரமான் றோழர்" என்று நம்பிகளுக்கு நாமம் வழங்கப் பெறுதற்கு உரிமை (3813) இருவரும் ஒப்பாந் தன்மை யுடைமையே என்பார் இருவரையும் பெருமான் என்றார். மேலும் "வேந்தர்" (3813) என்பதும் காண்க. வரப்பெற்று - வரும் பேறு பெற்று.

சென்று கிடைத்தார் - போய்க் கிட்டினார் ; கிடைத்தல் - சார்தல்.

தாழ்ந்தார் - வீழ்ந்து வணங்கினார் ; நிலமுறக் கீழ் வீழ்ந்தமை மேல்வரும் பாட்டில் "முகந்தெடுத்தே" (3812) என்பதனாற் பெறப்படும்.

வன்றொண்டர் - இப்பெயரினாலே இறைவர் நினைப்பித்தமையால் (3791) அதனையே எண்ணத்தில் நிலவக்கொண்டு, "வன்றொண்டர் தமையும் காண்பன்" (3792) என்றெழுந்துபோந்த சேரலனார் அந் நினைவோடே தாழ்ந்து வணங்கினர் என்ற குறிப்பும் பெற ஈண்டு வன்றொண்டர் என்ற அப்பெயராற் கூறினார். 64

3812. முன்பு பணிந்த பெருமாளைத் தாமும் பணிந்து முகந்தெடுத்தே
அன்பு பெருகத் தழுவவிரைந் தவரு மார்வத் தொடுதழுவ
இன்ப வெள்ளத் திடைநீந்தி யேற மாட்டா தலைவார்போல்
என்பு முருக வுயிரொன்றி யுடம்பு மொன்று மெனவிசைந்தார். ௬௫

(இ - ள்) முன்பு...தழுவ - தம் முன்னர் வீழ்ந்து பணிந்த சேரமான் பெருமானாயனாரை நம்பிகள் தாமும் பணிந்து அவரை அணைத்து மேல் எடுத்தே அன்பு பெருகுதலினாற் றழுவிக் கொள்ள ; விரைந்து...தழுவ - அவரும் மிக்க அன்புடனே தழுவ ; இன்ப வெள்ளத்திடை...போல் - இன்பமாகிய வெள்ளத்தின் மூழ்கிக் கரையேற மாட்டாது அலைபவர்கள் போல் ; என்பும்...இசைந்தார் - எலும்பும் உள்ளுருக உயிர்களும் ஒன்றாக உள்ளே கலக்க, அதுபோலப் புறத்தும் இரண்டு உடம்புகளும் ஒன்றாயின என்னும்படி பொருந்தினர்.

(வி - ரை) முகந்தெடுத்து - குனிந்து கைகளை அணைத்துத் தூக்கி மேல் எடுத்து.

இன்ப வெள்ளத்திடை மூழ்கி - இன்பப் பெருக்கினை நீர்ப் பெருக்கென உருவகித்தார்.

ஏறமாட்டா தலைவார்போல் - இசைந்தார் - என்று கூட்டுக ; ஏறுதல் - கரை ஏறுதல் ; எல்லை காணுதல் ; அலைவார்போல் - இருவரும் தழுவிக்கொண்டு விடாத நிலையில் அழுந்துதல் இவ்வாறுபசரிக்கப்பட்டது.

உயிர்ஒன்றி உடம்பும் ஒன்றுமேன - உயிர் ஒன்றுதல் உணர்ச்சி வகையாற் கட்புலப்படா நிலைமையில் நிகழ்வது ; உடம்பும் ஒன்றும் என - இது கட்புலப்பட நிகழ்வது ; உடம்புகள் ஒன்றுதல் கூடாமையின் அவ்வாறுள்ள இருவேறு உடம்புகளும் என்று உம்மை சிறப்பும்மை. உயிர் ஒன்றுதலே யன்றி உடம்பும் என்று இறந்தது தழுவியதுமாம். சிறப்புப் பற்றி உயிர் ஒன்றுதல் முன் வைக்கப்பட்டது. இசைதல்-கூடுதல், சேர்தல். தழுவியமையால் உடம்புகள் ஒன்றுயின போன்றன என்பது.

இசைந்தார் - பிரிக்கலாகாது பொருந்தினார் என்ற குறிப்பினால் இவ்விரு பெருமக்களும் இவ்வுடம்புகளுடனே தமது உயிர் நாயகராகிய இறைவர்பால் திருக்கயிலையிலும் உடனுச் சென்று சேர்ந்த பிற்சரிதக் குறிப்பும் பெறப் படுதல் காண்க.

என்பு முருகி—என்பதும் பாடம்.	65

3813. ஆன நிலைமை கண்ட திருத் தொண்ட ரளவின் மகிழ்வெய்த
மானத் தோழர் பெருமானார் தாமும் வன்றொண் டருங்கலந்த
பான்மை நண்பாற் " சேரமான் றோழ " ரென்று பார்பரவும்
மேன்மை நாம முனைப்பாடி வேந்தர்க் காகி விளங்கியதால். கூகூ

(இ - ள்) ஆன...எய்த - முன்கூறியவா றாயின தன்மையினைக் கண்ட திருத்தொண்டர்கள் அளவில்லாத மகிழ்ச்சியினை அடைய ; மான...நண்பால் - பெருமையுடைய தோழர் பெருமானாகிய சேரனாரும் வன்றொண்டராகிய நம்பிகளும் ஒருவரொருவருட் கலந்த பான்மையினாற் போந்த நண்பு காரணமாக; சேரமான்றோழர்... விளங்கியதால் - சேரமான் றோழர் என்னும் உலகுபுகழும் மேன்மை பொருந்திய திருநாமம் முனைப்பாடி நாட்டின் வேந்தராகிய நம்பிகளுக்கு உலகில் விளங்க வழங்கலாயிற்று.

(வி - ரை) தோழர் பெருமானார் - சேரனார். ஒத்த அன்பினால் தழுவிக்கொண்டு பேணுதல் தோழமைக்கே உரியதாதலின் தோழர் என்றார். மானம் - பெருமை.

வன்றொண்டர் - (3811) முன்னும் " வன்றொண்டர் " என்ற குறிப்பும் ஈண்டுக் கருதுக.

கலந்த பான்மை நண்பால் - பான்மையாவது தெய்வங் கூட்ட வரும் ஊழால் வருவது. இங்கு " அவரை நினைப்பிப்பார் " (3791) என்று இறைவர் தாமே காட்டுவித்ததனால் இந் நட்பு விளைந்தமை காண்க. நண்பால் - நண்பு காரணமாக; கலந்த - மேல், " ஒருவ ரொருவ ரிற்கலந்த வுணர்வு " (3814) என்பது காண்க.

சேரமான்றோழர்...ஆகி விளங்கியதால் - இப் பெயர் இத்தமிழ்நாட்டில் வழங்கக் காண்பதரிதாயிற்று ; ஆயினும் ஆசிரியரது மெய்த்திருவாக்கின் பயனாக இன்றும் சோநாட்டில் திருவஞ்சைக் களத்தில் மலையாளர் வழங்கக் காண்கின்றோம். ஒக்க ஓராதனத்தில் வீற்றிருக்கும் இவ் விருவருள்ளும் " ஈ - ஆள் தோழராண " என்று அவர்கள் நம்பிகளைச் சுட்டிக் கூறுவதைக் கேட்டபோது அடியேனுக்குண்டாகிய ஆனந்தத்துக் களவில்லை.

மேன்மை நாமம் - இறைவர் " தோழமையாக வுனக்கு நம்மைத் தந்தனம் " (273) என்றது கொண்டு முன்னர்த் " தம்பிரான் றோழர் " என்ற நாமத்தினை

வழங்கினர் ; இன்று நம்பிகளும் சேரனாரும் ஒத்த நட்புரிமையினாற் றழுவிக் கொண்டமை கண்டு " சேரமான் றோழர் " என்று இப் பெயர் விளங்க வழங்கப் பெற்றது. அதனினும் இது மேன்மையுடையது ; திருவருட் பான்மையினால் நிகழ்ந்ததாதலின் ; என்பதாம். ஆண்டவன் கலப்பினும் அடியார் கலப்பு மிக்க மேன்மையான ஆனந்தானுபவம் தருவதாம் என்பதும் குறிப்பு ; சிவப்பேறு கூறி முடித்த பதினொராம் சூத்திரத்தின் மேல் வரும் 12-ம் சூத்திரத்தில் " அன்பரொடு மரீஇ" என்று அடியார் கலப்பினை விதந்து பேசப்படும் நிலையும் காண்க.

ஆகி - ஆகப்பெற்று ; ஆக்கச் சொல் இக் காரணம் பற்றி என்று குறித்தது. " நல்ல தோழர் நம்பெருமா டமக்கு நம்பி யிவரென்பார் " (3895).

விளங்கியதால் - மேம்பாடு குறித்தது. விளக்கம் பெற வழங்குவதாயிற்று ; ஆல் - அசை. 66

3814. ஒருவ ரொருவ ரிற்கலந்த வுணர்வா லின்ப மொழியுரைத்து
" மருவ வினியார் பாற்செய்வ தென்னோ?" மென்று மகிழ்ச்சியினாற்
பருவ மழைச்சேங் கைப்பற்றிக் கொண்டு பரமர் தாள்பணியத்
தெருவு நீங்கிக் கோயிலினுட் புகுந்தார் சேர மான்றோழர். ௬௭

(இ - ள்) ஒருவர்...உரைத்து - ஒருவருள் ஒருவர் கூடிய உணர்ச்சியினாலே இன்பம் தரும் மகிழ்ச்சி மொழிகளைச் சொல்லிக்கொண்டு ; மருவ...மகிழ்ச்சியினால் - பொருந்திப் பயிலுந்தோறும் இனிமை தருவாராகி இருவரையும் கூட்டி வைத்த இறைவர்பால் மேல் நாம் செய்யக்கடவதாகிய கைமாறு என்னே என்று மனத்துள் எழுந்த மகிழ்ச்சியினாலே ; சேரமான் தோழர் - சேரமான் தோழராகிய நம்பிகள் ; பருவமழைச் செங்கை...புகுந்தார் - சேரமானாரது பருவகால மழை போன்ற கொடைபயிலும் செங்கையினைப் பற்றிக்கொண்டு இறைவரது திருவடிகளைப் பணிவதற்கு எண்ணித் திருவீதியினை நீங்கித் திருக்கோயிலினுள்ளே புகுந்தருளினர்.

(வி - ரை) ஒருவர்...உணர்வாலது - இவரது உணர்ச்சியினுள்ளே அவரது உணர்ச்சியும், அவ்வாறே, அவரது உணர்ச்சியுள் இவரது உணர்ச்சியுமாகக் கலத்தல்.

இன்பமொழி - தெய்வத்திருவருள் நலங்களாகிய இன்பமொழிகளை ஒருவர்பால் ஒருவர் கூறிக் கொள்ளுதல்.

மருவ இனியார்...என்னும் ! - மருவ இனியார் - பயிலுந்தோறும் புதிது புதிதாக இன்பந்தரும் இறைவர் இங்கு, இருவரையும் நினைவுபடுத்தியும் கூட்டி வைத்தும் அருளி அன்பர் கூட்டத்தினால் வரும் பெரிய இன்பத்தை உளதாக்கிய அருள்பற்றி இவ்வாறு கூறினர். செய்வது - செய்யும் கைமாறு ; நாம் செய்வது என் என்று கூட்டுக. என் - நாம் என்க. தெய்வத்தை மகிழ்தல் என்ற அகப்பொருட்டுறைக் கருத்து ; (கோவை - 6 பார்க்க). அவரை வணங்குதலன்றி வேறென் செய்ய வல்லோம் என்பார்போலக் " கோயிலினுட் புகுந்தார் " என்றார்.

இங்கு, இவ்வாறன்றி, இன்பமொழி உரைத்து - மருவி என்று கூட்டி, மருவ என்பதற்கு மருவியவழி என்றுரைத்தும், இனியார்பாற் செய்வது என்னும் - இனியவராகிய சேரமானாரிடத்து இனிச் செய்யக் கடவது இறைவரைச் சென்று வணங்குவதன்றி வேறுயாதுளது என்றுரைத்தும், உரைகண்டனர் முன் உரைகாரர்கள். இவற்றின் பொருத்தங்கள் ஆராயத்தக்கன.

பருவ மழைச் செங்கை - " காரா ணிகர்க்க வரியகொடைக் கையார் " (3803) என்ற கருத்து ; ஆண்டுரைத்தவை பார்க்க; " பருவக் கொண்மூப் படி" என்ற

திருமுகப் பாசுரத்தின் ஆட்சி போற்றப் பட்டது. கைப்பற்றிச் செல்லுதல் நட்புரிமையின் செயல். மழைச் செங்கை - மழைபோலக் கொடை பயிலும் கை என்க.

சேரமான் தோழர் - அடியார்கள் இந் நாமத்தினை விளங்க வழங்கலாயினர் என முன் பாட்டில் வரலாறு கூறினாராதலின், அதன்படி, ஆசிரியர் தாமே அடுத்து இப் பாட்டில் அந் நாமத்தை விளங்க வழங்கலாயின கவிநயம் காண்க.

கோயிலினுட் புகுந்தார் - நம்பிகள் வந்து எதிர்கொண்டு கிடைத்த இடத்தினின்றும் நேரே திருக்கோயிலினுட் சென்று புக்கனர் என்க. அன்பரொடுகூடி இறைவனை வணங்கப் பெறுதல் பேரின்பந் தருவதாம். 67

3815. சென்று தேவா சிரியனைமுன் னிறைஞ்சித் திருமா ளிகைவலங்கொண்
டொன்று முள்ளத் தொடும்புகுவா ருடைய நம்பி முன்னாக
நின்று தொழுது கண்ணருவி வீழ நிலத்தின் மிசைவீழ்ந்தே
என்று மினிய தம்பெருமான் பாத மிறைஞ்சி யேத்தினார். கூஅ

(இ - ள்) சென்று...புகுவார் - முன்கூறியவாறு நம்பிகள் நமது கையினைப் பற்றி அழைத்துச் செல்லச் சென்று திருமுன்றிலில் முகற்கண் உள்ள திருத்தேவாசிரியனை முதலில் தொழுது, பின், இறைவரது திருமாளிகையினை வலமாகச் சுற்றி வந்து ஒன்றுபட்ட மனத்தோடும் உட்புகுவோராகிய சேரமான் பெருமாணயனார்; உடைய நம்பி முன்னாக - ஆளுடைய நம்பிகள் முன்னே நின்று வழிபட; நின்று - தாம் அவர் பின்னே நின்று; தொழுது...வீழ்ந்தே – வணங்கிக் கண்ணீர் அருவிபோல வீழத் தாம் நிலத்தின்மேல் விழுந்தே; என்றும்...ஏத்தினார் - என்றும் இனிய தமது பெருமானாராகிய புற்றிடங்கொண்ட பெருமானாரது திருவடிகளை வணங்கித் துதித்தருளினார்.

(வி - ரை) முன்பாட்டிற் கூறியது நம்பிகளது செயல்; இப்பாட்டினால் அவ்வாறு செய்யப்பட்ட சேரனாரது செயல் கூறப்பட்டது. உடன் சென்ற நம்பிகளும் இறைவரை வணங்கினாரேனும் புராணவரலாறு சேரலனாரைப்பற்றியதாதலின் அவர் வழிபட்ட செயலே விரித்துக் கூறப்பட்டது கவிநயம்.

சென்று...புகுவார் - வழிபடும் முறை; புகுவார் - திருக்கோயிலினுட் புகுவாராகிய சேரலனார்; புகுவார் - தொழுது - வீழ்ந்தே - இறைஞ்சி - ஏத்தினார் என்க. புகுவார் - வினையாலணையும் பெயர்.

ஒன்றும் உள்ளம் - இறைவன் திருவடிகளில் ஒன்றுபட்ட மனம்; ஒன்றுதல் பிரிவின்றிப் பொருந்துதல். "ஒன்றியிருந்து நினைமின்கள்" (தேவா - அரசு).

முன்னாக - முன் நின்று வழிபட; நின்று - தாம் அவர் பின்னே நின்று.

என்றும் இனிய - பெத்த முத்தி யிரண்டு நிலையிலும் எக்காலத்திலும் இனிமையே செய்யும்; தம்பெருமான் - புற்றிடங்கொண்ட பெருமானார்.

ஏத்தினார் - துதித்தார்; திரு மும்மணிக்கோவை பாடிக் கேட்பித்தல் வேறு; அது மேற்பாட்டிற் கூறப்படும். 68

3816. தேவர் முனிவர் வந்திறைஞ்சுந் தெய்வப் பெருமாள் கழல்வணங்கி
மூவர் தமக்கு முதலாகு மவரைத் திருமும் மணிக்கோவை
காவ லூரர் தம்முன்பு நன்மை விளங்கக் கேட்பித்தார்
தாவில் பெருமைச் சேரலனார்; தம்பி ரானார் தாங்கொண்டார். கூகூ

(இ - ள்) தேவர்...வணங்கி - தேவர்களும் முனிவர்களும் வந்து இறைஞ்சுகின்ற தெய்வப் பெருமாளாகிய தியாகேசரது திருவடிகளை வணங்கி; தாவில் பெருமைச் சேரலனார் - கெடுதலில்லாத பெருமையினையுடைய சேரமான் பெருமாணாயனார்; மூவர்...அவரை - மூவர்க்கும் முதல்வராகும் அவ்விறைவரை; நாவலூரர் தம்முன்பு - திருநாவலூர் நம்பிகளது திருமுன்பு வைத்து; திருமும்மணிக் கோவை நன்மை விளங்கக் கேட்பித்தார் - திருமும்மணிக்கோவை பாடி நன்மை விளங்கும்படி கேட்பித்தனர்; தம்பிரானார் தாம் கொண்டார் - அதனைத் தமது பெருமானாரும் ஏற்றுக்கொண் டருள்புரிந்தனர்.

(வி - ரை) தெய்வப் பெருமாள் - வீதிவிடங்கராகிய தியாகேசர்.

மூவர் தமக்கு...திருமும்மணிக்கோவை - மூவர் - அயன் - அரி - அரன்; (பிரமன் - விட்டுணு - உருத்திரன் என்பர்); இவர்களுக்கு முதலாதல் அவர்களுடைய டைய தொழில்களுக் கெல்லாம் காரணராக இருந்து தாமே இயக்குதல்; "அரியாகிப் காப்பா னயனாய்ப் படைப்பா, னரனா யழிப்பவனுந் தானே" (ஞானவுலா); பிள்ளையாரது (பண் - நட்டபாடை) திருச்சிவபுரத் தேவாரம் 1 - 2 - 3 பாட்டுக்கள் பார்க்க. மும்மணிகள் - வெவ்வேறாகிய மூன்று மணிகள்; கோவை - கோக்கப்பட்ட மாலை; இங்கு மும்மணிகள் என்பது ஆசிரியப்பா - வெண்பா - கலித்துறை என்பன; மணிகள் மூவகைப் படினும் ஒரே நாணிற் கோக்கப்பட்டு ஒரு மாலையாதல் போல இங்கு மூவர்க்கும் முதல்வராகிய ஒருவர் இப் பாட்டுக்களினுட் பொருள் என்பதாம்.

முன்பு - திருமுன்னர்; நன்மை விளங்க - உலகம் ஓதிப் பயன்பெற்று நலமடைந்து விளங்க.

அவரைக் - கேட்பித்தார் என்று கூட்டுக; கேட்பித்தலாவது திருச்செவி மடுக்க

தாவில் - சிதைவில்லாத; கெடாத. ஒப்பற்ற என்றலுமாம்.

கொண்டார் - ஏற்றருளிச் செய்தனர். 69

திருவாரூர்த் திருமும்மணிக் கோவை

திருச்சிற்றம்பலம்

**அகவல்**

விரிகடல் பருகி யளறுபட் டன்ன, கருநிற மேகங் கன்முக டேறி,
துண்டுளி பொழிய நோக்கி, யொண்டொடி, பொலங்குழை மின்னப் புருவ வில்லிட்,
டிலங்கெழிற் செவ்வாய் கோப மூர்தரக், கைத்தல மென்னுங் காந்தண் மலர,
முத்திலங் கெயிறெனு முல்லை யரும்பக், குழலுஞ் சுணங்குங் கொன்றை காட்ட,
வெழிலுடைச் சாய விளமயில் படைப்ப, வுண்ணிறை யுயிர்ப்பெனு மூதை யூர்தரக்,
கண்ணீர்ப்பெருமழைபொழிதலிஞெண்ணிறக், கஞ்சனக்கொழுஞ்சேறலம்பியெஞ்சா,
மணியும் பொன்னு மாரமு முரிஞ்சிக், கொங்கை யென்னுங் குவட்டிடை யிழிதரப்,
பொங்குபுயல் காட்டி யோளே; கங்கை, வருவிசை தவிர்த்த வவிர்சடைக் கடவுள்,
அரிவை பாகத் தண்ண லாரூர், எல்லையி லிரும்பலி சொரியுங்,
கல்லோ சென்ற காதலர் மனமே. (1)

**வெண்பா**

மனமா லுறுதேமற் றென்செய்யும் வாய்ந்த
கனமால் விடையுடையோன் கண்டத்—தினமாகித்
தோன்றினகார்; தோன்றிலதேர்; சேர்ந்தனசங்; கூர்ந்தனபீர்;
கான்றனநீ ரேந்திழையாள் கண். (2)

**கட்டளைக் கலித்துறை**

கண்ணார் நுதலெந்தை காமரு கண்ட மெனவிருண்ட
விண்ணா லுருமொடு மேலது கீழது கொண்டல்விண்ட
மண்ணார் மலைமேல் விளமயி லான்மட மானனைய
பெண்ணா மிவளினி யென்னாய்க் கழியும் பிரிந்துறைவே. (3)

* * * *

**கட்டளைக் கலித்துறை**

தாழ்ந்து கிடந்த சடைமுடிச் சங்கரன் றாள்பணியா
தாழ்ந்து கிடந்துநை வார்கிளை போலயர் வேற்கிரங்கிச்
சூழ்ந்து கிடந்த கரைமேற் றிரையென்னுங் கையெறிந்து
வீழ்ந்து கிடந்தல றித்துயி லாதிவ் விரிகடலே. (30)

திருச்சிற்றம்பலம்

**திருமும்மணிக்கோவை — குறிப்பு:**—இந்நூல் முழுதும் அகப்பொருட் டுறைகளால் அமைந்து திருவாரூர் இறைவரது புகழ்களைப் பரவியது ; இத்துறைகளுட் பெரும்பாலும் பாலைத்திணைக் குரிப்பொருளாய்ப் பேசப்பெறும் பிரிவும் பிரிவினிமித்தமும் ஆம். பிரிந்தபின் தலைவி ஆற்றியிருத்தலாகிய முல்லைத்திணையும், இரங்குதற்குரிய நெய்தற்றிணையும், ஊடலை உரிக்குரிய் உட்கொண்ட மருதத்திணையும் சிறுபான்மை விரவி இதனுள் வரக் காணலாம் கூடலும் கூடலினிமித்தமுமாகிய குறிஞ்சித்திணைக்குரியனவும் சில பகுதிகள் உண்டு.

அரிவை பாகத்தண்ணல் (1), வாய்ந்த கனமால் விடையுடையான் (2), எந்தை காமரு கண்டம் (3), அலகிலாற்ற லருச்சுனற் கஞ்ஞான், றுலவா நல்வா மருளிய வுத்தமன் (4), அயிலாய வண்டத்துக் கப்பாலானந்திங்கட் கண்ணியான் (5), புல்லார், திரிபுர மெரிய வொருகணை தெரிந்த, வரிவை பாகத் தண்ணல் (7), ஆரூ ரமர்ந்துறை யமுதன், முருகுவிரி தெரியன் முக்கண்மூர்த்தி (10), கூற்றெனப் பெயரிய கொடுந் தொழி லொருவ, ஞற்றல் செற்ற வண்ணல் (13), அரவஞ் சடைக்கணிந்த சங்கரன் (17), அமரரு மறியா வாதிமூர்த்தி குமரன் றாதை, குளிர்சடை யிறைவ, னறைகழலெந்தை (19), உலா நீர்க்கங்கை யொருசடைக் கரந்து, புலானீ ரொழுகப் பொருகளி றுரித்த, பூத நாத ஞதி மூர்த்தி, திருமட மலைமகட் கொருகூறு கொடுத்துத்த, னன்பி னமைத்தவன் (28) என்பன முதலாக வரும் திருவாரூர் இறைவரது புகழ்களை அகத்துறைப் பொருள்களைக் கூறுமுகத்தாற் பொதிந்து வைத்து எடுத்துப் போற்றுதல் இத்திருமும்மணிக்கோவையின் கருத்து. திருக்கோவையார் முதலாக வரும் அகப்பொருட்பாட்டுக் கருத்தும் நுதலிய பொருளும் அதுவேயாதல் காண்க. அஃதாவது நாயகன் புகழ்தனை உள்ளுறையாக வைத்தல்.

**நூலின் பாட்டுக் குறிப்பு** - நூற்குறிப்பின் விரிவும், பாட்டுக் குறிப்புக்களும் பின்னர்ப் பின்சேர்க்கையில் வரும் உரையிற் கண்டுகொள்க.

**3817.** அங்க ணருள்பெற் றெழுவாரைக் கொண்டு புறம்போந் தாரூரர்
நங்கை பரவை யார்திருமா ளிகையி னண்ண நன்னுதலார்
பொங்கு விளக்கு நிறைகுடமும் பூமா லைகளும் புகையகிலும்
எங்கு மடவா ரெடுத்தேந்த வணைந்து தாமு மெதிர்கொண்டார். ௭0

(இ - ள்) **அங்கண்...ண்ண** - அவ்விடத்து இறைவரது திருவருளைப் பெற்று எழுந்த கழறிற்றறிவாரை உடன்கொண்டு புறம் போந்து நம்பியாரூரர், நங்கை

பரவையாரது திருமாளிகையின் கண்ணே பொருந்த; நன்னுதலார்...ஏந்த - ஒளி மிகும் விளக்குக்களையும் நிறைகுடங்களையும் பூமாலைகளையும் எங்கும் பெண்கள் ஏந்தி வர; அணைந்து தாமும் எதிர்கொண்டார் - மாளிகையின் திருவாயிலின் வந்து தாமும் எதிர் வரவேற்றனர்.

(வி - ரை) அங்கண் அருள் பெற்று - திருமும்மணிக் கோவையினை இறைவரைக் கேட்பித்து அவரும் ஏற்றருள, அவ்வருளினை அவ்விடத்தே அப்பொழுதே பெற்று; அங்கண்மையுடைய திருஅருளினை என்றலுமாம்.

நங்கை பரவையார் - நங்கை - பெண்களுட் சிறந்தோரைக் கூறும் மரபுப் பெயர்.

திருமாளிகையில் நண்ண - நம்பிகள் சென்று எதிர்கொண்ட இடத்தினின்றும் திருவீதி கடந்து நேரே திருக்கோயிலில் இருவரும் சேர்ந்தார்களாதலின் அங்கு நின்றும் திருமாளிகைக்கு வந்து என்க.

பொங்கு ஏந்த - விளக்கு, நிறைகுடம், பூமாலை, நறும்புகை முதலிய மங்கலப் பொருள்களை நிரைத்து ஏந்திப் பெரியோர்களை வரவேற்றல் மரபு; இவ்வழக்கம் இன்றும் சேரநாட்டினும் ஈழநாட்டினும் நிகழக் காணலாம். நமது தென் தமிழ்நாடு இதனை மறந்தொழிந்தது!

மடவார் - விளக்கு முதலியவற்றை மங்கலப் பெண்கள் ஏந்துதல் மரபு; இவ் வழக்கும் சேரநாட்டில் இன்றும் காணப்பெறுவதாம்.

தாமும் எதிர்கொண்டார் - முன்னர் நம்பிகள் புறஞ்சென்று எதிர்கொண்டமை போலத் தாமும் திருமாளிகைத் திருவாயிலில் என்று உம்மை இறந்தது தழுவியது; மனைக்குரிமையுடைய அம்மையார் வருவிருந் தெதிர்கோடல் மனையறத்தின் பெருங் கடமைகளுள் ஒன்று. "மனைக், கடனுடைய திருவெண்காட் டம்மைகடைத் தலையெய்தி" (3697); "திருமனையில் மனைவி யார்தா மாதவரை, முந்த வெதிர்கொண் டடிவணங்கி, முழுது மழகு செய்தமனைச் சந்த மலர்மா லைகள்முத்தின் ஞமை நாற்றி" (3729) என்பன முதலாக வந்தவை காண்க. 70

3818. சோதி மணிமா ளிகையின்கட் சுடரும் பசும்பொற் காலமளி
மீது பெருமா டமையிருத்தி நம்பி மேவி யுடனிருப்பக்
கோதில் குணத்துப் பரவையார் கொழுந ஞர்க்குந் தோழர்க்கும்
நீதி வழுவா வொழுக்கத்து நிறைபூ சனைகண் முறையளித்தார். ௭௧

(இ - ள்) சோதி...உடனிருப்ப - ஒளி வீசும் மணிகள் பொருந்திய திருமாளிகையின்கண் ஒளிவிளங்கும் பசும்பொன்னாலியன்ற கால்களையுடைய ஆசனத்தின் மேல் சேரமான் பெருமாளை அமரும்படி செய்து நம்பிகளும் பொருந்தி உடன் இருக்க; கோதில்...முறை அளித்தார் - குற்றமற்ற குணத்தையுடைய நங்கை பரவையார் தமது கணவனாராகிய நம்பிகளுக்கும் அவரது தோழராகிய சேரலனாருக்கும் நூல்கள் விதித்த நீதியினின்றும் வழுவாத ஒழுக்கத்தில் நின்று நிறைந்த பூசையினை முறைப்படி செய்தனர்.

(வி - ரை) இப்பூசனைகள் அடியார்கள் தமது மனையில் எழுந்தருளியவுடன் ஆசனத்தமர்த்திச் செய்யத் தக்கவை. இவை திருவமுதூட்டுதற்கு முன் செய்யப்படுவன. "கொண்டு வந்து மனைப்புகுந்து குலாவு பாதம் விளக்கியே, மண்டு காதலி னாத னத்திடை வைத்த ருச்சனை செய்தபின்" (443); "கதுமெனக் கணவ னாரைக் கண்ணுதற் கன்ப ரோடும், விதிமுறை தீப மேந்தி" (851) என்பன முதலியவை காண்க.

கோத்தில் துணைத்து - நீதி வழுவா ஒழுக்கத்து நிறை பூசனைகள் - என்பன விதி முறை மரபு ஒழுக்கத்தினைக் குறித்தன.

கொழுநனர்க்கும் தோழர்க்கும் - சிறப்பும் உரிமையும் பற்றிக் கொழுநனை முன்வைத்துக் கூறினர் : அவருடன் ஒப்பச் சேரனருக்கும் உடன் பூசனைகள் அளித்தற்குரிமை தோன்றத் தோழர் என்றார்.

நீதி வழுவா - நிறை - பூசனைகள் முறை - இவை சிவாகமங்களுள் விதிக்கப் பட்டன. முன்னரும் " விதிமுறை " (451) என்றது காண்க.

பசும்பொற்கா லமளி - பொற்கால்களையுடைய கட்டில் ; பீடம் ; ஆசனம்.

பூசனைகள் - தூபதீபம் ஏந்துதல் முதலாயின. அளித்தார் - செய்தனர். 71

3819. தாண்டு புரவிச் சேரர்குலப் பெருமா டமக்குத் திருவமுது
தூண்டு சோதி விளக்கனையா ரமைக்கத் துணைவர் சொல்லுதலும்
வேண்டும் பரிசு வெவ்வேறு விதத்துக் கறியும் போனகமும் [த்தார்.
ஈண்டச் சமைப்பித் துடன்வந்தார்க் கெல்லா மியல்பின் விருந்தமை

(இ - ள்) தாண்டு...சொல்லுதலும் - தாண்டிச் செல்லும் குதிரைப்படையினையுடைய சேரமான் பெருமானுக்குத் தூண்டு சோதி விளக்கு போன்ற பரவையாரைத் திருவமுது அமைக்கும்படி துணைவராகிய நம்பிகள் சொல்லுதலும் ; வேண்டும்...விருந்தமைத்தார் - அவர் வேண்டும் தன்மையினால் வெவ்வேறாகிய அனேகவிதமுள்ள கறிகளும் போனகமும் விரைவிற் சமைப்பித்து அவருடன் வந்தார்க்கெல்லாம் இயல்பின் விருந்தினை அமைத்தனர்.

(வி - ரை) தாண்டு புரவி - தாண்டிச்செல்லும் தன்மையினையுடைய குதிரைப் படை.

தாண்டு புரவி - வரலாற்றி னிறுதியில் சேரமான்பெருமாள் குதிரைமேல் ஏறி இவ்வுலகைத் தாண்டிக் கயிலை செல்லும் சரிதக் குறிப்புப்படவும் நின்றது.

விளக்கனையாரைத் திருவமுதமைக்கத் துணைவர் சொல்லுதலும் - என்க ; கற்பித்த வழிநிற்கும் கடப்பாடு பற்றித் தூண்டு சோதி விளக்கனையார் என்றார். துணைவர் - கணவர் : நம்பிகள். திருவமுதமைத்தல்பற்றி நம்பிகள் சேரனாரைச் சந்தித்தபோதே அறிவித்திருக்கலாமே எனின், அப்போது அவர் மனமுழுதும் அவரை உடன்அழைத்துச்சென்று இறைவரைச் சேவித்தவரும் இன்பத்துள்ளேயே அழுந்தியிருந்ததென்க.

வெவ்வேறு விதம் - சுவையாலும் உண்ணும் வகையாலும் வேறு வேறாக அமைந்த நிலை; " உண்டி நாலு விதத்தி லாறு சுவைத் திறத்தினில்" (443); போனகம் - திருவமுது : சோறு ; வெவ்வேறு விதம் என்றதனைப் போனகம் என்பதனுடனும் கூட்டி உரைக்க நின்றது. வெவ்வேறு போனகமாவன பல வேறு வகைச் சிறுசோறு. சித்திரான்னம் என்பர். ஈண்ட - விரைவாக.

உடன் வந்தார் - சேரனருடன் வந்த பரிசனங்கள். "வேண்டு வாரை யுடன் கொண்டு " (3797); இயல்பின் - அவ்வவர்க்கேற்ற பண்பின்.

விருந்து - புதுமை ; புதியராய் வந்தவர் ; அவர்பொருட்டு அடப்பட்ட அமுது முதலியன ; விருந்தினர்க்கிடும் அமுதுக்காகி வந்தது ; இருமடி ஆகுபெயர்.

ஈண்டு—என்பதும் பாடம். 72

3820. அரசர்க் கமைத்த சிறப்பினுமே லடியார்க் கேற்கும் படியாக
விரவிப் பெருகு மன்பினுடன் விரும்பு மமுது சமைத்ததற்பின்

புரசைக் களிற்றுச் சேரலனார் புடைசூழ்ந் தவரோ டமுதுசெயப்
பரவைப் பிறந்த திருவனைய பரவை யார்வந் தறிவித்தார். எங

(இ - ள்) அரசர்க்கு...படியாக - அரசர் என்ற தன்மைக்குத் தக்கபடியாக அமைத்ததினும் சிறப்பின் மேலாய் அடியார் என்ற தன்மைக்கு ஏற்கும்படியாக; விரவி...சமைத்ததற்பின் - பொருந்திப் பெருகும் அன்பினோடு விரும்புகின்ற திருவமுதினைச் சமைத்த பின்பு; புரசை...அமுதுசெய - கழுத்துக்கயிற்றினை யணிந்த யானைகளையுடைய சேரலனார் தமது உடன் வந்தவர்களோடும் திருவமுது செய்ய; பரவை ...அறிவித்தார் - கடலிற் பிறந்த திருவினை ஒத்த பரவையார் வந்து நம்பிகளுக்கு அறிவித்தார்.

(வி - ரை) அரசர்...படியாக - அரசர்க் கமைத்த சிறப்பு - உலகியல் பற்றியது; அடியார்க் கேற்கும்படி - சிவன்பால் அன்பினியல் பற்றியது: மேல் - இஃது அதனினும் மேம்பட்டது என்றறிவித்தது உலகினர்க்குத் தெருட்டியதாம்; சேரனாரிடம் இவ்விரு தன்மைகளும் சிறந்தனவாக இருப்பவும், இங்குப் பரவையார் அவற்றுள் மேலாக எண்ணிக்கொண்டு அமுதூட்டியது மேம்பட்ட அடியார் தன்மைபற்றி என்பது குறிப்பு. அதுவே சிறந்த குறிக்கோள் என்றறிவித்த நயமும் காண்க; இப் புராணத்திலே உட்கோளாக விளங்குவது அதுவேயாம்.

புரசைக்களிறு - புரசை - யானைக் கழுத்தணி கயிறு; களிற்றுச் சேரலனார் - "வேழமுடைத்து மலைநாடு" என்றபடி நாட்டின் உரிமைச் சிறப்புக் குறித்தது.

புடைசூழ்ந்தவர் - சேரர் பிரானுடன் வந்தவர்கள்.

பரவைப் பிறந்த திரு - பரவை - அருட்கடல்; திரு - அருட்கடலிற் றோன்றும் உமையம்மை: சிவசத்தி சுவரூபமான மகாலட்சுமி என்பர்; இவர் சிவபூசையில் வாயுகோணத்தில் வைத்து வழிபடப்படும் தேவி; பரவையார் உமையம்மையாரது பணிசெய்து அத்தன்மை பெற்றவர் என்பது அவரது மேன்மை குறிப்பது. அவரது பெயர்ச்சிறப்பும் குறிப்பு; 294 பார்க்க.

அறிவித்தார் - நம்பிகளுக்கு என்பது வருவிக்க; வரும் பாட்டுப் பார்க்க. 73

3821. "சேரர் பெருமா னெழுந்தருளி யமுது செய்யச் செய்தவத்தாற்
றாரின் மலிபூங் குழன்மடவாய்! தாழா தமுது செய்வி" யெனப்
பாரின் மலிசீர் வன்றொண்ட ரருளிச் செய்யப், பரிகலங்கள்
ஏரின் விளங்கத் திருக்காத்தி லிரண்டு படியா வேற்றுதலும், எச

3822. ஆண்ட நம்பி பெருமானை "யுடனே யமுது செய்தருள
வேண்டு" மென்ன, வாங்கவரும் விரைந்து வணங்கி வெருவுறலும்
நீண்ட தடக்கை பிடித்தருளி மீண்டு நேரே குறைகொள்ள
ஈண்ட வமுது செய்வதனுக் கிசைந்தார் பொறையர்க் கிறையவனார்.

3821. (இ - ள்) தாரின்மலி பூங்குழலாய் - பூமாலையினை அணிந்த குழலினையுடைய பரவையே!; செய்தவத்தால் - முன்பு செய்தவத்தின் பயனாக; சேரர்... அமுதுசெய்ய - சேரமான் பெருமாள் இங்கு எழுந்தருளித் திருவமுது செய்யும்படி பெற்றமையாலே; தாழாது அமுது செய்வி...அருளிச் செய்ய - காலந் தாழ்க்காமல் திருவமுது செய்விப்பாயாக என்று உலகில் நிறைந்த சிறப்பினையுடைய வன்றொண்டர் அருளிச் செய்ய; ஏரின்...ஏற்றுதலும் - அழகின் விளங்கும் தமது திருக்காத்திலே இரண்டு படியாகப் பரிகலங்களை ஏற்றுதலும், எச

3822. (இ - ள்) ஆண்ட...என்ன - ஆளுடைய நம்பிகள் சேரமான்பெருமாளைத் தம்முடனே கூட இருந்து திருவமுது செய்தருள வேண்டும் என்று கூற; ஆங்கவரும்...வெருவுறலும் - அங்கு அவரும் விரைவாகப் பணிந்து அஞ்சித் திடுக்கிடலும்; நீண்ட...குறைகொள்ள - நீண்ட பெரிய கைகளைப் பிடித்துக்கொண்டருளி நம்பிகள் மீண்டும் நேரே வேண்டிக் கொள்ளுதலும்; ஈண்ட...இறையவனார் - உடன் இருந்து அமுது செய்வதற்குச் சேரமான் பெருமாள் இசைந்தருளினர். எடு இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒருமுடிபு கொண்டன.

3821. (வி - ரை) செய்தவத்தால் - அமுது செய்ய - என்க; சேரமான் பெருமாள் திருவமுது செய்யும் பேறு முன்னை நாளிற் செய்தவத்தா லன்றிக் கிடைக்கப் பெறுதென்பதாம். தவத்தால் - தவத்தின் பயனாக; செய் - முன்செய்த.

செய்வி - செய்தற்கேற்ற நிலைகளை அமைக்க.

பரிகலம் - உண்கலம்; ஏரின் விளங்க - அழகு பொருந்தத் திருத்தப்பட்டு விளங்க.

திருக்கரத்தில் - பரிசனங்களாலன்றி மனைக்கடனுடைய தமது திருக்கையினாலே; இறைவிக்குப் பணி செய்த பேறு பெற்றமையால் திருக்கரம் என்றார்.

இரண்டு படியா - இரண்டு படியினையுடையனவாக; இருவேறிடங்களில்; ஆக என்பது ஈறுகெட்டு ஆ என நின்றது. படி இரண்டாவன - நம்பிகளுக்கு ஒரு தனி யிடத்திலும் சேரலனாருக்குப் பிறிதோரிடத்திலு மாவன; ஒருவர் சைவ அந்தணரும் மற்றவர் அரசருமாதலின் உலகியல் நிலையின் அறநூல் விதித்தவாற்றால் ஒருங்குண்ண இசையாமையின் அம்மரபு பற்றி அம்மையார் இவ்வாறு வெவ்வேறாக ஏற்றினர் என்பதாம். அதுபற்றியே நம்பிகள் உடனே இருந் தமுதுசெய்ய வேண்டினபோது சேரனார் வெருவுற்று மறுத்தார் என்பது மேற்பாட்டினால் பெறப்படும்; உடனிருந் தமுதுசெய்யும் தகுதி பலவாற்றானும் தமக்கில்லை என்பது சேரலனார் கருத்து. ஆயின், நம்பிகள் அவ்வாறு அவரைத் தம்முடனிருந்து அமுது செய்ய வேண்டினமையும் அவ்வாறே அவர் அமுது செய்தருளியமையும் யாது காரணம் பற்றி? எனின், அஃது அன்பினியல் பற்றியதென்க. அன்பினியல் உலகியலின் அறநூல் ஒழுக்கத்தின் மேம்பட்ட தென்க. முன்னர் "அரசர்க் கேற்ற பெற்றியினு மடியார்க் கேற்கும் படியாக" (3820) என்றதும் இக்குறிப்புத் தருவதாம். அப்பூதி நாயனார் புராணத்திலும் (1823) இதுபற்றி உரைத்தவையும் இங்குக் கருதத்தக்கன.

ஏற்றுதல் - பரிகலங்களை அமுது செய்தற்கு உரியவாறு அமைத்தல்; ஈர்வாய் வலம்பெற வைத்தல், பீடம் அமைத்தல், திருக்கை நீவுதற்கு நீர் வைத்தல் முதலாயின வெல்லாம் இதனுள் அடங்கும்.

திருத்திக்கால் இரண்டிற் படியா என்று பாடங்கொண்டு சுத்தி செய்து இரண்டு முக்காலிகளிலே சமமாக வைத்து என்றுரைப்பாருமுண்டு. அதன் பொருத்தம் ஆராயத் தக்கது. பரிகலம் - உண்கலம்; கால் - அதற்காக வரும் முக்காலி; 3732 பார்க்க.

செய்ய தவத்—செய்தவத்—என்பனவும் பாடங்கள். 74

3822. (வி - ரை) உடனே அமுது செய்தருள - உடன் மருங்கிருந்து திருவமுது கொள்ள. ஒரே பரிகலத்தில் என்றுரைப்பாருமுளர்; அது தவறு; அஃது தகாத இல்வழக்கு.

விரைந்து வணங்கி வெருவுறலும் - அறநூல் உலக ஒழுக்க வியலிற் கூடாமையாலும், தகுதி யின்மையாலும் அதனை மறுப்பாராகி அஞ்சி அதற்குத் தமது இசைவின்மை காட்டும் பொருட்டு விரைந்து வணங்கினர் என்க. பெரியோர் கருத்துக்கு

மாறுபடும் போது, அதனை வணங்கி, நேர்முகமாயன்றி ஒருவாற்றால் அறிவித்தல் மரபு. வெருவுறுதல் - அஞ்சித் திடுக்கிடுதல்.

நீண்ட தடக்கை - "கார்கொண்ட கொடை"யினால் நீண்ட பெரியகை என்பது. கை நீண்டிருத்தல் சிறப்பு என்பது உடல் நூலாளரும் ஒப்பும் உண்மை. இஃது அரச அங்க லட்சணங்களுள் ஒன்றுமாம். "ஆஜானுபாகு" என்பது வடமொழி. முழங்கால் வரையும் நீண்ட கை என்றலுமாம். தட - விசாலமாகிய.

நேரே - நேர்முகமாக அன்பின் உண்மைநிலை கூறி வற்புறுத்தி என்க. குறை கொள்ளுதல் - மறுமைப் பொருட்டுக் குறையிரந்து வேண்டிக்கொள்ளுதல்.

ஈண்ட - மருங்கு ஒருங்கேயிருந்து ; "ஒக்கவமுது செய்தருள" (3823).

பொறையர் - சேரர்கள். 75

3823. ஒக்க வமுது செய்தருள வுயர்ந்த தவத்துப் பரவையார்
மிக்க விருப்பா லமுதுசெய்வித் தருளி மேவும் பரிசனங்கள்
தக்க வகையா லறுசுவையுந் தாம்வேண் டியவா றினிதருந்தத்,
தொக்க மகிழ்ச்சி களிசிறப்பத் தூய விருந்தின் கடன்முடித்தார். எசு

(இ - ள்) ஒக்க...செய்வித்தருளி - முன்கூறியபடி சேர் பெருமான் இசைந் தருளவே, நம்பிகளும் சேரலனும் ஒக்க ஒருங்குடனிருந்து திருஅமுது செய் தருள உயர்வாகிய தவத்தினையுடைய பரவையார் மிகுந்த விருப்பினாலே அமுது செய்வித் தருளி ; மேவும்...களி சிறப்ப - பொருந்திய பரிசனங்கள் தகுந்த வகையினாலே அறுசுவைப்பட்ட உணவினைத் தாந்தாம் வேண்டியபடியே இனிதின் உண்ணவும் கூடிய பெருமகிழ்ச்சி களிசிறந் தோங்க ; தூய...முடித்தார் - தூய்மை யாகிய விருந்தளிக்கும் கடமையை இனிது ஆற்றி முடித்தனர்.

(வி - ரை) ஒக்க அமுது செய்தருள - நம்பிகள் வேண்டியவாறு சேரலனார் இசைந்தமையாலே அவ்வாறே ஒருங்கு உடனிருந்து உண்ண; ஒக்க - உடனிருந்து.

உயர்ந்த தவத்துப் பரவையார் - பரவையாரது முன்னைநிலைத் திருக்கயிலைத் திருத்தொண்டும், இங்குத் திருவாரூரில் முன்செய்த திருத்தொண்டும் கூடிய பயனாக இவ்வமுதளிக்கும் பேறு பெற்றனர் என்பது. "செய்தவத்தால்" (3821) என முன் நம்பிகள் கூறிய கருத்து.

அமுது செய்தருளச் - செய்வித்தருளி - என்று கூட்டுக. விருந்தின் கடன் - விருந்து ஓம்புதலாகிய கடமைப்பாடு. செய்வித்தருளி - அமுது சமைத்தளிக்கும் பரி சனங்கள் முதலிய பிறராலும் வேண்டப்படும் பணிகளும் குறிக்கப் பிரிவினையாற் றோ.

தாம் வேண்டியவாறு - தாந்தாம் வேண்டியபடியே. பரவையார் விரும்பி அமைத்தவாறே என்ற குறிப்புந் தருவது.

அமுது செய்வித்தருளிக் களி சிறப்பக் கடன் முடித்தார் - என்க. விருந்தின் கடன் - இல்வாழ்க்கைக்குரிய கடன்களில் சிறந்தது விருந்தோம்பலாதலின் கடன் என்றார் ; சிவன்பா லன்பினால் சிவனடியாரந் தன்மையினை மேலாகக் (3820) கொண்டு செய்வித்தமையால் தூய என்றார் ; ஏனையோர்பாற் செய்யும் விருந்தின் கடன் எல்லாம் பாசம் பற்றியனவாய் நின்று பிறவியறுக்கத் துணைசெய்ய மாட் டாமையின் தூயவாகா என்பது.

தொக்க மகிழ்ச்சி களிசிறப்ப - களிப்பு - உணர்ச்சி யிழக்காத பேருவகை ; மகிழ்ச்சி - உணர்ச்சியு மழிந்த உவகை ; இவ்வேறுபாடு "உள்ளக் களித்தலுங் காண மகிழ்தலும்" (குறள்) என்ற விடத்துக் "களித்தல்-உணர்வழியாதது; மகிழ்தல்-

அஃதழிந்தது " என்று பரிமேலழகர் உரைத்தவாற்றா னுணர்க. இவ்விரு தன்மைகளும் பரவையார்பால் ஒருங்குட னிகழ்ந்தன என்பார் உடன் சேர்த்துக் கூறினார்; நம்பிகளையும் சேரலனாரையும் ஒருங்கே யமுது செய்விக்க நின்ற பேறாகிய தவம் பற்றித் தோக்க மகிழ்ச்சியும், பரிசனங்கள் தாம் வேண்டியவா றினிதருந்தக் காண்டலின் களிசிறத்தலும் உளவாயின என நிரனிறையாகக் கொள்க. இவ்வேறுபாடு அவ்வவற்றின் நிலைபற்றி எழுந்த தென்பதாம்.

அமுது செய்வித் தருளின்—என்பதும் பாடம். 76

3824. பனிநீர் விரவு சந்தனத்தின் பசுங்கர்ப் பூர விரைக்கலவை
வனிதையவர்கள்சமைத்தெடுப்பக்கொடுத்துமகிழ்மான்மதச்சாந்தும்
புனித நறும்பூ மாலைகளும் போற்றிக் கொடுத்துப் பொற்கொடியார்
இனிய பஞ்ச வாச முட னடைக்கா யமுது மேந்தினார். ௭௭

(இ - ள்) பனிநீர்...கலவை - பனிநீருடன் பொருந்திய சந்தனத்தினுடன் பச்சைக் கர்ப்பூரம் சேர்ந்த விரைக் கலவைக் குழம்பினை; வனிதை யவர்கள்... கொடுத்து - உரிய பெண்கள் அரைத்துச் சேர்த்து எடுப்பக் கொடுத்து; மகிழ்... கொடுத்து - மகிழ்வு தரும் கத்தூரிச் சாந்தினையும் தூய மலர்மாலைகளையும் அமைவுபடக் கொடுத்து; பொற்கொடியார்...ஏந்தினார் - பரவையம்மையார் இனிய பஞ்ச வாசங்களுடன் தாம்பூலத்தையும் ஏந்தினர்.

(வி - ரை) இவை திருவமுதுண்ட பின்னர்ச் செய்யும் உபசார வகைகள்.

கலவை - பச்சைக் கர்ப்பூரம், குங்குமப்பூ, பனிநீர் முதலியவை கூட்டி அமைத்த சந்தனக் குழம்பு. கலவை - கலத்தலாலாகியது; விரை - மரபுப் பெயர் வழக்கு.

வனிதையவர்கள் - சந்தனக் கலவை அமைத்தற்குரிய பெண்கள். " குங்குமத்தின் செழுஞ்சேற்றின் கூட்டமைப்போ ரினங்குழும " (3078) என்றதும் ஆண்டுரைத்தவையும் பார்க்க. இத்தொழில் செய்யப் பெண்களை நியமித்தல் உலகியற் சிறப்புடையோர்பாற் காணலாம்.

மகிழ் மான்மதச் சாந்தும், மாலைகளும், போற்றிக் கொடுப்ப - மகிழ் - மகிழ்ச்சி தரும்; மான்மதம் - கத்தூரி; சாந்து - கத்தூரி முதலிய அரிய வாசனைப் பண்டங்கள் கூட்டியமைத்த மைச்சாந்து; திலகம்; அணிவது. போற்றி - உரிய வகையால் அமைத்தலும் ஏந்துதலும் செய்து.

பஞ்சவாசம் - " தக்கோலந் தீம்பூத் தகைசா லிலவங்கங், கற்பூரஞ் சாதியோ டைந்து "; அடைக்காயமுது - தாம்பூலம்; உடன் - பஞ்சவாசமும் தாம்பூலமும் ஒருங்கு சேர்த்து ஏந்துதற் குரியவை; அடை - வெற்றிலை; காய் - பாக்கு.

விரைக்கலவை கொடுத்தும், போற்றிக் கொடுத்தும் - ஏந்தினார் - என்று பிரித்து வெவ்வேறுவினைகள் தந்தோதியது அவ்வவை பயன்படுதலும்வெவ்வேறு நிலைகளையும், அவற்றுக்கேற்றவாறு தரப்படும் நிலைகளையும் குறித்தது. விரைக்கலவை மெய் பூச்சாதலும், மான்மதச் சாந்தும் பூமாலையும் அணிதலும், பஞ்சவாசமும் அடைக்காயமுதும் உண்ணுதலுமாதல் குறிக்க. ஏந்தினார் - தாம்பூல மேந்துதல் என்பது மரபு வழக்கு. 77

3825. ஆய சிறப்பிற் பூசனைக ளளித்த வெல்லா மமர்ந்தருளித்
தூய நீறு தங்கடிரு முடியில் வாங்கித் தொழுதணிந்து

மேய விருப்பி னுடனிருப்பக் கழறிற் றறிவார் மெய்த்தொண்டின்
சேய நீர்மை யடைந்தாராய் நம்பி செம்பொற் கழல்பணிந்தார். எஅ

(இ - ள்) ஆய...அமர்ந்தருளி - முன் சொல்லியவாறு ஆகிய சிறப்பிற் செய்யப்பட்ட பூசனைகளை யெல்லாம் விரும்பி ஏற்றுக் கொண்டருளி; தூய நீறு... அணிந்து - தூய்மை செய்யும் திருநீற்றினை வாங்கி வணங்கித் தமது திருமுடியில் அணிந்து; மேய விருப்பி னுடனிருப்ப - பொருந்திய விருப்பத்தினோடு உடன் இருக்கப் பெற்றமையாலே; கழறிற்றறிவார்...பணிந்தார் - கழறிற் றறிவார் உண்மையாகிய திருத்தொண்டினது செம்மைதரும் தன்மையினை உள்ளபடியே பெற்றவராகி நம்பிகளது செம்பொற் கழல்களில் வீழ்ந்து பணிந்தனர்.

(வி - ரை) ஆய சிறப்பிற் பூசனைகள் - முன் உரைத்தவை (3818 - 3823 - 3824) எல்லாம் மாகேசுவர பூசை என்ற வகையாற் சிவாகமங்களுட் பேசப் பெறுவன.

தூய நீறு வாங்கித் தொழுது நங்கள் முடியில் அணிந்து - என்க; அமுது கொண்டபின்னும் நீறணிதல் வேண்டுமென்பது விதி; பூசனை முறையில் முடிவில் நீறு சாத்துதலும் விதியாம்.

உடனிருப்ப - அடைந்தாராய் என்று - கூட்டி - முடிக்க. இருப்ப - இருக்கப் பெற்றமையாலே.

சேய - செம்மை தரும்; பெரிய என்றலுமாம். சேய நீர்மை அடைந்தாராய் - முன்னர் நெடுந்தூரமாய் நின்ற தன்மையினை அணிந்துடையதாகக் கிடைக்கப் பெற்றாராய் என்றுரைப்பினு மமையும்.

நம்பி...பணிந்தார் - இறைவாருள் கூட்டக் கூடி நின்று, அவரால் தொண்டினீர்மை அடைந்தாராதலின் பணிந்தார் என்க.

அறிந்தாராய்—என்பதும் பாடம். 78

3826. மலைநாட் டரசர் பெருமானார் வணங்க வணங்கி யெதிர்தழுவிக்
கலைநாட் பெருகு மதிமுகத்துப் பரவை யார்தங் கணவனார்
சிலைநாட் டியவெல் கொடியாரைச் சேரத் தந்தா ரெனக்கங்கை
அலைநாட் கொன்றை முடிச்சடையா ரருளே போற்றி யுடனமர்ந்தார்.

(இ - ள்) மலைநாட்டு...வணங்க - மலைநாட்டின் அரசர் பெருமானாகிய சேரலனார் வணங்க; வணங்கி எதிர்தழுவி - தாமும் எதிர்வணங்கித் தழுவிக்கொண்டு; கலைநாள்...கணவனார் - கலைகள் பெருகும் நாளில் முழுமதி போன்ற முகத்தினையுடைய பரவையாரது கணவனாராகிய நம்பிகள்; சிலைநாட்டிய...அமர்ந்தார் - விற்குறியினைப் பொறித்த வெற்றி பொருந்திய கொடியினையுடைய சேரமான் பெருமானைச் சேரும்படித் தந்தருளினார் என்று கங்கைநதி அலைகின்ற புதுப்பூங்கொன்றை சூடிய சடைமுடியினை யுடைய இறைவரது திருவருளினையே துதித்து உடனமர்ந்தருளினர்.

(வி - ரை) வணங்க எதிர்வணங்கித் தழுவி - என்க; எதிர் வணங்குதல்- அன்பு நிலையினும், தழுவுதல் - நண்புரிமை நிலையினும் ஆம். முன்(3812-ல்) உரைத்தவை பார்க்க.

கலை பெருகுநாள் மதி என்க; கலை நிரம்பிய முழுமதி.

சிலை நாட்டிய வெல்கோடி - சிலை - வில் ; நாட்டுதல் - பொறித்தல் ; விற்கொடி சோர்க்குரியது. "தென்னவன் செம்பியன் வில்லவன்" (பிள் - செவ்வழி - மூக்கீச் - 9); வில்லேந்திய கோலத்துடன் சேரமான் பெருமாளுயனாரது திருவுருவங்கள் திருவஞ்சைக் களத்தில் தாபித்து வழிபடப் பெறுகின்றன.

வெல்கோடி - "தாவில் விறல்" (3761) இவர் அரசாட்சியினை ஏற்கும் போது இறைவர்பால் வேண்டிப் பெற்றனராதலின் எஞ்ஞான்றும் வெற்றி தரும் கொடி என்றார்.

சோரத் தந்தார் - தோழமை பெறக் கூட்டுவித்தார் ; "அவரை நினைப்பிப்பார்" (3781).

அருளே - அருளினையே ; ஏகாரம் பிரிநிலை ; இவரும் எண்ணாது அவரும் நினையாது இறைவர் இடையாடி இருவரையும் கூட்டுவித்தமையின் அத்திருவருளின் பெருமையினையே போற்றினர்; இவ்வாறு உலகில் எச்செயலினுள்ளும் திருவருளின் பெருக்கினையே காண்பது பெரியோரது நிலை.

உடன் அமர்ந்தார் - நண்புரிமையால் ஒக்க விரும்பியிருந்தனர்.

கங்கையலை - கங்கையாறு ; அலை - அலையினையுடைய ஆற்றுக்கு வந்தது ; அலைக்கங்கை என மாறறி யுரைப்பினுமாம். கங்கையும் கொன்றையும் உடைய என உம்மைகள் விரிக்க ; நாட் கோன்றை - கொன்றையின் புதிய பூ. 79

3827. செல்வத திருவா ரூர்மேவுக செம்போற் புற்றி னினிதமர்ந்த
வில்வெற் புடையார் கழல்வணங்கி வீதி விடங்கப் பெருமானை
மல்லற் பவனி சேவித்து வாழ்ந்து நாளு மனமகிழ்ந்து
சோல்வித் தகர்தா மிருவர்களுந் தோடர்ந்த காத லுடன் சிறந்தார். அ௦

(இ - ள்) செல்வம் வணங்கி - செல்வ நிறைந்த திருவாரூரிற் பொருந்திய செம்பொற் புற்றினை யிடங்கொண்டு இனிது விரும்பி வீற்றிருந்தருளும் வில்லாகமேரு மலையினையுடைய பெருமானாரது திருவடியினை வணங்கியும் ; வீதிவிடங்கப் பெருமானை...சேவித்து - வீதிவிடங்கப் பெருமானாராகிய தியாகேசரை வண்மையுடைய திருவீதி விழாவிற் சேவித்தும் ; வாழ்ந்து...மகிழ்ந்து - பெருவாழ்வு பெற்றார்களாய் நாடோறும் மனமகிழ்ந்து ; சொல் வித்தகர்தாம்...சிறந்தார் - யாவரும் எடுத்துச் சொல்லும் பேரறிவாளர்களாகிய இருபெரு மக்களும் தொடர்ந்துவந்த பெருவிருப்பத்தினோடும் சிறக்க வீற்றிருந்தருளினர்.

(வி - ரை) செல்வத் திருவாரூர் - அருட் செல்வமும் பொருட் செல்வமும் நிறைந்த திருவாரூர்.

செம்போற் புற்றின்...உடையார் - புற்றிடங் கொண்ட பெருமானார். வன்மீகநாதர் என்பது வடமொழி.

வீதிவிடங்கப் பெருமான் - தியாகேசர்.

மல்லற் பவனி சேவித்து - திருவீதியில் திருவிழாச் சேவித்து ; விழாச் சேவிப்பதன் பெருமையினை ஆளுடைய அரசுகள் "முத்து விதானம்" என்றதொரு தனித் திருப்பதிகத்தினாற் போற்றியதும், அது கேட்டாங்கே உடன் புறப்பட்டு ஆளுடைய பிள்ளையார் திருவாரூரிற் போந்து வழிபட்டமையும் ஆகிய சிறப்புக்கள் ஈண்டு நினைவு கூர்தற்பாலன ; மல்லற் பவனி - திருவீதியில் கண்டோர் யாவ

ரும் கண்குளிரச் சேவிப்பவும் வேண்டிய வேண்டியாங்கு எய்ந்தவும் பெருஞ் சிறப்புடன் விழா நிகழ்தல் குறிக்க மல்லல் - என்றார். சேரலனார் வந்த காலம் பங்குனி விழா அல்லது திருவாதிரை விழாச் சமயமாதல் கூடும் என்பது ஈண்டுக் கருதத் தக்கது.

வணங்கியும் வாழ்ந்தும் என உம்மைகள் விரிக்க. வாழ்தல் - பெருவாழ்வு பெறுதல் ; பெருவாழ்வாகிய உறுதிப் பொருளைத் தரும் என்பதாம். "மண்ணினிற் பிறந்தார் பெறும் பயன்...கண்ணி னலவர் நல்விழாப் பொலிவுகண் டார்தல்" (2985) என்று ஆளுடைய பிள்ளையார் ஆணையிட் டருளியமை காண்க. விழாச் சேவித்தற் பொருட்டே அமர்நீதி நாயனார் திருப்பழையாறையினின்றும் போந்து திருநல்லூரிற் குடிகொண்டமையும், திருநீலக்க நாயனார் திருவாரூர்ப் பெருமானது திருமணலிக் கெழிச்சி சேவித்துப் பேறு பெற்றமையும் முதலியவை இங்கு நினைவு கூர்தற்பாலன.

சொல்வித்தகர் - சொல் - அறிவோர்கள் எல்லாராலும் எடுத்துப்போற்ற பெற்ற ; சொல்வித்தகர் - சொல்லில் வல்ல - செந்தமிழ் வல்லவர்களாகிய - பேரறிவாளர்கள் என்றலும் பொருந்தும். வித்தகம் - ஞானம் - பேரறிவு. "சொல் வித்தகத்தால்" - (தேவா - பிள் - காந்தா - நஞு - 11)

தொடர்ந்த - தம்மை யறியாது முன்றொடர்பினால் அருள்வழி வந்த ; சிறந்தல்- இனிதிருத்தல். 80

3828. இவ்வா றொழுகு நாளின்க ணிலங்கு மணிப்பூண் வன்றொண்டர்
மைவாழ் களத்து மறையவனார் மருவு மிடங்கள் பலவணங்கிச்
செய்வார் கன்னித் தமிழ்நாட்டுத் திருமா மதுரை முதலான
மொய்வார் சடையார் மூதூர்க ளிறைஞ்ச முறைமை யானினைந்தார்.

(இ - ள்) இவ்வாறு ஒழுகு நாளின்கண் - இவ்வாறு சிவானந்தந் திளைத்து இருவரும் ஒழுகி வருகின்ற நாளில் ; இலங்கு...வன்றொண்டர் - விளங்குகின்ற மணிப்பூண்களை அணிந்த வன்றொண்டர் ; மைவாழ்...வணங்கி - விடம் வாழும் கண்டத்தினையுடைய வேதியராகிய இறைவனார் எழுந்தருளிய இடங்கள் பலவற்றையும் வணங்கிச் சென்று ; செய்வார்...இறைஞ்ச - வயல்கள் நிறைந்த கன்னி நாடென்றும் தமிழ் நாடென்றும் சொல்லப்படும் பாண்டி நாட்டிலே திருமாமதுரை முதலாக நெருங்கிய நீண்ட சடையினையுடைய இறைவரது பலவூர்களையும் வணங்குதற்கு ; முறைமையால்...நினைந்தார்-திருவருள் முறைமையினாலே நினைந்தருளினார்.

(வி - ரை) இவ்வாறு - முன்பாட்டிற் கூறியபடி ; ஒழுகுதல் - இறைவரைச் சேவித்துச் சிவானந்தத்தினுள் திளைத்து இன்புறுதல்.

மைவாழ் - மை - விடம் ; மை வாழ்வுபெறுதலாவது உயர்ந்த இடம் பெறுதலும், விடம் என்ற குறைவும் கேடும் நீங்கி உயிர்களை வாழ்விக்கும் அமுதத்தன்மை பெற்றுப் போற்றப்படுதலுமாம்.

இடங்கள் பல - இவை சோழநாட்டிலும் இடையில் நடுநாட்டிலும் உள்ளவை. வணங்கி - வணங்கிச் சென்று.

செய்வார் - செய் - வயல்கள் ; வார்தல் - நிறைதல்.

கன்னித் தமிழ்நாடு - கன்னிநாடு எனப்படும் தமிழ்நாடு ; பாண்டிய நாடு.

தீரு மா மதுரை - மா - அத்திருப்பதியின் அளவிறந்த பெருமைகளைக் குறித்தது.

முதலான - முதூர்கள் - இவை பாண்டி நாட்டுப் பதிகள்.

இடையில் இடங்கள் பல வணங்கிச் சென்று பாண்டி நாட்டுக்குச் சென்றதும், பாண்டி நாட்டில் மதுரையினை வணங்கி மற்றும் பதிகளைப் பணிந்ததும் பின்னர் வரலாற்றினுள் அறிக.

முறைமை - திருவருள் வழியே வரும் குறிப்பு; முறை - ஊழ் - பான்மை - நியதி என்பன ஒரு பொருளன. முறைமை - இறைஞ்ச என்று கூட்டி முறைப்படி வணங்க என்றுரைத்தனர் முன் உரைகாரர். 81

3829. சேரர் பிரானு மாரூரர் தம்மைப் பிரியாச் சிறப்பாலும்
வாரம் பெருகத் தமக்கன்று மதுரை யால வாயமர்ந்த
வீர ரளித்த திருமுகத்தால் விரும்பு மன்பின் வணங்குதற்குச்
சார வெழுந்த குறிப்பாலுந் தாமு முடனே செலத்துணிந்தார். ௮௨

(இ - ள்) சேரர் பிரானும் - சேர மன்னரும்; ஆரூரர்...சிறப்பாலும் - நம்பியாரூரரைப் பிரியாதுடனிருத்தலை விரும்பிய சிறப்புக் கருதிய எண்ணத்தாலும்; வாரம்...குறிப்பாலும் - அன்பு பெருகும்படி அன்று தமக்கு மதுரைத் திருவாலவாயில் விரும்பி எழுந்தருளிய வீரராகிய சோமசுந்தரப் பெருமான் அளித்தருளிய திருமுகத்தினைப் பற்றி விரும்பிய அன்பினாற் சென்று அவரை வணங்குதற்குச் சார்பு பெறத் திருவுள்ளத்தில் எழுந்த குறிப்பினாலும்; தாமும்...துணிந்தார் - தாமும் அவருடனே கூடச் செல்வதற்குத் துணிந்தனர்.

(வி - ரை) பிரியாச் சிறப்பு - பிரியாதுடனுறையும் சிறப்பினைப் பெற நினைந்தமை.

வாரம் பெருக - அளித்த - என்று கூட்டுக. வாரம் - அன்பு; அன்பு பெருகும்படி; பெருகும் பொருட்டு; ஆலவாயமர்ந்தார் வேறு எவ்வகையிலேனும் பத்திரனுக்குப் பொருள் - நிதி - கொடுத்தருளியிருக்கலாமாயினும், அவ்வாறருளாது சேரனுக்குத் திருமுகம் தந்தருளியது சேரனாது அன்பினைப் பெருக்கி வாழ்வித்தற் பொருட்டு என்பதாம்.

வீரர் - யானை யெய்தது, நாகமெய்தது, அங்கம் வெட்டியது முதலிய எண்ணிறந்த வீரஞ் செய்த திருவிளையாடல்களைக் காண்க.

வீரம் - மாயப்படையினை வென்று கொண்டருளுதலுமாம்.

சார எழுந்த குறிப்பாலும் - சார்பு பெறப் பொருந்த எழுந்த திருவுள்ளக் குறிப்பினாலேயும்.

தாமும் உடனே செலத்துணிந்தார் - திருச்சிலம்போசை யளித்த நாயகரைக் கும்பிடவும், அவரால் நினைப்பிக்கப்பட்ட வன்றொண்டரைக் கண்டு தொழப் பெறவும் ஆக இரண்டு நிலைகளையே எண்ணிப் போந்தார் சேரனார் (3792). இங்கு அவ்விரண்டு முற்றியன வாயினும் நம்பிகளுடனே பல பதிபணிந்து மதுரை சென்று வணங்குதற்கு உடன்செலத் துணிந்தார்; அதற்குக் காரணங்கள் இரண்டு. அவை, நம்பிகளைப் பிரியா துடனுறைதல் வேண்டியமையும் திருமுகந் தந்தருளிய ஆலவாய்ப்பெருமானை வணங்குதலுமாம் என்க.

ஆர்வம் பெருக—என்பதும் பாடம். 82

3830. இருவர் திருவுள் ளமுமிசைந்த பொழுதி லெழுந்து திருவாரூர்
ஒருவர் மலர்த்தாள் புக்கிறைஞ்சி யுடன்பாட் டருளாற் போந்தருளி
மருவு முரிமைப் பெருஞ்சுற்றம் வரம்பில் பணிகள் வாகனங்கள்
பொருவில் பண்டா ரங்கொண்டு போது வார்க ளுடன்போத, அங

3831. சேவித் தணையும் பரிசனங்கள் சூழத் திருவா ரூரிறைஞ்சிக்
காவிற் பயிலும் புறம்பணையைக் கடந்து போந்து கீழ்வேளூர்
மேவிப் பரமர் கழல்வணங்கிப் போந்து வேலைக் கழிக்கானற்
பூவிற் றிகழும் பொழிலுகை புகுந்து கா ரோ ணம்பணிந்தார். அச

3830. (இ - ள்) இருவர்...பொழுதில் - முன்கூறியபடி இருவருடைய திருவுள்ளங்களும் இசைந்த போது; எழுந்து...போந்தருளி - திருமாளிகையினின் றும் எழுந்து திருவாரூரிற் புற்றிடங்கொண்ட பெருமானது மலர் போன்ற திரு வடிகளைத் திருப் பூங்கோயிலினுள்ளே புகுந்து வணங்கி அவரது உடன்பட்ட திருவருளினைப் பெற்றுப் புறம்போந்தருளி; மருவும்...போத - உடனே போதப் பொருந்தும் உரிமை யுடைய பெருஞ் சுற்றங்களும் எல்லையற்ற அணிகளையும் வாகனங்களையும் ஒப்பற்ற சேம நிதிகளையும் கொண்டு செல்வார்களும் தம்முடனே போத, அங

3831. (இ - ள்) சேவித்தணையும்...சூழ - தம்மை வழிபட்டு உடன் வரும் பரிசனங்கள் சூழ; திருவாரூர்...போந்து - திருவாரூரினை வணங்கிச் சோலைகள் மிக்க புறம்பணையினைக் கடந்து சென்று; கீழ்வேளூர்...போந்து - திருக்கீழ்வேளூ ரிற் சேர்ந்து அங்கு இறைவரது திருவடிகளை வணங்கி மேற்சென்று; வேலை... புகுந்தார் - கடற்கழிக்கானல் சூழ்ந்து மலர்கள் நிறைந்து விளங்கும் பொழில்களை யுடைய திரு நாகப்பட்டினத்திற் சென்று திருக்காரோணத்தினைப் பணிந்தனர். அச

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒருமுடிபு கொண்டன.

3830. (வி - ரை) இருவர்...இசைந்த பொழுதில் - இசைதல் - நம்பிகள் தலயாத்திரையினை மேற்கொண்டு பாண்டிநாடு செல்ல எண்ணியதுவும் அதற்குச் சேரனார் இசைந்ததுவும், சேரனாரும் உடன்போத எண்ணியதனை நம்பிகள் இசைந் ததுவும் ஆம்.

திருவாரூர் ஒருவர் - புற்றிடங்கொண்ட பிரானார்; இருவர் - ஒருவர் - அடிமுரண் தொடை. இவர்கள் இருவராயினும் ஒருவரையே மனங்கொண்டனர் என்பது. ஒரு வர் - பதி; ஒப்பற்றவர்; "தனக்குவமை யில்லாதான்" (குறள்); புக்கு-திருக்கோயிலி னுள்ளே புகுந்து; கோயிலினுள் - என்பது இசையெச்சம்; ஒருவரை எப்போதும் மனம் பொருந்த வைத்தார்களாதலின் இருந்த இடத்தினின்றே வணங்கலாமாயினும் திருக்கோயிலினுட் சென்று முறையால் வணங்கி அருள்விடை பெற்றனர் என்பார் இறைஞ்சி என்னாது புக்கிறைஞ்சி என்றார்.

உடன்பாட்டருளால் - உடன்பாடாவது அருள்விடை தரப்பெறுதல்; இத்திரு வருட்குறிப்பினை உள்ளுணர்ந்த பெரியோர்களே அறிகுவர். ஆளுடைய பிள்ளையார் திருவாலவாயில் சமணவாதத்தின் முன்னர்த் திருக்கோயிலினுட் சென்று இறை வாது திருவுள்ளமறிந்த வரலாற்றினை நினைவுகூர்க. (2634)

மருவும் உரிமைப் பெருஞ்சுற்றம் - சுற்றம் - இங்கு நம்பிகளையும் சேரனாரையும் எப்போதும் உடன் சூழும் உரிமையுடைய மக்களைக் குறித்து நின்றது; திருமேனிப்

பாங்கு செய்யும் உரிமைப் பணியாளரும் மெய்காவலரும் முதலிய பரிசனங்கள்; இதற்குச் சுற்றத்தார்கள் என்றுரைத்தனர் முன் உரைகாரர்; உடற் சார்புகளைப் பற்றாதவர்கள் எந்தம் பெருமக்கள். சுற்றம் - சுற்றிச் சூழ்ந்திருப்பவர்கள்.

வரம்பில்...போதுவார்கள் - பணிகளையும் வாகனங்களையும் பண்டாரத்தையும் கொண்டு போதும் பரிசனங்கள் என்க. சுற்றமும் போதுவார்களும் என்று உம்மைகளை விரிக்க; பணிகள் - அணிவகைகள்; நம்பிகள் " மன்னவர் திருவுந் தங்கள் வைதிகத் திருவும் பொங்க " (165) என்றபடி கொண்ட திருமணக் கோலத்துடனே இறைவர் பணித்தபடியே (273) உலகிற் சரித்துவருகின்றாராதலின் பணிகள் வேண்டப்படுவன; மன்னவர் திருவும் வைதிகத் திருவும் பொங்கும் அவரது திருக்கோலத்தினை (330 - 331) முன்னர் ஆசிரியர் காட்டியமை இங்கு நினைவுகூர்தற்பாலது; சேரலனார் அரசராதலின் அவர்க்கும் மன்னர்க்குரிய மகுட முதலியவை வேண்டுவன ஆயின.

வாகனங்கள் - நீண்ட தலயாத்திரையில் இவர்களும் பரிசனங்களும் போதவும், வேண்டும் பண்டங்கள் கொண்டு செல்லவும் இவை உதவுவன.

பொருவில் பண்டாரம் - சேமநிதிகள்; பொக்கிஷம் என்பர்; இவை இருவர்க்கு மேற்பன. நிதிச்சாலையின் பெயர் ஈண்டு அங்குள்ள நிதிகளைக் குறித்தது.

போத - தொழ - இறைஞ்சிச் - கடந்து போந்து - என மேல் வரும்பாட்டுடன் முடிக்க. 83

3831. (வி - ரை) சேவித்து அணையும் பரிசனங்கள் - இருவர்பாலும் சேவகம் செய்யும் ஏவலாளர்கள்.

திருவாரூர் இறைஞ்சி - நகரின் புறத்தே சென்று அதன் கிழக்கெல்லையில் நகரை நோக்கி வணங்கி; " ஆரூரினிற் புறம்புபோந் ததனையே நோக்கி நின்றே " (2416) என்பது முதலாக வருவன காண்க.

கீழ்வேளூர் - திருவாரூருக்குக் கிழக்கில் 4 நாழிகை யளவில் உள்ளது; இதற்கு நம்பிகள் பதிகம் கிடைத்திலது!

வேலைக் கழிக்கானல் - கடற்கழி மணற்காடு சூழ்ந்த.

பூவிற்றிகழும் பொழில் - மலர்கள் நிறைந்த சோலைகள்; பூவில் - உலகத்தில் என்று கொண்டு உலகில் விளங்கும் பதியாகிய நாகை என்று கூட்டியுரைப்பினுமமையும். பூவில் - இல் - இன்னுருபு - ஒப்புப் பொருளில் வரும் ஐந்தனுருபாகக் கொண்டு பூப்போல விளங்கும் என " பொன்னி நாடெனுங் கற்பகப் பூங்கொடி மலர்போல் " (3992) என்று பின்வரும் பொருளுக் கேற்ப உரைத்தலுமாம்.

நாகை புகுந்து - காரோணம் பணிந்தார் - நாகை - ஊர்ப்பெயர்; காரோணம் கோயிலின் பெயர். 84

3832. "திருக்கா ரோணத் திருப்பீரே" யென்று மன்பர் சிந்தையினை
உருக்கார் வச்செந் தமிழ்மாலை சாத்திச் சிலநா ளுறைந்துபோய்ப்
பெருக்கா றலவு சடைமுடியா ரிடங்கள் பலவும் பணிந்தேத்தி
அருட்கா ரணர்தந் திருமறைக்கா டணைந்தார் சேர ராரூரர். அரு

(இ - ள்) திருக்காரோணத் திருப்பீரே...போய் - திருநாகைக்காரோணத்தில் மேவியிருந்தீரே என்று மகுடம் பூண்ட அன்பர்களுடைய சிந்தைகளை உருக்குகின்ற, ஆர்வத்தினாலே போந்த, செந்தமிழ் மாலையாகிய திருப்பதிகத்தினை அருளிச் செய்து அணிந்து சிலநாள்கள் அங்குத் தங்கியிருந்து மேற்சென்று; பெருக்காறு...

எத்தி - பெருகிவரும் கங்கையாறு உலவுதற்கிடமாகிய சடையினையுடைய பெருமானார் எழுந்தருளியுள்ள பதிகள் பலவற்றையும் வணங்கித் துதித்துச் சென்று ; அருட்காரணர்தம்...ஆரூரர் - அருளையுடைய மூலமுதல்வராகிய இறைவரது திருமறைக்காட்டினைச் சேரர்பெருமானும் நம்பியாரூரரும் அணைந்தார்கள்.

(வி - ரை) திருக்காரோணத்து...தமிழ்மாலை - "திருக்காரோணத் திருப்பீரே" என்பது "கடனாகைக் காரோண மேவியிருந்தீரே !" என்னும் பதிக மகுடத்தின் பொருள் குறிப்பது ; அன்பர் சிந்தையினை உருக்கு ஆர்வம் - இஃது அத்திருப்பதிகத்தின் அன்பு நிறைந்த தன்மையும் பண்புமாம்.

அருட்காரணர் - அருளையுடைய மூலகாரணர் ; முதல்வர்.

இடங்கள் பல - இவை பொய்கைநல்லூர், திருவரிஞ்சையூர், திருக்கிள்ளிகுடி, திருக்கோளிலி, திருவாய்மூர், திருமுகத்தலை முதலாயின என்பது கருதப்படும்.

திருக்காரோணச் சிவக்கொழுந்தைச் சென்றுபணிந்து—என்பதும் பாடம். 85

3833. முந்நீர் வலங்கொண் மறைக்காட்டு முதல்வர் கோயில் சென்றிறைஞ்
சிச் செந்நீர் வாய்மைத் திருநாவுக் கரசும் புகலிச் சிவக்கன்றும்
அந்"நேர் திறக்க - வடைக்க"வெனப் பாடுந் திருவா யிலையணைந்து
நன்னீர் பொழியும் விழியினராய் நாயன் மாரை நினைந்திறைஞ்சி, அ௬

3834. நிறைந்த மறைக ளர்ச்சித்த நீடு மறைக்காட் டருமணியை
யிறைஞ்சி வீழ்ந்து பணிந்தெழுந்து போற்றி "யாழைப் பழித்"தென்
அறைந்த பதிகத் தமிழ்மாலை நம்பி சாத்த, வருட்சேரர்
னும் சிறந்த வந்தா தியிற்சிறப்பித் தனவே யோதித் திளைத்தெழுந்தார்.

3833. (இ - ள்) முந்நீர்...இறைஞ்சி - கடல் சூழ்ந்து வலங்கொள்ளும் திருமறைக்காட்டில் எழுந்தருளிய இறைவரது திருக்கோயிலைச் சென்று வணங்கி ; செந்நீர்...அணைந்து - செம்மையாகிய நீர்மையினையுடைய வாய்மைபொருந்திய திருநாவுக்கரசரும் சீகாழியில் அவதரித்த சிவக்கன்றாகிய திருஞானசம்பந்தரும் இறைவரது நேர்முகமாகத் திறக்க ! அடைக்க ! என்று பாடப்பெற்ற அத் திருவாயிலைச் சேர அணைந்து ; நன்னீர்...இறைஞ்சி - அருட்கண்ணீர் வழியும் திருவிழிகளையுடையவர்களாகி அந் நாயன்மார்களிருவரையும் தியானித்து வணங்கி, அ௬

3834. (இ - ள்) நிறைந்த...போற்றி - நிறைவுடைய வேதங்கள் அருச்சனை செய்த நீடிய 'திருமறைக்காட்டில் எழுந்தருளிய அருமணி போல்பவராகிய இறைவரைப் பணிந்து நிலம்பொருந்த வீழ்ந்து வணங்கி எழுந்து துதித்து ; யாழைப்பழித்து...சாத்த - "யாழைப் பழித்து" என்று தொடங்கும் திருப்பதிகத்தினை நம்பிகள் பாடியருளிச்சாத்த ; அருட்சேரர்...எழுந்தார் - அருள் பொருந்திய சேரர் பெருமானார் தாம் பாடிய சிறப்புடைய பொன்வண்ணத்தந்தாதியில் இறைவரைச் சிறப்பித்துப் பாடியவற்றையே ஓதித் திளைத்து எழுந்தனர். அஎ

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒருமுடிபு கொண்டன.

3833. (வி - ரை) முந்நீர் - கடல் ; ஆக்கல், காத்தல், அழித்தல் என்ற மூன்று தொழிற்றன்மைகளையும் உடையதனாற் போந்த பெயரென்பர். ஆற்று நீர் - ஊற்று நீர் - வேற்று நீர் என்ற மூன்று நீர்களையும் உடையது என்றும் கூறுவர். முன்னீர் - எனின், முற்பட்ட நீர் என்பர்.

வலங்கொள்ளுதல் - அலைகளாற் சூழ்தல்.

செந்நீர் வாய்மை - செந்நீர் - செம்மைப் பண்பு; சிவமாந் தன்மை செம்மை எனப்படும். "திருநின்ற செம்மையே செம்மையாக் கொண்ட" (திருத்தொண்டத் தொகை) என்றது காண்க; வாய்மை - சத்தாந்தன்மை; சிவனையே யெண்ணுதலும் சொல்லுதலுமாகும் பண்பு; "வாய்மை திறம்பா வாகீசர்" (1540); "பெருவாய்மைத் திருநாவுக்கரசர்" (2467).

சிவக்கன்று - திருஞானசம்பந்தர்; சிவனது திருமாமகனார்; ஞானப்பா லுண்ட முறைமையினாற் கன்றென்றார்.

நேர் திறக்க - அடைக்க - எனப் பாடும் அத்திருவாயில் என்க; நேர் - இறைவரது திருமுன்புக்கு நேர்முகமாக; அபிமுகம் என்பது வடமொழி வழக்கு; நேர்திறக்க! அடைக்க! எனப் பாடிய வரலாறுகள் அவ்வந்நாயன்மார்களின் சரிதங்களுட் காண்க. முன்வரலாறுகளிற் கண்ட அந்த என அகரம் முன்னறிசுட்டு; திருவாயில் - திருமுன்புள்ள நேர்வாயில்.

நன்னீர்...நினைந்து - விழிநீர் பொழிதல் அந்நாயன்மார்பால் வெளிப்பட்ட இறைவரது திருவருட் பெருமையாகிய வெளிப்பாட்டினை எண்ணி மனமுருகுதலா லாகியது. நன்னீர் - அன்புமிகுதியாலாகிய அருட்கண்ணீராதலின் நன்னீர் என்றார்.

நாயன்மார் - முன்கூறிய அவ்விரண்டு பெருமக்கள். அகரச்சுட்டு தொக்கது.

நினைந்து - தியானித்து; அவர்களைத் தனித்தனியே வணங்கித் திருத்தொண்டத் தொகையிற் றுதித்தருளிய நினைவையும், இங்குத் திருவருள் வெளிப்பாட்டுக் கிலக்காக நின்ற பேரருட் டன்மையினையும், இறைவரது தொடர்புடைய அருளின் எளிமையினையும் எண்ணி. நாயன்மார் - தலைவர்.

இறைஞ்சி - நாயன்மாரையும் இறைஞ்சி, அந்நினைவுடன் திருவாயிலினையும் இறைஞ்சி. 86

3834. (வி - ரை) நிறைந்த மறைகள் - எங்கும் நிறைந்த நாதசொரூபமாகிய வேதங்கள்.

மறைகள் அருச்சித்த - மணியை - என்க. மறைக ளருச்சித்த வரலாறு தல விசேடத்துட் காண்க. (III - பக் - சஅஎ.)

அருமணி - வேண்டிய வேண்டியாங்கு நல்கும் சிந்தாமணி போல்பவர்.

யாழைப்பழித்து என்னும் - பதிகம் - யாழைப் பழித்து என்று தொடங்கும் பதிகம்: அறைந்த - யாழைப் பழித்த மொழியாள் என்ற பொருளை எடுத்து மொழிந்த; யாழைப் பழித்த மொழியம்மை என்பது தல அம்மை பெயர்; "பண்ணி னேர் மொழியாளுமை" என்பது அரசுகள் திருவாக்கு. அம்மையாரின் மொழி யின் இனிமை குறித்தது: இப் பெயர்ப் பயனைத் துய்ப்பாராய இறைவர் அரசுகள் பதிகத்துக்குத் திருக்கதவம் திறக்கத் தாழ்த்தனர் என்ற வரலாறும் கருதுக. வீணா கான தூஷணி என்னும் வடமொழியும் இப்பொருட்டு.

சிறந்த அந்தாதியிற் சிறப்பித்தனவே ஓதி - அந்தாதி - பொன்வண்ணத்தந் தாதி; சிறப்பித்தனவே-அதனுள் திருமறைக்காட் டிறைவரது புகழ்களைப் போற்றிய பாடல்களையே; இரண்டனுருபு தொக்கது; திளைந்து - ஈண்டு வணங்கி என்னும் பொருளில் வந்தது. திளைத்தல் - மகிழ்தலுமாம்.

"துயருந் தொழுமழுஞ் சோருந் துகிலுங் கலையுஞ்செல்லப்
பெயரும் பிதற்று நகும்வெய் துயிர்க்கும் பெரும்பிணிகூர்க்

நயரு மமர்விக்கு மூரி திமிர்க்குமங் தோவிங்ஙனே
மயரு மறைக்காட் டிறைக்காட் டகப்பட்ட வாணுதலே," 37

பாட்டுக் குறிப்பு:—இது செவிலி கூற்று. துயநும் - துயருறும்; கலை - மேகலை; மூரி - திமிர் ; இறைக்காட் டகப்பட்ட - இறைக்குத் தக் ஆட்பட்ட என்க.

" கொட்டுஞ் சிலபல சூழகின் றார்க்குங்குப் புற்றெழுந்து
நட்ட மறியுங் கிரீடிக்கும் பாடு நகும்வெருட்டும்
வட்டம் வருமருஞ் சாரணை செல்லு மலர்தயங்கும்
புட்டங் கிரும்பொழில் சூழ்மறைக் காட்டான் பூதங்களே "

கொட்டல் - கைகொட்டல் ; குப்புறல் - குதித்தல் ; நட்டமறியும் - நடிக்கும் ; கிரீடிக்கும் - விளையாடும் ; சாரணை செல்லல் - வரிசை வரிசையாய் உலாவுதல்.

—பொன்வண்ணத்தந்தாதி - 47, 87

சிறப்பித்தனவே ஓதி - சிறப்பித்த பாடல்களையே ஓதித் துதித்து. 87

திருநாகைக்காரோணம் :

திருச்சிற்றம்பலம் பண் - கொல்லிக் கௌவாணம் - 7ம் திருமுறை

பத்தூர்புக் கிரந்துண்டு பலபதிகம் பாடிப்
பாவையரைக் கிறிபேசிப் படிறாடித் திரிவீர்
செத்தார்த மெலும்பணிந்து சேவேறித் திரிவீர்
செல்வத்தை மறைத்துவைத்தீ ரெனக்கொருநா ளிரங்கீர்
முத்தார மிலங்கிமிளிர் மணிவயிரக் கோவை
யவைபூணத் தந்தருளி மெய்க்கினிதா நாறுங்
கத்தூரி கமழ்சாந்தும் பணித்தருள வேண்டுங்
கடனாகைக் காரோண மேவியிருந் தீரே. 1

பண்மயத்த மொழிப்பாவை சங்கிலிக்கு மெனக்கும்
பற்றாய பெருமானே மற்றாரை யுடையேன்
உண்மயத்த வுமக்கடியேன் குறைதீர்க்க வேண்டும்
ஒளிமுத்தம் பூணார மொண்பட்டும் பூவுங்
கண்மயத்த கத்தூரி கமழ்சாந்தும் வேண்டுங்
" கடனாகைக் காரோண மேவியிருந் தீ"ரென்
றண்மயத்தா லணிநாவ லாரூரன் சொன்ன
வருந்தமிழ்க ளிவைவல்லா ரமருலகாள் பவரே. 10

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு:—உமக்கு அடியேன் மற்று ஆரை உடையேன்; குறை தீர்த்து இன்பமளித்தல் வேண்டும் : கடனாகைக் காரோண மேவியிருந்தீரே ! என்று தோழமையால் அசதியாடிய வகையில் அமைந்தது.

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) பத்து - பல என்னும் பொருள்பற்றிய எண் குறிப்புடனின்றது ; பதிகம் - கீதங்கள் ; பத்தூர்...சேவேறித் திரிவீர் - பிச்சாடனக் கோலம் ; செத்தார் - ஊழியிற் சங்கரிக்கப்பட்டவர். திருமால் - பிரமர்கள். செல்வத்தை மறைத்துவைத்தீர்-நீர், நிறைவுடைய செல்வமுடையார் என்ற உண்மை யாவரும் அறிவர்; ஆனால் பிச்சை புகும்போது அதனை மறைத்துவந்தீர்; முத்தாரம் முதலி

டவை இன்பானுபவப் பொருள்கள் ; இவற்றால் இன்பம் பெற நம்பிகள் வேண்டி நின்றவர் என்பதன்று ; ஆயின் திருமணக் கோலத்துடன் மண்மேல் விளையாடுவா யென்பது இறைவராணை யாதலின் அதன் பொருட்டு வேண்டினர் என்க. மேல் வருவனவும் இவ்வாறே கொள்க ;—(2) வேம்பினோடு...தீற்றி - வேம்பு - துன்பானு பவத்தினையும், கரும்பு - இன்பானுபவத்தினையும் குறித்துநின்றன. தீற்றி - தின்னச் செய்து ; அனுபவிக்கச் செய்து ; "அடித்தடித்து வக்காரமுன் றீற்றிய வற்புத மறி யேனே" (திருவா); காம்பினோடு நேத்திரங்கள் - காம்பு - நேத்திரம் - உயர்ந்த பட் டாடை வகைகள் ; பொற்கோலும் கண்ணாடியும் என்பாரும் உண்டு ; அது பொரு ளன்மை யுணர்க ;—(3) வீண் - வீண்போலக் காட்டும் வார்த்தை. ஆகுபெயர் ; பாண் - பிச்சை புகுவோர் பாட்டுப்பாடி யிரக்கும் சொல் ;—(4) வீணை - வீணை யேந்திய ; விடங்கு - செயற்கையா லழகுசெய்யப்படாத ; வீண் அடிமை - கூலி பெறாத அடிமை ; மாதிமை - காதல் ; "வேதியன் மாதிமையால் விரும்புமிடம்" (தேவா) ; கட்டி - பொற்கட்டி ;—(5) மீண்டு - தகாத சொற் செயல்கள் ; வினை நீ கேடு - தீச்செயல் குறித்த சொல் ; தீவினை தீர்த்தல் என்ற குறிப்பும் காண்க. வேண்டியவா - அவ்வவர் தகுதிக்கு வேண்டியபடி என்பது குறிப்பு ; தலை நீகேற் றும் - சுமத்தும் ; பண்டாரம் - சேமவைப்பு ; பொக்கிசம் - பொக்கிசத்தினின் றும் : பிரமாணம் - என் அடியானிவன் என்று கூறி வழக்கிட்ட முறை ; 8வது பார்க்க;—(6) எச்சுச்சம்போது - முதிர்ந்த நண்பகல் ; எச்சு - அதிகம் ; நஞ்சை ...ஒண்ணாது - நீர் செய்யும் படிறுகள் யாவும் நீர் உண்ட விடத்தின் மயக்கத்தினால் நேர்ந்தது என்பது கருத்து ;—(7) தூசு - ஆடை ; சோற்பாடாய் - சொல் - ஏச்சு - படாமல் (எறுமல்)? ; திப்பிய கீதம் - சாமவேத கீதம் ; நேசமுடை...அருளிச் செயி தீர்-திருவீழிமிழலையில் அரசுகளுக்கும் பிள்ளையாருக்கும் காசு அருளி அடியவர்களுக்கு அமுதூட்டிய வரலாறு ; நேசம் - அன்பு ; அதுபோல என்பது இசையெச்சம் ;—(8) மேல் - விடைபெற ; மேல்வார்த்தை ஒன்றும் என்று கூட்டி யுரைப்பதுமாம்; வாழ்விப்பனென ஆண்டீர் - அடிமை என்று வழக்குரைத்து ஆட்கொண்ட வரலாறு; வழி - வழிவழி ; அடியொடுக்க வொட்டேன் - மேற்செல்ல விடாது வலிவேன் ; ஆற்ற.. அல்லீர் - "செல்வத்தை மறைத்து வைத்தீர்" (1) என்ற கருத்து ;— (9) சிறுவன் - இளைய பிள்ளையாராகிய முருகப்பெருமான் ; ஒன்றறியான் - ஒன்றும் அறியான் என்பது வசைமொழி ; ஒன்றினாலும் அறியப்படான் என்பது குறிப்பிற் போந்த புகழ்மொழி; தேறேன் - தேறித் தெளிய எட்டாதவன் என்பது குறிப்பு; எண் ணிலி - எண்ணில்லாத பண்டங்கள் ; எண்ணில்லாத அண்டங்களை எல்லாம் ; உண் பெருவயிறன்-உள் அடக்கிய திருமேனியுடையான் என்பது குறிப்பு; "திகட சக்கரம்" (கந்தபு) என்ற பாட்டின் பொருள் காண்க. விருத்தி - இன்பமிகும் நிலை; திருமேனி... நாளை- வலிந்த செயல். கண்ணறையன்-கண் நோட்டமில்லாதவன்; கொடும்பாடன் - வலிந்த கொடுமை செய்து பொருள் பறிப்பவன் ;—(10) "மாநிதியம்...ஆண்டீர்" தடுத்து ஆட்கொண்ட குறிப்பு; வல்லீராய் - வலிந்து வழக்கிட்டு: (1-8 பார்க்க); திரு வாணை யுண்டேல் - உமது உறுதிச்சொல் உண்மையாகில்,—(11) பற்றய - பற்றுக் கேடாகிய; மற்று ஆரையுடையேன் - பற்றாக என்பது இசையெச்சம் ; உடன்பாட்டி னும் எதிர்மறையினும் கூறியது உறுதிப்பொருள் தருதற்கு; துறைதீர்க்க வேண்டும் - தீமை போக்குதலும் - ஒளிமுத்தம்...வேண்டும் - இன்பமாக்குதலும் குறித்தன; அண் மையம்-அணித்தாகும் தோழமைத் தன்மை; பதிக அமைப்பாகிய உள்ளுறை குறித்தது.

தலவிசேடம் - III பக் - சகக பார்க்க.

திருமறைக்காடு

திருச்சிற்றம்பலம் • பண் - கர்நாடகம் - 7ம் திருமுறை

யாழைப்பழித் தன்னமொழி மங்கையொரு பங்கன்
பேழைச்சடை முடிமேற்பிறை வைத்தானிடம் பேணில்
தாழைப்பொழி லூடேசென்று பூழைத்தலை நுழைந்து
வாழைக்கனி கூழைக்குரங் குண்ணும்மறைக் காடே. 1

பாரூர்பல புடைசூழ்வள வயனாவலர் வேந்தன்
வாரூர்வன முலையாளுமை பங்கன்மறைக் காட்டை
ஆரூரன தமிழ்மாலைகள் பாடும்மடித் தொண்டர்
நீரூர்தரு நிலனோடுயர் புகழாகுவர் தாமே. 10

திருச்சிற்றம்பலம்

பதிகக்குறிப்பு - உமைபங்கன் இடம் மறைக்காடே.

பதிகப் பாட்டுக் குறிப்பு :— (1) யாழைப் பழித்தன்ன மொழிமங்கை - தல அம்மை பெயர்; பேழை - பெருமை ; பூழை - சிறுவாயில் : மக்களும் விலங்குகளும் உட்புகாதபடி அமைக்கப்படுவது ; கூழை - சிறிய உயரமுள்ள ;—(2) சிகரம் - முடி ; மகரம் - சங்கு ; தகரம் - மணம் ; தகரத்திடை - வாசனையோடு ; மகரம் - சுறவம் பெருமீன் வகை ; —(3) படப்பை - நகர்ப்புறமுள்ள இடம் ; வங்கம் - பாய்க் கப்பல் ;—(4) நரைவிரவிய மயிர் - மூப்பு என்ற பொருளளவிற் றந்து நின்றது ; நரை - ஓசை ; முதனிலைப் பெயர் ; தலை - கடல் அலை ஊர்க்குள் வாராமற் றடுக்க இடும் செய்கரை ; சேகரம் - உச்சி ; கொண்டல் - மேகம்; செய்வரையின் உச்சியில் மேகந் தவழ்வன; கரையின் உயர்ச்சியும் கடனில மாதலின் மேகம் கீழேபடியும் தன்மையும் ஒருங்கு குறித்த தமிழ்நயம் காண்க. பொருதிழிந்து எற்றும்-கடல்அலைகள் உயரஎழுந்து மோதி நிலத்தில்வீழ்ந்து பரவும் இயல்பு குறித்தது. கவிநலம்;—(5) சங்கை-ஐயம் ; வங்கத்தோடு சுறவங் கொணர்ந்தேற்றும்- முத்துக்குளித்து எடுத்தும், வங்கங்கள் முத்துக்களைக் கரையிற் கொணர்ந்தும், சுறவங்கள் உந்துதலால் முத்துக்களைக் கரையில் எற்றியும் உள்ள என்க;—(6) வெண்குருகு - கடற்பறவை வகை; பரவைக்கடல் - இருபெயரொட்டு; இடையிடைகழி என்றதற்கேற்ப இடைப்பட்ட கடற்பரப்பினை இருவேறு சொற்களாற் கூறினார் ; கவிநயம் ; கடி - மணம் ; கைதை...எழும் - தாழையின் வெள்ளியபூமடல்களிடையே வெண் குருகுகள் பிரித்தறியலாகாதபடி தங்கி எழும்போது தம்மைப் புலப்படுத்துவன ;— முளைவளர் - முளைத்து வளரும் ; வினைகள் களை - வினைகளாகிய களை ; வளை - சங்கு ; வளை வளை - வளைவுடன் உட்சுழிந்த பெருஞ் சங்குகள் ; சலஞ்சலம் - சங்குகளுட் சிறந்த வகை ;—(8) பேரிய நலங்கள் தரும் நங்கோ(னது), சுரும் பார்ந்தன இடம் - என்று கூட்டுக ; கலம் - பெரு மரக்கலம், கலஞ் சாருங் கரை - வாணிபத்தின் மரக்கலங்கள் வந்து சாரும் துறைமுகப் பட்டினமாய் முன்னாளில் மறைக்காடு விளங்கிற்று என்பது தேச சரிதத்தில் அறியப்படும் உண்மை ; அதனை மீள அவ்வாறாக்கி இலங்கை வடபால் முனையொடு பிணைக்க ஒரு முயற்சியும் இப்போது நிகழ்கின்றதும் காண்க. வலம்புரி - சங்குகளின் உயர்ந்த வகை ;—(9) குண்டாடியும்...கருதாது - குண்டர் சமணர்களது கொள்கைகளுள் மயங்காது ; தற்றுடுக்கை - சிறிய பாயுடை ;—(10) நிலனோடு - நிலத்தினில்.

தலவிசேடம் - III - சஅஎ - பார்க்க.

3835. எழுந்து பணிந்து புறத்தெய்தி யிருவர் பெருந்தொண்டருஞ்சிலநாட்
செழுந்தண் பழனப் பதியதனு ளமர்ந்து தென்பாற் றிரைக்கடனஞ்
சழுந்து மிடற்று ரகத்தியான் பள்ளி யிறைஞ்சி, யவிர்மதியக்
கொழுந்து வளர்செஞ் சடைக்குழகர் கோடிக் கோயில் குறுகினார். அஅ

(இ - ள்) எழுந்து...எய்தி - முன்கூறியவாறு திருமுன்பு நின்றும் இனைத் தெழுந்து வணங்கிப் புறம்பே வந்து; இருவர்...அமர்ந்து - இரண்டு பெருமக்களும் சிலநாட்கள் செழிய குளிர்ந்த வயல்கள் சூழ்ந்த அத் திருப்பதியில் விரும்பி எழுந்தருளியிருந்து; தென்பால்...இறைஞ்சி - அங்கிருந்தவர்றே, அதன் தெற்கில் உள்ள அலைபொருந்திய கடல் நஞ்சினை உட்கொண்ட கண்டத்தினையுடைய இறைவரது திருவகத்தியான்பள்ளியினைச் சென்று வணங்கி; அவிர் மதியக் கொழுந்து...குறுகினார் - கலைகள் வளரும் பிறையினைச் சூடிய சடையினை யுடைய குழகரது திருக்கோடிக் கோயிலினை அடைந்தனர்.

(வி - ரை) செழுந்தண் பழனப்பதி - கடற்கரைப் பட்டின மாதலாற் கடற் காற்றினாற் குளிர்ச்சி செய்யப்படுவது என்பார் தண் என்றார். "தளிர் வேலைக் கரையினயந் திருந்தா ரன்றே" (2787); அதனோடு இந்நகர் சோழநாட்டினைச் சார்ந்ததாதலின் காவிரிநீர் வளமுடைய வயல்களுடைமையாலும் தண்ணியதாம் என்பார் "தண்பழனம்" என்றார்; செழுமை - அந்நாளிற் கடற்றுறைமுகமாதலாலும், கப்பல் வாணிப முடைத்தாதலாலும், முத்துக்குளித்தல், உப்பளத் துறைத் தொழில் முதலியவற்றாலும் ஆம்.

அமர்ந்து - அங்கிருந்தபடியே திருவகத்தியான்பள்ளியும் திருக்குழகர் கோடிக் கோயிலும் சென்று வணங்கினர் என்க.

தென்பால் - "மறைக்காடதன் றென்பால்" (நம்பி - தேவா - கோடி - 10).

நஞ்சு அழுந்தும் மிடறு - அழுந்துதல் - நிலைபெற்றுத் தங்குதல்.

திருவகத்தியான்பள்ளி - நம்பிகள் பதிகம் கிடைத்திலது!

அவிர்மதியக் கொழுந்து - பிறை; அவிர்தல் - கலைகள் வளர்தல்.

குழகர் - கோடிக் கோயிலின் இறைவரது பெயர்.

கோடிக்கோயில் - சோழநாட்டில் காவிரித் தென்கரையில் கடைசிப் பதியாதலாலும், கடற்கரையில் உள்ளமையாலும், சோழநாட்டுத் தென்கோடி எல்லையாதலாலும் இப்பெயர் பெற்றது. 88

3836. கோடிக் குழகர் கோயிலயற் குடிக ளொன்றும் புறத்தெங்கும்
நாடிக் காணு துள்புக்கு நம்பர் பாதந் தொழுதுள்ளம்
வாடிக் "கடிதாய்க் கடற்காற்"றென் றெடுத்து மலர்க்கண் ணீர்வாரப்
பாடிக் காடு காள்புணர்ந்த பரிசும் பதிகத் திடைவைத்தார். அக

(இ - ள்) கோடிக் குழர்...உள்புக்கு - கோடிகுழகரது திருக்கோயிலின் அயலிலும் புறத்தில் எங்கும் நாடியும் ஒரு குடியும் காணாது திருக்கோயிலினுள்ளே புகுந்து; நம்பர் பாதம் தொழுது - இறைவரது திருவடியைத் தொழுது; உள்ளம் வாடி - மனம் மிக வருந்தி; கடிதாய்...பாடி - மலர் போன்ற கண்களில் நீர் வழியக் "கடிதாய்க் கடற்காற்று" என்று தொடங்கித் திருப்பதிகம் பாடி அருளி. காடுகாள்... ...வைத்தார் - காடுகாளுடன் இறைவர் வீற்றிருக்கும் தன்மையினையும் அப்பதிகத்தினுள் வைத்துப் போற்றியருளினர்.

(வி - ரை) குடிகள் ஒன்றும் அயற் புறத்து எங்கும் நாடியும் என்க.

குடிகள் ஒன்றும் - குடி என்பது குடிமக்களினிருப்பு என்ற பொருள் வழக்குப் பற்றி வந்ததாதலின் ஒருவரும் என்னாது ஒன்றும் என்றார். "குடிதானயலே" (தேவா).

அயல் - கோயிலின் பக்கம் வாழும் அகம்படித் தொண்டர்களின் குடியினையும், புறத்து - கோயிலினின்றும் தூரத்தில்வாழும் புறத்தொண்டர் குடிகளையும்பற்றி உணர்த்தியன. "அயலே" (நம்பிகள் தேவாரம்.)

உள்ளம் வாடி - தொண்டு புரிவாரும் வழிபடுவாரும் உடன் இன்றி இறைவர் தனியே கடற்காற்றுக் கடிதாய் மணலை வாரியிறைக்கத் தாம் வீற்றிருத்தலைக் காணச் சகியாது மனம் வாடினர் என்க. இந்த அன்பின் மிகுதியால் ஆயது; "கைம்மலை கரடி வேங்கை யரிதிரி கானந் தன்னில், இம்மலை தனியே நீரிங் கிருப்பதே யென்று நைந்தார்" (756) என்ற கண்ணப்ப தேவரது நிலை ஈண்டு நினைவு கூர்தற் பாலது.

மலர்க்கண் நீர் வார - இறைவர் தனியிருத்தல் காணச் சகியா தெழுந்த மிக்க மன வருத்தத்தால் கண்ணீர் பெருகியது மெய்ப்பாடு; "கொடியேன் கண்கள் கண்டன" என்ற பதிகக் கருத்து; "பாவியேன் கண்ட வண்ணம்" (818).

காடுகாள் புணர்ந்த - காடுகாள் - துர்க்கை. காடுகாள் - காடுகிழாள் என்பதன் மரூஉ; இது வனதுர்க்கை எனப்படும். நவதுர்க்கையின் பேதத்துள் ஒன்று; "வெற்றி வெல்போர்க் கொற்றவை சிறுவ; இழையணி சிறப்பிற் பழையோள் குழவி" (முருகு 258–259); வெற்றியையுடைய ..வனதுர்க்கையினுடைய புதல்வ !; காடுகிழாள் என்பது இக்காலத்துக் காடுகாள் என மருவிற்று, அவளும் இறைவனுடைய சத்தியாகலின்" (ஷை நச் - உரை) என்பதனாலும் அறிக. கடும்பகற் பொழுதினைப் பற்றிப் பாலைத்திணைக்குரிய பண்பிற் கூறியபடி; "நீலி கோட்டங்களும் நிரந்து...பாலையுஞ் சொல்ல லாவன" (1092) என்றதும், ஆண்டுரைத்தவையும் பார்க்க; துர்க்கை - நீலி எனவும் படுவாள்; நீலி கோட்டம் பாலைக்குக் கூறுதல் காண்க; இங்குக் கடற்கரை நெய்தற் றிணையே யாயினும், அதனியல்பு திரிந்து கடிதாய்க் கடற்காற்று வந்தெற்றக் குடிகளொன்றும் வாழ இடமின்றித் துயருறுத்தும் நிலைபற்றி இங்குப் பாலைத்திணைபற்றிக் கூறியதாயிற்று. கடும்பகற் போது பற்றியதுமாம்.

காடுகாள்...பதிகத்திடை வைத்தார் - "கையார் வளைக் காடுகா ளோடு முடனாய்" (5) என்பது பதிகம். இங்குத் துர்க்கை சந்நிதியுண்டு. 89

திருக்கோடிக் குழகர்

திருச்சிற்றம்பலம் பண் - கொல்லி - 7ம் திருமுறை

கடிதாய்க் கடற்காற்றுவந் தெற்றக் கரைமேற்
குடிதா னயலே யிருந்தாற் குற்றமாமோ ?
கொடியேன் கண்கள் கண்டன கோடிக்குழகீர்
அடிகே ளுமக்கார்துணை யாக விருந்தீரே. 1

மையார்தடங் கண்ணி பங்காகங் கையாளும்
மெய்யாகத் திருந்தனள் வேறிட மில்லை
கையார்வளைக் காடுகா ளோடு முடனாய்க்
கொய்யார்பொழிற் கோடியே கோயில்கொண் டாயே. 5

பாரூர் மலிசூழ் மறைக்கா டதன்றென்பால்
ஏரார் பொழில்சூழ் தருகோடிக் குழகை
ஆரூ ரனுரைத்தன பத்திவை வல்லார்
சீரூர் சிவலோகத் திருப்பவர் தாமே. 10

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு:—இறைவர் கடிதாய்க் கடற்காற்று வந்தெற்ற அயலே குடியொன்று மில்லாது தனியே யிருந்தமை கண்டு மனம் வாடிக் கூறியது.

பதிகப்பாட்டுக் குறிப்பு :—(1) கடிதாய்...எற்ற - கடற்காற்று மெல்லிதாய் வீசுங்கால் உடற் சுகந்தரும் ; கடிதாய் வந்து மணலையும் வாரி எற்றுங்கால் நோய் செய்யும் ; அயலே...குற்றமாமோ - தேவரீர் திருவுள்ள மிருப்பின் குடிகளிருக்கும்; குடியின்மையின் திருவுள்ள மின்மை அறியப்படும் ; அவ்வாறு திருவுள்ளங் கொள்ளாமைக்குக் காரணம் குடிகளிருப்பின் அவராற் குற்றமாமென்பதோ ? என்று எழுந்த ஐயவினா ; குற்றமாகாதே என்று வினா எதிர்மறை குறித்த தென்றலுமாம். கோடியோன் கண்கள் கண்டன - நான்பாவியே னாதலின் என் கண்களால் இதனைக் கண்டேன் ; ஆர்துணையாக - வழிபாடும் தொண்டு மியற்றுவார் ஆர்.—(2) என்றன் தனியே யிருந்தாய் - தனியே யிருப்பதற்குக் காரணம் வினவித் தாமே ஒரு காரணங் கற்பித்தபடி ; முன்றன்......செய்தாயோ ?- தாம் உண்ண முன்னே நஞ்சு அமுதாகக் கொடுத்ததற்காகப் பிரதி உபகாரமாகக் கடலுக்குத் தனித்த துணையாக அதன் கரையில் வந்திருந்தாயோ ? என்றபடி ; தற்குறிபேற்றம் 3-7-8 வது பாட்டும் பார்க்க ; —(3) மறைக்காடதன்றென்பால் 6-10 பார்க்க; “ தென்பால் ” (3835); எத்தால் - எதனால் ; மந்தம் - மணம். மணமுடைய சோலைகளுக்காகி வந்தது.—(4) ஆந்தைகள் கூகை - பாலைக் கரு ; தொண்டர் - நிலைத்து வாழ்வோர் ; சாலவும் தீயர்-சழக்கர் - பாலையில் மக்களுக்குத் தொழில் ஆறலைத்தலும் சூறை கோடலு மாதலின் தீயர் - என்றார் ; சழக்கு - குற்றம் ; “வேடர்கள்”—(5) மையார் தடங்கண்ணி - தல அம்மை பெயர் ; வேறிடமில்லை - இருவிரு சேவிப்பரும் வெவ்வேறிருக்க வேறிடமில்லை; ஆகவும், காடுகாளோடு முடனாய் இருத்தல் யாங்ஙனம் என்பதாம்; காடுகாள்-துர்க்கை ; காடுகிழாள் என்றும் கூறுவர் ; பாலைத் திணைபற்றி அதன் தெய்வமாகிய துர்க்கையுடன் இறைவர் இருத்தல் பற்றிக் கூறிய தோழமைப் பேச்சு ;—(6) இரவே - இரப்பதுவே ; இராக்காலமே என்றலுமாம்.—(7) பறைகுழல் - சூறைகோட்பறையும் நிரைகோட் பறையும் ; குழல் - பாலை யாழும், கவர்ந்த ஆனிரைகளுக்கு ஏற்கப்பயிலும் குழலும். பறை - துன்ப ஓசையும், குழல் - இன்ப ஓசையுமாதலின் துன்பமுமா யின்பமாயின இறைவரது தன்மைக் கேற்பது குறிப்பு ;—(8) தனியே கடற்கரையில் வந்து வாழ்வதற்கு முன் (2-ல்) கூறியதன்றி மற்றுமோர் காரணங் கற்பித்தவாறு ; ஒற்றியூரென்ற...தானோ - ஒற்றியூர் - ஊர்ப்பெயர் ; ஒற்றி-பெந்தகம் ; சொற்சிலேடை; பிறனொருவர்பாற் பெந்தகம் வைத்துக் கடன் கொண்ட ஊர் என்பது ஊனமுள்ள சொல் ; ஆரூர் - ஊர்ப்பெயர். சொற்சிலேடை ; உம் ஊராயிருப்பவும் இது ஆருடைய ஊர் என்று சொல்லக் கேட்பது. அற்றம் - குறைவு. உமக்குச் சொந்தமாகிய சிறந்த அந்த ஊர்களிரண்டிலும் இவ்வாறு ஊனச் சொல் கேட்க வருதலின் மானம் பொறாது அவற்றைவிட்டு இங்கு வந்து யாரும் வாராத இடம் பார்த்துக் குடிகொண்டீரோ ? என்று தோழமை முறையாற் கூறியது ; அவ்வூரிரண்டும் நம்பிகளுக்கும் உரிமையாதலும் காண்க ;—(9) படி - தன்மை ; பலி கொள்ளுமிடங் குடியில்லை - பலிகொள்ள அயலிற் குடியின்மையால் அதுவும் செல்

லாத நிலை என்பது குறிப்பு; கோடியார் பலர் வேடர்கள் - பாலையில் வாழும் மாக்கள்; மறவர்; வேடர்களீ - இவர்கள் குறிஞ்சி மக்களின் வேறு; அன்பதரீ - கோடியார்க ளிருக்குமிடத்தில் அதற்குமாறாக அன்பாகி; கோயில் கோள்ளுதல் - தங்குதல்; —(10) பாநீர்மலிதூழ் - உலகிற் பல வூர்கள் சூழ்ந்த.

**தலவிசேடம் :—திருக்கோடிக் குழகர் :—**சோழ நாட்டுக் காவிரித் தென் கரையில் கடைசியாக உள்ளது. 127 வது பதி; இது குழகர் கோயில் என வழங்கப் படும்; தேவர்கள் பாற்கடல் கடைந்து பெற்ற அமுதத்தில் எஞ்சியதனை வாயுவின் கையிற் கொடுக்க, அவன் அதனை வான வீதியிற் கொண்டு செல்லும் போது அது கீழே விழுந்து சிவலிங்க உருவாய் அமைந்த பதி; பின்னர்த் தேவர்கள் வந்து வழி பட்டு அமுதம் பெற்றனர். சுவாமி பெயர் பார்க்க. கடிதாய்க் கடற்காற்று வந் தெற்றி வீச அயலிற் குடி ஒன்று மில்லாது இறைவர் தனியிருக்கும் பண்பு பற்றி நம்பிகள் வருந்திப் பாடியது பதிகத்துக் காண்க; தூர்க்கை விசேடமும் திருப்பதிகத் துக் காண்க. முருகப் பெருமான் ஒருமுகமும் ஆறு திருக்கரங்களும் கொண்டெழுந் தருளியுள்ளார்.

•சுவாமி - அமிர்தகடேசர்; அம்மை - மையார் தடங்கண்ணியம்மை; பதிகம் (5) தீர்த்தம் - அமுத தீர்த்தம்; (கிணறு); கோயிற் சுற்றிலுள்ளது.

இது கோடிக்கரை நிலயத்தினின்றும் வடக்கில் மணல் வழியில் 1½ நாழிகையள வில் அடையத்தக்கது. பதிகத்துக் கண்ட உண்மைப்படி வேறு வசதிகள்

3837. அங்கு வைகிப் பணிந்தருளாற் போவா ரகன்சோ ணாட்டகனூர்
தங்கு மிடங்கள் வணங்கிப்போய்ப் பாண்டி நாடு தனைச்சார்ந்து
திங்கண் முடியார் திருப்புத்தூ ரிறைஞ்சிப் போந்து சேண்விளங்கும்
மங்கு றவழு மணிமாட மதுரை மூதூர் வந்தணைந்தார். ௯0

(இ - ள்) அங்கு...போவார் - அவ்விடத்தில் (திருமறைக் காட்டில்) தங்கிப் பணிந்து திருவருள் விடை பெற்று போவார்களாகி; சோணாட்டு...போய் - சோழ நாட்டில் சிவபெருமானார் விளங்க வீற்றிருந்தருளும் பதிகளை வணங்கிக் கொண்டு மேற் சென்று; பாண்டி நாடுதனைச் சார்ந்து-பாண்டி நாட்டினை அடைந்து; திங்கள் ...போந்து - பிறையினைச் சூடிய முடியினை உடைய இறைவரது திருப்புத்தூரினை வணங்கிச் சென்று; சேண்...அணைந்தார் - வானிலே விளங்கும் முகில்கள் தவழ் கின்ற அழகிய மாடங்கள் நிறைந்த மதுரையாகிய தொல் பெரும்பதியில் வந்து அணைந்தார்கள்.

(வி - ரை) அங்கு - அவ்விடம்; இங்குத் திருமறைக்காட்டினைக் குறித்தது; சிலநாள் அமர்ந்த (3835) பதியதுவாதலானும், அங்குத் தங்கியவாறே திரு அகத்தி யான் பள்ளியும் கோடிக்குழகர் கோயிலும் சென்று பணிந்து மீண்டார்களாத லானும், குழகர் கோடிக் கோயிலிற் அயலிற்குடிகள் ஒன்றுமில்லையாதலானும், அங்கு என்றது குழகரை வணங்கி மீண்ட திருமறைக் காட்டினைக் குறித்ததாம். வைகி என்றதும் காண்க. அருளால் - அருள் விடைபெற்று.

சோணாட்டு - இடங்கள் - சோழ நாட்டிற் தெற்கிலும் மேற்கிலும் எஞ்சிய பதிகள்; இவை திருக்கடிக்குளம், திருவிடும்பாவனம், திருவுசாத்தானம் முதலா யின என்பது கருதப்படும். நாயன்மார்கள் திருமறைக் காட்டுக்குச் சென்ற வழி அங்கு நின்றும் பட்டுக்கோட்டை அறந்தாங்கிச் (இஃது அரண்தாங்கி என்றதன்

மரூஉ வழக்கு என்பர் ஆராய்ச்சியாளர்) சாலை என்பது கருதப்படுதலின் இப்பதி களே சோணாட்டில் வணங்க நின்றன என்பதாம். ஆளுடைய பிள்ளையார் சென்றருளிய வழிகள் பற்றி முன் 2522 முதல் 2529 வரை உரைத்தவை இங்கு நினைவு கூர்தற் பாலன. இவற்றிற்கு நம்பிகள் பதிகங்கள் கிடைத்தில !

பாண்டிநாடு தனைச் சார்ந்து - பாண்டிநாட்டுக்கும் சோழ நாட்டுக்கும் முன்னை நாளில் எல்லையாகக் கண்டது தென்வெள்ளாறென் றறியப்படுதலின் அறந்தாங்கியின் சிறிது வடக்கில் வெள்ளாற்றினைக் கடந்து குன்றக்குடி வழியாகத் திருப்புத்தூரினை அடைந்தனர் என்பது கருதப்படும்.

திருப்புத்தூர் - இறைஞ்சி - இதற்கும் நம்பிகள் பதிகம் கிடைத்திலது !.

போந்து - மதுரைமூதூர் அணைந்தார் - எனப்படுதலால் ஆளுடைய பிள்ளையார் திருப்புத்தூரினின்றும் வடமேற்கு நோக்கிச் சென்று திருக்கொடுங்குன்றத்தினை வணங்கிப் போந்தது போலச் செல்லாது, இந்நாயன்மார்கள் திருப்புத்தூரினின்றும் நேரே தென்மேற்கு மேலூர்ச் சாலை வழியாக மதுரைக்கு எழுந்தருளினர் என்பது கருதப்படும்.

சேண்விளங்கு மங்குல் தவழும் மணிமாடம் - சேண் - விசும்பு ; விண் ; ஆகாயத்தில் விளங்கும் முகில்கள் தவழும்படி மாடங்கள் விளங்குதல் மாடங்களின் உயர்ச்சியைக் குறித்தன. " மாடம் விண்டாங்குவ போலும். (பிள். தேவா). சேண் - சேணில் ; சேய்மையில் என்றலுமாம். சேண் விளங்கு மங்குல் என்றதில் சேண் விளங்கும் என்றது பிறிதினியைபு நீக்கிய விசேடணம் ; கடற்கரையின் மங்குல் கடல்பருகிக் கடற்கரை தவழ வுள்ளனவாதலின் அவற்றை நீக்கச் சேண்விளங்கு என்றார். " குரைவிரவிய குலசேகரக் கொண்டற்றலை " (நம்பி தேவா. திருமறைக்காடு - 4) ; நான்மாடக்கூடலான திருவிளையாடற் சரிதக் குறிப்பும் காண்க. 90

வேறு

3838. சேரமான் றோழருமச் சேரர்பிரா னும்பணிப்பூண்
ஆரமார் பரைமதுரை யாலவா யினில்வணங்க
வாரமா வந்தணைய வழுதியார் மனக்காதல்
கூரமா நகர்கோடித் தெதிர்கொண்டு கொடுபுக்கார். ௯௧

(இ - ள்) சேரமான்றோழரும்...வந்தணைய - சேரமான்றோழராகிய நம்பிகளும் சேரர்பிரானும், பாம்பினைப் பூணும் ஆரமாகவுடைய மார்பராகிய சிவபெருமானை மதுரைத் திருவாலவாயில் வணங்கும் பொருட்டு அன்பினுடனே வந்தணைய ; வழுதியார்...கொடுபுக்கார் - பாண்டியமன்னர் பெரிய மனவிருப்பம் மிக மாநகரத்தினை அலங்கரித்து எதிர்கொண்டுசென்று அழைத்துக்கொண்டு நகரத்தினுட் புகுந்தனர்.

(வி - ரை) சேரமான்றோழர் - நம்பிகள் ; 3813 பார்க்க.

பணிப்பூண் ஆரமார்பர் - இறைவர் ; பணி - பாம்பு ; பணியினைப் பூணும் ஆரமாகக் கொண்ட மார்பர். பணத்தை யுடையது பணி. பணி - படம் ; வடமொழி பணியினையும் பூண் ஆரங்களையும் பூண்ட மார்பர் என்றலுமாம் ; இறைவரே அரசராக இருத்தலின் இவ்வாறு கூறலும் பொருந்தும்.

வாரம் - அன்பு ; வாரமா - மிக்க அன்புடனே.

வழுதியார் - பாண்டியர் ; காதல்கூர - பெரு விருப்பம் மேலும் மிகுதலி

கோடித்தல் - அலங்கரித்தல்.
சோனும் பணிப்பூண்—என்பதும் பாடம். 91

3839. தென்னவர்கோன் மகளாரைத் திருவேட்டு முன்னரே
தொன்மதுரை நகரின்க ணினிதிருந்த சோழனார்
அன்னவர்க ளுடன்கூட வணையவவ ருங்கூடி
மன்னுதிரு வாலவாய் மணிக்கோயில் வந்தணைந்தார். கூ௨

(இ - ள்) தென்னவர்கோன்...உடன்கூட பாண்டியனாரது மகளாரை மணந்து முன்னமே தொன்மையுடைய மதுரை நகரத்தில் வந்து இனிதாக இருந்த சோழமன்னரும் அவர்களுடன் கூடச் சேர; அவரும் கூடி...வந்தணைந்தார் - அவர்களும் ஒருங்கு சேர்ந்து நிலைபெற்ற திருவாலவாய் என்கின்ற அழகிய கோயிலினை வந்து சேர்ந்தனர்.

(வி - ரை) தென்னவர்கோன்...சோழனார் - பாண்டியரது மகளாரை மணஞ் செய்திருந்தமையால் அச்சுற்றத் தொடர்பு பற்றிச் சோழ மன்னர் முன்னமே மதுரையில் வந்திருந்தனர் என்பதாம். திருவேட்டு - மணம் செய்து.

சோழனார் - உடன்கூட - அவரும்கூடி - சோழனார் வந்து உடன் சார நம்பிகளும் சேரனும் பாண்டியருமாக ஒருங்கு கூடி.

மணிக்கோயில் - அழகிய திருக்கோயில்; ஆலவாய் என்பது கோயிலின் பெயர்; பாம்பு வளைந்து எல்லை காட்டக் கண்டமையால் இப்பெயர் பெற்றது; அப்பாம்பின் மணியினால் முன் அணிசெய்த என்பதும் குறிப்பு. 92

3840. திருவால வாயமர்ந்த செஞ்சடையார் கோயில்வலம்
வருவார்முன் வீழ்ந்திறைஞ்சி வன்றொண்டர் வழித்தொண்டு
தருவாரைப் போற்றிசைத்துத் தாழ்ந்தெழுந்து வாழ்ந்ததமிழ்ப்
பெருவாய்மை மலர்புனைந்து பெருமகிழ்ச்சி பிறங்கினார். கூ௩

(இ - ள்) வன்றொண்டர் - வன்றொண்டராகிய நம்பிகள்; திருவாலவாயமர்ந்த ...இறைஞ்சி - திருவாலவாயில் விரும்பி வீற்றிருந்தருளிய சிவந்த சடையினையுடைய இறைவரது திருக்கோயிலினை வலமாக வருவாராய் முன் விழுந்து வணங்கி; வழித்தொண்டு.. எழுந்து - வழிவழியாளாய்த் தொண்டு புரியும் பேற்றினைத்தந் தருளுவாராகிய இறைவரைத் துதித்து நிலமுற விழுந்து எழுந்து; வாழ்ந்த...பிறங்கினார் - வாழ்வடைந்த பெருவாய்மையினை யுடைய தமிழ்ப் பாமலர் மாலை புனைந்து பெருமகிழ்ச்சியின் விளங்கினார்.

(வி - ரை) திருவாலவாயாரை வணங்க வந்த இருபெரு மக்களுள் வன்றொண்டரது வழிபாடு இப்பாட்டாற் கூறப்பட்டது; சேரனார் வழிபட்டநிலை மேல்வரும் பாட்டிற் கூறப்படுதல் காண்க.

வழித்தொண்டு தருவார் - இறைவர்; "யானு மென்பால் வருமுறை மரபு ளோரும் வழித்தொண்டு செய்தற் கோலை" (205) என்றெழுதிய அற்புதப் பழ ஆவணங்காட்டித் தொண்டிலே கூட்டினாராதலின் இவ்வாற்றாற் கூறினார்.

வாழ்ந்த தமிழ்ப் பெருவாய்மை மலர் - செந்தமிழ் திருப்பதிகம். நம்பிகள் அருளிய அப்பதிகம் கிடைத்திலது!

பெருமகிழ்ச்சி பிறங்குதலாவது பெரு மகிழ்ச்சி மீதூர விளங்குதல். 93

3841. படியேறு புகழ்ச்சேரர் பெருமானும் பார்மிசைவீழ்ந்
"தடியேனைப் பொருளாக வளித்ததிரு முகக்கருணை
முடிவேதென் றறிந்திலே" னெனமொழிக டடுமாறக்
கடியேறு கொன்றையார் முன்பரவிக் களிகூர்ந்தார். கூ௪

(இ - ள்) படியேறு...வீழ்ந்து - உலகில் ஏற்ற முறும் புகழினையுடைய சேரர்பிரானும் திருமுன்பு நிலத்தின் மேல் விழுந்து; அடியேனை...என - அடியேனையும் ஒரு பொருட் படுத்தித் திருமுகம் அளித்தருளிய கருணைப் பெருக்கின் எல்லையினை அளவிட அறியேன் என்று சொல்லித் துதித்து; மொழிகள்...களி கூர்ந்தார் - சொற்கள் எழமாட்டாமற் நாத் தழுதழுக்க மணம் விரிந்த கொன்றை சூடிய இறைவர் திருமுன்பு துதித்து மகிழ்ச்சி பெருகினர்.

(வி - ரை) "அடியேனை...அறிந்திலேன்" என - தம்மையும் ஒரு பொருளாகக் கொண்டு திருமுகம் கொடுத்தருளிய இறைவரது பெருங்கருணை வெள்ளத் தினையே எண்ணி எண்ணித் தினைத்தது. இக்கருணை யளித்த இறைவனை வணங்கு தற்கென்று எண்ணியே சேரர் பிரானார் நம்பிகளுடன் இசைவயாத்திரையிற் பின் றொடர்ந்தருளினர் என்பது முன் (3829) உரைக்கப்பட்டது காண்க. அக்கருணை யினையே பாராட்டித் துதித்தனர்.

மொழிகள் தடுமாறுதல் - மிகுந்த அன்பின் மெய்ப்பாடுகளுள் ஒன்று; "இத்தனையும் எம்பரமோ?" (தேவா); 2125-ம் பார்க்க.

திருமுகம் அளித்த கருணை என்க. முடிவு - அளவு; எல்லை. 94

3842. செம்பியனா ருடன்செழியர் தாம்பணிந்து சேரருடன்
நம்பியுமுன் புறத்தணைய நண்ணியபே ருவகையால்
உம்பர்பிரான் கோயிலினின் றுடன்கொடுபோ யிருவருக்கும்
பைம்பொன்மணி மாளிகையிற் குறைவறுத்தார் பஞ்சவனார். கூ௫

(இ - ள்) செம்பியனார்...பணிந்து - சோழருடனே பாண்டியரும் இறைவரை வணங்கி; சேரருடன்...அணைய - சேரனாருடனே நம்பிகளும் திருக்கோயிற் புறத்திலே சேர; நண்ணிய...போய் - பொருந்திய பெருமகிழ்ச்சியினாலே தேவதேவரது திருக்கோயிலினின்றும் தம்முடன் அழைத்துக் கொண்டு போய்; இருவருக்கும்... பஞ்சவனார் - பாண்டியர், இருபெரு மக்களுக்கும் அழகிய பொன் பூண்ட தமது மாளிகையிலே குறைவறத்த வேண்டியவாறு உபசரித்தனர்.

(வி - ரை) செம்பியனார் - சோழ மன்னர். (3839).

செழியர் - பாண்டியர்; தாம்பணிந்து - தாங்களும் இறைவரை வணங்கி.

புறத்து - திருக்கோயிற் புறமுற்றத்திலே.

இருவர் - நம்பிகளும் சேரனாரும்.

பைம்பொன் மணிமாளிகை - இருவருக்கும் பாண்டியர் அமைத்த தனியிடமாகிய திருமாளிகை. "தாமிருந்த இடம்" (3843) என இதனைப் பாண்டியரது அரண்மனையின் வேறு பிரித்து மேற்கூறுதல் காண்க.

குறைவறுத்தல் - உணவு, உறையுள், மற்றும் வேண்டத் தக்கவையாகிய குறைகள் இவைகளை இல்லையாகச் செய்தல்; குறைவின்றி உபசரித்தல்.

பஞ்சவனார் - பாண்டிய மன்னர்.

செம்பியனுநுடன் செழியர்-என்றும், சேரநுடன் நம்பியும் - "இருவருக்கும்" என்றும் பிரித்துக் கூறியது உபசரித்தோரையும் உபசரிக்கப்பட்டோரையும் வேறு வேறு உணர்த்துதற்பொருட்டு. உபசரித்தோர் இருவருள்ளும் பாண்டியனுரே இடத்தின் உரிமையாளராதலின் அவரை வேறுபிரித்துக் குறைவறுத்தார் பஞ்சவனுர் என்றார். 95

3843\. உளமகிழக் கும்பிட்டங் குறையுநா ளுதியருடன்
கிளரொளிப்பூண் வன்றொண்டர் தாமிருந்த விடங்கெழுமி
வளவனார் மீனவனார் வளம்பெருக மற்றவரோ
டளவளா வியவிருப்பா லமர்ந்துகலந் தினிதிருந்தார். கூகூ

(இ - ள்) உளமகிழ...நாள் - மனங்களிப்ப இறைவரைக் கும்பிட்டு அப்பதியில் தங்கிய நாட்களிலே; உதியருடன்...கெழுமி - சேரனுருடனே வன்றொண்டர் தாம் தங்கியிருந்த இடத்தினைச் சேர்ந்து; வளவனார்...இனிதிருந்தார் - சோழரும் பாண்டியரும் வளங்கள் பெருகும்படிச் சார்ந்து அவர்களோடு அளவளாவிக் கலந்த விருப்பத்தினால் அமர்ந்து கூடி இனிதிருந்தனர்.

(வி -ரை) உதியர் - சேரர்.

தாமிருந்த இடம் - நம்பிகள் சேரருடன் தங்கியிருந்த மாளிகையாகிய தனியிடம்.

கெழுமுதல் - சார்தல்; சோழரும் பாண்டியரும் ஆகிய இருவரும் நம்பிகள் சேரருடனிருந்த இடத்திற்கு வந்து அளவளாவி விரும்பி மகிழ்ந்தனர் என்பதாம்; இஃது உபசரிக்கப் பட்டோர்க்குரிய உபசரிப்பு மரபுகளுள் ஒன்று. அரசர் - பெரியோர்கள் - பால், உலக நிலையில் இவ்வழக்குப் பெரிதும் போற்றப் படுதல் காண்க. பேரரசின் அமைச்சராதலின் ஆசிரியர் மும்முடி மன்னர்கள் கூடிய கூட்டத்தின் இம்மரபு வழக்கினை உலகுக்கு அறிவுறுத்திக் காட்டியருளினர்.

வளம்பெருக - இவ்வாறு போந்த நட்பினால் இருவர் நாட்டினும் உலகியல் அரசாட்சிச் சார்பில் வாணிகம் முதலாக பல துறையின் வளங்களும் பெருக நிகழும் பொருட்டு. இனி, அன்பினியலிலும் சிவன் பாலன்பாகிய வளம் இருபாலும் அன்புரிமையால் அடியாரந் திறத்திற் பெருக என்றலுமாம்.

அமர்தல் - விரும்பியிருத்தல்; கலத்தல் - உணர்ச்சிவகையால் உள்ளங் கூடுதல்.

இனிதிருந்தார் - வளவனாரும் மீனவனாரும்.

அவர் - நம்பிகளும் சேரனாரும். மற்று - அசை. இப்பாட்டினால் சோழபாண்டியர் இப் பெருமக்களின் வருகையினைப் போற்றிப் பெற்ற பண்பும் பயனும் கூறப்பட்டது. 96

3844\. அந்நாளின் மதுரைநகர் மருங்கரனா ரமர்பதிகள்
பொன்னார மணிமார்பிற் புரவலர்மூ வரும்போதச்
செந்நாவின் முனைப்பாடித் திருநாடர் சென்றிறைஞ்சிச்
சொன்மாலை களுஞ்சாத்தித் தொழுதுத்திருப்பூ வணத்தணைந்தார். கூஎ

(இ - ள்) அந்நாளில்...பதிகள் - அந்நாட்களில் மதுரைப் பதியின் பக்கத்தில் இறைவர் விளங்க எழுந்தருளிய பதிகளை; பொன்...போத - பொன் ஆரங்களும் மணிகளும் பூண்ட மார்பினையுடைய முடிவேந்தர்கள் மூவரும் உடன் வர; செந்நாவின்...தொழு - செம்மை விளங்கும் நாவினையுடைய திருமுனைப்பாடித் திருநாட்டின் தலைவராகிய நம்பிகள் சென்று வணங்கித் திருப்பதிகங்களைப் பாடிச்

சாத்தித் தொழுவதற்கு எழுந்து ; திருப்பூவணத்தணைந்தார் - திருப்பூவணத்தினைச் சேர்ந்தனர்.

(வி - ரை) அந்நாளில் - முன் கூறியபடி இனிதிருக்கும் அந்நாட்களில்,

நாடர் - பதிகள் - சென்று - தொழ - மூவரும் - உடன் - போதத் - திருப் பூவணத்தை யணைந்தனர் - என்று கூட்டுக.

திருநாடர் தொழ - மூவரும் உடன் போத - பரமாசாரியராதலின் நம்பிகள் தொழ, வேந்தர்கள் பின்றொடர்ந்து உடன் சென்றனர் என்க. அன்றியும் பாண்டி நாட்டு யாத்திரையினை நம்பிகளே முறைமையால் நினைந் தெழுந்தனர் ; அவரைப் பிரியாமைப் பொருட்டும் தமக்குத் திருமுகங் கொடுத்தருளிய கருணையின் பொருட் டும் அவருடன் செல்லச் சேரனார் துணிந்து உடன் போந்தனர் ; இவ்விருவரையும் கண்டு உபசரித்துத் தம் நாட்டெல்லை யளவும் உடனிருத்தற் பொருட்டுப் பாண்டிய னாரும் அவரது தொடர்பினாற் சோழனாரும் உடன் போந்தனர். எனவே நம்பி களின் பொருட்டே இத்தலயாத்திரை நிகழ்வதாதலின் அவர் தொழ, மன்னர் மூவரும் உடன் போத என்று பிரித்துக் கூறியருளினர் ; இனம்பற்றி முடிவேந்தர் மூவரை யும் ஒருங்கு சேர்த்துக் கூறினார்.

திருப்பூவணத்து அணைந்தனர் - திருப்பூவணம் அந்நாளில் உலகியலிலும் சிறந்த பெருநகராக விளங்கிற்று ; அன்றியும் மூவேந்தர்களும் தத்தம் உரிமையுடன் சென்று வணங்கும் பொதுத் தலமாகவும் விளங்கியதெனக் கருத இடமுண்டு ; "கூடல் மாணிக்கம்" என்ற மலைநாட்டுப்பதி இந்நாளில் விளங்குதல் போலக் கொள்க. "முறையால் முடிசேர் தென்னர் சேரர் சோழர் தாம் வணங்கும், திறையார் ஒளி சேர் செம்மை விளங்குந் தென்றிருப் பூவணமே" (1) "கழல் மன்னர் காத் தளித்த" (2) "ஆரா அன்பிற் றென்னர் சேரர் சோழர்கள் போற்றிசைப்ப" (5) என வரும் பிள்ளையார் பதிகத் திருவாக்குக்கள் காண்க. (2785ல்) முன் உரைத் தவையும் பார்க்க. பாண்டி நாட்டில் மதுரையினை யடுத்து இதனையே முதலிற் சென்று மும்மன்னரும் போற்றியதற்கு இது காரணம் போலும். இங்கு இறைஞ்சிய பின் இங்குநின்றும் நேரே மதுரைக்கு மீண்டருளியதும் (3847) காண்க. 97

3845. நீடுதிருப் பூவணத்துக் கணித்தாக நேர்செல்ல
மாடுவருந் திருத்தொண்டர் மன்னியவப் பதிகாட்டத்
தேடுமறைக் கரியாரைத் "திருவுடையா" ரென்றெடுத்துப்
பாடிசையிற் "பூவணமீ தோ?" வென்று பணிந்தணைவார், கஅ

3846. சென்றுதிருப் பூவணத்துத் தேவர்பிரான் மகிழ்கோயில்
முன்றில்வலங் கொண்டிறைவர் முன்வீழ்ந்து பணிந்தெழுந்து
நின்றுபா விப்பாடி நேர்நீங்கி யுடன்பணிந்த
வென்றிமுடி வேந்தருடன் போந்தங்கண் மேவினார். கக

3845. (இ - ள்) நீடு...காட்ட - நேரே செல்லும் போது பக்கத்தில் வருகின்ற திருத்தொண்டர்கள், நிலைபெற்ற அத் திருப்பதியினைக் காட்ட ; தேடும்...எடுத்து - தேடுகின்ற வேதங்களுக்கும் எட்டுதற் கரிய இறைவரைத் "திருவுடையார்" என்று தொடங்கி ; பாடு...அணைவார் - பாடுகின்ற இசை பொருந்திய திருப்பதிகத்தில் "பூவணமீதோ?" என்று போற்றி வணங்கி அணைவாராகி, கஅ

3846. (இ - ள்) சென்று...வலங்கொண்டு - சென்று திருப்பூவணத்தில் தேவர்களின் தலைவராகிய இறைவர் மகிழ்ந்து வீற்றிருக்கும் திருக்கோயிலின் திருமுற்றத்தினை வலங்கொண்டு ; இறைவர்...நீங்கி - இறைவரது திருமுன்பு நிலமுற விழுந்து வணங்கி எழுந்து நின்று துதித்துப் பாடி அங்கு நின்றும் நீங்கி ; உடன் பணிந்த...மேவினார் - தம்முடன் வந்த வெற்றியினையுடைய முடி மன்னர்கள் மூவருடனே கூடிச் சென்று அப்பதியிற்றங்கினார் (வன்றொண்டர்). கூகூ

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒருமுடிபு கொண்டன.

3845. (வி - ரை) நீடு - அருட்செல்வமும் பொருட் செல்வமும் நீடுகின்ற. அணித்தாக நேர் செல்ல - அணிமையில் சென்றபொழுது.

பதிகாட்ட - "பூவண மீதோ?" என்ற பதிகத்தால் அதன்புறம்பு நின்று அதனை நோக்கி வரும் வழியிற்பாடிய குறிப்பு விளங்குமாறு காண்க. "இடைமருதீதோ?" "நனிபள்ளி போலும்" (தேவா).

மறைக்கரியாரை - என்று எடுத்துப் - பூவணமீதோ ? என்று பாடினார் - பூவணமீதோ என்று பதியினைப் போற்றிய தன்மையில் அமையப் பாடினும் அஃது இறைவரைப் போற்றியபடியேயாம் என்பது ; அரியாரைப் - பாடி - என்க.

"திருவுடையார்" என்று எடுத்து - எடுத்தல் - தொடங்குதல் ; இது பதிகத் தொடக்கமாகிய முதற் குறிப்பு.

இசை - இசையினையுடைய பதிகம் என்ற பொருளில் வந்தது. இசை - பதிகப்

பணிந்து - பதியினை வணங்கி.

அணைவார் - முற்றெச்சம் ; அணைவாராகிச் - சென்று - என மேல் வரும்பாட்டுடன் கூட்டி உரைத்து முடித்துக் கொள்க.

பணிந்தணைந்தார்—என்பதும் பாடம். 98

3846. (வி - ரை) கோயில் ..பாடி - வழிபாட்டு முறை ; வன்றொண்டர் என்ற எழுவாய் முன்பாட்டிலிருந்து வருவிக்க.

பாடி - திருமுன்பு பாடியருளிய நம்பிகளது இத்திருப்பதிகம் கிடைத்திலது ! "திருவுடையார்" என்ற பதிகம் பதியின் புறத்தே அதனைக் கண்ட இடத்தில் நின்று பதியினைப்பாடியது.

நேர்நீங்கி - நேர் - திருமுன்பினின்றும் ; ஐந்தனுருபு தொக்கது.

உடன்பணிந்த வேந்தர் - "புரவலர் மூவரும்" (3844) ; மூவேந்தரும் இப்பதியிற் பணியும் உரிமைச் சிறப்பு ஆளுடைய பிள்ளையார் பதிகத்துட் காண்க.

போந்து - புறம்போந்து ; அங்கண் - அத்திருப் பதியில். 99

## திருப்பூவணம்

திருச்சிற்றம்பலம் பண் - இந்தளம். 7ம் திருமுறை

திருவுடை யார்திரு மாலய னாலும் - உருவுடை யாருமை யாளையோர் பாகம்,
பரிவுடை யாரடை வார்வினை தீர்க்கும் - புரிவுடை யாருறை பூவண மீதோ? 1

ஊரின் மிகப்பொலி யுந்திருப் பூவணம் - ஆர விருப்பிட மாவுறை வான்றனை
ஊரா னுரைத்தசொன் மாலைகள் பத்திவை - பாரி லுரைப்பவர் பாவ மறுப்பரே.

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—பதியினை நோக்கி வரும் வழியில் அதன் புறத்து நின்று அதனைக் கண்ட அளவிற் பணிந்து அதனைப் பாடும் வகையால் இறைவரைப் பாடியது. ஆசிரியர் காட்டியருளியவாறு (3945).

பதிகப்பாட்டுக் குறிப்பு :—(1) திருவுடையார் திரு—முத்தித் திரு; ஐசுவரியம்-ஈசுவரத்தன்மை. திருமாலயனாலும் உரு - காணவொண்ணாத என்பது இசையெச்சம்; பரிவு - அருள் பொருந்த ; புரிவு - எப்போதும் எண்ணுதல்.—(2) எண்ணி - என்பதனை இருந்தும் கிடந்தும் நடந்தும் என்ற மூன்றுடனும் கூட்டுக ; அண்ணலென எண்ணி நினைவார் - என்க. எண்ணுதல் - அழுந்தியறிதல் ; தியானித்தல்; புண்ணியனார் - புண்ணியப் பொருளாயுள்ளவர்.—(3) தேனிய - தெளிவு பெற்ற ; புள்ளுவர் - வஞ்சகர். புள்ளுவராகு மவர்க்கு - வஞ்சகர்க்கு; அவர் தாமும் புள்ளுவனார் - தாமும் வஞ்சகராய் மறைந்து நிற்பர்; வஞ்சகர்க்கு வஞ்சகர் என்பதாம் ; "மெய்யர்க்கு மெய்யன்...பொய்யர்க்குப் பொய்யாய பொய்யினன்" என்ற கருத்து ; வஞ்சகரைப் புள்ளுவராகுமவர்க்கு என்று வாளா கூறி அவர்க்குத் தாமும் வஞ்சகராகு முதல்வரைப் புள்ளுவனார்" என்று ஓர் விகுதி தந்து சிறப்புப் பன்மையாற் கூறிய தமிழ்நயமும் ஞானநூற் கருத்தும் காண்க. அவரது வஞ்சகம் குறைபாடிலது என்பதாம்.—(4) நிலனுடை மான்மறி - மான்கன்று நிலத்தில் வாழும் இயல்புடைமைக் குறிப்பு; நிலனுடை - நிலத்தில் வாழும், இஃது மானுக்கு சாதியடை ; இறைவர் ஏந்திய மான்கன்று இந்நிலத்தில் வாழ்வதென்பதனாலறு ; அஃது இருடிகள் யாகத்திலெழுந்தது என்பது புராண வரலாறு ; தேரிவ - மாமழு - தெய்வத் தன்மை வாய்ந்த கனல்; கனலுடை - கனற்றன்மை - அழிவு செய்தல் உடைய; யாகத் தீயில் வந்த என்பதும் குறிப்பு ; அனல் - மானும் - மழுவும் ஓர் காலத்தில் முனிவர் யாகத்தில் வர ஏந்தியனவாகவும், கைக(ஹஸ்தம்)யில் ஏந்திய கனல் ஐந்தொழில் முதல்வராய்ச் சங்காரத்தைக் குறிக் கொண்டு தாமே ஏந்திய தென்பார் கனல் என்று அடைமொழியின்றி வாளா கூறினர் ; இது சத்தியமாகவுள்ளதாதலின் மானும் மழுவும் ஓர் காலத்து வந்தன என்பது. "மறிமழு வோடிள மங்கை யின்றி யிருந்த பிரான்" (வீழியும் புகலியும்) என்று தோணியப்பரைப் பிள்ளையார் போற்றியது காண்க; அழகார் தருபுனல் - என்று கூட்டுக. வைப்பு முறையே பற்றி அழகிய சென்னி என்றலுமாம்—(5) நல்லார் - பெண்கள் ; பிச்சாடனராகி வந்த புராண வரலாறு ; நல்லார் - பக்குவான்மாக்கள் என்ற குறிப்புமாம் ;—(6) பாகமதாகிய சங்கரன் - சங்கரன் - சுகம் செய்பவன், சுகம் செய்வதற்காகப் பாகமாகியவன் என்பது அடைமொழிக் குறிப்பு ; பொன்னனையார் - பொன்னனையாளின் பொருட்டுச் சித்தராகி வந்து பொன்மேனியாக அமைந்தவர் என்ற திருவிளையாடற் குறிப்புமாம். பொன்னேயானவராயினும் செம்பொன் "மேனியே ருகிநாலாம் பொய்புகத் தவர்க்குத் தக்க பொருந்துரு வாகிமன்னும்" (திருவிளை - புரா - இரசவாதம் செய்த படலம் (30) என்றபடி இக்காலத்துக் கேற்பப் பொன்னேயல்லது பொன் போன்று விளக்குபவர் என்ற குறிப்புப்படப் பொன்னனவன் என்னாது "பொன்னனையான்" என்றார்.—(9) இறையேயவன் - அகங்கரித்தவன் - இராவணன் ; இறையே-சிறிதே ; நேக்கு-நெஞ்சம் உருகி; "நெக்கு நெக்கு நினைபவர் நெஞ்சுளே, புக்கு நிற்கும் பொன்னார் சடைப் புண்ணியன்" (அரசு) ; தனி - ஒப்பற்ற; இறையே நேக்கு - சிறிதனவேனும் நெகிழ்ந்து ; உம்மை தொக்கது ;—(10) சீரின் மிகப் பொலியும் - "நீடுதிருப்பூவணம் ; (38457); ஆர - பொருந்த ; நிறைய.

தலவிசேடம் :—திருப்பூவணம் :—III - பக்கம் கூகூஉ பார்க்க.

3847. அப்பதியி லமர்ந்திறைஞ்சிச் சிலநாளி லாரூரர்
முப்பெருவேந் தர்களோடு முதன்மதுரை நகரெய்தி
மெய்ப்பரிவிற் றிருவால வாயுடையார் விரைமலர்த்தாள்
எப்பொழுதும் பணிந்தேத்தி யின்புற்றங் கமர்கின்றார், ௧00

3848. செஞ்சடையார் திருவாப்ப னூர்திருவே டகமுதலா
நஞ்சணியுங் கண்டரவர் நயந்தபதி நண்ணியே
எஞ்சலிலாக் காதலினா லினிதிறைஞ்சி மீண்டணைந்து
மஞ்சணையு மதின்மதுரை மாநகரின் மகிழ்ந்திருந்தார். ௧0௧

3847. (இ - ள்) அப்பதியில்...சில நாளில் - திருப்பூவணமாகிய அத்திருப்பதியில் விரும்பி எழுந்தருளி இறைவனை வணங்கியிருந்து பின் சில நாட்களில்; ஆரூரர்...எய்தி - நம்பி ஆரூரர் பெருவேந்தர் மூவர்களுடனே முதன்மையுடைய மதுரையம்பதியினைச் சேர்ந்து; மெய்ப்பரிவில்...ஏத்தி - உண்மை கூர்ந்த பேரன்பினாலே திருவாலவாயுடைய பெருமானது மணமுடைய மலர் போன்ற திருவடியை எப்பொழுதும் பணிந்து துதித்து; இன்புற்று அங்கு அமர்கின்றார் - இன்பமடைந்து அவ்விடத்தில் விரும்பி எழுந்தருளியிருக்கின்றாராய், ௧00

3848. (இ - ள்) செஞ்சடையார்...நண்ணியே - சிவந்த சடையினையுடைய இறைவரது திருஆப்பனூர், திருவேடகம் முதலாக விடத்தினைக் கொண்ட கண்டத்தினை உடைய பெருமான் விரும்பி வீற்றிருக்கும் பதிகளில் சென்று; எஞ்சலிலா... இறைஞ்சி - குறைவில்லாத பெருவிருப்பினால் இனிதாக வணங்கி; மீண்டு...இருந்தார் - மீண்டும் முகில்தோயும் மதிலினையுடைய மதுரை நகரின் கண்ணே சேர்ந்து மகிழ்ந்து எழுந்தருளியிருந்தனர். (வன்றொண்டர்). ௧0௧

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

3847. (வி - ரை) அப்பதி - திருப்பூவணம்.

முதன் மதுரை - முதன்மை பெற்ற. பாண்டி நாட்டுத் தலைநகராகிய என்றலுமாம். "மதுரையீ ததிகமெந்த, முறையினா லெண்ணின் முன்னர்த் தோன்றிய முறையால்" (திருவிளை - புரா - வெள்ளியம்பலத் திருக்கூத் தாடிய படலம் - 7) என்றும், "முளைத்தானை யெல்லார்க்கு முன்னே தோன்றி" (தேவா) என்னும் கூறுமாற்றால் முதலிற்றோன்றிய மதுரை என்ற குறிப்புமாம்.

எப்பொழுதும் - வழிபடும் காலங்களில் எல்லாம்

மெய்ப்பரிவிற் - பணிந்து ஏத்தி - என்க. மெய்ப்பரிவாவது உண்ணிறைந்து இடையறாது பெருகும் பேரன்பு; மெய்ப்பரிவு - இயற்கை யடை.

அமர்கின்றார் - முற்றெச்சம். அமர்தல் - விரும்பியிருத்தல். அமர்கின்றாராய் - நண்ணியே - என மேல்வரும் பாட்டுடன் கூட்டி யுரைத்துக் கொள்க. ௧00

3848. (வி - ரை) திருவாப்பனூர் - திருவேடகம் முதலாபதி - மதுரையினின் வடக்கும் மேற்கும் நோக்கிச் சென்று பாண்டி நாட்டுப் பதிகளை வணங்கினர் என்பது; திருப்பூவணம் கிழக்கில் உள்ளது; முதலாம் - பதி - இவை திருவாதவூர் - சோலைமலை முதலாயின என்பது கருதப்படும்.

மீண்டணைந்து - என்றதனால் மதுரையினை விட்டு நீண்டதூரம் செல்லாது உடனுடன் மதுரைக்கு மீண்டனர் என்பதறியப்படுதலானும், பாண்டியரும் சோழரும் உடன் வருதலானும் நெடுந்தூர மாகிய பதிகளிற் செல்லவில்லை என்பதாம். அவை பின்னர்க் (3852) காணப்பெறும்.

மஞ்சணையும்...இருந்தார் - இவ்வடி முற்றுமோனை; மதில் - "கபாலிநீள் கடிம் மதில்" (தேவா).

இருந்தார் - வன்றொண்டர் என்ற எழுவாய் வருவிக்க. 101

3849. பாமர்திருப் பரங்குன்றிற் சென்றுபார்த் திபரோடும்
புரமெரித்தார் கோயில்வலங் கொண்டுபுகுந் துள்ளிறைஞ்சிச்
சிரமலிமா லைச்சடையார் திருவடிக்கீ ழாட்செய்யும்
அருமைநினைந் "தஞ்சுது"மென் றாரூரர் பாடுவார், ௪0௨

3850. "கோத்திட்டை" யென்றெடுத்துக் கோதிறிருப் பதிகவிசை
மூர்த்தியார் தமைவணங்கி முக்கோக்க டம்முன்பே
ஏத்தியவண் டமிழ்மாலை யின்னிசைபா டிப்பரவிச்
சாத்தினார் சங்கரனார் தங்குதிருப் பரங்குன்றில். ௪0௩

3849. (இ - ள்) பாமர்...இறைஞ்சி - மூவேந்தர்களுடனே இறைவரது திருப்பரங்குன்றிலே போய்த் திரிபுரமெரித்த பெருமானது திருக்கோயிலினை வலமாக வந்து உள்ளே புகுந்து வணங்கி; சிரமலி...பாடுவார் - வெண்டலைகள் மலிந்த மாலையினை யணிந்த சடையவரது திருவடியின் கீழே ஆட் செய்யும் அருமைப் பாட்டினை எண்ணி அஞ்சுதும் என்ற கருத்துடன் திருஆரூரர் பாடுவாராகி, ௪0௨

3850. (இ - ள்) கோத்திட்டை...வணங்கி - "கோத்திட்டையும்" என்று தொடங்கிக் குற்றமற்ற திருப்பதிக விசையினாலே சிவபெருமானாரை வணங்கி; முக்கோக்கடம் முன்பே...தமிழ்மாலை - மூவேந்தர்களின் முன்பாக வளப்பமிக்க தமிழ்மாலையினை; இன்னிசை...பரங்குன்றில் - இனிய இசையாலே பாடித் துதித்துச் சங்கரனார் தங்கியருளும்திருப்பரங்குன்றத்தில் (இறைவருக்குச் வன்றொண்டர்) சாத்தினார். ௪0௩

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒருமுடிபு கொண்டன.

3849. (வி - ரை) பார்த்திபர் - அரசர்கள்; பிருதுவியைத் தம் உடைமையாக உடைமையால் மண்ணாளும் அரசர் பார்த்திபர் எனப்படுவர்; "மண்ணாளு மன்னவர்க்கு மாண்பாகி" (திருவா).

சிரமலி மாலை - சிரங்கள் நிறையக் கோத்தமாலை; தலைமாலை. சிரம்-வெண்டலை.

ஆட்செய்யும் அருமை நினைந்து அஞ்சுதும் என்று - இது பதிகக்கருத்து: "அடிகேளுமக் காட்செய வஞ்சுதுமே" என்பது பதிகத்தின் மகுடம்: "அடிகேளுமக் காட்செயவஞ்சுது மென்றமரர் பெருமானை யாரூரனஞ்சி...மொழிந்த" (10) என்று திருக்கடைக்காப்பில் நம்பிகள் தாமே பதிகக் கருத்துரைத்தல் காண்க; அருமை நினைந்து அஞ்சுதும் என்று - அஞ்சுதும் என்பது ஆட்செய்வதின் அச்சமென்பதன்று; அதன் அருமைப் பாட்டினை எண்ணித் துதித்தபடியேயாம் என்று அஞ்சுதும் என்பதன் கருத்தினை ஆசிரியர் எடுத்துக் காட்டியருளினர்.

பாடுவார் - பாடுவாராகி; முற்றெச்சம்: பாடுவார் - எடுத்து என மேல்வரும் பாட்டுடன் கூட்டி மேல் வினைமுடிபு தந்து உரைத்துக் கொள்க. 102

3850. (வி - ரை) "கோத்திட்டை" என்று எடுத்து - "கோத்திட்டை" என்று தொடங்கி: எடுத்தல் - தொடங்குதல். இது பதிக முதற்குறிப்பு. கோத்

திட்டை - கோ - பரம்; திட்டை - மலை - குன்று; திட்டை - உயரமான இடம் - மேடு; இங்குக் குன்று என்ற பொருள் தந்து நின்றது.

பதிக இசை - மூர்த்தியார் தமைவணங்கி - பதிகக் குறிப்புத் திருவடிக்கீழ் ஆட் செய அஞ்சுதுமே என்பதாயினும் அதன் முகமாக இறைவரை வணங்குதல் கருத்து என்க.

முக்கோக்கள் தம்முன்பே ஏத்திய - தமிழ்ப்பெரு மூவேந்தர்களும் முன்னின்று கேட்க அவர் முன்னே பாடிய; "முடியா லுலகாண்ட மூவேந்தர் முன்னே மொழிந்த" என்பது பதிகம். அகச்சான்று.

இசை - இசையினால் : இசையால் வணங்கி என்க. இசைத்திருப்பதிகத்தால் வணங்கி என்றலுமாம்.

தமிழ்மாலை-சாத்தினார் - என்க - மாலை என்றதற்கேற்பச் சாத்தினார் என்றார்.

முக்கோக்களுடன் முன்பே—என்பதும் பாடம். 103

## திருப்பரங்குன்றம்

திருச்சிற்றம்பலம் பண் - இந்தளம். 7ம் திருமுறை

கோத்திட்டையுங் கோவலுங் கோயில்கொண் டொருமைக்
 கொண்டுழல் கின்றதோர் கொல்லைச் சில்லைச்
சேத்திட்டுக் குத்திந் தெருவே திரியுஞ்
 சிலபூதமு நீரும் திசைதிசையன
சோத்திட்டு விண்ணோர் பலருந் தொழநும்
 மரைக்கோ வணத்தோ டொருதோல் புடைசூழ்ந்
தார்த்திட்டதும் பாம்பு கைக்கொண் டதும்பா
 படிகே ளுமக்காட் செயவஞ் சுதுமே. 1

"அடிகே ளுமக்காட் செயவஞ் சுது"மென் றமரர் பெருமானை யாரூ ரனஞ்சி
முடியா லுலகாண்ட மூவேந்தர் முன்னே மொழிந்தா றுமோர் நான்குமோ ரொன்றி
படியா யிவைகற் றுவல்ல வடியார் பரங்குன்ற மேய பரமன் னடிக்கே [னையும்
குடியாகி வானோர்க்குமோர் கோவு மாகிக் குலவேந்தராய் விண்முழு தாள்பவரே.11
திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—முன் ஆசிரியர் (3819) காட்டியருளியபடி.

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) கோத்திட்டை - பரங்குன்றம்; கோவல் - திருக்கோவலூர் வீரட்டம்; கொல்லைச் சில்லைச் சே - கொல்லையில் தறியில் அணைக்கும் இடபம்; சே - காளை; சில்லை - முரடு; திட்டுக்குத்தி - மண் மேடுகளைக் கொம்பினாற் குத்தித் தூக்கிக் குதித்து; இது இடபம் - பசு இவைகளின் இயல்பு; ஆர்த்திடுதல் - வலிந்து இறுகக் கட்டுதல். இடபம் திட்டுக் குத்திக் குதித்துத் திரிய, பூதமும் நீர்ப்பெருவெள்ளமும் பரவ, பாம்பினை ஆர்த்தும் அணிந்தும் இருத்தலால் உம்மை அணுகி உமக்கு ஆட் செய்ய அஞ்சுதும் (அஞ்சுவோம்) என்றதாம். மேல் வரும் பாட்டுக்களிலும் இவ்வாறே அடியார் அணுகக் கூடாத செயல்களைச் செய்கிறீர் என்று கொள்க;—(2) முண்டம் - மூன்று கீற்றாக அணியும் திருநீறு; முதுகாடு - சுடுகாடு; பிண்டம் - உடம்பு; பேரியாரோடு...இருத்தும் - பெரியோர் கேண்மை இனிதுதான் என்று எண்ணிக் கொள்வோம்; ஆயினும் உம்மை அணுகி உம்மொடுங் மாட்டோம்; அப்புறத்தும் - அணுகலாகாத அப்புறத்திலும் என்றபடி;—(3)

முடை - அழுகற்றசையின் நாற்றம்; அறியாதன - அறியலாகாதன; பாரிடங்கள் - சிவபூதங்கள்; ஆடாதன - அடாதன என்பது எதுகை நோக்கி முதனீண்டு வந்தது; —(4) மஞ்சுண்ட - மேகத்துண் மறைந்த; போகவிடீர் - போகும்படி விட்டுவிட மாட்டீர்;—(5); புறங்காடு - சுடுகாடு; பூச்சு - இணங்கிய ஆடல்; கூத்து; எல்லா மறிவீர் - சர்வஞ்ஞத்துவம் என்பர்; முதல்வனது எண்குணங்களுள் ஒன்று; எல்லாம்...பகலும் - தோழமையால் அசதியாடியது;—(6) தென்று...என்று - ஒலிக்குறிப்பு; படம் பக்கம் - திருவொற்றியூர் இறைவர் வெளிப்பட்டு வீற்றிருக்கும் இலிங்கத்திருமேனி; படுகாட்டகத்து...ஆநருளீர் - ஒவ்வாதன மனம் சொற் செயல்கள் என்றபடி;—(7) பங்கம்...விடவும் கில்லீர் - பங்கம் - இழிவு; இது நம்பிகள் பித்தா என்று பேசவும் தடுத்து ஆட்கொண்ட வரலாற்றுக் குறிப்பு; கண்ணேயாய் - கனைகண் என்பது கண் என வந்தது; முதற்குறை;—(8) பிணி...வினை - பிணியின் உருவமாய் வந்து அனுபவிக்க வெளிப்படும் வினை; துணி - ஆடை; மேல் - அதிகமாக; மேன்மையாக; மணிவண்ணத்தின் மேலும்...நிற்றீர் - இறைவரது பேரழகாகிய வண்ணத்தில் மயங்கிப் போற்றும் நிலை;—(9) கோளரிய - கொல்ல வந்த; கோளிழைத்தீர் - கொன்றீர்; கோள் - கொள்ளுதல்; உயிர் கொள்ளுதலைக் குறித்தது. மலையின்றலை - ஏறமுடியாத நிலைக்குறிப்பு. வேளாளிய - விருப்பத்தை விளைக்க முயன்ற; வேள் - விருப்பம்; வேளாளிய...பங்கு உடையீர் - விருப்பத்தை விளைக்க வந்த காமனை எரித்தீர். அதற்கு மாறாக விருப்புடன் பெண் பாகம் உடையீர்; உடுகூறையும்...ஆளாகில்லீர் - உடையும் உணவும் தந்து வேலை வாங்கமாட்டீர்; ஆள் ஆளியவே கிற்றீர் - ஆளானவரை ஆளவே வல்லீர்;—(10) பாரோடு...நிலனுமாகி - உயிரில் பண்டங்களாகி என்பது குறிப்பு; ஆரோடும் கூடா - யாருடனும் ஒவ்வாதன; உம்மைப் போல எவரும் செய்யலாகார் - நீரே முழுமுதல்வராதலின் என்பது உட்குறிப்பு;—(11) அடிகேள்!...என்று - பதிகமகுடமும் குறிப்புமாம்; அஞ்சி - மொழிந்த - என்று கூட்டுக; "அருமை நினைந்து - பாடுவார்" (3849); அஞ்சிய வகையாலே துதித்த; மொழிந்த ஆறும் - மொழிந்த என்றதில் அகரம் கெட்டு, மொழிந்தாறு எனநின்றது; மொழிதல் - எடுத்துதல்; முடியால்...முன்னே - தமிழ் மூவேந்தர்களும் உடனின்று வணங்க அவர் முன்பு இப்பதிகம் பாடப்பட்டதென்பதற்கும் நம்பிகளது பாண்டி நாட்டு யாத்திரை வரலாற்றுக்கும் சரித ஆதாரமாகிய அகச்சான்று; படியா - படிந்து; படிதல் - வணங்குதல்.

தலவிசேடம்—திருப்பரங்குன்றம் :—முன் (2783) உரைத்தவை பார்க்க.

3851. இறைவர்திருத் தொண்டுபுரி யருமையினை யிருநிலத்து
முறைபுரியு முதல்வேந்தர் மூவர்களுங் கேட்டஞ்சி
மறைமுந்நூன் மணிமார்பின் வன்றொண்டர் தமைப்பணிந்தார்
நிறைதவத்தோ ரப்பாலு நிருத்தர்பதி தொழநினைந்தார். சுடுச

(இ - ள்) இறைவர்...கேட்டஞ்சி - சிவபெருமானது திருத்தொண்டு செய்யும் அருமைப்பாட்டினை இப்பெரிய உலகில் அரசாட்சிபுரியும் முதல் முடிமன்னர்களாகிய அரசர்கள் மூவர்களும் கேட்டுத் தாமும் அஞ்சி; மறை முந்நூல்...பணிந்தார் - வேதங்களில் விதித்த முந்நூல் அணிந்த அழகிய திருமார்பினை உடைய வன்றொண்டப்பெருமானைப் பணிந்தார்கள்; நிறைதவத்தோர்...நினைந்தார் - நிறைந்த தவத்தினையுடைய நம்பிகள் அப்பாலும் உள்ள இறைவரது பதிகளையும் சென்று தொழுவதற்கு நினைந்தருளினர்.

(வி - ரை) திருந்தொண்டு புரி அருமையினை மூவர்களும் - கேட்டஞ்சி - இறைவர் திருத்தொண்டு செய்தல் எளிய காரியமன்று, மிகஅருமைப் பாடுடையது என்று கேட்டு முடிமன்னர்கள் மூவரும், நம்பிகள் "அஞ்சுதுமே" என்று துதித்தது போலவே தாமும் அஞ்சித் துதித்தனர்; அருமையாவது இறைவரது பெருமைகளையும், எமது மிக்க சிறுமையினையும், அவர் எமது சிறுமைகளையும் பிழைகளையும் நோக்காது இடையறாது செய்யும் பெருங்கருணையினையும் எண்ணி வழிபடுதலின் அருமை. இறைவர் உருவத் திருமேனி தாங்குவதும் அத்திருமேனியில் ஆறு பாம்பு மதி முதலியவற்றை அணிவதும், தம்மை வந்தடைந்த உயிர்கள்மேல் வைத்த கருணையின் பொருட்டேயா மென்பதனை அறிந்து, வழிபடாது அஞ்சுவது கூடாதென்று இரங்கி அறிவுறுத்திய குறிப்புமாம்.

முதல் வேந்தர் மூவர் - இம் மூவேந்தர்களின் மரபுகள் படைப்புக் காலந்தொட்டு அப்பொழுதே படைக்கப்பட்டன என்று கூறும் ஆசிரியர்களின் கருத்தும் முதல் என்றதனாற் குறிக்கப்பட்டது. முதல் - வேறு மன்னருக்குக் கீழ்ப்படாத தனிமுடி மன்னராந் தன்மை.

இந்நிலத்து முறைபுரியும் - என்றதனால் இம்மூவேந்தர்களும் அந்நாளில் நாடாண்டனர் என்றதாம். நம்பிகள் காலமாகிய 9—10 ம் நூற்றாண்டுகளில் இம்மூன்று அரசமரபுகளும் வல்லரசுகளாய் நாடாண்டன என்பது நாட்டுச் சரிதவரலாற்றான் அறியப்படும், முறைபுரியும் என நிகழ்காலத்தாற் கூறுதல் காண்க; ஆசிரியர் காலத்தும் அந்நிலை ஒருவாற்றால் நின்றதாகும்.

வன்றொண்டர் தமைப்பணிந்தார் - தமது பரமாசாரிய மூர்த்திகளாகக் கொண்டு வணங்கினர்.

நிறைதவத்தோர் - நம்பிகள், அப்பரிலும் - இவை பாண்டி நாட்டில் மேலும் தெற்கிலும் தென்கிழக்கிலுமுள்ள குற்றாலம் முதலாயினவை; மேல் வரலாறு பார்க்க.

கேட்டிறைஞ்சி - கேட்டருளி—என்பனவும் பாடங்கள். 104

3852 அந்நாட்டுத் திருப்பதிகள் பிறவுமணைந் திறைஞ்சமலை
நன்னாட்டு வேந்தருட னம்பிதா மெழுந்தருள,
மின்னாட்டும் பன்மணிப்பூண் வேந்தரிரு வருமீள்வார்
தென்னாட்டு வேண்டுவன செய்தமைப்பார் தமைவிடுத்தார். ௧௦௫

(இ - ள்) அந்நாட்டு ..எழுந்தருள - அந்நாட்டில் அருகில் உள்ள திருப்பதிகள் பிறவற்றையும் சென்று வணங்க நன்மை யுடைய மலைநாட்டரசராகிய சேரலனாருடனே நம்பிகள் எழுந்தருள; மின்னாட்டும் மீள்வார் - ஒளி விளங்கும் பல மணிகளிழைத்த பூண்களை அணிந்த சோழ பாண்டியர்களாகிய இருபெரு வேந்தரும் மதுரைக்கு மீள்வாராகி; தென்னாட்டு ..விடுத்தார் - தென் நாட்டிலே அவர்களுக்கு வேண்டுவனவற்றைச் செய்தமைத்தற் குரிய பரிசனங்களை உடன் செல்ல ஏவி விடுத்தனர்.

(வி - ரை) அந்நாட்டுத் திருப்பதிகள் பலவும் - இவை திருக்குற்றாலம், திருநெல்வேலி முதலாயின.

அணைந்திறைஞ்ச - எழுந்தருள - என்று கூட்டுக. இறைஞ்ச - இறைஞ்சும் பொருட்டு; எழுந்தருள - மேற்கொண்டு செல்ல ஒருப்பட.

இருவரும் மீள்வார் - அதுவரை உடன்வந்து உபசரித்த சோழரும் பாண்டியரும் மதுரைக்கு மீள்வாராகி; அணிமையான பதிகளில் இதுவரை உடனிருந்து உபசரித்த

இவர்கள் மேலும் தென்னாட்டில் முழுமையும் உடனிருத்தல் இயலாமையால் உலகியல் பற்றியும் அரசகாரியத்தின் பொருட்டும் மதுரைக்கு மீள்பவர்களாகி உரிய பரிசனங்களை வேண்டுவன செய்தமைக்க ஏவி விடுத்தனர் எனக. மீள்வார் - மீள்வாராகி.

மீள்வார் - விடுத்தார் - என்று கூட்டுக.

இறைஞ்சி - என்ற பாடம் பிழை.

தென் நாட்டு - மேலும் தெற்கில் உள்ள பாண்டி நாட்டுப் பதிகள்.

செய்தமைப்பார் - செய்தற்கும் அமைத்தற்கும் உரிய பரிசனங்களினுள், செய்வோர், பணியாளர் - அமைப்பார் - நியமிப்போர்.

பதிகள் பலவும் — என்பதும் பாடம். 105

3853 இருபெருவேந் தருமியல்பின் மீண்டதற்பின், னெழுந்தருளும்
பொருவருஞ்சீர் வன்றொண்டர் புகழ்ச்சேர ருடன்புனிதர்
மருவியதா னம்பலவும் பணிந்துபோய், மலைச்சாரல்
குருமணிகள் வெயிலெறிக்குங் குற்றாலஞ் சென்றடைந்தார். ௧௦௬

(இ - ள்) இருபெரு...பின் - முன் கூறியவாறு சோழ பாண்டியர்களாகிய இருபெரு மன்னர்களும் மீண்டு சென்ற பின்னர்; எழுந்தருளும் ..சேருடன் - எழுந்தருளிச் செல்கின்ற வன்றொண்டர் புகழினையுடைய சேரலனுடனே, புனிதர் ...போய் - இறைவர் வெளிப்பட்டுப் பொருந்திய பதிகள் பலவற்றையும் பணிந்து சென்று, மலைச்சாரல்.. அடைந்தார் - மலையின் சாரலிலே நிறமுடைய மணிகள் சூரியன்போல ஒளிவீசும் திருக்குற்றாலத்தினைச் சென்று சேர்ந்தார்.

(வி - ரை) வன்றொண்டர் - சேரருடன் - என்றது வன்றொண்டர் யாத்திரையில் சேரமான் பெருமானும் உடன் போந்தனர் என்ற சரித வரலாறு குறித்தது.

தானம் பலவும் - இவை பாண்டி நாட்டின் தெற்கில் உள்ளவை.

குருமணிகள் வெயில் எறிக்கும் - குரு - நிறம், வெயில் எறித்தல் - வெயில் சூரியன் கதிர் - போல ஒளி வீசுதல் குற்றால மலைச்சாரலில் இத்தகைய மணிகள் உள்ள சிறப்புக் குறித்தது, நீர்வளத்தால் உயர்ந்து செறிந்த சோலைகள் சூழ்ந்து பகலிலும் நிழலடர்வதனால் மணிகளின் வெயிற்கதிர் ஒளி வீசி மக்களியங்கத் துணை செய்வன என்பதும் தொனிக்குறிப்பு; வெயில் எறிக்கும் என்ற குறிப்புமது, நீர்வளமும் பிறவும் குறித்தபடியாம் திருநாவுக்கரசர் புராணத்துள் திருக்கயிலை யாத்திரையில் மணிகள் வெயில் எறித்த வரலாறு காண்க (1620). 106

3854. குற்றாலத் தினிதமர்ந்த கூத்தர்குரை கழல்வணங்கிச்
சொற்றமலர் புனைந்து குறும்பலாத் தொழுதிப்பால்
முற்றுவெண் மதிமுடியார் பதிபணிந்து மூவெயில்கள்
செற்றார்மன் னியசெல்வத் திருநெல்வே லியையணைந்தார். ௧௦௭

(இ - ள்) குற்றாலத்து...புனைந்து - திருக்குற்றாலத்திலே இனிதாக எழுந்தருளியுள்ள கூத்தராது சத்திக்கின்ற கழலையணிந்த திருவடிகளை வணங்கிச் சொன்மலர்மாலை புனைந்து துதித்து; குறும்பலா தொழுது - திருக்குறும்பலா என்னும் திருக்கோயிலின் இறைவரை வணங்கி, இப்பால்...பணிந்து - இப்பக்கத்தில் முதிராத வெள்ளிய பிறை சூடிய முடியினையுடைய பெருமானது பதிகளை வணங்கிச் சென்று; எயில்கள்...அணைந்தார் - முப்புரங்களையும் அழித்த பெருமான் நிலைபெற எழுந்தருளிய செல்வத் திருநெல்வேலியைச் சென்றணைந்தருளினர்.

(வி - ரை) தற்றலத்துக் - கூத்தர்வணங்கி...குறும்பலாத் தொழுது - இங்குக் குறித்தவை யிரண்டு தனிக்கோயில்கள். கூத்தர் கோயில் வேறு; குறும்பலாநாதர் கோயில் வேறு; இது பற்றி முன் ஆளுடைய பிள்ளையார் புராணத்துள் உரைத்தவை பார்க்க. அருவியின் வடகரையில் உள்ளது குறும்பலா; கூத்தர்கோயில் அதன் வடக்கில் ½ நாழி யளவில் நகரினுள் சித்திர சபைக்குப் போகும் வழியில் உள்ளது; இது பழமையானது; தேவார திருவாசகங்கள் பலவற்றாலும் கூத்தர் என்றே போற்றப்படுவது; குறும்பலா என்பது, அகத்தியர் வைணவர்களின் வன்கண்மையினைப் போக்க விட்டுணு மூர்த்தியின் உருவத்தையே சிவலிங்க உருவமாக்கிய பதி; இக்கோயில் இதில் இருக்கும் (இருந்த ?) குறும்பலா மரத்தினால் இப்பெயரெய்தியது; இனிதமர்ந்த என்பது தலத்தின் இனிய வளங்கள் பலவற்றையும் குறித்தது.

இப்பால்......பணிந்து - பதி - பதிகள் என்ற பொருளில் வந்தது. இவை பாவநாசம் - திருப்புடைமருதூர் முதலாயின என்பது கருதப்படும். இங்கு, இவ்வாறன்றிக், குறும்பலா என்பது தலமரத்தினையும், இப்பால் - பதி - அதன்கீழ் உள்ள கோயிலையும் குறிப்பன என்று கொண்டு அதற்கேற்க வுரைத்தலும் பொருந்தும். இப்பொருளில் இப்பால் என்பது, முன்னர் அவ்வுருவ மில்லாது, பிற்காலத்தில் அகத்தியரால் ஆக்கப்பட்ட வரலாற்றைக் குறிப்பினுணர்த்தி நின்றது

திருநெல்வேலியினை அணைந்தார் - மதுரையினின்றும் போந்த நம்பிகளும் சேரரும் மலைச்சாரலில் தென்மேற்காகச் செல்லும் சாலையில் சீவில்லிபுத்தூர் - சிவகிரி, கடையநல்லூர் வழியாக நேரே திருக்குற்றாலம் சென்றருளினார் என்பதும், பின்னர், அங்கு நின்றும் தென்கிழக்குச் சாலையில் திருப்புடைமருதூர் வழியே திருநெல்வேலியை அணைந்தனர் என்பதும் கருதப்படும்.

திருக்குற்றாலம் - திருக்குறும்பலா - திருநெல்வேலி - இவற்றுக்கு நம்பிகள் பதிகங்கள் கிடைத்தில ! 107

3855. நெல்வேலி நீற்றழகர் தமைப்பணிந்து பாடி நிகழ்
பல்வேறு பதிகளையும் பணிந்தன்பால் வந்தணைந்தார்
வில்வேடராய்வென்றி விசயனொடு பன்றிப்பின்
செல்வேத முதல்வரமர் திருவிராமேச்சரத்து. ௧௦௮

(இ - ள்) நெல்வேலி...பாடி - திருநெல்வேலியில் எழுந்தருளியுள்ள நீற்றழகராகிய இறைவரைப் பணிந்து பாடி; நிகழ்...பணிந்து - அப்பக்கம் நிகழ்கின்ற பல வேறு திருப்பதிகள் பிறவற்றையும் பணிந்து சென்று; வில்வேடராய்...திருவிராமேச்சரத்து - வில்லை ஏந்திய வேடருருவுடன் வெற்றியினையுடைய அருச்சுனனுக்கு முன்பு பன்றியின் பின்னே சென்ற வேத முதல்வராகிய இறைவரது விரும்பி எழுந்தருளியுள்ள திருஇராமேச்சரத்தில் அன்பால் வந்தணைந்தார்.

(வி - ரை) நீற்றழகர் - திருநெல்வேலி யிறைவரது பெயர்களுள் ஒன்று.

பாடி - நம்பிகளது இப்பதிகம் கிடைத்திலது !

பதிபிறவும் - இவை திருச்செந்தில், திரு வுத்தரகோச மங்கை முதலாயின வாய்க் கரைவழியாயுள்ள பதிகள் என்பது கருதப்படும்; பல்வேறு என்ற குறிப்பும் காண்க; திருச்சுழியல், திருக்கானப்பேர், முதலிய பதிகள் பின்னர்த் திருவிராமேச்சரத்தினின்றும் திரும்ப வரும்போது வழிபட்டாராதலின் இங்கு நம்பிகள் சென்ற பாதை கிழக்கும் வடக்கும் நோக்கி நேரே திருவிராமேசம் செல்லும் கரைவழி மட்பாதை என்பது கருதவரும்.

வில்வேடராய்...செல் வேதமுதல்வர் - பாசுபதம் பெறும் பொருட்டுத் தவஞ் செய்திருந்த அருச்சுனனைக் கொல்லத் துரியோதனனேவலால் வந்து பன்றி வடிவுடன் மறைந்து காத்திருந்த மூகன் என்னும் அசுரனைச், சிவபெருமான், வேடவுருவங் கொண்டு நந்திகணத்தவர்களாகிய பரிசனங்களும் வேதங்கள் உருவு பூண்ட நாய்களும் சூழ எழுந்தருளி வந்து எய்த சரிதம் மாபாரதத்துக் கேட்கப்படும்; வேதமுதல்வர் - என்ற குறிப்புமது. இச்சரிதம் திருமுறைத் திருவாக்குக்களிற் பல இடங்களிலும் போற்றப்படுவது.

பணிந்தன்பர்—என்பதும் பாடம். 108

3956. மன்னுமிராமேச்சரத்து மாமணியை முன்வணங்கிப்
பன்னுதமிழ்த் தொடைசாத்திப் பயில்கின்றார் பாம்பணிந்த
சென்னியர்மா தோட்டத்துத் திருக்கேதீச் சரஞ்சார்ந்த
சொன்மலர்மாலைகள் சாத்தித் தூரத்தே தொழுதமர்ந்தார், கO௯

(இ - ள்) மன்னும்...பயில்கின்றார் - நிலைபெற்ற திருவிராமேச்சரத்தில் எழுந்தருளிய பெரிய சிந்தாமணி போன்றவராகிய இறைவரை முன் வணங்கித் துதிக்கின்ற தமிழ் மாலையாகிய திருப்பதிகத்தினைச் சாத்தி, அப்பதியினில் சேரனுருடன் தங்குகின்றாராகிய நம்பிகள், பாம்பணிந்த...சாத்தி - பாம்புகளை அணிந்த திருமுடியினையுடைய இறைவர் எழுந்தருளிய (ஈழநாட்டிலுள்ள) மாதோட்டத்துத் திருக்கேதீச்சரத்தினைச் சிந்தித்த சொன்மலர் மாலைகளாகிய திருப்பதிகத்தினைப் பாடிச் சூட்டியருளி; தூரத்தே தொழுதிருந்தார் - (கடல் இடைப்பட்டபடியால்) தூரத்தில் அங்கு நின்றபடியே தொழுது எழுந்தருளியிருந்தனர்.

(வி - ரை) தமிழ்த் தொடை சாத்தி - நம்பிகள் பாடியருளிய பதிகம் கிடைத்

பயில்கின்றார் - பயில்கின்றாராகிய நம்பிகள் வினைப்பெயர். பயிலல் - தங்கியிருத்தல்.

மாதோட்டத்துத் திருக்கேதீச்சரம்; மாதோட்டம் - ஊர்ப்பெயர். கேதீச்சரம்-கோயிலின் பெயர்; "மாதோட்ட நன்னகருள" (நம்பி). "கடற்கரையினி லெழிநிகழ் மாதோட்டங் கேடிலாக் கேதீச்சரம்", "மாதோட்டத் தண்ண னண்ணு கேதீச்சரம்" (பிள்ளையார்) என்பன முதலாக வருவன காண்க.

சார்ந்த - மனத்தினுற் சிந்தித்துச் சார்ந்த; சார்ந்த - மாலைகள்; மாலைகள் பதிகத்துள் ஒவ்வொரு பாட்டும் ஒரு மாலையாம் என்பது கருத்து.

தூரத்தே தொழுதமர்ந்தார் - கடலிடையிட்டமைபால் திருவிராமேச்சரக்கரையினின்றபடியே இப்பதியினை எண்ணித் தொழுது பாடினாராதலின் தூரத்தே என்றார்; திருக்காளத்தியினின்றவாறே ஆளுடைய பிள்ளையாரும், நம்பிகளும் வடநாட்டுப் பதிகளை வணங்கிப் பாடியருளிய வரலாறுகள் இங்கு நினைவு கூர்தற்பாலன.

சார்ந்து - என்பது பாடமாயின் மனத்தால் நினைந்தமையால் உள்ளம் சார்ந்து என்க. 109

திருக்கேதீச்சரம்

திருச்சிற்றம்பலம். பண் - நட்டபாடை. 7ம் திருமுறை

நத்தார்படை ஞானன்பசு வேறிந்நனை கவிழ்வாய்
மத்தம்மத யானையுரி போர்த்தமண வாளன்

பத்தாகிய தொண்டர்தொழு பாலாவியின் கரைமேற்
செத்தாரெலும் பணிவான்றிருக் கேதீச்சரத் தானே. 1

கறையார்கடல் சூழ்ந்தகழி மாதோட்டநன் னகருட்
சிறையார்பொழில் வண்டியாழ்செயுங் கேதீச்சரத் தானை
மறையார்புக ழூரன்னடித் தொண்டன்னுரை செய்த
குறையாத்தமிழ் பத்துஞ்சொலக் கூடாகொடு வினையே. 10

ரம்பலம்

பதிகக் குறிப்பு :—நத்தார் படைஞானன், யானையுரி போர்த்த மணவாளன், கறைக்கண்டன், அரவசைத்தான், மறைவல்லான், சடைமுடியான், எனதெயி றணிந்தான், சிட்டன், தேவன் என்பன முதலாகிய தன்மைகளாலறியப்படும் இறைவன் அடியார்மேல் வரும் வினை நோய்களை ஒழித்தருளிப் பாசவினை யறுப்பான்; அவன் திருக்கேதீச்சரத்தானே.

பதிகப்பாட்டுக் குறிப்பு :—(1) நத்தார்படை - நத்து - நந்து சலைச் செய்யும் தன்மை ; சூலம்; சங்காரம் செய்யும்; இனி, நந்தார் ; பகைவர் - பகைவரை வெல்லும் ஞானப்படை ; நந்து - சங்கு - விட்டுணுவுக்குச் சங்கு கொடுத்த வரலாற்றுக் குறிப்பு; நத்தார் - திருமால் - திருமாலைப் பாணமாகக் கொண்ட ஞானன் ; என்பன வாதியாக உரைக்கவும் நின்றது. (இவை திரு. ந. சிவ. குறிப்பு.) மத்தம் மதயானை - மிக்க மதமுடைய யானை; பத்தாகிய தொண்டர் - தொண்டர்களுக்குரிய குணம் பத்தும் உடையவர்; “பத்துடையீ ரீசன் பழவடியீர்” (திருவா - திருவெம்); பாலாவி - இங்கு ஓடும் ஆறு ;—(2) படம் - துகில் ; அரவின் படம் என்றலுமாம். “பையேரிடை” ;—(3) அங்கம் மொழி யன்னாவர் - மறை முனிவர்கள் ; அங்கம்மொழி - அங்கமாறுங்கொண்ட மொழியாகிய வேதம் ; அன்னார் - வேதங்களின் உருவமே இவர் என்று சொல்லத்தக்க முனிவர்கள் ; அன்னாரும் அமரரும் என்க ; வங்கம் - கப்பல் ; பங்கம் - பிழை செய்து அதனால் வரும் குறை நோயினைக் கொண்ட ;—(4) நலகண்ணமேலொரு கண்ணார் - நலகண் - உலகுக்குப் பகலிரவுகளில் உயிர் வாழும் உதவியாகிய தன்மையும் ஒளியும் தந்து நன்மை செய்யும் சூரிய சந்திரர்களாகிய இருகண்கள் ; கண் - கண்கள் ; மேல் ஒரு கண் - அவற்றின் மேல் நெற்றியில் உள்ள தீக்கண் ; வரிய - வரிகளையுடைய ; இசையையுடைய என்றலுமாம் ; —(5) அங்கத்துறு நோய்கள் - அங்கம் - உடம்பு ; உடம்பினுள் உயிரைச் செலுத்த வல்ல - பிறவிதரவல்ல - வினைகள் ; உறு - உறுவிக்கும் ; உறுதற்குக் காரணமான ; 6-7-பாட்டுக்களும் பார்க்க ; பங்கம் - பங்கு - பாகம் ; தெங்கம்பொழில் - தென்னைகள் நிறைந்த சோலை ; அடியார்மேல் - அடியார்மேல் அடராது ;—(7) வால் நந்து உறுகடல் - வாலையுடைய கடற்பெரு நத்தைகள் பொருந்திய ; வெள்ளிய சங்குகள் பொருந்திய என்றலுமாம் ; பாலோத்து என்பது எதுகை நோக்கிப் பாறேத்து என நின்றது ; இனியபாலும் விரும்பும் மொழியாள் என்றலுமாம்—(8) அட்டன் - அட்டமூர்த்தி ; எண்குணன் ; மட்டு - தேன் ; ஆலும் - அசையும் - பறக்கும் ; பட்டநுதல் - நுதற்பட்ட மணிந்த நெற்றி ; வரி - வரியுடைய ; சிட்டன் - அறிவன் ;—(9) மூவர் - அயனரியான் ; இருவர் - சிவன் சத்தி ; மகேசர் - சதாசிவர் ; பாவம் வினை - பாவமும் அதற்குக் காரணமாக வரும் வினையும்;—(10) கறை - கருமை நிறம்; முடை நாற்றம் என்றலுமாம் ; மறையார்புகழ் - வேதவித்தாகிய புகழ்.

**தலவிசேடம் :—திருக்கேதீச்சரம்** *ஈழநாட்டுத்தலம். தலவிசேடம் ஆளுடைய பிள்ளையார் புராணத்துள் உரைக்கப்பட்டது பார்க்க. பிருகு முனிவர் முதலியோரும், மாலியவான் என்னும் அசுரனும் பூசித்துப் பேறு பெற்ற தலமென்பர்.*

3857. திருவிரா மேச்சரத்துச் செழும்பவளச் சுடர்க்கொழுந்தை
பரிவினாற் றொழுதகன்று, பாமர்பதி பிறபணிந்து
பெருவிமா னத்திமையோர் வணங்குபெருந் திருச்சுழியல்
மருவினர் வன்றொண்டர் மலைவேந்த ருடன்கூட. ௧௧௦

(இ - ள்) *திருவிராமேச்சரத்து...அகன்று - திருவிராமேச்சரத்தில் செழும் பவளம் போன்ற சுடர்க்கொழுந்தாகிய இறைவரைத் தொழுது சென்று; பாமர் பதிபிறபணிந்து - இறைவரது திருப்பதிகள் பிறவற்றையும் பணிந்து போய்; வன்றொண்டர் மலைவேந்தருடன்கூட - வன்றொண்டப் பெருந்தகையார் மலைநாட்டரசராகிய சேரலனாருடனே கூட; பெருவிமானத்து...மருவினர் - பெரிய விமானங்களில் வந்து தேவர்கள் வணங்கும் பெரிய திருச் சுழியலினை வந்து சேர்ந்தார்.*

(வி - ரை) **பாமர்பதிபிற** - *இளையான்குடி - தஞ்சாக்கை - முதலாயின என்பது கருதப்படும்; தஞ்சாக்கை - தேவார வைப்புத்தலங்களுள் ஒன்று. தஞ்சாக்கூர் என வழங்கப்படும்.*

**பெருவிமானத்து இமையோர் வணங்கும்** - *ஆகாய விமானங்களுடன் செல்லும் வானோர் தமது விமானங்களுடன் வந்து வணங்குகின்ற என்க.* **"விண்ணவர்கள் வியப்பெய்தி விமானத்தோ டும்மிழியும் மிழலை யாமே"** (பிள் - மேகரா - வீழி - 10).

**மலைவேந்த ருடன்கூட வன்றொண்டர் மருவினர்** - *என்க. ஆர்வம் அவருக்கு முன்னே வந்தது என்ற குறிப்புப்பட வினைமுற்றை முன் வைத்தார்; சுழியல் - சுழியலினை.* **பவளக் கொழுந்து** - *செம்மைநிறமும் கடலணிமையும் குறித்தது.*

**மலைவேந்தர்** - *மலை நாட்டரசர் - சேரமான்.* 110

3858. திருச்சுழியல் இடங்கொண்டிருந்தசெம்பொன் மலைச்சிலையாரைக்
கருச்சுழியில் வீழாமைக் காப்பாரைக் கடல்விடநின்
றிருட்சுழியு மிடற்றாரை யிறைஞ்சியெதிர் இதழிமலர்ப்
பருச்சுழியத் துடன்"ஊனா யுயிர்"எனும்பா மலர்புனைந்தார். ௧௧௧

(இ - ள்) *திருச்சுழியல்...சிலையாரை - திருச்சுழியலின்மேல் இடங்கொண்டு வீற்றிருக்கும் செம்பொன் மலையையே வில்லாக ஏந்தியவரை; கரு...காப்பாரை - கருப்பமாகிய சுழியிலே வீழாமற் காப்பவரை; கடல்...மிடற்றாரை - கடலில் எழுந்த விடத்தின் கருமை தங்கிய கண்டத்தினையுடையவரை; எதிர் இறைஞ்சி - திருமுன்பு விழுந்து வணங்கி; இதழி...புனைந்தார் - கொன்றை மலர்மாலையாலாகிய பருத்த சுழியத்துடன் கூட "ஊனாய் உயிர் புகலாய்" என்று தொடங்கும் சொன் மலர் மாலையினைச் சூட்டினார்.*

(வி - ரை) **மலைச்சிலையார்** - *மலையினையே வில்லாக உடையவர். சிலை - வில்.*

**கருச்சுழி** - *கருப்பம் என்னும் சுழி. சுழியாவது வீழ்ந்தாரை உள்ளே அழுத்தும் தன்மையில் நீர் சுழித்துச் சேரும் மடு; சுழியில் அகப்பட்டார் தப்பிப் பிழைத்த லரிது.*



திருச்சுழியல் : கோயிலும் திருக்குளமும்
முழுப்பார்வை —பாட்டு - 3858



திருச்சுழியல் - திருக்குளம்
"கௌவைக் கடல்" (கமபிகள் - பதிகம்)



திருக்கானப்பேர் - காளையார் கோயில்
—பாட்டு - 3863

இருட்சுழியும் - நஞ்சினைக் கொண்டு சுழிக்கும்; நஞ்சுதங்கும் என்றலுமாம்.

பருச்சுழியம் - பரிய சுழியமாலை முடிப்பு; சுழியத்துடன் - சுழியத்தினையும் உடன் வைத்துப் போற்றிப் பாடியது; மலர் புனைந்த முடிப்பு இளமைக் கோலம் குறிக்கும்; குழகன் - (7) செண்டாடுதல் புரிந்தான் (9) என்ற பதிகப் பகுதிகள் இளமைக் கோலங் குறித்தல் காண்க.

ஊனாய் உயிர் - எனும் - இது பதிகத் தொடக்கமாகிய முதற்குறிப்பு.

பாமலர் - பாமாலை - பதிகம். 111

திருச்சுழியல்

*திருச்சிற்றம்பலம்*      பண் - நட்டராகம் - (நட்டபாடை ?) 7ம் திருமுறை

*ஊனாயுயிர் புகலாயக லிடமாய்முகில் பொழியும்*
*வானாய்வரு மதியாய்விதி வருவானிடம் பொழிலின்*
*தேனாதரித் திசைவண்டின மிழற்றுந்திருச் சுழியல்*
*நானாவித நினைவார்தமை நலியார்நமன் றமரே.*

*நீரூர்தரு நிமலன்றிரு மலையார்க்கய லருகே*
*தேரூர்தரு மாக்கன்சிர மெரிந்தான்றிருச் சுழியல்*
*பேரூரென வுறைவானடி பேணர்நாவலர் கோமான்*
*ஆரூரன தமிழ்மாலைபத் தறிவார்துய ரிலரே.* 10

*திருச்சிற்றம்பலம்*

**பதிகக்குறிப்பு:**—திருச்சுழியலில் இறைவர் ஊனாய் உயிர்புகலாய்ப் பலவுமாய் விதி வருவான்; மழுப்படையான் - தெய்வம் - உற்றனமங்கு சைவத்த செவ்வுருவன், வருதிருநீற்றன், சேவேந்திய கொடியான் முதலாகிய தன்மைகளால் அறியப்படுபவன் சுழியல் பேரூரெனவுறைவான்; அவனை நினைவார்தமை நமன்றமர் நலியார்; அவராள் பிரியாள்; வானத்துயர் வார். ஆகலின் மலர்கரந்து பாசப்பிறப்பறுப்பீர் மலராற் கொழும்புகையால் நினைந்தேத்துதல் தவமாம், சதுராமே.

**குறிப்பு:**—இப்பதிகத்துக்குப் பண் நட்டராகம் என்று பதிப்புக்களிற் குறிக்கப்பட்டுள்ளது; ஆனால் நம்பிகள் தேவாரப் பண்முறை அட்டவணையில தக்கராகப் பண்ணிற்குப்பின்னும் பண் - கொல்லிக்கு முன்னும் பண். நட்டராகம் என்று வகுத்து 14 பதிகங்கள் வகுக்கப்பட்டுள்ளன. அவைகள் 4 கட்டளை பேதங்களையுடையனவாகக் காணப்படுகின்றன; அவற்றுள் இப்பதிகக் கட்டளை இல்லை. இப்பதிகம் பண். நட்டபாடையுள் வகுத்த 4 பதிகங்களின் பின் - பண். நட்டராகம் என்று பின்னும் தலைப்பிட்டுத் தனி ஒரு பதிகமாகக் காட்டப்பட்டுள்ளது. பண் - நட்டபாடையில் குறித்த நான்கனுள் மூன்று பதிகங்கள் இப்பதிகக் கட்டளையில் அமைந்துள்ளன; இந்தக் கட்டளையில் அமைந்த பதிகங்களை ஆளுடைய பிள்ளையார் தேவாரப் பண் வகுப்பில் நட்டபாடைப் பண்ணுள் அமைய வகுத்துள்ளார்கள்; நம்பிகள் தேவாரப்பண் வகுப்புப், பிள்ளையார் தேவாரப்பண் வகுப்புப் போல அத்துணைத் திட்பமாக அமையவில்லை எனக் காண்கின்றது. உதாரணமாகக் கொல்லிக் கௌவாணப்பண்ணில் திருத்தொண்டத்தொகைக் கட்டளையில் அமைந்த திருநாகைக் காரோணப் பதிகத்தினை இடையில் வேறு கட்டளைகளின்பின் வைத்துள்ளமை காண்க. இக்காரணங்களால் இப்பதிகம் பண் அட்டவணை எழுதுவோர் கைத்தவறாக நட்டபாடை என்பதற்கு நட்டராகம் என்று எழுதியிருத்தல் கூடும் என்ப

தும், அதுவே பதிப்புக்களிலும் பிழைபடக் கையாண்டு வரப்படுகின்றது என்பதும் ஐயப்பாடுகள். இப்பதிகத்துக்குப் பண் - நட்டபாடையே பொருத்த முடையதாக வும் தோன்றுகிறது. அட்டவணையுள் இது நட்டபாடையுள் வைக்கப்பட்டுள்ளதும் காண்க. இற்றைக்கு 85 ஆண்டுகளின் முன் வாழ்ந்த, இயற்றமிழுடன் தேவாரப் பண் முறையும் பரம்பரையில் வல்ல, திருநெல்வேலி ஸ்ரீ சாலிவாடீசுவர ஓதுவார் மூர்த்திகளும் இதனை நட்டபாடை என்றே குறித்துள்ளார். அறிஞர்கள் ஆய்ந்து கொள்ளத் தக்கது.

பதிகப்பாட்டுக் குறிப்பு :—(1) ஊன் - உடம்பு; உயிர்புகல் - அதனுள் உயிர் வைத்தல்; அகலிடம் - அவ்வுயிருக்குப் புவனம்; முகில்...வான் - போகங்கள்; மதி - அவற்றை அனுபவித்து ஈடேறும் அறிவு; விதி - விதிப்படி; விதி - முறையுமாம்: தீண்மை தேர் - பூமியாகிய தேர். அவ்வவர் பக்குவப்படி நியதி செய்து; "ஊனாகி யுயிராகி" (தாண்டகம்); "மால்கொடுத் தாவி வைத்தார்" (திருமறைக்காடு - நேரிசை); தேன் ஆதரித்து - தேனினை உண்ண விரும்பி வண்டினம் இசைமிழற்றும்' மலர்கள் அரும்பு முற்றி அலரும் பருவமறிந்து தேனுண் ணும் ஆசையால் ஊதி அரும்பை மலர்த்துகின்றன என்பது தாவா - உயிர்வருக்க - வாழ்க்கையூ லுண்மை; நானுவிதம் - அவ்வவர் திறத்துக்கும் தரத்துக்கும் அறிவுக்கும் ஏற்றபடி பலவகையாலும்;—(2) நாடு - சூலத்தண்டு; தண்டாயுதமுமாம். "சூலமும் தண்டுஞ் சுமந்ததுண்டு" (தேவா); இப்பதிக்குத் திரிசூலபுரம் என்னும் பெயரு முண்டு; தீண்மை - நிலத்தின் தன்மை. தேரின்டே - ஏகாரம் பிரிநிலை; தேற்றமு மாம்;—(3) கவ்வை - பேர் ஓசை; முந்தும் கரைக்கேற்ற - இப்பதி கடலணிமையில் உள்ளது; தேயிவம் - இறைவர்; சுழி பற்றேவம் - சுழியலில் விளங்க வீற்றிருக் கும் இறைவர் - அவ்வத்திசை - தாம்தாம் வாழும் திசையின் நாடு; அலராள் - திருமகள்;—(4) பழுது உள்ளாம் நிலையார் - பழுதினை-தீமையினை - மனத்துள் நிலைக்க விடமாட்டார்கள்;—(5) நமக்கு உற்றான் - உறுதுணைவன்; புலனைந்தும்செற்றார் திரு மேனி - ஐம்புலப்பகை செற்ற அறிவோர் திருமேனியினை யிடமாகக் கொண்டவன்; தல இறைவர் பெயர். திரும்பாமை நீ திருநாமம் கற்றார் - பிழையாதபடி திருநாமத்தைப் பயின்றவர். திருநாமம் - திருவைந்தெழுத்து; "அஞ்செழுத்தி னுமந் தான்காண்" (தாண்); ஏத்தும் - ஆதலின் ஏத்துங்கள் என்று காரணக் குறிப்புப்பட நின்றது;—(6) மலந்தாங்கிய பாசப்பிறப் புறுவீர் - மலத்தினால் உளதாகும் பிறவியை அறுக்க எண்ணுவீர்களாயின்; ஏத்தும்; ஏத்துங்கள்; தவமாம் - அதுவே தவமாம்; சதுர் - மேம்பாடு - அறிவு; மலரால் புகையால் நினைந்து ஏத்தும் - புகை - தூபம்; நினைதல் - தியானித்தல்; ஏத்துதல் - வாக்கின்றொழில்; மலர் - புகை - மெய்யாலும், நினைதல் - மனத்தாலும் செய்யத்தக்கன; எனவே முக்கரணவழிபாடு உணர்த்தப்பட் டது;—(7) சைவத்த செவ்வுருவன் - சைவத்திற் கூறப்படும் செம்மை (வீடுபேறு) தரும் உரு; பதியிலக்கணம்; தெய்வத்தவர் - தெய்வத் தன்மை வாய்ந்த அறிவோர்; குழகன் - இளையவன்; எளிது அன்றே - எளிதல்லவா? ஏகாரவினா உடம்பாடு குறித்தது;—(8) கோவேந்திய வினயம் - தம்மாற்றலே பெரிதென்ற எண்ணம்; வணக்கம் - அடக்கம் என்றலுமாம். புகல் - இறைவர் அளவு புக்க சூழல்; மா - மான்;—(9) செண்டாடுதல் - சிதறச் செய்து பந்து போல ஆடுதல்; "செண்டாடும் விடையாய்" (தேவா - நம்பி); மீண்டு - குற்றம்;—(10) அயலநகே - அயல் தேநர்தரும் என்றும், அருகே சிரநேரித்தான் என்றும் கூட்டுக; பேருரோன - கயிலை போல; திருப்பேரூர் (மேலைச்சிதம்பரம் கொங்குநாட்டுத் தலம்) போல என்ற குறிப்பு முடையது. "மீகொங்கி லணிகாஞ்சிவாய்ப் பேரூரர் பெருமானைப் புலியூர்ச்சிற்

றம்பலத்தே பெற்றுமன்றே" (நம்பி - கோயில் - 10); (இக்கருத்துப் பேரூரில் இருந்து வழிபட்டபோது உதித்தமையின் எழுதப்பட்டது.) திருமலை - கயிலை - மலையார்ந்த - மலைக்கு.

தலவிசேடம் :—திருச்சுழியல் - பாண்டி நாட்டு 2-வது பதி; உமாதேவியாரும் சதானந்த முனிவரும் பூசித்தபதி எனபர்; சுவாமிபெயர் - பதிகத்துக் காண்க. சுவாமி - திருமேனிநாதேச்சுரர் - (பதிகம் 5வது பாட்டு) அம்மை - துணைமாலையம்மை ; பதிகம் 1.

இது பரமகுடி நிலையத்திலிருந்து தெற்கே 8 நாழிகையளவில் அடையத்தக்கது. மோட்டார் பஸ் வசதி உண்டு.

3859. அங்கணரைப் பணிந்துறையு மாரூரிக் கவ்வூரிற்
கங்குலிடைக் கனவின்கட் காளையாந் திருவடிவாற்
செங்கையினிற் பொற்செண்டுந் திருமுடியிற் சுழியமுடன்
எங்குமிலாத் திருவேட மென்புருக முன்காட்டி, ககஉ

3860. "கானப்பேர் யாமிருப்ப" தெனக்கூறிக் கங்கைசடை
வானப்பே ராறலையு மணிமுடியார் மறைந்தருள,
ஞானப்பே றுடையவர்தா மதிசயித்து "நாமுன்
ஏனப்பே ரெயிறணிந்தா ரருளிருந்த பரி"சென்பார், ககங

3861. கண்ட நனவுமபடி கழறிற் றறிவார்க்கு மொழிந்தருளிப்
புண்டரிகப் புனற்சுழியற் புனிதர்கழல் வணங்கிப்போய்
அண்டர்பிரான் றிருக்கானப் பேரணைவா ராரூரர்
"தொண்டரடித் தொழலு"மெனுஞ் சொற்பதிகத் தொடைபுனைவார்,

3862. "காளையா தமைக்கண்டு தொழப்பெறுவ தென்"றென்று
தாளுநா ளும்பரவத் தருவார்பாற் சார்கின்றார்
ஆளுநீ ளிடைக்காளை வஞ்சியனீர் நாயகலே
வாளைபாய் நுழைப்பழன முனைப்பாடி வளநாடர், ககரு

3863. மன்னுதிருக் கானப்பேர் வளம்பதியில் வந்தெய்திச்
சென்னிவளர் மதியணிந்தார் செழுங்கோயில் வலங்கொண்டு
முன்னிறைஞ்சி யுள்ளணைந்து முதல்வர்சே வடிதாழ்ந்து
பன்னுசெழுந் தமிழ்மாலை பாடினார் பாவினார். ககசு

3859. (இ - ள்) அங்கணரை...ஆரூர்க்கு - இறைவரை வணங்கித் தங்கியிருந்த நம்பிகளுக்கு ; அவ்வூரில்...திருவடிவால் - அவ்வூரில் இரவிலே கனவில் வெளிப்பட்டுக் காளையாகிய திருவடிவததுடன் தோன்றி ; செங்கையினில்...முன்காட்டி - செங்கையிலே பொற் செண்டும், திருமுடியிலே சுழியமுமாகிய இவற்றுடன், எங்கும் காணமுடியாத திருவேடத்தினை எலும்பும் உருகும்படி முன்னே காட்டி, ககஉ

3860. (இ - ள்) கானப்பேர்...தாம்அகல - யாம் இருப்பது "கானப்பேர்" என்று சொல்லி ஆகாயத்தின் கங்கை என்கின்ற பெரிய ஆறு உலவுதற்கிடமாகிய பெருமுடியினையுடைய பெருமான் மறைந்தருள ; ஞானப்பேறாளர்...அதிசயித்து -

ஞானத்தின் போராட்சியினையுடைய நம்பிகள் துயில்விழித்துணர்ந்து அதிசயம் கொண்டு; நாகமுடன்...என்பார் - பாம்பினோடு பன்றியின் கொம்பினையும் அணிந்த இறைவரது திருவருள் என்பால் இருந்த தன்மைதான் என்னே? என்பாராய், ககந

3861. (இ - ள்) கண்டருளும்...மொழிந்தருளி - தாம் கண்ட பரிசினையும் இறைவர் அருளின் பரிசினையும் கழறிற்றறிவார்க்கும் சொல்லியருளி; புண்டரிகப் புனல்...போய் - தாமரைகளையுடைய நீர்த்தடங்களைக் கொண்ட திருச்சுழியற் பெருமானை வணங்கி விடைபெற்றுச் சென்று; அண்டர்பிரான்...ஆரூரர் - தேவர் தலைவராகிய இறைவரது திருக்கானப்பேர் என்னும் பதியினை அணைவாராகிய நம்பிகள்; தொண்டர்...புனைவார் - தொண்டரடித தொழலும் என்று தொடங்கும் திருப்பதிகத் தமிழ் மாலையினைச் சாத்துவாராய், ககச

3862. (இ - ள் காளையார்...என்று - காளையாராகிய இறைவரைக் கண்டு தொழப் பெறுவதென்று கொலோ? என்று பாடி; ஆளை...வளநாடர் - மணிதரைத் தூரத்தே காண அஞ்சிய நீர்நாயின் பக்கத்திலே வாளைமீன்கள் பாயும் நுழை சேற்றினையுடைய வயல் சூழ்ந்த திருமுனைப்பாடி வளநாட்டின் தலைவராகிய நம்பிகள்; தாளை...சார்கின்றார் - திருவடிகளை நாளும் பரவும்படி தரும் பரமரிடத்துச் சார்கின்றாராகி, ககரு

3863. (இ - ள்) மன்னு...எய்தி - நிலைபெற்ற திருக்கானப்பேர் என்னும் வளம்பதியில் வந்து சேர்ந்து; சென்னிவளர்...உள்ளணைந்து - தலையிலே வளர்கின்ற பிறையினை அணிந்த இறைவரது செழுங்கோயிலினை வலமாகச் சுற்றி வந்து அதன் முன்பு வணங்கி உள்ளே அணைந்து; முதல்வர்...பாவினர் - முதல்வனாரது சேவடிகளில் வீழ்ந்து வணங்கிப் பன்னுகின்ற செழுந்தமிழ் மாலையினைப் பாடித் துதித்தனர். ககசு

இவ்வைந்து பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டுரைக்க நின்றன.

3859 (வி - ரை) அவ்வூரில் - திருச்சுழியலில்.

பணிந்துறையும் ஆரூரர்க்கு - பணிந்துறைந்தவராகிய ஆரூரருக்கு. ஆரூரருக்குக் - காட்டி - கழறி - அகல என மேல்வரும் பாட்டுடன் கூட்டி உரைக்க.

காளைபாம் திருவடிவால் - காளையாகிய திருவடிவத்தினை மேற்கொண்டு இதனால் இவருக்குக் காளீசுவரர் - காளைநாதேசுவரர் - எனப்பெயர் வழங்கும்.

பொற்செண்டு - வளைவுகளுடன் பிளந்து நீண்ட நுனியினையுடைய பிரம்பு; "செண்டுகையேந்தி" (1159) பார்க்க.

சுழியம் - ஆண்மக்களுட் சிறந்தார்க்குரிய தலையணிவிசேடங்களுள் ஒன்று; "சுந்தரச் சுழியஞ் சாத்தி" (330) பார்க்க. "கோல நறுஞ்சடைமேல் வண்ணமும்" "பூவயர் சென்னியனை" "கோல நறுஞ்சடையிற் கொத்தலரு மிதழித் தொத்தும்" என்பன முதலிய பதிகக் குறிப்புக்கள் காண்க.

கனவு - இது வைகறைக் கனவு.

எங்குமிலா - வேறெங்கும் கண்டிராத - காண இயலாத. எங்குமிலாத் திருவேடத்தின் அருட் காட்சியினைப் பதிகத்துள் விரித்தல் காண்க.

என்பும் உருக என்று உம்மை விரிக்க; மூன் - உணரும்படி வெளிப்படையாக. என்பும் - உருகாத எலும்பும் உருகும்படி என்று உம்மை உயர்வு சிறப்பு. இஃது அன்பின் மிகுதியாலாகுவது. "அன்புள் ளுருகி யழுவ னரற்றுவன்; என்புமுருக விராப்பக லேத்துவன்" (திருமந்); "என்பின் புரையுருக்கி" "எற்புத்

திலைதொறு மேற்றினன்" (திருவாசகம்); என்புருகக் கண்ட தன்மைகளைப் பதிகத்துள் "கண்குளிரக் கண்டு" "அன்பு பெருத்து" "உன்னி மனத்தயரா வுள்ளுருகி" என்பனவாதியாக வரும் குறிப்புக்களிற் கண்டுகொள்க. 112

3860. (வி - ரை) கானப்பேர் - கானப்பேரூரர்; காளையார் கோயில்.

அகல - கனவிற் காட்டிய வேடத்தை மறைத்தருள.

ஞானப்பேராளர் - பேர் - பெரிய; ஞானத்தினைப் பேராசாட்சி புரிபவர்; நம்பிகள்; ஞானம் - சிவனறிவு; இங்குச் சிவயோக முதல்வர் என்ற பொருளில் வந்தது.

உணர்ந்து - உணர்தல் - கனவு நிலை நீங்கித் துயில் உணர்தலையும், கனவிற் கண்டவற்றைப் பின்னர் நனவு நிலையில் உணர்தலையும் குறித்து நின்றது. காட்டிக் - கழறி - அகல - உணர்ந்து என்று கூட்டுக; எங்குமிலாத் திருவேடமாதலின் இறைவர் அருட் கண்ணாற் கண்டு காட்டிக் கழறினாலன்றி காண வொண்ணாதாம் என்பது; உணர்ந்து என்ற குறிப்புமிது.

அருளின் பெருமை இருந்த பரிசுதான் என்னே - என்பது அதிசயக்குறிப்பு. பரிசு - தன்மை. பரிசு - பரிசுதான் என்னே? 113

3861. (வி - ரை) கண்டநாளும்படி - தாம் கண்டபடியினையும், இறைவர் அருளும்படியினையும்; படி - தன்மை; படிகளை.

வணங்கி - வணங்கி அருள் விடைபெற்று. இது மரபு.

அணைவாராகிய ஆரூரர்; அணைவார் - வினைப்பெயர்.

அணைவார் - புனைவார் - அணையும்போது புனைவாராகி என்றதாம்.

"தொண்டாடித் தொழலும்" என்றது - இது பதிகத் தொடக்கமாகிய முதற் குறிப்பு; இப்பதிகம் பதியினை அணையும்போது வழியிற் பாடியருளியது; "கண்டு தொழப்பெறுவ தென்றுகொ லோ" என்ற பதிகக் குறிப்பும் அகச்சான்றும் காண்க மேல்வரும் பாட்டுப் பார்க்க.

தொடை எடுத்தார் — என்பதும் பாடம். 114

3862. (வி - ரை) காளையார்...என்று - இது பதிகக் கருத்து.

காளையார் - கானப்பேர் இறைவர் பெயர்; கனவிற்கண்ட காளை வடிவம் பற்றிக் "காளையார்" என்றார்; "காளையையே" என்பது பதிகமகுடம்.

தாளை நாளும் பரவத்தருவார் - தமது திருவடியைத் தினமும் துதிக்கும் பேறும் அவரே தந்து அருளினாலன்றி வாய்க்காது என்பது; "அவனரு ளாலே அவன்றாள் வணங்கி" (திருவா); "தன்னை நினையத் தருகின்றான்" (11ம்-திருமுறை நம்பி விநாயகர் - இரட் - மாலை.1); நாளும் பரவத்தாள் தருவார் - என்று கூட்டி அதற்குத் தக உரைத்தலுமாம்; நாளும்பரவ - நாடோறும் சிவாகமவிதிப்படி சிவபூசை செய்து போற்ற என்ற குறிப்பும் தந்தது; திருத்துறையூரில் நம்பிகள் தவநெறி வேண்டிப் பெற்றுப் பூசித்தமை (226) முன் உரைக்கப்பட்டது; பரவுதல் - பாடுதல்; "அருச்சனை பாட்டேயாகும்; ஆதலால் மண்மே னம்மைச், சொற்றமிழ் பாடுக" (216) என்று ஆணையிட்டுப் பாடும் பரிசு தருவார் என்க.

வளநாடர் - சார்கின்றார் - என்று கூட்டுக. சார்கின்றார் - சார்கின்றாராகி - முற்றெச்சம்; சார்கின்றார் - எய்தி என்று மேல்வரும் பாட்டுடன் தொடர்ந்து கொள்க.

ஆளி - மனிதர்; ஆள்வாரிலை; நீளிடை - தூரத்தே,

காண அஞ்சிய நீர்நாய் - கண்டு பயந்த நீர்நாயின்; நீர்நாய் - நீரில் வாழும் சிறிய விலங்குவகை; "நீர்நாய் வாளை நாளிரை பெறூஉம்" (குறுந் - 364); இது மக்கள்வா வினைத் தூரத்தே காணவும் அஞ்சி ஒளிக்கும் இயல்புடையது. பாய் நுழைப்பழனம்- பாய்தற்கிடமாக இளகிய சேற்றினையுடைய வயல். நுழை - நுழையும் தன்மை யுடைய இளகிய சேறு என்ற பொருளில் வந்தது. 115

3863. (வி - ரை) பதியில் வந்து எய்தி - என்றதனால் இப் பதிகம் பதியின் புறத்தே வருதற்முன் வழியிற் பாடியருளியதென்பது கருதப்பட்டது.

முன் - திருக்கோபுரத்தின் முன்பு ; உள் - கோயிலினுள்.

பன்னு செழுந்தமிழ்மாலை பாடினர் - பன்னுதல் - பலவாறும் எடுத்துச் சொல்லு தல் ; தமிழ்மாலை - திருப்பதிகம் ; பாடினர் - பாடினராகி ; பாடி ; முற்றெச்சம். வினைமுற்றாகக் கொண்டு பரவினர் என்பதற்குப் பதிகத்தாலன்றி வேறு பலவாற் றாலும் துதித்தனர் என்றுரைத்தலுமாம்.

தமிழ்மாலை - நம்பிகள் இறைவரது திருமுன்பு பாடிய இத்திருப்பதிகம் கிடைத் திலது ! 116

திருக்கானப்பேர்

திருச்சிற்றம்பலம் பண் - புறநீர்மை. 7ம் திருமுறை

தொண்ட ரடித்தொழலுஞ் சோதி யிளம்பிறையுஞ்
சூதன மென்முலையாள் பாகமு மாகிவரும்
புண்டரி கப்பரிசா மேனியும் வானவர்கள்
பூசலி டக்கடனஞ் சுண்டக ருத்தமருங்
கொண்டலெ னத்திகழுங் கண்டமு மெண்டோளுங்
கோல நறுஞ்சடைமேல் வண்ணமுங் கண்குளிரக்
கண்டு தொழப்பெறுவ தென்றுகொ லோவடியேன்
கார்வயல் சூழ்கானப் பேருறை காளையையே. 1

கன்னலை யின்னமுதைக் கார்வயல் சூழ்கானப்
பேருறை காளையையொண் சீருறை தண்டமிழால்
உன்னி மனத்தயரா வுள்ளுரு கிப்பரவு
மொண்பொழி லுவலர்கோ னூரன வாரூரன்
பன்னு மிசைக்கிளவி பத்திவை பாடவல்லார்
பத்தர் குணத்தினரா யெத்திசை யும்புகழ
மன்னி யிருப்பவர்கள் வானி னிழிந்திடினு
மண்டல நாயகராய் வாழ்வது நிச்சயமே. 10

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—கானப்பேருறை காளையாரின் வண்ணங்களை அடியேன் கண்குளிரக் கண்டு தொழப்பெறுவதென்று கொலோ? என்று உன்னி மனத்தயரா வுள்ளுருகிப் பாடியருளியது. (3862).

பதிகப்பாட்டுக்குறிப்பு :—(1) தொண்டரடித்தொழல் - தொண்டர்கள் சூழ்ந்து அடி தொழுதிருக்கும் கோலம் ; "அடியார் கூறுமிசைப் பரிசும்" (4) ;—சூது - மாங் கனி; சூதாடு கருவியுமாம்; புண்டரிகப்பரிசு-தாமரை மலர்போன்ற நிறம் ; கொண் டல் - காளமேகம் ; பூசலிட - வருந்தி ஒலிட ; பூசல் - பேரொலி ; மேல்வண்ணம் - மேலே முடித்தகோலம் ; கண்குளிர - ஆர்வந்தீர்த்தது ; கோல நறுஞ்சடை மேல்

வண்ணம் - "திருமுடியிற் கழியம்" (3859);—(2) கூதல் - குளிர்ச்சி;—(3) நான் உடைமாடு - என்னுடைய செல்வம்; மாடு - செல்வம்; பூ - கொன்றைப்பூ; நற்பதம் - வீட்டுலகம்;—(4) சிலை - வில் - மலை - என்ற இருபொருளும்பட நின்றது; சேவகம் - வீரம்; பாவகம் - பாவிக்கப்படும் நிலை; பாவனை; கோசிகம் - பண். கௌசிகம் எனப்படும்; (பைரவியிசை); கோசிகம் - அரையில் வீக்கிய பட்டாடை என்றலுமாம்; விடைக்கழகு - விடையின் அழகு; தொத்து - பூங்கொத்து;—(5) கல்லவடம் - ஒரு வகை இயம்; இனி, (1) கல்லவடம் - கல்லாலாகிய ஆலமரம்; வடம் - ஆல்; பரிசு - முனிவர்கட் கருளிய தன்மை; (2) கல்லவடம் - செங்கழு நீர்மாலை - ஆசாரியருக்குரிய திருவடையாள மாலை; "கழுநீர்மாலை" (திருவா); (3) அடி ஆர் கல்லவடம் - அடியிலே கட்டிய (ஆர்த்த) அணிகலம் - சிலம்பு - வீரக் கழலாகியவற்றின் சரம் கல்லவட மென்பர்; வடம் - சரம் (ந. சிவ. குறிப்பு.);—(6) பண்ணுதலைப்பயன் - பண்பாடும் பயன்; எசறவு - இளைத்தல்; படுமாறு - அடையும் வழி;—(7) மா - யானை; அதள் - தோல்; இறையும் - ஒரு சிறிதும்; மூவர் - அய வரி யயன்; உருத் - தனநாம் மூலமுகநற்கருவை - அம்மூவரும் தன் னுருவாகிய முதல்வன்; (பிள்ளையாரது திருச் சிவபுரத் தேவாரம் பார்க்க.) பாவகம் - வஞ்சனை - வெளிப்பகட்டு;—(8) நஞ்சு ண்டு...இருந்தவனை - இறைவ னது எல்லாம் வல்ல தன்மை; ஆகமநான் மொழியும் - ஆலின்கீழ் ஞானோபதேசம்; அறுபத்தறுவருக்கு ஆகம மொழிந்தது; "மாமலை மகேந்திர மதனிற் சொன்ன ஆகமம் தோற்றுவித் தருளியது" என்பன முதலியனவுமாம். கண்டன் - கற்கண்டு போன்ற வன்; ஓதி - வேதம் ஓதுபவர்;—(9) நாதமிகுந் தோசைய நானவனை - நாத தத்துவத்தினின்று மறைகளைத் தோற்றுவித்தவனை; ஆதன் - ஆத்தன்; நண்பன் - துணைவன்; நாதனை......தோழனை - நம்பிகளது சரிதக் குறிப்பாகிய அகச் சான்று;—(10) உன்னி...பாவும் - இப்பதிகம் பாடியருளும்போது நம்பிகளது மனநிலையின் பேரார்வம். "என்புருக" (3859); டன்றும் மிசைக் கிளவி. பலபடவும் சிவனது வண்ணங்கள் பாடிய இசைப்பாட்டு; கிளவி - சொல்; இங்குச் சொற்றொடர்களாகிய பாட்டுக்கு வந்தது. ஆகுபெயர். கிளத்தல் - சொல்லுதல்; வானின்...நிச்சயமே - பதிகப்பயன்.*

பண்குறிப்பு:—இத்திருப்பதிகப்பண் புறநீர்மை விடியல் கோரத்திற்பாடற் குரியதாதலின் நம்பிகள் இதனைப் பாடியருளியவாறே இப்பதியிற் போந்த நேரம் விடியற்கால மென்பது கருதப்படும்; "மங்கையர்க்கரசி" என்ற பிள்ளையாரது திருப்பதிகக் குறிப்புப் போலக் காண்க.

தலவிசேடம்:—திருக்கானப்பேர் - பாண்டி நாட்டில் 10வது பதி. தல விசேடம் முன் ஆளுடைய பிள்ளையார் புராணத்துள் உரைக்கப்பட்டது. (பாட்டு 2785); ஐராவதம் வழிபட்டமை பிள்ளையார் பதிகத்துக் கூறப்பட்டதற் கேற்பத் தீர்த்தமாகிய யானைமடு ஆலயத்தின் முன்பு உள்ளது. அதனில் இன்றும் கோயில் யானை நீராடி வழிபடுதல் காணலாம்.

3864. ஆராத காதலுட னப்பதியிற் பணிந்தேத்தி
சீராருந் திருத்தொண்டர் சிலநாளங் கமர்ந்தருளிக்

---

குறிப்பு:—*இத்திருவாக்கின் மெய்த்தன்மை, இதனைமேற்கொண்டு இப்பதியில் அன்பு பூண்டு திருப்பணி செய்த அன்பர் பூபாலராகும் (சமீன்தார்) தன்மை பெற்று மேம்பட வாழ்ந்த நற்சரிதத்தால் இன்றும் உலகிலறியப்படும்.

காராரு மலர்ச்சோலைக் கானப்பேர் கடந்தணைந்தார்
போரானேற் றூர்கயிலைப் பொருப்பர்திருப் புனவாயில். கககள

(இ - ள்) ஆராத...அமர்ந்தருளி - நிறைவு பெறாத பெருவிருப்பினுடனே அத்திருப்பதியிலே பணிந்து துதித்துச் சிறப்புடைத் திருத்தொண்டர்களாகிய நம்பிகளும் சேரனும் அங்குச் சில நாட்கள் விரும்பித் தங்கியிருந்தருளி ; காராரும்... கடந்து - மேகங்கள் தங்குதற்கிடமாகிய மலர்ச்சோலைகள் சூழ்ந்த திருக்கானப்பேர்ப் பதியினைக் கடந்து சென்று ; போர் ஆன் ஏற்றூர்...திருப்புனவாயில் - போர்வல்ல இடபத்தினையுடையவரும் கயிலைமலையினையுடையவருமாகிய இறைவரது திருப்புனவாயிலினை ; அணைந்தார் - சென்று சேர்ந்தார்கள்.

ஆராதகாதல் - பதிகத்தும் கண்ட "உன்னி மனத்தபாா உள்ளுருகி" (10) "கண்குளிர" (1) முதலிய பகுதிகள் பார்க்க.

திருந்தோண்டர் - நம்பிகளும் சேரமானும் ஆகிய இருவரும்.

போர் - ஆனேறு - போர்வல்ல இடபம் ; ஏறு - விலங்கினத்தின் ஆண்பாற் பெயர். "ஏறுமேற்றையும்" (தொல் - பொருள். மரபியல் 2); ஆனேறு - போர் என்ற குறிப்பினால் ஈண்டு ஊர்தியினையும் கொடியினையும் குறித்தது. "ஊர்தி வால் வெள் ளேறே சிறந்த, சீர்கெழு கொடியு மவ்வே றென்ப" (புறம்)

ஆனேற்றூர் - போருப்பர் - ஏற்றூரும் பொருப்பரும் ; ஏற்றூராகிய பொருப்பர் என்றலுமாம். போருப்பு - மலை. 117

3865. புனவாயிற் பதியமர்ந்த புனிதரா லயம்புக்கு
மனவார்வ முறச்"சித்த நீநினையேன் னொடு" வென்றே
வினவான தமிழ்பாடி வீழ்ந்திறைஞ்சி யப்பதியிற்
சினயானை யுரித்தணிந்தார் திருப்பாதந் தொழுதிருந்தார். கககஅ

(இ - ள்) புனவாயிற்பதி...புக்கு - திருப்புனவாயிற் பதியில் விரும்பி வீற்றிருந்தருளிய இறைவரது திருக்கோயிலினுள்ளே புகுந்து ; மனம்...பாடி - மனத்துள் பெருவிருப்புக் கொள்ளச் "சித்தநீநினை யென்னொடு" என்று தொடங்கும் வினவுதலமைந்த செந்தமிழ்த் திருப்பதிகத்தினைப் பாடியருளி ; வீழ்ந்திறைஞ்சி...தொழுதிருந்தார் - நிலமுற விழுந்து வணங்கி மதயானையினை உரித்து அணிந்த இறைவரது திருவடிகளைத் தொழுது அத்திருப்பதியிலே எழுந்தருளியிருந்தார்கள்.

(வி - ரை) "சித்த நீநினை நினையேன்னொடு" என்றே - இது பதிகத் தொடக்கமாகிய முதற்குறிப்பு

மனஆர்வமுற - பதிகத் தொடக்கத்தாற் போந்த குறிப்பு.

வினவானதமிழ் - வினவுதல் பொருந்திய தமிழ் அமைப்பு ; "என்னொடு சூளறும்" என்ற பதிகப் பொருள் குறித்தது. பதிகக் குறிப்புப் பார்க்க.

ஆர்வம்வர—என்பதும் பாடம். 118

திருபுனவாயில்

திருச்சிற்றம்பலம் பண்பழந்தக்கராகம் - 7ம் திருமுறை

சித்த நீநினை யென்னொடு சூளறும் வைகலும்
மத்த யானையி னீருரி போர்த்த மணாளனூர்
பத்தர் தாம்பலர் பாடிநின் றாடும் பழம்பதி
பொத்தி லாந்தைகள் பாட்ட றப்புன வாயிலே. 1

பொடியாடு மேனியன் பொன்புனஞ் சூழ்புன வாயிலை
அடியா ரடியன் னுவல வூர னுரைத்தன
மடியாது கற்றிவை யேத்தவல் லார்வினை மாய்ந்துபோய்க்
குடியாகிப் பாடிநின் றாடவல் லார்க்கில்லை குற்றமே. 10

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு:—என்னெஞ்சு சூளுறும் மனமே! நீ வைகலும் திருப்புனவாயிலை நினை; "வினவான தமிழ்" (3865) என்று ஆசிரியர் அறிவித்தருளினர்; சூளுறுதல் - எற்றே என்ற வினாவுக்கு விடைகூறுமுகத்தால் கூறுதல்; பாட்டுத்தோறும் "நினை" என்றமைக் காண்க.

பதிகப் பாட்டுக்குறிப்பு:—(1) சிந்தமே நீ நினை - என்க; மேற்பாட்டுக்களிலும் இவ்வாறே கொள்க; சூள்அறும் - பந்தம் நீங்கும்; இனிச் சூள்உறும் என்ற பாடத்திற்குச் சித்தமே! நீயுநானும் சூளுறுதும் என்க. ஈர்உரி - ஈர்ந்தநற் பெறப் பட்ட தோல். பழம்பதி - இத்தலத்தின் பெயர்; சுவாமி பழம்பதி நாதர் எனப்படுவர் (7); போத்தில் - மரப்பொந்துகளில்; பொந்து - பொத்து; வலித்தல் விகாரம்; ஆந்தைகள் - பாலைக் கருப்பொருள்களுள் ஒன்று; மேல் வரும் மறவேடுவர் - சாத்தொடு பூசல் - (2 - 5) - கள்ளி (6 - 8) - கார்க்கோழி (9) முதலியனவும் காண்க; இப்பதியின் நிலம் நெய்தல் சார்ந்த பாலையின்பாற்படுதல் இன்றும் காணப்படும். இப்பதிகத்துச் சொல்லிய திணைவிபுலாகிய ஆர்கைப்பாட்டு - வேடுவர் பூசல்- கள்ளிவற்றிய தன்மை - கார்க்கோழி பற்றேறிக் கூவுதல் முதலிய நிகழ்ச்சிகள் இன்றும் இங்கு நேரிற் காணக்கூடியன. (இவற்றிற் பலவற்றை அடியேன் நேரிற் கண்டேன்);—(2) மருதவானவர் - மருதப்பண்பாடி வழிபடும் வானவர்; மருத நிலக்கடவுளாகிய இந்திரன்; மருத்துர்கள் என்னும் தேவச்சாதியர் என்றலுமாம் (ந. சிவ). போருது சாந்து - பூசல் - மறவேடுவர் தொழில் (செய்தி);—(3) தோக்காய - கூடிய; நக்கான் - நக்கன்; நவிலும் - நடநவிலும்; உண்மை உபதேசிக்கும் என்றலுமாம் (5);—(4) வற்கேன்று - வாளா; வற்புறுத்தி என்றலுமாம். "போற்குன்றம்...அதுவேபுகல்" பழமொழி; புகல் - உண்மை; (பொன்வண்-அந் - 100); இறைவர் போற்குன்றம்; உயிர் - காக்கை; இறைவரைச் சார்ந்த உயிரும் அவ்வண்ணமாகும் என்பது; "கனக மலையருகே, போயின காக்கையு மன்றே படைத்தது பொன்வண்ணமே" (பொ - அந் - 100); கற்குன்றும்...தோன்றும் - இப்பதியுள்ள நிலத்தின் இயல்பினைத் தன்மையணியிற் கூறிய மெய்ம்மை மொழி; இன்றும் காணத்தக்கது; கற்குன்று - சிறுகுன்றுகள்; தூறு - சிறு செடி- மரங்களின் தூறு; கடுவெளி - நிழலில்லா நிலிடைகள்; கடற்கானல் - கடல்மணல் வெளி; புற்கென்று தோன்றும் - மன எழுச்சி செல்லாது வறிதே தோன்றும்;—(5) ஆட்ட - வேட்டையாட - அலைக்க; புல்வாய்க்கணம் - மான்கூட்டம்; "மாவெழுப் பினர்கள்" (762);—(6) உறவும் ஊழியும் - ஊழியிலும் துணையானவன்; பிறவு - பிறத்தல்;—(7) எசற்று - அயர்ந்து; இளைத்து; பாசற்றவர் - பாசமற்ற அடியார்; பாசம் - அம்சாரியை கெட்டு நின்றது; பூசற் றுடிப்பூசல் - பாலைக்கரு; செய்தி; —(8) இப்பாட்டு முழுதும் பாலைவன்னில இயல் குறித்தது; கோள்ளிவாயின - கொள்ளி போன்ற சிவந்த கூரிய வாயினை உடைய; தெள்ளி - தெளிந்து; சிதறி; தீவிழித்தல் - தீப்போல ஒளிவிடுதல்; ஒப்புமை பற்றி வந்தது; செந்தரை - வன்னிலம்;—(9) எற்றே - என்னென்று வினாவினையாதலின் நினை; எற்று - ஏ - எத்தன்மையாலாவது; ஏ - அசை; கல்தூறு கார்க்காடு புற்று; கார்க்கோழி - பாலைக்

கரு; கோழி புற்றேறி அழைத்தல் - நிலத்தியல்பாற் பெற்ற வலிமை;—(10) மடியாது - மடி (சோம்பு) இல்லாமல். "மடியாது கற்கவல்லார்க் கில்லையாம் மறு பிறப்பே."

தலவிசேடம் :—திருப்புனவாயில் - பாண்டி நாட்டு 7-வது பதி; வரலாறு ஆளுடைய பிள்ளையார் புராணத்துள் முன் (2789) உரைக்கப்பட்டது பார்க்க.

3866. திருப்புனவா யிற்பதியி லமர்ந்தசிவ ணூர்மகிழும்
விருப்புடைய கோயில்பல பணிந்தருளால் மேவினூர்
பொருப்பினொடு கானகன்று புனற்பொன்னி நாடணைந்து
பருப்பதவார் சிலையார்தம் பாம்பணிமா நகர்தன்னில். ககக

(இ - ள்) திருப்புனவாயில்...பணிந்து - திருப்புனவாயில் பதியிலே விரும்பி யெழுந்தருளிய சிவபெருமான் மகிழ்ந்தருளும் விருப்பமுடைய கோயில்கள் பல வற்றையும் வணங்கி; அருளால் - அருள்விடை பெற்று; பொருப்பினொடு கான் அகன்று - குன்றுகளும் கானங்களும் கடந்து நீங்கி; புனல்...அணைந்து - நீர்வளம் மிக்க காவிரி நாட்டினைச் சேர்ந்து; பருப்பதம்...தன்னில் - மலையாகிய நீண்ட வில்லினையுடைய இறைவாது திருப்பாம்பணி என்று வழங்கும் நகரத்தில்; மேவி னூர் - சென்று சேர்ந்தனர் (சேரருடன் நம்பிகள்).

(வி - ரை) பதியில் கோயில்பல - இப்புனவாயிற் பதியில் பாண்டி நாட்டு எனைப் பதின்மூன்று பதிகளின் கோயில்களும் தாபிக்கப்பட்டுள்ளன; பதியில் உள்ள பலகோயில் என்க; பல என்றமையால் மேற்செல் வழியிடை உள்ள ஓரியூர் (வைப்பு) - திருமணமேற்குடி, திருப்பெருந்துறை (வைப்பு) முதலியனவும் கொள்ளலாம்.

பொருப்பினொடு கானகன்று - பொருப்பு - சிறுகுன்றுகள்; கான் - குறுங்காடு; திருப்புனவாயிலினின்றும் சோழநாட்டெல்லை வரையும் திருப்பாம்பணி நகர் வரை யும் உள்ள பாண்டி நாட்டின் பகுதியின் இயல்பு கூறியபடி. இன்றும் இவ்வாறே காணலாம்.

பருப்பதம் - மேருமலை; சிலை - வில்; வார் - நீண்ட.

பாம்பணி - நகரின் பெயர்; பாதாளீச்சரம் - கோயிலின் பெயர்.

கோயில் பணிந்தருள்பெற்று—என்பதும் பாடம். 119

3867. பாதாளீச் சரமிறைஞ்சி யதன்மருங்கு பலபதியும்
வேதாதி நாதர்கழல் வணங்கிமிகு விரைவினுடன்
சூதாருந் துணைமுலையார் மணிவாய்க்குத் தோற்றிரவு
சேதாம்பல் வாய்திறக்குந் திருவாரூர் வந்தணைந்தார். கஉ0

(இ - ள்) பாதாளீச்சரம்...வணங்கி - திருப்பாதாளீச்சரத்தில் இறைவனை வணங்கிப் போய் அதன் பக்கத்தில் உள்ள பல பதிகளிலும் வேதங்களுக்கெல்லாம் ஆதியாராகிய இறைவாது திருவடியை வணங்கிச் சென்று; சூதாரும்...திருவாரூர் - மாங்கனிபோன்ற இரண்டு தனங்களையுடைய பெண்களின் அழகிய வாயினுக்குத் தோற்றமையினாலே பகலில் வாய்திறக்க ஆற்றாமல், இராத்திரிப் போதில் செவ் வாம்பல் மலர்கள் வாய் திறத்தற்கிடமாகிய திருவாரூரில்; மிகு விரைவினுடன் - மிக்க விரைவாக; வந்தணைந்தார் - வந்து சேர்ந்தார்கள்.

(வி - ரை) பாதாளீச்சுரம் - பிலமுகத்தினின்றும் ஆதிசேடன் வந்து பூசித்தனன் என்பது தலவரலாறு; பாதாள் - பாதாள உலகத்தினின்றும் வரும் பிலம்; "உறைகோயில் பாதாளே" (தேவா).

பலபதியும் - இவை பாதாளீச்சரத்துக்கும் திருவாரூருக்கும் அணிமையில் உள்ளவை. இவை திருப்பூவனூர், திருவிடைவாய், திருப்பேரெயில், திருநாட்டியத்தான்குடி, திருவிளமர் முதலாயின என்பது கருதப்படும்.

மீதுவிரைவினுடன் - திருவாரூரிறைவரைப் பிரிந்து நீண்டு சென்ற யாத்திரையினால் நெடுநாள்க ளாயினமையின் அவ்வார்வம் பற்றி மிக்க விரைவுடன் போந்தனர் என்க. "எத்தனைநாட் பிரிந்திருக்கே னென்னாரூ ரிறைவனையே" (தேவா) என்பது முதலிய திருவாக்குக்கள் காண்க.

சூதாரும் - சூது - மாங்கனி; சூதாடுகருவி என்றலுமாம்; சேதாம்பல் - செவ்வல்லி (ஆம்பல்) பகலில் மலராது இரவில் மலர்தற்குக் காரணங் கற்பித்தவாறு; தற்குறிப்பேற்ற வணி; பெண்களின் வாய் செவ்வாம்பல் போன்றது என்பர்; ஈண்டு, அவ்வாறன்றி, ஆம்பல்கள், வாயின் அழகுக்குத் தோற்றமையின் பகலில் வாய் திறக்க அஞ்சி இரவில் வாய்திறந்தன என்பது; பொருளுக்கேற்ப ஈண்டு வாய்திறத்தல் - பேசுதல் - அலர்தல் என்ற இருபொருள்பட வந்த சிலேடை; பெண்களின் பொலிவினால் நகர்வளங் கூறியபடி. தடுத் - புரா - (1) பார்க்க.　120

3868. திருநாவ லூர்வேந்தர் சேரர்குல வேந்தருடன்
வருவாரைத் திருவாரூர் வாழ்வார்க ளெதிர்கொள்ளத்
தருகாத லுடன்வணங்கித் தம்பெருமான் கோயிலினுட்
பெருகார்வத் தொடுவிரும்பும் பெரும்பேறு பெறப்புகுந்தார்.　கஉக

(இ - ள்) திருநாவலூர் வேந்தர்...வருவாரை - திருநாவலூர் மன்னவராகிய நம்பிகள் சேரர்களின் குலமன்னவருடன் வருபவரை; திருவாரூர்...வணங்கி - திருவாரூரில் வாழ்கின்றவர்கள் எதிர்கொள்ள மிக்க விருப்பத்துடனே வணங்கி; தம்பெருமான்...புகுந்தார் - தமது இறைவரது திருக்கோயிலினுள்ளே பெருகும் ஆர்வத்துடனே விரும்பி வணங்கும் பெரும் பாக்கியத்தினைப் பெறும்பொருட்டுச் சென்று புகுந்தனர்.

(வி - ரை) சேரர்குல வேந்தருடன் திருநாவலூர் வேந்தர் வருவாரை - என்க. இருவரும் வேந்தர்களாவரர் என்ற சிறப்புக் காண்க.

எதிர்கொள்ள - வணங்கி - எதிர்கொண்ட அடியார்களை வணங்கி; திருவாரூர் வாழ்வார்கள் - ஏனைப் பதிகளிற் போலத் தொண்டர்களும் பதியோரும் என்னாது இவ்வாறு கூறியது இங்கு வாழ்வார்கள் எல்லாரும் முற்செய் தவத்தால் முத்திபெறும் தகுதிவாய்ந்த கணத்தவர்களாவார் என்று காட்டும் கருத்துடையது.

விரும்பும் பெரும்பேறுபெற - விரும்புதல் ஈண்டு விரும்பி வழிபடும் என்ற பொருளில் வந்தது; விரும்புதலே பெரும் பேறு எனப்பட்டது. "அறஞ்செய விரும்பு" என்றாற்போல.

கோயிலினுள் - புகுந்தார் - நகருள் வந்தவுடன் திருக்கோயிலினுள் வணங்கிய பின்னரே திருமாளிகைக் கெழுந்தருளும் மரபு குறித்தது. பரிசனங்களே முன்னர்த் திருமாளிகை சென்றனர் (3810).　121

3869. வாசமலர்க் கொன்றையார் மகிழ்கோயில் வலங்கொண்டு
நேசமுற முன்னிறைஞ்சி நெடும்போழுதே லாம்பரவி
ஏசறவாற் றிருப்பதிக மெடுத்தேத்தி யெழுந்தருளாற்
பாசவினைத் தொடர்க்கறுப்பார் பயில்கோயில் பணிந்தணைவார், கஉஉ

3870. பரவையார் மாளிகையிற் பரிசனங்கண் முன்னெய்த
விரவுபே ரலங்கார விழுச்செல்வ மிகப்பெருக
வரவெதிர்கொண் டடிவணங்க வன்றொண்டர் மலைநாட்டுப்
புரவலனை யரையுங்கொண்டு பொன்மணிமா ளிகைபுகுந்தார். கஉ௩

3869. (இ ள்) வாசமலர் ..எழுந்து - மணமுடைய மலர்க்கொன்றை சூடிய இறைவர் மகிழும் திருக்கோயிலினை வலமாகச் சுற்றி வந்து அன்பு பொருந்தத் திருமுன்பு வணங்கிப் பெரிய வழிபாட்டுக் காலங்களில் எல்லாம் துதித்து ஏசறவினாலே திருப்பதிகத்தினை எடுத்துப் பாடித் துதித்து நீங்கி ; அருளால்...அணைவார் - அருள் விடை பெற்றுப் புறம்போந்து பாசவினைப் பற்றுக்களை அறுப்பாராகிய இறைவர் விளங்க வீற்றிருக்கும் திருக்கோயிலினைப் பணிந்து புறம்பே செல்வாராகி, கஉஉ

3870. (இ - ள்) பரவையார்...எய்த - பரவையாரது திருமாளிகையின்கண் பரிசனங்கள் முன்னர்ச் சென்று சேர்ந்தார்களாக ; விரவு...பெருக - பொருந்தும் பெரிய அலங்கார வகைகளாகிய தூய மங்கலங்கள் மிகவும் நிறைவாகச் செய்து ; வரவு...வணங்க - பரவையார் எதிரேவந்து நல்வரவேற்று அடிவணங்க ; வன்றொண்டர்...புகுந்தார் - நம்பிகள் மலைநாட்டரசராகிய சேரனாரையும் உடன் கொண்டு பொன்னணிந்த அழகிய திருமாளிகையினுள்ளே புகுந்தருளினர். கஉ௩

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒருமுடிபு கொண்டன.

3869. (வி - ரை) கோயில் - "கோயிலினுள் - புகுந்தார்" என முன் (3863) கூறியதனால், இங்குக் கோயில் என்றது பூங்கோயிலினுள் இறைவர் எழுந் தருளிய திருமாளிகையினைக் குறித்து நின்றது. மகிழ் கோயில் என்ற குறிப்புமது.

நெடும்போழுது எல்லாம் பரவி - நெடும்போழுது - வழிபாட்டுக் காலங்கள் ; "காலமெல்லாந் துதித்திறைஞ்சி" (2062).

ஏசறவால் - நீண்டகாலம் பிரிந்திருந்த ஆற்றாமையினாலே போந்த வருத்தம். ஏசறவு - ஈண்டு அன்பு என்னும் பொருட்டு.

திருப்பதிகம் எடுத்து ஏத்தி - திருப்பதிகத்தினைத் தொடங்கிப் பாடி; எடுத்தல் - பெரிதும் போற்றுதல் என்றலுமாம்.

எழுந்து - வழிபட்ட நிலையினின்றும் நீங்கி.

அருளால் - அருள்விடை பெற்றுப் புறம்போந்து.

கோயில் பணிந்து - இது கோயிலின் புறம்பு வந்து செய்த வணக்கம்.

அணைவார் - மேற்றிருமாளிகையில் செல்வாராகி; மேல், புறம் போந்து-(புறம்பு வந்து) திருமாளிகையில் என்பன இடநோக்கி வருவிக்கப்பட்டன.

அணைவார் - புகுந்தார் - என வரும்பாட்டுடன் முடிக்க ; அணைவார் - முற் றெச்சம் ; அணைவாராய். 122

3870. (வி - ரை) பரிசனங்கள் முன்எய்த - திருவாரூர்ப் பதியில் வந்த வுடன் நம்பிகள் சேரனாருடன் நேரே திருக்கோயிற் சேர்ந்தாராதலின் பரிசனங் கள் முன்னே திருமாளிகையிற் சென்று சேர்ந்து அறிவித்து இருந்தனர் என்பதாம்.

எய்த - எய்தி அறிவித்தமையால்.

விரவு...பெருக - விரவுதலாவது எதிர்கொள்வதற் கேற்றவாறு பொருந்துதல்; பெருக்கி என்பது பெருக எனத் திரிந்து நின்றது.

பேரலங்கார விழச்செல்வம் - திருவாயில் கோடித்தல், தோரணம், பூமாலை, நிறைகுடம், விளக்கு நிரைத்தல் முதலாயின ; செல்வம் - மங்கலப் பொருள்களை ஏந்துதல் ; விழவு - அடியாராந் தன்மையின் பொருட்டுச் செய்யப்படுதல் குறித்தது. பேரலங்காரம் - அரசராந்தன்மை குறித்துச் செய்யப்படுதல் குறித்தது

அடிவணங்க - பரவையார் என்ற எழுவாய் வருவிக்க.

வன்றொண்டர் - புகுந்தார் - என்க ; மாளிகையின்கண் ; ஏழனுருபு தொக்கது. முன் "கோயிலினுள் புகுந்தார்" (3868) என்றார் ; அங்குப் புகுந்தது விரும்பும் பெரும்பேறு பெற என்றமையால், இங்குப் புகுந்தார் என்றது உபசரித்து அமர என்று கொள்க. 123

3871. பரவியே பரவையார் பரிவுடனே பணிந்தேத்தி
விரவியபோ னகங்கறிகள் விதம்பலவா கச்சமைத்துப்
பரிகலமும் பாவாடை பகல்விளக்கு முடனமைத்துத்
திருவமுது செய்வித்தார் திருந்தியதேன் மொழியினார். கஉச

(இ - ள்) பரவியே...ஏத்தி - பரவையார் (உட்போந்தவுடன் முகமன் கூறி) பரவி அன்புடனே பணிந்து துதித்து ; விரவிய...சமைத்து - பொருந்திய திருவமுதும் கறிகளும் பற்பல விதங்களாகச் சமைப்பித்து ; திருந்திய தேன்மொழியினார் - திருத்தம் பெற்ற தேன்போன்ற மொழியினையுடையாராகி ; பரிகலமும்...திரு அமுது செய்வித்தார் - பரிகலமும் அதன் கீழிடும் திருப்பாவாடையும் பகல் விளக்கும் உடனே ஒழுங்குபட அமைத்து (இருவருக்கும் பரிசனங்களுக்கும்) திருவமுது செய்வித்தனர்.

(வி - ரை) பரவியே...பணிந்தேத்தி - இது திருமாளிகையினுள்ளே போந்த பின்னர் ஆசனத்தமர்வித்துச் செய்யும் வழிபாட்டுமுறை ; முன் "அடிவணங்க" (3870) என்றது திருமாளிகை வாய்தலினின்று எதிர்கொண்டு வரவேற்ற வணக்கம். இவ்வடி முற்றுமோனை பெற அருளியது உபசார வகைகளெல்லாம் முற்ற வியற்றிய நிலைக்குறிப்பு.

விரவிய - விருந்தின் தகுதிக் கேற்பப் பொருந்திய ; விரவிய கறிகள் என்றும் கூட்டியுரைக்க நின்றது ; விரவிய போனகம் - என்றது நெய் - சர்க்கரை - பாசிப் பருப்பு - மிளகு முதலியவை கலந்த சித்திரான்ன வகை என்பர் முன் உரைகாரர்.

போனகம் - திருவமுது ; அன்னம் ; கறிகள் விதம் பலவாக - கறிகள் பல ; (அவற்றின்) விதங்களும் பல என்க. சமைத்து - சமைப்பித்து.

பரிகலம் - பாவாடை - பாவாடை - கால்பரிகலம் - இவை பெரியோரை அமுது செய்விக்கும் முறை. முன் உரைத்தவை (3732) பார்க்க ; பகல்விளக்கு - ஒளியின் பொருட்டன்றி உபசாரத்தின் பொருட்டு வைப்பது ; பகல் என்றமையால் ஒளியின் பொருட்டன்று என்பது பெறப்படும்.

திருந்திய தேன்மொழியினார் - திருந்திய - திருத்தம் பெற்ற ; அடியார்களை உபசரித்து அமுதூட்டி ஊட்டித் திருத்தம் பெற்ற ; மொழியினார் - மொழியினாராகி; குறிப்புவினையெச்சம். தேன்மொழியினார் என்றது இன்மொழி கூறி இன்னமு

ஊட்டல் வேண்டும் மரபு குறித்தது " ஈரமென் மதுரப்பதம் பரிசெய்த முன்னுரை செய்தபின் " (442).

திருஅமுது செய்வித்தார் - இளையான்குடி மாறனார் புராணம் (442 - 443) - சிறுத்தொண்ட நாயனார் புராணம் (3731 - 3732) - இவ்விடங்களிலும், முன் இப் புராணத்தும் ஈண்டும் உரைத்தவற்றையெல்லாம் ஒன்று சேர்ப்பின் அடியாரை ஊட்டும் திறம் எல்லாம் பெறப்படும். பின்னர்க் கழறிற் றறிவார் நம்பிகளை அமுதூட்டும் திறமும் இங்குக் கூடக்கருதுக ; கூறியது கூறாது அங்கங்கும் கூறியவற்றைத் திரட்டிக் காண எல்லாம் வரும்படி அமைக்கும் ஆசிரியரது தெய்வக் கவிநலம் கண்டு களிக்க. 124

3872. மங்கலமாம் பூசனைகள் பரவையார் செயமகிழ்ந்து
தங்கியினி தமர்கின்றார் தம்பிரான் கோயிலினுட்
பொங்குபெருங் காலமெலாம் புக்கிறைஞ்சிப் புறத்தணைந்து
நங்கள்பிரா னருள்மறவா நல்விளையாட் டினைநயந்தார். கௌ௨௫

(இ - ள்) மங்கலமாம்...அமர்கின்றார் - மங்கலமாகும் மாகேசுவர பூசைகளை யெல்லாம் பரவையார் செய்ய மகிழ்ந்து ஏற்று அங்குத் தங்கி இனிதாக விரும்பி எழுந்தருளி யிருக்கின்றார்களாய் நம்பிகளும் சேரனாரும் ; தம்பிரான்...அணைந்து - தமது பெருமானாராகிய புற்றிடங்கொண்ட இறைவரது திருக்கோயிலினுள் சிறப்பு மிகுந்த வழிபாட்டுக்குரிய பூசாகாலங்களிலெல்லாம் புகுந்து வணங்கிப் புறத்துப் போந்து ; நங்கள்பிரான்...நயந்தார் - நம்பிரானாரது திருவருளை ஒருகாலமும் மறவாத நிலையில் நல் விளையாட்டுக்களை விரும்பினர்.

(வி - ரை) மங்கலமாம் பூசனைகள் - இவை மாகேசுவர பூசை நிகழ்ச்சிகளும், திருவமுதூட்டியபின் செய்யும் உபசரிப்புக்களும் ஆம் (3824); "பூசனைகளெல்லாம்" (3825) ; மங்கலமாம் - அடியார்பாற் செய்யும் இவை நித்திய மங்கலமாகிய சிவத் தன்மை யடைதற்கேதுவாவன ; ஏனை உலகினர்பாற் செய்வன அவ்வாறன்றி அமங் கலமாகிய சாதல் பிறத்தல்கட் கேதுவாவன என்பது குறிப்பு ; ஆம் - ஏது ஆகும்.

அமர்கின்றார் - அப்பூசனைகளை விரும்பி அங்கு எழுந்தருளியிருப்பவர்களாய்.

பொங்கு பெருங்கால மெலாம் - வழிபாட்டு நேரங்களிலெல்லாம்; முன் "நெடும் பொழுதெலாம்" (3869) என்ற கருத்து.

அருள் மறவா நல்விளையாட்டு - இவை மேற்பாட்டிற் கூறப்படும் ; இவர்கள் கண்ட இவற்றையும் இவைபோல்வனவற்றையுமே உலகில் ஏனை மக்களும் கண் டொழுகின்றார்கள் ; அவை உலக மக்களைப் பாசபந்தப்படுத்திச் செத்துப் பிறக்கச் செய்கின்றன. ஈண்டு இப்பெருமக்களும் இவற்றையே கண்டார்களாயினும் பிரா னருள் மறவாத நிலையிற் காண்கின்றார்களாதலின் இவை இவர்களைப் பாசப்படுத்துத லில்லை. அருள் மறவாநிலை இவர்களை உய்விப்பனவுமாம். நல்விளையாட்டென்ற அடைமொழிக் குறிப்புமிது ; அருள் நினையாத இவ்வகை விளையாட்டுக்களை நீக்க லின் இது பிறிதினியைபு நீக்கிய விசேடணம் ; " ஈங்கிவை செய்யா தியாங்க ளெல் லாம்...ஐந்து புலன்களு மார வார்ந்து, மைந்தரு மொக்கலு மகிழ மனமகிழ்ந், திவ் வகை யிருந்தோ மாயினு மவ்வகை, மந்திர வெழுத்தைந்தும் வாயிடை மறவாது, சிந்தை நின்வழிச் செலுத்தலி னருந்த, முத்தியு மிழந்தில முதல்வ! வத்திறம், நின்னது பெருமை யன்றோ ?" (திருவிடை. மும். கோவை - 19) என்ற பட்டினத்தடிகள் திரு வாக்கும், " எடுதரு மலர்க்குழலார் முலைத்தலைக்கே யிடைக்கே எறிவிழியின் பழு

கடைக்கே கிடந்துயிறை ஞானங், கூடுமவர் கூடரிய வீடுங் கூடிக் குஞ்சித்த சேவடியுங் கும்பிட்டே யிருப்பர் " (சித்தி - 10 - 5) என்ற ஞானநூலும், இன்ன பிறவும், இக்குக் கருதற்பாலன.

தமரவர்கள் நல்விளையாட்டினை—என்பதும் பாடம். 125

3873. நிலைச்சேண்டும் பரிச்சேண்டும் வீசிமிக மகிழ்வெய்தி
விலக்கரும்போர்த் தகர்ப்பாய்ச்சல் கண்டருளி வென்றிபெற
மலைக்குநெடு முட்கணைக்கால் வாரணப்போர் மகிழ்ந்தருளி
அலைக்குமறப் பலபுள்ளி னமர்விரும்பி யமர்கின்றார். கடுசு

வேறு

3874. விரவுகாதன் மீக்கூர மேவு நாள்கள் பலசெல்லக்
கரவி லீகைச் சேரலனார் தங்கள் கடல்சூழ் மலைநாட்டுப்
பரவை யார்தங் கொழுநனார் தம்மைப் பணிந்து கொண்டணைவான்
இரவும் பகலுந் தொழுதிரக்க விசைந்தா ரவரு மெழுந்தருள. கடுஎ

3873. (இ - ள்) நிலைச்செண்டும்... மகிழ்வெய்தி - நிலைச்செண்டு வீசுதலும் பரிச்செண்டு வீசுதலும் ஆகிய விளையாட்டுக்களை விரும்பிச் செய்து மிகவும் மகிழ்ச்சியடைந்து; விலக்கரும்...கண்டருளி - விலக்குதற் கருமையாகிய போர் செய்யும் ஆட்டுக்கடாக்களின் பாய்ச்சலைக் கண்டும்; வென்றிபெற...மகிழ்ந்தருளி - வெற்றி பெறும் பொருட்டுப் பொரும் நீண்ட முள்ளையுடைய கணைக்காற் கோழிகளின் போரினைக் கண்டு மகிழ்ந்தும்; அலைக்கும்... அமர்கின்றார் - அவ்வாறே பொரும் வலிய பல புட்களின் போரினை விரும்பியும் அங்குத் தங்கி யிருக்கின்றாராகி; கடுசு

3874. (இ - ள்) விரவு...செல்ல - பொருந்திய பெருவிருப்பம் மேலும் அதிகரிக்க இவ்வாறு தங்கும் நாள்கள் பலவும் கழிய; கரவில்...இரக்க - கரத்தல் இல்லாத கொடையினையுடைய சேரலனார் கடல் சூழ்ந்த தங்கள் மலைநாட்டின்கண் பரவையாரது கணவனாராகிய நம்பிகளைப் பணிந்து உடன் அழைத்துக்கொண்டு செல்லுதற் பொருட்டு இரவும் பகலும் வணங்கி வேண்ட; இசைந்தார் அவரும் எழுந்தருள - அவரும் எழுந்தருளுதற்கு இசைந்தருளினர். கடுஎ

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒருமுடிபு கொண்டன.

3873. (வி - ரை) நிலைச்சேண்டும் பரிச்சேண்டும் வீசி - சேண்டு வீசுதல் - இந்நாளில் பந்தாடுதல் போன்றதொரு விளையாட்டு வகை. சேண்டு - பந்துபோன்ற விளையாட்டுக் கருவி. நிலைச்சேண்டு வீசுதல் - நின்றபடியே வீசுதல்; பரிச்சேண்டு குதிரையின் மீதிவர்ந்து இடம் வலம் சுழன்று வீசியாடுதல். இந்நாளின் (Hockey, அவ்வகை ஆடல்கள் காண்க. இவை ஆண்மக்களின் ஆடல் வகை; கழல், பந்து, அம்மானை, தோணோக்கம், ஊசல் முதலியவை பெண்களின் ஆடல் வகை; இந்நிலைகள் மாறி ஆண் விளையாடல்களைப் பெண்களும், பெண்கள் ஆடும் பந்து முதலியவற்றை ஆண்களுமாகக் கையாளப்பட்டு வழங்குதல் பிற்காலத்தின் பிறழ்ச்சி. முன்னாளின் ஆடல் வகைகள் ஆண் பெண்களின் உடலமைப்புக்களுக்கும் இயற்கைக்கும் ஏற்ப வகுக்கப்பட்டன. சேண்டு - தனி வளைவுள்ளதோர் நீண்ட ஆடற் கருவியுமாம்.

தகர்ப் பாய்ச்சல் - வாரணப்போர் - புள்ளின் அமர் - இவைகள் இந்நாட்டில் மக்கள் உல்லாசப் பொழுதுபோக்கிற்கு மேற்கொண்ட ஆடல்கள்; இவை முன்

ளில் உயர்குடி மக்களின் வாழ்க்கையிலும் நிகழ்ந்தன. இந்நாளில் இவற்றைச் சூதுபொரும் தன்மையிற்படுத்திக் கீழ்நிலை மாக்கள் ஆளும் வகையில் தாழ்த்திவிட்டார்கள். செல்வர்கள் கண்டு மகிழ்ந்து பாழ்படும் குதிரைப்பந்தயம் முதலியவை இங்கு நினைவுகூர்ந்து ஒப்பிடற்பாலன. ஆனால் இவ்வகைகளில் இப்போது காணப்படும் இழிபுகள் முன்னைநாளில் தொடர்தலில்லை. " பொருதகர் தாக்கற்குப் பேருந் தகைத்து " (குறள்), " யானைவெம் போரிற் குறுந்தூறெண " (திருவா) என்பன முதலியவற்றா னறியப்படுகின்றபடி இவற்றினின்றும் மக்கள் கண்டு பயன்பெறும் பல உண்மைகளையும் இவற்றுட் கண்டு உலகை உய்வித்தார்கள் பெரியோர். புறப் பொருளியலில் இவ்வகை ஆடல்களையும் போர்களையும் பற்றிக் கூறுவனவும் காண்க. "குன்றேறி யானைப்போர் கண்டற்றால்" (குறள்) ; புறப்பொருள் வெண்பாமாலை முதலியவற்றையும் காண்க.

விலக்கரும்போர் - வென்றி பெறமலைக்கும் - அலைக்கும் மறம் - என்பன அவ்வப்போர்களின் விடாமுயற்சி முதலிய பண்புகளை விளக்கும் அடைமொழிகள் ; பிறிதினியைபு நீக்கிய விசேடணங்கள்.

முட்களைக்கால் வாரணம் - கணைக்காலில் முள்போலக் கூரிய நீண்ட ஒரு அங்கமுடைய கோழி ; தகர் - ஆடு.

மறப்புள் - காடை - கவுதாரி - சிவல் முதலாயின. " கைக்கடா குரங்கு கோழி சிவல்கவு தாரி பற்றிப், பக்கமுன் போதுவார்கள் " (333)

அமர்கின்றார் - மேவும் என்று மேல்வரும் பாட்டுடன் கூட்டிப் பொருள் கொள்க ; அமர்கின்றார் - அமர்கின்றாராகி ; முற்றெச்சம். 126

3874. (வி - ரை) கரவில் ஈகை - " தண்டாத கொடை " (3751) ; "கார் கொண்ட கொடை " (தொகை) ; கரவு - ஒளித்தல் ; மறுத்தல். கரவின்மையாவது யாவர் யாது வேண்டினும் மறுத்தலும் மறைத்தலுமில்லாமை. இஃது இறைவரருளாற் பெற்ற பேறு.

கேரளம் - சேரநாட்டின் பெயர் ; வடமொழி வழக்கு.

கொண்டு - அணைவான் உடன்கொண்டு செல்லும் பொருட்டு.

இரவும் பகலும் தொழுதிரக்க - " இறைகளோ டிசைந்த வின்ப மின்பத்தோ டிசைந்த வாழ்வு, பறைகிழித் தனைய போர்வை " (நம்பி - ஆரூரர்) என்று நம்பிகள் உலக அரசபோக இன்பங்களைப் பொருளென மதியாத நிலையினராதலின், அரசருடன் செல்ல எளிதின் இசையார். ஆதலின் பணிந்து - தொழுது-இரக்க என்றார்; இரவும் பகலும் என்றது இடைவிடாது என்ற கருத்துடையது; "பன்னு ளழைத்தாலிவனெனைப், பன்னு ளழைப்பொழி யானென் றெதிர்ப்படுமே " (தேவா - அரசு) என்ற இறைவரது தன்மையே அவர் தோழராகிய நம்பிகளது தன்மையுமாம். மலைநாடும், மேல் இருமுறை நம்பிகளது திருவடி தோய்தலாற் புனிதம் பெற்று வாழ்வடைய நின்ற கொங்குநாடும் செய்த தவவிசேடம் உருப்பட்டுச் சேரலனாரை இவ்வாறு இரக்கச் செய்தது ; அத்தவப்பயன் வாய்ப்பப் பக்குவப்படுதற்கு பன்முறை பணிதலும் தொழுதலும் இரத்தலும் வேண்டப்பட்டன என்க. நம்பிகளது இசைவு - எங்கள் தவப்பயன் கூடும் காலம் என்பதாம் ; இது மேல்வரும் இரண்டு பாட்டுக்களாலும் விளங்கும். 127

3875. நங்கை பரவை யாருள்ளத் திசைவா னம்பி யெழுந்தருளத்
திங்கண் முடியார் திருவருளைப் பரவிச் சேரமான்பெருமாள்

எங்கு முள்ள வடியாருக் கேற்ற பூசை செய்தருளிப்
பொங்கு முயற்சி யிருவரும்போய்ப் புக்கார் புனிதர் பூங்கோயில்.

(இ - ள்) நங்கை...எழுந்தருள - நங்கை பரவையாரது உள்ளமார்ந்த இசைவினையும் பெற்று நம்பிகள் எழுந்தருளினாராக; திங்கள்...பரவி - மதியினை முடித்த இறைவரது திருவருள் இவ்வாறு பெறப் பெற்றதன் பொருட்டுத் துதித்து; சேரமான் பெருமான்...செய்தருளி - சேரமான் பெருமாள் நாயனார் அத்தலத்தில் எங்கெங்கும் உள்ள சிவனடியார்களுக்குத் தக்கவாறு பூசைகள் செய்தருளுவித்து; பொங்கும்...பூங்கோயில் - மேல் எழுகின்ற முயற்சியினாலே இருபெரு மக்களும் இறைவரது பூங்கோயிலினுட் புகுந்தருளினர்.

(வி - ரை) நங்கை...இசைவால் - பிரிவாற்றாத தன்மையுள்ள தலைவியாராதலின் ஆற்றியிருத்தற் பொருட்டு அவரது இசைவு வேண்டப்படுவதாயிற்று; ஈண்டு இறைவரது தலயாத்திரைபற்றி யன்றித் தோழர் ஒருவர் பொருட்டுப் பிரியும் நிலையாதலாலும் இது வேண்டப்படுவதாம்; முன் எல்லாம் இவ்விசைவு கூறாமையும் கருதுக.

திருவருளைப் பரவி - எழுந்தருளுவதற்கு நம்பிகளையும் பரவையாரையும் இசைவுபடச் செய்த திருவருளைத் துதித்து; திருவருளாலன்றி இப்பெரும் பேறு பெறுதற்கரிது என்பதாம்.

எங்கும் உள்ள...செய்தருளி - எங்கும் - அத்திரு நகரெங்கெங்கும்; அடியார் - பூசையாவது மாகேசுவர பூசை, அமுதுபடி யளித்தல் முதலாயின; நம்பிகள் தம்முடன் தமது மலைநாட்டுக்கு எழுந்தருளப் பெறுவதைப் பெறற்கரும் பெரும் பேறெனக் கருதி இவ்வாறு கொண்டாடினார் என்பதாம்; பெரியவர் வருகையிவ்வாறு கொண்டாடத்தகுவது என்பதுமாம்.

புனிதர் பூங்கோயில் புக்கார் - வணங்கி அருள்விடை பெறும் பொருட்டுப் புகுந்தனர். 128

3876. தம்பி ரானைத் தொழுதருளாற் போந்து தொண்ட ர் சார்ந்தணைய
நம்பி யாரூ ரருஞ்சேரர் நன்னாட் டரச ரானாய
பைம்பொன் மணிநீள் முடிக்கழறிற் றறிவார் தாமும் பயணமுடன்
செம்பொ னீடு மதிலாரூர் தொழுது மேல்பாற் செல்கின்றார், கஉகூ

வேறு

3877. பொன்பரப்பி மணிவரன்றிப் புனல்பரக்குங் காவேரித்
தென்கரைபோய்ச் சிவன்மகிழ்ந்த கோயில்பல சென்றிறைஞ்சி
மின்பரப்புஞ் சடையண்ணல் விரும்புதிருக் கண்டியூர்
அன்புருக்குஞ் சிந்தையுடன் பணிந்துபுறத் தணைந்தார்கள். கங0

3876. (இ - ள்) தம்பிரானை...அணைய - தமது இறைவரை வணங்கி அருள் விடைபெற்றுப் புறம்போந்து தொண்டர்கள் சார்ந்து உடன் அணைய; நம்பியாரூரரும்...தொழுது - நம்பியாரூரரும் சேரநாட்டின் அரசராகிய பைம்பொன்முடி சூடிய கழறிற்றறிவார் நாயனாரும் பயணமாக எழுந்து போந்து செம்பொன் அணிந்த நீடிய மதில் சூழ்ந்த திருவாரூரினை இறைஞ்சி; மேல்பாற் செல்கின்றார் - மேற்குத் திசையாகச் செல்கின்றார்களாகி, கஉகூ

3877. (இ - ள்) பொன்பரப்பி...போய் - பொன்னைப் பரப்பியும் மணிகளை வாரிக் கொழித்தும் நீர் பரந்து செல்லும் காவேரித் திருநதியின் தென்கரை வழியிலே சென்று; சிவன்...இறைஞ்சி - சிவபெருமான் மகிழ்ந்தெழுந் தருளியுள்ள திருக்கோயில்கள் பலவற்றிலும் சென்று வணங்கி; மின் பரப்பும்...அணைந்தார்கள் - மின்போலும் ஒளி வீசுகின்ற சடையினையுடைய இறைவர் விரும்பி வீற்றிருக்கும் திருக்கண்டியூரினை அன்பினால் உருக்கப்படும் மனத்தினுடனே சென்று பணிந்து புறம்பே போந்தருளினர். கரு௦

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒருமுடிபு கொண்டன.

3876. (வி - ரை) அருளால் - அருள் விடைபெற்று.

தொண்டர் சார்ந்து அணைய - உரிய தொண்டர்கள்சார்ந்து உடன்வர-அணைய.

பயணமுடன் - பயணமாக எழுந்து புறப்பட்டு.

ஆரூர் தொழுது - திருவாரூர் நகரின் புறம்பு போந்து அந்நகரினைத் தொழுது. "புறம்பு போந்ததனையே நோக்கி நின்றே" (ஞான - புரா - 518).

மேல் பால் - இவர்கள் மலைநாடு நோக்கிச் சென்ற வழி, திருவாரூரினின்றும் வடமேல்பால் நோக்கிக் காவிரித் தென்கரை வழியாய்த் திருப்பெருவேளூர், திருக்குடவாயில், திருப்பழையாறை, திருநல்லூர் முதலாகிய பதிகளின் வழியே செல்லும் பழையவழி என்பதும், மேல்வரும் பாட்டிற் கோயில் பல என்பவை இவையும் இவ்வழியிற் (3877) காணும் பல பதிகளுமாம் என்பதும் கருதப்படும். இவ்வழி திருக்கண்டியூர் வழியாக மேல்பாற் செல்கின்றது. 129

3877. (வி - ரை) பொன்பரப்பி...காவேரி - காவேரி - காவிரி; நீர்வளம் குறித்த சொன்னயங் கொண்ட கவிநலம் காண்க; பொன் - காவிரி மணலுடன் கலந்துவரும் பொற்றுகள்; வரன்றுதல் - வாரிக் கொழித்தல்; பரக்கும் - பரவிச் செல்லும். காவேரித் தென்கரை - காவிரி நதியின் தென்பால்.

கோயில் பல - முன்பாட்டின் கீழ் உரைக்கப்பட்டன.

அன்புருக்கும் சிந்தையுடன் - உருக்கும் - உருக்கப்பட்ட; செயப்பாட்டு வினைப் பொருளில் வந்தது. அன்பு - அன்பினால்.

திருக்கண்டியூர் - நம்பிகள் பதிகம் கிடைத்திலது! 130

3878. வடகரையிற் றிருவையா றெதிர்தோன்ற மலர்க்கரங்கள்
உடலுருக வுள்ளுருக வுச்சியின்மேற் குவித்தருளிக்
கடல்பரந்த தெனப்பெருகுங் காவிரியைக் கடந்தேறித்
தொடர்வுடைய திருவடியைத் தொழுவதற்கு நினைவுற்றார். உகக

(இ - ள்) வடகரையில்...தோன்ற - காவிரிக்கு வடகரையில் திருவையாறு எதிரே தோன்றுதலும்; மலர்க்கரங்கள்...குவித்தருளி - உடலும் உள்ளமும் உருக மலர் போன்ற கைகளைத் தலையின் மேலே கூப்பியருளி; கடல்...நினைவுற்றார் கடல் பெருகி வந்த தென்னும்படி பெருகிவரும் காவேரி யாற்றினைக் கடந்து வடகரையில் ஏறிச்சென்று இடையறாத தொடர்பு பூண்ட இறைவரது திருவடியைத் தொழுவதற்கு நினைவுகொண்டனர்.

(வி - ரை) வடகரை - காவிரியின் வடகரை; இவர்கள் தென்கரையில் திருக்கண்டியூரினின்றும் போதுகின்றபோது அங்கு நின்றவாறே வடகரையில் அணிமையில் திருவையாறு தோன்றியது.

உடல் உருக உள் உருக உச்சிமேல் மலர்க்கரங்கள் குவித்தருளி என்க - உடலு முயிரும் உருக நினைந்து கைகூப்பி.

கடல் பரந்தெனப் பெருகும் காவிரி - அப்போது காவிரி பெருவெள்ளமாகப் பெருகியதென்பது ; இதன்நிலை மேல் (3880) உரைக்கப்படுவது காண்க. கடல் - நெடுந்தூரம் ஆற்றின் வழியே பெருகி வந்து பரவியதோ என்னும்படி ; "கடலேறித் திரைமோதிக் காவிரியி னுடன்வந்து கங்குல் வைகித், திடலேறிச் சுரிசங்கம் வெண் முத்தங் கீன்றலைக்குந் திருவை யாறே " என்ற ஆளுடைய பிள்ளையார் திருவாக்கு ஈண்டு நினைவு கூர்தற்பாலது.

கடந்தேறி - இடையில் ஓடும் இவ்வாற்றினைக் கடந்து வடகரையில் ஏறி என்பதாம்.

தொடர்வுடைய திருவடி - ஆட்கொள்ளப்பட்ட தொடர்பு. உயிர்களை விடாது பற்றித் தொடர்ந்து உய்விக்கும் திருவருளுமாம். " உடைய அடிகளோ?" என்ற பதிகக்குறிப்புமாம். பதிகம் பார்க்க. 131

வேறு

3879. ஐயா றதனைக் கண்டுதொழு தருளா ரூரர் தமைநோக்கிச்
செய்யாள் பிரியாச் சேரமான் பெருமா ளருளிச் செய்கின்றார்
" மையார் கண்டர் மருவுதிரு வையா றிறைஞ்ச மனமுருகி
நையா நின்ற திவ்வாறு கடந்து பணிவோ நா"மென்ன, கஙஉ

3880. ஆறு பெருகி யிருகரையும் பொருது விசும்பி லெழுவதுபோல்
வேறு நாவா யோடங்கண் மீது செல்லா வகைமிகைப்ப
நீறு விளங்குந் திருமேனி நிருத்தர் பாதம் பணிந்தன்பின்
ஆறு நெறியாச் செலவுரியார் தரியா தழைத்துப் பாடுவார், கஙங

3881." பரவும் பரி"சென் றெடுத்தருளிப் பாடுந் திருப்பாட் டின்முடிவில்
அரவம் புனைவார் தமை"யையா றுடைய வடிக ளோ!"வென்று
விரவும் வேட்கை யுடனழைத்து, விளங்கும் பெருமைத் திருப்பதிகம்
நிரவு மிசையில் வன்றொண்டர் நின்று தொழுது பாடுதலும், கஙச

3882. மன்றி னிறைந்து நடமாட வல்லார் தொல்லை யையாற்றில்
கன்று தடையுண் டெதிரழைக்கக் கதறிக் கனைக்கும் புனிற்றாப்போல்
ஒன்று முணர்வாற் சராசரங்க ளெல்லாங் கேட்க "ஓல"மென
நின்று மொழிந்தார்; பொன்னிமா நதியு நீங்கி நெறிகாட்ட, கஙரு

3883. விண்ணின் முட்டும் பெருக்காறு மேல்பாற் பளிங்கு வெற்பென்ன
நண்ணி நிற்கக் கீழ்பானீர் வடிந்த நடுவு நல்லவழி
பண்ணிக் குளிர்ந்த மணல்பரப்பக் கண்ட தொண்டர் பயின்மாரி
கண்ணிற் பொழிந்து மயிர்ப்புளகங் கலக்கக் கையஞ் சலிகுவித்தார்.

3879. (இ - ள்) செய்யாள் பிரியாச் சேரமான் பெருமாள் - இலக்குமி பிரியாத சேரமான் பெருமாணயனார் ; ஐயாறதனைத் தொழுது - திருவையாற்றி னைத் தொழுது அருள் ஆரூரர் தமை நோக்கி - அருளினையுடைய நம்பியாரூரரைப் பார்த்து ; அருளிச் செய்கின்றார் - அருளிச் செய்கின்றாராய் ; மையார்...நாம்

என்ன - விடம் நிறைந்த கண்டத்தினையுடைய இறைவர் எழுந்தருளியுள்ள திருவையாற்றினைச் சென்று பணிய மனம் உருகி நைவதாயிற்று ; நாம் இந்த ஆற்றினைக் கடந்து சென்றுபணிவோம் என்று கூற, கஙஉ

3880. (இ - ள்) ஆறு...போல் - ஆறு பெருக்கெடுத்து இரண்டு கரையினையும் அலைத்து ஆகாயத்தில் எழுவது போல, வேறு கப்பலாவது ஓடங்களாவது மேற் போகாதபடி மிகுத்துச் செல்ல ; நீறு...செலவுரியார் - திருநீறு விளங்கும் திருமேனியினையுடைய இறைவரது திருவடிகளைப் பணிந்து அன்பின் ஆற்றின் வழியாகச் செல்லும் உரிமையுடைய நம்பிகள் ; தரியாது...பாடுவார் - தரிக்கலாற்றாது இறைவரை விளித்துப் பாடுவாராகி, கஙங

3881. (இ - ள்) பரவும் பரிசு...எடுத்தருளி - பரவும் பரிசு என்று தொடங்கியருளி ; பாடும்...அழைத்து - பாடுகின்ற திருப்பாட்டுக்களொவ்வொன்றன் இறுதியிலும் பாம்பினைப் பூணும் இறைவரை "ஐயாறுடைய அடிகளோ?" என்று பொருந்திய பெரிய ஆசையுடனே அழைத்து ; விளங்கும்...பாடுவார் - விளக்கமுடைய பெருமை பூண்ட திருப்பதிகத்தினை நிரவும் பண்ணிசையமைய வன்றொண்டப் பெருந்தகையார் நின்று தொழுது பாடுதலும், கஙச

3882. (இ - ள்) மன்றில்...வல்லார் - திருவம்பலத்தினுள் நிறைந்து திருக்கூத்தினை ஆடவல்லவராகிய இறைவர் ; தொல்லை...போல் - தனது கன்று தடைப்பட்டு எதிர் கூப்பிடக் கேட்டுத் தான் கதறிக் கனைக்கும் புனிற்றுப் பசுப்போல ; ஒன்றும்...மொழிந்தார் - ஒன்றிய உணர்வினாலே சராசரங்கள் எல்லாம் கேட்கும்படி ஓலம் என்று நின்று மொழிந்தருளினர் ; பொன்னி...காட்ட - அப்போது பெரிய காவிரி நதியும் தொடர்ச்சி நீங்கி வழிகாட்ட, கஙரு

3883. (இ - ள்) விண்ணின்...நிற்க - ஆகாயத்தினை முட்டும் பெருக்கெடுத்த ஆறு மேல் பக்கத்தில் பளிங்குமலை போலத் தங்கி நிற்க ; கீழ்பால்...மணல்பரப்ப - கீழ்ப்பக்கத்தில் நீர்வடிந்த இடையில் நல்ல வழியினை உண்டாக்கிக் குளிர்ந்த மணலினைப் பரப்பியிட ; கண்ட தொண்டர்...குவித்தார் - கண்ட தொண்டர்கள் மிக்க மழைபோலக் கண்ணீர் பொழிந்து திருமேனி மயிர்ப்புளகம் கொள்ளக் கைகளை அஞ்சலியாகத் தலைமேற் குவித்து வணங்கினர். கஙசு

இவ்வைந்து பாட்டுக்களும் தொடர்ந்து ஒருமுடிபு கொண்டுரைக்க நின்றன.

3879. (வி - ரை) சேரமான் பெருமாள் - தொழுது - அருளிச் செய்கின்றார்- என்ன என்று கூட்டுக. சேரமானார் அழைத்துச் செல்ல அவருடன் மலைநாடு நோக்கி நம்பிகள் செல்கின்றாராதலின், அச்செலவிலே வழி நின்றும் வேறு விலகிச் செல்லும் நிலை அவர்கூற நிகழ்ந்தது என்ற குறிப்பும் காண்க.

செய்யாள் பிரியா - நில வேந்தன் திருமாலின் அமிசமுடையவன் எனப்படுதல் மரபாதலின் இலக்குமி பிரியாத என்றார் ; "திருவுடை மன்னரைக் காணிற் றிருமாலைக் கண்டேனே யென்னும்" (திருவாய்மொழி) என்பதும் காண்க. செய்யாள் - திருமகள் ; நிலமகள் என்றலுமாம்.

அருளிச் செய்கின்றார் - அருளிச் செய்கின்றாராகி ; முற்றெச்சம் ; அருளிச் செய்கின்றார் - என்ன என்று கூட்டுக.

மனம் உருகி நையா நின்றது - மனம் உருகுதலால் நைதலை அடைந்தது ; உருகுதலின் முதிர்ந்த நிலை நைதல் எனப்படும் ; நைதல் - மிகவும் உடைதல் - இளகுதல்.

இவ் ஆறு கடந்து பணிவோம் நாம் - இங்கு நின்றவாறே மனத்தாற் பணிதலன்றி அங்குச் சேர்ந்து உடலாலும் பணிவோம் என்பார் ஆறு கடந்து என்றார். 132

3880. (வி - ரை) ஆறு...மிகைப்ப - ஆறு பெருகிய நிலையினை விரித்துக் காட்டியவாறு.

இருகரையும் பொருது - பொருதல் - நீர்பெருகி அலைத்து ஓடும் வேகத்தால் கரையினை இடித்துத் தள்ளி ஓடுதல்; இருகரை - இறங்குதல் ஏறுதல் இரண்டும் கூடாமை குறித்தற்கு.

விசும்பில் எழுவது போல் - வானில் முட்டஉயர்வது போல்; ஆறு - குளம்முதலிய நீர் நிலைகளின் நீர்ப் பெருக்கம் சுருக்கம் இவற்றை உயரத்தால் அளந்து காணும் (High flood level - Low flood level - feet of water) வழக்குக் காண்க.

வேறு நாவாய் ஓடங்கள் - இங்கு நாவாய் என்றது பெருந்தோணி என்ற பொருளில் வந்தது. வேறு - ஆறு கடத்தற்குரிய எவ்வகையும்; மீதுசெல்லுதல் - ஆற்றின் நீர்ப்பரப்பை மேற்கிழித்துச் செலுத்தப்படுதல்; செல்லுதல் - செலுத்தப் படுதல்; செயப்பாட்டுவினைப் பொருளில் வந்தது.

மிகைப்ப - மிக்குச்செல்ல; பெயரடியாய்ப் பிறந்த வினையெச்சம்.

அன்பின் ஆறு நெறியாச் செலவுரியார் - நம்பிகள்; செல்லும் வழியாக இவர் சேறும் ஆறு பௌதிகமாகிய இந்த ஆறன்று; இதனின் மேம்பட்டு, இதுவேயன்றி வேறு யாண்டும் செல்லும் சிவன்பால் அன்பாகிய ஆறு ஆகும்; அதனை வேறு எதுவும் குறுக்கிட்டுத் தடுக்க இயலாது என்பதாம்; ஆறு - நதி என்றும், வழி என்றும் இருபொருளும்பட வந்தது கவிநயம்.

தரியாது அழைத்து - சென்று பணிதற்கு ஆறு தடைசெய்யக் கண்டமை தரிக்கலாற்றாது.

அழைத்துப் பாடுவார் - பாடுவாராகி - முற்றெச்சம்; அழைக்கும் பண்பிற் பாடுவாராகிப் - பாடுதலும் என்று வரும் பாட்டுடன் கூட்டி உரைக்க.

நீருந்தர் - "ஆடுமாறு வல்லானுமை யாறுடை யையனே" (தேவா) என்ற ஆளுடைய பிள்ளையாரது திருவாக்கும், 'நீடுபெருந் திருக்கூத்து நிறைந்ததிரு வுள்ளத்து நிலைமை தோன்ற" (2201) என்ற அதன் வரலாறும் இங்கு நினைவு கூர்தற் பாலன; மேலும் "மன்றி னிறைந்து நடமாட வல்லார்" (3882) என்பது காண்க.

நீறு விளங்கும் திருமேனி - சங்காரஞ் செய்து இன்பம் செய்யும் குறியீடாக விளங்குவது திருநீறு; சிவனைப்பணிதற்கு இடையூறாகிய தடையைப் போக்கி இன்பந்தரும் குறிப்புத்தர இவ்வாற்றாற் கூறினார். நீருந்தர் என்று அருள் ஐந்தொழிற்கூத்துக் குறித்துக் கூறியது மிக்குறிப்பு. 133

3881. (வி - ரை) "பரவும் பரிசு" என்று எடுத்தருளி - இது பதிகத் தொடக்கமாகிய முதற் குறிப்பு.

திருப்பாட்டின் முடிவில்...என்று - திருப்பாட்டின் - ஒவ்வொரு திருப்பாட்டினும்; முடிவில் - ஈற்றில்; மகுடமாக. "ஐயாறுடைய அடிகளோ" என்பது பதிகம். "உடைய அடிகளோ" என்றதனைத் தொடர்புடைய திருவடி என்று (3879) மேல் ஆசிரியர் விளக்கி யருளுவதும் காண்க.

விரவும் வேட்கை - விரவுதல் - ஒன்றமுள்ளத்துடன் இங்குத் தடையினை நீக்கிக் காணவும், சேரமானாரது விருப்பத்தினை முடித்துக் கொடுக்கவும் பொருந்துதல். விரவும் - சென்று சேரும் என்ற குறிப்புமாம்.

அழைத்து விளங்கும் பெருமையாவது - தூரத்தே நிற்பார்போல இறைவரை நேரே அழைத்தலும், அதற்கு அவரும் அவ்வாறே விடைகூறி ஓலிடவும் நிகழ்ந்ததனை விளங்கும் பெருமை என்றார்; அழைத்து - அழைத்த பண்பினால்; உயிர்க்குயிராய்த் தாவியுடனிருக்கும் இறைவரைத் தூர இருப்பவர்போல அழைத்தல் இதனின் விளங்கும் பெருமை.

நிரவும் இசை - நிரத்தல் - எடுத்தல் முதலிய இசைப்பகுதிகள் வரிசைப்பட ஒழுங்கின் வருதல்; இசை - பண் - காந்தார பஞ்சமம்.

நின்று - காவிரித் தென்கரையில் திருவையாற்றினை நோக்கி நின்று.

பாடுதலும், வல்லார் - ஓலம் என - என்று மேல்வரும் பாட்டுடன் முடிக்க; வன்றொண்டர் பாடவும்-வல்லார் மொழிந்தார்-எனப் பிறவினைமுதல்வினை கொண்டு முடிந்தது; பாடுதலும் அதுகேட்டு - என்க. அதுகேட்டு என்பது குறிப்பெச்சம்; கேட்டல் உபசாரம். 134

3882. (வி - ரை) மன்றில் நிறைந்து நடமாட வல்லார் - முன் "நிருந்தர்" (3880) என்றவிடத் துரைத்தவை பார்க்க; முன் கூறியது நாயன்மார் எண்ணிய நிலை; இங்குக் கூறியது அவ்வாறே இறைவர் அவர்க்கு அருளிய நிலை; வல்லார் - வல்லமையாவது பிறதேவர்க்கு மியலாமை.

கன்று...போல் - கன்று, தன் தாய்ப் பசுவினை அணுகுதற்கு இடையில் ஏதேனும் தடையுண்டாகில் தாயினை அழைத்துக் கூவும்; அதுகேட்டுத் தாய்ப்பசுவும் தானும் அம்மாவெனக் கதறி எதிர்கூவும்; இவ்வாறு உலகிற் காணும் இயல்புபற்றி இவ்வுவமை எழுந்தது; வினைபற்றி எழுந்த உவமம்; கன்று - நம்பிகள்; தடை - காவிரி ஆறு இடையில் பெருகுதல்; தாய்ப்பசு - இறைவர்; புனிற்று - ஈன்றணிய பசு.

ஒன்றும் உணர்வால்...கேட்க - ஓலம் - என - ஒன்றும் உணர்வால் - இறையுணர்வுடன் ஒன்றித்த உணர்வினாலே; ஒன்று முணர்வுடையார்க்கே இது கேட்கத் தக்கது என்பார் ஒன்று முணர்வாற் கேட்க என்றார். சேரமானார் நாளும் சிலம்பொலி கேட்டதுபோல; சரம் - அசரம் - என்பது சராசரம் என வந்தது; சரம் - இயங்கும் பொருள்; அசரம் - இயங்காத நிலையியற் பொருள்; இவை இரண்டும் உயிருள் பொருள்.

ஓலம் - அஞ்சல் - அபயம் என்னும் பொருளில் வரும் சொல்; இது அபயமளிப்பார் - பெறுவார் இருவர்பாலும் நிகழும்.

ஐயாற்றில் நின்று மொழிந்தார் என்று கூட்டுக.

நதியும் நெறிகாட்ட - உம்மை மொழிந்த ஒலி கேட்டபோதே நதியும் நெறி காட்டிற்று என உடனிகழ்ச்சி குறித்தது; மொழிந்தார் - அப்போது உடனே காட்ட என்க. நீங்கி - தொடர்ந்து பெருகி ஓடும்நிலை நீங்கி; நெறி - நடந்து செல்லும் வழி என்ற பொருளில் வந்தது; நெறி - அன்பு நெறியின் உயர்வினை என்ற குறிப்பும்பட நின்றது; (3880) இப்பொருளில் உம்மை இழிவு சிறப்பு.

நெறிகாட்ட மொழிந்தார் - என்று கூட்டியுரைத்தனர் முன்னுரைகாரர். நெறி காட்ட - நிற்க வழிபண்ணிப் - பரப்ப என மேல்வரும் பாட்டுடன் கூட்டி முடிக்க. 135

3883. (வி - ரை) விண்ணின் முட்டும் பெருக்கு ஆறு - "விசும்பில் எழுவது போல்" (3880) என்ற கருத்து; முன் கூறியது உயர்ந்து பெருக நீர் ஓடிய நிலை; இங்குக் கூறுவது நீர் ஓடாது தேங்கி மேலோங்க வரும்நிலை; ஆதலின் முன் எழுவது போல் என்ற ஆசிரியர் இங்கு முட்டும் - பெருக்கு என்றார்.

வெற்பென்ன என் றுவமித்தது மிக்கருத்தது.

முட்டுதல் - தொடுதல்; பெருக்காறு - பெருக்கினையுடைய ஆறு.

மேல்பால் - கீழ்பால் - கிழக்கு நோக்கி ஓடும் ஆறு இடையில் பிளவுபட்டு நடைவழி காட்டவே மேல் புறம் வரும் நீர்ப்பெருக்குச் சிறை செய்து தடுக்கப் பட்டது; கீழ்பால் நீர் வடிந்து இடையில் மணல் பரப்பிய நடைவழி செய்யப் பட்டது என்பதாம்.

பளிக்கு வெற்பு என்ன - பளிங்கு - பளிக்கு என வலிந்து நின்றது செய்யுள் விகாரம். தேக்கப்பட்டமையின் தெளிந்த நீர் என்பார் பளிங்கு வெற்பென்றார்; மேல் கீழாக இயல்பாக ஓடுகின்ற நீரினை ஓடாமல் வலிந்து நிறுத்தலின், உபமேயம் வலிந்தது குறிக்க உவமானமும் வலிந்தது தெய்வத்தமிழ் நயம்; மலை - உயர்ச்சியும் பரப்பும் குறித்தது.

நல்லவழி பண்ணிக் குளிர்ந்த மணல் பரப்ப - நீர் வடியும்போது மெல்லச் சென்று மணலைப் பரப்பி நடத்தற் கேதுவாக நல்லவழி செய்தது என்பது தற்குறிப் பேற்றம்; மணல் பரப்புதல் வழியிற் பரல் முதலியன நடப்பார்க்கு ஊறு செய்யா திருத்தற்பொருட்டு. இதனை உலகியலிலும் கண்டு கொள்க.

தொண்டர் - இருபெருந் தொண்டர்களும்.

மாரி - மழைபோன்ற கண்ணீர்த் துளிகள்.

வடிந்து—மணற்பரப்பு—என்பனவும் பாடங்கள்  136

திருவையாறு

திருச்சிற்றம்பலம்  பண் - காந்தார பஞ்சமம் - 7-ம் திருமுறை

பரவும் பரிசொன் றறியேனான் பண்டே யுன்னைப் பயிலாதேன்
இரவும் பகலு நினைந்தாலு மெய்த நினைய மாட்டேனான்
கரவி லருவி கமுகுண்ணத் தெங்கங் குலைக்கீழ்க் கருப்பாலை
அரவந் திரைக்கா விரிக்கோட்டத் தையா றுடைய வடிகளோ! (1)

கார்க்கொள் கொன்றை சடைமேலொன் றுடையாய் விடையாய் நகையினால்
மூர்க்கர் புரமூன் றெரிசெய்தாய் முன்னீ பின்னீ முதல்வனீ
வார்க்கொ ளருவி பலவாரி மணியு முத்தும் பொன்னுங்கொண்
டார்க்குந் திரைக்கா விரிக்கோட்டத் தையா றுடைய வடிகளோ! (6)

கதிர்க்கொள் பசியை யொத்தேனான் கண்டே னும்மைக் காணாதேன்
எதிர்த்து நீந்த மாட்டேனா னெம்மா னம்மா னம்மானே
விரித்து மேக மழைபொழிய வெள்ளம் பரந்து நுரைசிதறி
அதிர்க்குந் திரைக்கா விரிக்கோட்டத் தையா றுடைய வடிகளோ! (8)

கூடி யடியா ரிருந்தாலுங் குணமொன் றில்லீர் குறிப்பில்லீர்
ஊடி யிருந்து முணர்கிலே னும்மைத் தொண்ட னூரனேன்
தேடி யெங்குங் காண்கிலேன் திருவா ரூரே சிந்திப்பன்
ஆடுந் திரைக்கா விரிக்கோட்டத் தையா றுடைய அடிகளோ! (1)

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு:—ஆசிரியர் (3881) காட்டியருளியபடி.

பதிகப் பாட்டுக் குறிப்பு:—(1) இரவும்...நான் - அங்கு வந்து சார எண்ணி லேன்; இரவும் பகலும் நினைதல் - இடையறாத சிவயோக நிலை; கரவி லருவி

கழுதண்ண - எப்பொழுதும் நீர்பாயக் கழுகு வளர்தல் குறித்தது ; கழுகு - தென்னை- கரும்பு . இவை மருதக் கரு ; காவிரியின் நீர்வளத்தினை வளம்பெற நிரல்படுத்திக் கூறியது தமிழ்ச்சுவை ; அரவம் - ஓசைபட ; கோட்டத்து - கரையில் ; கோடு - கரை ; உடைய அடிகளோ ! " தொடர்வுடைய திருவடி (3878) ; ஓகாரம் - விளி ; " அழைத்து " (3881) ; தடைபட்டிருப்பதைக் குறித்துக் கூவி அழைக்கும் பொருளது ; (2) எங்கே . ஒக்கவே - எங்கும் எஞ்ஞான்றும் விடாது பற்றி உடனிருந்து ஆட்கொண்டுள்ளீர். இன்று அருளல் வேண்டும் என்பது; தலைநாள் - தொடக்கம்; கடைநாள் - இறுதி நாள் ; பாசத்தினின்றும் எடுத்துத் திருவடி சேர்த்தும் வரை ; ஒக்க - ஒன்றுபோலவே அருள் பிறழாமை ; தலைநாள் - தலைநாளில் ; கடைநாள் ஒக்க - யுகாந்தகாலம் போல ; சங்கையின்றி எழுந்தருளியிருக்கும்படி வேண்டு கின்றேன் என்று வருவித்துரைக்கவும் நின்றது. சங்கை - அச்சம் ;—(3) வழிநின் றெழுந்தேன்-ஒழிகிலேன் - வழியே செல்வேன் ; வரவுங் கில்லேன் - வாரா தொழிய வும் கில்லேன் ; பருவி...சிளிகடிவார் - பெண்கள் விளையாடல் வகை ; பருவுதல் - அரித்தல் ; பகட்டாடி - வீசி ; விச்சி - ஒரு மலை ; பருவி - தில்லைமரம் ; பகடு - யானை என்றலுமாம். ஏப்பி - வாராமல் காத்து ; வாராமல் ஓட்டி ; ஓம்பி என்பது ஏப்பி என நின்றது ; ஓம்பி - காத்து ;—(4) பழகா நின்று - பழகி ; பயனென்றும் - என்க. ஏக படம் - ஒற்றை ஆடை " ஏகாச மிட்டுசந்த " (பின் - தேவா) ; வேக படம் - விடவேகத்தையுடைய பாம்பு என்பதுமொன்று. (ந - சிவ) ; பயனறிகிலேன் என்றது வழிபட வருதற்கிடையூறு நேர்ந்தா லதனையும் நீக்ககில்லீர் என்பது குறிப்பு; குழகு - அழகு ;—(5) பிழைத்த...பணியாயே - வந்து வணங்கவும் தாராமைக்கு நாங்கள் பிழை செய்தமைதான் என்ன ? என்றது ; தீர - பிழை இருப்பினும் அது தீர ; பணித்தல் - கட்டளை செய்தல். மழைநீக்கண் - கரிய மைதீட்டிய கண் ; நீர்மை பொருந்திய என்றலுமாம் ; மலையு நிலறுங் கொள்ளாமை - உயரப் பரவி வந்த நீர்ப்பெருக்குக் குறித்தது; " விசும்பில் எழுவதுபோல் " (3880); " விண்ணின் முட்டும்" (3883) என்றற்கு அகச்சான்று ; கழை - கரும்பு ; பிரசம் - சாறு ; கழனி மண்டி - வயல்களில் நிறைந்து ; கைபேறி மேலே உயர்ந்து ; மிகுந்து ;—(6) கார்க்கோள் - கார்காலத்துப் பூக்கும் ; " கண்ணி கார்நறுங் கொன்றை " (புறம்) ; முன்நீ பின்நீ - பழமைக்குப் பழமை ; புதுமைக் கெல்லாம் புதுமை ; வார்கோள் - வார்தல் கொண்ட அருவி - காவிரியில் வந்து கூடும் சிற்றாறுகள் ;—(7) மலைக்கோள் . அலைக்கும் - முன்பாட்டுப் பார்க்க ; தீர்த்தன் - தூய்மைக் கிருப்பிடமானவன் ;—(8) பேர்ழும் - பிளந்த - குறைந்த ; வாழும் அவர்கள் - சிவ வாழ்வை விரும்புவோர் ; அங்கங்கே...வீழும் - வழிபட இடம் தரும் ;—(9) கதிர்க்கோள் - மிகுதிப்பட்டு உறுத்தும் ; குடையும் ; சுழலும்; கதிர் - நூல் சுற்றும் கதிர் ; சுவாலை கொண்டு எரிகின்ற என்றலுமாம். எதிர்த்து ..அதிர்க்கும் - காவிரி நீர்ப்பெருக்கின் அளவு காட்டிச் சரிதவரலாற்றின் அகச்சான்றும் ;—(10) கூசி-உம்மிடம் வேண்டியிட மனம் கூசி ; " விண்ணோர்க ளேத்துதற்குக் கூசும் மலர்ப்பாதம் " (திருவா - 12 திருவெம்) ; குறிப்பிலீர்-குறிப்பறிந்து அருளமாட்டீர்; தேசவேந்தன் திருமால்- நிலவேந்தர் திருமாலின் அம்சமுடையர் என்ற மரபு. " செய்யாள் பிரியா " (3879) என்ற கருத்தும், ஆண்டுரைத்தவையும் பார்க்க ; தேசம் - வானாடு ; வேந்தன் - இந்திரன் என்றலுமாம். " வேந்தன் மேய" (தொல்) ; வாசம் - மணமுடைய;—(11) கூடி அடியா ரிருந்தாலும் - குறிப்பிலீர் - சரித வரலாற்றுக் குறிப்பு ; சரித அகச் சான்று ; ஊடுதல் - அருள் தாழ்த்தலின் பொருட்டுப் பிணங்குதல் ; திருவாரூரே சிந்திப்பன் - திருவாரூர் மேல் வைத்த நம்பிகளது மனநிலையின் உறுதிப்பாட்டின்

அகச்சான்று; "பத்திமையும்" "பொன்னு மெய்ப்பொருளும்" என்ற பதிகங்கள் பார்க்க. ஏகாரம் பிரிநிலை.

தலவிசேடம் :—திருவையாறு - III - பக். கூசாஎ பார்க்க.

3884. நம்பி பாதஞ் சேரமான் பெருமாள் பணிய நாவலூர்ச்
செம்பொன் முந்நூன் மணிமார்பர் சேரர் பெருமா னெதிர்வணங்கி
உம்பர் நாத ருமக்களித்த தன்றே?" வென்ன வுடன்மகிழ்ந்து
தம்பி ரானைப் போற்றிசைத்துத் தடங்கா வேரி நடுவணைந்தார். ககஎ

(இ - ள்) நம்பி...பணிய - நம்பிகளது திருவடியைச் சேரர் பெருமான் பணிய; நாவலூர்...எதிர் வணங்கி - நாவலூரில் வந்தருளிய செம்பொன் போன்ற விளக்க முடைய முந்நூல் அணிந்த மணிமார்பினையுடைய நம்பிகளும் சேரர் பெருமானை எதிர்வணக்கம் செய்து; உம்பர் நாதர்...என்னை - இது தேவதேவர் உமக்கு அளித்த திருவருளன்றோ? என்று கூற; உடன் மகிழ்ந்து...அணைந்தார் - இருவரும் கூடி மகிழ்ந்து இறைவரைத் துதித்துப் பரவிப் பெரிய காவிரியின் நடுவில் சென்றனர்.

(வி - ரை) நம்பி...பணிய - நம்பிகளது திருப்பாடலுக்கு இறைவர் செய்த திருவருள் கண்டும், தாம் வேண்டியவாறு நம்பிகள் நம்பிரானை வேண்டித் திருவையாறு பணிய வழிகண் டுதவியது கண்டும் சேரலனார் நம்பிகளைப் பணிந்தனர்.

எதிர்வணங்கி - அடியார் என்ற முறையில் எதிர்வணக்கம் செய்து.

உம்பர்...அன்றே என்ன - திருவையாறிறைஞ்ச மனமுருகி நைகின்றது; இவ் ஆறு கடந்து பணிவோம் நாம் (3879) என்று தம்பால் சேரமானார் வேண்டிய வாறு தாம் பதிகம் பாட இறைவர் அருளியபடியால் உமக்கு அளித்தது; இஃது உம்பொருட்டு இறைவர் செய்த அருள் என்றார். ஏயர்கோன் - புரா - 18 பார்க்க.

தம்பிரானைப் போற்றிசைத்து - மணல் வழிகாட்ட அதனுட் செல்லுமுன் அதனைக் காட்டியருளிய இறைவரைப் போற்றிப் புகுந்தனர்.

தடங் காவேரி நடு - மனிதர் அணைய இயலாதபடி பெருகிய பெரிய காவேரி யின் நடுவில் ஊடறுத்து என்று இதன் அருமை குறித்தது. 137

3885. செஞ்சொற் றமிழ்நா வலர்கோனுஞ் சேரர் பிரானுந் தமபெருமான்
எஞ்ச லில்லா நிறைபாற்றி னிடையே யளித்த மணல்வழியிற்
றஞ்ச முடைய பரிசனமுந் தாமு மேறித் தலைச்சென்று
பஞ்ச நதிவா ணரைப்பணிந்து விழுந்தா ரெழுந்தார் பரவினார். ககஅ

(இ - ள்) செஞ்சொல் - பிரானும் - செம்மையுடைய சொல் வாய்ந்த தமிழ் நாவலர் பெருமானும் சேரர் நாட்டு அரசரும்; தம்பெருமான்...வழியில் - தமது இறைவனார் குறைவில்லாத நிறையப் பெருகிய ஆற்றின் இடையிலே அளித் தருளிய மணல் வழியில்; தஞ்சமுடைய...தலைச்சென்று; தமது சார்புடைய பரி சனங்களும் தாமும் ஏறிப்போய்; பஞ்சநதி...பரவினார் - திருஐயாற் றிறைவரைப் பணிந்து நிலமுற வீழ்ந்தார்கள்; எழுந்தார்கள்; துதித்தார்கள்.

(வி - ரை) செஞ்சொற்றமிழ் - செம்மை தரும் சொல்லையுடைய தமிழ்; ஆட் படும் தமிழ்.

எஞ்சலில்லா நிறை ஆறு - பரப்பினாலும் உயர்ச்சியினாலும் குறைவில்லாது நிறைந்த ஆற்றுப் பெருக்கு.

தம்பெருமான் அளித்த வழி - இறைவனருளால் கண்டு கொடுத்த வழி ; அளித்த என்ற குறிப்புமிது.

தஞ்சமுடைய - தம்முடைய சார்புடைய.

ஏறித் தலைச்சென்று - ஏறுதல் - நடந்து செல்லுதல் ; தலைச் செல்லுதல் - ஒரு சொல் ; கரை ஏறுதல்.

பஞ்சநதி - ஐயாறு - ஐந்தாறுகள் பற்றித் தலவிசேடம் பார்க்க.

விழுந்தார் - எழுந்தார் - பாடினார் - வினைமுற்றுக்கள் தனித்தனிச் செயல்கள் என்ற குறிப்புத் தருவன ; விழுந்தார் எழுந்தார் - என்பனவற்றை வினைமுற்றெச்சங்களாகக் கொண்டு விழுந்து - எழுந்து - என்றலுமாம்

பரவினார் - முன் "போற்றிசைத்து" என்றது தமக்கு வழி கண்டருளிய அருள் பற்றிய துதி ; இங்குப் பரவுதல் வழிபாடு பற்றியது. 138

3886. அங்க ணரனார் கருணையினை யாற்று தாற்றித் தினைத்திறைஞ்சித்
தங்கள் பெருமான் திருவருளாற் றாழ்ந்து மீண்டுத் தடம்பொன்னிப்
பொங்கு நதியின் முன்வந்த படியே நடுவு போந்தேறத்
துங்க வரைபோ னின்றநீர் துரந்து தொடரப் பெருகியதால். கரு௯

(இ - ள்) அங்கண்...இறைஞ்சி - அங்கண்மையுடைய இறைவரது திருவருளை நிறைவு பெறாத வகையில் அமைதிபடுத்திக்கொண்டு அதனுள் மூழ்கி வணங்கி ; தங்கள்...மீண்டு - தங்கள் பெருமானாரது திருமுன்பு வணங்கி அங்கு நின்றும் மீண்டு போந்து ; தடம்பொன்னி.. ஏற - பெரிய காவிரியாற்றின் முன்வந்தவாறே நடுவட் போந்து கரையினை ஏற ; துங்க...பெருகியது - பெரிய மலைபோல நின்ற நீர் விரைந்து தொடர்ந்து முன்போலப் பெருகி ஓடியது ; ஆல் - அசை.

(வி - ரை) அங்கண் - அங்கண்மை ; அடியார்க் கெளிமையாகிய அருணோக்கம் ; அங்கண் - அவ்விடத்து என்றலுமாம்.

ஆற்றுது ஆற்றுதலாவது - நிறைவு பெறாதாயினும் நிறைவாக்கி அமைதல்.

முன் வந்தபடியே - முன் நதியினடுவுள் மணல்வழியே போந்தவாறே வடகரையினின்றும் தென்கரைக்குப் போந்து ; நடுவு - ஆற்றினூடு கீறி.

துங்கவரை போல்நின்று - துங்கம் - உயர்வு ; முன் பளிக்கு வேற்பு - (3883) என்றார் ; இங்கு நாயன்மார்கள் சென்று வழிபட்டு வரும்வரை மேன்மேலும் வரும்நீர் சேர்ந்து தேக்கம் பெற்றமையால் துங்கவரை என்றார்.

துரந்து - வேகமாக ; சிறைபெற்ற நீர் அச்சிறை நீங்கியபோது வேகமாயோடும் இயையு குறித்தது.

தொடர - முன் தொடர்ச்சியற்று இடைவழி கண்டு நின்றநிலை நீங்கித் தொடர்ச்சி பெற்று.

பெருகியது - கூடிநின்ற நீரும் கூடிப் பெருகியது என்பது. 139

3887. ஆய செயலி னதிசயத்தைக் கண்டக் கரையி லையாறு
மேய பெருமா னருள்போற்றி வீழ்ந்து தாழ்ந்து மேல்பாற்போய்த்
தூய மதிவாழ் சடையார்தம் பதிகள் பிறவுந் தொழுதேத்திச்
சேய கோங்கர் நாடணைந்தார் திருவா ரூரர் சேரருடன் கச0

(இ - ள்) ஆய...கண்டு - முன்கூறிய அவ்வாறாகிய அருட்செயலின் அதிசயத்தினைக்கண்டு; அக்கரையில்...தாழ்ந்து - அக்கரையினின்று திருவையாற்றிற் பொருந்

திய பெருமானது திருவருளினைத் துதித்து நிலமுற வீழ்ந்து வணங்கி எழுந்து ; மேல் பாற்போய் - மேற்குத் திசையிலே சென்று; தூய...தொழுதேத்தி - தூய்மை பெற்ற பிறைவாழ்கின்ற சடையினையுடைய இறைவரது பிற பதிகள் பலவற்றையும் தொழுது துதித்துச் சென்று ; சேய...சேரருடன் - செம்மையுடைய கொங்கர்களது நாட்டினை நம்பியாரூரர் சேரனாருடன் அணைந்தனர்.

(வி - ரை) ஆய செயலின் அதிசயம் - முற்பாட்டிற் கூறியபடி பெருமலை போல் அதுவரை தடைபட்டு நின்ற நீர் இவர்கள் கடந்தேறியவுடன் வேகமாகத் தொடர்ந்து பெருகிய அதிசயம்.

அக்கரை - தென்கரை ; அக்கரையில் நின்று போற்றித் தாழ்ந்து என்க.

மேல்பாற் போய் - மேற்றிசை நோக்கிக் காவிரித் தென்கரை வழியே சென்று.

பதிகள் பிற - இவை காவிரித் தென்கரையில் மேற்கு நோக்கிச் செல்லும் பழஞ் சாலைவழியில் உள்ளவை ; திருஎறும்பியூர் திருச்சிராப்பள்ளி, திருமூக்கீச்சரம், திருக்கடம்பந்துறை முதலாயின என்பது கருதப்படும்.

சேய - கொங்கர் நாடு - சேய-செம்மை பெற்ற; செம்மையாவது முன்னர்ச் சேரர் பெருமானாரைச் செல்வழியிற் குறைவறுத்து உபசரித்தமை போலப் பெரியோரை வழிபட்டொழுகும் மேன்மை. சேய - சேய்மையில் உள்ள என்றலுமாம் ; கொங்கர் - ஒருவகைப் பழய அரச மரபு. கொங்கராண்டமையாற் கொங்குநாடு எனப்படும் ; சோழராண்டது சோழநாடு என்பதுபோல.

தொங்கு நாடு—என்பதும் பாடம். 140

3888\. கொங்கு நாடு கடந்துபோய்க் குலவு மலைநாட் டெல்லையுற
"நங்கள் பெருமான் றோழனார் நம்பி தம்பி ரான்றோழர்
அங்க ணுடனே வணையவெழுந் தருளா நின்றா" ரெனும்விருப்பால்
எங்கு மந்நாட் டுள்ளவர்க ளெல்லா மெதிர்கொண் டின்புறுவார் ;

3889\. பதிக ளெங்குந் தோரணங்கள் ; பாங்கு மெங்கும பூவனங்கள் ;
வதிக ளெங்குங் குளிர்பந்தர்; மனைக ளெங்கு மகிழ் புரைக்கார்;
நதிக ளெங்கு மலர்ப்பிறங்கல்; நாங்க ளெங்கு மோங்குவன
நிதிக ளெங்கு முழவினொலி; நிலங்க ளெங்கும பொலஞ்சுடர்ப்பூ ;

3890\. திசைக டோறும் வருமபெருமை யமைச்சர் சேனைப் பெருவெள்ளங்
குசைகொள் வாசி நிரைவெள்ளங் கும்ப யானை யணிவெள்ளம்
மிசைகொள் பண்ணும் பிடி வெள்ள மேவுஞ் சோற்று வெள்ளங்கண்
டசைவி லின்பப் பெருவெள்ளந் தமர்ந்து கொடுங்கோ ளூரணைந்தார்.

3888\. (இ - ள்) கொங்கு ..உற - கொங்கு நாட்டினைத் தாண்டிச் சென்று விளங்கும் மலைநாட்டின் எல்லையினைச் சேர ; நங்கள் ...விருப்பால் - நங்கள் சேரர் பெருமானாரது தோழனாராகிய நம்பிகளாகிய தம்பிரான் றோழனார் அவ்விடத்து ஒரு சேர அணைவதற்கு எழுந்தருளி வருகின்றார் என்னும் விருப்பத்தினாலே ; எங்கும்... இன்புறுவார் - அந்நாட்டில் எங்கெங்கும் உள்ளவர்கள் எல்லாரும் அவர்களை வரவேற்று எதிர்கொண்டு இன்பமுறுவார்களாகி ; கஎக

3889\. (இ - ள்) பதிகள்...பூவனங்கள் - பதிகளில் எங்கும் தோரணங்களும் பக்கங்களில் எங்கும் பூவனங்களாக ஆக்கிய அணிகளும் ; வதிகள்...கார் -

வழிகளில் எங்கும் குளிர்ச்சி செய்யும் பந்தர்களும், வீடுகளில் எங்கும் மேகம் போன்றெழும் அகிற்புகையும் ; நதிகள்...மலர்ப்பிறங்கல் - நதிகளில் எங்கும் வரும் மலர்க் குவியல்கள் ; ஞாங்கர்...நதிகள் - அந்நதிகளின் பக்க இடங்களில் எங்கும் அவற்றால் ஒதுக்கப்படும் மணி பொன் முதலியனவாய் ஒக்குவனவாகிய நிதியங்களும் ; எங்கும் முழவிஞெலி - எங்கும் முழவுகளின் ஒலியும் ; நிலங்கள்...பொலஞ் சுடர்ப்பூ - நில மெங்கும் ஒளியுடைய பொற்பூ மழையும் ; (ஆக இவ்வாறு அணிசெய்ய), கசஉ

3890. (இ - ள்) திசைகள்...பெருமை - இவ்வாறு எல்லாத் திசைகளிலும் வரும் பெருமைகளையும் ; அமைச்சர்...கண்டு - அமைச்சர்களும் சேனைகளும் கூடிய பெருவெள்ளத்தினையும், பிடரிமயிரினையுடைய குதிரை யணிவகுத்த வெள்ளத்தினையும், மத்தகத்தையுடைய யானையணிகளின் வெள்ளத்தினையும், மேற்கொண்டருளும் அலங்காரத்தினையுடைய பெண்யானைகளின் வெள்ளத்தினையும், விரும்பும் சோற்றுப் பெருக்கங்களாகிய வெள்ளத்தினையும் கண்டு ; அசைவில்...அணைந்தார் - கெடாத இன்பவெள்ளத்திலே முழுகிக் கொடுங்கோளூரினை அணைந்தார்கள் (நம்பிகளும் சேரனாரும்). கசங

இம் மூன்று பாட்டுக்களும் தொடர்ந்து ஒருமுடிபு கொண்டன.

3888. (வி - ரை) கோங்கு நாடு கடந்து போய் - இவர்கள் சென்ற வழி கரூர், கொடுமுடி, அவிநாசி வழியாக மலையாளத்துக்குச் செல்லும் பெருவழி என்பது கருதப்படும்.

நங்கள்...எனும் - இது மலைநாட்டு மக்கள் எண்ணியது ; நங்கள் பெருமான் - தோழர் - நமது அரசராகிய சேரமானாரது தோழர் ; "சேரமான் றோழர்" என்ற நாமத்தைப் பற்றி உரிமைப்படக் கூறியது ; (3813) தம்பிரான்றோழர் என்னும் இறைவரைப் பற்றிய உரிமையினும் இதனைமேம்படக்கொண்டனர் என்பார்இதனை முன்வைத்தார்.

உடனே - ஒருசேர.

எங்கும்...எல்லாம் - அந்நாட்டில் எங்கெங்கும் உள்ள எல்லாவகை மக்களும்.

இன்புறுவார் - முற்றெச்சம் ; இன்புறுவாராகி, எங்கும் எங்கும் அணி செய்ய என மேல்வரும் பாட்டுடன் முடிக்க. 141

3889. (வி - ரை) எங்கும் எங்கும் தோரணங்கள் முதலியனவாக இருக்க அணிசெய்ய என்பதாம்; முதலியனவாக இருக்கஅணிசெய்ய என்பது இசையெச்சம்.

இப்பாட்டினால் அம் மலைநாட்டவர் எதிர்கொண் டின்புற்ற செயல்கள் கூறப் பட்டன.

பதிகள் வழியில் உள்ள நகரங்கள் ; பாங்கர் - நகரப் பக்கங்கள் ; பூவனங் கள் - பூஞ்சோலைகளின் வகுப்புக்கள்.

வதிகள் - வழிகள் ; கார் போன்ற அகிற்புகை என்க ; கார் - கார்போன்ற ; புகையாகிய கார் என்றலுமாம்.

மலர்ப்பிறங்கல் - நதிகள் வாரி அலைத்து வரும் மலர்க்குவியல்கள் ; ஞாங்கர் - அந்நதிப் பக்க இடங்கள் ; நிதிகள் - நதிகள் வாரிவந்து கரையில் ஒதுக்கும் பொன் மணி சங்கு முதலியவை.

நிலங்கள்...பூ - பொற்பூமாரி பெய்து வரவேற்றனர். அப்பூக்கள் அங்கு நிலம் எங்கும் கிடந்தன என்பது. இவ்வாறு திருவாரூர்த் தியாகேசர் எழுச்சியில் இன்றும் நிகழக் காணலாம்.

(பாங்கரெங்கும்) புலவளங்கள்—என்பதும் பாடம். 142

3890. (வி - ரை) இப்பாட்டினால் நாட்டில் அரசாங்க அமைப்பில்வரும் வரவேற்புக்கள் கூறப்பட்டது. முன்பாட்டிற் கூறியது நாட்டில் அங்கங்கும் மக்கள் செய்தவரவேற்பு.

திசைகள் தோறும் வரும்பெருமை - கண்டு - என்க. முன்பாட்டிற் கூறியபடி மக்கள் வரவேற்புச் செய்ய திசைகள் தோறும் அவ்வாறே கண்டு என்பதாம்.

வெள்ளம் - சொற்பொருட் பின்வரு நிலையணி. அவ்வவற்றின் மிகுதிப்பாடு என்ற பொருளில் வந்தது.

அமைச்சர் சேனைப் பெருவெள்ளம் - அரசர் வரும்போது சேனைகள் அணி வகுத்து நிற்றலும், அவற்றை அவர் கண்காணித்து மேம்படுத்தலும் மரபாம். இம் மரபு இந்நாளிலும் காணப்படும். (Guard of Honour) என்பர்.

துசை - குதிரைப் பிடரி மயிர்; கடிவாளம் என்பாரு முண்டு.

வாசி - குதிரை; தும்பம் - மத்தகம் பண்ணுதல் - அலங்கரித்தல்; மிசைகோள்- மேலே உட்காரும்படி: கோள் - கொள்ளத்தக்க; " பண்ணும்பிடிமேல் " (3894); பண்ணும் - பிடிவெள்ளம் - இவைகள் உயர்ந்த பெரியோர்களை மேல் ஏற்றி எழுந் தருளுவிக்க உதவுவன; பிடிமேல் ஏற்றுதல் மரபு; ஆண்யானைகள் (களிறு) சில போது மதங்கொண்டு தீங்கு விளைத்தலும் கூடுமென்ற உட்கிடையும் கொண்டது இவ் வழக்கு.

மேவுஞ் சோற்று வெள்ளம் - அங்கங்கும் பெருஞ் சோறூட்டுதல் மலைநாட்டில் முறைப்பட இன்றும் நிகழ்வது. இவ்வெல்லா வெள்ளங்களையும் கண்டு - என்க. எண் ணும்மைகளும் முற்றும்மையும் தொக்கன.

அசைவு - குன்றுதல்; கேடு. 143

3891. கோடுங்கோ ளூரின் மதில்வாயி லணிகோ டித்து மறுகிலுடுத்
தொடுங்கோ புரங்கண் மாளிகைகள் சூளி குளிர்சா லைகடெற்றி
நெடுங்கோ நகர்க ளாடரங்கு நிரந்த மணித்தா மங்கமுகு
தொங்கோ தைப்பூந் தாமங்க ணிரைத்து வெவ்வே றலங்கரித்து. ௪௪௪

3892. நகர மாந்த ரெதிர்கொள்ள நண்ணி யெண்ணி லரங்குதொறும்
மகரக் குழைமா தர்கள்பாடி யாட மணிவீ தியிலணைவார்
சிகர நெடுமா ளிகையணையார் சென்று திருவந் தைக்களத்து
நிகரி றொண்டர் தலைக்கொண்டு புகுந்தா ருதியர் நெடுந்தகையார்.

3891. (இ - ள்) கொடுங்கோளூரில்...கோடித்து - கொடுங்கோளூரில் மதில் வாயிலினை அணிகளால் அலங்கரித்து; மறுகில்...ஆடரங்கு - வீதிகளில் விண்மீன் களை அளாவ உயர்ந்த கோபுரங்கள், மாளிகைகள், நிலா முற்றங்கள், குளிர்ந்த சாலை கள், திண்ணைகள், நீண்ட அரச நகர்கள், ஆடரங்குகள் என்ற இவற்றை; நிரந்த... வெவ்வேறலங்கரித்து - நெருங்கிய மணிமாலைகள், கமுகு, தொங்கவிட்ட பூமாலைகள் முதலியவற்றால் வரிசைப்பட வெவ்வேறு விதமாகத் தனித்தனி அலங்காரம் செய்து,

3892. (இ - ள்) நகர மாந்தர்...நண்ணி - இவ்வாறு நகரத்தின் மக்கள் எதிர்கொள்ள வந்து சேர்ந்து; எண்ணில்..அணைவார் - அளவில்லாத ஆடரங்கு கள் தோறும் மகரக்குழையையணிந்த பெண்கள் பாடிஆட, அழகிய வீதியில் அணைவ

ராகி; சிகர...அணையார்-சிகரங்களை யுடைய பெரிய (தமது) திருமாளிகையிற் சேரா ராய்; சென்று...நெடுந்தகைபார் - மேலே போய்த் திருவஞ்சைக்களத்தில் ஒப்பற்ற திருத்தொண்டராகிய நம்பிகளை உடனே கொண்டு சேரர் பெருமானார் புகுந்தனர்.

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

3891. (வி - ரை) இப்பாட்டினால் அரசரது தலைநகராகிய கொடுங்கோளூரின் அணி செய்து எதிர்கொண்ட சிறப்புக் கூறப்பட்டது.

மதில்...கோடித்து - நகர மதில்வாயிலாதலின் இதனை அணி செய்தமை வேறு கூறப்பட்டது. கோடித்தல் - அலங்கரித்தல்; வகுத்தல்.

உடுத் தோடும் - உடு - விண்மீன்; நட்சத்திரம். தோடுதல் - அவற்றின் எல்லை அணுகுதல் போல உயர்தல்.

தூஸி - நிலா மணி முற்றங்கள்; உயர்வு நவிற்சி; தேற்றி - திண்ணை. (தூஸிகை-மேல்வீட்டின் முகப்பு.)

துளிர்சாலைகள் - குளிர்ச்சி பொருந்திய சாலைபோன்ற அமைப்புக்கள்.

கோநகர்கள் - அரசரது தனி யிருப்பிடங்கள்.

ஆடரங்கு - மகளிர் ஆடும் அரங்கம்; மேடை; நடன சாலை.

விடுங்கோதைப் பூந்தாமம்- அளவும் வரிசையும்படத் தொங்கவிடும் பூமாலைகள்.

கோதை - ஒழுங்கு; ஒழுங்குபட அமைத்த மலர்மாலை என்க; மணித்தாமம் - அரதனமாலைகள்; கோதை முதலாகிய தாமங்களின் மிகுதி.

நிரைத்தல் - வரிசையாக ஒழுங்கு படுத்துதல். வெவ்வேறு - பலவகை.

அலங்கரித்து - நகரமாந்தர் எதிர்கொள்ள - என மேல்வரும் பாட்டுடன் கூட்டி முடிக்க. 144

3892. (வி - ரை) நகரமாந்தர் எதிர்கொள்ள - முன்பாட்டிற் கூறியவை அரசர் பரிசனங்களின் வேறாய் நகர மக்கள் அரச நகரினைச் செய்த அணிவகை என்பதாம்.

அரங்கு - ஆடரங்கு. "அரங்கேறிச் சேயிழையார் நடமாடும் திருவையாறே" (தேவா.)

மாதர்கள் பாடிஆட - எதிர்கொண் டுபசரிக்கும் வகை.

சிகர...அணையார் - பதியிலணைந்தவுடன் முதலில் திருக்கோயிலிற் சென்று வழிபட்டபின்னரே திருமடத்திற் கெழுந்தருளுதல் அடியார்களின் மரபு என்பதனைப் புலப்பட எடுத்துக் கூறியபடி. அணையார்-அணையாராய்; முற்றெச்சம்; அணையார் - புகுந்தார் என்க.

சென்று - வடக்கினின்றும் போந்த அரசர் முதலில் தமது தலைநகராகிய கொடுங்கோளூரையடைந்தும், அங்கு உள்ள தமது அரண்மனையிற் சேராராய் அங்கு நின்றும் ஒருநாழிகை யளவில் உள்ள தமது வழிபடு கடவுளின் திருவஞ்சைக்களத் திற்குச் சென்று.

திருவஞ்சைக்களத்துட் புகுந்தார் என்க - எழனுருபு விரிக்க. நிகரில் தொண்டர் - வன்றொண்டராகிய நம்பிகள்; திருத்தொண்டத் தொகையினை அருளி உலகை உய்விக்கும் தொண்டர் என்பது குறிப்பு.

உதியர் - சேரர். நெடுந்தகை - பெருந்தகை; அரசர். 145

3893. இறைவர் கோயின் மணிமுன்றில் வலங்கொண்டிறைஞ்சி யெதிர்புக்கு
நிறையுங் காத லுடன்வீழ்ந்து பணிந்து நேர்நின் றாரூரர்

*முறையில் விளம்புந் திருப்பதிக "முடிப்பது கங்கை" யென்றெடுத்துப்*
*பிறைகொண்முடியார் தமைப்பாடிப் பரவிப்பெருமாளுடன்றொழுதார்.*

(இ - ள்) இறைவர்...நேர்நின்று - இறைவரது திருக்கோயிலின் மணி முன்றிலினை வலமாகச் சூழ்ந்து வந்து வணங்கி எதிரே சென்று நிறையும் பெரு விருப்பினுடன் நிலமுறவிழுந்து பணிந்து எழுந்து திருமுன்பு நேர் நின்று; ஆரூரர்... எடுத்து - நம்பியாரூரர் முறைமையாகத் துதிக்கின்ற திருப்பதிகத்தினை "முடிப்பது கங்கை" என்று தொடங்கி; பிறைகொள்...தொழுதார் - பிறை சூடிய திருமுடியாராகிய இறைவரைப் பாடித் துதித்துச் சேரமான் பெருமாளுயனாருடனே தொழுதனர்.

(வி - ரை) இறைஞ்சி - இது திருமுன்றிலிற் செய்த வணக்கம். முன்றில் - முன்னிடம்; முற்றம்; இல் முன் என்பது; இலக்கணப் போலி.

எதிர்புக்கு - எதிர் - இறைவரது திருமுன்பு.

முறையில் - பதிகம் பாடி வழிபடும் முறையில்.

முடிப்பது கங்கை - பதிகத் தொடக்கம். பதிகக் குறிப்புப் பார்க்க. 146

திருவஞ்சைக்களம்

திருச்சிற்றம்பலம் பண் - தக்கேசி.கொல்லிக்கௌவாணம்

*முடிப்பது கங்கையுந் திங்களுஞ் செற்றது மூவெயில்*
*நொடிப்பது மாத்திரை நீறெழக் கணை நூறினர்*
*கடிப்பது மேறுமென் றஞ்சு வன்றிருக் கைகளாற்*
*பிடிப்பது பாம்பன்றி யில்லை யோவெம் பிரானுக்கே.* 1

*காய்சின மால்விடை மாணிக்கத்தெங் கறைக்கண்டத்*
*தீசனை யூர னெட்டோ டிரண்டும் விரும்பிய*
*வாயின சீர்ப்பகை ஞானி யப்பனடித் தொண்டன்றன்*
*ஏசின பேசுமின் றொண்டர்காளெம் பிரானையே.* 10

திருச்சிற்றம்பலம்

பதிகக்குறிப்பு :—எம்பிரானுக்கே, பிடிப்பது பாம்பன்றியில்லையோ? ஏறன்றி ஏறுவதில்லையோ? பிறையன்றிச் சூடுவதில்லையோ? பேயனே பித்தனே யென்பரால்! என்பனவாதி தன்மைகளால் ஏசின போலப் பேசிப் போற்றியது.

குறிப்பு :—இப்பதிகம் இத்தலத்துப் பாடியதென்பது ஆசிரியர் காட்டிய திருவருட் குறிப்பு; இப்பதிகத்துள் தலம் பற்றிய பெயர்க் குறிப்புக்கள் முதலிய ஒன்றும் காணப்படவில்லை; இறைவரது அருட்குறியாகிய சிவலிங்கத் திருமேனிமேல் ஒருபக்கம் முடித்தது போன்றதொரு புடைப்புக் காணப்படுகின்றது. அதனையே இங்கு "முடிப்பது கங்கையும் திங்களும்" என்றருளினர் என்பது கருதப்படும். பின் வரும் இத்தலப் பதிகத்திலும் இவ்வாறே "தலைக்குத் தலைமாலை யணிந்த தென்னே" என்ற இக்குறிப்புப் பெறப்படுதல் காண்க; இனி, "தாருந்தண் கொன்றையும் கூவிளம்" (7)என்ற திருப்பாட்டில் வரும் தண்கொன்றை என்பது, எப்போதும் பூக்கும் சிறப்புடைய இத்தல மரத்தின் குறிப்பும், இங்குச் சிறப்பாய் இத்தலத்தில் இறைவருக்குச் சாத்தப்படும் கூவிளம் (இப் பெயரே இங்கு இன்றும் வழங்குகின்றது) என்னும் வில் வாலங்காரத்தைப் பற்றிய குறிப்புமாம் என்புதும் கருதப்படும். பதிகத்துள் தலப்பெயர்க் குறிப்புப் பெறப்படாமையான் இப்பதிகத்தினைப் பொதுப் பதிகங்களுட் சேர்த்தும், ஒரோர் பதிகமே உடைய தலங்களுள் திருவஞ்சைக்களத்தினைக் கணக்கிட்டும், திருமுறை வெளியீடுகளிலும், அவை பற்றிய ஆராய்ச்சி வெளியீடு

களிலும் காணப்படுகின்றன. திருப்பதிகக் கோவையிலும் இவ்வாறே காண்கின்றோம்; பதிகத்தினையும் "முடிப்பது கங்கை" என்ற பெயரிட்டு வெளியிட்டுள்ளார்கள். ஆசிரியர் வெளிப்படக் காட்டி அருளியபடி இந்த திருவஞ்சைக்களத் திருப்பதிகமேயாம்; "அஞ்சுவன்" (1) "மலைநாடன்" (5) என்று உள்ள குறிப்புக்களும் காண்க.

பதிகப்பாட்டுக் குறிப்பு:—(1) முடிப்பது-கங்கையினையும் பிறையினையும் சுற்றி முடிந்தது போலச் சூடுவது; நொடித்தல் - அழித்தல்; "நொடித்தான்மலை." மாத்திரை - ஒருகணத்தில்; ஏழனுருபு தொக்கது; நொடிப்பது மாத்திரை - நொடியளவில் என்றலுமாம். அது - பகுதிப்பொருள் விகுதி; எறும் கடிக்குமென்று அஞ்சுவேன்; உம் - அசை; விடம் ஏறும் என்பது மொன்று; பிடிப்பது பாம்பன்றி - "பாம்பும் பிடித்தாடி" (நம்பி - தேவா - கோயில்); அஞ்சுவன் - அஞ்சைக்களம் என்ற தலப்பெயர்க் குறிப்புமாம். நீறெழ - சாம்பலாக; எம்பிரானுக்கே - பதிகத்தின் மகுடம்;—(2) தூறு - சுடலைக் களரி; குறுங்காடு; சாந்தம் - பூசும் சந்தனம்; இமவான் மகள் - உமையம்மை; தல அம்மை பெயர். 7 வது பாட்டுப் பார்க்க; கொல்லை - முல்லை நிலம்; சில்லை - இழிவு - குறும்புத்தனம்;—(3) தட்டு - விடுங்கள்; தடுமாற்றம் - துன்பம்; ஒட்டு - ஓட்டு என்பது எதுகை நோக்கி ஒட்டு என நின்றது; ஓட்டுதல் - ஒழித்தல்; உயிர் கோறலை ஒழியுங்கள் என்று உபதேசித் தருளியது; வெட்டெனப் பேசன்மின் - அன்பு மீக்கூர்ந்ததிலை;—(4) சங்கார காலச் சுடலையின் குறிப்பும் கூறியது. நரி - ஒரி - பேய் - இநட்காடு - சிரிதலை - இவை ஈமப் பொருள்கள்; ஒரி - கிழநரி; அம்மை மூத்த திருப்பதிகங்கள் பார்க்க; இநள் - சங்காரகாலம். பிரிதலைப்பேசன்மின் - முன் (3) வெட்டெனப் பேசன்மின் என்ற கருத்து: ஈமத்தில் வாழ்பவனுபினும் பிரியவொண்ணுதவன்;—(5) ஆயின... நின்றீர்கள் - வாழ்த்துரைக்கும் அடியவர்; ஆயின - தம்மால் இயன்ற; அல்லலறுக்கிறும் பேயனே பித்தனே என்பர் - துன்பம் போக்கி அருள்புரியும் அவனை வசவுரைப்பர் என்று நிந்தைத் துதிச்சுவை படக் கூறியது: நம்பிகள் வரலாற்றுக் குறிப்பும் காண்க;—(6) துறை - சிவநெறி; சைவத்துறை;—(7) கொன்றை - தலமரம்; கூவிளம் - தலச்சிறப்பு வழிபாடு குறித்தது; பேருமோராயிரம் - இகழ்ச்சி போலப் புகழ்ந்தது. "ஆயிரம் பேருடை யானு மாரூ ரமர்ந்தவம் மானே" (அரசு); இகழ்ச்சியாவது, பெயர் மாறாட்டம் செய்து வஞ்சிப்போர், பல பெயர் புனைந்து கொள்வதுபோல என்ற குறிப்பு;— (8) வரி - பாம்புகளின் உடலிற் காணும் வரிகள்; "எரியன்றி மங்கைக் கோன்றில்லையோ?" - தீயினை யாரும் கையிற் றீண்டார்; நீர் கையிற் பிடிப்பதற்கு வேறுபொருள் கிடைக்க வில்லையோ என்றது இகழ்ச்சிக் குறிப்பு; எல்லாம் வல்லவர் என்ற புகழ்ச்சியுமாம். எரி ஏந்தியது சர்வசங்காரக் குறிப்பாதலின் அதுபற்றிய இறைமைக் குறிப்புமாம்;—(9) கரியமனம் – வன்மனம்; வஞ்சனை முதலியவை நிறைந்த; காடியாடு - புளிங்காடி உண்ணும்; காடியை அடுகின்ற என்றலுமாம். கழுக்கள் - தறிபோன்றவர்; கழுக்கையர் என்றலுமாம். எரிய வசவு-தீய எச்சச்சொல். பெரிய மனம்-கருணையே உருவான திருவுள்ளம்;—(10) சீர்ப்பகை ஞானியப்பன் - பகை - வனப்பகை; முதற்குறை; "வனப்பகையப்பன்" மால்விடை திருமாலாகிய விடைஎன்க. சீர்ஞானி என்று கூட்டுக; ஏசின - ஏசினபோலப் புகழ்ந்தவை; பதிகக்குறிப்பு.

தலவிசேடம் - திருவஞ்சைக்களம்-மலைநாட்டுள்ள ஒருதனிப்பதி; சேரமன்னர் தலைநகராகிய கொடுங்கோளூரும் இப்பதியும் சேர்த்துக்கொடுங்கோளூரஞ்சைக்களம்

என்று வழங்கப்படும். தேவாரங்களிலும் பார்க்க. கொடுங்கோளூர் மகோதை என வும் வழங்கும். அது சேரமன்னரது தலைநகரம். அதில் அவர்களது அரண்மனை யுண்டு. அங்குத் தேவார வைப்புத் தலமாகிய சிவன்கோயிலும் உண்டு. அக்கோயி லில் சிவன் சந்நிதிக்குத் தென்கிழக்கில் சேரன் செங்குட்டுவன் கண்ணகிக்குக் கட்டிய கோயில் உள்ளது. கொடுங்கோளூர்ப் பகவதி என்று விளக்கமாய் அறியப் படுவது. திருவஞ்சைக்களம் சேரமன்னரது வழிபாட்டுத் தலம். சேரமான் பெருமாள்நாயனார் முடிசூடுமுன் இளவரசரா யிருந்தபோது அரண்மனையில் தங்காது இங்கு வந்து தங்கி இறைவருக்குச் சரியைத் திருத்தொண்டு செய்திருந்தனர். அந்த இடம் சேரமான் பறம்பு என்று வழங்கப்பட்டு, அரசாங்கத்தாரால் நினைவுத்தூண் நிறுவி எல்லை வகுத்துப் பாதுகாக்கப்பட்டு வருகிறது. அது திருக்கோயிலின் தெற்குக் கடற்றுறைக்குப் போகும் குலசேகரபுரம் கற்சாலையில் ½ நாழிகைபளவில் உள்ளது. பரசுராமர் தமது தாயையும் உடன்பிறந்தார்களையும் கொன்ற பழி நீங்கப் பூசித்த பதி; ஆளுடைய நம்பிகள் இங்கு முத்தி விண்ணப்பம் செய்யக், கயிலையினின்றும் இறைவர் இந்திரன் மால் பிரமன் முனிவர் முதலியவர்களுடன் அனுப்பிய வெள்ளை யானையின்மீது கயிலைக்குச் சென்று, வழியிற் பாடிய திருநொடித்தான்மலைத் தேவா ரத்தை "அஞ்சை யப்பர்க் கறிவிப்பதே" என்ற அவரது ஆணையின்படி வருண ராசனால் அறிவிக்கப்பட்ட பதி; நம்பிகள் யானையின்மீது கயிலைக்குச் செல்வது கண்ட சேரமான்பெருமாள் நாயனார் தமது குதிரையின் செவியிற் சிவமந்திரமோதி அதன்மீதிவர்ந்து ஆகாயவழி அவருடன் கயிலைக்குச் சென்ற பெருமையுடையது. இங்கு நம்பிகளும் சேரமான்பெருமாளும் ஒரே பீடத்தில் எழுந்தருளச்செய்து வழி படப் பெறுகின்றார்கள். இவர்கள் கயிலைக்குச் சென்ற யானை குதிரைகளின் திருவுரு வங்கள் கோபுரவாய்தலிற் றீட்டப்பட் டுள்ளன. சேரமான்பெருமாள் வழிபட்டு அவருக்குத் தினமும் பூசைமுடிவிற் சிலம்பொலி கேட்பித்த கூத்தப்பெருமான் இங்கு எழுந்தருளியுள்ளார்.* சுவாமி - அஞ்சைக்களத்தப்பர்; அம்மை - உமையம்மை; மரம் - கொன்றை; தீர்த்தம் - சிவகங்கை; பதிகம் - 2. சுவாமி - அம்மை - தலமரப் பெயர்கள் பதிகத்துக் காண்க.

இது செறுவண்ணூர் - கொச்சி கிளைப்பாதையில் திருச்சூர் என வழங்கும் திருச்சிவப்பேரூர் நிலையத்தினின்றும் மோட்டார்பஸ் வழி கற்சாலைவழி 22 நாழிகை யளவில் புல்லூற்று என்னும் கடற்கழித் தோணித்துறையினை அடைந்து அதி னின்றும் நாட்டுத் தோணி (வஞ்சி என வழங்குவது) மூலம் 2 நாழிகைபளவில் திரு வஞ்சைக்களம் துறையினை அடைந்து ¼ நாழிகையளவில் அடையத்தக்கது.

3894. தொழுது திளைத்துப் புறம்போந்து தோன்றப் பண்ணும் பிடிமேற்பார்
முழுது மேத்த நம்பியைமுன் பேற்றிப் பின்பு தாமேறிப்

---

*நம்பிகளும் சேரலனும் கயிலை சென்றருளிய ஆடிச் சுவாதித் திருநாள் 6, 7 நூற்றாண்டுகளாக மறந்துபட் டிருந்ததைச சில ஆண்டுகளின் முன் (1935-ல்) கோயமுத்தூர்ச் சேக்கிழார் திருக்கூட்டத்தார் தலைவர் C. K. சுப்பிர மணிய முதலியாரது பெருமுயற்சியால் கொச்சி மன்னரது அனுமதிகொண்டு மீளக் கொண்டாடச் செய்தது அவ் விழாச்சிறப்பு ஆண்டுதோறும், குருபூசை மாகேசுவர பூசை தேவார பாராயணம் புராண படனம் முதலியவற்றுடன நடைபெற்று வருகிறது. திருப்பனந்தாள் மடத்து அதிபர் காசிவாசி ஸ்ரீமத் அருணந்தி தம்பிரான் சுவாமிகள் ஆணையின்படி மூலதனங்கள் நிறுவப்பட்டுத் திருவிழாவில் சிலஆண்டுகளாக தேவாரப் பரிசும் மாகேசுவர பூசையும் அன்னதானமும் நடைபெறுகின்றன; சேர மானுர் சுந்தரர் சத்திரமும் நிறுவப்பெற்றுள்ளது.

பழுதில் மணிச்சா மரைவீசிப் பைம்பொன் மணிமா ளிகையில்வரும்
பொழுது மறுகி லிருபுடையு மிடைந்தார் வாழ்த்திப் புகல்கின்றார், கசஎ

3895. "நல்ல தோழர் நம்பெருமா டமக்கு நம்பி யிவ "ரென்பார்;
"எல்லை யில்லாத் தவமுன்பென் செய்தோ மிவரைத் தொழ "வென்பார்;
"செல்வ மினியென் பெறுவதுநஞ் சிலம்பு நாட்டுக்" கெனவுரைப்பார்;
"சொல்லுந் தரமோ பெருமாள்செய் தொழிலைப் பாரீ" ரெனத்தொழுவார்; கசஅ

3896. பூவும் பொரியும் பொற்றுகளும் பொழிந்து பணிவார் "பொருவிலிவர்
மேவும் பொன்னித் திருநாடே புவிக்குத் திலத" மெனவியப்பார்;
பாவுந் துதிக ளெம்மருங்கும் பயில வந்து மாளிகையின்
மாவுங் களிறு நெருங்குமணி வாயில் புகுந்து மருங்கிழிந்தார். கசகூ

3894. (இ - ள்) தொழுது...புறம்போந்து - இறைவரைத் தொழுது அவ் வானந்தத்தில் மூழ்கிப் புறத்திற் போந்து; தோன்றப் பண்ணும்...பொழுது - (சேரமான்பெருமாள் நாயனார்) உலா விளங்க அலங்கரித்த பிடியின்மேல் உலகமெல்லாம் போற்றும்படி நம்பிகளை முன்பு ஏற்றிப் பின்பு தாமும் ஏறிக் குற்றமில்லாத அழகிய சாமரைகளை வீசிப் பசிய பொன் அணிகள் செய்யப்பட்ட மணிமாளிகையின் கண் வரும்போது; மறுகில்...புகல்கின்றார் - வீதியில் இருபுறமும் நெருங்கிய மக்கள் இவ்வுலாக் கண்டு வாழ்த்திச் சொல்வார்களாகி, கசஎ

3895. (இ - ள்) நல்ல தோழர்...இவர் என்பார் - சிலர், நமது அரசராகிய பெருமாளுக்கு இவர் நல்ல தோழர் என்பார்கள்; எல்லை...தொழ என்பார் - இவரைக் கண்டு தொழப் பெறுதற்கு அளவில்லாத தவம் முன்பு நாம் என்ன செய்தோம்? என்பார்கள்; செல்வம்...என உரைப்பார் - நமது மலைநாட்டுக்கு இனிப் பெறவேண்டிய வேறு செல்வம் என்னவுளது? என்று சொல்வார்கள்; சொல்லும்...எனத் தொழுவார் - சொல்லுகின்ற அளவில் அடங்கும் தரமோ பெருமான் செய்யும் தொழில்? அதனைப் பாரீர் என்று தொழுவார்கள். கசஅ

3896. (இ - ள்) பூவும்...பணிவார் - மலர்களையும் பொரியினையும் பொன் துகளினையும்கலந்து வீசிப் பணிவார்கள்; பொருவில் இவர்...வியப்பார் - தமக்கு ஒப்பில்லாதஇவர் பொருந்திய காவிரித்திருநாடே உலகுக்குத்திலதம்போல விளங்குவதாம்என்று வியந்து கூறுவார்கள்; பாவும்...வந்து - இவ்வாறு பாவுகின்ற துதிகள் எப்பக்கத்திலும் மிக்கிருக்க வந்தணைந்து; மாளிகையின்...மருங்குஇழிந்தார்-திருமாளிகையின் குதிரைகளும் யானைகளும் நெருங்குகின்ற மணிவாயிலினுட் புகுந்து பக்கத்தே இறங்கினார்கள் (சேரனாரும் தோழனாரும்). கசகூ

இம்மூன்று பாட்டுக்களும் தொடர்ந்து ஒருமுடிபு கொண்டன.

3894. (வி - ரை) தோன்றப் பண்ணும் பிடி - மேலூர்ந்து உலாவருதற் பொருட்டு உரிய அமைப்புக்களுடன் (அம்பாரி) அலங்கரிக்கப்படும் பெண்யானை. "மிசைகொள் பண்ணும் பிடி" (3890) என்று முன்கூறியது காண்க. பண்ணும் - மரபு வழக்கு.

நம்பியை முன்பு ஏற்றி - முன்பு - முதலில் என்றும், முன்புறமாக விளங்க என்றும் உரைக்க நின்றது.

பின்பு - என்றதும் இவ்வாறே; பின்பு தாம் ஏறி - தாம் ஏறியது உபசரித்தற் பொருட்டு. தாமும் என்ற உம்மை தொக்கது.

மணிச்சாமரை வீசி - யானையின்மேல் பின் இருந்து துணைக் கவரி வீசி உப சரிக்கும் வழக்கு இன்றும் மலைநாட்டில் நிகழ்வது.

இவ்வாறு நம்பிகளுக்குச் சேரனார் செய்த உலா வழிபாட்டு உபசரிப்பினையே இது கேட்ட அநபாயச் சோழர் இந்நூலாசிரியர் பெருமானுக்குச் செய்தனர் என் பதை எந்தம் ஆசாரியப் பெருந்தகையார் உமாபதி சிவனார்,

" செரிமதயா னைச்சிரத்திற் பொற்கலத்தோ டெடுத்துத்
திருமுறையை யிருத்தியபின் சேவையர்கா வலரை
முறைமைபெற வேற்றியர சனுங்கூட வேறி
முறைமையினு லிணைக்கவரி துணைக்கரத்தால் வீசி
மறைமுழங்க விண்ணவர்கற் பகப்பூ மாரி
மழைபொழியத் திருவீதி வலமாக வரும்போ
திறைவர்திரு வருளைநினைந் தடலரசர் கோமான்
இதுவன்றோ நான்செய்த தவப்பயனென் றிசைந்தான் "

—திருத்தொண்டர் புராண வரலாறு - (77)

என்று விரித்தருளிய திருவாக்கினால் உணர்ந்து யருளுதல் ஈண்டு நினைவு கூர்தற் பாலது.

மாளிகையில் - மாளிகையிற் குறித்த பகுதியில்.

புகல்கின்றார் - முற்றெச்சம். புகல்கின்றாராகி.

என்பார் - உரைப்பார் - தொழுவார் - (3894) விரிப்பார் - பரவும் (3895) என மேல்வரும் பாட்டுக்களுடன் கூட்டி முடிக்க.

வாழ்த்திப் புகலும் வகை மேற்பாட்டுக்களிற் காண்க. 147

3895. (வி - ரை) நல்லதோழர்.. தமக்கு நம்பியிவர் - சேரமான்றோழர் என்ற நிலைபற்றி வாழ்த்தியது; இவர்கள், அரசர் தாம் மேற்கொண்டு செய்த உபசாரம் தோழமை முறைபற்றிச் செய்ததாம் என்று கொண்டனர். இவர் ஒரு சாரார்; பருப்பொருளுணர்ந்தார்.

எல்லை...தொழ - அவரை மறுத்து இச்செயல் அவ்வாறு தோழமையாலன்று; வழிபடும் வகை பற்றியது; நாமும் இவரைத் தொழும் பேறு அளவற்றதாகிய முற்செய் தவத்தாற் பெற்றோம் எனத் தாம் பெற்ற பேறு பற்றி ஆண்டானடிமைத் திறமாக வாழ்த்தினர் மற்றொரு சாரார். இவர் நுண்பொருளுணர்ந்தார்.

செல்வம் நாட்டுக்கு நமக்கேயன்றி நமது மலைநாட்டுக்கே இனிப் பெறும் பேறு வேறின்றென அவரை அனுவதித்து மேலும் தொடர்ந்து கூறி வாழ்த்தினர் பிறிதொரு சாரார். இதுவே முடிந்த பொருள் என அதிநுண் பொருள் உணர்ந்தாரிவர்.

செல்வமினி என்பெறுவது? வினுவகைபாற் கூறியது வேறில்லை என உறுதி பயத்தற்கு. சிலம்புநாடு - மலைநாடு; உரைத்தல் - எடுத்து விளக்குதல்.

பெருமாள் செய்தொழில் - பின்னிருந்து கவரி வீசுதல்; சொல்லும் தரமோ - நன்னெறி நான்கினுக்கும் இச்செயல் ஒக்கும் என்பது குறிப்பு. கூறவொண்ணாத பெருமையுடையது; இஃது ஆண்டவன் பணியேயாகி முடியும் நிலைக்குறிப்பு. தொழுவார் - இஃது உலகுக்கு ஞான நன்னெறி நடந்துகாட்டிய உபதேசமாதலின் தொழுதனர் என்க. 148

3896. (வி - ரை) பூவும்...பொழிந்து - மலர்களும் பொரியும் பொற்பூவும் இட்டு வணங்கும் மரபு குறித்தது. முன் " பொலஞ் சுடர்ப்பூ " (3889)

என்றதும் காண்க. ஆண்டுரைத்தவை வழியிடை எழுச்சியில் எதிர்கொண்டு நாட்டு மக்கள் .வீசி மகிழ்ந்தவை ; இங்குக் கூறியது நகரமாந்தர் வணங்குதற் பொருட்டு இட்டவை ; பொழிந்து - மிகுதி குறித்தது. பணிவார் - இவர்கள் முன்னர்த் தொழுவார் என்றவரின் வேறாய், அதன்மேலும் உரியபடி வழிபடும் ஒரு சாரார் ; தொழுதல் - அஞ்சலித்தல் ; பூத்தூவிப் பணிதல் - அதனினும் சிறந்த வழிபாடு ; பணிதல் - நிலமுற வீழ்ந்து வணங்குதல்

போருவில்...திலதம் என வியப்பர் - இவர் வருதலினால் இங்கு நமது நாடு நாடாயிற்று ; இவர் எப்பொழுதும் மேவும் நாடே உலகிற்குஅணி செய்வது என்று வியந்து துரிப்பார் மற்றுமொரு சாரார் ; ஏகாரம் பிரிநிலை. "தன்னை மறந் தாள்தன் னாமங் கெட்டாள் தலைப்பட்டாள் நங்கை தலைவன் றாளே" (தேவா) என்றபடி தம்மையும் தமது நாட்டையும் மறந்து இவரையும் இவர் வாழுநாட்டை யுமே எண்ணி ஈடுண்டநிலையிற் பெரிதும் உரைப்புப் பெற்ற இவர்கள் வேறுமொரு சாரார் ; இவ்வாறு இவர்களின் வைப்புமுறை ஆய்ந்துகொள்ளத்தக்கது. முன் (171 - 172 ; 2701 - 2707) முதலிய இடங்களில் கூறியவற்றின் கருத்துக்களையும் ஈண்டு நினைவு கூர்க.

பாவும் - பரவுகின்ற ; விரிக்கின்ற ; பரவுதல் - விரித்தல்.

மாளிகையின் வாயில் புகுந்து - இஃது யானை முதலிய வாகனங்களுடனே வந்து சாரும் மாளிகைப் பெருவாயில் ; Portico என்பர்.

மாவும் களிறும் நெருங்குதம் - இவை இருபுறமும் அணிவகுத்து நின்றவை ; இயல்பு குறித்ததென்றலுமாம். 149

3897. கழறிற் றறியுந் திருவடியுங் கலைநா வலர்தம் பெருமானும்
முழவிற்பொலியுந்திருநெடுந்தோண்முனைவர்தம்மை யுடன்கோண்டு
விழவிற் பொலியு மாளிகையில் விளங்கு சிங்கா சனத்தின்மிசை
நிழறிக் கொளிருமபூணுரை யிருத்தித் தாமு நேர்நின்று, கடுO

3898. செம்பொற் கரக வாசநீர் தேவி மார்க ளேடுத்தேந்த
அம்பொற் பாதந் தாம்விளக்கி யருளப் புகலு மாரூரர்
தம்பொற்;றனை வாங்கி"யிது தகா"தென் றருளத் தரணியில்வீழ்ந்
" தேம்பெற் றிமையாற் செய்தனவிங் கேல்லா மிசைய வேண்டு"மென,

3899. பெருமாள் வேண்டவெதிர்மறுக்க மாட்டா ரன்பின்பெருந்தகையார்
திருமா நெடுந்தோ ளுதியர்பிரான் செய்த வேல்லாங் கண்டிருந்தார் ;
அருமா னங்கொள் பூசனைக ளடைவே யெல்லா மளித்ததற்பின்
ஒருமா மதிவெண் குடைவேந்த ருடனே யமுது செய்துவந்தார்.

3897. (இ - ள்) கழறிற்றறியும்திருவடியும்...உடன்கொண்டு-கழறிற்றறிவா ராகிய அடிகளும் கலைகள் எல்லாம் வல்ல நாவலர்களின் பெருமானாராகும் முழவு போன்று விளங்கும் திருநெடுந் தோள்களையுடைய நம்பி ஆரூர் பெருமானாரை அழைத்துக்கொண்டுபோய்; விழவில்...நின்று-திருவிழாச் சிறப்புடைய திருமாளிகை யினுள் விளங்கும் சிங்காதனத்தின்மேல் திசையெங்கும் ஒளி வீசும் அணிகளை யணிந்த ஆரூரை வீற்றிருக்கச் செய்து தாமும் அவர் முன்னே நேர்நின்று, கடுO

3898. (இ - ள்) செம்பொற் கரகநீர்...விளக்கியருளப்புகலும் - செம்பொற் கரகத்தில் மணமுடைய நன்னீரினைத் தமது தேவிமார்கள் எடுத்து ஏந்தி வார்க்கத் தாம் அவரது அழகிய பொற்பாதங்களைத் தாமே விளக்கத் தொடங்கியபோது; ஆரூரர்...என்றருள - நம்பிகள் தமது பொற்பாதங்களை உள்வாங்கி "இது செய்தல் தகாது" என்றருளிச் செய்ய; "தரணியில்...வேண்டு"மெனா - நிலத்தில் வீழ்ந்து வணங்கி, "எமது அன்பின் தகுதிக்கேற்பச்செய்யும் வழிபாடுகள் எல்லாவற்றையும் இங்கு மறுக்காமல் ஏற்றுக்கொள்ள வேண்டும்" என்று கூறி, கநிக

3899. (இ - ள்) பெருமாள்...மறுக்கமாட்டார்-சேரமான் பெருமான் விண்ணப்பிக்க அதனை எதிர்மொழி கூறி மறுக்கமாட்டாராகி; அன்பில்...கண்டிருந்தார் - அன்பினாலே பெருந்தகைமை யுடையாராகிய நம்பிகள் திருப்பொருந்திய நெடிய தோள்களையுடைய சேரர்பெருமான் செய்தனவற்றை யெல்லாம் கண்டு இருந்தனர்; அருமாணம் கொள்...அளித்ததற்பின் - அரியபெரிய பூசனைகள் எல்லாவற்றையும் முறைப்படி அவர் செய்த பின்பு; ஒருமா...அமுது செய்து வந்தார் - ஒப்பற்ற முழுமதி போன்ற வெண்கொற்றக் குடையினையுடைய சேரமன்னருடனே இருந்து திருவமுது செய்து மகிழ்ந்தருளினர். கநிஉ

இம்மூன்று பாட்டுக்களும் தொடர்ந்து ஒருமுடிபு கொண்டன.

3897. (வி - ரை) திருவடி - அடிகளார் என்ற பொருளில் வந்தது; "வாகீசத் திருவடியாம்" (1374).

கலைநாவலர் தம் பெருமான்-நம்பிகள்; "தமிழ்நாதன்" (232); "உயர்நாவலர் தனிநாதன்" (223); "உறழ்ந்த கல்வி யுடையானு மொருவன் வேண்டுமென விருந்து" (நால்வர் நான்மணிமாலை) என்று பிற்காலத் தான்றோர் இதனை விரித்துச் சுவைபடப் பாராட்டியதும் காண்க.

முனைவர் - தலைவர், முன்னவர்.

உடன் கொண்டு - உடன் அழைத்துக்கொண்டு.

விழவிற் பொலியும் - திருநல்விழாச் சிறப்புச் செய்யப்பட்டு விளங்கும்; நம்பிகள் எழுந்தருளும் பேற்றினை இறைவர் எழுந்தருளும் திருவிழாவினும் பெரிது போற்றிச் சிறப்புச் செய்தனர் என்பது; (விழவு) இன்-ஐந்தனுருபு; ஒப்புப்பொருளில் வந்தது.

சிங்காசனம் - அரசு வீற்றிருக்கும் தமது சிங்காசனம்.

நிழல் திகழ் ஒளிரும் பூணர் - நம்பிகள்; மன்னவர் திருவும் தங்கள் வைதிகத் திருவும் பொங்க என்றும் விளங்குபவராதலின் இத்தன்மை பற்றிக் கூறினர்; சிங்காசனத்தில் எழுந்தருளப் பண்ணும் நிலையாதலின் ஈண்டு அதற்கு ஏற்ப மன்னவர் திருவாகிய பூண்களின் சிறப்பினைப் பற்றி எடுத்தோதினர்.

இருத்தி தாமும் நின்று - அவரை இருக்கச்செய்து தாம் எதிரில் நின்று; இருத்துதல் - இருக்கச் செய்தல்; இவர் இருக்கச் செய்தமையால் அவர் இருந்தனர் என்பது; நேர் - எதிரில். 150

3898. (வி - ரை) கரகம் - நீர் இடையறாது வார்க்க அமைந்த சிறிய மூக்குடைய பாத்திரம். இவை மலைநாட்டில் சிறக்க வழங்குதல் இந்நாளிலும் காணலாம்.

வாசநீர் - இறைவர்க்கும் பெரியோர்க்கும் பாத்தியத்துக்காக விதிப்படி உள்ள நீர், மலர்களும் வாசப்பண்டங்களும் பெய்து அமைத்தல் வேண்டும் என்பது விதி; அவ்வாறு அமைக்கப்பட்ட வாசநீர்.

எடுத்து ஏந்த - வார்க்கும் பொருட்டு ஏந்த; தேவியார் நீர்வார்க்க அடியார்களது பாதம் விளக்கும் மரபு பற்றிக் கலிக்கம்ப நாயனர் புராணத்தும், பிறண்டும் காண்க. தாம் - தாமே.

பாதம் வாங்கி - பாதங்களை உள்ளே வாங்கிக்கொண்டு. இது - இவ்வாறு செய்தல்.

பெற்றிமை - அன்பின் மேலீடு; பெருக்கு.

எல்லாம் - எல்லாவகை உபசரிப்பாகிய வழிபாட்டு வகைகளை எல்லாவற்றையும்.

எனப் - பெருமாள் வேண்ட - என்று வரும்பாட்டுடன் முடிக்க. 151

3899. (வி - ரை) எதிர் மறுத்தல் - எதிர்மொழி கூறி மறுத்தல். அன்பிற் பெருந்தகையார் - நம்பிகள்; பெருந்தகையார் ஆதலின் என்று காரணக் குறிப்புப் பட நின்றது.

திருமா நெடுந்தோள் - திருமகள் நீங்காது வாழ்ந்திருக்கும் நீண்ட தோள்கள்; செய்த - செய்த உபசரிப்புச் செயல்கள்; அகரஈற்றுப் பலவின்பால் வினையாலணையும் பெயர்.

கண்டிருந்தார் - தமக்கு உடன்பாடின்றி யிருந்தும் பெருமானை மறுக்கமாட்டாது நோக்கியிருந்தனர்.

அருமானங் தோள்பூசனைகள் - மலர்களால் அருச்சித்தல், சாந்து முதலியவை சாத்துதல், தூபதீப மேந்துதல் முதலாயினவாய் மாகேசுவர பூசைக்குரிய பூசைகள்; மானம் - பெருமை; அருமை - பிறரெவராலும் செய்தற்கருமையாய் ஆர்வரால் செய்யப்படுந் தன்மை.

அடைவே - செய்யப்படும் முறையில் முற்றும்.

உடனே அமுதுசெய்து உவந்தார் - இருவரும் ஒக்க உடனிருந் தமுது செய்தமை பற்றி முன் (3822 - 3823) உரைத்தவை பார்க்க. பூசை முறைகளை மறுக்கமாட்டாது கண்டிருந்த மட்டில் அமைந்தருளிய நம்பிகள், உடனமுது செய்த இதனை உவந்தார் என்ற குறிப்புமது; அடியாருடனிருந் தமுது செய்தல் மிக்க இன்பம் தருவதாம். சிறுத்தொண்ட நாயனர் புராண வரலாறும் காண்க. 152

3900. சேரருடனே திருவமுது செய்த பின்பு கைகோட்டி
ஆர நறுமென் கலவைமான் மதச்சாந் தாடை யணிமணிப்பூண்
ஈர விரைமென் மலர்பணிக ளினைய முதலா யினவருக்கம்
சார வெடுத்து வன்றொண்டர்ச் சாத்தி மிக்க தமக்காக்கி, கடுரு

3901. பாட லாட லின்னியங்கள் பயிறன் முதலாம் பண்ணையினின்
நீடு மினிய விநோதங்க ணெருங்கு காலந் தொறுநிகழ
மாடு விரைப்பூந் தருமணஞ்செ யாரா மங்கள் வைகுவித்துக்
கூட முனைப்பா டியர்கோவைக் கொண்டு மகிழ்ந்தார் கோதையார்.

3900. (இ - ள்) சேரருடனே...பின்பு - சேரனருடனே ஒக்க இருந்து திருவமுது செய்தபின்பு; ஆரம்...வருக்கம் - ஆரங்களும், மணமுடைய சந்தனங் கலந்த கத்தூரிச் சாந்தும், ஆடையும் அணிகின்ற மணிப்பூண்களும் குளிர்ந்த மணமுடைய மெல்லிய மலர்மாலைகளும் என்ற இவை முதலாகிய வருக்கங்களை; கைகோட்டி -

தமது கையை வளைத்து ; சார எடுத்து...சாத்தி - சாரும்படி எடுத்து வன்றொண்டர்க்குச் சாத்தியும் ; மிக்க தமக்காக்கி - எஞ்சியவற்றைத் தமக்குப் பயன் படுத்தியும், கஙரு

3901. (இ - ள்) பாடலாடல்...இசைழ - பாடலும் ஆடலும் இனிய நயங்கள் பயிலுதலும், முதலாகப் மகளிர் விளையாட்டில் நீடும் இனிய விநோத நிகழ்ச்சிகளும் செறிவுடைய காலங்கள் தோறும் நிகழ்த்தியும்; மாடு...வைகுவித்து பக்கங்களில் மணமுடைய பூக்களால்மரங்கள் மணம்வீசும் சோலைகளில் அமர்வித்தும்; கூட...கோதையார் - தம்முடனே திருமுனைப்பாடி நாட்டுத் தலைவர் பெருமானாகிய நம்பிகளையும் கொண்டு பெருமாக் கோதையார் என்னும் சேரலனார் மகிழ்ந்தருளினர். கஙச

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒருமுடிபு கொண்டன.

3900. (வி - ரை) கைகோட்டிச் சாத்தி - என இயையும் ; கோட்டுதல் - வளைத்தல் ; கலவை சாத்துதல் பணிகள் - ஆடை சாத்துதல் முதலிய பணிவிடைகள் செய்தற்கண் கையை ஏற்றவா றெல்லாம் வளைத்தல் செய்தல் ; கைகோட்டி என்பதற்கு அமுதுண்டபின் விதிப்படி கை சுத்தி செய்து என்றுரைப்பாரு முண்டு ; கைகோட்டுதல் - கைசுத்தி செய்தலுக்கு வரும் வழக்குச்சொல்.

ஆரம் - சந்தனம் ; மென்கலவை - கடுமையாகவன்றி மெல்லிதாய் இனிதாய்க் கமழும் கலவை.

அணி மணிப்பூண் - அணி - அணிகின்ற ; மணி - மணிகளைக் கொண்ட. மலர்ப்பணி - மலர்மாலை.

வருக்கம் - வகை ; அணியும் பண்டங்களின் வகைகளை வருக்க மென்பது மரபு வழக்கு.

வன்றொண்டர்ச் சாத்தி மிக்க தமதாக்கி - முதலில் நம்பிகளுக்குத் தாமேசாத்தி, எஞ்சியவற்றை அவரது திருவருட் பிரசாதமாகத் தமக்கு ஆகச் செய்து ; ஆகச் செய்தல் - அணிதல் ; சாத்தி - ஆக்கி - நிகழ - வைகுவித்து மகிழ்ந்தார் என வரும் பாட்டுடன் கூட்டி முடிக்க. உம்மைகள் விரிக்க. 153

3901. (வி - ரை) முன்பாட்டிற் கூறியவை திருமேனிப பாங்காக இன்பஞ் செய்வன ; இப்பாட்டிற் கூறுபவை மாளிகை முன்றிலிலும் புறத்து அமைந்த சோலைகளிலும் கேட்டும் கண்டும் உயிர்த்தும் உற்றும் நுகர்தல் செய்வன.

பண்ணை - மகளிர் கூட்டம் (நிகண்டு).

இனிய விநோதங்கள் - இனிமை தரும் விளையாட்டு நிகழ்ச்சிகள் ; நாடகம் வரிக்கூத்து முதலியன.

நெருங்கு காலம் - இடையறாத காலங்கள்.

மாடு...ஆராமங்கள் - ஆராமம் - பூஞ்சோலை ; இவை திருமாளிகையின் பக்கம் மலர் மரங்களை அணிபெற ஆக்கி அமைத்த சோலைகள் ; செல்வர்களது மாளிகைத் தோட்டங்களில் இவ்வமைப்பு இன்றும் காணவுள்ளது.

முனைப்பாடியர்கோ - நம்பிகள் ; கோதையார் - பெருமாக் கோதையார் என்னும் சேரமான் பெருமாள் நாயனார் ; அரசாது தகுதிக்கேற்ற நிலை குறிக்க நம்பிகளையும் கோ என்றார். கோதை - சேர அரசர் பெயர் வழக்கு மரபு.

இவையெல்லாம் திருவடி மறவா நிலையிற் காணப்பட்டன என்பது முன் உரைக்கப்பட்டது. "நங்கள்பிரா னருள்மறவா நல்விளையாட்டு" (3872). 154

வேறு

3902. சேண்டாடுந் தொழின்மகிழ்வுஞ் சிறுசோற்றுப் பெருஞ்சிறப்பும்
வண்டாடு மலர்வாவி மருவியநீர் விளையாட்டும்
தண்டாமும் மதகும்பத் தடமலைப்போர் சலமற்போர்
கண்டாரா விருப்பெய்தக் காவலனார் காதல்செய்நாள், ௧௫௫

3903. நாவலர்தம் பெருமானுந் திருவாரூர் நகராளுந்
தேவர்பிரான் கழலொருநாண் மிகநினைந்த சிந்தையராய்
"ஆவியையா ரூரானை மறக்கலுமா மே"யென்னும்
மேவியசொற் றிருப்பதிகம் பாடியே வெருவுற்றார். ௧௫௬

3902. (இ-ள்) சேண்டாடும்...பெருஞ் சிறப்பும் - பந்தாடுகின்ற தொழிலின் மகிழ்ச்சியும், சிறு சோறுண்ணும் பெரிய சிறப்பும்; வண்டாடும்...விளையாட்டும் - வண்டுகள் ஆடுதற்கிடமாகிய மலர்கள் நிறைந்த வாவிகளிற் பொருந்திய நீரின் விளையாடுதலும்; தண்டா...போர் - குறைதல் இல்லாத மும்மதங்களையும் மத்தகத்தினையும் உடைய பெருமலை போன்ற யானையின் போரும்; சலமற்போர் - கோபத்துடன் புரியும் மல்யுத்தமும்; கண்டு - (என்னும் இவற்றைக்) காணச்செய்து; ஆரா...நாள் - நிறைவு பெறாத விருப்பம் பொருந்தும்படி சேரனார் நம்பிகளுக்கு மகிழ்ச்சி செய்யும் நாளில், ௧௫௫

3903. (இ-ள்) நாவலர்தம்...சிந்தையராய் - நாவலர் பெருமானாராகிய நம்பிகளும் திருவாரூர் நகரினை ஆட்சிகொண்ட தேவர் தலைவராகிய இறைவரது திருவடிகளை ஒருநாள் மிகவும் நினைவிற்கொண்ட மனத்தினராகி; ஆவியை...வெருவுற்றார் - எனது உயிர் போன்றவரைத் திருவாரூர் இறைவரை மறக்கலுமாமே என்றகருத்தும் மகுடமு மமைந்த திருப்பதிகத்தினைப்பாடியே வெருவுற்றனர். ௧௫௬

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒருமுடிபு கொண்டன.

3902. (வி-ரை) இபபாட்டினும் முன்பாட்டினும் கூறப்பட்டவை தமது தகுதிக்கேற்பப் பெருநிலையில் முடிஅரசரால் தமது தோழனார் பொருட்டு வகுத்தவை; இவ்வாறே நம்பிகளால் வகுக்கப்பட்டவை [முன் (3873) உரைக்கப்பட்டவை] கூறப்பெற்றன; அவை குடிப்பெரியோரால் தகுதிக்கேற்ப வகுக்கப் பெற்றவை; ஒப்ப இருபாலும் தகுதிபெறக் கூறும் நிலைகளைக் கண்டுகொள்க.

சேண்டு - "நிலைச்செண்டும் பரிச்செண்டும் வீசி" (3873). ஒருவகை நீண்டு நுனி வளைந்த ஆடுகோல் என்றலுமாம்.

சிறுசோறு - சித்திரான்னம் என்பர்; இவை பல வகைப்பட்ட அன்னங்களை அமைத்துச் சிறுசிறு அளவில் வைத்து உண்ணப்படுதலின் சிறுசோறு எனப்பட்டது; சிறுசோறாயினும் பெருமகிழ்வு தருதலால் பெருஞ்சிறப்பு என்றார். சிறுசோறு - பிள்ளைகள் சமைக்கும் சோறு என்பாரு முண்டு.

நீர்விளையாட்டு - "கலாடு" என்றதனால் இது மகளிர் முதலிய பிறர் விளையாடுதலைக் குறித்தது; நீர் எறிந்து ஆடுதல், நீரினுள்ஒளிந்தாடுதல், நீந்துதல், மிதத்தல், முகம் பார்த்தல் முதலாக வரும் நீர்விளையாட்டுக்களைப் பற்றிப் பெருங்காவியங்களும் உண்டாட்டு - பொழில்விளையாட்டு நீர்விளையாட்டுக்களைக் கூறும் பகுதிகளுட் கண்டு கொள்க. வண்தாதும் - வண்மையாகிய மகரந்தமாகிய பூந்தாதுகளை வீசி விளையாடும் சிறப்புக்களும் என்றலுமாம். இது காப்பியங்களுட் கூறப்பட்டுள்ளது.

தண்டுதல் - குறைதல் ; தும்பம் - மத்தகம் ; குடும்பம் போன்றிருத்தலில் இப் பெயர் பெற்றது ; தடமலை - மும்மதம் என்ற அடைமொழியினால் யானையினைக் குறித்தது. பிறிதினியைபு நீக்கிய விசேடணம் ; தடமலைப்போர் - யானைப்போர் ; இவை சிறந்தனவாகக் கொண்டாடப்படும்.

சலமற்போர் - சலம் - கோபம் ; மல்போர் - மல்லர்கள் குத்தியும் இடித்தும் புரள்வித்தும் இவ்வாறு பொருதல்.

காதல் செய்தலாவது - மகிழ்வித்தல்; காதலைப் பெறச்செய்தல்; செய்தல்-கண்டு உள்ளத்தின் மகிழ்வு குறித்த அளவில் நின்றது. 155

3903. (வி - ரை) நாவலர் தம் பெருமான் - நம்பிகள்.

மிக நினைந்த - எப்பொழுதும் இடையறாத நினைவுடையவராயினும் ஒருநாள் மிகவும் அழுந்திய நினைவுகொண்டு என்க.

"ஆவியை ஆரூரனை மறக்கலுமாமே" என்னும் மேவிய சொல் - இது பதிகக் கருத்தும் மகுடமுமாம். பதிகமும் பதிகக் குறிப்பும் பார்க்க. ஆமே - ஏகார வினா, ஆகாது என எதிர்மறைக் குறிப்புப்பட நின்றது ; இந்த அரச போக அனுபவங்களினுள் இருத்தலால் ஆரூரனை மறக்கலாகுமோ? ஆகாது ; ஆதலின் அங்குப் புறப்பட்டுச் செல்லுதல் வேண்டும் என்பது. மேல்வரும் பாட்டுப் பார்க்க.

மேவிய - மகுடம் மேவிய ; அழுந்திய கருத்துப் பொருந்திய ; சொல் - சொல்லினாலே வெளிப்பட்ட. 156

வெருவுறுதல் - அச்சமடைதல்.

திருச்சிற்றம்பலம் பண் - தக்கேசி - 7-ம் திருமுறை

திருவாரூர் (திருவஞ்சைக்களத்தில் நினைந்து பாடியது)

பொன்னு மெய்ப்பொரு ளுந்தரு வானைப் போக முந்திரு வும்புணர்ப் பானைப்
பின்னை யென்பிழை யைப்பொறுப் பானைப் பிழையெ லாந்தவி ரப்பணிப் பானை
இன்ன தன்மைய னென்றறி வொண்ணா வெம்மா னையெளி வந்தபி ரானை
அன்னம் வைகும் வயற்பழ னத்தணி யாரு ரானை மறக்க லுமாமே. 1

ஒரு டொன்றுல கங்களுக் கெல்லா முரைக்க லாம்பொரு ளாயுடன் கூடிக்
காரு ருங்கமழ் கொன்றைநன் மாலை முடியன் காரிகை காரண மாக
ஆரு ரைமறத் தற்கரி யானை யம்மான் றன்றிருப் பேர்கொண்ட தொண்டன்
ஆரு ரன்னடி நாயுரை வல்லா ரமர லோகத் திருப்பவர் தாமே. (11)

பதிகக்குறிப்பு :—ஆசிரியர் காட்டியருளியபடி கண்டு கொள்க. (3903, 3904)

குறிப்பு :—இத்திருப்பதிகம் திருவாரூரிறைவனை நினைந்து திருவஞ்சைக்களத்தில் அருளப்பட்டதாயினும் ஆரூரைப் பற்றியதாதலின் தலமுறையில் திருவாரூர்ப் பதிகங்களுட் சேர்க்கப்பட்டது. நம்பிகளது "பத்திமையும்" என்ற திருப்பதிகமும் இவ்வாறே திருவொற்றியூரினின்று அருளப்பட்டதனையும் திருவாரூர்ப் பதிகங்களுட் சேர்த்து வகுக்கப்பட்டமை பற்றி ஆண்டுரைத்தவை பார்க்க. இஃது அரசர் செல்வத்தின் அனுபவத்தினும் உள்ளம் பிறழாது சிவயோகநிலையில் திருவாரூரினையே சிந்தித்திருக்கும் நம்பிகளது மனநிலையின் உறுதிப்பாட்டினை உணர்த்தும் பதிகம். இதனுள் நம்பிகள் திருவாரூர்ப் பெருமானை மிக நினைந்து உணர்ந்து உருகுகின்ற தன்மைகளின் உறைப்பும் அருமைப்பாடும் சிந்திக்கற்பாலன.

பதிகப்பாட்டுக் குறிப்பு—(1) பொன்னும் மெய்ப்பொருளும் - பொன்வேறு மெய்ப்பொருள் வேறென்று காட்டியது காண்க; மெய்ப்பொருள் - திருவடி ஞானம்; போகமும் திருவும் - இவை முறையே பொன்னாலும் மெய்ப்பொருளாலும் வருவன; புணர்ப்பான் - அளவும் தரமும் காலமும் அறிந்து ஊட்டுபவன். பிழை பொறுத்தலும் தவிரப்பணித்தலும் பற்றி முன் சரித வரலாறுகள் பார்க்க. பணிப்பான்-செய்வான்; இன்ன...எம்மான்-இறைவரது தன்மை; பசுபாச ஞானங்களால் தன்மை அறியப்படாதவன்; எளிவந்த-அறியொண்ணாயினும் தானே அடியார்க்கு எளிமையாக வெளிவந்து அருள்பவன்; மறக்கலுமாமே - ஏகாரவினா எதிர்மறை குறித்தது; ஆகாது என்பது :—(2) கட்டம் - துன்பம்; விட்டவேட்கை - வேட்கையினை வேட்டவாறு செல்லவிட்டதனால் விளைந்த; விரவினால் - பற்றினால்; பட்ட வார்த்தை - இதற்குமுன் பழிபட்ட வார்த்தை; படநின்ற - இனிப் பழிப்பட வருகின்ற; வாராமே - பட்டவார்த்தையின் பழிவாராமலும் படநின்ற வார்த்தையே வாராமலும் :—(3) கார் - கார்காலத்தில்; கருநிறம்; குன்ற மழை - குன்றின்மேற் பெய்யும் மழை நிலத்துக்கு மிகவுதவும்; பாரிக்கின்ற - தம்மைப்பற்றிப் பார்க்கின்ற; ஓர்த்தல் - நினைத்தல்; ஆராய்தல்; ஓர்க்கின்ற செவியாயிருப்பன் இறைவன் என்றது. "தாண்டவச் சிலம்பொலியுடன்போய்ப் புக்கழுந்தினர்" "திருச்சிலம்போசையொலியுட னேசென்று."—(4) செத்தபோதில் - சிரித்தல் - வாழ்வின் நிலையாமை பற்றி; உண்டே என்பன இவை யிருப்பனவாதலின் சாவுவருமுன் இவையுள்ள போதே என்பதனை வற்புறுத்தின. மேல் வரும் பாட்டில் (5) உண்டேல் - என்று தனித்தனி வருவனவும், உண்டே என வருவனவும் இக்கருத்தன;—(5) சிக்கனவு-முடிந்த முடிபின் உணர்வு; உறுதி; மறிவு - மறித்தல்; வஞ்சனை - உள்ளதுபோலக் காட்டி இலதாதல்; செறிவு - அடக்கம்;— (6) பொள்ளலிவ்வுடல் - பொள்ளல் - ஓட்டை; உடல் ஒன்பது பெரிய ஓட்டைகளையும் (நவத்துவாரம்) எண்ணிறந்த சிறு ஓட்டைகளையும் உடையது என்பதாம்; மெள்ள - கள்ளமாய்க் கரந்து; செயினவை-மாயங்கள்;—(7) உரியான் - உரிமையாவது எல்லாம் வல்லவனாதலும் (பொருளுடைய னாதலும்; கிளைகெலாம்...அழைக்கின்றேன் - நான் அழைத்ததும் ஆளாதலும் என்பொருட்டன்று; எல்லாக் கிளைக்குந் துணையாதற் பொருட்டு;— (9) தாமரைப்பொய்கை-கமலாலயம்; (தலத்தீர்த்தக் குறிப்பு) பொய்கை - மானிடராக்காத நீர்நிலை என்பர் நச்சினார்க்கினியர். எனவே படைப்புக் காலத்தே இறைவனாற் றோற்றுவிக்கப்பட்ட தீர்த்தம் என்பது. விடக்கு-மாமிசம்; இங்கு மாமிசபிண்டமாகிய உடம்பு என்ற பொருளில் வந்தது; வேட்கை - புலவின்ப ஆசை; இடக்கிலேன் - இரப்பவர்க்கீயேன்; கரியான் - கரி - சாட்சி - உலகிற்குச் சாட்சியாயுள்ளவன்; கரியவனாகிய திருமாலின் உரியைக்கொண்ட காத்தான்; வரியன் - சிரேஷ்டன்; புலித்தோலுடையவன்;—(10) ஒட்டி - ஒட்டுதல் - சைவசித்தாந்தத்துட் பேசப்படும் அத்துவிதக்கலப்பு; மரபு வழக்கு; பட்டி - யாவர்க்கும் பொதுமகன்; செட்டி - முருகன் பெயர்; பட்டன் - ஆசாரியன்; பகல்-சூரியன்; உச்சிப்போதன்-சூரியன் :—(11)காரிகை - பரவையம்மை; அவர் காரணமாக ஆரூரை மறத்தற் கரியானை - அரிவை செய்தியினை புறக் காரணமாகக்கொண்டு; முற்சரிதக் குறிப்புமாம். அம்மான்...தொண்டன் - திருவாரூர் இறைவரது பெயரே ஆரூரனென்று நம்பிக்குச் சூட்டி வழங்கலாயிற்று; "ஆரூரன் பேர் முடிவைத்த" (தேவா):

குறிப்பு: இப்பதிகம் மிகப் பயிலவும் பாடவும் தக்கது.

3904. திருவாரூர் தனைநினைந்து "சென்று தொழு வே"னென்று
மருவார்வத் தொண்டருடன் வழிக்கொண்டு செல்பொழுதில்
ஒருவாநண் புள்ளுருக வுடனெழுந்து கைதொழுது
பெருவான வரம்பனார் பிரிவாற்றார் பின்செல்வார், கடுஎ

3905. வன்றொண்டர் முன்னெய்தி மனமழிந்த வுணர்வினராய்
"இன்றுமது பிரிவாற்றே னென்செய்கேன் யா?"னென்ன
"ஒன்றுநீர் வருந்தாதே யுமதுபதி யின்கணிருந்
தன்றினார் முனைமுருக்கி யரசாளு" மெனமொழிந்தார். கடுஅ

3904. (இ - ள்) திருவாரூர்...என்று (நம்பிகள்) திருவாரூரினை நினைந்து கொண்டு அங்குச் சென்று தொழுவேன் என்று மேற்கொண்டு; மருவு ஆர்வம் .. பொழுதில் - பேரன்பினைப் பொருந்திய திருத்தொண்டர்களுடனே பயணப்பட்டுச் செல்ல எழுந்தபோது; பெருவானவரம்பனார் - பெரிய சேரமான் பெருமாள் நாயனார்; ஒருவா...கைதொழுது - நீங்காத நண்பினாலே மனம் உள்ளுருக அவருடனே எழுந்து கை கூப்பித் தொழுது; பிரிவாற்றார் பின் செல்வார் - பிரிவாற்றாது அவர் பின் செல்வாராகி, கடுஎ

3905. (இ - ள்) வன்றொண்டர்...உணர்வினராய் - வன்றொண்டராகிய நம்பிகளின் முன்னே சார்ந்து உள்ளமழிந்த உணர்ச்சியினை யுடையராகி; இன்று... என்ன - இன்று உமது பிரிவைத் தரிக்கலாற்றாதவனானேன்; நான் என் செய்வேன் என்று சொல்ல; ஒன்றும் நீர்...மொழிந்தார் - நீர் ஒரு சிறிதும் வருந்தாமல் உம்முடைய பதியின்கண் இருந்துகொண்டு பகைஞ்சவரைப் போரில் அழித்து அரசாள்வீராக என்று (நம்பிகள்) மொழிந்தருளினார். கடுஅ

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

3904. (வி - ரை) நினைந்து - என்றும் மறவாத நினைபபுள்ளாராயினும் அன்று மிகவும் அழுந்த நினைந்து என்றபடி. "மிக நினைந்து" (3903).

சென்று தொழுவேன் - இங்கு இருந்தபடியே தொழவல்லேனாயினும் அதனோடமையாது அங்குச் சென்று வணங்குவேன்.

மருவு ஆர்வம் - ஆர்வம் - பேரன்பு; ஆர்வம் மருவு என்க. "அன்பீனு மார்வமு மீனும் அதுவீனும், நண்பென்னு நாடாச் சிறப்பு" (குறள்); தொண்டர் - நம்பிகளுடன் போதும் அடியார்களும் பரிசனங்களும்.

வழிக்கொண்டு செல்பொழுது - பயணமாகப் புறப்படும்போது.

ஒருவா நண்பு - நீங்காத - பிரியாத - நட்பு. உள் உருக - மனம் கைய; மனம் உடைந்துருக.

வானவரம்பனார் - சேரர்களது மரபுப் பெயர். பின்செல்வார் - பின் செல்வாராகி; முற்றெச்சம். பின்செல்வார் - என்ன - என்று மேல்வரும் பாட்டுடன்முடிக்க.

3905. (வி - ரை) மனமழிந்த உணர்வு - மனம் நிலையழிந்து நின்ற உணர்ச்சி; இங்கு அன்புபற்றிய பிரிவாற்றாமையால் நிகழ்ந்தது.

ஒன்றும் - ஒரு சிறிதும்; இருந்து - எனது பின்தொடர்தல் என்பது நீங்கி இங்கே தங்கி; அன்றினார் - பகைவர்கள்; அன்றினார் முனை முருக்கி - பகைவரைப் போரில் அழித்து வென்று; இஃது உட்பகையினையும் குறிப்பினால் உணர்த்தி நின்றது.

அரசாளும் - அரசு - சிவஞான அரசு என்றதும் குறிப்பு; பின்னர் ஞான உலா அருளிச் செய்ய நின்ற வரலாற்றின் முற் குறிப்புமாம்; மேல் "அருட் சேரர்" "விசும்பாட்சி" என்பவை காண்க. 158

3906. ஆரூரர் மொழிந்தருள வதுகேட்ட வருட்சேரர்
"பாரோடு விசும்பாட்சி யெனக்குமது பாதமலர்;
தேரூரு நெடுவீதித் திருவாரூர்க் கெழுந்தருள
நேரூரு மனக்காத னீக்கவுமஞ் சுவ "னென்றார். ௧௫௯

(இ - ள்) ஆரூரர் மொழிந்தருள - நம்பியாரூரர் முன் கூறியபடி சொல்லி யருள; அதுகேட்ட அருட்சேரர் - அதனைக் கேட்ட அருளினைப் பொருந்திய சேரலனார்; பாரோடு...பாதமலர் - எனக்கு இந்நிலவுலகத்தினோடு விண்ணுலகத் தின் அரசாட்சியுமாவது தேவரீருடைய திருவடிமலர்களேயாம்; தேரூரும்... என்றார் - ஆனால் தேர் ஓடும் நெடிய திரு வீதியினை யுடைய திருவாரூருக்குத் தேவ ரீர் எழுந்தருளுதற்குக் கொண்டெழுந்த நேராகிய மனக்காதலினை விலக்குதற்கும் யான் அஞ்சுவேன் என்றார்.

(வி - ரை) அருட்சேரர் - அருள் - இறைவரது திருவருள் பெற்ற.

பாரோடு...பாதமலர் - தேவரீர் "அரசாளும்" என்று ஆணையிட்டருளினீர்; ஆனால் நான் உட்கொண்ட குறிக்கோளாகிய அரசாட்சியாவது உமது திருவடித் தொண்டு பூண்டொழுகுவதேயாம் என்பது; பாரோடு விசும்பு ஆட்சி - இவ்வுலக அரசே யன்றித் தேவரீரது ஆணையின் குறிப்பாற் பெறப்பட்ட உட்பகை வென்று ஆளும் ஞான அரசும் என்றவாறு.

தேரூரும் நெடுவீதி - "ஆழித்தேர் வித்தகனை நான்கண்ட தாரூரே" (தேவா) என்றபடி வீதிவிடங்கப்பெருமான் திருத்தேரில் எழுந்தருளித் திருவிழாக் கொண் டருளும் சிறப்புக் குறித்தது. அதனை ஆளுடைய அரசுகள் வணங்கவும், அதன் சிறப்பினை அரசுகள் பாடக்கேட்ட ஆளுடைய பிள்ளையார் சென்று வணங்கவும் உள்ள பெருமை குறிக்க இச்சிறப்புப் பற்றிக் கூறினார்; அரசாதலின் மனு அரசன் மகனைக் கீழே கிடத்தித் தேரூர்ந்து நீதிசெலுத்திய அரசநீதி மேன்மை குறிக்கக் கூறியதுமாம்.

நேரூரும் - நேர்மையால் ஊரப்பட்டு எழுந்த. நேர்மையாவது - சிவனடி மற வாது செய்யும் வழிபாடு.

நீக்கவும் அஞ்சுவன் - அடியேன் பிரியாது உமது பாதமலர்களைச் சேவித்துட னிருத்தற்கு வழி யிரண்டேயாம்; ஒன்று உம்முடன் அடியேன் சென்று உடனி ருப்பது; அஃது "உமது பதியின்கண் இருந்து" (3905)என்றதேவரீரது ஆணையால் விலக்கப்பட்டது; தேவரீரை இங்கே தங்கியருளும்படி வேண்டுவது மற்றொன்று; உமது நேரூரும் மனக் காதலை நீக்க அஞ்சுவேனாதலின் அதுவும் கூடாதாயிற்று; என்பார் நீக்கவும் அஞ்சுவன் என்றார். உம்மை, உடன் செல்ல அஞ்சுதலோடு நீக்கவும் என இறந்தது தழுவியது. 159

3906. மன்னவனா ரதுமொழிய, வன்றொண்ட ரெதிர்மொழிவார்
"என்னுயிருக் கின்னுயிரா மெழிலாரூர்ப் பெருமானை
வன்னெஞ்சக் கள்வனேன் மறந்திரேன்; மதியணிந்தார்
இன்னருளா லரசளிப்பீர் நீரிருப்பீ" ரெனவிறைஞ்ச, ௧௬0

3907. மற்றவரும் பணிந்திசைந்தே, மந்திரிக ளமையழைத்துப்
"பொற்புநிறை தொன்னகரி லிற்றைக்கு முன்புகுந்த
நற்பெரும்பண் டாரநா ளுவருக்க மானவெலாம்
பற்பலவா ளாளின்மிசை யேற்றிவரப் பண்ணு"மென, கசுக

3908. ஆங்கவரு மன்றுவரை யாயமா கியதனங்கள்
ஓங்கியபொன் னவமணிக ளொளிர்மணிப்பூண் டுகில்வருக்கம்
ஞாங்கர்நிறை விரையுறுப்பு வருக்கமுத னலஞ்சிறப்பத்
தாங்குபொதி வினைஞர்மேற் றலமலியக் கொண்டணைந்தார். கசுஉ

3906. (இ - ள்) மன்னவனார் அது மொழிய - சேர அரசனார் முன் கூறிய அவ்வாறு சொல்ல; வன்றொண்டர் எதிர் மொழிவார் - நம்பிகள் அவருக்கு மறு மொழி சொல்வாராகி; என்னுயிருக்கு ..என இறைஞ்ச - எனது உயிரினுக்கும் இனிய உயிராகிய அழகிய திருவாரூர் இறைவரை வலிய நெஞ்சுடைய கள்வனாகிய நான் மறந்து இங்குத் தங்கி இருக்கமாட்டேன்; நிலவினைச் சூடிய இறைவரது இன்னருளின் துணையாலே அரசு அளிப்பீர்! நீர் இங்கு இருப்பீராக! என்று வணங்க;

3908. (இ - ள்) மற்றவரும் பணிந்து இசைந்தே - அது கேட்டபின் மற்று அவ்வரசரும் வணங்கி அதற்கு இசைந்தே; மந்திரிகள் தமை அழைத்து - மந்திரிகளை அழைத்து; பொற்பு நிறை......பண்ணும் என - அழகு நிறைந்த பழைய இந்நகரில் இன்றைய நாளுக்கு முன்னே சேர்ந்த நல்ல பெரிய நிதியம் பல வருக்கங்களாக உள்ளவற்றை யெல்லாம் பற்பல வகையாகும் ஆள்களின் மேல் ஏற்றிக் கொண்டுவரச் செய்யுங்கள் என்று ஆணையிட, கசுக

3909. (இ - ள்) ஆங்கு அவரும் - அவ்வாறே அம்மந்திரிகளும்; அன்று வரை...வருக்கம் முதல் - அன்று வரையில் ஆயமாகக் கூடிய நிதியங்களும், விலையுயர்ந்த பொன்னும், நவமணிகளும், ஒளிவீசும் மணிகள் கொண்ட பூண்களும், ஆடைவகைகளும் பக்கங்களிலே செறிந்த வாசனைத் திரவியங்களின் வகைகளும் இவை முதலாகியவற்றை; நலஞ்சிறப்ப...அணைந்தார் - நன்மையாற் சிறந்து விளங்கும்படி தாங்கும் பொதிகளாக்கி அதற்குரிய ஆள்களின்மேல் ஏற்றி நிலநிறையக் கொண்டுவந்து அணைந்தார்கள்.

இம் மூன்று பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

3907. (வி - ரை) மன்னவனார் - சேரலனார்; அது - முன்பாட்டிற் கூறிய அந்நிலையினை.

எதிர்மொழிவார் - மறுமொழி கூறுவாராகி; முற்றெச்சம். மொழிவார் - என இறைஞ்ச என்று கூட்டி முடிக்க. எதிர் என்றது முன் சொன்னதனையே பின்னும் அனுவதித்து விளக்கி என்ற குறிப்புடன் நின்றது.

என்னுயிருக் கின்னுயிராம் - உயிர்க்குயிராய் இயக்கும் இறைவர்; பொதுவகையால் எல்லாவுயிர்க்கும் இறைவர் உயிர்க்குயிராய் நின்றியக்கும் முதல்வராவாராயினும், தமக்குச் சிறப்பாய் உரியவர் என்பார் என் (உயிர்) என்றும், இன் (உயிர்) என்றும் அடைமொழிகள் புணர்த்தி ஓதினார்; "உயிர்க்குயிரா யங்கங்கே நின்றான்" (தேவா); "அம் முதல்வன் யாங்கணும் வியாபகமாய் நிற்பினும் இவ்விரண்டிடத்து மாத்திரையே (பத்தாது திருவேடம் - சிவாலயம்) தயிரின் நெய்போல விளங்கி நிலைபெற்று, அல் லுழி யெல்லாம் பாலினெய்போல வெளிப்படாது நிற்றலான்" (போதம் 12 - 3ம்

அதி. சிற்றுரை) ; என்பன முதலாக வரும் பிரமாணங்கள் காண்க. இனி, என்னுயிருக்கு என்றதில் குவ்வுருபு இன் என்னும் ஐந்தனுருபுப் பொருளில் வந்ததெனக் கொண்டு உயிரினும் இனிய உயிர் என்று உரைத்தலும் ஆம். "என்னிலும் மினியா ளொருவன் னுளன்...என்னுளே நிற்குமின்னம்ப ரீசனே" (தேவா-அரசுகள்). இது நம்பிகள் திருவாரூர்ப் பெருமான்பாற் கொண்ட செறிந்த அன்பு நிலை குறித்தது.

வன்னெஞ்சக் கள்வனேன் மறந்து இரேன் - கள்வனுகி - என்க. மறந்திருப்பின் கள்வனுவேன் என்பது. மறந்து இருந்தலாவது நேரிற்கண்டு தொழாது இங்கு இருத்தல் என்ற பொருள் தந்து நின்றது.

இன் அருளால் அரசளிப்பீர் - இறைவர் அரசளிக்கும்படி உமக்குக் கொடுத்தருளிய வரங்களின் துணையால் ; "அரசு புரக்கு மருளுண்டேல் - அறிவேன்" என்று விண்ணப்பஞ் செய்ய (3760), " மேவுமுரிமை யரசளித்தே-வழிபாடும் காவன் மன்னர்க் குரியனவு மெல்லாங் கைவந் துறப்பெற்றார்" (3761) என்ற வரலாற்றுக் குறிப்புக்களும்பட நின்றது. அருளால் மேற்கொண்ட அரசாட்சியினை விடாது செலுத்துவது கடன் என்றவாறு. இறைவர் உமக்கு அளித்த முத்துச் சிவிகையில் எழுந்தருளுதலன்றி என்னுடன் நடந்து வரலாகாதென்று ஆளுடைய பிள்ளையார்பால் மொழிந்த அரசுகள் கூற்று இங்கு நினைவு கூர்தற்பாலது ; " நாய னருமக் களித்தவிந் நலங்கிள ரொளிமுத்தின், றூய யானத்தின் மிசையெழுந் தருளுவீ ரென்றலும் " (2426).

அரசளிப்பீர் - இனியும் அவ்வாறே அரசு செய்வீராய் இருப்பீர் என்றதும் குறிப்பு.

இருப்பீர் - என்னுடன் பின்றொடாது இங்கே தங்கியிருப்பீராக.

என இறைஞ்ச - இறைஞ்சிக் கூறுதல் பின்னும் மறுமைப் பொருட்டு. 160

3908. (வி - ரை) பணிந்து இசைந்தே-பணிதல் - தமக்குடன்பா டன்றாயினும் அவர் பணி மறுத்தற்கஞ்சி உடன்படுதல் குறித்தது.

பண்டாரம் - நிதியறையில் சேமத்தில் உள்ள நிதிகள் ; நாறு வருக்கம் - பொன்-மணி-பூண் - துகில் முதலிய பலவகைகள்; மேற்பாட்டில் விரித்தல் காண்க. நல் பெரும்-என்றவற்றுள் நன்மையாவது அறத்தாற்றி னீட்டப்பட்ட தன்மையினையும், பெருமை - சிறப்பாலும் விலைபாலும் உள்ள மேம்பாட்டினையும் குறித்தன.

எலாம் - எல்லாவற்றையும் ; முற்றும்மைதொக்கது ; இற்றைக்கு முன்புகுந்த - இந்நாள் வரை சேர்ந்த ; கூடிய ; பாணபத்திரர்க்குக் கொடுத்தபின் இதுவரை என்பதாம் ; ஆன - மேலாயின.

பற்பலவாம் ஆளின் மிசை - பல என்ற அஃறிணைப் பலவறிசொல் ஆட்களின் வகையினைக் குறித்தது. அவை பற்பலவாவன - அவற்றை என்று பிரித்துரைத்தலுமாம்.

ஆளின் மிசை ஏற்றிவரப் பண்ணும் - பல ஆட்கள் சுமக்குநிலை மிகுதியும் தொகையும் குறித்தது.

என - என்று ஆணையிட ; என-அவரும் கொண்டணைந்தார் என வரும் பாட்டுடன் முடிக்க. 161

3909. (வி - ரை) அன்றுவரை ஆயம் ஆகிய - இற்றைக்கு முன்புகுந்த என்ற ஆணையின்படியே யுள்ள வகையிலுங் கூடிய ; ஆயம் . அரசர் கொள்ளும் பகுதிப்பொருள் முதலாயின ; ஆயம் - கூட்டம் என்றலுமாம்.

ஞாங்கர் - அவ்விடத்தில் ; பக்கத்தே; விரை - வாசனைப் பண்டங்கள் ; நிறை - செறிவு குறித்தது. கத்தூரி, பச்சைக் கற்பூரம், குங்குமப்பூ முதலியன.

நலம் சிறப்ப - முன்னமே உள்ள நன்மை மேலும் சிறந்து விளங்க ; இறைவர் இவற்றைக் கொண்டு, பின் தம்மதாக ஆக்கிக்கொடுக்கும் நலம், பின் வரலாற்றுக் குறிப்புமாம்.

போதிதாங்கு வினைஞர் - என்க ; தலமலிய - நிலப்பரப்பு நிரம்ப. 162

3910. மற்றவற்றின் பரப்பெல்லாம் வன்றொண்டர் பரிசனத்தின்
முற்படவே செலவிட்டு, முனைப்பாடித் திருநாடர்,
பொற்பதங்கள் பணிந்தவரைத் தொழுதெடுத்துப் புனையலங்கல்
வெற்புயர்தோ ளுறத்தழுவி விடையளித்தார் வன்றொண்டர். கசுரு

(இ - ள்) மற்றவற்றின்...செலவிட்டு-மற்று அந்நிதியங்களின் பரவிய பொதிகளனைத்தையும் வன்றொண்டர் தமது பரிசனங்களின் மூலம் முன்னே செல்லும்படி ஏவி விடுத்து ; பொற்பதங்கள் பணிந்தவரை - தமது பொன்னார் திருவடிகளை வணங்கிய சேரமானாரை; முனைப்பாடி திருநாடர் வன்றொண்டர்-முனைப்பாடித்திரு நாடராகிய வன்றொண்டர் ; தொழுது எடுத்து...விடையளித்தார் - தாமும் எதிர்வணக்கஞ் செய்து முகந்தெடுத்து அணிந்த மாலையினையுடைய மலைபோன் றுயர்ந்த தோள்களைப் பொருந்தத் தழுவிக்கொண்டபின் விடைதந் தருளினர்.

(வி - ரை) மற்று அவற்றின் பரப்பு எல்லாம் - அவற்றின் - தாம் ஏவியவாறே மந்திரிகள் கொணர்ந்த அந்த நிதிகளின் என முன்னறிசுட்டு. மற்று என்பதும் அப்பொருட்டு.

வன்றொண்டர் தமது பரிசனம் என ஆறனுருபு ஒன்றன் கூட்டம் பிறிதின் கிழமைப் பொருளது.

செலவிட்டு - செல்லும்படி அமைவு செய்து ஏவி விடுத்து.

செலவிட்டுப் பணிந்தவரைத் - திருநாடர் - வன்றொண்டர் - எடுத்துத் தழுவி - விடையளித்தார் - என்று கூட்டி முடிக்க.

நாடராகிய வன்றொண்டர் என்க.

வன்றொண்டர் - வன்றொண்டர் - வன்றொண்டரை வன்றொண்டராகிய சிறப்புப் பற்றியே பெருமானும் நினைந்து வழிவிடுத்தனர் என்பார் இருமுறை அப்பெயராலே கூறினார் ; பின்னர்த் திருமுருகன் பூண்டியினில் இறைவர் வலிந்தாட்கொள்ள நிற்பதும், இவரும் வலிந்து தோழமைத் திறத்தாற் பாடியடையவும் வரும் சரித நிகழ்வுக் குறிப்பும்பட நின்றது.

புனையலங்கல் வெற்புயர் தோள் உற - சேரனாரது வெற்புயர் தோள்கள். தமது அவ்வாறே வெற்புயர் தோள்களை பொருந்த உறும்படி என இருவழியும் கொள்க. "செவ்வரைபோற் புயமிரண்டுஞ் செறியப் புல்லி" (701) என்றதும், ஆண்டுரைத்தவையும் நினைவு கூர்க.

விடையளித்தார் வன்றொண்டர்-அவர் தாமே விடைபெற்று நிற்கலாற்றாது பின் தொடர்ந்து வருதலின், அவரை நிறுத்துதல் வேண்டித் தாமாகவே அவருக்கு விடை தந்து நிறுத்தினர் என்பார் அவர் விடைகொண்டார் என்னாது வன்றொண்டர் விடை அளித்தார் என்றார். மேலும் "விடையருளி" என்பது காண்க. 163

3911. ஆரூர ரவர்தமக்கு விடையருளி யங்ககன்று
காரூரு மலைநாடு கடந்தருளிக் கற்சுரமும்
நீரூருங் கான்யாறு நெடுங்கானும் பலகழியச்
சீரூருந் திருமுருகன் பூண்டிவழிச் செல்கின்றார், கசுச

3912. திருமுருகன் பூண்டியயற் செல்கின்ற போழ்தின்கட்
பொருவிடையார் நம்பிக்குத் தாமேபோன் கொடுப்பதலால்
ஒருவர்கொடுப் பக்கொள்ள வொண்ணுமைக் கதுவாங்கிப்
பெருகருளாற் றாங்கொடுக்கப் பெறுவதற்கோ வதுவறியோம்; கசுரு

3913. வென்றிமிகு பூதங்கள் வேடர்வடி வாய்ச்சென்று
வன்றொண்டர் பண்டாரங் கவரவருள் வைத்தருள,
அன்றினர் புரமெரித்தா ரருளால்வேட் டுவப்படையாய்ச்
சென்றவர்தாம் வரும்வழியி லிருபாலுஞ் செயிர்த்தெழுந்து, கசுசு

3914. வில்வாங்கி யலகம்பு விசைநாணிற் சந்தித்துக்
"கோல்வோமிங் கிட்டுப்போ" மெனக்கோபத் தாற்குத்தி
எல்லையில்பண் டாரமெலாங் கவர்ந்துகொள, விரிந்தோடி
அல்லலுடன் பறியுண்டா ராரூரர் மருங்கணைந்தார். கசுஎ

3911. (இ - ள்) ஆரூரர்...கடந்தருளி - நம்பிகள் அவருக்கு விடைதருளி அங்ககரினின்றும் நீங்கிச் சென்று மேகங்கள் தவழும் மலைகளையுடைய அந்நாட்டினைக் கடந்தருளி; கற்சுரமும்...கழிய - கற்சுரங்களும் நீர் பெருகுகின்ற காட்டாறுகளும் நீண்ட கானங்களும் பலகழியச் சென்று; சீரூரும்...செல்கின்றார் - சிறப்புப் பொருந்திய திருமுருகன்பூண்டியிற் சேரும் வழியிலே செல்கின்றாராய்,

3912. (இ - ள்) திருமுருகன்பூண்டி ..போழ்தின்கண் - திருமுருகன் பூண்டியின் பக்கத்திலே செல்கின்ற போதிலே; பொருவிடையார்...கொடுப்பதலால் - பொருகின்ற விடையினையுடைய இறைவர் நம்பிகளுக்குத் தாமே பொன்கொடுத்தருளுவதல்லாமல்; ஒருவர்...ஒண்ணுமைக்கு - வேறு எவரொருவரும் கொடுப்ப அவர் கொள்ள ஒண்ணாத என்ற தன்மையினைக் காட்டுதற்கு; அது...பெறுவதற்கோ - அதனைத் தாம் வாங்கிக் கொண்டு பெருகும் திருவருளினால்தாமே கொடுப்பதற்கு அவர் பெறுவதற்குமாக வரும் நிலைகூடுதற்காகவோ; அது அறியோம் - அதனை நாம் அறியமாட்டோம். கசுரு

3913. (இ - ள்) வென்றிமிகு...வைத்தருள - வெற்றி மிகுந்த சிவபூதகணங்கள் - வேடர்களின் வடிவு தாங்கிச் சென்று வன்றொண்டப் பெருமான் கொணரும் நிதியங்களைக் கவர்ந்து கொள்ளும்படி திருவருள் வைத்தருளவே; அன்றினர்... எழுந்து - பகைத்தெழுந்தவர்களுடைய திரிபுரங்களையும் எரித்த இறைவரது திருவருளினாலே (அப்பூதங்கள்) வேட்டுவப் படையாக உருவெடுத்துச் சென்று அப்பெருமான் வரும் வழியிலே இரண்டு பக்கமும் கோபித்து எழுந்து, கசுசு

3914. (இ - ள்) வில்வாங்கி...குத்தி - வில்லை வளைத்து அலகுடைய அம்புகளை விசையிற் செலுத்தும் நாணிலே பூட்டி "இப் பொதிகளை இங்கு இட்டுச் செல்லுங்கள்; இல்லையேல் உங்களைக் கொல்வோம்" என்று கோபமுடன் குத்தி;



கோயில் முனபார்வை



சுவாமி கோயில் விமானம்



வேடர் கோலம் - சிவகணம்



நம்பி ஆரூரர்

எல்லையில்...கொள - அளவில்லாத நிதியங்களை யெல்லாம் கவர்ந்து கொள்ள ; இரிந்து...மருங்கணைந்தார் - பறிக்கப்பட்டவர்களாகிய சுமையாட்கள் சிதறி ஓடி நம்பிகள் பக்கம் சேர்ந்தார்கள். கஅ௲எ

இந் நான்கு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டுரைக்க நின்றன.

3911. (வி - ரை) அந்த அநகர்ப - கொடுங்கோளூர் என்றும் அந் நகரினின்றும் நீங்கி ; நீக்கப்பொருளில் வரும் ஐந்தனுருபு தொக்கது.

மலை நாடு கடந்தருளி - நகர் நீங்கிச் சென்று நாட்டினையும் கடந்து.

கற்சுரமும் ..கழிய - கற்சுரம் - பருக்கைக்கற்களின் மிகுதிகொண்டு சிறுதூறுகளையுடைய சிறு கானங்கள்; நீர் ஊறும் கான்யாறு-மழைக்காலத்தில் மிக்க நீர்பெருகும் காட்டாறுகள் ; நெடுங்கான் - நீண்ட மரங்கள் அடர்ந்த காடுகள் ; பலகழிய - இவ்வாறுள்ள பல இடங்கள் கழிந்து செல்ல ; மலை நாட்டெல்லைக்கும் கொங்கு நாட்டுக்கு மிடையில் கோழிக்கூடு என்னும் கள்ளிக்கோட்டையினின்று மேற்றிசை வழியாய் வரும் இப் பழம்பெரும் வழியிடை இந் நிலப்பகுதி இவ்வாறே இன்றும் காணவுள்ளது ; கற்சுரம் என்றது மலைச்சுர நோய் உள்ள நிலம் என்ற குறிப்பும் தந்து நின்றது. சுரம் - பாலை நிலம்

பலகழிய - இவைகள் மனிதர் கடந்து செல்லுதல் கடினமாதலும், நோய்வரும் நிலங்களாதலும், புலி யானை முதலிய துட்ட மிருகங்கள் வாழுமிடங்களாதலும், பிறவும் கருதி இவற்றை நம்பிகள் கடந்து சென்றார் என்று கூற மனமின்றி இவை (தாமே) கழிய என்றார். வழிச் செல்லுங்காலும் நம்பிகளது திருமனம் இவற்றி னன்றி இறைவன்பால் நின்ற தாதலின் இவ் விடங்கள் அவரது புலன் அனுபவத் துள் வாராது தாமே கழிந்தன என்றதும் பொருள்.

சீருரும் - தலவிசேடம் பார்க்க : இனி இங்கு இறைவர் தங்கருள வுள்ள அருட் சிறப்பும் பொருட்சிறப்புமாகிய வரலாற்று முற்குறிப்புமாம் ; ஊர்தல் - மிகுதல் ; மேற்கொள்ளுதல்.

திருமுருகன் பூண்டி வழிச் செல்கின்றார் - அப்பதிக்குச் செல்லும் வழியிலே போவாராகி ; செல்கின்றார் - செல்கின்றாராகி ; முற்றெச்சம். செல்கின்றார் - செல்கின்ற போழ்தின்கண் என வரும் பாட்டுடன் முடிக்க. (ஆரூரர்) செல்கின்றார் என வினைப் பெயரெனினுமாம்.

செலவணைந்தார்—சென்றணைந்தார்—என்பனவும் பாடங்கள். 164

3912. (வி - ரை) அயல் செல்கின்ற - பக்கத்தில் அணைகின்ற.

பொரு விடையார் - வாங்கித் (மீளத்) - தாம் கொடுப்பதற்கோ - என்க.

மீள - என்பது சொல்லெச்சம்.

தாமே...பெறுவதற்கோ - நம்பிகளுக்கு வேண்டும்போதெல்லாம் தாமே பொன் கொடுத்தருளியுள்ளார் ; மீளவும் வேண்டின் தரவுள்ளார். திருப்புகலூர்த் திருப்பாச்சி லாச்சிராமம், திருமுதுகுன்றம் என்ற தலங்களின் முன் நிகழ்ந்தவை காண்க ; ஆதலின் பிறர்பாற் பொன் பெறுதல் வேண்டப்படுவதன்று என்றதைக் காட்டும்பொருட்டு அப்பொருளைத் தாம் வாங்கித் தமதாக்கி மீளத் தாமே கொடுக்க - அவர் பெறுவதற்காகவோ - திருவுள்ளங் கொண்டருளியது ; ஓகாரம் வினா ஐயப்பாடு குறித்தது. இறைவரருட் செயல்களை யாவர் அறிய வல்லார் என்றபடி ; "இவர் தன்மை யறிவாரார் ?" "ஆட்பாலவர்க் கருளும் வண்ணமு மாதி மாண்பும் கேட்டான்புகி லளவில்லை கிளக்க வேண்டா" என்பன முதலிய திருவாக்குக்கள் காண்க ; ஆயின் சேரமானாரது பொருள்களைப் பிறர் பொருளாக இறைவர் திரு

வுள்ளங் கொண்டருளினரோ? எனின், அற்றன்று ; " அவர்பால் பத்திரனுருக்குத் திருமுக மருளியமையால் அது திருவுள்ளக் கிடையன்று ; பின்னை என்னைபோ? எனின் பொருள் தருதல் என்ற தொழில் தமதாகவே நிகழ்தல் வேண்டுமென்பது குறிப்பாம் போலும் ! ஒன்றுமைக்கு - ஒன்றுமையினைக் காட்டுதற்கு ; ஒன்றுமை என்பதன் மரூஉ. அதுவாங்கி - அப் பொன்னினைத் தாம் கைப்பற்றி.

அது அறியோம் - இஃது ஆசிரியர் வாக்கு. பின்னை இவ் வையப்பாட்டினைத் தானும் சொல்லப் புகுந்த தென்னையோவெனில்? சிலமந்தமதிகள், இறைவர், உயிர்களின் பக்குவ பேதம் பற்றிச் செய்யும் பல்வகை யருளிப்பாடுகளைப்பற்றி பலவாறும் எண்ணி அபசாரப்பட வருமாதலின் அதனை நீக்கி உலகை வழிப்படுத்தற் கென்க.

பெறுவதற்கோ அது அறியோம் - இவ்வாறு ஐயப்பாடாகக் கூறினும் இதுவே திருவருள் வெளிப்படுமாறு என்பது ஆசிரியரது தெய்வக்கவி நோக்கினால் அறியத் தக்கது. திருவருள் உண்மைகளைக் கண்டு இவ்வாறு காட்டியருளுதல் ஆசிரியரது மரபுமாம். "தம்மேலைச் சார்புணர்ந்தோ சாரும் பிள்ளைமைதானோ" (1961); "ஆய பொழுது தம்பெருமா னருளா லேயோ மேனியினி லேயு, மசைவி னயர்வாலோ வறியோம்" (1891); என்றவை ஈண்டுக் கருதத் தக்கன ; அவ்விடங்களில் இருநிலைகள் கூறி முதற்கண் வைப்பு முறையால் தமது தெய்வத் திருவுள்ளக் கருத்திது வென்று கருதவைத்தார். ஈண்டு அங்ஙனமன்றி ஐயப்பாடு தோன்றக் கூறி ஒன்றே துணிய வைத்த கவிநயமும் கண்டுகொள்க. பெருகருளால் - இவ்வேடுபறி, நம்பிகள்பாற் றோழமை பற்றி இறைவர் கொண்ட அருட்பெருந் திறமே யாம் என்பது.

சேர்கின்ற போழ்தின்—என்பதும் பாடம். 165

3913. (வி - ரை) வேன்றிமிகு பூதங்கள் - சிவபூதகணங்கள். வேன்றியாவது இறைவரது அருள் வலிமை பெறுதலால் எல்லாம் வெற்றி பெறுதல். "நீடு தேவர் நிலைகளும் வேண்டிடில், நாடு மைம்பெரும் பூதமு நாட்டுவ, கோடி கோடி குறட்சிறு பூதங்கள்" (16) .

பண்டாரம் - நிதிக்குவைகள் முதலாயின பொதிகள்.

கவர அருள் வைத்தருள - பொருள் கவர்தலே அருளாம் என்றபடி ; உலகியலினும் இவ்வாறு தீச் செயலாகக் கொள்ளப்படுவனவே சிலபோது நன்மையாதலும் காணப்படும் ; தன்னையோ பிறரையோ கொல்வதற்காக ஒருவன் வைத்திருந்தவிடம் - வாள் முதலிய கருவிகளை அது தவிர்க்கும் பொருட்டு வேறொரு கருணையாளன் கவர்ந்து கொண்டால் அதுகளவாகாது நலமாகக் கொள்ளப்படுதல் போலக் கண்டுகொள்க.

அருள் வைத்தருளுதல் - திருவுள்ளத்துச் சங்கற்பித்தல் - எண்ணுதல்.

அன்றினர் - பகைவர் ; அப்பூதங்கள் சென்று - என எழுவாய் வருவிக்க நின்றது ; இசையெச்சம்.

வேட்டுவப்படை - படைகளையுடைய வேடர் கூட்டம் ; வேடர்கள் ஆறலைத் துண்ணும் பாலைத்திணைக்குரிய செய்தியுடையவர்களைக் குறித்தவாறு.

அவர் - முன்கூறிய வன்றொண்டர் என்க. இருபாலும் - இருபுறமும்.

செயிர்த்து எழுந்து - கோபித்துக் கிளம்பி ; எழுந்து - என்றதனால் முன்னர்க் காத்திருந்த என்பது பெறப்படும்.

எழுந்து-வாங்கிச் சந்தித்துக் - துத்திக்-கவர்ந்து கோள என வரும் பாட்டுடன் கூட்டிமுடிக்க. 166

3914. (வி - ரை) வாங்கி - வளைத்து; அலகு - அம்புகளின் கூர்க்காகிய பகுதி; அலகம்பு - அலகுள்ள ஒருவகை அம்பு என்பாருமுளர்; "வெஞ்சிலை"- "வில்லைககாட்டி வெருட்டி" (பதிகம)

விசை - விசையை அளிக்கும், அம்புக்கு விசையிற செலவும் சக்தியைக் கொடுப்பதாகிய நாண்; விசையாக எனறலுமாம, சந்தித்தல் - கொடுத்தல்.

இங்கு இட்டுப் போம், (இடாவிடில்) - கோல்வோம் எனக.இடாவிடில் என்பது குறிபபெச்சம, "விரவிலாமை சொலவி" (பதிகம), துந்தி - நிலத்திற் குத்தி; பரிசனங்களைக் குத்தி என்றது பிழை; "திடுகு மொட்டெனக குத்திக் கூறை கொண்டு" (பதிகம), "வில்லைககாட்டி வெருட்டி" எனபது பதிகம

கோள் - கைககொண்டு அகல.

இரிந்து - சிதறி, பறியுண்டார் - பறிக்கப்பட்டார பரிசனங்கள் என்பது வருவிக்க. பறிசெய்த பரிசாவன, குத்தி - வில்லைககாட்டி வெருட்டி - மோதி - முதலாக வரும பதிகப பகுதிகளாற காணக.

ஆருரர் மருங்கணைந்தார் - பறியுண்ட பரிசனங்கள பினனாக வரும ஆரூரரபால அணைந்தனர  167

3195. ஆரூரா தமபாலவ வேடுவாசென றணையாதே
நீரூருஞ் செஞ்சடையா ரருளினா னீங்கவவா
சேரூராந் திருமுருகன பூணடியினிற் சென்றெய்திப
போரூரு மழவிடையாா கோயிலினா டிபபுக்காா.  கசுஅ

(இ - ள்) ஆரூரர் ..நீங்க - ஆரூரரிடத்து அந்த வேடுவாகள் சென்று சேராமல் நீரினைத் தரித்த சிவந்த சடையினையுடைய பெருமானாரது திருவருளினாலே நீங்கியிட; அவர்...எய்தி - அவாகள் சேர்ந்த ஊராகிய திருமுருகனபூண்டியினிற போயச சேர்ந்து; போரூரும...புக்கா - போரிலவல்ல இளமையுடைய இடபத்தை உடையவராகிய இறைவரது திருக்கோயிலை நாடிச் சென்று புகுந்தனர் (ஆரூரர)

(வி - ரை) ஆருரர்...அருளினால் நீங்க - அவ்வேடர்கள முன்னர வந்த பரிசனங்களை வெருட்டிப பண்டாரங் கவாந்தனரே யனறிப பினனாவந்த நமபிகள பக்கம் வரவிலலை, நம்பிகளும மணியாரம பூணவருக்கந் தாங்கியவரா யிருந்தும அவாபாற் சாராது நீங்கியமையாலே அவ வேடுவா ஆறலைத்துப பொருள பறித்துணணும் எனைவேடுவா போலலலா எனபது கருத இடமாயிறறு எனக, பதிகத்தின குறிபபினும் இவ்வேடா பறியினுக்கு இறைவரே உளவாயினா எனபது பெறபபடுதலும், "கொங்கே புகினுங் கூறைகொண் டாறலைப பாரிலை" (அவிநாசி) என்று பின்னர் அருளுதலும காண்க.

அருளினால் நீங்க - இறைவரது திருவருட் குறிபபினால் நீங்கியிட.

அவர் - அவ்வேடுவர், அவர் சேர் ஊர் - கவர்ந்த பண்டாரங்களைக் கைக்கொண்டு அவ்வழியில் திருமுருகனபூண்டியை நோக்கி அவ் வேடுவர் சென்றமையாலும், அவ்வூரே அங்கு முதலில இருபபதாலும அத திருமுருகனபூண்டியே அவர் சேர் ஊர் என்றா; பதிகத்துளளும "எலலை காபபொன்று இல்லை யாகிலநீா எததுக் கிங்கிருந்தீர்" எனற குறிபபும் காணக. (உமது எலலையில களவர்வாராமற் காகக விலலையே எனபது), இவவாறனறி அவர் எனபது செஞ்சடையார் என்பதைச் சுட்டுவ தென்று கொண்டு, நீங்குமபடி வேடர்க்கருளிய அபபெருமான் சேர்

என்றுரைத்தலுமாம்; இப்பொருளில் அப்போருருமழவிடையார் என்ற அங்கும் சுட்டு விரித்துரைத்துக் கொள்க.

நாடிப்புக்கார் - செல்லும் வழியினில் இல்லாது, அக் கோயில், விலகி உள்ளே இருப்பதால் நாடி - என்றார்; புக்கார் - நகரினுள் புகுந்தார். கோயிலினுட் புகுதல் மேற்பாட்டிற் கூறப்படும். 168

3916, அங்கணர்தங் கோயிலினை யஞ்சலிகூப் பித்தொழுது
மங்குலுற நீண்டதிரு வாயிலினை வந்திறைஞ்சிப்
பொங்குவிருப் புடன்புக்கு வலங்கொண்டு புனிதநதி
திங்கண்முடிக் கணிந்தவர்தந் திருமுன்பு சென்றணைந்தார். கசுகூ

(இ - ள்) அங்கணர்தம்...தொழுது - இறைவரது திருக்கோயிலைக் கைகளை அஞ்சலியாகக் கூப்பித் தொழுது; மங்குலுற...இறைஞ்சி - மேகங்களைப் பொருந்தும்படி நீண்ட திருவாயிலினை வந்து பணிந்து; பொங்கு...வலங்கொண்டு - மென்மேலும் அதிகரித்தெழுகின்ற விருப்பத்துடனே கோயிலின் உள்ளே புகுந்து திருமாளிகையினை வலமாகச் சுற்றிவந்து; புனித நதி...அணைந்தார் - புனிதமுடைய கங்கையாற்றினையும் திங்களையும் முடியில் அணிந்த இறைவருடைய திருமுன்பு சென்று அணைந்தனர்.

(வி - ரை) கோயிலைத் தூரத்தே தொழுதலும், வாயிலில் வந்து இறைஞ்சி உட்புகுதலும், திருமுன்றில் வலங்கொண்டு திருமுன்பு சேர்தலும் முதலிய இவை வழிபாட்டு முறை. தாம் கொணர்ந்த பொருட் பொதிகள் எல்லாம் பறியுண்டு அலைப்புண்ட இந் நேரத்தினும் இவ் வழிபாட்டு விதிமுறைகளில் தவறிலர் என்பது அடித்தொண்டின் உறைப்பினைக் காட்டுகின்றது; உலகியல் நிலைகளில் மனமலையாது சிவச்சார்பினின்றவர் நம்பிகள் என்பதாம். இந் நிலையினர் எல்லாம் சிவன் செயலாகவே கொள்வர் என்பது அவரிலக்கணம் அறிவிக்கும் ஞானநூலுண்மை.

மங்குலுற நீண்ட திருவாயில் - திருவாயிலின் ஓங்கிய நிலையினை உணர்த்திற்று; "வாயில், அப்பதியில் வாழ்பெரியோ ருள்ளம் போல, ஓங்குநிலைத் தன்மைய வாய்" (1165)

நதியும் திங்களும் - என உம்மைகளை விரிக்க.

பொங்கு விருப்பு - மேன்மேலெழும் அன்பினால் வந்த விருப்பம். இஃதும் அவாது மனத்தின் அன்பின் உறைப்புக் காட்டுவது. 169

3917. உருகியவன் பொடுகைகள் குவித்துவிழுந் துமைபாகம்
மருவியதம் பெருமான்முன் வன்றொண்டர் பாடினார்
" வெருவுறவே டுவர்பறிக்கும் வெஞ்சுரத்தி லெத்துக்கிங்
கருகிருந்தீ " ரெனக் " கொடுகு வெஞ்சிலை"யஞ் சொற்பதிகம். கஎO

(இ - ள்) உருகிய...விழுந்து - மனமுருகிய அன்பினோடு கைகளைச் சிரமேற் குவித்து நிலமுற விழுந்து; உமைபாகம்...முன் - உமை அம்மைபாகம் பொருந்திய தமது பெருமானது திருமுன்பு; 'வெருவுற...இருந்தீர்" என - அச்சம் பொருந்த வேடர்கள் வழிபறிக்கும் வெவ்விய காட்டில் எத்துக்கு இங்குப் பக்கத்தில்இருந்தீர்? என்ற கருத்துடைய; கொடுகு...பதிகம் - கொடுகு வெஞ்சிலை என்று தொடங்கும் அழகிய சொற்பொருள்களைப் பொருந்திய திருப்பதிகத்தினை; வன்றொண்டர் பாடினார் - வன்றொண்டப் பெருந்தகையார் பாடி யருளினார்.

(வி - ரை) உமைபாகம் மருவிய தம் பெருமான் முன் - பதிகத்து, இருகு, நுண்ணிடை மங்கை தன்னொடும்" - "முயங்கு பூண்முலை மங்கையாளொடும்" "ஏந்து பூண்முலை மங்கை தன்னொடும்", "பந்தணை விரற்பாவை தன்னையோர் பாகம் வைத்தவனை" என்று பலவாறும் அம்மையுடனிருக்கும் இத்தன்மை பற்றிப் போற்றியதனைக் குறித்து ஆசிரியர் எடுத்துக்காட்டியவாறு. உருகிய அன்பொடு - "சிந்தையிற் சிவதொண்டன்" (பதிகம்).

வேருவுற...என - பதிகக்கருத்தும் குறிப்புமாம். பதிகமுகுடமும் பார்க்க.

கொடுகு வெஞ்சிலை - பதிக முதற் குறிப்பாகிய தொடக்கம்.

அஞ்சோல் - அழகிய சொல்லும், பொருளும், சொல்லாற்றலாற் பெறும் உட் குறிப்புக்களும் உடைமை குறித்தது

பதிகம் - பாடினார் என்க. வன்றொண்டர் - வன்மைபேசிப் பெற்ற அத்திருப் பெயருக்கேற்ப, ஈண்டும் பேசிய திறம் குறிக்க இத்தன்மையாற் கூறினார். 170

திருமுருகன் பூண்டி

திருச்சிற்றம்பலம்.     பண் - பழம் பஞ்சுரம்

கொடுகு வெஞ்சிலை வடுக வேடுவர் விரவ லாமை சொல்லித்
திருகு மொட்டெனக் குத்திக் கூறைகொ ளிடமுறலைந்த மிடம்
முடுகு நாறிய வடுகர்வாழ் முருகன் பூண்டி மாநகர்வாய்
இடுகு நுண்ணிடை மங்கை தன்னொடு மெத்துக் கிங்கிருந்தீர் எம்பிரானீரே (1)

முந்தி வானவர் தாந்தொழு முருகன் பூண்டி மாநகர்வாய்ப்
பந்த ணைவிரற் பாவை தன்னையோர் பாகம் வைத்தவனைச்
சிந்தை யிற்சிவ தொண்ட னூரன் னுரைத்தன பத்துங்கொண்
டெந்த மடிகளை யேத்து வாரிட ரொன்று நாமிலரே. (10)

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—ஆசிரியர் (3917) காட்டியருளியபடி ; எத்துக்கு இங்கு அருகு இருந்தீர் ? என்றமையால் பொது வகையால், எல்லா வுயிர்களையும், சிறப்பு வகையால் அடியார்களையும் காவல் செய்யும் கடப்பாடும் கருணையும் உடைய நீர் அது செய்யாது இங்கு எதற்காக இருந்தீர் ?; உமது எல்லை அருகிலேயே இது நிகழ்வதாகில் உமது அனுமதியும் உளப்பாடுமின்றி இவ்வாறு நிகழாது ; ஆதலின் நீர் அவ்வேடர் வடிவாய் உமது பூதங்களை அனுப்பிக் கவர்ந்த பொருள்களை யெல் லாம் மீளக்கொடுத்தருளல் வேண்டும்என்பன வெல்லாம் எத்துக்கிங்கு அருகிருந்தீர் என்றதொரு வினாவினாற் பெறவைத்த குறிப்புடன் அருளியது தமிழ் நாவலர் பெருமான் திருவாக்கின் அருமைப்பாடு. எத்துக்கு - எதனுக்கு - என்பதன் மரூஉ ; "எற்றுக் கடிக ளென்கண் கொண்டீர்" (நம்பி). வினாவாக வன்றி, எத்துக்கு-எத்து-வஞ்சித்தல் - ஏமாற்றுதல் ஏமாற்றுதல் என்ற பொருள்பட வைத்து இங்குநீர் அருகு இருந்தது ஏமாற்றுதற்கு ; அதனை நான் அறிகின்றேன் - என்றதொரு தொனியும் எத்துக்கு என்ற வினாவுக்கு விடையாக வரும் நிலையும்பட வைத்த கவிநயமும் கண்டு கொள்க. "எத்துக்கு மூத்தீர்" (வள்ளி - திருமணம் - 108) என்ற கந்த புராணம் இப்பொருளை விரித்தல் காண்க. உலகியலில் சிலஊர்களில் தலைவர்கள் என்று வெளிப்பட நிகழும் மாக்கள்வழிப்பறிக்காரர்களுக்கு உளவாகியும், அவர்களைஏவியும், பறிப்பொருளில் பங்கு பெற்றும் வாழும் நிலையினை இங்குக் கருதவைத்த நயமும் கண்டு கொள்க. பதிகப் பாட்டுக் குறிப்புக்கள் பார்க்க.

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) கோடுதேவெஞ்சிலை வடுக வேடுவர் நாறிய வடுகர் - சிவபூதங்கள் பூண்டு வந்த வேடர் வேடம் - இத்தகைய வடுகர் அந்நாட்டில், அந்நாளில், ஆறலைத்தும்-கொள்ளை யிட்டும் - பிறர் பொருள் வௌவியும் - வாழ்ந்தனர் என்பது நாட்டு நடப்புச் சரிதத்தாலும் அறியலாம். அவ்வேடர் வந்தார்கள் என்பதன்று ; வேடர் வடிவாயி - என்ற புராணத்துக்கு அகச்சான்று. கோடுதே வளைந்த; வெஞ்சிலை - வெவ்விய ஊறு செய்யும் வில் ; வில் வாங்கி - சந்தித்து-என்ற வரலாற்றுக்கு ஆதாரவாகிய அகச்சான்று ; " வில்லைக் காட்டி வெருட்டி வேடுவர் " முதலியனவாய்மேல்வருவனவும், அவ்வேடர் வடிவில் வந்த கணங்கள் செய்தனவும், உண்மையில் அந்நாட்டில் வசித்த வேடர் செய்வனவுமாம் ; உண்மைக் காட்சி பெற நாடக நடிப்பவர் செய்கைகள் நினைவு கூர்தற்பாலன ; விரவலாமை சொல்லி - விரவக் கூடாத கடுமொழிகளைச் சொல்லி; விரவுதல் - பொருந்துதல் - விரவலாமை பொருந்தாத தன்மை; அதனையுடைய சொற்களுக்குவந்தது;"கொல்வோமிங் கிட்டுப் போம் " (3914) என்று ஆசிரியர் இதனை விரித்தல் காண்க ; மேலும் சொல்லத் தகாதவற்றை இதன் துணைகொண்டு கருதவைத்தார், தகாத மொழிகளைச் சொல்லிக் காட்டுதலும் தகாது என்னும் மரபு பற்றி ; திடுதே மொட்டேன - ஒலிக் குறிப்புச் சொற்கள் ; துந்தி - நிலத்தில் தறிகளை மோதியும் குத்தியும் அச்சுறுத்தல் ; " கோபத்தாற் துந்தி " (3914) என்பது ஆசிரியர் உரை : கூறை - துணி ; அணிந்த உடைகளையும் விடாது பறிப்பர் என்ற வன்கண்மை குறித்தது : ஆறலைத்தல் - வழி பறித்தல்; முடுதே நாறிய - கழுவா வுடலங்களில் வரும் முடைநாற்றத்துடன் அவர்கள் பூசும் எண்ணெய் முதலியவற்றின் சுநாற்றமும் கூடும் : இடுதே நுண்ணிடை மங்கை தன்னொடும் - ஆறலைக்கும் வழியில் ஒருவன் பயமின்றி அணிகள் அணிந்த இளமனைவியுடன் நிலைத்த வாழ்க்கை நடத்தினால் அவன் அக்கள்வர்க்குப் பங்குடையவன் என்றே துணியப்படும் என்ற குறிப்பு ; மேல் " முயங்கு பூண் முலை மங்கையாளொடும் - (5) ; மடவரல்லுமை நங்கை தன்னையோர் பாகம் வைத்துகந்தீர் " (8) ; " வெண்பிறைக் கண்ணி தன்னையோர் பாகம் வைத்துகந்தீர் " (9) ; பந்தணை விரற் பாவை தன்னையோர் பாகம் வைத்தவனே (10) என வருவனவும் இக்குறிப்புடையன. இதனை "உமைபாகம் மருவிய தம்பெருமான் முன்" (3917) என்று ஆசிரியர் எடுத்துக் காட்டியருளினர். இடுதே - சிறிதளவாகிய - குறுகிய ; எந்துந்தே - எதற்கு ; வினு ; (வஞ்சித்தற்கு - என விடை பெறச் சொற்சிலேடையும் இரட்டுற மொழிதலுமாம்)—(2) கல்லினு லெறிந்திட்டு மோதியும் - வழிப்பறி செய்யும் கள்வர் செயல் ; எறிந்திட்டு - எறிந்து ; இடு - துணைவினை ; முல்லைத்தாது மணங்கமழ் - தலமாம் முல்லை என்பது ; எல்லை காப்பதோன் றில்லையாகில் - உமது எல்லையுள் அநீதி நடவாமற் காவல் செய்யாவிடில் ; (கள்வரிற் பங்குடையீர் என்பது) ; எல்லை - இராப்பொழுது என்றலுமாம் ; (3) பசுக்கனே...நேர்ந்து - நாட்டு வேடுவர் தொழில் ; உயிர் என்பது எதுகை நோக்கி உசிர் என்று மருவியது. நேர்ந்து - செய்து ; அன்றியும், உசிர் என்பது கொங்கு நாட்டு வழக்கச் சொல்லுமாம் ; தோறும் - காலத்தாலும் இடத்தாலும் இடையீடின்மை குறிக்கும் இடைச்சொல் - முசுக்கள் - குரங்குகள் ; ஓரிடத்தில் நில்லாது ஓடியும் குதித்தும் தாவியும் தாண்டியும் உலவுதல் என்னும் தொழிலைப் பற்றி வந்த உவமம் ; குரங்கு வடிவும் பற்றிய குறிப்பாதலின் மெய்யுவமுமாம் ; இசுக்கழியப் பயிக்கம் கொண்டு - இசுக்கு - இழிபு - காவல் ; பயிக்கம் - பிச்சை ;—(4) பிச்சை பீறற்கூறை...பங்கியராகி - வேடர் வடிவம் ; பீறல் - கிழிந்த ; பத்திரம் - உடைவாள் ; " பத்திரம்வாங்கி " 481): வெட்டனராய் - வெடுவெடுத்த - கடிய - சொல்லுடையாராய் ; தூறைப்பங்கியர்-

ஞறை நாறும் சுருண்ட தலை மயிரினையுடையர் ; பங்கி - ஆண்பால் மயிர் ; மோறை- வன்கண்மையுடைய; " மோருந்து " (தேவா); ஏறு காலிற்ற தில்லையாயிவிடில் - யாமும் எம்தேவியும் எருதேறி இவ்வழியே பலிக்கு வந்தோம் ; எருது நடை பெற வில்லையாதலின் இங்குத் தங்கினோம் என்பீராகில் உமது எருது கால் வலுவுடன் கொழுமையாய் உள்ளது ; ஆதலின் அக்காரணம் செல்லாது என்பது குறிப்பு;—(5) தயங்கு - விளங்கும் ; தோல் - புலித்தோல் ; மான்றோல் ; கரியுரி ; சிங்கவுரி ; " கருமானி னுரியதளே யுடையா வீக்கி...புலித்தோல் பியற்கு மிட்டு " (தேவா); சங்கரா - சங்கரனே ! ஓதி ; ஓதுபவரே ! விளி ; மயங்கி - உமது தன்மையில் ஈடுபட்டுத் தம்மை மறந்து; முயங்கு - சேர்கின்ற; இணைந்த ; முயங்கு பூண்முலை மங்கை - இத்தல அம்மை பெயர். இயங்கவும் மிடுக்குடையராய் விடில் - ஆறலைக்கும் வேடர் வாழுமிடத்தில் இருப்பவர்கள் அவர்களுள் ஒருவராகவோ அவரது தலைவராகவோ இல்லாவிடில் பலமுடையராய் இருப்பர் : நீர் அவ்வாறன்றி மிக மிடுக்குடையராயுள்ளீர் ; இயங்குதல் வெளிப்படுதல்;—(6) விட்டு - வாய் விட்டு மிக முழக்கி ; கொக்கரை கொடுகொட்டி தத்தளகம் துந்துமி, குடமுழா இவை இயங்களின் வகை : சிலப்பதிகாரவுரை பார்க்க. மகிழ்வீர் - இவற்றை உமது கூத்துக்கு இணங்கப் பூதங்கள் முழக்க அவற்றுடன் இலயம்பட நீர் மகிழ்ந்து ஆடுவீர்; மொட்டு - முல்லையரும்பு குறித்து நின்றது ; பிச்சை கொண்டுண்பதாகில் - பிச்சை கொண்டுண்பவருக்கு வன்கண்ணராகிய வேடுவர்பால் இருத்தல் தகாது : ஆதலின் நீர் பிச்சைக்காரரன்றி அவர்களது உளவாளியேயாவீர் என்பது,—(7) தற்று - கட்டி ; இறுக உடுத்து ; " கோவணமுங் தற்று " (அரசு) ; ஒற்றியூரையுமுத்தி நீர்மகிழ்வீர் - சிறந்த ஒற்றியூரையும் உடையராய் மகிழ்ந்துள்ளீர் ; இங்கு வேடுவர், உடுத்த துணியினையும் பறிக்கும் காட்டில் இருக்கல் எது காரணம் ; ஏது காவல் கொண்டு - அவ்வேடுவர்பால் பயமின்றி வாழ உமக்கு என்ன காவலைக் கொண்டுள்ளீர் ? அவ்வாறு காவலின்றி யிருத்தலின் நீர் அவருள் ஒருவரேயாம் என்பது ; உத்தி - பாம்பின் படப்பொறி ; பாம்புக்கு வந்தது , உத்திர நாளுமாம் ; படம்பக்க நாசர் என்பதுமறிக;—(8) படவரல்...பாகம் வைத்து - முன் (1) கூறிய கருத்து ; மடவரல் - வேடுவர்க்குள் நீர பயப்படா விடினும் உமது பாகமுடைய தேவியும் அஞ்சாது உடனுறைகின்றனர்; உவந்துறைகின்றீர ; ஆதலின் அவ்வேடுவர்க் குளவாவீரன்றி வேறல்லீர் என்பது ; முடவரல்லீர்...இடபமேறியும் போவதாகில் - எனக்கும் இங்கிருக்க விருப்பமில்லைதான் ; ஆனால் என் செய்வேன் இடம் பெயர்ந்து நடந்து செல்ல மாட்டாமையின் தங்குகின்றேன் என்பீராகில் நீர் முடவரல்லீர் ; நடத்தல் மட்டுமன்றிக் கூத்தாடுதலிலும் வல்லீர் ; மேலும் நீர் இடவமேறிச் செல்வீராதலின் அவ்வூர்தியு முள்ளது ; பணை - மூங்கில் ; இங்கு நின்றும் போய்விடாமல் தங்குதலுக்கு இக்காரணம் கூறுதல்இயலாது;—(9) பிறைக்கண்ணி- பிறையாகிய மாலை ; முடிமாலை ; பாகம் - ஒரு பக்கத்தில் ; மோந்தை - ஒருவகை இயம் ; மோந்தை - என்பது நீட்டல் விகாரம் பெற்று மோந்தை என வந்தது ; " மொந்தை முழவம் "(நம்பி) ; ஏர்து பூண்முலை மங்கை - கள்வர் செறிந்து வாழும் இடத்திம் உமது தேவி அணிகலன்களை மறைக்காமல் வெளிப்படப் பூண்டிருத்தலால் நீர் அவர்களோ டுறவாவீரேயாகும் என்பது :—(10) முந்தி - ஒருவரையொருவர் முந்திக்கொண்டு ; முந்திய என்றலுமாம் ; தாம் - அசை ; பந்தணை விரற்பாவை - பயமின்றி யிருத்தலன்றியும் மன மகிழ்ச்சியுடன் பந்தாடுதல் முதலிய உல்லாசமான வாழ்க்கையுடையீர் என்பது ; சிவதொண்டன் - சிவனுக்கு அடிமை : ஒன்றும் - ஒரு

சிறிதும்; பாவைதன்னை - தன் - சாரியை; பாவை - உவமை யாகுபெயர் ; எம்தம்மை- தம் - சாரியை.

தலவிசேடம் :—திருமுருகன் பூண்டி - கொங்கு நாட்டுப் பதிகப் பாடல் பெற்ற பதிகளுள் இரண்டாவது பதி ; முருகப்பெருமான் சூரசம்மாரத்தின்பின் பூசித்த பதிகளுள் ஒன்றாதலில் இப்பெயர் பெற்றது ; பூசித்த முருகப்பெருமான் சந்நிதி தனியாகச் சிறந்து விளங்குகின்றது ; அப்பூசையின் பயனாக இன்றும் இங்கு வழிபட்டுப் பிரமகத்தி, சித்தப்பிரமை முதலிய வலிய நோய்களினீங்கிச்செல்வோரை இப்போதும் எப்போதும் காணலாம். அந்நோய்களின் நீங்குதற்குதவும் பிரமதீர்த்தம் கோயிலுக்கு வெளியில் உள்ளது. இதன் பொருட்டுச சித்தப்பிரமை வைத்தியம் முதலிய நோயுடையோர், தம் சார்புகளுடன் வந்து தங்கி வழிபடத், தனியிடங்களும் அறைகளும் கோயில் அதிகாரிகளால் அமைக்கப்பட்டுள்ளன; (Lunatic Asylum என்பர் நவீனர்) ; தூர்வாச முனிவ தேவலோகத்திலிருந்து மாதவி மரம் (கொடி) கொணர்ந்து இங்கு வைத்தமையால் இது மாதவிவனம் (முல்லைவனம்) எனப்படும். மாதவி - முல்லை விசேடம் ; " முல்லைத்தாது மணங்கமழ் " என்று இது பதிகத்துக் குறிக்கப்பட்டது. மாதவி - குருக்கத்திமரம் என்பது தலபுராணம். இந்தச் சந்நிதி தனியாயுள்ளது. சேரமான் பெருமாள் நாயனார் தந்த பொருள்களை ஆளுடைய நம்பிகள் பரிசனங்களின் மீதேற்றி இவ்வழியே வரும்போது, இறைவாது திருவரு ளின்படி சிவபூதகணங்கள் வேடர் வடிவாய்ச் சென்று பறித்து வந்தபின் நம்பிகள் பதிகம்பாடி அவற்றை மீளப்பெற்ற பெருமையுடையது ; விரிவு புராணத்துட் காண்க. தூர்வாச முனிவர் முதலியோருக்கு பிரம்மதாண்டவம் காட்டியருளிய நடராசர் சந்நிதி சிறப்பாய்த் தனியாயுள்ளது ; சுந்தரர் வேடுபறி பற்றி ஆண்டு தோறும் விழாக்கொண்டாடப் பெறுகின்றது ; அந்த, நிதிபறித்த இடத்திலிருந்து இறைவர் இருக்குமிடத்தைக் கூ கூ என்று கூவி நம்பிகளுக்குக் காட்டியருளிய விநாயகர் சந்நிதி கூப்பிடு விநாயகர் என விசேடமாய் வழிபடப் பெறுகிறது. இது இத்தலத்தினின்றும் வடக்கில் அவிநாசிக்குப் போகும் வழியில் ½ நாழிகையளவில் உள்ளது. கோயிலுக்கு எதிரில் உள்ள தனி விநாயகர் கோயிலுக்கு முன்புறம் உள்ள பாறையில் உள்ள சிறுகுழியில் 12 ஆண்டுக்கொரு முறை ஊற்றுப்பெருகும். அது மாமாங்கக் குழி என வழங்கப்படுகிறது ; நம்பிகளது பொருள் பறியுண்ட திருக்கோலமும், அதனைமீளப்பெற்ற திருக்கோலமுமாக இரண்டும் சுவாமிகோயிலில் முகப்பில் தாபிக்கப்பட்டு வழிபடப் பெற்று வருகின்றன. தலபுராணம் 1°0 ஆண்டு களின் முன் வாழ்ந்த செட்டிபாளையம் மகாவித்வான் வாசுதேவ முதலியார் இயற்றி யுள்ளார். இவரே பவானி புராணம், அவிநாசிக் கருணாம்பிகை சதகம் முதலிய பல நூல்களை இயற்றியவர். மூலமும் உரையுமாகப் பிரபவளு ஆனிமீ (82 ஆண்டுகளின் முன்) அச்சிடப்பட்டுள்ளது. காப்பு - பாயிரம் - புராண வரலாறு முதல் 11 சருக்கங் களுக்கு 618 செய்யுட்களையுடையது. இதில் வேடுபறிச் சருக்கம் நம்பிகளைப் பற்றிய இத்தலவரலாற்றைக்கூறுவது. சுவாமிமுருகநாதேசுவரர்; முருகாவுடையார்; அம்மை-முயங்கு பூண்முலை யம்மை - (பதிகம். 5 பாட்டும் பார்க்க) ; ஆவுடைநாயகி பதிகம்1. இது திருப்பூர் நிலையத்தினின்றும்வடமேற்கே அவிநாசிக் கற்சாலை வழி 6 நாழிகையளவில் அடையத்தக்கது.

3918. பாடியவர் பரவுதலும் பரம்பொருளா மவரருளால்
வேடுவர்தாம் பறித்தபொரு ளவையெல்லாம் விண்ணெருங்க

நீடுதிரு வாயிலின்முன் குவித்திடலு நேரிறைஞ்சி
ஆடுமவர் திருவருளா லப்படியே கைக்கொண்டார் கஎக

(இ - ள்) பாடி...அருளால் - முன்கூறியபடி நம்பிகள் பாடித் துதித்தலும் பரம்பொருளாகிய அவ்விறைவரது திருவருளினால் ; வேடுவர்தாம்...குவித்திடலும் - வேடுவர்கள் தாம் பறித்துக் கொடுபோன பொருள்களை எல்லாம் ஆகாயம் அளாவ நீடும் திருவாயிலின் முன்னே குவித்திடவும், (அதுகண்டு) ; நேரிறைஞ்சி - திரு முன்பு வணங்கி ; ஆடுமவர்...கைக்கொண்டார் - அருட்கூத்தாடுகின்ற இறைவரது திருவருளினாலே அவ்வாறே எடுத்துக்கொண்டனர்.

(வி - ரை) அருளால் வேடுவர் - குவித்திடலும் - என்க; "கவர அருள் வைத்தருளக் கவர்ந்து கொள" (3914) என்றதுபோல, மீளக் கொணர்ந்து குவிக்க அருள் வைக்கக் குவித்தனர் என்பதாம். அருளாற் பறித்த என்று கூட்டி யுரைக்கும் குறிப்புடனும் நின்றது.

விண்ணணுங்க நீடும் திருவாயில் - வானளாவ ஓங்கிய திருவாயில் ; அளவால் மட்டுமன்றிப் பயனாலும் விண்ணெருங்க ஓங்குவது இறைவரது திருவாயில் ; "பெரி யோ ருள்ளம் போல ஓங்குநிலைத் தன்மையவாய் - அருள்செய்த ஒழுக்க மல்லாற் நீங்குநெறி யடையாத தடையு மாகி" (1165) என்றது காண்க. விண்ணணுங்கக் [illegible]டலும் என்று அப்பொருள்களினளவு உணர்த்தியதாக உரைக்கவும்

ஆடுமவர் திருவருளால் அப்படியே - ஆடுதல் - அருட்கூத்தியற்றுதல் ; திரு வருளாவது "தாமே கொடுப்பதலால்" (3912) என்று முன்கூறிய கருத்தின்படி தாமே கொடுத்தருளுதல் ; அப்படியே - பறியுண்ட அவ்வாறே ; ஒன்றாயினும் சிதைவு குறைவு இன்றி ; அப்படியே - சேரனார் கொடுத்த தென்பதன்றி இறைவர் தாமே கொடுத்தருளும் பொன்னாகவே. 171

3919. கைக்கொண்டு கொடுபோதக் கைவினைஞர் தமையேவி
மைக்கொண்ட மிடற்றாரை வணங்கிப்போய்க், கோங்ககன்று,
மெய்க்கொண்ட காதலினால் விரைந்தேகி, மென்கரும்புஞ்
செய்க்கொண்ட சாலியுஞ்சூழ் திருவாரூர் சென்றணைந்தார். கஎஉ

(இ - ள்) கைக்கொண்டு...ஏவி - எடுத்துக்கொண்டு போகின்ற அந்தச் சுமை யாள்களைச் செல்லச் செய்து ; மைக்கொண்ட...போய் - விடத்தினைக்கொண்டு விளங்குகின்ற திருமிடற்றினையுடைய இறைவரை வணங்கி விடைபெற்றுச் சென்று; கொங்ககன்று - கொங்கு நாட்டினை நீங்கிப்போய் ; மெய்க்கொண்ட...விரைந்தேகி - உண்மை நிலைபற்றி எழுந்த பெருவிருப்பத்தினாலே விரைந்து சென்று ; மென் கரும்பும்...சென்றணைந்தார் - மென்கரும்பும் வயல்களில் நெருங்கிய செந்நெல்லும் சூழ்ந்துவிளங்கும் திருவாரூரினைச் சென்று சேர்ந்தனர்.

(வி - ரை) கைக்கொண்டு - வேடுவர் குவித்த பொருள்களை தாம் சுமை ஆள் களினால் எடுத்துக்கொண்டு.

அக் கைவினைஞர் - அச்சுமையாள்கள் ; ஏவி - செல்ல விடுத்து.

கோங்கு அகன்று - கொங்கு நாட்டினை நீங்கிச் சென்று.

கோங்கு அகன்று - திருவாரூர் சென்றணைந்தார் - சென்ற நாடும்வழியும் பிறவும் முன் (3797) கூறினாராதலின் இங்குக் கூறாராயினர். கொங்குநாடு கடந்ததும்

திருவாரூர் அணைந்ததும் விரைவில் உடனிகழ்ச்சிபோல நிகழ்ந்தன என்பதும் கவி நயமாகிய குறிப்பு ; இவ்வாறு விரைதற்குக் காரணம் மெய்க்கொண்ட காதலினால் என்றுணர்த்தியதும் காண்க. காதலினால் வழிச்செலவு விரைந்து கழிதல் உலகியல்புமாம். மென்கரும்பும்-சாலியும் - "நிலத்துக் கணியென்ப நெல்லுங் கரும்பும்" என்பவாகலின் இவற்றை விதந்து கூறினர். மென்கரும்பு - கரும்பின் உயர்ந்த வகை - (609 பார்க்க) ; சாலி - செந்நெல்.

3920. நாவலர்மன் னவரருளால் விடைகொண்ட நரபதியார்
ஆவியினொன் றாநண்பி னாரூரர் தமைநினைந்து,
மாவலரு மலர்ச்சோலை மகோதையினில் மன்னி மலைப்
பூவலயம் பொதுநீக்கி யரசுரிமை புரிந்திருந்தார். கஎகூ

(இ - ள்) நாவலர் மன்னவர்...நரபதியார் - நாவலர் பெருமானாராகிய நம்பிகளது திருவருளால் விடைபெற்றுக்கொண்ட அரசனாராம் சேரமானார் ; ஆவியின்... நினைந்து - உயிரினால் ஒன்றாகிய தன்மையுடைய நண்பினையுடைய நம்பியாரூரரை இடையறாது நினைந்துகொண்டவாறே ; மாவலரும்...மன்னி - வண்டுகள் சத்தித்தற்கிடமாகிய மலர்களையுடைய சோலைகள் சூழ்ந்த மகோதை நகரின்கண் வீற்றிருந்து ; மலை...புரிந்திருந்தார் - மலைநாட்டின் அரசினைப் பிறர்க் குரித்தன்றித் தமக்கே யுரிமையாகக் கொண்டு அரசு புரிந்தமர்ந் திருந்தனர்.

(வி - ரை) நாவலர் மன்னவர் - நம்பிகள் ; அவரருளால் விடைகொண்டமை முன் (3907 - 3912) உரைக்கப்பட்டது ; நாவலர் - தமிழ்ப்புலமை மிக்கவர் ; நாவல் நகரின் தலைவர் என்றலுமாம். நரபதி - உலகுயிர்க் காவலர் - உலக மன்னர்.

ஆவியின் ஒன்றாம் நண்பு - உடல் இரண்டாயினும் உயிரினால் ஒன்றுமென்னும் தன்மையுடைய பிரியா நட்பு ; "என்புருகி யுயிரொன்றி யுடம்பு மொன்று மெனவிசைந்தார்" (3812);இவர்கள், தந்த மணிமே னிகள்வேறுமெனினு மொன்றாந் தன்மையராய்" (4248) ; ஆவியின் - ஆவியின் ஒற்றுமைப்பட்ட தன்மையால் ; ஆவியினால் - உயிர் உணர்வினாலே இதற்கு இவ்வாறன்றி உயிரியல்புகளுள் ஒன்றாகிய நண்பு என்றுரைத்தனர் முன்னுரைகாரர். "உணர்ச்சிதான், நட்பாங் கிழமைதரும்" என்றபடி வந்த நட்பு.

ஆரூரர் தமைநினைந்து - அரசுரிமை புரிந்து இருந்தார் - "பாரோடு விசும்பாட்சி யெனக்குமது பாதமலர்" (3966) என்றபடி அவ்வரசு அவர் தந்த ஆணைப்படி அவரதுடைமையாகவே கொண்டு அவர்மீள வருமளவும் அரசு புரிந்து. பரதன் இராமனது பாதுகையைத் தாங்கி அவன் வருமளவும் அரசு செய்தான் என்ற இராமன் கதை இங்குக் கருதற்பாலது ; மேல், நம்பிகள் கயிலை செல்லும்நிலை கேட்டவுடன் அரசதிருவை விட்டுக் குதிரையேறி அவர் பாதம் சேவித்துத் தாமும் சேரும் வரலாறும் கருதுக; இக்குறிப்பு மேல்வரும் பாட்டில் ஆசிரியர் அருளுகின்ற வாற்றா லறிக.

மலைப்பூவலயம் - மலைநாட்டுப் பரப்பு. பொது நீக்கி - தனக்கே உரிமையாக ; "பொதுக்கடிந்து" (திருநா - சிறப்) ; "போதம் வேண்டிப் பொதுச்சொற் பொறான்" (புறம்) ; "பொதுநீக்கித் தனைநினைய" (அரசு).

மா - வண்டு ; அலரும் - சத்திக்கும் ; பிறவினையாகக் கொண்டு அலர்த்தும் என்றலுமாம்.

மாவலரும்...மன்னிமலை - இவ்வடி முற்றுமோனை.

புரந்திருந்தார் - என்பதும் பாடம். 

3921. இந்நிலைமை யுதியர்பிரா னெம்பிரான் வன்றொண்டர்
பொன்னிவளை நாடகன்று மகோதையினின் மேற்புகுந்து
மன்னுதிருக் கயிலையினில் மதவரைமே லெழுந்தருள
முன்னர்வயப் பரியுகைக்குந் திருத்தொழில்பின் மொழிகின்றாம். கஎச

(இ - ள்) இந்நிலைமை உதியர்பிரான் - இந்நிலைமையில் அரசு புரிந்திருக்கும் சேரமானார்; எம்பிரான்...எழுந்தருள - எமது பெருமானாராகிய வன்றொண்டப் பெருந்தகையார் சோழ வளநாட்டினை நீங்கி மகோதை நகரத்தில் இனிமேல் வருங் காலத்துப் புகுந்து நிலைபெற்ற திருக்கயிலையின்கண் யானையின்மேல் ஏறி எழுந்தருள (அப்போது); முன்னர்...மொழிகின்றாம் - அவர் முன்னே தமது கொற்றக் குதிரையினைச் செலுத்தி அவருடனே தாமும் திருக்கயிலையினைச் சாரும் திருத்தொழி லினைப் பின்னர் மொழிவோம்.

(வி - ரை) இது நம்பிகளைப் பிரிந்தபின், மீள அவர் போந்து அவருடனே கூடிச் சேரனாரும் கயிலைசேரும்வரை உள்ள கழறிற்றறிவாரது சரிதத்தின் பிற்பகுதி யைக் குறித்ததாம்; இவ்வாறு சுருக்கிச் சுட்டிய, பின்கூறுவோம் என்று கூறிய அவ்வாற்றாலேயே அப்பகுதியினையும் கூறுதல்போலக் கூறி, இங்கு இவர் புராணம் நிறைவாக்கிய கவிநயமும் கண்டுகொள்க; இவ்வாறு கூறாவிடின் இப்புராண நிறை வாகாமல் எச்சமாய் நிற்பதாகு மியல்பும் கண்டுகொள்க.

இந்நிலைமை உதியர்பிரான் - இந்நிலைமையில் அரசுபுரியும் சேரனார். இந்நிலை மையின் - (மேவும் சேரனார்) பரியுகைக்கும் திருத்தொழில் என்று கூட்டுக.

மேல் வன்றொண்டர் புகுந்து கயிலையினில் எழுந்தருள - என்று கூட்டி உரைத்துக் கொள்க; மேல் - மேல் வருங்காலத்து; எழுந்தருள - எழுந்தருளும் போது, புகுந்தால் - என்ற பாடமுமுண்டு; அது சிறப்பின்று.

முன்னர் - அவர்கடவும் யானையின் முன்னே; பரியுகைக்கும் திருத்தொழில் - இதனைப் பின்னர் வெள்ளானைச் சருக்கத்துட் கூறுதல் கண்டு கொள்க; பின் - வெள்ளானைச் சருக்கத்துள்; வயம் - வெற்றி; வெற்றியாவது தன்னை ஆளாக்கிய தலை வருடன் தானும் கயிலை செல்வதும், சிவமந்திர முபதேசிக்கப் பெற்று வினை நீங்கி நிலைபேறு பெறுவதுமாம். இதனால் பிற்சரிதத்தின் அப்பகுதியும் குறிக்கவாறு.

முயல்கின்றாம்—என்பதும் பாடம். 174

3922. மலைமலிந்த திருநாட்டு மன்னவனார் பாகடல்போற்
சிலைமலிந்த கொடித்தானைச் சேரலனார் கழல்போற்றி
நிலைமலிந்த மணிமாட நீள்பருகு மாமறைசூழ்
கலைமலிந்த புகழ்க்காழிக் கணநாதர் திறமுரைப்பாம். கஎரு

(இ - ள்) மலைமலிந்த...போற்றி - மலைகள் மிகுந்த செல்வமுடைய மலை நாட்டரசனாராகிய பெரிய கடல்போன்ற வில் எழுதிய கொடியினைக் கொண்ட படைகளையுடைய சேரமான் பெருமானாரது திருவடிகளைத் துதித்து அத்துணை) யானே); நிலைமலிந்த...திறமுரைப்பாம் - நிலைபினாலுயர்ந்த அழகிய மாடங்களை யுடைய நீண்ட வீதிகள் தோறும் பெரிய வேதங்களும் அவற்றினை உட்கொண்ட கலைகளும் பயின்றொழுகும் திறம் மிக்க புகழினையுடைய சீகாழியில் வாழ்ந்த கண நாத நாயனாரது திறத்தினைச் சொல்வோம்.

(வி - ரை) இதுகவிக்கூற்று ; ஆசிரியர் தமது மரபுப்படி இதுவரை கூறி வந்த சரிதத்தினை முடித்துக்காட்டி இனிக் கூறப்புகும் சரிதத்துக்குத் தோற்றுவாய் செய்கின்றார்.

மலைமலிந்த திருநாட்டு - மலைகளை மிகவுடைய மலைநாட்டின்.

சிலைமலிந்த கோடி - விற்கொடி; சிலை - வில் ; விற்கொடி சேரர்மரபுக்குரியது.

சிலைம லிந்தகோடித் தானைச் சேரலனார் - ஏனை அரசர்களுடைய சேனைகளின் சேவக மெல்லாம் அவர் இவ்வுலகத்துள்ள கால அளவின் எல்லை மட்டும் அமைவன ; ஆனால் இச்சேரமானாரது சேனையுள் அவர் இவ்வுலகை விட்டுக்கயிலைக்குச் செல்லும் போதும் எல்லாரும் "சுரிகையால் முறைமுறை யுடல்வீழ்த்துச் (4265)" "வீரயாக் கையை மேல்கொண்டு வில்லவர் பெருமானைச் சார முன் சென்று சேவக மேற்ற னர்" (4266); இவ்வாறு சேனைசூழக்கயிலைக்குச் சென்றனர்; எனப்பின்னர் வரலாற் றினால் அறிவோம். இக்குறிப்புப்பட ஈண்டுப் புராணம் முடித்துக்காட்டும் நிலையில் தானைச் சிறப்புப்பற்றிக் கூறிய தெய்வக் கவிநலம் கண்டு கொள்க. பின்னே வரும் " பரியுகைக்கும் திருத்தொழில் " என்ற பகுதியை முன்பாட்டிற் குறித்த ஆசிரியர் அப்போது சேனை வீரர்கள் வீரயாக்கையுடன் தம்மைச் சேவகம் ஏற்றுச் சூழச் சென் றனர் என்ற பகுதியை ஈண்டுக்குறித்துச் சரித நிறைவாக்கிய நயமும் கண்டுகொள்க.

மலைமலிந்த திருநாட்டு - " மாவீற்றிருந்த...மலைநாட்டு " (3748) என்று தொடங்கியதனை முடித்துக் காட்டியவாறு. மலைகளுள் எல்லாம் சிறந்த திருமலை என்னும் கயிலைத்திருநாட்டிலே என்ற குறிப்பும்பட நின்றது ; திரு என்ற குறிப்பு மது ; இவ்வாறே முன் பாட்டில் " திருத்தொழில் " என்றமையால் பரியுகைத்தலு டன் திருவுலாப் பாடியருளிய குறிப்பும் பெறவைத்த நயமும் ஈண்டுக் கண்டுகொள்க.

நிலைமலிந்த - நிலைபேற்றினாற் சிறந்த ; நிலைபேறுவது அற முதலிய உறுதிப் பொருள்களைப் பெறுவோர் உறைதற்குச் சாதனமாயிருத்தல் ; " தண்டாமரை மலராளுறை தவளந்நெடு மாடம், விண்டாங்குவ போலும்மிகு வேணுபுர மதுவே " (தேவா) என்ற திருவாக்கு ஈண்டு நினைவு கூர்தற்பாலது ; " நான்மறை சூழ் கலை மலிந்த புகழ் என்ற குறிப்புமிது ;

காழிக் கணநாதர் - " கடற்காழிக் கணநாதனடியார்க்கு மடியேன்"- என்ற முத னூற் சொற்பொருளாட்சி போற்றப்பட்டு நினைவு கூரவைத்தருளியபடி.

மாமறைசூழ் —மாளிகைசூழ்— என்பனவும் பாடங்கள். 175

சரிதச் சுருக்கம்: மலைநாடு மிகப்பழமையும் சிறப்புமுடையது; அதனைப் பழம் புகழ் பெற்ற சேர அரசர் ஆண்டனர் ; அவர்க்குத் தலைநகராக உள்ளது இறைவரது திருவஞ்சைக்களத்தினை உடன் கொண்டு நிலவிய கொடுங்கோளூர் என்பதாம்; அது மகோதை எனவும் பெயர் பெறும் ; சேரமன்னர்களுக்குக் கோதையரசர் என்ற பெயரும் உண்டு.

இந்நகரிலே உலகத்திற் கலிநீக்கிச் சைவந்தழைப்பச் சேரர் மரபும் உலகமும் செய்த தவப்பயனாலே பெருமாக் கோதையார் என்னும் சேரமானார் அவதரித்தனர்.

திருஅவதார மும் இளவரசும்

அவரது திருவவதாரத்தை அந்நகரம் விழாக்கொண்டாடிற்று. அவர் உலகிற் சைவநெறிவாழ வளர்ந்து முன்றொடர்ந்து வந்த வழியாலே சிவனடி பேணும் கருத்துடன் இளவரசராய் நின்ற பருவத்தில், அவ் அரசாங்க நிலையினைப் பேணமல், திருவஞ்சைக் களத்தில் திருத்தொண்டே புரிவாராயினர். உலக நிலையும் அரசியல்பும் நிலை யானவையல்ல என்று உணர்வாராகித் திருவஞ்சைக்களத்தில் கோயிலினருகில்

மாளிகை யமைத்துத் தங்கினர். ஒவ்வோர் நாளும் விடியலில் எழுந்து புனல் மூழ்கித் திருநீற்றினும் முழுகித்திருநந்தவனப்பணிகள் செய்தனர்; பூக்கொய்து திருமாலைகள் அமைத்தனர்; இறைவர்க்குத் திருமஞ்சனம் கொணர்ந்தனர்; திருக்கோயிலில் திருவலகு திருமெழுக்கு இட்டனர்; இவை முதலிய சரியைத் தொழில் பலவும் செய்தனர்; திருப்பாட்டுப்பாடி இறைவரை வழிபட்டு வந்திருந்தனர். இந்நாளில் இவருக்கு முன் அரசு செய்த செங்கோற் பொறையன் என்ற அரசர் அரசாட்சியை நீத்துத் தவஞ் செய்யும்படி வனம் சென்றனர்; மந்திரிகள் சிலநாளாய்ந்த நெறியால் அம்மரபில் மலைநாட்டுச் செய்தி முறைமையால் அரசுரிமை இவர்பால் வந்தது என்பது கண்டு திருவஞ்சைக்களத்திற் சென்று அதனை இவர்க்கு அறிவித்தனர்.

வரம்　அது கேட்ட பெருமாக்கோதையார், "இன்பம் பெருக்கும் திருத்தொண்டுக்கு இடையூறாக இவர் மொழிந்தனர்; யான் அரசு செய்தல் வேண்டுமென்பது இறைவரது திருவுள்ளமாயின் அவரிடம் விண்ணப்பித்துத் திருவருளினை அறிவேன்" என்று திருமுன்பு சென்று வணங்கி விண்ணப்பித்தனர்; காதல் வழிபாட்டுக் கிடையூறின்றி அதனுடனே நிகழ்வதாக, யாவும் யாருங் கழறின எல்லாம் அறியும் அறிவுணர்வும், அளவுபடாத வலிமையும், குறையாத கொடைத்திறமும், படைவாகனம் முதலாகிய அரசர்க்குரிய அங்கங்களும் எல்லாம் கைவந்துறத் திருவருள் பெற்றனர். அமைச்சர்க்கு அதனை அறிவித்து அரசு ஏற்றருள உடன் பட்டனர். அவர்களும் மகிழ்ந்து நன்னாளில் நல்ல வோரையில் மங்கலஞ் செய்து முடி சூட்டினர். முடிசூடிக் கொண்டு யானை மீதேறிக் கொற்றக் குடை மேலே நிழற்றநகர்வலம் வந்தனர் சேரலனார்.

அப்போது முதுகில் உவரின் பொதி சுமந்து கொண்டு ஒரு வண்ணான் எதிரே வரக்கண்டார்; மழையினாற் கரைந்து உவர் ஊறி அவன் மேனி வெளுத்திருந்தது;

வண்ணானும் திருவேடமும்　அதனால் அவ்வடிவத்தை அடியார் வேடமென்றே உணர்ந்து சேரலனார் யானையினின்றும் இழிந்து விரைந்து சென்று கைதொழுதார்; அவன் சிந்தை கலங்கி முன்வணங்கித் "தேவரீர் யாரென்று அடியேனைக் கொண்டது? அடியேன் அடிவண்ணான்" என்றான்; சேரர் பெருமான் அதுகேட்டு "அடியேன் அடிச்சேரன்; உமது வடிவினால் திருநீற்றின் வாரமாகிய திருவேடத்தினை நினைப்பிக்கும் உபகாரத்தையே செய்தீர்; வருந்தாது செல்லும்" என்று மொழிந்தார். மந்திரிகள் அது கண்டு அரசரது அன்பின் திறத்தினைப் போற்றினர்.

சேரனார் மீள யானைமீதேறி உலகப்போந்து நகரினை வலம்வந்து அரசத் திருமாளிகையுள் மங்கலம் பொலியப் புகுந்தனர்; யானையினின்று மிறங்கி அலங்

அரசு செய்தல்　கரித்த அரச மண்டபத்துள் சிங்காதனத்தில் ஏறி, வெண்கொற்றக் குடை நிழற்ற - அரசர் போற்ற - வீற்றிருந்து அரசு மேற்கொண்டிருந்தனர்; உலகங் காவல் புரியும் முடிவேந்தர்களாகிய பாண்டியர் சோழர்களுடன் கூடி மூப்பெரு மன்னவர்களாகி, மனுநூல் நீதிநெறி நடத்தினார். அரசர்கள் திறைகொணர்ந்து டணிய, அகப்பகை புறப்பகைகளை அறுத்துத் திருநீற்றொளி வளர வேதநெறி வளர அரசளிப்பாராயினர்.

அரசாட்சியின் பயனும், நிறை தவமும், தேடும் பொருளும் தில்லையம்பலவாணரது எடுத்த திருவடியேயாம் என்று தெளிந்து கொண்ட அறிவினால் நிச்சயித்து

சிவபூசை　அவரது பூசையினை நாடோறும் வழுவாமல் சிவாகம விதிப்படி செய்துவந்தார். திருமஞ்சனம், பூ, சாந்து, புகை, ஒளி முதலியனவும், திருவமுதும் அமைத்து இறைவர் பூசைக்கு ஏற்ற தன்மையினால் அருச்சித்தருள,

நாடோறும் பூசையினை விரும்பிய இறைவர் பூசை முடிவில் தமது அழகிய காற்சிலம்பின் ஒலியினைக் கேட்பித்தருளினர். இவ்வாறு இன்புடனமர்ந்து இரவலர்களுக்கும் வறியவர்களுக்கும் செம்பொன்னை மழைபோலப் பொழிந்தனர்; திருந்தும் வெற்றியுடனே பொருந்தினர்; தேவரும்போற்றத் தம்பெருமானுருக்குச் சிவவேள்விகள் பலவற்றையும் செய்து விளங்கினர்.

இவ்வாறு இவர் ஒழுகும் நாளில், திருவாலவாயிறைவர் தம்மை அன்பினால் இசைப்பாடலிற் பரவும் பாணர் பத்திரனுருக்கு நல்ல பெருஞ் செல்வம் நல்கவும், அதன்மூலம் சேரனுருக்கும் அருளவும் திருவுளங்கொண் டருளினர்; , " எதிரில் செல்வத்துக்கேற்ற பெருநிதி கொடுக்க " என்ற கருத்துடைய, " மதிமலிபுரிசை " என்று தொடங்கும் வாசகம் வரைந்ததிருமுகத்தைசேரனுருக்குப்பாணபத்திரனுர்பால் கொடுத்து அனுப்பினர். அவரும் வந்து அறிவிக்க வணங்கி அத்திருமுகத்தை வாங்கி ஏற்று வாசித்துப் பூசித்தனர்; மனமுருகினர்; திருவருளைப் போற்றினர்; பத்திரனுரையும் வணங்கினர். தமது பண்டாரத்தில் இருந்த அளவற்ற நிதியங்களை யெல்லாம் பொதிசெய்து கொணரச் செய்தனர். ஆளின்மேலேற்றி அவற்றையும் யானை குதிரை முதலாகிய உயிருள்ளதனங்களையும் நான்செய்கின்ற இவ்வரசையுங்கொள்ளுங்கள் என்று வேண்டினர். பத்திரனுர் இவற்றைக் கண்டு மகிழ்ந்தனர்; அதிசயித்தனர். "இவற்றுள் எனக்கு வேண்டுவனவற்றை அடியேன் கொள்வேன்; ஆணையரசும் அரசுறுப்புக்களாகிய படை முதலியவற்றையும் தேவரீரே கைக்கொண்டருளும்" என்று வணங்கினர்; வேண்டுவனவற்றைக் கொண்டு யானைமேல்கொண்டு பத்திரனுர் திருவாலவாயினுக்குச் சென்று சேர்ந்தனர்.

(திருவால வாயுடையார் திருமுகம்)

சேரனுர் தொழுது அவரிடம் விடைகொண்டு இறைவர் அடிமை கொண்டருளும் வகைகளை நினைந்து பணிந்து மனமுருக ஏத்தி அரசு புரிந்திருந்தனர். எல்லாவுயிர்களும் கழறியவற்றை யெல்லாம் அறிந்து, அவற்றின் மனத் துயரங்கள் ஒன்றும் ஒழியாவகை நீக்கிக், களவு கொலை முதலான குற்றங்களைக் கடிந்து, பாண்டியர் சோழர்களுடன் கலந்த நண்போடும் அரசு புரிந்திருந்தனர். அக்காலத்தில் ஒருநாள் தமது பூசை முடிவில் என்றும் கேட்கும் சிலம்பொலி கேளா தொழிய மதி மயங்கினர். பூசையினை விரைவில் முடித்து, அடியேன் பிழைத்தது என்னே? உமது பூசை வழிபாட்டர்ச்சனையின்றி வேறு இன்பம்யாதுளது?" என்று பொருமி வருந்தி உடைவாளை உருவிமார்பினிலுட்டவே, இறைவர் திருச்சிலம்பி னோசையினை மிகவும் கேட்பித்தருளினர். கேட்பிக்கவே உடைவாளை விட்டுத் " தேவரீர் திருவருள் முன்செய்யா தொழிந்த தென்னை ?" என்று இறைவர்பால் விண்ணப்பித்தனர். இறைவர் அசரீரிமொழியாலே "திருவம்பலததினிடையே நமது அருட்கூத்தினை வணங்கி, வன்றொண்டர், ஒன்றிய உணர்வினுலே உரைசேர் பதிகம்பாட, அதனை நின்று கேட்டு, வரத்தாழ்த்தோம் " என்று அவரை நினைப்பிக்கும் வகையினுலே அருளிச் செய்தனர். அதனைக் கேட்ட சேரனுர் " இவர் அடியார்க்கருளும் திறந்தான் என்னே ? என்று அற்புதமடைந்தனர்; சென்று பொன்னம்பலத்தினை இறைஞ்சவும் தமக்கொப்பில்லாத வன்றொண்டரைக் காணவும் மனங்கொண்டனர் சேரமானுர்.

(சிலம்பொலி கேளாமையும் நம்பிகளை நினைப்பிக்கப் பெறுதலும்)

அவ்வாறே நன்னாளில் நல்ல ஓரையினில் திருவஞ்சைக்களத்து இறைவரை வணங்கி அருள் விடைகொண்டு பயணமெழுந்து போந்தனர். வேண்டுவாரை

உடன் கொண்டு பயணம் புறப்பட்டு மலைநாடு கடந்து, கொங்கர் நாடும் கடந்து சோழ நாட்டிற் போனார்; சென்ற திசை யெல்லாம் அடியார்கள் எதிர்கொண்டு சிறப்புச் செய்தனர். குறுநில மன்னர்கள் இடங்கள் தோறும் குறைவறுத்தனர். இவ்வாறு சென்று வழியிடைப்பட்ட சிவதலங்களை வணங்கிக்கொண்டு போய்க் காவிரியினைக் கடந்து வடபாற்கரை எறித் தில்லைத் திருநடனங் காண உருகும் மனதுடன் சென்றார். தொண்டர் குழாம் எதிர்கொள்ள வணங்கி அத்திருநகரினுட் புகுந்து, திருவீதி வணங்கிப் பேரம்பலத்தினை வணங்கித் திருச்சிற்றம்பலத்தின்முன் அணைந்தனர்; இறைவர் அளவிலின்பப் பெருங்கூத்தாட எடுத்த கழல் காட்டியருளக் கண்டு, ஆராத ஆசையானந்தக் கடலுள்ளே யமர்ந்தனர்; அருளினாலே இறைவரைப் போற்றிப் பொன்வண்ணத் திருவந்தாதியினைப் பாடியருளித் திருவடிக் கீழே வணங்கி விண்ணப்பித்து இறைவரைக் கேட்பித்தனர். அதற்குப் பரிசிலாக இறைவரும் தமது காற்சிலம்போசை கேட்பித்தருளினர். அதனைக் கேட்டு அளவிலின்ப ஆனந்தங்கொண்டு கும்பிட்டிருந்து புறம் போந்து அங்குப் புறத்து வைகியருளினார். இவ்வாறு பல நாட்கள், ஆறுவாராது திருக்கூத்தினை ஆராமைபாற் கண்டு பணிந்தேத்தி யின்புற்றிருந்தனர். அந்நாட்களில், இறைவர் சிலம்பொலி தாழ்த்து நினைப்பித்தருளிய திருநாவலூர் நம்பிகளை நினைந்துகொண்டு அம்பலவரை வணங்கி அருள் விடைபெற்றுப் புறப்பட்டனர். இடையில் சீகாழியையும், மற்றும் திருக்கோயில்கள் பலவற்றையும் வணங்கிக்கொண்டு திருவாரூரிற் சென்றணைந்தனர். நம்பிகளும் அதன் முன்பு திருநாகைக்காரோணம் முதலாகிய பதிகளை வணங்கிக்கொண்டு மீண்டு திருவாரூரில் வந்து எழுந்தருளியிருந்தனர். சேரர் பெருமான் வரவு கேட்ட நம்பிகள் அவரை வரவேற்று எதிர்கொண்டனர்; அதுகண்டு சேரனார் அவர் முன்பு நிலமுற வணங்கி வீழ்ந்தனர்; அவரை நம்பிகள் பணிந்தெடுத்து இருவருயிரும் உடம்பும் ஒன்றாம் என்னும்படி ஆரத் தழுவிக்கொண்டனர். இதனால் சேரமான் றோழர் என்னும் மேன்மை நாமம் நம்பிகளுக்கு வந்து வழங்கலாயிற்று. நம்பிகள் அவரை உடன்கொண்டு திருக்கோயிலுக்குச் சேர்ந்தனர். அவர் இறைவரை வணங்கித் திருவாரூர்த் திருமும்மணிக்கோவையினை அருளிச் செய்து நம்பிகள் முன்பாக இறைவரைக் கேட்பித்தார்; தம்பெருமானாரும் அதனை ஏற்றுக்கொண்டருளினர். பின் நம்பிகள் சேரலனாரைப் பரவையாரது திருமாளிகைக்கு அழைத்துச் செல்ல அங்குப் பரவையார் உரியவாறு அவரை எதிரேற்று உபசரித்துத் திருவமுதமைத்து அவருக்கும் நம்பிகளுக்கும் உடன்வந்த பரிசனங்களுக்கும் விருந்தளித்தனர். நம்பிகளும் சேரமானாரும் ஒக்க உடனிருந்து அமுது செய்தருளினர். இவ்வாறு பூசனைகள் எல்லாம் கொண்டு சேரமானார்நம்பிகளுடனே கூடிப் புற்றிடங்கொண்ட பெருமானாரையும் வீதிவிடங்கப் பெருமானாரையும் வணங்கி இனிதமர்ந்தருளினர்.

பொன்னம்பலம் வணங்குதல்; பொன்வண்ணத் தந்தாதி; நம்பிகளைக் காணல்

அந்நாளில், நம்பி ஆரூர் இறைவரது பதிகள் பலவற்றையும் வணங்கிப் பாண்டி நாட்டில் மதுரை முதலான பதிகளை வணங்க நினைந்தருளினார்; சேரனாரும், நம்பிகளைப் பிரியா நிலைமையாலும், மதுரைத் திருவாலவாயுடையார் தமக்கு அளித்தருளிய திருமுகத்தால் அவரை வணங்கச் சார்தற்கு எழுந்த அருட் குறிப்பினாலும் தாமும் உடனே செல்லத் துணிந்தனர். இருவர் திருவுள்ளமும் இவ்வாறு இசைந்த பொழுது எழுந்து திருவாரூர் இறைவரைச் சென்று வணங்கி அருள்விடைபெற்று, வேண்டும் பண்டாரங்களுடன் பரிசனங்கள் உடன்போதச் சென்று, திருக்

நம்பிகளுடன் பாண்டி நாட்டு யாத்திரை

கீழ்வேளூரும் திருநாகைக்காரோணமும் பணிந்தனர். அதன்பின் திருமறைக்காட்டினை அணைந்தனர். அங்கு வேதங்கள் பூசித்துத் திருக்காப்பிட்ட திருவாயிலினைத் திறக்கவும் அடைக்கவும் பாடியருளிய அரசினையும் பிள்ளையாரையும் நினைந்து வணங்கினர். நம்பிகள் "யாழைப் பழித்தன்ன மொழி' என்று தொடங்கும் திருப்பதிகம் பாடி வணங்கச் சேரனார் தமது திருவந்தாதியிற் போற்றியவற்றையேபாடிப் போற்றினர். அதன்பின் கோடிக் குழகரை வணங்கி, நம்பிகள், "கடிதாய்க் கடற் காற்று வந்தெற்ற" என்ற பதிகம் பாடி அதனுள் காடுகாள் புணர்ந்த தன்மையினை வைத்துப் பாடியருளினர். அதன்பின் சோழநாட்டுப் பதிகளை வணங்கிப், பாண்டி நாடு சார்ந்து, திருப்புத்தூரினை வணங்கி, மதுரை மூதூரை அணைந்தனர். சோழ அரசர் பாண்டியனாரின் மகளாரை மணந்து முன்னரே மதுரையில் வந்திருந்தனர். சோழ பாண்டியரிருவரும் நம்பிகளுடன் சேரமன்னர் எழுந்தருளுதல் கேட்டு நகரலங்கரித்து அவர்களை எதிர்கொண்டு எல்லவரும் திருவாலவாய்க் கோயிலினை வணங்கி வழிபட்டனர். நம்பிகள் திருப்பதிகம் பாடி வணங்கினர். சேரலனார் இறைவர் திருமுன்புநின்று "அடியேனையும் பொருளாக அளித்த திருமுகக் கருணை முடிவேதென் றறிந்திலேன்" என்று உரைதடுமாறத் துதித்துக் களிகூர்ந்தார். இவ் விருவருக்கும் பாண்டியனார் தமதுதிருமாளிகையிற் குறைவறுத் துபசரித்தனர். இவ் வாறு சேரருடன் வன்றொண்டர் இருந்தஇடத்து வந்துசோழ பாண்டியர்கள் விருப் புடன்அளவளாவிக் கலந்து இனிதிருந்தார். அந்நாளில் முடிமன்னர் மூவரும் உடன் போத, நம்பிகள் திருப்பூவணத்துக்குச் சென்று, "திருப்பூவணமீதோ" என்று பாடி அணைந்து பணிந்தனர். பின்னர்த் திருவாலவாயின் மீண்டு எழுந்தருளி யிருந்து திருவாப்பனூர், திருவேடகம் முதலான பதிகளை வணங்கி, மீண்டு மதுரையில் அணைந்திருந்து, திருப்பரங்குன்றினை அணைந்து வணங்கித் திருவடிக்கீழாட்செய்யும் அருமையினை நினைந்து நம்பிகள் பாடுவாராகிக் "கோத்திட்டை" என்று தொடங் கிய திருப்பதிகத்தினை முடிமன்னர் மூவர்களின் முன்பே பாடியருளினர். அவர் களும் திருத்தொண்டி னருமையினைக் கேட்டு அஞ்சி நம்பிகளைப் பணிந்து வாழ்ந் தனர். பின்னர் நம்பிகள சேரனாருடனே பாண்டி நாட்டுப் பிற பதிகளையும் வணங்க நினைந்து புறப்படவே, சோழ பாண்டியரிருவரும் தென்னாட்டில் வேண்டுவன செய்தமைப்பாரை ஏவி விடுத்து விடைகொண்டு மீண்டனர். பின்னர் நம்பிகள் திருக்குற்றாலத்துக்கு வந்து கூத்தரை வணங்கிக் குறும்பலாவையும் தொழுது ஏத்தித், திருநெல்வேலியை அணைந்து வணங்கிப் பாடிப், பின், திருவிராமேச்சரத்தில் சேர்ந்து வழிபட்டுப் பாடி அங்கமர்ந்தருளினர். அந்நாளில் ஈழநாட்டுத் திருக்கேதீச்சரத்தினை அங்கிருந்தவாறே கண்டு வணங்கிப் பதிகம் பாடிபின்னர்த் திருச்சுழியலினைச் சேர்ந்து "ஊனாய்உயிர்" என்னும் பதிகம் பாடியமர்ந்தனர். அவ்வூரில் இரவு நம்பிகளுக்குக் கனவின்கண் இறைவர் காளையாம் திருவடிவாற் கையிற் பொற்செண்டும் திரு முடியிற் சுழியமுடன் எங்குங் காணாததொரு திருவேடங் காட்டி "நாமிருப்பது கானப்பேர்" என்று அருளி மறைந்தருளினார்; நம்பிகளுணர்ந்து எழுந்து அதிச யித்து அதனைச் சேரனாருக்குச் சொல்லித் " திருக்கானப்பேர் சென்று தொழப் பெறுவ தென்று கொலோ ?" என்ற கருத்துடைய திருப்பதிகத்தினை அருளிச் செய்து அப்பதியில் அணைந்தனர். அங்கு இறைவரை வணங்கிப் பாடிச் சிலநாள் அமர்ந்த பின் திருப்புனவாயிலை யடைந்து "சித்த நீநினை" என்ற திருப்பதிகம் பாடி வணங்கினர்

பின்னர் அங்கு நின்றும் மலையும் கானும் கடந்து சோழ நாட்டினைச் சேர்ந்து பாம்பணிமாநகரத்தினை அணைந்து பாதாளீச்சரத்தில் இறைவரை வணங்கிக்

**திருவாரூரில் அணைதல்**

கொண்டு சென்று திருவாரூரினை அணைந்து இறைவரை வணங்கித் திருமாளிகையை அணைந்திருந்தனர். பரவையார் அரசர்க்கேற்றபடி திருவமுது செய்வித்து விருந்தளித்தனர். தோழர்களிருவரும் செண்டாடும் தொழில் செய்தும், சிறு சோற்றுச் சிறப்பும் உண்டும், வாரணப்போரும் கண்டும் இவ்வாறு இனிதாக அமர்ந்தனர். அந்நாளில்

**நம்பிகளுடன் சேரனார் மலைநாடு சேர்தல்**

நம்பிகளையும் உடன் கொண்டு தமது மலைநாட்டுக்கு எழுந்தருள வேண்டுமென்று சேரலனார் எண்ணி, அவரைப் பலநாள் இரந்து வேண்டினர்; அவரும் இசைந்தருளப் பரவையாரது திருவுள்ளத் திசைவும் கொண்டு மகிழ்ந்து, அடியார்களுக்கு ஏற்ற பூசை செய்து, இறைவரை வணங்கி அருள்விடைபெற்று இருவரும் பயணமாகப் புறப்பட்டுத் திருவாரூரினைத் தொழுது மேல்பாற் சென்றனர்.

காவேரித் தென்கரை வழியாகச் சென்று இறைவர் கோயில்கள் பலவற்றையும் வணங்கிப் போய்த் திருக்கண்டியூர் தொழுதனர். அதற்கு எதிர்க்கரையிலே திருவையாறு தோன்ற அதனை வணங்க விரும்பிச் சேரனார் நம்பிகள்பால் வேண்டினர். அப்போது காவேரி மிகப்பெருக்கெடுத்து ஓடங்கள்செல்லாவகை மிகுந்ததனைக் கண்டு நம்பிகள் தரியாது "பரவும் பரிசொன் றறியேனான்" என்று "ஐயாறுடைய அடிகளோ!" என இறைவரை அழைத்துப் பாடியருள, ஐயாற்றின் இறைவர் சராசரங்கள் எல்லாங் கேட்க "ஓலம்" என்று எதிர் ஒலி கேட்பித்தருளினர். பொன்னியாறு இருபிரிவாய்ப் பிரிந்து வழிகாட்டிற்று. மேல்பால் நீர் தடையுண்டு பளிங்கு மலைபோல நின்றது; கீழ்பானீர் வடிந்தது; நடுவே குளிர்ந்த மணல்வழி காணப்பட்டது. இறைவரை வணங்கி அதன் வழியே இருவரும் சென்று திருவையாறப்பரை வணங்கி மீண்டனர். பின் ஆறு முன்போலத் தொடர்ந்து பெருகி ஓடிற்று. இவர்கள் திருவருளைத் துதித்து மேற் சென்று பல பதிகளையும் தொழுது கொங்குநாடு கடந்து மலைநாட்டினை அணைந்தனர். வழியிலே அதன் வளங்களையெல்லாம் கண்டு சென்று, கொடுங்கோளூரினை அணைந்தனர்; அலங்காரங்களுடனும் விழாச் சிறப்புக்களுடனும் விளங்கிய அந்நகரினுட் சென்று திருமாளிகையிற் சேராது திருவஞ்சைக்களத்தில் அணைந்து இறைவரை வழிபட்டனர். அங்கு "முடிப்பது கங்கை" என்ற திருப்பதிகத்தினை நம்பிகள் பாடியருளி வணங்கினர்; அதன்பின் நம்பிகளைப் பிடிமேல் ஏற்றிச், சேரலனார் தாமும் பின் இருந்து சாமரையிரட்டி, நகர்வலமாகக் கொடுங்கோளூரை அணைந்து திருமாளிகையில் வந்தனர். நம்பிகளைச் சிங்காசனத்தின்மேல் எழுந்தருளுவித்துச் சேரனார் தமது தேவிமார்கள் கரகநீர் வார்க்க நம்பிகளது பாதம் விளக்கிப் பூசனை வகைகள் பலவும் செய்து ஒக்க உடன்திருவமுது செய்வித்தனர். சாந்து, ஆடை, மாலை, அணிகள் முதலியவற்றால் உபசரித்தனர். பாடல் ஆடல்பயிறல், ஆராமங்கள் வைகுவித்தல், செண்டாடுதல், நீர் விளையாடல், யானைப்போர், மற்போர் முதலிய விநோதங்களினால் நம்பிகளை மகிழ்வித்துப் பலநாள் சேரலனார் மகிழ்ந்தனர்.

**நம்பிகள் திருவாரூரை மிக நினைந்து புறப்படுதல்**

அந்நாள்களில் ஒருநாள் நம்பிகள் திருவாரூரை மிக நினைந்து மனமாற்றாது "ஆவியை ஆரூரானை மறக்கலுமாமே" என்ற கருத்துடைய "பொன்னுமெய்ப் பொருளுந் தருவானை" என்ற திருப்பதிகத்தினைப் பாடித் திருவாரூருக்குப் புறப்பட்டனர். சேரலனார் உள்ளுருக உடன் எழுந்து தொழுது பிரிவாற்றாது பின் சென்று கண்ணீர்வார மனமழிந்து "உமது பிரிவாற்றேன் என் செய்வேன்" என்ன, நம்பிகள் "நான் திருவாரூரைப் பிரிந்திரேன்; நீர் உமது

பதியின்கண் இருந்து அரசளிப்பீர்" என்றருளி விடைகொடுத்துப் புறப்பட்டனர். சேரனார் மந்திரிகளை நோக்கி "நமது பண்டாரத்தில் இதற்கு முன் புகுந்த நற்பொருள்களை எல்லாம் பொதிசெய்து ஆளின்மேலேற்றிக் கொணர்க" என ஏவ, அவர்களும் அவ்வாறே கொணர, அவற்றை முன்னே பரிசனங்கள்பால் ஏவிப் போக்கி, நம்பிகள், அரசரைத் தோளுறத் தழுவி விடையளித்துப் புறப்பட்டனர். மலைநாடு கடந்து கற்சுரமும் கான்யாறும் நெடுங்கானும் பல கழிய நம்பிகள் கொங்குநாட்டில் திருமுருகன்பூண்டி வழியிலே செல்கின்றார். இறைவர் நம்பிகளுக்குத் தாமே பொன் கொடுப்பதல்லாமல் பிறர் கொடுப்ப அவர் கொள்ளாமைப் பொருட்டு அப்பொருள்களை வாங்கித் தாம் கொடுப்பதற்காகவோ? நாம் அறியோம்; இறைவரருளால் சிவபூதகணங்கள் வேடர் வடிவுடன் வந்து வில்வாங்கிக் கொடுமொழி கூறி வெருட்டி நம்பிகளின் பரிசனங்கள்பால் இருந்த தனங்கள் முழுமையும் கவர்ந்து சென்றனர். நம்பிகள்பால் அவர்கள் அணையாமே நீங்கிவிட, நம்பிகள், திருமுருகன் பூண்டியினிற் சென்று இறைவரை வணங்கி "வேடர் வழிபறிக்கும் இக்காட்டில் எல்லை காப்பதில்லையாகில் நீர் முயங்கு பூண்முலை மங்கை தன்னொடும் எத்துக் கிங்கிருந்தீர்?" என்று, "கொடுகு வெஞ்சிலை" என்ற பதிகம் பாடியருளினர். இறைவர் திருவருளால் பூதகணங்கள் அப்பொருள்களை யெல்லாம் திருவாயிலின் முன் கொணர்ந்து குவிக்க, அவற்றை அப்படியே ஆரூரர் கைக்கொண்டனர், அப்பொதிகளை ஆட்களின் மீது ஏவி விடுத்து நம்பிகள் அந்நாடகன்று போய்த் திருவாரூரணைந் திருந்தனர்.

நம்பிகளை நினைந்தவாறே சேரலனார் தமது பதியில் அரசு புரிந்தமர்ந்தனர்.

பிற்சரிதம் பின்னர் நம்பிகள் மலைநாட்டுக் கெழுந்தருளும் போது அவர் யானையின் மீதேறித் திருக்கயிலைக்குச் செல்ல, அவர் முன்னே தம் குதிரையைச் செலுத்திச் சேனையுடைய சேரனாரும் திருக்கயிலையணையும் திருத்தொழிலினைப் பின்னர் உரைப்போம்.

தலவிசேடம்:— திருவஞ்சைக்களம் - கொடுங்கோளூர் - முன் "முடிப்பது கங்கை" (3893) என்ற பதிகத்தின் கீழ் உரைக்கப்பட்டது.

---

கற்பனை:—(1) உறுதிப் பொருள் நான்கிற்கும் உதவியாகும் இடங்கள் வெவ்வேறு வகுத்து விளங்குதல் சிறந்த நகரங்களின் சிறந்த அமைப்பு (3750).

(2) வேதநெறி பிறழாத நல்லொழுக்கத்துச் சிறந்துவாழும் சாதி நான்கும் தத்தம் நிலையிற் றழைத்து வாழ்வது நகரச் சிறப்புக் காட்டும் (3751).

(3) பெருமாக் கோதையார் (சேரமான்) முடிசூடுமுன் இளவரசரா யிருந்த போது, கொடுங்கோளூரில் அரசமாளிகையில் தங்கி அரசவாழ்விற் பயிலாமல், இறைவரது திருவஞ்சைக் களத்திற் றங்கிச் சரியைத் திருப்பணி பலவும் இறைவர்பாற் சாரச் செய்து வாழ்ந்தனர். இது முன்னைச் செய்தவத்தின் வழிவந்த அன்பினாலாகியது (3754 - 3756).

(4) சேரர்மரபில் முடிமன்னர்களுள் அரசு புரியுங்கால் அதனை வெறுத்து நீங்கித் தவஞ்சாரும் பெருமக்களும் உண்டு (3757); ஐயடிகள் காடவர்கோன் நாயனார் (சோழர்) சரிதம் காண்க.

(5) தம் அரசமரபின் உரிமை வழியால் முடிசூடி அரசாளும் நிலை தம் மேல் வந்தது என்று மந்திரிகள் திருவஞ்சைக் களத்தில் வந்து அறிவித்தபோது இது திருத்தொண்டுக் கிடையூறாகும் என்று வருந்தினர் பெருமாக்கோதையார்; இஃது

அவரது முற்செய் தவப்பயனாலாகியது. மனித இயல்புக்கு மேற்பட்ட தெய்வத் தன்மையாகிய பெருமையினைக் காட்டுவது.

(6) அன்பு நிலையின் வழுவாமல் அரசு புரக்கும் அருள் உண்டாயின் இறைவர் பாற் கேட்டறிவேனென்று திருவஞ்சைக்களத்து இறைவர்பால் விண்ணப்பம் செய்தனர் சேரமான் பெருமாள் (3760). "இறைபணி வழுவாது நிற்க" என்றும், "அவனருளா லல்லது ஒன்றையுஞ் செய்யானாகவே அஞ்ஞான கன்மம் பிரவேசியா வாகலான்" என்றும் வரும் சிவஞான போதம் 10-ம் சூத்திரம் இரண்டாம் அதிகாணக் கருத்துக்களுக்கு இவர் இலக்கியமாய் விளங்கினர்.

(7) சேரனார் விரும்பிக் கேட்டவாறே வழிபாடு வழுவா நிலைபுடனே, யாவும் யாருங் கழறினவு மறியும் அறிவும் கெடாத வலிமையும், தடைபடாத ஈகையும், படைவாகன முதலான அரசர்க்குரிய உறுப்புக்களும் இறைவரருளாப் பெற்றனர். இந்த தெய்விக அரசாட்சி நிலை. (3761).

(8) அரசன் தன் கீழ்வாழும் எல்லாவுயிர்களின் இன்ப துன்பங்களையும் அறிந்து அவற்றின் உளமன்னிய துயரம் ஒன்று மொழியாமற் காத்து முறை செய்ய வேண்டும் கடமையுடையவன். அரசின் கீழ்வாழும் மனிதர்க்கு மட்டும் அரசன் அரசாட்சி புரிவன் என்பது தவறு (3761); மனுநீதிச் சோழர் சரிதமும் நினைவு கூர்தற்பாலது.

(9) முடிசூடி அரசபவனியாக யானைமீது வரும் சேரனார் ஒரு வண்ணான் எதிரே வர, அவனது உவர்மண் ஊறி மேனி வெளுத்த வடிவுகண்டு, சிவனடியார் வேடம் என்று உணர்ந்து யானையினிறங்கி அவனை யிறைஞ்சினர்; அரசபோகத்தினும் சிவன் அடிமைத் திறமே பெரிதெனை எண்ணிய மனநிலை உலகில் வருதல் மிகவும் அரிது.

(10) பின்னர் அவன் அடியாரன்று; வண்ணானென்று கேட்டபோதும் அடியார் வேடத்தை நினைப்பித்த பெருமைபற்றிய போற்றினார். இந்த அன்பின் உறைப்பானிகழும் நேர்மை.

(11) அரசாட்சி மனுநீதி தவறாது செய்தல் வேண்டும்; அகப்பகை புறப்பகைகளை அறுத்துத் திருநீற்று நெறியும் வேதங்களும் வளரும்படி செய்தல் வேண்டும் (3769).

(12) ஓர் அரசனுக்கு அரசால்நிகழ் பயனும் நிறைதவமும், தேடும் பொருளும் அம்பல வாணரது ஆடுங்கழலேயாம்; (3770).

(13) சேரமானார் அரசாட்சி செய்தவாறே வழுவாத சிவபூசையும் செய்து வந்தனர். இறைவர் அதனை ஏற்றுச் சிலம்பொலியும் கேட்பித்தனர். இது தவத்தான் வரும் அன்பின் பெருமை; இதனை உலகம் படியெடுத்தொழுகற்பாலது (3770—3771).

(14) திருவாலவாயுடைய பெருமான் பாணபத்திரனாருக்கு நன்மை நீடு பெருஞ்செல்வம் நல்கவேண்டிச் சேரமானாருக்குத் திருமுகந் தந்தருளினர். அதனை அவருக்குச் செய்த அருளன்றித் தமக்கு இறைவர் செய்த பேரருள் என்று கொண்டு சேரனார் மனமுருகி வணங்கினர். இது கொடை கொடுப்போரின் சிறந்த மனநிலை; கொடை பெறுவோன் தனது கொடையினால் நன்மையடைகின்றான் என்பதன்றி கொடுக்கும் பேறு எனக்கு வாய்த்தமையால் நான் நன்மை யடைகின்றேன் என்று எண்ணுதல் எளிதில் வருவதன்று; இறைவர் அடிமைகொண்டருளும் பான்மையருளின் பெருமையினை நினைந்து பலகாற் பணிந்தேத்தினர் சேரனார் (3786).

(15) இறைவர் திருமுகந் தந்தருள அதற்கீடாகத் தமது அரசுறுப்பும், அரசும் கொள்க என்று பாணனாருக்குத் தந்தனர் சேரனார் (3782); திருவருளுக்கு அன்பினையன்றி வேறு எதுதான் இணையாகும்?. "முட்டில் அன்பரன்பிடுந் தட்டுக்கு முதல்வர், மட்டு நின்ற தட்டருளொடும் தாழ்வுறும் வழக்கு" (536) என்று அமர்நீதியார் வரலாற்றில் இறைவர் இதனைத் துலைக்கோலால் நிறுத்து அளந்து காட்டியருளிய நிலை இங்கு நினைவு கூர்தற்பாலது.

(16) பூசை முடிவில் இறைவர் நாடோறுங் கேட்பித்த சிலம்பொலியினை ஒரு நாட்கேளாதொழிய மதிமயங்கி இறைவரது திருவருளுக் கிலக்காகாது வாழ்வதனினும் இறந்துபடுதலே மேலென்று கொண்டு உடைவாளை மார்பினில் நாட்டினர் சேரமானார். இறைவனையும் மறந்து, அவர் கணந்தோறும் பிரியாதுடனின்று செய்யும் அருளினையும் மறந்து, உயிர் சுமந்து வாழ்ந்து கழியும் உலக மாக்கள் இதனைக் குறிக்கொள்வாராக. (3789); "பேசாத நாளெல்லாம் பிறவா நாளே" என்பது அரசுகளது ஆணை.

(17) நாடோறும் பூசை முடிவிற் கேட்பிக்கும் சிலம்போசை ஒரு நாளில் இறைவர் தாழ்ப்பித்தருள, அதனை என்னென்று கேட்க, வன்றொண்டர் பாட்டைக் கேட்டு நின்றமையே காரணம் என்று இறைவர் அருள, அற்றாயின் அவரைக்காண வேண்டுமென்ற பேரன்பு சேரனார்பால் நிகழ, அவ்வாறே சென்று கண்டு பிரியா நட்புக்கொள்ள, அதுவே யாறாக இறுதியில் இருவரும் ஒருங்கே திருக்கயிலை செல்ல, அங்குச் சேரனார் திருவாயிலில் தடைபட, நம்பிகள் இறைவர்பால் விண்ணப்பிக்க, இறைவர் அருளினால் அழைக்கப்பெற்று அவரும் அருள்சார, என்று இத்துணையும் நிகழ்வதற்கு ஏதுவாகி விளைந்த திருஅருட்டன்மைகள் கருதி அழுந்தி அறிதற்பாலன. "ஆட்பாலவர்க் கருளும் வண்ணமு மாதி மாண்பும் கேட்பான் புகி லளவில்லை, கிளக்க வேண்டா" (தேவா). "அவனை நினைப்பிப்பார் தாழ்த்தோம் என்றார்" என்ற ஆசிரியர் இதனைக் குறிப்பால் விளக்கியருளுதலும் (3791), "என்னே யடியார்க் கிவரருளுங் கருணை யிருந்தவாறென்று" (3792) சேரனார் பாராட்டி வணங்குதலும் உளங்கொளற்பாலன.

(18) அம்பலவாணர் ஆடஎடுத்த கழல் காட்டப்பெற்ற போது, உளமும்புலனு மொருவழிச் சென்றுருகப் போற்றி யுய்கின்றார் அவரது உலகுக்களித்த கருணையினை வழுத்தினார். இது பெரியோர் மனங்கொண்டு வணங்கி வழிபடும் முறை; எந்தம் பரமாசாரியர்கள் வணங்கி வழிபட்ட அனுபவ நிலைகள் எல்லாம் இங்கு நினைவு கூர்ந்து நாமும் அவ்வாறே வழிப்பட முயலுதல் அறிவுடைமையாகும் (3802).

(19) தமக்கு நாளும் பொருள் சுரந்து சிலம்பொலி கேட்பித்த கருணைக்காகப் பொன்னம்பலவாணர்மீது தில்லையில் பொன் வண்ணத்தந்தாதி பாடித் திருவடிக்கீழ் விண்ணப்பித்தார் சேரமானார்; இவ்வாறே பின்னர் நம்பிகளது ஆருயிராய் நட்பினை அருளியதன் பொருட்டு அவரது உயிர்க்குயிராகிய நாயகராகும் திருவாரூர்ப் பெருமான்மேல் திருமும்மணிக்கோவை பாடி அவர்முன் நன்மை விளங்கக் கேட்பித்தருளினர்; அதன்மேல் இறுதியில் திருக்கயிலை செல்கின்ற வழியில் அவ்விறைவர்மேல் ஞானத் திருவுலாப்புறம் பாடி அவரருளினால் திருமுன்பு விண்ணப்பித்துக் கேட்பித்தனர். இவ்வாறு தமது தெய்வப்புலமையினை இறைவர்பால் ஒவ்வோர் காரணம் பற்றித் திருவருளுக்கே பயன்படுத்திய தன்றி வேறு செய்யாத சேரனாரது அருட்புலமை யொழுக்கம் புலவருலகம் கண்டுயதற்பாலது (3803).

(20) மதுரையிறைவர் தமக்களித்த திருமுகக் கருணை பற்றிச் சென்று வணங்கவும், நம்பிகளது பிரிவாற்றாது உடனிருக்கவும் விரும்பிச் சேரமானார் நம்பிகளது

சோழநாடு பாண்டி நாடுகளின் யாத்திரையில் அவருடன் பிரியாது பின்பற்றிச் சென்றனர். இஃது இறைவர் தம்பாற் "செய்யாமற் செய்த வுதவி"க்கு நன்றி மறவாத அன்பின்றிறமும் நண்பின் றிறமுமாம்.

(21) கோடிக்குழகர் கடிதாய்க் கடற்காற்று வந்தெற்றக் கடற்கரையில் அய லிற் குடிகள் ஒருவருமில்லாது தனியே யிருத்தலைக் கண்ட நம்பிகள் மனம் வருந்திக் "கொடியேன் கண்கள் கண்டன" என்று கண்ணீர் வார வருந்தி நின்றனர். இஃது ஒன்றித்த அன்பின் மிக்க பெருக்கினாலன்றி யியலாது (3836).

(22) முடிமன்னர்களாகிய தமிழ் மூவேந்தர்களும் தம்மை வணங்கி உடன் வரச் சென்று நம்பிகள் திருவாலவாய், திருப்பூவணம், திருப்பரங்குன்றம், திருவேடகம், திருவாப்பனூர் முதலிய பதிகளை வழிபட்டு வணங்கினர்; இறைவர்க்குத் தொண்டு புரியும் அருமையினை அஞ்சி உலக அரசர்களாகிய அவர்களுக்குத் திருத் தொண்டின் மேன்மையினை உபதேசித்தருளினர். அரசபோகங்கள் நம்பிகளுக்கு வறியவாய் நிலையற்றனவாய்த் தோன்றின. சிவன்றிருத்தொண்டே அவர்பால் நிலை பெற்ற இன்பமாய் நிகழ்ந்தது. "இறைகளோ டிசைந்த வின்ப மின்பத்தோ டிசைந்த வாழ்வு, பறைகிழித் தனைய போர்வை" என்பது அவர் திருவாக்கு. நம்பிகளது இவ்வுண்மைநிலை கூர்ந்து நோக்கிப போற்றி உலகினராற் பின்பற்றப் பாலதாம்; (3842 - 3843 - 3846 - 3847 - 3849 - 3851)

(23) ஒரு தலத்தை நேரிற் சென்று வழிபட்டு வணங்க இயலாதபோது இருந்த இடத்திலிருந்தபடியே அதனை நினைந்து வணங்கி வழிபடுதல் நேரில் வழி படும் அப்பயனையே தரும்; நம்பிகளும் சேரமானாரும் திருவிராமீச்சரத்திருந்த வாறே ஈழநாட்டுத் திருக்கேதீச்சரஞ் சார்ந்து தூரத்தே தொழுதமர்ந்தனர் என்பதன் உண்மைத்திறம் நாடிக் காணத் தக்கது. (3856).

(24) நம்பிகளுக்குத் திருச்சுழியலில் கனவின்கட் காட்சிதந்து நினைவூட்டினர் திருக்கானப்பே ரிறைவர். இவ்வாறு வலியவந்து பக்குவான்மாக்களை நினைவூட்டி யும் ஆட்கொண்டு உலகுய்ய வைப்பது இறைவரது பெருங்கருணைத் திறமாம். ஆளுடையபிள்ளையாருக்குத் திருவாலங்காட்டில் கனவிடை வந்து "நம்மைப் பாடு தற்கு அயர்த்தனையோ?" (2907) என்றருளி நினைப்பித்தருளிய வாலாறும், திரு வதிகைப் புறத்துச் சித்தவட மடத்திற்றுயிலும் நம்பிகள் திருமுடிமேற் றிருவடியினை இருமுறையும் சார்த்தி "நம்மை அறிந்திலையோ?" (233) என்று அறிவித்துக் கரந்தருளியதும், இவ்வாறு வருவன பிறவும் இங்கு நினைவுகூர்தற்பாலன.

(25) நம்பிகளது திருப்புனவாயிற் றிருப்பதிகத்தினுள் அருளிய நாட்டியல்பும், பிறவுமாகிய தன்மைகள் இன்றுங் காணவுள்ள நிலை அந்த மெய்த்திருவாக்கின் அருட் டிறம் (3865).

(26) நம்பிகளைத் தமது நாட்டுக்கெழுந்தருளுவித்து வழிபடவேண்டு மென்று விரும்பிச் சேரமன்னவனார் அவருடன் பலநாட் பின்றொடர்ந்தும் உடனுறைந்தும் பணிந்தும் பன்னாள் இரவும் பகலுமாகத் தொழுதிரந்தும் கொண்டணைந்தனர். அவ ரிசைவு பெற்றவுடன் பெருமகிழ்ச்சி கொண்டு எங்குமுள்ள அடியார்கட் கேற்ற பூசை நிகழ்வித்தனர். பெரியார்களின் சேவையும் இணக்கமும் எத்துணை முயன்றும் பெறற்பாலன (3874).

(27) இறைவர்பாற் செய்யும் பேரன்பின் முன்னே நீர்ப்பெருவெள்ளமும் பிளந்து வழிகாட்டும். அன்பின் வலிமை அளத்தற்கரியது (3883).

(28) மிகவும் வேண்டி முயன்று தம் உடன் கொண்டணைந்த நம்பிகளைச் சேரனார் முதலில், தமது மாளிகையுட் சேர்ப்பியாது திருவஞ்சைக் களத்துச் சேர்வித்

தப் பின்னரே நகர்வலமாகத் திருமாளிகையுட் சேர்வித்தார். இஃது அவ்விருவரது சிவன்பால் உலகிறந்த அன்பின் பெருக்கும் சைவநெறி மரபுமாம் (3892).

(29) நம்பிகளைப் பிடியின் மேலேற்றி அந்நாட்டரசனுராகிய சேரமானுர் தாமும் பின்பு ஏறி அவர்க்குத் தமது கைகளினுற் சாமரையிரட்டித் திருவீதி வலம் போதுவித்தருளினர். இது அன்புரிமையும் நண்புரிமையுமாம். உலகத்துச் சிறு செல்வத்து மகிழ்ந்து, பெரியோரை வழிபடாது இறுமாக்கும் சிறியோர்கள் இது கண்டு நல்லொழுக்க மறிந்து ஒழுகுதல் உலகுக்கு நலம் தரும்.

(30) சேரனுரது இவ்வழிபாடே பின்னர், அநபாயச் சோழனுர், ஆசிரியர் சேக்கிழார் பெருமானையும் அவர் அருளிய திருமுறையினையும் வழிபட்டு உலாச் செய்தருளும் சிறப்புக்கு வழிகாட்டி விளங்குவதாம்.

(31) சேரமானுரது அரச செல்வத்து மிக்க உபசாரங்களுள் வீற்றிருந்த நம்பிகள் திருவாரூர்ப் பெருமானடி மறவாதவாறே அவற்றுள் மகிழ்ந்திருந்தனர். ஒரு நாள் மிக நினைவு வந்த சிந்தையராய் "ஆரூ ரானை மறக்கலு மாமே?" என்று வெருவி உடனே திருவாரூருக்குப் புறப்பட்டருளினர்; இஃது அவரது சிவயோக நிலையின் நின்ற திருவுள்ளப் பெருமை (3903 - 3904 - 3907).

(32) தமது உரிமை அரசாட்சியினும் நம்பிகளது சார்பினையே பெரிதெனக் கொண்டு அவரைப் பின்றொடர்ந்த சேரனுர் நம்பிகளது ஆணையினுல் தமது நகரத் துத் தங்கி அரசாண்டிருந்தனர். இஃது உண்மை ஞானமுடைய பெரியோர் மன நிலை (3907 - 3908).

(33) தமது தோழராகிய நம்பிகளுக்குத் தாமே பொன் கொடுப்பதலால் வேறு ஒருவர் கொடுப்பக் கொள்ளாமைக்காக, இறைவர், அவருக்குச் சேரமானுர் தந்த பொருள்களைத் தமது கணங்களை ஏவி வாங்கிப் பின் அவற்றைத் தாமே கொடுத்தருளினர். இது நம்பிகளின் தோழமையாகிய அன்பின் திறம்.

(34) நம்பிகளுக்குத் தம்பிரான்றோழர் என்ற பெயர் இறைவர் தம்மை அவருக்குத் தோழமையாகத் தந்தோம் என்ற காரணத்தால் வழங்கியது. நம்பிகள் தம்மைச் சேரனுருக்குத் தோழராகத் தந்து என்று கொண்டனர்; அதனுல் அதனினும் மேலாய்ச் சேரமான்றோழர் என்ற பெயர் வழங்கப் பெற்றனர். "நல்ல தோழர் நம்பெருமாள் தமக்கு நம்பி யிவர்என்பார்" (3813 - 3895).

(35) நம்பிகளது தோழமைத் திறம் பின்னர் சேரனுரை நினைந்துகொண்டு தாமாகவே அவர்பால் வருவதனுலும், கயிலாயபதியின் அருளால் வந்த வெள்ளை யானையின் மேல் ஏறிக் கயிலைக்குச் செல்லும்போது அவரை நினைந்து கொண்டு செல்வதனுலும் காணப்படும். உயிர்த் தோழமையின் தன்மை இவ்வாறுகும். பின்னர்க் கயிலையில் வாயிலிற்றடையுண்டு நின்ற பெருமாளை இறைவரிடம் விண்ணப்பித்து அழைப்பிக்கும் நிலையும் காணப்படும்.

(36) சேரனுர் குதிரையினை ஊர்ந்து ஆகாய வழியே தமது நாதராகிய நம்பிகள் மேல் கொண்ட யானைக்கு முன்போவதும், அவரைக் கட்புலப்படும் எல்லைவரை கண்டு பின் காணுமையால் அவரது படைவீரர்கள் முறைமுறை சுரிகையால் உடல் வீழ்த்து வீர யாக்கையுடன் அவருக்கு முன் சேவக மேற்றுப் போவதும் சேரமானுரது உயர்ந்த பெருமையினை உணர்த்துவன.

கழற்றறிவார் நாயனுரது புராணம் முற்றும்.

உ
சிவமயம்

கழறிற்றறிவார் நாயனார் அருளிய

# திருவாரூர்த் திருமும்மணிக் கோவை

[உ ரை யு ட ன்]

## முன்னுரை

**ஆக்கியோர்**

இதனை ஆக்கியோர் கழறிற்றறிவார் நாயனார் என்னும் சேரமான் பெருமாணாயனார். "கார்கொண்ட கொடைக்கழறிற் றறிவார்க்கு மடியேன்" என்று முதனூலாகிய திருத்தொண்டத் தொகையிலும், "கழறிற்றறிவான் எனும், சேரலனே" என்று வழிநூலாகிய திருவந்தாதியினும் போற்றப்பட்டபடி இவர் பெயர் அதுவேயாம். "யாவும் யாருங் கழறினவும், அறியு முணர்வும்" பிறவும் திருவருளாற்பெற்ற காரணத்தால் இப்பெயர் போந்ததென்று சார்புநூலாகிய திருப்புராணம் விளக்குகின்றது. எனவே இப் பெயரே சிறப்பாய் நாம் அறிந்து வழங்குதற்குரிய பெயராகும். முதலில் அச்சிட்ட திருத்தொண்டர் புராணப்பதிப்பில் (காஞ்சிபுரம் சபாபதி முதலியார் பதிப்பு 1859) கழறிற்றறிவார் நாயனார் புராணம் என்ற பெயரால் தலைப்பிட்டு இவரது புராணம் அச்சிடப்பட்டிருக்கின்றது. இவரது வரலாறு புராணத்துள் 175 திருப்பாட்டுக்களால் விரிவாகப் பேசப்பட்டுள்ளது.

"சேரமான் பெருமாள்" என்பது இவரது சேர அரச மரபுக்குரிய பொதுப் பெயர். பெருமாள் என்பது அரசர் என்ற பொருளில் அம்மரபில் வழங்குவது. ஆனால் இது பின்னர்ப்போந்த காரணப் பெயர். இவரது இயற் பெயர் பெருமாக் கோதையார் என்பது. (புரா - 5 = 3752). கோதை - என்பது சேர அரச மரபுக்குரிய பெயர். இவர், தமிழ்நாட்டு முடியுடை மன்னர் மரபுகளாகிய சேர சோழ பாண்டியர் என்னும் மூன்றனுள், முதலில் வைத்தெண்ணப்படும் சேரமரபில் வந்த பெரும் முடி மன்னராவார். "போந்தை ஆரே", "வண்புகழ் மூவர் தண்பொழில் வரைப்பு" (தொல்).

**தமிழ்ப் புலமை**

இவர் முடிமன்னராயிருந்தும் இயற்றமிழ்ப் பெரும் புலமையும் மிகவாய்ந்தவர் என்பது இவரது பொன்வண்ணத்தந்தாதி, திருவாரூர் மும்மணிக்கோவை, திருக் கயிலாய ஞானவுலா என்னும் மூன்று திருவருணூல்களாலும் இனிது விளங்கும். உமாபதி சிவாசாரியார் "புவனிபுக ழையடிகள் திருமூலர் காரி பொய்யடிமை யில்லாத தமிழ்ப்புலவர் சேரர், நவ முடைய விவர் ஐவ ரியல்வல்லோர்" என்று திருத்தொண்டர் புராணவரலாற்றினுள் வகுத்தருளினமையும் காண்க. ஆனால் இவரது இயற்றமிழ், சிவனுக்காட் படாத ஏனை யியற்றமிழ்கள் போலல்லாது - சிவனுக்கு ஆட்படுத்தும் திருவருள் விளங்கும் இயற்றமிழாகும். சேர மன்னர் மரபிலே இவருக்கு ஓராயிரம் ஆண்டு களின் முன் வாழ்ந்த இளங்கோவடிகள் இயற்றமிழ் வல்லுநராய்ச் சிலப்பதிகாரம்

என்னும் விளக்கமுடைய பெருங்காப்பிய நூல் இயற்றியமை உலகமறிந்ததே. புறநானூறு முதலிய பழந்தமிழ் நூல்களாலும் சேரமன்னர் பிறரும் இயற்றமிழ் வல்லார்களாய் விளங்கினமை அறியப்படும். எனவே தமிழ்ப்புலமை இவருக்கு வழிவழி வந்த உடைமையாகும். ஆனால் அருட்டமிழ் வல்ல சிறப்புரிமை இவருக்கே உரியது.

இவர் பெரிதும் தமிழ்ப்புலமை வாய்ந்தவராயிருந்தும் தமது பெருமையினைத் தாம் அறிந்தாரிலராய்த் தம்மைச் சிறியாராகவே வைத்து ஒழுகிவந்தனர். திருத்தொண்டினில் "தாழ்வெனும் தன்மை யோடுஞ் சைவமாஞ் சமயம் சார்ந்து" ஒழுகியதுபோன்றே தமிழ்ப்புலமையினும் தன்முனைப்பென்பது சிறிதுமின்றி ஒழுகினர். ஆதலின் தமிழியற்பாட்டுக்கள் பாடும் எண்ணமே இவர்பால் உதித்திலது என்னலாம். சிவ வழிபாட்டிலும் சிவராசயோகமாகிய இடையறாத சிவத்தியானத்திலுமே இவர் தமது வாழ்நாட்களைக் கழித்துவந்தனர். இவர் இறைவரைப்பாடும் நிலையில் தானும் வேறு பாட்டுக்கள் பாடியதாகத் தெரியவில்லை. இளவரசரா யிருந்தபோது தமது தலைநகரமாகிய கொடுங்கோளூரில் அரண்மனையில் தங்காமல் திருவஞ்சைக்களத்தில் இப்போது "சேரமான் பறம்பு" என்று அறியப்படும் இடத்தில் இருக்கையமைத்துத் திருக்கோயிலில் திருப்பணிகள் செய்துவந்தனர். இறைவரது அருளாணைப்படி அரசுதாங்கிய பின்னர்,

> அளவில் பெருமை யகிலயோ னிகளுங் கழறிற் றறிந்தவற்றின்
> உளமன் னியமெய் யுறுதுயர மொன்று மொழியா வகையகற்றிக்
> களவு கொலைகள் முதலான கடிந்து கழறிற் றறிவார்தாம்
> வளவர் பெருமா னுடன்செழியர் மகிழுங் கலப்பின் வை''கி

வாழ்ந்தனர் (புரா—40 = 3787).

இறைவர் துதிகளாகவேனும் வேறுபாட்டுக்கள் பாடாத நிலைபற்றி,

> தெள்ளிய மாந்தரைச் சேர்ந்திலன் தீங்கவி பாடலுற்றேன்
> ஒள்ளிய சொல்லும் பொருளும் பெறேனுரைத் தாருரைத்த
> கள்ளிய புக்காற் கவிகளொட் டார் ; கடல் நஞ்சயின்றாய்
> கொள்ளிய வல்லகண் டாய் ; புன்சொ லாயினுங் கொண்டருளே.

> அருளால் வருநஞ்ச முண்டுநின் றாயை யமரர்சூழாம்
> பொருளார் கவிசொல்ல யானும்புன் சொற்கள் புணர்க்கலுற்றேன்
> இருளா சறவெழின் மாமதி தோன்றவு மேன்றதென்ன
> வெருளா தெதிர்சென்று மின்மினி தானும் விரிகின்றதே.

என்ற இவரது (பொன்வண்ணத்தந்தாதி 24, 25) திருவாக்குக்கள் இங்குக் கருதத்தக்கன.

இவர் பாடியருளிய மூன்று நூல்களும் ஒவ்வோர் காரணம்பற்றி மூன்று காலங்களில் வெவ்வேறிடங்களில் அருளப்பட்டன என்பது இவர் சரிதத்தா லறியவுள்ளது. தமது இறைவர் நினைப்பிக்க அறிந்த ஆளுடைய நம்பிகளைக் கண்டு வணங்கவும், வழியிடையிலே எந்நாளும் தமது பூசைக்கமர்ந்து பொற்பார் சிலம்பினொலியளித்த அம்பலக்கூத்தரை வணங்கவுமாகச் சோழ நாட்டுக்குப் பயணம் சென்ற சேரர் பெருமான், தில்லைச் சிற்றம்பலத்தின் இறைவர் தமக்குச்செய்யும் பேரருளினை நினைந்து, அங்கு வழிபட்டுப் 'பொன்வண்ணத் தந்தாதி' பாடியருளினார். திருவாரூரில், நம்பிகள் தமது கையைப்பற்றிக் கொடுபோந்து தெய்வப்

**இவர் நூல்கள் இயற்றிய காரணமும் பண்பும்**

பெருமாள் திருமுன் உய்க்கப் புகுந்து, அவரது நினைவிற் குறிகுறியாக அங்கு அப் பெருமான்மீது 'திருமும்மணிக்கோவை' அருளினார். பின்னர் நம்பிகளைச் சேவித்த வாறே யோகப்புரவி மேற்கொண்டு கயிலைக்குச் செல்லும்போது வழியிடையே வாளாசெல்லாது சிவத்தியானத்துடன் செல்லும் நியமம்பற்றியும், இறைவர் முன் ஒரு கையுறை கொண்டு செல்லவேண்டுமென்னும் நினைப்புபற்றியும் 'திருஞான வுலா'வை ஞானக்கையுறையாக அருளிக்கொண்டுசென்று திருமுன் கேட்பித்தார். இவ்வாறு இம் மூன்று அருணூல்களும் ஒவ்வோர் காரணம்பற்றி ஒவ்வோரிடத்தில் அருளப்பட்டன. கழறிற்றறிவார் சிவனையே மனக்கண்முன் கண்டுகொண்டு அனுப வித்திருக்கும் சிவயோக நிலையினர்.

> கொடிமே லிடபமுங் கோவணக் கீளுமொர் கொக்கிறகும்
> அடிமேற் கழலு மகலத்தில் நீறும்ஐ வாயரவும்
> முடிமேல் மதியமு முருகலர் கொன்றையு மூவிலைய
> வடிவேல் வடிவுமென் கண்ணுளேப் போதும் வருகின்றவே

என்ற திருவந்தாதியில் (20) சிலவிகூற்றாக வைத்துத் தம் நிலையினையும் விளக்கிய இவரது திருவாக்கும் காண்க. அன்றியும் நாசசிலம்போசை நாளும் கேட்டமையினாலும், யோகப்புரவிவாசி மேல்கொண்டு கயிலை சென்றமையினாலும் இவர் சிவயோகந் தலைநின்றநிலை புலப்படும். இவ்வாறுள்ள யோகியார்க்கு நூல்க ளியற்றுதலிற் கருத்துச்செல்லாமை இயல்பேயாகும்.

ஆளுடைய நம்பிகளும் கழறிற்றறிவார் நாயனாரும் ஒருங்கே திருவஞ்சைக் களத்துக்கு எழுந்தருளிய காலம் இப்போதைக்கு 1123 ஆண்டுகளாம் என்பது அத் திருநாளை ஒட்டி, மலைநாட்டினர் தொடங்கிய கொல்லம் ஆண்டு என்று வழங்கும் சகாத்தத்தினுள் விளங்கும் என்பது ஆராய்ச்சி யாளர் பலருடைய கருத்து. ஆளுடைய நம்பியைப்பற்றிய கல் வெட்டுக்களிலிருந்து கருதியறியப்படும் அவரது காலமும் இதனுடன் ஒற்றுமைப்படு கின்றது. அஃது ஒன்பதாவது நூற்றாண்டின் பிற்பகுதி என்று துணிகின்றார்கள்.

**காலம் :**

மும்மணிக்கோவை என்பது அகவல், வெண்பா, கட்டளைக்கலித்துறை என் னும் மூன்றுவகை யாப்புக்களானமைந்த பாட்டுக்களைக் கோவையாக - அந்தாதித் தொடையாகத் - தொடுக்கும் ஒருநூல்; தமிழ்ப்பிரபந்த வகைகளுள் ஒன்று. இது பெரும்பான்மை 30 பாட்டுக்களால் ஆவது. பாட் டுக்களின் வகை ஒவ்வொன்றும் ஒவ்வோர் மணி எனப்பட்டது. இரட்டை மணிமாலை, நான்மணிமாலை முதலியவையும் காண்க. திருவாரூரில் எழுந்தருளியுள்ள பெருமானார் "மூவர் தமக்கு முதலாகு" மவராதலின் அவரைத் திருமும்மணிக்கோவை கேட்பித்தார் என்று இந்நூல் அருளிய கருத்தினை ஆசிரியர் எடுத்துக்காட்டியருளினர். அவ்வாறு பெருமானைப் பாடினும், மரபுபற்றி அவர் எழுந் தருளிய பதியின் பெயரால் திருவாரூர் மும்மணிக்கோவை எனப் பெயர் வழங்க லாயிற்று. திருச்சிற்றம்பலக் கோவை - மதுரைக் கோவை என்பன முதலிய பெயர்கள் காண்க. அந்தாதித் தொடையாவது நின்றபாட்டின் இறுதி அடியின் இறுதி எழுத்து - அசை - சீர் - சொல் - சொற்றொடர், இவற்றுளொன்று வரும் பாட்டின் முதலடியின் முதல் எழுத்து - அசை - சீர் - சொல், சொற்றொடராகத் தொடர்ந்து வருமாறு தொடுப்பது. "அடியுஞ் சீரு மசையு மெழுத்தும், முடிவு முதலாச் செய்யுண் மொழியின், அஃ, தந்தாதித்தொடையென் றறைதல் வேண்டும்" என்பது. இவ்வாறு பாடல்தோறும் வருவதன்றி நூலின் முதல் எழுத்து-அசை-சீர்,

**நூற்சிறப்பு**

சொல், நூல் இறுதி எழுத்து அசை சீர் சொல்லாக வருதலிற் கோவையாகும். ஈண்டு இந்நூல், "விரிகடல்" என்று தொடங்கி "விரிகடலே" என நிறைவாதல் காண்க.

அகப் பொருட்டுறைகளுள் வைத்துத் திருவாரூர் இறைவரைப் போற்றுதல் இந்நூல் நுதலிய பொருளாகும், திருச்சிற்றம்பலக் கோவைபோல. "கங்கை வருவிசை தவிர்த்த வார்சடைக் கடவுள், அரிவை பாகத்து அண்ணல்", "அலகி லாற் றல் அருச்சுனற் கஞ்ஞான்(று), உலவா நல்வர மருளிய உத்தமன்", "புல்லார், திரி புர மெரிய வொருகணை தெரிந்த, வரிவை பாகத் தண்ணல்", "பிழையாச்சீர், அம் மான் அனலாடி யாரூர்க்கோன்", "பொய்யாற் றெழினு மருளுமிறை", "செறி பொழி லருகுடை யாரூர், அமர்ந்துறை யமுதன்", "கூற்றெனப்

நூல் பெயரிய கொடுந்தொழி லொருவ, னுற்றல் செற்ற அண்ணல்",

நுதலியபொருள் "அமரரும் அறியா ஆதி மூர்த்தி, குமரன் றாதை குளிர்சடை யிறைவன், அறைகழ லெந்தை", "பூத நாதன் ஆதி மூர்த்தி, திருமட மலைமகட் கொருகூறு கொடுத்தத்தன், அன்பின் அமைத்தவன்" என்பன முதலியவை காண்க. திருக்கோவையாருள் "என்றொல்பிறவி, யேழும் எழுதாவகை சிதைத்தோன்", "தன் அடியார் குலம்பணி கொள்ள எனைக்கொடுத் தோன்" "பற்றொன்றிலார் பற்றும் தில்லைப்பான்" என்பன முதலாக வருவன இங்கு வைத்துக் கருதத்தக்கன.

இந்நூல் முழுதும் இவ்வாறு அகப்பொருட்டுறைகளாகவே அருளியிருத்தலும், அவற்றுள்ளும் பெரும்பான்மை நெய்தற்றிணைக்குரிய கைக்கிளை - பெருந்திணைகளில் இரங்கல், இரங்கல் நிமித்தமும், புணர்தல் முதலாகிய நான்கு பொருட்கும் பொது வாய்க் காமத்திற்குச் சிறந்த ஊடலும் பற்றியே கூறி யிருத்தலும் இங்குக் கூர்ந்து கருதத்தக்கன. தெய்வந் தரவந்த கூட்டமாய், இறைவரால் தமக்குத் தரப்பட்ட தலைவராகிய நம்பிகளை இதுவரை பெறாது பிரிந்திருந்த நிலைபற்றி இரங்குதலும், கூடப்பெற்ற அஞ்ஞான்று அக்கூட்டத்தின் இன்பம் மிகும் பொருட்டு ஊடலும் ஆகிய உட்குறிப்புடையது இந்நூல் என்று கூறுதலும் பொருந்தும் அன்றியும் திருவாரூர் நெய்தற்பகுதியினைச் சார்ந்திருத்தலும் கருதுக. இந்நூல் பெரும்பாலும் தலைவி கூற்றாகிய இரங்கற்றுறையில் அருளப்பட்டமையும் காண்க.

இவ்வுரை "ஞானசம்பந்தம்" பத்திரிகையில் தருமபுர ஆதீனம் ஸ்ரீலஸ்ரீ மகா சந்நிதானங்களின் அருளாணைப்படி முன்னர் வெளிவந்துள்ளது. அவர்களது கருணை யினால் இப்புராண வெளியீட்டிலும் எடுத்து மேற்கொள்ளப்பட்டுள்ளது. இதனுள் திருத்தங்கள் பல செய்யப்பட்டுள்ளன. சைவத் தெய்வத் திருமுறைகளுக்கு உரை வகுக்க ஒரு சிறிதும் தகுதியில்லேன் என்பதை நன்குணர்வேன். பின் என்னையோ இதில் முயன்றது? எனின், பணி செய்யும் ஆசைபற்றி என்க. நாயன்மார்களுள் இயற் றமிழ் வல்லார்கள் எனப் போற்றப்பட்டவர்களுக்கு அவ்வவர் சரிதங்கட்கு உரை செய்வதனோடு அவ்வவர் அருளிய இயற்றமிழ்கட்கும் ஏதேனும் இயன்ற பணி செய்து போற்றவேண்டுமென்பது அடியேனது ஆசை. அது பற்றியே கழறிற்றறி வார் அருளிய நூல்களுள் திருவாரூர் மும்மணிக்கோவைக்கு இவ்வுரை எழுதிப் பணி செய்ய முயல்கின்றேன்; அவரது ஏனையிரண்டு நூல்களுக்கும் முன்னமே புல வாணர்கள் உரையெழுதியுள்ளார்களாதலான். பிழைபொறுத்தருளுதல் பெரியோர் கடன். இப்பணியில் பலவாறும் அடியேனுக்கு உதவிய எல்லாப் புலவர் பெரு மக்களுக்கும் என் நன்றி உரியது.

உ

திருச்சிற்றம்பலம்

கழறிற்றறிவார் நாயனார் என்னும்

# சேரமான்பெருமாணாயனார்

அருளிச் செய்த

# திருவாரூர்த் திருமும்மணிக் கோவை

## நூல்

### நிலைமண்டில ஆசிரியப்பா

**வி**ரிகடல் பருகி யளறுபட் டன்ன
கருநிற மேகங் கன்முக டேறி
நுண்டுளி பொழிய நோக்கி, யொண்டொடி
பொலங்குழை மின்னப் புருவ வில்லிட்
டிலங்கெழிற் செவ்வாய்க் கோப மூர்தரக்
கைத்தல மென்னுங் காந்தண் மலர
முத்திலங் கெயிறெனு முல்லை யரும்பக்
குழலுஞ் சுணங்குங் கொன்றை காட்ட
எழிலுடைச் சாய லிளமயில் படைப்ப
உண்ணிறை யுயிர்ப்பெனு மூதை யூர்தரக்
கண்ணீர்ப் பெருமழை பொழிதலி னொண்ணிறத்
தஞ்சனக் கொழுஞ்சே றலம்பி யெஞ்சா
மணியும் பொன்னு மாசறு வயிரமும்
அணிகிள ரகிலு மாரமு முரிஞ்சிக்
கொங்கை யென்னுங் குவட்டிடை யிழிதரப்
பொங்குபுயல் காட்டி யோளே ; கங்கை
வருவிசை தவிர்த்த வார்சடைக் கடவுள்
அரிவை பாகத் தண்ண லாரூர்
எல்லையி லிரும்பலி சொரியுங்
கல்லோ சென்ற காதலர் மனமே. க

(இ - ள்) விரி கடல்......நோக்கி - விரிந்த கரிய கடலின் நீரைக் குடித்து (அதனால்) கருஞ்சேறு பட்டதுபோன்ற கரிய நிறமுடைய மேகங்கள் மலையினுச்சியில் ஏறி நுண்ணிய துளிகளாக மழையினைப் பொழிய அதுகண்டு; ஒண்டொடி - ஒள்ளிய தொடிகளை யணிந்த பெண்ணாகிய எனது தோழி (தானும்) அவ்வாறே ஆயினள் போன்று; பொலங்குழை...புயல்காட்டியோளே - பொன்னாலாகிய குழைகளின் ஒளியாகிய மின்னல் விலகப், புருவங்களாகிய இந்திர வில்இட,' விளங்கும் அழகுடைய சிவந்த வாயாகிய இந்திரகோபம் அசைய, கைகள் என்கிற காந்தட் பூக்கள் மலர, முத்துக்களின் வரிசைபோன்ற பற்களாகிய முல்லை யரும்ப, கூந்தலும் பசலையுமாகிய கொன்றைமலர, அழகுடைய சாயல் இளைய மயி

வின் அமைதி படைப்ப, உள்ளே நிறைந்துவரும் பெருமூச்சாகிய வாடைக் காற்று வீச, கண்ணீராகிய பெருமழை பொழிதலாலே ஒள்ளிய நிறத்தினை யுடைய அஞ்சனமாகிய கொழுவிய சேற்றினைக் கழுவிக் குறைவில்லாத மணியினை யும், பொன்னினையும், குற்றமற்ற வயிரத்தினையும், அழகு விளங்கும் அகில் சந்தனம் இவற்றையும் உறிஞ்சிக்கொண்டு, முலைகளாகிய மலையினிடை அருவிபோல் வழிய இவ்வாறாகிய தன்மைகளினாலே பொங்கும் மேகத்தின் நிலையினைக் காட்டியவள் ஆயினாள்; கங்கை... அண்ணல் - கங்கையின் பெரிய வேகத்தைக் குறைத்து அடக்கிய நீண்ட சடையினையுடைய கடவுளும், பெண்ணொரு பாகத்தினையுடைய அண்ணலு மாகிய இறைவராது; ஆரூர்...மனமே - திருவாரூர் எல்லையிலே பெரிய பலிகளைச் சொரிதற்கிடமாகிய பலியிடும் கல்லோ இவளைவிட்டு நீங்கிச் சென்ற காதலாது மனம்.

மும்மணிக்கோவை - தமிழ்ப் பிரபந்த வகைகளுள் ஒன்று; ஆசிரியப்பா, வெண்பா, கட்டளைக் கலித்துறை முறையே அந்தாதியாக வர 30 செய்யுட்களால் இயற்றப்படுவது. மூன்று மணிகளாற் கோக்கப்பட்ட கோவைபோன் றிருத்தலின் இப்பெயர் பெற்றது; உவமையாகுபெயர். மும்மணிகளாவன - புருடராகம், வைடூரியம், கோமேதகம் என்பனவாம். "மும்மணியாவன சொன்னபுருடராகம், வைடூரியம், கோமேதகமே என்றுங் கோதுவர்." பதினொராந் திருமுறையில் இப்பெயர்கொண்ட பிரபந்தங்கள் பலவுள்ளன. அவை திருவலஞ்சுழி மும்மணிக் கோவை முதலாயின. மும்மணிமாலை என்னும் பிரபந்த வகை வேறு. "ஆசிரியம் வெண்பாக் கலித்துறை முப்பதாக வருவது மும்மணிக்கோவை", "வெள்ளை கலித்துறை யாசிரிய விருத்தம், புல்லும் முப்பதும் மும்மணி மாலை" என்பவற்றால் இவற்றிலக்கணம் விளங்கும்.

(வி - ரை) திணை - இரங்கல் நிமித்தம் கொண்ட நெய்தற்றிணை. துறை - தலைவன் பிரிந்தவழிக் காரகண்டு வருந்திய தலைவியின் பரிவு நோக்கித் தோழி யிரங்குவது; நற்றாயிரங்கிய தென்றலுமாம். வேந்தற் குற்றுழிப் பிரிதல், பொருள் வயிற் பிரிதல் என்றிவை முதலாகிய வொன்றன் காரணமாகத் தலைவன் பிரிந்திருக் கும் காலத்தில் கார்காலம் வரத், தலைவி, பிரிவாற்றாது வருந்திக் கண்ணீர் வீழ்த்துக் கலுழ்ந்த உள்ள நிலையினைக் கண்டு தோழி யிரங்கிய கூற்றாக வருகின்றது இத் திருப்பாட்டு. கார்காலம் பிரிந்தோரை வருத்தம் செய்யுமியல்புடையது.

1-3. விரி கடல்......பொழிய என்றது கார்காலம் வந்தநிலை; நோக்கி என்றது அதுகண்டு அதன் காரணமாக என்றதாம்; (3—16) ஒண்பொடி......புயல் காட்டி யோளே என்றது பிரிவாற்றாத வருத்தத்தினால் தலைவி அடைந்த பருவால் நிலை. கல்லோ......மனமே (20) என்றது அதுகண்டு தோழி இரங்கும் நிலை.

1. அளறுபட்டன்ன—அளறு - குழை சேறு; இங்குக் கருங்கடல் சேற் றினைக் குறித்தலின் கருஞ்சேறு என்ற பொருள் குறித்தது. பட்டால் அன்ன என்பது பட்டன்ன என நின்றது; கடல் - கடல் நீர்; கருநிற மேகம் - கார்காலத் துச் சூல்கொண்ட கார்மேகம்; நுண்டுளி பொழிய - வாடைக் காற்றுடன் கலந்த சிறுதுளியாய்ப் பொழிய; மின்னுதல், வில் இடுதல், கோபம் ஊர்தல், காந்தள் முல்லை கொன்றை மலர்தல், மயில், ஊதை, இவை கார் காலத்தில் மழைப்பெயலின் முன் விளங்கக் காட்சிப்படும் இயற்கை நிகழ்ச்சிகளும் பொருள்களுமாம்.

4-16. சேறு அலம்புதல்—மணி, பொன், அகில், ஆரம் இவற்றைக்கொண்டு குவட்டிடை இழிதல். பொங்கு புயல் - மழை பெய்யும் கனத்த மேகம்; புயல்

காட்டியோள் - (கார்) மேகத்தின் பொலிவினைத் தானும் அடைந்தாள். ஏகாரம் தேற்றம்; மின்ன - மின்காட்ட; கோபம் - இந்திரகோபப்பூச்சி; மிகச் சிவந்த நிறமுடையதொரு சிறுபூச்சி. இது கார்காலத்தில் வெளிப்படுவது. குழை - மின்; புருவ - வில், செவ்வாய் - கோபம் - கைத்தலக் - காந்தள், எயிறு எனும் முல்லை, உயிர்ப்பு எனும் ஊதை, கண்ணீர்ப் - பெருமழை, அஞ்சனச் - சேறு, கோங்கைக் - துவடு - இவை உருவகம். முத்து இலங்கு எயிறு - உவமை.

8. குழல் - பின்னிய குழற்சடை; இது கொன்றை காட்டுதல் - கரியகொன்றைக் கனிகள்போலத் தூங்குதல்; சுணங்கு - பசலை; தலைவன் பிரிவினால் மேனி பொன்னிறமான பசலை பூத்தும் இயல்பு குறித்தது; இது பொன்னிறமாகிய கொன்றைப்பூவின் நிறங் குறிக்கது. "கானக் கடஞ்செல்வர் காதல ரென்னக் கதிர் முலைகள், மானக் கனகந் தரும்மலர்க் கண்கள்முக் சம்வளர்க்கும்" (235) என்ற திருக்கோவையார் காண்க. "சடைமேலக் கொன்றை தருகனிகள் போன்று, புடைமேவித் தாழ்ந்தனவே போலும் - முடிமேல், வலப்பாலக் கோலமதி வைத்தான்றன் பங்கிற், குலப்பாவை நீலக் குழல்" (அற்புதத்திருவந்தாதி - 50) என்ற அம்மை திருவாக்கும் கருதத்தக்கது.

9–10. சாயல் இளமயில் படைப்ப - சாயல் இளமயிலின் தன்மை காட்ட; பெண்களின் சாயல் மயில்போன்றதென்பது வழக்கு; உயிர்ப்பு - மனவருத்தத்தால் வரும் பெருமூச்சு; ஊதை - வாடைக்காற்று; ஊர்தருதல் - வீசுதல்

சுணங்கு - தலைவனது பிரிவினால் தலைவியின் மேனியில் தோன்றும் நிறம் பசலை என்றும், அவனுடன் கூடலால் தோன்றும் நிறம் மாமை என்றும் கூறுவர். சில இடங்களில் வேறுபாடின்றியும் காணப்படுகின்றது. (ந. சிவ - அவர்கள் குறிப்பு)

12–16. அஞ்சனம் - கண்ணுக்குத் தீட்டும் மை; கண்ணீர் வரும்போது அதனுடன் மை யழிந்து வருதல், அஞ்சனமாகிய சேற்றினை அலம்பிவருதல் எனப்பட்டது. மணி-பொன்-பயிராம் - இவை தலைவி யணிந்த அணிகளில் உள்ளன; அகில்-ஆரம் இவை அவள் அரைத்துப் பூசிய சாந்தம்; இவற்றை உரிஞ்சுதலாவது ஈண்டு இவற்றின் மேற்படிந்துவருதல். புயல் - புயலின் பொலிவு. துளிபொழிய நோக்கிப்-புயல்காட்டுதல் என்றது கார்கால மழையின் செயலினை நோக்கித் தானும் அவ்வாறேயாகிய நிலை கொள்ளுதல். நோக்கி - நோக்கியதனால்; காரணப் பொருளில் வந்த வினையெச்சம்.

17–19, 20. வருவிசை - இறைவரது சடையிற் புகுமுன் ஆயிர முகத்தாலும் விசையின் வந்தநிலை; தவிர்த்தல் - குறைத்தல் - அடக்குதல; "தவிரா நோய்தந் தானே" (பிள்ளை - தேவா - செங்காட்); எல்லையில் இரும்பலி சோரியும் கல் - பலிகளை யிடும் கல் நகர்ப்புறத்திருக்கும் நிலைகுறித்தது; ஆதர்... கல்-பாட்டுடைத் தலைவர் புகழைப் பரவியது.

20. கல்லோ மனமே - மனம் கல்போன்றதா? அற்றாயினன்றே காதலர் இவளது வருத்தத்தை எண்ணாது பிரிந்து இன்னும் வாராதுள்ளார் என்பதாம். கல்லோ - கல் என்று துணியாது ஓகாரத்தால் ஐயப்பாடு குறிக்கச் சொல்லியது தலைவரின் தண்ணளியும் காதல் மேன்மையும் முன் அறிந்த நிலையோடு மாறுபடாமைப் பொருட்டு. சென்ற - பிரிந்துசென்ற. சோரிதல் - மிகுதி குறித்தது; பலி சோரியும் கல் என்றது இவள் உயிரினைப பலியிட நிற்கும் நிலையின் குறிப்பு.

ஒண்டொடி - நோக்கி - மின்ன - வில்லிட்டுக் - கோபமூர்தர - காந்தள்மலர - முல்லை அரும்பக் - கொன்றை காட்ட - மயில்படைப்ப - ஊதை ஊர்தர - மழை

பொழிதலின் - சேறலம்பி - உரிஞ்சிக் - குவட்டிடை இழிதரப் - புயல் காட்டியோளே ; சென்ற காதலர் மனம் கல்லோ ? என்று தொடர்புபடுத்தி உரைத்துக் கொள்க.

கங்கை வருவிசை தவிர்த்தவனும், அரிவை பாகத்தனுமாகிய இறைவன் என்றது இத்தலைவியின் இன்னல் தீர அருளும் கருணையும் இயல்புமுடையவன் என்ற குறிப்பு. மேல் வருவனவற்றிலும் ஏற்ற பெற்றி இவ்வாறே வைத்துக் கண்டு கொள்க.

இப்பாட்டின்கண் தன்மை, உவமை, உருவகம், சிலேடை, தற்குறிப்பேற்றம், மாறுபடு புகழ்நிலை முதலிய பல அணிகளுங்களோடு இரக்கம் முதலிய பல சுவைகளும் கலந்து காணவிளங்கும் தமிழ் நயம் கண்டு களிக்கத்தக்கது. உட்கிடை - கடவுள் - அண்ணல் என்று ஆரூரிறைவரைப் போற்றுதல். மேலும் இவ்வாறே கண்டு கொள்க. 1

வெண்பா

மனமா லுறாதே மற்றென்செய்யும் ? வாய்ந்த
கனமால் விடையுடையோன் கண்டத்—தினமாகித்
தோன்றினகார் ; தோன்றிலதேர் ; சோர்ந்தனசங் ; கூர்ந்தனபீர் ;
கான்றனநீர் ஏந்திழையாள் கண். ௨

(இ - ள்) வாய்ந்த.........கார் - பொருந்திய பெரிய மாலாகிய விடையினையுடைய இறைவரது திருநீலகண்டத்தினைப் போலக் கார்தோன்றின ; தோன்றில தேர் - காதலரது தேர்கள் வந்து தோன்றில ; சோர்ந்தன.....கண் - உண்மெலிவினாலே கைவளைகள் கழன்றன ; பசலைபரந்தன ; இழைகளை அணிந்த எமது தலைவியின் கண்கள் நீரினைச் சொரிந்தன ; மனமால்......செய்யும் - இவற்றுடன் பொருந்தியதனால் மனம் மயக்கத்தை யடையாமல் வேறென்ன செய்யவல்லது ?

(வி - ரை) திணையும் துறையும் அவை. கண்டத்தினமாகிக் கார்தோன்றின ; தேர் தோன்றில ; அதனால் சங்கு சோர்ந்தன ; பீர் ஊர்ந்தன ; கண் நீர் கான்றன ; (ஆற்றாக ;) மனம் மால் உறாதே மற்று என் செய்யும் ? என்று கூட்டி முடிக்க.

மனம் மாலுறாதே மற்றென் செய்யும் - மனம் மால் உறும் என்றது உறுதி குறிக்கவான் என்னும் வினாவினாற் கூறினார், "கற்றதனாலாய பயனென் கொல்... ...தொழாஅர் எனின்" என்புழிப்போல ; கனமால்விடை - மிகப் பெரிய விடை என்றலுமாம். "பெரிய விடைமேல் வருவார்" (தேவா). என் - எவன் என்பதன் மரூஉ. மனமாலுறாதே - "மாலுலா மனந்தந்து" (திருவிசைப்பா).

கனமால் - ஒரு பொருட் பன்மொழி ; மிகுதி குறித்தது ; மிகப்பெரிய என்க ; கண்டத்து இனமாகிக் கார்தோன்றின - இனமாதல் - போலுதல் ; கார் இறைவரது நீலகண்டம் போன்றது என்பது. தோன்றின முதலிய வினைமுற்றுக்களைத் தத்தம் எழுவாய்களுக்கு முன்வைத்தது விரைவும் உறுதியும் குறித்தற்கு.

தேர் தோன்றில என்று பன்மையிற் கூறியதனால் தலைவர் வரும்போது உடன் வரும் தேர்கள் பலவாம் என்பது குறிப்பு. இவ்வாறன்றி, தோன்றிலது ஏர் எனப் பிரித்துத் தலைவியினது இயல்பாகிய அழகு தோன்றிலது என்றலுமாம். தோன்றிலது தேர் எனப்பிரித்து விகுதி தொக்கது என்றலுமாம். சங்கு - வளை. சோர்தல் - கழலுதல் ; வளை கழலுதல் கவலையினால் வரும் உடல்மெலிவு குறிக்கும். பீர் - பசலை; ஊர்தல் - பரத்தல். "பொன்போலும் பீர் பசலை பூத்தது." இஃது அன்பின்குறி.

**பீர்** - பொன் போலும் நிறமுடைய பீர்க்கு மலர். ஆகுபெயராய்த் தலைவனது பிரிவின்கண் தலைவியிடம் தோன்றும் அந்நிறமும் வடிவமுமுடைய பசலைக்கு வந்தது. **கண்** - கண்கள்; **கான்றன** - சொரிந்தன. கால் - பகுதி.

**கண்டத்து இனமாகிக் கார்தோன்றின** - மெய்யும் பயனும் பற்றிவந்த உவமம். கண்டத்து விடம்போன்று வருத்தம் செய்யும் என்பதும், ஆயினும்கொல்லாது கருணை பூப்ப நிற்பது என்பதும் குறிப்பு. கார் வரவு கண்டு இறைவரது திருநீலகண்டம் போன்றது என்ற நிலை, எங்கும் எப்பொருளிலும் இறைவர் காட்சியே கண்டிருக்கும் உள்ளப்பண்பு குறித்தது. மேலும், முன்னும், இவ்வாறே கண்டுகொள்க. திருநீலகண்டம் போலத் தலைவியின் துன்பத்திற் காத்தருளும் என்பதும் உட்குறிப்பு.

இது பின் முடுகுச் சந்தவெண்பா. சந்தம் இரக்கத்தின் மிகுதி குறித்தது. 2

துறை

கண்ணார் நுதலெந்தை காரார் கண்ட மெனவிருண்ட
விண்ணா லுருமொடு மேலது கீழது கொண்டல்விண்ட
மண்ணார் மலைமே லிளமயி லாலிள மானனைய
பெண்ணா மிவளினி யென்னாய்க் கழியும் பிரிந்துறைவே. ௩

(இ - ள்) **கண்ணார்......இருண்ட** - கண்பொருந்திய திருநெற்றியினையுடைய எமது பெருமானது அழகிய கண்டத்தினைப் போலக் கருமையுடைய; **விண்ணால்......மலைமேல்** - விண்ணினிடத்து ஒலிக்கின்ற இடியுடனே மேனின்றதாகி இருந்து இப்போது கீழிறங்கிய மேகம் மழையினைப் பெய்த நிலவுலகின் விளங்கும் மலையின் மேல்; **இளமயிலால்...இவள்** - இளமயில்போன்ற சாயலினாலே இளமான் போன்ற பெண்ணாவாள் இவளாம்; **இனி...பிரிந்துறைவு** - காதலரைப் பிரிந்துறைகின்ற இத்தன்மை, இனி யாதாகிக் கழியுமோ? (அறிகிலேன்).

(வி - ரை) திணையும், துறையும் அவை.

**கண்டமென இருண்டவிண்** - கண்டம்போல நீலவானம். **ஆல் உரும்** - சத்திக்கும் இடி. **விண் ஆல்** - சத்தத்திற்கிடம் விண் என்பது; ஆல் - சீர்த்திரள் என்றலுமாம். **மேலது கீழது** - மேலதாயிருந்த நிலையினின்றும் கீழே இறங்கிப் பெய்த; மேகம் கீழிறங்கிப் பெய்தது என்பது வழக்கு. மேன்மையுடையதாயினும் பெண் வருந்தக் கிடனாதலின் கீழ்மைப்பட்டது என்ற குறிப்பும் காண்க. **கீழது** - கீழதாய்ப்பெய்த; **விண்ஆல் உருமொடு** மேலது; கொண்டல் கீழது; என்றும் முடிக்கலாம். **மான்** - நோக்கிற்கு உவமை. இனிப் பிரிந்துறைவு என்னாய்க் கழியும் என்க. **மண்** - நிலவுலகு; **மயில்** - மயில்போன்ற சாயல். 3

நிலைமண்டிலவாசிரியப்பா

உறைகழி யொள்வாள் மின்னி, யுருமெனும்
அறைகுரன் முரச மார்ப்பக், கைபோய்
வெஞ்சிலை கோலி, விரிதுளி யென்னும்
மின்சரந் துரந்தது வானே ; நிலனே,
கடிய வாகிய களவகன் மலரொடு
கொடிய வாகிய தளவமு மந்தண்

மேம் பட்ட கோடலுங் கோபமோ
டலைமேம் பட்ட காந்தளு மிவற்றொடு
காயா வெந்துயர் தரு;மே லவரே !
பொங்கிரும் புரிசை போக்கற வளைஇக்
கங்குலும் பகலுங் காவன் மேவி
மாசறு வேந்தன் பாசறை யோரே;
யானே, யின்னே,
அலகி லாற்ற லருச்சுனற் கன்றொன்
றுலவா நல்வர மருளிய வுத்தமன்
அந்த ணாரூர் சிந்தித்து மகிழா
மயரிய மாக்களைப் போலத்
துயருழந் தழியக் கண்டுயி லாவே. ௮

(இ - ள்) வானே - வானமோ எனின் ; உறை...மின்னி - மின்னலாகிய உறையினின்றும் உருவிய ஒள்ளிய வாளினை விதிர்த்து ; உரும்...ஆர்ப்ப - இடியாகிய சத்திக்கும் குரலினையுடைய போர்முரசினை மிக்கு ஒலிப்பித்து ; கை போய்...கோலி - முற்றும் கைவினை தேர்ந்து நின்று வெவ்விய இந்திரதனுவாகிய கொடிய வில்லினை வளைத்து ; விரிதுளி...பொழிந்தது - விரிந்து செல்லும் துளிகளாகிய ஒளியுடைய அம்புகளைப் பொழிந்தது ; நிலனே - நிலமோ எனின் ; கடிய...தரும் - கடுமை யுடையனவாகிய நல்ல களவ மலர்களுடனே கொடியனவாகிய முல்லை மலர்களும், அழகிய கொத்துக்களாகப் பூக்கும் வெண்காந்தளும், இந்திர கோபத்துடனே அலைக்கின்ற (வருந்துகின்ற) மேலான செங்காந்தட் பூவும், ஆகிய இவற்றுடனே காயா மலர்களையும் தோற்றுவித்து வெவ்விய துன்பத்தினைத் தருவதாயிற்று; மேலவரே-மேம்பாடுடைய தலைவரோ எனின்; பாங்கிரும்...பாசறையோரே - மிகப்பெரிய காவல் மதில் இடையின்றி வளைத்து இரவும் பகலும் காவலைப் பொருந்திக் குற்றத்தைநீக்கும் வேந்தனது பாசறையில் உள்ளாராகுவர் ; யானே - யானோ எனின் ; இன்னே - இஞ்ஞான்று ; அலகில்...போல - அளவில்லாத வல்லமையினையுடைய அருச்சுனனுக்கு அந்நாளில் கெடாத நல்ல வரத்தினை ஈந்தருளிய உத்தமராகிய இறைவரது அழகிய தண்ணிய திருவாரூரினைச் சிந்தையிற் கொண்டு மகிழும் பேறில்லாது மயங்கிய மாக்களைப் போல ; துயர்...துயிலாவே - துன்பப்பட்டு அழிகின்றதனாலே எனது கண்கள் துயிலாவாயின.

(வி - ரை) திணை - இரங்கற் பொருளின் வந்த நெய்தல். இது "முல்லை சான்ற கற்புயிற்று ; அவன் கூறிய பருவம் வருந்துணையும் ஆற்றியிருத்தலின்" என்பர் நச்சினார்க்கினியர் (தொல்-பொ - அகத், சூ 14-உரை)

துறை - தலைவன் வேந்தற்குற்றுழிப் பிரிய, அப்பிரிவாற்றாது கூதிர் கண்டு கவலையுற்ற தலைவி கூற்று.

1-2. வாள் மின்னி-மின்னல் வாளாகக் காட்டி; உறைகழி வாள் - உறையினின்றும் உருவிய வாள் ; "உறைநிறுத்திய வாளினால்" (திருவிளை-புரா); உருமெனும் முரசம் இடியாகிய முரசு; முரசு - போர்முரசு; வாள்மின்னி - உரும் எனும் முரசம்- உருவகம். உரும் - இடி ; ஆர்த்தல் - மிக்கு ஒலித்தல். கை போதல் - முற்றும் வல்லமையுடையதாதல் ; பக்கமாகப் போதல் என்றலுமாம். சிலை கோலி - வில்லினை வளைத்து.

4–சிலை - வில். இங்கு இந்திர வில்; மின்சரம் - ஒளியுடைய அம்பு; தூர்த்தல் - பெய்தல்; வாள் - முரசு - சிலை - சரம் - இவை போர்க்கருவிகள்; உறை... வானே - வானம் இவ்வாறு கார்கொண்டு எனது தனித்த நிலைகண்டு என்மேற் போர்தொடங்கிற்று என்பதாம். வான் - இந்த வானிடம் என்ற பொருள்பட.

5–6. நிலனே - வான் அவ்வாறு போர் தொடங்கிற்றாயின், எனது இருப்பிடமாய் என்னைத் தரிக்கவேண்டிய பொறுப்பினையுடைய நிலமோ எனின், அதற்கு மாறாகத் தானும் துயர் தருவதாயிற்று என்றபடி. ஏகாரம் இத்துணையும் குறிப் பெச்சமாக உட்கொண்ட ஓகாரப் பொருளில் வந்தது. கடியவாகிய தளவம் - கோடியவாகிய தளவம் - ஆகிய - களவம், தளவம் என்ற இவற்றிற்குக் கடுமையும் கொடுமையும் இயல்பல்லவாயினும் இஞ்ஞான்று அத்தன்மைகளைக் கொள்ளலாயின என்றது. களவம் - களவுமலர்; தளவம் - முல்லைமலர்; இவையும் மேற்கூறும் கோடலும் காந்தளும் காயாவும் கார்க்குரியனவாய்ப் பிரிந்தார்க்குத் துன்பஞ் செய்வன; முல்லை - காமனது ஐந்து அம்புகளுள் ஒன்று. கடிய - கடிப்பப்படுவன; மணமுடைய என்றலுமாம். கொடிய - கொடுமையுடைய புட்பபாணமாகிய; கொடிகளிற் பூக்கின்ற என்றலுமாம்.

7–9. குலை - கொத்து; குலையாகப்பூத்து உயர்ந்த; குலை - அழித்தல் என்றலுமாம். கோபம் - இந்திரகோபம்; அலை - அலைத்தற்றொழில்; அலை - நீரின் தொடர்பு என்றலுமாம். கோபமொடு - சினம் என்ற சிலேடைப் பொருளும் கொள்ளும் குறிப்புடன் நின்றது. கோடல் - வெண்காந்தள்; காந்தள் - இங்குச் செங்காந்தளைக் குறித்தது; இவற்றொடு - இவற்றையே போர்க் கருவிகளாகக்

9–12. மேலவரே - ஏகாரம், துயர் தணிக்கவல்லவர் அவரே என்று தேற்றப் பொருளில்வந்தது; மேலவர் - தலைவர்; தருமே - அவரோ - என்பதும் பாடம்; காவன்மேவி - காவல்செய்து; மாசறுவேந்தன் - பகைப்புலத்தால் நாட்டுக்கு நலிவு வாராமற் காக்கும் மன்னன்; அறு - அறுவிக்கும் - போக்கும்; வேந்தன் பாசறையோர் - என்றதனால் வேந்தற்குற்றுழிப் பிரிவு உணர்த்தப்பட்டது.

15–18. நல்வரம் - பாசுபதம் தந்த வரலாறு; அலகிலாற்றல் அருச்சுனன் - "வஞ்சமனத் தஞ்சொடுக்கி வைகலுநற் பூசனையால், நஞ்சமுது செய்தருளு நம்பியென வேவினையும், பஞ்சவரிற் பார்த்தன்" (பிள்ளையார் தேவாரம், கோளிலி); "அருச்சுனற்குப் பாசுபதம் கொடுத்தானை" (அரசு - தாந் - கச்சி-10); அந்ஞான்று - பாரதப்போரின்கண். உலவா - மாற்றார்படையினால் அழியாத; மயரிய - மயக்கங் கொண்ட; உணர்வற்ற; "விடந்தனையயின்றன ரெனும்படி மயர்ந்து" (கந்தபு. திருவி. 80.); மாக்கள் - அறிவிழந்தமையால் மக்கள்நிலை நீங்கி மாக்களாயினர் என்பது குறிப்பு; அழிய - அழியும்படி.

கருத்துரை :—வான் - மின்வாள், உரும்முரசு, துளிச்சரம், சிலை என்ற இவற்றொடு போர்செய்ய; நிலம் அதற்கு உதவியாக நின்று களவம், தளவம், கோடல், காந்தள் இவற்றைக் கருவிகளாகக் கொண்டு துன்பம் தருவதாயிற்று; இத்துன்பத்தை இல்லையாகச் செய்யும் காதலரோ வேந்தன் பாசறையிடத்துள்ளார்; ஆதலின் யானே துயருழந்து கண்டுயிலா நிலையள் ஆயினேன் என்றபடியாம். உட்கிடை - ஆரூர் சிந்தித்து மகிழாதார் மயரிய மாக்கள் என்பது.    4

### வெண்பா

துயிலாநோ யாந்தோன்றத் தோன்றித்தீத் தோன்ற
மயிலால வந்ததான் மாதோ !—அயலாய
அண்டத்துக் கப்பாலா னந்திங்கட் கண்ணியான்
கண்டத்துக் கொப்பாய கார். ரு

(இ - ள்) துயிலாநோய் யாம் தோன்ற - துயில்பெறாத நோயினிடத்து யாம் பட்டு வருந்தும்படி ; தோன்றித்தீ...மாதோ - தோன்றி மலராகிய தீ தோன்றவும் மயில்கள் ஆடவும் வந்ததன்றே ; அயலாய ..கண்ணியான் - இந்நிலவுலகிற்கப்புறத்தனவாகிய அண்டங்களுக்கெல்லாம் அப்பாற்பட்டவரும் அழகிய மதியினைக் கண்ணியாகச் சூடியவரும் ஆகிய இறைவரது ; கண்டத்துக்கு ஒப்பாய கார் - திருநீலகண்டத்தினுக்கு ஒப்பாகிய மேகம்.

(வி - ரை) திணையும் துறையும் அவை.

கார்...வந்தது - என்று கூட்டுக ; நோய் யாம் தோன்ற - நோயின்கண் யாம் வருந்த ; நோயினை மேற்கொள்ள என்றலுமாம் ; தோன்றி - செங்காந்தள் ; தீ - நிறம் குறித்தது. தீ என்றது வருத்தம் செய்தலும் குறிப்பு ; இது கார்காலத்துப் பூப்பது.

மயில் ஆலுதல் - மயில் ஆடுதல் ; இதுவும் கார்கால நிகழ்ச்சி ; ஆல் - அசை ; மாதோ - அவலமும் இரக்கமும் குறிப்புக்கொண்டது. அயலாய - அப்புறத்தனவாகிய ; அண்டம் - சாதி ஒருமை ; அண்டங்கள் எல்லாம்

கண்டம் - திருநீலகண்டம்; கண்டத்துக்கு ஒப்பாய என்றது விடம்போலத் துன்பஞ்செய்தற் குறிப்பு. கண்டத்தினுள் விடத்தை வைத்து மறைத்துத் தேவரைக் காத்தது போலவும், திங்களை முடிமேல் வைத்துக் காத்தது போலவும் யாமும் அபயம் பெற்று வாழ்வு பெறுவேம் என்பது குறிப்பு. மேற்பாட்டுப் பார்க்க. 5

### கட்டளைக் கலித்துறை

காரு முழக்கொடு மின்னொடு வந்தது; காதலர்தந்
தேருந் தெருவும் சிலம்பப் புகுந்தது; சில்வளைகள்
சோருஞ் சிலபல வங்கே நெரிந்தன ; துன்னருநஞ்
சாரு மிடற்றண்ண லாரூ ரனைய வணங்கினுக்கே. சா

(இ - ள்) காரும்...வந்தது - மேகமும் முழக்கத்தினோடும் மின்னலோடும் வந்தது ; காதலர்தம்...புகுந்தது - காதலருடைய தேரும் தெருவு முழுதும் சத்திக்கும்படி ஆரவாரத்துடன் வந்து புகுந்தது : துன்னரும்...அணங்கினுக்கே - அருகணைவதற்கும் அரிய நஞ்சம் பொருந்திய கண்டத்தையுடைய பெருமையுடைய இறைவரது திருவாரூரினைப் போன்ற நலமுடைய பெண் இவளுக்கே ; சில்வளைகள்... நெரிந்தன - சிறுவளைகள் சோர்ந்தவை பல அங்கே நெரிந்தன.

(வி - ரை) திணை - அது. துறை - பிரிந்த தலைவனது தேர்வரவு கண்டு தோழி மகிழ்தல்.

காரும் - இதுகாறும் துன்பஞ் செய்துவந்த காரும் என்க. காரும்...வந்தது - முன்போலத் துன்பஞ் செய்ய எண்ணி வந்தது ; ஆனால் காதலர் தேரும் உடன் வந்தமையால் ஏமாந்தது என்ற குறிப்பும் காண்க.

முழக்கோடு மின்னொடு - எண்ணும்மைகள் தொக்கன; நாயகன் குறித்த கார்காலம், பெரியோர் கொட்டு, முழக்கு, விளக்குடன் வருவதுபோல் வந்தது என்ற நயமும் காண்க.

நேரும் - காருடனே ஒருங்கே நேரும் என உம்மை எச்சவும்மை, தெருவும் - தெருமுழுதும், தெரு எங்கும்; சிலம்ப - ஆரவாரிக்க; அதிர என்றலுமாம்.

சில்வளைகள் சோரும் சிலபல - முன்னர்ச் சோரும் சிலவளைகள் பலவும் என்க; நெரிந்தன - மகிழ்ச்சியால் உடல் பூரித்தலின் வளைகள் நெரிந்தன; சில்வளை - சிறிய வளையல்கள்; அங்கே - தேர்வரக்கேட்ட அந்நிலைமையே; தெருவும் சிலம்புதலால் தலைவியும் கேட்டறிந்தமை பெறவைத்தார்.

அணங்கினுக்கே - நெரிந்தன - என்று கூட்டுக; நுவனதும் - அறைதற்கும் அரிதாகிய; துன்னுதல் - அருகணைதல்; துன்னுதற்கும் - என உம்மை உயர்வு சிறப்பு; ஆர்தல் - நிறைதல்; அணங்கு - தெய்வமகளை போன்றவள். 6

### நேரிசையாசிரியப்பா

அணங்குறை நெடுவரை யருமை பேணாது
மணங்கமழ் தெரியல் சூடி யொருவழி
விடுசுடர் நெடுவேல் முன்னாறு விளக்காக்
கடுவிசைக் கான்யாற்று நெடுநீர் நீந்தி
யொருதனிப் பெயரும் பொழுதிற் புரிகுழல்
வானர மகளிர்நின் மல்வரை யகலந்
தானாக் காதல ராகுவ ரென்று
புலவி யுள்ளமொடு பொருந்தாக் கண்ணள்
கலைபிணை திரியக் கையற வெய்தி
மெல்விர னெரித்து விம்மி வெய்துயிர்த்
தல்லியங் கோதை தழலுற் றாங்
கெல்லையி லிருந்துய ரெய்தினள்; புல்லார்
திரிபுர மெரிய வொருகணை தெரிந்த
வரிவை பாகத் தண்ணலா ரேறூர்
வளமலி கால வாயன் முகத்
திளமயிற் சாயலேந் திழை தானே. ௭

(இ - ள்) அணங்குறை...பொழுதில் - தீண்டி வருத்தும் தெய்வங்கள் உறைகின்ற நீண்ட மலையின் வழியருமையினைப் பொருட்படுத்தாது, வாசம் வீசுகின்ற மாலையை அணிந்து, நாடோறும் ஒளிவீசும் நீண்ட வேலினையே முன் வழிகாட்டும் விளக்காகக் கொண்டு, கடிய விசையினையுடைய கான்யாற்றின் நீண்ட நீரினை நீந்திக் கடந்து, தானொருவனே தனியாகப் பெயர்ந்துவரும் காலத்தில்; புரிகுழல்...உள்ளமொடு - புரிந்த கூந்தலையுடைய தெய்வப்பெண்கள் உனது வலிமை பொருந்திய மார்பினிடத்துக் குறையாத காதலினை உடையாராகுவர் என்று காட்டிய புலவி பொருந்திய உள்ளத்தினோடும்; பொருந்தாக் கண்ணள்...எய்தினள் - துயில் பெறாத கண்களையுடையவளாய் உடையினது கட்டியநிலைமாறத் துன்பமடைந்து தன் மெல்லிய விரல்களை நெரித்து விம்மிப் பெருமூச்சு விட்டு அழகிய மலர்மாலை நெருப்பினை அடைந்ததுபோல அளவில்லாத பெருந்துன்பமடைந்தனள்; புல்லார்...

...தானே - பகைவருடைய முப்புரங்களும் எரியும்படி ஓர் அம்பு கோத்த, அம்மை பாகத் திறைவரது திருவாரூரின்கண் வளம் மிகுந்த தாமரை போன்ற ஒளி விளங்கும் முகத்தினையும் இளமயில் போன்ற சாயலினையும் உடைய, பூண்ட அணிகலன் களையுமுடைய பெண் இவளே.

(வி - ரை) தீணை - ஊடற்கண் வந்த மருதத்திணை; துறை - கலவி கருதித் தலைவி புலத்தல் கூறித், தலைவி, ஆற்றிடை யுளவாம் ஏதங்கூறி அஞ்சினள் என்று தோழி தலைவற்குக் கூறியது. (திருக்கோவை - 366).

1. அணங்கு - தீண்டி வருத்தும் தெய்வங்கள். வரை - வரையின் வழி என்ற பொருள் தந்து நின்றது; அருமை - கடத்தற் கருமை.

2. வைகலும் - நாடோறும் இரவுவந்த தலைவன தொழுக்கம் குறித்தது.

3. முன்அடி விளக்கு-அடி பெயர்த்தற்கு முன் ஒளி காட்டும் விளக்காக; வேல் விளக்கா - என்றதனால் இரவு இருளில் வந்ததும்; தனிபெயரும் - என்றதனால் வேறு துணையின்மையும்; வேல் - என்றதனால் அரியும் யானையும் முதலிய கொடு விலங்குகள் திரியும் வழி என்றதும் குறிக்கப்பட்டன.

4. கடுவிசைக் கான்யாற்று நெடுநீர் நீந்தி - கான்யாற்றின் பண்பும், கடத்தற்கு வேறு பரிசின்மையும் குறிக்கப்பெற்றன.

5. புரிகுழல் வான் அரமகளிர்-கானில் வாழும் வான் அரமகளிர்; சூரரமகளிர்-நீரரமகளிர் என்ற வகைகளும் காண்க; இயக்கர் முதலிய தேவச்சாதி மகளிர்; (அரமகளிர் - அமரர் மகளிர் என்பதன் மரூஉப் போலும்). மல்வழங்கு அகலம் - மல் - வல்லமை.

6–7. மல் - போர் என்றலுமாம்; வழங்குதல் - மிகுதிப்பாடு குறித்தது; ஆணுக்காத லாகுவர் - உனது ஒப்பற்ற வல்லமை கருதி உன்மேல் இச்சைகொள்வர்; வேலொடு வரின் முருகன் என்று கருதியென்றலுமாம்; என்று - என்று உட்கொண்டதனால்; என்றதொரு காரணங் கற்பித்துக்கொண்டு.

புலவி உள்ளம் - "அஃதாவது தலைமகனுந் தலைமகளும் ஓர் அமளிக்கட் கூடியிருந்துழி அவன்மாட்டுப் புலத்தற் காரணமில்லையாகவுங் காதல் கைம்மிகுதலால் நுண்ணியதோர் காரண முளதாக உட்கொண்டு, அதனை அவன்மேலேற்றி "அவள் புலத்தல்" என்ற பரிமேலழகர் உரைக்கூற்றும், "பெண்ணியலா ரெல்லாருங் கண்ணிற் பொதுவுண்பர், நண்ணேன் பரத்தநின் மார்பு" (புலவி நுணுக்கம் - 1) என்ற திருக்குறட் கருத்தும், "வெவ்வா யுயிர்ப்பொடு விம்மிக் கலுழ்ந்து புலந்துநைந்தாள், இவ்வா றருள்பிறர்க் காகு மெனநினைந் தேந்திழையே" (கோவை - 366). என்றதும், பிறவும் ஈண்டுக் கருதத்தக்கன.

8. பொருந்தாக் கண்ணள் - துயில்பெருமையின் இமை மூடாத கண்களையுடையவளாகி; கண் பொருந்துதல் - துயிலுதல்; "என், கண்பொருந்தும் போழ்தத்துங் கைவிடநான் கடவேனோ" (அரசு தேவா - பழனம்).

9-10. கலைபிணை திரிய கலை - துகில், பிணை - கட்டு, திரிதல் - அவிழ்தல் - மாறுதல்; கலை - ஆண்மான்; பிணை - பெண்மான்; ஆண்மானோடு பெண்மான் மகிழ்ந்து விளையாட என்றலுமாம்; கையறவு - செயலறுதல்; துன்பம்; விரல் நெரித்தல் - துன்பத்தால் கைநெரித்தல்; சினம் பொறுமை காரணமாகக் கைவிரல் நெரிக்கும் வழக்கம் இன்றும் காணலாம்.

11. கோதை அழலுற் றுங்கு - பூமாலை தீயிடைப் பட்டாற்போல; மெய்யும் பும் பற்றிவந்த உவமை; "எரியி னிடைத்தோய்ந்த செவ்வண்ணக் கமலம்

போல்" (பெரியபுரா - திருநகர - 39=121); "மென்பூ, மாலை தீயிடைப் பட்டது போன்ற" (ஷை திருஞான. புரா - 1058=2956).

15. கமல வான்முகத்து - முகம் வேறுபடாது கமலம்போன் றிருக்கும் என்றதனாற் புலவி உண்மைக் காரணம் பற்றாது கற்பித்துக்கொண்டதென்று குறித்தவாறு. 7

வெண்பா

இழையார் வனமுலையீர்! ஈர்ந்தண் புனத்தின்
உழையாகப் போந்ததொன் றுண்டே—பிழையாச்சீர்
அம்மா னனலாடி யாரூர்க்கோ னன்றுரித்த
கைம்மானே ரன்ன களிறு. அ

(இ - ள்) இழையார் வனமுலையீர்! - இழைகள் பொருந்திய அழகிய முலையுடைய பெண்களே! ; பிழையாச்சீர்...களிறு - கெடுதலில்லாத சிறப்பினையுடைய அம்மானும் அனலில் ஆடுபவரும் திருவாரூராசரும் ஆகிய இறைவனார் அக்காலத்தில் உரித்த யானையினைப் போன்றதே யாகியதொரு யானை ; ஈர்ந்தண்...உண்டே? - மிக்க குளிர்ச்சியையுடைய இப்புனத்தின்கண்ணே ஒன்று போந்ததுண்டோ? (உரைமின்).

(வி - ரை) திணை - பாலைக்கட் குறிஞ்சி மயங்கிவந்த திணை ; துறை - மதியுடம்படுக்கும் வகையால் எழைய ரிருவருமிருந்த செவ்வியுள், வேழம்வினாய் வெற்பன் சென்றது என்னும் வேழம் வினாதற்றுறை.

இழை - அணிகள் ; அழகிய இழைகளால் ஆக்கப்பட்ட துகில் என்றலுமாம்.

வனமுலையீர் - இயற்கைப் புணர்ச்சியின்பின் பிரிந்த பின்னர்த், தலைவியும் பாங்கி முதலிய ஆயமும் உடனிருந்த செவ்வியில், தலைவியை விளித்துக்கூற வியைபன்மையின் அவர் அனைவரையும் நோக்கிப் பொதுமையின் விளித்த பன்மை. ஈர்ந்தண் - ஒருபொருட் பன்மொழி ; மிகுதி குறித்தது.

உழையாக - இப்பக்கமாக ; "ஈங்கு...யானையுண் டோவரக் கண்டதுவே" (திருக்கோவை - 52)

பிழையா - என்றும் கெடாத - மாறாத - பிழைத்தல் இல்லாத ; கைம்மான் - கையையுடைய விலங்கு - யானை ; நேர்அன்ன - அதுவேபோன்ற ; ஒருபொருட் பன்மொழி சிறப்புக் குறித்தது.

களிறு - ஒன்று - போந்தது - உண்டோ எனக் கூட்டுக. 8

கட்டளைக்கலித்துறை

களிறு வழங்க வழங்கா வதர்கதிர் வேலுணையா
வெளிறு விரவ வருதிகண் டாய்விண்ணி னின்றிழிந்த
பிளிறு குரற்கங்கை தாங்கிய பிஞ்ஞகன் பூங்கழன்மாட்
டொளிறு மணிக்கொடும் பூணிமை யோர்செல்லு மோங்கிருளே.

(இ - ள்) விண்ணினின் றிழிந்த...ஓங்கிருளே-வானத்தினின்றும் இறங்கிய மிக்க ஓசையினையுடைய கங்கையினைத் தாங்கிய இறைவரது மலர்போன்ற திருவடியின்கண் பொருந்தவைத்த விளக்கமுடைய மணிகளையுடைய வளைந்த அணிகளையுடைய தேவகணங்கள் சஞ்சரிக்கும் மிக்க இருள் பொதிந்த இரவிலே ; களிறு...வருதி கண்

டாய் - யானைகள் திரிதலாலே மக்கள் செல்லலாகாத வழிகளில் கதிர்வேல் துணையாக அதன் வெளிச்சம் வீசவருதல் வேண்டா.

(வி - ரை) தீணை அது ; துறை தோழி கூற்று. இழுக்கம் பெரிதிரவு வரினென, அழுக்கமெய்தி யரிவை யுரைத்தது என்னும் ஏதங் கூறி மறுத்தற்றுறை ; "முழங்கா ரரிமுரண் வாரண வேட்டைசெய் மொய்யிருள்வாய், வழங்கா வதரின் வழங்கென்னு மோவின்றெம் வள்ளலையே" (திருக்கோவை - 157).

வழங்க-வழங்குதலால் எனக் காரணப்பொருளில் வந்த வினையெச்சம்; வெளிறு-வெளிச்சம்; அறியாமை, பயனின்மை என்ற பொருள்கள் பொருந்த வுரைத்தலுமாம்; "இன்மை யரிதே வெளிறு" (குறள்) ; "இரவேதும் பயனில்லையே" (திருக்கோவை - 261) ; வருதி கண்டாய் - வருதல் வேண்டா ; "விடுதி கண்டாய்" (திருவா - நீத்தல் விண்).

பிளிறு குரல் - யானையோசை போன்ற மிக்க ஓசை ; ஒளிறு - விளக்கம், ஒளி ; பூங்கழன்மாட்டு ஒளிறு மணி...பூண் - கழலிலே வணங்கி வழிபடுதலால் அங்கு இமைக்கின்ற மணிகளையுடைய பூண்.

இமையோர் செல்லும் ஒங்கிருள் - தேவச்சாதியர் வழிபாடுகள் செய்யும் இரவுக்காலம் - நள்ளிரவும், நண்பகலும் தேவர்கள் வழிபடும் காலங்கள் எனப்படும். "கதிரவ னுச்சி நண்ணக் கடவுண்மால் வரையி னுச்சி, யதிர்தரு மோசை யைந்தும்" (கண்ணப்பர் புராணம் - 111) ; இந்நேரங்களில் மக்கள் வழியிடை வழங்கலாகாது என்னும் வழக்கு இது குறித்தது. ஒங்கிருள் - மிகச் செறிந்த இருளுடைய இரவு, இருள் - அதனையுடைய இராப்போதுக் காகியது. 9

நேரிசையாசிரியப்பா

இருள்புரி கூந்தலு மெழினலஞ் சிதைந்தது ;
மருள்புரி வண்டறை மாலையும் பரிந்தது ;
ஒண்ணுதற் றிலகமு மழிந்தது ; கண்ணும்
மைந்நிற மொழிந்து செந்நிற மெய்தி
யுள்ளறி கொடுமை யுரைப்ப போன்றன ;
சேதகம் பரந்தது செவ்வாய் ; மேதகு
குழைகெழு திருமுகம் வியர்ப்புள் ளூறுத்தி
யிழைகெழு கொங்கையு மின்சாந் தழீஇக்
கலையுந் துகிலு நிலையிற் கலங்கி
யென்னிது விளைந்த வாறென மற்றி
தன்னது மறிகில மியாமே ; செறிபொழில்
அருகுடை யாரூ ரமர்ந்துறை யமுதன்
முருகுவிரி தெரியன் முக்கண் மூர்த்தி
மராமரச் சோலைச் சிராமலைச் சாரற்
சுரும்பிவர் நறும்போது கொய்யப்
பெருஞ்செறி வனத்தில்யான் பிரிந்தவிப் பொழுதே. ௰

(இ - ள்) இருள்...சிதைந்தது - இருளைச் செய்கின்ற கூந்தலும் தனது அழகிய நலமாகிய தன்மை சிதைந்தது ; மருள்...அழிந்தது - மருள்பாடி வண்டுகள் மொய்க்கு

தற் கிடமாகிய மாலையும் நிலையழிந்தது ; ஒள்ளிய நெற்றியில் தீட்டிய திலதமும் அழிந்தது ; கண்ணும்...போன்றன - கண்களும் கரிய நிறத்தினை நீங்கிச் செந்நிறம் பொருந்தி உள்ளே தாம் அறிந்த கொடுமையினை வெளிப்பட எடுத்து உரைப்பன போன்றன ; சேதகம்...செவ்வாய் - இயல்பிற் சிவந்த வாயிதழ்கள் மிக்க சிவப்பினைப் பரவப்பெற்றன ; மேதகு...உள்ளுறுத்தி - மேம்பாடுடைய குழைகள் விளங்கும் திருமுகம் வியர்வினை உட்கொண்டு விளங்கி ; இழைகெழு... அழீஇ - அணிகள் அணிந்த கொங்கையும் மேற்பூசிய இனிய சந்தனப்பூச்சு அழிந்து ; கலையும்...... கலங்கி - கலையும் துகிலும் தம்நிலையினின்றும் பிறழ்ந்து (நிற்க); என்னிது...யாமே - எதனால் இந்நிலை விளைந்தது என ஆராய்ந்தபோது இதனை இன்னதென நாம் அறிகின்றிலோம்; செறிபொழில்...சாரல் - செறிந்த பொழில்கள் அருகிலே சூழ்ந்த திருவாரூரின்கண் விரும்பி எழுந்தருளிய அமுதம் போன்றவராகிய மணம் விரிந்து கமழும் மாலையினை அணிந்த முக்கண்களையுடைய மூர்த்தியினது மராமரங்கள் அடர்ந்த திருச்சிராமலையின் சாரலில் ; சுரும்பு ..பொழுதே - வண்டுகள் மொய்க்கும் நறிய பூக்களைக் கொய்வதன் பொருட்டுப் பெரிய செறிந்த வனத்திலே நான் இவளைப் பிரிந்ததாகிய இப்பொழுதிலே.

(வி - ரை) திணை - குறிஞ்சி ; துறை - இயற்கைப் புணர்ச்சியின்பின் தோழி நாடிய கூற்று.

1–4. இருள்புரி - கரிய ; இருளை முறுக்கினாற் போன்று பின்னிய ; புரிதல் - முறுக்குதலுமாம்; மருள்-மதுவுண்ட மயக்கம்; மருள் - பாட்டு வகையுமாம். "மருளைச் சுரும்பு பாடி" (பின் - சண்பை - தக்கே - 8) கண்ணும்...எய்தி - மை - கண்ணுக்குத் தீட்டும் மை ; சேந்நிற மெய்துதல் - புணர்ச்சியின்பின் கண் சிவத்தல் இயல்பு. பரிதல் - அறுதல்.

5. உள்ளறி கொடுமை உரைப்ப போன்றன - உள்ளறிதல் - அகநிகழ்ச்சியால் உள்ளே அறியப்படுதல் ; கொடுமை - கண் சிவத்தற்குக் காரணம் சினம் முதலிய கொடிய இராசதம்பற்றிய நிகழ்ச்சிகளேயாதற் குறிப்பு ; போன்றன - மெய்யும் வினையும்பற்றி வந்த உவமை.

6. சேதகம் - விளர்த்தற் சிவப்பு; செந்நிறம்; பரந்தல் - பரவுதல் - மிகுதல்.

7. உள்ளுறுத்தி - உட்கொண்டு ; நிலையிற் கலங்குதல் - பிறழ்தல்.

11. யாமே - ஆயத்தை உள்ளிட்ட பன்மை. நிற்க என்பது இசையெச்சம்.

14. சிராமலைச் சாரல் - கூடல் நிகழ்தற்றன்மை குறிஞ்சித்திணைக் குரித்தாகிய நிலங் குறிக்கப்பட்டது. மேல்வரும் பாட்டுங் காண்க. களவு நிகழ்தற்குத் தக்க இடமென்ற குறிப்புமாம். சிராமலை - தலைமையாகிய மலை என்றலுமாம்.

15 – 16. நறும்போது கொய்ய...பிரிந்ததிப்பொழுதே - இயற்கைப்புணர்ச்சி நிகழ்தற் கேதுவாய்த் தலைவி ஆயத்திற் பிரிந்து தனி சேறற்குரிய நிமித்தம் கூறியவாறு. "அவள் ஆயங்களும் பொழிலிடம் புகுதலும் விளையாட்டு விருப்பினாற் பிரியும் ; என்னை ? பிரியுமா றென்னெனின், ஒருவர் ஒருவரின் முன்னர்த் தழை விழையத் தக்கன தொடுத்துமென்றும், கண்ணி தண்ணறு நாற்றத்தன செய்துமென்றும், போது மேதக்கன கொய்துமென்றும், மயிலொடு மாறுபடுதுமென்றுங், குயிலொடு மாறு கூவுதுமென்றும், அருவியாடி யஞ்சுனை குடைதுமென்றும், வாசமலர்க்கொடியில் ஊசலாடுதுமென்றும் பரந்து, அப்பாலுள்ளார் இப்பாலுள்ளார்கொல்லோவென்றும், இப்பாலுள்ளார் அப்பாலுள்ளார் கொல்லோவென்றும், இவ்வகை நினைத்துப் பிரியவென்பது" என்று வரும் இறையனாரகப்பொருள் உரை (2–சூத்)யும், பிறவும்

பார்க்க ; யான் - பிரியாத தோழியாகிய யான் ; இப்பொழுதே - ஏகாரம் தேற்றம் ; பிரிந்தது சிறிது நேரமே என்ற குறிப்பு. பிரிந்தது - பிரிந்ததாகிய ; இப்பொழுதே... சிதைந்தது என்பது முதலாகக் கூட்டிக்கொள்க.

கூந்தல் நலம் சிதைதல், மாலை பரிதல், திலகம் அழிதல், கண் சிவத்தல், வாய் விளர்த்தல், முகம் வியர்த்தல், சாந்தழிதல், கலை நிலைகலங்குதல் என்ற இவை புணர்ச்சி காரணமாகத் தலைவியின்பாற் காணும் வேறுபாடுகள். "கருங்கண் சிவப்பக் கனிவாய் விளர்ப்பக்கண் ணாளிபின், வருங்கண் மலைமலர் சூட்டவற் றேமற்றவ் வான் சுனையே" (திருக்கோவை. 70.)

ஈண்டுக்கூறிய மெய்ப்பாடுகள் முதலியவை உள்ளத்துறு புணர்ச்சியானே நிகழ்ந்தனவாம் என்றும், மெய்யுறுபுணர்ச்சி ஈண்டுக்கொள்ளற்பாலதன்று என்றும் கூறுவர் ஆசிரியர். தமிழிலக்கணம் கூறும் இயற்கைப்புணர்ச்சி முதலியவை வடமொழியிற் கூறும் எண்வகை மணங்களுட் காந்தர்வ மணத்தின் வேறாயதென்றும் கூறுவர், இறையனாரகப் பொருள் 1–2. சூத்திர உரையுள் இவை விரித்துக் கூறப்பட்டன. ஆண்டுக் கண்டுகொள்க. 10

வெண்பா

பொழுது கழிந்தாலும் பூம்புனங்காத் தெள்கி
எழுது கொடியிடையாய் ! ஏகான்—றொழுதமரர்
முன்னஞ்சேர் மொய்கழலான் முக்கணு னான்மறையான்
மன்னுஞ்சேய் போலொருவன் வந்து. கக

(இ - ள்) எழுது கொடியிடையாய் ! - ஓவியத்துள் எழுதும் தொடிபோன்ற இடையினையுடையவளே !; தொழுதமரர்...வந்து - விண்ணோர்கள் தொழுது மனத்துள் வைக்கும் மொய்க்கும் கழலினை அணிந்த பாதத்தை உடையவரும், முக்கண்ணரும், நான்மறைகளைச் சொன்னவரும் ஆகிய இறைவரது நிலைபெற்ற சேயாகிய முருகன் போன்ற ஒருவன் வந்து ; பொழுது...எள்கி - பொழுது கழிந்து மாலைக் காலம் முடுகினும் நமது பூம்புனத்தைக் காத்துநின்ற அதனை விடுத்து ; ஏகான் - அகலமாட்டான்.

(வி - ரை) திணை - கூடனிமித்தமாகிய குறிஞ்சி, துறை - தோழி தலைவிக்கு மென்மொழியாற் கூறிக் குறைநயப்பித்தல், "புலியூர்ப், புரிசேர் சடையோன் புதல்வன்கொல் பூங்கணை வேள்கொலென்னத், தெரிபே முறையான் பிரியா னொருவனித் தேம்புனமே" (திருக்கோவை. 83 )

பொழுது கழிந்தாலும் - ஏகான் என்று கூட்டுக; காத்து-காத்து நிற்பதையன்றி; எள்கிப்போதல் - பயனற்ற இக்காவல் வேண்டுவதின்று என்று இகழ்ந்து அகலுதல்;

எழுது கொடியிடை - ஓவியத்தில் எழுதும் கொடிபோன்ற இடை ; "சித்திரத்தி லலர்ந்தசெந் தாமரை" என்பது கம்பன் பாட்டு ;

முன்னம் - மனம் ; முன்னம் சேர்தல் - மனத்துள் வைத்து அழுந்த எண்ணுதல் ; ஒருவரை யொருவர் முந்தி உந்திக்கொண்டு என்றலுமாம். நான்மறையான் - மறைகளாற் பேசப்பட்டவன் ; மறையின் பொருளாவான் என்றலுமாம்.

மன்னுஞ் சேய் - என்றும் கழியா இளமையுடைய முருகன்; சேய் - முருகன். 11

கட்டளைக் கலித்துறை

வந்தா ரெதிர்சென்று நின்றேன் கிடந்தவண் டார்தழைகள்
தந்தா ரவையொன்று மாற்றகில் லேன்றக்கன் வேள்விசெற்ற

செந்தா மரைவண்ணன் நீர்த்தச் சடையன் சிராமலைவாய்க்
கொந்தார் பொழிலணி நந்தா வனஞ்சூழ் குளிர்புனத்தே. கஉ

(இ - ள்) தக்கன்...குளிர்புனத்தே - தக்கனது வேள்வியினை அழித்த செந்தாமரை போன்ற திருமேனிவண்ணத்தினை யுடையவரும், கங்கைத்தீர்த்தம் தங்கும் சடையினையுடையவருமாகிய இறைவரது சிராமலையினிடத்துப் பூங்கொத்துக்கள் நிறைந்த பொழிலில் நந்தாவனத்தினாற் சூழப்பட்ட குளிர்ந்த புனத்தின் கண்ணே; வந்தார்...நின்றேன் - வந்த அவரது எதிரிலே சென்று நின்றேன்; கிடந்த... தந்தார் - தங்கிக்கிடந்த வண்டுகள் நிறைந்த பூந்தழையினைத் தந்தார்; அவை ஒன்றும் ஆற்றகில்லேன் - அவற்றை யொருசிறிதும் நான் ஏற்கவில்லை.

(வி - ரை) திணை-கூடணிமித்தத்தை உட்கொண்ட குறிஞ்சி; துறை - தழை ஏற்க மறுத்த தோழி தலைவிக்குக் கூறியது.

குளிர்புனத்தே - வந்தாரெதிர் சென்று என்க. வந்தார் - வினைமுற்றாக உரைத்தலுமாம். கிடந்த வண்டார் - தங்கிய வண்டுகள் நிறைந்த; கிடந்த - மொய்த்துக் கிடந்த; ஏற்கத் தகாத என இகழ்ச்சிக் குறிப்புமாம். தழைகள் - தலைவன் தனது கருத்தினைத் தலைவிபால் ஏற்பிக்கக் கையுறையாகக் கொண்டு செல்லும் ஒருவகை ஆடை என்பர் இவற்றைத் தோழியின்மூலம் சருவது மரபு. அவை - அவற்றை; ஒன்றும் - ஒன்றையும் என்றலுமாம்; ஆற்றகில்லேன் - ஏற்றல் பொருந்தேன்; ஏற்றலைச் செய்யமாட்டேன்; ஆற்றல் - ஏற்கும் செயலைச் செய்தல் என்ற பொருளில் வந்தது. கில் - ஆற்றலுணர்த்துவதோர் இடைச்சொல்; ஏற்காது மறுத்து விட்டேன். ஆற்றகில்லாமைக்குக் காரணம் தலைவியின் குறிப்பறிந்தனறி ஏற்றல் கூடாமையாலாகியது. இக்கூற்றுத் தலைவியின் குறிப்பறிதற்குச் சொல்லியது என்று உணர்க. மறுக்கும் வலியிலேன் என்ற குறிப்புமாம்.

சிராமலை - கூடல் நிகழ்தற்குரிய குறிஞ்சித்திணை பற்றிய நிலம் குறித்தது; முன்பாட்டுப் பார்க்க.

பொழிலணி...புனத்தகத்தே - பொழிலும், அதனடுவுள் நந்தாவனமும், அதனடுவுள் குளிர் புனமுமாம் என்றபடி.

அவை ஒன்றும் மாற்றகில்லேன் என்று பிரித்து, முன்கூறியபடிக்கன்றிச், தழை மறுத்தற்கு இதுகாறும் ஒவ்வோர் பொய் சொல்லி மறுத்தவாறு இன்று இவரது நோக்கங்கண்டபின் மறுத்தற்குப் பொய் சொல்லுநெறி அறிய கில்லேன் என்றுரைத்தலுமாம். குறிப்பறிதல் என்ற துறை விளக்கத்தில் பேராசிரியர் உரைத்தவை பார்க்க. "அறியேன் சொல்லு மீடவற்கே" (கோவை. 111.)

வந்தார் எதிர்சென்று நின்றேன் - வந்தார் - முன் பலமுறையும் வந்தவர்; யானை எதிர்ந்தபோது வந்து முன் அதனைக் கடிந்து மீட்டவர் என்ற குறிப்பும் காண்க. வந்தார் - தந்தார் என்ற சிறப்புப்பண்மைகளின் குறிப்புமது. 12

### நேரிசையாசிரியப்பா

புனமயிற் சாயற் பூங்குழன் மடந்தை
மனைமலி செல்வ மகிழா ளாகி
ஏதில னொருவன் காதல னாக
விடுசுடர் நடுவுநின் றுடுதலி னிழலும்
அடியகத் தொளிக்கு மாரழற் கானத்து

வெவ்வினை வேடர் துடிக்குரல் வெரீஇ
மெய்விதி ரெறியுஞ் செவ்வித் தாகி
முள்ளிலை யீந்து முளிதா ளிலவமும்
வெள்ளிலும் பரந்த வெள்ளிடை மருங்கிற்
கடுங்குரற் கதநாய் நெடுந்தொடர் பிணித்துப்
பாசந் தின்ற தேய்கா லும்பர்
மரையதண் மேய்ந்த மயிர்ப்புன் குரம்பை
விரிநரைக் கூந்தல் வெள்வாய் மறத்தியர்
விருந்தா யினள்கொ!, லூனே திருந்தாக்
கூற்றெனப் பெயரிய கொடுந்தொழி லொருவன்
ஆற்றல் செற்ற வண்ண லாரூர்ச்
செய்வளர் கமலச் சீறடிக்
கொவ்வைச் செவ்வாய்க் குயின்மொழிக் கொடியே. க௫

(இ - ள்) புனமயில்.. மகிழாளாகி - புனத்தின்கண் வாழும் மயில் போன்ற சாயலையும் பூங்குழலையும் உடைய எனது மடந்தையாகிய மகள் மனையில் மலிந்துகிடக்கும் செல்வங்களில் மகிழ்ச்சி யில்லாதவளாய் ; ஏதிலன் ..ஆக - தொடர் பில்லாத பிறன் ஒருவனைத் தன் காதலனுயினமையால் ; விடுசுடர்...கானத்து - வீசும் சுடரினையுடைய கதிரவன் வான உச்சியில் நின்று வெயில் காய்தலின் தன் நிழலும் அடியின்கீழ் ஒளிக்கும்படி நிறைந்த வெப்பமுடைய கானகத்திலே ; வெவ் வினை...வெரீஇ - கொடிய கொலைத்தொழில் பயிலும் வேடர்களது துடியின் ஓசைக்கு அஞ்சி ; மெய்...ஆகி - உடல் நடுக்கும் தன்மையினை உடையதாகி ; முள் ளிலை...குரம்பை - முள் பொருந்திய இலைகளையுடைய ஈந்தும், முள்பொருந்திய தாளையுடைய இலவமும், விளாவும் பரந்த வெளியிடத்தின் பக்கத்தில் கடிய குரலினை யும், சினத்தையும் உடைய வேட்டைநாயினை நீண்ட கயிற்றிற் கட்டித், தேய்ந்த காலின்மீது மான்றோலினல் வேயப்பட்ட மயிர்மூடிய சிறிய குடிசையில் ; விரி நரை...விருந்தாயினள்கொல் - விரிந்த நரைத்த கூந்தலையும் வெள்ளியவாயினையும் உடைய மறத்தியருக்கு விருந்தாக ஆயினளோ ?; திருந்தார்...ஆரூர் - (சிவனன்பில்) திருந்தாதார்க்குக் கூற்றுவன் எனப் பெயர்பெற்ற கொடுந்தொழிலினையுடைய இயமனது ஆற்றலினை அழித்த அண்ணலது திருவாரூரில் ; செய்வளர்...கொடியே தானே - வயல்களில் வளரும் கமலம் போன்ற சிறிய அடியினையும் கொவ்வைக் கனிபோன்ற வாயினையும் குயில் போன்ற மொழியினையும் உடைய எனது கொடி போன்ற அவள் தானுகவே.

(வி - ரை) திணை - உடன்போக்கினை உட்கொண்ட பாலை ; துறை - தலைவி தலைவனுடன் போயினளாகச் செவிலி வருந்துதல்.

2. மனைமலி செல்வ மகிழாளாகி - எனது மனையில் மலிந்த செல்வங்களில் மகிழ்ச்சி பெறுது ; காதலனது சேர்வு இச்செல்வங்களையும் பொருட்படுத்தாது கீழ்ப் படுத்தி மேலோங்கியது என்பது.

3. ஏதிலன்...ஆக - ஏதிலன் - காதல் ஒன்றொழிய வேறு ஒரு தொடர்பும் இல்லாத பிறன் ; காதலன் என்றது அக்குறிப்புடையது. ஆக - ஆயினமை யின் - ஆதல் காரணமாக.

4. விடுசுடர் - கதிரவன்; நடுவு நின்று - வானவீதியின் உச்சியில் நின்று; அடுதல் - எரித்தல்; உச்சிப்போது - நண்பகற்பொழுது குறித்தது; நிழலும் அடியகத்து ஒளிக்கும் ஆரழல் - உச்சிப் போதில் தன்னிழல் தன்னடியுள் அடங்கும் இயல்பு குறித்தது; இதனைக் குளிர்ச்சிதரும் நிழலும் தனக்கு ஒரு ஒளிக்குமிடம் வேண்டி அடியின்கீழ் ஒளிக்கும்படி வீசும் வெம்மை என்று தற்குறிப்பேற்ற அணி நயம்படக் கூறினது கவிநயம்; நிழலும் - குளிர்ச்சி செய்யும் நிழலும் என உம்மை உயர்வு சிறப்பு.

கானத்து (5) - வேள்ளிடை மருங்கில் (9) - புன்தூம்பை (12) என்று கூட்டுக.

6. வெவ்வினை - வேட்டையாகிய கொலைத்தொழில்; துடி - வேட்டையில் மா முதலியவற்றை எழுப்புதற்காக ஒலிக்கும் துடிகள். "மொய்குரற் றுடிக்குலங்கள் பம்பைமுன் சிலைத்தெழக், கைவிளிக் ததிர்த்துடா வெழுப்பினார்கள் கானெலாம்" (726) (கண் - புராணம் - 77.)

7. மெய்விதிர் எறிதல் - உடல் நடுக்குறுதல்.

8. முள் இலை ஈந்து - இலையில் முள் உள்ள ஈந்து; முள்இலை ஈந்து முதலியவை தன்மை நவிற்சி; முளிதாள் - தாளில் முள் உடைய. முளி - உலர்ந்த என்றலுமாம். வேள்ளில் - விளா; பாசம் - கயிறு. சதம் - விரைந்தோடும் செயலினையுடைய என்றலுமாம்.

11. பாசம் தின்ற - வேட்டை நாயினைக் கயிற்றினாற் கட்டப்பட்டதனாலே - அவை சுற்றி வரவும் இழுக்கவும் படுதலால் தேய்ந்த; கால் - தூண்; பிணித்து-பிணித்தலால்; தின்ற - தின்னப்பட்ட; தேய்கால் - தேய்ந்த கால்; உராய்ந்து அறுத்த;

12. மரை அதள் - மான்றோல்; மயிர் - வேய்தற் குரிய மயிர்; புன்தூம்பை - சிறுகுடில்.

13. வேள்வாய்-வெள்ளிலை முதலிய பண்டம் தின்னாத வெளிய வாய். மறத்தியர் - பாலை நிலமகளிர்; மறத்தியர் விருந்தாதல் - கானலில் வேறு மக்கள் இல்லாமையின் அவர்பாற் சென்று அவர்களால் உபசரிக்கப்படுதல்; கோடியே தானே மறத்தியர் விருந்தாயினள் கோல் என்க; மடந்தை - கொடியே - தானே - மகிழாளாகிக் - காதலனுக்க - கானத்துக் - குரம்பை (க்கண்) - மறத்தியர் - விருந்தாயினள் கொல்! என்று தொடர்புபடுத்துக.

18. செய்வளர் கமலம் - நீர்வளம் குறித்தது. 13

*வெண்பா*

கோடியேர் நுடங்கிடையாள் கொய்தாரான் பின்னே
அடியா னடந்தடைந்தா ளாக—பொடியாக
நண்ணாரூர் மூன்றெரித்த நாகஞ்சேர் திண்சிலையான்
தண்ணாரூர் சூழ்ந்த தடம். ௧௪

(இ - ள்) பொடியாக...தடம் - பொடியாகும்படி பகைவர்களுடைய மூன்று ஊர்களையும் எரித்த, மலையாகிய திண்ணிய வில்லை உடையவரது குளிர்ந்த திருவாரூரினைச் சூழ்ந்த தடத்தினை; கொடியேர்...ஆக - கொடிபோன்ற அழகிய நுடங்கிய இடையினையுடைய என் பெண்கொடி தழைத்த மாலையினை உடையவன் பின்னே காலால் நடந்து அடைந்தாளாகுக.

(வி - ரை) திணையும் துறையும் அவை.

இடையாள் - நடந்து - தடம் அடைந்தாளாக என்று கூட்டுக ; ஆக - ஆகுக என்று வாழ்த்தியதாம் ; வியங்கோள் வினைமுற்று. அடியால் நடந்து - என்றும் கொடியேர் நுடங்கு இடையாள் என்றும் கூறியது கானத்தில் நடந்தறியாத மெல்லியளாதலின் அவ்வருத்தம் தன்பால் தோன்றத் தாய் வருந்திக் கூறியதாம்.

நண்ணார் - பகைவர் ; முப்புரவாணர். நாகம் - மலை ; மேரு ; சிலை - வில், மேருவாகிய வில்லையுடையவர் ; தடம் - குளிர்ந்த இடம் என்ற பொருளில் வந்தது. மகள் நடந்துசென்றது கானமாக அன்றித் தடமாக ஆகுக என்ற வாழ்த்துக் குறிப்புமாம். பின் இரண்டிகள் திரிபு என்ற சொல்லணியில் வைத்ததும் அக்கருத்தது. மேல்வரும் பாட்டும் பார்க்க. 14

கட்டளைக்கலித்துறை

தடப்பாற் புனற்சடைச் சங்கரன் றண்மதி போன்முகத்து
மடப்பான் மடந்தை மலரணைச் சேக்கையிற் பாசம்பிரீஇ
இடப்பாற் றிரியில் வெருவு மிருஞ்சுரஞ் சென்றனளாம்
படப்பா லனவல் வாற்றமி யேன்றையல் பட்டனவே. கரு

(இ - ள்) தடப்பால்...மடந்தை - தடம்போன்ற கங்கைப்புனலை ஏற்றுவைத்த சடையினையுடைய சங்கரனார் சிரத்திற்சூடிய குளிர்ந்த மதியினைப் போன்ற முகத்தினையுடைய மடவிய மடந்தை ; மலரணை...வெருவும் - மலர்பரப்பிய அணையுடைய படுக்கையில் தொடர்ந்திருந்த அணையலினின்றும் பிரிந்து இடப்பக்கத்துத் திரும்பினும் வெருவுதல் கொள்ளும் தன்மையுடையவள் ; இருஞ்சுரம் சென்றனளாம் - கொடிய சுரத்தினிடைச் சென்றனளாகும் ; படப்பாலன...பட்டனவே - தமியேனுடைய மகள் பட்ட துன்பங்கள் அவள் படும் தகுதியுடையனவல்ல.

(வி - ரை) திணையும் துறையும் அவை.

தடம்பால் புனல் - பெருந்தடத்தின் தன்மைகொண்ட பெரிய நீர் ; பால் - பக்கம். புனல் - இங்குக் கங்கையைக் குறித்தது.

சங்கரன் தண்மதி - இறைவர் சூடிய குளிர்ந்த மதி. மடப்பால் - மடம் கொண்ட ; பால் - பகுதி ; மடமை பெண்மைக்குண நான்கனுள் ஒன்று ; அறிந்தும் அறியாள் போன்றிருத்தல் ; மடந்தை - பெண் ; பொதுமை குறித்தது.

மலரணை...வெருவும் - மலர் அணையில் தோழியுடனேயும் அல்லது தாயுடனேயும் சேர்ந்து உறங்கும்போதும் வலமிடம் மாறித் துயில நேர்ந்தபோதும் அச்சங் கொள்ளும். சேக்கை - படுக்கை ; பாசம் - தழுவியிருத்தலை ; பிரீஇ - பிரிந்து ; சென்றனளாம் - சுரம்போக்குக் கருதலளவையால் அறிய வந்தமையால் ஆம் என்றாள்.

பட்டனவே - படப்பாலன அல்ல - என்று கூட்டுக. பட்டன - சென்றனளாயின் பட்டன என்று தான் கருதவந்த இத்துன்பங்கள். 15

நேரிசையாசிரியப்பா

பட்டோர் பெயரு மாற்றலு மெழுதி
நட்ட கல்லு மூதூர் நத்தமும்
பரன்முரம் பதரு மல்லது படுமழை
வரன்முறை யறியா வல்வெயிற் கானத்துத்
தேனிவர் கோதை செல்ல, மானினம்

அஞ்சி லோதி நோக்கிற் கழிந்து
நெஞ்செரி வுடைமையின் விலக்காது விடுக ;
கொங்கைக் கழிந்து குன்றிடை யடைந்த
கொங்கிவர் கோங்கமுஞ் செலவுடன் படுக ;
மென்றோட் குடைந்து வெயினிலை நின்ற
குன்ற வேய்களுங் கூற்றடைந் தொழிக ;
மாயிருங் கடற்றிடை வைக லாயிரம்
பாவையை வளர்ப்போய்! நீநனி பாவையை
விலக்காது பிழைத்தனை மாதோ ! நலத்தகும்
அலைபுன லாரூ ரமர்ந்துறை யமுதன்
கலையமர் கையன் கண்ணுத லெந்தை
தொங்கலஞ் சடைமுடிக் கணிந்த
கோங்கலர் கண்ணி யாயின குரவே. கசு

(இ - ள்) நலத்தகும்...குரவே - நன்மைதரும் தன்மை வாய்ந்த அலைகளை யுடைய நீர்நிறைந்த திருவாரூரின்கண் விரும்பி வீற்றிருக்கும் அமுதுபோல்பவரும், மான்கன்று தங்கிய கையினை யுடையவரும், கண்ணுதலும், எந்தையும் ஆகிய இறைவரது நீண்டு வளர்ந்த அழகிய சடைமுடியினுக்குச் சூட்டிய மணமுடைய மலர்முடி மாலையாகிய குராவே !; பட்டோர்...செல்ல-இறந்துபட்டோருடைய பெயரினையும் வல்லமைகளையும் எழுதி நட்ட நடுகற்களும், பழவூர்ப் பொதுநத்தமும், பரல்களை யுடைய முரம்பினது வழிகளும் காணஉள்ளனவே யன்றிப் படுகின்ற மழையானது பருவத்திலே வான்முறை வீழ்தல் அறியப்படாத வலிய வெயில் சுடும் கானத்திலே தேன்வண்டுகள் மொய்க்கும் மாலையணிந்த என்மகள் போக ; (அதுகண்டும்) மானி னம்...விலக்காது விடுக - மான் கூட்டங்கள் அழகிய கூந்தலையுடைய அவளது பார்வைக்குத் தோற்றுப்போயினதால் மனநோயுடைமையாலே அவளைச் செல்லற்க என்று விலக்காமல் விடுக ; கொங்கைக்கு...உடன்படுக - கொங்கைகளுக்குத் தோற்றுக் குன்றிடைச் சென்ற மணமுடைய கோங்கங்களும் அவள் செல்வதற்கு உடன் பட்டமைக ; மென்றோட்கு...ஒழிக - மெல்லிய தோள்களுக்குத் தோற்று மனமுடைந்து வெயிலில் நிலைநின்ற மலைமூங்கில்களும் கூற்றுவனடைய ஒழிகதிடுக ; மாயிரும்...மாதோ ! - பெரிய அகன்ற பாலையினிடத்திலே நித்தம் ஆயிரம் பாவைகளை வளர்க்கும் நீ எனது பாவையைச் செல்வதின் விலக்காது பிழைபட்டனை ; அந்தோ !

(வி - ரை) திணை - அது. துறை - குரவொடு வருந்தல் ; (திருக்கோவையார் - 241)

பட்டோர்...நட்ட கல் - இதனை நடுகல் என்ப ; கன்னடுதல் என்பது புறப்பொருள் வெண்பாமாலையுள் பொதுவியற் படலத்துக் கூறப்பட்டது. "அவன் பெயர் கன்மிசைப் பொறித்துக், கவின்பெறக் கன்னாட்டின்று" ; போரில் இறந்த வீரர்க்கேயன்றி மற்றும் புகழுடைய ஏனையோர்க்கும் இவ்வாறு பெயரும் புகழும் எழுதி சமப்புறங்காட்டில் கல் நடுதல் முன்னாள் முதல் இந்நாட்டு மரபுகளுள் ஒன்று. "கன்னின்றான்" முதலிய வழக்குக்கள் காண்க. முதூர் நத்தம் - பழைய ஊர் இருந்து அழிந்துபோன இடம். பரன் முரம்பு - அதர் - பரல்களையுடைய தாகிக் காலில் உறுத்தும் மேட்டுநிலம் உடைய வழி. அதர் - வழி - பாதை.

படுமழை வரன்முறை அறியா - படுதல் - உண்டாதல் ; தாவரம் உண்டாதற்குக் கருவியாதல் ; வழங்குதலுமாம் ; வரன்முறை - உரிய பருவத்தில் வருதல்.

6–7. அஞ்சில் ஓதி - அழகிய சிலவாகிய கூந்தலையுடைய பெண். ஓதி - கூந்தல்; அதனையுடைய பெண்ணுக்காகியது. நோக்கிற் கழிந்து - நோக்கு - கண் ; கண்ணின் அழகிய தன்மைக்குத் தோற்றுப்போதலின். நெஞ்சு எரிவு - மனம் எரிதல் ; இதுவும் மேல் "கொங்கைக்கு... அடைந்த", "குன்றிடை யடைந்த", "தோட்குடைந்து வெயினிலை நின்ற" என்பவையும் தற்குறிப்பேற்றவணி.

8–9. அழிந்து - உடைந்து என்பன அழிதலால் - உடைதலால் என்ற காரணங் குறித்தன. வனப்பினிற் கீழாதல் என்ற பொருளில் வந்தன. கோங்கு இவர் - மணம் வீசும்; சேலவு - செல்லுதலை. உடன்படுதல் - சம்மதித்து வாளா இருத்தல்.

10–11. கூற்றடைந்து - கூற்று - இயமன்; அடைந்து - பொருந்தி ; குன்றிடையடைதல் - வெயினிலை நிற்றல் - ஒளித்தல், நாணி வெயிலின் நிற்றல் என்ற குறிப்பும் தருவன.

12–13. கடறு - காடு ; பாலைநிலம். ஆயிரம்பாவை - குராவின் மலர்கள் ஒவ்வொன்றும் கூத்தாடும் பாவைபோன் றிருத்தலின் பாவை என்றார். இவை கொத்தாக மிகுதியாய்ப் பூத்தலின் ஆயிரம் என்றார். ஆயிரம் - எண் குறியாது மிகுதி குறித்தது. "ஆயிரந் தாமரை போலு மாயிரஞ் சேவடி யானும்" (அரசு - ஆரூர் - காந்தாரம் - 8) ; "குரவம் பாவை முருகமர் சோலைக் குற்றாலம்" (பிள். தேவா) ; பாவையாம் - பெண்ணை ; பாவை போன்றாளைப் பாவை என்றது உவமையாகுபெயர் ; என்மகளை. நனி - விலக்காது என்க. பாவை - குராமலர் ;

பாவையை வளர்ப்போய் - பாவையை விலக்காது - பிழைத்தனை - மான் - கோங்கு - வேய் - இவைகள் ஒவ்வோர் காரணம்பற்றித் தாம்தாம் தோற்றுவிட்டமையின் மனவருத்தமுடைமையால் விலக்காதொழிந்தன; (ஆனால்) நீ ஆயிரம் பாவையை வளர்ப்பவள் - பாவையினது வருத்தமும் அருமையும் அறிந்தவளாதலின் நீ விலக்காது விட்டது பிழை என்பதாம். "கேட்குந போலவுங் கிளக்குந போலவும், இயங்குந போலவு மியற்றுந போலவும், அஃறிணை மருங்கினு மறையப் படுமே" என்ப திலக்கணமாதலின் இவ்வாறு அஃறிணையாகிய தாவரங்களையும் விளித்துக் கூறல் அமையும். இவை மனவருத்தம், கவலை, உவகை முதலியவற்றின் மிகுதிப்பாட்டிற் றோன்றுவன. பிழைத்தனை - தவறிழைத்தாய் ; நாணமின்றி இன்னும் உயிர் தாங்கி வாழ்கின்றாய் என்ற குறிப்புமாம்.

17–18. சடைமுடிக் கணிந்த......குரவே - குரா - இறைவர் உகந்து சூடும் மலர்களுள் ஒன்று ; "குரா மலரோ டராமதியஞ் சடைமேற் கொண்டார்" (அரசு. தேவா - தாண்). கண்ணி - தலையிற் சூடும் மாலை. குரவு - குரா என்பது குறிலடுத்து வந்த ஈற்றாகாம் குறுகி உகரம் ஏற்றது ; நிலா - நிலவு என வருதல் போல. இது செவிலிகூற்று. 16

வெண்பா

குரவங் கமழ்கோதை கோதைவே லோன்பின்
விரவுங் கடுங்கானம் வெவ்வா—யரவஞ்
சடைக்கணிந்த சங்கரன் றூர்மதனன் றன்னைக்
கடைக்கணித்த தீயிற் கடிது. கஎ

(இ - ள்) குரவம்...கானம் - குராமலர் மணம் வீசும் கூந்தலினையுடைய என் பெண் மாலையணிந்த வேலினை ஏந்தியவன் பின்னே சென்று பொருந்திய கடிய கானம்; அரவம்...கடிது - பாம்பினைச் சடையில் அணிந்த இறைவனார் மாலைசூடிய மன்மதனைக் கடைக்கண்ணாற் பார்த்து எரித்த தீயினும் மிக்க கடுமையுடையது.

(வி - ரை) திணை அது; துறை - சுரத்தருமை நினைந்து நற்றாய் கவன்றது.

குரவம் - குராமலர்; அம்-சாரியை; கோதை - பெண்மயிர்; அதனையுடைய பெண்ணுக்காகி வந்தது. கோதை வேலோன் - மாலையையணிந்த வேலினையுடையவன் என்க. கானம் - கடிது என்று முடிக்க. கடைக்கணித்து - கடைக்கண்ணாற் பார்த்துச் சுட்ட. தீயின் - தீயினும்; இன் - ஒப்புப்பொருளில் வந்த ஐந்தனுருபு. 17

கட்டளைக் கலித்துறை

கடிமலர்க் கொன்றையுந் திங்களுஞ் செங்க ணரவுமங்கே
முடிமல ராக்கிய முக்கணக் கன்மிக்க செக்கரொக்கும்
படிமலர் மேனிப் பரம னடிபர வாதவர்போல்
அடிமலர் நோவ நடந்தோ கடந்தெம தம்மனையே. ௧௮

(இ - ள்) கடிமலர்...முக்கணக்கன் - மணமுடைய மலராகிய கொன்றையும் மதியமும் சிவந்த கண்களையுடைய பாம்பும் அவ்விடத்து முடியினிடத்து மலர்போலச் சூடிய முக்கண்ணனாகிய நக்கனாரும்; மிக்க...பரமன் - மிகச் செறிந்த செவ்வானம் ஒப்பாகும்படி விரிகின்ற திருமேனியினையுடைய பரமனாரும் ஆகிய இறைவரது; அடி பரவாதவர்போல் - திருவடிகளைத் துதிக்காதவர்களைப்போல; அடிமலர்...அம்மனையே - மலர்போன்ற அடிகள் வருந்த எமது அம்மனையே (அக்கடிய சுரத்தினை) நடந்தோ கடந்தது.

(வி - ரை) திணை அது; துறை - தலைவியின் சுரம்போக்கு நினைந்து செவிலி கவன்றுரைத்தது.

அம்மனை - அடிநோவ - அடிபரவாதவர்போல - நடந்தோ கடந்தது - என்று கூட்டி முடிக்க. இறைவனடிபரவாத பாவிகளே கடுங்கானகத்தில் நடந்து திரிகுவர்; அதுபோல எம் அம்மனையும் அடிநோவ நடந்தோ கடந்தனள் என்றதாம். அவள் நிலை நினைந்து செவிலி கவன்றது என்பது துறைவிளக்கம். ' அம்பலஞ் சிந்தியார், உறுவலக் கானகந் தான் படர்வானொ மொளியிழையே " (திருக்கோவை; 227). அடிபரவாதவரே கானகந் திரிந்தலைகுவர் என்பது உட்கிடை.

அங்கே - அவ்வேரிடத்தே; ஒருங்கே. முடிமலராக்கிய - முடியின்கண் மலர்போல அணிந்த; நக்கன் - நக்க உருவினர்; மிக்க செக்கர் - மிகச் சிவந்த செவ்வானம்; மலர்மேனி - செம்மை விரிந்த திருமேனி; மலரடி என்க; நடந்தோ கடந்தது - ஓகாரம் துன்பக் குறிப்புப்பட நின்றது. நடந்தோ என்றதனால் அவள் எப்பொழுதும் நெடுந்தூரம் நடந்தறியாள் என்பது. எம் அம்மனை - ஈண்டு மகளைக் குறித்தது. மாபு வழுவமைதி - அன்புபற்றி வந்தது. 18

நேரிசையாசிரியப்பா

மனையுறை குருவி வளைவாய்ச் சேவல்
சினைமுதிர் பேடைச் செவ்வி நோக்கி
யீனி லிழைக்க வேண்டி யான

அன்புபொறை கூர மேன்மேன் முயங்கிக்
கண்ணுடைக் கரும்பி னுண்டோடு கவரும்
பெருவளந் தழீஇய பீடுசால் கிடக்கை
வருபுன லூரன் பார்வை யாகி
மடக்கொடி மாதர்க்கு வலையாய்த் தோன்றிப்
படிற்று வாய்மொழி பலபா ராட்டி
உள்ளத் துள்ளது தெள்ளிதிற் கரந்து
கள்ள நோக்கமொடு கைதொழு திறைஞ்சி
எம்மி லோயே பாண; அவனேல்,
அமரரு மறியா வாதி மூர்த்தி
குமரன் றாதை குளிர்சடை யிறைவன்
அறைகழ லெந்தை யாரூ ராவணத்
துறையிற் றூக்கு மெழின்மேன் காட்சிக்
கண்ணடி யனைய நீர்மைப்
பண்ணுடைச் சொல்லியர் தம்பா லோனே. கக

(இ - ள்) மனையுறை...ஊரன் - வீட்டு இறப்பில் கூடுகட்டி வாழும் குருவியினது வளைபோன்ற வாயினையுடைய சேவல் தனது பெட்டையின் சினை முற்றிய செவ்வியினைப் பார்த்து அது முட்டை யீனுதற்குரிய கூட்டினைச் செம்மையாக இழைத்து அமைக்கவேண்டிக் குறையாத அன்பும் பொறையும் மிகுதலால், மேலும் மேலும் முயற்சித்து அதற்காகக் கண்ணுடைய கரும்பினது நுண்ணிய இலையினைக் கவர்கின்ற பெரிய வளங்களையுடைய பெருமைசான்ற நிலப்பரப்பில் வரும் நீர்வளம் பொருந்திய ஊரனுடைய; பார்வையாகி - பார்வைப் பிராணியாக வந்து; மடக்கொடி .....இறைஞ்சி - மடமையுடைய கொடிபோன்ற பெண்களை அகப்படுத்தும் வலையாகித் தோன்றிப் பொய் பொருந்திய வாய்மொழிகள் பலவற்றைப் பாராட்டிச் சொல்லிக் கொண்டு தன் மனத்தில் உள்ள கருத்தினை வெளிப்பட மறைத்துக் கள்ளப்பார்வையோடும் கைதொழுது வணங்கி; எம் இலோயே பாண - எமது மனையில் வந்து நிற்கின்றனையே பாணனே! ; அவனேல் - எமது தலைவனோ என்னில்; அமரரும்......எந்தை - தேவர்களும் அறியலாகா ஆதிமூர்த்தியும், குமரனது தந்தையும், குளிர்ந்த சடையினையுடைய இறைவரும், சத்திக்கும் கழலினையணிந்த எந்தையுமாகிய இறைவருடைய; ஆரூர்...பாலோனே - திருவாரூரின் கடைவீதிகளில் தூக்கிய அழகிய மென்காட்சியினைத் தரும் கண்ணடியே போன்ற தன்மையுடைய பண்கள் பொருந்திய சொல்லையுடைய பரத்தையர்பால் உள்ளவனாயினன்.

(வி - ரை) திணை - பெருந்திணை ; துறை - பாணனொடு வெகுளுதல்.

1-5. மனையுறை...கவரும் - வீட்டுக்குருவி முதலிய சில பறவைகள் தம் பெட்டைகள் சினை முதிர்ந்த பருவத்தை நோக்கி அவை முட்டையிடுதற்கு ஏற்றவாறு மெத்தென அமையவும், காற்று முதலியவற்றால் கேடு நேராது அமையவும், பிறவாறும் தமது கூடுகளைப் புதுக்கி யமைப்பது இயல்பு; அதற்கு வேண்டிய தகுந்த நார் - பஞ்சு - முதலியவற்றை அவற்றின் சேவல்கள் சலியாது தேடித் தெரிந்து முயன்று கொணர்ந்து கூடுகளைச் செம்மையாகப் புதுக்கி அமைக்கும்; இஃது அவற்றின் வாழ்க்கைச் சரித இயல் என்பதை அவ்வாழ்க்கை ஆராய்ந்த ஆசிரியர் கூறுவர். இதனை இங்கு எடுத்தமைத்துக், கூடுகள் புதுக்க உதவும் அத்தகைய நுண்கரும்புகளை

யுடைய பெருவளநாட்டினை உடையவன் தலைவன் என்றது அச்சிறு பிராணிகளுக்கு உள்ள அன்பும் பொறையுமின்றித் தலைவன் தலைவியைப் பிரிந்து பரத்தையர்பால் உறைகின்றனன் என்ற குறிப்புணர்த்தற்கு.

1. வளைவாய் - சங்குபோலப் பரியஅடியும் கூரிய நுனியுமுடைய மூக்கு; சேவல் - ஆண்பறவை; பேடைச்சினைமுதிர் செவ்வி - என்க. செவ்வி - பருவம்; இங்கு முட்டையீனும் பருவம் குறித்தது. ஈனில் இழைத்தல் - முட்டையீனுதற்குரிய வசதிகளையுடையதாகத் தம் கூட்டினை இழைத்துப் புதுக்குதல்; இழைத்தல் - கட்டுதல்; குருவிகளின் கூடுகள் நார்களால் தக்கவாறு இழைத்து ஆக்கப்படும் நிலை குறித்தது. ஈனில்-சூதிகாகிருகம் என்பர் வடவர்; இஃது அமைக்கும் இடமும் கால முதலியனவும் மனையடி நூல்களினும் கணிதநூல்களினும் விதிக்கப்பட்டுள்ளன காண்க.

4. அன்புபொறை கூர - அன்பும் பொறையும் மிகுதலால்; எண்ணும்மைகள் விரிக்க. முயங்குதல் - முயற்சித்தல். மேன்மேல் - குருவி சிறிய பிராணியாதலின் கரும்பின் நுண்தோடு பல கவர்தற்குப் பலகாலும் முயலுதல் வேண்டுமென்பது. கண்ணுடைக் கரும்பின் நுண்தோடு - கணுக்கள் முற்றிவரும் கரும்பின் நுண்ணிய இலைகள்; இந்தப் பருவத்துக் கரும்பின் இலைகளின் நுண்ணிய விளிம்புப் பகுதிகள் மெத்தெனவும் அறுதல் படாதனவும் சூடுகாத்து வெளியில் விடாதனவும் ஆகிப் பல வகையாலும் இத்தருணத்திற்கு அமையக் கூடு புதுக்கவும் கட்டவும் அமைதி பெறுவன. தோடு - இலையின் விளிம்புப் பகுதிகள்.

6-12. கிடக்கை வருபுனல் ஊரன் - புனல் வரும் பெருநிலப்பரப்புக் கொண்ட ஊரின் தலைவன். பார்வை - பழகாத மிருக முதலியவற்றை அகப்படுத்த உதவி செய்யப் பழக்கப்படுத்திய மிருகம் முதலியன; "பொருபுலிப் பார்வை" (கண். புரா - 23=672); "பார்வையென மாக்களைமுன் பற்றிப் பிடித்தற்காம், போர்வை" (திருவருட்பயன் - 45). ஊரன் பார்வை - ஊரன் பயன்படுத்தும் பார்வைப்பிராணி. பார்வை மிருகம்போலத் தலைவனுக்குப் பயன்படுதலின் பார்வையாகி என்றார் மாதர்க்கு வலையாய் - மாதராகிய மீன்களை (பிராணிகளை)ப் பிடிக்கும் வலையாகி; ஏகதேச உருவகம். மடக்கொடி - மாதர் - மடமையும் கொடிபோன்ற துவள்வும் எளிமையும் கொண்டமையின் வலையில் அகப்படுத்த எளிதாதலை எண்ணி என்றதும் குறிப்பு. படிற்று வாய்மொழி பல பாராட்டி - தலைவர் உங்கள்பால் மிக அன்புடையவர் என்பது முதலாகப் பொய்மொழி பல புனைந்து சொல்லி; மெய்போலத் தோன்றும் வஞ்சமொழி. கள்ள நோக்கமொடு...உள்ளத்துள்ளது தெள்ளிதிற் கரந்து - தலைவனது தூதனாக அனுப்பப்பட்டு வந்த பாணன் அதனை மறைத்துப் பேசுதல் குறித்தது. எம் இலோயே - எமது இல்லில் வந்தனையே. இலோய் - இல்லோய் என்றதன் தொகுத்தல்.

12. அவனேல் - அத்தலைவனோ; அவன் என்ற சுட்டு முன் ஊரன் என்றதைச் சுட்டியது. அவனேல் - பாலோனே என்று கூட்டுக. ஊரன் - பார்வையாகி - நீ - எம் இல்லோய்; அவனேல் (எம்மிடம் மிக்க அன்புள்ளவன் என்று நீ கூறும் கூற்றுக்கு மாறாகச்) - சொல்லியர்தம் பாலோனே என்றது குறிப்பு. ஆவணத்துறையில் தூக்கும் - கண்ணடி - இக்காலிற் போலவே முன்னாளிலும் ஆவணங்களில் வருவாரை மனங்கவர்தற்கு அழகிய கண்ணாடிகளையும் ஓவியப் படங்களையும் தூக்கி வைத்தல் வழக்கு. துறை - விற்பனைப் பண்டங்களை ஒழுங்குபட வைத்துக் காட்டும் காட்சியறைகள். Show Rooms என்பர் நவீனர்.

17. கண்ணடி யனைய நீர்மைப் பண்ணுடைச் சொல்லியர் - என்றது பரத்தையரை. கண்ணாடி போன்ற தன்மையாவது தன்கட் டோன்றும் நிழல், தனக்கொரு

பற்றும் இன்றி, எதிர்வந்த உருவங்களின் அளவே தோன்ற நிற்றல். அஃதாவது பரத்தையர்பால் சார்வோரது அளவே அவர்களது செயல் அமையு மாறன்றிச் சார்வோர்பால் தமக்கு ஒரு பற்றும் இல்லாமை. எழின்மேன் காட்சி - கண்ணாடியினுள் தோற்றம் நன்கு காணும் அதன் தன்மை குறித்தது. சொல்லியர் தம்பாலோனே - பரத்தைபாற் சேர்ந்துள்ளான்; ஏகாரம் தேற்றம்.

இத்திருப்பாட்டு, தன்மை, உவமை முதலிய அழகிய பல அணிநயங்களையும், பல அரிய கருத்துக்களையும், குறிப்புக்களையும் உட்கொண்டு விளங்கும் அருமையான கவி நயம் விளங்கவுள்ளது. 19

வெண்பா

பாலாய சொல்லியர்க்கே சொல்லுபோய்ப் பாண்மகனே!
ஏலாவிங் கென்னுக் கிடுகின்றாய்—மேலாய
தேந்தண் கமழ்கொன்றைச் செஞ்சடையான் றாள்சூடும்
பூந்தண் புனலூரன் பொய். உ0

(இ - ள்) மேலாய...பொய் - மேன்மையுடைய தேன் பொருந்திய தண்ணிய நறவிய கொன்றைமலரினைச் சூடிய சிவந்த சடையினையுடைய இறைவரது திருவடியை முடியிற்சூடிய அழகிய குளிர்ந்த நீர்வளமுடைய ஊரனது பொய்யினை; பாண் மகனே - பாணனே!; பாலாய...போய் - போய்ப், பால் போன்ற சொல்லினையுடைய அப் பரத்தையர்க்கே சொல்வாயாக; ஏலா...இடுகின்றாய் - ஏற்காத இவ்விடத்தே எதற்காக அதனைச் சொல்லியிடுகின்றாய்?

(வி - ரை) திணையும் துறையும் அவை. தோழி கூற்றுமாம். தலைவி பாணற் குரைத்தல் எனினுமாம்.

பாண்மகனே - ஊரன் பொய் - சொல்லியர்க்கே போய்ச் சொல்லு - இங்கு என்னுக்கு இடுகின்றாய் என்று கூட்டி முடிக்க. பாலாய சொல்லியர் - பரத்தையர்; பால் போன்றனவாய் இனிக்கப் பேசுவர். ஆய என்றதனால் பேச்சு அளவில் பாலாகியர்; மனம் அவ்வாறிலர் என்றது குறிப்பு.

ஏலா - அடபொய்யினை ஏற்றுக்கொள்ளாத; ஏலா - செல்லா என வினைமுற்றாக உரைப்பினுமமையும்; இங்கு - எம்மிடத்து. என்னுக்கு - எதற்கு - என்ன பயன் கருதி - பயனில்லை என்பது. இடுதல் - வட்டித்து மொழிதல். தாள் சூடும்... ஊரன் பொய் - ஊரனது பொய்; ஊரனைப் பற்றிய பொய் என்றலுமாம். தாள்சூடும் - தலைவன், சிவன்பாலன்பு உடையனாயிருந்தும் அதற்கு மாறாக எம்மிடம் அன்பிலன் என்ற குறிப்புடன் நின்றது. 20

கட்டளைக்கலித்துறை

பொய்யாற் றொழினு மருளு மிறைகண்டப் போலிருண்ட
மையார் தடங்கண் மடந்தையர் கேட்கிற்பொல் லாது;வந்துன்
கையா லடிதொடல் செல்லனில் புல்லல் கலையனையல்
ஐயா விவைநன்கு கற்றாய் பெரிது மழகியவே. உக

(இ - ள்) பொய்யால்...பொல்லாது - பொய்மையாலே தொழுதாலும் அருள் செய்யும் இறைவரது திருநீலகண்டம் போல இருள்கொண்ட மைதீட்டிய பெரிய கண்களையுடைய பரத்தையர் கேட்டார்களானால் பொல்லாது; வந்து...அனையல் -

வந்து உனது கையால் எனது அடியினைத் தொடாதே; அருகு வராதே; நில்லு; புல்லாதே; துகிலைத் தொடாதே; ஐயா... அழகியவே - ஐயனே! இவற்றைச் செய்தற்கு நன்கு தெரிந்தனை! உன் தன்மைக்கு இவை பெரிதும் அழகிய செயல்களே.

(வி - ரை) திணை - கூடனிமித்தமாகிய குறிஞ்சி; துறை - அணைந்தவழி ஊடல்.

போய்யால் தொழினும் அருளும் - பொய்யாற் றொழுதலாவது மனமொன்றச் செய்யாது தொழுதலாகிய தொழிலைப் பாவனைக்காகச் செய்தல்; நாடகம் நடிப்பவன்போல. மனமொன்றாவிடினும் தொழுதல் என்பது நல்லதொரு காரியமாய், விதித்ததொன்றாதலின் அத்தொழிலளவுக் குகந்த பயனைத் தரும் என்பது இறைவன் வகுத்தது. அதுபோலவே பகையுமாம். "பொய்ப்பகை செய்யினும் ஒன்றுபத் தாமே" என்பது திருமந்திரம். பொய்யாய்த் தொழுதற்கும் அருளுவது இறைவரது பேரருளின் தன்மை குறித்தது. இருண்ட... மடந்தையர் நீ சார்வுற் றிருந்த பரத்தையர் என்பது. இருண்ட என்றதனால் பயன்பற்றாது இருளின் வண்ணத் தளவுக் குவமையாதல் குறிப்பு. கண் இருள் குறித்தமையால் மனத்தினிருளை யும் கருதவைத்தது. இருண்ட - மடந்தையர் - என்று கூட்டி, இருண்ட மனத்தை யுடைய மடந்தையர் என்றலுமாம். "பாவையருள்ளமும்......என்ன இருண் டது..." (305)

கேட்கிற் பொல்லாது - அவர் பிணங்குவர்; அதனால் நீ அவர்பால் வைத்த அன்பிற்கும் அவர் உன்பால் காட்டும் அன்புக்கும் இடையூறு விளையும்; அதில் நீ என்பாலினும் மிகக் கருத்துடையை என்பன குறிப்பு. உன்கையால்...அளையல் - இவை தலைவன் பிழைபட்டு வந்தானாதலின் தலைவியுடைய இயல்பாபெழும் ஊடலைத் தணிக்கச் செய்யும் தொழில்கள். அல் - எவலொருமை விகுதி; உடன்பாட்டிலும் எதிர்மறையிலும் வருமென்பர் பரிமேலழகர். "மகனெனல், மக்கட் பதடி யெனல்" (குறள்).

இவை நன்கு கற்றாய் - செய்து கைதேர்ந்துள்ளாய். பெரிதும் அழகியவே - இகழ்ச்சிக் குறிப்புப்படக் கூறியது. இவை பரத்தையிற் பிரிந்த தலைவன் வந்து கூடியபோது தலைவி ஊடி உரைத்தவை. இவ்வூடலாற் கூடலின்பஞ் சிறக்கு மென்பது அகப்பொருளியல். "வேல்தான் திகழ்கண்ணிளையார் வெகுள்வர் மெய்ப் பாலன்செய்த, பால்தான் திகழும் பரிசினம் மேவும் படிறுவவேம், கால்தான் றொடல்தொட ரேல்விடு தீண்டலெங் கைத்தலமே" (கோவை - 390). 21

நேரிசையாசிரியப்பா

அழகுடைக் கிண்கிணி யடிமிசை யரற்றத்
தொழிலுடைச் சிறுபறை பூண்டு தேரீர்த்
தொருகளி றுருட்டி யொண்பொடி யாடிப்
பொருகளி றனைய பொக்கமொடு பிற்றுழ்ந்து
பூங்குழற் சிறுரொடு தூங்குநடை பயிற்றி
அக்கரை யுடுத்தி யைம்படை கட்டி
ஒக்கரை யிருக்கு மொளிர்புன் குஞ்சிக்
குதலையங் கிளவிப் புதல்வன் றன்னை
உள்ளச் சொரிந்த வெள்ளத் தீம்பால்

உடைய வாகிய தடமென் கொங்கை
வேண்டாது பிரிந்த விரிபுன லூரன்
பூண்டாங் ககலம் புல்குவ னெனப்போய்ப்
பெருமட முடையை! வாழி; வார்சடைக்
கொடுவெண் டிங்கட் கொழுநில வேய்க்குஞ்
சுடுபொடி யணிந்த துளங்கொளி யகலத்
தண்ண லாரூர் திண்ணிதிற் செய்த
சிறைகெழு செம்புனல் போல
நிறையொடு நீங்காய் நெஞ்ச நீயே. உஉ

(இ - ள்) அழகுடை...அரற்ற - அழகுடைய கிண்கிணிச் சதங்கை காலிலே சத்திக்க; தொழிலுடை...பூண்டு-கைவினையுடைய சிறுபறையினைக் கைக்கொண்டு; தேர்...ஆடி - சிறுதேரினை ஒரு தனியே இழுத்து, ஒரு களிற்றினை உருட்டி, ஒள்ளிய புழுதி படிந்து; பொருகளிறு...பயிற்றி - போர்யானையைப் போன்ற பொலிவுடனே பின்னே தாழ்ந்து இளைஞராகிய அழகிய கழலையணிந்த சிறார்களுடனே இளநடை பழகி; அக்கரை...கட்டி - சங்குமணிகளை அரையிலே கட்டி (மார்பில்) ஐம்படைத்தாலி கட்டி; ஒக்கரை...ஊரன் - பக்கத்தே விளங்கும் புன்தலை மயிரினையுடைய குதலையாகிய அழகிய சொற்களையுடைய புதல்வனை நினைத்த பொழுதே சுரந்து பொழிந்த மிகுதியாகிய இனிய பாலினை உடையனவாகிய பெரிய மெல்லிய கொங்கைகளை விரும்பாமற் பிரிந்துபோன விரிபுனல் ஊரனது; பூண் தாங்கு...உடையை - அணிகள் தாங்கும் மார்பினைத் தழுவுவேன் என்று சென்று பெரிய மடமையை உடையையாயினை; நெஞ்சம் நீயே - எனது நெஞ்சே நீ; வாழி வாழ்வாயாக; வார்சடை...நீயே - நீண்ட சடையிற் சூடிய வளைந்த வெண்மதியினது கொழுவிய நிலவொளியைப் போன்ற சுடுபொடி யணிந்த துளங்கும் ஒளி பொருந்திய மார்பினையுடைய இறைவரது திருவாரூரில் திண்மையொடு செய்யப் பட்ட அணையினுள் தங்கியிருக்கும் செம்புனல் போல நிறையொடு நீங்காதிருப்

(வி - ரை) திணை - பெருந்திணை; துறை - பரத்தையிற் பிரிந்த தலைவனை நினைந்து தனிவருந்திய தலைவி நெஞ்சொடு புலத்தல்.

1–8 அழகுடை...புதல்வன் - இவை புதல்வனது வருணனை; கிண்கிணி பூணுதல், சிறுபறை முழக்குதல், சிறு தேருருட்டுதல், பொடியளைதல். சிறாருடன் நடை பயிறல், ஐம்படை கட்டுதல் முதலியவையும், சிறுபுன் குஞ்சி, குதலைக் கிளவியுடைமை என்ற இவை ஓராண்டுப் புதல்வர்க்குரிய அணி - செயல் - இயல் முதலியனவாம்.

3. ஒண்பொடி - புழுதி; 4. களிறு - மரத்தால் யானைபோற் செய்த விளையாட்டுப் பண்டம்; களிறனைய பொக்கம் - களிறு போன்ற பொலிவுபுடைபரத்தல் "பொக்கம் பரப்ப" (ஆளு - பிள் - உலா). பிற்றழ்ந்த சிறர் - உடன் விளையாடும் சிறுவர். பிற்றழ்ந்து - யானையின் தோற்றம் முன் உயர்ந்தும் பின்னே தாழ்ந்தும் காணப்படும்; அப்பொலிவு தோன்ற வருவதோர் விளையாட்டு முன்காலத்திற் சிறார் பயின்றனர் போலும் என்பர். (சிவப்பிரகாச தேசிகர் குறிப்பு). பொக்கம்-மிகுதி என்பதுமாம். ஒக்கரை யிருக்கும் - ஒக்கலை என்பதன் போலி; மருங்கில் - பக்கத்தே (இடையில்).

8. புதல்வன் றன்னை உள்ளச் சோரிந்த வெள்ளத் தீம்பால் - "பாணினைத் தாட்டுக் தாய்" (திருவா) என்றபடி புதல்வனை நினைத்தபோதே முலையிற் பால்சுரத்தல் தலையன்புடைய தாயர் இயல்பு. "முன்னின் - நிலை விளம்பக், கொங்கை சுரந்த வருட் கோமகள்" என்று இதனைப் பத்திச் சுவைபட விரித்தனர் சிவப்பிரகாசர்; (நால்வர் நான்மணிமாலை).

11. கோங்கை வேண்டாது பிரிந்த - தலைவியுடனிருத்தலை விரும்பாது பரத்தையயிற் பிரிந்த தலைவனது நிலை குறித்தது.

11-18. பிரிந்த...நீயே - விரும்பாது பிரிந்த தலைவனை நினைந்தமையால் அவன் பாற்சென்று கூடுவன் என்று எண்ணிப்போன நெஞ்சமே நீ பெருமடமுடையை: வேகத்துடன் ஓடுகின்ற நீர் சிறைப்பட்டுத் தனது வேகத்தினை உள்ளடக்கி நிற்றல் போல் நிறை என்னும் குணத்தை விடாது பொருந்தி இருப்பாயாக. தலைவனது பிரிவாற்றாது அவனை நினைந்து வருந்திய தலைவி தனது மனத்தினைத் தேற்றிப் புலத்தல். உன்னை விரும்பாது பிரிந்த அவனைச் சேர நினைப்பது மடமை; ஆதலின் நிறைவொடு நீங்காது அடங்குவையாக என்றபடி. வாழி இகழ்ச்சிக் குறிப்புப்பட நின்றது; அதுவே உனக்கு வாழ்வாகும் என்றது. நெஞ்சம் நீயே! - போய்ப் பெருமடமுடையை - சிறைகெழு புனல்போல - நிறைவொடு நீங்காய் - வாழி என்று கூட்டுக. அகலம் - மார்பு; (அகன்றிருப்பது).

17. சிறைகெழு சேம்புனல்போல - விரைந்து செல்லும் புதுப்புனல் அங்கங்கும் அணைகளாற் றடுக்கப்பட்டுத் தேங்குதலாற் பயிருக்கு உதவுதல்போல், தலைவனை விரையும் உள்ளமே நீ அவ்வாறு அவமே செல்லாது நிறைவுடனிருத்தலே பயன் தரும் என்றது; பயன்பற்றி வந்த உவமம். சேம்புனல் - புதுவெள்ளம். எத்தனை அணைகள் கடந்துவரினும் புதுப்புனல் செந்நிறம் மாறாது வருதல் காண்க.　22

வெண்பா

நீயிருந்திங் கென்போது நெஞ்சமே நீளிருட்கண்
ஆயிரங்கை வட்டித் தனலாடித் - தீயரங்கத்
தைவா யரவசைத்தா னன்பணைத்தோட் கன்பமைத்த
செய்வான வூரன் றிறம்.　உ௩

(இ - ள்) நீள்...தோட்கு - நீண்ட நள்ளிர விருளின்கண் ஆயிரங் கைகளையும் வீசித் தீயினில் ஆடி அந்தத் தீ அரங்கத்திலே ஐந்து வாய்களையுடைய பாம்பினைச் சுற்றிக் கட்டியுள்ள இறைவரது நல்ல பெரிய தோள்களுக்கு; அன்பமைந்த... திறம் - அன்பு கூர்ந்தவற்றைச் செய்யும் நல்ல ஊரனது திறங்களை; நீ...நெஞ்சமே- நீ இங்கு நின்று சிந்தித்துக்கொண்டு வருந்தியிருந்தமையால் என்ன பயன்; போது அவனிருக்கும் அவ்விடத்தே போதுவாயாக.

(வி - ரை) திணையும் துறையும் அவை. நெஞ்சைத் தேற்றுதல்.

நெஞ்சமே - ஊரன்திறம் - (சிந்தித்து வருந்தி) இங்கு இருந்து என் (பயன்) - (அங்குப்) போது என்று கூட்டுக. ஆயிரம் கை - ஆயிரம் - அநேகம் என்னும் பொருள் தந்து நின்றது. "ஆயிரம் பொன்வரை போலு மாயிரந் தோளுடையானும்" (தேவாரம்). வட்டித்தல் - வீசுதல்; சுழற்றல்; தீ அரங்கத்து - அந்தத் தீயாகிய அரங்கிலே என்று சுட்டு வருவிக்க. நீளிருள் - சங்கார காலம்; "இருளிடத் தன்னைச் சிக்கெனப் பிடித்தேன்" (திருவா); ஐவாய் அரவு - இறைவர் பூண்

பது ஐந்தலை நாகம் என்ப. நன்பணைத்தோள் - நல்ல பெரிய தோள்கள். அமைத்த - அமைத்தவற்றை ; அகரவீற்றுப் பலவறிசொல் ; இரண்டனுருபு விரிக்க. அசைத்தான் - வினையாலணையும் பெயர். 23

கட்டளைக்கலித்துறை

திறமலி சின்மொழிச் செந்துவர் வாயினை ! யெங்கையர்க்கே
மறமலி வேலோ னருளுக; வார்சடை யான்கடவூர்த்
துறைமலி யாம்பல்பல் லாயிரத் துத்தமி யேயெழினும்
நறைமலி தாமரை தன்னதன் றேசொல்லு நற்கயமே. உச

(இ - ள்) திறம்...வாயினை - நல்ல திறமுடைய இன்மொழிகளைப் பேசும் பவளம் போன்ற வாயினை உடையவளே !; எங்கையர்க்கே...அருளுக - எமது தங்கைமார்களுக்கே மறமுடைய வேலேந்திய ஊரன் தன் அருளினைச் செய்க ; வார்சடையான்...நற்கயமே - நீண்ட சடையினையுடைய இறைவரது திருக்கடவூர்த் துறையில் நற்கயத்தின் ஆம்பல் மலர்கள் பல்லாயிரத்துள்ளே தனியே எழுந்து பூத்தாலும் தேன்மிகப் பொருந்திய தாமரையின் உடைமையல்லவோ நல்ல அத்தடாகம்?; சொல்வாயாக.

(வி - ரை) திணை - அது. துறை - தலைவன் பரத்தையிற் பிரிந்தமை பற்றி வருந்திய தலைவியைத் தோழி ஆற்றுவித்தல். ஒரு பூந்தடத்தில் ஆம்பல் மலர் பல்லாயிரமும் பூக்கத் தாமரை ஒன்றே பூத்தாலும், சிறப்புப்பற்றி அது தாமரைத் தடாகம் என்றே சொல்லப் பெறும். அதுபோல ஊரன் பரத்தைகள் பலர்க்கும் தன் நலங்களை அருளினும், அவனது, உரிமை உனக்கேயாமன்றோ? சொல்வாயாக என்று தோழி தலைவியைத் தேற்றியவாறு.

திறமலி . வாயினை - இது தலைவியின் தன்மை பற்றித் தோழி புகழ்ந்தது ; சின்மொழி - இனியமொழி ; சிலமொழி என்றலுமாம் ; " பல சொல்ல - சில சொல்லல் தேற்றா தவர் "(குறள்); மொழிகள் சிலவாயினும் அவை திறம் பட்டவை என்க. திறம்மலிதல் - பொருளும் இன்பமும் மிகப் பொருந்துதல். எங்கையர் - எமது இளைய தங்கைமார். இங்குத் தலைவன் பொருந்திய பரத்தையரைக் குறித்தது. " வேல்தான் திகழ்கண் ணிளையார் " (கோவை 390); அருளுக - தனதன்பினைத் தரினும் தருக ; அதுபற்றி எமது உரிமைக்கும் பெருமைக்கும் குறைவில்லை என்ற படி. துறை - பூந்தடத்தின் துறை.

பல்லாயிரத்து - பல ஆயிர மலர்களுள்ளே. தமியே எழினும் - தனியே ஒன்று எழுந்து மலர்ந்தாலும். எழினும் - தாள் நீரின்மேல் நீண்டு வளர்ந்து எழுந்து பூக்கும் தாமரையினியல்பு குறித்தது.

நற்கயமே தாமரை தன்னதன்றே ? - அத் தடாகமுழுதும் சிறப்புப் பற்றித் தாமரைத் தடாகம் என்று சொல்லப்படுமே யன்றி, மிகுதி பற்றி ஆம்பற்றடாகம் என்னப் படாது. தன்னதன்றே - உரிமை அதன் கண்ணதன்றோ? ஓகாரம் - வினா; உடன்பாடு குறித்தது. அதுபோல் ஊரனது உரிமை உன்னுடையதே என்பது குறிப்பெச்சம்.

சொல்லும் நற்கயம் - எல்லாராலும் எடுத்துச் சொல்லப்படும் நல்ல தடாகம் அன்றோ என்று உலகம் சொல்லும் என்றலுமாம்.

வாயினர் - தன்னதன்றே - என்பனவும் பாடபேதங்கள். 24

### நேரிசை யாசிரியப்பா

கருங்கடன முதுகு தெருவுபட
வியங்குதிமி றடவி யெறியொளி நுளையர்
நெய்ம்மீன் கவரல் வேண்டிக் கைமிகுத்
தால வட்ட மேய்ப்ப மீமிசை
முடிகெழு தருவலை வீசி முந்நீர்க்
குடரென வாங்கிக் கொள்ளை கொண்ட
சுரிமுகச் சங்குஞ் சுடர்விடு பவளமும்
எரிகதிர் நித்திலத் தொகுதியுங் கூடி
விரிகதிர் நிலவுஞ் செக்கரும் தாரகை
உருவதுங் காட்டு முலவாக் காட்சித்
தண்ணந் துறைவன் றடவரை யகலம்
கண்ணுறக் கண்டது முதலா வொண்ணிறக்
காள மாசுணங் கதிர்மதிக் குழவியைக்
கோளிழைத் திருக்குங் கொள்கை போல
மணிதிகழ் மிடற்று வானவன் மருவும்
அணிதிக ழகலத் தண்ண லாரூர்
ஆர்கலி விழவி னன்னதோர்
பேரலர் சிறந்தது சிறுநல் லூரே. ௨௫

(இ - ள்) கயம்...நுளையர் - மிக்க ஆழமுள்ள கரிய கடலின் மேற்பரப்பு தெருவு போல வழிவிடும்படி இயங்கும் படகினைத் துடுப்பினாற் செலுத்தும் ஒளி யெறியும் பரதவர்கள் ; நெய்...வேண்டி - நெய்யினையுடைய மீன்களைப் படுத்தற்கு விரும்பி ; கைம்மிகுத்து - கைமுயற்சிமிக்கு ; ஆலவட்டம்...வீசி - ஆல வட்டம் போலத் தலையின்மேலே விளக்கமுடைய வலையினை விரித்து வீசி; மூந்நீர்...கொள்ளை கொண்ட - கடலின் குடரினை வாங்குதல் போல இழுத்துக் கொள்ளை கொண்ட ; சுரிமுக...கூடி-சுழிந்த முகத்தினையுடைய சங்குகளும் ஒளிவீசும் பவளமும் கதிர்விரியும் முத்துக்களின் தொகுதியும் சேர்ந்து ; விரிகதிர்...காட்டும் - விரியும் கதிர்களை யுடைய நிலாவும் செவ்வானமும் விண்மீன்களின் கோலமும் ஆகிய இவற்றினைப் போல விளங்கும் ; உலவா...துறைவன் - கெடாத குளிர்ந்த நீர்த்துறையினை யுடைய தலைவனது ; தடவரை...முதலா - பெரிய மலைபோன்ற மார்பினைக் காட்சிப் படக் கண்ட நாள்முதலாக ; ஒண்ணிறம்...ஆரூர் - ஒள்ளிய கருநிறத்தையுடைய விடத்தினைக்கொண்ட பாம்பு கதிர்வீசும் பிறையினைக் கவ்வியிருக்கும் கொள்கை யினைப்போல, நீலமணிபோல விளங்கும் திருமிடற்றினையுடைய தேவதேவரும், பொருந்திய அணிகள் திகழ்தற்கிடமாகிய மார்பினையுடையவரும் ஆகிய இறை வரது திருவாரூரின்கண் ; ஆர்கலி...ஊரே - கடல்போல ஒலிபரந்த திருவிழாவிற் போல சிறிய நல்ல எமது ஊர் பெரிய அலர் மொழிகளின் ஒலி சிறந்து விளங்கிற்று.

(வி - ரை) திணை - கைக்கிளை; துறை - காண்டல். பெண்பாற்கூற்று. தலைவி கண்டு சோர்ந்தது.

1–11. கயங்கெழு...தண்ணந்துறைவன் - தன்மை, உவமை, உருவகம் என்னும் மூன்றணிகளும் கலந்துவிளங்கும் மிக்க அருமைப்பாடுடைய பாட்டு ; கயங் கெழு...வேண்டி - இவை தன்மையணி.

1–6. ஆலவட்டம் ஏய்ப்ப-முந்நீர்க் குடரென - இவை மெய்பற்றிவந்த உவமை அணி; சுரிமுக...காட்டும் - இவை உருவக அணி. கயம் - ஆழமுடைய; முதுந தெருவுபட - நீர்ப்பரப்பே தெருவுபோல வழிதர; முதுந - முதுகுபோன்றதை முதுவென்றதுபசாரம். திமில் - மீன் வலைஞரின் படகு; தடவுதல் - கைத் துடுப்பினால் துழாவிச் செலுத்துதல்; நெய்ம்மீன் - கொழுப்புடையமீன்; (Cod Liver Oil - Shark Liver Oil முதலிய பண்டங்கள் காண்க.) கைம்மிகுத்து - கைவினைமிகக் காட்டி. எறிஒளி நுளையர் - என்றது மீன்கள் எளிதிற்றாமே வந்து அகப்படுதற்காகப் பரதவர் இரவில் படகேறித் தீப்பந்தங் கொளுவிக் கடலிற் சேற லுடைமையினைக் குறித்தது. நுளையர் - செம்படவர், நெய்தல் நிலமக்கள்; நெய் - கொழுப்புச் சத்து மிகுதியுடைமை.

ஆலவட்டம் ஏய்ப்ப - மேலே வலையை விரித்து வீசுதல் ஆலவட்டம் வீசுதல் போன்றிருந்தது என்பது. முந்நீர்க் குடரென - கடலுள் வீசியவலையை அதனுள் அகப்பட்ட மீன் முதலியவற்றுடன் மெல்லமேலே இழுத்தல் கடலின் குடரினை வாங்குதல்போல இருந்தது என்பது. கடல் முதுந - குடர் - ஏகதேசவுருவகம். கோள்விளைகோண்ட - ஒருவனது பொருளை உரிமையில்லாத மற்றொருவன் வலிந்து கொள்ளைகொண்டதுபோல என்பது குறிப்பு. கொள்ளை - கோள் - பகுதி.

7–8. சங்கு - பவளம் - நித்திலத்தொகுதி - இவை கடல்படு பொருள்கள்; மீன் பிடிக்கும் வலையினுள் மீன்களோடு இவையும் அகப்பட்டுவரும். நுளையர் வலை வீசிப் படுக்கக்கருதிய பண்டம் மீன்கள். ஆனால் சங்கு முதலிய இவை அவர்கள் கருதாமலே வலையுள்ளே அகப்பட்டுவந்தன. வலிய அவர்க்குப் பயன்படுவன என்பதும் கொள்ளை என்றதன் குறிப்பு. சுரி முகம் - உட்சுழிகளையுடைய முகம்.

9. சங்கும் பவளமும் முத்துக்களும் முறையே மாலை நிலவும் செக்கர்ப்பொழு தும் விண்மீன் உருவும் எனக்காணப்படுவன என்க. சங்கு கடைந்து உருவாக்கப்படா முன் கடலுணின்றும் எடுக்கப்படும்போது மங்கிய வெண்மை நிறமே காட்டுவன ஆதலின் கதிரவன் ஒளி மங்கிய மாலை என்றார். விரிகதிர் - மேல் இரவு முற்றமுற்ற விரியும் கதிரினை உடைய என்பது. மாலைமதியம் முதலில் ஒளிமங்கிக் காண்பதியல்பு. "புன் முறுவ லென்ன முகிழ்த்தது வெண்ணிலா" (306) என் றும், பின்னர் "நீற்றின் பேரொளி போன்றது நீணிலா" 308) என்றும் கூறியவை இங்குக் கருதற்பாலன.

தாரகை உரு - விண்மீன்களின் ஒளி; விரிகதிர் நிலவும், செக்கரும், தாரகை யும் ஒருங்கே மாலையிற் காண்பன; ஆதலின் வலையினுள்பட்டு ஒருங்கே வந்து துறையில் கிடக்கும் சங்கு முதலியவற்றை உருவகிக்க உதவின. விண்ணிலுள்ள இவற்றை மண்ணில் காட்டின என்றது உயர்வு நவிற்சி. இவை மூன்றும் மாலைப் பொழுது காட்டலின் கைக்கிளைத் திணைக்கும், தலைவி வருந்தற்றுறைக்கும் உரிய காலமும் ஏற்பக் கூறியதாயிற்று.

10. உலவாக்காட்சி - இவை என்றும் அளவு பட்டொழிதலில்லாத நிலை கூறியபடி.

12. கண்ணுறக்கண்டது - கண்ணினுள்ளே பொருந்த; சவிகற்பக் காட்சி; கானல் - துறை. நுளையன் மீன்கவரப் படகிற் கடலின்மீது போய் வலை விரித்து வீசுகின்றான்; அது ஆலவட்டம் போல இருந்தது. வீசிய வலையினை மீன்படுத்துமேல் இழுக்கின்றான்; அது கடலின் குடரினை வாங்குதல் போன்றது. அவ்வலையினுள்ளே மீன்களுடனே, சங்கு - பவளம் - முத்து இவையும் அகப்பட்டு வந்து துறையிற் சிதறுண்டு கிடக்கின்றன; இவை மாலை மதியமும், செக்கரும்,

தாரகைகளுமாகி உலவாக்காட்சி அளிக்கின்றன. இத்தகைய துறையை உடையவன் தலைவன் என்பது இவ்வடிகளின் கருத்து.

நீத்திலத்தோதுதி - என்றது பலவாய்க் குழுமும் தன்மை பற்றியது ; தாரகையுருக்காண்டற்குத் தொகுதி உதவிற்று.

13　காளமாசுணம் - காளத்தையுடைய பாம்பு. காளம் - கரியவிடம் ; காளம் - கருமை ; அதனையுடைய விடத்துக் காயிற்று; கதிர்மதிக் குழவி - சிவந்து வளைந்து திரண்ட கழுத்தின்பகுதிக்கு உவமை. காள மாசுணம் - சிவனது கழுத்தில் தங்கும் கரியவிடத்துக்கு உவமை. கோள்கை - இஃது உருவும் வினையும் பற்றிய உவமை. பாம்பு மதியைப் பற்றுதல் உபாரக நிகழ்ச்சியிற் காண்பது; உள்பொருளுவமம். மதி - கலைகள் நிறைந்த சந்திரன் ; குழவி - ஈண்டு இளமை குறிக்காது உவமைப் பெயராய் நின்றது. மதியைப் பாம்பு கோளிழைப்பது நிறைமதியினன்றி நிகழலாமை காண்க ; மாசுணம் - ஈண்டு ராகு என்னும் கரும்பாம்பு ; ஆதலின் காளமாசுணம் என்றார் ; ஞாயிற்றைக் கோளிழைக்கும் கேது செம்பாம்பு என்பர்.

15. வானவனும் - அண்ணலுமாகிய இறைவர் என உம்மை விரிக்க. மணி திகழ்மிடற்று வானவன் - "நீல மணிமிடற் றொருவன் போல" (புறம்). நனைதிகழ் என்பதும் பாடம்.

17. ஆர்கலி - கடல். இது கடன் முழக்குக்கு ஆகிவந்தது. கடல் முழக்குப் போல முழக்குடைய விழா என்க.

18. அலர் - பழிச்சொல் ; அலருரை : விழாவின் ஒலிபோல அத்துணைப் பேரொலியுடன் அலர்ச்சொல் பரவிற்று என்பது ; பண்பும் வினையும் பற்றிய உவமம் ; ஊர் - அலர் சிறந்தது என்க.　　25

வெண்பா

ஊரெலாந் துஞ்சி யுலகெலாம நள்ளென்று
பாரெலாம் பாடவிந்த பாயிருட்கண்—சீருலா
மாந்துறைவா யீசன் மணிநீர் மறைக்காட்டுப்
பூந்துறைவாய் மேய்ந்துறங்கா புள்.　　உ௬

(இ - ள்) ஊரெலாம்...பாயிருட்கண் - ஊரில் உள்ள உயிர்கள் எல்லாம் உறங்கி, உலகமெங்கும் நடு இரவில் அடங்கி, நிலமெங்கும் ஓசையடங்கிய பரவிய இருளிலே ; சீருலாம்...புள் - சிறப்புடைய மாந்துறையில் எழுந்தருளிய இறைவரது அழகிய நீரினையுடைய திருமறைக்காட்டின் பூந்துறையின்கண் புட்கள் இரை மேய்ந்து கண்ணுறங்காதிருக்கின்றன.

(வி - ரை) திணை - கைக்கிளை ; துறை - இரவுநீடு பருவரல் ; பிரிவாற்றாத தலைவி கூற்று.

ஊரெலாம்...பாயிருட்கண் - ஊரில், உலகில், பாரில் எல்லாவுயிரும் உறங்கிய கள்ளிருளிலும் தான் உறங்காது தனியிரங்கும் நிலை. புள் துறைவாய் மேய்ந்து உறங்கா - தனது நிலையினைப் புட்களின்மேல் வைத்துக் கண்டு கூறியது. மேய்ந்து ; இரைமேய்ந்து ; புள் - இரவில் இரைதேடும் புள்வகைகள் ; மறைக்காட்டுப் பூந்துறை என்றதனால் கடற்றுறை என்பதாம் ; செய்தற்றிணைக்குரிய நிலமும் ஆயிற்று, நெய்தற்றிணை இரங்கற்குரித்து ஆகலான். பாடுஅவிந்த - ஓசையடங்கிய.

**மறைக்காட்டுப் பூந்துறை** - அக்கடற்றுறையின் அமைப்பும், முத்துக்குளித்தல், உப்பளம் சார்தல் முதலிய அருமைப் பாடுடைய செல்வங்கள் பலவும் பெறும் வகைகளும் குறிக்கப் பூந்துறை என்றார் ; 1529 பார்க்க.

**நள்ளென்று** - மேற்பாட்டில் நள்ளென்ற கங்குல் என்பது காண்க. 26

*கட்டளைக் கலித்துறை*

புள்ளுந் துயின்று பொழுதிறு மாந்து கழுதுறங்கி
நள்ளென்ற கங்கு லிருள்வாய்ப் பெருகிய வார்பனிநாட்
டுள்ளுங் கலைக்கைச் சுடர்வண் ணனைத்தொழு வார்மனம்போன்
றுள்ளு முருக வொருவர்தின் டேர்வந் துலாத்தருமே. ௨௭

(இ - ள்) புள்ளும்...நாள் - இரவில் இயங்கும் புட்களும் துயில்பெற்று, யாமப்பொழுது முற்றிப், பேயும் உறங்கி, மிக்க நள்ளென்ற இரவின் இருள்பெருகிய நெடிய பனிநாளிலே ; துள்ளும் ..போன்று - துள்ளும் மான் கலையை ஏந்திய கையினையுடைய சுடர்வண்ணராகிய இறைவரைத் தொழுகின்றவர்களுடைய மனம்போல் ; உள்ளும் உருக - மனமும் உருகும்படி ; ஒருவர்...தருமே - ஒப்பற்ற தலைவருடைய தேர் கங்குலிருள்வாய் வந்து உலாவும்.

(வி - ரை) திணை - கைக்கிளை ; துறை - இரவுக்குறி நேர்ந்த தோழி கூற்று.

புள்ளும்...பனி நாள்: புள் துயிலுதல் - பொழுது இறுமாத்தல் - கழுது உறங்குதல் - முதலியவை நள்ளிருளிரவின் நிகழ்ச்சிகளாகிய அடையாளங்கள். புள் - இரவில் இயங்கும் புட்கள். புள்ளும் - உம்மை உயர்வு சிறப்பு. பொழுது இறுமாத்தல் - பொழுது முற்றி நடுஇரவாதல் ; இறுமாத்தல் - இதன்மேல் முற்றும் நிலையில்லை என்னும்படி நள்ளிரவாதல். இறுமாப்பு - தற்குறிப்பேற்றம் ; கழுது - பேய் ; " பேயு முறங்கும் பிறங்கிருள்வாய் " (ஏயர்கோ - புராணம்-322). துள்ளுங்கலை - துள்ளுதல் மானினதது இயல்பு குறித்தது. தொழுவார் மனம் போன்று - உள்ளும் உருக - மனம்போல் - மனம் உருகுதல்போல ; வினைபற்றிவந்த உவமம். உவமேயத்தில், நள்ளிரவிருளில் தன்பொருட்டு அன்புசெய்துவந்த தலைவனது அன்புக்கு உள்ள முருகுதல் பொதுத்தன்மை ; ஒருவர் - ஒப்பற்ற தலைவர். உலாத்தருதல் - இரவுக் குறி. 27

*நேரிசை யாசிரியப்பா*

உலாநீர்க் கங்கை யொருசடைக் கரந்து
புலானீ ரொழுகப் பொருகளி றுரித்த
பூத நாத ஞாதி மூர்த்தி
திருமட மலைமகட் கொருகூறு கொடுத்துத்தன்
அன்பி னணைத்தவ னூரூர் நண்பகல்
வலம்புரி யடுப்பா மாமுத் தரிசி
சலஞ்சல நிறைய வேற்றி நலந்திகழ்
பவளச் செந்தீ மூட்டிப் பொலம்பட
விப்பியந் துடுப்பா லொப்பத் துழாவி
யடாஅ தட்ட வமுதம் வாய்மடுத்

இடாஅ வாயமோ டுண்ணும் பொழுதில்
திருந்திழைப் பிணைத்தோட் டேமொழி மாதே!
விருந்தி னடியேற் கருளுதி யோ?வென,
முலைமுக நோக்கி முறுவலித் திறைஞ்சலின்
நறைகம ழெண்ணெய்ச் சிறுநுண் டுள்ளி
பொங்குபுன லுற்றது போலவென்
அங்க மெல்லாந் தானா யினளே. உஅ

(இ - ள்) உலாநீர்...ஆரூர் - உலாவும் தன்மைகொண்ட நீரினையுடைய கங்கையாற்றினை ஒருசடையின் நுனியிலே தங்கும்படி ஒளித்துப், புலாலிற் குருதி ஒழுகும் போர் யானையினை உரித்த பூதநாதர் - ஆதிமூர்த்தி - முத்திக்கிறைவியாய் இளமையுடைய மலைமகளாகிய உமையம்மையாருக்குத் தமது திருமேனியில் ஒரு பாகம் கொடுத்துத் தமது அன்பினாலே அணைத்தவரது திருவாரூரின்கண்; நண்பகல் - பகல் உச்சிவேளையிலே; வலம்புரி...அமுதம் - வலம்புரிச் சங்குகளாகிய அடுப்பிலே பெருமுத்துக்களாகிய அரிசியைச் சலஞ்சலத்தில் நிறையப் பெய்து ஏற்றி, நன்மை விளங்கும் பவளமாகிய செந்தீயினைமூட்டி, அழகு பொருந்த இப்பியாகிய அழகிய துடுப்பினாலே ஒப்பத் துழாவி அடாமலே அடப்பண்ணிய அமுதத்தினை; வாய்மடுத்து...பொழுதில் - வாயில்வைத்து இடாமலே இட்டுத் தோழியர்களுடனே உண்கின்றபோதில்; விருந்தின்...என - விருந்தினனாக வைத்து அடியேற்கும் அன்புடன் கொடுப்பாயோ? என்று நான் கேட்க; முலைமுக நோக்கி... இறைஞ்சலின் - தனது முலையின் முகத்தினைநோக்கி முகம் குனிந்து புன்முறுவலுடன் வணங்கினள் ஆதலின்; நறை...போல - மணம் கமழும் எண்ணெயின் ஒரு சிறு நுண் துளியானது பொங்கும் நீரினுள் வீழ்ந்ததுபோல; என்...ஆயினளே - எனது உடல் முழுதும் அவள் மயமாகவே நிறைவு பெறலாயினள்.

(வி - ரை) திணை - குறிஞ்சியிற் பாலை மயங்கியது. துறை - செவ்வியிலளாகிய தலைவியைக்கண்ட காட்சியிற் தலைவன் கூற்று.

1–2. உலாநீர் - உலாவும் தன்மையுடைய நீர்; ஓடுகின்ற நீர்; வற்றாதநீர் என்றலுமாம். "நீரற வறியா" (புறம்); ஒருசடை - ஒரு சடையின் நுனியில் தங்கும்; புலால்நீர் - புலால் பிளக்க அதினின்றும் வரும் குருதி - இரத்தம்; பொருகளிறு - பொருதற்குப் போந்த யானை; இருடிகள் யாகத்தினின்றும் ஏவிவிட்ட யானை.

4–5. திரு - முத்தித்திரு; நண்பகல் - உச்சிப்போது; நண்பகல் பாலைக்குரிய பொழுதாகலானும், தலைவி சிறுசோறடும் பேதைப் பருவத்தளாதலானும் இஃது பாலைத்திணையாயிற்று. அதனுட் காட்சி நிகழ்தலின் குறிஞ்சி மயங்கியதாம்.

6–11. வலம்புரி...அமுதம் - சிறுமியர் சிறுசோறு சமைக்கும் நிலை கூறியபடி; வலம்புரி - வலம்புரி என்ற சங்குவகை; சலஞ்சலம் - சலஞ்சலம் என்ற சங்குவகை; வலம்புரி அடுப்பு - முத்து அரிசி - பவளச் செந்தீ - இப்பியந் - துடுப்பு - இவை உருவகம்; மாமுத்து - பெரியமுத்து. அடாஅது அட்ட அமுதம் - தீயினால் அடப்பண்ணாது பாவனையாற் சமைத்த அமுது; வாய்மடுத்து இடாஅ - வாயினிற் பெய்யாமற் பெய்து. பெய்ததுபோலச் செயல்காட்டி. இது விளையாட்டுவகை; ஆயம் - ஒத்த தோழியர் கூட்டம். அடாஅது - இடாஅ - செய்யுள் அளபெடைகள்; விளையாட்டின் உட்குறிப்பும் கொண்டன.

13. விருந்தின் - விருந்தினனுக்கொண்டு; அருளுதல் - அன்புடன் கொடுத்தல்.

14. முலை...இறைஞ்சலின் - தன் முலையை நோக்கி நாணத்தால் தலைகவிழ்ந்து புன்முறுவல்செய்து வணங்கியமையாலே; முலைமுக நோக்குதல் - தலைவனைக் கண்டவழி நாணத்தாற் றலைகவிழ்தலினையும்; முறுவலித்தல் - ஒத்த அன்பின் விளைவையும்; இறைஞ்சுதல் - தலைவனைக்கொண்டதனையும் காட்டுவன. இத்தன்மைச் செயல்களாலே.

15. என் அங்கமெல்லாந் தானுயினள் - என் உடல் முழுதும் அவள்பாற் கொண்ட அன்புமயமாக அவளை இடங்கொண்டாள். எனது நிலை முழுதும் அவளே கவர்ந்துகொண்டனள். திருமடமலைமகட் கொரு கூறுகொடுத்துத் தன் - அன்பின் அணைத்தவன் - ஆரூர் இறைவன்; அவனது ஊரிலே யான் என் அங்கமுழுதும் கொடுத்தனன் என்ற நயமும் காண்க.

15-16. எண்ணெய்ச் சிறு - துளி...புனலுற்றது போல - எண்ணெய்த் துளியினை நீரினுள் இட்டால் அது அந்நீர்ப்பரப்பு முழுதும் பரவி அதனை மறைக்கும்; அதுபோலச் சிறுபருவத்தின் இவளது சிறிய அன்பின் முளையாகிய செயல் என் மனத்தினுட் புகுந்து என் மனமுழுமையும் பரவி என்னைத் தன்னுள் அகப்படுத்தியது. வினைந்த உவமம். 28

வெண்பா

னைவன் பாரே யழிப்பா ரனலாடி
பேயினவன் பாரோம்பும் பேரருளான்—தீயினவன்
கண்ணுள ஞரூர்க் கடலார் மடப்பாவை
தண்ணுருங் கொங்கைக்கே தாழ்ந்து. உ௯

(இ - ள்) அனலாடி...கண்ணுளன் - அனலில் ஆடுபவனும், பேய்க்கணங்களை யுடையவனும், உலகத்தைக் காக்கும் பேரருளை உடையவனும், தீயினை ஏந்திய வனும், கண்போன்றவனும் ஆகிய இறைவனது; ஆரூர்...மடப்பாவை - திருவாரூரில் உள்ள கடல்போன்ற இளைய பாவையினது; தண்ணுரும்...தாழ்ந்து - குளிர்ச்சி பொருந்திய முலையினுக்கே விருப்பம் கொண்டு; ஆயின அன்பு அழிப்பார் ஆரே - உளதாகிய அன்பினை அழிக்கவல்லவர் யாவர்? (ஒருவருமிலர்.)

(வி - ரை) திணை - கைக்கிளை; துறை - நலம்பாராட்டல்; கொங்கைக்கே தாழ்ந்து ஆயின அன்பு அழிப்பார் ஆரே என்று கூட்டுக.

தாழ்தல் - விரும்புதல்; தாழ்ந்து - பணிந்து என்ற குறிப்புமாம். கடலார் - கடல்போலப் பெரிதும் குணமுடையவள்; கொங்கைக்கே - கொங்கையினையே; நான்கனுருபு இரண்டனுருபின்பொருளில் வந்தது. பாவை - பாவை போன்றவள்.

ஆயின - உளவாயின; ஆக்க முடையன என்றலுமாம். அனலாடி - அனல் - தீயூழி; தீயினவன் - தீயை ஒரு கையில் ஏந்தியவன்; தீயைத் திருமேனியாக உடையவன்; எரிபோல் மேனியன்; பேயினவன் - பேய்க்கணமுடையவன். இனம் - கணம் கூட்டம்.

கண்ணுளன் - கண்போன்றவன்; அருமைப்பாடு குறித்தது; "மிக்குலக மேழினுக்குங், கண்ணுளா! ஈதென் கருத்து" (அற்புதத் திருவந்தாதி - 72) கண்போலுதலாவது உயிருக்குக் கண்போல வழிகாட்டுபவன்; உடனின்றுணர்த் துபவன்; கண்ணுதல் - உடனிருத்தல் என்றலுமாம்; "தாவியவ னுடனிருந்துங் காணுத தற்பரன்" (தேவா); இத்திருப்பாட்டு முன்பாட்டின் கருத்தைத் தொடர்ந்து

கூறிய குறிப்புமுடையது. கண்ணுளான் - கண்ணுதல் - எண்ணுதல் - நினைத்தல்; உயிர்களின் ஆக்கத்தையே நினைப்பவன் என்ற குறிப்பும் உடையது. 29

கட்டளைக் கலித்துறை

தாழ்ந்து கிடந்த சடைமுடிச் சங்கரன் றாள்பணியா
தாழ்ந்து கிடந்துழை வார்கிளை போலயர் வேற்கிரங்கிச்
சூழ்ந்து கிடந்த கரைமேற் றிரையென்னுங் கையெறிந்து
வீழ்ந்து கிடந்தல றித்துயி லாதிவ் விரிகடலே. ௩௰

(இ - ள்) தாழ்ந்து...போல் - கீழ்த் தாழ்ந்து கிடந்த சடையினை முடியாக வுடைய சங்கரரது திருவடிகளைப் பணியாமல் பிறவியிலே ஆழ்ந்துகிடந்து வருந்துகின்றவர்களுடைய கிளைபோல; அயர்வேற்கு இரங்கி - வருந்தி யிளைக்கும் எனக்கு இரங்கி; சூழ்ந்து...விரிகடலே - சுற்றிலும் சூழ்ந்துகிடந்த கரையின் மேலே அலையென்னும் கையினை மோதி வீழ்ந்து கிடந்து சத்தித்து உறங்காமலிருக்கின்றது இந்த விரிந்த கடல்.

(வி - ரை) திணை - கைக்கிளை; துறை - கடலொடு புலம்பல்; அயர்வேற்கு இரங்கி விரிகடல் துயிலாது என்க. இரவில் கடல் மிகுந்த அலைகளை யுடைமையும் காண்க.

தாழ்ந்துகிடந்த சடைமுடி - தொங்கிய சடையினையே முடியாக உடையவர்; "சடைமுடி சாட்டியக் குடியார்க்கு" (திருவிசைப்பா); சங்கரன் - சுகத்தைச் செய்பவன் என்ற பொருட்குறிப்பிற் கூறிய பெயர்; பணியாது...கிளைபோல் - சங்கரனைப்பணியாதார் கிளையுடன் வருந்துவர் என்ற உண்மையினை வற்புறுத்த எழுந்த உவமை; வினைபற்றி எழுந்தது. கிளைபோல அயர்வேன் என்றது "பெற்றும் பெறாரி னழுங்கி" என்றபடி, பெரியோர் தம்மைச் சிறியோரின் வைத்து வருந்தி யிரங்கும் நிலை.

அயர்வேற்கு இரங்கிக் கடல் துயிலாது என்றது இரவிற் றுயில்பெறாது வருந்தும் எனது துயரங்கண்டு இரங்கிக் கையெறிந்து தானும் துணையாய்த் துயிலாதிருந்தது என்றதாம்; திரை என்னும் கை எறிந்து - துயருறுவாரைக் காணிற் கருணையாளர் கையெறிந்து இரங்குதல் குறித்தது; தற்குறிப்பேற்றம். கையெறிதல் - வீழ்தல் - அலறுதல் - துயிலாதிருத்தல் - இவை ஒருவரது துன்பத்திற்கிரங்கி அன்பினால் உற்றதுணையாளர்பால் நிகழும் செயல்கள். விரிகடல் - முதலும் முடிவும் மண்டலித்து முடிந்தது.

"என் கண்ணுளெப் போதும் வருகின்றவே" (பொன். அ. 20) என்றபடி இரவும் துயிலாது இறைவனை நினைந்து கிடப்பேனுக்கு அவனது அருளின் கடல் துணையாய் உடனிற்கின்றது என்றதொரு உட்குறிப்புத்தந்து முடித்தல் கண்டு கொள்க. 30

சேரமான் பெருமாள் நாயனார் என்னும் கழறிற்றறிவார் நாயனார் அருளிய திருவாரூர்த் திரு மும்மணிக் கோவையும், அதற்குக் கோவை - சிவக்கவிமணி - C. K. சுப்பிரமணிய முதலியார், B. A., எழுதிய உரையும் முற்றுப் பெற்றன.

கழறிற்றறிவார் நாயனார் திருவடி வாழ்க!

திருச்சிற்றம்பலம்.

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# 38. கணநாத நாயனார் புராணம்

தொகை

" கடற் காழிக் கணநாத னடியார்க்கு மடியேன் "

—திருத்தொண்டத் தொகை - (6)

வகை

தொண்டரை யாக்கி யவரவர்க் கேற்ற தொழில்கள் செய்வித்

தண்டர்தங் கோனைக் கணத்துக்க நாயகம் பெற்றவன்காண்

கொண்டல்கொண் டேறிய மின்னுக்குக் கோல மடல்கடொறுங்

கண்டல்வெண் சோறளிக் குங்"கடற் காழிக் கணநாதனே "

—திருத்தொண்டர் திருவந்தாதி - (46)

விரி

3923. ஆழி மாநிலத் தகிலமீன் றளித்தவ டிருமுலை யமுதுண்ட
வாழி ஞானசம் பந்தர்வந் தருளிய வனப்பின தளப்பில்லா
ஊழி மாகடல் வெள்ளத்து மிதந்துல கினுக்கொரு முதலாய
காழி மாநகர்த் திருமறை யவர்குலக் காவலர் கணநாதர் க

புராணம் :—கணநாத நாயனாரது சரித வரலாறும் பண்பும் கூறும் பகுதி. இனி, நிறுத்த முறையானே ஏழாவது வார்கொண்ட வனமுலைபாள் சருக்கத்தினுள் ஐந்தாவது கணநாத நாயனார் புராணங் கூறத் தொடங்குகின்றார்.

தொகை :—கடற்கரையினையுடைய சீகாழி நகரில் அவதரித்த கணநாதரது அடியார்க்கும் நான் அடியேனாவேன்.

கணநாதன்-சிவகணங்களுக்குத் தலைவர் ; காரணப் பெயர்; இறைவரது பெயர்; இவருக்குச் சூட்டிக் காரணப்பெயராய் வழங்கியது. " கணநாதன் " (தாண்டகம்-காளத்தி); கடல் - கடல் சூழ்ந்த ; கடலின்றுடு உள்ள.

வகை :—கொண்டல்...சோறளிக்கும் - மேகங்களை இடமாகக் கொண்டு மேலேறி விளங்கிய மின்னலாகிய மகளுக்குத் தாழைகள் வெள்ளிய சோற்றினை அளிக்கும் கடற்கரையில் உள்ள சீகாழி நகரில் அவதரித்து வாழ்ந்த கணநாதரென்னும் அவரே ; தொண்டரை ஆக்கி - தொண்டர்களை உண்டாக்கி ; அவரவர்க்கு... செய்வித்து - அவ்வவர்களுக்கும் அவரவர் தகுதிக்கு ஏற்றபடி பணிகளிற் பழக்கிப் பணி செய்யும்படி செய்து ; அண்டர் தம்...பெற்றவன்காண் - தேவர் தலைவராகிய சிவபெருமானது சிவகணத்துக்கு நாயகத் தன்மையினைப் பெற்றவர் காண்க.

தொண்டரை ஆக்குதல் - தீக்கை, உபதேசம், பயிற்சி, உதவி முதலிய செயல்களினால் தொண்டர்களை உண்டாக்குதல் ; அவரவர்க் கேற்ற தொழில் செய்வித்து - அவ்வவர் தகுதிக்கு - உடல்நிலை உள்ளநிலை பக்குவம் முதலியவற்றுக்கு - ஏற்கும்படி தகுதியுள்ள சரியைத் தொழில்களைச் செய்யும்படி பழக்கி; இவை - திருவலகு, திருமெழுக்கு, திருமஞ்சனம், திருமாலை, திருவிளக்கு முதலாயின. இவைபற்றிப் புராணத்தினுள் (3925 - 3926) பார்க்க; அக்கணத்துக்கு - அந்த அடியார் கணங்களுக்கு; நாயகம் - முதன்மை ; கோண்டல் கோண்டேறியமின் - மேகத்தி னூடுகொண்டு ஆகாயத்திற் சென்ற மகள் ; கண்டல் - தாழை ; கோலமடல்கள் - அழகிய நீண்ட இலைகள் ; வெண்சோறு - தாழைப்பூவின் உள்ளீடாகிய பகுதி சோறு எனப் படுவது ; மின்னுக்கொடி போல்வதால் பெண் என்றும், தாழை உயர்ந்தோங்கி வெள்ளிய உள்ளீடு உள்ள பூக்களை வெண்சோறு என்றும், அவற்றை ஏந்துதல் மேலிருந்த மகளுக்குச் சோறு அளித்தல் என்றும் உருவகித்தார்; தாழைப் பூச்சோறு பல பகுதிகளாயிருத்தல் சோற்றின் சிறு உருண்டைகள் போன்றிருத்தலும் காண்க.

மின்னுக்கு - மின்னுகிய மகளுக்கு ; கடற்காழி - கடற்கரையினையுடைய காழி; கடற்காழிக் கணநாதன் - முதனூலாட்சி போற்றப்பட்டது ; கணநாதனே - நாயகம் பெற்றவன் என்று கூட்டுக. காண் - கண்டுகொள்க. முன்னிலையசையுமாம்.

ஊரும் பேரும் முதனூல் தொகுத்தது ; அவற்றுடன் திருத்தொண்டின் பண்பும் வரலாறும் வகைநூல் வகுத்தது ; இவை விரியும்நிலை விரிநூலுட் கண்டு கொள்க.

3923. (இ - ள்) ஆழி...வனப்பினது - கடல் சூழ்ந்த பெரிய நிலவுலகத்தில் எல்லா உயிர்களையும் ஈன்று காக்கின்ற உமையம்மைபாகது திருமுலைப்பாலமுதத்தினை உண்டருளியதனால் வாழ்வு அளித்த திருஞானசம்பந்த நாயனார் வந்தவதரித்தருளிய அழகிய பெருமையினை யுடையதாகிய ; அளப்பில்லா...மாநகர் - அளவுபடாது ஊழியிற் பெருகிய பெருங்கடல் வெள்ளத்திலும் ஆழாது மிதந்து நின்று உலகம் மீள உளதாதலுக்கு ஒரு முதலாகிய சீகாழிப்பதியிலே ; மறையவர்... கணநாதர் - வேதியர் குலத்தலைவராய் விளங்கியவர் கணநாதரென்பவர்.

(வி - ரை) ஆழி மாநிலம் - கடல்சூழ்ந்த பெரு நிலப்பரப்பாகிய நிலவுலகம்.

அகிலமு மீன்றளித்தவள் - உலகுயிர்களை யெல்லாம் பெற்றெடுத்து வளர்க்கின்றவளாகிய உமையம்மையார்.

வாழி - வாழ்வு தருபவர் ; வாழ்வுடையவர்.

வந்தருளிய - வருதற்கிடமாகிய ; வருதல் - அவதரித்தல் ; வனப்பு - அழகு ; ஈண்டு இப்பதிக்கு அழகாவது நன்மக்கட் பேறாக அந்நாயனாரைப் பெறுதல் ; "நன்கலன் நன்மக்கட் பேறு" (குறள்). "வாழிவளர் மறைச்சிறுவர் நெருங்கியுள மணிமறுகு" (1909).

வனப்பினதாகிய - மாநகர் - என்று கூட்டுக. பண்புத் தொகை.

காவலர் - தலைவர் ; காத்தலாவது அக்குலத்துக்குரிய மேம்பட்ட சைவவொழுக்க நிலைகளை வழுவாமல் ஒங்கும்படி காத்து வளரச் செய்தல்.

மறையவர் குலம் - நாயனார் அவதரித்த மரபு கூறியவாறு.

வெள்ளத்தும் - உம்மை உயர்வு சிறப்பு. உலகினுக்கு ஒருமுதல் - என்றது உலகம் மீள உளதாதற்கு ஆதாரவாயிருத்தல் ; பிரம தீர்த்தத்தினைக் "கருப்பம் போல்" (1956) என்றதும் காண்க.

3924. ஆய வன்பர்தா மணிமதிற் சண்பையி லமர்பெருந் திருத்தோணி
நாய னார்க்குநற் றிருப்பணி யாயின நாளுமன் பொடுசெய்து [குத்
மேய வத்திருத் தொண்டினில் விளங்குவார் விரும்பிவந் தணைவார்க்
தூய கைத்திருத் தொண்டினிலவர்தமைத் துறைதோறும் பயில்விப்பார்.

3925. நல்ல நந்தன வனப்பணி செய்பவர் நறுந்துணர் மலர்கொய்வோர்
பல்மலர்த்தொடைபுனைபவர், கொணர்திரு மஞ்சனப் பணிக்குள்ளோர்,
அல்லு நண்பக லுந்திரு வலகிட்டுத் திருமெழுக் கமைப்போர்கள்
எல்லை யில்விளக் கெரிப்பவர், திருமுறை யெழுதுவோர் வாசிப்போர், ௩

3926. இனைய பல்திருப் பணிகளி லணைந்தவர்க் கேற்றவத் திருத்தொண்டின்
வினைவி ளங்கிட வேண்டிய குறையெலா முடித்துமே விடச்செய்தே,
அனைய வத்திறம புரிதலிற் றொண்டரை யாக்கியன் புறுவாய்மை
மனைய றம்புரிந், தடியவர்க் கின்புற வழிபடுந் தொழின்மிக்கார். ௪

3924. (இ - ள்) ஆய அன்பர் தாம் - அவ்வாறாகிய அன்பர்; அணிமதில்... செய்து - அழகிய மதில் சூழ்ந்த சீகாழிப்பதியில் விரும்பி எழுந்தருளியுள்ள திருத்தோணியப்பருக்கு நல்ல திருப்பணியாயினவற்றை நாடோறும் அன்புடனே செய்து; அத்திருத்தொண்டனில் விளங்குவார் - அத்திருத்தொண்டுபுரி நிலைமையில் சிறப்புற்று விளங்குவாராய்; விரும்பி...பயில்விப்பார் - விருப்புடன் வந்து அணைகின்ற அன்பர்கட்குத் தூய்மையுடைய கைத்திருத்தொண்டாகிய சரிபை நிலைகளில் அவர்களை அவ்வத்துறைதோறும் பயிலச் செய்வாராய், உ

3925. (இ - ள்) வெளிப்படை; நல்ல திருநந்தனவனத்தின் பணி செய்வோரும், நறிய துணர்களில் பூத்த மலர்களைக் கொய்வோர்களும், பலவகைப்பட்ட மலர் மாலைகளைப் புனைபவர்களும், சென்று திருமஞ்சன நீரினைக் கொணரும் பணிக்கு உள்ளவர்களும், இரவும் பகலுமாகத் திருவலகும் திருமெழுக்கும் அமைப்போர்களும், அளவு படாத திருவிளக்கு எரிப்பவர்களும், திருமுறைகளை எழுதுவோர்களும், அவற்றை வாசிப்பவர்களும். ௩

3926. (இ - ள்) இனைய ..பல் திருப்பணிகளில்-இவ்வாறாகிய பற்பல திருப்பணிகளிலே; அணைந்தவர்க்கு...விளங்கிட - வேண்டி வந்து அணைந்த அன்பர்களுக்கு அவரவர்க்கேற்ற அவ்வத் திருத்தொண்டின் செயல்கள் விளங்கும்படியாக; வேண்டிய...செய்தே - அவர் வேண்டிய குறைகளை யெல்லாம் அறுத்து நிறைவாக்கி முடித்துப் பொருந்தும்படி செய்தே; அனைய...ஆக்கி - அவ்வாறாகிய அத்திறங்களைச் செய்தமையாலே தொண்டர்களைப் பெருகும்படி உளராக்கி; அன்புறு வாய்மை மனையறம் புரிந்து - அன்பு பொருந்திய வாய்மையினையுடைய இல்லறத்தினை நடத்தி வாழ்ந்து; அடியவர்க்கு ..மிக்கார் - சிவனடியார்களுக்கு இன்பம் பொருந்தும்படி வழிபடுகின்ற தொழிலிற் சிறந்து விளங்கினார். ௪

இம்மூன்று பாட்டுக்களும் தொடர்ந்து ஒருமுடிபு கொண்டன.

3924. (வி - ரை) திருத்தோணி நாயனார் - தோணியப்பர்.

நல்திருப்பணியாயின...செய்து - நன்மையாவது நன்மைகளெல்லாவற்றுள்ளும் சிறந்த நன்மையாகிய வீடு பேற்றுக்குச் சாதனமாயிருத்தல். ஆயின - ஆக்கச்சொல் தகுதியும் பிறவும் குறித்தது; அன்பொடு - அன்பு அடிப்படையாக வன்றிச் செய்யும் பணிகள் பயனில என்பது; " ஆகுல நீர பிற " (குறள்).

மேய அத்திருத்தொண்டினில் - தொண்டு - நாயனார் செய்த எல்லாத் திருப்பணிகளின் தொகுதியைக் குறித்தது. மேய - பொருந்திய.

விளங்குவார் - விளங்குவாராகி; முற்றெச்சம். விளங்குவார் - பயில்விப்பார் - ஆக்கி - மிக்கார் என்று மேல்வரும் பாட்டுடன் முடிக்க.

விரும்பி வந்தணைவார்க்கு - அத்திருப்பணிகளைச் செய்ய விரும்பித் தம்மிடம் வந்து அணையும் அன்பர்களுக்கு. தம்மை விரும்பி வந்தடைந்தவர்கட்கு என்றலுமாம்.

தூய கைத் திருத்தொண்டு - தூய - தூய்மைப்படுத்துந் தன்மையுடைய; கைத் திருத்தொண்டு - சரியைப் பகுதிகள். இவை மேல்வரும் பாட்டில் விரிக்கப்படுவன; சுத்த சைவத்துக்கு உயிராவது சரியை என்றருளினர் திருமூலதேவர். "சுத்த சைவத்துக் குயிரதே" (திருமந் - 5 தந்); சைவத் திருத்தொண்டில் நிற்பவர்களேமேல் கிரியா யோகங்களையும் முறையே ஞானத்தினையும் பெற்று வீடு பெறுவார்களாதலின் அவ்வாறு பெறுதற்குரிய தூய்மையையும் தகுதியையும், முதற்கண் தருவது கைத்தொண்டேயாம் என்பது.

துறைதோறும் - சரியையின் துறைகள் பலவற்றிலும்; அவை மேல்வரும் பாட்டிற் காணப்படும்; அவ்வவர் பக்குவ பேதம் நோக்கி, வெவ்வேறு தக்க துறைகள் வேண்டப்படுவன.

பயில்விப்பார் - பயிற்றுவார் (3926). 2

3925. (வி . ரை) நல்ல...பணி செய்பவர் - நல்ல - நன்மையாவது வரை அலங்கரிக்க வாய்த்த புனிதமாகிய செடி மரம் கொடிகளை வளர்த்தலும் காத்தலும் சிவன்பணிக்குப் பயன்படுத்தலும் ஆகிய இவை தீமை கலவாத, கருணையே உருவுடைய, பணி என்னும் தன்மை; செய்பவர் - நிலம் பண்படுத்தல், விதை - நாற்று முதலியவை நடுதல், நீர்பாய்ச்சுதல். களை கட்டல் முதலாயினவை செய்தல் எனப்பட்டன. பின்னர், அவ்வப்பணிகளின் தொழில்வகைக் கேற்றபடி மலர் கொய்வோர் - தொடை புனைபவர் - மஞ்சனப் பணிக்கு உள்ளோர் - அமைப்போர்கள் - எழுதுவோர் - வாசிப்போர் என்பது காண்க.

நறுந்துணர் மலர் - மணமுடைய துணர்களில் கொய்யத்தக்க மலர்களை என்க. துணர் - கொத்து; துணர்களில் அன்றலர்ந்தவையாய், காயரும்புகளும் முன் அலர்ந்தவையும் அல்லாதவையாய்க், குற்றமற்ற மலர்களை தெரிந்து கொய்யத் தக்கன என்பது; "கையினிற் றெரிந்து நல்ல கமழ்முகை யலரும் வேலை" (559). மலர்கள் அலரும் பருவத்தே மணமுடையவாம் என்பதும் பெறவைத்தார்.

தொடை - மாலை, கண்ணி, கோதை முதலிய பலவகையாலும் தொடுக்கப்படுவன. பற்பலவாறு புனையப்படுதலின் புனைபவர் என்றார்.

கொணர் திருமஞ்சனப் பணிக்குள்ளோர் - வேறிடத்துள்ள புனித நீர்நிலைகளினின்றும் எடுத்துக் கொணர வேண்டியிருத்தலின் கொணர் என்றார். பணிக்கு உள்ளோர் - இப்பணி செய்வோர் தூய்மையு மரபும் முதலிய தகுதியுள்ளோர்களேயாதல் வேண்டும் என்பது குறிப்பு.

அல்லும்...அமைப்போர்கள் - ஒரிடமும் விடாது உடல் முயற்சியினால் ஒழுங்குபட அமைக்கப்படல் வேண்டுவன திருவலகும் திருமெழுக்குமாம் என்பது; பலபேரும் வழிபடும் நிலைகளாதலின் இவை அல்லும் நண்பகலும் விடாது செய்யப்படுதல் வேண்டும் என்பதுமாம். அல் - இரவு. நண்பகல் - உச்சிவேளை. இவை வழிபாட்டு நேரங்களல்லாமையும் குறிக்க; காலை மாலைகளில் வந்து வழிபடுவோர்க் கிடையூறின்றி முன் எச்சரிக்கையாய்ச் செய்யத்தக்கன என இவை செய்தற்

குரிய காலக் குறிப்பும் காரணக் குறிப்பும்படக் கூறிய நயம் கண்டுகொள்க. "அந்தி யும் பகலுந் தொண்ட ரலகிடும்" (திருவிளை - புரா).

எல்லையில் விளக்கு - திருவிளக்குக்கள் எப்போதும் இடப் பெறுதலின் எல்லை யில் என்றார்; எண்ணிக்கையாலும் அளவு படாமையும் குறிப்பு.

திருமுறை எழுதுவோர் - வாசிப்போர் திருமுறை - தேவாரத் திருமுறைகளும், திருமந்திரமும், அம்மையார் அருநூல்களும், இவ்வகைப்பட்ட பிறவுமாம். வேறு நூல்களுக்கு இப்பெயர் வழங்குதல் பெரும் பிழையும் பாவமுமாகும். இவற்றை எழுதிக் கொடுத்தலும் பெரும் சரியைப் பணியாயிற்று; முன்னாள் எழுதி வழங்கு தலே வழக்காதல் காண்க. முன்னாளில் திருமுறைகள் முதலாகிய நூல்களையும், புராணம் இலக்கிய இலக்கணங்கள் முதலியவற்றையும் எழுதிக்கொடுத்து, அதனால் சீவனம் செய்தலும் வழக்கு; இந்நாளில் அச்சுப் புத்தகங்கள் எளிதிற் பெறக்கூடி யவையாதலின் இந்நாள் மக்கள் எழுதும் பணியின் இடத்தில் அச்சுப் புத்தகங்களை யாக்குதலும் அவற்றை வாங்கிக் கொடுத்தலுமாகிய பணியைச் செய்யலாம்.

வாசிப்போர் - திருமுறைகளை வாசிக்கப பயிற்சி செய்தலும் சிவபுண்ணிய மாகிய சரியை நிலையிற் பேசப்பெற்றது. தேவாரப் பள்ளிக்கூடங்கள், சிவ ஆகம பாடசாலைகள் முதலியவை இவற்றுள் அடங்கும். வாசிக்கப பயிற்சி பெறாதவர்கள் திருமுறைகளாகிய இந்நூல்களை வாசித்தால் பிழைபட்டுப் பயனில்லாமையுடன் சிவ அபசாரப்பட்டு நரகத்துக்கும் உட்படுவர்.

திருமுறை எழுதுவோர் - வாசிப்போர்- இவர்களைப் பயிற்றுதலும், அவ்வவர்க்கு அத்தொண்டின் வினைவிளங்கிட வேண்டிய குறையெல்லாம் முடித்தலும், இவ்வாறு தொண்டரை ஆக்கலும் சிவன் சரியைப் பணியும் பூசையுமாம், "ஞானநூ றனையோத லோதுவித்த னற்பொருளைக் கேட்பித்த றான்கேட்ட னன்று, வீனமிலாப் பொருள தனைச் சிந்தித்த லைந்து மிறைவனடி யடைவிக்கு மெழின்ஞான பூசை" (சித்தி-8. சூத).

கோய்வோரும் புனைவோரும் - என உம்மைகள் விரிக்க. 3

3926. (வி - ரை) இனைய - முன்பாட்டிற் கூறியவர்களும் இவ்வகைப்பட்ட; பஃறிரு - பல் திரு.

அணைந்தவர்க்கு - தம்பால் வேண்டி வந்தவர்களுக்கு; பணிகளிற் புக்கு உள்ள வர்க்கு என்றலுமாம். பக்குவம்வரத திருவருள் அணையப பெற்றோர்க்கு என்ற குறிப்புமாம். "அணைவுற வந்தெழு மறிவு தொடங்கிய அடியார்பால்" (1981).

வினை விளங்கிட - அவ்வத் தொழில்களிற் சிறப்புப் பெற; வேண்டிய துறை எலாம் முடித்து - துறை - அவ்வத்தொழில் செய்தற்கண் வரும் சாதனங்கள், கருவி கள் முதலியவற்றின் முட்டுப்பாடும், அவ்வவர்க்கு வரும் உணவு உறையுள் உடை முதலியவற்றின் முட்டுபபாடும், பிறவுமாகிய குறைகள் எவையுமில்லாமற்செய்து.

மேவிட - அவ்வத் தொழில்களிற் பொருந்தியிட.

தொண்டரை ஆக்கி - ஆக்குதல் - பயிற்சி முதலிய உதவிகளினால் உள்ளாராகச் செய்தல்; "அறிவளித் தவர்திற மவனியின் மிசையாக்கும்" (3928)

மனையறம் புரிந்து-தொண்டரை ஆக்குதற்கும், அடியவர்களை அமுதூட்டி வழி படுதற்கும் இல்லற வாழ்வு இன்றியமையாததாகும் என்பது. இல்லறத்திற்கு அன்பு, சிறந்ததோர் உறுப்பாதலின் "அன்புறு வாய்மை மனையறம்" என்றார். "அன்பு மறனு முடைத்தாயி னில்வாழ்க்கை, பண்பும் பயனு மது" (குறள்); வாய்மை - "பொய்கடிந் தறத்தின் வாழ்வார்" (34,1) என்றது காண்க; உறு - பொருந்திய.

மிக்கார் - மிகுதியாவது சிறந்து விளங்குதல். 4

3927. இப்பெ ருஞ்சிறப் பெய்திய தொண்டர்தா மேறுசீர் வளர்காழி
மெய்ப்பெ ருந்திரு ஞானபோ னகர்கழன் மேவிய விருப்பாலே
முப்பெ ரும்பொழு தருச்சனை வழிபாடு மூளுமன் பொடுநாளும்
ஒப்பில் காதல்கூ ருளங்களி சிறந்திட வொழுகினார் வழுவாமல். ௫

(இ - ள்) இப்பெரும்...தொண்டர் தாம் - இவ்வாறாகிய பெருஞ் சிறப்பினைப் பெற்ற திருத்தொண்டர்; ஏறுசீர்...விருப்பாலே - அடியவர்களது உள்ளங்களிலெல்லாம் எப்பொழுதும் ஏறும் சிறப்பு வளர்கின்ற சீகாழியில் வந்தருளிய மெய்ப் பெருந் திருஞான முண்டருளியவராகிய பிள்ளையாரது திருவடியைப் பொருந்திய விருப்பினாலே; முப்பெரும்...சிறந்திட - ஒவ்வொரு நாளிலும் மூன்று பெரும் பொழுதுகளிலும் அருச்சனை வழிபாட்டினைப் பெருகும் அன்புடன் ஒப்பற்ற காதல் மிகுவதாகிய மனத்தில் மகிழ்ச்சி மேலோங்கும்படி செய்து; வழுவாமல் ஒழுகினார் - வழுவாது ஒழுகி வந்தனர்.

(வி - ரை) ஏறுசீர் வளர் - ஏறுதல் - மெய்த்தொண்டரது உள்ளந்தோறும் எப்போதும் ஏறப்பெற்ற சிறப்பினால் மிகுகின்ற; "ஏறுமயி லேறி" (திருப்புகழ்)

திருஞான போனகர் - ஆளுடைய பிள்ளையார்; போனகம்-அமுது; போனகர்; அமுதுண்டவர்.

நாளும் முப்பெரும்பொழுது - என்க; காலை நண்பகல் மாலை என்பன; "அந்தியு நண்பகலும்" "முட்டாத முச்சந்தி மூவாயிரவர்க்கு" "சந்தி மூன்றிலும் தாபர நிறுத்திச் சகளிசெய் திறைஞ்சு" (நம்பி - தேவா); பெருமை பாவது சிறப்பு; தமிழ்ப் பொருளிலக்கணத்துள் வரும் பெரும்பொழுது சிறுபொழுது என்ற பகுப்பு வேறு; இங்குக் கூறிய முப்பெரும்பொழுது வேறு; காலை நண்பகல் மாலை என்ற சிறு பொழுதுகளில் வைத்து அறியலாம். "முப்பொழுது குறைமுடித்து" (எழு கூற்) மூளும் - மிகுதியாகிய.

களிசிறத்தல் - ஒரு சொல்; மிக மகிழ்தல். 5

3928. ஆன தொண்டினி லமர்ந்தபே ரன்பரு மகலிடத் தினிலென்றும்
ஞான முண்டவர் புண்டரீ கக்கழ லருச்சனை நலம்பெற்றுத்
தூந றுங்கொன்றை முடியவர் சுடர்நெடுங் கயிலைமால் வரையெய்தி
மான நற்பெருங் கணங்கட்கு நாதராம் வழித்தொண்டி னலம்பெற்றார்

(இ - ள்) ஆன...அன்பரும் - ஆகிய முன்கூறிய திருத்தொண்டில் விரும்பியிருந்த பேரன்பராகிய கணநாதரும்; அகலிடத்து...பெற்று - பரந்த நிலவுலகத்தில் எந்நாளும் திருஞானசம்பந்தரது தாமரை போன்ற திருவடியினை வழிபடுதலாகிய நன்மையினை அடைந்து அதன் பயனாக; தூ...எய்தி - தூயமணமுடைய கொன்றை மலர்களை அணிந்த முடியவரது ஒளியுடைய நீண்ட திருக்கயிலைப் பெருமலையினை அடைந்து; மான...நிலைபெற்றோர் பெருமையுடைய நல்ல பெருஞ் சிவகணங்களுக்கு நாதராகும் வழி வழி வரும் திருத்தொண்டிலே நிலைபெற்று நின்றருளினர்.

(வி - ரை) ஆன தொண்டினில் - ஆன-முன் கூறியவாறாயின; ஆன - ஆக்கமுடைய.

அமர்ந்த - விரும்பிச் செய்திருந்த.

அருச்சனை நலம் பெற்று - அருச்சனையால் வரும் பயனை யடைந்ததனால் அதன் பயனாக; பெற்று (அதனால்) எய்தி - நிலைபெற்றார் என்று காரணம் காரியப் பொருள்பட உரைத்துக்கொள்க. தொண்டரை ஆக்கினர்; அதன் பயனால் அடிய

வர்களை வழிபட்டனர் ; அதன் பயனால் ஆளுடைய பிள்ளையாரது திருவடி வழி பாட்டினை யடைந்தனர் ; அதன் பயனாக இறைவரது உலகினை எய்திக் கணநாத ராகித் திருத்தொண்டின் நிலைபெற்றனர் என்றிவ்வாறு காரண காரிய முறையிற் கண்டுகொள்க.

சரியை நிலையினாற் சங்கம வழிபாடும், அதனால் குருவழிபாடும், அதன்மூலம் இறைவனை யடைதலும் வருவன என்ற ஞானநூல் உண்மைகளையும் ஈண்டு வைத்துக் கண்டு கொள்க.

சுடர் - ஞானவொளி ; "பொன்னின் வெண்டிருநீறு புனைந்தென" வென்ளிய ஒளிவீசுதல்.

மானம் - பெருமை ; நன்மை - சிவச்சார்பு ; பெருமை - பெருவலிமை (16).

வழித்தொண்டு - முற்செய் தவத்தின்வழி முன்கூறியபடி தொடர்புண்டு வரும் திருத்தொண்டு.

நிலைபெறுதல் - மீளாத நிலையடைதல். 6

3929. உலக முய்யநஞ் சுண்டவர் தொண்டினி லுறுதிமெய் யுணர்வெய்தி
அலகி றொண்டருக் கறிவளித் தவர்திற மவனியின் மிசையாக்கும்
பலர்பெ ருப்புகழ்ப் புகலியில் வருங்கண நாதனார் கழல்வாழ்த்திக்
குலவு நீற்றுவன் கூற்றுவனார்திறங் கொள்கையின்மொழிகின்றாம்.

(இ - ள்) உலகமுய்ய...எய்தி - உலகுயிர்களுய்யும் பொருட்டு விடத்தினை உண்ட சிவபெருமானது திருத்தொண்டின் உண்மைத் திறத்தில் உறுதியாகிய மெய்யுணர்ச்சி பொருந்தப்பெற்று ; அலகில்...வாழ்த்தி - அளவில்லாத தொண்டர் களுக்கு அவ்வவர் தொண்டில் அறிவு அளித்து அவர்களது திறங்களை உலகிலே ஆக்கும் விரிந்த பெரும் புகழினையுடைய சீகாழியில் அவதரித்த கணநாதனாருடைய திருவடிகளைத் துதித்து ; குலவு...மொழிகின்றாம் - விளங்கும் திருநீற்றுச் சார்பு பூண்ட வண்மையுடைய கூற்றுவநாயனாரது திறத்தினைக் கொள்கையின்படி மேற் சொல்லப் புகுகின்றோம்.

(வி - ரை) இது கவிக்கூற்று. ஆசிரியர் தமது மரபுப்படி இதுவரை கூறிவந்த சரிதத்தினை வடித்தெடுத்து முடித்துக்காட்டி, இனி, மேற்கூறப்புகும் சரிதத்துக்குத் தோற்றுவாய் செய்கின்றார்.

உலகமுய்ய நஞ்சுண்டவர் - தேவர்களுய்ய நஞ்சு உண்டதனை உலகம் உய்ய என்றார் ; தேவர்களுய்தி பெற்று அவ்வவர்க்குப் பணித்த உலககாவலைச் செய்ய நின்றாராதலின் ; அன்றியும் தேவருய்ய உண்டருளிய கருணையை உலகம் திருநீல கண்டத்தினால் விளங்க வறிந்துய்யும்படி என்ற கருத்துமாம்.

தொண்டினில்...எய்தி - உறுதியாவது என்றும் பிறழ்வுறாமை ; மெய் யுணர்வு - துணிந்த முடிந்த உண்மை நினைவு ; திருத்தொண்டே வீடுபேற்றுக்கு வழியாவது என்ற உறைப்பு.

அலகில்...ஆக்கும் - "தொண்டரை ஆக்கி" என்ற வழிநூற் பகுதிக்குப் பொருள் விரிக்குமாற்றால் சரிதவரலாற்றை வடித்து முடித்துக் காட்டியபடி. அறிவளித்தல்-அவ்வத்தொண்டின் தொழில் அறிவும், அதனானெறிக்கு வழியாகும் திறத்தைஅறியும் அறிவும் தருதல்; திறம் ஆக்கும் திறத்தினை விளங்கி ஓங்கச்செய்யும்

குலவும் - விளக்கஞ் செய்கின்ற ; விளங்குகின்ற ; நீற்று வண்மை - நீற்றுநெறி யின் உறைப்பு. 7

1 சீகாழி



(1) கணநாதர் கோயில் - திருக்
கோயிலினுள் உள்ளது.
பலிபீடம் மூலத்தானம்.

(2) கணநாதர் கோயில் (மனை)
தெற்கு வீதியில் உள்ளது.



திருஞானசம்பந்த நாயனார் ஆலயம் - விமானம்



சீகாழி - (கும்பாபிஷேகத்தின்போது) தோணியப்பர் திருத்தோணி

**சரிதச் சுருக்கம் :** உமையம்மையாரது திருமுலை ஞானப்பாலுண்டருளிய ஆளுடைய பிள்ளையார் அவதரித்த சிறப்புடைய சீகாழிப் பதியில் மறையவர் குலத்தில் அவதரித்தவர் கணநாத நாயனார்.

அவர் திருத்தோணியப்பருக்கு நாளும் அன்பொடு பணி செய்தனர். விரும்பி வந்து அணையும் அன்பர்களைக் கைத்திருத் தொண்டினில் அவ்வத்துறைதொறும் பயில்விப்பார்.

நந்தன வனப்பணி செய்வோர், மலர் பறிப்போர், மாலை புனைவோர், திருமஞ்சனம் கொணர்வோர், திருவலகு திருமெழுக் கமைப்போர், திருமுறை எழுதுவோர், வாசிப்போர் என்றிவ்வாறுள்ள பல பணிகளிலும் விரும்பி அணைந்தவர்க்கு அவரவர் செயல் விளங்கிட அவ்வவர்க்குள்ள குறைகளை எல்லாம் முடித்துப் பொருந்தும்படி செய்து தொண்டர்களை ஆக்கினர்.

இல்லறத்தில் வாழ்ந்து அடியார்களை வழிபட்டனர். ஆளுடைய பிள்ளையார் திருவடியில் மூண்ட அன்பொடு நாளும் முப்போதும் வழிபாடு செய்தனர்.

இவ்வாற்றால் இறைவரது திருக்கயிலை மாமலையில் சேர்ந்து கணங்களுக்கு நாதராகி வழித்தொண்டின் நிலைபெற்றார்.

குறிப்பு:—இவரது கோயில் திருக்கோயிலுக்குள் ஒன்றும், திருவீதியில் ஒன்றும் உள்ளன. அவற்றுள் முன்னையது அவர் திருவடி யடைந்த இடம் என்றும், பின்னையது அவரது இல்வாழ்க்கைத் திருமனை இருந்த இடம் என்றும் கருதவுள்ளன.

---

கற்பனை :—1. பல பதிகள் அவற்றின் வந்தவதரித்த பெரியோரால் சிறப்புப் பெறுவன. ஆளுடைய பிள்ளையார் வந்தவதரித்தமையாற் சிறப்புப் பெற்றது சீகாழித் திருநகரம் (3923).

2. கைத்திருத் தொண்டினில் அணைந்த அன்பர்களைப் பயிற்றுதல் சிறந்த திருத்தொண்டு (3924).

3. திருமுறை எழுதுதல் வாசித்தல் இவை சிறந்த சிவத்தொண்டாகிய ஞானபூசையாம் (3925).

4. தொண்டு செய்யும் விருப்புள்ளோர்களை அவ்வவர் தகுதிக்கேற்ற அவ்வத் துறைதொறும் பயிற்றுதலும், அவர்களது குறையெலாம் முடித்து மேவிடச் செய்தலும், இவ்வாறு தொண்டரை ஆக்குதலும் சிவன்பணியாகிய சரியைப்பணிகளேயாம் (3926).

5. ஆளுடைய பிள்ளையார் திருவடிகளை அன்புடன் நாளும் முப்பொழுதும் வழிபடுதல் குருவழிபாடாகிச் சிவலோகத்திற் சேர்க்கும் தன்மையுடைய சிறந்த சாதனம். (3927).

சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# 39. கூற்றுவ நாயனார் புராணம்

## தொகை

"ஆர்கொண்ட வேற்கூற்றன் களந்தைக்கோ னடியேன்"
—திருத்தொண்டத் தொகை (6)

## வகை

"நாதன் றிருவடி யேமுடி யாகக் கவித்துநல்ல
போதங் கருத்திற் பொறித்தமை யாலது கைகொடுப்ப
வோதந் தழுவிய ஞாலமெல் லாமொரு கோலின்வைத்தான்
கோதை நெடுவேற் களப்பாள னாகிய கூற்றுவனே"
—திருத்தொண்டர் திருவந்தாதி (47)

## விரி

3930. துன்னார் முனைக டோள்வலியால் வென்று சூலப் படையார்தம்
நன்னா மந்தந் திருநாவி னாளு நவிலு நலமிக்கார்
பன்னா ளீச ரடியார்தம் பாதம் பரவிப் பணிந்தேத்தி
முன்னா கியநற் றிருத்தொண்டின் முயன்றார் களந்தை முதல்வனார்.

புராணம் :—கூற்றுவ நாயனாரது வரலாறும் பண்பும் கூறும் பகுதி. இனி, ஆசிரியர், நிறுத்த முறையானே, ஏழாவது, வார்கொண்ட வனமுலையாள் சருக்கத்தில், ஆறாவது கூற்றுவ நாயனாரது புராணம் கூறத் தொடங்குகின்றார்.

தொகை :—களந்தைப் பதியின் முதல்வராகிய கூர்மையுடைய வேலை ஏந்திய கூற்றுவருக்கு அடியேனாவேன்.

ஆர் - கூர்மை ; ஆரெயிற் றழுந்தினர் (சிலப். 5, 124) ; ஆர் - அழகு என்றலுமாம். "கோதை நெடுவேல்" என்று இதனை ஆண்டது வகைநூல். ஊரும் பேரும் பண்பும் உரைத்தவாறு.

வகை :—கோதை...கூற்றுவனே - மாலையணிந்த நெடிய வேற்படையை ஏந்திய களந்தைப் பதியின் முதல்வராகிய கூற்றுவரே; நாதன்...பொறித்தமையால்- தமது முடியிற் சிவபெருமான் சூட்டிய அவரது திருவடியினையே தமக்கு அரசமுடியாகச் சூட்டிக்கொண்டு நன்மை செய்யும் சிவஞானத்தைத் தமது திருவுள்ளத்திற் பதிய வைத்தமையால் ; அது...வைத்தான் - அச்சிவஞானமே தமக்கு உற்ற துணையாகத் தாங்கக் கடல் சூழ்ந்த நிலவுலகம் முழுதும் தனது ஒரு செங்கோலின்கீழ் அடங்கி வாழச் செய்தார்.

நாதன் றிருவடி - நாதனுடைய திருவடி ; முடியாக இருக்கும்படி இறைவர் இவரது முடியிற் சூட்டிய திருவடி ; விரிவு புராணத்துள் "பாதமலரளிக்க"

(3935) என்னுமிடத்துக் காண்க. நல்லபோதம் - போதமாவது முக்கட் புனிதனை அறிந்தனுபவிப்பது ; இது நன்மை தருவதால் நல்லபோதம் என்றார் ; பொறித்தல்- அகலாது பதியவைத்தல் ; கைகொடுத்தல் - துணையாகத் தாங்குதல் ; ஓதம் - கடல் ; ஒரு கோல் - ஒப்பற்ற தனது ஆணையாகிய செங்கோல்.

ஊரும் பேரும் பண்பும் வரலாறும் வகைநூலுள் வகுக்கப்பட்டவாறு காண்க. விரிவு விரிநூலுட் கண்டுகொள்க.

3930. (இ - ள்) களந்தை முதல்வனார் - களந்தை முதல்வராகிய கூற்றுவனார் ; துன்னார்...வென்று - பகைவர்கள் எதிர்த்து நின்ற போர்களில் தமது தோளின் வல்லமையாலே வெற்றிகொண்டு ; சூலப்படையார்தம்...நலமிக்கார் - சூலப்படையினை ஏந்திய சிவபெருமானது நல்ல திருநாமத்தினைத் தமது நாவினாலே நாடோறும் சொல்லும் நன்மையில் மிகுந்தவர் ; பன்னாள்...முயன்றார் - பலநாள்கள் இறைவாது அடியார்களுடைய பாதங்களைப் பணிந்து துதித்து முதன்மையாகிய நல்ல திருத்தொண்டிலே முயன்றனர்.

(வி - ரை) துன்னார் - பகைவர்; துன்னுதல் - சேர்தல் ; "நேரார்" - சேராதவர் ; (தொல். பொ. புற - 17). இந்நாயனார் குறுநில மன்னர் மரபு என்ப.

முனைகள் - போர்களை ; நலம்மிக்கார் - சிறப்பால் மேம்பட்டார்.

சூலப்படையார் - சிவபெருமான்; நன்னாமம் - நன்மைதரும் சிவநாமம்; "அரன், நல்ல நாம நவிற்றியுய்ந் தேனன்றே" (அரசு. நீலக்குடி). நன்மையாவது வீடுபேறு.

திருநாவில் – சிவனது நல்ல நாமநவிலப் பெறும் பேறுபற்றித் திருநா என்றார். "திருவாய் பொலியச் சிவாய நமவென்று நீறணிந்தேன்" (அரசு - பாதிரிப்புலியூர்.).

நாளும் - எப்போதும். நல்நாமம் - திருவைந்தெழுத்து ; பிறவிப் பிணிக்கு மருந்தாகலின் நல்நாமம் என்றார் ; "வாயின் வைக்குமளவின் மருந்தாகி."

அடியார் பாதம் பணிந்தேத்தி - அடியார்களை வணங்கி வழிபட்டு அமுதூட்டுதல் முதலாயின செய்து.

முன்னாகிய நற்றிருத் தொண்டு - முன்னாதல் - முதன்மை பெறுதல் ; திருத்தொண்டு - அரன்பணியும் அடியார் பணியும்.

முயன்றார் - முயன்று செய்தனர் ; முயற்சியாவது இடைவிடாது நினைந்து செய்தல்.

களந்தை - பதியின் பெயர் ; " களப்பாளன் - என்பது வகைநூல்; தலவிசேடம் பார்க்க.

முதல்வனார் - முதன்மையாவது ஆட்சிபுரியுந் தன்மை. 1

3931. அருளின் வலியா லரசோதுங்க வவனி யெல்லா மடிப்படுப்பார்
பொருளின் முடிவுங் காண்பரிய வகையாற் பொலிவித் திகல்சிறக்க
மருளுங் களிறு பாய்புரவி மணித்தேர் படைஞர் முதன்மாற்றார்
வெருளுங் கருவி நான்குநிறை வீரச் செருக்கின் மேலானார். உ

(இ - ள்) அருளின் வலியால் - சிவன் திருவருட்டுணையின் வல்லமையாலே ; அரசு...அடிப்படுப்பார் - அரசர்களும் அஞ்சி ஒதுங்கிக் கீழ்ப்படும்படி நிலமுழுதும் தம் ஆட்சியின் கீழே வரும்படி செய்வாராகி ; பொருளின்...பொலிவித்து - பொருள்களின் எல்லையும் காணமுடியாத வகையினாலே விளங்கச் சேர்த்து; இகல்... முதல் - போரில் வென்றி பெறும்படியாக மருட்சி செய்யும் யானைகள், பாய்ந்து செல்லும் குதிரைகள், அழகிய தேர்கள், படைவீரர் என்றிவை முதலாகிய,

மாற்றார்...மேலானார் – பகையரசர்கள் அஞ்சி ஒதுங்கத்தக்க நால்வகைப் படைக் கருவிகளும் நிறைந்த வீரமுடைய செருக்கினால் மேம்பட்டார்.

(வி - ரை) அருளின் வலியால் - சிவன் திருவருள் துணை செய்தமையால் அதன் வலிமையாலே ; "அது கைகொடுப்ப" என்பது வகைநூல் ; "மதியணிந் தார் திருத்தொண்டு வாய்த்த வலி யுடைமையினால், எதிரிவருக் கிவ்வுலகி லில்லை" (3666) என்ற கருத்து.

அரசு ஒதுங்க - அரசு - வலிய முடியரசர்களும் என்ற உயர்வு சிறப்பும்மை தொக்கது ; அரசல்லாத இவரது வலிமையினைக் கண்டு முடியரசர்களும் அஞ்சியும் தோல்வியுற்றும் ஒதுங்க என்பதாம். மேல் "வேந்தர் முனைகள் பலமுருக்கி" என்பது காண்க.

அவனி எல்லாம் அடிப்படுப்பார் - பூமி முழுதும் தமது ஆணையின்கீழ் நிற்கச் செய்வாராகிய கூற்றுவநாயனார். வினையாலணையும் பெயர் ; அடிப்படுப்பார் - மேலானார் - என்று முடிக்க.

பொருளின்...பொலிவித்து - பொருள் - நால்வகைச் சேனைகளை வைத்துக் காப்பாற்றவும், உலக ஆணை யரசின் பிற அங்கங்கள் செலுத்தவும் ஆதாரவாயுள்ள பொன், விளைபொருள் முதலாயினவற்றின் ஈட்டம். அளவும் காண்பரிய - எல்லை கூட அறிய இயலாத அளவில் ; பொலிவித்து - சிறக்க ஈட்டி. முடிவு - எல்லை ; அளவு.

பொலிவித்து - விருத்தி செய்து ; இகல் சிறக்க - போரில் வெற்றிகொண்டு விளங்கும்படி உதவுதற்கு ; சிறக்க (உதவும்) கருவி - என்க. உதவும் என்பது இசையெச்சம்.

மருளும் - மருட்சியை விளைக்கும் ; கண்டோர் மருளுதற்குக் காரணமான.

களிறு...நான்கு - நால்வகைச் சேனை; உயிருள்ளனவற்றையும் கருவி என்றார், தம் வயத்தானன்றிச் செலுத்துவோர் வயத்தாற் கருவிபோலச் செலுத்தப்படும் தன்மை பற்றி. கருவி - சேனை.

மாற்றார் வெருளும் - பகைவர் இச்சேனைகளின் பெருக்கினைக்கண்ட மாத்திரையே அஞ்சத்தக்க ; "தானை யானை குதிரை யென்ற, நோனா ருட்கு மூவகை நிலையும்" (தொல். பொரு - புற - 17).

வீரச் செருக்கு - வீரத்தினால் உண்டாகிய இறுமாப்பு ; பெருமிதம் ; இது தள்ளத்தக்க குற்றங்களுள் ஒன்றாகிய குணமன்று என்பார் வீரம் என்ற அடைமொழி புணர்த்தி ஓதியதன்றி, மேலானார் என்றும் கூறினார். மேலாதல் - மிகுந்தநிலையன்றி மேம்படுதல் - மேன்மைபடைதல் என்ற குறிப்புமுடையது. 2

3932. வென்றி வினையின் மீக்கூர வேந்தர் முனைகள் பலமுருக்கிச்
சென்று தும்பைத் துறைமுடித்துஞ் செருவில் வாகைத்திறங்கெழுமி
மன்றன் மாலை மிலைந்தவர்தம் வளநா டெல்லாங் கவர்ந்து, முடி
ஒன்று மொழிய வரசர்திரு வெல்லா முடைய ராயினார். ௩

(இ - ள்) வென்றி...முருக்கிச் சென்று - வெற்றிபெறும் செயலில் மேன் மேலும் பெருகும்படி வேந்தர்களுடன் பொருகின்ற போர்கள் பலவற்றிலும் முடுகி மேற்சென்று ; தும்பை...மிலைந்து - (புறப்பொருளிலக்கணத்துப் பேசப் படும்) தும்பைப் பூச்சூடும் துறையின் போர்த்தொழில்களை முடித்தும், அப்போர் களில் வெற்றிபெற்றபின் வாகைமாலையின் வகையில் எழுகின்ற மணமுடைய மாலை

சூடியும் ; அவர்தம்...கவர்ந்து - அவ்வேந்தர்களது வளநாடுகளை யெல்லாம் கைக் கொண்டும் ; முடி...ஆயினார் - அரசர்க்குரிய முடி ஒன்று நீங்கலாக ஏனைய அரசர்க் குரிய செல்வங்கள் எல்லாவற்றையும் உடையவராயினார்.

(வி - ரை) மீக்கூர - முருக்கி - என்க. மீக்கூர்தல் - மேன்மேற் பெருகுதல் ; முருக்குதல் - வலிமையால் அழித்தல்.

வேந்தர் முனைகள் பல முருக்கி - வேந்தர்களைப் பல போர்களிலும் அழித்து. வேந்தர்களின் பகைப்புலங்கள் பலவற்றையும் (முனை - பகைபபுலம்) அழித்து என் றும், போர்புரியும் பகையரசர் பலரையும் (முனை - போர் - பகை) வென்று என்றும் உரைத்தலுமாம்.

தும்பைத் துறை - வாகைத் திறம் - புறப்பொருளில் வெட்சி முதல் தும்பை யீறாகப் புறத்திணைகள் ஏழாக வகுக்கப்படும் ; அவற்றுள் தும்பை-வாகை என்ற இரண்டும் இறுதியில் உள்ள திணைகள் ; தும்பை - போரினையும், வாகை போரில் வெற்றியையும் குறிக்கும். போர் செய்வோரும் அதனுள் வெற்றி பெற்றோரும் சூடும் அவ்வக் குறியீடாகிய மலர்களால் அவ்வப்பெயர் பெற்றன.

தும்பைத்துறை - வாகைத்திறம் "அதிரப்பொருவது தும்பையாம் போர்க் களத்து மிக்கோர் செருவென்றது வாகையாம்" என்பதனால் இவற்றினியல்பை அறிக ; துறை - திறம் என்பன அவ்விருதிணைக் கண்ணும் உட்பிரிவாய் வரும் பல வகைக் கூறுபாடுகளைக் குறித்தன (திறம் - வகை).

தும்பைத் துறைமுடித்தும் - தும்பைத்துறை என்பது போரினை உணர்த்தி நின்றது. இது நெய்தற்றிணையின் புறன் என்பர். "மைந்து பொருளாக வந்த வேந்தனைச், சென்று தலையழிக்குஞ் சிறப்பிற் றென்ப" (தொல் - பொ - புற - 15) என்பது இதன் பொதுவிலக்கணம். வேந்தனை என்றும், சென்று என்றும், "மைந்து பொருளாக" என்றும் வரும் தொல்காப்பியச் சொற்பொருள்களை ஆண்டு, ஆசிரியர், இதன் தன்மை போதரக் கூறிய தமிழ்நயம் காண்க. இத்துறைகள் தும்பையரவ முதலாக தானைமறம், யானை மறம், குதிரைமறம், தேர்மறம் உள்ளிட்ட இருபத்து நான்காம் ; இவையெல்லாம் குறிக்க "இகல் சிறக்க...கருவி நான்குநிறை வீரச் செருக்கின் மேலானார்" (3931) என ஆசிரியர் முன்னர்க் கூறிய கவித்திறம் காண்க.

தும்பைத் துறை முடித்தும் - வாகைத்திறம் கமழும் மாலை மிலைந்தும் - துறை - வெற்றிக்கு வழியாகிய நிலை - திறம் - வெற்றி நிலை - என்ற குறிப்புக்கள் படவும் நின்றன. முடித்தும் - மிலைந்தும் என்ற சொற்களின் ஆற்றலும் இக்கருத்துடையன.

வாகைத்திறம் கமழும் மன்றன்மாலை மிலைந்து-வாகை பகைவரை வெல்லு தலைக் குறிக்கும் புறத்திணை ; இதற்கு வாகைமாலை சூடுதல் மரபு. இது வாகையரவ முதலிய முப்பத்து மூன்று துறைகளையுடையது ; "தாவில் கொள்கைத் தத்தங் கூற்றைப், பாகுபட மிகுதிப் படுத்த லென்ப" (தொல். பொ. புற - 19) என்பது இதன் பொதுவிலக்கணம் ; கேழுமி என்பது தம் கூறுபாடுகளை மிகுதிப்படுத்தி என்ற குறிப்புப்பட நின்றது.

இப்பாகுபாடுகளை யெல்லாம் தொல்காப்பியம் (பொருள் - புறத்திணையியல்), பன்னிருபடலம், புறப்பொருள் வெண்பாமாலை முதலிய இலக்கண நூல்களுட் கண்டுகொள்க.

வளநாடு - வளங்களையுடைய சிறந்த நாடுகள் ; "நாடென்ப நாடா வளத் தன" (குறள்) என்றபடி ஈண்டு வளம் என்பது தேடிக் கண்டுகொள்ள வேண்டாது நாடு தானே இயல்பிற்றரும் வளங்களைக் குறித்தது. வளநாடு என்பது முன்னாளில்

பழந்தமிழ் மன்னர்கள் தத்தம் நாட்டின் பெரும் பகுதிகளுக்கு மரபுப் பெயராய்ப் பல திறப்பட இட்டு வழங்கியமை சரிதங்காட்டும் கல்வெட்டுக்களாலறியப்படும்.

கவர்ந்து - ஆறிலொன்று கோடல், சுங்கம் முதலாகிய நீதிமுறையானன்றிப் படை வலிமையாற் கைக்கொண்டு என்பது குறிப்பு.

முடி ஒன்றும் ஒழிய - அரசர்க்குரியனவாய்க் கூறும் பத்துச் சிறப்பு அடையாளங்களுள் (தசாங்கம்) நவமணி முடியாகிய ஒன்று மட்டும் நீங்கலாக.

அரசர் திரு எல்லாம் - அரச அடையாளங்களே யன்றி அரச செல்வங்களும் அங்கங்களும் முதலிய எல்லாமும். எல்லாமும் - முற்றும்மை தொக்கது.

ஒன்றும் - என்றதில் உம்மை விரித்தது அஃது இச்சரித விளைவுக் காதாரமாதல் பற்றி.

திறம் கமழும்—என்பதும் பாடம். 3

3933. மல்லன் ஞாலம் புரக்கின்றார் மணிமா மவுலி புனைவதற்குத்
தில்லை வாழந் தணர்தம்மை வேண்ட வவருஞ் "செம்பியர்தந்
தொல்லை நீடுங் குலமுதலோர்க் கன்றிச் சூட்டோ முடி"யென்று
நல்கா ராகிச் சேரலன்றன் மலைநா டணைய நண்ணுவார், ௪

3934. ஒருமை யுரிமைத் தில்லையந் தணர்க டம்மி லொருகுடியைப்
பெருமை முடியை யருமைபுரி காவல் பேணும் படியிருத்தி
இருமை மரபுந் தூயவர்தாஞ் சேரர் நாட்டி லெய்தியபின்,
வருமை யுறவான் மனந்தளர்ந்து மன்று ளாடுங் கழல்பணிவார், ௫

3935. அற்றை நாளி லிரவின்க "ணடியேன் றனக்கு முடியாகப்
பெற்ற பேறு மலர்ப்பாதம் பெறவே வேண்டு" மெனப்பரவும்
பற்று விடாது துயில்வோர்க்குக் கனவிற் பாத மலரளிக்க
உற்ற வருளா லவைதாங்கி யுலக மெல்லாந் தனிப்புரந்தார். ௬

3933. (இ - ள்) மல்லல்...ஞாலம் புரக்கின்றார் - செழுமையுடைய நிலவுலகத்தைக் காக்கின்றாராய்; மணி...வேண்ட - நவமணிகளையுடைய பெரிய மகுடத்தைச் சூட்டுதற்காகத் தில்லைவாழந்தணர்களை வேண்ட; அவரும்...நல்காராகி - அவர்களும் சோழர்களது தொன்றுதொட்டு வரும் குல முதல்வர்களுக் கல்லாமல் பிறருக்கு முடிசூட்ட மாட்டோம் என்று முடியினைச் சூட்டாராகி; சேரலன்றன்...நண்ணுவார் - சேரமன்னரது மலைநாட்டினைச் சேர நண்ணுவார்களாகி; ௪

3934 (இ - ள்) ஒருமை...இருத்தி - ஒருமையுடைய உரிமை பூண்ட தில்லைவாழந்தணர்கள் தங்களுக்குள் ஒரு குடியினைப் பெருமை கொண்ட அந்த மணி மகுடத்தினை அருமையாகக் காவல் புரியும்படி தங்கி இருக்கும்படி வைத்து; இருமை...எய்தியபின் - இருமரபுந் தூயவர்களாகிய அவர்கள் சேரர் நாட்டிற் சேர்ந்த பின்பு; வரும்...தளர்ந்து - வரும் ஐயப்பாட்டினாலே மனம் தளர்ச்சியடைந்து; மன்றுள்...பணிவார் - (கூற்றுவனார்) தில்லையம்பலத்தில் ஆடல் புரிகின்ற திருவடியைப் பணிவாராய், ௫

3935. (இ - ள்) அடியேன்...துயில்வோர்க்கு - அடியேனுக்கு தேவரீரது மலர் போன்ற பாதங்களை மணிமுடியாகப் பெற்ற பேறு அடியேன் பெறவேண்டும்

என்று துதிக்கும் பற்றினை விடாமல் துயில்கின்ற அவருக்கு; அற்றை...கண்-அன்று இரவிலே; கனவிற் பாதமலரளிக்க - கனவிலே இறைவர் தமது பாதங்களை முடியாகச் சூட்டியருள ; உற்ற...புரந்தார் - பொருந்திய திருவருளினாலே அப்பாதங்களையே மணிமுடியாகத் தாங்கிக்கொண்டு உலகமெல்லாவற்றையும் தனியாட்சி புரிந்தனர்.

இம்மூன்று பாட்டுக்களும் தொடர்ந்து ஒருமுடிபு கொண்டன.

3933. (வி - ரை) புரக்கின்றார் - வேண்ட என்று கூட்டுக ; உலகத்தை அரசாள்பவர் அதன்பொருட்டு முடிபுனைய வேண்ட ; அதன் பொருட்டு என்பது குறிப்பெச்சம்.

தில்லைவாழந்தணர் தம்மை வேண்ட - சோழ மன்னர்களது நவமணி முடியானது தில்லையில் பேரம்பலப் பண்டாரத்தில் சேமமாக அம்பலவாணரது அருட்காவலில் தில்லைவாழந்தணர்கள் வசமாக வைக்கப்பட்டிருந்ததென்றும், அவ்வரசர் முடிசூட்டிக்கொள்ளுங் காலத்தில் அவர்கள்பால் வைத்து முடிசூட்டப் பெற்று முடிசூட்டு விழாச் செய்தபின் அங்கே மீண்டும் கொணர்ந்து அவர் காவலாக வைக்கப் படுமென்றும், இவ்வாறு மற்றும் பலவகையாலும் தில்லைவாழந்தணர்களுக்கும் சோழ மன்னர்களுக்கும் நெருங்கிய தொடர்பு இருந்ததென்றும் நாட்டு நடப்புச் சரித வரலாறுகளாலும் கல்வெட்டு ஆதாரவுகளாலும் அறிகின்றோம். திருவாதவூரடிகள் புத்தரைவாது வென்ற சபைக்குச் சோழமன்னனும் வந்திருந்தான் என்ற வரலாறும் காண்க. சோழமன்னர்கள் முடிசூடிக் கொள்ளும் மரபுடைய பதிகள் ஐந்து என்பது சண்டேச நாயனார் புராணத்துட் காணப்படும் ; அவை காவிரிப்பூம் பட்டினம், திருவாரூர், உறையூர், கரூர், சேய்ஞலூர் என்பன. வேண்ட - மணி மகுடத்தினை முடிசூட்டு விழாவிற்காகக் கொணர்ந்து சூட்டும்படி வேண்ட. சூரிய மரபின் இரணிய வர்மன் முதலியோர் தில்லையில் முடிசூடியதும் காண்க.

நல்காராகி - இவர்கள் கொடுக்கப்பெற்றுக் கொண்டு சென்று முன்குறித்த ஐந்து ஊர்களில் ஒன்றில் முடிசூட்டிக் கொள்ளக் கொடாதவராய் என்க. முடியைக் காவல் பேணும்படி (3934) என்றதனால் அது அவர்களது வசமாய் அவர் காவலில் திருவம்பலத்தினுள் இருப்பது வழக்கு என்பது பெறப்படும். இதற்கு இவ்வாறன்றிச் சூட்டாரர்களாகி என்றுரைப்பாருமுண்டு.

தில்லைத் திருவம்பலத்தின் சோழமன்னர்களுடைய தொடர்பு சிற்றம்பலம், பேரம்பலம், தில்லைஎல்லைகளிலும், பல வேறிடங்களிலும் சோழர்கள் பொன் வேய்ந்தமையும், பின்னாளில் அந்நியர் படையெடுப்பின்போது அம்பலக் கூத்தப்பெருமான் திருவாரூரில் எழுந்தருளியிருந்தமையும், பிறவுமாகிய வரலாறுகளால் அறியப்படும் ; அவ்வாறே சோழகுல முதலோர்களின் அரசாட்சி நிலைபெற்று நேர்பெற நடத்தற்குரியவற்றைச் செய்வது தில்லைவாழந்தணர்களின் பொறுப்பாயிருந்ததென்பது "உரிமையாற் பல்லவர்க்குத் திறைகொடா மன்னவரை மறுக்கஞ் செய்யும், பெருமையார்" (கோயில்) என்ற நம்பிகளது திருவாக்கானும், பிறவாற்றானும் அறியப்படும். தொல்லைநீடும் - பழமையாற் சிறந்த.

சோழர் குலமுதலோராகிப் பேரம்பலமுந் தில்லையெல்லையும் பொன்னின் மயமாக்கிய அநபாயச் சோழர்பால் அமைச்சுரிமை பூண்ட ஆசிரியர் பெருமான், இவ்வரசமரபு வழக்குக்களை யெல்லாம் நன்குணர்ந்தவராதலின், அதனை ஈண்டுச் "செம்பியர்தம்...சூட்டோம் முடி என்று நல்காராகி" என்ற பொறித்துவைத் தருளினர். சூட்டோம் - சூட்டஉடன்படோம் என்ற பொருளில் நின்றது.

சேரலன்...நண்ணுவார் - அரசாள்பவரது கருத்துக்கு மாறுபட்டாராதலின் அங்கிருக்க அஞ்சிச் சேரர் நாடு அணைந்தனர். சேரர் இவரது ஆட்சிக்குட்படாத முடிமன்னர் என்பதும் இதனாற் பெறப்படும்.

நண்ணுவார் - இருந்தீ - எய்தியபின் என்று மேல்வரும் பாட்டுடன் கூட்டி முடிக்க. 4

3934. (வி -ரை) ஒருமை உரிமை-ஒருமையாவது ஒரே நற்சார்பிற் செல்லும் ஒழுக்கம் ; உரிமையாவது முடியைப் பேணிச் சூட்டி வழிவழி காக்கும் உரிமை. சோழர் ஒரு மரபுக்கே முடிசூட்டும் உரிமை என்பது மொன்று.

ஒரு குடியை...இருந்தீ - அம்பலவாணர் பூசைக்கும் திருவாபரணங்களின் காவலுக்கும் ஒருகுடி இங்கு இருத்தல் வேண்டுமாதலின் அதனோடு இந்த மணிமுடியினையும் காவல் புரியும்படி வைத்துச் சென்றனர் என்க.

அருமை புரிகாவல் - அரிதாகிய காப்பு ; அருமையாவது அதன் தகுதிக்கேற்றபடி வல்லவாறு எல்லாம் இயற்றுதல்.

இருமை மரபும் தூயவர் - " இருவர்ச் சுட்டிய பல்வேறு தொல்குடி " (திருமுருகு); இருமைமரபு-தந்தைவழி தாய்வழி யிரண்டும்.

வரும் ஐயுறவு - முடிசூடுதற்கு எண்ணியபடி கிடைக்கப் பெறாதபடியால், வேறு என் செய்வது என்று தோன்றாததிலை ஐயுறவு எனப்பட்டது ; முடிசூடுதலை விடுதலோ ? அன்றி அதற்கு வேறுவழி தேடுதலோ ? இன்னது செய்வது என்று தோன்றாததிலை.

மன்றுளாடுங் கழல் பணிவார் - தில்லைவாழந்தணர்கள்பால் அந்த மணிமுடியிருத்தலானும், அவர்களே அது சூட்டுவித்தற்குரிமையுடையா ராதலானும், அவருள் தாமும் ஒருவராய் உடையவராய் முதல்வராயுள்ள அம்பலவர் கழல் பணிவாராகி முடிசூடப் பெறவேண்டி வேண்டினர் (3935) என்க. தில்லைவாழந்தணர் புராணத்துள் முதலில் அம்பலவர் துதிசெய்தமைபற்றி உரைத்தவை ஈண்டு நினைவு கூர்தற்பாலன. பணிவார் - முற்றெச்சம். பணிவார் - துயில்வோர்க்கு எனவரும் பாட்டுடன் முடிக்க.

பணிந்தார்—என்பதும் பாடம். 5

3935. (வி - ரை) அற்றை நாள் - ஐயுறவால் மனந்தளர்ந்து நின்று பணிந்த அன்று. இரவின்கண் - கனவில் என்று கூட்டுக.

பேறு - பேறாக ; பேறாகப் பாதம் பெறவே என்க.

பேறு - மணிமுடிகள் எல்லாம் சடப் பொருளாய் அழியுந்தன்மையன ; மலர்ப் பாதம் அவ்வாறன்றி ஞானமயமாய் என்றுமழியாத தன்மையுடையது. ஆதலின் பேறு என்றார். " எவற்றையும் ஒருங்கே ஓரியல்பா னறியும் பேரறிவாகிய ஒரு பெருஞ் சுடர்முடியும் " (போதம் - 8. சிற்றுரை) என்றது காண்க.

பாதமே முடியாகப் பெற்ற பேறு - உமது பாதம் என்னும் ஞானமயமாகிய திருவடியின்கீழ் எனது முடியானது தாடலைபோல் அடங்கி நிற்க என்ற பொருட் குறிப்பும் காண்க.

பற்று விடாது துயில்வோர் - துயிலும்போதும் இந்நினைவு விடாத நிலையில் துயில்வோர்.

பாதமலரளிக்க உற்ற அருளால் - பாதங்களையே முடியாகச் சூட்டியருள அத்திருவருளின் துணையாலே.

அவை தாங்கி - பாதங்களையே முடியாகத் தாங்கிக்கொண்டு.

தனிப்புரந்தார் - ஒப்பற்ற அரசு செலுத்தினார். பொதுக் கடிந்து என்றலுமாம்.

பாதமலர்தாங்கி - உலகு புரந்தார் - இராமனது பாதுகைதாங்கிப் பரதன் உலகாண்டனன் என்ற இராமன்கதைப் பகுதி ஈண்டு நினைவு கூர்தற்பாலது. 6

3936. அம்பொ னீடு மம்பலத்து ளாரா வமுதத் திருநடஞ்செய்
தம்பி ரானார் புவியின்பகிழ் கோயி லெல்லாந் தனித்தனியே
இம்பர் ஞாலங் களிகூர வெய்தும் பெரும்பூ சனையியற்றி
உம்பர் மகிழ வரசளித்தே யுமையாள் கணவ னடிசேர்ந்தார். எ

(இ - ள்) அம்பொன்...தம்பிரானார் - அழகிய பொன்னாலியன்ற திருவம்பலத்திலே ஆராவமுதமயமாகிய திருநடனத்தினைச் செய்கின்ற பெருமானார்; புவியின்...இயற்றி - இந்நிலவுலகத்தில் மகிழ்ந்து வீற்றிருக்கின்ற கோயில்களில் எல்லாம் தனித்தனியாக இவ்வுலகத்துயிர்கள் இன்பமடையும்படி பொருந்துகின்ற பெரும்பூசனைகளைச் செய்வித்து; உம்பர் மகிழ அரசளித்தே - தேவர்கள் மகிழும்படி அரசாட்சி செய்து; உமையாள் கணவனடி சேர்ந்தார் - உமைபாகராகிய சிவபெருமான்திருவடி சேர்ந்தனர்.

(வி - ரை) அம்பொன் நீடும் அம்பலம் - "முழுதும் வானுல கத்துள தேவர்கள்...தூயசெம் பொன்னினால், எழுதி வேய்ந்த சிற்றம்பலம்" (தேவா) என்றபடி தேவர்களும், பின்னர் இரணிய வர்மன் முதலிய அரசர்களும் அவ்வக்காலங்களில் முறையே பொன் வேய்ந்து வந்தமையால் பொன்நீடு என்றார். "அம்பொ னீடிய வம்பலம்" (440).

ஆரா அமுதத்திருநடம் - தெவிட்டாத - குறைவு படாத - அமுதம் போன்ற திருநடனம். அமுதம் - மரணம் தவிர்ப்பது. தேவரமுதம் சில காலம் நீடிக்க மரணமின்றி வைப்பினும் பிறவிக்கேதுவாவது; ஆதலின் மரணத்துக்கு மேதுவாவது; திருநடனம் அவ்வாறின்றி, என்றைக்கும் பிறவியில் மீளாத நிலையுடன் பேர் இன்பமும் தருவது.

தம்பிரானார் - அவரது திருவடியே முடியாகச் சூடியமையால் தமது பெருமான் என்றார்.

கோயில்...இயற்றி - இறைவர் கோயில்களிற் பூசை வழுவாது நிகழச்செய்தல் அரசாது கடமைகளுள் ஒன்று. "எங்குமாகி யிருந்தவர் பூசனைக், கங்கண் வேண்டு நிபந்தமா ராய்ந்துளான், துங்க வாகமஞ் சொன்ன முறைமையால்" (100); "மங்கையைப் பாக மாக வைத்தவர் மன்னுங் கோயி, லெங்கணும் பூசை நீடி யேழிசைப் பாட லாடல், பொங்கிய சிறப்பின் மல்கப் போற்றுதல் புரிந்து" (469); "புற்றிடங் கொள் புனிதர்க் கமுதுபடி முதலா, நீதி வளவன் முன்வேண்டு நிமந்தம் பலவு மரியணையின், மீது திகழ விருந்தமைத்தான் வேதா கமநூல் விதிவிளங்க" (1884) என்பன முதலியவற்றால் இவையே யாண்டும் அரசர்க்குரிய முதற்கடமையாக வகுத்து வற்புறுத்திக் காட்டிய ஆசிரியரது அருளிப்பாடு காண்க.

தனித்தனியே - ஒரு கோயிலுக்காயின திருவமுது முதலியவற்றையே எல்லாக் கோயிற் சுவாமிகளுக்கும் கைகாட்டும் கோயில் அதிகாரிகள் இதனை நோக்கித் தக ஒழுகுவார்களாக.

இம்பர் ஞாலம் களிசிறக்க - பார்த்த பூசை என்பர்; கோயிற் பூசைகள் உலகம் வாழ அரசரால் செய்யப்படுவன. இவை நன்கு செய்யப்படின் உலகம்களித்துத் தழைத்து ஓங்கும்; செய்யாவிடின், அதற்கு மாறாக உலகம் துன்பமடையும் என்று எதிர்மறை முகத்தால், "முன்னவனார் கோயிற் பூசைகண் முட்டிடின், மன்னர்க்குத் தீங்குள வாரி வளங்குன்றும்; கன்னங் களவு மிகுத்திடுங் காசினி" என்று நாட்டுக்கும் அரசுக்கும் கேடுவருமென்ற சிவாகம ஆணைவழி அறுதியிட்டருளிய திருமூலர் திருமந்திரமும் காண்க.

எய்தும்பூசனை - பெரும்பூசனை - எனப் பிரித்துக் காட்டி நித்திய நைமித்திகங்கள் எனப்படும் இரண்டும் கொள்ளத்தக்கன.

இயற்றி - இயற்றுவித்து; நிபந்தங்கள் நியமித்து.

உம்பர்மகிழ அரசளித்தே - அறநூல் வழியான செங்கோலரசு மழைக்குக் காரணமாய் வானவர் பூசைக்கும் ஏதுவாதல் குறிப்பு. இறைவரது பூசையினால் உலகம் மகிழவும், அரசாட்சியினால் உம்பர் மகிழவும் என்க. 7

3937. காதற் பெருமைத் தொண்டினிலைக் கடல்சூழ் வையங் காத்தளித்துக்
கோதங் ககல முயல்களந்தைக் கூற்ற னார்தங் கழல்வணங்கி
நாத மறைதந் தளித்தாரை நடைநூற் பாவி னவின்றேத்தும்
போத மருவிப் பொய்யடிமை யில்லாப் புலவர் செயல்புகல்வாம். அ

(இ - ள்) காதல்...அளித்து - பெருவிருப்பமுடைய பெருமையுடைய திருத்தொண்டினிலைத்த கடல் சூழ்ந்த உலகத்தைக் காத்து அரசளித்து; கோது...வணங்கி-குற்றம் நீங்கும்படி முயன்ற களந்தைக் கூற்றுவநாயனாரது திருவடியை வணங்கி, (அத்துணை கொண்டு); நாதமறை...மருவி - நாத உருவாகிய வேதங்களைத் தந்து உலகளிக்கும் இறைவரை நடைநூலின் பாக்களால் சொல்லித் துதிக்கும் சிவபோதம் பொருந்தி; பொய்யடிமை...புகல்வாம் - பொய்யடிமையில்லாத புலவர் என்ற திருக்கூட்டத்திற் சேர்ந்த அடியார்களது செயலினைச் சொல்லப் புகுகின்றோம்.

(வி - ரை) ஆசிரியர் தமது மரபுப்படி இதுவரை கூறிப் போந்த சரிதத்தை வடித்து முடித்துக் காட்டி, இனி, மேற் கூறப்புகும் சரிதத்துக்குத் தோற்றுவாய் செய்கின்றார்.

காதற் பெருமைத் தொண்டு - பெருவிருப்பம் விளைத்தற்கேதுவாகிய பெருமையுடைய திருத்தொண்டு.

தொண்டின் நிலை - இந்நாயனார் திருத்தொண்டின் நிலைத்த தன்மைகள் முன் (3930 - 3935 - 3936) கூறப்பட்டன.

தொண்டின் நிலை(யில்)-காத்து - அளித்து - இறைவரது திருவடியே முடியாகக் கொண்டு அரசு செய்து என்ற சரிதப் பகுதி; "அவைதாங்கி - புரந்தார்" (3935).

கோதங் ககல முயல் - கோது - ஆணவமலக்குற்றம். "ஆழ்க தீயது; எல்லாம் அரனாமமே, சூழ்க - வையக முந்துயர் தீர்கவே" என்ற திருப்பாசுரம் காண்க.

களந்தைக் கூற்றனார் - "கூற்றன் களந்தைக்கோன்" (தொகை); "களப்பாளனாகிய கூற்றுவனே" (வகைநூல்); (களப்பாள் - களப்பாளன் - களந்தை முதல்வன்).

வணங்கிப் (அத்தினை கொண்டு) புகல்வாம் - என்க. அத்தினைகொண்டு குறிப்பெச்சம்.

நாதமறை - நாத உருவின் வெளிப்படுத்தப் பெற்ற மறை. சத்தவடிவம்.

தந்து அளித்தார் - தந்து உலகினைக் காத்த இறைவர். உலகமுய்ய வழிகாட்டி வேதங்களை அருளியவர்.

நடைநூற்பாவின் - நடை - பாக்களுக்கு விதித்த ஒழுங்கு. யாப்பு இயல். நடை - ஒழுக்கம் என்றலுமாம்.

போதம் - சிவபோதம் ; பாவினால் நவிலப் பெறுவதெல்லாம் இறைவன் புகழ்களேயாதல் வேண்டும் ; ஏனைப்பொருள் எவையும் பாடத்தக்கவையல்ல என்னும் அறிவு. "பொய்ம்மை யாளரைப் பாடாதே" (தேவா). "இறைவன் பொருள் சேர் புகழ் புரிந்தார்" (குறள்) என்றவிடத்து "இறைமைக் குணங்களிலராயினாரை உடையரெனக் கருதி அறிவிலார் கூறுகின்ற புகழ்கள் பொருள் சேராவாதலின், அவை முற்றவுமுடைய இறைவன் புகழே பொருள்சேர் புகழெனப்பட்டது" என்று ஆசிரியர் பரிமேலழகர் உரைத்தவை ஈண்டு நினைவு கூர்தற்பாலன.

பொய்யடிமையில்லாப் புலவர் - முதனூற் சொற்பொருள் ஆட்சி. (தொகை)

செயல் புகல்வாம் - தொகுதிப்பட்ட திருக்கூட்டத்து அடியார்களாதலின் சரிதவரலாறாகிய பகுதிகளன்றிச் செயற் பண்பு மட்டின் எடுத்து போற்றுவோம் என்பார் செயல் - என்றார். செயல் - செய்கையின்திறம் ; பண்பு, தன்மை என்ற பொருடந்து நின்றது. 8

சரிதச்சுருக்கம் :—கூற்றுவநாயனார் களந்தை என்னும் களப்பாள் என்கிற பதியில் வாழ்ந்தவர். கூற்றனார் - அவர் சிவபெருமானது திருநாமத்தினை நாடோறும் ஓதியும் சிவனடியார் பாதம் பணிந்தும் ஒழுகினார். அவ்வருளின் வலிமையாலே நால்வகைச் சேனையும் சிறக்கப்பெற்றுத் தம் தோள் வல்லமையால் பல போர்களிலும் பல அரசர்களையும் வென்று அவர்களது வளநாடுகளையெல்லாம் கவர்ந்து, மணிமுடி ஒன்றொழிய அரசர் திருவெல்லாமுடையாராய் விளங்கினார்.

மணிமுடி சூட்டிக்கொடுக்கும்படி அதனைச் சூட்டும் உரிமையுடைய தில்லைவாழந்தணர்களைக் கேட்டனர். அவர்கள் சோழர் குலமுதலோர்க்கன்றி முடி சூட்டமாட்டோம் என்று மறுத்துத், தம்மில் ஒரு குடியை மணிமுடியைக் காவல் செய்யும்படி வைத்து, இவராணைக்கு அஞ்சிச், சேரநாட்டுக்குச் சென்றுவிட்டனர்.

அதுகண்ட கூற்றனார் ஐயுறவுற்று "முடியாக உமது பாதம் பெறவே வேண்டு" மென்று பரவி, அந்தினைவுடன்றுயின்றனர். அன்றிரவு மன்றிலாடும் பெருங்கூத்தர் எழுந்தருளி, அவ்வாறே தமது திருவடிகளையே முடியாக அவருக்குச் சூட்டியருள, அவற்றைத் தாங்கி அவர் உலகினைத் தனியாட்சி புரிந்தனர்.

இறைவர் கோயில்களிலெல்லாம் உலகு வாழப் பூசை புரிவித்தனர். இவ்வாறு உம்பர் மகிழ நல்லரசாட்சி புரிந்திருந்து இறைவனடி சேர்ந்தனர்.

தலவிசேடம் :—(1) களந்தை - (களப்பாள்) இது சோழநாட்டில் திருத்துறைப்பூண்டிக்கு மேற்கே திருக்களரினின்றும் தென்மேற்கில் கற்சாலை வழி 2 நாழிகை யளவில் முள்ளியாற்றின் தென்கரையில் உள்ளது.

(2) தொண்டைநாட்டில் உள்ள பொன்விளைந்த களத்தூர் என்று கூறுவாருமுண்டு.

கற்பனை:—(1) அரனருளால் வரும் வலிமைபெற்றோர்களை யாரும் வெல்லுதல் அரிது.

(2) வளநாடு முதலிய அரசர் திரு எல்லாமிருந்தாலும் மணிமுடியின்றி ஆளுதல் அரசாட்சியின் நிறைவாகாது.

(3) அரசமுடியானது அதனைச் சூட்டுதற்குரிமையுடையோர்பாலே சூட்டப் பெறத்தக்கது.

(4) அரசமுடி சூட்டும் உரிமை பெற்ற பெரியார்கள், முன் வழிவழி மரபு வழக்கானன்றி வெறுந் தோள்வல்லமைபற்றி அஞ்சிப் பிறருக்கு அதனைச் சூட்ட உடன்படமாட்டார். அவ்வாறு செய்ய நேரின் அவ்விடம் விட்டகல்வர்.

(5) அன்பர்க்காகும் அரசமுடி அரன்றிருவடித் துணையாம்.

(6) அரன்கோயில்களில் எங்கும் தனித்தனியே உலகு விளங்கப்பெறும் பூசனை முறை யியற்றுவித்தல் அரசர்களின் முதற் கடமையாகும்.

(7) நல்ல அரசாட்சியினால் வானோரும் மகிழ்வடைகுவர்.

கூற்றுவ நாயனார் புராணம் முற்றும்.

உ
சிவமயம்

# சுந்தரமூர்த்தி நாயனார் துதி

தொகை

“ ஆரூரன் ஆரூரி லம்மானுக் காளே ”

—திருத்தொண்டத் தொகை (6)

வகை

“ கூற்றுக் கெவனோ புகறிரு வாரூரன் பொன்முடிமேல்
ஏற்றுத் தொடையலு மின்னடைக் காயு மிடுதருமக்
கோற்றொத்து கூனனுங் கூன்போய்க் குருடனும் கண்பெற்றமை
சாற்றித் திரியும் பழமொழி யாமித் தரணியிலே ”

—திருத்தொண்டர் திருவந்தாதி (48)

விரி

3938. தேனுங் குழலும் பிழைத்ததிரு மொழியாள் புலவி தீர்க்கமதி
தானும் பணியும் பகைதீர்க்குஞ் சடையார் தூது தருந்திருநாட்
கூனுங் குருடுந் தீர்த்தேவல் கோள்வார் குலவு மலர்ப்பாதம்
யானும் பரவித் தீர்க்கின்றே னேழு பிறப்பின் முடங்குகூன். ௬

தொகை :—நம்பி ஆரூரனாகிய நான் முன்கூறிய நாயன்மாருக் காளாவது மன்றித் திருவாரூரில் எழுந்தருளிய இறைவருக்கும் ஆளாயிருக்கின்றேன்.

அம்மானுக்கு - அம்மானுக்கும் என எச்சவும்மை விரிக்க. இத்திருப்பாட்டில் முன்கூறிய அடியார்களுக்குத் தனிதனியே ஆளாயிருப்பதன்றி அம்மானுக்குமென்க.

வகை:—திருவாரூரன்...இடுதரும் - நம்பியாரூரது பொன்முடிமேல் சூட்டப் பெறும் மாலையினையும், (அவர் உண்ணும்) இனிய அடைக்காயமுதினையும், கொண்டு கொடுக்கும்; அக்கோற்றொத்து...பெற்றமை - அந்தக் கோல் பிடித்த (நற்பணி செய்யப்பெற்ற) கூனனும் தனது கூன் நீங்கப்பெற்றுக் குருடனும் தனது கண் பெற்ற செய்தியை; சாற்றி...தரணியிலே - எடுத்துக் கூறித் துதித்து (அச்சார்பு பற்றித்) திரிகின்ற மக்கள் வாழ்கின்ற இவ்வுலகிலே; கூற்றுக்கு எவனோ புகல்? இயமனுக்கு என்ன புகலிடம் உள்ளது? (நம்பிகளைத் துதிக்கும் எம்மிடம் எங்குமில்லை).

கூற்று - இயமன்; எவனோ புகல் - புகல் - அடையும் இடம்; புகுமிடம். எவனோ - எங்கு எவ்விடத்து என்றலுமாம்; துதிக்கும் எம்மிடத்தில் இல்லை என்பது குறிப்பெச்சம். திரியும் - அச்சார்பு பற்றித் திரியும் அதனால்; ஏற்றுத் தொடையல் - ஏறச்செய்யும் தன்மையுடைய மாலை; ஏற்று - சூட்டும் நிலை; இன் அடைக்காய் - இனிய தாம்பூல வகை; இடுதரும் - கொண்டு கொடுக்கும் காரணத்தால் என்று காரணப் பொருளில் வந்தது; அ - அந்தப் பேறுபெற்ற; கோல் தொத்து - கோலைப்பிடித்து நடக்கும்; தொத்துதல் - செல்ல உதவுதற்காகச் சார்ந்து பற்றுதல்; அகரச்சுட்டினைக் குருடனும் என்பதுடனும் கூட்டுக; சாற்றித் திரியும் பழமொழியாம் - திரிதல் - விளங்கப் பலரும் அறியப் பேசி விளம்பரப்படுத்தல்; பழமொழியாம் - பழமொழி போல ஆயிற்று; பழமொழி - உலகறி பழஞ்சொல். கண்பெற்றமை - கண்பார்வை பெற்ற செய்தி பரவையார்பால் தூது தரும் திருநாளில் இது நிகழ்ந்ததென்பது விரிநூலுட் காணப்படும்.

விரி :—3938. (இ - ள்) தேனும்...தீர்க்க-தேனும் புல்லாங்குழலும் என்றி வற்றினை வென்ற இனிமையுடைய திருமொழியினையுடைய பரவையாரது ஊடலைத் தீர்க்கும் பொருட்டு ; மதி...தூதுதரும் திருநாள் - மதியும் பாம்பும் பகை தீர்க்க வைத்தற் கிடமாகிய சடையினையுடைய பெருமான் தூது தந்த திருநாளிலே ; கூனும்...மலர்ப்பாதம் - கூனனது கூனையும் குருடனது குருட்டுத் தன்மையினையும் தீர்த்துப் பணி கொள்வாராகிய நம்பியாரூரது விளக்கமிக்க மலர்போன்ற பாதங்களை ; யானும்...கூன் - யானும் துதித்து எழுவகைப் பிறப்பினும் உட்பட்டு முடங்கிக்கிடக்கும் தன்மையாகிய கூன்தன்மையினையும், அவற்றினுட் செலுத்தும் அறியாமையாகிய குருட்டுத் தன்மையினையும் தீர்த்துக் கொள்கின்றேன்.

(வி - ரை) தேனும்...மொழி - "குழலினிது யாழினி தென்ப" (குறள்) என்றவாறு மொழியின் இனிமைக்கு ஓசையால் இனிய குழலும், சுவையால் இனிய தேனும் உவமையாயின ; மொழியாள் - பரவையார் ; மொழியாளுடைய என ஆறனுருபு விரிக்க. பிழைத்த - வென்ற என்ற பொருளில் வந்தது.

புலவி தீர்க்கச் சடையார் தூதுதரும் திருநாள் - இவ்வரலாறு முன்னர் 3467-3528) உரைக்கப்பட்டது. மொழியாள் - சங்கிலியார் என்று கொண்டு அவர் காரணமாக வந்த புலவி என்றலுமாம். திரு - சிறந்த.

மதி...சடையார் - பகை (புலவி) தீர்த்தலே இவரது தொழிலாதலின் புலவி தீர்த்தற்குரியார் என்பது குறிப்பு. பணி - பாம்பு.

தூது தரும் - தூது செல்லுதலால் புலவி தீர்க்கும் தன்மையினைத் தந்த; தருதல் - ஈண்டு விளைத்தல் என்க.

திருநாள் - "திருவாரூர் ஒரு வீதியிலே சிவலோக முழுதுங் காண வுளதாம்" படி திருவுலாப் போந்து நடந்தமையால் அது திருவிழாச் சிறப்புடைய நாளாயிற்று என்பது.

கூனும்...கோள்வார் - இது இறைவர் தூது சென்றருளிய நாளில் நிகழ்ந்த தோர் அருட்செயல். இவ்வரலாறும் காரணமும், முன் வகைநூலுள் வகுக்கப்பட்டன; அது நிகழ்ந்த நாளும், பிறவும் ஈண்டு விரிநூலுள் விரிக்கப்பட்டன ; அஃதாவது இரண்டாம்முறை தூதுசென்று மீண்டு, இறைவர் "தாழ்குழல் செற்றம் தணிவித் தோம் ; நம்பி யினிப் போய் மற்றவ டன்பா லணுகென்ன" (3526) என்று அருளியபின், தேவாசிரிய மண்டபத்தினின்றும் நம்பிகள் பரவையாரது திருமாளிகையில் எழுந்தருளினர். அப்பொழுது, முன் துயிலுணர்ந்த பரிசனங்கள் அங்கங்கு நின்றும் வந்து மருங்கு மொய்த்தனர்; மாலை, தண்சாந்து, முதலியவற்றை ஏந்திப் பரிசனங்கள் செல்ல வேண்டிநின்றபோது அங்குக் குழுமிய பரிசனங்களுள் ஒரு கூனனும் குருடனும் ஏவப்பெற்றனர். அவ்விருவரும் தத்தமது உடற்குறையினால் ஏந்திச் செல்ல மாட்டாமையை விண்ணப்பிக்க, நம்பிகளது அருளினால் முறையே கூனும் குருடும் தீர்க்கப்பெற்று ஏவல் கொள்ளப்பெற்று உய்ந்தனர் என்பதாம். (3526 - 3530-3531 பார்க்க). திருக்கோயிலின் மருங்கிலும், மண்டபங்களிலும், கூன் குருடு முதலிய உடற் குறைபாடுடையோர் தங்கி, ஐயமேற்றுண்டு வாழும் வழக்கு இன்றும் உண்டாதலும் இங்கு நினைவுகூர்தற்பாலது. இவ்வாறன்றி, இவ்வரலாற்றைப் பரவையார் திருமாளிகையில் கூனன் ஒருவனும் குருடன் ஒருவனும் இருந்தனர் என்றும், அவர்கள் நம்பிகளுக்கு மாலையும் அடைக்காயும் கொடுத்து வந்தனர் என்றும், அவர்கள், புலவி தீர்க்க இறைவர் தூதுசென்ற அந்நாளில் கூனும் குருடும் நம்பிகளால் தீர்த்தருளப் பெற்றனர் என்றும் உரைத்தனர் முன் உரைகாரர்கள். பரவையாரது திருமாளிகை

யில் மாலை சாந்து அடைக்காயமுது முதலியவற்றை வனிதையவர்கள் சேரனுக்கும் நம்பிகளுக்கும் ஈந்தினர் (3824) என்பதறியப்படும். அன்றியும் கூனும் குருடனுமாக நம்பிகளுக்கு மாலை அடைக்காய் தந்தவரப் பரவையாரது திருமாளிகையின் அமைப்பு நிகழ்ந்தது என்பதும் பொருந்தாதாம். அது சரும் இருநாள் வரைக்கும் அவர்களது குறைகளை நீக்க நம்பிகள் அருளி ஏவல் கொள்ளாமைக்கும் காரணமும் புலப்படவில்லை ; திருநாட், கூனும் குருடும் தீர்த்து ஏவல் கொள்வார் என்றதனால் அன்றே அவர்கள் ஏவல் கொள்ளப்பட்டார் என்பதும் கருதவரும்.

கூனும் குருடும் தீர்த்து - இதற்கு, மேற்கூறியவாறன்றி, வழிதெரிந்து நடக்க உதவியாக இறைவர் தந்தருளிய ஊன்றுகோல் பிடித்தனுலாகிய கூனும், திருவொற்றியூரில் வந்த குருடும் ஆகிய இவற்றை முறையே திருக்கச்சியேகம்பத்திலும் திருவாரூரிலும் நீங்கப் பெற்று என்றும், ஏவல்கோள்வார் - மலர்ப்பாதம் தாமே வலிந்தாட்கொள்ளப் பெற்றவராகிய நம்பியாரூரது (கொள்வார் - வினையாலணையும் பெயர்) மலர்போன்ற பாதங்களை என்றும் உரைக்கும் குறிப்புடன் இருப்பதும் காண்க.

ஏழு பிறப்பின் முடங்கு கூன் - பிறப்பின் முடங்கும் கூன் என்றது எழுவகைப் பிறப்புக்களிலேயும் எல்லையற்ற முறை அவ்வக் கருப்பக் குழிகளிலே உடலம் வளைவுபட ஒடுங்கி முடங்கிக் கிடத்தல்

பிறப்பின் முடங்குகூன் தீர்க்கின்றேன் - என்றது எனது பிறப்பினை ஒழித்துக் கொள்கின்றேன் ; தீர்க்கின்றேன் என்று தன்வினையாகப் பொருள் கொள்க ; கூன் தீர்க்கின்றேன் என்றதனால் இனம் பற்றிக் குருடும் தீர்க்கின்றேன் என்பது இசையெச்சமாக வருவிக்கப்பட்டது. குருடாவது பிறவி நீக்கும் வழியறியாதபடி அறிவை மறைத்து நிற்கும் ஆணவப்படலம் ; "ஆணவ மான படலம்", "கண் இருள்" ; கூனும் குருடும் தீர்த்து ஏவல் கொண்டருளியதனைக் கண்டேனுதலால், அப் பாதங்கள் எனது பிறவிக்கூனையும் குருட்டினையும் தீர்க்கவல்லன என்று காட்சியளவையால் அறிந்து கொண்டமையால் பாவிப் பிறவியறுத் துய்வதானேன் என்றபடி. நம்பிகளது திருவடி வழிபாடு பிறவியறுக்க வல்லது என்பதாம். கூன் உடற்குறையினையும் குருடு உயிர்க்குறையினையும் காட்டின.

தேனும்...சடையார்-இதற்கு மேற்கூறியவாறன்றித், தேனுங் குழலும் பிழைத்த திருமொழியாள் என்பதற்கு உமையம்மையார் என்று பொருள்கொண்டு, அம்மையாரது புலவி தீர்க்க ஐயன் பணிந்தபோது முடியினின்ற மதியும் பிறவும் பணிந்து அதன்மூலம் புலவிதீர்க்கும் தன்மையினையுடைய சடையையுடையவர் என்று பிற்காலத் தான்றோர் அதிசயோத்தி முதலிய அணிச்சுவைகள் பலவும்பட இதனை விரித்துக் கற்பித்துக் கூறிய கருத்துப்பட (பிரபுலிங்க லீலை-அம்மை துதி) உரைத்தலுமாம். இவ்வாறுரைக்கும்போது பணியும் சடையார் - தீர்க்கும் சடையார் என்று தனித்தனி கூட்டுக. புலவி தீர்ப்பதில் எவ்வாற்றானும் வல்லவர் என்ற குறிப்பும் காண்க.

துழைத்த திரு—என்பதும் பாடம். 9

## 6. வார்கொண்ட வனமுலையாள் சருக்கம் முற்றிற்று.

சேக்கிழார் பெருமான் சேவடி வாழ்க.

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

எட்டாவது

# பொய்யடிமையில்லாத புலவர் சருக்கம்



திருச்சிற்றம்பலம்

" பொய்யடிமை யில்லாத புலவர்க்கு மடியேன்
பொழிற்கருவூர்த் துஞ்சிய புகழ்ச்சோழர்க் கடியேன்
மெய்யடியா னரசிங்க முனையரையர்க் கடியேன்
விரிதிரைசூழ் கடனாகை யதிபத்தர்க் கடியேன்
கைதடிந்த வரிசிலையான் கலிக்கம்பன் கலியன்
கழற்சத்தி வரிஞ்சையர்கோ னடியார்க்கு மடியேன்
ஐயடிகள் காடவர்கோ னடியார்க்கு மடியேன்
ஆரூர னாரூரி லம்மானுக் காளே "

(திருத்தொண்டத் தொகை - 7)

திருச்சிற்றம்பலம்

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# 40. பொய்யடிமையில்லாத புலவர் புராணம்

தொகை

“ பொய்யடிமை யில்லாத புலவர்க்கு மடியேன் ”

—திருத்தொண்டத் தொகை - (7)

வகை

“ தாரணியிற் பொய்மை யிலாத்தமிழ்ச் சங்க மதிற்கபிலர்
பரணர்நக் கீரர் முதலாய்நாற் பத்தொன் பதுபல் புலவோர்
அருணமக் கீயுந் திருவால வாயரன் சேவடிக்கே
பொருளமைத் தின்பக் கவிபல பாடும் புலவர்களே ”

—திருத்தொண்டர் திருவந்தாதி - 49

விரி

3939. “செய்யுணிகழ் சொற்றெளிவுஞ் செவ்வியநூல் பலநோக்கும்
மெய்யுணர்வின் பயனிதுவே” யெனத்துணிந்து விளங்கியொளிர்
மையணியுங் கண்டத்தார் மலரடிக்கே யாளானார்
பொய்யடிமை யில்லாத புலவரெனப் புகழ்மிக்கார். க

சருக்கம் :—இனி, நிறுத்த முறையானே, எட்டாவதாகத் திருத்தொண்டத் தொகையினுள் “ பொய்யடிமையில்லாத புலவர் ” என்று தொடங்கும் திருப்பாட்டிற் றுதிக்கப்படும் அடியார்களது பண்பு கூறும்பகுதி ; அவராவார் பொய்யடிமை யில்லாத புலவர், புகழ்ச்சோழர், நரசிங்க முனையரையர், அதிபத்தர், கலிக்கம்பர், கலியர், சத்தியார், ஐயடிகள் காடவர்கோன் என்னும் எண்மராவார்.

புராணம் :—அவருள், நிறுத்த முறையானே, முதலாவதாகப் பொய்யடிமை யில்லாத புலவர் பண்பு கூறத்தொடங்குகின்றார். பொய்யடிமையில்லாத புலவர் என்ற கூட்டத்தார்களது பண்பு கூறும் பகுதி ; திருக்கூட்டத்தவர்களாதலின் சரித வரலாறு கூறுதற்கில்லையின்மையுணர்க. இவர்கள் பண்பினால் மட்டும் அறியப்படுவர். தில்லை வாழ்ந்தணர், பத்தராய்ப் பணிவார் முதலியவர் புராணங்கள் பார்க்க.

தொகை :—பொய்யடிமையில்லாத புலவர் என்று கூறப்படும் திருக்கூட்டத்தினைச் சேர்ந்த அடியார்களுக்கு நான் அடியேனாவேன். புலவர் - பலபேர் என்பது.

வகை :—தரணியில்...சங்கமதில் - உலகில் பொய்மையில்லாத தமிழ்ச்சங்கத்தில் இருந்த ; கபிலர்...புலவோர் - கபிலர், பரணர், கீரர் முதலாகிய நாற்பத்தொன்பது என்று தொகுத்துக் கூறப்பட்ட தொகுதியில் பல புலவோர்கள் ; அருள் நமக்கு...புலவர்களே - நமக்கு அருள் புரிகின்ற திருவாலவாயிறைவரது சேவடிக்கே சாரும் பொருளை அமைத்து இன்பமயமாகிய பல கவிகளைப் பாடும் புலவர்களாவார்.

பொய்மையிலாப் - புலவோர் என்று கூட்டுக. தமிழ்ச்சங்கம் - கடைச்சங்கம்; நாற்பத்தோன்பது - கடைச் சங்கப் புலவர் கூட்டத்தில் நாற்பத்தொன்பது புலவோர்க்குரிய ஆசனங்கள் - இடங்கள் (Seat) வகுக்கப்பட்டிருந்தன என்றும், அவை அவ்வப்போது குறைவுபடின் தக்கவர்களால் நிறைவாக்கப்படும் என்றும் அறிகின்றோம். "இனிக் கடைச்சங்கத்திருந்து தமிழ் ஆராய்ந்தார் - சிறுமேதாவியரும்...நக்கீரருமென இத்தொடக்கத்தார் நாற்பத்தோன்பதின்மரென்ப; அவருள்ளிட்டு நானூற்று நாற்பத்தோன்பதின்மர் பாடினரென்ப ;...அவர் சங்க மிருந்து தமிழாராய்ந்தது ஆயிரத் தெண்ணூற் றைம்பதிற்றியாண்டென்ப..." என வரும் இறையனாரகப் பொருளுரை வரலாறுகள் ஈண்டு நினைவு கூர்தற்பாலன ; பல்புலவோர் - தமிழ்ச் சங்கத்தில் இருந்து தமிழாராய்ந்தார் பலப்பலராக ; அவருட் பாடினரும் பலராக ; அவருள்ளே சிறந்த பலரே ஆலவாயரன் சேவடிக்கே பொருளமைத்துக் கவிபாடுவாராயினர் ; ஈண்டுப் பொய்யடிமையில்லாப் புலவர் எனப் போற்றப்பட்டோர் இவர்களே என்று வரையறை செய்தவாறு ; எனவே திருத்தொண்டத் தொகையுட் போந்த இத்தொகையடியாராகிய புலவோர், தமிழ்ச் சங்கத்தார் எல்லாருமல்லர்; பின் அவருள் தமிழாராய்ந்தோர் எல்லாருமல்லர் ; பின் அவருள்ளே பாடினோர் எல்லாருமல்லர் ; பாடினோருள் அரன் சேவடிக்கே கவிபாடும் அவர்களேயாவர் என்பதாம். கபிலர் - பரணர் - நக்கீரர் - என்பவர் எடுத்துக்காட்டாகக் கூறப்பட்டனர். முதல் - என்பது ஆதியாக என்றபடியாம். உதாரண முகத்தாற் கூறப்பட்டனராதலின் விரிநூலுள் இவர்களைப் பற்றி விரித்தற்கியையில்லை என்பதாம். இவருள் நக்கீரர் பாடியனவாகப் பத்து நூல்கள் பதினொராந் திருமுறையுள் தொகுக்கப்பட்டுள்ளன. அவையாவும் அரன் சேவடிக்கே பொருளமைத்துப் பாடியனவாதல் காண்க. இவற்றுள் திருமுருகாற்றுப்படை ஒழித்தொழிந்த ஒன்பது நூல்கள்பாடினோரும், பதினொராந் திருமுறையுள் தொகுக்கப்பட்ட கபில தேவாது நூல்கள் மூன்றும், பரணதேவாது நூல் ஒன்றுமாகிய இவற்றைப் பாடினோரும் கடைச் சங்கப் புலவர்களோ ? அன்றி, அப்பெயர் பூண்ட பிற்காலப் புலவர்களோ என்று நவீன ஆராய்ச்சி முறையில் ஐயங்கொள்வோருமுளர் ; கடைச்சங்கம் பன்னூறாண்டுகள் நிகழ்ந்ததென்பதும், சங்க மிரீஇயினர் பாண்டியர்களும் பலர் என்பதும், புலவர்களும் பலப்பல வேறு திறத்தினர் என்பதும், பிறவும் மறுக்கலாகாத நிலையில் சரித வரலாற்றானறியப்படும் உண்மைகள் ; கடைச் சங்கம் 1850 ஆண்டுகள் நிகழ்ந்தது என்றும், "அவர்களைச் சங்கமிரீயினர், கடல்கொள்ளப்பட்டுப் போந்திருந்த முடத்திருமாறன் முதலாக உக்கிரப் பெருவழுதியீறாக நாற்பத்தொன்பதின்மரென்ப. அவர் சங்கமிருந்து தமிழாராய்ந்தது உத்தர மதுரையென்ப..." என்றும் இறையனாரகப் பொருளுரை கூறும்; எனவே கடைச் சங்கப்புலவருட் பாடினோர் (449பேர் எல்லாக் காலத்தும் கூடிய பேர்களோ? அன்றி, சங்கப்புலவர் என்ற தொகுதியில் ஒரு காலத்திருந்த 49 பேர்களோ?) அனைவரும் சிவனடியார்கள் என இங்குப் போற்றப்பட்டோராதல் வேண்டுமென்ற ஐயம் எழுதற்கிடமில்லை. எனவே அவ்வையம் பற்றிய பூசல்களும் விளைதற்கிடமில்லை. நீண்டகால அளவும் பெருங்கூட்டமுமாக நிகழ்தலில், தமிழ்

இயல்பு பற்றிய ஆராய்ச்சியான் எழும் கலாமும் நிகழ இடமில்லை; அவருட் சிவனைப்பாடினோரே இப்புலவர் என்று வரையறுத்தமையால் சங்கப் புலவரென்போர் பலரும் பாடியனவாகக் கிடைக்கும் பற்பலவேறு சமயத் திறம்படவரும் பாட்டுக்களின் பொருள் பற்றி எழும் பூசலும் நிகழ இடமில்லை. திருவாலவா யான் சேவடிக்கே - கவி-பாடும் - சங்கமிருந்து தமிழாராய்ந்துபாடிய இடம் (உத்தர)மதுரையாதலானும், அவர் தலைச் சங்கத்துத் தலைப்புலவனாராதலாலும் ஆலவாயுடைய அவரைப்பாடும் என்றார். சேவடிக்கே - புலவர்களே - ஏகாரங்கள் பிரிநிலை; இதனை மலரடிக்கே (3939); "சடையார் தமையல்லாற் சொற்பதங்கள் வாய்திறவா" (3940); "மெய்யடிமை யுடையாராம் பெரும்புலவர்" (3939) என்று விரிநூலுள் விரித்தமை காண்க; சேவடிக்கே...பாடும் - இவ்வியல்புகளுள், பொருளமைந்து இன்பக் கவிபாடும் என்பது "செய்யுணிகழ்" (3939) என்ற திருப்பாட்டிலும், சேவடிக்கே - பாடும் என்பது "பொற்பமைந்த" (3940) என்ற திருப்பாட்டிலும் விரிநூல் விரித்துரைப்பது காண்க. இன்பக்கவி - பேரின்பமாகிய வீடுபேறளிக்கும் கவி, சிவன் புகழ்பாடுதலால். புலவர் - புலம் - பேரறிவு.

[குறிப்பு:—49 பேர் புலவர்கொண்ட சங்கமதில் சிவனையேபாடிய புலவர்களைப் பற்றிய இப்பாட்டு திருவந்தாதியில் 49வது பாட்டாக வருதல் திருவருட்குறிப்பாம்.]

விரி :—3939. (இ - ள்) செய்யுணிகழ்...துணிந்து - செய்யுள்களாக நிகழ வரும் சொற்களைத் தெளிதலையும், செம்மைதரும் பயனுடைய நூல்கள் பலவற்றை நோக்குதலையும் மெய்த்தவாறு உணர்கின்ற உணர்ச்சியின் பயனாவது இதுவேயாகும் என்று துணிந்து; விளங்கி...ஆளானார் - விளங்கி ஒளி வீசுகின்ற விடத்தினை அணிகின்ற கண்டத்தினை உடைய இறைவரது மலர்போன்ற திருவடிக்கே ஆளானவர்களே; பொய்யடிமையில்லாத......மிக்கார் - பொய்யடிமையில்லாத புலவர் என்ற புகழான் மிகுந்தவர்கள்.

(வி - ரை) செய்யுணிகழ் சொற்றெளிவும் என்றதனால் சொல்லும், செவ்விய நூல்பல நோக்கும் - என்றதனால் பொருளும் உணர்த்தப்பட்டன; முன்னதில் எழுத்தும் சொல்லும் யாப்பும், அணியும் ஆகிய நான்கும், பின்னதில் பொருள் என்னும் பொருளிலக்கணம் ஒன்றுமாக தமிழிலக்கணமைந்தும் பெறப்பட்டமையும் காண்க. "உரையின் வரையும் பொருளி னளவும், இருவகைப்பட்ட எல்லை" (பட்டினத்தடிகள்).

செய்யுள் - செய்யப்படுவது; "பல சொல்லாற் பொருட் கிடனாக வல்லோ ரணிபெறச் செய்வன செய்யுள்"; இவற்றினியல்பெல்லாம் தொல்காப்பியம் செய்யுளியல், யாப்பருங்கலம் முதலியவற்றுட் காண்க.

செய்யுள் நிகழ் சொல் தெளிவு - நிகழ்தல் - விளங்க நிலைத்தல்; சொல் தெளிதலாவது இடம் காலம் முதலிய பொருள் முதலியவற்றுக்கேற்ற சொற்களைத் தெளிந்து கொள்ளுதல்; இதனாற் சொல்லிலக்கணமும் எழுத்திலக்கணமும் வரையறை படத் தேர்தல் அடக்கியவாறு.

செவ்வியநூல் பலநோக்கும் - செவ்விய - செம்மை தரவல்ல; இதனால் விழுமியபொருளிலக்கண வரம்பும், அதனுள் சிறந்த இறைவன் புகழ்பாடும் நிலையும் கொள்ளப்பட்டன; நோக்குதல் ஊன்றிய கருத்தானுணர்தல்; இதனாற் பொருணூல் வகை கூறப்பட்டது; "பொருளமைந்த" என்பது வழிநூல்.

மெய்யுணர்வின் பயன் - தெளிவும் நோக்கும் மெய்யாக உணரும் உணர்வின் பயன்.

பயன் இதுவே - கண்டத்தார் மலரடிக்கே யாளாகுந் தன்மை பெறுதலே பயன் ; ஏகாரம் பிரிநிலை ; "வாயி ருந்தமி ழேபடித் தாளுறு, வாயி ரஞ்சம ணும்" (அரசு, பழையாறை - வடதளி) என்றபடி தமிழ் படித்தும் ஆட்படாத நிலையன்றித் தமிழ்பாடுதல் இறைவன் புகழ்பாடுதற்கேயாம் என்று துணிதல். "தமிழ்கற்போர்" - "ஞானத்தமிழ்" ; "தமிழ்நாதன்" என்பன வாதியாக வருவன இக்கருத்துடையன.

விளங்கி ஒளிர் கண்டத்தார் - என்க. விளக்கமாவது செம்மேனியி னடுவிற் கருமணி பதித்தாற்போல மேல் விளங்கிக் காணப்படுதல் ; ஒளிர்தல் - சிவனது எல்லாம் வல்ல தன்மையும் பேருளுடைமையும் உணர்ந்து உயிர்கள் அடைந்துய்யக் காட்டி நிற்றல்.

மலரடிக்கே - ஏகாரம் பிரிநிலை. மேற்பாட்டிலும் "புரிசடையார் தமையல்லால்" என்பது காண்க ; "அரன் சேவடிக்கே" என்பது வழிநூல்.

ஆளானார் - புகழ்மிக்கார் - எனப் பெயர்ப் பயனிலையாக முடிக்க.

பயனிதுவே - மலரடிக்கே ஆளாம் தன்மையினால் வீடுபேறு பெறுதல் ; "எழுத்தறியத் தீரு மிழிதகைமை தீர்ந்தான், மொழித்திறத்தின் முட்டறுப்பா னாகும்— மொழித்திறத்தின், முட்டறுத்த நல்லோன் முதனூற் பொருளுணர்ந்து, கட்டறுத்து வீடு பெறும்" என்றது ஈண்டு வைத்துணர்தற்பாலது. ஐவகை யிலக்கணமும் கற்றுப், பாடுந்தன்மை வல்ல புலவர் பொய்யடிமையில்லாராய் இறைவருக்கு ஆளாகி அடிமைத் திறம்படப் பாடுதலே பயனுக் கொள்வர் என்பது.

பொய்யடிமை யில்லாத - பொயி - பொய்ப் பொருள் ; பொய்யடிமை - பொயினுக்கு அடிமை என்று நான்கனுருபு விரிக்க ; மேற்பாட்டில் "மெய்யடிமை" (3940) என்ற விடத்தும் இவ்வாறே மெய்யினுக்கு அடிமை என்க ; பொய்யாவன அசத்தாகிய உலகம் பாசம்.

பொய்யடிமை யில்லாத - என்று எதிர்மறை முகத்தாற் கூறியது உறுதிபயத்தற்கு ! இதனை உடம்பாட்டு முகத்தால் "மெய்யடிமை யுடையார்" என மேல் வரும் பாட்டில் இவர்தம் பெற்றிமையினை விளக்கி யருளினார் ; பொய்க்கு அடிமை யில்லாதாராயின், பின் எப்பெற்றியில் யாருக்கு அடிமையாவார் எனின், அதனை விளக்க எழுந்தது மேல்வரும் பாட்டு.

பயில்நோக்கும்—புலமிக்கார்—என்பனவும் பாடங்கள். 1

3940. பொற்பமைந்த வரவாரும் புரிசடையார் தமையல்லாற்
சொற்பதங்கள் வாய்திறவாத் தொண்டுநெறி தலைநின்ற
பெற்றியினின் மெய்யடிமை யுடையாராம் பெரும்புலவர்
மற்றவர்தம் பெருமையா ரறிந்துரைக்க வல்லார்கள் ? உ

(இ - ள்) பொற்பமைந்த...அல்லாமல் - அழகினையுடைய பாம்புகளை அணிந்த புரிசடையினை உடைய சிவபெருமானை யல்லாமல் (பிறரைப் பற்றி) ; சொற்பதங்கள்...பெற்றியினின் - சொற்பொருள்களைச் சொல்லாத தன்மையிற் றிருத்தொண்டின் நெறியினில் முதன்மை பெற்ற பண்பினாலே ; மெய்யடிமை...புலவர் - மெய்யடிமை யுடையாராகும் பெரும் புலவர்களாவார் இவர்கள் ; மற்றவர்தம்... வல்லார்கள் - மற்று அவர்களுடைய பெருமையினை அறிந்து உரைக்க வல்லார்கள் யாவர் ? (ஒருவருமிலர்).

(வி - ரை) மெய்யடிமை யுடையாராம் - புலவராம் பொதுவியல்பினைப்பற்றி முன்பாட்டிலும், பொய்யடிமையில்லாதாராகும் சிறப்பியல்பினைப் பற்றி இப்பாட்டி

னும் கூறினர். அவர்கள் திருத்தொண்டத் தொகையினுள் போற்றப்படுதற் கேதுவும் உடன்கூறியவாறு.

போற்பமைந்த சடையார் - அரவாரும் சடையார் - புரிசடையார் எனத் தனித்தனி கூட்டுக.

தமையல்லால் - வாயி திறவா - தம்மையே சொல்கின்ற; எதிர்மறையாற் கூறியது உறுதி பயத்தற் பொருட்டு; சொற்பதங்கள் - சொற்பொருள்கள்; வாயிறத்தல் - பாடுதல், பேசுதல்.

தமையல்லால் வாய்திறவாத் தொண்டுநெறி - சடையாரைப் பாடும் தொண்டு; பாடுதல் வாயிலாகச் செய்யும் தொண்டின் நெறி; பாடுதல் பற்றியன்றி அதனால் வரும் அடிமைத் திறமே இங்குக் கருதப்படுமென்பார் தொண்டுநெறி தலைநின்ற என்று அதனை வற்புறுத்தினர்.

தலை நிற்றல் - ஒருசொல்; சிறத்தல். பேற்றி - நற்பண்பு; தன்மை.

மெய்யடிமை யுடையாராம்-பொய்யடிமை யில்லாதாராய் நிற்றலேயன்றி மெய்யடிமையுடையாராயும் நின்ற என்க.

யார் வல்லார்கள் - ஒருவருமிலர் என்று, வினா எதிர்மறை குறித்தது; மற்று - முன்கூறியபடி எதிர்மறை உடன்பாடு என்ற இருவகையா லறிந்துரைப்பதன்றி வேறு வகையால் என்ற பொருள் தந்து நின்றது.

குறிப்பு: பொய்யடிமை இல்லாத புலவர் யார்? என்ற இதுபற்றிய ஆராய்ச்சி இந்நாளில் பலரை அலைத்து வருகின்றது. முதனூலாகிய திருத்தொண்டத் தொகையிலும், சார்புநூலாகிய புராணத்திலும் அவர்கள் இயற்பெயர் கூறப்படவில்லை. வழிநூலாகிய திருத்தொண்டர் திருவந்தாதியில் அவர்கள் நாற்பத்தொன்பது பல்புலவோர் என்றும், கபிலர், பரணர், நக்கீரர் முதலாக வரும் சங்கப்புலவர்கள் என்றும் கூறப்பட்டுள்ளது; இதுகொண்டு இந்நாள் ஆராய்ச்சி யுலகம், தத்தமக்கேற்றபடி, பலவாறும் ஆய்ந்து அலைகின்றதும், அலைக்கின்றதுமாயிற்று; இப்புலவர் ஒரு கூட்டத்தவரோ அன்றி ஒருவரோ என்று ஐயப்படுவாரும், ஒருவர்தான் என்று துணிவாரும், அவர் மாணிக்கவாசகர் என்று முடிபாருமாயினர்கள் சில ஆராய்ச்சியாளர். இவ்வாராய்ச்சிக் கூற்றுக்களின் பிறழ்வுகளையும், குற்றங்களையும், அபசாரங்களையும் பற்றிச் சில கருத்துக்கள் இங்குக் காட்டவேண்டிய தவசியமாகின்றது.

நூல் என்பது "நூல் போறலின் நூலென்ப" (போறல் - போலிருத்தல்) பாவைபோல்வாளைப் பாவை என்றதுபோல; நூல்போறலென்பது - நுண்ணிய பலவாய பஞ்சின் நுனிகளாற் கைவன்மகடூஉத் தனது செயற் கை நலந் தோன்ற ஒரிழைப் படுத்தலாம் உலகத்தது நூனூற்ற லென்பது; அவ்வாறே சுவிர்ந்து பரந்த சொற்பாவைகளாற் பெரும்புலவன் தனது உணர்வு மாட்சியிற் பிண்டம் படலம் ஒத்துச் சூத்திரமென்னும் யாப்புநடை படக் கோத்தலாயிற்று. நூல் செய்தலாவது அவ்வாறு நூற்கப்படுதலின் நூலெனப்பட்டது; இனி, ஒரு சாரார் நூல்போலச் செப்பஞ் செய்தலின் நூலென்ப; இனித் தந்திரம் என்று வடமொழிப்பொருளை நூலென வழங்குதல் தமிழ் வழக்கெனக் கொள்க" என்பது இறையனாரகப்பொருளுரை; "பஞ்சதன் சொல்லாப் பனுவ லிழையாகச், செஞ்சொற் புலவனே சேயிழையா—வெஞ்சாத, கையேவா யாகக் கதிரே மதியாக, மையிலா நூன்முடியுமாறு".

இனி, இந்நூல் முதல் வழி சார்பு என மூன்று வகைப்படும்; "முதல்வழி சார்பென நூன்மூன் றாகும்"; அவற்றுள் முதனூலாவது வரம்பி லறிவன் பயந்த

தாகும். என்னை ? " வினையி னீங்கி விளங்கிய வறிவின், முனைவன் கண்டது முதனூ லாகும்" எனவும், " முதல்வ னூற்குப் பிறன்கோட் கூறாது " எனவும், " தந்திரஞ் சூத்திரம் விருத்தி மூன்றிற்கு, முந்துநூ லில்லாது முதனூ லாகும்" எனவுஞ் சொன்னாராகலின் ; இனி அந்நூலொடு ஒத்த மரபிற்றாகி ஆசிரியமத விகற்பம் படக் கிடப்பது வழிநூலெனப்படும் ; " என்னை ?" முன்னோர் நூலின் முடிபொருங் கொத்துப், பின்னோன் வேண்டுங் விகற்பங் கூறி, யழியா மரபினது வழிநூ லாகும் " என்றாராகலின் ; இவ்விருவர் நூலுள்ளும் ஒரு வழி முடிந்த பொருளை ஒருபகார நோக்கி ஒரு கோவைப் படவைப்பது சார்பு நூலாகும் ; என்னை ? " இருவர் நூற்கு மொருசிறை தொடங்கித், திரிபுவே றுடையது புடைநூலாகும் " என்றாராகலின் ; புடைநூல் - சார்புநூல் ; ஒரு கிழங்கினின் ஒருபுறம் புடைத்து வெளிப்பட்டுவரும் அதன் கன்று போல " என்பது (இறையனாகப் பொருளுரை).

இவ்வகையாலே திருத்தொண்டத் தொகையும், திருத்தொண்டர் திருவந்தாதியும், திருத்தொண்டர் புராணமும் முறையே முதல்-வழி-சார்பு நூல்கள் என வழக்கப்படும். இவ்வழக்கு " மற்றி தற்குப் பதிகம்வன் றொண்டர்தாம், புற்றி டத்தெம் புராண னருளினாற், சொற்ற மெய்த்திருத் தொண்டத் தொகை யெனப், பெற்ற நற்பதி கந்தொழப் பெற்றதால் (48) "அந்த மெய்ப்பதி கத்தடி யார்களை, நந்தநாதனு நம்பியாண்டார் நம்பி, புந்தி யாரப் புகன்ற வகையினால், வந்த வாறு வழாம லியம்புவாம் " (49) என்று ஆசிரியர் உரைத்தவாற்றால் வழங்கப்படுவதாயிற்று.

இங்குப் " பொய்யடிமை யில்லாத புலவர் " என்று தொகைநூலுட் குறித்த அடியார்களாவார், வழிநூலுட் காட்டியபடி சங்கத்தாருட் சிவனையே பாடிய பல் புலவோரா? அன்றி வேறு ? என்பது வினா. வேறென்று கொண்டு, ஆராய்வோர் சார்புநூலுள் ஆசிரியர் தமிழ்ச்சங்கத்தையேனும், புலவர் பெயரையேனும் கூறாமையால் வழிநூலார் கூற்று ஆசிரியர்க்கு உடம்பாடில்லை என்பர்.

முதல்-வழி-சார்பு என்ற பாகுபாடு இம்மூன்று ஞானநூல்களுக்கும் வழங்குதல் ஒருசார்பு ஒப்புமை பற்றியேயாம் ; உலகியல் வழக்கினுள் வைத்து ஒருமுறையால் உணர்ந்துகொள்ளுதற் பொருட்டே இங்ஙனம் வழங்குவதென்பது. என்னை ? இம் மூன்றாசிரியர்களும் பதிபுண்ணியப் பெருவாழ்வுடையாராய், மல நீங்கிய சீவன் முத்தராய், வினையினீங்கி விளங்கிய அறிவின் முனைவனார் இவர்களது திருவாக்கினைத் தமது திருவாக்குக்கு ஒப்ப விளங்குதல்பெறு மிடமாகக்கொண்டு வீற்றிருக்கும் பண்பு வாய்ந்தவர்களாய் நிற்கும் திறம்பற்றி என்க. நம்பியாரூரருக்குத் "திருவாரூர்ப் பெருமான் மன்னுசீர் அடியார் தங்கள் வழித்தொண்டை யுணர நல்கி...அவர்கள் பெருமையை அருளிச்செய்து-அவர்களைப் பாடுக" என்றருளித் "தில்லைவாழந்தணர் தம்மடியார்க்கு மடியேன் " என்று அடியுமெடுத்துக் கொடுத்தருள, அவ்வருளுருவாய் நின்று நம்பிகள் பாடியருளியது முதனூலாகிய திருத்தொண்டத் தொகையாம் ; இனி, "என்னை நினைந்தடிமை கொண்டென் னிடர்கெடுத்துத், தன்னை நினையத் தருகின்றான்"என்றபடி திருநாரையூர்ப்பொல்லாப்பிள்ளையாரும், "வழிமொழி தந்தெனை வாழ்வித்தவன் " (திருவந் - 68) என்றபடி ஆளுடைய பிள்ளையாரும் அருளப் பெற்று அறுபத்து மூவர்களது பதி-தே-மரபு-செயல்-பன்ன, அவ்விநாயகர்பா லருள் பெற்று முதனூலின் வழியினையே பற்றி நம்பியாண்டார் நம்பிகளா லருளப்பெற்ற நூலாதலின் திருத்தொண்டர் திருவந்தாதி வழிநூல் எனப்படும்; இனி, "வெருளின் மெய்ம்மொழி வானிழல் கூறிய பொருள் " (9) என்றபடி தில்லையில் நடராசப் பெருமான் " உலகெலாம் " என்று அடியெடுத்துக் கொடுத்தருளப் பெற்று முன் கூறிய முதனூல் வழிநூல்களின் வழியே சேக்கிழார் பெருமானால் பாடியருளப்

பெற்றது திருத்தொண்டர் புராணமாதலின் ஒருவகையால் அது சார்புநூல் எனப்படும். எனவே இவை மூன்றும் சிவனருள் முழுதும் கைதர ஏற்றபடி வெளிப்பட்டவை என்பது வெளிப்படை. இவ்வாறாகலின் முன்கூறிய முதல் - வழி - சார்பு நூல்களின் இலக்கணப் பாகுபாடுகளும், பின்னோன் வேண்டும் விகற்பம் - ஆசிரிய மதவிகற்பம் - இருவர் நூற்குமொரு சிறைதொடங்கித் திரிபு வேறுடையது - என்று தம்முள் வரும் மாறுபாடுகளும் இவைகட் கேலாதன என்பது வெள்ளிடை மலை; அவ்வாறு மாறுபடின் பதிப்பொருள் தானே ஒன்றைப் பற்றித் தம்முள் மாறுபட்ட பல வாக்கியங்களை வெளிப்படுத்தும் என்ன வரும்; வந்து பதியிலக்கணத்துடன் மாறுபடுமாதலின்.

இனி, இம்மூன்றும் தம்முள் மாறுபடாமை முன்னர் உரை கூறியவிடத்துக் காட்டப்பட்டதும் சடைபிடிக்க.

இனி, இவ்விலக்கண அளவைச் சூத்திரங்களின் படியே வைத்துப் பார்க்கினும், முதல்-வழி-சார்புநூல்களின் பிரமாணவலி ஏறயும் வலியின்மையும் கருதின், வழிநூல் சார்பு நூலினும் வலியுடைத்தாதலின் வழிநூலாசிரியர் நம்பியாண்டார் வாக்கு வலிமை பெற்று, அதன்முன்னர் அதனின்மாறுபட்டு உடன்படாராகிக் காணப்படும் சார்பு நூலாகிய சேக்கிழார் வாக்கு வலியிலராகப் ஒதுக்கப்படவேண்டி வரும் இழுக்குப்பட வைப்பது இந்த ஆராய்ச்சியாளர் கூற்றுமென்பது காண்க. அம்மட்டோ? “ நங்க ளுடைய நம்பியாண்டார் நம்பி, புகப் பரவ புகழ வகையினுல் வந்தவாறு வழாம வியம்புவாம் ” என்று கூறிய சேக்கிழார் திருவாக்கும் பொய்போயிற் றென்ன வேண்டிவரும் இழுக்குமுண்டாகும். அம்மட்டோ? வழிநூலாசிரியராகிய நம்பியாண்டார் திருவாக்குடன் மாறுபட்ட சார்புநூலுடையாராகிய சேக்கிழார், அவ்வாறு தாம்கொண்ட மாறுபாட்டினை உலகறியக் கூறாது, பொய்யடிமையில்லாத புலவர்கள் சங்கப்புலவருள் சிவனையே பாடுவோ ரல்லாவிடிற், பின்னையாவர்? என்பதை விரித்துரைக்காது மறைத்துப்பொதுப்படக்கூறிப்போந்து உலகை வஞ்சித்தார் என்னவும் வேண்டி வந்த பேரிழுக்காய் முடியும்? அம்மட்டோ? முதனூற் கருத்தை உணராது, நம்பியாண்டார் நம்பிகள், இப்புலவர் சங்கப்புலவருட் சிவனையே பாடுவோர் என்று பிறழக் கூறினர் என்றும் அதனைத் திரிவுகாட்டி ஒருவாமை வைத்தமையால் அதற்கு எதிர்நூல் செய்தார் எனவும் வந்து இன்னும் பேரிழுக்காய் முடியும்; எதிர்நூலாவது ‘எதிர்நூல் என்பதொன்றுண்டு; அது யாதோ? வெனின் முதனூலின் முடிந்த பொருளை ஓராசிரியன் யாதானும் ஒரு காரணத்தாற் பிறழ வைத்தால் அதனைக் கருவியாற் றிரிவு காட்டி ஒருவாமை வைத்தற்கு ஒள்ளியான் ஒரு புலவனால் உரைக்கப்படுவது; என்னை? “ தன்கோ ணிறீஇப் பிறன்கோண் மறுப்ப, தெதிர்நூலென்ப ரொருசா ரோரே ” என்றாராதலின்; (இறையனாரகப் பொருளுரை.)

இனி, இப்புராணத்தினுள்வழிநூலார்உரைத்த சங்கம்பற்றியேனும், உதாரணங் காட்டிய புலவரைப் பற்றியேனும் ஒன்றும் சேக்கிழார் பெருமான் கூறிற்றிலர் என்பதொரு கேள்வி பிறக்கின்றது. தில்லைவாழந்தணர், பத்தராய்ப் பணிவார் முதலாகிய தொகை யடியார் புராணங்களெல்லாவற்றினும் ஆசிரியர் சரிதவரலாறு பற்றியன்றிப், பண்பு பற்றியே உரைத்துப் போகும் மரபு கொண்டவர் என்பது கருதப்படவேண்டும். தொகையடியார்கள் பண்பு பற்றியே உணரப்படுவர் என்ற நிலையும் காண்க.

இனி, இந்த ஆராய்ச்சியாளர்தாம் இங்குக் கூறிய “ பொய்யடிமை யில்லாத புலவர்” என்பதற்கொள்ளும் பொருள்தான் யாதோ? எனின், அது மாணிக்க

வாசகரைக் குறிக்கும் என்பதாம் ; அற்றாயின் நம்பிகள் ஏனைத் தனியடியார்களைப் பெயர் கூறியாங்கு மாணிக்கவாசகர், வாதவூரனார் என்றிங்ஙனம் எவ்வாற்றாலேனும் பெயராற் கூறாது, பொய்யடிமை யல்லாத புலவர் என்று, பண்பினாற் கூறுதற்குரிய காரணந்தான் யாதோ? ; புலவர் என்ற அளவை திருவாதவூரடிகளைச் சிறப்பிக்கும் புகழாகுமா? "கற்றாரை யான் வேண்டேன் கற்பனவு மினியமையும்" ; "கல்வி யென்னும் பல்கடற் பிழைத்தும்" என்றிவ்வாறு கலைப்புலமையைவெறுத்து ஒதுக்கிய பின், இறைவர் தாமே குருவாக வந்துபதேசிக்கப் பெற்றனராய்க் கலைப் புலமையின் மேலாகிய சிவஞானத்தைப் பெற்ற அடிகளாருக்குப் புலவர் என்ற அளவு எங்ஙனம் பொருத்தமுடையதாகும் ?, இங்குச் சேக்கிழார் பெருமான் "செய்யுணிகழ் சொற்றெளிவும் செவ்விய நூல் பல நோக்கும், மெய்யுணர்வின் பயனிதுவே எனத் துணிந்து" என்று கூறும் இப்புலவர்களின் பண்புக்கும்மணிவாசகனாரது முன்காட்டிய பண்புக்கும் உள்ள வேறுபாடு உணரத் தக்கது. (3939) ஆனானார் - புலவரெனப் புகழ்மிக்கார் - மெய்யடிமை யுடையாராம் பெரும்புலவர் - ஆங்கவர் (3940) "நடை நூற் பாவினவின்றேத்தும், போத மருவிப் பொய்யடிமை யில்லாப் புலவர்" (3937) என்று கூறிய பண்மைகள் சிறப்புப்பண்மைகளன்றி எண்ணுப்பண்மைளாதலும் காணத்தக்கது. இனி, இப்புலவர்களை "எண் ணித்தனையென் றறியாத திருக்கூட்ட மெட்டே" (திருத்தொண்டர் புராண வரலாறு - 37) என்று உமாபதி சிவாசாரியார் வகைபபடுத்தி யுள்ளமையும் காண்க. இதனால் இவர் தனியடியாராத லன்றித் திருக்கூட்டத்தது தொகையடியாராதல் நன்கு பெறப்படும். நாற்பத்தோன்பது பல்புலவோர் என்று நம்பியாண்டார் நம்பிகள் குறித்திருக்க, உமாபதி சிவனார் இவர்களை எண்ணிகதனை யென்றறியாத திருக்கூட்டம் என்றதென்னை ? எனில், அத்தொகை கடைச்சங்கப் புலவர்களின் ஆதனங்களின் தொகையே யன்றி அவர்கள் தமிழாராய்ந்த 1850 ஆண்டுகளில் வந்த 449 பேர்களில் சிவனையே பாடிய புலவர்களின் தொகையன்றென்பது முன் காட்டப்பட்டது. கடைப்பிடிக்க.

அன்றியும், "பரம காரணன் றிருவரு ளதனாற் றிருவாத வூர்மகிழ் செழுமறை முனிவர், ஐம்பொறி கையிகந் தறிவா யறியாச், செம்புலச் செல்வர்" (பேராசிரியர் - திருக்கோவைபாருரை) எனவும், "மாணிக்கவாசர் அறிவாற் சிவனே யென்பது திண்ணம். அன்றியும், அழகிய திருச்சிற்றம்பல முடையார் அவர் வாக்கிற் கலந்திருந்து அருமைக் கையா லெழுதினார். அபபெருமையை நோக்காது சிந்தாமணி, சிலப்பதிகாரம், மணிமேகலை, சகைப்பாட்டு, கொங்கு வேண்மாக்கதை முதலியவற்றோடு சேர்த்துச் செய்யுட்களோ டொன்றாக்குவர்" (இலக்கணக் கொத்து) எனவும் பெரியோர் கூறுகின்றமை கண்டு, அவற்றுடன் இங்குக் கூறும் புலவர் பண்புகளை ஒப்பு நோக்குதல் நலந்தரும். இன்னும் விரிக்கிற் பெருகும் ,

பதிபோத முற்ற நிறைந்த அருள் வாக்குடைய எந்தம் பெருமக்களின் திருவாக்குக்கள் எஞ்ஞான்றும் ஒன்றற்கொன்று மாறுபடா ; சிவஞானபோதம் - சிவஞான சித்தியார் - சிவபபிரகாசம் என்ற மூன்றும் பார்க்க. அவ்வாறு மாறுபடுவதாகக் காணில், அபபிறழ்வுத் தோற்றம், தமது மனக்கண்ணின் குறையாகிய நோய் காரணமாக வருவதன்றி, உண்மையில், அவர்களது திருவாக்கின்கண் உள்ளதன்று என்று அமைந்து திருந்த ஒழுகுதல் குருமரபின் வழிவழி வந்தமைவோர் கடன். அங்ஙனமமையாது, தாந்தாம், பசுபோதமே முன்னிட்ட தமது கோட்பாடே தான்தோன்றிப் பரம்பரையாகி ஆணவ போதமாகிய இவ்வாராய்ச்சியிற் றலைப்பட்டு பதிவாக்கியங்களையும் குறைகாணப் புகுவது பாவம் ! பாவம் ! பெரும்பாவம் !!

இன்னார் திறங்களினின்றும், "அம்மா மஞ்சு மாறே" என்று அஞ்சித் "தூர்த்த வார்த்தைத் தொழும்பரைப் பிழம்பு பேசும், பிட்டரைக் காணு கண்வாய் பேசாதப் பேய்க ளோடே " என்றெழுகுக என்பது அன்புடையார்க்கு எந்தம் பெருமக்கள் தாமே.

இத்துணையும் கூறநேர்ந்தமை அன்புடையார்கள் மயங்கிப் பெருமக்கள்பால் அபசாரப் படாமைப் பொருட்டேயாம். 2

3941\. ஆங்கவர்தம் படியிணைகள் தலைமேற்கொண் டவனியெலாந்
தாங்கியவெண் குடைவளவர் குலஞ்செய்த தவமனையார்
ஓங்கிவளர் திருத்தொண்டி னுண்மையுணர் செயல்புரிந்த
பூங்கழலார் புகழ்ச்சோழர் திருத்தொண்டு புகல்கின்றாம். ௩

(இ - ள்) ஆங்கு...தலைமேற் கொண்டு - அத்தன்மையினையுடைய பொய் யடிமையில்லாத புலவர்களுடைய திருவடியிணைகளை எமது தலையின்மேற் சூட்டிக் கொண்டு வணங்கி (அத்துணையினாலே); அவனி எலாம்...தவமனையார் - நிலவுலக முழுமையும் தாங்கி அரசளித்த வெண் கொற்றக் குடையினையுடைய சோழர் களுடை யமரபு செய்த தவப்பயனே போன்றவரும் ; ஓங்கிவளர்...பூங்கழலார் - மேலோங்கி வளர்கின்ற திருத்தொண்டின் உண்மைத் தன்மையினை உணர்ந்த செய லினைச் செய்த பூங்கழலை யணிந்த வெற்றிப்பாட்டினையுடையாரும் ஆகிய ; புகழ்ச் சோழர்...புகல்கின்றாம் - புகழ்ச்சோழநாயனாரது திருத்தொண்டினைச் சொல்லப் புகுகின்றோம்.

(வி - ரை) இது கவிக்கூற்று. ஆசிரியர் தமது மரபுப்படி இதுவரை கூறிய புராணத்தினை முடித்து, இனி, மேற்கூறப்புகும் சரிதத்துக்குத் தோற்றுவாய் செய் தருளுகின்றார்.

ஆங்கு அவர் - சரித வரலாறு பற்றிக் கூறாது பண்பு பற்றி இப்புராணங் கூறி னமையால், ஆங்கு - என்று சுட்டின அளவில் அமைந்து முடித்துக் காட்டினார்.

அவனியெலாம் தாங்கிய-தலைட-சோழர்கள் பாரதநாடு முழுமையும், கடல்தாண்டி யும் அரசு செய்த உச்சநிலை சிறிதே தளர்வுற்ற சோழர் காலத்தில்வாழ்ந்தவர் ஆசிரிய ராதலின் அக்குறிப்புப்பட இறந்தகாலத்தாற் கூறியதுமாம் ; " சிங்கள நாடு பொடி படுத்த குலம் " - திருவந்தாதி - (50).

தவமனையார் - குலத்தவர் செய்த தவப்பயனே போல்வார் ; " நந்தமது குலஞ் செய்த நற்றவத்தின் பயனனையீர் " (1228).

தவமனையார் - பூங்கழலார் - என இரண்டு தன்மைகளாற் கூறியது முன்னர் எறிபத்த நாயனார் புராணத்துள் விரித்துரைக்கப்பட்ட சரிதப்பகுதி ஒன்றும், இனி, இங்கு, விரிக்கப்படும் பகுதி ஒன்றுமாகச் சரிதத்தின் இருபெரும் பகுதிகளைக் குறித் தற்பொருட்டு. சோழர் மரபு, இவர் அதனுள் அவதரிக்கத் தவஞ் செய்து பெற்றது என்க. (629) பார்க்க.

தொண்டின் உண்மையுணர் செயல் புரிந்த பூங்கழலார் - செயல்களாவன; பட்டத்து யானையும் பாகரும் மடிந்த செயல் கேட்டெழுந்த கடுஞ்சினம், " சிவாப ராதம் நிகழ்ந்தது" எனத் தெரிந்த அக்கணமே தவிர்ந்து தம்மையும் கொல்ல வாளினை நீட்டிய செயலும், பணியாத பகைவரை வெற்றி கொண்ட போது கொணர்ந்த தலைக்குவியலின்கண் தலை ஒன்றிற் சடை தெரியக்கண்ட அக்கணமே வெற்றிநிலை

வீரச்செருக்கு மாறிச் சைவத்திறங்காவலின் தோல்வியே கண்டு, அத்தலையினைப் பொற்கலத்தில் ஏந்தித் தீப்புக நின்ற செயலுமாம்.

செயல்புரிந்த பூங்கழல் - கழல் - வெற்றிக்குறி ; இச்செயல்களே இவரது வெற்றியாம் என்பது ; "தொழுது வென்றார்" (481) என்றதும், ஆண்டுரைத் தனவும் பார்க்க ; பூ - அழகு ; அழகாவது சைவத்திறம் பற்றிய மேம்பாடு. 3

புராணச் சுருக்கம் :—போய்யடிமையில்லாத புலவர் புராணம் - செய்யுள் நிகழ் சொற்றெளிவும், செம்மை விளக்கும் நூல் பலவற்றையும் நோக்குதலுமாகிய இத்தமிழ்ப் புலமை மெய்யுணர்வின் பயன் சிவனடிக்காளாதலேயாம் என்று துணிந்து அதனையே செய்தனர் ; சிவனையன்றி வேறொன்றினையும் பாடாத நிலையில் தொண்டு செய்த மெய்யடியாராயினர் (புராணம்). இவர்கள் யாரெனில் கடைச் சங்கத்தில் 49 பேர் என்று எண்ணப்பட்டுத் தமிழாராய்ந்து பாடினோர் பலருள்ளே சிவனையே பாடிய நக்கீரர் முதலாகிய பலபுலவர்களாம் (திருவந்தாதி).

கற்பனை: (1) செய்யுணிகழ் சொற்றெளிவும் செவ்விய நூல் பல நோக்குதலுமாகிய மெய்யுணர்வின் பயனாவது சிவனடிக்காளாதலேயாம்.

(2) புலமையின் பயனாவது சிவனையன்றி வேறு பாடாத நிலையாம்.

(3) சிவனையல்லாமல் சொற்பதங்கள் வாய்திறவாத நிலை, சிறந்த திருத்தொண்டின் பெற்றியாகும்.

போய்யடிமையில்லாத புலவர் புராணம் முற்றிற்று.

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# 41. புகழ்ச்சோழ நாயனார் புராணம்

## தொகை

" பொழிற்கருவூர்த் துஞ்சிய புகழ்ச்சோழற் கடியேன் "
—திருத்தொண்டத் தொகை - (7.)

## வகை

" புலமன் னியமன்னைச் சிங்கள நாடு பொடிபடுத்த
குலமன் னியபுகழ்க் கோகன நாதனைக் குலமுதலோன்
நலமன் னியபுகழ்ச் சோழனை தென்பர் நகுசுடர்வாள்
வலமன் னியவெறி பத்தனுக் கீந்ததோர் வண்புகழே."
—திருத்தொண்டர் திருவந்தாதி - (50)

## விரி

3942. குலகிரியின் கொடுமுடிமேற் கொடிவேங்கைக் குறியெழுதி
நிலவுதரு மதிக்குடைக்கீழ் நெடுநிலங்காத் தினிதளிக்கும்
மலர்புகழ்வண் டமிழ்ச்சோழர் வளநாட்டு மாமூதூர்
உலகில்வள ரணிக்கெல்லா முள்ளுறையு ராமுறையூர். க

புராணம் :—இனி, ஆசிரியர் நிறுத்த முறையானே,எட்டாவது பொய்யடிமை யில்லாத புலவர் சருக்கத்துள், இரண்டாவது புகழ்ச்சோழ நாயனாரது புராணங் கூறத் தொடங்குகின்றார். புகழ்ச்சோழ நாயனாரது சரித வரலாறும் பண்புங் கூறும் பகுதி.

தொகை :—சோலைகள் சூழ்ந்த கருவூரிலே துஞ்சிய புகழ்ச்சோழருக்கு நான் அடியேனாவேன். துஞ்சுதல் - உயிர் நீத்தல் ; தூங்குதல் என்ற பொருள் மங்கல வழக்காக விழிப்பில்லாத பெருந்தூக்கம் என்னும் இறத்தலைக் குறித்து வழங்கப் படுவது ; சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன், பாண்டியன் வெள்ளி யம்பலத்துத் துஞ்சிய பெருவழுதி என்று வருவன காண்க. துஞ்சிய செய்தியின் சிறப்பாலே வந்தபெருமைபற்றி இவ்வாற்றாற் கூறுதல் மரபு. ஈண்டுப புகழ்ச்சோழர், சடைத்தலையினைக் கனகமணிக் கலத்தேந்தித் தீப்புகுந்து துஞ்சிய செயலே அவரது செயற்கரிய திருத்தொண்டின் செயலாதலின் துஞ்சிய செயலாகிய இதுபற்றிப் போற்றப்பட்டார். ஊரும் பேரும் பண்பும் வரலாறும் முதலுல்பேசிற்று.

வகை :—நகுசுடர்வாள்...வண்புகழே-வீசுகிற சுடரினையுடைய தமது உடை வாளினை (என்னையும் கொல் என்று) வெற்றியில் நிலைபெற்ற எறிபத்த நாயனார்பாற் கொடுத்ததாகிய ஒப்பற்ற வள்ளன்மையுடைய புகழானது ; புலமன்னிய...பொடி படுத்த - அயற்புலங்களில் நின்ற அரசனது சிங்கள நாட்டினை அழித்து வெற்றி கொண்ட ; குலமன்னிய...குலமுதலோன் - சோழர் குலத்துக்குரிய புகழினை யுடைய கோகன நாதன் என்னும் சோழன் மரபில் அவதரித்த முதல்வராகிய ; நல மன்னிய...என்பர் - நன்மை பொருந்திய புகழ்ச் சோழரது உடைமையாம் என்று கூறுவர்.

புகழே - புகழ்ச்சோழனதென்பர் - என்று கூட்டி முடித்துக் கொள்க ; புலம்-அயற்புலம், பகைப்புலம் ; புலம் - நாடு ; சிங்களநாடு - மன்னே - என்று கூட்டுக. சிங்கள நாட்டைச் சோழர்கள் வென்று அடிப்படுத்தி ஆண்ட சரிதவரலாறு குறிக்கப்பட்டது. சிங்களம் என்பது ஈழநாடு. (Ceylon); இலங்கை எனப்படுவது; "தென்னாடு மீழமுங் கொண்டதிறல்" (தேவா); கோகனநாதன் - சோழரது பெயர் ; ஆதித்தச் சோழர் பெயரைக் குறிப்பிட்டது போலும். இந்நாடு பரதநாட்டுக்குத் தென்பாலில் கடல் கடந்து சேரும் தொலைவில் உள்ளதனால் "அவனி யெலாம் தாங்கிய" (3941) என்று இதனைக் குறிப்பித்தனர் ஆசிரியர். எறிபத்த னுக்கு - வாள் - ஈந்த - புகழ்-இது முன்னர் எறிபத்த நாயனார் புராணத்தில் விரிவா யுரைக்கப்பட்டது. இப்புராணத்துள்ளும் ஆசிரியர் இதனை, மேல் (3956) சுருக்கி உரைக்கின்றமை காண்க. ஈந்த - கையில் கொடுத்த ; வலம் - வெற்றி ; அரசரது பட்டத்து யானை என்றும் பாராது, தம்முயிருக்கு நேரக்கூடிய பயத்தினையும் பாராது, பாகரையும் யானையையும் வெட்டி வீழ்த்திச் சிவாபராதத்துக்குக் கழுவாய் செய்த வீரம் வெற்றி எனப்பட்டது ; நகுதல் - வீசுதல்.

நாடும் பேரும் மரபும் வரலாறும் பண்பும் வகைநூல் வகுத்தது. இவை விரிந்த படி விரிநூலுட் காண்க.

விரி: 3942. (இ - ள்) குலகிரியின்...எழுதி - இமயமலையின் உச்சியின்மேல் தமது வேங்கைக் கொடியின் குறியினைப் பொறித்து ; நிலவுதரும்...வளநாட்டு - வெள்ளிய ஒளி வீசுகின்ற முழுமதி போன்ற வெண்கொற்றக் குடை நிழலின்கீழே நீண்ட நிலவுலகத்தினைக் காத்து இன்பம் பெருக அரசளிக்கும் விரியும் புகழினையும் வண்மையினையும் உடைய தமிழ் மன்னர்களாகிய சோழர்களால் ஆளப்பட்ட வள நாட்டில் ; மாமூதூர்...உறையூர் - உலகில் வளர்ந்தோங்கும் அழகுகளுக்கெல்லாம் உள்ளுறை இதுவேயாம் என்று சொல்லத்தக்க உறையூர் என்பது பெரிய பழைய ஊராகும்.

(வி - ரை) உறையூர் - சோழர் வளநாட்டு மாமூதூர் - என்க.

குலகிரி - இமாம் ; பொன்மலை என்பதுமாம் ; மேரு - இமயம் - மந்தரம் இவற்றை ஒன்றாகக் கூறுதல் வழக்கில் வந்தது. "புண்டரீகம் பொன்வரைமே லேற்றிப் புவியளிக்கும்" (608), "பொன்மலைப் புலிவென்றோங்க" (552) என்று இதனை முன்னரும் குறித்தமை காண்க. குலகிரி - வேங்கைக் குறி - நெடுநிலம் - வண்டமிழ்-முதூர் - பண்புத்தொகைகள். மேல் - ஏழனுருபு நிலவுதரு - 2-ம் வேற்று மைத் தொகை ; மதிக்குடை - உவமைத் தொகை ; புகழ்ச்சோழரது சரிதம் தொடங்குகின்றாராதலின் புகழ்பற்றிக் கூறினார். குலகிரியின்...எழுதி-தங்கள் ஆட்சி வடகோட்டு இமயமலைவரையும் சென்றது என்றறிவிக்க, அவ்வளவும் நிலம்அடிப் படுத்தி அதற்கறிகுறியாக வேங்கைக்குறியினை அம்மலையினுச்சியிற் சோழர் பொறித்த

சரித வரலாறு குறிக்கப்பட்டது. சோழரது புராணமாதலின் பழஞ்சரிதமும் நாடும் நகரமும் கூறித் தொடங்கும் காவிய அமைப்பு முறைப்படி ஆசிரியர் கூறியபடியாம்; முன் எறிபத்த நாயனார் புராணத்தினுள் அவர்சரிதம் விரவும் அளவில் அதனுட்பட்ட வரலாறாகவே இச்சோழனாரைப் பற்றிக் கூற வேண்டி வந்தமையாலும், இங்கு அவரது சரிதமேயாதலாலும், பழஞ்சரிதம் நாடு நகரம் முதலிய சிறப்புக்கள் முன்கூறாது ஈண்டு விரிக்கின்றார்; ஒருவகையால் ஆண்டுக் கூறிய நகரச் (கருவூர்) சிறப்பு, அதுவும் சோழரது தலைநகரமாதலின், இவ்வரசர்க்கும் பொருந்துமாறும் காண்க. புராணம் பாடுவித்த சிறபபும், பாடும் அந்நாளில் உலகாளும் சிறப்பும், சோழர்க்குரிமையாதல் பற்றியும் இவ்விடத்துச் சிறப்பாகக் கூறுதலும் பொருந்தும். இதனை மேல் (3949) உரைத்தலும் காண்க; இதுமுதல் 7 பாட்டுக்களால் நகர்வளம் முதலியவை கூறப்படும் அமைதியும் இந்நகரம் சோழர்களது மிகச் சிறந்த தலைநகரங்களுள் ஒன்றாதல் குறித்தது. ஆளுடையபிள்ளையாரது திருமூக்கீச்சரத் (உறையூர்) தேவாரமும் (பண் - செவ்வழி), அதனுள் சோழரது அரசாட்சியின் பெருமை பற்றியே போற்றிப் பாராட்டுதலும் இங்கு நினைவு கூர்தற்பாலன; கோடு முடி - உயர்ந்த உச்சி; மலைச்சிகரங்களை முடி என்பது வழக்கு; வேங்கைக் கோடிக் குறி - என்க; வேங்கைக் கொடி சோழர்க் குரியது; எழுதுதல் - கல்லிற் பொறித்தல்.

இனிதளிக்கும் - சோழர் - நிகழ்காலத்தாற் கூறியது ஆசிரியரது காலத்தில் அவர்களது ஆட்சி நிலவியமை குறித்தது.

மலர்புகழ் - விரிந்து பரவும் புகழ்; தமிழ்ச்சோழர் - தமிழ் மூவேந்தர்களுள் சிறந்த ஒரு மரபு என்பது. வளநாடு - சோழ வளநாடு. நாட்டின் பெரும் பிரிவை வளநாடென்பது மரபு வழக்கு; காவிரியின் வளம் பெருக நிறைந்து உள்ளது என்றலுமாம்.

மாமூதூர் - மா - பெரிய; தலைநகரமாதல் குறிப்பு; பெருநகரம்; மூதுமை - பழமையாவது பழங்காலந் தொட்டுச் சிறப்புடன் விளங்குதல்; காவிரிப்பூம்பட்டினம் போல; இந்நகரச் சிறப்பும் பழமையும் சிலப்பதிகாரம் முதலிய பழந்தமிழ் நூல்களுள்ளும் பாராட்டப்பட்டன.

அணிக்கெல்லாம் உள்ளுறையூர் ஆம் உறையூர் - உள்ளுறை - கருத்து; இருப்பிடம் என்றலுமாம். உலகில் வளர்கின்ற அணிகள் - மங்கலங்கள் - எல்லாம் இந்நகரின் அணிபோல அமைதல் வேண்டுமென்று கருதவருவன என்பது; வினை அணிகள் எல்லாம் விளங்குதல் இந்நகரத்தின் அணியினை உள்ளுறையாகக் கொண்டமையாலே என்றலுமாம்; ஒரு நாயகியின் விளக்கமெல்லாம் நாயகனது உள்ளுறையாலே ஆவன என்பது போல. இப்பொருளில் சோழர் ஆட்சியினாலாகிய மங்கலம் குறிக்கப்பட்டதென்க. உறையூர் - என்ற நகரப் பெயர்ப் பொருளைச் சொல்லணியில் வைத்து அணி செய்தவாறும் காண்க; "திருவாரூர் திருவாரூர்" (1277) என்பதாதியாக வந்தன காண்க. இஃது ஆசிரியரது அணிசெய் கவிநலங்களுள் ஒன்று. "ஊரெனப் படுவது உறையூர்" என்று பழந்தமிழ் நூல்களுள் விதந்து கூறப்படுகிறது.

உலகுவளர் பணிக்கெல்லாம்—என்பதும் பாடம். 1

3943. அளவில்பெரும் புகழ்நகர மதனிலணி மணிவிளக்கும்
இளவெயிலின் சுடர்ப்படலை யிரவொழிய வெறிப்பனவாய்க்
கிளரொளிசேர் நெடுவானப் பேர்யாற்றுக் கோடிகெழுவும்
வளரொளிமா ளிகைநிரைகள் மருங்குடைய மறுகெல்லாம். ௨

(இ - ள்) அளவில்...அதனில் - அளவில்லாத பெரும்புகழினையுடைய அத் திருநகரத்தில்; அணி...எறிப்பனவாய் - அழகிய மணிகளால் விளக்கம் பெறும் இளவெயில் போன்ற சுடர்களின் தொகுதி இராப்போதினை இல்லையாம்படி ஒளி வீசுவனவாக; கிளர் ஒளிசேர்...நிரைகள் - கிளர்கின்ற ஒளி சேரும் நீண்ட ஆகாயத்தின் உள்ள பெரிய கங்கையாற்றிலே கொடிகள் போன்று விளங்கும் ஒளிவளரும் மாளிகைவரிசைகள்; மருகெல்லாம் மருங்குடைய - வீதிகள் எல்லாம் பக்கங்களில் உடையன.

(வி - ரை) மணிவிளக்கும் சுடர்ப்படலை - மணிகளினின்றும் இயல்பின் எழுகின்ற ஒளிக்கதிர்களின் தொகுதி.

இரவு ஒழிய எறிப்பனவாய் - இராப்போதென்பதே காணமுடியாதபடி ஒளி செய்ய; எறித்தல் - ஒளி வீசுதல்; இரவு - இருட்போது; இளவேயில் - வெப்பமில்லாத ஒளி.

வானப்பேர்யாறு - ஆகாயகங்கை; கெழுவுதல் - விளங்குதல்.

எறிப்பனவாய் - மாளிகை நிரைகள் யாற்றுக் கோடி கெழுவும் - மணிகளின் ஒளித்தொகுதி மாளிகை வரிசைகளின் மேல் வீசுதலால் அவற்றின் நிழல் வானக் கங்கையிற் காணுதல் வரிசைபெற நீண்ட கொடிகள் போன்ற காட்சி தந்தன என்பதாம்; இவ்வாறன்றி எறிப்பன - கெழுவுவன என்பவற்றைத் தொடர்பின்றி வெவ்வேறாகக் கொண்டு, மணிகளின் கதிர்ப்படலை இரவொழிய எறிப்பன; மாளிகை வரிசைகளின் மேற்கட்டிய கொடிகள் வானக் கங்கையினிற் படிவன - தோய்வன - என்றுரைத்தலுமாம். முன்பொருளில் கொடிபோலப் படலை கெழுவும் என்றும், பின்னைப் பொருளில் கொடிகெழுவும் என்றும் கொள்க. "மாளிகை நிரைவிண் சூழும்" (553) என முன்னரும் இக்கருத்தைக் குறித்தமை காண்க. 2

3944. நாகதலத் தும்பிலத்து நானிலத்து நலஞ்சிறந்த
போகமனைத் தினுக்குறுப்பாம் பொருவிறந்த வளத்தினவாய்
மாகநிறைந் திடமலிந்த வரம்பில்பல பொருள்பிறங்கும்
ஆகரமொத் துளவளவி லாவணவீ திகளெல்லாம். ௩

(இ - ள்) நாகதலத்தும்...வளத்தினவாய் - மேலுலகமாகிய விண்ணுலகினும் கீழ் உலகமாகிய பாதலவுலகினும், நிலவுலகினும நன்மையாற் சிறந்த போகங்கள் எல்லாவற்றுக்கும் உறுப்பாகிய ஒப்பற்ற வளங்களையுடையனவாகி; மாகம்...ஆகரம் ஒத்துள - ஆகாயமளாவக் குவிந்த எல்லையில்லாத பற்பல வகைப்பட்ட பொருள் யாவும் கூடி விளங்கும் உறைவிடம்போல உள்ளன; அளவில்...எல்லாம் - அளவில்லாத கடை வீதிகள் எல்லாம்.

(வி - ரை) நாகதலம்-விண்ணுலகம்; "அமரர்புரி" (3953) என்பதும் கருதுக. பிலம் - கீழ்உலகம்; பாதலம்; நானிலம் - மண்ணுலகம்; குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என நான்காகப் பகுக்கப்படுதலின் நானிலம் எனப்படும்.

நலஞ்சிறந்த போகம் - நன்மை பயக்கும் போகங்கள்; நலஞ் சிறவாத பொல்லாத போகங்களும் உள்ளனவாதலின் அவற்றை நீக்குதற்கு நலஞ்சிறந்த என்றார். பிறிதினியைபு நீக்கிய விசேடணம்; போகங்கள் - அனுபவங்கள்; உறுப்பு - அவற்றைப் பெறுதற்குக் கருவியாக உள்ளவை; நன்மையல்லாத போகங்களுக்குச் சோழாது தலைநகரமாகிய இப்பதியில் இடமில்லை என்றபடி; தீயபோகங்களே

நிரம்பிய நமது பெருநகரங்களுடன் இதனை ஒப்பிடுக. பிலத்தினும் நலஞ்சிறந்த போகமாவன, பதும மாநாகம் உறையும் பிலத்தில் அம்மை தவஞ்செய்ய உறைந்தது போல்வன.

பொருவு - ஒப்பு; அளவுமாம். உறுப்பாம் - வளமாயன - உறுப்புக்களைத் தரும் வளங்கள். ஆதனங்கள், சோலைகள், முதலிய பலவும், அணிகலன்கள் பட்டாடைகள் முதலிய பலவும் இவற்றுள் அடங்கும்.

மாகம் நிறைந்திட - மாகம் - ஆகாயம்; விண்ணுற வடுக்கிய ஈட்டங் குறித்தது.
ஆகரம் - உறையுள்; கடல், எடுக்க எடுக்கத் தரும் சுரங்கம் என்றலுமாம்.
ஆவண வீதிகள்-கடை வீதிகள்; அளவில் என்றது பற்பல வகை குறித்தது. 8

3945. பார்நனைய மதம்பொழிந்து பனிவிசும்பு கொளமுழங்கும்
போர்முகவெங் கறையடியும், புடையினமென் றடையவரும்
சோர்மழையின் விடுமதத்துச் சுடருநெடு மின்னோடைக்
கார்முகிலும் பலதெரியா களிற்றினிரைக் களமெல்லாம். ௯

(இ - ள்) பார்நனைய...கறையடியும் - நிலம் நனையும்படி மதநீரைப் பொழிந்து குளிர்ந்த ஆகாயம் இடங் கொள்ளும்படி முழங்குகின்ற போர்த்தொழில் வாய்ந்த வெவ்விய யானைகளும்; புடை இனமென்று அடைகின்ற - அவை தம்பக்கத்தில் உள்ள இனமென்று வந்து கூடுகின்ற; சோர்...கார்முகிலும் - பொழிகின்ற மழையாகிய விடும் மதத்தினையும் மின்னலாகிய பட்டத்தினையும் உடைய கரியமேகங்களும்; களிற்றின் நிரைக்களமெல்லாம் - யானைகள் வரிசைபெறக் கட்டும் யானைக் கூடங்களில் எங்கும்; பல தெரியா - பலவாக வேறு பிரித்தறியப்படாது விளங்கின.

(வி - ரை) இச்செய்யுள் மயக்கவணி; மழையை மதமாகவும், மின்னலை நெற்றிப் பட்டமாகவும், கரியநிறத்தைக் காரின் நிறமாகவும் உருவகித்தார். மேகங்கள் இவ்வாற்றாலும் பருத்த உருவுடன் மோதுபவைபோலச் சேர்தலாலும், யானைகளை வினை, மெய், உரு என்ற மூன்றானும் ஒத்திருந்தன; இவை உயர்ந்த யானைக் கொட்டாரங் களிற் படிந்தன; இவற்றை இத்தன்மைகளால் தம்மின மென்று மயங்கி யானைகள் அங்கு வந்து கூடின; இக்கூட்டத்தினுள் இவை மேகமோ களிறோ என்று வேறு பிரித்துணரப்படாத நிலையில் விளங்கின என்பதாம். அரசாது யானைப்படையின் சிறப்புக் கூறியவாறு. மேல்வரும் பாட்டில் குதிரைப் படையின் சிறப்பும், அதன் மேற்பாட்டில் யானை குதிரையிரண்டன் சேர்க்கையின் சிறப்பும் கூறுவார்; இந் நாயனாரது சரிதத்தின் முற்பகுதியின் விளைவு அவரது பட்டத்து யானைபற்றி நேர்ந்தமையும், அப்போது அரசர் குதிரைமேலேறிச் சென்றபின், வெட்டப்பட்டு உயிர்பெற்ற அவ்வியானையின் மீதே மீண்டமையும் ஆகிய சிறப்புக்களும், இங்குக் குறிப்பாலுணர்த்தப்பட்டன; "யானைமேற் கொண்டு சென்றா ரிவுளிமேல் கொண்டு வந்தார்" (602); இக்குறிப்புப்படவே முன்னரும் இந்நாயனாரது வரலாறு பற்றிய கருவூரைப் பற்றிக் "கடகரி துறையி லாடும்" (554) என்றமை காண்க.

புடையினம் என்று அடையவரும் - வரும் என்றதற்கு அவை - அவ்வியானைகள் என்ற எழுவாய் வருவிக்க. இவ்வாறன்றி அடைய வரும் செயலை மேகங்களின் மேல் ஏற்றியுரைப்பாருமுண்டு. மேகங்கள் சூழும்படி மதில்கள் உயர்ந்திருந்தலை முன்னரும் இவ்வாலாறு பற்றிய கருவூரினை "மாமதில் மஞ்சு சூழும்" (553) என்று கூறினார். அதனையே தொடர்ந்து இங்குக் கூறியவாறு.

பார்நனைய மதம் பொழிந்து - மதநீரின் மிகுதி குறித்தது ; இதனை பார்நனை யச் சோர் மழை என்று உவமேயத்துடனும் கூட்டுக. மழைக்கு அதுவே பயனும் குறியுமாம்.

பனிவிசும்பு கோளமுழங்கும் - பனி - குளிர்ந்த ; பனித்தல் - அதிர்தல் - நடுங்கு தல் என்று கொண்டு யானைச் சத்தத்தின் எதிரொலியால் அதிரும் - நடுங்கும் - என் றுரைத்தலுமாம். விசும்புகோள முழங்குதலாவது - சத்தம் என்னும் தன்மாத்திரை ஆகாயத்தை யிடமாகக் கொண்டு விளங்கும் நிலையினையும் குறித்து நின்றது. விசும்பு பனிகோள என்று மாற்றிக்கூட்டி மேகங்களும் நடுக்கமடைய என்றுரைப்பாரு முண்டு. " மேகமும் களிறு மெங்கும் " (81) என முன்னருங் கூறினர்.

போர்முக வேங்கறையடி - போர்முகம் - போர்த்தொழில் பற்றி நிற்கும் ; இதற்குப் போர்த் தொழில்வல்ல கொம்பினையுடைய என்றுரைத்து, முகம் என்பது அதில் உள்ள கொம்பினை உணர்த்தியது ஆகுபெயர் என்பாருமுண்டு. கறையடி - யானை ; உரல்போலும் அடியினையுடைமையால் வந்த காரணப்பெயர் ; கறை - உரல் ; " கறையடியானை " (பெரும்பாண் - 351).

விசும்பு கோளமுழங்கும் - மின்ஒடை - மின்னலும் அதனுல்வரும் இடிமுழக் கும் ஓரிடத்தொரு காலத்தில் மேகங்கள் கூடிய போது எழுவன. அவற்றுள் முழக் கத்தைப் பொருளிலும், ஒளியினை உவமையிலும் வைத்தார் சொற்சுருக்கமும் தொடர்புண்மை அறிவிக்கும் நிலையும் பற்றி.

சோர்மழை - சோர்தல் - வீழ்தல் ; நீராவியாயிருந்த நிலை நீங்கிக் குளிர்ந்த போது நீர்த்துளிகளாக மாறுதலாற் கனத்துத் தாமாக வீழ்தல் குறித்தது. மழை யின் விடும் மதம் - மழையாகிய மதம் ; விடுதல் - விடப்பட்டு விழுதல்; இன் - தவிர் வழிவந்த சாரியை என்பர் ; மின்ஒடை - மின்னலாகிய ஓடை. ஓடை - யானை யின் நெற்றிப்பட்டம் ; கார்முகில் - கரியமேகம்; கார் - என்ற அடையினைப் பொரு ளிலும் சேர்க்க ; கார்காலத்து மேகம் என்றலுமாம்.

பல தெரியா - பலவாகப் பிரித்து அறியப்படா - தெரியப்படா என்ற செயப் பாட்டு வினை தெரியா - எனச் செய்வினையாய் வந்தது.

களிற்றினிரைக்களம் - யானைகள் கட்டும் கூடம். யானைக் கொட்டாரம்.

கனமெல்லாம்—என்பதும் பாடம். 4

3946. படுமணியும் பரிச்செருக்கு மொலிகிளரப் பயில்புரவி
நெடுநிரைமுன் புல்லுண்வாய் நீர்த்தரங்க நுரைநிவப்ப,
விடுசுடர்மெய் யுரையடுக்கன் முகில்படிய, விளங்குதலாற்
றொடுகடல்க ளனையபல துரங்கசா லைகளெல்லாம். ௫

(இ - ள்) படுமணியும்...கிளர - ஒலிக்கின்ற மணிகளும் குதிரைகளின் கனைப் பும் மிகவும் சததிக்கவும் ; பயில்புரவி...நிவப்ப - விளக்கமுடைய குதிரைகளின் நீண்ட வரிசையில் புல்லை உண்கின்ற அவற்றின் வாய் நீரினுைய விலாழியானது அலை விளிம்பில் உள்ள நுரையினை ஒப்ப விளங்கவும் ; விடுசுடர்...படிய - சுடர்விடு கின்ற கவசங்கள் மலையின்மீது முகில்கள் போன்று படியவும் ; விளங்குதலால் - காட்சிப்பட்டு விளங்குதலாலே ; தொடு...எல்லாம் - பற்பல குதிரைச் சாலைகள் எல்லாம் தோண்டப்பட்ட கடல்களைப் போல உள்ளன.

(வி - ரை) முன்பாட்டில் யானைக்கூடங்கள் மேகங்கள் படா நின்றன என்று சிறப்புக் கூறிய ஆசிரியர், இப்பாட்டால் குதிரைக் கூடங்களின் சிறப்புக் கூறும்

வகையால் அவை கடல்களைப் போன்றுள்ளன என்று உவமையணிச் சுவைபடக் கூறுகின்றார்.

உவமையாவது ; கடலினிடத்து - (1) ஒலிகளின் கிளர்ச்சியும், (2) அலையும் நுரையும், (3) மேகம் படிதலும் உள்ளன.

குதிரைக்கூடங்களிடத்து-(1) குதிரைக் கழுத்தின் மணிஓசையும் குதிரைக்கனைப் போசையும் (2) வரிசையாக அவை புல்லுண்வாய்நீரும் நுரையும் (3) குதிரைகளின் மேலிடுகவசமும் உள்ளன. மணிஓசை கனைப்போசைகள் கடலோசையினையும், வாய்நீர்நுரை அலைநுரையினையும் குதிரைக் கவசங்கள் மேகங்களையும் நிகர்ப்பன என்பதாம்.

படுமணி - ஒலிக்கும் மணிகள் ; இவைகள் குதிரைகளின் கழுத்தில் அணியப் படுவன ; படுதல் - ஒலித்தல் ; '' படுமணி யிரட்டு மருங்கில் ' (திருமுருகு).

பரிச்செருக்கு - செருக்கால் எழும் குதிரைகளின் கனைப்பு ; செருக்கால் நிகழ்வதனைச் செருக்கு என்றார் ; கிளா - கிளர்த்த.

புல்லுண்வாய்நீர் - குதிரைகள் புல்லுண்ணும் போது வாய் நீரின்வரும் நுரை; தரங்கம் - அலை ; தரங்கநுரை - அலைவிளிம்பில் வரும்நுரை.

மெய்யுரை - கவசம் ; சேணம் - கலணை என்பர்.

அடுக்கல் முகில் - மலைகளின்மேல் படியும் மேகம்; அடுக்கல் என்பது மேகத்தின் இயல்புபற்றிய அடைமொழி.

தோடுகடல் - தோடுதல்- தோண்டுதல்; கடல் சகரர்களால் தோண்டப்பட்டன என்ற வரலாறு பற்றிய அடைமொழி.

துரங்கம் - குதிரை.

துரங்கசாலைகள் எல்லாம் கடல் அனைய என்க. 5

3947. துளைக்கையிரா பதக்களிறுந் துரங்கவர சுந்திருவும்
விளைத்தவமு துந்தருவும் விழுமணியுங் கொடுபோத
உளைத்தகட லிவற்றொன்று பெறவேண்டி யும்பரூர்
வளைத்ததுபோன் றுளதங்கண் மதில்சூழ்ந்த மலர்க்கிடங்கு. ௬

(இ - ள்) துளைக்கை...கொடுபோத - துளையினைக் கொண்ட துதிக்கையினை உடைய ஐராவதம் என்னும் யானையும், உச்சைச் சிரவம் என்னும் அரசப்புரவியும், இலக்குமியும், கடைந்த அமுதமும், கற்பக தருவும், சிந்தாமணியும் ஆகிய இவற்றை யெல்லாம் தேவர்கள் எடுத்துக் கொண்டு போனமையால் ; உளைத்த கடல்-வருந்திய பாற்கடலானது ; இவற்று...வேண்டி - இவற்றுள் ஒன்றையேனும் மீளப்பெறுதலை விரும்பி ; உம்பரூர்...போன்று - தேவர்களது உலகத்தினை வளைத்தது போல ; அங்கண்...கிடங்கு - அவ்விடத்து மதிலினைச் சூழ்ந்த மலர்கள் நிறைந்த அகழி ; உளது - உளதாம்.

(வி - ரை) மதில்சூழ்ந்த அந்நகரத்தினைச் சுற்றிலும் அகழி உள்ளது ; அவ்வகழி பாற்கடலே வந்து வளைத்தது போன்றிருந்தது; அந்நகரம் பல வளங்களாலும் தேவர் நகரம் போன்றிருந்தது ; தேவர் நகரத்தைப் பாற்கடல் வளைத்து இவ்வாறு முற்றுகையிடுதல் போலச் சூழ்ந்தது; அந்நகரில் தேவர்கள் தன்னிடமிருந்து கொண்டு போன அயிராவதக் களிறு - முதலிய பொருள்களை அங்குச் சேமித்து வைத்திருத்தலால் அவற்றுள் ஒன்றையேனும் மீளப்பெறும் பொருட்டுச் சூழ்ந்துள்ளது என்று

தற்குறிப்பேற்ற அணிநலம்பட உரைத்தவாறு ; கள்வர் வல்லிதிற் கவர்ந்த பொருள்களைச் சேமித்த இடம் தெரிந்தால் அவற்றைப் பறியுண்டோர் அவ்விடத்தினைச் சூழ்ந்து காவல் இட்டு அவற்றை மீளப்பெற முயலும் உலகியல் நிகழ்ச்சி பற்றி உரைக்கப்பட்டது.

அயிராவதம் - என்பது முதல்குறைந்து இராபதம் என நின்றது.

துரங்க அரசு - குதிரைகளின் மேம்பட்ட அரசப் புரவியான உச்சைச் சிரவம் என்பது.

திரு - இலக்குமி ; இங்கு அவள் உருவமாகிய செல்வங்களைக் குறித்தது.

விளைத்த அமுது - விளைத்தல் - கடைந்தெடுத்தல்.

தரு - கற்பகம் ; மணி - சிந்தாமணி.

கோட்டுபோத - கைப்பற்றிக் கொண்டு போதலினால் ; கோடு - கொண்டு ; பறியுண்டமையால் என்பது குறிப்பு ; உளைந்தகடல் - உளைந்த - வயிறு வாய்ந்து தான் ஈன்றவற்றை இழந்ததனால் வருந்திய.

ஒன்று - ஒன்றையேனும் ; பெற - மீட்டுப்பெற.

உம்பர்நர் வளைத்தது போன்று - உம்பர் ஊர் - பொன்னகரம் ; ஊரினை - இரண்டனுருபு விரிக்க. வளைத்தல் - சூழ்தல் ; முற்றுகையிடல் என்றுரைக்கவும் நின்றது.

அவ்வூர் பொன்னகரம் போன்றுள்ளது என்பதும் அகழி கடல்போன்றுள்ளது என்பதும் உட்குறிப்பு.

இரவொழிய வெறிப்பன - போக மனைத்தினுக் குறுப்பாம் வளம் - களிற்று நிரை - துரங்கசாலை - என முன்கூறியவற்றுள் ஒவ்வொன்றும் பாற்கடல் தந்த இவற்றை ஒப்பன என்பது. அவற்றுள் ஒன்றையேனும் மீளப்பெற விரும்பியது பாற்கடல் என்பதன் குறிப்பு.

உம்பநர் - இதுபோலவே கருவூரையும் அமரர்புரி (3953) என்பதும் காண்க. 6

3948. காரேறுங் கோபுரங்கள் கதிரேறு மலர்ச்சோலை
தேரேறு மணிவீதி திசையேறும் வசையிலணி
வாரேறு முலைமடவார் மருங்கேறு மலர்க்கணையொண்
பாரேறும் புகழுறந்தைப் பதியின்வளம் பகர்வரிதால். ௭

(இ - ள்) காரேறும்...வசையிலணி - மேகங்கள் தவழ்ந்தேறுகின்ற கோபுரங்களையும், இரு கதிர்களும் ஏறும் மலர்கள் நிறைந்த சோலைகளையும், தேர்கள் உலவுகின்ற அழகிய வீதிகளையும், எல்லாத் திசைகளிலும் புகழ் பரவிச் செல்கின்ற வசையில்லாத அழகுகளையும் உடைமையால் ; வாரேறும்...பாரேறும் புகழ - கச்சணிந்த முலையினையுடைய பெண்களிடையேயேறும் மலரம்புகளின் செயல் வாய்ந்த ஒள்ளிய உலக முழுதும் பரவும் புகழ்பூண்ட ; உறந்தை...பகர்வரிதால் - உறையூர் என்ற பதியினது வளங்களைச் சொல்லுதல் அரிதாகும் (எளிதன்று).

(வி - ரை) ஏறும் - என்பன பெயரெச்ச முடிபுகளாகக் கொண்டு அங்கங்கும் கூட்டிமுடித்துக் கொள்க. இங்ஙனமன்றி, முதல் நான்கினையும் வினைமுற்றுக்களாகக் கொண்டு, (இங்கரத்தில்) கோபுரங்களில் கார் ஏறும் ; சோலைகளில் கதிர்கள் ஏறும்; வீதிகளில் தேர் ஏறும் ; அணிகள் திசை ஏறும் என்று முடித்துரைப்பதுமாம்.

காரேறும் கோபுரங்கள் - கதிரேறும் மலர்ச்சோலை - கோபுரங்களும் சோலைகளும் வானளாவ வுயர்ந்துள்ள சிறப்புக் குறித்தபடி.

தேர்ஏறு மணிவீதி - ஏறுதல் - இயங்குதல் - உலாவுதல். இங்குக் குறித்தது போர் நிலையில் செல்லும் தேர்களி னியக்கமன்று ; அரசமரபினர்களும் செல்வர் களும் தேர்ஏறி உலாவும் நிலைபற்றியது ; "வளவனின் புதல்வ னுங்கோர் மணிநெடுந் தேர்மீ தேறி...அரசுலாந் தெருவிற் போங்கால்" (116).

அணி - அழகின் பெருமை ; திசைஏறுதலாவது எல்லாத் திசையின் நாட்டு மக்களாலும் புகழப்படுதல் ; வசையில் - இழிபில்லாத ; இழிபு - இகழ்ச்சி - யில்லாத அணி (அழகு) என்றது உயர்விலே மனம் செல்லக் காரணமாக விளங்கும் அழகுகள். "உலகில்வள ரணிக்கெல்லா முன்னுறையூர்" (3942) என்ற கருத்தும் காண்க. இந்நாளில் மக்கள் கோலம் என்ற பெயரால் நாட்டிற் செய்து மகிழும் அலங்கோல அணி வகைகளைக் கருத, இவ்வேறுபாடு விளங்கும். வசையில்வளி - என்று பாடங் கொண்டு தென்றலைக் குறித்ததாகக் கொள்வாரு முண்டு.

மடவார் மருங்கு மலர்க்கணை ஏறும் புகழ் - என்க. மலர்க் கணை - மன்மதனது மலரம்புகள். அவை மடவார் மருங்கேறும் புகழாவது அவர்கள் இணையற்ற இன் பத்துக்கு இடமாய் விளங்குதல். மருங்கு - என்பதனை இடை என்று கொண்டு, மடவார்களது இடையின் காரணமாக ஆடவர்கள்பால் ஏறும் மலர்க்கணை என் றுரைப்பது மொருபொருள் என்பது இராமநாதச் செட்டியார் குறிப்புரை ; "நலஞ் சிறந்த, போகமனைத் தினுக்குறுப்பாம் பொருவிறந்த வளம்" (3944) என்று முன் னர்க் கூறியது உயிரில் பண்டங்களாய்ப் போக உறுப்புக்களாய் விளங்கும் அணி கலன்களும் உணவுப் பொருள்களும், கண் - செவி - ஊறு முதலிய புலன்களினுகர்ச் சிக்குரியவையுமாம் ; இங்குக் கூறியது அவ்வைம்புலனுகர்ச்சிக்கு ஒரே நிலைக்களமாய் உயிருள் பொருள்களாய், விளங்கும் மகளிரை ; பார்ஏறும் புகழ் - என்றது இந்நகர் வாழும் மக்கள் மடவாருடன் கூடி நிகழும் இல்வாழ்க்கை யின்ப நிலைகள் உலகிற் புகழ்ந்துரைக்கும் தன்மையுடையன என்றதாம்.

கதிர் - இருசுடர்களாகிய சூரிய சந்திரர்கள்.

கதிர்ஏறும் - கதிர்கள் ஏறிச்செல்லுதற்கிடமாகிய ; "வெண்மதியஞ், சோலை தொறு நுழைந்துபுறப் படும்பொழுது" (1906).

உறந்தைப்பதி - உறையூர் ; மரூஉ. பகர்வரிதால் - இதுவரை ஏழுபாட்டுக் களாலும் கூறிவந்த நகரச் சிறப்பினை முடித்துக் காட்டியவாறு. 7

3949. அந்நகரிற் பாரளிக்கு மடலரச ராகின்றார்
மன்னுதிருத் தில்லைநகர் மணிவீதி யணிவிளக்குஞ்
சென்னிநீ டநபாயன் றிருக்குலத்து வழிமுதலோர்
பொன்னிநதிப் புரவலனார் புகழ்ச்சோழ ரெனப்பொலிவார். அ

(இ - ள்) அந்நகரில்...ஆகின்றார் - அத்திருநகரத்தினைத் தலைநகராகக் கொண்டு வீற்றிருந்து உலகத்தினைக் காவல் புரியும் வலிய அரசராகின்றவர் ; மன்னு...வழி முதலோர் - நிலைபெற்ற திருத்தில்லைபம்பதியிலே அழகிய திருவீதிகளில் அழகு விளங்கும் பணிகள் செய்யும் சோழராகிய நீடுவிளங்குகின்ற அனபாயச் சோழருடைய திருக்குலத்தின் மரபு வழியிலே முதல்வராய் விளங்குபவர் ; பொன்னி...பொலி வார் - காவிரியாறு வளம்படுக்கும் சோழர் நாட்டினைக் காக்கும் அரசராகிய புகழ்ச் சோழர் என்ற பெயராற் சிறந்து விளங்குபவர்.

(வி - ரை) இப்பாட்டினால் இப்புராணமுடைய நாயனாரது மரபு விளக்கம் கூறியவாறு.

அந்நகரில் - நகரினைத் தமது அரசமாநகரமாகக் கொண்டு வீற்றிருந்து.

மன்னுதிருத் தில்லைநகர்...வழிமுதலோர் - இஃது, ஆசிரியர் இப்புராணம் பாடுவித்த பெருமையுடைய தமது அரசரை இப்புராணத்துள் வைத்துப் பாராட்டிய பதினொரு இடங்களுள் ஒன்று. இதுபற்றி எனது சேக்கிழார் கஅ0 - கஅ௪ பார்க்க.

திருக்குலத்து வழிமுதலோர் - வமிசத்துக்கு வழிமுதலாயுள்ளவர்.

தில்லைநகர் மணிவீதி அணிவிளக்கும் - " தில்லைத் திருவெல்லை பொன்னின் மயமாக்கியவளவர் போரேறு " (1213) என்றதும் ஆண்டுரைத்தவையும் பார்க்க.

திருக்குலத்து வழிமுதலோர் - பின்வந்த அரசர்களின் பெருமையினால் வழிமுதல் முன்னோரைப் பாராட்டிப் பெருமை கூறி அறிவித்தல் ஒரு மரபு. கண்டதனைக் கொண்டு காணாததனை அறிவிக்கும் அளவை முறையும், தமது அரசரையும் உடன்போற்றும் முறையும் ஆகிய இருபயன்களை விளைப்பது. " சென்னி வெண்குடை நீடனபாயன் திருக்குலம் " (404) ; " சென்னிவளர் மதியணிந்த சிலம்பணி சேவடியார்தாம் மன்னியசை வத்துறையின் வழிவந்த குடிவளவர்" (1900) என்பன முதலியனவாய் வந்த பல இடங்களிலும் இக்குலச் சைவப்பெருமை போற்றப்பட்டதாதலின் அவையெல்லாம் குறிக்கத் திருக்குலம் என்றார்; வழிமுதல் - வழிவழி முன்வந்த முதல்வர்; வழிக்கு முதல் ; வழி - வம்மிசம் ; "வழியெஞ்சல்" (குறள்).

பொன்னிநதிப் புரவலனார் - நதி - அந்நதி வளம்படுக்கும் நாட்டினைக் குறித்து நின்றது. நதிபுரத்தல் - அந்நதியின் வளம் முழுதும்பெற நாட்டுக் காக்கிக் காத்தல்.

ஆகின்றார் - முதலோர் - போலிவாராவார் - என்று பெயர்ப் பயனிலை கொண்டு கூட்டி முடிக்க. இங்ஙனம் நிகழ்காலம், இறந்த காலம், எதிர்காலம் என்ற மூன்று காலச் சிறப்பும்படக் கூறியது முக்காலத்தும் நிகழும் புகழுடையார் என்று குறித்தற்கு.

அனபாயன் திருக்குலம் என்பது பற்றி ஈண்டுக் கூறியதுபோலவே இந்நாயனாரது தொடர்புடைய எறிபத்தர் புராணத்தும் கூறினார். " அனபாயன் சீர்மரபின் மாநகரமாகும்" (552) அங்குக் கூறும் கருவூரும் சோழர் தலைநகரமாதலானும் (3952), இந்நாயனாரது சரிதப் பெரும்பகுதிக ளிரண்டனுள் முற்பகுதி ஆண்டு நிகழ்ந்ததாதலானும் அவை குறிக்க முன்னருங் கூறினார் என்க. சண்டீசர் புராணம் 8-வது திருப்பாட்டிலும் இப்பெருமை கூறுதல் காண்க. 8

3950. ஒருகுடைக்கீழ் மண்மகளை யுரிமையினில் மணம்புணர்ந்து
பருவரைத்தோள் வென்றியினாற் பார்மன்னர் பணிகேட்பத்
திருமலர்த்தும் பேருலகுஞ் செங்கோலின் முறைநிற்ப
அருமறைச்சை வந்தழைப்ப வரசளிக்கு மந்நாளில், கூ

3951. பிறைவளருஞ் செஞ்சடையார் பேணுசிவா லயமெல்லாம்
நிறைபெரும்பூ சனைவிளங்க, நீடுதிருத் தொண்டர்தமைக்
குறையிரந்து வேண்டுவன குறிப்பின்வழி கொடுத்தருளி
முறைபுரிந்து திருநீற்று முதனெறியே பாலிப்பார், க0

3952. அங்கணினி துறையுநா ளரசிறைஞ்ச வீற்றிருந்து
கொங்கரொடு குடபுலத்துக் கோமன்னர் திறைகொ
தங்கள்குல மரபின்முதற் றனிநகராங் கருவூரில்
மங்கலநா ளரசுரிமைச் சுற்றமுடன் வந்தணைந்தார். கக

3950. (இ - ள்) ஒரு குடைக்கீழ் ..மணம்புணர்ந்து - தமது ஒரு குடையின் கீழே குளிர் தாங்கும்படி பூமிதேவியைத் தமக்கே உரிமையாக மணந்து; பருவரை... பணிகேட்ப - பருத்த மலைபோன்ற தமது தோளின் வெற்றியினாலே உலகத்தின் பகை அரசர்கள் தமது ஏவலின் வழிநின்று நடக்கவும் ; திருமலர்த்தும்...முறை நிற்ப - செல்வத்தாற் செழிப்புப் பொருந்தும் பெரிய உலக முழுதும் தமது செங்கோ லின் ஆணைமுறை வழியே நிற்கவும் ; அருமறைச் சைவந் தழைப்ப - அரிய வைதிக சைவம் தழைத்தோங்கவும்; அரசளிக்கும் அந்நாளில்-அரசு புரிகின்ற அந்நாளிலே; கூ

3951. (இ - ள்) பிறைவளரும்...விளங்க - பிறைவளர்தற் கிடமாகிய சிவந்த சடையினையுடைய சிவபெருமான் விரும்பி வீற்றிருக்கும் சிவாலயங்களெல்லா வற்றிலும் நிறைந்த பெரும் பூசனைகள் விளங்கச் செய்து ; நீடு ..கொடுத்தருளி - நீடும் திருத்தொண்டர்களைக் குறையிரந்து அடுத்து உபசரித்து அவர்களுக்கு வேண்டு வனவற்றைக் குறிப்பறிந்து கொடுத்தருளி ; முறைபுரிந்து - அரசாட்சி செய்து ; திருநீற்று...பாலிப்பார் - முதன்மை பெற்ற திருநீற்று நெறியினையே பாது காப்பாராகி ; ௧0

3952. (இ - ள்) அங்கண் இனிது உறையும் நாள் - அங்கு இனிதாக இருக் கின்ற நாளிலே ; அரசு...வீற்றிருந்து - அரசர்கள் அடிவணங்க அரசு வீற்றிருந்து ; கொங்கரொடு...கொணர - கொங்கர்களும் மேற்றிசையின முதல்வர்களாகிய சிற் றரசர்களும் கப்பம் கொண்டுவந்து செலுத்தும் பொருட்டு; தங்கள்...வந்தணைந்தார் - தமது குலமரபுக் குரிமையுடைய ஒப்பற்ற பெருநகரமாகிய கருவூரிலே மங்கல நாளிலே அரசுரிமைச் சுற்றமாகிய மந்திரிகள் முதலாயினோருடன் வந்து சேர்ந்தனர். ௧௧

இந்த மூன்று பாட்டுக்களும் தொடர்ந்து ஒருமுடிபு கொண்டன.

3950. (வி - ரை) ஒரு குடைக்கீழ்...மணம் புணர்ந்து - தமது ஒரு குடை யின்கீழ் உரிமைப்படி நிலம் முழுதும் ஆட்சியுள் வரும்படி முடிசூடி ; ஏகசக்கிராதி பத்தியம் என்பது வடமொழி வழக்கு. மண் மகளை மணம் புணர்தல் என்பது நிலத் தின் அரசாட்சியினை மேற்கொள்ளுதல் என்று குறிக்கக் கூறும் உபசார வழக்கு. ஒரு குடை-மண்மகள்-பேருலகு-செங்கோல்-அருமறை-பருவரை - பண்புத்தொகைகள்.

பருவரைத் தோள்...கேட்ப - இது பகைப் புலத்தவர்களாய் அடங்காத மன்னர் களை வென்று அடிப்படுத்திப் பணிகேட்கச் செய்து அளிக்கும் ஆட்சியினைக் குறித்தது.

திருமலர்த்து...முறை நிற்ப - இது தம் வழி நிற்கும் உலகினை ஆளும் ஆட்சி யினைக் குறித்தது.

திருமலர்த்தும் பேருலகு - திருவினால் விளக்கமுறும் பெரிய உலகம் ; சோழர் நாடு. விண்ணுலக ஆட்சி என்றலுமாம் ; இப்பொருளில் முன் "பார்மன்னர்" என்றது நிலவுலக ஆட்சியினைக் குறித்ததென்க.

அருமறைச் சைவம் - வேதநெறித் தொடர்புடைய சைவநெறி; வைதிகசைவம்; தழைப்ப - இதனை மேல்வரும் பாட்டில் விரிப்பார். "வேதப் பயனும் சைவம்" (1214).

அந்நாளில்—பாலிப்பார்—வந்தணைந்தார்—என்று முடிக்க. 9

3951. (வி - ரை) முன்பாட்டினால் அரசாட்சியின் உலகியல் முறை கூறி னார். இப்பாட்டினால் அரசாட்சியின் உயர்ந்த குறிக்கோளாகிய உயிரியல் முறை கூறுகின்றார்.

முறை - சிவாலயங்களில் எல்லாம் நிறைபெரும் பூசனை விளங்கச் செய்தலும், திருத்தொண்டர்களுக்கு வேண்டுவன குறிப்பறிந்து கொடுத்தலும் ஆகிய முறை ; ஆண்டவன் வழிபாடும் அடியார் வழிபாடுமே நீற்று நெறியினைப் (சிவநெறியினைப்) பாலிக்கும் முறை என்பதாம். நீற்றுநெறி - நீற்றினையே முதன்மையாகக் கொண்டுள்ள சைவம் ; நெறி - சமயம்.

முதல் - முதன்மையான ; பாலித்தல் - பரிபாலித்தல்; காத்தல். "மண்ணினிற் பிறந்தார் - பெறும் பயன் " (2985) " வேத வுள்ளுறை யாவன " (1832) என்ற திருப்பாட்டுக்களின் கருத்து ஈண்டு நினைவு கூர்தற்பாலன.

நிறைபெரும் பூசனை விளங்குதல் - நித்திய நைமித்திகங்கள் சிறக்க நிபந்தம் வைத்து நடத்துதல். விளங்க - முறை புரிந்து - என்றும் கூட்டுக. 10

3952. (வி - ரை) அரசிறைஞ்ச வீற்றிருத்தலாவது மன்னர் வந்து பணியும் படி சிங்காதனத்தில் வீற்றிருந்து முறை புரிதல்.

கோங்கரோடு...கோணர - கோங்கர் - கொங்கு நாட்டினை அரசு புரியும் சிற்றரச மரபினர் ; குடபுலத்துக் கோமன்னர் - மேற்குத் திக்கில் அரசு புரியும் குறுநில மன்னர்கள். திறை - சிற்றரசர்கள் பேரரசர்க்குச் செலுத்தும் கப்பம் ; திறைகோணர - திறை கொணரும்பொருட்டு ; இது பேரரசர்களின் அரசமரபு வழக்கு ; தம்கீழ் உள்ள பல தேயத்தின் அரசரும் திறைகொணர - அங்கங்கும் தம் தலைநகரங்கள் வகுத்து அங்குச் சென்று வீற்றிருந்து முறைபுரிதல் ; இவ்வழக்கு அவ்வக் குறுமன்னர்கள் திறை செலுத்துதற்கும் பேரரசர் கொள்ளுதற்கும் இலகு வாதற் பயனுடைத்து ; அன்றியும் அவ்வவ் வரசர் மேலிட்டு அடாதபடி அடக்கி யாளுதற்கும் சாதனமாகும்.

தங்கள் குலமரபின் முதற் றனி நகராம் கருவூர் - சோழர்கள் முடிசூடும் ஐந்து நகரங்களுள் ஒன்று. (1213)

மங்கல நாள் - பேரரசர் அரசகாரியத்தின் பொருட்டு வந்தணைகின்றாராதலின் மங்கல நன்னாட் குறித்து வந்தருளினார் என்க. இது நித்திய மங்கலமாகிய சிவப் பேறு பெறுதற்கும் உரித்தாய் நிகழ்ந்தமை பின் சரித விளைவினு லறியப்படும். " சேவடியின் அக்கருணைத் திருநிழற்கீ ழாராமை யமர்ந்திருந்தார் (3981).

அரசுரிமைச் சுற்றம் - மந்திரிகள் சேனைத் தலைவர் முதலாயினோர் ; உடற் சுற்றத்தினைப் பிரித்தலின் அரசுரிமை என்பது பிறிதினியைபு நீக்கிய விசேடணம். அமைச்சர் (3955 - 3959 - 3979); ஐம்பெருங் குழு - எண்பேராயம் என்ற இத் தினர். 11

3953. வந்துமணி மதிற்கருவூர் மருங்கணைவார் வானவர்சூழ்
இந்திரன்வந் தமரர்புரி யெய்துவா னெனவெய்திச்
சிந்தைகளி கூர்ந்தரனார் மகிழ்திருவா னிலைக்கோயில்
முந்துறவந் தணைந்திறைஞ்சி மொய்யொளிமா ளிகைபுகுந்தார். கஉ

(இ - ள்) வந்து...அணைவார் - வந்து அழகிய மதிலையுடைய கருவூரின் பக்கத்தில் அணைவாராகிய புகழ்ச் சோழர் ; வானவர் சூழ்...எய்தி - தேவர்கள் சூழ இந்திரன் வந்து அமராபதியினைச் சேர்வான் போலச் சேர்ந்து; சிந்தை...இறைஞ்சி - மனமிகக் களித்து அரனார் மகிழ்ச்சியுடன் வீற்றிருக்கும் திருவானிலைத் திருக்கோயி லினை முன்னாக வந்து சார்ந்து வணங்கி ; மொய்...புகுந்தார் - மொய்த்து விளங் கும் ஒளியினையுடைய தமது திருமாளிகையின்கட் புகுந்தருளினர்.

(வி - ரை) வானவர் சூழ்...என எய்தி - தமது மந்திரிகள் முதலாயின அரசச் சுற்றம் சூழ மன்னர் வந்தது தேவர்கள் சூழ இந்திரன் வந்தமை போன்றது என்றபடியாம். அரசர் திருவுக்கும் சுற்றம் சூழ்தலுக்கும் அரச மாபுரி அணைதற்கும் வினையும் மெய்யும் பற்றி ஒருபுடை ஒப்புமை உலகியல் நிலையின் மேம்பட்ட தெய்வத் திருவின் விளக்கம் என்ற அளவே ஈண்டுக் கொள்ளத்தக்கது; இவ்வளவன்றி இந்திரன் எந்தம் பெருமக்களுக்கு எவ்வாற்றாலேனும் ஒப்பாவன் என்பது கருத்தன்று; "பூவார் திசைமுக னிந்திரன் பூமிசை - மாவார் முதலத்து மான் முதல் வானவர் - ஓவா தெவரு நிறைந்துறைந் துள்ளது" (136) என்றபடி அடியார்களது அருள் பெறுதற்குத் தவங்கிடந்து அவர்கள் வீற்றிருக்கும் தேவாசிரிய மண்டப வாய்தலிற் காத்திருக்கும் தேவர்களுள் ஒருவன் இந்திரனாதும்; "இந்திரச் செல்வமு மெட்டுச் சித்தியும், வந்துழி வந்துழி மறுத்தன ரொதுங்கிச்" (11 - திருமுறை - பட்டின - இடை - மும்-கோ - 7); சிவானந்த வாழ்வில் திளைப்பவர் எந்தம் பெருமக்களாகிய அடியவர்கள்.

அமரர் பதி - முன்னர் "உம்பநர்" (3947) என்ற கருத்தினைத் தொடர்ந்து கூறியது.

அணைவார் - வினையாலணையும் பெயர்; மகிழ் - மோய் - வினைத்தொகைகள்; மாளிகை புகுந்தார் - 7ம் வேற்றுமைத்தொகை.

சிந்தை...கோயில் முந்துற வந்தணைந் திறைஞ்சி-நகரத்தில் அணைந்தவுடன் திருக்கோயிலினை முன்னர்ச் சார்ந்து வணங்கிப், பின்னரே, தமது திருமாளிகையினுட் புகுந்தனர் என்ற திருத்தொண்டி னெறிமரபு குறிக்கப்பட்டது; முன்னர் வருவது திருத்தொண்டு; அதன்பின்னரோ வருவது அரசாட்சி என்ற நிலைக்குறிப்பு. ஆனிலை- இத்திருக்கோயிலின் பெயர்,

மோய் ஒளி-ஒளி மொய்த்தலாவது பல ஒளிகளும் கூடுதல்; ஒளி மிகுதலுமாம். 12

3954. மாளிகைமுன் னத்தாணி மண்டபத்தின் மணிபுனைபொற்
கோளரியா சனத்திருந்து குடபுலமன் னவர்கொணர்ந்த
ஒளிநெடுங் களிற்றினணி யளப்பில்பரி துலைக்கனகம்
நீளிடைவில் விலகுமணி முதனிறையுந் திறைகண்டார். கங

(இ - ள்) மாளிகைமுன்...இருந்து-அரசமாளிகையின் முன்னே அரசிருக்கை மண்டபத்திலே மணிகளாற் புனையப்பட்ட பொன்னுனியன்ற சிங்காசனத்தின் மேல் வீற்றிருந்து; குடபுல மன்னவர் கொணர்ந்த - மேற்குத்திசை நாடுகளின் அரசர்கள் கொண்டுவந்து செலுத்திய; ஒளிநெடும்...திறைகண்டார் - வரிசை பெற நிறுத்தப்பட்ட பெரிய யானைக் கூட்டமும், அளவில்லாத குதிரைகளின் அணி வரிசையும், எடை நிறைவுடைய பொன் குவியலும், நெடுந்தூரத்தில் ஒளி வீசும் மணிகளும் என்றிவை முதலாகிய பொருள்கள் நிறைந்த திறையினைக் கண்காணித்தருளினர்.

(வி - ரை) அத்தாணி மண்டபம் - அரசர் அரசகொலுவிருக்கும் மண்டபம்; Court Hall என்பர் நவீனர். முன் - இஃது அரசமாளிகையின் முன்புறம் அமைவது மரபு. கோளரி ஆசனம் - சிங்காசனம்.

ஒளி - வரிசை-ஒழுங்கு; யானைப் பந்தி என்றலுமாம். துலை - எடைச் செறிவு. நீளிடை வில் இலகுதலாவது - நெடுந்தூரத்தில் ஒளி வீசுதல்; வில் - ஒளி.

திறை - சிற்றரசர் பேரரசர்க்குச் செலுத்தும் கப்பம்; கண்டார் - காணுதல் - கண்காணித்தல்.

களிற்றணியும் விளக்குமணி—துணைக்கனகம்—என்பனவும் பாடங்கள். 13

3955. திறைகொணர்ந்த வரசர்க்குச் செயலுரிமைத் தொழிலருளி,
"முறைபுரியுந் தனித்திகிரி முறைநில்லா முரணரசர்
உறையரண முளவாகிற் றெரிந்துரைப்பீ" ரெனவுணர்வு
நிறைமதிநீ டமைச்சர்க்கு மொழிந்தருளி நிகழுநாள், கச

3956. சென்றுசிவ காமியார் கொணர்திருப்பள் ளித்தாமம்
அன்றுசித றுங்களிற்றை யறவெறிந்து பாகரையுங்
கொன்றவெறி பத்தரெதி "ரென்னையுங்கோன் றருளு"மென
வேன்றிவடி வாள்கொடுத்துத் திருத்தொண்டின் மிகச்சிறந்தார். கரு

3955. (இ - ள்) திறை கொணர்ந்த...அருளி - முன் கூறியபடி திறைகளைக் கொண்டுவந்து செலுத்திப் பணிந்த அரசர்களுக்கு அவ்வவரும் தத்தம் அரசுகளைச் செலுத்தும் உரிமைத் தொழில் செய்து வரும்படி பணித்தருளி; முறை புரியும்...மொழிந்தருளி - நமது அரசாங்க முறை செலுத்தும் தனியாட்சியின் வழியில் அடங்கி நில்லாத மாறுபட்ட அரசர்கள் ஒதுங்கி இருக்கும் காவலிடங்கள் உள்ளனவானால் தெரிந்து சொல்வீர்களாக என்று அரசாங்க உணர்ச்சி நிறைந்த மதியால் நீடிய அமைச்சர்களுக்குக் கட்டளை யிட்டருளி; நிகழுநாள் - இவ்வாறு நிகழும் நாளிலே, கச

3956. (இ - ள்) சென்று...அற எறிந்து - சிவகாமி யாண்டார் என்னும் அடியவர் சென்று கொணர்ந்த திருப்பள்ளித் தாமத்தை அன்று அவர் கையிற் பறித்துச் சிதறிய பட்டத்து யானையினைக் கொன்று வீழ்த்தி; பாகரையும்...எதிர் - பாகர்களையும் கொன்ற எறிபத்தர் எதிரே; என்னையும்...கொடுத்து - யானை செய்த இவ்வபராதத்துக்கு இவற்றாற் போதாது, என்னையும் இதனாற் கொன்றருளும் என்று இரந்து வெற்றிபொருந்திய தமது வடிவாளினை நீட்டி; திருத்தொண்டின் மிகச் சிறந்தார் - திருத்தொண்டின் திறத்திலே மிகச் சிறந்துவிளங்கினார்.

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபுகொண் டுரைக்கநின்றன.

3955. (வி - ரை) திறை...உரிமைத் தொழிலருளி - பணிந்து திறை செலுத்தும் சிற்றரசர்களைப் பேரரசர்கள் அங்கீகரித்து அவ்வவர் அரசுக்குட்பட்ட நாடுகளை அவ்வவரும் பயமின்றிச் சுதந்தரத்துடன் உரிமைபாக அரசுபுரியும்படி நிறுவித் தமது ஆணையின் காவலை அருளுதல் முன்னாளில் தமிழ்ப் பேரரசர்கள் அரசுபுரியும் முறை. இதனையே பின்னாளில் வந்த முகமதியர்களும் ஆங்கிலர்களும் கையாண்டமை நாட்டு நடப்புச் சரிதங்களால் அறியலாம்.

முறைநில்லா முரணரசர் உறை அரணம் உளவாகில் - முரண் அரசர் - இவர்கள் முடிமன்னராகிய இப்பேரரசரது ஆணையின் வழி நில்லாது முரண்பட்டோர் - பகையரசர்; அரணம் - என்றது அரணத்தின் வலிமையே துணையாகக் கொண்டிருப்பதன்றி வேறு வலிமையில்லாதோர்; அவ்வரணம் அழிக்கப்படின் அவரும் பணிகுவர் என்ற குறிப்பாகும்; இதனை "அரணம் துகளாகப் பற்றறுப்பீர்" (3958) என்று மேற் கூறுதல் காண்க.

உரிமைத் தொழிலருளி என்றும், மொழிந்தருளி என்றும் இங்கு ஒருங்கு கூறியது, இதுவே முடிமன்னராந்தன்மை பற்றிய ஆட்சி முறை என்றறிவித்தற்கு; "முன்னுப், பணிவார் திறையும் பகைத்தவர் சின்னமுந் கொண்டுவண்டேர், அணிவார் முரசிஞெ டாலிக்கு மாவேச டணுகினரே" (330) என்ற திருக்கோவையாரினும் இக்கருத்தே பற்றிக் கூறுதல் காண்க. இனிப், பணிந்த அரசர் திறை கண்டு, பணியாதவர் அரணம்வினவி, அழிக்க எவிய இவ்வரசுரிமையின் இச்செயலே இச்சரிதவிளைவாகிப் பின்னர்த் தொண்டுநெறி நிற்றற் கேதுவாகி இவரை இறைவர் திருவடிச் செலுத்த நிற்கும் பிற்குறிப்பும் ஈண்டுக் கருதிக் கொள்க.

தனித்திகிரி முறை நில்லா - தனி - பிறர் எவர்க்கும் உரிமையின்றித் தமக்கே உரிமையாகக் கொண்ட; திகிரி - அரச ஆணையாகிய சக்கரம்; திகிரிமுறை - அரசாணை நெறியினுட்பட்டு; அரச ஆணையைச் சக்கரம் என்பது மரபு.

உணர்வுநிறை மதிநீடு அமைச்சர் - உணர்வு - என்றது அரச நீதியின் அறிவு; மதி - அதனைக் கொண்டு செலுத்தும் அறிவு; நீடு - என்பது அனுபவம்; "மதி நுட்ப நூலோ டுடையார்க் கதிநுட்பம், யாவுள முன்னிற் பவை" (குறள்)

அமைச்சர்-இங்கு அமைச்சும், சேனைத் தலைமையும் உடையவர்களைக் குறித்தது.

வழிநில்லா—என்பதும் பாடம். 14

3956. (வி - ரை) இங்குக் கூறியது எறிபத்த நாயனார் புராணத்துள் வந்ததும், இந்நாயனாரது சரிதத்தின் முற்பகுதியுமான வரலாறு; அந்த விரித்தமையால் இங்குச் சுருக்கிச் சுட்டிக் கூறியமைந்தார்.

சிவகாமியார் சென்று - என்றும், சென்று சிதறும் களிற்றை என்றும், (எறிபத்தர்) சென்று எறிந்து என்றும் கூட்டி உரைக்கும்படி சென்று - என்பது முதனிலைத் தீபமாய் நிற்பது காண்க.

சிவகாமியார் - சிவகாமியாண்டார் என்னும் அடியவர்; பூத்தொண்டு செய்பவர். "புண்ணிய முனிவர்" (558); சென்று கொணர் திருப்பள்ளித்தாமம் - (559-560.) "பறித்தமலர் கொடுவந்து" - "கடிமலர் தூயன தாங்கொணர்ந்து" (தேவா).

சிதறும் - களிற்றை - பூக்கூடையினை அவர் கையினின்றும் பறித்துச் சிதறும் யானை; அரசாது பட்டத்து யானை - "பட்டவர்த் தனமாம் பண்பு, பெற்றவெங் களிறு" (561 - 562 - 563).

களிற்றினை எறிந்து பாகரையுங்கொன்ற - 572 - 575 பார்க்க.

என்னையும்...கொடுத்து - 589—592 பார்க்க.

திருத்தொண்டின் மிகச்சிறந்தார் - அரசச் சிறப்பினும் தொண்டின் சிறப்பு மிக்கது - மேம்பட்டது என்ற குறிப்பு.

அன்று - முன்னாள். முன் (3955) கூறிய அரசு முறை நிகழ்வதற்கு முன்பு; முன் முறை கருவூரில் வந்தணைந்திருந்தபோது; "மாநவமி முன்னாள்" (561).

வென்றி வடிவாள் - பகைவர்களை வென்றதோடன்றி அடிமைத் திறத்திலும் இந்தவாள் நீட்டும் செயல் இவருக்கு வென்றி பெறக் கருவியாய் உதவிற்று என்பது குறிப்பு. வென்றி-பகைவரை எறிந்தவென்றியும் தொண்டரைப் பணிந்தவென்றியும்.

மிக - முன்னையினும் மிக.

குறிப்பு: இப்பாட்டுச் சில பிரதிகளில் இல்லை. 15

3957. விளங்குதிரு மதிக்குடைக்கீழ் வீற்றிருந்து பாரளிக்கும்
துளங்கொளிநீண் முடியார்க்குத் தொன்முறைமை நெறியமைச்சர்

"அளந்ததிறை முறைகொணரா வரசனுள னொருவ"னென,
வுளங்கொள்ளும் வகையுரைப்ப வுறுவியப்பான் முறுவலிப்பார், ௧௬

3958. "ஆங்கவன்யா ?" ரென்றருள, "வதிகனவ னணித்தாக
வோங்கெயில்சூழ் மலையரணத் துள்ளுறைவா" னெனவுரைப்ப,
"வீங்குநுமக் கெதிர்நிற்கு மரணுளதோ? படையெழுந்தப்
பாங்கரணந் துகளாகப் பற்றறுப்பீ" ரெனப்பகர்ந்தார். ௧௭

3957. (இ - ள்) விளங்குதிரு...முடியார்க்கு - விளங்குகின்ற திருவுடைய வெண்கொற்றக் குடைக்கீழே வீற்றிருந்து உலகத்தை அரசளிக்கும் ஒளிமிக்க நீண்ட முடியினையுடைய அவ்வரசருக்கு; தொன்முறைமை...உரைப்ப - பழைய முறைப்படி நீதி நெறி விளக்கும் அமைச்சர்கள், தேவரீரது கட்டளையின்படி அளவுபடுத்திய திறைப்பொருளை முறைப்படி கொண்டு வந்து செலுத்தாத அரசன் ஒருவன் உளன் என்று அவர் தெரியும்படி உரைக்க; உறுவியப்பால் முறுவலிப்பார் - மிக்க வியப்புடனே புன்முறுவல் செய்வாராகி, ௧௬

3958. (இ - ள்) ஆங்கவன் யார் என்றருள - அத்தகைய அவ்வரசன் யாவன்? என்று வினவியருள; அதிகன்...எனவுரைப்ப - அவன் அதிகன் என்பவன்; ஓங்கும் மதில் சூழ்ந்த மலை அரணத்தின் உள்ளே தங்குவான் என்று மந்திரிகள் சொல்ல; ஈங்கு...எனப்பகர்ந்தார் - இவ்விடத்தில் உங்களுக்கு எதிராக நிலைத்துநிற்கும் அரணும் உளதோ? படையெடுத்து எழுந்து அந்தப் பாங்கு உடைய அரணத்தைத் துகளாகச் செய்து அவனது காவலை அழிப்பீராக என்று கட்டளையிட்டருளினர். ௧௭

இந்த இரண்டுபாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

3957. (வி - ரை) மதிக்குடை - உவமைத்தொகை; மதி - நிறைமதி; மது - அமிர்தம்: அதனையுடையது மதி. துளங்குஒளி - மிக்கஒளி. துலங்குதல்-விளங்குதல்.

முடியார்க்கு - தெரிந்துரைப்பீர் என்று மொழிந்தருளிய (3955) அவ்வரசர்க்கு விடையாக.

தொன் முறைமை நெறி - பழமையாக வழிவந்த முறையின் நீதி செலுத்தும் வழியினை அறிவிக்கும்.

அளந்த - அரசர் கட்டளைப்படி அளவு படுத்திக் கட்டளையிட்ட; முறை - முறைப்படி.

ஒருவன் - ஒருவனே; பிறரில்லை என்க. ஏகாரம் தொக்கது.

முறுவலிப்பார் - சினமும் இகழ்ச்சியும் பற்றிய புன்முறுவல் பூத்து. முற்றெச்சம். முறுவல் - புன்னகை. 16

3958. (வி - ரை) ஆங்கு - அத்தன்மையுள்ள.

அவன் - அதிகன் என்க. அதிகன் என்பது அவன் பெயர்; அவன் பெயர் அதிகன், அதியமான் நெடுமானஞ்சி, என்று புறநானூறு முதலிய பழந்தமிழ் நூற்களில் வழங்கும். கொங்குநாட்டின் கீழ் பாகங்களை ஆண்டனர் இக்குறுநில மன்னர் மரபினர். இவர்களுக்குத் தகடூர் தலைநகராயிருந்தது. தகடூர் சேலம் சில்லாவில் தர்மபுரி என வழங்கும் நகரம். கொல்லிமலை (சேலம் சில்லாவின் தென்பாகம்), குதிரை மலை (கோயமுத்தூர் சில்லாவின் உடுமலைப்பேட்டைத் தாலுகாவில் உள்ளது) என்பன இவனது மலையரணங்கள் - இவன் பெருமுடி மன்னர்களுக்கும் அடங்காதவனும்ச் சேர சோழ பாண்டியருள்ளிட்ட எழுவரோடும் பகைத்து அவர்களுடன் போர்

புரிந்தவன் என்று புறநானூறு அறிவிக்கின்றது.* இவனது மேற்கூறிய நகரமும் மலைகளும் சோழரது தலைநகரமாகிய கருவூருக்கு அணிமையில் உள்ளன. நெடுஞ் சடையன் என்னும் பாண்டியன் அதியமானை அயிநூர் - புகழியூர் - என்ற இரண் டிடங்களிற் போரிற்புறங்கண்டான் என்று அறியப்படுகின்ற அவ்விரண்டு (அயிலூர் புகழூர் - என வழங்கப்படுகின்றன) ஊர்களும் கருவூரின் பக்கத்தில் உள்ளன; அவன் இப்போரிலும் உடைந்து தப்பி ஓடி ஒளிந்து கொண்டான். (3970)

அணித்தாக ஓங்கெயில் சூழ்மலை அரணம் - தகடூரும், கொல்லிமலை குதிரை மலைகளும்; முன் கூறியவை காண்க.†

நமக்கு எதிர்நிற்கும் அரணுளதோ? - நமக்கு - சேனைப் பெருவீரமும் வலிமை யும் வாய்ந்த உமது படையின் விறலுக்கு; எதிர்நிற்றல் - பகைத்து நிலை நிற்றல்; அரணும் உளதோ - என்று உம்மை விரிக்க. ஓகாரம் வினா; எதிர்மறை இன்மை குறித்தது. இஃது அரசர்கள் தமது சேனை வீரர்களைத் தேற்றி வீரம் விளைக்கும் மரபுகளுள் ஒன்று. தமது படை வலிமையினை அமைச்சர்கள் மேல் ஏற்றிக்கூறியது அரசாட்சித் திறமாகிய மதியூகம்.

படைஎழுந்து...பற்றறுப்பீர் - இது அமைச்சர்க்கு அரசர் இட்ட கட்டளை; "ஆணை" - (3958) துகளாக - துகளாகச் செய்து; பற்று - பற்றுக்கோடாக நின்ற அரணத்தை; அரணம் - காவல் பொருந்திய இடம்.

பற்றுவீர்—என்பதும் பாடம். 17

3959. அடல்வளவ ராணையினு லமைச்சர்களும் புறம்போந்து
கடலனைய நெடும்படையைக் கைவகுத்து மேற்செல்வார்
படர்வனமு நெடுங்கிரியும் பயிலரணும் பொடியாக
மிடலுடைநாற் கருவியுற வெஞ்சமத்தை மிகவிளைத்தார். ௧௮

(இ - ள்) அடல்...மேற்செல்வார் - வல்லமையுடைய சோழரது ஆணைப்படி அமைச்சர்களும் புறத்தே போந்து கடல்போன்ற பெரும்படைகளை அணிவகுத்து மேலே போருக்குச் செல்வார்களாய்; படர்வனமும்...மிக விளைத்தார் - படர்ந்து மிடைந்த வனங்களும் உயர்ந்த மலைகளும் பயிலும் அரணங்களும் பொடியாகும்படி வலிய நாற்பெரும் படைகளும் பொருந்த வெவ்விய போரினை மிகவும் விளைவித்தார் கள்.

(வி - ரை) ஆணை - படைஎழுந்து அரணம் துகளாகப் பற்றறுப்பீர் (3958) என்ற கட்டளை.

புறம்-நகர்ப்புறம்; சேனைகளுக்கு இடம் வகுத்த கூடம் முதலியன உள்ள புறநகர்.

கைவகுத்து - அணிவகுத்து; மேற்செல்லுதல் - போர் முகத்துப் புகுதல். பகைமேற் சேறல்.

இது வஞ்சித் திணை: மேற்செல்வார் - முற்றெச்சம்; படர்வனம் - படர்தல் - செறிந்து விரிந்து பரவுதல்.

---

* :—புறநானூறு 87 - 95, 97 - 101, 103 - 104, 158 - 206, 208 - 231, 232-235, 310-315, 390. இவனைப் பாடினோர் ஔவையார், பரணர் முதலியோர்.

†குறிப்பு :—இவைபற்றி எனது சேக்கிழார் என்ற நூலில் அதிகன் என்ற தலைப் பின் கீழ் ௧௧௧ - ௧௧௩ பக்கங்களிற் கூறியவற்றையும், அவற்றுட் கூறிய பழந்தமிழ் நூல்கள் முதலிய வரலாறுகளையும் பார்க்க.

பயில்அரண் - பழகிய அரணிடங்கள்.

நாற்கருவி - தேர் - கரி - பரி - ஆள் என்ற நால்வகைச்சேனை; சமம் - போர். கருவி - ஆயுதம்; படைத்தொகுதி குறித்தது; நாற்கருவியும் - முற்றும்மை தொக்கது.

வெஞ்சமரம்—என்பதும் பாடம். 18

3960. வளவனார் பெருஞ்சேனை வஞ்சிமலர் மிலைந்தேற
அளவிலர ணக்குறும்பி னதிகர்கோ னடற்படையும்
உளநிறைவெஞ் சினந்திருகி யுயர்காஞ்சி மிலைந்தேறக்
கிளர்கடல்க ளிரண்டென்ன விருபடையும் கிடைத்தனவால். கக

(இ - ள்) வளவனார்...மிலைந்தேற - சோழரது பெரிய சேனைகள் வஞ்சிமலர் மாலைசூடிப் போர்க்குச் செல்ல ; அளவில் ..மிலைந்தேற ; அளவில்லாத அரணங்களை யுடைய குறுநிலமன்னனாகிய அதிகனுடைய வலியசேனையும்; உள்ளம் நிறைந்த வெவ்விய சினத்தினால் திருகப்பட்டு உயர்ந்த காஞ்சிப்பூச் சூடிப் போர்க்கு வர ; கிளர்... கிடைத்தனவால் - சத்திக்கும் பெருங்கடல்கள் இரண்டும் தம்முட் கிளர்ந்து எழுந்தாற் போல இருதிறத்தோரது படைகளும் கிட்டியன.

(வி - ரை) வஞ்சி - காஞ்சி - புறத்திணை ஒழுக்கங்கள். புறத்திணைகள் வெட்சி முதலாகப் பெருந்திணை யீறாகப் பன்னிரண்டாக வகுக்கப்படுவன. எழுத்துச் சொற் பொருள் யாப்பு அணி என்னும் ஐவகைத் தமிழிலக்கணத்துட் சிறந்த பகுதி பொருள் எனப்படும் ; அது தமிழ்மொழிக்கே சிறப்பாயுரியது. அது அகம் - புறம் என்னும் இரண்டு பிரிவினையுடையது. அகமாவது தம்முள் ஒத்த அன்புடைய தலைவன் தலைவியர் கூட்டத்து நிகழ்ந்து, அவராலும் இவ்வாறென்று கூறப்படாத நிலையில் உள்ளத்துணர்வாலேயே அனுபவிக்கப்படும் இன்பம் ; அகத்தே நிகழ்தலின் அகம் எனப்படும். புறமாவது முன் கூறியபடி ஒத்த அன்புடைய தலைவன் தலைவியர் என்பதன்றி எல்லாராலும் அறியப்படுவதாய், உணரப்படுவதாய், இவ்வாறென்று பிறருக்கும் எடுத்துச்சொல்லப்படுவதாய், அறனும் பொருளும் என்ற இரண்டன் இயல்புடையதாய்ப் புறத்தே நிகழும் ஒழுக்கம். புறத்தே நிகழ்வதாற் புறம் எனப் படும். புறத்திணை இயல்பும் பாகுபாடும் பற்றித் தொல்காப்பியம் (புறத்திணையியல்), பன்னிருபடலம், புறப்பொருள் வெண்பாமாலை முதலியவற்றுட் காண்க ; இவற் றுள்ளே தொல்காப்பியத்துட் சிற்சில வேறுபாடுகள் உண்டு. முன்கூறிய புறத்திணை கள் பன்னிரண்டாம். அவற்றுள், வெட்சி முதல் தும்பை யீறாக ஏழும் புறம் என்றும், வாகை, பாடாண் பொதுவியல் என்ற மூன்றும் புறப்புறம் என்றும், கைக்கிளை பெருந்திணை என்ற இரண்டும் அகப்புறம் என்றும் வகுக்கப்படும். அவற்றுள் புறம் ஏழனுள் 3வது, 4வதாகக் கூறப்படுவன வஞ்சி - காஞ்சி என்ற திணைகள் ; வஞ்சித் திணையாவது பகைவரது நாட்டினைக் கொள்வதற்கெண்ணி அவர்கள்மேற் செல்லு தல் ; " புறம்போர்து, கடலனைய நெடும்படையைக் கைவகுத்து மேற்செல்வார் " (3959); இவ்வாறு செல்வோர் இதற்கறிகுறியாக வஞ்சிமாலை சூடிச் செல்வது மரபு; வஞ்சி சூடுதலின் வஞ்சி எனப்படும் ; ஏனைய வெட்சி முதலிய புறத்திணைகளும் இவ்வாறே, சூடும் மாலையாற் பெயர் வழங்குவன ; வஞ்சித்திணை, வஞ்சியரவம் முத லிய 20 துறைகளைக் கொண்டது. இஃது அகத்திணையாகிய முல்லையினது புறம் என்பர் ; காஞ்சித்திணையாவது அவ்வாறு போர் செய்தற்கு வந்த பகைவனுக்கு எதிரே சென்று போர் குறித்து ஊன்றி வகுத்தல் ; இதற்கு காஞ்சிமலர் சூடுதல்

மரபு ; இது வஞ்சித்து மறுதலைத்திணையாய்க் காஞ்சியெதிர்வு முதலிய 21 துறைகளை யுடையது.

குறும்பின் - குறுநிலமன்னனாகிய ; சிற்றரசர்களுள் ஒருவனாகிய ; குறும்பு - சேட்டை - கீழ்மைச் சிறுசெயல் என்ற குறிப்புடனும் நின்றது ; சாதிகுறித்ததுமா மென்பாருமுளர்.

உளநிறை வெஞ்சினந் திருகி - பேரரசரின் கீழ் நில்லாது அவர் பலரையும் பொருது வென்றவன் அதிகன் என்றறியப்படுதலின், அவன் தனது அரண்வாயிலில் வந்து முற்றிய சோழர் படையினைக் கண்டு மிக்க சினங்கொண்டனன் என்பது ; அவனது சினம் அவன் கீழ் நின்று அதுவரை வெற்றி கொண்ட படைக்கு முள தாதல் இயல்பு. அடற்படையும் - உம்மை இறந்தது தழுவிய எச்சவும்மை.

உயிர் காஞ்சி-தற்காப்பின்பொருட்டு நிகழும் புறஒழுக்கமாதலால் உயிர் என்றார்.

கிடைந்தன - கிட்டியன ; பொருள் நிலையில் எதிர் எதிர் அணுகின.

மலைந்தேற்ப—மிலைந்தேற்ப—என்பனவும் பாடங்கள். 19

வேறு

3961. கயமொடு கயமெதிர் குத்தின; அயமுட னயமுனை முட்டின ;
வயவரும் வயவரு முற்றனர்; வியனமர் விபவிட மிக்கதே, ௨௦

(இ - ள்) கயமொடு...குத்தின - யானைகளுடன் எதிர் யானைகள் குத்தின ; அயமுடன்...முட்டின - குதிரைகளுடன் முனைந்து குதிரைகள் மோதிப் பொருதன; வயவரும்...உற்றனர் - வீரர்களுடன் வீரர்கள் எதிர்த்துப் பொருந்தினர் ; வியன மர் ..மிக்கதே - இங்ஙனம் பெரிய போர் விரிந்த நிலத்தினிடை மிகுந்தது.

(வி - ரை) கயம் - யானை ; அயம் - குதிரை ; வயவர் - வீரர்கள் ; காலாட் படை ; யானைகளும் குதிரைகளும் ஒன்றை யொன்று தாக்க அவற்றை மேலிருந்து செலுத்திய வீரர்களும் எதிரெதிர்ந்து உற்றனர் என்றலுமாம்; அமர்-போர்! ; மிக் கது-தொடங்கி மூண்டது. போர் தொடக்கமாதலின் முடுகிய சந்தத்தால் கூறுகின்றார்.

முன்பாட்டு முதற் பதினொரு பாட்டுக்களால் இருபுறமும் நிகழ்ந்த போர்த் திறம் பற்றிப் புறத்திணைத் துறைகளின் இயல்புபடப் பொருளின் தமிழ்நயம் பொருந்த ஆசிரியர் இங்கு விரித்துக் கூறுகின்றார். முன்னர் இயற்பகை நாயனார் புராணத்தும் புறத்துறை பற்றிய இயல்புகள் கூறப்பட்டன. ஆயின், இயற்பகையார் புராணத்தில் கிளைஞரும் நாயனாரும் தடுத்தும் விடுத்தும் தம்முள் இகலிமுட்டிய தனியாட்களின் நிலையேயன்றிப் பிறிதில்லை! ; ஏனாதிநாதர் புராணத்துள் வாட்படை பயிலும் வயவீரர்களும் அவர்க்குப் படை பயிற்றும் ஆசிரியரும் தாயம் பற்றித் தம்முட் பொருது பொருள்கொண்ட நிலையேயாம். அரசர்களது போர்நிலை இங்கு நிகழ்வதால் புறப்பொருள் முற்றும் காண உள்ள இடம் இதுவாதல் பற்றிப் புறப்பொரு ளியல்பினை ஈண்டே விரிக்கின்றார் ; அகப்பொரு ளியல்புகளைத் தடுத்தாட்கொண்ட புராணத்துள் விரித்த நிலையும் கருதுக. அகம் - புறம் என்ற பொருளியல்புகளைத் தழுவி விளங்கக் காட்டுதல் பெருங்காப்பிய அமைப்புக்களுள் ஒன்றாதலின் அதனையும் உட்கொண்டு ஆசிரியர் இங்குப் புறப்பொருளை விரித்துரைத் தனர் என்க.—சிறப்புப்பற்றி யானையை முற்கூறினர்.

இப்பாட்டால் யானை, குதிரை, காலாள் என்ற மூன்றும் போரில் மூண்டநிலை கூறினர். மலையரண மாதலின் தேர்ப்படைப்போரின் இயைபில்லை. 20

3962. மலையொடு மலைகள் மலைந்தென, வலைமத வருவி கொழிப்பொடு
சிலையினர் விசையின் மிசைத்தெறுங், கொலைமத கரிகொலை யுற்றவே.

(இ - ள்) மலையொடு...மலைந்தென - மலையோடு மலைகள் பொருதனபோல ; அலைமத...கொழிப்பொடு - அலைபோலப் பாயும் மதமாகிய அருவியின் ஆர்ப்புடனே ; சிலையினர்...தெறும் - மேலேறிய வில்வீரர்களின் செலுத்துகின்ற வேகத்தினும் மிக்கு அழிவு செய்யும் தன்மையுடைய ; கொலை...கொலையுற்றவே - கொலை செய்கின்ற யானைகள் தாமும் கொலையுண்டன.

(வி - ரை) மலையோடு...மலைந்தென - யானைகள் ஒன்றோடொன்று முட்டிப் பொருதல் மலைகள் பொருவன போன்றன என்பதாம் ; மெய்யும் வினையும்பற்றி வந்த உவமம். இவ்வடி முற்றுமோனை. "மலைகளுடன் போதுவ போன்ற" (3795).

அருவி கொழிப்பொடு...தெறும் - என்று கூட்டுக. மலைகளை உவமை கூறிய தனால் அருவியும் ஈரிடத்தும் ஒக்குமென்றவாறு.

சிலையினர் - மேலேறிக் கடவும் வில்வீரர்கள் ; விசையின் - இன் - ஒப்புப் பொருளில் வந்த ஐந்தனுருபு.

விசையின் - கடவி ஏவும் விசையினாலே என ஏதுப் பொருள் கொள்ளலுமாம்.

கொலை மதகரி கொலையுற்ற - ஒரு யானையைக் கொலைசெய்த யானை தானும் பிறிதொன்றதனாற் கொலையுண்டது ; இவ்வாறு பல - என்பார் உற்ற என - அகரவீற்றுப் பலவறி சொல்லாற் கூறினார். கொன்றான் கொல்லப்படுவான் என்ற வினைப்பயன் பற்றிய ஞானநூற் கருத்துப்பட நின்ற குறிப்பும் காண்க.

இப்பாட்டால் யானைப் போரின் மூண்டநிலை கூறப்பட்டது. 21

வேறு

3963. சூறை மாருத மொத்தெதிர், ஏறு பாய்பரி வித்தகர்,
வேறு வேறு தலைப்பெய்து, சீறி யாவி செகுத்தனர். உஉ

(இ - ள்) சூறை மாருதம் ஒத்து - சூறாவளியைப் போன்று ; எதிர்...வித்தகர் - எதிரெதிராக ஏறுதலைக்கொண்டு பாய்கின்ற குதிரை வீரர்கள் ; வேறு...செகுத்தனர் - வெவ்வேறாக எதிர்த்துச் சினந்து ஒருவரை யொருவர் கொன்றனர்.

(வி - ரை) சூறை மாருதம் - சூறாவளி; மிக்கவேகமாய்எறியும் சண்டமாருதம் ; வாயுவேகம் என உவமிக்கும் மரபுபற்றிக் கூறினார்.

எதிர் ஏறுபாய் - எதிர்த்துச் செல்லும் ஏற்றத்தினை மேற்கொண்டு பாயும் ; ஏறு - ஏறுதல் ; முதனிலைத் தொழிற்பெயர் ; ஏறு - பரி என்று வினைத்தொகையாகக் கொள்ளினும் அமையும்.

பரிவித்தகர் - குதிரை வீரர் ; பரி - குதிரையினைச் செலுத்தும் வித்தை ; வித்தகம்-அறிவு. வித்தகர் - சதுரப்பா டுடையவர். "வித்தகர்க் கல்லா லரிது" (குறள்).

தலைப்பெய்தல் - ஒரு சொல். கூடுதல் - முட்டுதல்.

பரிகளை ஆவி செகுத்தனர் என்றலுமாம்.

இப்பாட்டால் குதிரைப்போர் மூண்டநிலை கூறப்பட்டது. 22

3964. மண்டு போரின் மலைப்பவர், துண்ட மாயிட வுற்றெதிர்,
கண்ட ராவி கழித்தனர், உண்ட சோறு கழிக்கவே. உங

(இ - ள்) மண்டு...துண்டமாயிட - மிக்க போரிலே எதிர்த்துச் சண்டை செய்பவர்கள் துண்டமாகும்படி ; உற்று எதிர் கண்டர் - பொருந்தி எதிர்த்த கண்டர்கள் ; ஆவி...கழிக்கவே - (தாம் எதிர்வீரர்களைக் கொல்ல) உண்ட சோற்றுக் கடனைக் கழிக்கப் போரில் பொருது தாமும் (எதிரிகள் செயலால்) உயிர்நீத்தனர்.

(வி - ரை) மலைப்பவர் - பொரும் வீரர்கள் ; துண்டமாதல் - உடல் பலகூறு படுதல் ; துண்டம் - உடற்பகுதி; கண்டர் - கண்டம் செய்பவர் ; நிர்க்கண்டகர் என்றலுமாம். ஆவி கழித்தனர் - உயிர் கழிக்கப்பட்டனர்.

சோறு கழித்தலாவது சோறுண்ட கடமையினைக் கழித்தல் ; சோறு - சோற்றுக்கடன் என்ற பொருளில் வந்தது. ஆகுபெயர். கழித்தல் - கடமை செலுத்துதல். "செஞ்சோற்றுக் கடனின்றே கழியேனாகிற், றிண்டோள்கள் வளர்த்ததனாற் செயல்வே றுண்டோ ?" (வில்லி - பாரதம்). உண்ட - உண்ணப்பட்ட.

துண்டமாயிடவுற்று - ஆவி கழித்தனர் - பகைவரையும் கொன்று தாமும் கொல்லப்பட்டனர். "அவனு மறிந்தன னாயினர் பலருளர்" (627).

இதனால் காலாட் படைப்போர் கூறப்பட்டது.  23

3965. வீடி னாருட லிற்பொழி, நீடு வார்குரு திப்புனல்,
ஓடும் யாறென வொத்தது, கோடு போல்வ பிணக்குவை.  உச

(இ - ள்) வீடினார்...ஒத்தது - துண்டமாக்கப்பட்டு இறந்தவர்களது உடலினின்றும் பொழியும், நீடி ஓடுகின்ற இரத்த நீர்ப்பெருக்கானது ஓடும் யாற்றைப் போல நிகழ்ந்தது ; கோடுபோல்வ பிணக்குவை - இறந்த வீரர்களின் பிணக்குவியல்கள் மலைபோன்றன.

(வி - ரை) உடலிற்பொழி குருதிப்புனல் - துண்டமாக்கப்பட்ட உடலினின்றும் இரத்தம் நீண்டநேரம் பெருகி வடியும் என்பது. குருதிப்புனல் - உருவகம்.

யாறு என ஒத்தது - ஊறிப் பெருகி ஓடுதல் பொதுத்தன்மை ; வினைபற்றிய உவமம்.

பொழி நீடு வார் - பொழிதல் - மிகுதியாய் வருதல் ; நீடுதல் - நீண்டு வருதல் ; வார்தல் - தொடர்ந்து வருதல் ; குருதி - இரத்தம்.

கோடு - மலை ; கோடு - யாறு என்பதற்கேற்ப அதன் கரை என்றுரைப்பாருமுண்டு ; யாறு மலையினின்றும் ஊறிப் பெருகுதலால் கோடு மலை என்பது பொருந்துவதாம்.

போல்வ - எனப் பன்மையிற் கூறுதலால், குவை - பல குவியல்கள் என்க.

வீடினார் - வெட்டி வீழ்த்தப்பட்டு வீடினார். வினையாலணையும் பெயர்.

என ஒத்தது - என - என்னும்படி. இருபுறமும் ஒத்தலின் இரண்டு உவம உருபுகள் வைத்தார்.  24

3966. வானி லாவு கருங்கொடி, மேனி லாவு பருந்தினம்
ஏனை நீள்கழு கின்குலம், மான வூனொ டெழுந்தவே.  உரு

(இ - ள்) வான்...கொடி - ஆகாயத்தில் பறக்கின்ற கரிய காக்கைகளும், மேல்...குலம் - அவற்றின்மேல் சஞ்சரிக்கும் பருந்தின் கூட்டமும் ஏனை நீண்ட கழுகுகளின் வகைகளும் ; மான...எழுந்த - பெரிய உணவாகிய மாமிசத்துண்டங்களுடன்மேல் எழுந்தன.

(வி - ரை) வான் - என்பதனை மேலுங் கூட்டுக.

கோடி - காக்கை. கருங்கோடி - இயற்கையடை.

மேல் நிலாவு - கழுகு பருந்து முதலிய பெரும் பறவைகள்; காக்கைகள் பறக்கும் உயரத்தின்மேல் ஆகாயத்தில் மிக்க உயரத்தில் பறக்கும் இயல்பு குறித்தது.

ஏனை - தூலம் - பருந்தின் பல பகுப்புக்கள். தூலம் - இனம் - ஒன்றன் கூட்டம்.

மான ஊன் - பருத்த மாமிசத் துண்டங்கள்; ஊன் - இங்கு இவற்றின் உணவாகிய மாமிசத்துண்டங்களைக் குறித்தது. மானம் - பருமை - பெருமை.

ஆனவூன் - என்றலுமாம். ஆன - முன் கூறியவாறு துண்டமாயினமையிற் பெற்ற தம் உணவு.

கோடி - பருந்து - கழுகின் தூலம் - எழுந்தவே என்க. எழுந்தவே என்றதனால் அவை முன்னர் மொய்த்துக் கூடி, ஊன் துண்டங்களைப் பிய்த்து உண்டு, மேலும் கொண்டு சென்றன என்பவை உணர்த்தப்பட்டன. தன்மை நவிற்சியணி. 25

வேறு

3967. வரிவிற் கதைசக் கரமுற் கரம்வாள்
சுரிகைப் படைசத் திகழுக் கடைவேல்
எரிமுத் தலைகப் பணமெற் பயில்கோல்
முரிவுற் றனதுற் றனமொய்க் களமே. ௨௬

(இ - ள்) மொய்க்களமே - அந்தப் போர்க்களத்திலே; வரிவில் - கதை - சக்கரம் - முற்கரம் - வாள் - சுரிகைப்படை - சத்தி - கழுக்கடை - வேல் - எரிமுத்தலை - கப்பணம் - எற்பயில் கோல் முரிவுற்றன - வரிவில் முதலாகக் கோலீறாகச் சொல்லியவை ஒன்றோடொன்று தாக்கி முரிந்தனவாய்; துற்றன - நெருங்கியன.

(வி - ரை) மொய்க்களம் - போர்க்களம். மொய் - போர்.

வரிவில்...கோல் - அந்நாளில் போரில் வீரர் கையாளும் படைக்கலங்களை அடைமொழியின்றி அடுக்கிக்காட்டிக் கூறிய கவிநயம் கண்டுகொள்க.

வரிவில் - வரிந்து கட்டிய வில்; முற்கரம் - முன்கையிற் பற்றும் சம்மட்டி போன்ற ஒருவகை ஆயுதம்; முசுண்டி என்பர். சுரிகைப்படை - உடைவாள்; சத்தி - சிறு சூலம்; கழுக்கடை - ஈட்டி; எரிமுத்தலை - தீப்போன்று பாயும் சூலம். அக்கினியைச் சொரியும் சூலம் என்பாருமுண்டு; கப்பணம் - யானை நெருஞ்சில் வடிவாக இரும்பினாற் செய்த ஒருவகைப் படை; எல் பயில் கோல் - ஒளிமிக்க அம்பு. வில் - கதை முதலியன உம்மைத்தொகைகள்.

முரிவுற்றன - முற்றெச்சம். முரிந்தனவாகி.

எற்பரிகோல்—என்பதும் பாடம். 26

3968. வடிவே லதிகன் படைமா ளவரைக்
கடிசூ ழரணக் கணவாய் நிரவிக்
கொடிமா மதினீ டுகுறும் பொறையூர்
முடிநே ரியனார் படைமுற் றியதே. ௨எ

(இ - ள்) வடிவேல்...மாள - வடித்த வேலேந்திய அதிகனது படைகள் மடிதலும்; முடிநேரியனார்படை - முடிசூடிய மன்னராகிய புகழ்ச் சோழரது சேனைகள்; வரை...நிரவி - மலைக்காவல் சூழ்ந்த அரணத்தோடு கணவாய்களையும் இடித்

நச் சமதரையாக்கி; கொடி...பொறையூர்-கொடிகளையுடைய பெரிய மதிலையுடைய குறிஞ்சி நிலத்துள்ள அவ்வூரை ; முற்றியது - வளைந்துகொண்டது.

(வி - ரை) மாளா - மாண்டொழிந்ததனால். வடிவேலதிகன் படைமாளா - என்றது இகழ்ச்சிக் குறிப்பு;

வரைக்கடிசூழ் அரணம் - மலையின் இயற்கைக் காவலுடன் செயற்கையாகிய மதில் முதலிய காவலும்பொருந்திய கோட்டை. கடி - காவல். மலையாகிய காவல் சூழ்ந்துள்ள.

கணவாய் - மலைகளின் இடையிலுள்ள வழி.

நிரவுதல் - தகர்த்து நிலமட்டமாக்குதல்.

துறும் பொறையூர் - குறிஞ்சி நிலத்துள்ள ஊர்.

முடிநேரியனார் - முடி - முடிமன்னராகிய ; ஏனைச் சிற்றரசர் அரசு புரியினும் முடிசூடும் உரிமை யில்லாதவர் என்பது. நேரியன் - சோழன்.

முற்றியது - முற்றுகையிட்டது ; சூழ்ந்து வளைத்துக்கொண்டது. முற்றுகை யிடுதல் என்பர். இதனைப் புறத்திணைகளுள் உழிஞைத்திணை என்பர் ; பகைவருடைய மதிலை வளைத்துக் கொள்ளுதல். இது மருததகின் புறமென்பது தொல்காப்பியம் ; இது நொச்சித் திணைக்கு மறுதலை ; மேல்வரும் பாட்டில் நொச்சி பரிந்துடைய என்பது காண்க. 27

3969. முற்றும் பொருசே னைமுனைத் தலையிற்
கற்றிண் புரிசைப் பதிகட் டழியப்
பற்றுந் துறைநொச்சி பரிந் துடையச்
சுற்றும் படைவீ ரர்துணித் தனரே. உஅ

(இ - ள்) முற்றும்...தலையில் - முற்றுகையிட்ட சோழரது சேனையின் போரின் முன்னே ; கல்...கட்டழிய - மலையாகிய திண்மையுடைய மதில் சூழ்ந்த ஊரானது காவ லழிவுபெறவே; பற்றும்...உடைய - பற்றாகக் கொண்ட நொச்சித் துறையாகிய மதில் காவலானது பரிபவப்பட்டு உடைந்து அழியும்படி ; சுற்றும்...துணித்தனர் - அதனைச் சுற்றிய படைவீரர்கள் துண்டித்தனர்.

(வி - ரை) முற்றும் - முற்றுகையிடும்.

பொரு சேனை - பொருகின்ற சோழரது சேனை.

முனைத்தலையில் - தாக்கிய போரின் முதிர்ச்சியினால்.

கல் திண் புரிசை - "வரைக் கடிசூ ழரணம்" என்றதாம் ; கல் - மலை. கட்டு - காவல் அமைப்பு. அழிய - அழிந்தமையால்.

பற்றும்துறை நொச்சி பரிந்து உடைய - பற்றும் - பற்றாகக் கொண்டு காத்த ; துறைநொச்சி - " பற்றறுப்பீர் " (3958) ; மதில்காத்தலாகிய புறத்திணையின் நொச்சித் திணை என்னும் ஒழுக்கம். உடைய - உடைந்துவிடும்படி. உடையத் - துணித்தனர் என்க.

சுற்றும் - சுற்றிய - சூழ்ந்த ; துணித்தனர் - துண்டப்படுத்தினர் ; துறை நொச்சி - நொச்சிக்கண் உளவாகிய பல துறைகளையும் குறித்தது. அவை பலவும் உடைய என்க. 28

3970. மாறுற் றவிறற் படைவா ளதிகன்
நூறுற் றபெரும் படைநூ ழில்பட

பாறுற் றவெயிற் பதிபற் றறவிட்
டேறுற் றனனோ டியிருஞ் சுரமே. உகூ

(இ - ள்) மாறுற்ற...அதிகன் - பகைமை பூண்ட வலிய சேனைகளையுடைய வாள் ஏந்திய அதிகன்; நூறுற்ற...பட - அழிந்துபட்ட பெரும்படைகள் குவியல் குவியல்களாக ஆக்கப்பட்டதனால்; பாறுற்ற...சுரமே - சிதறுண்ட மதில்களைக் கொண்ட தனது ஊரினைப் பற்றியிருத்தலை விட்டுப் பெரிய காட்டினுள்ளே ஓடிப் போய் ஒளித்தனன்.

(வி - ரை) மாறு - பகைமை; நூறுதல் - அழிதல்; நூழில் - கொன்று குவித்தல்; இது பற்றிய துறை நூழிலாட்டு எனப்படும். பாறுதல் - சிதறுதல்; ஏறுறுதல் - உட்சென்று ஒளித்தல் என்ற பொருள் தந்து நின்றது.

இருஞ்சுரம் - நெருங்கிய காடு; கானகம் பாலைவனம் என்பாருமுண்டு.

பற்றறவிட்டு - பதிபற்றுக்கோடாகக் காவல் தரும் என்று எண்ணித் துணிந்திருந்த ஒழுக்கத்தினை விடுத்து; "பற்றறுப்பீர்" (3958).

விறற்படை - சேனை; "அடற்படையும், உளநிறைவெஞ் சினந்திருகி" (3960); அதிகன் படைச்செருக்கும் பதிச்செருக்கும் என்ற இரண்டினையுமே பற்றித் துணிவு கொண்டு பணியாதிருந்தனன்; அவற்றுள் அந்தப் படை முன் பல போரிலும் வென்றிருந்தது; இப்போது நூறுண்டு நூழில்பட்டது; எயிற்பதி பாறுற்றது. ஆதலின் பற்றற விட்டு ஓடினன் என்பதாம். நூழில்பட்டதனாலும், பாறுற்றதனாலும் என்க.

சுரமே ஓடி ஏறுற்றனன் - இவ் வதிகன் எழு அரசர்களைப் போரில் வென்றிருந்து இறுதியில் சேரமான் பெருஞ் சேர லிரும்பொறையால் வெல்லப் பட்டான் என்று பதிற்றுப்பத்து (8ம் பத்து) அறிவிக்கின்றது; இவ்வாறு பின்னரே வென்றொழிய இருந்தானாதலின் இப்போது அருஞ்சுரமே ஓடி ஏறுற்றனன் என்பதாம்.

மாறு - நூறு - (நூழில்) - பாறு - என்ற இவ்வெதுகைத்தொடைகளும் சொற்கருத்துக்களும் காட்டும் போர்பற்றியே, உமாபதி சிவனார் திருத்தொண்டர் புராண வரலாற்றினுள் "மாறுமுகமும் பொருந்த" என்ற முருகப்பெருமான் துதியினுள் எடுத்தாண்டு போற்றியிருத்தல் காண்க. 29

3971. அதிகன் படைபோர் பொருதற் றதலைப்
போதியின் குவையெண் ணிலபோ யினபின்
நிதியின் குவைமங் கையர்நீள் பரிமா
எதிருங் கரிபற் றினரெண் ணிலரே. ௩0

(இ - ள்) அதிகன்...போயினபின் - அதிகனது சேனையிலே போர் செய்ததில் வெட்டப்பட்ட வீரர்களின் தலைக்குவியல்களின் கூட்டம் எண்ணில்லாதன அனுப்பப்பட்ட பின்பு; நிதியின் குவை...எண்ணிலரே - நிதிக்குவியல்களும், பெண்களும் நீண்ட குதிரைகளும் போரில் சீறி எதிர்க்கும் யானைகளுமாகிய இவற்றை அளவற்ற சேனைவீரர்கள் கொண்டனர்.

(வி - ரை) போரில் வென்ற அரசனது வீரர்கள் வெல்லப்பட்ட அரசனது படைவீரர்களின் வெட்டுண்டு வீழ்ந்த தலைக்குவியல்களைக் கொண்டு தமது அரசன் முன் கொணர்ந்து காட்டுதல் முன்னாட் போர் முறைகளுள் ஒன்று; "பகைத்தவர் சின்னமும் கொண்டு" (கோவையார் - 330).

பொருது அற்ற தலைத்துவியல்கள் எண்ணில போயினபின் - பொருதற்ற தலை - போரில் வெட்டப்பட்ட தலைகள்; எண்ணில போயினபின்-குவியல்கள் பலவற்றை யும் அனுப்பியபின்.

நிதியின்...பற்றினர் - வென்றவர், வெல்லப்பட்ட அரசனூரில் பொருள் கவர் தல் போர் முறையாம்; ஆனால் இவை இக்காலத்திற்கானும் பழிப்புடைய அநீதச் செயல்களும் அட்டூழியங்களும் அல்ல; இவை போர்முறைப்படி காத்துக்கொண்டு செல்லப்படுவன. பரி கரி இவைகளைக் கொண்டு செல்லுதல் இவை மீளவும் அப் பகையரசுக்கு ஓர்காற் பயன்படாமை கருதியும், மங்கையரைக் கொள்ளுதல் நீதி முறையிற் காவலின் பொருட்டுமாம். "இரணத்தொழில்" என இதனை மேற் குறித்தல் காண்க. 30

3972. அரண்முற் றியெழுந் தவமைச் சர்கடாம்
இரணத் தொழில்விட் டெயில்சூழ் கருவூர்
முரணுற் றசிறப் பொடுமுன் னினர்நீள்
பவன் கழல்சார் வுறவே. ௩௧

(இ - ள்) அரண்...அமைச்சர்கள்தாம் - அரணத்தினை முற்றுகையிட்டு அழித்த அமைச்சர்கள்; இரணத்தொழில் விட்டு - அப்போர்த்தொழில்களை விட்டு நீங்கி; நீள்...சார்வுறவே - பூமியின் நீள் தலைவராகிய புகழ்ச் சோழரது கழலினைச் சென்று சாரும் பொருட்டு; முரணுற்ற சிறப்பொடு எயில்சூழ் கருவூர் முன்னினர் - முரண்வென்றுகொண்ட சிறப்புடனே மதில்சூழ்ந்த கருவூர்ப்பதியினைச் சேர்ந்தனர்.

(வி - ரை) அரண்முற்றி எறிந்த - அரண்-பகைவனுடைய அரணம்; கோட்டை; முற்றி - முற்றுகையிட்டு. முற்றுதல் - உழிஞைத்திணை ஒழுக்கம்; எறிதல் அழித்தல் இரணம் - போர்.

முரண்உற்ற சிறப்பு - முரண் - பகை; முரணினரை வென்று பொருந்திய புகழ்; மேன்மை; முரண் வென்று உற்ற என்க. முரண் - வலிமை என்றலுமாம்.

தரணி நீள் தலைவன் - என்க; புகழ்ச்சோழர்; தரணி - தரிப்பது; தாங்குவது; நீள்தரணி என்றவாறே கொண்டு அழியும் இத்தரணியேயன்றி அழியாத சிவலோ கத்தும் மேம்பாடு பெறும் தலைவர் என்ற குறிப்புப்பட வைத்தார் என்றலுமாம். சார்தல் - சென்று சேர்தல்.

முன்னினர் - முன் சேர்ந்தனர்; வெற்றியிற்கொண்ட பகைவரது சின்னங்கள் முதலியவற்றைப் பின்னர்ச் சேனைவீரர்கள் கொணர அமைச்சர் அரசர்பால் முன் சென்று சேர்ந்தனர். மேற்பாட்டுப் பார்க்க.

எதிர்ந்த—என்பதும் பாடம். 31

3973. மன்னுங் கருவூர் நகர்வா யிலின்வாய்
முன்வந் தகருந் தலைமொய் குவைதான்
மின்னுஞ் சுடர்மா முடிவேல் வளவன்
றன்முன் புகொணர்ந் தனர்தா னையுளோர். ௩௨

(இ - ள்) மன்னும்...குவைதான் - நிலைபெற்ற கருவூர்த் திருநகரத்தின்வாய் தலில் முன்னே கொண்டுவரப்பட்ட கருந்தலைகள் தொக்க குவியலை; தானையுளோர்-

சேனையில் பணிசெய்வோர்; மின்னும்...கொணர்ந்தனர் - விளங்கும் ஒளியினை யுடைய பெரிய முடியினைச் சூடிய வேல் ஏந்திய சோழரது முன்னே கொண்டு வந்தனர்.

(வி - ரை) மன்னும் - பழமையாகிய புகழ்நீடிய; நிலைபெற்ற.

வாயிலின் வாய் முன் வந்த - இத்தலைக்குவியல்களை அரசர் கண்காணிக்கும் வேலையிலன்றி முன்னர் நகரினுள்ளே கொண்டு போதல் அதன் அசுபத்தன்மைக்கும், தூய்மைக்கும் பலவாற்றானும் பொருந்தாமையின் அவற்றை முன் கொண்டு வந்தாரேனும் நகர வாய்தலில் வைத்தனர் என்பதாம். நகர்வாயில் - அரண்மனைவாயில் என்பாருமுண்டு.

வேல் - ஆயுதப்பொது; வெல்வதற்குக் கருவியாயுள்ளது என்பது பற்றி வந்த பெயர். வளவன் - வளமுடையவன். சோழரது மரபுப் பெயராய் வழங்குவது, ஏனையோர்க்கு இத்தகைய பொய்யாத(காவிரி)நீர்வள மின்மையால்; இங்குப் புகழ்ச்சோழரைக் குறித்தது. வளவன்தன் - வளவனுடைய.

தானையுளோர் - சேனைப்பணிவீரர். 32

3974. மண்ணுக் குயிரா மேனுமன் னவனூர்
எண்ணிற் பெருகுந் தலையா வையினும்
நண்ணிக் கொணருந் தலையோன் றினடுக்
கண்ணுற் றதோர்புன் சடைகண் டனரே. ௩௩

(இ - ள்) மண்ணுக்கு...மன்னவனூர் - மண்ணுலகத்தினுக்கு உயிரே போன்றவர் என்று சொல்லத்தக்க அம்மன்னவனூர்; எண்ணில்...யாவையினும் - எண்ணினால் பெருகிய தலைகள் யாவையுள்ளும்; நண்ணி...ஒன்றின் நடு - சென்று கொண்டு வரும் தலை ஒன்றின் நடுவிலே - (உச்சியிலே); கண்...கண்டனரே-எண்ணப் படுகின்றதாகிய ஒரு சிறு சடையினைக் கண்டனர்.

(வி - ரை) மண்ணுக்கு உயிராம் எனும் - "மண்ணில் வாழ்தரு மன்னுயிர் கட்கெலாங், கண்ணு மாவியு மாம்பெருங் காவலான்" (99) என்றதும், ஆண்டுரைத்தவையும் காண்க. "நெல்லு முயிரன்றே நீரு முயிரன்றே, மன்ன னுயிர்த்தே மலர்தலை யுலகம்" (புறம் - ௧௮௬); எண்ணில் - எண் (இலக்கம்) ணினால்; அள

நண்ணிக் கொணரும் - காணும் பொருட்டு குவியலினின்றும் எடுத்துக் கொணரும் (3975).

கண்ணுற்ற - கண்ணுதல் - நினைத்தல்; சிவனது சிறந்த அடையாளமென்று எண்ணப்படுதல்; "சடையான்" "கபர்த்தன்" என்பன சிவனுக்கே யுரிய பெயர்கள். நடுக்கண் - நடுவிடத்திலே என்றலுமாம்.

நடுக்கண்ணுற்றதோர் புன்சடை - நடுக்கண் - சிவனது நீக்கண்; ஆகுபெயராய் நடுக்கண்ணினையுடைய சிவன் என்று கொண்டு அவனது அடையாளமாய்ப் பொருந்திய என்றலுமாம். நடுக்கண் - இப்பொருளில் சிவனையுணர்த்திப் பின் அவனது அடையாளமான என இருமடியாகுபெயர். சிவனுக்குப் பொருந்திய சடை என்றலுமாம். புன்சடை - சிறுசடை; ஓர் - ஒன்று. 33

வேறு

3975. கண்டபொழு தேநடுங்கி மனங்கலங்கிக் கைதொழுது
கொண்டபெரும் பயத்தினுடன் குறித்தெதிர்சென் றதுகொணர்ந்த
திண்டிறலோன் கைத்தலையிற் சடைதெரியப் பார்த்தருளிப்
புண்டரிகத் திருக்கண்ணீர் பொழிந்திழியப் புரவலனார், ௩௪

3976. "முரசுடைத்திண் படைகொடுபோய் முதலமைச்சர் முனைமுருக்கி
யுரைசிறக்கும் புகழ்வென்றி யொன்றேயோழிய, வொன்றாமற்
றிரைசரித்த கடலுலகிற் றிருநீற்றி னெறிபுரந்தியான்
அரசளித்த படிசால வழகி!"தென வழிந்தயர்வார், ௩௫

3977. "தார்தாங்கிக் கடன்முடித்த சடைதாங்குந் திருமுடியார்
நீர்தாங்குஞ் சடைப்பெருமா னெறிதாங்கண் டவரானார்;
சீர்தாங்கு மிவர்வேணிச் சிரந்தாங்கி வரக்கண்டும்
பார்தாங்க விருந்தேனோ பழிதாங்கு வே!"னென்றார். ௩௬

3975. (இ-ள்) கண்ட...தொழுது - கண்டபொழுதே உடல் நடுங்கி மனம் கலங்கிக் கைகூப்பித்தொழுது; கொண்ட....எதிர்சென்று - தம்மை மேற்கொண்டெழுந்த பெரும்பயத்தினுடனே அதுவே குறிப்பாக எதிரே சென்று; அது... பார்த்தருளி - அதனைத் தம்பால் எடுத்துக் கொண்டுவந்த திண்மையுடைய வலிய வீரன் கைக்கொண்ட அத்தலையில் சடையானது நன்கு விளங்கித் தெரியப்பார்த்தருளி; புரவலனார் - அரசராகிய புகழ்ச்சோழர்; புண்டரிக...இழிய - தாமரை போன்ற தமது திருக்கண்களினின்றும் கண்ணீர் பொழிந்து வழிய நின்று, ௩௪

3976. (இ-ள்) முரசு...ஒன்றேயொழிய - போர்முரசங்களையுடைய வலிய படைகளைக் கொண்டுபோய் எனது முதன்மை பெற்ற அமைச்சர்கள் போரில் பகைவனை அழித்துப் பிறரால் எடுத்துப் பேசப்படும் புகழ் பூண்ட வெற்றி ஒன்றே பெற்றது தவிர; ஒன்றாமல் - நன்மை பொருந்தாமல்; திரைசரித்த...என - அலை தவழும் கடல் சூழ்ந்த உலகத்தில் திருநீற்று நெறியினை நான் பாதுகாத்து அரசுசெய்த படியானது மிகவும் அழகிதாயிற்று! என்று கூறி; அழிந்து அயர்வார் - மனமழிந்து தளர்வாராகி; ௩௫

3977. (இ-ள்) தார்தாங்கி...முடியார் - போரில் உரியமாலையினை அணிந்து தமது அரசனுக்குரிய கடமையைச் செய்து முடித்த சடைமுடியினையுடைய இவர்; நீர்...ஆனார் - கங்கையைத் தரித்த சடையினையுடைய சிவபெருமானது திருநெறியினிலே நின்றவரானார்; சீர்...பழிதாங்குவேன் என்றார் - சிறப்பினையுடைய இவரது சடைத்தலையைத்தாங்கி வரப்பார்த்தும் இப்பூமியைத் தாங்க இருந்தேனோ? பழியினையே தாங்குவேனானேன் என்றார். ௩௬

இம்மூன்று பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டுரைக்க நின்றன.

குறிப்பு: தலைக்குவியலில் ஒரு தலையில் புன்சடை கண்டவுடனே நாயனார்பால் நிகழ்ந்தமெய்ப்பாடுகளும் மன நிலையும் இம் மூன்று பாட்டுக்களானும் கூறப்பட்டன. செருக்கும் வெற்றிப்புகழும், தமதுபோரசினை நிலைபெறுத்திய மேனிலையும் விளங்கிய மன நிலையில் மகிழ்ந்து நின்ற இந்நேரத்தில் சடைத்தலை கண்டமாத்திரத்தே அவை

முற்றும் மாறிச் சிவாபராதம் நிகழ்ந்த பழி சூழ்ந்தமையே இவரது மனத்தை முற்றும் இடங் கொண்ட பண்பு காணத்தக்கது ; முன்னரும் தமது யானையைக் கொன்றனர் என்று கேட்டவுடன் மிக்க சினத்துடன் போர் குறித்துச் சென்றபோது அது செய்தவர் அடியவர் எனக் கேட்டுக் கண்ட அக்கணமே அந்நிலை முற்றும் மாறித் தம்மையும் கொல்லும்படி உடைவாளினை நீட்டிப் பணிந்த பண்பும் இங்கு நினைவு கூர்தற்பாலது.

திருநீற்றின் நெறிகாக்கும் பண்பே மேலிட்டும், அரசர்திருக் காக்கும் நிலை கீழிட்டும் இவர்பால் நிகழ்ந்த இயல்பு, அடிமைத் திறத்திற் கோளரி போன்ற எறிபத்த நாயனாரால் " என்னே ! அம்பலவாணர் தொண்ட ரறிவதற் கரியா " ரென்று இச்செம்பியன் பெருமையுன்னிப் பாராட்டவும், " பொழிற் கருவூர்த் துஞ்சிய புகழ்ச் சோழர்க்கடியேன் " என்று சிவநெறிகாத்து உயிர் ஈந்து தீப்புகும் இவ்வரிய செயல்பற்றியே திருத்தொண்டத் தொகையினுள் ஆளுடைய நம்பிகள் போற்றவும் பெற்றது இவரது அன்பின் பெருமை ! என்க.

3975. (வி - ரை) குறித்து எதிர் சென்று - சடை தெரியப்பார்த்தருளி - தலையினைக் கொணர்ந்தவன் கையில், கொணரும் தூரத்தே அதனடுவுள் ஒரு புன்சடை கண்டனர் ; இது நிருவிகற்பக் காட்சி. அஃது அவ்வாறுதானோ ? என்று பெயர் - சாதி-குணம்-சன்மம்-பொருள் என்ற பொருட்டன்மைகள் ஐந்தும் தெரிந்து இனிது விளங்க உணரும் சவிகற்பக் காட்சி பெற்றுத் துணிவு பெறும் பொருட்டு நினைந்து செய்த செயல்களைக் குறித்து என்றும், எதிர்சென்று என்றும், சடை தெரியப்பார்த் தருளி என்றும் விரித்துக் கூறினார்.

கைத்தலை - இவர்க்குக் காட்டக் கையிற் கொணர்ந்த தலை. கைதொழுது - 3-ம் வேற்றுமைத் தொகை ;

கண்ணீர் - இரக்க மிகுதியாலும், அவலமிகுதியால் நேர்ந்த துன்பமிகுதியாலும் வந்த கண்ணீர். புண்டரீகக் கண்-உவமைத்தொகை ; 34

3976. (வி - ரை) துன்பமிகுதியில் நிகழ்ந்த மனநிலையும் சொற்சோர்வும் கூறியபடி. இது தமக்குள்ளே எண்ணிச் சொல்லியது.

முரசு - போர்முரசு ; வெற்றிமுரசென்பாருமுண்டு.

முனைமுருக்குதல் - மூண்டபோரினிற் பகைவரை அழித்தல்.

ஒன்றுஒழிய - ஒன்று மட்டும் பெற்றேனேயன்றி.

சாலஅழகிது - தம்மைத்தாமே இகழ்ந்த இகழ்ச்சிக்குறிப்பு மொழி.

நெறிபுரந்து - நெறியினிற் சோர்வுபடாமற் காத்து. புரந்துயான் - புரந்தியான் என வந்தது குற்றியலிகரம்.

ஒன்றமல் - நன்மை பொருந்தாமல் ; ஒன்றுதல் - பொருந்துதல். திருநீற்று நெறியினிற் பொருந்தாமல் அதனைப் பகைத்தோர் தன்மையுட்பட்டு ; ஒன்றார் போல.

அயர்வார் - முற்றெச்சம் ; அயர்வார் - என்றார் என வரும் பாட்டுடன் முடிக்க.

ஒன்றமல்—என்பதும் பாடம். 35

3977. (வி - ரை) தார்தாங்கி - தார் - தற்காத்தலின் போர்த்துறைக்குரிய காஞ்சி - நொச்சி முதலிய போர்மாலை. (3960 - 3969).

கடன் - தம் அரசனுக்குச் செய்யவேண்டிய சோற்றுக்கடன் (3964).

சடைப்பெருமான் நெறிதாங் கண்டவரானார் - சிவநெறி நின்றவர். சடைதாங்கும் திருமுடியாராதலின், அச்சடை அடையாள முடைய சிவபெருமான் நெறிநின்றவர் என்பது அதனாலேதெளியப்படும் என்றதாம். நீர் - கங்கைக்கு ஆகுபெயர்.

தாங்கி வரக்கண்டும் - பழிச்சின்னமாகிய இதனை ஒருவன் கையில் ஏந்தி என் முன் வெற்றிச் சின்னமாகக் கொண்டு வந்து காட்டக் கண்டபின்னரும்.

பார்தாங்க இருந்தேனோ? - உலகம் புரக்க என்று உயிர்தாங்கிக் கொண்டன்றோ இருந்தேன்? கண்டபொழுதே ஆவிகழிந்திலேன் என்பது குறிப்பு. அவ்வாறு ஆவி கழியாமலிருக்கும் காலம் கணந்தோறும் பார்தாங்க இருப்பதாகவே முடியுமன்றோ? என்பதாம். கண்டபோதே ஆவி துறப்பதன்றோ தலைபன்பு என்ற குறிப்பு.

பழிதாங்குவேன் - அக்காலம் பார்தாங்குதலன்றி பழியையன்றோ தாங்கி நிற்பேனுவேன்; ஆதலின் பழிதாங்கி நில்லாது உயிர் துறந்து இதற்குத் தீர்வு தேடுவேன் என்பது குறிப்பு.

கண்டறிவானார்—என்பதும் பாடம். 36

3978. என்றருளிச் செய்தருளி யிதற்கிசையும் படிதுணிவார்
நின்றநெறி யமைச்சர்க்கு "நீணிலங்காத் தரசளித்து
மன்றினடம் புரிவார்தம் வழித்தொண்டின் வழிநிற்ப
வென்றிமுடி யென்குமரன் றனைப்புனைவீ" ரெனவிதித்தார். ௩௭

(இ - ள்) என்று...துணிவார் - முன்கூறியவாறு அருளிச் செய்தருளி, இதற்குத் தீர்வாகப் பொருந்தும் செயலைத் துணிவாராய்; நின்ற நெறி அமைச்சர்க்கு - தமது ஆணை வழியிலும் நூல் நெறி வழியிலும் நின்ற அமைச்சர்களுக்கு; நீணிலம்...எனவிதித்தார் - நீண்ட நிலவுலகத்தினைக் காவல் புரிந்து அரசு செய்து அம்பலத்துள் நடம்புரியும் இறைவரது வழியே வரும் தொண்டின் வழிவழி நிற்கும்படி வெற்றி பொருந்தும் முடியினை எனது மகனுக்குச் சூட்டுங்கள் என்று ஆணையிட்டருளினர்.

(வி - ரை) இசையும்படி - பொருந்தும் தீர்வும் மேற்செயலுமாகிய படியினை; படி - தன்மை; செயல். படியை என இரண்டனுருபு விரிக்க.

நின்றநெறி-ஆணையும் நூல்விதியும் ஆகியவற்றில் வழுவாதுநின்ற அரசியல்நெறி.

வழித்தொண்டின் வழிநிற்ப வென்றிமுடி புனைவீர் - என் போல் வழுவிப் பழி வெற்றி தாங்காது என்பது குறிப்பு. ஆயினும், போரினும், உயிர்கொடுத்துச் சைவச் சீரினும் புக இரண்டினும் வெற்றிபெற்றவர் இவரெனக. தொண்டினெறி வழியே வழிவழி நிற்கும் அவ்வெற்றியே பெறும் வகையால் முடிசூட்டுவீர். இது, தாம் பழி நீக்கத் தீப்புகத் துணிந்தாராதலின் இனி நில அரசாட்சி நடைபெறும் வகையினை முறைசெய்து ஆணைதந்தனர். "விதியி னாலே, பாவிய திருநீற் றன்பு பாதுகாத் துய்ப்பீர்" என்று மெய்ப்பொருளனார் இறைவரைச் சிந்தித்துக் கூறிய இறுதி மொழிகள் ஈண்டு நினைவு கூர்தற்பாலன. வென்றி - நீற்றுநெறிபாலிப்பது தம் உயிரினுஞ் சிறந்ததென்று போற்றிக் காத்தலே வென்றியாவது; "வேடமே மெய்ப் பொருளெனத் தொழுது வென்றார்" (481); "வெல்லுமா மிகவல்ல" (தொகை) என்றலை காண்க. குமரன்றனை - குமரனுக்கு; வேற்றுமை மயக்கம்.

விதித்தார் - அரச ஆணையிட்டருளினர்; விதி -பிழையாது செய்யக் கடவதாகிய ஆணைமொழி. 37

3979. அம்மாற்றங் கேட்டழியு மமைச்சரையு மிடரகற்றிக்
கைம்மாற்றுஞ் செயறாமே கடனாற்றுங் கருத்துடையார்
செம்மார்க்கந் தலைநின்று செந்தீமுன் வளர்ப்பித்துப்
பொய்ம்மாற்றுந் திருநீற்றுப் புனைகோலத் தினிற்பொலிந்தார். கூஅ

(இ - ள்) அம்மாற்றம்...அகற்றி - அந்த மாற்றத்தினைக் கேட்டு மனமழிந்து நிற்கும் அமைச்சர்களையும் ஏற்றன சொல்லித் தேற்றி அவர்களது மனத் துன்பத்தினை நீக்கி; கை...கருத்துடையார் - பழியினை மாற்றும் செயலினைத் தாமே வகுத்துச் செய்யும் கருத்தினை உடையாராகி; செம்மார்க்கம்...வளர்ப்பித்து - சிவனது நெறியிலே நிலைபெற்றுச் செந்தீயினை முன்னர் மூட்டி வளர்க்கச் செய்து; பொய் மாற்றும்...பொலிந்தார் - பொய்ந் நெறியினை மாற்றவல்ல திருநீற்றினைப் புனைந்த திருக்கோலத்தினிற் சிறந்து விளங்கினார்.

(வி - ரை) அம்மாற்றம் - தமது உயிர் துறந்து உலக வாழ்வினை மாற்றும் குறிப்பும், தம்மேல் நின்ற அரசாட்சியைத் தம் குமாரன்பால் மாற்றும் குறிப்பு முடைய அச்சொல் என்பார் மாற்றம் என்ற சொல்லாற் கூறினார்.

அழியும் அமைச்சர் - இவர்பால் வைத்த பேரன்பினாலும், இவர் உயிர் நீக்கத் துணிந்த சிவாபராதமாகிய பழிக்குத் தாமும் ஒருவகையால் காரணர்களாய் நின்ற எண்ணத்தாலும் அமைச்சர்கள் மனமழிந்தனர் என்க.

இடரகற்றி - ஏற்றன சொல்லி மனமழியும் துன்பத்தினைப் போக்கி.

கைமாற்றும் செயல் தாமே கடனாற்றும் - கை - பழி, சிறுமை; மாற்றும் செயல் - தீர்வு; செயலை என இரண்டனுருபு விரிக்க; தாமே கடனாற்றும் - கடன் - கடமையாக. தாமே ஆற்றுதலாவது தம்மை நெறி நிறுத்துவோர் பிறரின்மையால், தமக்குத் தீர்வு தாமே வகுத்தலும் ஆற்றுதலும் செய்தல்; உலகில் வாழும் ஏனைய உயிர்களை நெறி நிறுத்துவோன் அரசன்; அரசனை நெறி நிறுத்துவோர் பிறரில்லை; அவன் நேரியனாயின் தனது நெறி வழுவியபோது அறிந்து தீர்வைத் தனக்குத்தானே ஆற்றிக்கொள்ளுதல் நீதி என்பது; மனுநீதிச் சோழர், பொற்கைப் பாண்டியர் பாண்டியன், நெடுஞ்செழியன் சரிதங்களும் அவ்வகைய பிறவும் இங்கு நினைவு கூர்தற்பாலன; தீர்வுகளுள் உயிர் தருதலின்மேல் ஒன்றுமில்லையாதலின் அதனையே துணிந்தார்.

செம்மார்க்கம் - செம்மை தரும் நெறி; சிவன் நெறி.

பொய் மாற்றும் திருநீறு - பொய் என்பது ஈகண்டு நெறி வழுவியதால் வரும் எல்லாவகைத் தீமைகளையும் வினைவுகளையும் குறித்தது. பொய் - இறைவனொருவனே மெய் - சத்து - எனப் பெறுபவன்; உயிரைப்பற்றிய ஏனையவெல்லாம் பாசங்களாகிய பொய் - அசத்து - என்பர். "பாவ மறுப்பது நீறு", "சுத்தம தாவது நீறு" என்பன முதலாக வரும் திருநீற்றுப்பதிகம் பார்க்க.

திருநீற்றுக் - கோலம் என்று கூட்டுக. புனைகோலம் - இக்கழுவாயின் பொருட்டுத் தீப்புகுமுன் அதற்குத் தகுதியாகும் பொருட்டு உடற்றூய்மையும் உயிர்த் தூய்மையும் தரும் திருநீற்றினைப் புனைந்து கொண்டார் என்பதாம்.

செந்தீ - தீப் பல வகையும் செய்யுமாதலின் இங்குச் செம்மை செய்யும் தீ என்பது குறிப்பு. 38

3980. கண்டசடைச் சிரத்தினையோர் கனகமணிக் கலனேந்திக்
கொண்டுதிரு முடித்தாங்கிக் குலவுமெரி வலங்கொள்வார்

அண்டர்பிரான் றிருநாம மஞ்செழுத்து மெடுத்தோதி
மண்டுதழற் பிழம்பினிடை மகிழ்ந்தருளி யுட்புக்கார். ௩௯

(இ - ள்) கண்ட....ஏந்திக்கொண்டு - கண்ட அந்தச் சடைத்தலையினை மணி கள் அழுத்தியதோர் பொற்கலத்தில் ஏந்திக்கொண்டு; திருமுடித்தாங்கி...வலங் கொள்வார் - திருமுடியிலே தாங்கி, விளங்கும் தீயினைச்சுற்றி வலம் வருவாராகி; அண்டர்பிரான்...ஓதி - தேவர்கள் பெருமானும் சிவபிரானது திருநாமமாகிய திருவைந்தெழுத்தினையும் எடுத்து ஓதிக்கொண்டு; மண்டு...உட்புக்கார் - செறிந்து எழுகின்ற தீப்பிழம்பினுள்ளே மகிழ்ச்சி கொண்டருளி உள்ளே புகுந்தருளினர்.

(வி - ரை) கண்ட - தலையிற் சடை தெரியக்கண்ட; இவர் சிவ நெறியுடை யார் எனக்கண்ட; அதனாற், பழியினைக்கண்ட; அதனாற் றீர்வு சிவநாம மோதித் தீப்புகுதலே என்று கண்ட என்றிவ்வாறு பலவும் கொள்க. இத்துணையும் சடையினால் விளைவன என்பார் கண்ட சடை என்றார்.

கனகமணி...முடித்தாங்கி - பொற்கலத்தேந்தி முடியிற்றாங்குதல் சிவநெறி அடையாளமாகிய சடையின் சிறப்புக்கருதியும், தீர்வு பெறும் வழிபாடு கருதியு மாம். முடி - முடியின்கண் - ஏழாம் வேற்றுமைத் தொகை.

துலவும் எரி - விளங்கும் செந்தீ; சிவாசாரமாக விளங்கிப் பழிபோக்கிச் சிவனை அடைவிக்கும் தன்மையுடைய தீ; செந் தீ (3979).

வலங்கொள்வார் - ஓதி - என்று கூட்டுக. வலங்கொள்வார் - முற்றெச்சம்.

திருநாமம் அஞ்சேழுத்தும் எடுத்து ஓதி - பெருங்காரியத்தினிற் புகும்போது சிவ நாம மஞ்செழுத்தோதிப் புகுதல் மரபு. "தழைத்த வஞ்செழுத் தோதினார்" (544) என்பது முதலிய இடங்கள் பார்க்க. அஞ்செழுத்தே திருநாமமாவது என்க. "ஆலைப் படுகரும்பின் சாறு போல வண்ணிக்கு மஞ்செழுத்தி னாமத் தான்காண்", "திரு நாம மஞ்செழுத்துஞ் செப்பாராகில்" (தேவா); எடுத்து - வாய்விட்டு உரக்கச் சொல்லி.

மகிழ்ந்தருளி - மகிழ்ச்சியாவது சிவாபராதமாகிய பழியினீங்கித் தூய்மை பெறு தலாலாவது.

திருநாமத் தஞ்சேழுத்து - என்பதும் பாடம். 39

3981. புக்கபொழு தலர்மாரி புவிநிறையப் பொழிந்திழிய
மிக்கபெரு மங்கலதூ ரியம்விசும்பின் முழக்கெடுப்பச்
செக்கர்நெடுஞ் சடைமுடியார் சிலம்பலம்பு சேவடியின்
அக்கருணைத் திருநிழற்கீ ழாராமை யமர்ந்திருந்தார். ௪௦

(இ - ள்) புக்கபொழுது...பொழிந்திழிய - முன் கூறியவாறு தழற்பிழம்பினுள் நாயனார் புகுந்தபோது தெய்வப் பூ மழை நிலமுழுதும் நிறையப் பொழிய; மிக்க... முழக்கெடுப்ப - மிகுந்த பெரிய மங்கல வாத்திய ஓசைகள் ஆகாயத்தில் முழங்க; செக்கர்...அமர்ந்திருந்தார் - அந்திச் செவ்வானம் போன்ற நீண்ட சடைமுடியினை யுடைய சிவபெருமானது அந்தப் பெருங்கருணையாகிய திருவடி நீழலின்கீழே நீங்காத நிலையில் எழுந்தருளியிருந்தனர்.

(வி - ரை) அலர்மாரி - மங்கல தூரியம் இவை ஆகாயத்தில் எழுதல் சிவனருள் வெளிப்பாடுகளின்போது நிகழ்வன.

சடை முடியார் - சிவனடையாளமாகிய சடை காரணமாக இச்சரிதம் நிகழ்ந்த தாகலின் இத்தன்மை பற்றிக் கூறி முடித்தருளினர். சிலம்பு அலம்பு - மறை களாகிய நூபுரங்கள் ஒலிக்கும்.

அக்கருணைத் திருநிழல் - திருவருளே திருவடியாக உபசரித்துக் கூறப்படுதலின் அடிநிழல் என்பார் கருணைத் திருநிழல் என்றார் ; தீப்புகுந்தாராதலின் வெம்மைதாக் காது நிழல்தரப் பெற்றார் என்றது கவிநயம்.

ஆராமை - மீளாத நிலை. இன்பமாய் நீங்காத நிலை. இரண்டற என்பாருமுண்டு. சேவடி - முத்தி, நான்ற மலர்ப்பதத்தே நாடு என்றபடி, தூக்கிய திருவடி. 40

3982\. முரசங்கொள் கடற்றானை மூவேந்தர் தங்களின்முன்
பிரசங்கொ ணறுந்தொடையற் புகழ்ச்சோழர் பெருமையினைப்
பரசுங்குற் றேவலினா லவர்பாதம் பணிந்தேத்தி
நரசிங்க முனையர்திற நாமறிந்த படியுரைப்பாம். ௪௧

(இ - ள்) முரசங்கொள்...முன் - வெற்றி முரசுகள் ஒலிக்கின்ற கடல்போன்ற சேனைகளையுடைய முடி மன்னர்கள் மூவருள்ளும் முதன்மையாகிய ; பிரசங்கொள்... குற்றேவலினால் - தேன் பொருந்திய மணமுடைய மாலையணிந்த புகழ்ச் சோழரது பெருமையினைப் போற்றும் குற்றேவலாகிய தொண்டு செய்யும் வகையினாலே ; அவர்...ஏத்தி - அவரது திருவடிகளை வணங்கித் துதித்து அத்துணை வலிமையால் ; நரசிங்க முனையர்...உரைப்பாம் - நரசிங்க முனையரைய நாயனாரது அடிமைத் திறத் தினை நாம் அறிந்த வகையினாலே இனிச் சொல்வோம்.

(வி - ரை) இதுவரை கூறிவந்த புராணத்தை முடித்துக் காட்டி, ஆசிரியர், தமது மரபுப்படி, இனிச் சொல்லப்புகும் சரிதத்துக்குத் தோற்றுவாய் செய்கின்றார். இது கவிக்கூற்று.

கடல்தானை - பரப்பு, முழக்கு முதலிய பலவாற்றானும் கடல்போன்ற சேனை. மூவேந்தர் - சேர சோழ பாண்டியர் என்னும் முடி மன்னர்களாகிய தமிழ்ப் பெரு மன்னர்கள் ; முன் - முதன்மை பெற்ற ; பிரசம் - தேன். முரசம் - வெற்றி முரசு ; அம் - சாரியை.

பெருமையினைப் பரசும் குற்றேவலினால் - துதிக்கும் சிறுதொண்டு செய்யும் வகையால் ; இதுவரை கூறியது அவரது பெருமைக்குப் போதாது ; அஃது அதனைப் போற்றிய அளவில் அமையும் சிறு தொண்டேயாகும் என்பது ; குற் றேவல் - சிறு தொண்டு. ஏவலினால் - தொண்டு செய்ததன் மூலம். ஏவலினால் - ஏத்தி என்க. தொடை - ஆத்திமாலை.

ஏத்தி - உரைப்பாம் - என்க ; ஏத்தி அத்துணை கொண்டு என்பதாம். திறம் - அடிமைத்திறம். 41

சரிதச் சுருக்கம் : புகழ்ச்சோழ நாயனார் புராணம்:—பொன்மலைமேற் புலிக்குறி பொறித்து அதுவரை நாடு கொண்டு ஆளும் பழ மன்னர்கள் சோழர். அவர் இனிதாளும் சோழ நாட்டின் பழைய ஊராகிய உறையூர் அதன் சிறப்புடைய தலை நகரங்களுள் ஒன்று. அந்நகரில் இருந்து அரசுபுரிந்த அடலரசர் கோமான், அநபாயரின் வழி முதலாகிய புகழ்ச் சோழர் என்பவர்.

அவர் தமது தோள் வலிமையினால் உலக மன்னர்கள் தமது பணிகேட்டுத் தம் ஆணையின்கீழ் அடங்கி நடக்கச் செங்கோலாட்சி புரிந்தனர். சிவாலயங்களிலெல்லாம் பூசனை விளங்கச் செய்வித்தும் அடியார்க்கு வேண்டுவன குறிப்பறிந்து கொடுத்தும் திருநீற்று நெறியினைப் பாலித்தனர்.

கொங்கரும் குடபுல மன்னவர்களும் திறைகொணரத் தமது மரபின் தலைநகராகிய கருவூரில் வந்து அத்தாணி மண்டபத்தில் அரச கொலு வீற்றிருந்து அம்மன்னர்கள் கொணர்ந்த திறை கண்டிருந்தனர். திறைகொணர்ந்து பணிந்த மன்னர்களுக்குச் செயலுரிமைத் தொழிலருளினர். அவ்வாறு திறைகொணரா மன்னர் உளராகில் தெரிந்துரைப்பீர் என்று அமைச்சர்க்குக் கட்டளையிட்டனர்.

இவ்வாறு நிகழுநாளில், சிவகாமி யாண்டார் என்னும் அடியார் சிவனுக்குச் சாத்தக்கொணர்ந்த பூவை அரசாது யானை பறித்துச் சிந்தியதனால் எறிபத்த நாயனார் அவ்வானையினையும் பாகரையும் எறிந்து கொன்றனர்; அது கேட்டுச் சினந்து சென்ற புகழ்ச்சோழர் தமது யானையால் நேர்ந்த சிவாபராதத்தினைக்கேட்டு அதற்குத் தீர்வாகத் தம்மையும் கொல்லவேண்டுமென்று எறிபத்தரது கையில் தம் உடைவாளினை நீட்டினர். இச்செய்தித் திறத்தாலே அடிமைத்திறம் வெளிப்பட்டுலகுய்யவும், யானையும் பாகரும் உயிர்பெற்றெழவும் அருள் பெற்றனர்.

இந்நாள்களில், அளந்த திறைகொணராது முரண்பட்ட அதிகன் என்பவன் அணித்தாகிய மலையரணத்துள்ளான் என்று அமைச்சர் அரசர்க்கு அறிவித்தனர். படை எழுந்து அவ்வரணினை அழித்து வரும்படி அமைச்சர்க்கு அரசர் கட்டளையிட்டனர். அமைச்சர்களும் அவ்வாறே சேனையுடன் சென்று அவ் வலிய அரணை முற்றுகையிட்டு அழித்து அதிகனது சேனையினையும் வென்றனர். அதிகன் தப்பிக் கானகத்துள் ஓடிவிட்டான். அமைச்சர்கள் வெற்றியுடனே அங்கு நின்றும் யானை, குதிரை முதலியவற்றையும், போர்ச்சின்னமாகப், பொருதற்ற தலைக்குவியல்களையும் அரசன் முன் கொண்டுவந்தனர்.

அவ்வாறு கொணர்ந்த தலைக்குவியலுள், அரசர், ஒருதலையிற் புன்சடை கண்டனர்; கண்டு நடுங்கிக் கண்ணீர் வார்ந்து தாம் திருநீற்று நெறி புரந்து அரசளித்தது சால அழகிது! என்று தம்மையே இகழ்ந்து கொண்டனர்; தமது குமாரனைத் தொண்டின் வழி நிற்ப வென்றி முடிசூட்டும்படி அமைச்சர்க்குக் கட்டளையிட்டருளினர்; தமக்கு நேர்ந்த சிவாபராதமாகிய பழிக்குத் தீர்வு தாமே வகுப்பாராகிச் செந்தீமுன் வளர்ப்பித்தனர்; பொய்ம்மாற்றும் திருநீற்றுக் கோலம் புனைந்தனர்; அச்சடைத் தலையினைப் பொற்கலத்தில் தலைமேல் ஏந்திக் கொண்டு, எரியை வலங்கொள்வார் திருவைந்தெழுத்தினை ஓதிக்கொண்டு மகிழ்ச்சியுடன் எரியினுட் புகுந்தருளி இறைவரது கருணைத் திருவடிநிழற்கீழ் நீங்காது அமர்ந்திருந்தனர்.

: 1. ஓர் அரசனது மரபின் மேன்மை அவனது மரபின் முன்னோர்களால் விளங்குவதன்றியும், அவன்வழித் தோன்றல்களாய்ப் பின்வரும் அரசர் மேன்மையினாலும் அறியப்படும் (3949).

2. மன்னனது அரசாட்சியின் உயர்வானது மன்பதைகளின் உடலுடைமைகளைக் காத்தளித்தலால்மட்டுமேயன்றி அவர்களது உயிர்க்குறுதி பயக்கும் செயல்களாலுமாம்.

3. உயிர்க்குறுதி பயத்தல், சிவாலயப் பூசை, சிவனடியார் பூசை என்பனவற்றாலாவது.

4. பேரரசர் தம்கீழ் உள்ள சிற்றரசர்களின் திறைபெறுவதற்கு அவர் நாடுகளுக்கு அணிமையில் அங்கங்கும் தமது தலைநகரங்களை அமைத்துக் கொண்டு, அங்கங்கும் சென்று தங்கி அரசுகொலு வீற்றிருப்பது மரபு. இது நாடுகாவல் பற்றிய முறையுமாம் (3952).

5. பேரரசர் தமது ஆணையுள் அடங்கித் திறை செலுத்தும் சிற்றரசர்க்கு அவ்வவர் நாட்டுச் செயலுரிமைத் தொழில் செய்யும்படி அருள்புரிவர் (3855).

6. மன்னனது சேனைவீரர் தம் அரசர்க்காக எதிரிகளது படைகளுடன் போரிட்டு உயிர் துறத்தல் செஞ்சோற்றுக் கடன் கழித்தற்பொருட்டு (3964).

7. போரில் தோல்வியுற்ற மன்னன் ஓடிக் கானகத் தொளித்து உயிர் தப்பிப் பிழைத்துப் பின்னர் நற்காலம் பார்த்திருத்தலும் வழக்கு. அதனால் அவரது வீரத்துக் கிழுக்கின்றாம் (3970).

8. போரில் வெட்டுண்டு வீழ்ந்த எதிரியின் சேனை வீரர்களின் தலைகளைக் குவியலாக்கி, வெற்றி பெற்றோர், போர்ச் சின்னமாகத் தமது அரசனிடம் கொணர்தல் முன்னாட் போர் முறை வழக்கினுள் ஒன்று (3973).

9. சடைகொண்ட தலையினையுடையவரைப் போரிற்றானும் கொல்வது பெரும்பழியும் சிவநெறிக்கு விலக்கும் ஆகும் (3976, 3977).

10. சிவாபராதத்துக்குத் தீர்வு உயிர் கொடுத்து இறத்தலேயாம்.

11. தன்கீழ் வாழும் உயிர்கள் செய்யும் குற்றங்களுக்கு அரசன் தீர்வு விதிப்பான். ஆனால், அரசன், தானும் தன் பரிசனங்களும் செய்து கொண்ட பழிக்குத் தீர்வு தாமே வகுத்துக் கொள்ளுதல் வேண்டும் (3979).

12. பெருங்குற்றத் தீர்வினை வகுத்து உயிர் நீப்போர் சிவநாமஞ் சொல்லிப் புகுதல் மரபு (3980).

தலவிசேடம்: I கருவூர் - எறிபத்த நாயனார் புராணத்திறுதியில் உரைக்கப்பட்டது. II பக். எ௬அ பார்க்க. 2237 பாட்டின்கீழ் தலவிசேடமும் பார்க்க. IV- பக்க - ௬௪௩ ம் பார்க்க.

2. உறையூர் - பாட்டு 2241 - தலவிசேடம் - திருமூக்கீச்சரம் பார்க்க IV- பக்கம் ௬௪௪ பார்க்க.

41. புகழ்ச்சோழ நாயனார் புராணம் முற்றும்.



சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# 42. நரசிங்கமுனையரைய நாயனுர் புராணம்

## தொகை

"மெய்யடியா னரசிங்க முனையரையர்க் கடியேன்"

—திருத்தொண்டத்தொகை - (7)

மெய்யடியர்—மெய்யடியன்—என்பனவும் பாடபேதங்கள்.

## வகை

புகழும் படியெம் பரமே? தவர்க்குநற் பொன்னிடுவோன்
இகழும் படியோர் தவன்மட வார்புனை கோலமெங்கும்
திகழும் படிகண் டவற்கன் றிரட்டிபொன் னிட்டவனி
திகழு முடிநர சிங்க முனையர சன்றிறமே"

—திருத்தொண்டர் திருவந்தாதி - (51)

## விரி

3983. கோடாத நெறிவிளங்குங் குடிமரபி னரசளித்து
மாடாக மணிகண்டர் திருநீறே மனங்கொள்வார்
தேடாத பெருவளத்திற் சிறந்ததிரு முனைப்பாடி
நாடாளுங் காவலனுர் நரசிங்க முனையரையர். க

புராணம் : நரசிங்க முனையரைய நாயனுரது சரித வரலாறும் பண்பும் கூறும் பகுதி. இனி, நிறுத்த முறையானே, ஆசிரியர், எட்டாவது பொய்படிமை யில்லாத புலவர் சருக்கத்துள் மூன்ருவது நரசிங்க முனையரையர் புராணங் கூறத் தொடங்கு

தொகை : மெய்யடியாராகிய நரசிங்கமுனையரையர் என்னும் திருத்தொண்டர்க்கு நான் அடியேன். மெய்யடியான் - மெய் - இயற்கையடைமொழி. "வாய்மைச், சால்பின்மிக் குயர்திருத் தொண்டினுண் மைத்திறந் தன்னையே தெளிய நாடி" (2421) என்றபடி திருத்தொண்டின் அடிமைத் திறமானது திருவேடத்தின் உண்மையில் வைத்த உறைப்புடைமையேயாம்; பிறிதன்று; என்ற நிலையே மெய்யடிமை யாவது என்பது இவர் சரிதக் குறிப்பென்றதாம். பெயரும் பண்பும் தொகைநூல் உணர்த்தியபடி.

வகை : தவர்க்கு நற்பொன் இடுவோன் - அடியார்களுக்கு (ஆதிரை நாடோறும்) நற்பொன் தருபவர் (அந்நிலையில் ஒரு ஆதிரை நாளில்); இகழும்படி...... கண்டு - இகழ்ச்சி பெறும்படி ஒரு அடியார் பெண்களாற் புனையப் பெற்ற காமக்

கோலம் மேனி எங்கும் விளங்கும்படி யிருந்த நிலையினைக் கண்டு; அவற்கு...பொன் இட்டு - அன்று அவருக்கு இரட்டிப்புப் பொன் கொடுத்து ; அவனி...திறமே - உலகில் விளக்கும் மகுடம் தரித்த நரசிங்க முனையரையரது திறத்தினையே; புகழும்படி எம்பரமே ? - புகழும் தன்மையானது எமது அளவில் அடங்குமோ ? (அடங்காது); திறமே - புகழும்படி என்று கூட்டுக. கூட்டுவிற் பொருள்கோள் ; பரம் - பாரம் என்பது பரம்என நின்றது ; ஏ எதிர்மறை; பாரம் - வல்லமை - தகுதி; தவர் - சிவனடியார்; தவமாவது அடியார் திருவேடம் தாங்குதலும் திருத்தொண்டுமாம்; பொன்னிடுவோன் - ஆதிரை நாடோறும் அடியாரைப் பூசித்து நூறு பொன்தரும் நியமமுடையோன் (3986) ; இடுதல் - தருதல் ; இகழும்படி - கண்டோர் இகழும்படியாக ; மடவார்...நிகழும்படி-மடவார் புணர்ச்சிகோலமாவன நகக்குறி, நோய் முதலியன என்பர். "நிகழ்காமக் குறிமலர்ந்த, ஊனநிகழ்மேனி" (3987) என்பது விரிநூல். மிக்கூர்ந்த பொருந்தாக் காமத்தால் விளையும் கேடுகளின் ஊனங்களாகிய அடையாளங்கள் என்பது குறிப்புப் போலும் ; படி கண்டு - படியினைக் கண்டு ; இரட்டிபொன் - நியமமாகத்தரும் நூறு பொன்னினை இரட்டித்து இருநூறாக்கிய பொன். அவனி திகழ்தலாவது உலகில் அடிமைப்பண்பின் உண்மைத்திறம் விளங்குதல். திறம் - உயர்ந்த பண்பு ; உறைப்பு. பேரும் அடிமைப் பண்பும் வரலாறும் வகைநூல் வகுத்துரைத்தது. இவை விரிந்தபடி விரிநூலுட் கண்டு கொள்க.

விரி : 3983. (இ - ள்) கோடாத...அரசளித்து - செங்கோல் நீதி பிறழாத நெறியில் விளங்கும் குறுநிலமன்னர் மரபில் வந்து அரசு செய்து ; மாடாக... மனங்கொள்வார் - பெருஞ் செல்வமாகத் திருநீலகண்டருடைய திருநீற்றினையே மனத்திற் கொள்பவர்; தேடாத...காவலனார் - தேடிப்பெற வேண்டாது இயல்பிலே பெருவளங்களிற் சிறந்த திருமுனைப்பாடி நாட்டினை ஆளும் அரசர் ; நரசிங்கமுனையரையர் - நரசிங்கமுனையரைய ரென்னும் பெயருடையவர்.

(வி - ரை) கோடாதநெறி - செங்கோல் நீதிநெறி பிறழாத நிலை.

முடிமரபு - பேரரசாகிய முடிமன்னரின் கீழிருந்து அரசுபுரியும் குறுநிலமன்னர் மரபு ; முடிசூடுமுரிமையில்லாதோர்.

மாடு - பெருஞ்செல்வம் ; திருநீறே - ஏகாரம் பிரிநிலை ; திருநீறே செல்வமாவது ; ஏனையவை செல்வமல்ல என்பது ; மனங்கொள்ளுதல் - துணிதல், உறுதி கொள்ளுதல் ; திருநீற்றின் முன் ஏனையவற்றைப் பொருளாக வைத்தெண்ணாத நிலையின் வரும் இவர் சரித வரலாறு குறிக்க.

தேடாத பெருவளத்தில்...நாடு - தேடாத - நாடியடைய வேண்டாத ; பெருவளம்-தன் இயல்பில் நாடுதரும் வளங்கள். "ஏர் இனப்பண்ணை...எவ்வுலகும், வனப்பெண்ண வரும்பெண்ணை மாநதிபாய் வளம்பெருகும்" (1268) என்பதாதியாக இந்நாட்டு இயற்கை வளங்களை முன்னர் உரைத்தாராதலிற் தேடாத பெருவளம் என்ற மட்டில் இங்குக் கூறியமைந்தார். "நாடென்ப நாடா வளத்தன ; நாடல்ல, நாட வளந்தரு நாடு" (குறள்) என்ற கருத்தினை இங்கு வைத்துக் காண்க. எமது மாதவச் சிவஞான முனிவர் "நாடிய பொருள் கைகூடும்" என்ற கம்பனிராமாயண முதற் செய்யுட் பகுதிக்கு ஆசங்கை யுரைத்த வழி இக்கருத்தினை எடுத்தாண்டமை காண்க. பிறநாடுகளிற் றேடி யடைதற்கரிய வளமுமாம்.

நாடாளுங் காவலனார் - இந்நரசிங்க முனையரையர் ஆளுடைய நம்பிகள் காலத்திருந்தவர் என்பதும், நம்பிகளைத் தமது அன்பு மகனாராக எடுத்து வளர்த்தவர் என்பதும் கருதப்படும் ; அதனைக் குறிக்க நாடாளும் என்றார். அரையர் - அரசர்.

மணங்கோள்வார் - காவலனார் நரசிங்கமுனையரையர் என்று கூட்டுக. முனைய தரையர் என்பது முனையரையர் என வந்தது. இது பற்றி முன் (467) உரைத்தவை பார்க்க. இதனால் நாட்டுச் சிறப்பும், அரசமரபுச் சிறப்பும், அரசர் பெயரும், பண்பும் கூறப்பட்டன.

மாடாத - துலமரபில்—என்பனவும் பாடங்கள். மாடாத - மாளாத. 1

3884. இம்முனையர் பெருந்தகையா ரிருந்தரசு புரந்துபோய்த்
தெம்முனைகள் பலகடந்து தீங்குநெறிப் பாங்ககல
மும்முனைநீ ளிலைச்சூல முதற்படையார் தொண்டுபுரி
அம்முனைவ ரடியடைவே யரும்பெரும்பே றெனவடைவார், ௨

3985. சினவிடையார் கோயிறோறுந் திருச்செல்வம் பெருக்குநெறி
அனவிடையா ருயிர்துறக்க வருமேனு மவைகாத்து
மனவிடையா மைத்தொடைய வணிமார்பர் வழித்தொண்டு
கனவிடையா கிலும்வழுவாக் கடனாற்றிச் செல்கின்றார், ௩

3986. ஆறணிந்த சடைமுடியார்க் காதிரைநா டோறுமென்றும்
வேறுநிறை வழிபாடு விளங்கியபூ சனைமேவி
நீறணியுந் தொண்டரணைந் தார்க்கெல்லா நிகழ்பசும்பொன்
நூறுகுறை யாமலளித் தின்னமுது நுகர்விப்பார், ௪

3987. ஆனசெயன் முறைபுரிவா ரொருதிருவா திரைநாளில்
மேன்மைநெறித் தொண்டர்க்கு விளங்கியபொன் னிடும்பொழுதின்
மானநிலை யழிதன்மை வருங்காமக் குறிமலர்ந்த
ஊனநிகழ் மேனியரா யொருவர்நீ றணிந்தணைந்தார். ௫

3984. (இ - ள்) இம்முனையர் பெருந்தகையார்...அகல - இந்த முனையர் மரபின் பெருந்தகையாராகிய அரசர் தமது நகரிலிருந்து அரசளித்துப், பகைவர்களின் போர்கள் பலவற்றையும் வென்று, தீமையாகிய நெறிகளின் செயல்கள் எல்லாம் நீங்க; மும்முனை நீள்...அடைவார் - மூன்று முனைகளையுடைய நீண்ட இலைவடிவினதாகிய சூலமாகிய முதன்மை பெற்ற படையினை ஏந்திய இறைவரது திருத்தொண்டு புரிகின்ற அந்த முதல்வர்களாகும் அடியவர்களின் திருவடிகளை அடைவதுவே அரிய பெரிய பேறு என்று அடைவாராய், ௨

3985. (இ - ள்) சினவிடையார்...நெறியன இடை - சினம் பொருந்திய விடையினையுடைய இறைவரது திருக்கோயில்கள் தோறும் திருச்செல்வங்களைப் பெருகச் செய்யும் நெறியாகியவற்றின்கண் ; ஆருயிர்...காத்து - அரிய உயிரை விட வந்தாலும் அந்நெறிகளைக் காவல் புரிந்து ; மனவிடை....வழித்தொண்டு - மனவு மணிவடங்களினிடையே ஆமையோட்டை அணிந்த மார்பினையுடைய இறைவரது வழித்தொண்டினை ; கனவிடையாகிலும்...செல்கின்றார் - கனவிலேயும் பிறழாது கடமைபூண்டு செய்துவருகின்றாராகி ; ௩

3986. (இ - ள்) ஆறணிந்த...மேவி - கங்கையாற்றினைத் தரித்த சடையினையுடையமுடியாராகிய சிவபெருமானுக்குத் திரு ஆதிரை நாள்தோறும் நித்தியமாக

வேறுக நிறைந்த வழிபாடு விளங்கிய பூசனையைச் செய்து ; நீறணியும்...அளித்து - திருநீறணிந்த திருத்தொண்டர்களாய் அன்று அணைந்தவர்களுக் கெல்லாம் குறை யாமல் நிகழும் நூறு பசும்பொன் அளித்து ; இன் அமுது நுகர்விப்பார் - இனிய திருவமுதும் ஊட்டுவாராகி, ௪

3987. (இ - ள்) ஆன செயல்முறை...நாளில் - அவ்வாறுயின செயலினை முறையாகச் செய்வாராகிய நாயனர் ; ஒரு திருவாதிரை நாளில்...பொழுதில் - ஒரு திருவாதிரை நாளிலே மேன்மையுடைய சிவநெறித் திருத்தொண்டர்களுக்கு விளங்கிய பொன்கொடுக்கும் போது ; மானநிலை...மேனியராய் - மானநிலை அழியும் தன்மை வரும் காமக்குறிகள் தெரியும் குற்றம் பொருந்திய மேனியை யுடையவராய் ; ஒருவர்...அணைந்தார் - ஒருவர் திருநீற்றினை அணிந்து வந்தணைந்தனர். ரு

இந்நான்கு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டுரைக்க நின்றன.

பெருந்தகையார் - அகல - அடைவார் (3984) - காத்து - ஆற்றிச் செல்கின்ருர் (3985) - மேவி அளித்து - நுகர்விப்பார் (3986) - இநம் பொழுதில் - ஒருவர் - அணைந்தார் (3987) என்று முடித்துக் கொள்க.

3984. (வி - ரை) முனையர் - முனையதரையர் என்னும் குறுநில மன்னர் மரபு.

தெம்முனைகள் - பகைவர்களது போர். "தெவ்வுப் பன்மை"

அகல - அகலச்செய்து ; அகற்றி ; அகல - அடைவார் என்று கூட்டுக.

தொண்டுபுரி அம் முனைவர் - தொண்டர்கள் ; அகரம் பண்டறிசுட்டு ; முனைவர் - முதல்வர்கள் ; அவர்களே தலைவராதற்குரியவர் என்ற கருத்து. "அகில காரணர் தான்பணி வார்கடாம், அகில லோகமு மாடற் குரியர்" (139) என்றது காண்க. தலைமைபற்றிச் சூலமுதற் படையென்ருர்.

அடியடைவே பேறு - அடைதலே பெரும் பேருகும். இப்பாட்டுத் திரிபு என்ற சொல்லணி கொண்டது. அடைவு - தொழிற்பெயர். 2

3985. (வி - ரை) திருச்செல்வம் பெருக்கும் நெறி யனவிடை - திருச்செல்வம் - கோயிற்செல்வமாவன - வழிபாட்டுச் சிறப்புக்களும், அவற்றுக் காதாரமாக உள்ள ஏனைச் செல்வ நிலைகளும் ஆம் ; திரு - சிவசம்பந்தமான ஐசுவரியம்.

நெறி அன இடை - நெறியில் வருவனவாகியவற்றின்கண் ; இடை - ஏழனுருபு.

ஆருயிர்...காத்து-சிவச்செல்வமாகிய நெறிகளைப் பெருக நிகழ்வித்தற்கண் தமது உயிர் துறக்க நேரிட்டாலும் பொருட்படுத்தாது அச் சிவச் செல்வத்தையே காத்து அதனை உயிரினும் மேலானதாகக் கருதி இறைவர் ஆலயத்திற் குறைவுறின் உயிர் விடநேரினும் அவைகாத்து உயிர்விடுவோர் சிவபுரியிற் சேர்வர் என்பது ஆகமவிதி ; "சங்கானலயத்திற் றவறுறினே சாகத்துணிந்தழிகை பாங்கே, யவாமலன் புரிய தனைச் சார்வர்" (சிவதருமோ).

மனவு - மனவுமணி - பாசி ; (சோகி என்பர்.) அக்குமணியுமாம்.

ஆமைத்தோடையல் - ஆமையோட்டாலாகிய மாலை ; மனவிடை...மார்பர் - சிவபெருமான் ; இடை - இடையிலே. தோறு - எஞ்சாமைப் பொருள் தருவதோர் இடைச்சொல்.

கனவிடையாகிலும் வழுவாக்கடன் - கனவினில் வழுவாதியற்றுதலே யன்றிக் கனவினும் வழுவாமல் கடமை பூண்டு.

இப்பாட்டும் திரிபு என்ற சொல்லணியுடையது. 3

3986. (வி - ரை) ஆதிரைநாள் தோறும்...பூசனை மேவி - திருவாதிரை சிவனுக்குகந்த சிறந்தநாள் ; " ஆதிரை நாளுகந் தானு மாரூ ரமர்ந்தவம் மானே " (தேவா), " ஆதிரைநன் னாளான் றன்னை," " நாளாதிரை யென்றே " " ஆதிரை நாள் காணாதே " என்பன முதலியவை காண்க. " மதியணி புனித னன்னாள் " (278) ; " சிவனுக்கிசைந்த பேர் வழியி னாலும் " (திருத்தொண்டர் புராண வரலாறு - 80) ; திருவாதிரை நாளில் சிவனுக்கு வழிபாடு செய்தல் சிறப் புடைத்து என்பது சிவாகமங்களின் விதி ; பகவத்கீதையினும், கண்ணன் மாதங்களில் மார்கழியாகவும், நாட்களில் (நட்சத்திரங்களில்) திருவாதிரையாகவுமிருக்கிறேன் என்று அருச்சுனனுக்கு உபதேசித்தான் என்ற வரலாறும், அது சிவனது முழு முதன்மையைக் குறிப்பதும் காண்க. ஆளுடைய பிள்ளையார் திருவவதாரமும், அவர் ஞானவமுதுண்டமையும் திருவாதிரை நாளில் நிகழ்ந்தன என்ற வரலாறும் காண்க.

என்றும் - நித்தியமாக ; நித்தியம் என்பது நைமித்திகத்தின் வேறாய் நாளும் அமைவது. நைமித்திகம் - நிமித்தம் பற்றியது.

வேறு நிறை வழிபாடு - தாம் இயற்றும் நித்திய வழிபாடுகளினுடன் தனியாய், அந்நாளில் நிறைவாகிய சிறப்பு வழிபாடு.

நீறணியும்...அமுது நுகர்விப்பார் - இந்நாயனார் திருவாதிரை நாள்தோறும் சிவனுக்குச் சிறப்பாக தனிப் பூசனையும், அணைந்த அடியார்களுக்கு எல்லாம் ஒவ் வொருவருக்கு நூறு பொன் கொடுத்துத் திருவமுதூட்டும் வகையால் அடியார் பூசையும் ஆக இரண்டும் செய்துவந்தனர்.

நிகழ் பசும் பொன்* - நிகழ்தல் - பண்ட மாற்றுக்குதவியாகப் பொன் நாணய மாக நிகழ்தல் - வழங்குதல். முன்னாளில் பொன் என்ற இந்நாணயம் இந்நாட்டில் வழங்கிவந்தது என்பது நாட்டு நடப்புச் சரிதத்தாலறியப்படும் உண்மை. பொன்னாண யம் வழங்குதல் ஒருநாட்டின் செல்வநிலையின் மேம்பாடு குறிக்கும் அடையாளமாம் என்பது பொருணூலோர் கண்டவுண்மை. அவ்வழக்குமாறி, வெள்ளி நாணயமும் மாறி, வெண்கல ஈய நாணயங்களும் காகிதங்களுமே வழங்கி வருதல் இந்நாளில் நமது நாடு பொருளாதாரத் தன்மையில் நிற்கும் மிக்க கீழ்நிலையினைக் குறிக்கு மென்பர் நூலுணர்ந்தோர்.

அணைந்தார்க்கு எல்லாம் - அடியவராய் வரும் எல்லாருக்கும் ; ஒவ்வொரு வருக்கும் தனித்தனி.

இன்அமுது நுகர்விப்பார் - இனிய திருவமுதூட்டினர் ; இது மாகேசுர பூசை எனப்படும். 443 - 3621 - 3673 - முதலியவை பார்க்க. 4

3987. (வி - ரை) புரிவார் - விடும் பொழுதில் - ஒருவர் - அணைந்தார் என்று முடிக்க. பிறவினை வினைமுதல் கொண்டு முடிந்தது.

ஒரு திருவாதிரை நாளில் - அவ்விசேட பூசை செய்யும் நாளில் ; விளங்கிய - அடிமைத் திருப்பண்பு விளங்கிய ; ஒருநாள் - ஒப்பற்ற தனிநாள் என்பதும் குறிப்பு.

மானநிலை.. ஊனம் நிகழ் மேனியர் - காமக்குறி மலர்தல் ஊனமாம்; காமத்தறி- இவை நோயின் அறிகுறிகளும் நகக்குறி முதலியவையுமாம். மீதூரும் பொருந்தாக் காமத்தினால் வெளிப்படக் காணும் (குறிகள்) அடையாளங்கள் பெற்றனர்.

*பொன் என்பது முன் 10, 12-அணா விலையில் வழங்கியது; இப்போது 2, 3 ரூபாய்பெற நிகழ்வது. நம்பிகளுக்கு 12000 பொன் இறைவர் திருமுதுகுன்றத் தில் அருளினார் என்பது இத்தகைய பொன் நாணயவகையில் கருதப்படுவதாம்.

மானம் அழிதன்மை - "மானம் படவரின் வாழாமை முன்னினிதே" என்பது நீதிநூல். இவர் மானம் அழிதன்மை வரும் காமக் குறிகள் பலவும் வெளிப்பட நிகழ்ந்த ஊனம் விளக்கவும் நின்றனர் என்பதாம்.

நீறணிந்து - அவ்வூன நிகழ் மேனியில் அதனுடன் பொருந்தாத திருநீற்றினையும் அணிந்து கொண்டு; நீறணிதலே அடியாராந் தன்மை தருவது என உணர்ந்தாராதலின் காமக்குறிவிளக்க மானநிலையழி தன்மை வெளிப்பட இருப்பினும் நீற்றினையும் அணிந்து வந்தார். இச்செயலே மேற்சரித விளைவுக்குக் காரணமாயிற்றென்க.

ஒருவர் - இத்தன்மையில் வந்தவர் இவர் ஒருவரேயாம் என்பது; ஒப்பில்லாதவர் என்பதுமாம்; என்னை? இப்புண்ணிய சரித விளைவுக்கு ஏதுவாயிருந்தமைபற்றி. 5

3988. மற்றவர்தம் வடிவிருந்த படிகண்டு மருங்குள்ளார்
உற்றவிகழ்ச் சியராகி யொதுங்குவார் தமைக்கண்டு
கொற்றவனா ரெதிர்சென்று கைகுவித்துக் கொடுபோந்தப்
பெற்றியினார் தமைமிகவுங் கொண்டாடிப் பேணுவார்; ௬

3989. சீலமில ரேயெனினுந் திருநீறு சேர்ந்தாரை
ஞாலமிகழ்ந் தருநரக நண்ணுமே லெண்ணுவார்
பாலணைந்தார் தமக்களித்த படியிரட்டிப் பொன்கொடுத்து
மேலவரைத் தொழுதினிய மொழிவிளம்பி விடைகொடுத்தார். ௭

3988. (இ - ள்) மற்றவர்தம்...படிகண்டு - மற்றும் அவருடைய வடிவம் இருந்த தன்மையினையே பார்த்து; மருங்குள்ளார்...தமைக் கண்டு - பக்கத்தில் இருந்தவர்கள் இகழ்ச்சியோடும் அவரை அணுகாமல் அருவருத்து ஒதுங்குவாராக அதனைக் கண்டு; கொற்றவனார்...பேணுவார் - அரசர் அவரெதிரே சென்று கை கூப்பி வணங்கி அழைத்துக்கொண்டு வந்து அத்தன்மையுடைய அவரை மிகவும் பாராட்டி உபசரிப்பாராகி, ௬

3989. (இ - ள்) சீலமிலரே...எண்ணுவார் - உலகியல் நெறியாகிய சீல ஒழுக்கம் இல்லாதவர்களேயானாலும் திருநீற்றினைச் சார்ந்த அடியவர்களை உலகத்தார் இகழ்ந்து அதனால் கொடிய நரகமடையாமல் உய்யவேண்டும் என்று சிந்திப்பவராய்; பாலணைந்தார்...கொடுத்து - அங்கு அணைந்தவர்களுக்குக் கொடுத்ததனிலும் இரட்டிப்பாக இருநூறு பொன்கொடுத்து; மேலவரை...கொடுத்தார் - அதன்மேல் அவரைத் தொழுது இனிய மொழிகளைச் சொல்லி உபசரித்து அவருக்கு விடை கொடுத்தனர்.

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டுரைக்க நின்றன.

3988. (வி - ரை) ஒதுங்குவார் தமைக்கண்டு - அந்த அடியார் அணிந்த திருநீற்றின் தன்மையினைப் பார்த்தும் அவரது உடற்றன்மையான நிலையினையே கருதி அருவருத்துப் பக்கத்திலிருந்தவர்கள் ஒதுங்கிய நிலையினைப் பார்த்து; இருந்தபடி - இருந்த தன்மையினையே; ஏகாரம் தொக்கது.

பேணுவார் - எண்ணுவார் - திருநீற்றினை அணிந்த நிலையே பேணத்தக்கது என்பது ஒன்று; உலகர் அவ்வாறு பேணாது உடலின்நிலையே கண்டு இகழ்ந்தனராயின் நரகடைவர்; அவ்வாறு அடையாத உலகினரைக் காத்துச் சிவநெறிகாட்டுதல் வேண்டும் என்று உலகர்பாற்கொண்ட இரக்கம் மற்றொன்று என்பார், பேணுவார்

என்றும், எண்ணுவார் என்றும் இரண்டு வினையெச்சங்களாற் கூறினார்; இவற்றுள் பேணுதல் தமது நெறியின் பொருட்டும், எண்ணுதல் உலகர்க்குபகாரமாகப் பிறர் பொருட்டுமாம். முன்னையதே சிறந்தது என்பார் அதனை முன்வைத்தோதினார். அஃது அடிமை நெறி; "தொண்டுபுரி அம்முனைவ ரடியடைவே அரும் பெரும்பே றெனஅடைவார்" (3984) என்ற தமது ஒழுக்கம்; பின்னையதும் வேண்டும் என்பது உலகைச் சிவநெறி நிறுத்தத் தாம் ஒழுகிக் காட்டுமுறை பற்றி; "மன்ன னெப்படி மன்னுயி ரப்படி" என்பது அரசியல் நெறி; ஆதலின் பிறர் பொருட்டாம் என்பதனை வைப்பு முறையாலுணர வைத்தார். இவ்விரண்டினையும் குறித்தலே இரட்டிப் பொன்கொடுத்த குறிப்புமாம் என்க.

எதிர்சென்று...பேணுவார் - இவை அடியவரை உபசரிக்கு முறை; முன் உரைத்தவை யெல்லாம் பார்க்க. (443 முதலாகிய பல இடங்கள்); அப்பெற்றி யினார் - அகரம் முன்னறி சுட்டு; "மானமிலா ..நீறணிந்து" என்ற அந்தப் பெற்றி என்க. 6

3989. (வி - ரை) சீலம் இலரே...எண்ணுவார் - இஃது உலகவர் பொருட்டு இரக்கம் கொண்டு அரசர் எண்ணியது. அரசர் கடமைகளுள் தம் கீழ் வாழு முயிர்கள் கீழ் நெறிப்பட்டுக் கேடுபடாதபடி காத்தற்பொருட்டுத் தாமே கருணையினால் வழிநடந்து வழிகாட்டுதல் சிறந்த பெரிய கடமையாம்; "வையகமும் துயர் தீர்கவே" (தேவா) என்பது எங்கம் பரமசாரியரது திருவாக்கு; "எவரேனும் தாமாக விலாடத் திட்ட திருநீறுஞ் சாதனமுங் கண்டா லுள்கி, யுவராதே யவரவரைக் கண்டபோது வுகந்தடிமைத் திறநினைந்தங் குவந்து நோக்கி" (தேவா அரசு); "நலமில ராக நலமதுண் டாக நாடவர் நாடறி கின்ற, குலமில ராகக் குலமதுண் டாக தவம்புரி குலச்சிறை" (தேவாரம்-பிள்ளையார்); "உலகர் கொள்ளு நலத்தின ராயினும், அலகி றீமைய ராயினு மம்புலி, இலகு செஞ்சடை யாரடி யாரெனிற், றலமு றப்பணிந் தேத்துந் தகைமையார்" (1699) என்பன முதலியவை காண்க. ஞாலம் - இடவாகு பெயர். "அகத்தும் புறத்தும் பகையறுத்து" (3769).

பால் அணைந்தார் - பால் - அப்பால் - அங்கு; அணைந்தார் - அணைந்த வினை அடியவர்கள்; இரட்டிப்பொன் - வினையோர்க்கு நியதமாகக் கொடுத்த 100 பொன்னை இரட்டித்தது 200 பொன்னாக; ஒருநூறு தமது சிவநெறி ஒழுக்கமும், மற்றொருநூறு உலகியல் நெறியில் உலகரை வழிப்படுத்தற் பொருட்டுமாம் என்க.

மேல் அவரை - மேல் - அதன்மேல் - பின்னர்; மேலவர் - மேம்பாடுடையவராக அவ்வடியவரை என்ற குறிப்புமாம். மேம்பாடாவது முன்கூறியபடி இகபரமாகிய இருபயனும் தரக் காரணமாயிருந்தமை. 7

3990. இவ்வகையே திருத்தொண்டி னருமைநெறி யெந்நாளுஞ்
செவ்வியவன் பினிலாற்றித் திருந்தியசிந் தையராகிப்
பைவளர்வா ளரவணிந்தார் பாதமலர் நிழல்சேர்ந்து
மெய்வகைய வழியன்பின் மீளாத நிலைபெற்றார். அ

(இ - ள்) இவ்வகையே...ஆற்றி - முன்கூறிய செயலின் கருத்து வகையாலே திருத்தொண்டினது அரிய நெறியினை எந்நாளினும் செம்மையாகிய அன்பினாலே செயலாற்றியிருந்து; திருந்திய சிந்தையராகி - திருத்தம் பெற்ற சிந்தனையுடையவராகி; பைவளர்...நிலை பெற்றார் - நச்சப்பை வளரும் வாளரவை

அணிந்த இறைவரது திருவடி நிழலினைச் சேர்ந்து உண்மையாகிய வழியில் வரும் அன்பினாலே மீளாநிலையாகிய முத்தியினைத் தலைக்கூடினர்.

(வி – ரை) இவ்வகை – திருவேடமே மெய்ப்பொருள், ஏனைய உடல் வேடங்கள் பொருளல்ல என்ற உறைப்புப்பற்றி ஒழுகும் வகை; இகரச்சுட்டு முன் கூறிய அன்புச்செயலின் கருத்து வகை; "அது எண்ணுவார்" (3989) என்று முன் காட்டப்பட்டது; இவ் வகை – செயல்கள் எவ்வாறாயினும் கருத்து வகையால் இதுவே என்பார் இகரச்சுட்டினாற் கூறினார்; ஏகாரம் - பிரிநிலை.

அன்பினில் - நேறி – ஆற்றி – என்க; நேறி – ஆற்றுதலாவது நெறிவழுவாது நின்று அதன்வழிச் செயலாற்றுதல். ஆற்றித் - திருந்திய – ஆற்றுதலினால் திருந்திய.

பைவளர் - பை - நச்சுப்பை. வளர்தல் - இருத்தல்.

வாளரவு – வாள்போன்ற நீள் வடிவும், கொலைத் தொழில் செய்யும் பண்புமுடைய அரவு; பை...அரவு – அரவுக்கு இயற்கையடை.

மெய்வகைய வழியன்பின் – உண்மைத்தன்மையின் வழிவழியே வரும் அன்பின் திறத்தினாற் பெறப்படும்.

மீளாதநிலை - முத்தி; "மீண்டு வாரா வழியருள் புரிபவன்" (திருவா). "மற்றீண்டு வாராநெறி" (குறள்). 8

3991. விடநாக மணிந்தபிரான் மெய்த்தொண்டு விளைந்தநிலை
உடனாகு நரசிங்க முனையர்பிரான் கழலேத்தித்
தடநாக மதஞ்சொரியத் தனஞ்சொரியுங் கலஞ்சேருங்
கடனாகை யதிபத்தர் கடனாகைக் கவினுரைப்பாம். ௯

(இ – ள்) விடநாகம்...ஏத்தி – விடமுடைய நாகத்தை அணிந்த சிவபெருமானது மெய்த்தன்மையினையுடைய திருத்தொண்டு வழுவாது விளைந்த நிலையினிலே உடனாய் நிகழ்ந்த திருவாழ்வுடைய நரசிங்க முனையரையர் பெருமானது கழல்களைப் போற்றி; தடநாகம்...கவினுரைப்பாம் – பெரியயானைகள் மதநீரினைச் சொரியச் செல்வங்களைப் பொழியும் மரக்கலங்கள் சேரும் கடல் துறைமுகப்பட்டினமாகிய நாகைப் பதியில் வரும் அதிபத்த நாயனாரது நியமமாகிய திருத்தொண்டின் அழகினைச் சொல்லப்புகுகின்றோம்.

(வி – ரை) விடநாகமணிந்தபிரான் மெய்த்தொண்டு - முன்பாட்டில் "பைவளர்வாளரவணிந்தார்" (3990) என்ற கருத்து; முன்பாட்டில் சரித நிறைவு கூறினார்; இப்பாட்டில் சரிதத்தினை வடித்தெடுத்த சாரங் கூறுகின்றார்; ஈரிடத்தும் இத்தன்மைபற்றிக் கூறுதல், அருவருக்கத்தக்க விடப்பாம்பினையும் ஆனந்தமளிக்கும் செம்மையும் உடன்கொண்ட இறைவர்பால் பாம்பினைக்கண்டொதுங்காது செம்மையினை நோக்கி அடைந்தால் இன்பமுறுதல் உறுதிப் பயனாதல் போல, அடியார்கள்பால் காணும் உடல் நிலைபற்றிய வேற்றுத் தன்மைகளைக் கண்டு ஒதுங்காமல் செம்மைதரும் திருவேடத்தினையே நோக்கி அடைதலே உறுதிபயக்கும் என்ற உட்கிடையைக் கொண்ட குறிப்புடையது.

மெய்த்தொண்டு விளைந்த நிலை உடனாதம் – தொண்டு விளைந்த நிலையாவது – தொண்டுபுரிதலின் உறைப்பே முதிர்ந்த பண்பு (3889 பார்க்க); உடனாதம் – தொண்டும் தாமும் ஒன்றாதலும் வேறாதலுமின்றி, சிவாத்துவிதமாகிய உடனாதம் பெற்றியில் நிகழ்ந்த தொண்டினிலே எஞ்ஞான்றும் எவ்விடத்தும் சிறத்தல்; இஃது இவர் சரித சாரம்.

தடநாகம் – பெரிய யானை ; தனம் – பல்வகைச் செல்வங்கள் ; கலம் – மரக் கலம் – கப்பல் ; சேரும் – துறைமுகத்துச் சேர்தற்கிடமாகிய. இக்கருத்தை மேல் (3994) விரித்தல் காண்க.

கடனாகை – கடற்கரையில் உள்ள நாகப்பட்டினம். முதனூலில் இச்சிறப்புப் பற்றிப் போற்றுதல் குறிப்பு :

கடனாகை – ஆகை - ஆகுதல் ; தொழிற்பெயர்.

கடனாகைக் கடன் – கடனாகச் செய்யும் திருத்தொண்டாகும் செய்கையின் அழகு; தொண்டின் அழகாவது தொண்டு செய்தலிற் சலியாத மன இன்ப மாண்பு. கடன் – தொண்டினெறியினைக் கடமையாக மேற்கொள்ளுதல்.

இப்பாட்டுக் கவிக்கூற்று; இதனால் ஆசிரியர் தம் நியதியின்படி இதுவரை கூறி வந்த சரிதத்தை முடித்துக்காட்டி மேல்வருஞ் சரிதத்துக்குத் தோற்றுவாய் செய்கின்றார். 9

சரிதச்சுருக்கம் :—நரசிங்கமுனையரைய நாயனார் : தேடாத பெருவளத்திற் சிறந்தது திருமுனைப்பாடி நாடு என்பது. இந்நாட்டினை அரசுபுரிகின்ற முனையரையர் என்னும் குறுநிலமன்னர் மரபிலே வந்தவர் நரசிங்கமுனையரையர். அவர் பகைவரை வென்று நீதகலச் செய்தனர் ; சிவனடியார்களின் திருவடியடைதலே அரும் பேறென அடைவாராயினர் ; சிவன் கோயிலின் சிவச்செல்வங்களைப் பெருக்கிக் காத்தலைத் தம் உயிரினும் சிறப்பாகச் செய்தனர் ; சிவநெறித் திருத்தொண்டுகளைக் கனவிலும் மறவாமல் கடமையாகச் செய்துவந்தார்.

திருவாதிரை நாடோறும் சிவபெருமானுக்கு நியமமாக விசேடபூசை செய்து, அன்று வந்தணையும் அடியார்கள் ஒவ்வொருவருக்கும் நூறு பொன் குறையாமல் கொடுத்துத் திருவமுதும் அளித்து வழிபட்டுவந்தார். ஒரு திருவாதிரை நாளில் அடியார்களுடனே " மானநிலை யழிதன்மை வரும் காமக்குறி மலர்ந்த ஊனநிகழ் மேனியராகி"ய ஒருவரும் திருநீறணிந்து போந்தனர். அவர் நிலையினைக்கண்டு மருங்கிருந்தார் இகழ்ந்து எண்ணி ஒதுங்கினர்.

நரசிங்கர் அது கண்டு அவரை அணுகி வணங்கிப் பேணினர். திருநீறு சார்ந்தவர்களை உலகம் இகழ்ந்து நரகிலடையாமல் எண்ணினார் ; அவரைத் தொழுது அவருக்கு இரட்டிப் பொன் (200 பொன்) கொடுத்து உபசரித்து விடைகொடுத்தருளினர்.

இவ்வகையே திருத்தொண்டி னெறியினில் அன்புடன் செயலாற்றி இறைவரது திருவடிநீழலில் சேர்ந்து மீளாதநிலை பெற்றனர்.

1. தேடியடைய வேண்டாது இயல்பிலே வளந்தரும் நாடே சிறப்புடையது. (3983)

2. அரசர்க்கு உலகியல் நெறி, அரன்றிருத் தொண்டுநெறி என இரண்டு கடமைகள் உண்டு. (3984)

3. உலகியல் நெறியில் குடிகளையும் ஏனை உயிர்களையும் காவல்புரிவது அரசர் கடமை. இதனைப் பகைவரை வென்று தீங்ககலச் செய்வதனால் அரசர் கடன் ஆற்றுவர். (3984)

4. திருத்தொண்டு நெறியினை அடியார் திருவடிச் சார்பினாலும் அரன்கோயிற் பணிகளைச் சோர்வுபடாது உயிரினும் சிறந்ததாகக் காத்துப் பெருக்குதலாலும் அரசர் புரிவது கடன். (3984)

5. சிவன்கோயிற் றிருச்செல்வங்களைக் காத்தலில் உயிர்துறப்போர் சிவனுல கிருப்பர் ; உயிர்கொடுத்தும் சிவதருமம் காத்தற்குரியதென்பது சிவாகமவிதி.

6. திருவாதிரைநாள் சிவனுக்குகந்த சிறப்புடைய திருநாள். அந்நாளில் சிவனுக்குச் சிறப்பாகிய பூசையும் சிவனடியவர்க்கு வழிபாடும் செய்வதும் திருவமு தளித்தலும் சிறந்த சிவபுண்ணியங்கள்.

7. அடியவர்கள் மேற்கொள்ளும் திருநீறு - கண்டிகை - முதலாகிய திரு வேடமே பற்றி அவர்களை வணங்குதல் வேண்டும் ; அவர்களது உடல்நிலை வேறு பாடுகள் பற்றிய உலகியல் ஒழுக்க முதலியனபற்றி எண்ணி அவரை இகழ்தலாகாது; அவ்வாறு இகழ்தல் சிவன் திருவேடத்தினை இகழ்ந்ததாகி நரகத்துன்பப் பயன் தரும்.

8. மானமழி காமக் குறி மலர்ந்த ஊனநிகழ் மேனியராய் நீறணிந்து வந்த அடியவரை ஏனையோர் அவாது உலகியல் உடல்நிலையின் ஒழுக்கப் பண்பு பற்றி இகழ்ந்து எண்ணி ஒதுங்கினர்; நரசிங்கமுனையர் அவரைத் திருநீற்றுகோலமே கண்டு ஸ்கைகூப்பி வணங்கிப் பேணினர் ; திருநீறு சார்ந்தாரை உலகர் இகழ்ந்து நரகம் புகா மல் வைத்த கருணையினாலே உலகர்க்கு வழிநடந்து காட்ட எண்ணி அவருக்கு இரட்டிப்பொன் கொடுத்துத் தொழுது விடைகொடுத்தனர் ; இஃது அரசர் தம் பொருட்டாகவும் உலகர் பொருட்டாகவும் மேற்கொண்டு ஒழுகிக் காட்டிய நிலை.

9. உடல் நிலை ஒழுக்கம் வேறு ; உயிர்பற்றிய நிலை ஒழுக்கம் வேறு ; இவற்றுள் உயிர்பற்றிய ஒழுக்கம் உயர்ந்தது. உடல் பற்றிய ஒழுக்கம் உலகியல் அற நூல்களுள் விதிக்கப்படுவன ; உயிர்பற்றிய உயர்ந்த ஒழுக்கம் வேத சிவாகமங்களுள் விதிக்கப்படுவன; உடல்பற்றிய தாழ்ந்த அறங்களையே மேல் வைத்து உயிர்பற்றிய மேல்நிலைகளை இகழ்வோர் நரகடைவர் ; இவற்றைத் தாழவைத்து உயிர்பற்றிய ஒழுக்கங்களை மேனிலையில் வைத்து வழி அன்பின் உறைப்புடன் ஒழுகுவோர் சிவனது பேர் இன்பமாகிய மீளா நிலையடைகுவர் ; உலகர் இவ்வுண்மைகளைச் சிந்திப்பார்களாயின் மேம்பட்டுய்வர்.

தலவிசேடம் :—இந்நாயனாரது பதி திருநாவலூர் என்பது கருதப்படும்.(151)

நரசிங்கமுனையரைய நாயனார் புராணம் முற்றும்.



உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# 43. அதிபத்த நாயனார் புராணம்

## தொகை

" விரிதிரைசூழ் கடனாகை யதிபத்தர்க் கடியேன் "

—திருத்தொண்டத்தொகை - (7)

## வகை

" திறமமர் மீன்படுக் கும்பொழு தாங்கோரு மீன்சிவற்கேன்
றுறவமர் மாகடற் கேவிடு வோனொரு நாட்கனக
நிறமமர் மீன்பட நின்மலற் கேன்றுவிட் டோன்கமலம்
புறமமர் நாகை யதிபத்த னாகிய பொய்யிலியே "

—திருத்தொண்டர் திருவந்தாதி - (52)

## விரி

3992. மன்னி நீடிய செங்கதி ரவன்வழி மரபின்
தொன்மை யாமுதற் சோழர்தந் திருக்குலத் துரிமைப்
பொன்னி நாடெனுங் கற்பகப் பூங்கொடி மலர்போல்
நன்மை சான்றது நாகப்பட் டினத்திரு நகரம். க

புராணம் : இனி, நிறுத்த முறையானே, ஆசிரியர், எட்டாவது பொய்யடிமையில்லாத புலவர் சருக்கத்திலே, நான்காவது அதிபத்த நாயனார் புராணங் கூறத் தொடங்குகின்றார். அதிபத்த நாயனாரது வரலாறும் பண்பும் கூறும் பகுதி.

தொகை : விரிந்து செல்லுகின்ற அலைகள் சூழ்கின்ற கடற்கரையின்கண் உள்ள நாகப்பட்டினத்தில் அவதரித்த அதிபத்த நாயனார்க்கு நான் அடியேனாவேன்.

விரிதிரை சூழ்கடல் - விரி - காற்றின் செயலாற் சிறிதாய் எழுந்து மேலோங்கி வந்து கரையினிற் பரவும் ; கடல் (நாகை) - கடற் கரையின்கண் உள்ள. நாகை - நாகப்பட்டினம் ; நாகம் - ஆதிசேடன் பூசித்த பதியாதலிற் போந்த பெயர் ; கடல் (நாகை) - இது இப்பட்டினத்தின் செல்வ வளத்துக்குக் காரணமாதலுடன், இந் நாயனார் மீன்படுக்கும் பரதவர் குலத்தவராய் அத்தொழிலின்கண்ணே நின்று சிவனை நினைந்து திருத்தொண்டு செய்து பேறடைந்தாராகும் குறிப்பும் உடைமையால் இத்தன்மை பற்றிப் போற்றினார். இதனையே மேற்கொண்டு விரிநூலுள், ஆசிரியர், முன்னரும் (3991), மேலும் (3994) விரித்தல் காண்க.

ஊரும், பேரும், வரலாறு நிகழ்தற் கேதுவாகிய குறிப்பும் தொகைநூல் பேசிற்று.

வகை : திறமமர்...விடுவோன் - திறமுடைய மீன் வரும்போதெல்லாம் அங்கு ஒரு மீனைச் சிவனுக்கென்று பொருந்த அப்பெருங் கடலினுள்ளே விடுபவர் ; ஒருநாள் - அவ்வாறொழுகும் நாள்களில் ஒருநாள் ; கனகநிறம்...விட்டோன் - பொன்மயமான யாவரும் விரும்பத்தக்க தொருமீன் கிடைக்க அதனை நிமலனாகிய சிவபெருமானுக்கென்றே கடலில் விட்டவர் ; கமலம்...பொய்யிலியே - தாமரைகள் புறங்களில் பூக்கும் நாகைப்பட்டினத்தில் அவதரித்த அதிபத்தர் என்கின்ற பொய்யில்லாத அடியவர்.

திறமமர் மீன்படுக்கும் பொழுது - திறம் - கடல் மீன்கள் பெரியனவாயும் விலை பெறுவனவாயும் உள்ள தன்மை ; திறம் - பலவகை என்றலுமாம். அமர் - விரும்பும் ; படுத்தல் - பிடித்தல் ; வலையிற்பட வருதல் ; மீன்படுத்தல் என்பது மரபு வழக்கு. பொழுது - பொழுதெல்லாம் ; ஒவ்வொரு நாளிலும் ; முற்றும்மை தொக்கது ; ஒரு மீன்...விடுவோன் - வலையில் வருமவற்றுள் சிறந்த ஒன்றை இது சிவனுக்காகுக என்று எடுத்து மீனைக் கடலுள் புகுவிடுவோர் (4002) ; ஒருநாள் ஒப்பற்றநாள். இவ்வொரு நாளின் ஒப்பற்ற தன்மை விரிநூலுள் (4003 - 4008) விரிக்கப்படும். கனக நிறமமர் மீன்பட - (4008) பொன்னிறமும் நவமணிச் சுடரும் பொருந்தி ஒளிவீசிய நிலை ; அமர் - யாவரும் விரும்பும் ; பட - கிடைக்க. விட்டோன் - அதனையும் கடலினுள் சிவனுக்காக என்று விடுத்தோர் (4008) ; கமலம் புறமமர் - இந்நகர் காவிரிநீர் நாட்டின் பகுதியாய், மருதமும் நெய்தலும் மயங்கும் நிலப்பகுதியாதலின் நகர்ப்புறத்து வயல்களில் தாமரைகள் மலர்தல் கூறினர். பொய்யிலி - உண்மைத் தன்மையுடைய அடிமைத் திறம்; எதிர்மறையாற் கூறியது உறுதிப் பொருட்டு (4009); பொய்யிலி - இறைவர் பெயராதலும் காண்க. " பூந்துருத்திப் பொய்யிலியாய் " (தேவா). ஊரும் பெயரும் வரலாறும் பண்பும் வகை நூல் வகுத்தது. புறவமர் - என்பதும் பாடம்.

விரி : (இ - ள்) மன்னி...உரிமை - நிலைபெற்று நீடிவருகின்ற சூரியன் வழியில் வந்த மரபாகிய பழமையாகிய முதன்மைபெற்ற சோழர்களது திருக்குலத்திற்கு உரிமையுடைய ; பொன்னி நாடெனும்...மலர்போல் - காவிரி நாடு என்னும் கற்பகப் பூங்கொடியிற் பூத்த மலர்போன்று ; நாகப்பட்டினத் திருநகரம் - நாகப்பட்டினம் என்கின்ற திருநகரமானது ; நன்மை சான்றது - நன்மையினில் மேம்பட்டது.

(வி - ரை) செங்கதிரவன் - ஞாயிறு ; செங்கதிரவன் வழிமரபில் - முதற் சோழர் திருக்குலம் - சோழர்கள் சூரிய குலத்தில் வந்தவர்கள் என்பது மரபு ; அவ்வாறே பாண்டியர் குலம் சந்திர மரபு ; சேரர் குலம் அக்கினி மரபு ; என்பதும் வழக்கு. " ஆதித்தன் குலமுதல்வன் மனுவினையா ரறியாதார் " (கம்பன்).

தொன்மையாம் சோழர் - முதற்சோழர் - என்க. முதல் - முதன்மை பெற்ற. உரிமை - பொன்னி நாடு சோழர்களுக்கே உரியது என்பதாம்.

பொன்னி நாடேனும் - கற்பக மலர்போல் நாகப்பட்டினத் திருநகரம் நன்மை சான்றது - பொன்னி நாட்டினைக் கற்பகப் பூங்கொடிக்கும், நாகப்பட்டினத்தை அக்கொடியிற் பூத்த மலருக்கும் உவமித்தார் ; கற்பகப் பூங்கொடி - கற்பகவல்லி ; " வான்றிகழ் கற்பகவல்லி " (கந்தபு - மாயைப் - 25) ; காமவல்லி என்பர். வேண்டியவர் வேண்டியவாறே தருவது. இனிக், கற்பகம் தருவாக வுரைத்துப் பொன்னி கற்பகத்தரு எனவும் ; அது பாயும் நாடு கற்பகத்திற் படர்கொடி யெனவும் ; அந்நாட்டின் நாகப்பட்டினம் அக்கொடியின் பூவெனவும் உவமைபெற

உரைத்தலுமாம்; வேண்டிய வளங்களை எல்லாம் வேண்டும்படியே தருதலால் இவ்வாறு உவமித்தார். கொடியின் பயன் மலராதல்போல் நாட்டின் பயன் இக்கரை மென்பதாம். "நிலவு மெண்ணி றலங்களும் நீடொளி, யிலகு தண்டளி ராக வெழுந்ததோர், உலகமென்னு மொளிமணி வல்லிமேன், மலரும் வெண்மலர் போல் வதம் மால்வரை" (13) என்ற கருத்து ஈண்டு வைத்து நோக்கற்பாலது. கற்பகத் தருவிற் படரும் அழகிய கொடி என்றலுமாம்.

நன்மை சான்றது - நன்மையால் மிக்கது; சாலுதல் - நிறைதல்.

திருநகரம் - சிவச்சார்பு பற்றிய சிறந்த வளமே ஈண்டுக் கருதத் தக்கது, பிற வல்ல; என்பார், திரு என்ற அடைமொழி புணர்த்தி ஓதினார்; திரு - சிவச் செல்வம் பட்டினம் - கடற்கரை ஊரின் பொதுப்பெயர். பட்டணம் என்னும் வடசொல் லுடன் இது மயங்கற்பாற்றன்று. 1

3993. தாம நித்திலக் கோவைகள் சரிந்திடச் சரிந்த
தேம லர்க்குழன் மாதர்பந் தாடுதெற் றிகள்சூழ்
காமர் பொற்சுடர் மாளிகைக் கருங்கடன் முகந்த
மாமு கிற்குல மலையென வேறுவ மருங்கு. ௨

(இ - ள்) தாம நித்திலம்...மாளிகை - முத்துமாலைகளின் கோவைகள் சரிந்திடத், தேன் பொருந்திய மலர்களைச் சூடிய சரிந்த குழலையுடைய பெண்கள் பந்தாடுகின்ற மேடைகளைக் கொண்ட விரும்பத்தக்க பொன்னொளி மின்னும் மாளிகைகளை; மலையென - இவை மலை என்று மயங்கி; கருங்கடன் முகந்த மாமுகிற்குலம் - கரிய கடல்நீரை உட்கொண்ட கரிய மேகக் கூட்டங்கள்; மருங்கு ஏறுவ - பக்கத்தில் மேல் ஏறுவன.

(வி - ரை) மாளிகை - மலையென - முகிற்குலம் - ஏறுவ என்று கூட்டுக; மாளிகைகளில் முகில் ஏறுவன என்பதாம்; மாளிகைகள் முகிற் குலத்தால் ஏறப் பெறுவன என்றலுமாம்.

நித்திலத் தாமக்கோவை - தாமம் - மாலைபோல அமைத்த; தாமம் - ஒளி என்றலுமாம். நித்திலம்-முத்து; இங்குக் கடல்படு முத்துக்களைக் குறித்து; கடற்கரை யாதலின் அவை இங்கு எளிதிற் பெறக் கூடியவையாதலால்; சரிந்திட - ஆடும் என்க.

சரிந்த - குழல் - மாதர் என்று கூட்டுக. சரிதல் - தொங்குதல்; தெற்றி - மேடை.

சரிந்திட - சரிந்த - இரண்டு சரிவுகளும் பந்தாடுதலால் ஒருங்கு நிகழ்ந்தன என்பதாம்.

காமர் - அழகிய; விரும்பத்தக்க; பொற்சுடர் - மாளிகையில் அங்கங்கும் இயற்றிய பொன்வேலைப்பாட்டின் விளக்கம்.

மாளிகை மலையென - மாளிகைகளை இவை மலையே என்று மயங்கி; மலையில் ஏறுதல்போல என்றலுமாம். மாளிகைகளின் உயர்ச்சி குறித்தது. கடற்கரையில் இருத்தலால் இக்காட்சி உண்மைக் காட்சியாம். மருங்கு என்றது மருங்கிருத்தலால் என இக்கருத்துப்பட நின்றது.

மாமுகில் - மா - கரிய; "மாமிடற் றம்பலவன்" (திருக்கோவை 102); "மா முகடி" (குறள் - 617). 2

3994. பெருமை யிற்செறி பேரொலி பிறங்கலி னிறைந்து
திரும கட்குவாழ் சேர்விட மாதலின் யாவுந்
தருத லிற்கட றன்னினும் பெரிதெனத் திரைபோற்
கரிப ரித்தொகை மணிதுகில் சோரிவதாங் கலத்தால் ௩

(இ - ள்) பெருமையில்...பிறங்கலின் - பெருமையினாலே செறிவுடையபெரிய ஓசை விளங்குதலாலும்; நிறைந்து...ஆதலின் - நிறைந்து இலக்குமி வாழும் உறையுளாதலாலும்; யாவும் தருதலில் - வேண்டும் பொருள்களை எல்லாம் தருதலாலும்; கடல்...பெரிதென - கடலினும் பெரிதென்று சொல்லும்படி விளங்கி; திரைபோல்...கலத்தால் - அலைபோல் யானைகள், குதிரைத் தொகைகள், மணிகள், துகில்கள் என்பனவாதிய பொருள்களை மரக்கலங்களாற் கொணர்ந்து சொரிவதாம். (அத்திருநகரம்).

(வி - ரை) பெருமையிற் செறி பேரொலி-பெருமை - நற்பண்பினையும், பேரொலி - என்றது அளவினையும் குறித்தன. பெருமையில் - மை - மேகம் என்று கொண்டு, மேகங்களினின்றும் எழும் என்றுரைப்பாருமுண்டு.

கடல் தன்னிலும் பெரிதென - பெருமுழக்கம், திருமகள் சேர்விடம், யாவும் தருதல் - என்ற இம்மூன்று தன்மைகள் கடலினிடத்தும் அதன் கரையில் உள்ள இந்நகரிடத்தும் உள்ளன; ஆயின் இவை இந்நகரில் ஒருங்கே மிகுதியும் எளிதிற் பெறும்படி சிறக்க உள்ளன; ஆதலில் இதுகடலினும் பெரிது என்று சொல்லும்படி என்க.

திரைபோல...சோரிவதாம் - பெரிதென்பதற்குரிய காரணங் கற்பித்தவாறு; திரைபோல் - கரி முதலியவற்றை அடுத்தடுத்து மேன்மேல் வாணிகமுறையில் கொணர்ந்து சொரியும் நிலை கடலுக்கில்லை என்பது குறிப்பு.

கரி...துகில் - இவை வேற்று நாடுகளினின்றும் வாணிகத் துறையில் இங்குக் கொண்டுவரப்படுவன. "இறக்குமதி" என்பது. இந்நாள்மரபு. கடற் றுறைமுக வாணிபச் சிறப்புப் பற்றி நகர்வளங் கூறியவாறு; சோரிவது - சொரியப் பெறுவது.

பிறங்கலிற் சிறந்து—என்பதும் பாடம். 3

3995. நீடு தொல்புகழ் நிலம்பதி னெட்டினு நிறைந்த
பீடு தங்கிய பலபொருண் மாந்தர்கள் பெருகிக்
கோடி நீடனக் குடியுடன் துவலயங் காணும்
ஆடி மண்டலம் போல்வதவ் வணிகிளர் மூதூர். ௪

(இ - ள்) நீடு...பெருகி - நீடியவையாகிய புகழினையுடைய பதினெட்டு நிலங்களிலும் நிறைந்த பெருமையுடைய பல பொருள்களைக் கைக்கொண்ட மக்களும் சேர்ந்து பெருகி நிகழ்வதனாலும்; கோடி...குடியுடன் - கோடியளவினும் பெருகிய செல்வக்குடி மக்களுடன் பொலிவதனாலும்; அவ்வணிகிளர் மூதூர் - அந்த அழகு மிகுந்த பழயநகரம்; துவலயம்...போல்வது - இவ்வுலக முழுவதும் தனக்குள் பிரதிபிம்பமாக அடங்கக் காணப்படும் கண்ணாடி மண்டலம்போல்வதாகும்.

(வி - ரை) மூதூர் துவலயம் காணும் ஆடி மண்டலம் போல்வது என்று கூட்டுக. துவலயம் காணும் - உலக முழுதும் உள்ளடங்கப் பிரதிபிம்பமாகப் பார்க்கக்கூடிய; துவலய முழுதும் காணவுள்ள நிலையாவது 18 நிலங்களின் மக்களும் பொருள்களும் பெருகுவதாலும், இந்நகரினும் இதுவே செல்வத்தின் எல்லை எண்ணக்கூடிய பெருஞ்

செல்வங்களுடன் உள்ள குடிகள் நிறைதலாலும் ஆகிய தன்மை. "மெய்யொளியி னிழற்காணு மாடியென" (1274).

நிலம் பதினெட்டு - பதினெட்டு மொழிகள் வழங்கும் பதினெட்டுத் தேயங்கள். இத்தேயங்கள், சிங்களம் முதலாகத் தமிழகம் ஈறாகத் தமிழ் நூல்களிற் கூறப்பட்டவை. மொழிகளும் அவ்வத் தேயங்களின் பெயராலே அறியப்படுவன.

சிங்களம், சோனகம், சாவகம், சீனம், துளுவம், குடகம், கொங்கணம், கன்னடம், கொல்லம், தெலுங்கம், கலிங்கம், வங்கம், கங்கம், மகதம், கடாரம், கவுடம், கோசலம், தமிழகம் என்பன. "பண்டிதர் தங்கள் பதினெட்டுப் பாடையும்" (திருமந்திரம்).

நிலம் பதினெட்டினும் நிறைந்த - பல பொருள் மாந்தர்களி பெருகி - இவர்கள் வாணிபத்தின் பொருட்டு இங்கு வந்து குழுமுவர்; தத்தம் நாட்டின் அரிய வாணிபப் பொருள்களையும் கொணர்வர்; இந்நகர் கடல் துறைமுகப் பட்டினமாதலாலும், செல்வப் பொருட் பண்டங்கள் நிறைதலாலும் வாணிபத்திற்காகப் பல திசைகளினு மிருந்து மக்கள் வந்து கூடுவர். "ஊறுபொரு ளின்றமி ழியற்கிளவி தேருமடமாதருடனார், வேறுதிசை யாடவர்கள் கூறவிசை தேரும்" (4); காசுமணி வார் கனக நீடுகட லோடுதிரை வார்துவலைமேல், வீசுவலை வாணரவை வாரிவலை பேசு மெழில்" (10) என்று, (சாதாரி - வேதவனம்) இதுபோன்ற கடற் றுறைமுகப் பட்டினமாகிய வேதாரண்யத்தினைப் பற்றி ஆளுடைய பிள்ளையார் அருளியவை இங்கு நினைவு கூர்தற்பாலன.

கோடி - எல்லை; கோடி நீள்தனம் - தனங்களின் எல்லை இது என்னும்படி நீண்டதனம். கோடி - என்ற பேர் எண் குறித்ததென்றலுமாம். மண்டலம் - வளைவு. பிறங்கலிற்சிறந்து - என்பதும் பாடம். 4

3996. அங்கெ டுந்திரு நகர்மருங் கலைகடல் விளிம்பிற்
பன்னெ டுந்திரை நுரைதவழ் பாங்கரின் ஞாங்கர்
மன்னு தொன்மையின் வலைவளத் துணவினின் மலிந்த
தன்மை வாழ்குடி மிடைந்தது தடநுளைப் பாடி. ௫

(இ - ள்) அங்நெடும்...ஞாங்கர் - அந்த நீண்ட திருநகரத்தின் பக்கத்தில் அலைகளையுடைய கடலின் விளிம்பிலே பல நீண்ட அலைகளின் நுரை வந்து தவழ்தற் கிடமாகிய பக்கங்களை அடுத்து; மன்னு...தன்மை - நிலைபெற்ற பழமையில் வலைவீசி மீன்படுக்கும் தொழிலாற் பெறும் வளமுடைய மீன் உணவினில் பெருகிய தன்மையாலே; வாழ்...நுளைப்பாடி - வாழ்வு பெற்ற பரதவர் குடிகள் மிடைந்துள்ளது பெரிய பரதவர் சேரி.

(வி - ரை) கடல் விளிம்பு - கடலின் கரையோரம்.

திரை நுரைதவழ் பாங்கர்-கடலலைகள் கரையின் மோதிச் சிதறிப் பரவும்போது அவ்வலைகளின் நுரை நெடுந்தூரம் சென்று கரையின் தரையிற்றவழும். ஞாங்கர் - அந்த அளவு எல்லையினை அடுத்துள்ள இடம்.

தொன்மையாவது இப்பரதவர் இத்தொழிலையே உரிமையாக வழிவழி நீண்ட காலமாகச் செய்து வாழ்வார் என்ற பழமையுரிமை.

வலைவளம் - வலை வீசிப்படுக்கும் மீனாகிய வளம்; செல்வம்.

வலை வளத் துணையினின் மலிந்த தன்மை வாழ் - வலை வாரிப்படுக்கும் மீன்களை உண்டும், அவற்றை விலைப்படுத்திப் பெறும் நிதியினைக் கொண்டும் வாழ்க்கை நடத்தும்.

"மீனிறைந்தபே ருணவின வேலைவைப் பிடங்கள்" (1086) என்றதும், ஆண்டுரைத்தவையும் பார்க்க. வலைவளத் துணைவு - வலைவளத்தினை விற்றுவரும் ஊதியத்தால் வாழ்தல் பற்றி உரைக்க எழுந்தது மேல்வரும் பாட்டு; இத்தொழிலும் வாழ்வும் பற்றிக் கூறுவது இந்நாயனாரின் பண்பும் வரலாறும் பற்றி எடுத்தவகையாம்.

குடிமிடைந்தது - குடி நெருக்கமாக உள்ளது.

நுளைப்பாடி - நுளையர் - பரதவர் - மீன்பிடிப்போர் ; நுளையர் வாழும் சேரி; பாடி - இருப்பிடம் ; இப்பாட்டும் மேல்வரும் மூன்று பாட்டுக்களும் இந்நுளைப்பாடியின் அரிய இயற்கை வருணனையாகிய தன்மைநவிற்சி யணிகள். 5

3997. புயல ளப்பன வெனவலை புறம்பணை குரம்பை;
யயல ளப்பன மீன்விலைப் பசும்பொனி னடுக்கல்;
வியல ளக்கரின் விடுந்திமில் வாழ்நர்கள் கொணர்ந்த
கயல ளப்பன பரத்தியர் கருநெடுங் கண்கள். ௬

(இ - ள்) புயல்...குரம்பை அயல் - மேகங்களை அளவிட்டாற் போல வலைகள் புறம்பே உலரவைக்கப் பெற்ற சிறு குடில்களின் பக்கத்தில் ; மீன் விலைப்பசும் பொனின் அடுக்கல் அளப்பன - மீன் விலைக்குக் கொள்வோர் கொணர்ந்த பசும் பொன்னின் குவியங்கள் அளவிடப்படுவன ; வியல்...கயல் - விரிந்த கடலில் செலுத்தும் மீன்படகின் றொழிலினால் வாழும் பரதவர்கள் கொணர்ந்த கயல் மீன்களை ; பரத்தியர் கருநெடுங் கண்கள் அளப்பன - (அக்கயல்களை அவரிடம் பெறும்) பரத்தியாது கரிய நீண்ட கண்கள் அவை இவ்வளவு விலைபெறும் என்பதனைக் காட்சியாலே அளந்து விடுவன.

(வி - ரை) இப்பாட்டுச் சிறந்த தன்மை நவிற்சியின் சுவைபட விளங்குவது*

புறம்பு வலை அணை குரம்பை என்க. பரதவர் வலைகளைத் தமது குடிசைகளின் புறம்பே நாளும் உலரவைக்கும் வழக்கம் குறிப்பிடப் பட்டது.

புயல் அளப்பன என - பிரிந்து கவிந்த நீண்ட வலைகள் மேகங்கள் கவிந்து படிந்தாற் போன்றன. அளப்பில்—என்பதும் பாடம்.

அளத்தல் - ஈண்டுக் கவிதல்போல என்ற உவமப் பொருள்பட வந்தது ; கடலிற்படியும் மேகங்கள் கடற்கரை விளிம்பில் உள்ள இக்குடியிடங்களிலும் படர்ந்தனவோ என்னும்படி என்பதும் குறிப்பு.

குரம்பை அயல் மீன் விலைப் பசும் பொனின் அடுக்கல் அளப்பன என்க. இது மீன்கொள்வோர் பரதவர் குடில்களை அடுத்து முன்னதாகவே விலை கொடுத்துப் பெறுதற்குக் காத்திருக்கும் நிலையினை உணர்த்திற்று ; பசும் பொனின் அடுக்கல் அளப்பன-மீன்களின் மிக்க விலை மதிப்பையும், பொன் நாணயம் வழங்கிய நிலையினையும் குறித்தது ; அடுக்கல் அளத்தலாவது நாணயங்களை அடுக்கி எண்ணிக் கணக்கிட்டு அளவு காணுதல்.

வியல்...கொணர்ந்த கயல் - திமில் வாழுநர் நள்ளிரவில் மீன் படகுகளைக் கொண்டு கடலின் நீண்டதூரம் சென்று மீன் பிடித்து அதிகாலையிற் கொணர்வர்; இப்படகுகள் பல மரக்கட்டைகளை பொருத்திக் கட்டப்படுதலால் கட்டுமரத் தோணி

---

* இதுபற்றி எனது சேக்கிழார் - ௩௩௪—௩௩௫ பக்கங்கள் பார்க்க.

எனப்படும்; தோணி கரைதட்டினபின் அதனை மணலில் ஈர்த்து நுளையன் கரை சேர்த்துக் கயறுகளையும் வலையினையும் தன்னையும் ஒழுங்கு செய்து கொள்ள வேண்டும்; அத்தோணியில் ஒரு கூடையில் அவன் படுத்த மீன்களை வைத்திருப்பான்; கூடையில் அடங்காத அளவு பெரு மீன்கள் அகப்பட்டுவிடின் அவற்றைத் தோணியில் வெளியிடத்தில் சேமித்துக் கொணர்வன்; நுளைச்சி அலைகடல் நீர்விளிம்புக்குள் எத்துணை தூரம் சேமமாய்ச் செல்ல முடியுமோ அத்துணை தூரம் சென்று தோணியிலிருந்தவாறே அம்மீன்களை வாங்கிக்கொண்டு விலைப்பொருட்டு வேகமாய்க் கொண்டு கரை சேர்ந்து பாகுபடுத்தி விற்கத் தொடங்குவாள்; விற்பனை நிலை பரத்தியின் தொழிலாதலால் அவ்வந்நாளும் பரதவன் கொணரும் மீன்களின் மதிப்பினைப் படகிலிருந்தவாறே கண்ணுக் கெட்டிய தூரத்தே தனது கண்பார்வையால் நிச்சயித்து அளந்து விடுவாள்; இத்துணைச் செய்திகள் எல்லாம் புலப்பட "வியலளக்கரின் விடுந்திமில் வாழ்நர்கள் கொணர்ந்த கயலளப்பன பரத்தியர் கருநெடுங் கண்கள்" என்றார். இப்பாட்டின் தன்மை நவிற்சியணிச்சுவை இச்செயலை அதிகாலையிற் கடற்கரை சென்று நேரிற் கண்டார்க்கே நன்கு புலப்படும். அடியேன் அவ்வாறு கண்டுள்ளேன். கண்கள் கயல்போன்றன என்ற உவமை நயம்பட உரைப்பார் பலர். அவர்கள் "வியல்...கொணர்ந்தகயல்" என்றதன் உள்ளுறை குறிப்பினையும், ஈண்டுப் பரத்தியர் கண்களுக்குக் கூறிய சிறப்பினையும் உணர்ந்திலர்.

அளக்கர் - கடல்; வியல் - விரிந்த; திமில் வாழ்நர் - திமில் செலுத்தி மீன் பிடித்தற் றொழிலால் தம் வாழ்க்கையினை நடத்துவோர். பரதவர்; திமில் - மீன் பிடிக்கும் படகு (கட்டுமரத்தோணி). 6

3998. உணங்கல் மீன்கவர் வுறுநசைக் குருகுட னணைந்த
கணங்கொ ளோதிமங் கருஞ்சினைப் புன்னையங் கானல்
அணங்கு நுண்ணிடை நுளைச்சிய ரணிநடைக் கழிந்து
மணங்கொள் கொம்பரின் மருங்குநின் றிழியல மருளும். ௭

(இ - ள்) உணங்கல்...அணைந்த - உலர்தலையுடைய மீன்களைக் கவரும் ஆசையினையுடைய பறவைகளுடனே கூட வந்த; கணங்கொள்...அழிந்து - கூட்டமாகிய அன்னங்கள் வளைகின்ற நுண்ணிய இடையினையுடைய நுளைச்சியாது அழகிய நடைக்கு அழிந்து, கரிய கொம்புகளை யுடைய புன்னையங் காட்டிலே; மணங்கொள்...அலமருளும் - மணமுடைய அப்புன்னைமரக் கொம்புகளிலே பக்கத்தினின்றும் இழியாதவையாகி மருண்டிருக்கும்.

(வி - ரை) உணங்கல் - வாடி உலர்ந்த; மீன் கவர் நசைக் குருகுடன் - (மீன் விற்கும் பெண்கள் ஏமாந்த சமயம் பார்த்து) மீன்களைக் கவரும் நோக்கத்துடன் உள்ள பறவைகள். உணங்கல் - காய்தல்.

உடன் அணைந்த ஓதிமம் - ஓதிமம் மீன் கவர்தற்கு வாராவிடினும் அவ்வாசை கொண்ட குருகுகளுடன் இனம் பற்றி அணைந்தன; ஆயினும் 'தீயாரோடிணங்கி யிருப்பதும் தீது' என்றபடி அத் தீய எண்ணமுடைய குருகுகளுடன் அணைந்தமையால் அலமந்தன என்ற குறிப்புப்படக் கூறினமை காண்க. கணங்கொள் - கூட்டமாகிய; கருஞ்சினைப் புன்னையங்கானல் - கருமை - மிக்க பசுமை கருமையாக் காணுநிலை; புன்னையங்கானல் - நெய்தற்கரு; "மட்டிட்ட புன்னையங் கானல்" (தேவா). தேவார ஆட்சி போற்றப்பட்டது.

மணங்கொள் கொம்பர் - மணம் - புன்னைப் பூக்களின் மணம். இனிய மணம் மிக்க நிலை ; " மட்டிட்ட " (தேவா) ; ஓதிமம் - அன்னப் புட்கள். அணிநடைக் கழிந்து...நின்றலமருளும்-நுளைச்சியர் நடந்து வந்து இப்புட்களைத் துரத்தும் நிலைக்கு அஞ்சியிருத்தலை நடைக்கழிந்து அலமருதலாகக் கூறியது தற்குறிப்பேற்ற அணி.

அலமருதல் - வருந்துதல் ; இழி - இழிவாகிய ; இழியல - இழியாதனவாகி, மருளும் என்பாருமுண்டு ; பரத்தியர் மெல்லிய நடையினர் என்பது கருத்து.

கணங்கள் - அசைநடை - என்பனவும் பாடங்கள். 7

3999. வலைநெ டுந்தொடர் வடம்புடை வலிப்பவ ரொலியும்
விலைப கர்ந்துமீன் குவைகொடுப் பவர்விளி யொலியுந்
தலைசி றந்தவெள் வளைசொரி பவர்தழங் கொலியும்
அலைநெ டுங்கட லதிரொலிக் கெதிரொலி யனைய. அ

(இ - ள்) வலை...வலிப்பவர் ஒலியும் - வலைகளின் நீண்ட தொடர்களை யுடைய வடங்களை இழுத்துச் செம்மை செய்பவர்களது ஒலியும் ; விலை...விளி ஒலியும் - விலையினை எடுத்துச் சொல்லி மீன் குவியல்களைக் கொடுப்பவர் வாங்கு வோரை அழைக்கும் விளித்தலாகிய ஒலியும் ; தலை...தழங்கொலியும் - மிகச் சிறந்த வெள்ளிய சங்குகளைக் கொணர்ந்து குவிப்பவர்களின் மிக்க ஒலியும் ; அலை... எதிரொலியனைய - அலைகளையுடைய நீண்ட கடலின் அதிர்கின்ற ஒலிக்கு எதிர் ஒலி போன்றுள்ளன.

(வி - ரை) வலை தொடர் நெடுவடம் புடை வலிப்பவர் - கடல் வலைகள் மிகப் பெரியனவாயும் நீண்டும் உள்ளன ; அவற்றைக் கரையில் இழுத்து நாடோறும் செம்மை செய்தல் பெரு வேலை. கொடுப்பவர் - நெய்தனிலமாக்களாகிய பெண்டிர்.

விலை...விளி ஒலி - விலையினை எடுத்துக் கூறி மீன் கொள்வோரை அழைத் தல் பேரொலி தருவது. இது மீன் வாணிப வழக்கு ; ஏனைப்பண்டங்களுக்கும் ஏற்ற பெற்றி அமைவதாயினும் விரைவிற் கெடும் இயல்பும், விரைவில் முடிக்க வேண்டிய அவசியமும் உடைய கடற்கரை மீன் வாணிபத்தில் இது மிகவும் வேண்டற்பாலது.

வளை சொரிபவர் - பலவகைப் பெரிதும் சிறிதுமாகிய சங்கு வர்க்கங்களைக் கடலினின்றும் வாரிக் கொணர்ந்து சொரிதலினால் மிக்க ஒலி.

எதிர் ஒலி - பிரதி விம்பமாகிய முழக்கு ; அனைய - முன் கூறிய மூன்றும் கடல் ஒலி போன்றன. மிகுதிப்பாடு குறித்தது. தலை - உரிய இடங்களில் என்றலுமாம். 8

4000. அனைய தாகிய வந்நுளைப் பாடியி லமர்ந்து
மனைவ ளம்பொலி நுளையர்தங் குலத்தினில் வந்தார்
புனையி ளம்பிறை முடியவ ரடித்தொண்டு புரியும்
வினைவி ளங்கிய வதிபத்த ரெனநிகழ் மேலோர். சு

(இ - ள்) அனையதாகிய...அமர்ந்து - முன் கூறிய அத்தன்மைத்தாகிய அந்த நுளைப்பாடியில் வாழ்ந்து ; மனை...வந்தார் - இல்வாழ்க்கை வளங்களால் விளங்கும் நுளையர்களது குலத்தினில் அவதரித்தவர் ; புனை...மேலோர் - இளம் பிறைச்சந் திரனைச் சூடிய முடியினை உடைய இறைவரது திருவடித் தொண்டு செய்யும் தொழி லில் விளங்கிய அதிபத்தர் என்று நிகழ்கின்ற மேன்மையினை உடையவர்.

(வி - ரை) வந்தார் - மேலோர் - என்க ; மேலோர் பெயர்ப் பயனிலை ; மேலோர் - வந்தார் என்று கூட்டி முடிப்பதுமாம்.

அடித்தொண்டு புரியும் வினை - திருவடித் தொண்டில் செய்யப்படும் செயல். தொண்டு மனத்தாலும் செய்யப்படுமாதலின், இங்கு, அதனோடு, விளங்கிய செயலி னாலும் தொண்டுபுரிபவர் என்றதாம் ; அச்செயல், மேல் (4002) உரைக்கப்படும்.

அதிபத்தர் - காரணப் பெயர் ; நிகழ்தலாவது அப்பெயர்க் காரணத்துக் கேற்ற படி ஒழுக்கத்தாலும் விளங்குதல். 9

4001. ஆங்க வன்பர்தா நுளையர்தந் தலைவரா யவர்கள்
ஏங்கு தெண்டிரைக் கடலிடைப் பலபட வியக்கிப்
பாங்கு சூழ்வலை வளைத்துமீன் படுத்துமுன் குவிக்கும்
ஓங்கு பல்வகை யுலப்பில வுடையரா யுயர்வார். ௧0

4002. முட்டின் மீன்கொலைத் தொழில்வளத் தவர்வலை முகந்து
பட்ட மீன்களி லொருதலை மீன்படுந் தோறும்
“நட்ட மாடிய நம்பருக் ” கெனநளிர் முந்நீர்
விட்டு வந்தனர் விடாதவன் புடனென்றும் விருப்பால். ௧௧

4001. (இ - ள்) ஆங்கு...தலைவராய் - அந்த அதிபத்தர் என்னும் அன்பர் நுளையர்களின் தலைவராகி ; அவர்கள்...இயக்கி - அவர்கள் சத்திக்கின்ற தெளிந்த அலைகளையுடைய கடலில் பலவாறும் தொழில் செய்து ; பாங்கு...படுத்து - பக்கங் களிலே சூழும் வலைகளை வளைத்து வீசி மீன்களைப் பிடித்துக் கொணர்ந்து ; முன் குவிக்கும் ஓங்கு பல்வகை - முன் குவிக்கின்ற உயர்ந்த பலவகை மீன் குவைகள் அள வில்லாதவற்றையுடையவரா யுயர்ந்தவராகி, ௧0

4002. (இ - ள்) முட்டில்...மீன்களில் - குறைதலில்லாத மீன்களைப் படுத்து அக்கொலைத் தொழிலினது வளத்தையுடைய பரதவர் வலைகளால் வாரி எடுத்தலினாற் பட்ட மீன்களில் ; ஒருதலை மீன் படும் தோறும் - ஒரு தலைமையாகிய மீன் படுந்தோறும் ; நட்டமாடிய நம்பருக்கென - இஃது, ஐந்தொழிலருட் கூத்தாடும் ஐயருக்காகுக என்று ; விடாத அன்புடன் - இடையறாத அன்பினாலே; விருப்பால் - விருப்பத்துடன் ; நளிர் முந்நீர் என்றும் விட்டு வந்தனர் - குளிர்ந்த கடலினிடத்தில் நாடோறும் விடுத்துவந்தனர். ௧௧

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

4001. (வி - ரை) ஆங்கு - முன் கூறிய அத்தன்மையுடன்; அசையென்பாரு முண்டு.

ஏங்குதல் - சத்தித்தல் ; ஒலித்தல். தன் வளங்களைக் கொள்ளையிடுதல் பற்றி இரங்குதல் என்ற குறிப்புமாம்.

பலபட இயக்குதலாவது - மீன்படுத்தற்றொழிலின் பலவகைகளையும் செய்தல். பலபடவு - பல படகுகளை என்று கொண்டு, படகுகளைச் செலுத்தி என்றலுமாம். படகு - படவு - என வந்தது ; படகியக்கி - என்று பாடங்கொள்வாரு முண்டு.

அவர்கள் - தம் கீழுள்ள அக்குலத்தவராகிய அந்நுளையர்கள் ; அவர்கள் - இயக்கிப் - படுத்துக் குவிக்கும் - பல்குவை என்க. குவை - மீன் குவியல்கள் “ பரிவுறத் தடிந்த பன்மீன் படர்நெடுங் குன்று செய்வார் ” (73).

முன்குவிக்கும் பல்குவை - அவ்வவரும் தமது தலைவர்க்குச் செலுத்தும் பகுதி யாகிய குவியல்கள்.

உயர்வார் - உயர்தல் - உலகநிலைச் செல்வ வளங்களால் உயர்தல். உயர்வாராகி; முற்றெச்சம் - உயர்வார் - விட்டுவந்தனர்—என மேல்வரும் பாட்டுடன் முடிக்க. உயர்வார் — அவர்தம் குலத்தளவிலன்றிச் சிவனன்பின்றிறத்தில் மேம்படுகின்றாராய் என்ற குறிப்புமுடையது. 10

4002. (வி - ரை) முட்டில் மீன் - கடலின் மீன்களுக்கு எப்போதும் குறைவில்லையாதலின் முட்டில் என்றார்.

கோலைத் தொழில் - மீன்களை நீரினின்றும் வலைப்படுத்துப் பிடித்து எடுத்தலேயின்றி அவற்றைக் கொல்லுதல் இல்லை; அவை தாமாக இறந்துபடுகின்றன; ஆதலின் கொலைப் பழியாகிய பாவச் செயலில்லையாதலின் அவற்றை உண்ணலாம் என்னும் புத்த சமணக் கொள்கைகளை மறுத்துக் கூறியவாறு; அவற்றை நீரினின்றும் எடுத்தலே கொலை செய்தலாகும் என்பது முன்னரும் "பரிவுறத் தடிந்த பன்மீன்" (73) என்றார். வளம் - செல்வம் "வளம்பட வேண்டாதயார்" (நாலடி.)

பட்ட - படுத்த; அகப்படுத்த; தலைமீன் - தலைமையாகிய - உயர்ந்த - சிறந்த; தமது பொருள்களுட் சிறந்தவற்றையே சிவனுக்காக்குதல் வேண்டும் என்பது சிவாகம விதி; அரிவாட்டாய நாயனார் வரலாறு முதலியவை காண்க. "விரும்பின கொடுக்கை பாம்பாற்கென்று" (11 - திருமுறை - இடைமருது - மு - கோ - 28).

நம்பருக்கேன - நம்பருக்கு இது ஆகுக என்று நிவேதித்து.

படுதோறும் - மீன்படுத்த நாட்களிலெல்லாம்; என்றும் - நாடோறும்; விட்டுவந்தனர் - விடாத-முரண் அணி; அன்புடன் - தலைமீன்-விட்டுவந்தனர் - என்று கூட்டுக.

வலை-வலையினால்; முகந்து-முகக்க; முகத்தலால்; முகந்தல்-பிடித்தல்-கவர்தல்.

4003. வாகு சேர்வலை நாளொன்றின் மீனொன்று வரினும்
ஏக நாயகர் தங்கழற் கெனவிடு மியல்பால்
ஆகு நாள்களி லனேகநா ளடுத்தொரு மீனே
மேக நீர்படி வேலையிற் படவிட்டு வந்தார். கஉ

(இ - ள்) வாகு...வரினும் - ஒழுங்காகிய வலையிலே ஒருநாளில் ஒரு மீனே வந்தாலும்; ஏகநாயகர்...ஆகுநாள்களில் - முழு முதல்வராகிய இறைவரது திருவடிக்கு என்று விடுகின்ற இயல்பாலாகிய நாட்களில்; அனேக நாள்...பட - அனேக நாட்கள் தொடர்ந்து ஒரு மீனே மேகம் படியும் கடலிற் கிடைக்க; விட்டு வந்தார் - அதனை இறைவனுக்கென்று கடலில் விட்டு இவ்வாறொழுகி வந்தனர்.

(வி - ரை) வாகுசேர் வலை - வாகு - ஒழுங்கு; அழகு; வலை - வலையில்; மீன் ஒன்று - ஒரு மீனே. மாகு - என்பது பாடமாயின் வலையிற் சேர்த்தும் மணிகள் என்க. மாகு - வலையின் பரியாயப் பெயர்களுள் ஒன்றுமாம். தேற்றேகாரம் தொக்கது; பிரிநிலையுமாம். மகாஜாலப் பிரயோகத்தில் வரும் ஞானவலையில் 51 அக்கரங்களையும் அவ்வலையின் மணிகளாகக் கூறப்பட்டிருத்தலும் அறிக—(ஸ. சிவப்பிரகாசக் குருக்களையா அவர்களின் குறிப்பு).

இயல்பாலாகு நாள்களில் - இவ்வியல்பால் ஒழுகிய நாளிலே.

அடுத்த அனேக நாள் ஒரு மீனே - பட - என்க; அடுத்து - தொடர்ச்சியாக; பட - கிடைக்க.

விட்டு வந்தார் - இறைவருக்காகுக என்று கடலில் மீனை விட்டு இவ்வாறொழுகி வந்தனர்.

அடுத்தடுத் தொருமீன்—என்பனவும் பாடம். 12

4004. மீன்வி லைப்பெரு குணவினின் மிகுபெருஞ் செல்வந்
தான்ம றத்தலி னுணவின்றி யருங்கிளை சாம்பும்
பான்மை பற்றியும் வருந்திலர்; பட்டமீ னென்று
மான்ம றிக்கரத் தவர்கழற் கெனவிட்டு மகிழ்ந்தார். ௧௩

(இ - ள்) மீன்...மறத்தலின் - மீன் விலைப்படுத்தலினால் பெருகும் உணவுப் பண்டங்களால் மிக்க பெருஞ் செல்வம் இவ்வாறு மறுக்கப்பட்டமையால்; உண வின்றி...வருந்திலர் - உணவில்லாமல் தமது அரிய கிளைஞர்கள் பசியால் வருந்து கின்ற தன்மை பற்றியும் வருந்திலர்; பட்ட...மகிழ்ந்தார் - வலையிற்படுத்ததொரு மீனையும் மான்மறியினைக் கரத்தில் ஏந்திய இறைவரது திருவடிக்கு என விட்டு மகிழ்ந்தனர்.

(வி - ரை) மீன்...செல்வம் - மீன்விற்பதனால் மிக்க உணவுப் பொருள்கள் தேடுதற்காகிய பெருஞ் செல்வம்; அருங்கிளை உணவின்றிச் சாம்பும் பான்மை பற்றியும் வருந்திலர் - என்க.

அருங்கிளை - மனைவி மக்கள் முதலிய சுற்றத்தார்கள். சாம்புதல் - பசியினால் கண்குழிந்து மயங்குதல்; பற்றியும் - உம்மை - உயர்வு சிறப்பு. குங்கிலியக் கலய நாயனார் சரிதம் (838) பார்க்க. கிளை - மரக்கிளை போலச் சூழ்ந்த சுற்றத்தார்.

மகிழ்ந்தார் - வருந்தாமை மாத்திரையே யன்றி மகிழ்ச்சியினையும் அடைந்தார்.

பட்ட - படுத்த - பிடித்த.

கழற்கு என - கழற்கு ஆக என்று சொல்லி; "சென்று பொற்கழல் சேர்கென" (4008) மான்மறி - மான்கன்று. 13

4005. சால நாள்களிப் படிவரத் தாமுண வயர்த்துக்
கோல மேனியுந் தளரவுந் தந்தொழில் குறையார்
சீல மேதலை நின்றவர் தந்திறந் தெரிந்தே
ஆல முண்டவர் தொண்டரன் பெனுமமு துண்பார், ௧௪

4006. ஆன நாளொன்றி லவ்வொரு மீனுமங் கொழித்துத்
தூசி றப்பசுங் கனகநற் சுடர்நவ மணியால்
மீனு றுப்புற வமைத்துல கடங்கலும் விலையாம்
பான்மை யற்புதப் படியதொன் றிடுவலைப் படுத்தார். ௧௫

4005. (இ - ள்) சால...வர - அனேக நாட்களில் இப்படி வர; தாம்...தளர வும் - தாம் உணவு மறந்து வாடி தமது அழகிய திருமேனியும் தளர்ச்சி யடையவும்; தந்தொழில் குறைய...தெரிந்தே - தமது திருத்தொண்டினின்றும் குறைவுபடாத அவ்வொழுக்கத்திலே சலியாது ஒழுகியவரது திறத்தினைத் தெரிந்தே; ஆலம்... உண்பார் - விடத்தினை உண்ட இறைவர் இத்திருத் தொண்டரது அன்பு என்கின்ற திருவமுதத்தினை உண்பாராகி. ௧௪

4006. (இ - ள்) ஆன...ஒழித்து - முன்கூறியவாறு ஆகிய நாள் ஒன்றிலே அந்த ஒரு மீனும் அங்கு அகப்படாதொழியச் செய்து; தூய...அமைத்து - தூய சிற முடைய பசும் பொன்னாலும் ஒளியுடைய நவமணிகளாலும் மீன் உறுப்புக்கள் பொருந்தும்படி அமைத்து; உலகடங்கலும்...ஒன்று - உலகங்களெல்லாம் விலை

யாக மதிக்கப்படும் தன்மையில் அற்புதத்தன்மை வாய்த்ததொரு மீன்; இடுவலைப் படுத்தார் - வீசிய வலையினிற் படுப்பித்தனர். ௧௫

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

4005. (வி - ரை) உணவு அயர்த்து - அயர்தல் - மறத்தல்; அயர்த்து - இழந்து என்க.

தளரவும் - உம்மை சிறப்பு; கூசாது ஆலமுண்டவர்...அமுதுண்பார் - ஆலமுண்டவராதலின் இத்தொண்டரது அன்புமயமாகிய திருத்தொண்டின் வரும் அன்பமுதத்தினையும் உண்பாராய்; உண்டார் - உண்பார் - படுத்தனர் என்று மேல் வரும் பாட்டுடன் முடிக்க, "மெய்த்தன்மை யன்புநுகர்ந் தருளுதற்கு" (3684) என்ற சிறுத்தொண்ட நாயனார் புராணமும் காண்க. இங்கு நிவேதித்த மீனுண்டமையும், அங்குப் பிள்ளைக்கறி வேண்டியமையும், அன்பு நுகர்தற்கே யன்றிப் பிறிதில்லை என்பது.

மேனியும் தளரவும் - தொழில் துறையாச் சீலர் - உடல் வலிமையுள்ள அளவே தொழில் இயற்றுதல் உலகரியல்பு. ஆயின் இங்கு இந்நாயனார் மேனியும் தளரவும் தமது தொழில் குறையாம லியற்றும் ஒழுக்கத்தின் நின்றது அன்பின் உறைப்பு; அரிவாட்டாய நாயனார் இறைவரைச் செந்நெல் ஊட்டிய ஒழுக்கத்தினைத் தாம் பசியால் வருந்திய காலத்தும் புரிந்து வந்த அன்பின் செயலும், புகழ்த்துணை நாயனார் உணவின்றி வருந்திக் குடர்ந்தாங்க மாட்டா நிலையிலும் இறைவரைப் பரிந் தாட்டிய அன்பின் செயலும் முதலாயினபலவும் ஈண்டு, நினைவு கூர்தற்பாலன.

சீலமே - ஏகாரம் தேற்றம்; தலைநிற்றல் - சிறக்கச் செய்தல் - இப்படிவா - வருதலால்; மேனி - மேனியும் - உம்மை செல்வம் முதலிய ஏனைய எல்லாவற்றுடன் என்று இறந்தது தழுவிய எச்ச உம்மை; தளரவும் - உம்மை உயர்வு சிறப்பு.

ஆலமுண்டவர் - அமுது உண்பார் - சாதலை விளைக்கும் கைத்த ஆலத்தையும் சாவாமையினை விளைக்கும் இனிய அமுதத்தையும் ஒன்று போலவே உண்பவர் என்று வேண்டுதல் வேண்டாமையிலாத இறைமைக் குணங் குறித்தவாறு; கைப்புடைய ஆலத்தை உண்பவர் அன்புடன் ஊட்டும் அமுதத்தினை விருப்பாராவார் என்றதொரு நயமும் காண்க. இங்கு உண்ணக் கிடைப்பது மீனாகிய அநுசிதப் பண்டமாயினும், கண்ணப்பர் அளித்த இறைச்சியும், சிறுத்தொண்டர் பாற்கேட்க அவர் அளித்த பிள்ளைக் கறியும் போல இனியனவாய்க் கொள்ளப் பெற்றது அவ்வவரது அன்பே யன்றி அப்பண்டங்களின் தன்மையன்று என்பதாம். அது குறிக்க அன்பெனு மமுது உண்பார் என்றார். ஆலமுண்டமையான் அமுதுண்ண ஏக்குற்றார் என்றது கவிநயம்.

4006. (வி - ரை) நாள் ஒன்றில் - சிறப்பும் பற்றி அந்நாள் ஒன்று எனப் பட்டது. இணையிலாத ஒன்று.

அவ்வோரு மீனும் - முன் பல நாட்கள் அடுத்துப் படுத்த அந்த ஒரு மீனும், என்று அகரம் முன்னறி சுட்டு; மீனும் - உம்மை முற்றும்மை; ஒழித்து - பெறாத படி ஒழியச் செய்து.

உண்டார் - (4005) ஒழித்து - அமைத்துப் படுத்தார் - என்று முடிக்க.

அவ்வோரு மீனும் - உலகியலிற் காணும் ஏனை மீன்கள் போன்ற தன்மையதன்று அவ்வொருமீன்; அன்று படுப்பது உலகிற் பெறப்படாத மேம்பாடுடையது என்பது குறிப்பு.

தூ...அமைத்து - பொன்னாலும் மணியாலும் மீன் உறுப்புக்கள் எல்லாம் உறும்படி உளவாக்கி; இதற்கென்று சிருட்டித்து.

உலகடங்கலும் விலையாம் பான்மை - விலை மதிப்புப் பற்றிக் கூறியது, இந்நாயனார் மீன் விலைப்படுத்தி உண்ணும் வாழ்வினராதலின் இதன் பெருவிலை பற்றி ஆசைகொள்ளார் என்பது உணர்த்த இறைவர் அமைத்த நிலை காட்டுதற்கு.

அற்புதப்படியது - அற்புதம் - காணுந்தோறும் புதிது புதிதாய் விளையும் பெருமித உணர்வு. இவ்வுணர்வை விளக்கும் தன்மையினை உடையது ; படி - தன்மை ; படியது - தன்மையினை உடையது.

ஒன்று - இரண்டேனும் பலவேனும் வரின் ஒன்று இறைவனுக்கு விடுப்பர். ஒன்றேவரின் விடுப்பரோ என்ற ஐயமின்றி உலகர் காண ; காளத்திநாதர் தமது இடக்கண்ணிலும் குருதி சோர நின்ற திருவுள்ளக் குறிப்பு ஈண்டு வைத்து கருதற்பாலது.

இடுவலை - நாயனாரது ஆட்கள் இடும் வலையின்கண்.

படுத்தார் - படுப்பித்தார் ; படச் செய்தருளினர் (அமுது உண்டார்) என்க.

தூ...படியது - "ஒரு நாட்கனக, நிறமமர் மீன்பட" என்ற வகைநூற் கருத்தினை விரித்தருளியவாறு. 15

4007. வாங்கு நீள்வலை யலைகடற் கரையில்வந் தேற
ஓங்கு செஞ்சுட ருதித்தென வுலகெலாம் வியப்பத்
தாங்கு பேரொளி தழைத்திடக் காண்டலு மெடுத்துப்
பாங்கு நின்றவர் "மீனொன்று படுத்தன" மென்றார். கஅ

(இ - ள்) வாங்கு...ஏற - மீன்வாரி இழுக்கப்பட்ட நீண்ட வலையானது அலைகளையுடைய கடற்கரையில் வந்து ஏற ; ஓங்கு...காண்டலும்-(அதிற்பட்ட மீன்) ஒங்கும் ஞாயிறு உதயமானாற்போல உலகெலாம் அதிசயிக்கும்படி அமைந்த பெரிய ஒளிவீசக் காண்டலும் ; எடுத்து...என்றார் - அதனை எடுத்து அருகு நின்ற பரதவர்கள் மீன் ஒன்றைப் பிடித்தோம் என்று சொன்னார்கள்.

(வி - ரை) வாங்கு நீள்வலை...ஏற - வாங்குதல் - இழுத்தல். மீன்படுக்கக் கடலில் வீசிய நீண்ட வலையினை மீன்பட்டவுடன் இழுத்துப் படவிலேனும் கரையிலேனும் சேர்ப்பர் ; நீள்வலை - கடல் வலைகளின் பெருநீளத்தைக் குறித்தது ; கரையில் வந்தேற - அலைகளினூடே கரையில் வந்து சேர்ந்து எடுக்கப்பட ; வாங்கு - வளைந்த என்றலுமாம்.

ஓங்கு செஞ்சுடருதித்தென - தூறும் பொன்னும் நவமணிகளும் மீனுறுப்பாக அமைந்ததாதலின் சூரிய ஒளி வருதல்போல என்றார் ; மெய்பற்றி வந்த உவமம் ; சூரியன் உதிக்கும்போது செந்நிறமுடையதாதலின் செஞ்சுடர் என்றார்.

உலகெலாம் - திருவருள் வெளிப்பட்ட இடமாதலின் இம் முதன்மொழியாகிய அருள்மொழியாகிய மணியினை இங்குப் பதித்தருளினர் ஆசிரியர்.

பாங்கு நின்றவர் - அருகில் - அருகில் ; பாங்கு - பான்மை என்று கொண்டு மீன்படுத்துக் கொணரும் (பாங்கில்) பண்பியலையுடையார் என்றலுமாம்.

மீனொன்று படுத்தனம் - இஃது பரிசனத்தவர் தம் தலைவராகிய அதிபத்தருக் குரைத்தது.

எடுத்து - அம்மீனை வலையினின்றும் வேறு எடுத்து; மீன் என்றது முன் பாட்டினின்றும் எடுக்கப்பட்டது.

திரையில் வந்தேற—என்பதும் பாடம். 16

4008. என்று மற்றுளோ ரியம்பவு மேறுசீர்த் தொண்டர்
"பொன்றி ரட்சுடர் நவமணி பொலிந்தமீ னுறுப்பால்
ஒன்று மற்றிது வென்னையா ளுடையவர்க் காகும்;
சென்று பொற்கழல் சேர்"கெனத் திரையொடுந் திரித்தார். ௧௭

(இ - ள்) என்று...தொண்டர் - முன் கூறியவாறு மற்றுள்ளோர் சொல்லவும் அதுகேட்ட ஏறுகின்ற சிறப்புடைய தொண்டராகிய அதிபத்தர்; பொன்... ஆகும் - பொன்னும் தொகுதியாகிய சுடரினையுடைய நவமணிகளும் விளங்கும் மீன் உறுப்புக்களாற் பொருந்துகின்ற வேறாகிய இது என்னை ஆளுடைய இறைவருக்கே ஆகும். அவரது பொன்னார்ந்த திருவடிகளிற் சேர்க என்று அலையில் சுழல விடுத்தனர்.

(வி - ரை) என்று...இயம்பவும் - என்று - "மீனொன்று படுத்தனம்" என்று; மற்றுளோர் - பரிசனங்களாகிய பரதவர்.

ஏறுசீர் - மிகுகின்ற சிறப்பு; ஏறும் - சிவனடியில் ஏறப்பெறும் என்றதும் குறிப்பு. தொண்டர் - அதிபத்தர்.

ஒன்றும் மற்று இது - ஒன்றுதல் - பொருந்துதல்; மற்று - ஏனைய மீன்களின் வேறாகிய என்பது.

சென்று பொற்கழல் சேர்க - மீனினை விடும்போது அதனை நோக்கி அதிபத்தர் சொல்லியது. நிவேதிக்கும் வகை. (4002 - 4004).

திரையொடும் திரித்தார் - ஒடு - உருபு திரையின் கண் என வேற்றுமை மயக்கம்; திரித்தல் - சுழலவீசுதல். கரையின்றும் கடலில் வீசுகின்றாராதலின் அலையினடுவுட் சேரும்படி சுழற்றி வீசினார் என்க.

இது என்னை ஆளுடையவர்க்கு ஆகும் - உயர்ந்த பொருளாதலின் இறைவருக்கே உரியது என்றபடி. "விரும்பின கொடுக்கை பரம்பரற் கென்று" (பட்டினத்தார்-திருவிடைமருதூர் மும்மணிக்கோவை - 28); உடையவர்க்கே என்ற பிரிநிலை ஏகாரம் தொக்கது. 17

4009. அகில லோகமும் பொருண்முதற் றாமெனு மளவிற்
புகலு மப்பெரும் பற்றினைப் புரையற வெறிந்த
இகலின் மெய்த்திருத் தொண்டர்முன் னிறைவர்தாம் விடைமேன்
முகில்வி சும்பிடை யணைந்தனர்; பொழிந்தனர் முகைப்பூ. ௧௮

(இ - ள்) அகில...புகலும் - எல்லா வுலகுகளும் பொருளையே முன்னாகக் கொண்டு செல்லும் என்னும் பிரமாணத்தோடு சொல்லப்படுகின்ற; அப்பெரும்... தொண்டர்முன் - அந்தப் பெரிய வலிய பொன்னாசை என்னும் பெரும் பற்றினைக் குற்றமற நீக்கிய ஒப்பற்ற மெய்த் திருத்தொண்டர் முன்னே; இறைவர்...அணைந்தனர் - இறைவர் இடப வாகனத்தின்மேல் முகில்படியும் ஆகாயத்தில் எழுந்தருளி வந்தனர்; பொழிந்தனர் முகைப்பூ - (தேவர்கள்) கற்பகப் பூமழை பொழிந்தனர்.

(வி - ரை) அகில...எனும் - எவ்வுலகினும் எச்செயலும் பொருளன்றி யில்லை என்னும் உண்மை; பிரமாணம்; "பொருளிலார்க்கிவ்வுலகமில்லா தியாங்கு" (குறள்) "முனிவரு மன்னரு முன்னுவபொன்னின் முடியும்" (திருக்கோவை - 332); முனிவருக்கும் தங்கரும முடிக்க இன்றியமையாது வேண்டற்பாலதாகிய பொருளை

இம்மையில் இல்வாழ்க்கையினை யுடைய ஒருவர் (நாயனார்) பற்றறக் களைந்ததனால் இவரது மேன்மை புலப்படும். பேரும்பற்று - விடுதற்கருமை குறித்தது.

புரை அற எறிதலாவது - அப்பற்றுத் தம்மிடம் சிறிதும் சாராது முற்றக் களைதல்; வாகீசர் முன்பு திருமுற்றத்தில் பொன்னினொடு நவமணிகள் பொலிந் திலங்க இறைவர் அருளியதும், அவற்றை அவர் பூம்பொய்கையில் எறிந்ததுமாகிய வரலாறு ஈண்டு நினைவுகூர்தற்பாலது.

இகல் - ஒப்பு; இகல் - வெறுப்பு என்று கொண்டு அன்னை இறைவர்க்கு ஆகும் பண்டமாக இகலின்றி விரும்பிய சிறப்பு என்றலுமாம். புரையற - என்றதும் அக் குறிப்புடையது; தேவர் (பொழிந்தனர்) என்ற எழுவாய் அவாய் நிலையான் வருவிக் கப்பட்டது, மாரி பொழிதற்குரியார் அவரே யாகலின். 18

4010. பஞ்ச நாதமு மெழுந்தன ; வதிபத்தர் பணிந்தே
யஞ்ச லிக்கரஞ் சிரமிசை யணைத்துநின் றவரை
நஞ்சு வாண்மணி மிடற்றவர் சிவலோக நண்ணி
யஞ்சி றப்புடை யடியர்பாங் குறத்தலை யளித்தார். ௧௯

(இ - ள்) பஞ்ச...எழுந்தன - ஐவகைத் தேவவாத்தியங்களும் எழுந்து ஒலித் தன; அதிபத்தர்...நின்றவரை - நில முற விழுந்து வணங்கி எழுந்து குவித்த கைகளைச் சிரமேற் கூப்பி நின்றவராகிய அதிபத்தரை ; சிவலோகம்...பாங்கு உற - சிவ லோகத்தைச் சேர்ந்து அழகிய சிறப்பினையுடைய அடியார்களோடு இருக்கும்படி ; நஞ்சு...மிடற்றவர் - விடமுண்ட ஒளிபொருந்திய கண்டத்தினையுடைய இறைவர் ; தலையளித்தார் - திருவருள் பாலித்தார்.

(வி - ரை) (அதிபத்தர் நின்றார் ;) நின்றவராகிய அவரை என்று கூட்டுக ; நின்றவரைப் பாங்குறத் தலைஅளித்தார் - என்க.

தலையளித்தல் - ஒரு சொல் ; சிறந்த அருள் வழங்குதல் ; தலையளி - பெருங் கருணை.

நஞ்சு வாண்மிடறு - கரிய நஞ்சு நீலமணிபோல விளங்கும் கழுத்து. வாள்-ஒளி.

சிவலோகம்...பாங்குற - இவ்வுலகில் அடியாரோ டிருத்தலன்றி மீளா நிலையிற் சிவலோகத்திலும் அடியார்களோடிருக்க. தஞ்சிறப்புடை —என்பதும் பாடம். 19

4011. தம்ம றம்புரி மரபினிற் றகும்பெருந் தொண்டு
மெய்ம்மை யேபுரி யதிபத்தர் விளங்குதாள் வணங்கி
மும்மை யாகிய புவனங்கண் முறைமையிற் போற்றுஞ்
செம்மை நீதியார் கலிக்கம்பர் திருத்தொண்டு பகர்வாம். ௨௦

(இ - ள்) தம்மறம்புரி...வணங்கி - கொலைத்தொழில் புரியும் தமது மரபுக் குரியபடி நின்றவாறே தகுதியாகிய பெரிய திருத்தொண்டினை உண்மையிற் பிற ழாது செய்த அதிபத்த நாயனாரது விளக்கம் செய்யும் திருவடியை வணங்கி (அத் துணை கொண்டு) ; மும்மையாகிய...பகர்வாம் - மூன்று உலகங்களும் முறைமை யினாற் போற்றுகின்ற செம்மையுடைய நீதியினை உடையாராகிய கலிக்கம்ப நாயனா ரது திருத்தொண்டினைச் சொல்வோம்.

(வி - ரை) ஆசிரியர் இதுவரை கூறிவந்த புராணத்தை முடித்துக் காட்டி, இனி வரும் புராணத்துக்குத் தோற்றுவாய் செய்கின்றார்.

மறம்புரி மரபு - மீன்படுக்கும் தொழில் கொலைத்தொழி லாதலால் மறம் என்றார் ; தம் அறம் என்று கொண்டு குலப்பண்பு என்பதுமாம்.

மரபிற் றதம் பெருந் தொண்டு - மரபுத் தொழிலின்கண் நின்றே குலதருமச் செயல் செய்து அதன் வழியே செய்யும் திருத்தொண்டு ; " வருபிறப்பின் வழிவந்த, அறம்புரிகொள் கையராயே யடித்தொண்டி னெறிநின்றார் " (1052) என்ற நிலை ஈண்டுக் கருதத்தக்கது ; றதும் - அக்குலந் தரு நிலைக்குத் தக்க ; ஈண்டு தலைமீன்விடுத்த செயலைக் குறித்தது.

விளங்குதாள் - தொண்டின் நெறியினை விளக்கும் திருவடி ; விளக்கும் என்றது விளங்கும் என நின்றது ; பிறவினை ; விளங்குதற் கேதுவாகிய.

மும்மையாகிய...செம்மை - மும்மை - மேல் - நடு - கீழ் என்னும் மூன்று உலகங்கள். முறைமையில் - முறையினாலே ; முறைமை - நூல்விதி ; செம்மை - சிவத்தன்மை. செம்மை - நீதி - சிவதருமம் ; மூவுலகும் சிவநெறியாகிய தருமங்களைப் போற்றும் என்க. மும்மை - மூன்று ; " தமிழ் மும்மை. "

செம்மை நீதியார் - சிவதருமத்தில் நின்றவர் சரிதக்குறிப்பு.

மரபினிற் றதம் பெருந்தொண்டு - அதிபத்தரது சரிதச் சுருக்கமாகுதல் காண்க.

**சரிதச் சுருக்கம் : அதிபத்த நாயனார் புராணம் :**—நாகப்பட்டினம் என்பது சோழநாட்டிற் சிறந்த கடற் றுறைமுகப் பட்டினம். அதனிற் பரதவர் குலத்தில் வந்தவர் அதிபத்தர் என்ற பெரியார். அவர் பரதவர்களின் தலைவர். அவ் வலைத்தொழிலாற் பெறும் வளத்தினாற் பெருஞ் செல்வமுடையவராயினார் ; சிவனடிமைத் திறத்திற் சிறந்து விளங்கினார். நாள்தோறும் படும் மீன்களுள் தலையான தொன்றைச் சிவபெருமானுக் காகுகவென்று இடையறாத அன்பினால் கடலில் விட்டு வந்தார். ஒருநாளில் ஒரு மீனே படினும் அவ்வாறே விட்டுவந்தனர். அந்நாட்களில், தொடர்ச்சியாய் நாடோறும் ஒரு மீனே கிடைத்தது. அவ்வாறு கிடைத்தும் நியமப்படி அதனை விட்டுவந்தனர். அதனால் அவரது செல்வம் குறைந்தது. உணவின்றி அருங் கிளைஞர் வருந்தினர் ; அதனாலும் அவர் வருந்தாமல் கிடைத்த அவ்வொரு மீனை இறைவருக்கென விட்டு மகிழ்ந்தனர். இப்படி அனேக நாட்கள் சென்றன. அவருக்கும் உணவின்றித் திருமேனி தளர்ந்தது. ஆயினும் அவர் தமது திருத் தொண்டின் செயலைத் தளராமற் செய்துவந்தார்.

ஒருநாள் பொன்மயமாய் நவமணிகளின் ஒளியும் கொண்ட உறுப்புக்களுடன் உலகெலாம் விலைபெறும்படியான மீன் ஒன்றை இறைவர் அவரது வலைபுட் படும்படி அருளினர். அது உதய ஞாயிறு போன்று சுடர்விட்டது. அதனை எடுத்துப் பரதவர் அவருக்கு அறிவித்தனர். அதனைக் கண்ட நாயனார் " இது என்னை ஆளுடைய பெருமானுக்காகுவது ; அவர் பொற்கழல் சேர்க " என்று கடலலையிற் புகவிடுத்தனர். இவ்வாறு பொருட்பற்றை அறவே எறிந்த அதிபத்தர்முன் இறைவர் இடபத்தில் எறி எழுந்தருளி வந்து, காட்சி கொடுத்து, அவருக்குச் சிவலோகத்தில் அடியார்களோடு இனிதிருக்கும் பேற்றை அருளினர்.

**கற்பனை :** 1. பொன்னி நாடென்னும் கற்பகக் கொடியிற் பூத்த மலர் போன்றது நாகப்பட்டினம், மக்கள் வேண்டிய எல்லாவற்றையும் தருதலால். (3992).

2. மீன்படுக்கும் கொலைத்தொழில் புரியும் பரதவர் குலத்திலும் திருத்தொண்டர்கள் வருவர். (4000)

3. பரதவர் குலவியல் தொழிலாகிய மீன்கொலை வலைத்தொழில் செய்து நின்றவாறே சிவனடிமைத் தொண்டும் அதற்கேற்றவாறு செய்யலாம் (4002); திருநாளைப்போவார் நாயனார் வரலாறு பார்க்க.

4. நாளும் ஒருமீன் சிவனுக்கென்று கடலில் விடுதலும் சிவத்தொண்டாகும்.

5. அந்நியமத்தில் ஒருநாள் ஒருமீனே வரினும் விட்டுவருதலும், அதனால் செல்வங் குறைந்து அருங் கிளை சாம்புதலும், உணவின்றித் தமது மேனி தளர்வுறுதலும் கண்டும், அவ்வாறே கிடைத்த ஒரு மீனை விட்டு மகிழ்ந்து வருதல் அன்பின் உறைப்பினாலாகியது. (4003 - 4004)

6. அத்தகைய துன்பநிலையில் உலகடங்கலும் விலைபெறும் பொன்மயமாய் நவமணி உறுப்புடன் உதயசூரியன் போலச் சுடர்விடும் மீன் ஒன்று பட, அதனையும் சிவன்கழற்கென விடுத்தல் பொருட்பற்றினை அடியோடு எறியும் செயலாகும்.

7. பொருட்பற்று விடுதல் மிக அருமை. இந்நாள் உலகம் பொருட்பற்றே பற்றாக அலைந்தும் அலைத்தும் வருதல் ஈண்டுக் கருதத்தக்கது.

8. பற்றற்ற வழியே இறைவர் வெளியிட்டருளுவர்.

9. மண் பெண் பொன் என்ற எடணை மூன்றனுள் (எடணாத்திரயம்) பொருட்பற்று மிகக் கடினமாய்ப் பற்றுவது. உலக முழுவதும் பொருள் முதற்றும் என்பது ஒரு தடுக்கலாகாத பழமொழி. அதனை முழுதும் வென்றவர்கள் அன்பின் உறைப்புடைய பெருமக்கள்.

தலவிசேடம்: நாகப்பட்டினம் - III - பக்கம் - ௪௯௩ பார்க்க.

அதிபத்த நாயனார் புராணம் முற்றும்.

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# 44. கலிக்கம்ப நாயனார் புராணம்

## தொகை

" கைதடிந்த வரிசிலையான் கலிக்கம்பன் (கலியன்
கழற்சத்தி வரிஞ்சையர்கோன்) அடியார்க்கு மடியேன் "
—திருத்தொண்டத் தொகை (7)

## வகை

" பொய்யைக் கடிந்தநம் புண்ணியர்க் காட்பட்டுத் தன்னடியான்
சைவத் திருவுரு வாய்வரத் தானவன் றாள்கழுவ
வையத் தவர்முன்பு வெள்கிநீர் வாரா விட,மனைவி
கையைத் தடிந்தவன் பெண்ணா கடத்துக் கலிக்கம்பனே "
—திருத்தொண்டர் திருவந்தாதி - (53)

## விரி

4012. உரிமை யொழுக்கந் தலைநின்ற வுயர்தொன் மரபி னீடுமனைத்
தரும நெறியால் வாழ்குடிகள் தழைத்து வளரும் தன்மையதாய்
வருமஞ் சுறைபு மலர்ச்சோலை மருங்கு சூழ்ந்த வளமபுறவிற்
பெருமை யுலகு பெறவிளங்கு மேல்பாற் பெண்ணா கடமூதூர். க

புராணம் : இனி, ஆசிரியர், சிறுத்த முறையானே, எட்டாவது பொய்யடிமை யில்லாத புலவர் சருக்கத்துள், ஐந்தாவது கலிக்கம்ப நாயனார் புராணங் கூறத் தொடங்குகின்றார். கலிக்கம்ப நாயனாரது சரித வரலாறும் பண்பும் கூறும்பகுதி.

தொகை : மனைவியினது கையினைத் தடிந்த, வரிவில் ஏந்திய கலிக்கம்ப நாயனாரின் அடியார்க்கும் நான் அடியேனாவேன்.

கைதடிந்த - மனைவியினது கையினை வெட்டிய ; மனைவியினது என்பது சரித வரலாற்றினின்றும், வகைநூல் விரிநூல்களினின்றும் வருவிக்கப்பட்டது. வரிசிலையான் - விற்பிடித்த வீரனாகிய ; வரிசிலை - வரிந்து கட்டப்பட்ட வில்லை

வகை : பொய்யை...ஆட்பட்டு - பொய்யினை நீக்கி நமது புண்ணியராகிய சிவபெருமானுக்கு ஆளாகி ; தன்னடியான்...கழுவ - தமது அடியவன் சைவ தவ வேடந்தாங்கி வரத் தாம் அவரது கால்களைக் கழுவுதற்கு ; வையத்தவர்... நீர் வாராவிட - உலகியல் நிலையின் உலகமக்களின் முன்னே வெள்கி மனைவி நீர் வார்க்காது விட ; மனைவி...தடிந்தவன் — மனைவியினது கையைத் தடிந்தவர் ; பெண்ணாகடத்துக் கலிக்கம்பனே - பெண்ணாகடத்தில் வாழும் கலிக்கம்பரே, யாவர்.

பொய்மை...ஆட்பட்டு - இஃது நாயனாரது சிறப்பு; தன் அடியான் வர - தமது ஏவலளாயிருந்தவன் சிவனடியார் திருவேடத்தினைத் தாங்கி வரவும்; நான் அவரது கால்கழுவ நீர்வார்க்காது விட; வெளிகி - வெள்கியதால்; மனைவி - மனைவி நீர்வாராவிட என்றும், மனைவி கையினை என்றும் இருவழியும் கூட்டி உரைக்க இடையில் வைத்தார்; கலிக்கம்பனே - கைதடிந்தவன் என்று கூட்டுக.

பெயரும் சரித வரலாறும் பண்பும் தொகைநூல் தொகுத்தது. ஊரும் பெயரும் வரலாறும் பண்பும் வகைநூல் வகுத்தது. இவை விரிந்தவாறு விரிநூலுட் கண்டு கொள்க.

விரி: 4012. (இ - ள்) உரிமை...மரபின்-உரிமையாகிய நல்லொழுக்கத்திற் சிறந்த உயர்ந்த தொன்மையான மரபிலே; நீடும்மனை...தன்மையதாம் - நீடுகின்ற இல்லறநெறியில் வாழும் குடிகள் தழைத்தோங்கும் தன்மையினையுடையதாகி; வரும் மஞ்ச...பெண்ணாகட மூதூர்-உருகின்ற மேகங்கள் தங்குதற் கிடமாகிய மலர்ச்சோலைகள் பக்கங்களிற் சூழ்ந்த வளமுடைய புறம்பணைகளுடன், உலகம் பெருமையினைப் பொருந்தவிளங்குவது மேற்குத் திசையில் உள்ள திருப்பெண்ணாகடமென்னும் பழைய ஊர்.

(வி - ரை) உரிமை.. மரபின் - மரபுகள் ஒவ்வொன்றும் சந்தமக் குரியனவாய் விதிக்கப்பட்டனவும், ஆன்றோராசாரத்தால் வருவனவுமாகிய ஒழுக்கத்தின் வழுவாது சிறந்து இருத்தல் வேண்டுமென்பது. அறநூல்களாலும் தொல்காப்பிய முதலிய பழநூல்களாலும் இவ்வொழுக்கங்கள் விதிக்கப்படுவன.

மனைத் தருமநெறி - இல்லற வாழ்க்கையிலே; உரிமை ஒழுக்கம் தலைசிறந்திலே இதனுடனும் கூட்டுக.

குடிகள் - மரபின் உட்பிரிவு குடி எனப்படும்.

புறவு - இங்கு முல்லைப் புறவு.

உலகு பெருமை பெற - பெண்ணாகடமூதூர் விளங்கும் - என்று கூட்டுக. இந்நகரின் பெருமையினால் உலகம் பெருமை பெறுவதாம் என நகரச் சிறப்புரைத்தவாறு. குடிகளின் நல்லொழுக்கச் சிறப்பினாலே நாடும் நகரமும் பெருமை பெறுவன என்பதுமாகும்.

இத்தலத்தில் ஆளுடைய பிள்ளையார் "நீங்கு நீங்குவீர் தொழுமின்" என்று உலகினரை நோக்கி ஆணையிட்டருளித் திருப்பதிகம் பாடியருளிச் செல்லும்போது, வழியின் மாறன்பாடியில் எழுந்தருளிய காலைத் திருவரத்துறை நாதரால் முத்துச் சிவிகை முதலியவற்றைப் பெற்று உலகை விளக்கினர். அரசுகள் தோளில் இடபமும் சூலமும் பொறிக்கப் பெற்றனர். பின்னர், இதில் அச்சுத களப்பாளர் வாழ்ந்து உலகுக்குச் சிவஞான உபதேசம் செய்து வாழ்விக்க வரும் மெய்கண்ட தேவநாயனாரைப் பெற்றுள்ளார். இக்குறிப்பெல்லாம் பெறவைத்து உலகு பெருமைபெற விளங்கும் என்றார்.

மனைத் தரும நெறியாற் பெருமை பெற என்று கூறியது-இச்சரிதத்தினுள் மனையறம் விளங்கி உண்மைப் பேறு தருவது சிவனடியாரைப் பேணுதலாலாவதாம் என்ற உண்மை விளங்கும் குறிப்புத் தருவது. மனைக்கண் இருந்து மனையாளோடு வாழ்ந்து செய்யும் அறம். ஏழாம் வேற்றுமை உருபும் பயனும் உடன்தொக்க தொகை.

மேல்பால் - மேற்குத் திசையில்; நடுநாட்டின் மேல்கோடியில் திருமுதுகுன்றத்தினை அடுத்து உள்ளது இத்திருப்பதி.  1

4013. மற்றப் பதியி னிடைவாழும் வணிகர் குலத்து வந்துதித்தார்
கற்றைச் சடையார் கழற்காத லுடனே வளர்ந்த கருத்துடையார்
அற்றைக் கன்று தூங்கானை மாடத் தமர்ந்தா ரடித்தொண்டு
பற்றிப் பணிசெய் கலிக்கம்ப ரென்பார் மற்றோர் பற்றில்லார். ௨

(இ - ள்) மற்றப் பதியினிடை....உதித்தார் - மற்று அத்திருப்பதியினில் வாழ்வு பெறுகின்ற வணிகர் குலத்திலே வந்துஅவதரித்தார்; கற்றை...கருத்துடையார் - கற்றையாகிய சடையினையுடைய சிவபெருமானது திருவடிகளில் கொண்ட பெரு விருப்பம் தமதுடலின் வளர்ச்சியினுடனே வளரும் கருத்தினை உடையவர்; அற்றைக்கு...என்பார் - அவ்வந்நாளும் அப்பதியில் திருதூங்கானை மாடத்தில் விரும்பி எழுந்தருளியுள்ள இறைவரது திருவடித் தொண்டு பற்றிப் பணிசெய்யும் கலிக்கம்பர் என்று சொல்லப்படுபவர்; மற்றோர் பற்றில்லார் - சிவனடிப் பற்றேயன்றி வேறு ஒரு பற்றுமில்லாதவர்.

(வி - ரை) உதித்தாரும் - கருத்துடையாரும், என்பாருமாவர்; அவர்பற்றில்லார் என்று முடிக்க.

காதல் உடனே வளரும் கருத்து - பிறந்தபோதே கழற்காதலுடன் பிறந்தார். இவர் வளரக் காதலுடைய கருத்த உடன் வளர்ந்தது.

அற்றைக்கன்று - அன்றைக்கு - என்பது எதுகை நோக்கி அற்றைக்கு - என நின்றது. அற்றைக்கன்று - ஒவ்வொரு நாளும். அற்றைக்கேன்று என்று பாடங் கொண்டு, அற்றைக்கு - மறுமைக்கு உறுதுணையாக என்பாருமுண்டு.

தூங்கானைமாடம் - இப்பதியில் உள்ள கோயிலின் பெயர். தலவிசேடம் பார்க்க.

அடித்தொண்டு பற்றி - தொண்டினையே உரிய பற்றாகப் பற்றிக்கொண்டு; பிரிநிலை ஏகாரம் தொக்கது. மற்றோர் பற்றில்லார் - என எதிர்மறையாலும் மேல்விரித்தல் காண்க. "பற்றுக பற்றற்றான் பற்றினை" (குறள்); "முதல்வன் பாதமே பற்றா நின்றாரை" (பிள். தேவா); "மற்றுப் பற்றெனக் கின்றி நின்திருப் பாதமே மனம பாவித்தேன்" (தேவா - நம்பி) 2

4014. ஆன வன்பர் தாமென்று மரனா ரன்பர்க் கமுதுசெய
மேன்மை விளங்கும் போனகமும் விரும்பு கறிநெய் தயிர்தீம்பால்
தேனி னினிய கனிகட்டி திருந்த வமுது செய்வித்தே
ஏனை நிதியம் வேண்டுவன வெல்லா மின்ப முறவளிப்பார், ௩

4015. அன்ன வகையாற் றிருத்தொண்டு புரியு நாளி லங்கொருநாள்
மன்னு மனையி லமுதுசெய வந்த தொண்டர் தமையெல்லாம்
தொன்மை முறையே யமுதுசெயத் தொடங்கு விப்பா ரவர்தம்மை
முன்ன ரழைத்துத் திருவடிக ளெல்லாம் விளக்க முயல்கின்றார், ௪

4016. திருந்து மனையார் மனையெல்லாந் திகழ விளக்கிப் போனகமும்
பொருந்து சுவையிற் கறியமுதும் புனிதத் தண்ணீ ருடன்மற்றும்
அருந்து மியல்பி னுள்ளனவு மமைத்துக் கரக நீரளிக்க
விரும்பு கணவர்பெருந்தவர்தாளெல்லாம்விளக்கும்பொழுதின்கண்,

4017. முன்பு தமக்குப் பணிசெய்யுந் தமரா யேவல் முனிந்துபோய்
என்பு மரபு மணிந்தபிரா னடியா ராகி யங்கெய்தும்

அன்ப ருடனே திருவேடந் தாங்கி யணைந்தா ரொருவர்தாம்
பின்பு வந்து தோன்றவவர் பாதம் விளக்கும் பெருந்தகையார், ௬

4018. கையா லவர்தம் மடிபிடிக்கக் காதன் மனையார் "முன்பேவல்
செய்யா தகன்ற தமர்போலு" மென்று தேரும பொழுதுமலர்
மொய்யார் வாசக் கரசநீர் வார்க்க முட்ட, முதற்றொண்டர்
மையார் கூந்தன் மனையாரைப் பார்த்து மனத்துட் கருதுவார், ௭

4019. வெறித்த கொன்றை முடியார்தம மடியா ரிவர்முன் மேவுநிலை
குறித்து வெள்கி நீர்வாரா தொழிந்தா" ளென்று மனங்கொண்டு
மறித்து நோக்கார் வடிவாளை வாங்கிக் கரகம் வாங்கிக்கை
தறித்துக் கரக நீரெடுத்துத் தாமே யவர்தாள் விளக்கினர். ௮

4014. (இ - ள்) ஆன...தாம் - அத்தகையாராயின அன்பர் தாம்; என்றும் அரனார் அன்பர்க்கு - எந்நாளிலும் சிவபெருமானுடைய அன்பர்களுக்கு; அமுது செய...செய்வித்தே - அமுது செய்வதற்குஉரிய மேன்மையாகிய தன்மை விளங்கும் திருவமுதுடனே விரும்பும் கறிவகைகளும் நெய்யும் தயிரும் இனிய கட்டிபாகக் காய்ச்சிய பாலும் தேனிலுமினிய கனிகளும் கருமபுக்கட்டியும் முதலாகிய இவை களைப படைத்துத் திருந்தியவாறு அவர்களை அமுது செய்வித்தே; ஏனை...அளிப் பார் - மற்றும் வேண்டுவனவாகிய பிற நிதியங்களெல்லாவற்றையும் இன்பம் பொருந்த அளிப்பாராய், ௩

4015. (இ - ள்) அன்ன...நாளில் - முன்கூறிய அவ்வாறாகிய வகையினாலே திருத்தொண்டு செய்து வரும் நாள்களில்; அங்கொருநாள் - அவ்விடதது ஒரு நாளிலே; மன்னும்...தொடங்குவிபபார் - நிலைபெற்ற தமது திருமனையில் அமுது செய்ய வந்த திருததொண்டர்களை யெல்லாம் தொன்மை முறையிலே அமுது செய்யத தொடஙகுவிபபாராகி; அவர் தம்மை...முயல்கின்றார் - அவர்களை முன்னர் அழைதது அவர்களுடைய திருவடிகளை யெல்லாம் விளக்க (இந்நாயனார்) முயல்கின்றாராக. ௪

4016. (இ - ள்) திருந்தும்...விளக்கி - திருந்தும் மனைவியார் அத்திருமனை முழுதும் விளக்கம் பெற விளக்கித் திருவமுதும் பொருந்தும் சுவைகளில் கறியமுதும் தூய தண்ணீரும் ஆகிய இவற்றுடனே உண்ணும் இயல்பில் உள்ளனவாகிய மற்றைய பொருள்களையும் செம்மை பெற அமைத்து; கரக நீரளிக்க - கரகத்திலே நீர்வார்க்க; விரும்பு...பொழுதின்கண் - விரும்பும் கணவனார் அந்தப பெருநதவர் களுடைய திருவடிகளை யெல்லாம் விளககி வரும்போது; ௫

4017. (இ - ள்) முன்பு ..போய் - முன்னாள்களில தமக்குப் பணிவிடை செய்யும் சுற்றமாக இருந்து ஏவற் பணியினை முனிந்து போய்; என்பும்...ஆகி - எலும்பினையும் பாம்பினையும் அணிந்த பெருமானுடைய அடியாராகி; அங்கெய்தும் அன்பருடனே - அங்கு வந்த அடியார்களுடனே கூடி; அணைந்தார்...தோன்ற - அணைந்தாராகிய ஒருவர் பின்பு வந்து தோன்ற; அவர்...பெருந்தகையார் - அவர் பாதங்களை விளக்கும் பெருந்தகையாராகிய கலிக்கம்பர், ௬

4018. (இ - ள்) கையால்...பிடிக்க - கையினால் அவரது அடிகளைப் பிடிக்க; காதல்...பொழுது - முன்பு நமது ஏவலைச் செய்யாது விட்டுச் சென்ற சுற்றம் இவர்

போலும் என்று காதல் மனைவியார் எண்ணும்போது ; மலர்...முட்ட - மலர்கின்ற பூக்கள் பொருந்திய முணமுடைய கரக நீரினை வார்க்கத் தாமதிக்கவே ; முதற் றொண்டர்...கருதுவார் - முதன்மை பெற்ற திருத்தொண்டராகிய அவர் கரிய கூந்தலையுடைய மனைவியாரைப் பார்த்துத் தமது மனத்துள்ளே கருதுவாராய், எ

4019. (இ - ள்) வெறித்த...இவர் - மணமுடைய கொன்றை சூடிய முடியினையுடைய இறைவரது அடியாராகிய இவர் ; முன் மேவும் நிலை...மனங் கொண்டு - முன்பு மேவும் நிலையினைக் குறித்துத் திருவடி விளக்க நீர்வார்க்கா தொழிந்தனர் என்று மனத்திற்றுணிந்து ; மறித்து நோக்கார் - மீண்டும் பார்க்காமல் ; வடிவாளை வாங்கிக் கரகம் வாங்கி - வடிவாளை உருவி அவர் கையிலிருந்த கரகத்தினையும் வாங்கிக்கொண்டு ; கைதறித்து - அவருடைய கையினைத் தறித்து ; கரக நீர்...விளக்கினர் - கரகத்தினை எடுத்து நீர் வார்த்துத் தாமே அவருடைய தாள்களை விளக்கினர். அ

இந்த ஆறு பாட்டுக்களும் சரிதத் தொடர்ச்சி பற்றி ஒரு தொடர்பு பட உரைக்க நின்றன. 4014 பாட்டைத் தனி முடிபாக்கி யுரைக்கினு மிழுக்கில்லை.

4014. (வி - ரை) ஆன அன்பர் - செய்வித்தே - அளிப்பார் (4014) - தொடங்குவிப்பார் - முயல்கின்றார் (4015) - மனையார் - விளக்கி - அமைத்து - நீரளிக்க - விளக்கும் பொழுதின் கண் - (4015) - ஒருவர் தோன்ற - விளக்கும் - பெருந்தகையார் (4017) - பிடிக்க - மனையார் - வார்க்க முட்டப் - பார்த்துக் - கருதுவார் (4018) - மனங்கொண்டு-வாங்கி - வாங்கிக்-கைதறித்து - எடுத்து - விளக்கினர். (4019) என்று இந்த ஆறு பாட்டுக்களையும் தொடர்ந்து கூட்டி முடித்துக்கொள்க.

ஆன அன்பர் - முன்பாட்டிற் கூறியபடி ஆயின அன்பர். தேனின் - ஐந்தாம் வேற்றுமை. இன் - உருபு உறழ்பொருளது ; ஒப்புப் பொருளுமாம்.

மேன்மை விளங்த...திருந்த - திருவமுதுக்கு வேண்டிய இன்றியமையாத பொருள்களைக் கூறியது காண்க. இளையான் குடிமாற நாயனார் புராணமும் பார்க்க.

கட்டி - கரும்புக்கட்டி ; சர்க்கரை ; கற்கண்டு ; "கட்டிபட்ட கரும்பினும்" (அரசு - தேவா) இவற்றை உடன் கூட்டித் திருந்த அமுது செய்வித்தே. மேன்மை - போனகம் - செந்நெலரிசிச் சோறு.

வேண்டுவன - அவர் வேண்டுவனவும் தாமே வேண்டி அளிப்பனவுமாம். 3

4015. (வி - ரை) தொன்மை முறையே - தாம் நியம ஒழுக்கமாகக் கொண்டு செய்து வந்த முறையே ; பண்டை நூல்களில் விதித்த ஒழுக்க முறையிலே என்றலுமாம். ஒருநாள் - பின் விளைவினால் ஒப்பற்ற நாள் என்பது குறிப்பு.

தொடங்குவிப்பார் - விளக்க முயல்கின்றார் - அமுதூட்டும் செயல் ; முதலில் அடியவர்களது பாதம் நீரால் விளக்குதலுடன் தொடங்குவதாம். "கொண்டு வந்து மனைப்புகுந்து குலாவு பாதம் விளக்கியே" (443) ; "கரக மெடுத்தேந்த (3729) - தூய நீராற் சிறுத்தொண்டர் சோதியார் தங்கழல் விளக்கி" (3730) என்பன முதலியவை காண்க. பாதப் பிரக்ஷாளணம் என்பது வடமொழி.

முன்னர் - முதலின் ; முன்பு அவர் தம் - தம் - சாரியை ; அவரை. 4

4016. (வி - ரை) திருந்தும் - இனி, இச்சரித நிகழ்ச்சியில் நாயனாராற் றடியப் பட்டுச் சிவபாரதத்தினின்றும் உய்ந்து திருந்த நின்ற என்ற குறிப்பும் காண்க.

மனையெல்லாம்—அமைத்துக் கரக நீரளிக்க - இவையெல்லாம் விருந்தோம்புதலினும் அடியார்க் கமுதூட்டுதலினும் மனைக் கடனுடையார் செய்ய வேண்டியவை - (3725 - 461 - 462)

புனிதத் தண்ணீருடன்-உண்ணும் நீர் மிகப்புனிதமாயும் தூய்மை யுடையதாயும் அமைக்கப்படுதல் வேண்டும் ; என்பது பொருந்து - உடல் நலத்துக்கு ஏற்றபடி பொருந்தும்.

நோய்கள் மிக எளிதிற் பற்றுதல்உண் நீரின் மூலமேயாம் என்பது மருத்துவ நூல் முடிபு. திருந்துதல் - திருத்தம் பெறுதல். பருகப் புனிதநீ ரளித்தல் மிக முக்கிய மானதென்றும், ஆனால் அது தான் பெரும்பாலும் கவனிக்கப் பெறுகின்றதில்லை என்றும், காட்ட இதனைச் சிறப்பாய் வேறுபிரித்துக்கூறினார்.

அளிக்க - விளக்கும் - மனைவியார் நீர்வார்க்கக் கணவனார் திருவடி விளக்குதல் மரபு. " செம்பொற் கரக வாசநீர் தேவி மார்க ளெடுத்தேந்த, வம்பொற் பாதந் தாம் விளக்கி யருளப் புகலும் " (3898).

விரும்பு - தொண்டில் மிக்க விருப்பமுடைய ; அருந்து மியல்பில் உள்ளன - அறுசுவையுடன் கூடிய நால்வகை உண்டிகளை ; உள்ளன - குறிப்பு வினைப் பெயர். 5

4017. (வி - ரை) முன்பு...தமர் - முன்னர்த் தம்முடைய பணியாளராயிருந் தவர் ; ஏவல் முனிந்து-பணி செய்ய மறுத்து.

பிரான் அடியாராகி - மனிதர்க் கடிமை செய்தலினும் சிவனுக் கடிமைசெய்தல் சிறந்ததென்று எண்ணினார் போல என்பது குறிப்பு. முன்னைநிலையில் இவருக் காளாகி ஏவல் செய்த அவர், பிரான் அடியாராயினமையால் இவராற் பணி செய்யப் பட்டாராதல் இவ்வுண்மையை விளக்கும். " தொழுத பின்னைத், தொழப் படுந்தேவர்தம் மாற்றொழு விப்பர்தன் றொண்டரையே " (திருவா).

பின்பு வந்து தோன்ற - அவர் தமது முன்னைநிலையை எண்ணி நாணிப் பின் வந்தனர் போலும்.

பாதம் - பாதமும் என உம்மை தொக்கது.

பெருந்தகையார் - முன்னைநிலைமை எண்ணாது, அதனை, அடிமைத் திறத்திற்குக் கீழ்மைப் படுத்தித் தொண்டினிலை ஒன்றனையே கருதியது பெருந்தகைமை எனப் பட்டது. அதுவே இங்கு இவர்பாற் அரிய செய்கையாய் முடிந்து மீளா நிலையில் அடியாருடனிருக்கும் சிவச்சார்புப் பேறு தந்தமையால் இங்குப் பெருந்தகை என்ற தன்மையாற் கூறினார்.

பெருந்தகையார் - கையால் அவர்தம் அடிபிடிக்க என மேல் வரும் பாட் டுடன் கூட்டுக. 6

4018. (வி - ரை) முன்பு...பொழுது - இஃது மனைவியாரது மனத்துள் எழுந்த கருத்து. தேர்தல் - நினைந்து துணிவு பெறுதல் ; நேரும் பொழுது - முட்ட என்க. மனத்துள் தேர்தல் நிகழ அதனால் அப்போது செயல் தாழ்த்தது.

மலர் மொய் ஆர்வாசக் கரக நீர் - பாத்திய நீரில் மலர் சந்தனம் முதலியவை இடுதல் விதிமரபு ; பாத்தியம் திருவடி விளக்குதற்கு அமைக்கும் நீர் ; கரகம் - குண்டிகை ; இடையறாது நீர்வார்த்தற்காகக் கொள்ளும் சிறியமூக்குள்ள பாத்திரம்.

முதற்றொண்டர் - முதல் முதன்மையுடைய. 7

4019. (வி - ரை) வெறித்த - வெறி - மணம் - மணமுடைய.

வெறித்த...என்று மனங்கொண்டு - இது மனையாரைப் பார்த்தும், அவர் கரக நீர் வார்க்க முட்டுப்பட்ட நிலையினைக் கண்டும், நாயனார் மனத்துட் கருதித் துணிந்த நிலை ; மனங்கொண்டு - துணிந்து.

முன் மேவுநிலை-முன்னர்த் தமது பணியாளா யிருந்த நிலையினை,

வெள்கிநீர் வாரா - தொழித்தாள் "வெள்கிநீர் வாரா விட" வகை நூல்.

வாளை வாங்கி - வாளை உருவி; கரகம் வாங்கி - மனைவியார் கையில் இருந்த கரகத்தினைத்தாம் வாங்கிவைத்து; கரகம் அடியார்க்கு உதவும் புனித நீருடைமையால், அதனுடனே தண்டித்தல் தகாதென்று, அதனைத்தாம் வாங்கி நீக்கி என்க. அரசாங்க அடையாளக் குறிகளுடையாரைத் தண்டிக்க நேரின், இந்நாளினும் அவ்வடையாளங்களை அகற்றி மாற்றிப் பின்னரே தண்டம் வகுக்கும் நீதிமுறையும் மரபும் காண்க.

கைதடிந்து - நீர்வார்க்காது முட்டுப்பாடு செய்த குற்றம் செய்தது கையாதலின் அதனைத் தடிந்தார் என்க. இவ்வரிய செயலே செயற்கரிய செயலாய்ப் பேறு தந்ததனால் "கைதடிந்த வரிசிலையான்" என்று இதனையே தொகைநூலுள் எடுத்தோதிப் போற்றுதல் காண்க.

கரக...விளக்கினார் - மனைவியார் செய்யத் தவறிய நிலையில் அதனைத் தாமே செய்து திருத்தொண்டினை நிறைவாக்கினார் என்க.

தறிந்தக் கரக—கரகம் பிடித்தகை—என்பனவும் பாடங்கள். 8

4020. விளக்கி யமுது செய்வதற்கு வேண்டு வனதா மேசெய்து
துளக்கில் சிந்தை யுடன்றொண்டர் தம்மை யமுது செய்வித்தார்
அளப்பில் பெருமை யவர்பின்னு மடுத்த தொண்டின் வழிநின்று
களத்தி னஞ்ச மணிந்தவர்தா ணிழற்கீ ழடியா ருடன்கலந்தார். கூ

(இ - ள்) விளக்கி...செய்து - (முன்கூறியவாறு அடியாரது திருவடியைத்தாமே) விளக்கிய பின்னர் அவர் அமுது செய்வதற்கு வேண்டிய ஏனைய செயல்களை யெல்லாம் தாமே செய்து; துளக்கில்...செய்வித்தார் - அசைதல் இல்லாத மனநிலையுடன் அத்தொண்டரைத் திருவமுது செய்வித்தார்; அளப்பில்...நெறிநின்று - அளவற்ற பெருமையினை உடைய அவர் அதன்பின்னும் அடுத்த திருத்தொண்டின் வழியிலே வழுவாமல் ஒழுகி; களத்தில்...கலந்தார் - கண்டத்தே விடத்தினை வைத்தருளிய இறைவரது திருவடி நிழற்கீழே அடியார்களுடன் கலந்து மீளாநெறியில் அமர்ந்தனர்.

(வி - ரை) விளக்கி - முன்கூறியவாறு அடியவரது திருவடியை விளக்கி.

வேண்டுவன - பரிகலந்திருத்தல், அமுது படைத்தல், முதலிய எல்லாச் செயல்களையும்;

தாமே - மனைவியார் கைதடியப்பட்டு ஒதுக்கப்பட்டாராதலின் தாமே செய்தனர் என்பதாம். துளங்கல் - தளர்தல் - சலித்தல்.

துளக்கில் சிந்தையுடன் - முன்னே நிகழ்ந்த செயலைப் பற்றிச் சிறிதும் மனம் அசையாதபடி; "சுரும்பமருங் குழன்மடவார் கடைக்கணோக்கிற் றுளங்காத சிந்தையராய்த் துறந் தோருள்ளப், பெரும்பயனை" (தேவா - தாண் - கோயில் - 7); "அளவில்லாத பெருமையராகிய...அடியார்" (5) பார்க்க.

பின்னும் - அந்நிகழ்ச்சியின் பின்னரும் பலகாலம்.

அடுத்த தொண்டின் வழி - தமக்கேற்ற திருத்தொண்டின் வழி; "அடித்தொண்டு பற்றி" (4013); சிவன் திருத்தொண்டே உயிர்களுக்கு அடுத்தது; ஏனையவெல்லாம் அடாதன என்ற குறிப்புமாம்.

தாணிழற்கீழ் அடியாருடன் கலந்தார் - நாயனார் பெற்ற வீடுபேற்றின் நிலை; "சிவலோக நண்ணி அடியார் பாங்குறத்தலை யளித்தார்" (4010). 9

4021. ஓத மலிநீர் விட்முண்டா ரடியார் வேட மென்றுணரா
மாத ரார்கை தடிந்தகலிக் கம்பர் மலர்ச்சே வடிவணங்கிப்
பூத நாதர் திருத்தொண்டு புரிந்து புவனங் களிற்பொலிந்த
காத லன்பர் கலிநீதி யார்தம் பெருமை கட்டுரைப்பாம். ௧௦

(இ - ள்) ஓதமலி...உணரா - குளிர்ந்த நிறைந்த நீரையுடைய கடலின் எழுந்த விடத்தினையுண் டருளிய இறைவரது அடியாரின் திருவேடம் இஃது என்றுணராத; மாதரார்...வணங்கி - மனைவியாரது கையினைத் தடிந்த கலிக்கம்ப நாயனாரது மலர் போன்ற பாதங்களை வணங்கி, அத்துணையாலே; பூத...புரிந்து - பூதங்களுக்கு நாதராகிய சிவபெருமானது திருத்தொண்டு செய்து; புவனங்களில்...கட்டுரைப்பாம் - எல்லா உலகங்களிலும் விளங்கிய பெருவிருப்பமுடைய அன்பராகிய கலிநீதி நாயனாரது பெருமையினை எடுத்துச் சொல்வோம். ௧௦

(வி - ரை) இது கவிக்கூற்று. ஆசிரியர் தமது மரபுப்படி இதுவரை கூறிவந்த சரிதத்தை முடித்துக்காட்டி, மேற் கூறப்புகும் சரிதத்துக்குத் தோற்றுவாய் செய்

அடியார் வேடமென் றுணரா மாதரார் - இஃது சிவன் அடியார் திருவேடம் (முன்னைநிலைத் தம் ஏவலாளன் வேடமன்று) என்றுணராமையே இச்சரித மெழுந்த நுட்பம். அதனை வடித்தெடுத்துக் கூறி முடித்தவாறு; உணரா மாதரார் - உணராமையினால் என்று காரணப் பொருள்தர உடம்பொடு புணர்த்தி ஓதினார்.

கைதடிந்த - தொகைநூற் சொற்பொருள் விரித்து எடுத்தாண்டபடி.

பூதம் - சிவபூதம்; சிவகணங்கள்.

காதலன்பர் - சிவன்பாலாகிய பெருவிருப்பம் சிறந்தவர்.

புவனங்களிற் பொலிந்த - கலிநீதியார் செய்த திருவிளக்குத் திருத்தொண்டு மும்மைப் புவனங்களையும் பொலிவுறுத்தி விளங்கியது என்பது. "பொற்புடைய சிவபுரியிற் பொலிந்திருக்க" (4037) என்று இவரது வீடுபேற்றினிலை கூறுதல் காண்க. 10

சரிதச் சுருக்கம் : கலிக்கம்ப நாயனார் புராணம் : நடுநாட்டிலே வளங்கள் சிறந்த பழவூர் திருப்பெண்ணாகடம் என்பது. அவ்வூரில் வணிகர் குலத்தில் அவதரித்தவர் கலிக்கம்ப நாயனார். அவர் சிவனடிப் பற்றாகிய அன்புடனே வளர்ந்து வந்து அப்பதியிற் றூங்கானைமாடத் திருக்கோயிலில் எழுந்தருளிய சிவக்கொழுந்து நாதருடைய திருத்தொண்டினையே பற்றிப் பணிசெய்து வந்தனர். வேறு ஒரு பற்றினையுமில்லாதவர். சிவன் அடியார்களுக்கு விதிப்படி இனிய திருவமுதினை ஊட்டி வேண்டுவனவற்றையும் இன்பம் பொருந்த அளித்து வந்தார்.

ஒருநாள் முன்போலத் திருவமுதுண்ணவந்த அடியார்களின் திருவடிகளை மனைவியார் நீர்வார்க்கத் தாம் விளக்கும்பொழுது, முன்னர்த் தம் ஏவலாளராயிருந்து ஏவலை முனிந்து சென்ற ஒருவர், சிவனடியாரது திருவேடத்துடன் அணைந்தனர். அவரது திருவடியினையும் விளக்குதற்கு, நாயனார் அவரது அடியினைப் பிடிக்க, அப்போது மனைவியார், "இவர் முன்பு ஏவல் செய்யா தகன்ற தமர் போலும்" என்று தேரும்போது நீர்வார்க்க முட்டுப்பாடு நிகழ்ந்தது. நாயனார் மனைவியாரைப் பார்த்தார்; அவரது கருத்தை அறிந்தார்; நீர்க்கரகத்தை வாங்கிக்கொண்டு, அம்மனைவியாரது கையை வாளினாற் றடிந்தார்; அடியார் திருவடியைத் தாமே விளக்கி அமுதூட்டுதற்கு வேண்டிய ஏனைய செயல்களை எல்லாம் தாமே செய்து துளங்காத சிந்தையுடன் அவரைத்

திருவமுதூட்டினர். இவ்வாறு அடுத்த திருத்தொண்டு பின்னரும் பலநாள் செய்திருந்து இறைவாது திருவடி நிழற்கீழ் அடியாருடன் கலந்தனர்.

கற்பனை : 1. தொன்மையில் தத்தமக்கு உரிய ஒழுக்கத்தில் நின்று மனையற நெறி நிற்கும் குடிகளை யுடையது நகரின் சிறப்பு. (4012)

2. சிவன் கழற்காதலுடனே வளர்தல் முன்னைத் தவமுடையார்க்கே யாகும் (4013).

3. சிவன் கழற்கே செய்யும் தொண்டினையே பற்றி, மற்றோர் பற்றில்லாத நிலையிற் பணிசெய்தல் வீடு தருவதாம் (4013).

4. சிவன் அடியார்களை அமுது செய்வித்தற்கண் நூல்களில் விதித்த நெறி தவறாது மனமகிழ்ச்சியுடன் செய்தல் வேண்டும். (4014).

5. சிவனடியார் திருவேடங் கண்டாற் சிவனாகவே கண்டு வணங்கிப் பணி செய்தலன்றி அவரது முன்னைநிலை முதலிய செய்திகளைப் பற்றி யெண்ணலாகாது. (4018 - 4019)

6. அவ்வாறு முன்னை நிலைபற்றி எண்ணுவது சிவாபராதம். அஃது உரியபடி தண்டித்துக் குற்ற நீக்கற்பாலது (4019).

7. மனைவியார் செய்த சிவாபராதத்துக்காக அவர் கையினைத் தடிந்த கலிக்கம்ப நாயனார் அதுபற்றித் தளக்கமில்லாத சிந்தையுடன் திருத்தொண்டு செய்திருந்தனர். இது சிவனையன்றி மற்றோர் பற்றுமில்லாத பெரியோர் நிலை (4020). சண்டீசர் புராணமும், பிறவும் பார்க்க.

தலவிசேடம் :—திருப்பெண்ணாகடம்—திருத்தூங்கானை மாடம் - III - பக்கம் உகக பார்க்க.

கலிக்கம்ப நாயனார் புராணம் முற்றும்.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# 45. கலிய நாயனார் புராணம்

தொகை

" (கைதடிந்த வரிசிலையான் கலிக்கம்பன்) கலியன்
கழற்சத்தி வரிஞ்சையர்கோ) னடியார்க்கு மடியேன் "

—திருத்தொண்டத் தொகை - (7)

வகை

" கம்பக் கரிக்குஞ் சிலந்திக்கு நல்கிய கண்ணுதலோன்
உம்பர்க்கு நாதற் கோளிவிளக் கேற்றற் குடலிலனாய்க்
கும்பத் தயிலம்விற் றுஞ்செக் குழன்றுங்கோ ரன் கூலியினால்
நம்பற் கெரித்த கலியோற்றி மாநகர்ச் சக்கிரியே "

—திருத்தொண்டர் திருவந்தாதி - (54)

விரி

4022. பேருலகி லோங்குபுகழ்ப் பெருந்தோண்டை நன்னாட்டு
நீருலவுஞ் சடைக்கற்றை நிருத்தர்திருப் பதியாகுங்
காருலவு மலர்ச்சோலைக் கன்னிமதில் புடைசூழ்ந்து
தேருலவு நெடுவீதி சிறந்ததிரு வொற்றியூர். க

புராணம்: இனி, ஆசிரியர், திறுத்த முறையானே, எட்டாவது பொய்யடிமை யில்லாத புலவர் சருக்கத்தில், ஆறாவதாகக் கலிய நாயனார் புராணங் கூறத்தொடங்கு கின்றார். கலியர் என்ற பெயருடைய நாயனாரது சரித வரலாறும், பண்புங் கூறும் பகுதி.

குறிப்பு: இந்நாயனார் பெயர் கலியன் என்று திருத்தொண்டத் தொகையுட் போற்றப்பட்டது. கலி என்பது திருவந்தாதி; விரிநூலுள் கலிநீதியார் - என்று பெயர் குறித்துத் தொடங்கப்பட்டுள்ளது. (4021) அதுகொண்டு பல பதிப்புக்களில் கலிநீதி நாயனார் புராணம் என்று தலைப்பிடப்பட்டமை காண்கின்றோம். ஆயின் புராணத்துள் பின்னர்ப் பெயர் குறிக்கும்போது " தக்க புகழ்க் கலியனா ரெனுநாமந் தலைநின்றார் " (4027) என விளக்கமாய் இவரது பெயர் போற்றப்பட்டது; ஆத லின் இவர் பெயர் கலியர் என்பதே துணிபு. இதினும் ஆர் என்பது சிறப்புப் பன்மை விகுதியாகத் திருவந்தாதியிற் கண்ட கலி என்பதே பெயர்போலும்; கலி நீதியார் (4021) என்ற விடத்து நீதி என்பது பண்புணர்த்தியதென்க.

**தொகை:** கலியர் என்ற திருநாமமுடைய நாயனாரது அடியார்களுக்கு நான் ஆளாயினேன். பெயர் மட்டும் தொகைநூல் பேசிற்று.

**வகை :** கம்பக் கரிக்கும்...நாதற்கு - தம்முட் பகைபூண் டொழுகிய நடுக்கம் விளைக்கும் யானைக்கும் சிலந்திக்கும் ஒருங்கே அருள் நல்கிய நுதற்கண்ணையுடைய வராகிய தேவர்களுக்கு இறைவராம் சிவபெருமானுக்கு ; ஒளி...உடலிலனாய் - ஒளிதரும் திருவிளக்கேற்றுவதற்கு வேண்டும் பொருள் இல்லாதவராய் ; கும்ப... உழன்றும் - குடத்தில் எண்ணெய் கொண்டு விற்றும், செக்கு ஓட்டிப் பணிபுரிந்தும்; கொள் கூலியினால் - பெற்ற கூலியினாலே ; நம்பர்க்கு எரித்த கலி - இறைவருக்குத் திருவிளக்கு எரித்த கலியர் என்பவர் ; ஒற்றி மாநகர்ச் சக்கிரியே - திருவொற்றி யூரில் வாழும் செக்காரக் குலத்தினராவர்.

கம்பக்...நல்கிய - தம்முள் மாறுபட்ட யானைக்கும் சிலந்திக்கும் ஒருங்கே பேறு அருள் புரிந்தவர் ; கோச்செங்கட் சோழர் புராணம் பார்க்க. கண்ணுதலாகிய நம்பற்கு - என்க. உடல் - பொருள் என்ற கருத்தில் வந்தது. உயிர் இயங்குதற்கு உடல் கருவியாதல் போலக், குறித்த அறம் புரிவதற்குப் பொருள் கருவியாகும் என்பது.

கும்பத் தயிலம்விற்றும்-செக்குழன்றும்-பிறர்பால் குடத்தில் எண்ணெய் மாறிக் கொண்டுபோய் விற்றுவந்தும் ; செக்கு ஆட்டும் களத்தில் பணிபுரிந்தும் ; எரித்த - விளக்கு எரித்த; விளக்கு என்பது அவாய் நிலையான் வந்தது ; முன் விளக்கேற்றற்கு என்றதனைத் தொடர்ந்து விளக்கு எரித்த என்க. கலி - கலியர் ; கலி - சக்கிரியே என்று கூட்டுக. பெயர்ப் பயனிலை. சக்கிரி - செக்கார வாணிப வினைஞர்க்கு வழங்கும் மரபுப் பெயர்.

பெயரும் ஊரும் வரலாறும் பண்பும் வகைநூல் வகுத்துரைத்தது. இவை விரிந்த படி விரிநூலுட் கண்டுகொள்க.

**விரி :** 4022. (இ - ள்) பேருலகில்...திருப்பதியாகும் - பெரிய இவ்வுல கிலே புகழினால் ஓங்கிய பெருமையுடைய தொண்டை நன்னாட்டில் ; நீர் உலவும்... பதியாகும் - கங்கையாறு உலவும் சடைக் கற்றையினையுடைய நிருத்தர் எழுந்தருளி யுள்ள பதியாகும் ; காருலவு...திருவொற்றியூர் - மேகங்கள் தவழ்வனவாகி மலர்கள் நிறைந்த சோலைசூழ்ந்த கன்னிமதில் பக்கமெல்லாம் சூழ்ந்து தேர் உலாவுதற்கிட மாகிய நீண்ட வீதிகள் சிறந்த திருவொற்றியூர் என்னும் பதி. 1

(வி - ரை) பேருலகில்...நன்னாடு - இதனால் இச்சரிதமுடைய நாயனாரின் நாட்டுச் சிறப்புரைத்தவாறு. புகழ் - பேரு(மை) - நன்(மை) என்ற மூன்றடை மொழிகளாலும் அச்சிறப்புக் குறித்தது கவிநயம். இவையெல்லாம் முன்னர்த் திருக் குறிப்புத் தொண்ட நாயனார் புராணத்துள் விரிக்கப்பட்டன வாதலின் இவ்வாறு அடைமொழிகளாற் சுட்டி யமைந்தார். பெருக்கம் ஆண்டுக் கண்டுகொள்க.

சீருலவும்...திருப்பதி - இத் திருநகரத்தின் உயிரியல் நிலைபற்றிய தெய்வச் சிறப்பும் ; காருலவு...சிறந்த - உலகியல் நிலையில் உள்ள நகர் வளமுமாம். சிறப்புப் பற்றி முன்னையதை முன்வைத்துக் கூறினார்.

கன்னிமதில் - தோன்றிய நாள்முதல் பகைவர்களால் அழிக்கப்படாது தோன் றியவாறே நிற்கும் நிலைபற்றிக் கன்னி என்பது மரபு. கட்டழியாமை.

நிருத்தர் - இப்பதியில் தியாகேசரும் நிருத்தமுடையாராகும் குறிப்பு ; தியா கேசரும் ஆடுமாறு வல்லார். 1

4023. நீடுகெழும் பெருந்தெருவும் புத்தருடன் நீலியமண்
வேடமுடை யவர்பொருள்போ லாகாச வெளிமறைக்கும்

ஆடுகொடி மணிநெடுமா ளிகைநிரைக ளலைகமுகின்
காடனைய கடல்படப்பை யெனவிளங்குங் கவின்காட்டும். ௨

(இ - ள்) பீடு...தெருவும் - இந்நகரத்தின் பெருமை நிறைந்த பெருவீதிகளும்; புத்தருடன்...மறைக்கும் - பௌத்தர்களுடனே, மயிற்பீலியை ஏந்தும் சமண வேடத்தவர்களும் கூறும் பொருள்போல ஆகாய (வெளியினை)த்தை இல்லையென்று சொல்லும்படி மறைக்கும்; ஆடு...நிரைகள் - ஆடுகின்ற கொடிகளையுடைய அழகிய நீண்ட மாடங்களின் வரிசைகள் அசைவுள்ள கமுகஞ் சோலையினை ஒத்தன; கடல் - நகரத்தை அடுத்த கடலானது; படப்பை...காட்டும் - பயிர்களையுடைய தோட்டம் போலும் விளங்கும் அழகினைக் காட்டும்.

(வி - ரை) இப்பாட்டுப் பல பிரதிகளில் இல்லை. இது வெள்ளிப்பாடல் என்னும் ஐயப்பாடுள்ளது. எனது சேக்கிழார் பக்கம் உகரு பார்க்க.

புத்தர் - அமணர் பொருள் போல் - புத்த சமணர்கள் ஐம்பூதங்களுள் ஆகாயத்தை ஒப்பாமல் நான்கு பூதங்களை கொள்வர். பொருள் - கூறும் பொருணிச்சயம் - கொள்கை. மறைத்தல் - (சிலேடையால்) மறுத்தல் என்பதாம்.

அவர் பொருள் போல் தெருவும் ஆகாய வெளியை மறைக்கும் என்றது தெருக்களிலும் மேலே பந்தர் - நடைக்காவணம்-தோரணம்-மேற்கட்டி முதலியவற்றாலும், கீழே சன நெருக்கம் பொருட்பெருக்க முதலியவற்றாலும் இடைவெளி தோன்றப் படாதாயிற்று என்பதாம். வினைபற்றி வந்த சிலேடையுவமம்; கொடி - நிறைந்த காடு அனைய - நிரையாகத் தூக்கிக்கட்டிய கொடிகள் அசைதல் கமுகு வரிசைகள் சோலைகளில் அசைவது போலும்; மெய்யும் வினையும்பற்றி எழுந்த உவமம்; காடு - செறிவு குறித்தது.

கடல் - நகர் கடற்கரையில் உள்ளது; அடுத்துள்ள கடல் படப்பை - சிறு பயிர் நிறைந்த செழிப்புடைய நிலம். நிறம் - அலைகளை யுடைமை - பரப்பு முதலியன உவமை; பண்புபற்றி வந்த உவமம். 2

4024. பன்னுதிருப் பதிகவிசைப் பாட்டோவா மண்டபங்கள் ;
அன்னநடை மடவார்க ளாட்டோவா வணியரங்கு ;
பன்முறைதூ ரியமுழங்கு விழவோவா பயில்வீதி ;
செந்நெலடி சிற்பிறங்க லுணவோவா திருமடங்கள் ௩

(இ - ள்) பன்னு...மண்டபங்கள் - யாவராலும் பன்முறையும் ஓதப்படுகின்ற திருப்பதிகங்களின் இசைப்பாட்டுக்களை மண்டபங்கள் ஓவாமல் உடையன; அன்ன... அணியரங்கு - அழகு செய்யப்பட்ட ஆடரங்குகள் அன்னம் போன்ற நடையினையுடைய பெண்களின் ஆடல்களை நீங்காமலுடையன; பன்முறை...பயில் வீதி - மக்கள் பயில்கின்ற வீதிகள் பலமுறையாகச் சத்திக்கும் இயங்களின் முழக்குடன் கூடிய விழாக்களை உடையன; செந்நெல்...திருமடங்கள் - திருமடங்கள் செந்நெல் லரிசியாற் சமைக்கப்பட்டு மலைபோலக் குவியலாக்கிய உணவுப் பெருக்கத்தினை நீங்காமலுடையன.

(வி - ரை) மண்டபங்களுள் பதிகப்பாட்டு ஓவாதுள்ளன என்றும், அரங்குகளுள் ஆட்டோவா; வீதிகளில் விழவோவா; மடங்களில் உணவு ஓவா என்றும் கூட்டியுரைத்தலுமாம்.

ஓவுதல் - நீங்குதல் - ஒழிதல். " ஓவுநாள் உணர்வழியுநாள் " (தேவா - நம்பி);

மண்டபங்கள் - கோயிலி னுள்ளும் புறம்பும் இறைவரது விழா முதலிய வற்றுக்கு ஆகும் பயன்பற்றி அமைக்கப்படும் இடங்கள் ; இவை இந்நாளில் பல பதிகளிலும் பாழாய்க் கிடத்தலும், அன்றி வியாபார இடங்களாகக் கடைப்படுத்தப் படுதலுமே காண்கின்றோம். இவற்றைத் தேவாரப் பயிற்சி, வேதப் பயிற்சி புராணப் படிப்பு முதலிய சமய ஒழுக்க நிலைக்களங்களாகப் பயன்படுத்தினால் அவற் றுக்குச் சாதனமாக உதவுவதுடன், அவற்றுக்கு வேறிடம் தேடும் நிலையும் உண் டாகாது. திருவொற்றியூரில் கோயில் சார்பாக கோயில் மண்டபத்துப் புராணம் வாசிக்கப்பட்டு வந்ததென்று கல்வெட்டுக்களாலறிகின்றோம். பன்னுதல் - பல வாறும் எடுத்துச் சொல்லுதல். பதிக இசை - தேவார திருவாசகப் பதிகங்கள்.

தூரியம் - பலவகையால் பெரியனவும் சிறியனவுமாகிய இயங்கள். தூரிய முழங்கு விழவு - விழாக்களில் பலவகை இயங்கள் முழக்குதல் வழக்கு. விழவு - இறைவனது திருவிழாக்கள்.

செந்நெல் - செந்நெல்லரிசியா லமைக்கப்பட்ட ; அடிசிற் பிறங்கல் - அன்னம் மலை போன்று குவிக்கப்பட்டன என்பது.

திருமடங்கள் - அன்ன சாலைகள்.

மண்டபத்துள் - என்பதும் யாடம் 3

4025. கெழுமலர்மா தவிபுன்னை கிளைஞாழ றளையவிழுங்
கொழுமுகைய சண்பகங்கள் குளிர்செருந்தி வளர்கைதை
முழுமணமே முந்நீருங் கமழுமலர் முருகுயிர்க்கும் ;
செழுநிலவின் றுகளனைய மணற்பரப்பின் றிருப்பரப்பு. ௪

(இ - ள்) கெழுமலர்...கைதை - நிறைந்த மலர்களையுடைய குருக்கத்தியும், புன்னையும், கிளைத்து வளரும் குங்குமமரங்களும், இதழ்கள் அவிழ்கின்ற செழித்த முகைகளையுடைய சண்பக மரங்களும், குளிர்ந்த செருந்தியும், வளரும் தாழைகளும் என்ற இம் மரங்கள் ; முழுமணமே ..கமழ - கடல் நீரும் முழுமணமே வீச ; மலர் முருகு உயிர்க்கும் - தத்தம் மலர்களின் வாசனையைத் தருவன ; செழுநிலவின்... பரப்பு - செழுவிய சந்திரிகையைத் தூளாக ஆக்கியது போன்று விளங்குவன மணற் பரப்பினது திருவுடைய பரந்த பண்புகள்.

(வி - ரை) மாதவி - குருக்கத்தி; ஞாழல் - குங்குமமரம்; புலிநகக் கொன்றையு மாம் ; கிளை - சிறு செடியாக பல கிளைகளாகக் கிளைத்து வரும் இயல்பு குறித்தது.

தளை அவிழும் - இதழ்கள் அவிழ்கின்ற; வளர்கைதை - மேனோக்கி நீண்ட மடல் களுடன் வளர்வது தாழையினியல்பு ; கைதை - தாழை ;

முழுமணமே முந்நீரும் கமழ மலர்முருகு உயிர்க்கும்-முன்கூறிய பூக்கள் எல்லாமும் கூடி முழுதும் மணம் வீசுதலால் கடல் நீரும் அந்த மணங் கமழ உள்ளது என்பதாம் ; முந்நீர் கடல்; கடலடுத்த நகராதலின் இவ்வாறு கூறினார்; முந்நீரும்-கழிகளின் முடை நாற்ற முடைய கடலின் நீரும் என உம்மை இழிவு சிறப்பு; முருகு-வாசனை; உயிர்த்தல்-வீசுதல்; திருபரப்புப் பரப்பும் மணல், செழுநிலவின் றுகள்அனைய - என்று கூட்டுக. வெண் மணற்பரப்பு செழித்த சந்திரிகையின் சிதறிய தூள் போன்றது என்பதாம்.

துகள் - தூள் ; நிலவின் கதிர் தூளானால் அதுபோல்வது. 4

4026. எயிலணையு முகின்முழக்கு மெறிதிரைவே லையின்முழக்கும்
பயிறருபல் லியமுழக்கு முறைதெரியாப் பதியதனுள்

வெயிலணிபன் மணிமுதலாம் விழுப்பொருளா வனவிளக்கும்
தயிலவினைத் தொழின்மரபிற் சக்கரப்பா டித்தெருவு ௫

(இ - ள்) எயிலணையும்...பதியதன்கண் - மதில்களை அணைகின்ற மேகங்களின் ஓசையும், எறிகின்ற அலைகளையுடைய கடலினது ஓசையும், பயிலப்படுகின்ற பல இயங்களின் ஓசையும், ஆகிய இவைகூடிப் பிரித்தறிய முடியாதபடி சத்திக்கின்ற அப் பதியில்; தயிலவினை...சக்கரப்பாடித் தெருவு - எண்ணெய் ஆட்டும் செக்குத் தொழிலுடைய மரபினர் வாழ்கின்ற சக்கரப்பாடித் தெரு என்பது; வெயிலணி...விளக்கும் - ஒளி வீசுகின்ற பலவகை மணி முதலாகிய தூய பொருள்கள் விளக்குந் தன்மையுடையது.

(வி - ரை) பொருள் - தெரு - விளக்கும் என்று கூட்டுக.

முறை தெரியா - மூன்று முழக்கங்களும் இவை இன்னவென வேற்றுமை காண முடியாத நிலை.

விழுப்பொருளாவன - பொருள், தெருவு விளக்குதலாவது அவ்விழுப்பொருள்கள் வீசும் ஒளியினால் தெரு விளங்குதல். இத்தெருவில் வாழ்வோரது செல்வ நிலை; அத்தெருவில் தயிலவினையாளர் வைக்கும் பெருவிளக்குகளால் அப்பொருள்கள் இரவினும் விளக்கம் பெறுவன என்பதுமாம். தயிலவினைத் தொழிலாவது செக்கு உழன்று எண்ணெய் எடுத்து விற்கும் செக்கார் என்னும் மரபின் குலத்தொழில். (சேக்கார் - செக்கின் றொழிலுடையவர்)

சக்கரப்பாடி - சக்கர எந்திரத்தாற் றொழில் செய்து வாழும்மரபினர் வாழு மிடம். சக்கிரி - செக்கான் - செக்கையுடையவர் என்பது நிகண்டு. 5

4027. அக்குலத்தின் செய்தவத்தா லவனிமிசை யவதரித்தார்
மிக்கபெருஞ் செல்வத்து மீக்கூர விளங்கினார்;
தக்கபுகழ்க் கலியனா ரெனுநாமந் தலைநின்றார் :
முக்கணிறை வர்க்குரிமைத் திருத்தொண்டி னெறிமுயல்வார் : ௬

4028. எல்லையில்பல் கோடிதனத் திறைவரா யிப்படித்தாம்
செல்வநெறிப் பயனறிந்து திருவொற்றி யூரமர்ந்த
கொல்லைமழ விடையார்தங் கோயிலினுள் ளும்புறம்பும்
அல்லுநெடும் பகலுமிடுந் திருவிளக்கி னணிவிளைத்தார். ௭

4027. (இ - ள்) அக்குலத்தின்...அவதரித்த அந்தக் குலம் செய்த முன்னைத் தவத்தின் பயனாக அதில் வந்து அவதரித்தார்; மிக்க...விளங்கினார் - மிகுந்த பெரியசைவத்தில் மேலோங்க விளங்கினார்; தக்க...தலை நின்றார் - தகுதியாகிய கலியனார் என்னும் பெயர் பூண்டு சிறந்து நின்றார்; முக்கண்...முயல்வார் - மூன்று கண்களையுடைய சிவபெருமானுக்கு உரிமையாகிய திருத்தொண்டின் நெறியிலே ஒழுகுவாராகி; ௬

4028. (இ - ள்) எல்லையில்...இறைவராய் - அளவற்றதாகிய பலகோடி செல்வத்துக்கு அதிபராகி; இப்படித்தாம்...அறிந்து - இத்தன்மைத்தாகிய செல்வம் வந்த வழியின் பயனை அறிந்து; திருவொற்றியூரமர்ந்த...விளைத்தார் - திருவொற்றியூரில் விரும்பி எழுந்தருளிய கொல்லை யின விடையினையுடைய இறை

வாது திருக்கோயிலின் உள்ளேயும் புறத்திலேயும் இரவிலும் நீண்ட பகற் போதிலும் இடுகின்ற திருவிளக்குத் திருப்பணியின் அணியினை விளைத்தார். எ

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டுரைக்க நின்றன ; முன் பாட்டினைத் தனிமுடிபாக வைத்து உரைப்பினு மிழுக்கில்லை. சொற்றொடர்பும் பொருட்டொடர்பும் நோக்கி இவ்வாறுரைக்கப்பட்டது.

4027. (வி - ரை) குலத்தின் செய்தவம் - குலத்தவர் செய்த முன்னைத் தவம் குலத்தின்மே லேற்றப்பட்டது ; ஆகுபெயர்.

பெருஞ் செல்வத்து மீக்கூர - பெரிய செல்வம் மேலும் பெருகிவர.

தக்க புகழ்க் கலியனார் எனும் நாமம் தலைநின்றார் - கலியனார் என்ற திருநாமத்துக் கேற்றபடி தகுந்த புகழுடன் சிறந்தார். கலியார் - கலியிற் சிறந்தவர். கலி- வலிமை - வீரம் ; புகழாவது- ஈகையால் வருவது. "ஈவார்மே னிற்கும் புகழ்" (குறள்) ; தலை நிற்றல் - சிறந்து விளங்குதல்.

முக்கண் இறைவர் - சிவபெருமான்.

உரிமைத் திருத்தொண்டு - தமது திருக்குலத்தோடு உரிமை பெற்று வருவதாகிய திருத்தொண்டின் தொழில்.

நெறி முயல்வார் - நெறியின் கண் முயல்வார் ; முயல்வார் - தொழில் செய்வார் என்ற பொருளில் வந்தது.

முயல்வார் - அறிந்து - விளைந்தார் - என மேற்பாட்டுடன் முடிக்க ;
அவதரித்து—என்பதும் பாடம் 6

4028. (வி - ரை) கோடி - பேரெண் ; பல முடிபுகளையுடைய செல்வம் என்றலுமாம். கோடி - முடிபு ; முடிபுகளாவன உடைகள் - தனம்-தானியம்-வீடு - மாடு முதலியன என்பன.

இப்படித்தாம் செல்வ நெறிப் பயன் அறிந்து - இவ்வாறாகத் தாம் பெற்ற செல்வம் வந்த வழியின் பயனை அறிந்து; வந்த வழி யாவது முன்பு சிவனைப் பூசித்த நிலை என்பதாம் பயனாவது செல்வம் பெற்ற பயன் சிவனையும் அடியார்களையும் பூசித்தலால் அழியும் பொருளை அழியாமற் செய்வது.

கோயிலை - முல்லை ; இடபம் முல்லைக் குரியது. அல்லும் நெடும்பகலுந் திருவிளக்கின் அணி விளைத்தார் - நாள் முழுதும் விளக்கிட்டனர் என்க. அல் - இருள் - அதனையுடைய இரவுக்காகி வந்தது; நெடும் பகலில் விளக்கிடுதல் அணியின் பொருட்டாம் ; அல்லிற் போலவே நெடும் பகலிலும் இப்பெருந் திருக்கோயிலினுள் திருவிளக்கின் உதவி வேண்டப் படுதல் இன்றும் காண உள்ள நிலை.

நெடும் பகல் - மக்கள் மிகவும் சஞ்சரிக்கும் கால நீட்டிப்புக் குறித்தது. அணி விளக்குதல் - வரிசை பெற வேண்டுமிடத்து எரித்தல்.

புறம்பு விளக்கிடுதல் - இஞ்ஞான்று மலைநாட்டிற் காணவுள்ளது.

இடும் - எரிக்கும் ;

எல்லை பல - எல்லையில்லார் - என்பனவும் பாடங்கள். 7

4029. எண்ணிறந்த விளக்குநெடு நாளெல்லா மெரித்துவரப்
புண்ணியமெய்த் தொண்டர்செயல் புலப்படுப்பா ரருளாலே
உண்ணிறையும் பெருஞ்செல்வ முயர்த்தும்வினைச் செயலோவி
மண்ணிலவ ரிருவினைபோன் மாண்டதுமாட் சிமைத்தாக. அ

(இ - ள்) எண்ணில்...வர - எண்ணில்லாத திருவிளக்கு நீண்ட நாட்கள் முழுமையும் எரித்து வரவே; புண்ணிய ..அருளாலே - சிவ புண்ணியத்தின் உறைப்புடைய அந்த மெய்த் தொண்டரின் செயலை உலகறியச் செய்வாராகிய இறைவரது திருவருளினாலே; உண்ணிறையும்...ஒலி - உள்ளே நிறைந்து மீக்கூர்ந்த பெரிய செல்வமானது மேலும் பெருக நிகழும் தொழில்செய்தல் நீங்கவே; மண்ணில்...மாட்சிமைத்தாக - உலகில் அவரது இருவினைகளும் மாண்டொழிந்தன போலச், செல்வம், மாட்சிமை யடையும்படி மாண்டது.

(வி - ரை) எண்ணில் - விளக்குக்களின் அளவற்ற தன்மையும்; நெடுமை - அனேகம் என்ற தன்மையும்; நாள் எல்லாம்-நாள் முழுதும் அல்லும் பகலும் என்ற நிலையும் உணர்த்தின.

செயல் புலப்படுப்பார் - செயலினை உலகமறியச் செய்வாராகிய இறைவருடைய; புலப்படுத்தல் - அன்பின் நெறியினை உலகுக் கறிவித்துக் காட்டியுய்வித்தல்; இளையான்குடி மாறனார் சரித முதலியவை காண்க.

புலப்படுப்பார் - வினைப்பெயர்; ஆறனுருபு தொக்கது.

உயர்த்தும் வினைச்செயல் ஒலி - "நின்று தின்றாற் குன்றும் மாளும்" என்பது பழமொழி; எத்துணைப் பெருஞ் செல்வமாயினும் மேல் உயர்த்தும் செயலின்றி உள்ளதனையே செலவிட்டு வந்தால் ஒருநாள் மாய்வது திண்ணம். உயர்த்தும் வினைச் செயலாவது மேலோங்குவிக்கும் வருவாய் செய்யும் தொழில்; ஒவுதல் - நீங்குதல்.

இருவினை மாண்டதுபோல என்க. வினைபற்றி வந்த உவமம். மெய்ச் சிவபுண்ணியத்தினால் இருவினையும் போயொழியும்; அதுபோல அவரது செல்வமும் மாண்டது. மாளுதல் - ஒழிதல்; மாண்டது மாட்சிமைத்தாக - சொற்சிலேடை; மாண்டது - மாண்புடைத்தாயிற்று என்றதொரு தொனிக் குறிப்பும் தருதல் காண்க. சிவநெறிச் செல்லா வினையோர் செல்வம் மாளும்போது அல்லற்படுத்துப் பவநெறியில் ஒழியும். இங்கு அவ்வாறன்றிச் சிவபுண்ணியப் பேற்றினால் செல்வமாளினும் மாட்சிமைத்தாகவே - பெருமை தருவதாகவே - மாண்டது என்பதாம். 8

4030. திருமலிசெல் வத்துழனி தேய்ந்தழிந்த பின்னையுந்தம்
பெருமைநிலைத் திருப்பணியிற் பேராத பேராளர்
வருமரபி லுள்ளோர்பா லெண்ணெய்மா றிக்கொணர்ந்து
தருமியல்பிற் கூலியினாற் றமதுதிருப் பணிசெய்வார், ௯

4031. வளமுடையார் பாலெண்ணெய் கொடுபோய்மா றிக்கூலி
கொளமுயலுஞ் செய்கையுமற் றவர்கொடா மையின்மாறத்
தளருமன முடையவர்தாஞ் சக்கரவெந் திரம்புரியுங்
களனில்வரும் பணிசெய்து பெறுங்கூலி காதலித்தார், ௧௦

4032 செக்குநிறை யெள்ளாட்டிப் பதமறிந்து திலதயிலம்
பக்கமெழ மிகவுழன்றும் பாண்டில்வரு மெருதுய்த்தும்
தக்கதொழில் பெறுங்கூலி தாங்கொண்டு தாழாமை
மிக்கதிரு விளக்கிட்டார் விழுத்தொண்டு விளக்கிட்டார். ௧௧

4030. (இ - ள்) திருமலி...பின்னையும் - திருநிறைந்த தமது செல்வப் பெருக்குத் தேய்ந்து அழிந்த பின்னும்; தம்...பேராளர் - தமது பெருமைத்தன்மை

சிறப்பினையுடைய தமது மனைவியாரை விற்றுப் பொருள் பெற்றும் பணி செய்வதற்கு வழி தேடுவாராய், ௧௨

4034. (இ - ள்) மனமகிழ்ந்து...தளர்வெய்தி - மனமகிழ்ச்சியுடனே மனைவியாரைக்கொண்டு வளமுடைய அந்நகரின் கண்ணே பொருள் கொடுப்பார்களை எங்கும் கிடைக்காமையினாலே தளர்ச்சியுற்று; சினவிடையார்...அறியாதார் - சினமுடைய இடபத்தினையுடைய இறைவரது திருக்கோயிலில் திருவிளக்குப்பணி முட்டுதலை இதன் முன்பு கனவிலும் அறியாதவராகிய அந்நாயனார்; கையறவால் எய்தினார் - வேறு செயலற்ற தன்மையினாலே திருக்கோயிலின்கண் வந்து சேர்ந்தனர். ௧௩

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒருமுடிபு கொண்டன.

4033. (வி - ரை) அப்பணியால்...கிடையாத - வகைமுட்ட - இது உலகியற் பொருணூலின் உண்மைகளுள் ஒன்று; ஒரு தொழிலால் வரும் ஊதியம் அத்தொழிலையே செய்வோர் பலராயினபோது பங்கிடப்பட்டு அவ்வவர் பெறும் பொருள் சிறிதாகும் என்பது; Fall of income due to competition என்பர் நவீனர்.

இடருழந்தே - துன்பத்தால் வருந்தி; பணிமுட்டுதலினால் வரும் துன்பம்; முன் "தளரும் மனம்" (4031) என்றதும், மேல் "தளர்வெய்தி" (4034) என்பதும் காண்க.

ஒப்பில்மனை...மாண்டதற்பின் - மனை - வீடு - இல்லம்; தொழில் செய்வினையாற் கூலி கிடையாதபோது தமது மனையினை விற்று விளக்கிட்டார்; அப்பொருளும் மாண்டது; அதன்பின் - என்ற இத்துணையும் கருத மனை விற்றேரிக்கும் உறுபொருள் என்று சுருக்கிக் கூறியது கவிநயம். அன்பர்கள் வருந்தும் நிலைகளை விரித்துக் கூறுமலே சுட்டிக் காட்டிச் செல்லும் ஆசிரியரது மரபுமாம். ஒப்பின் மனை - நாயனாரது திருமனையாதலாலும், சிவன் திருவிளக்குப் பணிக்குச் சாதனமாக உதவியதாலும் ஒப்பில்லாத தாயிற்று; இவ்வாறே முன "அந்தமில மனை" (458) என்றதும் காண்க. உறுபொருள் என்ற கருத்துமிது.

மனையாரை விற்பதற்குத் தேடுவார் - அடிமைகளையும் மனைவியரையும் தம்மையும் விலைபண்டங்களாகக் கொண்டு கடன் வாங்குதலும் விலைப்படுத்துதலும் முன்னாளில் வழக்கிலிருந்தது. "தன்னை மாறி யிறுக்க வுள்ள கடன்க டக்கன கொண்டு" (446); "நாடிய வடிமை விற்றும்" (838); ஆள் அடைமானப் பத்திரம் என்பன இந்நாளிலும் வழக்கிலுள்ளன. அரிச்சந்திரன் கதை முதலியனவும் காண்க.

தேடுவார் - வகையினைத் தேடுவாராகி; முற்றெச்சம். தேடுவார் - கிடையாமல் எய்தினார் என மேல்வரும் பாட்டுடன் முடிக்க. 12

4034. (வி - ரை) மனமகிழ்ந்து சென்று விலைப்படுத்த முயல என்க.

கொண்டு - தனமளிப்பார் - என்று கூட்டுக; கொள்ளுதல் - விலைப்பண்டமாக ஏற்றுக்கொள்ளுதல்; தனம் - விலைப் பொருள்.

வளநகரில் - தனமளிப்பாரைக் கிடையாமை திருவருளால் நேர்ந்ததன்றி, நகரினுள்ளாரது வளமின்மையா லானதன்று என்பது குறிப்பு.

திருவிளக்குப் பணிமுட்டக் கனவினுமுன் பறியாதார் - முட்ட - முட்டும்நிலையினை; முன்பு கனவிலும் அறியாமையாவது இதன்முன் தம் வாழ்நாளுள் எந்நாளினும் நனவில் கண்டு அறியாமையே யன்றிக் கனவிற்றானும் அறியாததில்லை; உம்மை

இறந்தது தழுவியது. கனவினும் - தம் விழிப்புநிலை வசமிழந்த அந்நிலையினும் என்று சிறப்பும்மையுமாம்.

கையறவு - வேறு செயலற்ற நிலை ; தமது பொருட் சார்வு – உடல் முயற்சிச் சார்வு – உயிர்ச் சார்வு முதலிய எல்லாம் தீர்ந்து கழிந்தனவாதலின் கையற்ற நிலையில் ; கை - துணை.

எய்தினார் - திருக்கோயிலில் சேர்ந்தனர். திருக்கோயிலில் என்பது குறிப்பெச்சம்.

மனமகிழ்ந்து - இந்த உலகியலின் மேம்பட்ட அன்புநெறி வழக்கு; உலகியல் நிலையில் வைத்துக் காணத் தக்கதன்று; இயற்பகை நாயனார் வரலாற்றின் நுட்பமும் இங்கு வைத்துக் காணத் தக்கது. 13

4035. பணிகொள்ளும் படம்பக்க நாயகர்தங் கோயிலினுள்
அணிகொள்ளுந் திருவிளக்குப் பணிமாறு மமையத்தின்
"மணிவண்ணச் சுடர்விளக்கு மாளிலியான் மாள்வ"னெனத்
துணிவுள்ளங் கொளநினைந்தவ் வினைமுடிக்கத் தொடங்குவார், ௧௪

4036. திருவிளக்குத் திரியிட்டங் ககல்பரப்பிச் செயனிரம்ப
வொருவியவெண் ணெய்க்கீடா வுடலுதிரங் கொடுநிறைக்கக்
கருவியினான் மிடறரிய வக்கையைக் கண்ணுதலார்
பெருகுதிருக் கருணையுட னேர்வந்து பிடித்தருளி, ௧௫

4037. மற்றவர்தம் முன்னாக மழவிடைமே லெழுந்தருள
வுற்றவூ றதுநீங்கி யொளிவிளங்க வுச்சியின்மேற்
பற்றியவஞ் சலியினராய் நின்றவரைப் பரமர்தாம
பொற்புடைய சிவபுரியிற் பொலிந்திருக்க வருளபுரிந்தார். ௧௬

4035. (இ - ள்) பணிகொள்ளும்...கோயிலினுள் -தம்மை அடிமைகொண்டு தமது பணியினை ஏற்றருளும் படம்பக்க நாதரது திருக்கோயிலினுள்ளே ; அணி கொள்ளும்...அமையத்தில் - அழகு நிறையும் திருவிளக்குத் திருப்பணி செய்ய நின்ற அந்த நேரத்தில் ; மணிவண்ண...நினைந்து - மணிபோன்ற சுடர்களையுடைய திருவிளக்கு எரிக்கப்படாமல் நின்று படுமாயின் நான் மாள்வதே கருமம் என்ற துணிவினை மனம் கொள்ளும்படி நினைந்து ; அவ்வினை முடிக்கத் தொடங்குவார் - அச்செயலினையே முடிக்கத் தொடங்குவாராகி, ௧௪

4036. (இ - ள்) திருவிளக்கு...பரப்பி-திருவிளக்குக்களுக் கெல்லாம் திரியினை இட்டு அங்கு அகல்களை முறையாகப் பரப்பி வைத்து ; செயல் நிரம்ப...மிடறரிய - அச்செயல் நிரம்பும்படி கிட்டாது ஒழிந்த எண்ணெய்க்கு ஈடாகத் தமது உடலினிறைந்த உதிரத்தைக் கொண்டு நிறைக்கும்படி கருவிகொண்டு தமது கழுத்தினை அரியவே ; அக் கையை-அவ்வாறு அரியும் கையினை; கண்ணுதலார்...பிடித்தருளி - நுதற்கண்ணினையுடைய இறைவர் பெருகும் திருக்கருணையுடனே நேராக வெளிப்பட்டு வந்து அக்காரியம் செய்யவிடாமற் பிடித்தருளி, ௧௫

4037. (இ - ள்) மற்றவர்தம்...எழுந்தருள - அவர் முன்பு இளமை பொருந்திய இடபத்தின்மேல் எழுந்தருளி நிற்க ; உற்ற...விளங்க - அரிதலினால் பொருந்

திய அந்தப் புண் நீங்கி ஒளிபெற்று விளங்க ; உச்சியின்மேல்...நின்றவரை - உச்சியின்மேற் பொருந்திய கைகளை அஞ்சலித்தவராகி நின்ற அந்நாயனாருக்கு ; பரமர் தாம்...அருள்புரிந்தார் - சிவபெருமானார் அழகிய சிவலோகத்தில் விளங்க வீற்றிருக்கும்படி அருள் புரிந்தனர். ௧௬

இம்மூன்று பாட்டுக்களும் தொடர்ந்து ஒருமுடிபு கொண்டன.

4035. (வி - ரை) பணிகோள்ளும் - ஆட்கொண்டருளும் ; பணி - திருப்பணி ; இங்கு விளக்கிடும் பணி ; பணியினை ஏற்றுக்கொள்வதே பொருள் என்பது. "ஏதேது மில்லாதென் செய்பணிகள் கொண்டருளும், தாயான வீசன்" (திருவா); பணி - பாம்பு என்று கொண்டு பாம்பினை அணியாகக் கொள்ளும் என்றலுமாம்.

படம்பக்க நாயகர் - திருவொற்றியூ ரிறைவரது பெயர்; "படம்பக்கங் கொட்டுந் திருவொற்றி யூரீர்" (நம்பி - தேவா - கோத் - கோவ - 6). உபமன்னிய முனிவரிடத்துச் சிவதீக்கை பெற்றுப் பூசித்த வாசுகி என்னும் மாநாகத்தைத் (வாசுகி - பூமியைத்தாங்கும் மாநாகங்கள் எட்டனுள் ஒன்று ; பூமியைக் கிழக்குப் பக்கத்தில் தாங்குவதாகக் கூறுவது மரபு.) தம்முடைய பலகை போன்று விரிந்த திருமேனியில் ஒடுங்கக் கொண்டருளியதனாலும், அப்பாம்பி னுருவம் திருமேனியிற் காண விருப்பதனாலும் சுவாமி படம்பக்க நாதர் எனப்படுவர். தலவிசேடம் பார்க்க. (III-பக்கம் ௫௭௪) சுவாமியின் திருவுருவம் விரிவுடைய புற்றாக அமைந்தது. இப்பதியில் ஆதிபுரீசர் சந்நிதி வேறு. கலிய நாயனார் திருவிளக்குப் பணி செய்து பேறடைந்தது படம்பக்க நாயகர் சந்நிதியாகும்.

அணிகோள்ளும் திருவிளக்கு - வரிசையாக அணிபெற ஏற்றப்படும் விளக்குகள். பணி மாறுதல் - திருப்பணிவிடை செய்தல் ; இங்கு விளக்கு ஏற்றும் பணி குறித்து நின்றது.

மணிவண்ணச் சுடர்விளக்கு - விளக்கின் சுடர் ஒவ்வொன்றும் ஒவ்வோர் மணி போன்று ஒளிவீசும் நிலை குறித்தது ; மாளில் - செய்யப்படுதல் முட்டினால் ; யான் மாள்வன் - நானும் உயிருடன் இராது மாளுவதே உறுதி.

துணிவு உள்ளங்கோள நினைந்து - துணிதல் - தீர்மானித்தல் ; நிச்சயித்தல். உள்ளங் கோள்ளுதல் - அத்துணிவினைச் செய்து முடிப்பேன் என்று மனத்தின் அழுத்துதல் ; நினைதல் - நிறைவாக்க எண்ணுதல்.

அவ்வினை - விளக்கு மாளில் யான் மாள்வன் என்ற துணிவினை நிறைவேற்றும் அச்செயல். வினை - தொழில்.

தோடங்குவார் - தொடங்குவாராகி, முற்றெச்சம் ; தொடங்குவாராகிப் - பரப்பி - மிடறரிய என்ற மேல்வரும் பாட்டுடன் முடிக்க.

விளக்கு மாளில் யான் மாள்வன் எனத் துணிவு - தாம் தாம் நியமமாகச் செய்யும் சிவதருமங்கள் முட்டுப்படின் தாம் உயிர் வாழாது இறந்து படுதல் உயர்ந்தோர் மரபு. மூர்த்தி நாயனார் தமது சந்தனக் காப்புத்தரும் நியமத்திற்குத் தவறு நேர்ந்த போது மூளை வெளிப்படுமளவும் தமது முழங்கையினைக் கற்பாறையில் தேய்த்த வரலாறும், அரிவாட்டாய நாயனார் தம்மிடற்றினை அரிந்ததும், பிறவும் இந்தக் கருத்தறபாலன.



4036. (வி - ரை) சேயல் நிரம்ப - விளக்கிடும் செயலுக்கு வேண்டும் குறை நிரம்ப ; திரியிடுதலும், அகல் பரப்புதலும் கூறினாராதலின் எஞ்சியது எண்ணெய் வார்த்தலேயாம் ; அது நிரம்ப.

ஒருவிய - கிடைக்கா தொழிந்த ; ஒருவுதல் - நீங்குதல்.

ஈடா - ஒப்ப - சமமாக; உடல் உதிரமொடு - தமது உடலின் உதிரத்தினையே எண்ணெயாகக் கொண்டு; கருவி - வாள்; மிடறரிகருவி. அரிய - அரிந்திடவே.

அக்கையை - அகரம், மிடறு அரியும் அக்க என முன்னறிசுட்டு.

பிடித்தருளி எழுந்தருள - முன்னே பிடித்தருளிப் பின்பு விடைமேல் எழுந்தருள.

எண்ணெயாத் துடமா—என்பதும் பாடம். 15

4037. (வி - ரை) உற்ற ஊறு - அரிதலால் உற்ற புண்; ஒளி விளங்க - ஊறுபோய் முன்னையிலும் ஒளிபெற்று விளங்க.

அஞ்சலி - அஞ்சலியாகக் கூப்பிய கை.

பொலிந்திருக்க - திருவிளக்குப் பணி செய்தாராதலின் அகண்ட ஞான விளக்கத்துடன் பொலிய.

ஒளிவிளங்கும்—என்பதும் பாடம். 16

4038. தேவர்பிரான் றிருவிளக்குச் செயன்முட்ட மிடறரிந்து
மேவரிய வினைமுடித்தார் கழல்வணங்கி வியனுலகில்
யாவரெனு தரனடியார் தமையிகழ்ந்து பேசினரை
நாவரியுஞ் சத்தியார் திருத்தொண்டி னலமுரைப்பாம். ௧௭

(இ - ள்) தேவர்பிரான்...வணங்கி - தேவர்கள் பெருமானாகிய இறைவரது கோயிலினில் எரிக்கும் திருவிளக்குப்பணி முட்டியதனால் தமது மிடற்றினை அரிந்து பொருந்துதற்கரிய வினையினைச் செய்து முடித்த கலிய நாயனாரது திருவடிகளை வணங்கி (அத்துணையானே); வியனுலகில்...பேசினரை-பரந்த உலகத்தில் யாவரே யாயினும் சிவனடியார் தம்மை இகழ்ந்து பேசினவர்களை; நா அரியும் ..நலமுரைப்பாம் - நாக்கினை அரியும் சத்தியார் என்னும் நாயனாரது திருத்தொண்டின் நன்மையாகும் வரலாற்றினைச் சொல்வோம்.

(வி - ரை) இது கவிக்கூற்று ஆசிரியர் தமது மரபின்படி, இதுவரை கூறி வந்த சரிதத்தை முடித்துக் காட்டி மேல்வரும் சரிதத்துக்குத் தோற்றுவாய் செய்கின்றார்.

திருவிளக்கு...மிடறரிந்து - கலியநாயனாரது சரித சாரம்; மேவரிய வினை முடித்தார் - "வினை முடிக்க" (4035) என முன்னருங் கூறியது காண்க. மேவரிய- யார்க்கும் செய்தற்கு அரிதாகிய.

யாவரேனும்...நாவரியும் - சத்தி நாயனாரது சரிதக் குறிப்பு. யாவரேனும் - உலகநிலையில் யாவரே யாயினும் பாராது. 17

சரிதச் சுருக்கம் :—கலிய நாயனார் புராணம் - தொண்டை நன்னாட்டில் வளமிக்க திருவொற்றியூரில் திலதயில வினையாளர் மரபினர் வாழும் சக்கரப்பாடித் தெருவில் அந்தக் குலத்தில் அவதரித்தவர் கலிய நாயனார். அவர் மிகுந்த செல்வ முடையரா யிருந்தார். தமது மரபின் உரிமைத் திருத்தொண்டிநெறி நின்று படம்பக்க நாயகரது திருக்கோயிலினுள் அல்லும் நெடும்பகலும் உள்ளும் புறமும் திரு விளக்கின் அணி விளைத்து வந்தனர்.

இவ்வாறு நீண்ட நாட்கள் எரித்துவர, அவரது திருத்தொண்டின் பெருமையினை உலகுக்குப் புலப்படுப்பாராகி, இறைவர் திருவுளங்கொண்டமையால் செல்வம் மேலும் உயரும் நிலை நீங்கியது; அதனால் உண்ணிறையும் பெருஞ் செல்வம்

அவரது இருவினை மாண்டது போல, மாட்சிமைத்தாக மாண்டது. செல்வம் தேய்ந்த பின்னும் தமது திருத்தொண்டின் வழுவாமல் பிறரிடத்து எண்ணெய் பெற்று விற்று கொடுத்து அவர் தரும் கூலியினால் பணி செய்து வந்தனர். சில நாளில் அவர்களு கொடாமையின் செக்காட்டும் களத்தில் தொழில் செய்து பெறும் கூலியினால் மிக திருவிளக்கிட்டார். பின் சில நாளில் அத்தொழில் செய்வோரும் பலராகவே அ வருவாயும் கிடையாதாயிற்று. பின் தமது மனையை விற்று எரித்தார் அ பொருளும் மாண்டது. பின் தமது மனைவியாரை விற்பதற்கு வழிதேடினர். அ வாறு கொண்டு தனங்கொடுப்பார் கிடையாமையாற் றளர்ந்தனர்.

திருக்கோயில் சார்ந்தனர். திருவிளக்குப் பணிமாறும் சமயமாயிற்று. நெடுகால செய்த திருவிளக்குப் பணி மாளில் நான் மாள்வதே தகுதி என்று துணிந்தனர் அகல்களைப் பரப்பினர்; திரியிட்டனர்; தமது உடல் உதிரமே எண்ணெயா வார்க்கத் துணிந்து கருவிகொண்டு மிடற்றினை அரியலுற்றனர். இறைவர் வெளிப் பட்டு அக் கையைப் பிடித்தருளி விடைமேற் காட்சி தந்தருளினர். அவர் ஊறு நீங் ஒளி விளங்க வணங்கினர். அவரைத் தமது சிவலோகத்திற் பொலிந்திருக் இறைவர் அருள் புரிந்தனர்.

கற்பனை: 1. நகர அமைப்பில் ஒவ்வோர் தொழில் செய்வோர்க்கு ஒவ் வோர் தனித் தெருவுகள் அமைவது முன்னைநாட் சிறந்து வழங்கிய ஒழுங்கு. (4026

2. ஒவ்வோர் குலத்திலுள்ளோர் அவ்வக் குலத்தொழிலினின்றே அதற் கேற்றபடி உரிமைத் திருத்தொண்டு செய்தல் சிறந்ததாகும். திருநாளைப் போவார் நாயனார் சரித முதலியவை பார்க்க. (4027)

3. செல்வமுள்ள காலத்தும் அது வறண்ட காலத்தும் ஒன்று போலவே தாம் நியமமாகக் கொண்ட தொண்டின் நெறி பிறழாது பணி செய்தல் அன்பின் உறைப்புடைய பெரியோ ரியல்பு. (4030)

4. செல்வமுள்ள காலத்தில் உறைப்புடன் பணி செய்வோர்க்கு வறுமை வருதல் அவ்வுறைப்பினில் உறுதிப்படுத்தி உலகறியச் செய்ய இறைவர் வைக்கும் அருட்செயலாம். (4029)

5. மெய் வருந்திச் செய்யும் தொழிற் கூலி கொண்டும் தமது பணி செய்தல் பெரியோர்பாலே காணும் தன்மை; அரிவாட்டாய நாயனார் சரித முதலியவை பார்க்க. (4030 - 4031 - 4032)

6. மனையை விற்றும், மனைவியை விற்றும் இறை பணிமுயற்றுதல் அன்பின் உறைப்பினாலாகுவது. (4033)

7. தாம் நியமமாகச் செய்த திருப்பணி முட்டுப்படக் கண்டபோது உயிர் நீத் தலே தகுதி என்பது பெரியோர் கொள்கையும் செய்கையுமாம். (4035).

தலவிசேடம்:—திருவொற்றியூர் - III-பக். ௫௭௪. பார்க்க.

கலிய நாயனார் புராணம் முற்றும்.



சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# 46. சத்தி நாயனார் புராணம்

### தொகை

" (கைதடிந்த வரிசிலையான் கலிக்கம்பன் கலியன்)
கழற்சத்தி வரிஞ்சையர்கோ னடியார்க்கு மடியேன் "
—திருத்தொண்டத் தொகை - (7)

### வகை

" கிரிவில் லவர்தம் மடியரைத் தம்முன்பு கீழ்மைசொன்ன
திருவில் லவரையந் நாவரி வோன்றிருந் தாரைவெல்லும்
வரிவில் லவன்,வயற் செங்கழு நீரின் மருவுதென்னல்
தெருவில் விரைகம ழுந்தென் வரிஞ்சைத் திகழ்சத்தியே "
—திருத்தொண்டத் திருவந்தாதி (55)

### விரி

4039. களமர் கட்ட கமலம் பொழிந்ததேன்
குளநி றைப்பது கோலொன்றி லெண்டிசை
யளவு மாணைச் சயத்தம்ப நாட்டிய
வளவர் காவிரி நாட்டு வரிஞ்சையூர். க

**புராணம் :** இனி, ஆசிரியர் நிறுத்த முறையானே, எட்டாவது பொய் யடிமை இல்லாத புலவர் சருக்கத்துள், ஏழாவது சத்தி நாயனாரது புராணங் கூறத் தொடங்குகின்றார். சத்தி நாயனாரது சரித வரலாறும் பண்பும் கூறும்பகுதி.

**தொகை :** வெற்றியுடைய சத்திநாயனார் என்னும் பெயரையுடையவரும் வரிஞ்சையூர்த் தலைவருமாகிய நாயனாரது அடியவர்க்கும் நான் அடிமையாவேன்.

தொகை நூலுள் பொய்யடிமை யில்லாத என்று தொடங்கும் திருப்பாட்டில் மூன்றாவது அடியில் மூன்று அடியார்களை ஒருங்கு சேர்த்துப் போற்றியுள்ளமை சிறப்பு ; அவர்களுள் மூன்றாவது போற்றப்பட்டவர் சத்தியார். வரிஞ்சையூர் நாயனாரது ஊர் ; கழல் - வெற்றிக்குறி. இதனைத் " திருந்தாரை வெல்லும் வரி வில்லவன் " என்று வகைநூல் வகுத்தது ; ஊரும் பேரும் பண்பும் தொகைநூல் தொகுத்தது.

**வகை :** கிரி வில்லவரை...அரிவோன் - மலையை வில்லாக உடைய சிவ பெருமானது அடியவர்களைத் தம் முன்னர் இகழ்ந்து பேசிய திருவிலிகளாகியவர்களை அவ்வாறு பேசும் நாவினை அரிந்திடுவோரும் ; திருந்தாரை...வில்லவன் - பகை வெல்லும் வரிந்து கட்டிய வில்லையுடையவரும் ; வயல்...சத்தியே - வயல்களில்

பூத்த செங்கழுநீர்ப் பூக்களிற் படிந்து வரும் தென்றற் காற்றுத் தெருக்களில் மணங் கமழ வீசுதற்கிடமாகிய தெருக்களையுடைய தென்வரிஞ்சையூரில் விளங்குகின்ற சத்தியார் என்பவரே யாவர்.

இத்திருப்பாட்டுத் திரிபு என்னும் சொல்லணியில் அமைந்தது ; அடியவரைச்- சொன்ன என்று கூட்டுக. திருந்தார் - பகைவர் ; தாம் பற்றி ஒழுகிக்காட்டியும் சிவ நெறி கண்டு திருந்தாத புல்லர் என்றலுமாம். வரி - வரிந்து கட்டிய ; செங்கழு நீர்...வரிஞ்சையூர் - நீர்வளத்தைக் குறித்தது ; செங்கழுநீர் மலர் மிக்கதொரு நறு மணமுள்ள நீர்ப்பூ ; நா வரிவோனும் - வில்லவனும் சத்தியே என்று கூட்டுக ; எண்ணும்மைகள் தொக்கன; தேன் - அழகு; தெற்கு என்றலுமாம். வரிவில்லவன் - நாவரியும் வல்லமை பெறுதற்குரிய காரணம் காட்டியபடி.

ஊரும் பேரும் பண்பும் சரிதமும் வகைநூல் வகுத்தது.

விரி : 4039. (இ - ள்) களமர் ..நிறைப்பது - மள்ளர்கள் களையாகக் களைந்த தாமரை மலர்கள் பொழிந்த தேனானது குளத்தை நிறைக்க உள்ளது ; கோல் ஒன்றில்...வளவர் - ஒரே செங்கோல் வலிமையால் எட்டுத் திக்குகளிலும் தமது செயத் தம்பங்களை நாட்டி அரசு புரியும் சோழர்களது ; காவிரி நாட்டு வரிஞ்சையூர் - காவிரி பாயும் நாட்டில் உள்ள வரிஞ்சையூர் என்பது.

(வி - ரை) களமர்...நிறைப்பது - நீர்வளத்தால் நாட்டுச் சிறப்புரைத்தவாறு ; தொகைநூலை விரித்து வகைநூல் நகரச் சிறப்புரைத்தது; விரிநூல் அதனினும் விரிந்து அதற்குக் காரணமாகிய நாட்டுச் சிறப்புரைத்த கவிநயம் கண்டு களிக்கத்தக்கது. முன் னையது, மூக்கானுகரும் சுவை கூற, இங்கு நாவின் சுவைபடக் கூறியதும் கவிநயம்.

கட்ட கமலம் பொழிந்த தேன் - என்றது அன்பரை இகழ்ந்த நாவினை அரியும் இச்சரிதக் குறிப்புப்பட நிற்றலும் காண்க. இஃது இறைச்சிப் பொருட் குறிப்பு (உள்ளுறை) என்ப ; கடியப்பட்ட கமலங்களும் குளநிறைக்கும் உபகாரம் செய்தல் போல இந்நாயனார் அரிந்த நாக்களும்உலகைத்திருத்தும் உபகாரக் கருவிகளாம் என்ற குறிப்பும் காண்க. வயல்களில் செங்கழுநீர் பூத்தலை வகைநூல் பேச, அங்குத் தாமரை கள் பூத்தலும் அவை கடியப்படுதலும் தொடர்ந்து கூறிய நயமும் காண்க. கட்ட - களைபிடுங்கி எறிந்த :

குளம் - வயல்களில் அங்கங்கும் உள்ள வாவிகள். தாமரைத் தேன் வடிந்து குளநிறைத்தலாவது வயல்களிற் கட்ட தாமரைகளைக் குளக்கரையில் பல பக்கமும் குவிக்க அப்பூக்களினின்றும் வடிந்த தேன் குளத்திற் பாய்தல் ; நிறைத்தல் - மிகுதிப் படுத்தல்.

கோலொன்றில்...நாட்டிய - கோல் - செங்கோல் ; ஒன்று - ஒப்பற்ற ; மாறில்லாத ; ஏக சக்காராதிபத்யம் என்பது வடமொழி. கோல் ஒன்றில் எண் டிசை - எண்ணின் சுவைபடக் கூறியது கவிநயம் ; எல்லாத் திக்குகளிலும் தமது அரசாட்சியின் ஆணை செலுத்திய என்பது கருத்து. அந்நாளில் சோழ மன்னர்களது ஆட்சியின் பரப்புக் கூறியபடி.

வளவர் காவிரி நாட்டு - எண்டிசை என்றதனால் வளவர்க்குரியனவாய்ப் பல நாடுகளிருத்தல் கூறப்பட்டமையின், அவற்றுள் காவிரி பாயும் நாடு என்க. காவிரி - பிறிதினியைபு நீக்கிய விசேடணம்.

வரிஞ்சையூர் - தலவிசேடம் பார்க்க.

ஆண்டுச் செயத்தறி—என்பதும் பாடம். 1

4040. வரிஞ்சை யூரினில் வாய்மைவே ளாண்குலம்
பெருஞ்சி றப்புப் பெறப்பிறப் பெய்தினார்
விரிஞ்சன் மான்முதல் விண்ணவ ரெண்ணவும்
அருஞ்சி லம்பணி சேவடிக் காட்செய்வார். ௨

4041. அத்த ராகிய வங்கண ரன்பரை
இத்த லத்தி லிகழ்ந்தியம் பும்முரை
வைத்த நாவை வலித்தரி சத்தியார் ;
சத்தி யாரெனு நாமந் தரித்துளார். ௩

4040. (இ - ள்) வரிஞ்சையூரினில்...எய்தினார்-வரிஞ்சையூரிலே வாய்மைப் பண்புடைய வேளாளர் குலமானது பெரிய சிறப்பினையடையும்படி அதனுள் வந்தவதரித்தார்; விரிஞ்சன்...செய்வார்-பிரமதேவன் முதலிய தேவர்களும் எண்ணுதற்கும் அரிய சிலம்பினை அணிந்த சிவபெருமானது திருவடிக்கு ஆட்செய்வாராகி ; ௨

4041. (இ - ள்) அத்தராகிய...நாவை - அத்தராகிய சிவபெருமானது அடியவர்களை இவ்வுலகில் இகழ்ந்து சொல்லும் சொல்லைக் கொண்ட நாவினை ; வலித்தரி சத்தியார் - வலிசெய்து அரியும் சத்தி வாய்ந்தவர் ; சத்தியார் எனும்...தரித்துளார் - சத்தியார் என்னும் திருநாமத்தினைத் தாங்கியவர். ௩

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டுரைக்க நின்றன.

4040. (வி - ரை) வாய்மை வேளாண் குலம் - வாய்மை - இயற்கை யடைமொழி. வேளாண் குலத்தின் பல சிறப்பியல்புகளுள்ளும் சிறந்த வாய்மையின் தன்மை பற்றியே காட்டுதல் ஆசிரியர் மரபு, அதுவே எல்லாவற்றுள்ளும் சிறந்து இறைவாது சந்தாம் தன்மை பெறுவிக்கும் பண்புடைமையால் ; "நம்பு வாய்மையின் நீடு சூத்திர நற்குலம்" (440); "உயிரையும்...சொற்ற மெய்ம்மையும் தாங்கியச் சொல்லையே காக்கப், பெற்ற மேன்மை" (1080).

குலம் பெருஞ் சிறப்புப் பெற - வாய்மையின் விளங்கிய வேளாண் குலம் தன்னியல்பிற் சிறப்புடையது; இவர் அதில் வந்தமையால் மேலும் பெரிய சிறப்புப் பெற்றது என்பார் பெருஞ் சிறப்புப் பெற என்றார்.

வாய்மை - வாயின் தன்மை ; வாயினுக்குரிய பண்பு வாய்மை ; அஃதாவது சிவனையும் அடியாரையும் வாழ்த்துதல் ; "வாயே வாழ்த்து கண்டாய்" (தேவா), "வாழ்த்த வாயும்" (தேவா.) அப்பண்பினைத் தாம் பெற்றதுமன்றிப் பிறரையும் அவ்வாறே பெறும்படி நிற்கவைத்த பண்புடைய இந்நாயனாரது சரிதவரலாற்றுக் குறிப்புப்பெற இத்தன்மையாற் கூறினார். உண்மை (உள்ளத்தின் தன்மை). மெய்ம்மை மெய் (உடல்)யின் றன்மை ; வாய்மை - வாயின் தன்மை என மனம் வாக்குக் காயம் என்ற இம்மூன்றும் சிவன்(சத்து) வழியே செலுத்தற்குரியன என்று காணும் வகையில் நிற்பது இப்பண்பொன்றே யாதலின் இஃது தனிச் சிறப்புடையது.

எண்ணவும் அரும் - நினைத்தற்கு மரிய. உம்மை சிறப்பு. எண்ணவும் அரும்அடி என்க.



4041. (வி - ரை) அத்தர் - கருத்தர் ; தலைவர்.

அன்பரை இகழ்ந்தியம்பும் உரைவைத்த நாவை - சிவனைப் பழித்தல் கொடிய சிவாபராதம்; அவன் அன்பரைப் பழித்தல் அதனினும் கொடியது என்பதன்மை. அதனால் இந்நாயனார் அடியாரைப் பழித்துக் கூறும் நாவினை அரிதலைத் தொண்டாகக் கொண்டனர். அன்பரை இகழ்ந்தது அரனை இகழ்ந்ததுமாம். அங்கணரையும் அன்பரையும் என்றலுமாம்.

உரை வைத்த - உரையினை வைத்தற்கு (சொல்லுதற்கு) இடமாக வைத்த; நாவே சொல் இயம்புதற்குத் துணைசெய்யும் கருவியாம். வைத்த - வாழ்த்தற்குத் தந்த நாவில் வேறு பொருள் வைத்த நீர்அரி - தவறுபட்ட அங்கத்தையே தண்டித்தல் மரபு. கலிக்கம்பர் இடங்கழியார், செருத்துணையார் சரிதங்கள் பார்க்க.

வலித்து - வலிசெய்து வென்று; இழுத்து என்றலுமாம்; அரி சத்தியார் - அரியும் சத்தி வாய்ந்தவர்; ஒருவனது நாவை அரிவதென்னின் அவனை வலி செய்து கீழ்ப்படுத்தவல்ல திறமை யுடையோர்க்கே ஆவது என்பார் வலித்து என்றும், சத்தியார் என்றும் கூறினர். சத்தி இங்கு வன்மை - திறல் என்ற பொருளில் வந்தது. "திருந்தாரை வெல்லும் வரிவில்லவன்" என்று இதனைக் காரணங் காட்டி வகுத்தது வகைநூல்.

சத்தியார் - (ஆதலின்) சத்தியார் எனும் - நாமம் தரித்துள்ளார் என ஈண்டும் சத்தியினுலே என்று காரணக் குறிப்புப்படக் கூறியது காண்க. தரித்துள்ளார் - தரித்தற் கருமை குறித்தது. ஆயினமை (4042) என்பதும் காண்க.

சத்தியால் - நாமமுந் தாங்கினர்—என்பனவும் பாடங்கள். 3

4042. தீங்கு சொற்ற திருவிலர் நாவினை
வாங்க வாங்குதண் டாயத்தி னுல்வலித்
தாங்க யிற்கத்தி யாலரிந் தன்புடன்
ஓங்கு சீர்த்திருத் தோண்டி னுயர்ந்தனர். ௪

(இ - ள்) தீங்கு...நாவினை - சிவனடியாரைத் தீங்கு சொல்லி இகழ்ந்த திருவில்லாதாரது நாவினை; வாங்க...வலித்து - சேதித்தலுக்கு வளைந்த தண்டாயத்தினுல் இழுத்து; ஆங்கு...அரிந்து - அவ்விடத்திலேயே கூரிய கத்தியினுல் அரிந்து; அன்புடன்...உயர்ந்தனர் - அன்புடனே ஓங்கும் சிறப்புடைய திருத்தொண்டில் உயர்வு பெற்று விளங்கினர்.

(வி - ரை) தீங்கு - சிவனடியாரை இகழ்ந்த மொழி; பழிமொழி.

திருவிலர் - சிவன் புகழினையும் அடியார் புகழினையும் உளங்கொளாதவர்கள் திருவிலார் என்பது; திரு - உய்யும் வழியாகிய சைவமெய்ச் செல்வம்; "உருவிலான் பெருமையை யுளங்கொ ளாதவத், திருவிலார்" (பிள் - பைஞ்ஞீலி - காந்தாரபஞ் - 1). திருவிலர் - பாதகர்களுடைய;

வாங்க - சேதிக்க; பிடுங்க; வாங்கு - வளைவுடைய; தண்டாயம் - பற்றியிழுக்கும் குறடு போன்றதொரு கருவி; வலித்து - இழுத்து; வலித்தல் - இழுத்தல்; வலிசெய்து என்றலுமாம். அயில் - கூர்மையுடைய.

அன்புடன் ஓங்குசீர் திருத்தொண்டின் - நாவை அரியும் செயல் அன்பாமா றென்னை? எனின்; தீங்கு சொன்ன அத்திருவிலார், இம்மையில் இவ்வாறு உடன் தண்டிக்கப்படுதலால் அம்மையில் எரிவாய் நரகம் புக்கழுந்தாமற் காக்க அவர்பால் வைத்த அன்பு; தண்டிக்கப்பட்டார்பால் இகலின்றி இரக்கத்துடனே

என்க. அரச தண்டனையின் கருத்தும் இது ; "இருந்தாரை வெல்லும்" என்ற வகையாற் கருத்தும் காண்க ; இனி, அடியாரை இகழ்ந்து வினை உலகரும் காகம் புகாது இது கண்டு உலகம் உய்தற் பொருட்டு உலகவர்மேல் வைத்த அன்பு என்பது மாம். "திருநீறு சார்ந்தாரை, ஞாலமிகழ்ந் தருநரக கண்ணுமை எண்ணுவார்" (3989) என்றதும் காண்க ; இனிச், சிவன்பாலும் அடியார்பாலும் செறியவைத்த அன்பு என்றலுமாம் ; உடலோடு அழியத்தக்க உடற்சார்பு உயிர்ச்சார்புகளாகிய மனைவி மக்கள் சுற்றம் இவர்களை ஒருவர் இகழ்ந்தால் கேட்கத்தரியாது பெருங் கலாம் விளைப்பது உலகியலுட் காணப்படும் உண்மை ; அழியாது நீடிய உயிர்ச் சார்பாகிய சிவனையும் சிவனடியாரையும் இகழ்ந்தால் கேட்கத் தரியாது ஆவன செய்தல் அவர்பால் அன்புடையோர் செய்கை ; வாளா இருப்பவர் அன்பில்லார் ; சிவனன்பினாற் செய்யப்படுதலால் இது திருத்தொண்டு - திருப்பணி எனப்பட்டது. சிவனை இகழக்கேட்டால் அவரைத் தண்டனை செய் ; அஃதியலாவிடில் சிவசிவ என்று காதைப் பொத்திக்கொண்டு அவ்விடம் விட்டு அகன்றுவிடு என்பது சிவாகம விதி. "இறைவி கேளா, வஞ்செவி பொத்தி யாற்று தழுங்கிமெய் பதைப்ப விம்மி, யெஞ்சலின் முதியோன் போகா னேகுவன் யானே யென்னப், பஞ்சடி சேப்ப வாண்டோர் பாங்கரிற் படர்த லுற்றாள்" (கந்தபு - தவங்காண் படலம் 28) என்ற படி, முதியோராய் வந்த இறைவர் சிவனைப் பழித்துக் கூறிய சொற்கேட்ட பார்வதி யம்மையார் இவ்வொழுக்கத்தை நடந்து உலகறிவுறுத்திய வரலாறு இங்குக் கருதத் தக்கது.

ஒங்குசீர் - முன் கூறியவாறு பலவாற்றாலும் அன்பின் முதிர்ந்த திறமுடைய சிறப்பு. 4

4043. அன்ன தாகிய வாண்மைத் திருப்பணி
மன்னு பேருல கத்தில் வலியுடன்
பன்னெ டும்பெரு நாள்பரி வாற்செய்து
சென்னி யாற்றினர் செந்நெறி யாற்றினர். ரு

(இ - ள்) அன்னது...திருப்பணி - அத்தன்மைத்தாகிய ஆண்மையினையுடைய திருத்தொண்டின் ; மன்னு...செய்து - நிலைபெற்ற பெரிய உலகத்தில் வலிமை யுடனே பற்பல பெருங்காலம் அன்புடன் செய்து வந்து ; சென்னி...ஆற்றினர் - தலையிற் கங்கையாற்றினைத் தாங்கிய இறைவரது செம்மைநெறித் திருத்தொண்டினைச் செய்துவந்தனர்.

(வி - ரை) அன்னது - முன்பாட்டிற்கூறிய அந்தத் தன்மையுடைய; முன்னறி சுட்டு ; ஆகிய - ஆக்கப்பாடுடைய ; ஆண்மை - வீரத்தினாலும் திறமையினாலும் வரும் பண்பு. ஆண்மைத் திருப்பணி - வீரத்தொண்டு.

வலியுடன் - பெருந்திறமையாலன்றி யியலாமை பற்றி வலியுடன் என்றார்.

பன்னெடும் பெருநாள் - பற்பல காலங்கள்.

பரிவால் - அன்பினாலே ; இகல் முதலாகிய தீக்குணக் காரணமன்றிப் பரிவி னாலே ; "அன்புடன்" (4042) என முன்கூறியது ஒவ்வொரு செயலின் பண்பும், இங்குக் கூறியது அவ்வாறு பலகாலம் தொடர்ந்து செய்யும் தன்மையும் பற்றியன.

சென்னி ஆற்றினர் - சென்னி - சிரம் ; ஆற்றினர் - கங்கையாற்றினை உடை யவர். செந்நெறி - செம்மை தரும் நெறி ; சிவநெறி.

ஆற்றினர் - புரிந்தனர் ; ஆற்றுதல் - செய்தல்.
ஆற்றினர் - ஆற்றினர்—சொற்பின் வருநிலை என்னும் சொல்லணி. 5

4044. ஐய மின்றி யரிய திருப்பணி
மெய்யி னாற்செய்த வீரத் திருத்தொண்டர்
வைய முய்ய மணிமன்று ளாடுவார்
செய்ய பாதத் திருநிழல் சேர்ந்தனர். ௬

(இ - ள்) ஐயமின்றி...திருத்தொண்டர் - சந்தேகமில்லாமல் அரியதாகிய திருத்தொண்டினை மெய்யினாலே செய்த வீரத்தன்மை பொருந்திய திருத்தொண்டராகிய சத்தியார் ; வையம்...சேர்ந்தனர் - உலகம் உய்யும் பொருட்டு அழகிய திருவம்பலத்தில் ஆடுவாரது செம்மைதரும் பாதத் திருநிழலிற் சேர்ந்தனர்.

(வி - ரை) ஐயமின்றி - ஐயமாவது, மக்களின் நாவினை அரிந்து வலி செய்தல் தருமமாமோ என்ற ஐயமில்லாமல் ; சிவாபராதத்தினைப் போக்குதலால் இது எவ் விதமாகிய சந்தேகத்திற்கு மிடமில்லாமல் சிவப்பணியேயாகும் என்ற துணிவுடன்.

அரிய - பிறராற் செய்தற்கரிய ; "செயற்கரிய செய்வார் பெரியர்" (குறள்). இஃது செயற்கரியபணி என்றே எவரும் நிச்சயமாகக்கொள்ளும் என்றலுமாம்.

மெய்யினாற் செய்த - மெய் - உண்மை, வாய்மை, உண்மையன்பு; மெய்யினால்- உடலின் செயலாக என்றலுமாம். மெய்யால் : இன் சாரியை

வீரம் - "ஆண்மைத் திருப்பணி" (4043) ; இத்திருப்பணிக்கு மிக்க வீரம் வேண்டற்பாலதாம்.

வையமுய்ய - "வாரருங் கடல்புடைசூழ் வையமெலா மீடேற, ஏராரு மணி மன்று ளெடுத்த திருவடி" (புராண வரலாறு). திருஅம்பலத்தின்கண் இறைவர் ஐந்தொழிற் கூத்தியற்றுதல் உலகமுய்தற் பொருட்டேயாம் என்பது.

செய்ய - செம்மைதரும் ; செய்ய - தாமரை மலர்போலச் சிவந்த என்றலு மாம். 6

4045. நாய னார்தொண் டரைநலங் கூறலார்
சாய நாவரி சத்தியார் தாள்பணிந்
தாய மாதவத் தையடி கள்ளெனுந்
தூய காடவர் தந்திறஞ் சொல்லுவாம். ௭

(இ - ள்) நாயனார்...பணிந்து - சிவபெருமான் திருத்தொண்டர்களை நன்மை சொல்லாதவர்கள் வீழ அவர்களது நாவினை அரியும் சத்தி நாயனாரது திருவடிகளைப பணிந்து ; (அத்துணையாலே) ஆய...சொல்லுவாம் - சிவநெறி ஆகிய மாதவத்தை யுடைய ஐயடிகள் என்னும் தூய காடவரது அடிமைத் திறத்தினைச் சொல்லுவோம்.

(வி - ரை) நாயனார் - தலைவர் ; முழுமுதற் றலைவராதலின் சிவபெருமானுக்கே உரிய திருநாமம். "தில்லைநாயனார்" (திருவிசை - சேதி) நாயனாரையும் தொண்டர்களையும் என்றலுமாம்.

நலங் கூறலார் - இகழ்ந்து கூறுவார்; சொல்லவேண்டிய நன்மை கூறாமையே இகழ்ச்சியாவது என்றலுமாம். "இதமுயிர்க்குறுதி செய்தல் அகிதமற்றது செய் யாமை" (சித்தி - 2 - 13).

சாய - வீழ ; பொல்லாங்கு ஒழிய. நா - அரியப்பட்டமையால் இனி இகழ்ச்சி கூற ஆற்றலிலராவார் ஆதலின் ஒழிய என்றார்.

தூயமாதவத்து ஐயடிகள் - அரசாட்சியைத் துறந்து திருத்தொண்டு மேற்கொண்டாராதலின் தூய மாதவத்து என்றார். மாதவம் - பெருந்தவம் - தூய - மகத்தாகிய ; பெரிதாகிய ; திறம் - திருத்தொண்டின் சிறப்பினை.

காடவர் - சோழ மரபுகளுள் ஒன்று.

இது கவிக் கூற்று ; ஆசிரியர் தமது மரபுப்படி இதுவரை கூறிவந்த புராணத்தை முடித்து வடித்துக் காட்டி மேல்வரும் புராணத்துக்குத் தோற்றுவாய் செய்கின்றார். 7

சரிதச் சுருக்கம் : சத்தி நாயனார் புராணம் :—சோழ நாட்டில் வரிஞ்சையூரில் வாய்மை வேளாண் குலம் விளங்க அவதரித்தவர் சத்தி நாயனார். அவர் சிவனுக் காட்செய்யும் திறத்தினர். யாவரேனும் தம்முன்பு சிவனடியார்களை இகழ்ந்துரைப்பாராயின் அவர்களது நாவினைத் தண்டாயத்தினால் வலித்துக் கத்தியால் அரிந்து தூய்மை செய்வார். அன்பினாற் செய்யும் இந்த அரிய ஆண்மைத் திருப்பணியைப் பல காலம் வீரத்தாற் செயதிருந்து சிவன் திருவடி சேர்ந்தனர்.

கற்பனை : 1. வேளாண் குலம் இயல்பின் அமைந்த வாய்மையாற் சிறந்தது.

2. சிவன் அடியார்களை இகழ்ந்து பேசியவர்களது நாவினை வலித்து வாங்கி ஆண்மை யுடன் அரிந்து தூய்மை செய்தல் அரிய வீரத் திருப்பணியாகும்.

3. சிவனையும் சிவனடியார்களையும் இகழ்ந்து பேசக் கேட்டால் அவ்வாறு பேசியவர்களைத் தக்கவாறு தண்டித்தல் வேண்டும் என்பது சிவாகம விதி ; அஃதியலாதாயின் சிவ சிவ என்று காது பொத்திக்கொண்டு அவ்விடம் விட்டு விரைந்தேகுதல் வேண்டும். இவ்விரண்டு மின்றி வாளா கேட்டிருத்தல் சிவாபராதமாம்.

தலவிசேடம் :—வரிஞ்சையூர் - கீழ்வேளூர் என்னும் நிலயத்தினின்றும் தெற்கில் மட்சாலையில் 3 நாழிகை யளவில் உள்ளது திருக்கீழ் வேளூர்; அதன் தென் கிழக்கில் இரண்டு நாழிகை யளவில் திருவரிஞ்சையூரினை அடையலாம். திருக்கோயிலில் இந்நாயனாரது திருவுருவம் தாபித்து வழிபடபபட்டு வருகிறது.

சத்திநாயனார் புராணம் முற்றிற்று.



சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# 47. ஐயடிகள் காடவர்கோன் நாயனார் புராணம்

### தொகை

" ஐயடிகள் காடவர்கோ னடியார்க்கு மடியேன் "
—திருத்தொண்டத் தொகை (7)

### வகை

" சத்தித் தடக்கைக் குமரனற் றாதைதன் றனமெல்லாம்
முத்திப் பதமோரோர் வெண்பா மொழிந்து "முடியரசா
மத்தீர்த்த மும்மைநன் றலரற் காயைய மேற்று"வென்னும்
பத்திக் கடலை யடிகளா கின்றநம் பல்லவனே. "
—திருத்தொண்டர் திருவந்தாதி - (56)

### விரி

4046. வையநிகழ் பல்லவர்தங் குலமரபின் வழித்தோன்றி
வெய்யகலி யும்பகையு மிகையொழியும் வகைபடக்கிச்
செய்யசடை யவர்சைவத் திருநெறியா லரசளிப்பார்
ஐயடிக ணீதியா லடிப்படுத்துஞ் செங்கோலார்; க

4047. திருமலியும் புகழ்விளங்கச் சேணிலத்தி லெவ்வுயிரும்
பெருமையுட னினிதமரப் பிறபுலங்க ளடிப்படுத்துத
தருமநெறி தழைத்தோங்கத் தாரணிமேற் சைவமுடன்
அருமறையின் றுறைவிளங்க வரசளிக்கு மந்நாளில், உ

4048. மன்னவரும பணிசெய்ய வடநூறென் றமிழ்முதலாம்
பன்னுகலை பணிசெய்யப் பாரளிப்பா "ரரசாட்சி
இன்ன"வெலன விகழ்ந்ததனை யெழிற்குமரன் மேலிழிச்சி
நன்மைநெறித் திருத்தொண்டு நயந்தளிப்பா ராயினார். ந

புராணம் : இனி, நிறுத்த முறையானே, ஆசிரியர், எட்டாவது, பொய்யடிமை யில்லாத புலவர் சருக்கத்தில் எட்டாவது, ஐயடிகள், காடவர்கோன் நாயனாரது புராணங் கூறுகின்றார் ; ஐயடிகள் காடவர்கோன் நாயனாரது சரித வரலாறும் பண்புங் கூறும்பகுதி.

**தொகை:** 'ஐயடிகள் காடவர்கோன் நாயனார்க் கடியேன்' அடியேனாவேன்.

பேரும் மரபும் தொகைநூல் தொகுத்துக் கூறியது.

**வகை:** சத்தி...மொழிந்து - ஞான சத்தியாகிய வேலாயுதத்தை ஏந்திய வலிய கையினையுடைய குமாரக் கடவுளின் தாதையாராகிய இறைவரது பதிகள் எங்கும் முத்திப் பதத்தினையே குறிக்கோளாகக் கொண்ட ஒவ்வோர் வெண்பாப் பாடி; முடியரசாம்...என்னும் - அரனுக்காக ஐயமேற்றல், முடிசூடிய அரசாகும் அத்தன்மைக்கு மும்மையாலும் நன்றாகும் என்று எடுத்துக்கூறிய; ஐயடிகளாகின்ற பல்லவனே - ஐயடிகள் என்னும் பெயரினையுடைய பல்லவரே; பத்திக்கடல் - பத்தியின் கடல் போன்றவர்.

சத்தி - குமாரக்கடவுளின ஞானசத்தி எனப்படும் வேல். தானமெல்லாம் - பதிகள் பலவற்றிலும்; முத்திப்பதம் - முத்தி காதலிக்கும் குறிப்புடைய; க்ஷேத்திர வெண்பா என்னும் இந்நூலில் வெண்பாத்தோறும் யாக்கை நிலையாமையினைப் பலவாறும் இடித்து எடுத்துக் கூறி, வீடுபேற்றின் சாதனமாகிய சிவவழிபாட்டினை வற்புறுத்தியுள்ள நிலை குறித்தது.

ஒரோர் வெண்பா - ஒரு பதிக்கு ஒரு வெண்பாவாக, " முடியரசாம்...ஏற்றல்" என்னும் - இது அந்நூலின் 10-வது வெண்பாவின் பொருள். அதன் பெருமையும், ஓரரசர் சொல்லாதலும், இந்நாயனாரது அடிமைப் பண்பின் மேன்மையும் ஒருங்கே விளங்கவுள்ளது, அவ்வெண்பாவாதலின் அதனை எண்டெடுத்து விதந்தோதினார்.

" படிமுழுதும் வெண்குடைக்கீழ்ப் பாரெலா மாண்ட
முடியரசர் செல்வத்து மும்மைத்—தொடியிலங்கு
தோடேந்து கொன்றையந்தார்ச் சோதிக்குத் தொண்டுபட்
டோடேந்தி யுண்பா துறும் " (க்ஷேத்திர வெண்பா - 10)

என்பது அத்திருப்பாட்டு, அதுபற்றி என்பது எதுகை நோக்கி அகரத்திற்கு என வந்தது.

அரற்காயி ஐயம் ஏற்றல் - அரற்காயி - அரனுக்குத் தொண்டுபட்டு அதற்காக - அதுவே பற்றாக என்க. அரற்காய் என்பது பிறிதினியல்பு நீக்கிய விசேடணம்; இரத்தல் இழிவு என்பது நீதியாதலின் ஐயமேற்றுண்ணல் எவையும் விரும்பத் தக்கனவல்ல; அவை இகழ்ச்சியே; ஆனால் அரனுக்குத் தொண்டுபட்டு ஐயமேற்றல் முடியரசினும் மும்மைச் சிறப்புடையது என்பதாம்.

கடல் - கடல் போன்றவரைக் கடல் என்றார்; பெயரும் பண்பும் வரலாறும் வகைநூல் வகுத்துரைத்தது.

**விரி:** 4046. (இ - ள்) வையகிகழ்...தோன்றி - உலகில் புகழ் சிறந்த அரசியற்றும் பல்லவர்களது மரபிலே முறைமையாக அவதரித்து; வெய்ய... அடக்கி - கொடிய வறுமையும் பகையும் அவற்றால் வரும் துன்பங்களும் நீங்கும்படி அடக்கி; செய்ய...அரசளிப்பார் - சிவந்த சடையினையுடைய இறைவரது சைவத் திருநெறியின்வழியே நின்று அரசாட்சி செய்வாராகி; ஐயடிகள்...செங்கோலார் - ஐயடிகள் காடவர்கோன் என்னும் அரசர் அரசநீதி முறையினாலே உலகமெல்லாம் தம்மடியின்கீழ் வாழும்படி செய்யும் செங்கோலாணையினை யுடையாராய்; த

4047. (இ - ள்) திருமலியும் புகழ் விளங்க - செல்வங்கள் மிகும் புகழ் விளங்கவும்; சேண்...அமர - விரிந்த இவ்வுலகத்தில் எல்லா வுயிர்களும் பெருமையோடு இனிதாக வாழவும்; தருமநெறி தழைத்தோங்க - நீதிமுறை தழைத்து விளங்கவும்; தாரணி...துறைவிளங்க - உலகில் சைவநெறியுடனே அரிய வேதநெறியும் விளங்கவும்; பிறபுலங்கள் அடிப்படுத்து - பகைப் புலங்களை ஒடுக்கித் தம்கீழ்த் தங்கும்படி அடங்கச் செய்து; அரசளிக்கும் அந்நாளில் - அரசு செய்கின்ற அந்நாளிலே; ௨

4048. (இ - ள்) மன்னவரும் பணிசெய்ய - அரசர்களும் தமது ஏவல் வழியே பணிசெய்து ஒழுக; வடநூல்...பணிசெய்ய - வடமொழியும் தென்றமிழும் முதலாக எடுத்துச் சொல்லப்படும் கலைகள் தமது வயப்பட்டு நிற்கவும்; பாரளிப்பார் - உலகங் காவல் புரிவாராகிய அவர்; அரசாட்சி...இழிச்சி - உலகம் புரக்கும் அரசாட்சி துன்பம் செய்வது என்று இகழ்ந்து நீத்து அதனை அழகிய தமது மகன் மேலதாக வைத்துப் பட்டம் சூட்டி; நன்மைநெறி...ஆயினர் - நல்ல சிவநெறியிலே நின்று திருத்தொண்டினை விரும்பிச் செய்வாராயினர். ௩

இம்மூன்று பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

4046. (வி - ரை) வைய நிகழ் பல்லவர்-ஆசிரியர் தம் காலத்தில் ஆட்சிபுரியும் அரச மரபு என்பார் நிகழ் என்றார்; பல்லவர் - சோழர் வழி மரபுகளுள் வந்த அரச குலம்; இவர்களுக்குரியது இடபக்கொடி என்பர். ஆளுடைய நம்பிகள் காலத்தில் இம்மரபினர் ஆட்சி புரிந்தமை "உரிமையாற் பல்லவர்க்குத் திறை கொடா மன்னவரை மறுக்கஞ் செய்யும், பெருமையார்" (நம்பி - கோயில்) என்ற திருவாக்கினால் விளங்கும். அமணர் வசப்பட்டு மதிமயங்கி ஆளுடைய அரசுகளை யிறைசெய்து, பின், அவரது பெருமை கண்டு சிவன் அடிமைப்பட்ட மகேந்திர வருமரும் இம்மரபினரே யாவர்; நீண்ட தொடர்பும் அரசர் பெருமையும் குறிக்க வைய நிகழ் என்றார்.

கலி - வறுமை; பகை - உட்பகை புறப்பகைகள்; மிகை - இவற்றால் வரும் துன்பங்கள்; குற்றம்; நெறி - நீதி; வெய்ய - கொடிய; "கொடிது கொடிது வறுமை கொடிது" (ஔவை) "நல்குர வென்னுந் தொல்விடம்" (திருவா).

சைவத் திருநெறியால் அரசளிப்பார் - உலகினைச் சைவநெறியின் கண்ணே நின்று நிலைபெற ஆள்பவராய்.

செங்கோலார் - அளிப்பார் - (4046) - அளிக்கும் நாளில் (4047) - இகழ்ந்து - இழிச்சி - அளிப்பாராயினர் (4048) என்று இம்மூன்று பாட்டுக்களையும் தொடர்ந்து முடிபு படுத்திக் கொள்க. 1

4047. (வி - ரை) திருமலியும் புகழ் - திரு - எண்வகை உலகநிலைச் செல்வங்கள்; புகழ் - ஈகையால் வருவது.

சேண் நிலம் - சேண் - தூரத்தே அகன்ற; பரவிய. தூரதேயம் என்றலுமாம்.

ஐயடிகள் - இந்த இந்நாயனாரது பெயர். பல்லவர்கள் பெரும்பாலும் வடமொழிப் பெயர்களையே இட்டுக்கொள்ளுதல் மரபு என்பர்; அப்படியாயின், இவரது இயற்பெயர் இன்னதென்று தெரியவில்லை, "பத்திக்கடல் ஐயடிகள்" என்று வகைநூலில் துதிக்கப்படுவதனால் இவர் இளவயதிலிருந்து இறைபத்தி மிகுந்து ஒழுகிய நிலையினால் ஐயடிகள் (ஐ - தெய்வம்) என்று வழங்கப்பட்டார் போலும்; காடவர் - (பல்லவர்) என்பது இவரது அரச மரபு. இவர் அரசு புரிந்த தலைநகரம் காஞ்சிபுரம். "காஞ்சிக் காடவர்" (4032) என்று ஆசிரியர் அறிவித்தருளுகின்றார்.

எவ்வுயிரும் பெருமையுடன் இனிதமர - மக்களே யன்றி எல்லா வுயிர் வருக்கங்களும், அரசனது காவல்பெற்றுக் குறைவின்றி இனிது வாழ; கழறிற்றறிவார் நாயனாரது வரலாறு இங்கு நினைவுகூர்தற்பாலது. அமர - விரும்பி வாழ.

பிறபுலங்கள் - திறம்பி நின்ற பகைப புலங்கள் ; அடிப்படுத்து - பகைவரால் வரும் துன்பங்களை நீக்கி அவர்களை அடக்கித் தம் வயப்படுத்தி.

தரும நெறி - இஃது உலகியற் றருமநீதி முறை.

சைவமுடன் அருமறையின் துறை - சைவநெறியும் வேதத்துறையும் ; "வேதநெறி தழைத்தோங்க மிகுசைவத் துறைவிளங்க" (1899) ; இங்குச் சைவத் திறத்தினை முன்கூறியது இந்நாயனார் பற்றி ஒழுகிய சைவ ஒழுக்கத்தினைச் சிறப்பாகக் குறித்தற்கு. சிறப்புப் பற்றி உடன் உருபைச் சைவத்துடன் புணர்த்தி ஓதினர். 2

4048. (வி - ரை) வடநூல்...பணிசெய்ய - என்றது இந்நாயனார் வடமொழி தென்றமிழ்மொழி யிரண்டிலும் வல்லவராய் அவ்விரு கலைகளின் திறத்தினையும் உறுதிப பொருளின்கட் செல்லும்படி செலுத்ததலை உணர்த்தற்கு. இப்பண்பு இந்நாயனாருளிய க்ஷேத்திர வெண்பாவினால் அறியப்படும். இந்நாயனார், கழறிற்றறிவார் நாயனார்போல முடிமன்னரா யிருந்தும் கலைகளினும் வல்லவராயினர் இது தமிழரசர்களின் சிறப்பு. கலை - கலைகள் பலவும் , பணி செய்தல் - கலைகளிற் றேர்ச்சி யுறுதல்.

அரசாட்சி இன்னல்என இகழ்ந்து - உலக அரசாட்சி துன்பந் தருவதேயாம் என்று அதனை இகழ்ந்து ஒதுக்கி ; தன்கீழ் வாழும் எல்லா வுயிர்களுக்கும் ஐந்து வகைப் பயமும் தீர்த்து அறங்காக்கும் அருமைப்பாடு பற்றியும், தம் தம் உயிர்க்கு வீடுபேற்றுக்கு வழியாதலின்றிப பெருந் தொடக்குக்கே வழியாகிப் பிறப்புக்கு ஏதுவாகும் நிலைபற்றியும் இன்னல் என்று துணிந்தார். "இருளுடை யுலகங் காக்குமின்னல்" என்பது கம்பன் பாட்டு.

இழிச்சி - இகழ்ச்சிக் குறிப்புப்படக் கூறியது கவிநயம் ; தாம் இகழ்ந்த ஒன்றைத் தம்குமாரனுக்கு ஆக்கியது தகுதியாமோ, எனின், உலகத்தின், இக்காவலுக்கு ஒருவன் வேண்டும் என்ற கடமையினைச் செய்யும் அளவேயன்றி, அஃதுயர்வான பொருள் என்பதனாலன்று என்பது குறிப்பு ; இழிச்சுதல் - இறங்குதல்.

நன்மைநெறித் திருத்தொண்டு - அரசாட்சி போலன்றி நன்மை வழியிலே சென்று நன்மையே பயக்கும் என்பது.

தொண்டு நயந்தளிப்பார் - முன்னர்த் தொண்டுநெறி அரசளிப்பார் அதனை விட்டு திருத்தொண்டொன்றினையே அளிப்பார்.

ஆயினர் - ஆக்கச்சொல் மேம்பாடு குறித்தது. 3

4049. தொண்டுரிமை புரக்கின்றார் சூழ்வேலை யுலகின்கண்
அண்டர்பிரா னமர்ந்தருளு மாலயங்க ளானவெலாங்
கண்டிறைஞ்சித் திருத்தொண்டின் கடனேற்ற பணிசெய்தே
வண்டமிழின் மொழிவெண்பா வோரொன்று வழுத்துவார் ; ௪

4050. பெருத்தெழுகா தலில்வணங்கிப் பெரும்பற்றத் தண்புலியூர்த்
திருச்சிற்றம் பலத்தாடல் புரிந்தருளுஞ் செய்யசடை
நிருத்தனார் திருக்கூத்து நேர்ந்திறைஞ்சி நெடுந்தகையார்
விருப்பினுடன் செந்தமிழின் வெண்பாமென் மலர்புனைந்தார். ௫

பிற்சேர்க்கை : 2

Dr. M. இராசமாணிக்கம், M.O.L., PhD. அவர்களின்

## குறிப்புக்கள்

40. சாக்கிய நாயனார் புராணம் :—சாக்கிய நாயனார் காஞ்சியில் வாழ்ந்த வராகப் புராணம் கூறுகின்றது. அவர் சிவனைக் கல்லெறிந்து வழிபட்டார் என்பது புராணம். இந்நூதன வழக்கம் எவ்வாறு தமிழகத்திற்கு வந்தது? இமயத்திற்கு வடபாலுள்ள திபேத்திய நாட்டில் வாழும் பௌத்தர்கள் புத்ததேவனை வழிபடுகையில் ஒவ்வொரு மந்திரத்தின் இறுதியிலும் ஒரு கல்லெறிந்து வழிபடுதல் மரபு. என்னை? பனி மிகுந்த அந்நாட்டில் மலர்கள் இன்மையால் என்க. இவ்வழக்கை மேற்கொண்டே சாக்கியர் கல்லெறிந்து சிவபிரானை வழிபட்டனரோ? என்பது கருதத்தக்கது.

42. சிறுத்தொண்ட நாயனார் :—1. மாமாத்திரர் - மகாமாத்திரர் - "மாமாத்திரர் என்பது மகாமாத்திரர் என்பதன் மரூஉ? இவர் மந்திராலோசனைத் தலைவர். அரசர் இவரைக் கலந்தே போர்ச்செலவு செய்வதோ வேறு செயல்களிற் புகுவதோ பண்டை மரபாகும். இவர்கள் பலகலைகளில் வல்லுநர்களாகவும் சிறந்த போர்வீரராகவும் நற்குடிப்பிறப்புடையவராகவும் இருத்தல் வேண்டும் என்பது மனுதர்மசாத்திரம்." (Arta Shastra - Book I. Ch. 12)

2. இவர் வாதாபியை அழித்தார் என்பதால், முதலாம் நரசிம்மவர்மன் (கி. பி. 630 - 660) தானைத்தலைவர் என்பது தெளிவு. இவர் அவனுக்காகப் பல போர்களைச் செய்தார் என்று கூறுவதற்கு ஏற்ப, "நரசிம்மவர்மன் சேர, சோழ, பாண்டிய, களப்பிரருடன் போரிட்டான்" என்று கூரம் பட்டயம் குறிக்கின்றது. (South Indian Inscriplions Vol. I Page. 144). நரசிம்மவர்மன் கங்க அரசனை பூவிக்ரமனோடும் போரிட்டான் என்பது கங்கக் கல்வெட்டால் தெரிகிறது. (M. K. Rao's Gangas of Talhad, Page 48). இப்போர்களில் சிறுத்தொண்டர் ஈடுபட்டிருக்கலாம். (புராணம் செய்யுள் 5).

3. வாதாபியில் நரசிம்மவர்மனது 13 ஆண்டு ஆட்சியைக் குறித்த வெற்றித்தூண் உண்டு. வாதாபிப் போர் கி. பி. 642ல் நடந்ததாகக் கருதப் படுகின்றது. ஆகவே அந்நகரம் சுமார் கி. பி. 642–655 வரை பல்லவர் கையில் இருந்திருத்தல் வேண்டும். வாதாபிப் படையெடுப்பில் தோற்ற இரண்டாம் புலிகேசியின் மகனான முதலாம் விக்ரமாதித்தியனது கர்நூல் பட்டயம், "இரண்டாம் புலிகேசி தோல்வியுற்றான்.........வாதாபியில் இருந்த கோயில்கள் பல்லவர் ஆட்சியில் வருவாய் இன்றித் தவித்தன" என்று கூறுகின்றது. இந்த விக்கிரமாதித்தன் மகனான விநயாதித்தனது சோரப் பட்டயம், "சாளுக்கிய மரபின் அழிவிற்கும் தாழ்விற்கும் பல்லவர்களே பொறுப்பாளிகள்." (Indian antiquity, Vol. 19, Pages 151–152) என்று முறையிட்டுள்ளது. இரண்டாம் கீர்த்திவர்மனுடைய வக்கலேரிப் பட்டயம், "எங்கள் சாளுக்கிய முன்னோரது சிறப்பை அழித்தவர் பல்லவர். அவர் எங்கள் பிறவிப் பகைவர்." (Indian antiquity. Vol. 8 Page 23) என்பது குறிக்கப்பட்டுள்ளது. சேக்கிழார் கூறியாங்குத் தொன்னகரமாகிய வாதாபி(யின் பல பகுதிகள்) துகளாக்கப் பட்டுப் பல்லவர் கைப்பட்டமையாற்றான், மேற்

சொன்ன சாளுக்கியர் பட்டயங்களில் அவர்தம் புலம்பலோசை கேட்கப்படுகின்றது என்பதை இப்பொழுது நன்குணரலாம்.

4. கணபதீச்சரம்; இக்கோவில் உத்தராபதீசர் கோவிலுக்குள் சிறிய கோவிலாக இருக்கிறது. இதன் சுவர்களிற்றும் சோழர் கல்வெட்டுக்கள் காண்கின்றன. இதனைத் தன்னகத்தே கொண்ட உத்தராபதீசர் கோவிற் சுவர்களில் விசயநகர அரசர் கல்வெட்டுக்கள் காண்கின்றன. முதல் இராசராசன் காலமுதல் இக்கணபதீச்சரம் சிறப்புற்றதாகத் தெரிகிறது. சித்திரை விழாவில் அடியாரை உண்பிக்கச் சிறுத்தொண்ட நம்பி மடம் கட்டப்பட்டது. சீராளதேவர் என்ற சிவபிரானுக்கும் வீரபத்திரர்க்கும் தொண்டு செய்து வந்த சிறுத்தொண்ட நம்பிக்கு விழாச் செய்யப்பட்டு வந்தது. உத்தராபதியார் சிறுத்தொண்டர் மாளிகையில் உபசரிக்கப்பட்டார். அதனால், இன்றைய உத்தராபதீசர் கோவில் சிறுத்தொண்டரது மாளிகை இருந்த இடம் எனவும், கணபதீச்சரப் பெருமான் சீராளதேவர் என்ற பெயர் கொண்டவர் எனவும், அக்கடவுள் பெயரையே சிறுத்தொண்டர் தம் மகனுக்கு இட்டார் எனவும் கூறலாம். சிறுத்தொண்டர் வரலாற்றில் உள்ள தெய்விகச் செயல் ஒழிந்த ஏனைய அனைத்தும் இங்ஙனம் கல்வெட்டுச் சான்று கொண்டனவாகக் காண்கின்றன என்பது இங்கு அறியத்தக்கது. (A. R. E. 1913, Part II· Pages 87–88).

43. கழறிற்றறிவார் நாயனார் புராணம்:—1. மயூரசன்மனால் தோற்று விக்கப்பட்ட கதம்பமரபு ஏறத்தாழக் கி. பி. 7ஆம் நூற்றாண்டில் அழிவுற்றது. அதன் பிறகு அப்பகுதியும் அதற்குத் தெற்கேயிருந்த சேரநாடும் பெருமாள் என்னும் பட்டம் கொண்ட குறுநிலமன்னர் (நாயர்) பலரால் பல பகுதிகளாகப் பிரித்து ஆளப்பட்டது. இப்பெருமாள்கள் நாயர் மரபினராவர். (R. D. Banuyic's Prehistoric ancient Hindu India Page. 275) இப்பெருமாள்களில் ஒருவரே கி. பி. 8ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த குலசேகரப் பெருமாள்; மற்றொருவரே சுந்தரர் காலத்தில் வாழ்ந்த கொடுங்கோளூர் மன்னரான சேரமான் பெருமாள் நாயனார்.

2. மேற்படி புராணம் (செய்யுள் 68, "உடைய நம்பி முன்னாக" - உடைய நம்பி என்பது சுந்தரரைக் குறிப்பது. உடைய நம்பி விலாசம் என்று சுந்தரர் வரலாற்று நூல் ஒன்று கி. பி. 14ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த சோமநாதகவி என்னும் தெலுங்குப் புலவரால் பாடப்பெற்றமை இங்கு அறியத்தகும்.

44. கணநாத நாயனார் புராணம் :—செய்யுள் 2–4 பாக்களால் கி. பி. 7ஆம் நூற்றாண்டில் சைவ சமய வளர்ச்சிக்காகச் சைவ சமய பயிற்சிப் பள்ளிகள் ஆங்காங்கு இருந்தன என்பதை ஊகிக்கலாம். இப்பாக்கள் சைவசமய ஆராய்ச்சியாளர்க்கு மிகவும் இன்றியமையாதவை.

45. கூற்றுவ நாயனார் :—இவர் களப்பிர மன்னர்; பலநாடுகளை வென்றவர். இவர் தமக்கு முடிசூட்டுமாறு, தில்லைவாழ் அந்தணர்களை வேண்ட, அவர்கள், சோழர்க்கன்றி பிறர்க்கு முடிசூட்டோம் என்று கூறி மறுத்து, அவரது சீற்றத்திற்கு அஞ்சிச் சேரநாடு புகுந்தனர் என்பது சேக்கிழார் கூற்று. கி. பி. 7ஆம் நூற்றாண்டு முதல் பல்லவப் பேரரசர் தில்லையுட்பட உறையூர் வரை தென்னாட்டை ஆண்ட பேரரசர். ஆதலின், இக்கூற்றுவர் கி. பி. 5 அல்லது ஆறாம் நூற்றாண்டில் வாழ்ந்தவராதல் வேண்டும். "புதுக்கோட்டைச் சீமையைச் சேர்ந்த தென்கவிர நாடு என்னும் பகுதியில் அரசர்க்கே முடிசூட்டும் அந்தணர்களைக் கிள்ளை என்பவன்

குடியேற்றினன் என்று புதுக்கோட்டையைச் சேர்ந்த கோகர்ணம் கல்வெட்டுக் கூறும் செய்தி (411 of 1902) மேற்சொன்ன செய்தியோடு ஒப்பிடத் தக்கது. இக்கூற்றுவர் களப்பிர அரசராய் இருந்த காரணத்தால் அவருக்குத் தில்லைவாழ் அந்தணர் முடிசூட்ட வில்லைபோலும்! (C. B. N. I S. Origin and development of Saivism in South India. Pages. 180 - 181).

47. புகழ்ச்சோழர் :—செய்யுள் 13. துலைக்கனகம் - துலைப்பொன் அரசாங்க முத்திரை யிடப்பெற்ற மாற்றுயர்ந்த பொன் என்பது கருத்து. (South Indian Inscriptions. Vol. III Part III, Pages 228 - 229, and 234).

48. நரசிங்க முனையரையர் புராணம் :—1. இம்மரபினரைப் பற்றிய கல்வெட்டுக்கள் சில உண்டு. அவற்றுள் பழமையானது மூன்றாம் நந்திவர்மன் மகனான நிருபதுங்கனது (கி. பி. 865 - 900) 16ஆம் ஆட்சி ஆண்டுக் கல்வெட்டாகும். அத்திருவதிகைக் கல்வெட்டில், "முனைப்பேரரையர் மகன் முனையர் கோன் இளவரையன்" என்பது காணகிறது. நிருபதுங்கன் தந்தையான கழற்சிங்கரும், சுந்தரரும், அவரை வளர்த்த நரசிங்க முனையரையரும் ஏறத்தாழ ஒரு காலத்தவர். (கி. பி. 840 - 865) ஆகலின் மேற்சொன்ன கல்வெட்டில் குறிக்கப்பட்ட முனைப் பேரரையர் நமது நரசிங்க முனையரையர் ஆகலாம் என்று கோடல் பொருந்தும்.

2. நிருபதுங்கனுக்குப் பிற்பட்ட அபராஜிதவர்மன் ஆட்சியில் முனையதரையன் அபராசிதன் குலமாணிக்கப் பெருமானார் என்று ஒருவன் இருந்தான் என்று திருநாவலூர்க் கல்வெட்டு ஒன்று குறிக்கின்றது. (S. I. I. VII, 999) இவ்வரச மரபினர் தொடர்ந்து சோழர் ஆட்சியிலும் இருந்து வந்தனர்.

3. வீரராசேந்திரன் ஆட்சியில் வீரராசேந்திர முனையதரையன் என்பவன் இருந்தான். (S. I. I. IV, 529).

4. விக்கிரமசோழனிடம் (கி.பி. 1118-1135) அமைச்சனாகவும் தானைத் தலைவனாகவும் ஒரு முனையதரையன் இருந்தான். (விக்கிரமசோழன் உலா வரி. 139-142).

5 நரசிங்க முனையரையர் கழற்சிங்கனான மூன்றாம் நந்திவர்மன் காலத்தவர். அவர் திருவாதிரை விழாவில் அடியாரை உபசரித்து ஒவ்வொருவர்க்கும் 100 பொன்னுக்குக் குறையாமல் கொடுத்து உண்பித்தவர் என்பது சேக்கிழார் திருவாக்கு. இங்ஙனம் அவர் காலத்தில் திருவாதிரை விழா சிறப்புறக் கொண்டாடப்பட்டது ; அடியார்க்கு உபசாரம் செய்யப்பட்டது என்பதைக் கல்வெட்டால் அறியலாம். "வழுவூரான் என்பவன் குன்றாண்டார் கோயிலில் (புதுக்கோட்டைச்சீமை) நடைபெற்ற திருவாதிரை விழாவில் 100 பேர்க்கு உணவளிக்க அரிசி தானம் செய்தான் (347 of 1914) என்று நந்திவர்மனது 3ஆம் ஆட்சி ஆண்டுக் (சுமார் கி. பி. 842) கல்வெட்டுக் கூறுகிறது.

49. அதிபத்த நாயனார் புராணம் :—கடல் வாணிகச் சிறப்புச் செய்யுள் 3. பல்லவர் காலத்தில் நாகபபட்டினம் சிறந்த துறைமுகப்பட்டினமாக இருந்தது என்பது சீனர் எழுதிவைத்த குறிப்புக்களால் அறியலாம். இராசசிங்கப்பல்லவன் (கி. பி. 685 - 720) சீனவணிகர்க்காக நாகையில் பௌத்த விகாரம் ஒன்றைக் கட்டிச் சீன அரசனைப் பெருமைப் படுத்தினான் ; சீன அரசனும் பல்லவனை மதித்துப பல பரிசுகள் அனுப்பினான் என்று சீன நூல் கூறுகிறது. (Dr. C. Minakshi's 'Ad.........Pallava's, P. P. 68 - 90).

52. சத்தி நாயனூர் :—காடவர்கோன் சத்தி யென்பான் - அரக்கோணம் தாலுக்காவில் உள்ள தண்டலம் எரிக்கல்வெட்டு பல்லவர்காலம் (Epigraphia India, Vol. VII P. P. 26).

53. ஐயடிகள் காடவர்கோன் :—இவர் சிறந்த வடமொழிப் புலவர்; தமிழ்ப்புலவர்; மகனிடம் அரசை ஒப்பித்து, சிவத்தளி யாத்திரை செய்து, தலத்துக்கொரு வெண்பாப் பாடினவர். இவர் வடமொழிப் புராணத்தில் சிம்ஹாங்க, பாதசிம்ஹா, பஞ்சபாதசிம்ஹா (Simnhanha, Padasimha, Panchapadasimha) என்ற பெயர்களை உடையவராகக் காண்கிறூர். மேலும் இவர் மகன் 'பீமவர்மன்' என்று அந்நூல் கூறுகிறது. பல்லவர் பட்டியலிற் பீமவர்மன், சிம்மவிஷ்ணு இவர்தம் தந்தை மூன்றும் சிம்மவர்மன் என்பது காண்கின்றது. எனவே இவர் மூன்றும் சிம்மவர்மனுகலாம் என்பது அறிஞர் கருத்து (Mysore Annual Archaeological Report, 1925, P. P. 9 - 12). அது பொருத்தமாயின் சிம்மவிஷ்ணுவின் (கி. பி. 575 - 615) தந்தையாரான இவர் காலம் ஏறத்தாழக் கி. பி. 550 - 575 என்னலாம்.

(குறிப்பு :—ஆமாத்தியர் வேறு; மாமாத்திரர் வேறு. ஆமாத்தியர் அமைச்சர். "உறுதி உழையிருத்தான் கூறல்" (குறள்). மாமாத்திரர் - மருத்துவர் குலம், படைத்தொழிலாளர் (3662),—ப - ர்.)

---

பிற்சேர்க்கை : 3

## அதிபத்தநாயனூர் புராணம் பற்றிய
## சில குறிப்புக்கள்.

அன்பர். திரு. B. வைத்தியலிங்க முதலியார், கர்ணம், கொரூர்
அவர்கள் அளித்தவை

நாகைப்பட்டினம் திருக்கோயிலுக்கு வழிவழி உரிமையாளர்களாக இருந்தவர்கள் அவ்வூர் பரதவர்கள் மரபினர். சென்னைக் கடற்கரையிலிருந்து தூத்துக்குடி கடற்கரை வரையிலும் உள்ள 63 குப்பங்களுக்கும் தலைவர் (அரசர்) நாகைக் கடற்கரையில் உள்ள நம்பியான் தப்பத்தில் இருந்தார்கள். தப்பம் என்பது கடற்கரைப் பரதவர் சேரிக்கு வழங்கும் பெயர். [கரையேற விட்டகுப்பம் (கடலூருக்கு அருகில் உள்ளது) திருநாவுக்கரசர் பெருமான் சமணர்களால் கல்லிற் பூட்டிக் கடலில் தூக்கப்பட்டபின் கல்லே தோணியாக மிதந்துவந்து கரையேறிய இடம்; நம்பி - தலைவர் – அரசர்]; நம்பியான் (அரசன்) இருந்ததனுல் இதற்கு இப் பெயர் வந்தது. பரதவர் மரபில் நம்பியான்குடியில் வந்தவதரித்தவர் அதிபத்த நாயனூர். அவரது அம்மரபின் தலைமைபற்றியும் அதன் உரிமைகள் பற்றியும் புராணத்தில் விரிக்கப்பட்டிருக்கின்றது. ["நுளையர் தந்தலைவராய்" (4001) அதி - புரா. 10] இந்நாயனூரது திருநாள் இன்றும் சிறப்பாக அம் மரபினரால் கோயில் சம்பந்தத்துடன் கொண்டாடப்படுகிறது. அன்று விசேட அலங்காரத்துடன் இறைவருடனே நாயனூரைச் கடற்கரைக்கு எழுந்தருளச்செய்து படகில் கடல்மேற் செலுத்தி மீன் கொணர்ந்து வழிபடும் நிலைகளுடன் சிறந்த திருவிழாவாகக் கொண்டாடப்படுகிறது. கோயிலில் இம்மரபினருக்குச் சிறப்பாகப் பல உரிமைகள் இன்றும் நிகழ்ந்து வருகின்றன. இம்மரபினர்களுள் யாரேனும் இறந்துபட்டால் அவ்வுடலைத் திருக்கோயிலின் முன்பு

கொணர்ந்து வைத்துப் பரிவட்டம் மாலை முதலியவை அணிந்து செல்லும் வழக்கமும் இன்றும் நிகழ்கின்றது. தேர்விழாவிலும் மற்றும் பல காலங்களிலும் கோயிலில் பணிசெய்யும் பல உரிமைகளும், அவற்றிற்காகக் கோயில் அதிகாரிகள் திருவருட் பிரசாதங்களையும் மரியாதைகளையும் ஒரு மைலில் உள்ள நம்பியான் குப்பத்திற்குக் கொண்டுசென்று வழங்கி வருவதும் நிகழ்கின்றன. நம்பியான்குப்பம் நாகை நகரபரிபாலன அமைப்பில் ஒரு தனிப் பகுதியாக வகுக்கப்பட்டுள்ளது; அதற்கென்று அங்கத்தினரும் உண்டு.

---

## பிற்சேர்க்கை : 4

இராவ்பகதூர் - திரு. C.M. இராமச்சந்திரன் செட்டியார், B.A., B.L.
அவர்கள் எழுதிய

## குறிப்புக்கள்

1. ஐயடிகள் காடவர்கோன் நாயனார் :—காடவர் என்பது பல்லவ மரபுக்கு வழங்கிய பெயர். இம்மரபினர் காஞ்சிபுரத்தைத் தமது தலைநகராகக் கொண்டு அரசாண்டனர். இம்மரபில் வந்தவர் ஐயடிகள் நாயனார். ஆதலால் இவரைக் "காஞ்சிக் காடவ ரையடிகள்" என்று புராணம் கூறுகின்றது. காடவர்கள் தங்களுக்கு வடமொழிப் பெயர்களையே சூட்டி வழங்கிவந்தனர். (மகேந்திரவர்மன் நரசிம்மவர்மன் என்பன முதலியவை பார்க்க). ஆகவே ஐயடிகளாரது இயற்பெயர் வேறொன்றாக இருக்கலாம்.

இவர் பாடிய பாடல்களுள் 24 வெண்பாக்களே கிடைத்துள்ளன. அவை யாவும் யாக்கை நிலையாமை பற்றிக்கூறி, மூப்பும் இறப்பும் வருமுன் உடல் வலிமையுள்ள போதே சிவனை அடைந்துய்ய வேண்டும் என்னும் உபதேசத்தையே மக்களுக்கு எடுத்துச் சொல்லும் கருத்துக்கொண்டன. இவர் பாடியவற்றுள் சோழநாட்டுப் பதிகள் 17-ம், தொண்டை நாட்டுப் பதிகள் 3-ம், நடுநாட்டு பதி 1-ம், வடநாட்டுப்பதி 1-ம் பாடப்பட்டுள்ளன. தலம் பற்றாத பொதுப்பாட்டுக்கள் (2).

2. கூற்றுவ நாயனார் :—இவர் குறுநில மன்னர்; நம்பியாண்டார் நம்பிகள் இவர் மரபைக் களப்பாளர் மரபு என்கிறார். களப்பாளர்களும் குறுநில மன்னர்கள்தாம். இவர்கள் பெண்ணாகடத்தில் வாழ்ந்து குறுநில மன்னர்களாக ஆட்சி செய்துள்ளார்கள். களந்தை என்ற பெயரால் பல ஊர்கள் உண்டு. தொண்டை நாட்டில் பொன்விளைந்தகளத்தூர்; பாண்டிநாட்டில் களக்கை; கொங்கு நாட்டில் பெரிய களந்தை; (ஆதித்தேச்சரம் என்று இவ்வூர்க் கோயிலின் பெயர் வழங்குகின்றது) என்பன முதலியவை காண்க.

3. இடங்கழிநாயனார் :—இவர் அவதரித்த ஊர் கொடும்பாளூர் என்பது. இது கோனாட்டுக் கொடிநகரம். இதனைக் "கொடும்பை" என்று சிலப்பதிகாரம் கூறும். இடங்கழியார் "இருக்குவேளிர்" குலத்தில் அவதரித்த குறுநிலமன்னர்; பொன்னம்பலத்தில் பொன்வேய்ந்த ஆதித்தன் மரபில் வந்தவர் என்று இவரைப் புராணத்துள் கூறியிருப்பதனால் இவர் சோழர் மரபில் ஒரு கிளைக் குடும்பத்தவராக இருத்தல் வேண்டும். புதுக்கோட்டை மறவநாட்டில் கானாடு, கோனாடு என்ற இரண்டு நாடுகள் உண்டு. அவற்றுள் கோனாட்டில் உள்ளது கொடும்பாளூர். கோவலன் கண்ணகியோடு புகார் நகரை விட்டு மதுரைக்குச் செல்லும் வழியில்

கொடும்பாளூர் வழியாகச் சென்றதாகச் சிலப்பதிகாரம் கூறுகின்றது. இவ்வூரில் பழைய கோயில்கள் பலவுண்டு. அவற்றுள் மூவர் கோயில் மிகப் புகழ் பெற்றது. இது அடிமுதல் உச்சிவரை விமானமுள்படக் கருங்கல்லால் ஆக்கப்பட்டது.

குறிப்பு :—இருக்கு வேளூர் - இருக்குவேளிர் - என்ற இரண்டும் மயங்கி அறியப்பட்டு வழுவான ஆராய்ச்சிக்கு இடமாய் விட்டன. இருக்குவேளிர் என்பது இடங்கழி நாயனார் அவதரித்த அரசமரபின் பெயர் ; இவரது ஊர் கொடும்பாளூர். 11-ம் திருமுறையில் திருத்தொண்டர் திருவந்தாதியினுள் 65-வது திருப்பாட்டில் இருக்குவே(ளூ)ர்மன் - என்று இருப்பது அச்சுப்பிழை. சுவடி எழுதியவர்களால் நேர்ந்த பிழை. இருக்குவே(ளி)ர்மன் என்றிருத்தல் வேண்டும். இதனை ஆதாரவாகக் கொண்டு நம்பியாண்டார் நம்பிகள் இடங்கழிநாயனாரது ஊரைத் தவறாக உணர்ந்தது போலவும், அவ்வாறு வழிநூல் இருப்பவும் சார்புநூலுள் ஆசிரியர் சேக்கிழார் பெருமான் அதனைச் சரியாகத் திருத்தி இவரது ஊர் கொடும்பாளூர் என்று அருளியிருப்பதாகவும் ஆராய்ச்சி செய்யத் துணிந்து அபசாரப்பட்டனர் இந்நாளில் சிலர். இருக்குவேளூர் என்பது கணம்புல்ல நாயனாரது பதி.—பதிப்பாசிரியர்.

(4) செருத்துணை நாயனார் :—இவரது பதி மருகல்நாட்டுத் தஞ்சை. இவரும் கழற்சிங்கரும் ஒருகாலத்தவர்கள். சோ - சோன் என்ற பட்டம் [காடவர் கோன் கழற்சிங்கன் அடியார்க்குமடியேன்-(திருத்தொண்டத்தொகை)] இருப்பதால் கழற்சிங்கர் பேரரசராக - முடிமன்னராக - இருந்திருத்தல் வேண்டும். "கடல் சூழ்ந்த வுலகெல்லாங் காக்கின்ற பெருமான்" என்று நிகழ்காலத்தில் ஆளுடைய நம்பிகள் இவரைப் பாடி யிருப்பதால் இவ்விருவரும் நம்பிகள் காலத்தவர்களாதல் வேண்டும். செருத்துணையாரும் ஒரு குறுநிலமன்னவர். தஞ்சை - என்ற பெயரால் இரண்டு ஊர்கள் உண்டு. மருகல் நாட்டுத் தஞ்சை (1) தஞ்சை நாட்டுத் தஞ்சை (2). மருகல் நாட்டுத் தஞ்சை நன்னிலம் தாலூகாவில் திருமருகலுக்குப் பக்கத்தில் உள்ளது. ("தஞ்சைத் தளிக்குளத்தார்" என்று திருத்தாண்டகத்துள் வருவது தஞ்சைநாட்டுத் தஞ்சையாகும். இந்நாளில் தஞ்சாவூர் என்று சிறப்பாயறியப் படுவது ; திருவிசைப்பாப் பெற்ற இராசராசேச்சரம் உள்ள பதி.—பதிப்பாசிரியர்).

5. நேசநாயனார் :—இவருடைய ஊர் காம்பீலி என்பது ; இவர் நெசவுத் தொழில் செய்யும் சாலியர் குலத்தில் தோன்றியவர். காம்பீலி தேவார வைப்புத் தலங்களுள் ஒன்று ; சிகர மாடங்களையுடையதொரு பழம்பதி என்று புராணங் கூறுகின்றது. இது கர்நாடக தேசத்திலே ஹம்பி என்ற விஜய நகரத்திற்கு வடக்கே துங்கபத்திரை நதிக்கரையில் 20 நாழிகையளவில் உள்ளது. கோட்டை-பேட்டை என்னும் இருபிரிவுகளையுடையது. இவ்வூரில் சிவாலயங்கள் பல உண்டு. துங்க பத்திரைக் கரையிலும் ஒரு சிவாலயம் உண்டு. நெசவுத் தொழிலாளர்கள் நிறைந்த ஊர். அவர்களுடைய குருபீடம் ஹம்பியில் இருக்கின்றது. துங்கபத்திரை நதிக் கரை யிருபுறமும் பருத்தி நன்றாக விளையும் கரிசல் நிலம் உண்டு. அதனால் இங்கு நெசவாளர் நெருங்கிக் குடியேறி வாழ்கின்றார்கள். கொங்கு நாட்டிலும் பல்லிடத்திற்குத் தெற்கே தாராபுரம் போகும் வழியில் இத்தகைய நிலங்கள் உண்டு. இங்கும் காம்பீலியம்மன் கோயில் என்று ஒரு கோயில் இருக்கின்றது. இந்த அம்மன் பெயர் எப்படி இங்கு வந்தது என்று தெரியவில்லை. (ஒருவேளை வடநாட்டுக் காம்பீலியிலிருந்து அந்த அம்மையைக் குல தெய்வமாகக் கொண்டாடும் குடிகள் இங்கு வந்து குடியேறி அந்தப் பெயருடன் அம்மையைத் தாபித்து வழிபட்டிருக்கலாமோ ? என்று கருத இடமிருக்கிறது.—பதிப்பாசிரியர்.)

திருமந்திரமணி • துடிசைகிழார் அ. சிதம்பரனார் அவர்களின்

# கூற்றுவ நாயனார் சரித்திரக் குறிப்புகள்

[காலம் — கி. பி. 500 — கி. பி. 575]

## 1. தொண்டை நாடு

சோழன் இரண்டாம் கரிகா[1]லன் (கி. மு. 50—கி. பி. 37) காலத்துக்கு முன், குறும்பர்கள் (காடவர் - பல்லவர்) தண்டக நாட்டின் தென்பகுதியாகிய தொண்டை நாட்டை 24 கோட்டங்களாகவும், 79 நாடுகளாகவும், 1900 நத்தங்களாகவும் வகுத்து, புழல் கோட்டத்தை - தலைமைக் கோட்டமாக வைத்து அரசாண்டு வந்தார்கள்.

இரண்டாம் கரிகாலன் கி. மு. முதல் நூற்றாண்டில் தொண்டை நாட்டின் மீது படையெடுத்துக், குறும்[2]பர்களை வென்று, அவர்களிற் பெரும்பாலரை நாட்டை விட்டுத் துரத்திவிட்டுச், சோழநாட்டிலிருந்து பரம்பரைச் சைவர்களான கொண்டை கட்டி வேளாளர்கள் பன்னீராயிரம் கோத்திரத்தைச் சேர்ந்த 48000 குடிகளைக் கொண்டு வந்து, தொண்டைநாட்டு 24 - கோட்டங்களிலும், 79 நாடுகளிலும், 1900 நத்தங்களிலும் குடியேற்றினான். இதனை :—

" கோட்டமோ ரிருபா னன்கு கூறுநா டெழுபத தொன்பான்
தோட்டெழில் ஆயி ரத்துத் தொள்ளாயிர நத்த மாகும்
நாட்டெழு கோத்தி ரங்கள் சகத்திரம் பன்னி ரண்டாம்
நாட்டில் வேளாளர் தம்மை நவின்றிட அடங்கா லக்கம் "

(திருக்கழுக்குன்றப் புராணம்)

" நாடெங்கும் சோழன்முனம் தெரிந்தே யேற்றும் நற்றுடிநாற் பத்தெண்ணா
யிரத்து வந்த " (சேக்கிழார் நாயனார் புராணம்)

என்னும் பாடல்களால் அறியலாம்.

குறும்பர்களுக்கும் கரிகாலனுக்கும் ஏற்பட்ட போரில் தலைமைக் கோட்டமாகிய புழல் கோட்டம் அழிந்துபடவே, சோழன் எயில் கோட்டத்தில் உள்ள, ஏழு முத்தித்தலங்களில் ஒன்றாகிய காஞ்சிபுரத்தைத் தலைநகராகச் செய்தான். கி. மு. முதல் நூற்றாண்டுக்கு முன்னிருந்தே காஞ்சி சிறந்த நகராக இருந்த போதிலும், அரசியல் தலைநகராக ஆனது கி. மு. முதல் நூற்றாண்டிலேதான்.

## 2. கூற்றுவ நாயனார் முதாதைகள்

இரண்டாம் கரிகாலன் காலம் முதற்கொண்டு, அதாவது, கி. மு. முதல் நூற்றாண்டு முதற்கொண்டு, தொண்டைநாட்டு 24 கோட்டங்களும் 24 வேளாண்

---

[1] கரிகாலர் என்ற பெயரையுடைய சோழர்கள் ஐந்துபேர் ஆவார்.

| | | |
|---|---|---|
| கரிகாலன் | I | (கி. மு. 120—கி. மு. 90) |
| do. | II | (கி. மு. 50—கி. பி. 37) |
| do. | III | (கி. பி. 966—கி. பி. 970) |
| do. | IV | (கி. பி. 1062—கி. பி. 1070) |
| do. | V | (கி. பி. 1070—கி. பி. 1120) |

[2] குறும்பர் = குறுநில மன்னவர்.

தலைவர்களாலும், எயில் கோட்டத்தைச் சேர்ந்த காஞ்சிபுரம் இருபத்தாறு கோட்டங்களுக்கும் பொதுத்தலைமை அதிகாரியாலும் ஆளப்பட்டு வந்தன. தொண்டை நாடு வேளாளர்களால் ஆளப்பட்டு வந்தாலும், பாதுகாப்பு (Defence), போக்கு வரத்து (Communication), அந்நிய அரசியல் தொடர்பு (Foreign countries connection) இம்மூன்றும் சோழ அரசர்களால் வகிக்கப்பட்டன.

24 கோட்டங்களில் களத்தூர்க் கோட்டமும் ஒன்று. அக்கோட்டத்தைக் கூற்றுவனுயனுருடைய மூதாதைகள் சுதந்திரமாக கி. மு. முதல் நூற்றாண்டு முதல் ஆண்டு வந்தார்கள். களத்தூர்க் கோட்டத்துக்குச் சேர்ந்த நாடுகள் நான்கு. அவை யாவன :—(1) குறும்பறைநாடு, (2) வல்லிபுரம் நாடு (வல்லம்), (3) பாத்தூர் நாடு, (4) திம்மூர் (நடு) நாடு என்பன. அக்கோட்டத்துக்குச் சேர்ந்த நந்தங்கள் 90 ஆகும்.

கூற்றுவநாயனாரும் அவர் மூதாதைகளும் தொண்டை மண்டலம் தொண்டை கட்டி வேளாள மரபினர் ஆவர். தொண்டை மண்டல வேளாளருக்கு 12000 கோத்திரங்கள் உண்டு என்பதனை இரண்டாம் கரிகாலன் கொடுத்த செப்பேட்டுப் பட்டயத்தால் அறியலாம். அப்பட்டயம் காஞ்சிபுரம் ஞானப்பிரகாசர் மடத்தில் இன்றும் உள்ளது. அதனுடைய நகல் ஒன்று என்னிடமும் உள்ளது. அப் பன்னீராயிரம் கோத்திரங்களில் கூற்றுவநாயனார் களப்பாள கோத்திரத்தைச் சேர்ந்தவர் என்பது, "ஓதம் தழுவிய ஞாலமெல் லாம்ஒரு கோலின்வைத்தான், கோதை நெடுவேற் களப்பாள னாகிய கூற்றுவனே" என்று திருத்தொண்டர் திருவந்தாதியில் நம்பியாண்டார் நம்பிகள் கூறுமாற்றால் அறியலாம்.

## 3. கூற்றுவநாயனருடைய கோட்டம்-நாடு-நத்தம்

| | | |
|---|---|---|
| கூற்றுவநாயனருடைய | கோட்டம் | களத்தூர்க்கோட்டம் |
| ,, | நாடு | களத்தூர் நாடு |
| ,, | ஊர்நத்தம் | களத்தூர் |
| ,, | கோத்திரம் | களப்பாளர் |

கூற்றுவநாயனருடைய தாய்தந்தையர் பெயர்கள் தெரியவில்லை. சேக்கிழாரும் கூறவில்லை. நம்பியாண்டார் நம்பிகள் கூறிய கோத்திரப் பெயரைக்கூடச் சேக்கிழார் கூறவில்லை. அதற்குக் காரணம் விளங்கவில்லை.

## 4. களத்தூர்

கூற்றுவநாயனர் களத்தூரில் பிறந்தவர். களத்தூருக்கு "போற் களந்தை" என்றும், "பொன் விளைந்த களத்தூர்" என்றும் பெயர்கள் உண்டு. களந்தை என்பது ஒத்திவாக்கம் என்னும் (S. R.) தென்னாட்டுத் தொடர்வண்டி நிலையத்துக்கு அருகில் உள்ளது. களத்தூர் காஞ்சிபுரத்துக்குத் தென்கிழக்கில் 30 கல் தொலைவில் உள்ளது. இரண்டாம் கரிகாலன் கொடுத்த பட்டயப்படி களப்பாளர் கோத்திரத்தார் தமிழ்உடையார் கோத்திரத்தார், பெருவிளக்கர் கோத்திரத்தார் ஆகியோர் களத்தூரில் வாழ்ந்து வந்ததாகத் தெரிகிறது. "மாலார் களந்தைப் புகழேந்தி"— "ஐயன் களந்தைப் புகழேந்தி"—"காரார் களந்தைப் புகழேந்தி"—"திமிர் களந்தைவரு புகழேந்தி" என்னும் வாக்கியங்களை நோக்க, தமிழ் உடையார் கோத்திரத்தைச் சேர்ந்த, தொண்டை கட்டி வேளாளரான புகழேந்தியும் பிறந்தது களத்தூரே ஆகும்.

கொங்கு நாட்டில் "பெரிய களந்தை" என்னும் ஊரும், அவ்வூரில் திருவிசைப்பா பாடல் பெற்ற "ஆதித்தேச்சரம்" என்னும் சிவன் கோவிலும் உண்டு.

ஆனால், கூற்றுவநாயனார் பிறந்த களந்தை 'பெரிய களந்தை' அல்ல என்பது வெளிப்படை.

## 5. வேளாளர்

தொண்டைமண்டலம் கொண்டைகட்டி வேளாளர் குறுநிலமன்னர்களாக இருந்ததால் அவர்களுக்குப் பத்து அங்கங்கள் (தசாங்கங்கள்) உண்டு. அவை வருமாறு :—

வேளாளர் தசாங்கங்கள்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1. | பெயர் | வேளாளர் | 2. | ஆறு | கங்கை |
| 3. | மலை | மேரு | 4. | நாடு | தொண்டைநாடு |
| 5. | நகர் | காஞ்சிபுரம் | 6. | வாகனம் | ஐராவதம் (யானை)<br>உச்சைச்சிரவம் (குதிரை) |
| 7. | மாலை | செங்குவளை | 8. | கொடி | பேழி-குயில்-சிங்கம் |
| 9. | படை | கலப்பை | 10. | முரசம் | கொடை |

வேளாளருடைய அறுதொழில்

| | | |
|---|---|---|
| 1. உழவு | 2. பசுக்காத்தல் | 3. பொருளீட்டல் |
| 4. ஈதல் | 5. ஓதல் | 6. வேட்டல் |

வேளாளர் இயல்பு

(As per Rottler's Tamil and English Dictionany)

| | |
|---|---|
| 1. ஆணைவழி நிற்றல் | 2. அழிந்தோரைக் காத்தல் |
| 3. கைக்கடனாற்றல் | 4. கசிவகத்துண்மை |
| 5. ஒக்கல் போற்றல் | 6. ஓவா முயற்சி |
| 7. மன் இறைதருதல் | 8. ஒற்றுமை கோடல் |
| 9. விருந்தோம்பல் | 10. திருந்திய ஒழுக்கம் |

## 6. கூற்றுவ நாயனார் பிறப்பு வளர்ப்பு

கூற்றுவ நாயனார் களப்பாளர் கோத்திரத்தில் களந்தூரில் பிறந்தவர். ஆனால் இவருடைய தகப்பனாரும் மூதாதைகளும் களந்தூர்க் கோட்டத்தை அரசுபுரிந்த ஒரு குறுநில மன்னர் ஆவர். அதனாலேதான் உமாபதிசிவாசாரியர் இவரைக் குறுநில மன்னர் ஐவரில் ஒருவராகச் சேர்த்தி உள்ளார் :—

> " குறுநில மன்னர் ஐவர் நரசிங்க முனையர் கூற்றுவனார் -
> கழற்சிங்கர் மெய்ப் பொருள் ஐயடிகள் " —சேக்கிழார் புராணம்

களந்தூர்க் கோட்டத்தைக் கூற்றுவநாயனார் மூதாதைகள் இரண்டாம் கரிகாலன் காலம் முதற்கொண்டு பரம்பரையாக ஆண்டு வந்துள்ளார்கள்.

கூற்றுவநாயனாருடைய பெற்றோர்களுக்கு வெகுகாலம் பிள்ளைப்பேறு இன்மையால், கூற்றுவனைக் குமைத்த கோனாகிய சிவபெருமானைக் குறித்துத் தவம் கிடந்தார்கள். அவர்களுடைய தவத்தின் பயனாக நம்கூற்றுவ நாயனார் பிறந்தார். பிறந்தவுடன் பெற்றோர்கள் பிறப்பின் குறிப்பு எழுதுதல் (ஜாதகர்மம்), பெயரிடுதல் (நாமகரணம்) முதலிய கடமைகளைச் செய்து, தானதருமங்களைச் செய்தார்கள். பெற்றோர்கள் இட்டபெயர் கூற்றுவன் என்பது. கூற்றுவன் என்பது சிவனுடைய காரணப் பெயர்களில் ஒன்று. Vide—" கூற்றுவன்காண் கூற்றுவனைக் குமைத்த கோன்காண் " (அப்பர் சுவாமிகள்).

கூற்றுவநாயனார் காளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து, ஐந்து வயதில் பள்ளிக்குச் சென்று, உலகநூல் - அறிவு நூல்களைக் கற்றுப், பல கலைகளிலும் வல்லவரானார். இவர் குறுநில மன்னர் ஆனதால், அரசுரிமை உள்ளவர்கள் பழகவேண்டிய யானையேற்றம், குதிரையேற்றம், வாட்போர், மற்போர், வேற்போர் முதலிய படைப்பயிற்சிகளிலும் பயின்று அவைகளில் சிறந்து விளங்கினார்.

சிறப்பாக இவர் வேலாயுதத்தைத் தாங்கிப் போர் புரிவதில் இணையற்றவராக இருந்தார். இதனை :—

"ஆர்கொண்ட வேற்கூற்றன்" என்று சுந்தரரும்,

"கோதை நெடுவேற் களப்பாள னாகிய கூற்றுவனே"

என்று நம்பியாண்டார் நம்பிகளும் கூறுவது கொண்டு அறியலாம். வில்லுக்கு ஓரியும், வாளுக்குப் பெரும் பெயர் வழுதியும்போல், வேலுக்குக் களப்பாளனாகிய கூற்றுவ நாயனார் என்க.

## 7. கூற்றுவ நாயனார் அரசு கட்டில் ஏறியது

கூற்றுவ நாயனார் வயது வந்து, தமது பெற்றோர்களுக்குப்பின் கி. பி. 500ல் அரசுக்கட்டில் ஏறி, ஆட்சி செய்தார். இவர் ஒரு குறுநில மன்னராக வாழ்ந்த சிறப்புப்பற்றி "களந்தைக்கோன்" என்று சுந்தரரும், "ஞாலமெல்லாம் ஒரு கோலின் வைத்தான்" என்று நம்பியாண்டாரும், "களந்தை வேந்தர்" என்று உமாபதி சிவமும், "களந்தை முதல்வனார்...முடி ஒன்று மொழிய அரசர்திரு வெல்லாம் உடையர் ஆயினர்" என்று சேக்கிழாரும் கூறுவார் ஆயினர்.

இவர் அரசு செய்யும் காலத்தில் சிவநாமத்தை எப்போதும் நவின்று கொண்டு, அடியார்களை வணங்கி அமுதூட்டிச் சிவாலயங்கள் தோறும் பல திருப்பணிகள் செய்து, சிவனது திருத்தொண்டில் உறைத்து நின்றார். அதனால், இவருக்குச் சிவனருள் எளிதில் கிடைத்தது. அதனோடு நாடு காவலுக்குரிய கடமை வழுவாது, நாட்டின நிலைமை கருதி, மாற்றார் மேலுறா வண்ணம், நால்வகைப் படைகளையும் வளம்படுத்தி, மாற்றார் நடுங்கும் வண்ணம் நடந்து வந்தார். இதனை :—

"மருளுங் களிறு, பாய்புரவி, மணித்தேர், படைஞர் முதன்மாற்றார்
வெருளுங் கருவி நான்குநிறை வீரச் சேநக்கின் மேலானார்"

என்ற சேக்கிழார் திருவாக்கால் அறியலாம்.

## 8. நாட்டின் நிலைமையும் காலமும்

கூற்றுவநாயனார் பெயர் சுந்தரமூர்த்திகளால் திருத்தொண்டத் தொகையில் கூறப்பட்டிருப்பதால், சுந்தர மூர்த்திகள் காலமாகிய (கி. பி. 694 - கி. பி. 712) கி. பி. ஏழாம் நூற்றாண்டுக்கு கூற்றுவநாயனார் முற்பட்டவர் என்று தெரிகிறது. என்னெனின், முடி அரசர்களாகிய சேர - சோழ - பாண்டியர்கள் வலியற்று இருந்தது கி. பி. ஆறாம் நூற்றாண்டிலேதான். அதனை ஈண்டு விரிக்க வேண்டியதில்லை.*

---

*களப்பிரர் படை (வடுகக் கருநாடர்) எடுத்துப் பாண்டி நாட்டை அடிப்படுத்தியாண்ட செய்திகளும் - அவர்கள் தொண்டைநாட்டை வென்று அங்கு அரசாண்ட வேளாளர் - குறுநில மன்னர்களைத் துரத்திய செய்திகளும் - பல்லவர்கள் கிளம்பிப் போர் செய்து ஆட்சி புரிந்த செய்திகளும் - பாண்டி நாட்டினின்றும் களப்பிரரைத்

ஆதலால், முதலாம் நந்திவர்மனும், பாண்டி நாட்டில் அரசு புரிந்த மூர்த்தி நாயனாரும், சோழநாட்டில் அரசு செய்த புகழ்ச் சோழர் - திருவாரூர்ச் சோழரும், படைவலியும் அருள் வலியும் மிக்க களந்தூர் வேந்தர் கூற்றுவநாயனாருடன் நட்புரிமை பூண்டு, ஒற்றுமையாக அரசு புரிந்தார்கள். அக்கூட்டு ஆட்சியில் கூற்றுவ நாயனாரே தலைமை வகித்து ஆட்சிபுரிந்து வந்தார். அதனாலன்றே நம்பியாண்டார் நம்பிகள் "ஓதம் தழுவிய ஞாலம் எல்லாம் ஒரு கோலின் வைத்தான், கோதை நெடு வேற் களப்பாள னாகிய கூற்றுவனே" என்றனர்.

கூற்றுவநாயனார் அருள்வலிகொண்டு களப்பிரரைத் தொண்டை மண்டலத்தை விட்டு, விரட்டிவிட்ட உடனே, வடக்கே வேங்கடமும், ஏனைய மூன்று பக்கங்களிலும் கடலால் சூழப்பட்ட தமிழ்நாடு முழுதும் ஒரு குடைக்கீழ்க் கொண்டு வந்து முடியுடை அரசர்களுடைய திருவெல்லாம் எய்தியவராக ஆனார். இதனை,

" மன்றன் மாலை மிலைந்தவர்தம் வளநா டெல்லாம் கவர்ந்துமுடி
ஒன்று மொழிய அரசர்திரு வெல்லாம் உடையார் ஆயினார் "

என்று சேக்கிழார் கூறுவதனைக் கொண்டு அறியலாம். ஆதலால், கூற்றுவநாயனார் முடியுடை அரசர்கள் போலத் தாம் முடி சூட்டிக் கொள்ளக் கருதித், தில்லை சென்று, தில்லைவாழ் அந்தணர்களை முடிசூட்டும்படி கேட்டார். அவர்கள, " செம்பியர்தம் தொல்லை நீடு குலமுதலோர்க்கு அன்றிச் சூட்டோம் முடி " என்று கூறித், தம்முள் ஒரு குடும்பத்தை மாத்திரம் தில்லையில் இருந்து முடியைக் காப்பாற்றும்படி செய்து, ஏனைய எல்லோரும் மலைநாடாகிய சேர நாட்டுக்குச் சென்று, அந்நாட்டு அரசன் ஆதரவில் இருந்தார்கள் (Vide:—4-5 கூற்று - புராணம்). இதனை அறிந்து, நாயனார் தில்லைக் கூத்தப் பெருமானிடம் முறையிட்டுத் தமக்கு முடிக்குப் பதிலாகப் பெருமான் மலர்ப்பாதமே முடியாக அளிக்கவேண்டுமெனப் பிரார்த்தித்து வேண்டினார். அன்று இரவு கனவில் கடவுள் பாதமலர் அளிக்க, அருளால் அவை தாங்கி உலக மெல்லாம் தனிப்புரந்து வந்தார். இதனைக் (கூற்றுவ நாயனார் புராணம் 6) பாட்டால் அறியலாம்.

அப்படி ஆட்சிசெய்யும் காலத்தில், தமிழ்நாட்டுக் கோவில்கள் தோறும் சென்று, பெரும் பூசனை இயற்றித், திருப்பணிகள் பல செய்து, பல ஆண்டுகள் அமைதிபெற நாட்டை அரசுபுரிந்து, இறுதியில் உமைபவள் கணவன் திருவடி அடைந்தார்.

" அம்பொ னீடு மம்பலத்துள் ஆரா வமுதத் திருநடஞ்செய்
தம்பி ரானார் புவியின்மகிழ் கோயில் எல்லாம் தனித்தனியே
இம்பர் ஞாலம் களிகூர எய்தும் பெரும்பூ சனையியற்றி
உம்பர் மகிழ அரசளித்தே உமைபாள் கணவன் அடிசேர்ந்தார்."

என்ற சேக்கிழார் திருவாக்கால் அறியலாம். இப்படி அவர் முத்தி எய்தியது கி. பி. 575 என்று ஆராய்ச்சியாளர் கருதுகின்றனர். கி. பி. 575ல் நாயனார் முத்தி அடைந்தபின், தொண்டைநாட்டில் அங்கங்கே தலைமறைவாக இருந்த களப்பிரர் எல்லாம் மறுபடியும் படைதிரட்டிப் பல்லவரோடு போர் தொடுத்தார்கள். கி. பி.

---

நாத்தி மூர்த்தி நாயனார் அரசாண்ட செய்திகளும் - பிறவும் நாட்டு நடப்புச் சரிதங்களாலும், கல்வெட்டுக்களாலும், பெரிய புராணம் திருவிளையாடற் புராணம் முதலியவற்றாலும் இனிது விளங்கும். இக்குத் திருமந்திரமணி அவர்கள் முறையே தொண்டைநாடு சோழநாடு பாண்டிநாடு என்ற இவற்றின் அந்நாட் சரிதங்களை விரித்து எழுதியிருக்கின்றார்.—பதிப்பாசிரியர்.

575 முதல் கி. பி. 600 வரை அரசாண்ட பல்லவ சிம்ம விஷ்ணு என்பவன் களப்பிரரை முறியடித்த பெருவீரன் என்று வேலூர்ப்பாளையம் பட்டயம் கூறுகிறது (Vide S. I. I. vol. I. page 152). சிம்ம விஷ்ணுவின் பேரனு முதலாம் நரசிம்மவர்மன் (கி. பி. 625—650) களப்பிரரோடு போரிட்டான் என்று தெரிகிறது (S. I. I. vol. II page 356).

கூற்றுவ நாயனார் காலத்தில் அடங்கி, மறைந்து, இருந்த களப்பிரர், அவர் காலத்துக்குப் பின் ஒரு நூற்றாண்டு வரை பல்லவ அரசர்களுக்குத் தொல்லை விளைத்து வந்ததாகப் பல்லவர் சரித்திரம் கூறுகிறது.

கி. பி. 7-ம் நூற்றாண்டில் முதலாம் நரசிம்மவர்மன் எஞ்சி நின்ற களப்பிரரை எல்லாம் விரட்டி அடிக்க, அவர்கள் வடக்கே ஆந்திரநாடு சென்றார்கள். அங்கே அப்போது அரசாண்டவன் மேலைச்சளுக்கிய அரசனான முதலாம் விக்கிரமாதித்தன் (கி. பி. 642—கி. பி. 680) ஆவான். அவனும் அவன் மகன் விநயாதித்தனும் (கி. பி. 680—686) களப்பிரரோடு பொருது வெற்றி பெற்றார்கள். கி. பி. 3-ம் நூற்றாண்டில் ஏற்பட்ட களப்பிரர் தொல்லை கி. பி. 7-ம் நூற்றாண்டோடு முடிவுற்றது.

கூற்றுவ நாயனார் வேளாளராக இருந்தும் உமாபதிசிவம் சேக்கிழார் நாயனார் புராணத்தில் இவரை " வேளாளர் பதின்மூவரில் " சேர்க்கவில்லை; " குறுநில மன்னவர் ஐவர் " என்பதில் சேர்த்துள்ளார். குறுநிலமன்னர் ஐவரில் மூவர் பல்லவர்; ஒருவர் மலை மன்னர்; ஒருவர் வேளாளர் எனத் தெரிகிறது.

## 9. களப்பிரர் வேறு – களப்பாளர் வேறு

சேக்கிழார் கூற்றுவநாயனார் புராணத்தில் நாயனாரை "களந்தை முதல்வனார்" என்றும், " அரசர் திருவெல்லாம் உடையர் ஆயினர் " என்றும் கூறினரே யொழிய, அவர் வேளாளர் என்றாவது, வேறு வகுப்பைச் சேர்ந்தவர் என்றாவது கூறவில்லை. களப்பாளர் கோத்திரத்தார் என்று நம்பியாண்டார் நம்பிகள் சொன்னதைக் கூடச்சொல்லாமல் விட்டுவிட்டார். அதனால், சில ஆராய்ச்சிப் புலவர்கள் கூற்றுவ நாயனாரைக் களப்பிர அரசன் என்று வாய் கூசாது சொல்லியும் எழுதியும் வருகிறார்கள். இதனைக் குறித்துத் திருவாளர் T. V. பண்டாரத்தார் " பாண்டியர் வரலாறு " பக்கம் 33ல் கூறுவது வருமாறு :—" கி. பி. மூன்றாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் பாண்டியரில் வலிகுன்றிய அரசன் ஆட்சிபுரிந்தபோது, களப்பிர அரசன் பாண்டி நாட்டின்மீது படைகொண்டு சென்று, அதனைக் கவர்ந்து அரசாண்டான். ........சங்க நூல்களில் களப்பிரர் என்ற பெயர் காணப்படாமையானும், வராகமிரர் தென்னாட்டவரின் வரிசையில் களப்பிரரைக் கூறாமையானும், அன்னோர் பிராகிருதம், பாளி, ஆகியவற்றைத் தமக்குரிய மொழிகளாகக் கொண்டு ஆதரித்துள்ளமையானும், அம்மரபினர் தமிழர் அல்லர் என்பதும், வடபுலத்தினின்றும் போந்த ஏதிலர் ஆவர் என்பதும் நன்கு தெளியப்படும். எனவே, களப்பிரர் தென்னிந்தியர் என்னும் சில ஆராய்ச்சியாளரின் கொள்கை[1] பொருந்தாமை காண்க. அன்றியும், தமிழ்நாட்டுக் குறுநிலமன்னர் குடியினராகிய முத்தரையர் என்போரை களப்பிரர் என்று கூறுவதும்[2] சிறிதும் ஏற்புடைத்தன்று.

---

[1]பல்லவர் வரலாறு பக்கம் 34. by பண்டிதர் இராசமாணிக்கம்.

[2]பல்லவர் வரலாறு by பண்டிதர் இராசமாணிக்கம் - பக்கம் 300.

" Epigraphy and Tamil Literaure by pandit M. Ragava Iyyangar, quoted by K. A. Neelakanta Sastriar in his "Pandyan Kingdom " page 49.

களப்பாளர் என்ற சோழநாட்டு ஊர் ஒன்றில் முற்காலத்தில் வாழ்ந்துகொண்டிருந்த அரசியல் தலைவன் ஒருவன் களப்பாளன் என்று சிறப்பித்து வழங்கப்பட்டமையால், அவன் வழியினர் களப்பாளர் எனவும், களப்பாளராயர் எனவும் குடிப்பெயர் பெற்று பெருமையோடு வாழ்வார் ஆயினர். எனவே, தமிழராகிய களப்பாளரும் ஏதிலராகிய களப்பிரரும் ஒருவரே ஆம் என்னும் முடிவு எவ்வாற்றானும் ஒத்துக்கொள்ளத் தக்கது அன்று.

## 10. சாசனத் தமிழ்க்கவி சரிதம்-பக்கம் 64—65

(by பண்டிதர் M. இராகவ அய்யங்கார்)

பண்டிதர் அய்யங்கார் கூறுவதாவது:—“ சேந்தன் றவான முதலியார் என்பவர் புலியூர்க் கோட்டத்து, போந்நாட்டு, சேந்தன்றம் என்ற நத்தத்து, களப்பாள கோத்திரத்தைச் சேர்ந்தவர் என்றும், கூற்றுவ நாயநாரின் மரபைச் சேர்ந்தவர் என்றும், நடுநாட்டுப் பெண்ணைகடத்து—அச்சுதன் களப்பாளர் (மெய்கண்டாரின் தந்தை) என்று வரும் களப்பாள கோத்திரத்தைச் சேர்ந்தவர் என்றும், எல்லோரும் தொண்டைமண்டல வேளாண் முதலிமார் மரபைச் சேர்ந்தவர் என்றும் கூறப்பட்டுள்ளது.

திருப்புகலூர் சிவாலயத்துள் முதலாம் குலோத்துங்கனுடைய 49 ம் ஆட்சிக் கல்வெட்டு ஒன்றில் :— “ களப்பாளர் என்பார் பண்டைக் காலம் தொட்டே தமிழ் நாட்டில் சிற்றரசு உரிமை பெற்ற தலைவர்களாக விளங்கியவர் என்பது நூல்களாலும் சாசனங்களாலும் அறியக் கிடக்கின்றது.”

மேற்படி புத்தகம் பக்கம் 143ல் —“ அரிதாதன் என்றேது நாமக் களப்பாளன் ” என்று இருசமய விளக்கம் என்னும் நூலில் தம்மைக் கூறுதலால், அவர் களப்பாளர் குடியில் உதித்த வேளாண் மரபினர் என்பது தெரியலாம் ” என்று கூறுகிறார்.

இன்னும், தொண்டைநாட்டுக் ஈக்காட்டுக் கோட்டத்து, திருஎவ்வளூர் நாட்டு நாகலாபுரத்திலும் களப்பாள கோத்திரத்தை உடைய தொண்டைமண்டல வேளாண் முதலிமார்கள் இருந்ததாக அக்கோவில் கல்வெட்டுத் தெரிவிக்கிறது. “ அரிதாதருடைய அண்ணன் வடமலை முதலியார் என்பவர் கிருஷ்ணதேவராயர் காலத்தில் அமைச்சராக இருந்தார்” என்று பக்கம் 150 - 151-ல் கூறுகிறார். இவ்வாறு பண்டிதர் M. இராகவையங்கார் கூறியிருக்க, திருவாளர் நீலகண்டசாஸ்திரியார் வேறு விதமாகப் பொருள் கொண்டு களப்பாளரை களப்பிரர் என்று அய்யங்கார் கூறுவதாக தம்முடைய ‘ பாண்டியர் வரலாறு ’ பக்கம் 49-ல் கூறியுள்ளார். சாஸ்திரியாரை ஒட்டிப் பண்டிதர் இராசமாணிக்கமும் வழுக்கினர். இதுவரை ஆராய்ந்தவற்றால் களப்பிரர் வேறு - களப்பாளர் வேறு என்பது கண்டாம்.

## 11. களப்பிரர் பாண்டிநாட்டைக் கைப்பற்றிய காலம்

பண்டிதர் இராசமாணிக்கம் பிள்ளை எழுதிய பல்லவர் வரலாறு பக்கம் 36-ல் “களப்பிரர் ஏறக்குறைய கி. பி. 250-ல் பாண்டிநாட்டைக் கைப்பற்றினர்” என்றும், பண்டிதர் T. V. பண்டாரத்தார் எழுதிய ‘ பாண்டியர் வரலாறு ” பக்கம் 33-ல் “ கி. பி. மூன்றும் நூற்றுண்டில் களப்பிரர் பாண்டிநாட்டைக் கைப்பற்றினர் ” என்றும் கூறப்பட்டுள்ளன.

அவை பொருந்துவனவாக இல்லை. என்னெனின், கி. பி. மூன்றும் நூற்றாண்டில் அதாவது, கி. பி. 250 முதல் கி. பி. 282 வரை மாணிக்கவாசகர் வாழ்ந்தார் என்று மறைமலை அடிகள் ஆராய்ந்து கூறியுள்ளார். அதனையே, திருவாளர் கா. சுப்பிரமணிய பிள்ளை அவர்களும், திருவாங்கூர் பொன்னம்பலம் பிள்ளை அவர்களும், ஒப்புக்கொண்டுள்ளார்கள். மாணிக்கவாசகர் காலத்தில் அரசாண்ட அரசன் அரிமர்த்தன பாண்டியன். அவன் பாண்டி நாட்டை கி. பி. 265 முதல் கி. பி. 310 வரை அரசாண்டான். அரிமர்த்தனன் காலத்தில் களப்பிரர் படைஎடுப்பு இல்லை. என்பது புராணங்களால் அறியக் கிடக்கின்றது. ஆனால், களப்பிரர் - பல்லவர் படையெடுப்பினால் சோழநாடு அந்நியர் ஆட்சிக்கு உள்பட்டதைக் கருதி, நாட்டைப் பாதுகாக்க, அவன் நால்வகைப் படைகளைப் பலப்படுத்த எண்ணியே மாணிக்க வாசகரை குதிரைகள் வாங்கப் பெருந்துறைக்கு அனுப்பினான். இது நம்பி திருவிளையாடல், பரஞ்சோதி முனிவர் திருவிளையாடல், வாதவூரர் புராணம், பெருந்துறைப் புராணம் முதலியவற்றால் உறுதி பெறுகிறது. அரிமர்த்தனன் இறந்தபின் அவன் மகன் இரண்டாம் வரகுணன் (கி. பி. 310–340 காலத்தில்தான் அதாவது நான்காம் நூற்றாண்டின் மத்தியில் தான் களப்பிர அரசன் பாண்டிநாட்டைக் கைப்பற்றி இருக்கவேண்டும். திருவருட்செயலால் மாணிக்கவாசகரால் குதிரைகள் வாங்கப் படாமல் போய்விடவே, அரிமர்த்தனனே படைவலி குன்றியவனாக இருந்தான். சிறிது எஞ்சியிருந்த குதிரைகளும் இறந்து போயின. ஆகையால், இரண்டாம் வரகுணன் பட்டத்துக்கு வந்தபோது படைவலியே இல்லாமல் இருந்தது. களப்பிரர் இது செய்தியை உளவறிந்து, சோழ நாட்டிலிருந்து பாண்டி நாட்டின்மீன் படை எடுத்து வந்து, போரில் இரண்டாம் வரகுணனைக் கொன்று, நாட்டை வெகு எளிதில் கைப்பற்றிக் கொண்டார்கள்.

ஆதலால், களப்பிரர் பாண்டிநாட்டைக் கைப்பற்றியது. கி. பி. நான்காம் நூற்றாண்டின் நடுவில் எனக் கொள்க.

முற்றும்



உ

சிவமயம்

ஒன்பதாவது

# கறைக்கண்டன் சருக்கம்

" கறைக்கண்டன் கழலடியே காப்புக்கொண் டிருந்த
கணம்புல்ல நம்பிக்குங் காரிக்கு மடியேன்
நிறைக்கொண்ட சிந்தையா னெல்வேலி வென்ற
நின்றசீர் நெடுமாற னடியார்க்கு மடியேன்
துறைக்கொண்ட செம்பவள மிருளகற்றுஞ் சோதித்
தொன்மயிலை வாயிலா னடியார்க்கு மடியேன்
அறைக்கொண்ட வேனம்பி முனையடுவார்க் கடியேன்
ஆரூர னாரூரி லம்மானுக் காளே "

—திருத்தொண்டத் தொகை (8)

திருச்சிற்றம்பலம்

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# 48. கணம்புல்ல நாயனார் புராணம்

தொகை

" கறைக்கண்டன் கழலடியே காப்புக்கொண் டிருந்த
கணம்புல்ல நம்பிக்கும் (காரிக்கும்) அடியேன் "

—திருத்தொண்டத் தொகை (8)

வகை

" நன்னக ராய விருக்குவே ளூர்தனி னல்குரவாய்ப்
பொன்னக ராயநற் றில்லை புகுந்து புலீச்சரத்து
மன்னவ ராய வரற்குநற் புல்லால் விளக்கெரித்தான்
கன்னவி றோளெந்தை தந்தை பிரானெங் கணம்புல்லனே "

—திருத்தொண்டர் திருவந்தாதி (58)

விரி

4055. திருக்கிளர்சீர் மாடங்க டிருந்துபெருங் குடிநெருங்கிப்
பெருக்குவட வெள்ளாற்றுத் தென்கரைப்பாற் பிறங்குபொழில்
வருக்கைநெடுஞ் சுளைபொழிதேன் மடுநிறைத்து வயல்விளைக்கும்
இருக்குவே ளூரென்ப திவ்வுலகில் விளங்குபதி. க

புராணம் : இனி, ஆசிரியர், நிறுத்த முறையானே, ஒன்பதாவது கறைக் கண்டன் சருக்கத்திற் கூறப்படும் அடியார்களின் வரலாறுகள் கூறப்புகுந்து, அவற்றுள், முதலாவது கணம்புல்ல நாயனாரது புராணம் சொல்லத் தொடங்குகிறார்.

தொகை : விடத்தினை உடைய கண்டராகிய இறைவரது வீரக் கழலணிந்த திருவடிகளையே தமக்குக் காவலாகக் கொண்டிருந்த கணம்புல்ல நாயனாராகிய பெரியாருக்கும் (காரி நாயனாருக்கும்) நான் அடியேன்.

கறை - விடம் ; நஞ்சு ; காப்பு - காவல் ; " தண்ணின்ற தாளைத் தலைக் காவல் முன்வைத்து " (திருமந்). இஃது இந்நாயனாரது அடிமைத் திறத்தின் உறைப்புடைய பண்பு குறித்தது; அடியே - ஏகாரம் பிரிநிலை; நம்பி-ஆடவரிற் சிறந்தோன்; ஆண்பாற்சிறப்புப் பெயர் ; பெயரும் பண்பும் தொகை நூல் உணர்த்திற்று.

வகை : நன்னகராய...நல்குரவாய்-தமது பதியாகிய நல்ல நகராகிய இருக்குவேளூரில் பணிசெய்து வாழ்ந்த நாளில் நல்குரவு வரப்பெற்று ; பொன்னகராய... எரித்தான் - பொற்பதி எனப்படும் நல்ல தில்லை நகரில் வந்து அங்குத் திருப்புலீச்சரத் திருக்கோயிலினுள் வீற்றிருந்தருளும் அரசராகிய இறைவருக்கு நல்ல கணம்

புல்லினால் திருவிளக்கு எரித்தார் ; கல் நவில்...கணம்புல்லனே - கல்போன்ற வலிய தோள்களையுடைய எமது தாதையும் தாதையின் முதல்வனுமாகிய கணம்புல்லர் என்ற பெரியோரே யாவர்.

எந்தை தந்தைபிரான் - எமது தாதையும் அவரது தாதையும் மூதாதைகளும் வழி வழி அடிமை செய்ய அவர்க்கெல்லாம் பிரானுவார். அடியார்பால் வைத்த பேரன்பு குறித்தது. ஆதி சைவர் சிவனுக்கே யாளாவார்; அற்றாக, நம்பிகள் திருத்தொண்டத் தொகையினுள் அடியார்களெல்லாருக்கும் அவரடியார்க்கும் தாம் ஆள் என்றருளினர். அக்கருத்தினையே தொடர்ந்த ஆதி சைவராகிய நம்பி யாண்டாரும் இவ்வாறு அருளினர். எல்லாக் குலங்கட்கும் மேம்பட்ட இச் சிவக்குலத்தவரே அடியார்க்கு அடியவர் என்றால் ஏனையவரும் அவ்வண்ணமே ஆளாவார் என்பதற்குத் தடையில்லை என்பதாம். திருத்தொண்டத் தொகையினை, நம்பிகளை இங்கு அவதரிக்கச் செய்து அவர் மூலம் ஓதுவித்த திருவருட் குறிப்பு மிது போலும். "தீதிலாத் திருத் தொண்டத்தொகை தரப் போதுவார்." பொன்னகர் - பொன்னம்பலம்.

எந்தை தந்தைபிரான் - மூதாதையர்களை எல்லாம் குறிக்க இவ்வாறு கூறுதல் மரபு. "என்றனது சென்றுநிலை யெந்தைதன தந்தையமரின்ப நகர்தான்" (பிள் - சாதாரி - தேவூர் - 7) ; "எம்பிரா னெந்தை தந்தை தந்தையெங் கூட்ட மெல்லாந், தம்பிரா னீரே யென்று வழிவழிச் சார்ந்து வாழும், இம்பரின் மிக்க வாழ்க்கை" (3546) ; "கொற்றத் திறலெந்தை தந்தைதன் றந்தை யெங்கூட்டமெல்லாந், தெற்றச் சடையாய் நினதடியேம்" (திருத்தொண்டர் திருவந்தாதி 35) ; கல்நவில் - நவில் உவமவுருபு. "கன்னவில் தோட் சிறுத்தொண்டன்" (பிள் - தேவா). ஊரும் பெயரும் வரலாறும் பண்பும் வகை நூல் வகுத்தது.

விரி : 4055. (இ - ள்) திருக்கிளர்...நெருங்கி - செல்வங்கள் மிகும் சிறப்பினையுடைய மாடங்களில் எங்கும் திருத்த முடைய பெருங்குடிகள் நெருங்கி ; பெருக்கு...கரைப்பால் - வளம் பெருக்கும் வட வெள்ளாற்றின் தென் கரையில் ; பிறங்கு பொழில்...விளைக்கும் - விளக்க முடைய சோலைகளில் உள்ள பலாப்பழங்களின் நீண்ட சுளைகளினின்றும் பொழியப்பட்ட தேன், மடுவினை நிறைத்தலால் வயல்களை விளையச் செய்யும் ; இருக்குவேளூர்...பதி - இருக்குவேளூர் என்ற பெயருடையது இவ்வுலகத்தில் விளங்கும் பதியாகும்.

(வி - ரை) பெருங்குடிகள் நெருங்கி - பெருங்குடிகள் நெருங்கி யிருத்தல் நகரச்சிறப்பு ; பெருக்கு - வளம் பெருக்கும் நீர்ப்பெருக்கையுடைய.

வடவெள்ளாறு - சேலம், தென் ஆற்காடுச் சில்லாக்களுக்கும், தஞ்சைச் சில்லாவுக்கும் இடையில் சோழ நாட்டின் வடக்கெல்லையாய் ஓடிப் பறங்கிப் பேட்டையருகு கடலில் விழும் ஆறு.

தென் வெள்ளாறு வேறு - அது மதுரை சில்லாவுக்கும் தஞ்சாவூர்ச் சில்லா (சோழநாடு)வுக்கும் இடையில் சோழநாட்டின் தெற்கு எல்லையாக ஓடி மீமிசலின் அருகில் கடலில் விழுவது.

வருக்கை நெடுஞ் சுளை - பலாவின் நீண்ட சுளைகள். சிலவகைப் பலாமரங்களின் பழம் நிலத்துக்குள் வேரில் பழுத்து நிலம் வெடித்துத் தேன் மேலே நிலத்தில் ஊறி வரும் இயல்புடையன. இவை வேர்ப்பலா எனப்படும். மடு - நீர் தங்கும் குழி.

இருக்குவேளூர் - இப்போது பேளூர் (Belur) என வழங்குவது. சேலம் விருத்தாசலம் கிளை இருப்புப்பாதையில் ஆற்றூர் நிலையத்தினின்றும் தெற்கில் மட்சாலை வழி நான்கு நாழிகை யளவில் அடையத்தக்கதாய்ப் பச்சை மலையின்

வடசாரலில் உள்ளது; கையில் விளக்கேந்தியபடி நாயனாரது பழைய காலத்துத் திருவுருவம் கொடி மரத்தருகில் உள்ளது. நாயனார் வறுமையினால் இங்கு நின்றும் திருத்தில்லை சென்று திருப்புலீச்சரத்தில் பேறு பெற்றனாராதலின் அவரது பெருமை இங்குக் கொண்டாடப்பெறாது மறக்கப்பட்டுள்ளது. இப்பதியினுக்குத் தலபுராணம் ஒன்று உண்டு. இப்பதியினருகில் மலைச்சாரலில் கணம்புல் மிகுதியுமுண்டு. இந் நாயனார் இங்கு நின்றும் நீங்குமுன்னும் வறுமை வந்தபோது புல்லரிந்து விற்கும் தொழில் பூண்டிருந்தார் என்பது கருதப்படும். என்பது - எனப்படுவது; விளங்குதல் - பெருமையால் மேம்படுதல்.

4056. அப்பதியிற் குடிமுதல்வர்க் கதிபரா யளவிறந்த
எப்பொருளு முடிவறியா வெய்துபெருஞ் செல்வத்தார்
ஒப்பில்பெருங் குணத்தினு லுலகின்மேம் படநிகழ்ந்தார்
"மெய்ப்பொருளா வனவீசர் கழ"லென்னும் விருப்புடையார். உ

(இ - ள்) அப்பதியில்...அதிபராய் - அந்தப்பதியில் வாழும் குடித்தலைவர்களுக்கெல்லாம் தலைவராய்; அளவிறந்த...செல்வத்தார் - அளவில்லாத எல்லாப் பொருளும் இவ்வளவின என்று எல்லைகாண முடியாதபடி பொருந்திய பெருஞ் செல்வத்தை யுடையவர்; ஒப்பில்..நிகழ்ந்தார் - ஒப்பில்லாத பெருங் குணத்தினாலே உலகத்தில் மேன்மையுடன் வாழ்ந்தனர்; மெய்...விருப்புடையார் உண்மைப் பொருளாவன இறைவரது திருவடிகளேயாம் என்னும் பேரன்பினை உடையவர்.

(வி - ரை) குடி முதல்வர்க்கு அதிபர் - குடிகள் பலவாக. அவை ஒவ்வொன்றுக்கும் தலைவர் ஒவ்வொருவராக, அத்தலைவர்க்கெல்லாம் இவர் அதிபர் என்பது.

அளவிறந்த எப்பொருளும் முடிவறியா - அளவிறந்த எப்பொருளும் என்பது பொருள்களின் வகைகளையும், முடிவறியா என்பது அவ்வவற்றின் தொகைகளையும் குறித்தன; எப்பொருளும் - உம்மை முற்றும்மை; பொருள் - பொருட்செல்வங்களின் வகை; மக்களுக்கு இன்றியமையாது வேண்டுவனவாகிய பொருள்கள் எல்லாம்; மனை, வயல், நெய், மணி முதலாயின பெருங்குணம் - உலகியல் பற்றிய நற்குணங்கள்.

மெய்ப்பொருளாவன - அழியாத் தன்மையினவாய் அத்தன்மையைப் பயப்பிப்பனவாய் உள்ள தன்மைகள் மெய்ந்தன்மை எனப்பட்டது. "எப்பொருளெத்தன்மைத் தாயினு மப்பொருள், மெய்ப்பொருள் காண்ப தறிவு" (குறள்); தமதுடையனவாகிய ஏனைய வெல்லாம் பொருள் அல்ல, இறைவர் கழலே பொருளாவன என்பது; அப்பெருஞ் செல்வமெல்லாம் இறைவர்பால் ஆக்கின அளவே பொருளெனப்படும்; அதன் பொருட்டே தரப்பட்டன என்ற உணர்வு. மேல் வரும் பாட்டுப் பார்க்க.

நிகழ்ந்தார் - விருப்புடையார் - என்று முடிக்க. பெயர்ப் பயனிலை.

4057. "தாவாத பெருஞ்செல்வந் தலைநின்ற பயனிது"வென்
றோவாத வொளிவிளக்குச் சிவன்கோயி லுள்ளெரித்து
நாவாரப் பரவுவார் நல்குரவு வந்தெய்தத்
தேவாதி தேவர்பிரான் றிருத்தில்லை சென்றடைந்தார். ௩

(இ - ள்) தாவாத...என்று - கெடாத பெருஞ்செல்வங்களாற் பெறுஞ் சிறந்த பயன் இதுவேயாம் என்று துணிந்து; ஓவாத...பரவுவார் - நீங்காத ஒளி தரும் திரு

விளக்குக்களைச் சிவபெருமான் திருக்கோயிலினுள்ளே எரித்து நாவாரத் துதிப்பாராகிய இந்நாயனார் ; நல்குரவு...அடைந்தார் - வறுமை வந்து அடையவே, (வறுமையுடன் ஈண்டிருத்தல் தகாதென்று) தேவர்களுக்கெல்லாம் ஆதிதேவனாராகிய இறைவர் எழுந்தருளியுள்ள திருத்தில்லையினைப்போய் அடைந்தனர்.

(வி - ரை) தாவாத - கெடாத ; தலைநிற்றல் - சிறத்தல் ; பயன் இது - செல்வம் பெற்றபயன் இதுவேயாம் என்பது : பிரிநிலை ஏகாரம் தொக்கது. "படைத்த நிதிப்பயன் கொள்வார்" (4117), "வந்த செல்வத்தின் வளத்தினால் வரும் பயன் கொள்வார்" (504) என்பன முதலியவை காண்க.

ஓவாத - நீங்காத ; இடையறாத.

நாவார - ஆர்தல் - நிரம்புதல்.

பரவுவார் - வினைப்பெயர் ; பரவுவார் - அடைந்தார் என்று கூட்டுக.

நல்குரவு...அடைந்தார் - "செல்வன் கழலேத்துஞ் செல்வஞ் செல்வமே" (தேவா) என்றபடி நல்குரவு எல்லாவற்றையும் நீக்கும் பெருஞ்செல்வ முடையராகிய இறைவர் வெளிப்பட வீற்றிருந்தருளும் இடமாதலின் தில்லைக்குச் சென்றடைந்தார் என்பது குறிப்பு.

4058. தில்லைநகர் மணிமன்று ளாடுகின்ற சேவடிகள்
அல்கியவன் புடனிறைஞ்சி யமர்கின்றார் புரமெரித்த
வில்லியார் திருப்புலீச் சரத்தின்கண் விளக்கெரிக்க
இல்லிடையுள் ளனமாறி யெரித்துவரு மந்நாளில், ௪

4059. ஆயசெயன் மாண்டதற்பி னயலவர்பா லிரப்பஞ்சிக்
காயமுயற் சியிலரிந்த கணம்புல்லுக் கொடுவந்து
மேயவிலைக் குக்கொடுத்து விலைப்பொருளா னெய்மாறித்
தூயதிரு விளக்கெரித்தார் துளக்கறுமெய்த் தொண்டனார். ௫

4058. (இ - ள்) தில்லைநகர்...அமர்கின்றார் - திருத்தில்லை நகரத்தில் அழகிய திருவம்பலத்திலே ஆடுகின்ற திருவடிகளினிடத்தே தங்கிய அன்போடும் வணங்கி அங்கு விரும்பியிருக்கின்றாராகிய நாயனார் ; புரமெரித்த...எரிக்க - முப்புரங்களையும் எரித்த வில்லை ஏந்திய இறைவரது திருப்புலீச்சரம் என்னும் திருக்கோயிலில் விளக்கு எரிக்கும் திருப்பணி செய்வதற்கு ; இல்லிடை...அந்நாளில் - தமது மனையில் உள்ளனவாகிய சங்கமப் பொருள்களை விற்று எரித்து வருகின்ற அந்நாளில், ௪

4059. (இ - ள்) ஆயசெயல் மாண்டதற்பின் - அவ்வாறாகிய அந்தச் செய்கையும் (மனையில் விற்றற்குப் பொருளின்மையால்) நீங்கிய பின்பு ; அயலவர்பால் இரப்பு அஞ்சி - பிறர்பால் இரத்தற்றொழிலை அஞ்சி ; காய முயற்சியில்...நெய்மாறி- தமது உடம்பின் முயற்சியாலே அரிந்த கணம்புல்லினை அரிந்தெடுத்துக்கொண்டு வந்து கிடைத்த விலைக்குக் கொடுத்து அவ்வாறு பெற்ற விலைப் பொருளினாலே நெய்வாங்கி ; தூய...தொண்டனார் - அசைவில்லாத மெய்ம்மைத் தொண்டுபுரிவாராகிய நாயனார் தூய்மையாகிய திருவிளக்கினை எரித்தனர். ௫

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபுகொண்டன.

4056. (வி - ரை) அல்கிய - தங்கிய ; அல்கல் - தங்குதல் ; சிவன்பணிசெய்வோர் வறுமை வந்தபோது அன்பு குறைந்து வெறுப்பும் அடைவது உலகியல்பு

பெருஞ் செல்வராயிருந்த இந் நாயனார்க்கு வறுமை வந்து வேற்றிடம் புக நேர்ந்த போது அன்பு பெருகிற்று; இஃது உலகியலின் மேம்பட்ட இறைபாலின் அன்பு நிலை.

திருப்புலீச்சரம் - "திருப்புலீச்சரத்து முன்னர்" (396) என்றதும், ஆண்டுரைத்த தல வரலாறும் பார்க்க. (I பக்கம் சஅ௨); இறைவர் கோயிலில் விளக்கெரிக்கும் பணி செய்யும் நியமமுடைய இந்நாயனார் அந்நியமமுடித்தற்குத் தில்லையம் பதியில் உள்ள கோயில்கள் பலவற்றுள்ளும் திருப்புலீச்சரத் திருக்கோயிலைத் தேர்ந்து எடுத்து அங்கு அப்பணியினைச் செய்தனர் என்க.

இல்லிடை உள்ளன மாறி - வறுமையால் தமது ஊரினின்றும் போதுவார் அங்கு எஞ்சிய சில பொருள்களைத் தம் சீவனத்துக்காக உடன் கொண்டு போந்தனராக, அப் பொருள்களையும் விற்று; மாறி - விற்று; பண்டமாற்றாக விற்றலுமாம். இல்லிடை உள்ளன - முரண் அணிச்சுவைபடக் கூறியது கவிநயம்; இன்மையின் கண்ணும் உள்ள சிலவற்றை என்பதுமாம். வறுமையிற் செம்மை.

எரித்து - விளக்கெரித்து.　4

4059. (வி-ரை) ஆயசெயல் - இல்லிடை உள்ளன மாறி எரிக்கும் செயல்; ஆய் - முன்கூறிய அவ்வாறு ஆகிய.

மாண்டதற்பின் - செயல்மாறுதலாவது செய்ய வியலாதொழிதல்; மேலும் மாறுதற்குரிய பொருள்கள் இல்லாமையால் அச் செயலும் ஒழிந்தது என்க.

அயலவர்பால் இரப்பு அஞ்சி - திருக்குறள் "இரவச்சம்" என்ற அதிகாரத்துட் கூறியவை ஈண்டுக் கருதற்பாலன; "ஆவிற்கு நீரென் றிரப்பினு நாவிற், கிரவி னிளிவந்த தில்" என்பது முதலியவை காண்க; "இதனால் அறனும் முயன்று செய்வதல்லது இரந்து செய்யற்க என்பது கூறப்பட்ட" தென்பது பரிமேலழகருரை; இதனால் எந்தம் பெருமக்கள் தமது முயற்சியான் வரும் பொருளை உட்கொண்ட மேம்பாடு காணத்தக்கது; கலிய நாயனார் வரலாறும், பிறவும் காண்க. இனி, இப் பெரியோர்கள், செய்த இச் செயல்களும், மேற்கொண்ட கொள்கைகளும், தாம் உயிர் வாழ்தற் பொருட்டன்றிச், சிவன் பணி மேற்கொண்ட நிலையில் வருவன என்பதை உணர்ந்தபோது, இவர்க்கீடாவார் உலகில் வேறிலர் என்பது இனிது விளங்கும்.

காயமுயற்சி - இதுவரை ஏனைப்பொருள்களின் சார்பினையே பற்றிச்செய்த அறத்தினை, இனித் தம் உடல் முயற்சி துணையாகச் செய்ய மேற்கொண்டனர்; "செல்வந் தலைநின்ற பயனிது" என முன்னர்த் துணிந்து, பொருட்பற்றிப் பூசனை செய்த இவர், இப்போது உடல்பெற்ற பயனும் இதுவே யாம் என்று உடலால் வருந்தி முயன்று அதன் பயனாற் பணி செய்யலாயினர்.

கணம்புல் - ஒருவகைப்புல்; மெல்லிதாய் வீடு வேய்தல் முதலியவற்றுக்குப் பயன்படுவது; இது சிறு காடுகளிலும் குன்றிடச் சாரல்களிலும் மிகுதியாய்க் கிடைப்பது; இப்புல் பச்சைமலை கொல்லிமலைச் சாரல்களில் பெரும்பான்மை காணப்படும். இப்புல்லினை அரிந்து கொடுவந்து விற்கும் தொழிலினை இந்நாயனார் வறுமை வந்தபோது தமது ஊரில் (இருக்கு வேளூரில்) செய்து பழகினர்; அன்றிப், பிறர் செய்தலைக் கண்டறிந்தனர் என்பது கருதப்படும்.

விலைப்பொருளால்-புல் விற்ற விலைப்பொருளினால்; துளக்கு அறும்-அசைவில்லாத; பிறழாத; துளக்கம் - சலிப்பு;　5

4060. இவ்வகையாற் றிருந்துவிளக் கெரித்துவர வங்கொருநாண்
மெய்வருந்தி யரிந்தெடுத்துக் கொடுவந்து விற்கும்புல்

எவ்விடத்தும் விலைபோகா தொழியவுமிப் பணியொழியார்
அவ்வரிபுல் லினைமாட்டி யணிவிளக்கா யிடவெரிப்பார், ௬

4061. முன்புதிரு விளக்கெரிப்பார் முறையாமங் குறையாமல்
மேன்புல்லு விளக்கெரிக்கப் போதாமை மெய்யான
அன்புபுரி வாரடுத்த விளக்குத்தந் திருமுடியை
என்புருக மடுத்தெரித்தா ரிருவினையின் றொடக்கெரித்தார். ௭

4060. (இ - ள்) இவ்வகையால்...எரித்துவர - முன்கூறிய இவ்வாறு திருந்துவதற்கேதுவாகிய விளக்கினை எரித்துவர; அங்கு...ஒழியார் - அவ்விடத்து ஒருநாளில் உடல் வருந்தி அரிந்து எடுத்துக் கொண்டு வந்து விற்கும் புல் எவ்விடத்திலும் விலைபோகாமல் ஒழியக்கண்டும் இந்த விளக்குத் திருப்பணியினைக் கைவிடாதவராய்; அவ்வரி...எரிப்பார் - அரிந்த அந்தப் புல்லினையே தீமாட்டி அழகிய விளக்காக எரிப்பாராய், ௬

4061. (இ - ள்) முன்பு...போதாமை - இறைவரது திருமுன்பு விளக்கு எரிக்கும் முறைப்படி உள்ளயாமம் என்னும் கால அளவிற் குறையாமல் விளக்கெரிப்பதற்கு அந்தப் புல்லுப் போதாமையினாலே; மெய்யான அன்பு புரிவார் - மெய்ம்மையன்பினாலே திருத்தொண்டு செய்வாராகிய நாயனார்; அடுத்த...மடுத்தெரித்தார் - அடுத்த விளக்காகத் தமது திருமுடியினையே எலும்பும் கரைந்துருகும்படித் தீ மூட்டி எரித்தனர்; இருவினையின் தொடக்கு எரித்தார் - இருவினைகளாகிய பாசத் தொடக்கினை எரித்தாராயினர். ௭

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

4060. (வி - ரை) இவ்வகையால் - முன்பாட்டிற் கூறியவாறு இந்தவகையால்; முன்னர்ப் பொருட்சார்பின் துணையால் இல்லிடையுள்ளனமாறி விளக்கு எரித்த செயலை ஆயசெயல் (4059) என்று சேய்மைச் சுட்டினாற் கூறிய ஆசிரியர், அதனினும் அணித்தாகிய உடற்சார்பாகிய மெய்ம்முயற்சியாற் பொருள்கொண்டு செய்ததனை இவ் வகையால் என அணிமைச் சுட்டினாற கூறியது கவிநயமும் மெய்ப் பொருணயமுமாம்: முன்கூறிய அதனில் வேறுபட்ட இந்த என்ற குறிப்புமாம்.

திருந்து - திருந்தும்; திருத்துதற் கேதுவாகிய எனப் பிறவினைப் பொருள் கொள்க.

எவ்விடத்தும் - விலைக்குக் கொள்கின்ற எல்லாவிடத்திலும்; உம்மை முற்றும்மை.

ஒழியவும் - உம்மை உயர்வு சிறப்பு.

ஒழியவும் இப்பணி ஒழியார் - பொருள் வரும் வழி எல்லா மொழிந்தாலும் பணியினை விடாது செய்தல் அன்பின் உறைப்பினாலன்றி யாகாது. ஒழியார் - ஒழியாராகி; முற்றெச்சம்.

மாட்டி - ஒழுங்குபடுத்தித் தீ மூட்டி; அணிவிளக்காயிட - அழகிய விளக்குப் போலவே எரிய; ஆதல் - உவம உருபு. 6

4061. (வி - ரை) முன்பு - இறைவரது திருமுன்பு; விளக்கு எரிக்கும் முறை யாமம் - இத்தனை யாமம் விளக்கெரிப்பேன் என்று நியமமாக மேற்கொண்ட காலவளவாகிய யாமத்தின் எல்லைவரை; யாமம் - 3¾ நாழிகை கொண்ட கால அளவு.

போதாமை - போதாமையால் என மூன்றனுருபு விரிக்க.

மெய்யான அன்பு புரிவார் - மெய்யான - என்றும் பொய்படாத ; அன்பு - அன்பின் செயல்.

அடுத்த விளக்கு - கணம் புல்லும் போதாது விளக்கு மாளும் நிலையில் அதற்கு அடுத்த விளக்காக ; அடுத்த - பொருந்திய என்றலுமாம். நெய் விளக்கு இல்லாத போது அடுத்தது புல் விளக்கு ; அது தீர்ந்தபோது அடுத்தது முடிவிளக்கு என்னும்படி. வினைக்கு - என்பதும் பாடம்.

திருமுடி - தலையில விதிப்படி வைத்திருந்த குஞ்சி ; இந்நாளிற் முடியினைக் கத்தரித்தல் போலன்றி முன்னாளில் ஆண் மக்கள் குஞ்சிமயிர் வைத்து வளர்த்திடுதல் மரபு.

என்புருக - எலும்பும் உருகும் அன்பு மேலீட்டினால் ; பேரன்பு காரணமாக ; மடுத்தல் - தீ மூட்டுதல்.

இருவினையின் தொடக்கு எரித்தார் - இருவினைப் போகமாக வருவது உடம்பெடுத்தலாகிய பிறவி ; இங்கு முடிவிளக்கெரித்த செயல் விளக்கெரித்த அளவினுடமையாது, இவரது இருவினைப் பாசத்தொடர்பை எரித்த செயலேயாகவும் பயன் தந்துமேற் பிறவியில்லாமற் செய்தது ; தொடக்கு - தொடர்பு - கட்டு - என்ற கருத்துமது ; வினைத் தொடக்கறுத்த நிலை மேல்வரும் பாட்டிற் கூறப்படுதல் காண்க. 7

4062. தங்கள்பிரான் றிருவுள்ளஞ் செய்ததலைத் திருவிளக்குப்
பொங்கியவன் புடனெரித்த பொருவிறிருத் தொண்டருக்கு
மங்கலமாம் பெருங்கருணை வைத்தருளச் சிவலோகத்
தெங்கள்பிரான் கணம்புல்ல ரினிதிறைஞ்சி யமர்ந்திருந்தார். ８

(இ - ள்) தங்கள்பிரான்...செய்து - (இத்திருப்பணியினைத்) தமது பெருமானார் திருவுள்ளங்கொண்டு ; தலை...வைத்தருள - தலைத்திருவிளக்கினை மிகுந்த அன்புடனே எரித்த ஒப்பற்ற திருத்தொண்டருக்கு மங்கலமாகிய பெருங் கருணையினை வைத்தருள ; சிவலோகத்து...அமர்ந்திருந்தார் - சிவனுலகத்திலே எங்கள் பெருமானாராகிய கணம்புல்ல நாயனார் சேர்ந்து இனிதாக வணங்கி வீற்றிருந்தருளினார்.

(வி - ரை) திருவுள்ளம் செய்து - திருவுள்ளத்தில் ஏற்றுவைத்து ; திருவுள்ளஞ் செய்து - கருணை வைத்தருள என்று கூட்டுக.

தலைத்திருவிளக்கு எரித்த - தலைக்குஞ்சியினையே திருவிளக்காக எரித்த.

மங்கலமாம் பெருங்கருணை - திருமுன்பு மயிரை எரித்தலும், உடலை எரிவாய் மடுத்து எரித்து உயிர்நீத்தலும் முதலிய செய்கைகள் எங்குச் செய்யினும் அமங்கலமும் அநுசிதமும் ஆம் என்பது பொது விதி ; சிவன் கோயிலிற் திருமுன்பு செய்தல் அதனின் மிக்க அமங்கலமும் அநுசிதமுமாம். ஈண்டுப் பொங்கிய அன்புடனே செய்யப்பட்டமையால் இவையே மங்கலமாகவும் இறைவர்க் குகந்தனவாகவும் ஆகிய படியால் இறைவர் மங்கலமாம் பெருங்கருணை வைத்தனர் என்பதாம்.

சிவலோகத்து - இறைஞ்சி - இச் செயலால் நாயனார் இறைவர் திருமுன்பு தம் உடலை நீத்துச் சிவலோகத்தணைந்தனர் என்பதாம்.

எங்கள்பிரான் - " எந்தை தந்தைபிரான் " (திருவந்தாதி - 58) என்ற வகை நூற் கருத்தினைத் தொடர்ந்து கூறியது.

கணம்புல்லர் - இவர் செய்த திருத்தொண்டு காரணமாகப் போந்த காரணப் பெயர் ; இவரது இயற்பெயர் விளக்கவில்லை ; இவரது திருமரபும் குறிக்கப்படவில்லை. 8

4063. மூரியார் கலியுலகின் முடியிட்ட திருவிளக்குப்
பேரியா றணிந்தாருக் கெரித்தார்தங் கழல்பேணி
வேரியார் மலர்ச்சோலை விளங்குதிருக் கடவூரிற்
காரியார் தாஞ்செய்த திருத்தொண்டு கட்டுரைப்பாம். ௯

(இ - ள்) மூரி ஆர்கலி ..கழல்பேணி - பெரிய கடல் சூழ்ந்த உலகில் தமது முடியினையே திருமுன்பு இட்ட விளக்காகக், கங்கையாகிய பெரிய யாற்றினை அணிந்த சிவனுக்கு எரித்த நாயனாரது திருவடிகளைத் துதித்து; வேரி ஆர்...கட்டுரைப்பாம் - தேன் பொருந்திய மலர்கள் நிறைந்த சோலைகள் சூழ்ந்து விளங்கும் திருக்கடவூரில் அவதரித்த காரிநாயனார் செய்த திருத்தொண்டினைச் சொல்வோம்.

(வி - ரை) இது கவிக்கூற்று ; ஆசிரியர் தமது மரபின்படி இதுவரை கூறி வந்த சரிதத்தை முடித்துக்காட்டி, மேல் வருஞ் சரிதத்துக்குத் தோற்றுவாய் செய்கின்றார்.

மேல்வருவது தமிழ்ப்புலமையன்பராகிய காரி நாயனாரது புராணம். அக்குறிப்புப்பட இங்குத் தமிழ்க்கவி நயம்பட அவரது பெயரைத் திரிபு என்னும் சொல்லணியில் வைத்துத் தொடங்கியது ஆசிரியரது கவிமாண்பின் நுட்பம் ; இவ்வாறு தொடங்கியது மன்றி இவர்தம் புராண முடிப்பிலேயும் இவ்வாறே வைத்துக் காட்டியருளிய கவிநயக் குறிப்பும் (4068) கண்டுகளித்தற்பாலது.

மூரி ஆர்கலி - மூரி - பெருமை : வலிமை ; ஆக்கல், காத்தல், அழித்தல் ஆகிய முத்தொழிலும் புரியும் வன்மை ; ஆர்கலி - கடல்.

உலகில் - எரித்தார் என்று இயையும் ; இவ்வாறு செய்யவல்லார் உலகிற் பிறர் இலர் என்பது குறிப்பு. எரித்தார் வினையாலணையும் பெயர்.

இட்ட முடித்திருவிளக்கு எரித்தார் - என்க. இட்ட - நியமமாக இட்ட - எரித்த.

பேரியாறு - கங்கையாகிய பெரிய நதி.

வேரி - ஆர் - வேரி - தேன் - ஆர் ; பொருந்திய ; நிறைந்த ; வேரி ஆர் மலர் என்க.

காரியார் - நாயனாரது பெயர் ; திரிபணியிற் கூறிய சொற்கவி நயத்தால் இவர் சொல் விளங்கப் பொருண்மறையத் தமிழ்க்கோவை பாடும் தொண்டர் என்பது குறிப்பிலுணர்த்தப்பட்டது. திருக்கடவூர் என்று ஊரும், காரியார் என்ற பெயரும் பண்பும் கூறியது கவிநயம். 9

சரிதச்சுருக்கம் - கணம்புல்ல நாயனார் புராணம் :—வடவெள்ளாற்றுத் தென்கரையில் உள்ளது இருக்குவேளூர் என்னும் செழும்பதி. அதில் குடிமுதல்வர்க்குத் தலைவராய்ப், பெருஞ் செல்வத்தாராய், நற்குண மேம்பாடுடையவராய், இறைவர் திருவடியே மெய்ப்பொருள் என்ற துணிவுடையவர் ஒரு பெரியார். அவர் செல்வப் பயன் இதுவே என்று துணிந்து சிவன்கோயிலில் நீங்காமல் விளக்கெரித்துவந்தார் செல்வம் குறைந்து வறுமை வந்தது. அவர் அவ்வூரைவிட்டுத் திருத்தில்லையினைச் சேர்ந்து அங்குத் திருப்புலீச்சரத்தில் விளக்கெரிக்கும் நியமம் பூண்டார். பொருளின்மையால் தம் இல்லத்தில் உள்ள பொருள்களை மாறி விளக்கெரித்தார். அவையும்

தீர்ந்தன. பிறர்பால் இரத்தலை அஞ்சினார்; தமது உடல் முயற்சியால் அரிந்து கொண்டுவந்த கணம் புல்லினை விலைப்படுத்தி அப்பொருளினால் விளக்கெரித்து வந்தனர்.

ஒரு நாள் அவர் கொண்டுவந்த புல் எவ்விடத்தும் விலை போகாதாயிற்று. அப்புல்லையே மாட்டி விளக்கெரித்தார். ஆனால், அது, தாம் நியமமாகவே மேற்கொண்ட யாம அளவுவரை எரிக்கப் போதாதாயிற்று. அன்பினால் எழும்பும் உருக அந்நாயனார் தமது திருமுடியினையே விளக்காக மாட்டி எரித்தனர்; இருவினைத் தொடக்கையும் எரித்தொழித்தார். இறைவர் அவருக்கு மங்கலமாம் பெருங்கருணை வைத்தருளினர். அவர் சிவலோகத்தில் இறைஞ்சி இன்பமுடன் அமர்ந்தனர். அவர் செய்த திருப்பணி காரணமாக அவருக்குக் கணம்புல்லர் என்று பெயராயிற்று.

கற்பனை—(1) செல்வம் பெற்ற பயன் சிவன் பணி செய்தலேயாம்.

(2) சிவன் கோயிலில் திருவிளக் கெரித்தல் சிறந்த சிவபுண்ணியம்.

(3) வறுமை வந்த காலத்தும் தாம் நியமமாகக் கொண்ட சிவன் பணியை விடாது எவ்வகையானும் செயவது பெரியோர்க்கே கூடுவது.

(4) சிவன் பணிக்கென்றேனும் இரத்தல் அஞ்சத்தக்கது.

(5) மனையில் உள்ளனவற்றை மாறியும், காய முயற்சியால் அரிந்த புல் விற்றும் பணிசெய்தனர் கணம்புல்ல நாயனார்; இது பெரியோர் தன்மை.

(6) தம் உடம்பின் முடியினையே விளக்காக எரித்தலும் சிவன்திருப்பணியின் உறைப்புடையார்க்குச் சாலும். கலியநாயனாரது வரலாறு காண்க.

தலவிசேடம்: இருக்குவேளூர்:—கொங்கு நாட்டில், சேலம் ஜில்லாவில் வடவெள்ளாற்றுத தென்கரையில் உள்ளது. பேளூர் என வழங்குவது. 4055-ன் கீழ் உரைத்தவை பார்க்க.

48. கணம்புல்ல நாயனார் புராணம் முற்றும்



சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# 49. காரி நாயனார் புராணம்

### தொகை

"'கறைக்கண்டன் கழலடியே காப்புக்கொண் டிருந்த
கணம்புல்ல நம்பிக்குங்' காரிக்கு மடியேன்-"
—திருத்தொண்டத் தொகை - 8

### வகை

" புல்லன வாகா வகையுல கத்துப் புணர்ந்தனவுஞ்
சொல்லின வுந்நய மாக்கிச் சுடர்ப்பொற் குவடுதனி
வில்லனை வாழ்த்தி விளங்குங் கயிலைபுக் கானென்பராற்
கல்லின மாமதில் சூழ்கட வூரினிற் காரியையே "
—திருத்தொண்டர் திருவந்தாதி - 59

### விரி

4064. மறையாளர் திருக்கடவூர் வந்துதித்து வண்டமிழின்
றுறையான பயன்றெரிந்து சொல்விளங்கிப் பொருண் மறையக்
குறையாத தமிழ்க்கோவை தம்பெயராற் குலவும்வகை
முறையாலே தொகுத்தமைத்து மூவேந்தர் பாற்பயில்வார்; க

4065. அங்கவர்தா மகிழும்வகை யடுத்தவுரை நயமாக்கிக்
கொங்கலர்தார் மன்னவர்பாற் பெற்றநிதிக் குவைகொண்டு
வெங்கணரா வொடுகிடந்து விளங்குமிளம் பிறைச்சென்னிச்
சங்கரனு ரினிதமருந் தானங்கள் பலசமைத்தார். உ

புராணம்: இனி, திறுத்த முறையானே, ஆசிரியர், ஒன்பதாவது கறைக் கண்டன் சருக்கத்திற் போற்றப்பட்ட ஐந்து நாயன்மார்களுள், இரண்டாவது காரி நாயனார் புராணங் கூறத்தொடங்குகிறார்; காரியார் என்ற பெயருடைய நாயனாரது வரலாறும் பண்பும் கூறும் பகுதி.

தொகை: முன் புராணத்தில் உரைக்கப்பட்டது.

வகை: கல்லின...காரியையே-கல்லாலமைந்த மதில்சூழ்ந்த திருக்கட வூரில் அவதரித்த காரியார் என்பவரையே; புல்லன ஆகாவகை - தமது நூல்கள் உலகத்தில் புன்மையனவாகிக் கழியாதபடி; உலகத்து...நயமாக்கி - உலகத்தில் பொருந்தும் பொருளும் சொல்லும் நயப்புடையனவாகச் செய்து; சுடர்...வாழ்த்தி ஒளி பொருந்திய பொன்மலையாகிய ஒப்பற்ற வில்லினை உடைய இறைவனைத் துதித்து; கயிலை.....என்பர் - கயிலையினை அடைந்தார் என்று சொல்லுவர். (ஆல் - அசை)

புல்லன - புல்லியன ; அற்பமானவை ; புணர்ந்தன - பொருளாகி உள்ளே பொருந்தியன. சொல்லின - அப்பொருளைப் புலப்படுத்துச் சொல்லிய சொற்கள் ; நயமாக்குதல் - விரும்பும்படி இயற்றுதல் ; காரியை - நயமாக்கி - வாழ்த்திப் - புக்கான் என்பர் என்று முடிக்க. கல்லின - கல்லாற் செய்யப்பட்டன; மதிற் கடவூர் - "எயிற்பதி" (831).

உலகத்துப் புணர்ந்தனவும் - உலக வழக்குச் சொல்லையும் ; சொல்லினவும் - தன்னாற்சொல்லப்பட்டவைகளையும் ; சொற்பொருள் அமைந்த அந் நூலையும் அந் நூல் அரங்கேற்றுழிச் சொல்லும் உரையையும் (உலகத்துப்) புல்லனவாகா வகை - நயமாக்கி ; (இவை ந. சிவப்பிரகாசக் குருக்களையா குறிப்புக்கள்). தொகை நூல் பெயரை உரைத்தது. வகை நூல் பெயரையும் ஊரையும் திருத்தொண்டின் பண் பினையும் வரலாற்றையும் வகுத்தது. இவை விரிந்தபடி விரிநூலுட் கண்டுகொள்க.

விரி : 4064. (இ - ள்) மறையாளர் திருக்கடவூர் வந்துதித்து - மறையோர் கள் மிக்கு வாழ்கின்ற திருக்கடவூரில் வந்து தோன்றி ; வண்டமிழின்...தொகுத் தமைத்து-வளப்பமுடைய தமிழது இனிய துறைகளிலாகிய பயனைத் தெரிந்து சொல் விளங்கி உட்கிடையான பொருள் மறையும்படி குறைவில்லாத தமிழ்க் கோவை யினைத் தமது பெயராலே விளங்கும்படி முறைப்படத் தொகுத்து இயற்றி; மூவேந்தர் பாற் பயில்வார் - தமிழ் முப்பெருவேந்தர்களிடத்தும் சென்று பயில்வாராகி.　க

4065. (இ - ள்) அங்கவர்தாம் ..நயமாக்கி - அங்கு அம்மன்னவர்கள் மகிழும் வகையாலே பொருளுக்கேற்ற சொற்களை நயம்பெறச் செய்து ; கொங்கலர்... கொண்டு-மணம் விரிகின்ற பூமாலை யணிந்த அரசர்களிடம் பெற்ற செல்வக் குவியல் களைக் கொண்டு ; வெங்கண்...சமைத்தார் - வெவ்விய கண்ணையுடைய பாம்புடனே கிடந்தும் விளங்குகின்ற இளம்பிறையினையணிந்த சென்னியையுடைய சங்கரனார் இனிதாக வீற்றிருந்தருளும் கோயில்கள் பலவற்றை அமைத்தனர்.　உ

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

4064. (வி - ரை) மறையாளர் திருக்கடவூர் - மறையவர்கள் மிக்குவாழும் பதி : "எய்ந்தசீர் மறையோர் வாழு மெயிற்பதி" (831).

தமிழின் துறையான பயன் - துறை - இவை அகமும் புறமுமாம். இன் - இனிய; ஆன பயன் - உயிர்க்கு ஊதியமாகிய பயன் ; அகப்பொருட்டுறைகளில் இறைவன் - அடியார்பாற் கூட்டமும், புறப்பொருட்டுறைகளில் பாசங்களை எறியும் ஞான வெற்றியும், இவற்றால் வீடுபேறு பெறுதலுமாம். இவரது நூல்கள் இவர் வீடுபெறச் சாதனமாயினமை காண்க. வண் தமிழ்த்துறையாகிய மெய்ப்பொருளுணர்ந்து ;

சொல் விளங்கிப் பொருள்மறைய - சொற்கள் விளக்கமாகி உள்ளுறை பொரு ளாகிய வீடு பேற்றின் நிலை வெளித்தோன்றாது கிடக்க. "அறிவனூற் பொருளு முலக நூல் வழக்குமென, விருபொருளு நுதலி எடுத்துக் கொண்டனர் ; ஆங்கவ் விரண்ட னுள், ஆகம நூல் வழியி னுதலிய ஞான யோகநுண் பொருளினை யுணர்த்துதற் கரிது " என்று திருக்கோவையாருரை முகத்துப் பேராசிரியர் உரைத்தவை ஈண்டு நினைவு கூர்தற்பாலன; திரிபு முதலிய சொல்லணிகளை உடைய செய்யுட்கள் சொல் விளங்கிப் பொருண் மறைய உள்ளன ; இக்கருத்தை ஆசிரியர் இப்புராணத் தோற்று வாயினும் (4063), முடிப்பினும் (4069) காட்டியருளுதல் காண்க. இறைவர் புகழை உள்ளுறையாகக்கொண்டு பாடும் அகத்துறை, புறத்துறைப் பாட்டுக்களின் உள் ளுறைகளும் அவ்வாறேயாம்.

குறையாத தமிழ்க்கோவை தம் பெயராற் குலவும் வகை முறையாலே தொகுத்தமைத்து - என்றதனால் காரிக்கோவை என்றதோர் அகப்பொருட் டுறைக் கோவை நூல் இவரால் செய்யப்பட்டதென்று தெரிகிறது. இந்நூலைப் (அல்லது நூல்களைப்) பற்றிய விவரங்கள் ஒன்றும் தெரியவில்லை; முறை - தமிழ் இலக்கணம் வகுத்த முறை; தொகுத்து - சொற்பொருட் பாகுபாடுகள் சிறக்கும்படி சேர்த்து; அமைத்தல் - இயற்றுதல். இஃது இந்நாயனார் இறைவர்பாற் செல்லும் வகையால் உயிர்க்குறுதியாக அமைத்த நூல்.

மூவேந்தர் பாற்பயில்வார் - தமிழ் முடிமன்னர் மூவர்கள், சேர சோழ பாண்டியர்கள். பாலும் என முற்றும்மை விரிக்க. பயிலுதல் - சென்று பழகி நட்புப் பெற்று ஒழுகுதல்.

பயில்வார் - நயமாக்கிப் - பேற்ற - குவைகோண்டு - சமைத்தார் என்று மேல் வரும் பாட்டுடன் கூட்டிமுடிக்க. 1

4065. (வி - ரை) அடுத்த உரை - மேற்கொண்ட பொருளுக் கேற்றபடி அடுத்த சொல்; உரை நயம் - சொன்னயம்.

வெங்கண் அரா - வெம்மை - கொடுமை செய்யும்; பார்வையாலே விடத் தன்மை செய்யும் பாம்புகளும் உள; திருஷ்டிவிஷம் என்பது வடமொழி.

அராவோடு கிடந்து விளங்கும் இளம்பிறை - கிடந்தும் என்று உயர்வு சிறப் பும்மை தொக்கது; அராவுடன் கிடந்தால் வாடுதல் மதியின் தன்மை; அவ்வாறு கிடந்தும் விளக்க முறுதல் சிவனருள் வலிமை என்பது குறிப்பு.

இனிதமரும் தானங்கள் - விளங்க வீற்றிருக்கும் கோயில்கள்; சமைத்தல் - உள வாக்குதல். 2

4066. யாவர்க்கு மனமுவக்கு மின்பமொழிப் பயனியம்பித்
தேவர்க்கு முதற்றேவர் சீரடியா ரெல்லார்க்கும்
மேவுற்ற விருநிதிய மிகவளித்து விடையவர்தங்
காவுற்ற திருக்கயிலை மறவாத கருத்தினராய், ௩

4067. ஏய்ந்தகடல் சூழுலகி லெங்குந்தம் மிசைநிறுத்தி
யாய்ந்தவுணர் விடையறா வன்பினரா யணிகங்கை
தோய்ந்தநெடுஞ் சடையவர்த மருள்பெற்ற தொடர்பினால்
வாய்ந்தமனம் போலுடம்பும் வடகயிலை மலைச்சேர்ந்தார். ௪

4066. (இ - ள்) யாவர்க்கும்...இயம்பி - யாவருக்கும் மனமகிழும்படியாகிய இன்பம் தரும் சொற் பயன்களையே சொல்லி; தேவர்க்கு...மிக அளித்து - தேவர்க்கெல்லாம் பெருந்தேவராகிய சிவபெருமானது சிறப்புடைய அடியார்கள் எல்லாருக்கும் பொருந்திய பெருநிதியங்களை மிகவும் அளித்து; விடையவர்தம்...கருத்தினராய் - இடபத்தினை உடைய இறைவரது சோலைகள் பொருந்திய திருக்கயிலாயத்தினை எப்போதும் மறவாத கருத்துடையவராகி, ௩

4067. (இ - ள்) ஏய்ந்த...நிறுத்தி - பொருந்திய கடல் சூழ்ந்த உலகத்தில் எல்லா இடங்களிலும் தமது புகழினை நிலைநிறுத்தி; ஆய்ந்த...அன்பினராய்-ஆராய்ந்து தெளிந்த உணர்விலே இடையறாத அன்புடையவராகி; அணி...தொடர்பினால் - அழகிய கங்கையாறு தோய்ந்த நீண்ட சடையினையுடைய இறைவரது திருவருளைப்

பெற்ற தொடர்ச்சியினாலே ; வாய்ந்த...சேர்ந்தார் - பொருந்திய மனத்தினாற் சேர்ந்தது போலவே உடம்பினாலும் வடகயிலை மலையினைச் சேர்ந்தனர். ௨

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

4066. (வி - ரை) இன்பமொழிப் பயனியம்புதலாவது - இன்மொழியினையே எல்லாரும் மகிழ்வர் ; அந்த இன்ப மொழிதானும் இறைவர் புகழ்கூறப் பெறின் அதன் பயனைப் பெறும் ; என்ற உண்மையின்படி உலகினருக்குச் சொல்லுதல்.

தேவர்க்கு முதற்றேவர் - சிவபெருமான் ; முதல் - முதல்வர் ; சங்காரகாரணனாகிய முதல்வன் சிவன் என்ற கருத்து.

விடையவர்தம் - திருக்கயிலை என்று கூட்டுக. விடையவர்தம் காவுற்ற - செலுத்துகின்ற இடபவாகனத்தையுடைய சிவனார் ; கா - சுமத்தல் - செலுத்துதல் ; என்றலுமாம். நந்தி தேவரது காவல் பொருந்திய என்றலுமாம்.

காவுற்ற - சோலைகள் சூழ்ந்த ; கா - சோலை ; விடையவர்தாம் காவுற்ற என்பது பாடமாயின் சிவபெருமான் அடியாரைக் காத்தற்றொழில் செய்யும் என்க. கா - காத்தல். 3

4067. (வி - ரை) இசை நிறுத்துதலாவது தமது புகழ் நிலைபெறச்செய்தல்.

ஆய்ந்த வுணர்வு - ஆய்தல் - ஆராய்ந்து தெளிதல் ; உணர்வு - உணர்விலே ; தொடர்பு-பொருத்தம் - காரணம். இடையறு அன்பு - "அயரா அன்பு" (போதம்-11)

மனம்போலுடம்பும் வடகயிலை மேவுதலாவது - முன்னர் மறவாமையினால் மனம் கயிலையை எப்போதும் சேர்ந்திருந்தது ; இப்போது உடம்பும் கூடிச் சிவன் முத்தராய்த் திருக்கயிலை மலையினிற் சேர்ந்தமர்ந்தனர் என்பதாம். 4

4068. வேரியார் மலர்க்கொன்றை வேணியா ரடிபேணுங்
காரியார் கழல்வணங்கி யவரளித்த கருணையினால்
வாரியார் மதயானை வழுதியர்தம் மதிமரபிற்
சீரியார் நெடுமாறர் திருத்தொண்டு செப்புவாம்.

(இ - ள்) வேரியார்...கருணையினால் - தேன் பொருந்திய மலராகிய கொன்றையை அணிந்த சடையினை உடைய இறைவரது திருவடியைப் பேணுகின்ற காரி நாயனாரது கழல்களை வணங்கி ; அவர் அளித்த கருணையினால் - அவர் செய்த கருணைத் திறத்தின் துணையினாலே ; வாரி ஆர்...நெடுமாறர் - கடல்போல நிறைந்து வழிகின்ற மதம் பொருந்திய யானைப் படையினையுடைய பாண்டியர்களுக்குரிய சந்திரவமிசத்திலே நின்றசீர்நெடுமாற நாயனாரது ; திருத்தொண்டு செப்புவாம் - திருத்தொண்டினைச் சொல்வோம்.

(வி - ரை) இஃது இச்சரித முடிப்பும் வருஞ்சரிதத் தோற்றுவாயுமாம். இது கவிக்கூற்று. இப்பாட்டுத் திரிபு என்னும் சொல்லணி.

வேரி - மணமுமாம். பேணுதல் - விரும்பி வழிபடுதல் ; ஆர்தல் - நிறைதல்.

மதயானை - இச்சரிதத்துள் வரும் போர்க் குறிப்பு.

கருணையினால் - கருணையின் துணையினால்.

வாரி - கடல் - இங்குக் கடலின் தன்மையாகிய நிறைவு குறித்தது ; ஆர்தல் - பொருந்துதல் ; வாரி - ஆர் - கடல்போல நிறைந்த.

வழுதியர் தம் மதிமரபு - பாண்டியர்க்குரிய சந்திரவமிசம் ; பாண்டியர் சந்திர மரபினர் ; (சோழர் சூரிய மரபினர்); சீரியார் - நின்ற சீருடையார். -

சரிதச்சுருக்கம்: காரி நாயனார் புராணம்:—திருக்கடவூரில் அவதரித்தவர் காரி நாயனார். அவர் வண் தமிழின் துறைகளின் பயன் தெரிந்து சொல்விளங்கிப் பொருள் மறையத் தமது பெயராற் காரிக்கோவை என்ற நூலினை இயற்றித் தமிழ் மூவேந்தர்களிடமும் சென்று நட்பினைப் பெற்றனர். அவர்கள் மகிழும்படி உரையமாக்கினர்.

அவர்கள் தந்த பெருநிதிக் குவைகளைக் கொண்டு சிவனுக்குப் பல கோயில்கள் சமைத்தனர் ; எல்லாருக்கும் மனமகிழும் இன்பமொழிப் பயனை இயம்பினர் ; சிவனடியார்களுக்குப் பெருஞ் செல்வங்களை மிக அளித்தனர் ; இறைவராது திருக்கயிலை மலையினை என்றும் மறவாதிருந்தனர்; தமது புகழ் எங்கும் பரவ விளங்கி இடையறாத அன்பினாலே சிவனருள் பெற்று வடகயிலை மலையினைச் சேர்ந்தனர்.

கற்பனை : (1) இனிய தமிழ்த் துறைகளின் பயன் தெரிந்து சொல்விளங்கப் பொருள் மறையக் கோவைபாடுதல் அரிய வண்டமிழ்த் திறமாம்.

(2) அரசரும் மதிக்கப் பயில்வது பெருங் கல்வி வளத்தாலாவது.

(3) அரசர்பாற் றம் கல்வித் திறத்தாற் பெற்ற செல்வங்களைச் சிவனுக்கும் சிவனடியார்க்கும் ஆக்குவது பேரன்பின்றிறமாம்.

(4) இன்பமொழி கூறுதல் யாவர்க்கும் மனமகிழ்ச்சி தருவதொன்று ; இன்பமொழிப் பயனாவது சிவனைக் குறித்துக் கூறுதலேயாம்.

(5) இறைவராது திருக்கயிலைமலையினை மறவாத கருத்துடையரா யிருத்தல் செய்தற்கு அரியசெயல் ; மனத்தினைக் கயிலையில் சேரவைத்ததுபோல உடம்பும் அங்குச் சேர்தல் பேரன்பின்றிறத்தாலாவது. அயரா அன்பு சிவப்பேற்றைத் தருவது.

தலவிசேடம் : திருக்கடவூர் :—III பக்கம். சகள பார்க்க.

காரி நாயனார் புராணம் முற்றும்



உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# 50. நின்றசீர் நெடுமாற நாயனார் புராணம்

தொகை

"நிறைக்கொண்ட சிந்தையா னெல்வேலி வென்ற
நின்றசீர் நெடுமாற னடியார்க்கு மடியேன்"
—திருத்தொண்டத்தொகை - (8)

வகை

கார்த்தண் முகிற்கைக் கடற்கா ழிப்பர்பெரு மாற்கெதிராய்
ஆர்த்த வமண ரழிந்தது கண்டுமற் றங்கவரைக்
கூர்த்த கழுவி லுதிவைத்த பஞ்சவ னென்றுரைக்கும்
வார்த்தை யதுபண்டு நெல்வே லியில்வென்ற மாறனுக்கே.
—திருத்தொண்டர் திருவந்தாதி - (60)

விரி

4069. தடுமாறு நெறியதனைத் தவமென்று தம்முடலை
அடுமாறு செய்தொழுகு மமண்வலையி லகப்பட்டு
விடுமாறு தமிழ்விரகர் வினைமாறுங் கழலடைந்த
நெடுமாற னார்பெருமை யுலகேழு நிகழ்ந்ததால். க

புராணம் : இனி, நிறுத்த முறையானே, ஆசிரியர், ஒன்பதாவது, கறைக்கண்டன் சருக்கத்தில் மூன்றாவது நின்றசீர் நெடுமாற நாயனார் புராணங் கூறத்தொடங்குகின்றார் ; அந்நாயனாரது சரிதவரலாறும் பண்புங் கூறும் பகுதி.

தொகை : நிறையினை மேற்கொண்ட சிந்தையினாலே நெல்வேலிப் போரினை வென்றவராகிய நின்றசீர் நெடுமாறனாருடைய அடியார்க்கும் நான் அடியேனாவேன்.

நிறைக்கொண்ட சிந்தையால் - மண்ணாசை குரோதம் முதலிய தீய எண்ணங்களாலன்றித், தம் நாடுகாவல் பற்றிய நீதிமுறையாலே; நெல்வேலி - திருநெல்வேலியில் நிகழ்ந்த போர் ; இப்போரினை, மேல், வகை நூலும் விரிநூலும் விரித்தமை காண்க ; நெடுமாறன் - இப்பாண்டியரது பெயர் - நின்ற சீர் என்பது சரிதவரலாற்றிற் கண்ட பண்பு காரணமாகப் போந்த பெயர் ; பெயரும் வரலாறும் பண்பும் தொகைநூல் பேசிற்று.

வகை : கார்த்தண்...கண்டு - கரிய தண்ணிய முகிலைப் போன்ற கையினையுடைய கடற்காழியவரது பெருமானாகிய ஆளுடையபிள்ளையாருக்குப் பகையாய்

ஆர்த்துவந்த சமணர்கள் வாதில் தோற்று அழிவெய்தியதைக் கண்டு (பின்னர்); ஆங்கு...பஞ்சவனென்று - தோல்வியுற்ற அவ்விடத்தே அவ்வமணர்களைக் கூர்மையுடைய கழுவின் முனையிலே ஏற்றிவைத்த பாண்டியர் என்று; உரைக்கும் வார்த்தையது - சொல்லும் புகழானது; பண்டு...மாறனுக்கே - முன்னாளில் நெல்வேலிப் போரினில் வெற்றி கொண்ட பாண்டியருக்கே (உரியது).

கார் - கரிய; கார் காலமும் ஆம்; முகிற்கை - முகில்போன்று கைம்மாறு கருதாது கொடுக்கும் கைவளமாகிய உதவி; ஆர்த்தல் - ஆரவாரித்தல்; வாதுசெய்தல்.

அழிந்தது - வாதில் தோற்றதனை; இரண்டனுருபு விரிக்க; மற்று - அசை; மற்று - மறுத்துப் பகைத்த என்றலுமாம். இப்பொருளில் மற்ற என்பது ஈற்றகரங் கெட்ட தென்க; கூர்த்த - கூரிய; நுதி - முனை; நுதிவைத்தல் - நுனியில் தைக்க ஏற்றுதல்; நுதிவைத்த - "கழுவேற்றுக" என்று அரசாணை செய்த; வார்த்தை - புகழ்ச்சொல்; பண்டு - முன்னாளில்; உரியது என்பது குறிப்பெச்சம்.

பெயரும் வரலாறும் பண்பும் திருத்தொண்டும் வகைநூல் வகுத்தது.

விரி: 4069. (இ-ள்) தடுமாறு...என்று - தடுமாற்றத்தை விளைக்கும் புரை நெறியினையே தவமென்று கொண்டு; தம் உடலை...அகப்பட்டு - தமது உடலை வருத்துகின்ற செயல்களைச் செய்து தீநெறி ஒழுகும் அமணரது சூழ்ச்சியினுள் அகப்பட்டு; விடுமாறு...அடைந்த-அவ்வலையினின்றும் விடுபடும்படி தமிழ்விரகராகிய ஆளுடைய பிள்ளையாரது, வினைமாற்றிப் பிறவியறுக்கும் திருவடிகளை அடைந்த; நெடுமாறனார்...நிகழ்ந்தது - நெடுமாறனாரது பெருமையானது ஏழு உலகங்களிலும் நிறைந்து விளங்கியது; ஆல் - அசை.

(வி-ரை) தடுமாறு நெறி - தடுமாற்றத்தை விளைக்கும் நெறி; தவமென்று... ஒழுகும் - பலவாறும் உடலை வருத்துதலே தவமாமென்னும் அமணர் கொள்கையும் ஒழுக்கமும்; அடுதல் - சுடுபாறைகிடத்தல் - வெயிலினிற்றல் முதலாயின.

விடுமாறு - விட்டு நீங்கும்படி.

வினைமாறும் கழல் - மாற்றும் என்னும் பிறவினை மாறும் எனத் தன்வினையாய் வந்தது; "கழறொழு தினைப்பவ ரிருவினைத்துயர் போமே" "பிறவியெனும் பொல்லாப் பெருங்கடலை நீந்தத் துறவியெனும் தோற்றோணி" (நம்பியாண்டார் நம்பிகள்).

நிகழ்ந்தது - விளங்கியது. 1

4070. அந்நாளி லாளுடைய பிள்ளையா ரருளாலே
தென்னாடு சிவம்பெருகச் செங்கோலுய்த் தறமளித்துச்
சொன்னமநெறிபோற்றிச் சுரர்நகர்க்கோன் றனைக்கொண்ட
பொன்னார மணிமார்பிற் புரவலனார் பொலிகின்றார், ௨

4071. ஆயவர சளிப்பார்பா லமர்வேண்டி வந்தேற்ற
சேயபுலத் தெவ்வரெதிர் நெல்வேலிச் செருக்களத்துப்
பாயபடைக் கடல்முடுகும் பரிமாவின் பெருவெள்ளங்
காயுமதக் களிற்றினிரை பரப்பியமர் கடக்கின்றார், ௩

4072. எடுத்துடன்ற முனைஞாட்பி னிருபடையிற் பொருபடைஞர்
படுத்தநெடுங் கரித்துணியும் பாய்மாவி னறுகுறையும்

அடுத்தமர்செய் வயவர்கருந் தலைமலையு மலைசெந்நீர்
மடுத்தகடல் மீளவுந்தாம் வடிவேல்வாங் கிடப்பெருக, ௪

4073. வயப்பரியின் கலிப்பொலியு மறவர்படைக் கலவொலியுங்
கயப்பொருப்பின் முழக்கொலியுங் கலந்தெழுபல் லியவொலியும்
வியக்குமுகக் கடைநாளின் மேகமுழக் கெனமூளச்
சயத்தொடர்வல் லியுமின்று தாம்விடுக்கும் படிதயங்க, ௫

4074. தீயுமிழும் படைவழங்குஞ் செருக்களத்து முருக்குமுடல்
தோயுநெடுங் குருதிமடுக் குளித்துநிணந் துய்த்தாடிப்
போயபரு வம்பணிகொள் பூதங்க ளேயன்றிப்
பேயுமரும் பணிசெய்ய வுணாவளித்த தெனப்பிறங்க, ௬

4075. இனையகடுஞ் சமர்விளைய விகலுழந்த புறந்தலையிற்
பனைநெடுங்கை மதயானைப் பஞ்சவனார் படைக்குடைந்து
முனையழிந்த வடபுலத்து முதன்மன்னர் படைசரியப்
புனையுநறுந் தோடைவாகை பூழியர்வேம் புடன்புனைந்து, ௭

4076. வளவர்பிரான் றிருமகளார் மங்கையருக் கரசியார்
களபமணி முலைதிளைக்குந் தடமார்பிற் கவுரியனார்
இளவரவெண் பிறையணிந்தார்க் கேற்றதிருத் தொண்டெல்லாம்
அளவில்புகழ் பெறவிளக்கி யருள்பெருக வரசளித்தார். ௮

4070. (இ - ள்) அந்நாளில்...பெருக - அக்காலத்தில் ஆளுடைய பிள்ளையா ரது திருவருளினாலே பாண்டிநாட்டிற் சைவத்திறம் பெருகியிட ; செங்கோல்... போற்றி - செங்கோல் அரசாட்சி செய்து அறநெறி வழுவாமற் காத்தும் எடுத்துச் சொல்லப்படும் சிவநாமமாகிய திருவைந் தெழுத்தின் நெறியாகிய சைவநெறியினைக் காத்தும், சுரர்நகர்க்கோன்...பொலிகின்றார் - தேவேந்திரனிடத்துக் கொண்ட பொன்னாரமணிந்த மார்பினையுடைய அப்பாண்டியனார் விளங்குகின்றாராகி ; ௨

4071. (இ - ள்) ஆய...பால் - அத்தன்மையாகிய அரசுசெய்பவரிடத்தே ; சமர்வேண்டி...களத்து - போரினை வேண்டிவந்து எதிர்த்த வடபுலத்துப் பகைவர்க் கெதிரே திருநெல்வேலிப் போர்க்களத்தில் ; பாய...கடக்கின்றார் - பாவிய சேனைக் கடலையும், வேகமாகச் செல்லும் குதிரைகளின் மிகுதியாகிய வெள்ளத்தையும், சினந்து அழிக்கும் மதயானைகளின் வரிசையினையும் பாப்பிப் போரினை வென்று கடக்கின்றாராகி ; ௩

4072. (இ - ள்) எடுத்து...ஞாட்பின் - படையெடுத்துப் பொருத போர்க் களத்திலே ; இருபடையில்...மடுத்தகடல் - இருபக்கத்துச் சேனை வீரர்களும் வீழ்த் திய நீண்ட யானைகளின் உடற்றுண்டங்களும் குதிரைகளினுடல்கள் அறுபட்ட துண்டங்களும் எதிர்த்துப் போர்செய்யும் சேனை வீரர்களின் கரிய தலைமலையும் ஆகிய இவற்றின் வரும் குருதியின் பெருக்கினைக் கலக்கப்பெற்ற கடலானது ; மீளவும்... பெருக - முன்னே உக்கிரகுமாரபாண்டியர் கடல் சுவற வேல் வாங்கியதுபோல மீண்டும் இவர் வேல்வாங்கும்படி பெருக ; ௪

4073. (இ - ள்) வயப்பரியின்...பல்லிய ஒலியும் - வெற்றி பெற்ற குதிரைகளின் களிப்பால் உண்டாகும் ஒலியும் வீரர்களின் ஆயுதங்களின் ஒலியும், யானைகளாகிய மலைகளின் பிளிற்றின் முழக்க ஒலியும், பலவும் கூடி எழுந்து ஒலிக்கும் பல இடங்களின் ஒலியும்; வியக்கும்...முழக்கெ௧ன - அதிசயிக்கும் ஊழி முடிவு காலத்தில் பெருகும் மேகங்களின் முழக்கமோ என்று சிந்தித்து; மீள...தயங்க - முன்போல (உக்கிரகுமாரர் விட்டது போல்) வீரத் தொடர்பினை உடைய விலங்கினையும் மீட்டும் இன்று தாம் விடுக்கும்படி ஒலிக்க; ௫

4074. (இ - ள்) தீ உமிழும்...செருக்களத்து - தீயைச் சிந்துகின்ற படைகளை வீசியும் எறிந்தும் போர்புரியும் போர்க்களத்தில்; முருக்கும் உடல்...ஆடி - வெட்டுண்ட உடல்கள் தோய்ந்து கிடக்கும் குருதி நிறைந்த மடுவிற் குளித்து நிணங்களை உண்டு கூத்தாடி; போய...அன்றி - முன்னாளில் பணிகொண்ட பூதங்களேயல்லாமல்; பேயும்...பிறங்க - பேயும் உரிய அரிய பணி செய்யும்படி அவற்றுக்கு உணவு அளித்ததாகும் என்று சொல்லும்படி விளங்க; ௬

4075. (இ - ள்) இனைய...பறந்தலையில் - இத்தன்மைத்தாகிய கொடிய போர் மூளும்படி பொருத போர்க்களத்தில்; பனை...சரிய - பனைபோல நீண்ட துதிக்கையினைப் பொருந்திய மதயானைச் சேனையினையுடைய பாண்டியனாரது சேனைகளுக்குத் தோற்றுப் போரிலழிந்த முதன்மை பொருந்திய வடபுலத்தரசனுடைய சேனைகள் சிதைந்து ஓடிப்போக; புனையும்...புனைந்து - வெற்றித்துறையிற் புனையப் படுகின்ற மணமுடைய வாகைமாலையினைப் பாண்டியருக்குரிய வேப்பமாலையுடனே தரித்து; ௭

4076. (இ - ள்) வளவர்பிரான்...கவுரியனார் - சோழர் பெருமானாரது திருமகளாராகிய மங்கையர்க்கரசி யம்மையாரது கலவைச் சாந்தணிந்த தனங்கள் மூழ்கப்பெற்ற அகன்ற மார்பினையுடைய பாண்டியராகிய நின்ற சீர் நெடுமாறனார்; இளஅரவு...அரசளித்தார் - இளநாகத்தினையும் வெள்ளிய பிறையினையும் அணிந்த பெருமானாருக்கு ஏற்ற திருத்தொண்டுகளை யெல்லாம் அளவில்லாத புகழ் பெறும்படி விளங்கச் செய்து சிவனருள் பெருகும்படி அரசாட்சி செய்தனர். ௮

இவ்வேழு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டுரைக்க நின்றன.

4070. (வி - ரை) முன்பாட்டினாலும் இப்பாட்டினாலும் இந்நாயனாரது சரித வரலாற்றினையும் பண்பினையும் பற்றிய முற்பகுதியினை ஆசிரியர் கூறியருளிய கவிநயமும் காவியப்பண்பின் சிறப்பும் கண்டுகொள்க. இவை முன் ஆளுடைய பிள்ளையார் புராணத்தினுள் விரித்துக் கூறியருளியமையால் ஈண்டுச் சுருக்கிச் சுட்டிக்கூறிய அளவில் அமைந்தார். அந்த முற்பகுதியினுள்ளும் ஆளுடைய பிள்ளையாரது திருவருள் பெறும்முன் நிகழ்ந்த நிலையினை முன் ஒரு பாட்டினாலும், அதன் பின் நிகழ்ந்துள்ள நிலையினைப் பின் ஒரு பாட்டானும் வகுத்துரைத்த கவிச்சிறப்பும் காண்க; இங்குத் தொகைநூலுள் இந்நாயனார் "நெல்வேலி வென்ற" தன்மை பற்றியே போற்றப் படுதலால், அதுபற்றியே விரிநூலாகிய இப்புராணத்தினுள்ளும் ஈண்டு மேல் 6 பாட்டுக்களால் விரித்துக்கூறி முடித்த தகுதியும் கண்டுகொள்க. முன் பாட்டுச் சமணர் தொடக்கும் அதினின்றும் விடுபடும் நிலையும் கூறியது. இப் பாட்டு அவ்வாறு விடுபட்டபின் சைவத்திறத்திற் சிறந்த தன்மைபற்றிக் கூறியது. மேல்வரும் ஆறு பாட்டுக்கள் நெல்வேலி வென்ற திறம்பற்றி விரித்துரைத்தன.

தென்னாடு - பாண்டியநாடு ; பரதநாட்டின் தெற்கிருத்தலால் தென்னாடெனப் படும். தென் - அழகிய என்றலுமாம்.

சிவம்பெருக - சிவமணங்கமழ என்க; சைவநெறி சிவம் எனப்பட்டது உபசாரம்; சிவம்பெருக - மங்கலம் பொலிய என்றலுமாம்.

அறம் அளித்தல் - உலகியல் தருமநீதி செலுத்துதல்.

நாமநெறி போற்றல் - சிவாகம சைவநெறியினைப் பற்றிச் சிவநாமமாகிய திருவைந்தெழுத்தின் நெறியினைக் காத்தல்.

சிவம் பெருக - இதுபற்றி அரசாட்சியில் உலகம் முழுதும் சிவநெறி நின்றுய்ந்து பெருகும்படி "கிளரொளித் தூய்மை செய்தே, வாழியப் பதிக ளெல்லாம் மங்கலம் பொலியச் செய்தார்" (2770) "மதுரை வாழ்வார், துன்னிநின் றார்க ளெல்லாந் தூயநீ றணிந்து கொண்டார்" (2755) என்று முன் கூறியவை காண்க.

சொல் நாமநெறி போற்றி - முன்கூறியது உலகத்தைப்பற்றியது ; இஃது கூறியது அரசர் தம்மைப்பற்றியது ; நாமம் - சிவநாமமாகிய திருவைந் தெழுத்து ; போற்றுதல் - கைவிடாது அவ்வழி ஒழுகுதல் ; நாமநெறி - சிவநாமம்பற்றியநெறி ; சொல் - சொல்லாகிய ; சொல் - முறைகளால் எடுத்துச் சொல்லப்பட்ட என்றலுமாம்.

சுரர்...பொன்னூர மணிமார்பில் - சுரர் நகர்க்கோன் - இந்திரன் ஒருகாலத்தில், தமிழ் நாட்டில் மழைமறுக்க, அகத்திய முனிவர் அருளியவாறே சோமவார விரத நியமம் பூண்டு உக்கிரகுமாரபாண்டியர், மழையினைவேண்டிச் சோழ சேர மன்னர்களுடனே இந்திரன் சபையினை அடைய, அவ்விருவரும் அவன் காட்டிய ஆதனத்தினிலமரத், தாம் அவ்வாறிராது அவனுடன் ஒருங்கே இருந்தபோது, அவன் பொறாமை கொண்டு அவருக்குப் பரிசு தருவானைப்போலத் தாங்குதற்கரிய பொன்னாரத்தை அளிக்க, அதனைப் பூமாலைபோல எளிமை பெறத்தாங்கினார் என்பது வரலாறு. திருவிளையாடற் புராணத்துட் பார்க்க ; உக்கிரகுமார பாண்டியர் செய்த அரிய செயல்போலவே அவர்பின் வருவாரும் அவ்வாரந் தாங்குதலின் இவ்வாறு கூறப்பட்டது. அன்றியும் மரபின் முன்னையோர் பண்பு அவர்பின் வருவோர்க்கும் கூட்டி உரைப்பதும் மரபாம். மேல் "வடிவேல் வாங்கிட" (1072) "சயத் தொடர் வல்லியும் இன்று தாம் விடுக்கும்படி" (4073) என்ற வரலாறுகளும், உக்கிரகுமார பாண்டியர் கடல்சுவற வேல்விட்டதும், மேகங்களைச் சிறையிட்டதும் ஆகிய திருவிளையாடற்புராண வரலாறுகளைக் குறித்தன. தானை - தன்பால.

பொலிகின்றார் - கடக்கின்றாராய்ப் (4071), பெருக (4072), தயங்கப் (4073) பிறங்கப் (4074), புனைந்து (4075) அரசளித்தார் (4076) என்று இவ்வைந்து பாட்டுக்களையும் கூட்டித் தொடர்புபடுத்தி முடித்துக் கொள்க.

பொலிகின்றார் - பொலிகின்றாராகி : முற்றெச்சம். 2

4071. (வி - ரை) அளிப்பார் - வினையாலணையும் பெயர் ; சேயபுலந்தெவ்வர் - வடபுல மன்னவர் ; தென்னாட்டுக்குச் சேய்மை வடபுலமாதலின் வடபுலத்தை சேயபுலம் என்றார். நன்மைக்குச் சேய்மையார் என்ற குறிப்புமாம்.

அமர் வேண்டிவந்தேற்ற...செருக்களத்து - வேண்டி - விரும்பி ; இந்நாயனார் போரினை விரும்பிச் சென்றாரலர் ; வடபுலமன்னன் வலிந்து வந்து மண்ணாசையாற் போரேற்றனனாதலிற், போரில் முனைந்து அவனை வெல்லவேண்டியதாயிற்று. இந் நெல்வேலிப் போர் நாட்டுநடப்புச் சரிதத்துள் சிறந்த பேர்பெற்ற நிகழ்ச்சியாம். மூர்த்தி நாயனார் புராணவரலாறும் காண்க. இவர் போரினைவிரும்பிச் சென்றார்

அலர் ; தற்காப்பின் பொருட்டே இதனை மேற்கொண்டார் என்பது "கொண்ட சிந்தையா னேல்வேலி வென்ற" என்றதன் குறிப்பாகும்.

பாய - எங்கும் பரவிய ;

படைக்கடல் - பரிமா வெள்ளம் - களிற்றின் நிரை - சேனைகள் பெரும் அளவினவாதலின் அவற்றைக் கடல் - என்றும், அவற்றிற் சுருங்கினவாதலின் பரிகளை வெள்ளம் - என்றும், யானைகள் அவற்றினும் சுருங்குதலின் நிரை - என்றும் கூறியது கவிநயம்.

பரப்பி . அணிவகுத்துப் பரப்பி நிறுத்தி.

அமர் கடக்கின்றர் - போரினை வென்று மேற்செல்கின்றாராய் ; கடத்தல் - அழித்து மேற்செல்லுதல் ; 3

4072. (வி ரை) எடுத்து - படையெடுத்து ; உடன்ற - மாறுபட்ட ; பொருத ; முனைஞாட்பு - போர்க்களம். இருபெயரொட்டு ;

படுத்த - வெட்டி வீழ்த்திய, கொன்ற ; துணி - துண்டங்கள்.

அறுதறை - அறுபட்ட குறை உடல்கள்.

பாய்மா - குதிரை ; கருந்தலை மலை - மலைபோலக் குவிக்கப்பட்ட வீரர்களின் கரியதலைகள் ; தலைக்குவியல் பற்றிப் புகழ்ச்சோழநாயனர் புராணவரலாறு பார்க்க.

செந்நீர்...பெருக - இரத்த ஆறுபாய்ந்து கடல் பெருகிற்று ; அது பெருகிய செயல் முன் உக்கிரகுமார பாண்டியர், பெருகிவந்த கடல்சுவற வேல்வாங்கியது போல மீளவும் இவர்வேல், செந்நீர் - (இரத்தம்) வாங்கும்படி பெருகியது போன்ற தென்பதாம்.

மீளவும் - முன் அவர் செய்த அது போல மீண்டும் இவர் வாங்கிட என்று உம்மை இறந்தது தழுவிய எச்சவும்மை. மேற்பாட்டில் வல்லியும் என்ற இடத்தும் இவ்வாறே கொள்க.

வாங்கிட - வலித்து எறிந்திட.

அவர் செந்நீர்—என்பதும் பாடம். 4

4073. (வி ரை) படைக்கல ஒலி - படைக்கலங்களைச் சுழற்றுதல் வீசுதல் எறிதல் மோதுதல் இவற்றால் எழும் ஒலி ; வயம் - வெற்றி.

கயப் பொருப்பு - பொருப்பு - மலை ; மலை போன்ற யானை ; கயம் - யானை ; முழக்கு - பிளிற்றெலி ;

பல்லியம் - இவை போரில் வீரர்களுக்கு ஊக்கம்தர முழக்கப்படுவன, வெற்றிச் சங்கு, முழவு, முதலியனவுமாம். முருக்கும் உடல் - வெட்டுண்ட உடல்களில் ;

ஒலி - இவை ஒவ்வோர் பொருள் குறிப்பன ஆதலின் ஒலி என்றார்.

உகக்கடை நாளின் மேக முழக்கு என - உகக்கடை நாள் - ஊழி; முன்கூறிய பலவகைப் பேரொலிகளும் கூடுதலின் பெருமுழக்காயின என்பார் வாளா மேக மென்னது உகக்கடை நாளின் மேகம் என அடைகொடுத் தோதினர். முன் உக்கிரகுமார பாண்டியர் வரலாற்றிற் போந்த பெரு மேகக்கூட்டங்களின் குறிப்புமாம்.

மீள - மீளவும் ; இறந்தது தழுவிய எச்சவும்மை விரிக்க.

சயத் தொடர் வல்லியினையும் - விடுக்கும்படி - சயத் தொடர்வல்லி - வெற்றியினால் பகைவரைப் பிணிக்கும் விலங்கு. விடுத்தல் - ஏவுதல் ; வல்லியினையும் - என இரண்டனுருபும் சாரியையும் விரிக்க ; தொடர் - பிணிப்படுக்கும் எனப் பிற வினைப் பொருளில் வந்தது.

தயங்குதல் - விளங்குதல்.

எனுழை—என்பதும் பாடம். 5

4074. (வி ரை) தீ – படைகள் மோதுதலால் தீப்பொறி பறக்கும் என்பது ; தீ உமிழும் – தீப்போன்று ஒளிவிளங்கும் என்றுமாம்.

படைவழங்குதல் – படைகளை ஏவிப் போர்புரிதல்.

முருக்கும் – வெட்டப்பட்ட ; உடல்தோயும் நெடுங்குருதி - குறை உடல்கள் அங்கு வடிந்து நின்ற இரத்தப்பெரு மடுவில் தோய்ந்துகிடந்தன என்பது. Body lay in a pool of blood என்பர் நவீனர்.

குருதி மடுக்குளித்து - இரத்தமாகிய மடுவிற் குளித்து.

நிணம்துய்த்து – நிணத்தினை உண்டு ; நிணம் - இறைச்சி ; ஆடி - கூத்தாடி ; இவை போர்க்களத்திற் கூடும் பேய்களின் செயல்களாகக் கூறப்படுவன, "சூர் முத றடிந்த சுடரிலை நெடுவேல்...துணங்கை தூங்க" என்ற திருமுருகாற்றுப் படைப்பகுதியும், பரணி நூல்களில் பேய் – காளி – பூதம் முதலியவற்றைப்பற்றி உரைப்பனவும் இங்குக் கருதத்தக்கன.

போயபருவம் – முன்காலத்தில் : பணிகோள் பூதங்களேயன்றி - நெல்வேலிப் போரில் வடபுலமன்னரின் விறலினை நோக்கிப் பாண்டியன் சிவனை நினைய, நெல்லையப்பர் ஏவலினால் சிவபூதகணங்கள் வந்து பகைவரை அழித்தன என்பது தலபுராண வரலாறு.

உணவு அளித்த தேன - பேய் பூதங்களுக்கு விருந்து அளித்தது என்று சொல்லும்படி.

பிறங்குதல் – விளங்குதல். 6

4075. (வி - ரை) நெடுஞ்சமர் - கொடுமையாலும் காலத்தாலும் நீண்ட போர்.

பனைநெடுங்கை மதயானை - 'பனைக்கை மும்மத வேழம்' (அரசு - தேவா)

இகலுழந்த - போர்புரிந்த ; பறந்தலை - போர்க்களம்.

பஞ்சவனார்- பாண்டியரது ; ஆறனுருபு விரிக்க.

முனை அழிந்த - போரில் தோற்ற ; முதன் மன்னர் - முதன்மை பெற்ற அரசர்; முதன்மையாவது படை வீரம் முதலியவற்றால் மேம்படுதல் ; சரிதல் அழிந்து சிதைதல் ; இறத்தல் ; முதன்மன்னர் - முதன் மன்னராயிருந்தும் அவர் படை சரிய என்று இழிவு சிறப்பும்மை விரிக்க.

புனையும் நறும்தொடை வாகை - புனையும் - வெற்றி பெற்றோர் புனைதற்குரிய வாகைத்தொடை என்க. வாகை மாலை சூடுதல் வெற்றிக்குறி ; வாகை-வெற்றிமாலை.

பூழியர் வேம்பு - வேப்பமாலை பாண்டியர்க்குரியது; பூழியர் - பாண்டியர். 7

4076. (வி - ரை) வளவர்பிரான் - சோழ அரசருக்கு ; நான்கனுருபுவிரிக்க. "வளவர்கோன் பாவை" (தேவா).

மங்கையருக்கரசியார்...கவுரியனார்-கவுரியனார்-நெடுமாற பாண்டியர் ; மங்கையர்க்கரசியாரது கணவனார் என்றபடி ; "முத்தின்றாழ் வடமுஞ் சந்தனக் குழம்பு நீறுந்தன் மார்பினின் முயங்கப், பத்தியார் கின்ற பாண்டிமா தேவி" (தேவா).

இளஅரவு வெண்பிறை - இள அரவினையும் வெள்ளிய பிறையினையும் என்க. எண்ணும்மைகள் தொக்கன. "இள நாகமொ டேனம்" (தேவா). அரவு, அரா - என்பன ஒரு சொல்.

ஏற்ற திருத்தொண்டெல்லாம் - விளக்கி - சிவனுக் குகந்தனவாக விதிக்கப்பட்ட திருத்தொண்டின் வகைகளை எல்லாம் விளக்கி ; விளக்குதல் - செய்தும் செய்வித்தும் உலகறியப் பண்ணுதல்.

அருள்பெருக - சிவபிரானருள் பெருக உளதாகும்படி ;

இளவளவேண்—தொண்டரெல்லாம்—என்பனவும் பாடங்கள். 8

4077. திரைசெய்கட லுலகின்கட் டிருநீற்றி னெறிவிளங்க
உரைசெய்பெரும் புகழ்விளக்கி யோங்குநெடு மாறனார்
அரசுரிமை நெடுங்கால மளித்திறைவ ரருளாலே
பரசுபெருஞ் சிவலோகத் தின்புற்றுப் பணிந்திருந்தார். ௯

(இ - ள்) திரைசெய்...நெடுமாறனார் - அலைகளையுடைய கடல் சூழ்ந்த உலகில் திருநீற்று நெறியாகிய சிவநெறி விளக்கமடையும்படி எடுத்துச் சொல்லப்படும் பெரிய புகழினை விளங்கவைத்ததனால் மேன்மை பொருந்திய நின்றசீர் நெடுமாற நாயனார் ; அரசுரிமை...அளித்து - நீண்டகாலம் அரசாட்சி செய்திருந்து; இறைவரருளாலே... பணிந்திருந்தார் - சிவபெருமானது திருவருளாலே எல்லாராலும் பரவப்படுகின்ற பெரிய சிவலோகத்தினை அடைந்து இன்பம் பொருந்திப் பணிந்தமர்ந்திருந்தனர்.

(வி - ரை) திருநீற்றின் நெறி - சிவநெறி ; விளங்க...விளக்கி - முன்னர்ப் "பூதிசா தனவிளக்கம் போற்றல்பெறு தொழி"ந்த நிலையும் (1916), "இருவர்தம் பாங்கு மன்றிச் சைவமங் கெய்தா தாக" (2501) என்ற நிலையும், நீங்கித் திருநீறு எங்கும் விளங்கிற்று என்று சொல்லப்பெறும் பெரும்புகழினை விளக்கி ;

ஓங்கும் - அதனால் ஓங்கிய ; ஓங்கும் - "வேந்தனு மோங்குக" என்ற திருப்பாசுரத்தினாலே கூனிமிர்ந்தோங்கிய (2746) என்ற குறிப்புமாம்.

நெடுங்காலம் அரசுரிமை அளித்து - நீண்ட நாள் அரசாட்சி செலுத்தி ; சிவலோகத்து...இருந்தார் - பணிதலால் இன்ப முற்று நிலை பெற்றிருந்தனர் ; இன்பம் - சிவானந் தானுபவத்திற் றிளைத்தல் ; பணிந்து - முத்த நிலையிலும் ஆண்டானடிமைத் திறமே உள்ளது ; "உயிர்தானும் சிவானுபவ மொன்றினுக்கே யுரித்து" (சித்தி) 9

4078. பொன்மதில்சூழ் புகலிகா வலரடிக்கீழ்ப் புனிதராந்
தென்மதுரை மாறனார் செங்கமலக் கழல்வணங்கிப்
பன்மணிக டிரையோதம் பரப்புநெடுங் கடற்படப்பைத்
"தொன்மயிலை வாயிலார்" திருத்தொண்டி னிலைதொழுவாம். ௧0

(இ - ள்) பொன்...வணங்கி-பொன் பூண்ட மதில்சூழ்ந்த சீகாழிக் கதிபராகிய ஆளுடைய பிள்ளையாரது திருவடிச் சார்பினாலே புனிதராகிய தென்மதுரையில் அரசாண்ட நெடுமாறனாரது செந்தாமரை மலர்போன்ற பாதங்களை வணங்கி, (அத்துணைகொண்டு) ; பன்மணிகள்...தொழுவாம் - பல மணிகளையும் அலைகளாலே நீர்விளிம்பிற் பரப்புகின்ற நீண்ட கடற்கரையில் உள்ள தொன்மையாகிய மயிலாபுரியில் வாழ்ந்த வாயிலார் நாயனாரது திருத்தொண்டின் தன்மையைத் தொழுது துதித்துச் சொல்வோம்.

(வி - ரை) இச்சரித முடிப்பும், மேல்வருஞ் சரிதந் தோற்றுவாயுமாகிய கவிக் கூற்று.

புகலிகாவல ரடிக்கீழ்ப் புனிதராம்...மாறனார் - இந்நாயனாரது சரிதசாரம் ; அமண் சார்பு நீங்கி ஆளுடைய பிள்ளையாரது திரு அருளினாலே சிவச்சார்பில் மீண்டு தூய்மைபெற்ற நிலையே இவர் திருத்தொண்டத் தொகையுட் போற்றப்பெறும் தன்மை தந்தது என்பதாம்.

தென்மதுரை-வடமதுரையினின்றும் வேறு பிரிக்கத் தென் என்றார் என்றலுமாம். இனியைபு நீக்கிய விசேடணம். கடைச்சங்கப் புலவர் சங்கமிருந்து தமிழாராய்ந்தது உத்தர மதுரையென்று இறையனாரகப்பொருள் உரை கூறும்.

பன்மணிகள் திரைஓதம் பரப்பும் நெடுங்கடற் படப்பை - பன்மணிகள் - கடல் படுமணிகளாகிய முத்து பவளம் முதலாயின ; இவற்றைத் திரைஓதம் பரப்புதலாவது அலைகள் வாரிக்கொணர்ந்து கரையில் வீசுதல். ஓதத்திரை - என்க. அலைநீர் விளிம்பு. படப்பை - பக்கத்துள்ள இடம். ஈண்டுக் கடற்கரை நகரம் என்றலுமாம்.

பன்மணிகள்.. கடல் - "துறைக்கொண்ட செம்பவள மிருளகற்றுஞ் சோதி" என்ற திருத்தொண்டத்தொகைக் கருத்தினை விரித்த படி.

"தென்மயிலை வாயிலார்" - திருத்தொண்டத் தொகை ஆட்சி.

தொழுவாம் - தொழும் வகையாற் சொல்லுவோம். "பெருந்தகையார் தமைப் போற்றி" (4088) என்று முடித்துக் காட்டுதலும் காண்க. 10

சரிதச்சுருக்கம் : நின்றசீர் நெடுமாறர் புராணம் :—மங்கையர்க்கரசியாரின்கணவராகிய நெடுமாறனார், சமண் வலையிலகப்பட்டிருந்து, ஆளுடைய பிள்ளையாரருளாலே சைவத்தில் மீண்டு வந்து சிவநெறிபெருகச் செங்கோல் செலுத்தினார். போரேற்று வந்து எதிர்த்த வடபுல மன்னரை நெல்வேலிச் செருக்களத்தில் வெற்றி கொண்டனர். சிவனுக் கேற்ற திருத்தொண்டுகள் எல்லாம் செய்து, நீண்டகாலம் திருநீற்று நெறி விளங்கப் புகழ் பெருக அருள் பெருக அரசாட்சி செய்திருந்து சிவனுலகடைந்து பணிந்து இன்ப முற்றிருந்தார்.

கற்பனை :—(1) தடுமாறு நெறிசார்ந்தோர் குருவருளால் விடுவிக்கப்பெறுவர்.

(2) உடலை வாட்டுதலே தவமாமென்னும் சமணநெறி நன்னெறியாகாது.

(3) சிவநெறி பெருகச் செங்கோலுய்த்தல் அரசர்க்குச் சிறப்பினைத்தரும் கடமையாகும்.

(4) தாம் போரினை விரும்பி மேற் செல்லாவிடினும், போரேற்று எதிர்த்து வந்த பகைவரைப் போர்க்களத்தில் போர்செய்து வெற்றி கொள்ளுதல் அரச நீதியாம்.

(5) மனைவியாரது நன்மை கணவருக்குப் பெருநலத்தை விளைக்கும்.

தலவிசேடம் : மதுரை :—முன் உரைக்கப்பட்டது. III-பக். ௩௩௪0.

நின்றசீர் நெடுமாற நாயனார் புராணம் முற்றும்.



சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# 51. வாயிலார் நாயனார் புராணம்

தொகை

" துறைக்கொண்ட செம்பவள மிருளகற்றுஞ் சோதித்
தொன்மயிலை வாயிலா னடியார்க்கு மடியேன் "

—திருத்தொண்டத் தொகை (8)

வகை

*மாறு வருளரன் றன்னை மனவா லயத்திருத்தி*
*ஆறு வருளா லணிவிளக் கேற்றி யகமலரால்*
*வீறு மலரளித் தன்பேனு மெய்யமிர் தங்கொடுத்தான்*
*வீறார் மயிலையுள் வாயிலா னென்று விளம்புவரே.*

—திருத்தொண்டர் திருவந்தாதி (61)

விரி

4079. சொல்வி ளங்குசீர்த் தொண்டைநன் னாட்டிடை
மல்ல னீடிய வாய்மை வளம்பதி
பல்பெ ருங்குடி நீடு பரம்பரைச்
செல்வ மல்கு திருமயி லாபுரி. க

புராணம் :—முன் கூறியாங்குக் கொள்க.

தொகை :—கடற்றுறையிலே அலைகளால் அடித்துக் கொண்டுவரப்பட்ட செம்பவளங்கள் இருளினைப் போக்கும் ஒளி வீசுதற்கிடமாகிய தொன்மை மிக்க திருமயிலாபுரியில் வந்த வாயிலார் நாயனாரது அடியவர்க்கும் நான் அடியேனாவேன்.

துறை - கடற்கரை ; செம்பவளம் - அலைகளால் அடித்துக்கொண்டு வரப்பட்ட பவளம் ; இங்குப் பவளம் என்றது பவளத்தைக் கொடிபோலக் கட்டிவாழும் அவ்வகை ஒளியுள்ள சிறு பூச்சிகளை ; இவை அலைகளின் முகத்தால் அடித்துவரப்பட்டு இரவிலும் ஒளி செய்வன ; அலைவிளிம்புகள் இரவினும் சுடர்விட்டுக் காணப்படுதல் இவ்வகைப் பூச்சிகளின் ஒளியாலாவது என்பர் ; பவளம் என்றதனால் இனம் பற்றி முத்து முதலியனவுங் கொள்க. இதனை ஆசிரியர் "பன்மணிக டிரையோதம் பரப்பும்" (4078) என்று முன் கூறிப் பொருள் விரித்தருளினர்.

தொன்மயிலை - இதன் தொன்மையாகிய பெருமை ஆளுடைய பிள்ளையார் திருப் பதிகத்தாலும், அதனால் உலகறிய வெளிப்பட்ட அற்புதத்தாலும் விளங்கும்.

வகை :—மாறு...இருத்தி - மாறுத அருளினையுடைய சிவனை மனமாகிய கோயிலின்கண்ணே தாபித்து ; ஆறு...ஏற்றி - தணியாத அருளினாலே அணிவிளக்கினை ஏற்றி; அகமலராம்...அளித்து - அகப்பூசையில் விதித்த கொல்லாமை பொறை முதலாகிய மேம்பாடுடைய எண்மலர்களையும் சாத்தி; அன்பென்னும்...கொடுத்தான்- அன்பு என்னும் சத்தாகிய அமுதத்தினை நிவேதித்தவர் ; வீறு...விளம்புவரே - பெருமை பொருந்திய திருமயிலாபுரியில் வந்தவதரித்த வாயிலார் என்று சொல்வர் (பெரியோர்).

மயிலையுள் - இருத்தி - ஏற்றி - அளித்துக் - கொடுத்தவரை - வாயிலார் - என்று விளம்புவர் ; விளம்புவர் என்றதற்கெழுவாய் பெரியோர் என்பது அவாய் நிலையால் வந்தது ; இந்நாயனார் சிவயோகத்தமர்ந்து இடையறாது அகப்பூசை செய்து பேற டைந்தவர் என்பதாம். வகைநூ லாதரவே பெரிதும் கொண்டு ஆசிரியர் இந்நாயனார் புராண வரலாறும் பண்புங் கூறியருளினர் ; (4086) பார்க்க. மனக்கோயில் மனத்தைக் கோயிலாக்கி; " மறவாமை யானமைத்த மனக்கோயில் "; அணிவிளக்கு- "உணரும் ஒளிவிளக்கு"; வீறுமலர்-புறப்பூசைக்கு விதித்த அலரி-நந்தி வட்டம்முதலிய எண்வகை மலர்களினும் சிறந்தவை யாதலின் வீறும் என்றார்; வீறுமயிலை-செல்வம்- குடி முதலியவற்றின் சிறப்பு ; தொகை நூலும் விரிநூலும் பார்க்க.

ஊரும் பெயரும் தொகை நூல் தொகுத்துரைத்தது. அவற்றுடன் அடிமைத் திறமும் பண்பும் வகை நூல் வகுத்தது.

விரி :—4079. (இ - ள்) சொல்...பதி - நூல்களில் எடுத்துச் சொல்லும் புகழ்ச் சொற்கள் விளங்கும் சிறப்புடைய தொண்டை நன்னாட்டிலே வளப்பம் மிகுந்த, வாய்மையினாற் சிறந்த வளத்தையுடைய பதியாகும் ; பல்...திருமயிலாபுரி - பல பெருங்குடிகளும் நீடுகின்ற வழிவழி தொடர்ந்து வரும் செல்வம் நிறைந்த திருமயிலாபுரியாகும்.

(வி - ரை) சொல் விளங்குசீர்-இதுபற்றி முன்னர்த் திருக்குறிப்புத் தொண்ட நாயனார் புராணத்தும், பிறாண்டு முரைத்தவை பார்க்க. சொல் - நூல் ; சொல் - புகழ் என்றலுமாம்.

மல்லல்...வாய்மைவளம் - மல்லல் - செல்வச் செழிப்பு ; வாய்மைவளம் - ஒழுக்கமேம்பாடு; பெருங்குடி நீடுதல்-பல பெருங்குடி மக்கள் பலவகையினரும் பெருகுதல் ; இது நகரச் சிறப்பு.

பரம்பரை - என்பதனைக் குடி என்பதனுடனும், செல்வம் என்பதனுடனும் சேர்த்துரைக்க; இடையில் வைத்தது கவிநயம்; பரம்பரை-வழிவழி வரும் தொடர்பு; வழிவழி வரும் செல்வம் அமைதியுடன் சிறந்து நல்வழிப் படுதலும், புதிதின் வருதல், பெரும்பான்மை, அவ்வாறின்றிப் பற்பல கேடுகளுக்குக் காரணமாதலும் உலகியலில் காணப்படும் உண்மையாதல் குறித்தது.　1

4080. நீடு வேலைதன் பானிதி வைத்திடத்
தேடு மப்பெருஞ் சேமவைப் பாமென
ஆடு பூங்கொடி மாளிகை யப்பதி
மாடு தள்ளு மரக்கலச் செப்பினால்.　௨

(இ - ள்) நீடு வேலை - பெரியகடல் ; தன்பால்...சேமவைப்பாமென-தன்னிடமுள்ள மணி முதலிய நிதிகளை வைத்திடுதற்குத் தேடிப் பெற்றதொரு பெரிய பண்டாரம் இது என்று சொல்லும்படி; ஆடு...செப்பினால்-ஆடுகின்ற அழகிய கொடிகளையுடைய அப்பதியின் பக்கங்களில் மரக்கலங்களாகிய சிமிழினால் தள்ளும்.

(வி - ரை) வேலை - தள்ளும் என்று இயைக்க. தேடும் - தேடிய ;

தன்பால் நிதி - வைத்திடச் - சேமவைப்பாம் என - தன்னிடமுள்ள நிதிக் குவைகளை எல்லாம் சேர்த்துக் காவல் பொருந்தச் சேமித்து வைக்கும் இடம் இதுவேயென்று, கடல், தேடி இதனிடத்துத் தள்ளும் என்பது தற்குறிப்பேற்ற அணி; கடல் படு பண்டங்கள் வாணிபத்துறையில் இங்கு மிக்கிருந்தன என்பதாம் ; மயிலை நகர்ச் சிறப்பு முன் ஆளுடைய பிள்ளையார் புராணத்தினுள்ளும், திருக்குறிப்புத்தொண்ட நாயனார் புராணத்துள்ளும், உரைத்தவை பார்க்க.

வேலை தன்பால் நிதி - பவளம் முத்து முதலிய மணிகளும் சங்கு முதலியவைகளும் முதலாகக் கடல்படு நிதியங்கள். தன்பால்-தன்பாலின் உள்ள; சேமவைப்பு - பண்டாரம். பொக்கிசம் என்பர். சேமவைப்பு-இரு பெயரொட்டுப் பண்புத் தொகை.

செப்பு - சிமிழ் ; மணிகளைச் சிமிழில் வைக்கும் இயல்பு கருதி அவற்றைக் கொணரும் மரக்கலங்களைச் செப்பு என்று உருவகித்தார்.

மாடுதள்ளும் - தள்ளும் என்ற இலேசினால் செல்வச் செழிப்பும், மரக்கலங்களினின்றும் பண்டங்களைத் தள்ளி எடுக்கும் இயல்பும் குறிக்கப்பட்டன. மாளிகைமாடு - கடற்கரையின் மாளிகைகள் கலப்பண்டங்களை நேரே தள்ளக் கொள்ளும் தன்மையில் அமைந்துள்ளன என்பது குறிப்பு: (docks-yards); "மரக்கல மீனப்படப் பணைக் கரை நிரைக்கும்" (1932) என்றதும், ஆண்டுரைத்தவையும் பார்க்க. 2

4081. கலஞ்சொ ரிந்த கரிக்கருங் கன்றுமுத்
தலம்பு முந்நீர் படிந்தணை மேகமு
நலங்கொள் மேதிநன் ஞகுந் தெரிக்கொணு
சிலம்பு தெண்டிரைக் கானலின் சேணெலாம். ௩

(இ - ள்) சிலம்பு...சேணெலாம் - ஒலிக்கின்ற தெளிந்த அலைகளையுடைய கடற்கரைக்கானலின் பரந்த நில முற்றும்; கலம்...கன்றும்-(அயல் நாடுகளினின்றும் கொணர்ந்து) மரக்கலங்கள் இறக்கிய யானைக்கன்றுகளும் ; முத்து...மேகமும் - முத்துக்களைக் கொழித்து ஒதுக்கும் கடலிற் படிந்து அணைகின்ற மேகங்களும் ; நலம் கொள்...நாகும் - செழிப்புடைய எருமைக்கன்றுகளும் ; தெரிக்கொணு - நிற ஒப்புமையினால் வேறுபிரித் தறியக் கூடாவாம்.

(வி - ரை) கலம்...கரிக்கருங்கன்று - மலைநாடு முதலாகிய அயல்நாடுகளினின்றும் யானைக்கன்றுகள் கப்பல் வாணிக முகத்தாற் கொண்டுவரப் படுகின்றன என்னும் செல்வச் செழுமையுணர்த்துதல் இப்பாட்டின் கருத்து. "வேழ முடைத்து மலைநாடு"

முத்தலம்பு முந்நீர் - முத்துக்களைக் கரையிற் கொழிக்கும் கடல்; முந்நீர் - கடல் ; ஆக்கல் - அளித்தல் - அழித்தல் என்ற முத்தொழிலும் செய்தலாற் போந்த காரணப் பெயர் என்பர்.

முத்தலம்பு...மேகம் - சிப்பிகளின் அகட்டில் மேக நீர்த்துளி வீழ்ந்தவையே முத்தாய் விளையும் என்பதொரு மரபு ; அவ்வாறு தம்மாலாக்கப்பட்ட முத்துக்களைக்

கடலானது கரையிற் கொழிக்கத் அத் தொடர்புபற்றி அவற்றின் மீது படியும் மேகம் என்றதொரு குறிப்பும் காண்க.

நலம் - வண்ணமும் செழுமையும் முதலிய தன்மைகள்.

மேதி - எருமை ; நாகு - ஒரு சார் விலங்குகளின் இளமைப் பெண்பாற் பெயர். "நாகும்...பெண்ணே" என்பது இலக்கணம். (தொல். பொருள் - மரபு - 3). "பான்மறை நாகு கறப்பன பாலாவும்" (936).

தேரிக்கோணு-வேறுபாடு பகுத்துத் தெரிக்க இயலா: தேரிக்கலொண்ணு என்பது ஈற்றகரங்கெட்டது ;

திரைக்கானல் - அலைகள் வீசியெறியும் கடற்கரைக்கானல்.

சேணெலாம் - நெடுந்தூரம் அகன்ற இடமெல்லாம்.

மேதி - மருதக்கரு - திணை மயக்கத்தால் இந்நிலத்தில் வந்தன என்க. 3

4082. தவள மாளிகைச் சாலை மருங்கிறைத்
துவள்ப தாகை நுழைந்தணை தூமதி
பவள வாய்மட வார்முகம் பார்த்தஞ்சி
உவள கஞ்சேர்ந் தொதுங்குவ தொக்குமால். ச

(இ - ள்) தவள...மருங்கு - வெண்ணிற முடைய மாளிகைகளையுடைய சாலைகளின் பக்கத்தில் ; இறை...தூமதி - இறப்புக்களில் அசைகின்ற கொடிகளின் வரிசையுள் நுழைந்து அணைகின்ற தூய வெள்ளியமதி ; பவள...அஞ்சி - பவளம் போன்ற வாயினையுடைய பெண்களின் முகங்களைப் பார்த்துப் பயந்து ; உவளகம்... ஒக்குமால் - மறைவிடத்தினைச் சேர்ந்து ஒதுங்குவது போலும். ஆல் - அசை.

(வி - ரை) உயர்வாகிய மாடங்களின் மேல் தூக்கிய கொடி வரிசைகளுள் நுழைந்து வருவதுபோல எழுகின்ற மதி, அச்சத்தால் மறைந்து ஒதுங்குவது போன்றது என்பது. தற்குறிப்பேற்றம். நீண்ட சோலைகளினூடும் மேகவரிசைகளினூடும் உயர்ந்த கோபுரங்களின் கொடி வரிசைகளினூடும் முழுமதி வரும்போது அதினின்றும் மறைந்தும் வெளிப்பட்டும் விட்டிமைக்கும் ஒளியானது இவ்வாறு காணப்படுவது உண்மை இயல்பு ; இறை - வீட்டிறப்புக்கள். இறை - தங்குதல் என்று கொண்டு பக்களில் தங்குதலையுடைய என்றலுமாம் ; "புள் ளிறைகூரும்" (அகநா); இறை கூரும் - தங்குதல்.

மதி...மடவார் முகம்பார்த்து அஞ்சி - நாம் ஒருமதி : இங்கு நம்போன்ற பல மதிகள் காணப்படுகின்றன என்பதும், இவர்களின் முகத்தின் அழகுக்கு நாம் ஒப்பாகோம் என்பதும் அச்சத்துக்குக் காரணம் : "தேமல ரளகஞ் சூழுஞ் சிலமதி தெருவு சூழும்" (553). மதி - நிறைமதி ;

உவளகம் - மறைவிடம். காவற்சாலை என்றலுமாம் ;

பவளவாய் - நம்மிடத்துள்ளது கருமையுடைய முயற்கறை ; இவர் முகத்துள்ளது செவ்விய வாய் என்றதும் அச்சத்துக்குக் காரணமாக உள்ள குறிப்பு. ஈண்டு வாய் - உதடு ;

மருங்குறை—என்பதும் பாடம். 4

4083. வீதி யெங்கும் விழாவணி காளையர்
தூதி யங்குஞ் சுரும்பணி தோகையர்

ஓதி யெங்கு மொழியா வணிநிதி
ம் பூதிமணி மாடங்கள். ௫

(இ - ள்) **வீதி எங்கும் விழா அணி** - வீதிகளில் எவ்விடத்தும் திருவிழாக்களின் அலங்காரங்களாம்; **காளையர் தூதியங்கும்...ஓதி யெங்கும்** - காளையர்களின் தூதாக இயங்குவனபோல உள்ள வண்டுகள் பெண்களின் கூந்தல்களிலெங்கும் ஆம்; **பூதி...மாடங்கள்** - சுண்ணச்சாந்து பூசி அலங்கரிக்கப்பட்ட மாடங்களில் எங்கும்; **ஒழியா அணிநிதி** - அழகிய நிதிகளும் அணிகளும் நீங்காதுள்ளன.

(வி - ரை) விழாவணி-திருவிழாக்களின் பொருட்டுச் செய்யும் அலங்காரங்கள். **எங்கும்** - என்ற மூன்றிடங்களிலும் உள்ளன என்க. 78 முதல் 83 வரை பாட்டுக்கள் பார்க்க.

**அணி** - இம்மூன்றிடங்களிலும் அணி உள்ளன என்பது.

**காளையர்** - காளைபோன்ற இளைஞர்கள். **தோகையர்**-மயில்போன்ற பெண்கள். "தளிரடிமென் னகைமயிலைத் தாதவிழ்தார்க் காளைக்கு" (1727).

**தூது இயங்கும்** - தூது போல அசையும்; காளையர்களால் தரப்பட்ட மலர்களைக் கூந்தலில் அணிதலால் அதில் மொய்க்கும் வண்டுகள் அவர்களது தூது போல இயங்குகின்றன; "தாதுகின் றூதப் போய்வருந் தும்பிகா ளிங்கே...மணியம் பலவனைக் கண்டென் மனத்தையுங் கொண்டுபோ தூமினே" (திருவிசைப்பா - கருவூர் - கீழ்க்-மணி - 3) **ஓதி** - கூந்தல்.

**காளையர் - தோகையர் - தூதியங்கும்** - என்றதனால் இவரிருப்பிடங்களின் அணிமை குறிப்பிற் கூறப்பட்டது; காளையர் பொருட்டு ஊடல் தீர்க்கத் தலைவியரிடம் தூது செல்லும் தோகையர் என்றுரைப்பாரும்; பெண்களின் ஓதிகளில் அணி ஒழியா என்று கூட்டி உரைப்பாரும்; வீதி யெங்கும் விழவணியும் காளையர்களும் தோகையர்களும் அணி நிதிகளும் மாடங்களும் உள்ளன என்றுரைப்பாரும் ஆகப் பலதிறத்தினர் உரையாசிரியர்கள். தூதாக விடுக்கப்படும் பொருள்களுள் வண்டும் ஒன்று.

**பூதி** - சுண்ணச்சாந்து; **பூதி** - திருநீறு என்று கொண்டு அணிநிதி என்னும் இவ்வுலகச் செல்வமும், (வி)பூதி என்னும் வீட்டுலகச் செல்வமும் மாடங்கள் எங்கும் நிறைந்துள்ளன என்றலுமாம். **பூதி** - சிவச்செல்வம்.

இவ்வாறு பலதிறச் சுவைபட உரைக்க நின்ற ஒப்பற்ற அணிநலம் படைத்தது இப்பாட்டின் கவிநயம். **எங்கும்** என்ற முடிபுகள் மூன்றும், **அணி** என்பன மூன்றும் வைத்தலால் மூன்று முடிபாக உரைத்தல் ஆசிரியர் கருத்தென்பது கருதப்படும். இக்குறிப்பு இராமநாதச் செட்டியார் குறிப்புரையினும் கண்டது. 5

4084. மன்னு சீர்மயி லைத்திரு மாநகர்த்
தொன்மை நீடிய சூத்திரத் தொல்குலம்
நன்மை சான்ற நலம்பெறத் தோன்றினார்
தன்மை வாயிலா ரென்னுந் தபோதனர். ௬

(இ - ள்) **மன்னு...மாநகர்** - நிலைபெற்ற சிறப்பினையுடைய திருமயிலாபுரி என்னும் இப்பெருந்திரு நகரிலே; **தொன்மை...தோன்றினார்** - பழமையால் நீண்ட சூத்திரரென்னும் பழங்குலமானது நன்மைகளெல்லாவற்றுள்ளும் சிறந்த நலம்

பெறும்படி வந்தவதரித்தனர்; தன்மை...தபோதனர்-உயர் தன்மை பெற்ற வாயிலார் என்னும் பெயரினையுடைய தவப்பேறுடையவர்.

(வி - ரை) தோன்மை நீடிய...தோல்துலம்-தோன்மை-தோல் என்ற அடுக்கு மிகுதி குறித்தது; மேல் நன்மை சான்ற நலம் - என்றது மிவ்வாறே மிகுதிக் குறிப்பாம். மிகப் பழைமை என்பதும், நன்மைகளுள் எல்லாம் மிக்க நன்மையாகிய செம்மைப் பண்பு என்பதும் கருத்து. நீடிய - நீடித்து வாழ்கின்ற;

சூத்திரத் தோல்துலம் - வேளாளர் குலம்; உமாபதி சிவாசாரியர் திருத்தொண்டர் புராண வரலாற்றினுள் இந்நாயனாரை வேளாளர் பதின்மூவருள் வைத்து வகுத்துப் போற்றி யிருத்தல் காண்க. "வேளாளர் பதின்மூவர் மூர்க்கர் செருத்துணையார் வாயிலார் கோட்புலியார் சத்தி" (39). சூத்திரர் என்ற பெயர் இழிபுப் பொருள் கொண்டதென்றும், இதனை வேளாளர்க்கு இட்டு வழங்கிப் பார்ப்பனர் இழிவு படுத்தினர் என்றும் கொண்டு, இந்நாளில் இதுபற்றிப் பெரும் பூசலும் பகைமையும் விளைகின்றன; அப்பெயர் இழிவுப் பொருள் கொண்டதன்று என்பது ஆசிரியர் முதலிய பெரியோர் வழக்கினால் அறியப்படும். உயர்வு இழிவு என்ற இருபொருளும் அது பெறவழங்கினும், இழிவை விடுத்து, உயர்வையே கொள்ளுதல் மரபிலக்கணம். சூத்திரன் என்பதற்கு திட்பநுட்பம் அமைந்த மந்திராதிகாரமுடையவன் என்பது பொருளாம்; இதுபற்றி முன் "நம்பு வாய்மையி னீடு சூத்திர நற்குலம்" (440) என்ற விடத்துரைத்தவை பார்க்க. (I - பக். ௫௭௬).

துலம் - நலம்பெற - குலம் விளங்க. குலமானது இவர் அதனில் வந்தமையால் நன்மை பெற என்க. நலம் - சிவநலம்.

தன்மை வாயிலார் என்னும் - நற்றகுதிப்பான்மை காரணமாக வாயிலார் என்னும் காரணப் பெயர் பெற்ற; வாயிலார் - அடைந்து நன்மை பெறுதற்கு வாயில் - வழி - யாகவுள்ளவர் என்பது பொருள். தன்மை - நற்குணமமைந்த.

தபோதனர்-தவத்தையே செல்வமாக உடையவர். வடசொற்றொடர். தபோதனர் - தோன்றினார் என்று இயைக்க. "தோன்றிற் புகழொடு தோன்றுக" (குறள்). 6

4085. வாயி லாரென நீடிய மாக்குடித்
தூய மாமர பின்முதற் றோன்றியே
நாய னார்திருத் தொண்டி னயப்புறு
மேய காதல் விருப்பின் விளங்குவார், ௭

வேறு

4086. மறவாமை யானமைத்த மனக்கோயி லுள்ளிருத்தி
யுறவாதி தனையுணரு மொளிவிளக்குச் சுடரேற்றி
இறவாத வானந்த மெனுந்திருமஞ் சனமாட்டி
யறவாணர்க் கன்பென்னு மமுதமைத்தர்ச் சனைசெய்வார். ௮

4087. அகமலர்ந்த வர்ச்சனையி லண்ணலார் தமைநாளு
நிகழவரு மன்பினு னிறைவழிபா டொழியாமே
திகழநெடு நாள்செய்து சிவபெருமா னடிநிழற்கீழ்ப்
புகலமைத்துத் தொழுதிருந்தார் புண்ணியமெய்த் தொண்டனார். ௯

4085. (இ - ள்) வாயிலாரென...தோன்றியே - வாயிலார் என்னும் பழமையாகிய பெருங்குடியில் தூய்மையாகிய பெருமரபில் முதல்வராய் அவதரித்து; நாயனார்...விளங்குவார் - தலைவராகிய சிவபெருமானது திருத்தொண்டில் அன்பு பொருந்திய பெருவிருப்பத்துடனே விளங்குவாராகி. எ

4086. (இ - ள்) மறவாமை...இருத்தி - (இறைவரை) மறவாமை யாகிய கருவியினால் அமைத்த மனமாகிய கோயிலினுள்ளே எழுந்தருளுவித்து நிலைபெறத் தாபித்து; உறஆதிதனை...ஏற்றி - பொருந்தும்படி அப்பெருமானை உணரும் ஞானம் என்கின்ற ஒளிவீசும் சுடர் விளக்கினை ஏற்றி; இறவாத...ஆட்டி - அழிவில்லாத பேரானந்த மாகிய நீரினால் திருமஞ்சனமாட்டி; அறவாணர்க்கு...அமைத்து - அறத்தின் வாழும் அந்நாயனாருக்கு அன்பு என்னும் திருவமுதை அமைத்து; அர்ச்சனை செய்வார் - பூசிப்பாராய்; அ

4087. (இ - ள்) அகமலர்ந்த அர்ச்சனையில் - அகத்துள் விளங்கிய பூசையில்; அண்ணலார்தமை...நெடுநாள் செய்து-சிவபெருமானை நாடோறும் நிகழ வருகின்ற அன்பினாலே நிறையும் வழிபாட்டினை இடையறாது விளங்கும்படி நெடுநாட்கள் செய்து; சிவபெருமான்...மெய்த்தொண்டனார் - சிவபெருமானது திருவடியின் கீழே புகலாக அடைந்த புண்ணிய மெய்த் தொண்டனாராகிய வாயிலார் நாயனார் தொழுது அமர்ந்திருந்தனர். கூ

இம்மூன்று பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

4085. (வி - ரை) வாயிலாரென நீடிய மாக்குடி - வாயிலார் என்பது குறுக்கையர் - சேக்கிழார் - என்பனபோல இவரவதரித்த குடிப்பெயர்.

தூய மாமரபு - குடியினையுடைய தூய பெருமரபு. மரபு - குடியின் உட்பிரிவு; இப்பொருள் இராமநாத செட்டியார் குறிப்புரையிலும் கண்டது. சேக்கிழார் என்பது போலக் குடிப் பெயரே இயற்பெயராய் வழங்கலாயிற்றுப் போலும். வேளாளர் என்பது பெரும் பிரிவாகிய குலம். அதன் உட்பிரிவு குடி. மரபு - என்பது அதனுட்பிரிவு; "நடைமரபிற் குடிநாப்பண்...நிலைவேளாண்குலம்" (1280) "குறுக்கையர் தங்குடி".

நாயனார் - தலைவர்; சிவபெருமானுடைய; ஆரூரனுருபு விரிக்க.

காதல்விருப்பு - ஒரு பொருட்பன்மொழி; விருப்பின் மிகுதி குறித்தது.

விளங்குவார் - செய்வார் - அமைத்துத்தொழுது இருந்தார் என்று மேல்வரும் பாட்டுக்களுடன் முடிக்க. நயப்பு - விருப்பம். 7

4086. (வி - ரை) இத்திருப்பாட்டு அகப்பூசை விதி விளக்கமாயமைந்த உறுதிப்பா டுடையது. அந்தரியாக பூசை என்று சிவாகமம் கூறும். "அந்தரியாகந் தன்னை ஞான பூசையா யறைவது தானும் ஆன்மசுத்தி யாகும்" என்பது ஞான சாத்திரம்.

மறவாமையான் அமைத்த மனக்கோயில் - மறவாமை என்ற சாதனங்கொண்டு அமைத்த மனமாகிய கோயில் "மனவா லயத்திருத்தி" என்பது வகைநூல்; "உள்ளம் பெருங்கோயில் ஊனுடம் பாலயம்" (திருமந்திரம்). கோயில் - கருவறை; (கருப்பக்கிருகம்); பெருங்கோயில் என்பது கருவறை (மூலத்தானம்); மற்றைத் திருச்சுற்று முதலியவை ஆலயம் எனப்படும்.

ஆதி - இறைவர்: ஆதிதனை உற உணரும் என்க; உற - பொருந்த: உறவு என்று கொண்டு அவரே உறவாவார் என்பதனை உணரும் என்றலுமாம்.

உணரும் ஒளிவிளக்குச் சுடர்-உணர்வு - ஞானம்; " ஒண்சுடர் ஞான விளக்கினை யேற்றி " (தேவா); " அறிவா மொளிவிளக் கேற்றி " வகைநூல்.

இறவாத ஆனந்தம் - ஏனைய ஆனந்த மெல்லாம் ஒருகாற் கெட்டொழிவனவும் கேடுதருவனவுமாம்; சிவானுபவமாகிய ஆனந்தமொன்றே கெடாதது. " இறவாத இன்ப அன்பு வேண்டி." (1776)

அறவாணர் - சிவன்; அன்பே - அமுதமாகக் கொண்டு; "மெய்த்தன்மை யன்பு நுகர்ந் தருளுதற்கு " (3684) என்பன முதலியவை பார்க்க. " அன்பெனு மெய் யமிர்தம் "—வகைநூல்.

அர்ச்சனை செய்வார் - பூசிப்பாராய்; முற்றெச்சம்.

அமைத்தல் - பாவித்தல்; அகப் பூசைக்குரிய மலர்களை வகைநூல் வகுத்தமை காண்க.

மறவாத வாய்மையால்—என்பதும் பாடம். 8

4087. (வி - ரை) அகமலர்ந்த அர்ச்சனையில் - வழிபாடு - அகப்பூசை; நிகழவரும் - விளங்க வருகின்ற;

ஒழியாமே - நீங்காமல்; எப்போதும்.

புகல் - புகுமிடமாக; தஞ்சமாக; நிலைபெற்ற இருப்பிடமாக. புகலமைத்து - புகுதலைப் பொருந்தி;

அடிநிழற்கீழ்த் தொழுதிருந்தார்-திருவடியில் சேர்ந்திருந்தார்; திருவடிமறவாது இடையறாத சிவபோகத்தில் தொழுதிருத்தலே வீடுபேறும். 9

4088. நீராருஞ் சடையாரை நீடுமன வாலயத்துள்
ஆராத வன்பினு லர்ச்சனைசெய் தடியவர்பாற்
பேராத நெறிபெற்ற பெருந்தகையார் தமைப்போற்றிச்
சீராருந் திருநீடூர் முனையடுவார் திறமுரைப்பாம். க0

(இ - ள்) நீராரும்... அர்ச்சனைசெய்து - கங்கையாறு நிறைந்த சடையினை உடைய சிவபெருமானைத் தமது நீடும் மனக்கோயிலினுள் தாபித்து மிக்க அன்பினாலே பூசித்து; அடியவர்பால்...போற்றி - அடியவர்களுடனிருந்து நீங்காத வீட்டு நெறியினைப் பெற்ற பெருந்தகையாராகிய வாயிலார் நாயனாரைத் துதித்து அத்துணையாலே; சீராரும்...உரைப்பாம் - சிறப்புப் பொருந்திய திருநீடூரில் வாழ்ந்த முனையடுவார் நாயனாரது திறத்தினைச் சொல்வோம்.

(வி - ரை) சரித முடிபும் வருஞ்சரிதத் தோற்றுவாயுமாகிய கவிக்கூற்று.

மனவாலயத்து...அர்ச்சனைசெய்து-இந்நாயனார் செய்த அகப்பூசையின் சாரம்.

அடியவர்பால்...நெறி - முன்னே வீடுபெற்ற அடியவர் கூட்டத்தினின்று நீங்காது உடனிருக்கும் பேறு.

திரு நீடூர் முனையடுவார்-ஊரும் பெயரும் உரைத்துத் தோற்றுவாய் செய்தவாறு.

சரிதச்சுருக்கம்: வாயிலார் நாயனார் புராணம் :—தொண்டை நாட்டில் திரு மயிலாபுரிப்பதியில் வேளாளர் மரபில் வாயிலார் குடியில் தோன்றியவர் வாயிலார் நாயனார் : அவர் இறைவருக்கு மனமாகிய கோயிலும், அறிவாகிய விளக்கும், ஆனந்த மாகிய திருமஞ்சனமும், அன்பாகிய திருவமுதும் அமைத்து நாடோறும் வழுவாமே அகப்பூசை செய்வார். இவ்வாறு நெடுநாட் செய்திருந்து சிவனடி நிழலில் அடியா ருடனே இருக்கப் பெற்றனர்.

கற்பனை :—(1) கடற்கரைப் பட்டினத்துக்குச் சிறப்பு கப்பல்வாணிபத துறையில் விளங்குதலாம். (4081).

(2) சிவனுக்கு அகப்பூசைசெய்தல் சிறப்புத்தருவது.

(3) அகப்பூசை முடிவிற் புறப்பூசையும் செய்யத்தக்கது என்பதும் ஆகமவிதி.

(4) அகப்பூசையில் மறவாமை - ஞானம் - ஆனந்தம் - அன்பு முதலிய இவைகளே பூசைக்குரிய சாதனங்களாவன.

(5) அகப்பூசையை முறையாற் செய்வோர் சிவனடிக்கீழ் அடியரோடு நீங்காதிருப்பர்.

தலவிசேடம் - திருமயிலாபுரி :—முன் உரைக்கப்பட்டது.



திருச்சிற்றம்பலம்

# 52. முனையடுவார் நாயனார் புராணம்

## தொகை

" அறைக்கொண்ட வேனம்பி முனையடுவார்க் கடியேன் "

—திருத்தொண்டத் தொகை (8)

## வகை

" என்று விளம்புவர் நீடூ ரதிபன் முனையடுவோன்
என்று மமரு ளழிந்தவர்க் காக்கூலி யேற்றெறிந்து
வென்ற பெருஞ்செல்வ மெல்லாங் கனகநன் மேருவென்னுங்
குன்றம் வளைத்த சிலையான் றமர்க்குக் கொடுத்தனனே "

—திருத்தொண்டர் திருவந்தாதி (62)

## விரி

4089. மாறு கடிந்து மண்காத்த வளவர் பொன்னித் திருநாட்டு
நாறு விரைப்பூஞ் சோலைகளி னனைவாய் திறந்து பொழிசெழுந்தேன்
ஆறு பெருகி வெள்ளமிடு மள்ளல் வயலின் மள்ளருழும்
சேறு நறுவா சங்கமழுஞ் செல்வ நீடூர் திருநீடூர்.

புராணம் :—முன் உரைத்தாங் குரைத்துக் கொள்க.

தொகை :—வெட்டி வீழ்க்கும் தன்மையுடைய படைகளையேந்திய சிறந்த ஆண்மகனாராகிய முனையடுவார் நாயனாருக்கு அடியேனாவேன். அறை - வெட்டுதல் முதலியனவாய் அறுதலைச் செய்யும் தன்மை ; வேல் - இங்கு ஆயுதப் பொதுமை யுணர்த்திற்று; நம்பி - ஆண்மக்களுட் சிறந்தவன்; முனையடுவார்-நாயனாரது தொழில் பற்றி வந்த காரணப்பெயர். இவரது இயற்பெயர் விளங்கவில்லை; இயற்பகையார்-எறிபத்தர் என்பனபோல ; தொழில் வரலாறும் பெயரும் தொகைநூல் பேசிற்று.

வகை :—நீடூர் அதிபன் - திருநீடூரில் வந்தவதரித்த தலைவர்; முனையடுவோன்-முனையடுவார் நாயனாரெனக் காரணப் பெயர் பூண்டவர் ; என்றும்...எறிந்து - போரில் வலிமையின்றித் தோற்றவர்களுக்காக எந்நாளும் கூலி ஏற்றுக்கொண்டு சென்று அவரது மாற்றாரை வென்று ; வென்ற...கொடுத்தனனே - அவ்வாறு ஈட்டிய பெருஞ் செல்வங்களை யெல்லாம் பொன்மலையாகிய மேரு என்னும் குன்றத்தை வளைத்த வில்லாகவுடைய சிவபெருமானடியவருக்குக் கொடுத்தனன் ; என்று விளம்புவர் - என்று அறிந்தோர்கள் கூறுவார்கள். (ஏ - அசை).

**கொடுத்தனன்** - என்று விளம்புவர் - என்று இயையும். இப்பாட்டுப் பூட்டுவிற் பொருள்கோள். **விளம்புவர்** என்றதற்கு எழுவாய் அறிந்தோர்கள் என்பது அவாய் நிலையான் வந்தது. **அமருள் அழிந்தவர்க்காக** - போர் வலியின்மையாற் றோல்வி யுற்றவர்கள் பக்கம்; எளியார் பக்கம் சேர்ந்து உதவுதல் ஒரு தருமமாம்; **கூலி ஏற்று** - அதற்காகத் தமக்குக் கூலி நிதியம் பெற்று; **எறிந்து** - சென்று போர்செய்து; **வென்றபெருஞ் செல்வம்**-வெற்றி கொண்டு அதனால் வந்த பெரிய செல்வம்; **வென்ற**- வென்ற காரணத்தால் பெற்ற என்க; **ஆறு சென்றவியர்** - வந்த இளைப்பு-என்புழிப் போலக்கொள்க. இவ்வாறு கூலி ஏற்கும் செயலில் அக்கூலியே பெரிதென்று கொள்ளாமல் நடுவு நிலை வைத்து நீதி முறையினைத் தெரிந்தே அவர்பக்கம் ஏற்றனர் என்பது விரிநூலுட் காண்க (4081); **தமர்** - அடியவர்கள்; **தொழிலும் அடிமைப் பண்பும்** பெயரும் வகைநூல் வகுத்தது.

விரி :—4089. (இ - ள்) மாறு...திருநாட்டு - பகைமையை வென்று உலகினைக் காக்கும் சோழர்களது காவிரிபாயும் திருநாட்டில்: நாறு ..தேன் - கமழ்கின்ற மண முடைய சோலைகளின் மலரரும்புகள் விரிந்து பொழிகின்ற செழுந்தேன்; ஆறு ...கமழும் - ஆற்றின் வழியே பெருக்கெடுத்து அவ்வெள்ளத்தினால் சேறு செய்த வயலினுள் உழவர்கள் உழுகின்ற சேறும் நறு மணம் கமழ்கின்ற; செல்வ நீடூர் திருநீடூர் - செல்வம் நீடியுள்ள ஊராகும் திருநீடூர் என்பது.

(வி - ரை) **மண்காத்த** - அரசாளும் எனத் தன்மை குறித்தது. **மாறு** - வேற் றரசரது பகை.

**செல்வம் நீடுஊர் திருநீடூர்** - திருநீடூர் என்ற பதியின் பெயர்ப்பொருள் விரிக்கு. மாற்றால் நகரச்சிறப்பும் உடன் கூறியவாறு; முன்னர்த் "திருவாரூர் திருவாரூர்" (1277), "கமழ்சாறூர் கஞ்சாறூர்" (866) என்பன முதலியவை போலக் காண்க. **செல்வம்** - என்றது இங்கு நீரின் வளத்தாற் சோலைகளின் செழிப்பும் வயல்களின் செழிப்பும் பிறவுமாகிய உலகவளம் பற்றிக் கூறப்பட்டது.

**ஆறுபெருகி** - ஆறுபோலப் பெருகி; ஆற்று நீரினுள் சேர்ந்து பெருகி என்றலு மாம்; **நனை** - அரும்புகள். **வாய்திறத்தல்** - அலர்தல்; **வாய்திறந்து பொழி செழுந் தேன்** - தேன் பெய்து மூடிய குப்பிகளின் வாயினைத் திறந்து பொழிவது போல என்ற குறிப்பும் காண்க. **நாறு விரை** - விரைநாறும்.

**அள்ளல் வயல்** - சேற்றினையுடைய வயல்கள்; **சேறு** - சேறும் என்று இழிவு சிறப்பும்மை தொக்கது; எரு முதலிய பொருள்கள் தோய்ந்து அழுகுதலால் தீ நாற்றங் கமழவேண்டிய சேறும் அதற்கு மாறாகச் சோலைத் தேன்கலந்த நீர்பாய்வதனால் நறு வாசங் கமழ்கின்றது என்பதாம். செல்வம் நிறைந்த ஊரானது திருநீடூராம் என்க.

**வெள்ளமிகும்** - நீர்வெள்ளம் பாய்ந்து தங்கும்; **மள்ளர்** - உழவர். 1

4090. விளங்கும் வண்மை மிக்குள்ள வேளாண் டலைமைக் குடிமுதல்வர்
களங்கொண் மிடற்றுக் கண்ணுதலார் கழலிற் செறிந்த காதன்மிகும்
உளங்கொ டிருத்தொண் டுரிமையினி லுள்ளார்; நாளார் முனையெறிந்த
வளங்கொ டிறைவ ரடியார்க்கு மாறா தளிக்கும் வாய்மையார், உ

4091. மாற்றார்க் கமரி லழிந்துள்ளோர் வந்து தம்பான் மாநிதியம்
ஆற்றும் பரிசு பேசினு லதனை நடுவு நிலைவைத்துக்

கூற்று மொதுங்கு மாள்வினையாற் கூலி யேற்றுச் சென்றெறிந்து
போற்றும் வென்றி கொண்டிசைந்த பொன்னுங் கொண்டு மன்னுவார், ௩

4092. இன்ன வகையாற் பெற்றநிதி யெல்லா மீச னடியார்கள்
சொன்ன சொன்ன படிநிரம்பக் கொடுத்துத் தூய போனகமுங்
கன்ன னறுநெய் கறிதயிர்பால் கனியுள் ளுறுத்த கலந்தளித்து
மன்னு மன்பி னெறிபிறழா வழித்தொண் டாற்றி வைகினார். ௪

4090. (இ-ள்) விளங்கும்...முதல்வர் - விளக்கம் பொருந்திய வள்ளற் றன்மை மிகுந்துள்ள வேளாளர் மரபில் தலைமையாகிய குடியில் முதல்வராய்; களங்கொள்...உள்ளார் - விடத்தினைக் கொண்ட கழுத்தையுடைய கண்ணுதலாகிய சிவபெருமானது திருவடியிற் செறிவுடைய பெருவிருப்பம் மிகவும் மனத்துட் கொண்ட திருத்தொண்டுரிமை பூண்டுள்ளாராய்; நள்ளார் ..வாய்மையார் - நட்பில்லாதாரைப் போரில் வென்றதனால் வரும் வளங்களாகிய ஊதியத்தினைக்கொண்டு இறைவரது அடியார்களுக்கு மாறாமல் அளிக்கும் வாய்மையினை யுடையவராய், ௨

4091. (இ-ள்) மாற்றார்க்கு...பேசினால்-(போரில்) பகைவர்களுக்குத் தோற்றவர்கள் வந்து தம்மிடம் பெருநிதியம் கொடுத்து தமது துணையைக் கொள்ளும் பரிசு பேசினால்; அதனை நடுவு நிலைவைத்து - அதனை நடுநிலையின் நின்று அறநெறியினை ஆய்ந்து துணிந்து; கூற்றும்...எறிந்து - இயமனும் அஞ்சி ஒதுங்கும் போர் முயற்சியினாலே கூலியினை ஏற்றுப் போய்ப் போர் வென்று; போற்றும்...மன்னுவார் - யாவரும் போற்றும் வெற்றியினை அடைந்து இசைந்த கூலியாகிய பொன்னையும் கொண்டு நிலைபெற வாழ்வாராகி, ௩

4092. (இ-ள்) இன்ன வகையால்...கொடுத்து - இவ்வகையினாலே பெற்ற நிதிகள் எல்லாவற்றையும் சிவனடியார்கள் சொன்ன சொன்னபடியே கொடுத்து; தூய...அளித்து - தூய்மையாகிய திருவமுதும் சர்க்கரை - நறுமணமுள்ள நெய் - கறி - தயிர் - பால் - கனி - என்றிவையுள்ளிட்டனவாகியவற்றையும் கலந்து திருவமுது அளித்தும்; மன்னும் ..வைகினார் - நிலைபெறும் அன்பின் நெறியிற் பிறழாத வழித்தொண்டினைச் செய்து வாழ்ந்தார். ௪

இம்மூன்று பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டுரைக்கின்றன.

4090. (வி-ரை) வண்மை மிக்குள்ள வேளாண் - "வேளாள ரென்றவர்கள் வள்ளன்மையால் மிக்கிருக்குந் தாளாளர்" (தேவா - ஆக்கூர் - 3); வண்மை-வள்ளன்மை-ஈகை. இது வேளாளரின் சிறப்பியல்பு.

வேளாண் தலைமைக்குடி - வேளாளமரபிலே பல குடிகளுள்ளும் தலைமை பெற்ற குடியில்; முதல்வர் - முதன்மை பெற்றவர்; நாட்டாண்மை என்பது வழக்கு.

காதல்மிகும் உளங்கொள் திருத்தொண்டு - திருத்தொண்டு பெருவிருப்பத்தினை மனத்துக்கொண்டு செய்யத்தக்கது என்பதாம்.

திருத்தொண்டு உரிமையினில் உள்ளார்-திருத்தொண்டினைத் தமது உரிமையாகக் கொண்டவர்.

நள்ளார் முனை எறிந்த வளம் - நள்ளார் - பகைவர்; தம்மிடம் வந்து பரிசு வேண்டினோரின் பகைவர்; முனையெறிதல் - போர் வெல்லுதல்; எறிந்த வளம் - எறிந்ததனால் பெற்றவளம்; கூலியாகிய நிதியம்.

மாறாது - பிறழாது எந்நாளும்.

முதல்வர் - உள்ளார் - வாய்மையார் - மன்னுவார் (4091); கொடுத்து - அளித்து ஆற்றி-வைகினார் (4092) என்று இம்மூன்று பாட்டுக்களையும் கூட்டி முடிபு கொள்க. உ

4091. (வி - ரை) மாற்றார்க்கு அமரில் அழிந்துள்ளோர்...பேசினால் - போரில் பகைவர்க்கு உடைந்து தோல்வியுற்றவர்கள் தம்பால் வந்து தமது துணையை வேண்டி அதற்குக் கூலியாக மாநிதியம் தருவதாகப் பேசினால்; மாநிதியம்-" பெருஞ் செல்வம் " வகைநூல்.

நடுவுநிலை வைத்து - அறநெறியிற் சீர் தூக்கி; கூலிக்காகவே எதனையும் இசைவது என்றில்லாமல் என்பதாம்.

கூற்றும் ஒதுங்கும் ஆள்வினை - கூற்று; இயமன்; ஆள்வினை-முயற்சி; இங்குப் போர்த்தொழில் குறித்தது. உம்மை உயர்வு சிறப்பு. " கூற்றொருத்தியே " (புறம்)

கூற்றும் ஒதுங்கும் ஆள்வினையாவது கூற்றுவன் எவ்வகை வலியாரையும் உயிர் பிரித்தலில் வல்லவன். ஆனால் உரிய காலத்தாலன்றி அது செய்தல் இயலாது; இவர் அவன் போலவே எவ்வகை வலியோரையும் உயிர் பிரித்தலில் வல்லவர்; அதனுடன் எந்நாளிலும் அது செய்ய வல்லாராந்தன்மையினை ஆள்வினையாற் பெற்றார்; இது கண்டு கூற்றுவனும் அஞ்சி ஒதுங்குவன் என்பதாம். " ஊழையு முப்பக்கங் காண்ப ருலைவின்றித், தாழா துஞற்று பவர் " (குறள்).

கூலி - என்பது தமது முயற்சிக்காகப் பெறும் ஊதியம் என்ற உயர்பொருளில் வந்தது; எவ்வகை ஊதியமும் கூலியே என்னும் இது பொருளியல் நூல் உண்மைக் கருத்து;

எறிந்து - போர் வென்று; " கூலியேற்றெறிந்து " வகை நூலாட்சி.

இசைந்த பொன் - கூலியாக இசைந்த நிதியம்; பொன் - அந்நாளில் வழங்கிய பொன் நாணயத்தால் அளவிட்ட தொகை; மன்னுவார் - நிலைபெற்ற உலக வாழ்வினை நடத்துவாராய். 3

4092. (வி - ரை) சொன்ன சொன்னபடி - அவர்கள் திருவுளங்கொண்டு விரும்பிக் கேட்டவாறே - ஒன்றும் குறையாமல் - அதற்கு உறுதிப்பொருள் தந்து நின்றது. கன்னல் - சர்க்கரை.

கொடுத்து - அளித்துத் - தொண்டாற்றி - என்க. பொன்தருதல் ஈகை-கொடையின் பாற்படுதலின் கொடுத்து என்றார்: அளித்து - அமுதூட்டி; இது அளி - கருணையுடன் செய்யத்தக்கதாதலின் அளித்து என்றார்.

அன்பின் நெறிபிறழா வழித்தொண்டு - பிறழாமை - வழுவாமை; வழி - வழி வழி வருவது. பாம்பரை என்பர்.

வைகினார் - வாழ்ந்தனர். 4

4093. மற்றிந் நிலைமை பன்னெடுநாள் வைய நிகழச் செய்துவழி
யுற்ற வன்பின் செந்நெறியா லுமையாள் கணவன் றிருவருளாற்
பெற்ற சிவலோ கத்தமர்ந்து பிரியா உரிமை மருவினார்
முற்ற வுழந்த முனையடுவா ரென்னு நாம முன்னுடையார். ரு

(இ - ள்) மற்று...நெறியால் - முன் கூறிய இந்த நிலையிலே திருத்தொண்டினைப் பல நெடுங்காலம் உலகில் விளங்கும்படி செய்து வழிவழி வந்த அன்பினாலாகிய செம்மை நெறியினாலே; உமையாள்...மருவினார் - உமையம்மையாரின் கண

வனாகிய சிவபெருமானது திருவருளினாலே அடையப் பெற்ற சிவலோகத்தில் அமர்ந்து மீளாத உரிமையினைப் பொருந்தினர்; முற்ற...முன்னுடையார் - வெற்றி பொருந்தப் போர் செய்த காரணத்தால் முனையடுவார் என்னும் திருப்பெயரினைச் சிறக்க வழங்கப்பெற்ற பெரியார்.

(வி - ரை) இந்நிலைமை-முன் கூறிய இந்த நிலைமையுடைய திருத்தொண்டினை;

வழி உற்ற அன்பின் செந்நெறி-வழிவழி பொருந்திய அன்பினாலாகிய செம்மை நெறி - சிவநெறி.

பிரியா உரிமை - என்றும் மீளாத தன்மை; சிவலோகத் தமர்ந்து பிரியா உரிமை - சாலோகப் பதவி.

முற்ற உழந்த - முற்றுதல் - போர் வென்று கடத்தல்; உழத்தல் - முனைந்து போர் புரிதல் : உழந்த - உழத்தலால்.

உழந்த முனையடுவார் என்னு நாமம் - இப்பெயர் காரணத்தால் வந்தது; முன்னுடையார். முன் - சிறப்பாக; இவரது இயற்பெயர் இஃதன்று என்பது; இதனாலே இவரது பெயரை இப்புராணத்துள் முன்னே ஆசிரியர் கூறவில்லை. 5

4094. யாவ ரேனினு மிகலெறிந்தே யீச னடியார் தமக்கின்ப
மேவ வளிக்கு முனையடுவார் விரைப்பூங் கமலக் கழல்வணங்கித்
தேவர் பெருமான் சைவநெறி விளங்கச் செங்கோன் முறைபுரியுங்
காவல் பூண்ட கழற்சிங்கர் தொண்டி னிலைமை கட்டுரைப்பாம். சு

(இ - ள்) யாவரெனினும் இகல் எறிந்தே - எதிர்ப்பவர் யாவரே யாயினும் போரில் வெற்றி கொண்டே (அவ்வூதியங்களை); ஈசன்...வணங்கி-இறைவனடியவர்களுக்கு இன்பம் பொருந்த அளிக்கும் முனையடுவார் நாயனாரது மணம் பொருந்திய பூங்கமலக் கழல்களை வணங்கி, (அத்துணையாலே); தேவர் பெருமான்...கட்டுரைப்பாம் தேவர் தலைவராகிய சிவனது நெறியினை உலகில் விளங்கும்படி செங்கோல் அரசு புரியும் காவல் பூண்ட கழற்சிங்க நாயனாரது திருத்தொண்டின் நிலைமையினைச் சொல்கின்றோம்.

(வி - ரை) இது இச்சரித முடிப்பும் மேல் வருஞ் சரிதத்தோற்றுவாயுமாகிய கவிக்கூற்று.

யாவரேனினும் - எத்தகைய வல்லமையுடையோராயினும். கூவி பேசி அமர் ஏற்றபின், எதிர்ப்பவர், தமக்கு நட்பு உறவு முதலிய எவ்வகையால் தொடர்புடையோராயினும் பாராது என்ற குறிப்புமாம்.

இகல் எறிந்து - போர் வென்று; இகல் - போர்; எறிதல் - வெற்றி பெறுதல்;

கழல் - தானியாகு பெயராய்த் திருவடியை உணர்த்திற்று. சிறந்த வீரராதலால் கழல் கூறினர்.

யாவரெனினும்...அளிக்கும் - இச்சரிதசாரம்.

சைவ நெறிவிளங்க-முறைபுரியும்-வருஞ்சரித உள்ளுறையாகிய தோற்றுவாய். சைவம் சிறந்தோங்கும் பொருட்டு அரசாட்சியை மேற் கொண்ட;

செங்கோல் முறைபுரியும் காவல் - அரசாட்சி. 6

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# சுந்தரமூர்த்தி நாயனார் துதி

## தொகை

" ஆரூரா னாரூரி லம்மானுக் காளே "

—திருத்தொண்டத் தொகை - 8

## வகை

" கொடுத்தான் முதலைகொள் பிள்ளைக் குயிரன்று புக்கொளியூர்த்
தொடுத்தான் மதுர கவியவி நாசியை வேடர் சுற்றம்
படுத்தான் திருமுரு கன்பூண் டியினிற்ப ராபரத்தேன்
மடுத்தா னவனென்பர் வன்றொண்ட னாகின்ற மாதவனே."

—திருத்தொண்டர் திருவந்தாதி - 63

## விரி

4095. செறிவுண் டென்று திருத்தொண்டிற் சிந்தை செல்லும் பயனுக்கும்
குறியுண் டொன்றா கிலுங்குறைவொன் றில்லோ நிறையுங் கருணை
வெறியுண் சோலைத் திருமுருகன் பூண்டி வேடர் வழிபறிக்கப் [பினால்
பறியுண் டவரெம் பழவினைவேர் பறிப்பா ரென்னும் பற்றாலே. ௧

தொகை : ஆரூரனாகிய யான் திருவாரூரில் அம்மானுக்கு ஆளானேன்.

வகை : அன்று...அவிநாசியை - முன்னாளில் புக்கொளியூரில் எழுந்தருளிய அவிநாசியாகிய இறைவரை மதுரம் பொருந்திய பாடல் தொடுத்தார் ; (அதனால்); கொடுத்தான்...உயிர் - முதலையினாற் கொள்ளப்பட்ட பிள்ளைக்கு உயிர் கொடுத்து மீளவரச் செய்தார் ; வேடர்...திருமுருகன் பூண்டினியில்-திருமுருகன்பூண்டினியில் வேடர்களாகிய கணங்களாற் சூழப்பட்டுப் பறிபடுத்தார் ; பராபரத் தேன்மடுத்தானவன் - பராபரனாகிய தேனை வாய்மடுத்து உண்டவர் ; வன்றொண்டனாகின்ற மாதவனே என்பர் - வன்றொண்டன் என்னும் மாதவரே யாவர் என்று அறிஞர் கூறுவர்.

இப்பாட்டுக் கொண்டு கூட்டுப் பொருள்கோள். புக்கொளியூர் - ஊர்ப் பெயர் ; அவிநாசி - அங்கு எழுந்தருளியிருக்கும் இறைவர் பெயர் ; " புக்கொளியூ ரவிநாசியே " (தேவா) ; மதுரகவி - தேவாரப்பதிகம் ; தொடுத்தானதலின் அத் துணைகொண்டு உயிர் கொடுத்தான் எங்க. " முன்னாள் நாவலர் பெருமான், பண்

டொரு முதலை யுண்டமைக் தனை வர, வழைத்தன னென்றாய் பிழைப்பில தாஉம், தந்திட வேண்டு மென்றன ரன்றே " (சங்கற்ப நிராகரணம் - சிவசமவாதி நிராகரணம்) ; வேடர் சுற்றம் படுத்தான் - வேடர்களாகிய சிவகணங்கள். படுத்தான் - பறியுண்டார் ; பராபரத்தேன் படுத்தான் - திருமுருகன்பூண்டித் திருப்பதிகத்தினிற் றோழமைத் திறத்தால் இறைவரை அனுபவித்த சுவை குறித்தது.

விரி : 4095. (இ - ள்) நிறையும் கருணையினால் - நிறையும் அருட்பெருக்கால ; வெறியுண்...பறியுண்டவர் - மணமுடைய சோலை சூழ்ந்த திருமுருகன் பூண்டியின் வழியிலே வேடர்களாற் பறிக்கப்பட்ட நம்பியாரூரர் ; எம் பழ...பற்றாலே - எமது பழவினை மூலத்தை அடியோடு பறித்து விடுவர் என்ற ஆசாவினாலே; செறிவுண்டென்று...குறிப்புண்டு - செறிதல் உளதாகு மென்று திருத்தொண்டிலே மனம் செல்கின்ற பயனுக்கும் ஒரு குறியுண்டு ; (அசைகன்றியும்) ஒன்றாகிலும்... ஒன்றில்லோம் - ஒன்றானும் குறைவு சிறிதும் இல்லோம்.

(வி - ரை) சேறிவு - மிக்க பயன் ; பயனுந்தங் குறியுண்டு - பயன் பெறுகின்றக்கும் குறிக்கோளாகும். பயன்பெறும் குறிக்கோள்.

ஒன்றாகிலும் குறைவு ஒன்று இல்லோம் - அதுவேயுமன்றி ஒன்றினும் ஒரு சிறிதும் குறையில்லோம்; ஒன்று - ஒரு சிறிது என்று அளவு குறித்தது; "எற்றானுங் குறைவில்லை யென்பர்களனெஞ்சமே" (நம்பி - கோயில்).

பற்றாலே - இத்தணிவுகளிரண்டும் ஆளுடைய நம்பிகளது திருவடிப் பற்றினாலே ஆவன ; பற்று - ஆசரவு - அன்பு என்றலுமாம்.

பறியுண்டவர் பறிப்பார் - தாம் பறியுண்டு பழகியவர் அப்பழக்கத்தாற் பிறரைப் பறியுண்ண வைத்தல் எளிது என்ற குறிப்பு. வேடர் பறித்த வரலாறு வகைநூலும் இங்குக் குறித்தது.

பழவினை - மூலகன்மம் ; வேர் - முதல் ; அதற்குக் காரணமான வாசனைமலம்.

கருணையினால் - பறிப்பர் என இயையும் ; கருணையினால் - பறியுண்டவர் என்று கூட்டி, பறியுண்டமையும் சிவனருளாலாகியது என்றுரைக்கவும் நின்றது.

பழவினை வேர் பறிப்பர் - நம்பிகளை வழிபட்டால் பிறவியற்று வீடுபேறு பெறலாம் என்பது. 7

சரிதச்சுருக்கம் : முனையடுவார் நாயனார் புராணம் :—சோழநாட்டில் வளமிக்க திருநீடூரில் வேளாளர் மரபில் உயர்ந்த குடியில் ஒரு பெரியார் தோன்றினர். மாற்றார்க் கழிந்தவர் வந்து தமது துணையை வேண்டினால் அதனை நடுநிலைவைத்துக் கூலி ஏற்றுச் சென்று அமர் வெற்றியும் பொன்னுங் கொண்டு வருவதில் வல்லவர். ஆதலின் அவருக்கு முனையடுவார் என்னும் திருநாமம் வழங்கலாயிற்று.

அவர் சிவபெருமான்பால் பேரன்புடையவர் ; போர்முனை யெறிந்து பெற்ற நிதியெல்லாம் சிவனடியார்க்களைத் திருவமுதூட்டினர். இவ்வாறு பன்னாள் தொண்டு செய்திருந்து சிவலோகத்திற் சேர்ந்து பிரியா உரிமை யடைந்தனர்.

கற்பனை (1) கூலி பேசிப் பெற்று மாற்றார் போரின்மேற் செல்லுதலையும் நடுநிலைவைத்து ஆய்ந்து செய்தல் நீதியாகும்.

(2) முனையெறிந்த கூலிகொண்டும் சிவதருமங்கள் செய்தல் சிறப்புடையது.

(3) அடியார் வேண்டியபடி கொடுத்தலும் விதிப்படி நல்ல திருவமுதூட்டலும் சிவதருமங்களாம்.

(4) வேளாளர்கள் போர் உரிமையும் வன்மையும் உடையவர்.

தலவிசேடம் : திருநீடூர் - சோழநாட்டுக் காவிரி வடகரை 21-வது பதி ; வகுளாரணியம் - மகிழவனம் எனப்படும். ஊழியிலும் அழியாது நீடியிருத்தலின் இப்பெய ரெய்தியது ; இந்திரன், சூரியன், சந்திரன், பாதகத்தால் நண்டுருவடைந்த தன்ம சுதன் என்னும் வேதியன், ஆலால சுந்தரி (காளி) இவர்கள் பூசித்துப் பேறு பெற்றது. ஆளுடைய நம்பிகள் இந்துப் பணியாது செல்லும்பொழுது திருவருளால் மீண்டுவந்து "நீடூர் பணியா விடலாமே" என்ற பதிகம் பாடி வணங்கியது ; சுவாமி மிகச் சிவந்த சோதிலிங்கத் திருமேனி ; முனையடுவார் நாயனாரது தலம் - சுவாமி - அருட் சோமநாதர் - கானதீர்த்த சங்கரர் ; அம்மை-வேயுறுதோளி யம்மை; அதிகாந்தியம்மை - தீர்த்தங்கள் சந்திரபுட்கரணி முதலிய ஒன்பது உண்டு. மரம் - மகிழ் ; பதிகம் திருப்புன்கூரும் திருநீடூரும் என்ற பதிகம் 1.

இது நீடூர் நிலயத்தினின்றும் வடமேற்கே மட்சாலை வழி ஒருநாழிகை யளவில் அடையத்தக்கது ; மகமதியர்கள் அதிகமாகக் குடியேறியுள்ளார்.

முனையடுவார் நாயனார் புராணம் முற்றும்.

கறைக்கண்டன் சருக்கம் முடிந்தது.



உ

சிவமயம்

பத்தாவது

# கடல்சூழ்ந்த சருக்கம்

திருச்சிற்றம்பலம்

" கடல்சூழ்ந்த வுலகெலாங் காக்கின்ற பெருமான்
காடவர்கோன் கழற்சிங்க னடியார்க்கு மடியேன்
மடல்சூழ்ந்த தார்நம்பி யிடங்கழிக்குந் தஞ்சை
மன்னவனாஞ் செருத்துணைத னடியார்க்கு மடியேன்
புடைசூழ்ந்த புலியதண்மே லரவாட வாடி
பொன்னடிக்கே மனம்வைத்த புகழ்த்துணைக்கு மடியேன்
அடல்சூழ்ந்த வேனம்பி கோட்புலிக்கு மடியேன்
ஆரூர னாரூரி லம்மானுக்கு காளே ".

—திருத்தொண்டத்தொகை-9

திருச்சிற்றம்பலம்

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# 53. கழற்சிங்க நாயனார் புராணம்

தொகை

“ கடல்சூழ்ந்த வுலகெலாங் காக்கின்ற பெருமான்
காடவர்கோன் கழற்சிங்க னடியார்க்கு மடியேன் ” 7

வகை

“ மாதவத் தோர்தங்கள் வைப்பினுக் காரூர் மணிக்குவைத்த
போதினைத் தான்மோந்த தேவிதன் மூக்கினை யரியப்பொற்கை
காதிவைத் தன்றே யரியவென் றூகலன் கைதடிந்தான்
நாதமொய்த் தார்வண்டு கிண்டுபைங் கோதைக் கழற்சிங்கனே ”

—திருத்தொண்டர் திருவந்தாதி - 64

விரி

4096. படிமிசை நிகழ்ந்த தொல்லைப் பல்லவர் குலத்து வந்தார்
கடிமதில் மூன்றுஞ் செற்ற கங்கைவார் சடையார் செய்ய
அடிமல ரன்றி வேறொன் றறிவினிற் குறியா நீர்மைக்
கொடிநெடுந் தானை மன்னர் கோக்கழற் சிங்க ரென்பார். க

புராணம் : முன் உரைத்தவாறு உரைத்துக் கொள்க.

தொகை : கடலாற் சூழப்பட்ட உலகத்தை யெல்லாம் அரசு புரிந்து காக்கின்ற பேரரசராகிய காடவர் மரபில் வந்த அரசராகிய கழற்சிங்கரது அடியவர்க்கும் நான் அடியேனாவேன்.

காக்கின்ற என்று நிகழ்காலத்தில் கூறியமையால் ஆளுடைய நம்பிகள் காலத்தில் இவ்வரசர் அரசாட்சி புரிந்தனர் என்பது கருதப்படும்.*

காடவர்கோன் - காடவர் மரபில் வந்தவர்; “ பல்லவர் குலம் ” (4096); பல்லவர் மரபும் காடவர் மரபும் ஒன்று.

கழற்சிங்கன் இவர்க்கு மற்றும் பல பெயர்கள் வழங்கியன என்பர்.

---

*குறிப்பு : இவர் மூன்றாவது நந்திவர்மன் என்ற பெயரால் கல்வெட்டு முதலிய ஆதாரவுகளிற் காணப்படும் அரசராக இருக்கலாம் என்றும், இங்கு இப் புராணத்துள் வரும் அவரது பட்டத்து அரசி, சங்கா என்னும் சமணச் சார்புடைய பெண்மணி என்றும் சரித ஆராய்ச்சியாளர் கருதுகின்றார்கள்.

வகை: மாதவத்தோர் தங்கள் வைப்பினுக்கு ஆரூர் மணிக்கு-மாதவத்தோர் களது சேமநிதி போல்வாரும்; திருவாரூரில் மணிபோன்றவருமாகிய நாயகருக்காக; வைத்த...மூக்கை அரிய - வைக்கப்பட்ட மலரினை எடுத்து மோந்த தமது பட்டத் தரசியினது மூக்கினை(ச் செருத்துணையன்பர்) அரிய; பொற்கை...தடிந்தான் - மலரினைத் தொடுத்து முன் எடுத்த பிழையினை முன்னர்ச் செய்த கையினை முதலிற் சேதித்த பின்னான்றே (மூக்கை) அரிவது என்று அங்கு அவளது கையினைத் துணித்தார்; நாத...கழற்சிங்கனே - பண்ணுடன் மொய்த்துக் கூடி வண்டுகள் திளைக்கும் மாலையினையணிந்த கழற்சிங்கரேயாம்.

மாதவத்தோர்...வைப்பு - சிவபெருமான்; மணி - மணிபோன்றவர்; இறைவர்; வைப்பினுக்கு-மணிக்குஎன இருவகையாகக் கூறியது, பின்னர் இச் சரிதத்தினுள் இருவகை அபராதங்களும் கழுவாய்களும் நிகழும் குறிப்பாம்; வைப்பு - சேமநிதி; தேவி-மனைவி; பட்டத்தரசி; அரிய என்பதற்குச் செருத்துணையன்பர் என்ற எழுவாய் வருவிக்க;

கை காதி வைத்தன்றே அரிவது-காதுநல் - துண்டித்தல்; அரிவது-மூக்கினைக் கருவிகொண்டு வார்தல்; காதிவைத்த பின்னரன்றே என்பது வைப்பு முறையாற் குறிக்கப்பட்டது. நாதம் - பண்பாடும் சத்தம்; ரீங்காரம் என்பர்; கோதை - மாலை.

மரபும் தொழிலும் பெயரும் தொகைநூல் கூறிற்று; அவற்றுடன், செய்த திருத்தொண்டின் வரலாறும் வகைநூல் வகுத்தது.

விரி: 4096. (இ - ள்) படிமிசை...வந்தார் - உலகில் விளங்கிய பழைமை யாகிய பல்லவர்களது குலத்தில் வந்தவதரித்தவர்; கடிமதில்...நீர்மை - காவல் பொருந்திய மதில்களையுடைய மூன்று நகரங்களையும் எரித்த, கங்கைதங்கிய நீண்ட சடையினையுடைய இறைவரது செம்மை பொருந்திய திருவடி மலர்களையே யல்லாமல் வேறொன்றினையும் தமது அறிவினில் பொருளாகக் குறியாத தன்மையினை யுடைய; கொடி...என்பார்-வெற்றிக் கொடியினை வந்திய நெடிய சேனைகளையுடைய அரசராகிய கோக்கழற்சிங்கர் என்னப்படுபவர்.

(வி - ரை) கோக்கழற்சிங்க ரென்பார் - வந்தார் - என்று கூட்டுக. என்பார் - எனப்படுவார்; படிமிசை...குலம் - முன் காலமுதல் உலகினில் விளங்க அரசாண்ட பழமைக் குலம் பல்லவர் மரபாம் என்பது; பல்லவர் - சோழரது ஒரு தொடர் புடைய பிரிவு. இவர்க்கு இடபக்கொடி உரித்து என்பர்.

கடி - காவல்; கடியப்படும் என்ற குறிப்புமாம்.

அடிமலரன்றி...நீர்மை - அன்றிக்குறியா என எதிர்மறையாற் கூறியது உறுதி குறித்தற்கு. நீர்மை - பெருங்குணமமைந்த;

அறிவினிற் குறியா-குறிக்கோளாக மனங் கொள்ளாத-சிந்தியாத-சிறந்த சிவபத்தி யுடைமை. அறியவேண்டிய மெய்ப்பொருளை அறிந்தாராதலின் எனக் காரணக் குறிப்புப்பட அறிவினில் என்றார். உலகியற் பொருள்கள் பிறவும் புலப்படினும் அவற்றை அறிவினுட் குறிக்கொளமாட்டார் என்பார் அறியா என்னாது குறியா என்றார்.

கொடி - வெற்றிக்கொடி; ஈண்டுச் சோழர்களது புலிக்கொடி; பல்லவரது இடபக் கொடியுமாம்.

கோ - பெருமன்னர் - முடிமன்னர்.　　1

4097. காடவர் குரிசி லாராங் கழற்பெருஞ் சிங்க னார்தாம்
ஆடக மேரு வில்லா ரருளினா லமரிற் சென்று
கூடலர் முனைகள் சாய வடபுலங் கவர்ந்து கொண்டு
நாடற நெறியில் வைக நன்னெறி வளர்க்கு நாளில், உ

4098. குவலயத் தரனார் மேவுங் கோயில்கள் பலவுஞ் சென்று
தவலரு மன்பிற் றாழ்ந்து தக்கமெய்த் தொண்டு செய்வார்
சிவபுரி யென்ன மன்னுந் தென்றிரு வாரூ ரெய்திப்
பவமறுத் தாட்கொள் வார்தங் கோயிலுட் பணியப்புக்கார். ௩

4097. (இ - ள்) காடவர்...தாம் - காடவர் குலத்துப் பெரியாராகிய பெரிய கழற்சிங்கனார்; ஆடக...கொண்டு - பொன்னாலாகிய மேருமலையை வில்லாகவுடைய இறைவரது திருவருளினாலே போர் முகத்துப் போந்து, பகைவர்கள் போரில் அழிய, வடபுலத்தவர்களது நாடுகளைக் கைக்கொண்டு; நாடு...நாளில் - நாடு நீதி நெறியிலே வைகும்படி நன்னெறியினை வளர்த்து அரசாளுகின்ற நாளிலே; உ

4098. (இ - ள்) குவலயத்து...செய்வார் - இந்நிலவுலகத்திற் சிவபெருமான் பொருந்தி விளங்கும் திருக்கோயில்கள் பலவும் சென்று பிறழாத அன்பினால் வணங்கி உண்மைத் திருத்தொண்டுகளைச் செய்வாராகி; சிவபுரி...எய்தி - சிவநகர் என்னும்படி நிலைபெற்ற தென்றிருவாரூரினைச் சேர்ந்து; பவமறுத்து...புக்கார் - பிறவியினை அறுத்து ஆளாகக் கொள்ளும் இறைவரது திருக்கோயிலினுள்ளே புகுந்தனர். ௩

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

4097. (வி - ரை) காடவர் - சோழர்களின் ஒருபிரிவாகிய மரபு. "காடவர் கோன்" என்பது முதனூல்; இம்மரபு பல்லவர்களினின்றும் கிளைத்தது என்பது "பல்லவர்குலத்து வந்தார்" என்றதனால் ஆசிரியர் அறிவித்தமை காண்க. இவர்க்கு மும்முடிவேந்தர்களுட் சேர்தது எண்ணும் பெருமையின்று என்ற குறிப்பினால் இவரைக் குறுநிலமன்ன ரவருள் வைத்து வகுத்தனர் திருத்தொண்டர் புராண வரலாற்றின் ஆசிரியர் உமாபதி சிவனார்.

பெருங்கழற் சிங்கனார் என்க. கழலையணிந்த சிங்கம் போன்றார் எனக் காரணப் பெயராய் வந்தமை தெரியக் கழற் பெருஞ் சிங்கனார் என அடையை இடையில் வைத்தார். கழல் - அடைமொழி; சிங்கன் பெயர்; போரிற் சிங்கம் போன்றவன்.

அருளினால் அமரிற் சென்று - நாடு கொள்ளும் மண்ணாசையானன்றி அரச நீதி முறையிற் சேரும் அருள் கூடியதனால்; அருளினால் கவர்ந்து கொண்டு என்று மேலுங் கூட்டுகின்றது; "அடிமலரன்றி வேறொன் றறிவினிற் குறியா நீர்மை" (4096) உடையாராதலின் அருள் வழியே போரில் முனைந்து நாடுகவர்ந்தார் என்பதாம். இவர் சிறந்த சிவபத்தர் என்பது பலவகையாலும் பெறப்படும் உண்மை.

கூடலர் - பகைவர்கள்-சாளுக்கிய அரசர் நாடு என்பது கருதப்படும். சோழர்களுக்கும் சாளுக்கியர்களுக்கும் பல நீண்ட ஆண்டுகள் பல போர்கள் நடந்தன என்பது நாட்டு நடப்புச் சரிதத்தால் அறியவரும் உண்மை; வடபுலத்து வாதாவிப் போரினைப் பற்றிச் சிறுத்தொண்ட நாயனார் புராணத்துள்ளும் காண்க.

அறநெறி - உலகியல் நீதி : நன்னெறி - சிவநெறி ; இரண்டும் உடன் வளர. 2

4098. (வி - ரை) அரனார் கோயில்கள் பலவும் சென்று - சிவத்தலயாத்திரை யினை மேற்கொண்டனர். இது இவர் சிறந்த சிவபத்தராதலினாலும் அரசராதலானும் மேற்கொண்ட நிலை.

தவலுறுதல் - பிறழ்தல்.

தக்க மெய்த்தொண்டு-தக்க - தமக்குத் தகுதியான; மெய்த்தொண்டு - உண்மை நெறியினிற்கும் தொண்டு; மெய் - உடம்பு, உடலாலாகிய தொண்டு என்ற குறிப்பு முடையது.

சிவபுரி என்ன மன்னும் - சிவலோகம் இது என்று சொல்லும்படி; திருவாரூர்ப் பிறந்தார்களெல்லாரும் பிறவியற முத்தியிற் செல்வார் என்றலால் சிவபுரி எனத் தகுவது.

தென்-திருவாரூர் - இறைவர் எழுந்தருளிய பூங்கோயில் தென்றிருவாரூரில் உள்ளது. தென் - பிறிதினியைபு நீக்கிய விசேடணம். "தென் றிருவாரூர் புக்கு எல்லை மிதித்தடியேன்" (நம்பி).

பவம் அறுத்து ஆளவல்லார் - பிறவி வேரினை அறுத்துத், தம் அடிமையாக வைப்பவர்; புற்றிடங் கொண்டார் - தியகேசருமாம்.

பணிய - வணங்குதற் பொருட்டு. இவரது பட்டத்துத் தனித்தேவி பணிதலில் உடன் நில்லாது கோயிலின் பெருமை கண்டுவந்தனள் என்றும், இறைவர்க்காக வைத்த புதுப்பூவை மோந்து பின்னர்க் குற்றம் செய்தனள் என்றும், வருவது சரித மாதலின், அரசர் பணியச் சென்றார் என்று, வேறாக விதந்து கூறினர். 3

4099. அரசிய லாயத் தோடு மங்கணர் கோயி லுள்ளால்
முரசுடைத் தானை மன்னர் முதல்வரை வணங்கும் போதில்
விரைசெறி மலர்மென் கூந்த லுரிமைமெல் லியலார் தம்முள்
உரைசிறந் துயர்ந்த பட்டத் தொருதனித் தேவி மேவி, ௪

4100. கோயிலை வலங்கொண் டங்கட் குலவிய பெருமை யெல்லாம்
சாயன்மா மயிலே போல்வா டனித்தனி கண்டு வந்து
தூயமென் பள்ளித் தாமந் தொடுக்குமண் டபத்தின் பாங்கர்
மேயதோர் புதுப்பூ வங்கு விழுந்ததொன் றெடுத்து மோந்தாள். ரு

4099. (இ - ள்) அரசியல்...போதில் - முரசுகளையுடைய சேனை மன்னர் ஐவகைக் குழுக்கள் சூழ இறைவருடைய கோயிலினுள்ளே சென்று முதல்வராகிய புற்றிடங் கொண்டாரை வணங்கும் பொழுது; விரைசெறி...மேவி - மணமிக்க மலர்களை யணிந்த மெல்லிய கூந்தலையுடைய உரிமைத் தேவியர்களுள்ளே புகழாற் சிறந்து உயர்ந்த பட்டத்துத் தனித்தேவி வந்து; ௪

4100. (இ - ள்) கோயிலை...கண்டுவந்து - சாயலினால் மயிலே போல்வாளாகிய அத்தேவி கோயிலை வலமாக வந்து அங்கு உள்ள பெருமைகளை யெல்லாம் தனித்தனியே பார்த்து வந்து; தூய...பாங்கர் - தூய்மையுடைய மெல்லிய பள்ளித் தாமங்களைத் தொடுப்பதற்குரிய மண்டபத்தின் பக்கத்திலே; மேயதோர்...மோந்தாள் - பொருந்தியதோர் புதியபூ அங்கு விழுந்ததொன்றினை எடுத்து மோந்தனள். ரு

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

4099. (வி - ரை) அரசியல் ஆயம்- அரசுரிமைச் சுற்றத்தார்; ஐவகை குழுக்கள்; மந்திரியர் - புரோகிதர் - சேனாபதியர் - தூதர் - சாரணர் என்போர்.

அங்கணர் - புற்றிடங்கொண்ட பெருமான்; அவரது திருக்கோயிலென்று கோயிலினைக் குறிக்கவந்த அடைமொழி, அரசர் வணங்கிய பெருமானையும் குறித்தது;

முதல்வர் - புற்றிடங்கொண்டார்; வணங்கும்போதில் - வணங்கிக் கொண்டிருக்கும் சமயத்தில்;

உரிமை மேல் லியலார் - உரிமை மனைவியர்கள்;

உரை...தேவி - புகழ்சிறந்த பட்டத்தரசி; அரசர்க்கு மனைவியர் பலர் இருந்தனர்; அவருள்ளே முதல்மனைவியாரே பட்டத்தரசியாவராதலின் அத்தேவி*. உரை - புகழ்; இவரது தயை முதலிய நற்குணங்களைக் குறித்தது. 4

4100. (வி - ரை) அங்கட் தலைவிய பெருமை எல்லாம் தனித்தனி கண்டு வந்து - கோயிலை வெளிச் சுற்றிலே வலங்கொண்டு அங்கு உள்ள தனிக் கோயில்களையும், சிற்ப முதலிய அழகுகளையும் தனித்தனி பார்த்தனர் என்க.

பள்ளித்தாமம் தொடுக்கும் மண்டபம் - பூமண்டபம்; இது பூங்கோயிலின் தென்கீழ்ப் பாங்கு திருவாரூ ரரநெறித் திருக்கோயிலினுள் உள்ள மண்டபம் என்பது வழிவழிக் கேள்வியாற் பெறப்பட்ட செய்தி:

ஓர் புதுப்பூ அங்கு விழுந்தது ஒன்று - ஓர் - என்பது வகையினையும், ஒன்று என்பது தொகையினையும், புதுப்பூ என்பது அது இறைவருக்கு ஏற்பிக்க உள்ளது என்ற செய்தியினையும், பண்பையும் உணர்த்தன. "ஆரூர் மணிக்கு வைத்த போது" என்பது வகைதால்; விழுந்தது - பூமண்டபத்தினுள் விழுந்த மலர்களும் எடுத்துச் சாத்தும் விதியுடையன.

எடுத்து மோந்தாள் - மோந்தாள் என்றலே அமையுமாயினும், எடுத்தல் ஒன்றும் மோத்தல் ஒன்றுமாக இரு வேறு பிரித்துக் கூறினது, பின்னர்ச் சரிதத்தின் இரு வேறு நிகழ்ச்சிகளின் குறிப்புத்தருதற்கு;

சாயல் மா மயிலே போல்வாள் - சாயல் - மென்மை. வடிவம் என்றலுமாம். இவ்வம்மை மிக்க அழகுடையவர் என்பது கல்வெட்டாராய்ச்சியாற் கண்டதென்ப; மேலும் "தோகை மயிலென" (4102) "பைந்தளிர்ப் பூங்கொம் பொன்று" (4103) என்றுரைத்தல் காண்க. உருவுவமம். 5

4101. புதுமலர் மோந்த போதிற் செருத்துணைப் புனிதத் தொண்டர்
"இதுமலர் திருமுற் றத்து ளெடுத்துமோந் தனளா" மென்று
கதுமென வோடிச் சென்று கருவிகைக் கொண்டு பற்றி
மதுமலர்த் திருவொப் பாடன் மூக்கினைப் பிடித்து வார்ந்தார். ௬

---

*குறிப்பு :—இவள் பெயர் சங்கா; இவள் மிக்க அழகு வாய்ந்தவள்; குடிகட்குத் தாய்போன்றவள்; அரசனது பாக்கியமே உருவெடுத்தாற் போன்றவள்; சிறந்த சமண பக்தனான இரட்டப் பேரரசனான அமோகவர்ஷ நிருபதுங்கன் மகள்; பட்டத்தரசியாதலின் கணவருடன் சிவதலங்கட்குச் சென்றாள்;

இவள் சமணச் சார்புடையவளாதலின், சிவனை வணங்குதலில் ஈடுபடாது கோயிலழகில் ஈடுபட்டு அழகு காணச் சென்றனள்; இவளை மணந்தது அரசியல் தந்திரம்; என்பனவாதி செய்திகள் சரித ஆராய்ச்சியாளர் கூறுப.

(இ - ள்) புதுமலர்...போதில் - அவ்வாறு புதுப்பூவை மோந்த பொழுதிலே; செருத்துணை...என்று - செருத்துணையார் என்னும் தூய தொண்டனார், இந்த மலரினைப் பூமண்டபத் திருமுற்றத்தினுள் எடுத்து மோந்தனளாவாள் என்று துணிந்து; கதுமென...பற்றி-விரைவாக ஓடிப்போய்க் கருவியினை எடுத்துக்கொண்டு வந்து பற்றிக்கொண்டு; மதுமலர்...வார்ந்தார் - தேன் பொருந்திய தாமரையில் வீற்றிருக்கும் இலக்குமி போன்ற அவளது மூக்கினைப் பிடித்து அரிந்தனர்.

(வி - ரை) செருத்துணைப் புனிதத் தொண்டர்-செருத்துணை நாயனார்; தொண்டர் - இவர் செய்த திருத்தொண்டு மேல் இவரது புராணத்துள் விரிக்கப்படுவது.

இதுமலர்...என்று - இவள் செய்த செயலினைக் கண்டு இது சிவாபராதமாம் என்றும், அதனைக் கண்ட போதே தண்டிக்கத் தகுந்ததென்றும் துணிந்து ; என்று - துணிந்து; நிச்சயித்து.

பற்றி - " கூந்தலைப் பிடித்து ஈர்த்துப் படியில் வீழ்த்தி " (4124) என மேல் விரிப்பார் ; இவை செருத்துணையார் செயலாதலின் ஆண்டு விரித்தல் தகுதியாம் என்பது ;

மூக்கினைப் பிடித்து - ஒரு கையினால் மூக்கைப் பிடித்து ;

வார்ந்தார் - வார்தல் - அரிதல்.

மதுமலர் - தாமரை ; திரு - இலக்குமி ; அழகும் செல்வமும் நிறைந்த தன்மை குறித்தது ; உருவுவமம். 6

4102. வார்ந்திழி குருதி சோர மலர்க்கருங் குழலுஞ் சோரச்
சோர்ந்துவீழ்ந் தரற்றுந் தோகை மயிலெனத் துளங்கி மண்ணிற்
சேர்ந்தயர்ந் துரிமைத் தேவி புலம்பிடச், செம்பொற் புற்றில்
ஆர்ந்தபே ரொளியைக் கும்பிட் டரசரு மணைய வந்தார். எ

(இ - ள்) வார்ந்திழி...சோர - வார்ந்ததனால் வழிகின்ற குருதி பெருகி வழியவும், மலர்சூடிய கரிய கூந்தலும் அவிழ்ந்து அலையவும்; சோர்ந்து...அயர்ந்து - சோர்வடைந்து விழுந்து அரற்றுகின்ற தோகையையுடைய மயில் போல நடுங்கித் தரையின் மேல் சேர்ந்து அயர்ந்து ; உரிமைத் தேவி புலம்பிட - பட்டத்தரசி புலம்பியிட ; செம்பொற்புற்றுள்...வந்தார் - செம்பொன்னியன்ற புற்றினிடமாக நிறைந்த பேரொளியாகிய பெருமானைக் கும்பிட்டு அரசரும் அங்கு அணையவந்தனர்.

(வி - ரை) வார்ந்து - வார்ந்ததனால் என்று காரணப்பொருள் தந்தது. இழிதல் - மிகப் பெருகி வடிதல் ; குருதி சோர - இரத்தம் வீழ ;

குழல்சோர - கூந்தலைப்பற்றி வீழ்த்தியமையாலும் வருத்தத்தாற் புரண்டமையாலும் கூந்தல் விரிந்து அலைந்தது என்க.

தோகை மயிலென-நீண்ட குழல் அலைதல் தோகை புரள்வது போலுமென்பது; முன்னர்ச் சாயல் மாமயில் என்றது நிற்குநிலையில் உருவுவமமாய் நின்றது. இங்குப் புரளு நிலையில் வீழ்ந்தரற்றுந் தோகைமயில் என்றார். இவ்விரண்டற்கும் வேறுபாடு கண்டு கொள்க. முன்னர்ப் பெருமிதம்பட மாமயில் என்ற ஆசிரியர், இங்கு வாளா மயில் என்ற குறிப்பும் காண்க. துளங்குதல் - அசைதல். அசைவினால் " மயில் " என்றார்.

செம்பொற் புற்றில் ஆர்ந்த பேரொளி - புற்றிடங் கொண்ட பெருமான் ; பேரொளி - இறைவர் பேர் ஒளி உருவினர் என்பது.

அணைய - அவ்விடத்திற்சார; புற்றிடங்கொண்டாரைக் கும்பிட்டு மீளவும் வலம் வரும் அணிமையில் உள்ளது திரு ஆரெறிப் பூமண்டபம். 7

4103. வந்தணை வுற்ற மன்னர் மலர்ந்தகற் பகத்தின் வாசப்
பைந்தளிர்ப் பூங்கொம் பொன்று பார்மிசை வீழ்ந்த தென்ன
நொந்தழிந் தரற்று வாளை நோக்கி "யிவ் வண்டத் துள்ளோர்
இந்தவெவ் வினையஞ் சாதே யார்செய்தார்?" றென்னு மெல்லை, அ

4104. அங்கிலை யணைய வந்து செருத்துணை யாரா மன்பர்
முன்னுறு நிலைமை யங்குப் புகுந்தது மொழிந்த போது,
மன்னரு மவரை நோக்கி "மற்றிதற் குற்ற தண்டந்
தன்னையவ் வடைவே யன்றோ தடிந்திடத் தகுவ" தென்று, கூ

4105. கட்டிய வுடைவா டன்னை யுருவி "யக் கமழ்வா சப்பூத்
தோட்டுமுன் னெடுத்த கையாம் முற்படத் துணிப்ப" தென்று
பட்டமு மணிந்து காதல் பயில்பெருந் தேவி யான
மட்டவிழ் குழலாள் செங்கை வளையொடுந் துணித்தா ரன்றே. கO

4103. (இ - ள்) வந்தணைவுற்ற மன்னர் - வந்து சேர்ந்த மன்னவர்; மலர்ந்த...என்ன - மலர்கள் விரிந்த கற்பகத்தின் மணமுடைய பசிய தளிர்களைக் கொண்ட பூங்கொம்பு ஒன்று நிலத்தின்மேல் விழுந்ததுபோல; நொந்து...நோக்கி - வருந்தி அழிந்து அரற்றுவாளாகிய தேவியை நோக்கி; இவ்...எல்லை-இந்தப் பூவுலக அண்டத்தில் உள்ளவர்களுள் இக்கொடிய செயலை அச்சமில்லாது செய்தவர் யாவர்? என்று கேட்டபோது, அ

4104. (இ - ள்) அங்கிலை...போது - அந்நிலையில் பக்கத்தில் வந்து செருத்துணையாராகிய அன்பர் முன்னர்ப் பொருந்திய நிலைமையினை அங்கு நிகழ்ந்தவாறு சொல்லியபோது; மன்னரும் அவரை நோக்கி - அரசரும் அவ்வன்பரை நோக்கி; மற்றிதற்கு...என்று — மற்று இச் செயல்களுக்குப் பொருந்திய தண்டனையை அக் குற்றங்கள் புகுந்த அடைவுப்படி யன்றோ தடிபத் தக்கது என்று கூறி, கூ

4105. (இ - ள்) கட்டிய ..உருவி - தமது இடுப்பிற் கட்டிய உடைவாளை உருவி; அக்...என்று - அந்த மணங்கமழ் பூவினைத் தொட்டு முன்னர் எடுத்த கை தான் முன்னர்த் துணிக்கப்படுவது தகுதி என்று சொல்லி; பட்டமும்...அன்றே - தமது அரசுரிமைப் பட்டமும் பூண்டு தமது காதலையும் பூண்டு பயில்கின்ற பெருந்தேவியாகிய மணம்விரியும் கூந்தலையுடைய அவளது செங்கையினை அணிந்த வளையலோடும் அப்பொழுதே துணித்தனர். கO

இம் மூன்று பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

4103. (வி - ரை) மலர்ந்த...வீழ்ந்ததென்ன - வீழ்ந்து அரற்றும் தேவிக்கு உருவுவமை; இது அரசர் கண்ட நிலைபற்றியது. வீழ்ந்தரற்றும் அந்நிலையின் உவமை. ஈண்டு அயர்ந்து கிடத்தலின் "கோம்பு" என்றார். அழகின் மேம்பாடும் உடன் குறித்தது. அழிந்து - செயலழிந்து. அரற்றுதல் — புலம்புதல்.

இவ்வண்டத்துள்ளோர்...என்னும் எல்லை - இந்நிலவுலகத் துள்ளோர் எவரும் இதனைச் செய்யத் துணியமாட்டார்கள்; வேறு அண்டத்தவர் தாம் வந்து செய்திருத்தல் வேண்டும் எனத் தமது வலிமையும் வீரமும் தோன்ற முழக்கியது; "வென்றவ ரியாவ ரென்றான் வெடிபட முழங்குஞ் சொல்லான்" (585) என்றநிலை இங்கு நினைவுகூர்தற்பாலது; எல்லை - அப்போது. 8

4104. (வி - ரை) அந்நிலை...போது - தண்டம் செய்த வீரம் எத்துணை, அத்துணை, அரசன்முன் வந்து செய்தி சொன்ன வீரம் என்க; "வீர மென்னால் விளம்பும் தகையதோ ? (144); இவ்வாறாகிய தன்மையில், எறிபத்தர், தாம், புகழ்ச் சோழரது பட்டத்து யானையினையும் பாகரையும் படுத்து வீழ்த்திய செயலை அவர்பால் அறிவித்து (590 - 591)ச் சொல்லிய வீரம் இங்கு நினைவுகூர்தற்பாலது.

அடைவே - முறையே; வரிசையிலே. உலகியல் நிலைபற்றி அரசர்பால் எழுந்த கோபம், அன்பினியலின்முன் உடனே தணிந்த தன்மையே நாயனாரது பெருமை. "நாடற நெறியில் வைக" (4097), "அடிமலரன்றி...குறியா" (4096) தண்டந் தன்னை - தண்டத்தைச் செய்தலில். 9

4105. (வி-ரை) கையாம் முற்படத் துணிப்பது-துணிக்கப்படுவது எனப் பிறவினைப் பொருளில் வந்தது; முற்பட-முன்னே. உடைவாள்-உடையில் செருகியுள்ள வாள்.

தொட்டுமுன் எடுத்த - எடுத்தலால் எனக் காரணக் குறிப்புடன் நின்றது; கை தொட்டு எடுத்துத்தரப் பின் மூக்கு முகர்ந்தது ஆதலின் கையே முதற் குற்றவாளியாம்; அதனை பன்றே முன்னர்த் தண்டித்தல் தகுதி என்றபடி.

பட்டமும்...நழலாள் - ஏனை யாவராயினும் இந்நிலையிலிருந்தால் இத்தன்மைகளில் மனம்பற்றி, உற்ற செயல் செய்யாது விடுவர் என்ற குறிப்புப்படக் கூறியது இந் நாயனாரது செயற்கருஞ் செய்கையின் மேன்மை தோன்றக் கூறியது; சிவன் பணியின் கடமையின் முன்னர் இவ்வுலக பாசபந்தத் தன்மைகள் வலியற்றொழிந்தன என்பதே அடிமைத்திறம்; இவ்வாறு அரசராற்றண்டிக்கப்பட்டமையின் அவ்வரசி சிவபராதமாகிய குற்றத்தின் நீங்கி நற்கதியடையக் காரணமாயிற்று; இக் குறிப்புப் பெறப் "பவமறுத்தாட் கொள்வார்" (4098) என்று முன் கூறியது காண்க. உலகியலில் வன்மை போலக் காணப்படினும் இது கருணைச் செயலே என்பதாம்; "நீடுபெரும் பாவமின்றே நீங்குமென நாடி" (போர் - பல்); பட்டமும் - உம்மை உயர்வு சிறப்பு. மட்டு - தேன்; அவிழ் - விரிந்தலர்ந்த என்ற குறிப்பு.

கையே - என்பதும் பாடம். 10

4106. ஒருதனித் தேவி செங்கை யுடைவாளாற் றுணித்த போது
பெருகிய தொண்ட ரார்ப்பின் பிறங்கொலி புவிமேற் பொங்க
இருவிசும் படைய வோங்கு மிமையவ ரார்ப்பும் விம்மி
மருவிய தெய்வ வாச மலர்மழை பொழிந்த தன்றே. கக

(இ - ள்) ஒருதனி...போது - தமது ஒப்பற்ற தனித் தேவியின் செங்கையினை அரசர் உடைவாளினாற் றுண்டித்த போது; பெருகிய...பொங்க - பெருகிய தொண்டர்களின் அர முழக்கமாகிய விளக்கமுடைய ஒலி நிலவுலகின் மேலே பொங்க; இருவிசும்படைய...விம்மி - ஆகாய முழுதும் கிளம்பும் தேவர்களது முழக்கமும் கூடிப் பெருகி; மருவிய...அன்றே - பொருந்திய தெய்வமணமுடைய கற்பகப் பூமாரியும் அப்பொழுதே பெய்தது.

(வி - ரை) ஒரு தனித்தேவி - முன் (4099 - 4105) உரைத்தவை பார்க்க.
தொண்டர் ஆர்ப்பின் பிறங்கொலி - அரகர முழக்கம். பொங்க - மிக்கோங்க.
இமையவ ரார்ப்பு - தேவதுந்துபி முதலிய முழக்கு.

அடைய-நிறைய; முழுதும்; ஓங்கும்-நிறைந்த; விம்மி-பெருகி; விம்முதல்-பெருகுதல். இவை திருத்தொண்டின் விளக்கமும் அருமைப்பாடும் கண்டபோது நிகழ்வன.
தெய்வ வாசமலர் - மணமுள்ள மந்தார முதலிய தெய்வ மரங்களின் பூக்கள். 11

4107. அரியவத் திருத்தொண் டாற்று மரசனா ரளவில் காலம்
மருவிய வுரிமை தாங்கி மாலயற் கரியார் மன்னும்
திருவருட் சிறப்பி னாலே செய்யசே வடியி னீழற்
பெருகிய வுரிமை யாகும் பேரரு ளெய்தி னாரே. கஉ

(இ - ள்) அரிய...அரசனார் - அருமையாகிய அந்தத் திருத்தொண்டினை ஆற்றிய அரசர்; அளவில் காலம்...தாங்கி - பொருந்திய அளவில்லாத நீண்ட காலம் தமது உரிமையாகிய அரசாட்சியினையும் திருத்தொண்டினையும் தாங்கியிருந்து; மாலயற்கு...எய்தினாரே - விட்டுணுவுக்கும் பிரமனுக்கும் அரியவராகிய இறைவராது நிலைபெற்ற திருவருட் சிறப்பினாலே செம்மை தரும் சிவந்த திருவடியி னீழலின்கண் பெருகிய உரிமையாகும் பெரிய திருவருள் நிறைவினுள் பொருந்தப் பெற்றனர்.

(வி - ரை) அரிய அத்திருத் தொண்டு செயற்கரும் செயலாகிய அத் திருத்தொண்டு; சிவாபராதத்தினை மாற்றிய நிலையும், தமது உரிமைத் தனித் தேவி என்றும் பாராது உலகபபற்றினை அற எறிந்த நிலையும், அப்பற்றினை எறிந்து பற்றற்றான் பற்றினைப் பற்றிய நிலையும் திருத்தொண்டு எனப்பட்டன.

உரிமை - உரிய அரசாட்சியும் திருத்தொண்டும்; இவை இவ்வுலகநிலை; பேல் வரும் உரிமையாதும் என்றது வீடுபேறாகிய சிவனுலக உரிமைநிலை; அந்நிலை, மற்றற வெறிந்த அன்பர்க்கே உரியது என்றவாறு. "அடிமல ரன்றி வேறொன் றறிவினிற் குறியா நீர்மை" என்று முன் (4096) உரைத்த இவரது தன்மை பார்க்க.

செய்ய சேவடி - செய்ய - செம்மை தரும் பண்புடைய. சே - சிவந்த.

பேரருள் - அருள் நிறைவாகிய தன்மை: பேரருளினிறைவில் ஒடுங்குதலே வீடுபேறு எனப்படும். 12

பேரர செய்தினாரே - என்பதும் பாடம்.

4108. வையக நிகழக் காதன் மாதேவி தனது செய்ய
கையினைத் தடிந்த சிங்கர் கழலிணை தொழுது போற்றி
யெய்திய பெருமை யன்ப ரிடங்கழி யாரென் றேத்தும்
மெய்யரு ளுடைய தொண்டர் செயலினை விளம்ப லுற்றாம். கஙு

(இ - ள்) வையக நிகழ - உலகத்தில் விளங்க; காதல்...போற்றி - தமது காதலுடைய பட்டத்தரசியினது கையினைத் தடிந்த சிங்காது திருவடிகளைத் தொழுது துதித்து; (அத்துணையாலே); எய்திய...விளம்பலுற்றாம் - பொருந்திய பெருமையுடைய அன்பராகிய இடங்கழியார் என்று துதிக்கப்படுகின்ற மெய்யருளுடைய திருத்தொண்டர் செய்த திருத்தொண்டினைச் சொல்லப் புகுகின்றோம்.

(வி - ரை) இது கவிக்கூற்று; சரித முடிப்பும் வருஞ்சரிதத் தோற்றுவாயுமாம்.

வையக...சிங்கர் - சரிதசாரம்; சிங்கர் - இந் நாயனாரது பெயர்; முன் பெருஞ் சிங்கனார் (4097) என்றது காண்க. கையினைத் தடிந்த - "கைதடிந்த" என்ற முதனூலாட்சி (தொகை).

எய்திய பெருமை - பெருமை இவரைத் தேடி வந்தடைந்தது என்பது குறிப்பு; இச் சரிதத்துள் ஓரன்பர் தாமே போந்து இவரது பண்டாரத்தின் நெல்லைக் களவு செய்தேயும் அடியார்க் கமுதளித்த செய்தியும், அதுவேயாருக நிகழும் செயலும் குறிக்கக் கூறியது தெய்வக் கவிநயம்; "ஆக்க மதர்வினாய்ச் செல்லும்; (குறள்)"; என்ற கருத்துக் காண்க.

மேயீ அருள் - மெய்யினது அருள்; என்றும் பொய்க்காத மெய்யாகிய சிவனருள்; 13

சரிதச்சுருக்கம்: கழற்சிங்க நாயனூர் புராணம்:—இந் நாயனார் தொன்மையாகிய பல்லவர் குலத்தில் வந்தவர்; சிவபெருமான் திருவடிகளையே யன்றி வேறொன்றினையும் பொருளாக அறிவினிற் குறிக்கொள்ளார்; திருவருளாலே பகைவர் மேற் சென்று அமரியற்றி வென்று வடபுல நாட்டினைத் தமதாக்கி அறநெறி வழுவாது நன்னெறி காத்து அரசாண்டனர்.

சிவதலங்கள் பலவற்றிலும் சென்று வணங்கித் தகும் திருத்தொண்டு செய்வாராயினர்.

திருவாரூரில் வந்து திருக்கோயிலினுட் சென்று வணங்கினர். அப்போது இவரது பட்டத்தரசியார் கோயிலை வலம்வந்து அங்குள்ள பெருமைகளைக் கண்டு சென்றவர் திருப்பூமண்டபத்தில் அருகு விழுந்ததொரு புதுப் பூவை எடுத்து மோந்தனர். அது கண்ட செருத்துணை யன்பர் அது பெருஞ் சிவாபராதமா மென்பது துணிந்து அவளைக் கூந்தலைப் பற்றித் தரையில் வீழ்த்தி அவளது மூக்கினைக் கருவி கொண்டு வார்ந்தனர். அவர் குருதி சோரத் தரையில் வருந்தினர். அப்போது அணுக வந்த அரசனூர் இந்த வெவ்வினை அஞ்சாதே யார் செய்தார் என்று வினவச், செருத்துணையார் வந்து, நிகழ்ந்த செயலைக் கூறினர். அரசர், முதலிற் பூவைத் தொட்டு எடுத்த கைதான் முன்னே தண்டிக்கத் தக்கது; அதுவே அடைவு; என்று கூறித் தமது உடைவாளை உருவி அவரது செங்கையினை வளையொடு துணித்தனர்; அரவொலியும் வானதுந்துபி முழக்கமும் மிக்கன; வானவர் பூமழை பெய்தனர்.

அரசர் நெடுங்காலம் சிவன் அன்புடன் கூடிய அரசுரிமை தாங்கியிருந்து சிவனடி நீழலின் உரிமையாகும் பேரருளினை அடைந்தனர்.

கற்பனை:—(1) சிவன்திருவடிமலரன்றி வேறொன்றினையும் பொருளாக அறிவினிற் குறியா நீர்மையே பற்றற்ற பெரியோர் தன்மையாம்.

(2) அரசர் அமரிற் சேறலும் நாடு கவர்தலும் முதலாகிய உலகியற் செயல்களையும் திருவருளை முன்னிட்டே செய்தல் அவர்களது அடியாரரந் தன்மையினுலாவது.

(3) சிவன் கோயில்கள் சென்று வழிபடுதலும், தமக்கேற்ற பணி செய்தலும் அரசரும் செய்யத் தக்கன. அவ்வாறு செய்தல் தமக்கே யன்றித் தம் கீழ்வாழும் உலகினரையும் அன்பு நெறியின் வழிகாட்டி யுய்விப்பதாகும்.

(4) சிவாலயத்துள் சிவனுக்காக உள்ள பூவை மோத்தலும், அவ்வாறே சிவனுக்குரிய பிற பண்டங்களையும் தாம் நுகர எண்ணுதலும் பாவமும் சிவாபராதமுமாம்.

(5) சிவாபராதம் நிகழக் கண்டபோது அது செய்தார் யாவரே யாயினும் உரியபடி ஒறுத்துத் தண்டம் செய்தல் கடன்.

(6) தமது உரிமைப் பட்டத்தரசி யென்றும் பாராது குற்றத்துக் கேற்ற அடைவே தண்டம் விதித்த சிங்கனூர் தன்மை சிவன் பற்றன்றி வேறுபற்றில்லா நிலைமையினைக் காட்டுவது.

(7) குற்றம் செய்தாருக்குத் தண்டம் இயற்றும் வழிக் குற்றத்தின் அடைவிலேயும், போதிய நிலையிலேயும் தண்டித்தல் அரசர் கடமை.

தலவிசேடம் – திருவாரூர்:—முன் உரைக்கப்பட்டது.

கழற்சிங்க நாயனூர் புராணம் முற்றிற்று.

சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# 54. இடங்கழி நாயனார் புராணம்

## தொகை

" மடல்சூழ்ந்த தார்நம்பி யிடங்கழிக்கும், ' தஞ்சை
மன்னவனாஞ் செருத்துணைதன் னடியார்க்கும் ' அடியேன் "
—திருத்தொண்டத் தொகை – (9)

## வகை

சிங்கத் துருவனைச் செற்றவன் சிற்றம் பலமுகடு
கொங்கிற் கனக மணிந்தவா தித்தன் குலமுதலோன்
" திங்கட் சடையர் தமரென் செல்வ " மெனப்பறைபோக்
கெங்கட் கிறைவ னிருக்குவே ளிர்மன் னிடங்கழியே "
—திருத்தொண்டர் திருவந்தாதி (65)

## விரி

4109. எழுந்திரைமா கடலாடை யிருநிலமா மகண்மார்பில்
அழுந்துபட வெழுதுமிலைத் தொழிற்றொய்யி லணியினவாஞ்
செழுந்தளிரின் புடைமறைந்த பெடைகளிப்பத் தேமாவின்
கொழுந்துணர்கோ திக்கொண்டு குயினாடுங் கோனாடு. க

புராணம் : முன் உரைத்தாங் குரைத்துக் கொள்க.

தொகை : இதழ்களையுடைய மலர்மாலையணிந்த பெருமையுடைய இடங்கழி நாயனாருக்கும் (தஞ்சைச் செருத்துணையாரடியார்க்கும்) நான் அடியேன்.

தார் - சோழ அரசர்க்குரிய மாலை : மடல் - இதழ் ; இங்கு இதழ்களையுடைய மலர்களுக்காகிவந்தது. நம்பி - ஆண்மக்களுட் சிறந்தோர்.

வகை : சிங்கத்துருவனை...முகடு - நரசிங்க உருவெடுத்த திருமாலின் அகந்தையைப் போக்கிய இறைவரது பொன்னம்பலத்தின் முகட்டினை ; கொங்கிற் கனகம்...குல முதலோன் - கொங்கிற் பொன்னினால் வேய்ந்து அணிசெய்த ஆதித்தச் சோழரது வழிவழி முதல்வர் ; திங்கட்சடையார்...இறைவன் - என் செல்வம் சந்திரனை அணிந்த சடையினை உடைய இறைவரது அடியார்களுடையதே என்று பறைசாற்றுவித்தவராகிய எம்தலைவர்; இருக்குவேளிர்மன் இடங்கழியே-நிலைபெற்ற வேளிர் குலத்தில் வந்த அரசர் இடங்கழியா ரென்பவரேயாம்.

சிங்கத்து உருவன் - நரசிங்க உருவெடுத்த திருமால் ; செறுதல் - சண்டுச் செருக்கடக்குதல் என்ற பொருளில் வந்தது.

சிற்றம்பல முகடு - திருச்சிற்றம்பலத்தின் முகட்டினை ; கொங்கிற் கனகம் அணிந்த - "பாக்கொங்கிற் பன்னுதலைப் பசும் பொன்னாற் பயில்பிழம்பர் மிசை யணிந்த" என்பது விரிநூல் ; கொங்கு - கொங்குநாடு ; இங்குக் காவிரி வெளிப் பட்டுப் பெருகும் நிலப்பரப்புப் பொன்மணல் மிகுந்துள்ளது. (Kolar gold fields; Coorg). இப் பொன்மணற் சன்னங்களைக் கொழித்துவருதலாற் காவிரியாறு பொன்னி எனப்படும்.

ஆதித்தன்-ஆதித்தச் சோழர்; திங்கட் சடையர்...செல்வம் எனப் பறைபோக்கு-இவர் சரித வரலாறு. விரிநூலுள் (411) இதனை விரித்தல் காண்க.

இருக்கு(ம்) வேளிர்-நிலைபெற்ற வேளிர் குலம். "அந்நகரத் தினிலிருக்கு வேளிர் குலத் தரசளித்து" (4111); பிரதிகளிற் கண்ட இருக்குவேளூர் என்ற பாடம் தவறு; அந்தப் பாடத்தினையே கொண்டு, இதற்கும், இவரது நகரம் கொடும்பாளூர் (4410) என்று ஆசிரியர் கூறுதலுக்கும் மாறுபாடு கண்டு, அருளின் வழியே வந்த வழிநூலும் சார்புநூலும் தம்முள் முரணுவன என்று கூறி, அபசாரப்படும் நவீன ஆராய்ச்சியாளரு முளர். திரு அருள் புலப்படுத்துப் போந்த எந்தம் பெருமக்களின் திருவாக்குக்களுள் யாண்டும் முரண்பாடு இராது என்பதை நாம் மனத்துள் அழுந்த வைக்கவேண்டும். முரணுவனவாகக் காணில் ஒற்றுமை காண வியலாத எமது அறிவுக்குறையே காரணமென் றஞ்சுதலும் வேண்டும். இதுவே எந்தம் பேரருளாளர்களது நூல் களுக்கும் பிறநூல்களுக்கும் உள்ள வேறுபாடென்க. மன் - அரசர் ; இவரைச் சோழர் மரபிலிருந்து கிளைத்துப் பிறிதோர் சார்பாக மேற்கொண்டு அரசாண்டமை யின் முடிமன்னருட் சார்த்தி வகுத்து ஓதுவர் திருத்தொண்டர் புராண வரலாறுடை யார். இருக்கு வேளிர்குலம் அவ் வாறாயதொரு சிறுமரபு என்க. (வேளிர் - குறுநில மன்னர்)

விரி : 4109. (இ - ள்) எழுந்திரை...மார்பில் - மேன்மேல் எழுந்து வரு கின்ற அலைகளையுடைய பெருங்கடலினை ஆடையாகவுடைய பெரிய நிலமாகிய மகளின்மார்பில் ; அழுந்துபட...அணியினவாம்-அழுந்தும்படி எழுதுகின்ற இலைகள் போலச் சித்திரிக்கப்பட்ட தொய்யிலின் அணியினைக் கொண்டுள்ளன ; செழுந் தளிரின்...கோனாடு - செழிய தளிர்களின் பக்கத்தில் மறைந்த பெடை மகிழும்படி தேமாவின் றளிர்களைக் கோதிக்கொண்டு குயில்கள் நாடுகின்ற கோனாடு என்பது.

(வி - ரை) கோனாடு - தொய்யிலணியினவாம் என்று இயையும் ; ஒருமைப் பன்மைமயக்கம். நாட்டின் இடங்கள் அணியின என்றலுமாம்.

அழுந்துபட - அழுந்த ; ஒரு சொல். எழுந்திரை - உயரும் அலைகளையுடைய ; மா - கரிய என்றலுமாம்.

எழுதும் இலைத் தொழில் தொய்யில் - சந்தனக் குழம்பினால் பெண்களின் மார்பில் இலை பூ முதலிய வடிவங்களாய்ச் சித்திரித்து எழுதும் அணி விசேடம் தொய்யில் எனப்படும்.

கடலாடை - நிலமகள் - உருவகம்.

தேமாவின் துணர்ச் சோலைகள் சூழ்ந்து இருத்தலின் நிலமகள் மார்பில் இலைத் தொழில்பட எழுதும் தொய்யில் போன்றது இந்நாடு என்பதாம்.

தேமாவின் கொழுந்துணர் கோதி - குயில்கள் மாவின் இளந்தளிர்களைக் கோதிக் களிக்கு மியல்பின ; "பாஅறு மலர்ச்சூதப் பல்லவங்க ளவைகோதி, யேனோர்க்கு மினிதாக மொழியுமெழி லிளங்குயிலே" [பின் - பழந்தக்க -

தோணிபுரம் - 8]. துணர் - பூ என்றலுமாம் ; "பானுறு மலர்க்குதப் பல்லவங் களவை கோதி...மொழியுமெழி லிளங்குயிலே" (பிள் - தேவா - தோணிபுரம்).

மறைந்த பேடை க்ளிப்பக் குயில் நாடும் என்று கூட்டுக ; மறைந்த பெட்டையைக் காணாது குயில் தேட அதுகண்டு பெடை, களிக்கின்றது ; சிறுவர் காதலர் விளையாட்டு வகைக் குறிப்பு. துணர் கோதிக் கொண்டு - என்பது தேடுதற்குத் தன்னை ஊக்கப்படுத்திக் கொண்டு என்ற குறிப்பு. குயில் - ஆண் குயில்கள் ;

கோனாடு - இது புதுக்கோட்டையின் ஒரு பகுதி.

பேடைக்களிக்க - என்பதும் பாடம். 1

4110. முருகுறுசெங் கமலமது மலர்துதைந்த மொய்யளிகள்
பருகுறுதெண் டிரைவாவிப் பயில்பெடையோ டிரையருந்தி
வருகுறுதண் டுளிவாடை மறையமா தவிச்சூழல்
குருகுறங்குங் கோனாட்டுக் கொடிநகரங் கொடும்பாளூர். ௨

(இ - ள்) முருகுறு...வாவி - மணங்கமழும் செந்தாமரைத் தேனை மலரில் மொய்த்த வண்டுகள் பருகுதற்கிடமாகிய தெளிந்த அலைகளையுடைய வாவியில் ; பயில் பெடையோடு...மறைய - பொருந்திய பெண்பறவைகளோடு இரையினை உண்டு, மோதிவரும் குளிர்ந்த வாடைக்காற்று மறைதற்கு ஏற்றபடி ; மாதவிச் சூழல் குருகு உறங்கும் - குருக்கத்திச் சோலையில் குருகுகள் உறங்குகின்ற ; கோனாட்டுக் கொடி நகரம் கொடும்பாளூர் - கோனாட்டிலே கொடி நகரம் கொடும்பாளூர் என்பதாகும்.

(வி - ரை) நாட்டுவளமும் நகர்வளமும் குறிக்கப்பது இப்பாட்டு. தாமரை மலர்களின் தேனை வண்டுகள் உண்கின்றன ; அந் தடாகங்களில் குருகுகள் ஆணும் பெண்ணுமாகக் கூடி இரையருந்தி வாடைக் கொதுங்கிக் குருக்கத்திச் சோலையில் உறங்குகின்றன ; இவ்வாறு தடாகங்களும் சோலைகளும் சூழ வுள்ளது கோனாட்டின் கொடும்பாளூர் - என்பதாம். அளிகள் கமலமது பருகுசல் இச்சரிதக் குறிப்பு.

கோடிநகரம் - தலை நகரம் ; இராசதானி. மாதவி - முல்லை விசேடமுமாம்.

கொடும்பாளூர் - இது தலை நகரத்தின் பெயர்.

மது - பருதறும் - வாவி(யில்) என்க.

செங்கமல மலர்மகரந்த - பெருநறு தேனை - என்பனவும் பாடங்கள். 2

4111. அந்நகரத் தினிலிருக்கு வேளிர்குலத் தரசனித்து
மன்னியபொன் னம்பலத்து மணிமுகட்டிற் பாக்கொங்கின்
பன்னுதுலைப் பசும்பொன்னாற் பயில்பிழம்பா மிசையணிந்த
பொன்னெடுந்தோ ளாதித்தன் புகழ்மரபிற் குடிமுதலோர், ௩

4112. இடங்கழியா ரெனவுலகி லேறுபெரு நாமத்தார்
அடங்கலர்முப் புரமெரித்தா ரடித்தொண்டி னெறியன்றி
முடங்குநெறி கனவினிலு முன்னுதா ரெந்நாளுந்
தொடர்ந்தபெருங் காதலினாற் றொண்டர்வேண் டியசெய்வார், ௪

4113 சைவநெறி வைதிகத்தின் றருமநெறி யொடுந்தழைப்ப
மைவளருந் திருமிடற்றார் மன்னியகோ யில்களெங்கும்

மெய்வழிபாட் டர்ச்சனைகள் விதிவழிமேன் மேல்விளங்க
மொய்வளர்வண் புகழ்பெருக முறைபுரியு மந்நாளில், ௫

4114. சங்கரன்ற னடியாருக் கமுதளிக்குந் தவமுடையார்
அங்கொருவ ரடியவருக் கமுதொருநா ளாக்கவுடல்
எங்குமொரு செயல்காணு தெய்தியசெய் தொழில்முட்டப்
பொங்கியெழும் பெருவிருப்பாற் புரியும்வினை தெரியாது, ௬

4115. அரசரவர் பண்டாரத் தந்நாட்டி னெற்கூட்டின்
நிரைசெறிந்த புரிபலவா நிலைக்கொட்ட காரத்தின்
புரைசெறிநள் ளிருளின்கட் புக்குமுகந் தெடுப்பவரை
முரசெறிகா வலர்கண்டு பிடித்தரசன் முன்கொணர்ந்தார். ௭

4111. (இ - ள்) அந்நகரத்தினில்... அரசளிந்து — அந்த நகரத்திலே இருந்து வேளிர் நலத்தில் சோன்றி அரசு செய்து; மன்னிய ..அணிந்த—நிலைபெற்ற பொன்னம்பலத்தின் அழகிய முகட்டிலே ஒளியுடைய கொங்குநாட்டின் புகழுடைய எடையேறப் பெற்ற பசும்பொன்னினாலே விளங்கும் ஒளிபுருவின் மேல் வேய்ந்து அணிந்த; பொன்...குடிமுதலோர் — பொன்னணிகள் பூண்ட தோளையுடைய ஆதித்தச் சோழனது புகழ்தங்கிய மரபில் குடிமுதல்வராய், ௩

4112. (இ — ள்) இடங்கழியார்...நாமத்தார் - இடங்கழியார் என்று உலகத்தில் புகழ்பெற்ற பெரிய பெயரினையுடையவர்; வடங்கலர்...முன்னுதார் - பகைவர்களுடைய முப்புரங்களையும் எரித்த சிவபெருமானது திருவடித் தொண்டின் நெறியினையன்றி வேறு முடக்கம் பொருந்திய புறநெறிகளைக் கனவிலும் நினைக்காதவர்; எந்நாளும்...செய்வார் - எக்காலத்திலும் தொடர்ந்த பெரிய காதலினாலே தொண்டர்கள் வேண்டிய பணிகள் எல்லாவற்றையும் செய்வாராகி, ௪

4113. (இ — ள்) சைவநெறி...தழைப்ப — சைவநெறியானது வைதிக தரும நெறியுடனே தழைக்க; மைவளரும்...விளங்க - விடத்தினைக் கொண்ட திருமிடற்றினையுடைய இறைவர் நிலைபெற வீற்றிருக்கும் திருக்கோயில்களிலெங்கும் உண்மை வழிபாடாக அர்ச்சனைகள் சிவாகம விதிவழியே மேன்மேல் விளங்க; மொய்...புகழ் பெருக - கூடிவளர்கின்ற வளப்பமுடைய புகழ் பெருக; முறைபுரியும் அந்நாளில் - அரசு செலுத்தும் நாளிலே. ௫

4114. (இ - ள்) சங்கரன்...அங்கொருவர் - அங்குச் சங்கரனது அடியவர்க்கு அமுது அளிக்கும் தவத்தினையுடையார் ஒருவர்; அடியவருக்கு...முட்ட - ஒருநாள் அடியவருக்குத் திருவமுதாக்குதற்குரிய பண்டங்கள் பெற எங்கும் ஒரு செயல் காணாமையால் தாம் செய்துவந்த பொருந்திய அத்தொழில் முட்டுப்பட; பொங்கி...தெரியாது - மேன்மேலும் பொங்கி எழுகின்ற பெரிய விருப்பத்தினாலே தாம் செய்யும் செயல் தெரியாது. ௬

4115. (இ - ள்) அரசரவர் பண்டாரத்தில் - இடங்கழியாராகிய அரசரது பொக்கிசத்திலே; அந்நாட்டின்...எடுப்பவரை - அந்நாட்டின் நெற்கூடுகளின் வரிசை நிறைந்த மதிற் காவல் பலவுள்ள நிலைக்கொட்டகாரத்தில் எங்கும் மிகுந்த இருள் நிறைந்த பாதி இரவிலே புகுந்து நெல்லினை முகந்து எடுக்க அவரை; முர

செறி...முன்கொணர்ந்தார் - கடிகைப்படி இரவுமுழுதும் காவல் முரசு முழக்கும் காவலர்கள் கண்டு அவரைப்பற்றி அரசன் முன்னே கொண்டுவந்தனர். எ

இவ்வைந்து பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

4111. (வி - ரை) இருக்கு வேளிர் குலம் - சோழர் மரபினின்றும் பின்னுட் பிரிந்ததாக மேற்கொள்ளுவதொரு சிறுபிரிவு "பதினெண்குடி வேளிருள்ளிட் டாரையும்" (தொல் - ந. உரை).

பொன்னம்பலத்து மணிமுகடு-பொன்னம்பலம்-இது சிற்றம்பலத்தின் வேறாய் அதனையடுத்துத் தென்பாலிலுள்ளது; இந்த அம்பலங்களுள் ஒன்று; முகடு - உச்சி.

பாக்கோங்கிற் பன்னுதுலைப் பசும்பொன் - பா - கோங்கு - பொற்சன்னங்கள் மிக்க நிலப்பரப்புடைய நாடு ; துலை - செறிவும் எடையு மிக்குள்ள. துலாம் என் னும் எடையுள்ள - துலாபாரமாகிய என்ற பொருள்களும் அமையும்.

பயில்பிழம்பா மிசையணிந்த - விளங்கும் ஒளி பெற மேலணிந்த ; முன் னிருந்த ஒளியின்மேல் இஃது ஓங்கி மேல் விளங்கும்படி ; ஆதித்தன் - ஆதித்தச் சோழன் ; இவர் இடங்கழியாரின் பின் வழிவழியில் வந்தவர் ; இருக்கு வேளிர் குலத்தினைச் சார்ந்தவர் ; இவர் கனகசபையின் முகடு பொன் வேய்ந்த செயல் கல் வெட்டுக்களால் விளங்கும். பொன்னெடுந்தோள் - வீரத்திருமகள் தங்கிய தோள் ; பிழம்பு - வடிவம்.

துணைப்பசும் - சுடர்ப்பசும் - பிழம்பாமிசை - என்பனவும் பாடங்கள். 3

4112. (வி - ரை) ஏறும் - புகழினாலே சிறக்கும் ; அடங்கலர் - பகைவர் ; முடங்குநெறி - நேர் செல்லாது முடங்கும் வழிகள் ; வேதசிவாகமங்களுக்கு முரண் பட்ட புறநெறிகள். பாவநெறிகள் ; (முடம் - வளைவு - குற்றம்).

கனவிலும் முன்னாதார் - மறந்தேயும் எண்ணாதவர் ; நனவில் எண்ணாத தன்றிக் கனவிலும் என இறந்தது தழுவிய எச்சவும்மை.

தொடர்ந்த - சிவத்தொடர்பாற் கூடிய.

வேண்டிய - வேண்டியவற்றை யெல்லாம் வேண்டியவாறே. வேண்டல் - விரும்புதல் ; 4

4113. (வி - ரை) தழைப்ப - விளங்க - பெருக - புரியும் - என்று கூட்டுக; இச்செயல்கள் இவரது ஆட்சியில் ஒருங்கு உடனிகழ்ச்சி பெறச் செய்யப்பட்டன.

சைவ...தருமநெறியோடும் - "வேதநெறி தழைத்தோங்க மிகுசைவத் துறை விளங்க" என்ற கருத்து ; தருமம் - வைதிக தருமம் ; இவை உலகியற் பயன் தரு வன ; சைவநெறி; இவை வீடுபேற்றுப் பயன் தருவன ; இகபர மிரண்டும் தழைக்க.

அர்ச்சனைகள்...விளங்க - சிவன் கோயிற் பூசைகள் சிவாகம விதிப்படி மேன் மேல் விளங்கும்படி ; மொய் - மிக்க நெருங்கிய.

வண் - வள்ளன்மையாலும் ; புகழ் - ஆட்சி முறையினாலும் வருவது.

முறை - நீதிமுறை. புரியும் - வழங்கும். 5

4114. (வி - ரை) ஒருநாள் அடியாருக்கு அமுதாக்க என்க ; உடல் - உப காரணங்கள் ; "ஒளிவிளக் கேற்றற் குடலிலனாய்" (திருவந் - 54). இதனை உடன் என்று பாடங்கொண்டோதுவாருமுண்டு. தவமுடையவராகிய ஒரு அடியவர் ; ஆக்க - தாம் செய்து வந்த ; செய்விக்க ;

எய்திய செய்தொழில் - பொருந்திய திருவமுதூட்டும் பணி ;

புரியும்வினை தேரியாது - தாம் செய்ய எண்ணிய தொழில் திருட்டாகும் என்ற இழிபினை யறியாமல். இன்னது செய்வது என்ற வழியறியாமல் என்றலுமாம். ஒருவருக்கு ஒருபொருள்மேல் பெருவிருப்பு மூண்டிடின் அதுபற்றிச் செய்யும் வினையின் ஏற்றத்தாழ்வு நாடாது செய்வர் என்பது உலகியல் உண்மை; பெருவிருப்பும் பெருஞ்சினமும் அறிவினை அழிக்கும் தன்மையனவாம்; ஆதலின் "காய்தலுவத்த லகற்றி யொருபொருட்கண், ஆய்த லறிவுடையார்க் கண்ணதே" என்றனர் பிற்காலத்து நீதிநூலார். 6

4115. (வி - ரை) பண்டாரம் - பொக்கிசம் - நிதிகள் சேமிக்குமிடம்; செல்லும் பெருஞ்செல்வத்துள் சேர்ந்தெண்ணப்படும். 4117 - பார்க்க.

அந்நாட்டின் நெற்கூட்டின் - அந்நாட்டின் இறைப்பொருளாய் வந்த நெற்கூட்டின்; அரசரின் கீழ்ப் பல நாடுகளிருத்தலின் அவ்வந்நாட்டு இறைப்பொருள் நெற்கூடுகள் அங்கங்கும் அமைக்கப்படுவன என்பது. நிலை - வரிசை.

புரிபலவாம் நிலைக்கோட்டகாரம் - மதில் வகையால் பற்பலபுரிகளாக அரண் அமைக்கப்பட்ட கொட்டகாரம்; புரி - போர்கள்; கோட்டகாரம் - பண்டங்கள் சேமிக்கும்படி அமைந்த பெரு வீடு.

புரை சேறி நள் இருள் - மிக்க நள்ளிருள் இடை.

முரசேறி காவலர் - யாமத்தின் அளவு இரவு கடிகை தெரிப்ப இரவு முழுதும் முறைப்படுத்தி முரசெறிந்து காவல்புரியும் காவலாளர் - (Night guards); முரசு - நாழிகைப்பறை; 7

4116. மெய்த்தவரைக் கண்டிருக்கும் வேன்மன்னர் வினவுதலும்
"அத்தனடி யாரையா னமுதுசெய்விப் பதுமுட்ட
இத்தகைமை செய்தே" னென் றியம்புதலு மிகவிரங்கிப்
பத்தரைவிட் "டிவரன்றே பண்டார மெனக்" கென்பார், அ

4117. நிறையழிந்த வுள்ளத்தால் "நெற்பண்டா ரமுமன்றிக்
குறைவிலநிதிப் பண்டார மானவெலாங் கொள்ளைமுகந்
திறைவனடி யார்கவர்ந்து கொள்க" வென வெம்மருங்கும்
பறையறையப் பண்ணுவித்தார் படைத்தநிதிப் பயன்கொள்வார். கூ

4116. (இ - ள்) மெய்த்தவரை...வினவுதலும் - காவலாளர் பிடித்துவந்த அந்த மெய்யடியவரை அரச கொலுவீற்றிருக்கும் வேலேந்திய அரசர் கண்டு வினவுதலும்; அத்தன்...இயம்புதலும் - இறைவனது அடியவர்களை யான் அமுது செய்விக்கும் தொழில் முட்டுப்பட்டமையாலே இவ்வாறு செய்தேன் என்று அவர் சொல்லுதலும்; மிக இரங்கி...என்பார் - அதற்கு மிகவும் இரங்கி, அடியவரைக் காவலினின்று விடுவித்து, இவரன்றே எனக்குப் பொக்கிசமாவார் என்று சொல்வாராகி, அ

4117. (இ - ள்) நிறையழிந்த உள்ளத்தால் - நிலையழிந்த உள்ளத்தினாலே; நெற்பண்டாரமுமன்றி...கொள்க என-நெற்பண்டாரம் மட்டுமே யன்றிக் குறைவில்லாத நிதிகளின் பொக்கிசங்களாகிய எல்லாவற்றையும் கொள்ளையாக முகந்து இறைவனடியார்கள் கவர்ந்து கொள்க என்று; எம்மருங்கும்...பயன் கொள்வார் - எல்லாப்

பக்கங்களிலும் பறைசாற்றும்படி செய்தனர் ; தாம் பெற்ற நிதிகளாலாகிய பயனைக் கொள்வாராகிய இடங்கழியார். க

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

4116. (வி - ரை) மெய்த்தவர் - காவலாளர் பிடித்துக் கொணர்ந்த மெய்யடியார் ; களவு செய்தேயும் சிவன் அடியாரை அமுது ஊட்டுதல் வேண்டுமென்ற உறுதிப்பாட்டினால் களவினால் தமக்கு நேரிடக்கூடிய அரச தண்டனையினையும் மனங் கொள்ளாதவராதலின் மெய்த்தவர் என்றனர். தேச சேவை என்ற பெயரால் அரச தண்டனையினைப் பொருட்படுத்தாதோரை இந்நாளில் பெருந்தியாகிகள் - தவசிகள் - என்று கூறும் நிலையினைக் கண்டு இதன் உயர்வு கண்டு கொள்க.

இருக்கும் வேள் மன்னர் - அரச கொலு வீற்றிருக்கும் வேலேந்திய மன்னர்*.

அத்தன்...செய்தேன் என்று இயம்புதலும் - அடியவர்களின் வீரம் குறித்தது ; எறிபத்த நாயனார் - செருத்துணையார் - இவர்கள் அரசர்களிடம் விடுத்த விடைகள் ஈண்டு வைத்து ஒப்புக்காணத்தக்கன. (4104)

மிக இரங்கி - அவ்வடியார் மனம் வருந்த வந்த நிலைக்கு மிக இரங்கினார் ; அடியவரை அமுதூட்ட முட்டுப்பட்டபோது அவருக்கிருந்த மன நிலைக்கும், காவலாளர் பற்றியபோது வருந்திய நிலைக்கும் இரங்கினார் என்க.

விட்டு - காவலாளரது காவலின் நும் விடுவித்து.

இவரன்றோ எனக்குப் பண்டாரம் - இவ்வடியவரன்றோ எனது சேம வைப்பு. நெற்கூடு பண்டாரமாகாது ; இவரே பண்டாரமாவார் என்பதாம் ; என்னை ? அது நெல்லைத் தன்னுள் கொண்டு வாளாவிருக்குமே யன்றிப் பயன்தராது ; இவர் அவ்வாறன்றி அந்நெல்லைத் தம்முள் வைத்து அடியார்க்கமுதூட்டி அதனால் வரும் பயனை எனக்குத் தேடித்தருபவர் என்பது கருத்து. மேல் "படைத்த நிதிப் பயன் கொள்வார்" (4117) என்பது காண்க ; ஓகாரம் உடன்பாட்டு வினா ; உறுதி குறித்தது ; "அஃதொருவன் பெற்றான் பொருள் வைப்புழி" (குறள்) என்ற கருத்தும், "தனக்குதவ வைக்குமிடம் அவ்வறம்" என்ற உரையும் காண்க. பண்டாரம் - நிதிச்சாலை; "பண்டாரத் தேயெனக் குப்பணித்தருள வேண்டும்" "பாதம்பணி வார்கள்பெறு பண்டம்" (நம்பி - தேவா) பண்டம் - பொருள் ; அயலாரது பொருள் கவர்ந்து நல்வினை செய்யின் அதனால்வரும் அறம், பொருளுடையாரையும், தீவினை செய்யின் மறம் கவர்ந்தாரையும் சாரும் என்பது நீதி நூற் கருத்து, (ந - சிவ)

என்பார் - என்பாராகி ; முற்றெச்சம்.

என்பார் - பயன் கொள்வார் - பணிவித்தார் என்று, வரும் பாட்டுடன் முடிக்க. 8

4117. (வி - ரை) நிறையழிந்த உள்ளத்தான் - ஆன் - உருபு உடனிகழ்ச்சிப் பொருளில் வந்தது. நிலையழிந்த உள்ளத்தோடும் ; தமது அரசாட்சியில் அடியார்கள் சிவன் திருத்தொண்டுக்கு உடலின்றி வருந்தும் நிலையும் உளதாயிற்றே என்றும், உண்மையடியாரை அறியாது காவலாளர் பிடிக்க நேர்ந்ததே என்றும், மனமழிந்தனர்; சிவதருமங்களைச் செவ்வே அவரவரும் வேண்டியவாறு செய்யும்படி நிறுவுவது

*குறிப்பு :—இருக்கும் வேள் - என்பது இருக்கு வேள் என்றிருத்தல் கூடுமோ என்பது ஐயப்பாடு ; "இருக்குவேளிர் மன்" (திருவக் - 65) என்ற வழக்கமுங் காண்க ; இருக்குவேளிர் என்பது இம்மன்னரது மரபின் பெயர் என்பது சரித ஆராய்ச்சியாளர் கல்வெட்டு ஆதாரவுகளாற் கண்டது.

அரசாட்சியின் குறிக்கோள் என்பது கருத்து. முன் (4113) உரைத்தவை பார்க்க. நிறை - உறுதி ; பொருட்பற்று நீங்கிய எண்க.

நெற்பண்டாரமுமன்றிக் குறைவினிதிப் பண்டாரமும் - பண்டாரம் - (பொக்கிசம்) நெல்லும், பொன் - மணி முதலாயினவும், என இருவகையினது ; இவ்விருவகையினையும் ; எலாம் - எல்லாவகையும் ; முற்றும்மை தொக்கது.

கொள்ளை முகந்து - கொள்ளை - எண்ணில்லாமற் கொள்ளப்படுவது ; அளவுபடாதபடி; முகந்து என்பதும் இக்குறிப்புத்தருவது; வாரிக்கொண்டு. கொள்-பகுதி.

பறையறையப் பண்ணுவித்தார் - பறைசாற்றுவித்தனர் ; பறைசாற்றுதலினாலும் வாக்கினால் சொல்லுதலினாலும் இச் செய்தியினை அடியார் தெரியும்படி ;

நெற்...பண்ணுவித்தார் - "திங்கட் சடையான் றமரதென் செல்வ மெனப் பறை போக்கும்" என்பது வகைநூல் (திருவந் - 65).

படைத்த - பெற்ற - ஈட்டிய ; சேமித்த.

நிதிப்பயன் - நிதிபடைத்த பயனாவது சிவனுக்கும் அடியாருக்கும் ஆக்குதலாம் என்பது வேத சிவாகமங்களின் துணிபு ; முன் பல இடத்தும் உரைத்தவை யெல்லாம் காண்க. குறைவில்நிதி - படைந்தநிதி - முன்னோர் காலமுதல் ஈட்டிவைத்த பெரும்பொருள் என்பது குறிப்பு.

கொள்வார் - கொள்வாராய் ; கொள்வார் - பண்ணுவித்தார் என்று கூட்டுக. வினையாலணையும் பெயராகக் கொண்டு கொள்வாராகிய நாயனார் பண்ணுவித்தார் என்றலுமாம். 9

4118. எண்ணில்பெரும் பண்டார மீசனடி யார்கொள்ள
உண்ணிறைந்த வன்பினா லுறுகொள்ளை மிகவூட்டித்
தண்ணளியா னெடுங்காலந் திருநீற்றி னெறிதழைப்ப
மண்ணிலருள் புரிந்திறைவர் மலரடியி னிழல்சேர்ந்தார். க0

(இ - ள்) எண்ணில்...மிகவூட்டி - அளவில்லாத பெரிய சேமநிதிகளை யெல்லாம் இறைவனடியார்கள் கவர்ந்து கொள்ளும்படி மனத்தின் உள்ளே நிறைந்த அன்பினாலே உற்ற கொள்ளை நிகழ மிகவும் செய்வித்து ; தண் அளியால்...அருள் புரிந்து - குளிர்ந்த அளியினால் நீண்டகாலம் திருநீற்றின் நெறி தழைக்கும்படி உலகில் அருள்புரிந்து ; இறைவர்...சேர்ந்தார் - சிவபெருமானது திருவடி நீழலினை அடைந்தனர்.

(வி - ரை) எண்ணில்...ஊட்டி - பறைசாற்றுவித்த செயலினை முன் கூறினர்; அவ்வாறு பறைசாற்றக் கேட்டுச் சிவனடியார்கள் அனேகராய் வந்தனர் ; பறைசாற்றியவாறே தமது பண்டாரங்களை யெல்லாம் திறந்துவிட்டு எல்லா நிதிகளையும் அவர்கள் கொள்ளைபெற முகந்து கொள்ளச் செய்தனர் ; இவ்வாறு நிகழ்ந்தது உண்ணிறைந்த அன்பினாலாகியது என்பதாம்.

தண் அளியால்...அருள் புரிந்து - அளி - கருணை ; அருள் புரிந்து - உலகினர் மேல்வைத்த கருணையினாலே திருநீற்றின் நெறிதழைக்கும்படி அரசுசெய்து ; திருநீற்றின் நெறி - சைவநெறி ; இன் - இனிய ; அரசாட்சியினை அருள் புரிந்து என்றது இறைவர் காத்தல்போல இவர் அரச நீதியினை உயிர்கள் உய்திபெறும் நோக்கத்துடன் இயற்றினர் என்பதாம். 10

4119. மைதழையு மணிமிடற்ருர் வழித்தொண்டின் வழிபாட்டில்
எய்துபெருஞ் சிறப்புடைய விடங்கழியார் கழல்வணங்கி
மெய்தருவார் நெறியன்றி வேறென்று மேலறியாச்
செய்தவராஞ் செருத்துணையார் திருத்தொண்டின் செயன்மொழிவாம்.

(இ - ள்) மைதழையும்...வணங்கி - விடம் வளர்தற்கிடமாகிய அழகிய கண்டத்தினையுடைய இறைவரது வழிவழி வரும் திருத்தொண்டின் வழிபாட்டிலே பொருந்திய பெருஞ் சிறப்பினையுடைய இடங்கழி நாயனாரது திருவடிகளை வணங்கி அத்துணைகொண்டு; மெய்தருவார்...செயல் மொழிவாம் - சத்தாந் தன்மை தருவாராகிய சிவபெருமானது நெறியினையன்றி வேறொன்றினையும் மேல் என்றறியாத செய்தவராகிய செருத்துணையாரது திருத்தொண்டின் செய்கையினைச் சொல்வோம்.

(வி - ரை) சரித முடிபும் வருஞ்சரிதத் தோற்றுவாயுமாம்; கவிக்கூற்று.

வழித்தொண்டின் வழிபாட்டில் - சிறப்பு - அடியார்கள் அரனை வழிபட்டுத் தொண்டு செய்ப, இவர் அவ்வடியார்களின் வழிபாட்டில் நின்று அதனாற் சிறப்புப் பெற்றனர் என்று சரிதசாரங் கூறியபடி 4112. பார்க்க. வழிபாட்டின் எய்தும் - வழிபாட்டினாலே அடைந்த; 5-ம் வேற்றுமை ஏதுப்பொருட்டு.

மெய்தருவார் - மெய் - சத்தாந்தன்மை; மெய்தருவார் - சிவபெருமான்; தமது சிவமாந்தன்மையினை அடியார்களுக்குச் செய்பவர்; "தான்செய்யுந் தன்மைகளும் ஆக்கியிடு மன்பர்க் கவன்" (களிறு - 69); நெறி - சைவநெறி;

வேறென்றும் மேல் அறியா - சிவநெறியின் கடமை செய்வதையன்றி, வேறொன்றினையும் மேலாகிய பொருளொன்று அறிவினிற் குறியா நீர்மை செருத்துணையார்; சரிதக் குறிப்பாகிய தோற்றுவாயாதல் கண்டு கொள்க. மை-கருமை; 11

சரிதச்சுருக்கம் : இடங்கழிநாயனுர் புராணம் :—கோனாட்டில் கொடும்பாளூரில் வேளிர் குலத்து அரசளித்துப் பொன்னம்பலது முகட்டினைக் கொங்கிற் பொன்னால் அணிந்த ஆதித்தச் சோழரது குலமுதல்வராகிய இடங்கழியார் என்னும் மன்னவர் சிவனடித் தொண்டினிற் சிறந்திருந்தனர். சிவனடியார் வேண்டியவற்றைச் செய்வார்.

அவ்வூரில் சிவனடியார்க்கமுதூட்டும் பணிபூண்ட ஒரு அடியவர் இருந்தார். அவருக்கு அடியார்க்கு அமுதூட்டுதற்குரிய பண்டங்கள் ஒரு எவ்வகையாலும் பெருமையால் பணிமுட்டும்படி நேர்ந்தது. அதன் பொருட்டு அவர் அரசனது காவல் மிகுந்த நெற்கொட்டகாரத்தில் நள் இரவிற் சென்று நெல்முகந்தனர்; அவரை முரசெறி காவலாளர் கண்டுபிடித்து அரசன்முன் கொண்டுவந்தனர்; அரசன் கேட்க, அவர் அடியார்க் கமுதூட்டும் செயல் முட்டியதனால் இது செய்தேன் என்றனர். அரசர், மிக இரங்கி அவரை விடுவித்து இவரன்றோ எனக்குப் பண்டாரம் என்று கூறி, எனது செல்வமுழுதும் அடியார்களுடையதேயாம்; நெற்பண்டார மட்டுமேயன்றி நிதிப்பண்டாரமானவெல்லாம் அடியார்கள் கொள்ளை முகந்து கொள்க என்று எங்கும் பறைசாற்றுவித்து அவ்வாறே கொள்ளை யூட்டினர்.

இவ்வாறு தண்ணளியினால் திருநீற்றின் நெறிதழைப்ப நெடுங்காலம் அருள்புரிந்திருந்து சிவனடி நீழல் சேர்ந்தனர்.

கற்பனை :—(1) குயில்கள் பயிலும் மாஞ்சோலைகளாற் சூழப்படுதலும், மலர் வாவிகளிருத்தலும் நாட்டின் வளக்குறிப்பன.

(2) மரபிற் பின் வந்தவாது சிறப்பினாலே வழிவழி முன்னோரது சிறப்பும் அறியப்படும்.

(3) அரசாட்சியின் குறிக்கோளாவது சைவநெறியும் வைதிகநெறியும் தழைத்து உலகம் ஒழுகச் செய்தலும், சிவன் கோயில்களில் வழிபாட்டர்ச்சனைகள் மேன்மேல் விளங்கச் செய்தலுமே யாம்.

(4) களவு முதலாகிய விலக்கிய தொழில்கள் செய்தேயும் அடியார்க்கமுதூட்டுதலும், திருத்தொண்டாற்றலும் பிழையாது ஒழுகுதல் அழுந்திய அன்பின் உறைப்பாலாவது ; மூர்க்க நாயனார் வரலாறு பார்க்க.

(5) தமது பொருளை வவ்வியேனும் திருத்தொண்டு செய்து அதன் பயனைத் தமக்குக் கொடுக்கும் பெரியோரே உண்மையான சேமநிதியாவர் ; அப்பொருள் சேமமாயிருந்து பயனையும் உதவுதலாற் பண்டாரத்தினும் பெரியார் அவர் என்று பெரியோர் கொள்வர்.

(6) செல்வ முழுமையும் அடியார்கள் கொள்க என்று பறைசாற்றியும் கொள்ளை முகந்து கொள்க என்று பறைசாற்றியும் கொள்ளை ஊட்டுதல் படைத்த நிதிப் பயன் கோள்வார் செய்யும் செயலாம்.

தலவிசேடம் – கொடும்பாளூர் :—புதுக்கோட்டைச் சமஸ்தானத்தில் மணற்பாறை என்ற நிலயத்தினின்றும் தென்கிழக்கு புதுக்கோட்டை போதும் கற்சாலையில் 10-நாழிகை யளவில் அடைபக்கத்து; விராலிமலையினின்று தென் மேற்கு மட்சாலை வழி 10-நாழிகை யளவிலும் அடையலாம் ; இங்கு உள்ள கோயில் மிகப் பழைமையாய்க் கிலமாயுள்ளது ; நாயனாரது திருவுருவம் காணப்படவில்லை. இக் கோயிலைப் புதுக்கி, நாயனார் திருவுருவம் தாபித்து வழிபடச் செய்வது உத்தமமாகிய சிவ புண்ணியமாதும்.

54. இடங்கழி நாயனார் புராணம் முற்றும்.



உ
சிவமயம்

# 55. செருத்துணை நாயனார் புராணம்

தொகை

மடல்சூழ்ந்த தார்நம்பி யிடங்கழிக்குந் "தஞ்சை
மன்னவனாஞ் செருத்துணைதன் னடியார்க்கு மடியேன்"
—திருத்தொண்டத்தொகை - (9)

வகை

கழிநீள் கடலனஞ் சயின்றார்க் கிருந்த கடிமலரை
மொழிநீள் புகழ்க்கழற் சிங்கன்றன் றேவிமுன் மோந்ததுமே
யெழினீள் குமிழ்மலர் மூக்கரிந் தானென் றியம்புவரால்
செழுநீர் மருகனன் னாட்டமர் தஞ்சைச் செருத்துணையே.

விரி

4120. உள்ளும் புறம்புங் குலமரபின் ஒழுக்கம் வழுவா வொருமைநெறி
கொள்ளு மியல்பிற் குடிமுதலோர் மலிந்த செல்வக் குலப்பதியாம்
தெள்ளுந் திரைகண் மதகுதொறுஞ் சேலுங் கயலுஞ் செழுமணியுந்
தள்ளும் பொன்னி நீர்நாட்டு மருக னாட்டுத் தஞ்சாவூர். க

புராணம் :—முன் உரைத்தாங்கு உரைக்க.

தொகை :—தஞ்சாவூரின் தலைவராகிய செருத்துணையாரது அடியார்க்கும் நான் அடியேன்.

தஞ்சை - இது மருகனாட்டுத் தஞ்சாவூர்; வகை நூலும் விரிநூலும் பார்க்க. தஞ்சை நாட்டுத் தஞ்சாவூர் வேறு; அதுதான் இப்போது அப்பெயரால் விளக்கமா யறிப்படுவது. மன்னவன் - தலைவர் என்ற சிறப்புப் பொருள் அளவில் நந்து நின்றது.

வகை :—கழிநீள்...மலரை - கழிகள் உள்ளே நீண்டு செல்லும் கடலில் எழுந்தவிடத்தினை உண்டருளிய இறைவருக்காக இருந்த மணமுடைய மலரினை; மொழி...மோந்ததுமே - எடுத்து மொழியப்படுகின்ற புகழினையுடைய கழற்சிங்கருடைய பட்டத்தரசி எடுத்து மோந்தவுடனே; எழில்...இயம்புவரால் - அழகிய நீண்ட குமிழம்பூப் போன்ற மூக்கினை அரிந்தவர் என்று சொல்லுவர்; செழுநீர்... செருத்துணையே - செழுநீர் வளமுடைய நல்ல மருகல் நாட்டுத் தஞ்சாவூரில் உள்ள செருத்துணையாரையே.

செருத்துணையே - என்று இயம்புவர் என்க.

கழி - கடற்கழி ; மொழி - புகழ்ந்து சொல்லப்பட்ட ; தமிழ் - குமிழம்பூ ; மூக்கிற் குவமை கூறப்படும்பொருள்களுள் ஒன்று; "குருவளர் பூங்குமிழ்" (கோவை); மருகல் நாட்டு - வேறு தஞ்சையும் உள்ளமையால் பிறிதினியைபு நீக்கிய விசேடணம்;

ஊரும் பெயரும் தொகைநூ லுணர்த்திற்று ; அவற்றுடன், செய்த தொண்டின் திறமும் வகைநூல் வகுத்தது.

விரி :—4120. (இ - ள்) தெள்ளும்...தஞ்சாவூர் - தெளிந்த அலைகள் மதகுகள்தோறும் சேல்மீன்களையும் கயல்மீன்களையும் செழுமணிகளையும் தள்ளுகின்ற காவிரிபாயும் நீர்நாடு என்கின்ற சோழநாட்டிலே மருகல் நாட்டில் உள்ள தஞ்சாவூர் என்பது; உள்ளும்...பதியாம்-அகமும் புறமும் குலமரபின் வரும் ஒழுக்கத்தினின்றும் வழுவாத ஒருமையாகிய நெறியினைக் கொள்ளும் இயல்பினையுடைய பழங்குடி முதன் மக்கள் நிறைந்த செல்வம் பொருந்திய பெருமைப் பதியாகும்.

(வி - ரை) உள்ளும்...வழுவா — தத்தமக்குள்ளேயும் புற உலகியல் நிலையிலேயும் தத்தமது குலமரபின் வழிவழிவந்த ஒழுக்கத்தினின்றும் பிறழாத. இதனை, உள்ளும் புறம்பும் குலவொழுக்கம் வழுவி ஒழுகுவதே முறை என்னும் ஒழுக்கமுடைய இந்நாளின் மாக்களினை உடன் ஒப்பிட்டு உண்மை உயர்வு தாழ்வு காண்க.

தலப்பதி - விளக்கமுடைய பதி ; பெருமையுடைய ஊர். தலம் - உயர்ச்சி ; தள்ளும்-மதகில் சிறியவழியாதலின் நீர் வேகமாகச் செல்வதால் தள்ளும் என்றார்.

சேலும் கயலும் செழுமணியும் - இரண்டனுருபுகள் விரிக்க.

தெள்ளும் திரை - தெள்ளுதல் - தெளிதல்.

மருகல் நாடு - சோழநாட்டின் உட்பிரிவுகளுளொன்று. தலவிசேடம் பார்க்க.

சேம்பொன்றரளஞ் செழுமணியும் - என்பதும் பாடம். 1

4121. சீரின் விளங்கு மப்பதியிற் றிருந்து வேளாண் குடிமுதல்வர்
நீரின் மலிந்த செய்யசடை நீற்றர் கூற்றி னெஞ்சிடித்த
வேரி மலர்ந்த பூங்கழல்சூழ் மெய்யன் புடைய சைவரெனப்
பாரி னிகழ்ந்த செருத்துணையார் பரவுந் தொண்டி னெறிநின்றார். உ

(இ - ள்) சீரின்...முதல்வர் - சிறப்புடன் விளங்கும் அப்பதியில் திருந்துகின்ற வேளாளர் குடியின் முதல்வர் ; நீரின்...சைவரென - கங்கை நிறைந்த சிவந்த சடையினையும் திருநீற்றினையும் உடைய இறைவராது இயமனை மார்பிலுதைத்த தேன் பொருந்திய பூங்கழல்களையே எண்ணுகின்ற மெய்யன்புடைய சைவர் என்று ; பாரின்...நெறிநின்றார் - உலகில் விளங்கிய செருத்துணையாரென்பார் போற்றுகின்ற திருத்தொண்டின் நெறியிலே ஒழுகிவந்தனர்.

(வி – ரை) திருந்து - உலகம் திருந்துதற் கேதுவாகிய ; நீற்றர் - திருநீற்றின் முதல்வர் ; சிவபெருமான்.

நெஞ்சிடித்த - மார்பில் உதைத்த ; "காலனை யுயிர்செக வுதைகொண்ட மலர்ந்த பாதங்கள் "(திருவிசைப்பா.) இடித்த - தகரும்படி உதைத்தருளிய ;

சைவர் - சிவசம்பந்தமுடையவராய்ச் சிவநெறி வாழ்பவர். சைவர் - என வழங்கும் உலக வழக்குக்குப் பொருள் விரித்த அரிய ஆட்சி.

சூழ்தல் - சிந்தித்தல். வேரிமலர்ந்த—என்பதும் பாடம். 2

4122. ஆன வன்பர் திருவாரூ ராழித் தேர்வித் தகர்கோயில்
ஞான முனிவ ரிமையவர்க ணெருங்கு நலஞ்சேர் முன்றினிலுள்
மான நிலவு திருப்பணிகள் செய்து காலங் களின்வணங்கிக்
கூன விளவெண் பிறைமுடியார் தொண்டு பொலியக் குலவுநாள், ௩

4123. உலகு நிகழ்ந்த பல்லவர்கோச் சிங்க ருரிமைப் பெருந்தேவி
நிலவு திருப்பூ மண்டபத்து மருங்கு நீங்கிக் கிடந்ததொரு
மலரை யெடுத்து மோந்ததற்கு வந்து பொறாமை வழித்தொண்டர்
இலகு சுடர்வாய்க் கருவியெடுத் தெழுந்த வேகத் தாலெய்தி, ௪

4124. கடிது முற்றி யற்றவடன் கருமென் கூந்தல் பிடித்தீர்த்துப்
படியில் வீழ்த்தி மணிமூக்கைப் பற்றிப் "பரமர் செய்யசடை
முடியி லேறுந் திருப்பூமண் டபத்து மலர்மோ ந் திடுமூக்கைத்
தடிவ னென்று கருவியினா லரிந்தார் தலைமைத் தனித்தொண்டர். ௫

4122. (இ-ள்) ஆன அன்பர் - இவ்வாறான அன்பர்; திருவாரூர்... முன்றிலினுள் - திருவாரூரில் ஆழித்தேர் வித்தகராகிய இறைவரது திருக்கோயிலினுள்ளே ஞான முனிவர்களும் தேவர்களும் நெருங்கியிருக்கின்ற நன்மை பொருந்திய திருமுன்றிலினுள்ளே; மான நிலவு...வணங்கி - பெருமையுடைய திருப்பணிகளைச் செய்து உரிய காலங்களில் வழிபட்டு வணங்கி; கூனல்...நாள் - வளைந்த இளையபிறையினைச் சூடிய முடியினை உடைய இறைவரது திருத்தொண்டு விளங்க விளங்கியிருக்கும் நாளிலே, ௩

4123. (இ-ள்) உலகு...பெருந்தேவி - உலகில் அரசுபுரியும் பல்லவர் கோச்சிங்கருடைய பட்டத்துரிமையுடைய பெருந்தேவி; நிலவு...மோந்தற்கு - விளங்கும் திருப்பூமண்டபத்தில் பக்கத்தில் நீங்கிக் கிடந்ததொரு புதுப்பூவை எடுத்து மோந்ததற்காக; பொறாமை - மனம் பொறுக்கமாட்டாமையாலே; வழித் தொண்டர்...வேகத்தால் - அரனெறி வழிவழி வரும் திருத்தொண்டராதலின் விளங்கும் ஒளி பொருந்திய கூரிய வாயினையுடைய கருவியினை எடுத்து எழுந்த வேகத்தோடும்; வந்து எய்தி - வந்து சேர்ந்து, ௪

4124. (இ-ள்) கடிது...பற்றி - விரைவிற் சேர்ந்து மற்று அவளது கரிய மெல்லிய கூந்தலைப் பிடித்து இழுத்து நிலத்தில் வீழ்த்தி அழகிய மூக்கினைப் பிடித்து; பரமர்...என்று - இறைவரது சிவந்த சடை முடியின் மேல் அணியும் திருப்பூமண்டபத்துள் மலரினை எடுத்து மோந்த அபராதம் செய்த மூக்கைத் தண்டிப்பேன் என்று; கருவியினால்...தனித்தொண்டர் - கருவியினாலே தலைமைபூண்ட ஒப்பற்ற தொண்டர் அரிந்தனர். ௫

இம் மூன்று பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

4122. (வி-ரை) திருவாரூர் ஆழித்தேர் வித்தகர் - ஆழித்தேர் - திருவாரூரில் இறைவரது பெருந்திருத்தேரின் பெயர். ஆழி - உருளை (சக்கரம்); வட்டம்; "திருவாரூர்த் தேரழகு" என்று பழமொழியாக விளங்க வழங்கும் சிறப்புடையது; "ஆழித்தேர் வித்தகனை நான்கண்ட தாரூரே" (தேவா - அரசு).

ஞானமுனிவர்...முன்றிலினுள்-திருவாரூர்ப்பூங்கோயிலினுள்; தேவாசிரியமண்டபத்தின் முன் "மாவா ழகலத்து மான்முதல் வானவர், ஓவா தென்றும் நிறைந்துறைந்

தன்னது" (137); ஞானமுனிவர்கள் தவஞ்செய்து வழிபடுகின்றார்கள். நெருங்குதல் - பலர் கூடியிருத்தல்.

மானம் - பெருமை; மாட்சிமை; திருந்தொண்டு - திருமுற்றத்தினுள் செய்யும் சரியைத் திருப்பணிகள். முற்றம் விளக்குதல், திருவலகிடுதல், கல் - புல் - முள் முதலியவற்றை அகற்றும் உழவாரப்பணி செய்தல், செடிகளுக்கு நீர் வார்த்தல், களைகட்டுதல் முதலாயின. மானநிலவு - பெருமையோடு விளங்குகின்ற.

காலங்கள் - வழிபாட்டுக்குரிய பூசைநேரங்கள்.

தொண்டு பொலிய - திருத்தொண்டின் நெறி சிறந்து விளங்க. 3

4123. (வி - ரை) உலகு நிகழ்ந்த...மோந்ததற்கு - இதன் விரிவு முன் (4099 - 4100) கழற்சிங்க நாயனார் புராணத்துள் உரைக்கப்பட்டது. வந்து-எய்தி என்று கூட்டுக; வந்த என்பது பாடமாயின், வந்த பொறாமை - மனத்துள் வந்த பொறுக்கலாற்றாமை என்க.

வழித்தொண்டர் - வழி - சிவநெறி வழியே ஒழுகிய; "பரவுந் தொண்டின் நெறி நின்றார்" - (4121); வழித்தொண்டராதலின் எனக் காரணக் குறிப்புடன் நின்றது; வழித்தொண்டராதலின் தனித்தொண்டர் அரிந்தார் என்று கூட்டுக; ஏனையோர்கள் இவ்வாறவரும் அபராதங்களைக் கண்டு சிறிதும் கருதாது செல்கின்றாரெனின் அவர்கள் திருத்தொண்டின் வழிநிற்பாரல்லர் என்பதாம்.

எழுந்த - மனத்துள் எழுந்து உடலினைச் செலுத்திய; வேகம் - உடலின் செலவு வேகம்; கோபம் என்றலுமாம்; கோபமாவது சிவாபராதம் கண்டு பொறாத தன்மையால் வருவது. "வேகியானாற் போல்" (சித்தி - 1 - 50); மனக்குற்றமாகிய குணமன்று. வேகத்தால் - வேகத்தோடு.

எடுத்தெழுந்து - என்பதும் பாடம். 4

4124. (வி - ரை) முற்றி - சேர்ந்து; மற்றவள் - தகாத செய்கை செய்தவள் என்ற குறிப்புப்பட மற்று என்றார்.

கருமென்...பற்றி - இவை மூக்கரியும் தண்டம் செய்தற்குற்ற செயல்கள்; வன்மை பற்றியனவல்ல.

பரமர்...தடிவன் - இஃது இவர் மனத்துட்கொண்ட துணிவு.

தலைமைத் தனித்தொண்டர் - இச்செயல் வேறு எவராலும் செய்யலாகாதது என்பது; மேல்வரும் பாட்டுப் பார்க்க.

முட்டி - என்பதும் பாடம். 5

4125. அடுத்த திருத்தொண் டுலகறியச் செய்த வடலே றனையவர்தாந்
தொடுத்த தாம மலரிதழி முடியா ரடிமைத் தொண்டுகட
லுடுத்த வுலகி னிகழச்செய் துய்யச் செய்ய பொன்மன்றுள்
எடுத்த பாத நிழலடைந்தே யிறவா வின்ப மெய்தினார். சு

(இ - ள்) அடுத்த...அனையவர்தாம் - அடுத்ததாகிய திருத்தொண்டினை உலகமறியும்படி செய்த வலிமை பொருந்திய ஆண்சிங்கம் போன்ற செருத்துணையன்பர்; தொடுத்த...செய்து - தொடுக்கப்பட்ட மாலை போன்ற கொன்றைப் பூவினைச் சூடிய திருமுடியினையுடைய சிவபெருமானது அடிமைத் திருத்தொண்டினைக் கடல் சூழ்ந்த

உலகத்தில் நிகழ்ந்து விளங்கும்படி செய்து ; உய்ய...எய்தினார்-உயிர்கள் உய்யும்படி செம்பொன் அம்பலத்தில் எடுத்த திருவடியின் நீழலில் அடைந்தே இறவாத இன்பத்தினை அடைந்தனர்.

(வி - ரை) அடுத்த - தமக்குத் திருவருளால் நேர்பட்ட ; திருந்தொண்டு - இச் சரித நிகழ்ச்சி ; உலகறிய ..அனையவர் - இத்தொண்டு செய்தற்குரிய ஆண்மை குறித்தது ; ஏறு - ஆண் சிங்கம்.

தாம மலர் இதழி - மாலைபோற் சரமாகப் பூக்கும் சரக்கொன்றை ; தாமமாகக் கட்டப்பட்ட கொன்றை மாலை என்றலுமாம்.

நிகழச்செய்தலாவது - ஒழுகலாற்றில் விளங்கி வழங்கச் செய்தல்.

இறவா இன்பம் - என்றென்றும் கெடாத வீட்டின்பம். "இறவாத வின்ப அன்பு" (1776). 6

4126. செங்கண் விடையார் திருமுன்றில் விழுந்த திருப்பள் ளித்தாமம்
அங்க ணெடுத்து மோந்தவதற் கரச ருரிமைப் பெருந்தேவி
துங்க மணிமூக் கரிந்தசெருத் துணையா ரூய கழல்வணங்கி
எங்கு நிகழ்ந்த புகழ்த்துணையா ருரிமை யடிமை யெடுத்துரைப்பாம்.

(இ - ள்) செங்கண் ..அதற்கு - சிவந்த கண்ணினையுடைய இடபத்தினையுடைய இறைவரது திருமுற்றத்தில் விழுந்த திருப்பள்ளித்தாமத்தினை அங்கு எடுத்து மோந்ததற்காக ; அரசருரிமைப் பெருந்தேவி...இறைஞ்சி - அரசரது பட்டத்து உரிமையுடைய பெருந்தேவியாரது பெருமையுடைய அழகிய மூக்கினை அரிந்த செருத்துணையாரது தூய்மையுடைய கழல்களை வணங்கி, (அத்துணை கொண்டு) ; எங்கும்...உரைப்பாம் - எங்கும் விளங்கிய புகழ்த்துணையாரது உரிமையாகிய அடிமைத் திறத்தின் செயலை எடுத்துச் சொல்லப் புகுவோம்.

(வி - ரை) சரித முடிபபும் மேல்வருஞ் சரிதத் தோற்றுவாயுமாகிய கவிக் கூற்று.

செங்கண்...அரிந்த - இச்சரித சாரம் ; துங்கம் - பெருமை ; உயர்வு.

எங்கு நிகழ்ந்த-இவரது புகழே அன்றி அடிமைத் திறமாகிய அகம்படித்தொண்டும் எவ்விடத்தும் நிகழ்தற்குரியது. உரிமையடிமை - இத்தொண்டு சிவவேதியர்க்கே யுரியது என்பது. 7

சரிதச் சுருக்கம் : செருத்துணை நாயனார் புராணம் :—சோழநாட்டின் பகுதியாகிய மருகநாட்டில் உள்ள தஞ்சாவூரிலே வேளாண்குடி முதல்வராய்ச் சிவபிரான்றிருவடியில் மெய்யன்புடையராய்ச் செருத்துணையார் என்ற ஒரு சிறந்த அடியவர் இருந்தார். அவர் திருவாரூரில் இறைவரது திருக்கோயிலில் திருமுன்றினில் விளங்கும் பணிகளைச் செய்து காலந்தோறும் இறைவரை வழிபட்டு வந்தார்.

ஒருநாள் அரசரது பட்டத்து உரிமைத் தேவி அங்குப் பூமண்டபத்தின் பக்கம் விழுந்த புதுப்பூவை எடுத்து மோந்ததனைக் கண்டனர். அவ்வபராதத்துக்காக வேகத்தால் சென்று கருவிகொண்டு அவளது மூக்கினை அரிந்தனர். இவர், திருத்தொண்டு உலகில் விளங்கச்செய்திருந்து சிவனடி நீழல் சேர்ந்து இன்பமுற்றனர்.

கற்பனை : (1) இறைவரது திருமுன்றிலில் திருப்பணிகள் செய்தலும் காலந்தோறும் சேர்ந்து சிவனை வழிபடுதலும் சிறந்த சிவதருமங்களாம்.

(2) சிவன் கோயில் திருமுன்றிலில் விழுந்த புதுப்பூ சிவனுக்காவது ; அதனை எடுத்து மோத்தல் சிவாபராதம்.

(3) சிவாபராதத்தினைக் கண்டபோது உரியவாறு தண்டித்தல் அன்பர்களது கடமை ; இதனால் இருவரும் பயனடைகின்றனர். சிவாபராதம் கண்டு தண்டிக்காது வாளா விருத்தல் பாவம் ; அவ்வாறு தண்டித்தல் இயலாவிடின் சிவசிவ என்று சொல்லி அவ்விடத்தை விட்டு நீங்குக என்பது விதி.

(4) சிவாபராதம் உலகியலில் பெரியார் சிறியார் என்ற பாகுபாடின்றி யாவர் மாட்டுக் கண்டாலும் ஒறுக்கத்தக்கது.

தலவிசேடம் : மருகல் நாட்டுத் தஞ்சாவூர் : திருமருகலினின்றும் தென்கிழக்கில் 4 நாழிகையளவிலும், திருச்செங்காட்டங் குடியினின்றும் தெற்கில் 2 நாழிகையளவிலும் உள்ளது. விற்குடி நிலயத்தினின்றும் வடகிழக்கில் 2 நாழிகையளவில் திருவிற்குடியை யடைந்து அங்கு நின்றும் கிழக்கில் 3 நாழிகையளவில் உள்ள திருப்பயற்றூர் வழியே அதன்மேல் 2 நாழிகையிலும் அடையலாம். எல்லாம் மட்சாலைகள். வளப்பாற்றின் வடகரையில உள்ளது ; இது கீழைத்தஞ்சாவூர் என வழங்கும் ; கோயிலில் நாயனாரது திருவுருவம் உள்ளது. இந்நாயனார் திருவாரூரில் குமர கோட்டத்தில் வசித்தவர் என்பது கர்னபரம்பரை.

55. செருத்துணை நாயனார் புராணம் முற்றும்



சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# 56. புகழ்த்துணை நாயனார் புராணம்

தொகை

" புடைசூழ்ந்த புலியதன்மே லரவாட வாடி
பொன்னடிக்கே மனம்வைத்த புகழ்த்துணைக்கு மடியேன் "
—திருத்தொண்டத் தொகை (9)

வகை

" செருவிலி புத்தூர்ப் புகழ்த்துணை வையஞ் சிறுவிலைத்தாய்
உருவலி கெட்டுண வின்றி யுமைகோனை மஞ்சனஞ்செய்
தருவதோர் போதுகை சோர்ந்து கலசம் விழத்தரியா
தருவரை வில்லி யருளி னிதியது பெற்றனனே "
—திருத்தொண்டர் திருவந்தாதி (67)

விரி

4127. செருவிலிபுத் தூர்மன்னுஞ் சிவமறையோர் திருக்குலத்தார்
அருவரைவில் லாளிதனக் ககத்தடிமை யாமதனுக்
கொருவாதமை நிகரில்லா துலகத்துப் பரந்தோங்கிப்
பொருவரிய புகழ்நீடு புகழ்த்துணையா ரெனும்பெயரார். க

புராணம் : முன் உரைத்தாங்குரைக்க.

தொகை : பக்கத்திற் சூழ்ந்த புலித்தோலாடையின் மேல பாம்பு ஆட ஆடுகின்ற இறைவரது பொன்னடிகளுக்கே மனம்வைத்த புகழ்த்துணை நாயனாருக்கு அடியேன்.

ஆடி - ஆடுகின்றவர்; பெயர் : பிறைசூடி - மதிசூடி - என்பனபோல : பொன் அடிக்கே - பொன் - அருமைப்பாடு குறித்தது ; பொன் பூண்ட - பொன்னார்ந்த என்றலுமாம். " பொன்னார் திருவடிக் கொன்றுண்டு விண்ணப்பம் " (தேவா) ; அடிக்கே ஏகாரம் பிரிநிலை ; மனம் வைத்த - அதனையே தஞ்சமென்று கொண்டும் பிறி தொன்றினையும் நினையாமலும் தொண்டு செய்த. அதள் - தோல் ; அதள் மேல் அரவு - கச்சாக வீக்கிய அரவு.

வகை : செருவிலிபுத்தூர்...உணவின்றி - செருவிலிபுத்தூரில் வந்த புகழ்த் துணையார், உலகில் வற்கடம் வந்தமையால் உடல் வலிமைகெட்டு உணவின்றி வருந்தி ; உமைகோனை ..விழத்தரியாது - சிவபெருமானை திருமஞ்சனம் செய்யும் போது கை சோர்ந்து தண்ணீர்க்கலசம் இறைவரது திருமுடியில் விழத்தரியாது

வருந்தி ; அருவரை...பெற்றனனே - அரிய மலைவில்லினையுடைய இறைவரது திருவருளினாலே நித்தல் படிக்காசு பெற்றனர்.

சிறுவிலைத்தாய் - வற்கடமாகி உணவுப் பொருள்கள் சிறுவிலைக்குப் பெற இயலாதபடி குறைதல் ; பஞ்சம் வந்து; உணவின்றி-உருவலிகெட்டு என்க; உரு - உடல்; சேய் - செயல்; கலசம் - மஞ்சன நீர்க்குடம் ; விழ - இறைவர் திருமுடிமேல் விழ ; தரியாது - தரியாது அஞ்சி வீழ்ந்து நடுங்க; நிதியம்-படிக்காசு; விரிவுகள் புராணத்துக் காண்க. சிறுவிலை-விலையின் அளவுக்குப் பெறும் பண்டம் சிறிதாதல் ; பொருளியல் நூன் மரபு வழக்குச் சொல் ; High Prices என்பர் நவீனர். பண்டம் பெற இயலாதபடி, நாணயத்தின் சத்தி குறைதல். தமிழ் வழக்கு இதனை நன்கறிவித்தல் காண்க.

தொண்டின் பண்பும் பெயரும் தொகை நூல் கூறிற்று ; அவற்றுடன் ஊரும் தொண்டின் வரலாறும் வகை நூல் வகுத்தது.

விரி : 4127. (இ - ள்) செருவிலிபுத்தூர்...குலத்தார் - செருவிலிபுத்தூரில் நிலை பெற்று வாழும் சிவவேதியர் திருக்குலத்தில் அவதரித்தவர் ; அருவரை... நிகரில்லார் - அரிய மலைவில்லாளியாராகிய சிவபெருமானது அகம்படிமைத் தொண்டு பூண்டொழுகும் அத்தன்மையில் தமக்கு நிகராக ஒருவரையு மில்லாதவர் ; உலகத்து...பெயரார் - உலகத்தில் பரந்து ஓங்கும் ஒப்பற்ற புகழ்நீடிய புகழ்த்துணையார் என்னும் பெயரையுடையவர்.

(வி - ரை) அருவரை வில்லாளி - வரை - பொன்மலை ; "அருவரை வில்லி" வகை நூல்.

அகத்தடிமை...நிகரில்லார் - அகத்தடிமைப் பண்பில் ஒப்பில்லாதவர் ; அகத் தொண்டாவன; திருமேனி தீண்டித் திருமஞ்சனம் செய்தல்,அலங்கரித்தல், நிவேதித்தல், பூசித்தல், கருவறை விளக்குதல் முதலாயின.

உலகந்து...புகழ்நீடு - "எங்கு நிகழ்ந்த புகழ்த்துணையார்" (4126). புகழ்த் துணையார் - என்றது காரணக்குறி என்றபடி.

அருவிவரை வில்லாளிக்கு - என்பதும் பாடம். 1

4128. தங்கோனைத் தவத்தாலே தத்துவத்தின் வழிபடுநாட்
பொங்கோத ஞாலத்து வற்கடமாய்ப் பசிபுரிந்தும்
"எங்கோமான் றனைவிடுவே னல்லே"னென் றிராப்பகலுங்
கொங்கார்பன் மலர்கொண்டு குளிர்புனல்கொண் டர்ச்சிப்பார், உ

4129. மாலயனுக் கரியானை மஞ்சனமாட் டும்பொழுது
சாலவுறு பசிப்பிணியால் வருந்திநிலை தளர்வெய்திக்
கோலநிறை புனலுங்கு டந்தாங்க மாட்டாமை
ஆலமணி கண்டத்தார் முடிமீது வீழ்த்தயர்வார், ௩

4130. சங்கரன்ற னருளாலோர் துயில்வந்து தமையடைய
அங்கணனுங் கனவின்க ணருள்புரிவா " னருந்துணவு
மங்கியநாள் கழிவளவும் வைப்பதுநித் தமுமொருகா
சிங்குனக்கு நா"மென்ன விடர்நீங்கி எழுந்திருந்தார். ச

4128. (இ - ள்) தங்கோனை...வழிபடுநாள் - தமது பெருமானைத் தவத்தினாலே தத்துவத்தின் நெறியாலே வழிபட்டுவருகின்ற நாளிலே; பொங்கோதம்...பசிபுரிந்தும் - பொங்கும் கடல் சூழ்ந்த உலகத்திலே வற்கடம் வந்து உணவின்றிப் பசிமிகுந்திருந்தும்; எங்கோமான்...இராப்பகலும் - எமது பெருமானை நான் விடுவேனல்லேன் என்று இரவும் பகலுமாக; கொங்கார்...அருச்சிப்பார் - மணமுடைய பல மலர்களைக்கொண்டும்; குளிர்ந்த நீரினைக் கொண்டும் அருச்சிப்பாராகி, ௨

4129. (இ - ள்) மாலயனுக்கு...பொழுது - மாலுக்கும் அயனுக்கும் தேடற்கரிய பெருமானைத் திருமஞ்சனமாட்டும் பொழுது; சாலவுறு...தளர் வெய்தி - மிகவும் பொருந்திய பசி நோயினாலே வருத்தமுற்று நிலைதளர்ந்து; கோல...மாட்டாமை - அழகிய நிறைந்த நீரினை உடைய குடத்தினைத் தாங்க மாட்டாது; ஆலமணி...அயர்வார் - விடமணிந்த கண்டத்தினை யுடைய பெருமானது திருமுடிமீது வீழ்த்துச் சோர்வாராகி, ௩

4130. (இ - ள்) சங்கரன்றன்...அடைய - சங்கரருடைய திருவருளாலே உறக்கம் வந்து தம்மையடைய; அங்கணனும்...புரிவார் - இறைவரும் கனவு நிலையில் அவருக்கு அருள் செய்வாராய்; அருந்துணவு...என்ன - உண்ணும் உணவு குறைந்த காலம் தீருமளவும் இங்கு உனக்கு நாம் நித்தமும் ஒரு காசு வைப்போம் என்று அருளிச் செய்ய; இடர் நீங்கி எழுந்திருந்தார் - துன்பம் நீங்கித் துயிலுணர்ந்து எழுந்தனர். ௪

இம்மூன்று பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபுகொண்டன.

4128. (வி - ரை) தவம் - சிவபூசை; தத்துவத்தின் வழிபடுதலாவது எல்லாப் பொருள்களையும் தத்துவங்களின் வைத்து உண்மை யுணர்த்தி வழிபட்டுய்யும் நெறியினை வகுக்கும் சிவாகம விதியாலே.

வற்கடம் - பஞ்சம் - வறுமைக்காலம்

பசிபுரிந்தும் - பசியினால் வருந்திய போதிலும்; புரிதல் ஈண்டு மிக உண்டாதல் என்னும் பொருட்டு.

எங்கோமான்றனை விடுவேனல்லேன் - "கற்பகமே யானுன்னை விடுவேனல்லேன்" (தேவா - அரசு); கோமான்றனை - கோமானது பூசையினை.

மலர்கொண்டு புனல்கொண்டு அர்ச்சிப்பார் - பூவுநீருங் கொண்டு பூசிப்பார்; "புண்ணியஞ் செய்வார்க்குப் பூவுண்டு நீருண்டு" (திருமந்). "பூவொடு நீர் சுமந் தேத்தி" (தேவா - அரசு) இராப்பகல் - இரவும் பகலும்; உம்மைத்தொகை.

அருச்சிப்பாராகி-வீழ்த்து அயர்வாராகி (4129)-அடைய - நீங்கி - எழுந்திருந்தார் (4130) என்று கூட்டுக. அருச்சனை - பூசை என்னும் பொருளில் வந்தது. 2

4129. (வி – ரை) நிலைதளர்தல் - உடல் தடுமாறுதல்; கோலம் - அழகு; மலர் அறுகு - முதலியவை பெய்து மந்திரித்த தூய்மை நிலையே கோலம் எனப் பட்டது.

புனல் தாங்கு குடம் - நீர் நிறைந்த குடம்.

தாங்கு குடம் தாங்கமாட்டாமை - சொல்லணி; வீழ்த்து அயர்வார் - வழுத்திச் சோர்ந்து வீழ்ந்தனர். மாட்டாமை - மாட்டாமையால்.

பசிப்பிணியால் - "உணவின்றி" வகை நூல். சாலவுறு - மிகப் பொருந்திய; ஒருபொருட் பன்மொழி; "சாலவுறு தவநனி கூர்மிகல்"

அரியானை மஞ்சனமாட்டும் பொழுது - "உமைகோனை மஞ்சனஞ்செய் தருவ தோர் போது" வகைநூல்.

வருந்தியே தளர்வெய்தி - "கைசோர்ந்து" வகைநூல்: தடம் தாங்கமாட்டாமை - வீழ்ந்து - "கலசம் விழ" வகைநூல். 3

4130. (வி - ரை) சங்கரன் - இன்பஞ் செய்பவன்; சிவபெருமான்; இப் பெயராற் கூறியது இங்கு இன்பவருள் செய்யும் நிலைக் குறிப்பு.

அருளாலோர் துயில்வந்து தமையடைய - சிவபூசை செய்தற்கண் துயில் சோர்வு சோம்பு முதலியன வரத்தகாது; வரின் அது கழுவாய் செய்யத்தக்கது என்பது சிவாகமவிதி: ஆயின் இங்கு வந்த துயில் அதன்பாற்படா தென்பது குறிக்க அருளால் - வந்து - அடைய என்றார். பூசைக்காகக் குளிக்க நின்ற நமிநந்தியடிகள் பாலும் (1891), திருப்புகலூரில் வேண்டிய பொன் பெறாத நிலையில் திருமுன்றிலில் ஒருபாலிருந்த நம்பிகள் பாலும் (3202) உறக்கம் அருளால் வந்த நிலைகள் இங்கு நினைவுகூர்தற்பாலன.

அங்கணன் - அடியாரிடர் காணமாட்டாது அருள்பவர்.

அருந்துணவு மங்கியநாள் கழிவளவும் - உணவுப் பண்டங்கள் குறைவுபடும் வற்காலம் நீங்குமளவும்; திருவீழிமிழலையில் வறுமைக்காலம் வரவே, எந்தம் பெருமக்களாகிய ஆளுடைய பிள்ளையார், ஆளுடைய அரசுகளிருவருக்கும் நித்தம் ஒரோர் காசு, அவ்வறுமைக்காலம் நீங்கி மழைபெய்து உணவுப்பண்டம் செழிக்குமளவும் இறைவர் தந்தருளிய செயல் காண்க. வறுமைக் காலம் உயிர்களின் கன்மானுபவத்தின் பொருட்டும், அக்கன்மத் தொகுதி கூடிய நிலை கழியுமளவும் வரத் தருவது இறைவரருள். ஆனால் அக்கன்மப் பயன்களின் துன்பம் சிவச்சார்புடையாரைச் சாரா என்பதும், அதற்கு இறைவர் தாமே தீர்வு அருளுவர் என்பதும் உண்மைநூற்

இந்த நாம் உனக்கு நித்தமும் ஒரு காசு வைப்பது - என்க; வைப்பது ஆகும் - வைப்போம் என்க. காசு - பொற்காசு. 4

4131. பெற்றமுகந் தேறுவார் பீடத்தின் கீழொருகா
சற்றமடங் கிடவளிப்ப வன்பருமற் றதுகைக்கொண்
டுற்றபெரும் பசியதனு லுணங்குமுடம் புடனுவந்து
முற்றுணர்வு தலைநிரம்ப முகமலர்ந்து களிகூர்ந்தார். ரு

(இ - ள்) பெற்றம்... அளிப்ப - இடபத்தின் மீது மகிழ்ந்தெழுந்தருளும் இறைவர், பீடத்தின்கீழே துன்பம் நீங்கிட ஒரு பொற்காசு அளித்திட; அன்பரும் மற்றது கைக்கொண்டு - அன்பரும் அதனைக் கையில் எடுத்துக் கொண்டு; உற்ற...உவந்து - பொருந்திய பெரும் பசியினாலே வாடிய உடம்புடன் (கூடிய அளவு) மகிழ்ந்து; முற்றுணர்வு...கூர்ந்தார் - பேருணர்வுகூடி நிரம்ப முகமலர்ச்சி பெற்று மகிழ்சிறந்தார்.

(வி - ரை) அளிப்ப - கனவின்கண் உணர்த்தியவாறே அளித்தருள; அளித்தல் - அளியுடன் கொடுத்தல். அற்றம் - சோர்வு; மெலிவு.

உற்ற...உவந்து-மகிழ்வதற்குத்தானும் வலியின்றி வாடிய கருவிகரணங்களுடன் கூடியிருந்த நிலையில் கூடிய அளவான் மகிழ்ந்து என்பது.

முற்றுணர்வு தலைநிரம்ப - உயிர்களின் கன்ம நிலையும், இறைவரது அருணிலையும், பற்றற்று அவரைப் பற்றியபோது அவ்வருள் வெளிப்படும் நிலையும், முதலிய தத்துவ உண்மை உணர்வுகள் முதிர்ந்த நிலை முற்றுணர்வு எனப்பட்டது; பேருணர்ச்சி; தலை நிரம்புதல் - வெளிப்படப் புலனாகுதல்; மிகுதியுமுண்டாதல்.

காசு - அது கைக்கொண்டு - இவ்வருளிப்பாடு "நிலந்த ணீரோ டனல்கால் விசும்பி னீர்மையான், சிலந்தி செங்கட் சோழ னாகச் செய்தா னூர், அலந்த வடியா னற்றைக் கன்றோர் காசெய்திப், புலர்ந்த காலை மாலை போற்றும் புத்தூரே" (பின் - காந்தாரம் - அரிசிற்கரைப்புத்தூர் - 7) என்றும், "அகத்தடிமை செய்யு மந்தணன்று னரிசிற்புனல் கொண்டுவந் தாட்டுகின்றான், மிகத்தளர் வெய்திக் குடத்தையும் முடி மேல் விழுத்திட்டு நடுங்குதலும், வகுத்தவ னுக்குநித் தற்படியும் வரு மென்றொரு காசினை நின்றநன்றிப், புகழ்த்துணை கைப்புகச் செய்து கந்தீர் பொழிலார் திருப்புத்தூர்ப் புனிதனீரே" (நம்பி - இந்தளம் - புத்தூ - 6) என்றும் ஆளுடையபிள்ளையாராலும் நம்பிகளாலும் சிறப்பித்துப் போற்றப்பட்டது; "திருப்புத்தூர்ப் புனிதனைப் பரிசொ டும்பர விப்பணி வார்க்கெலாந், துரிசி னன்னெறி சோன்றிடுங் காண்மினே" "மேனிசெம் பொன்னு மொப்பர்" (குறுந்) என்ற அரசுகள் திருவாக்குக்களும் இக்குறிப்புத்தருவன. 5

4132. அந்நாள்போ லெந்நாளு மளித்தகா சதுகொண்டே
இன்னாத பசிப்பிணிவந் திறுத்தநா ணீங்கியபின்
மின்னார்செஞ் சடையார்க்கு மெய்யடிமைத் தொழில்செய்து
பொன்னாட்டி னமரர்தொழப் புனிதரடி நிழல்சேர்ந்தார். சு

(இ - ள்) அந்நாள் போல்...கொண்டே - அந்நாளைப் போலவே பின் எந்நாளிலும் இறைவர் நாடோறும் அளித்த காசினைக் கொண்டே; இன்னாத...நீங்கிய பின் - துன்பமுடைய பசி வந்து சங்கடம் விளைத்த வற்கடம் நீங்கியபின்; மின்னார்... செய்து - ஒளியுடைய செஞ்சடையினையுடைய இறைவரது மெய்யடிமைத் தொழிலாகிய அகம்படித் தொண்டு செய்து இருந்து; பொன்னாட்டின்...சேர்ந்தார் - தேவலோகத்தில் உள்ள தேவர்கள் தொழும்படி சிவபெருமான் திருவடியினைச் சேர்ந்தனர்.

(வி - ரை) எந்நாளும் அளித்த காசு - நாடோறும் இறைவர் வைத்தருளிய படிக்காசு;

அது கொண்டே - நீங்கியபின் - என்க; அதன் உதவியினைக்கொண்டே அமுதுண்டு துன்பம் நீங்கியபின். இறுத்தல் - தங்குதல்; கொடுத்தல்.

மின்னார்...செய்து-மெய்யடிமை - மெய் - உண்மையான என்றும், திருமேனிக்காகிய என்றும் உரைக்கநின்றது. செய்து - இது வற்கடம் நீங்கியபின் தமது முன்னை யியல்பிற் செய்தவாறே செய்து என்பதாம்.

பொன்னாடு - தேவருலகம்; சிவலோகமுமாம்.

அமரர் தொழ - சிவன் அடியார்கள் வீடுபெறும் நிலை தேவர்கள் தொழத் தக்கது என்பதாம். 6

4133. பந்தணையு மெல்விரலாள் பாகத்தார் திருப்பாதம்
வந்தணையு மனத்துணையார் புகழ்த்துணையார் கழல்வாழ்த்திச்
சந்தணையு மணிப்புயத்துத் தனிவீர ராந்தலைவர்
கொந்தணையு மலரலங்கற் கோட்புலியார் செயலுரைப்பாம். எ

(இ - ள்) பந்தணையும்...கழல் வாழ்த்தி - பந்துசேரும் மெல்லிய விரல்களையுடைய உமையம்மையாரது பாகத்தினை உடைய இறைவரது திருவடிகள் வந்து அணைகின்ற மனத்துணை பெற்றவராகிய புகழ்த்துணையாரது கழல்களை வாழ்த்தி அத்துணைகொண்டு; சந்தணியும்...செயலுரைப்பாம்-சந்தனக்கலவையணிந்த அழகிய

தோள்களையுடைய ஒப்பற்றவரும் தலைவருமாகிய மணமுடைய மலர்மாலை சூடிய கோட்புலியாரது செயலினைச் சொல்வோம்.

(வி - ரை) பந்தணையும் மெல்விரலாள் - பந்தாடும் செயலினை உடைய விரல்கள் என அவற்றின் செயலுக்குரிய மென்மை யியல்பு குறித்தது.

பாதம் வந்தணையு மனத்துணையார் - வெளிப்பட்டு வந்து அருளுதற்கிடமாகிய மனத்தின் துணைகொண்டவர். இறைவர் இவரது கனவிலுணர்த்திய சரிதக் குறிப்பு ; சரிதசாரம். மனத்துணையார் - மனத்துள் ளையார் என்றலுமாம்.

அலங்கல் - குவளைமாலை ; கோந்து - கொத்து.

தனிவீரரார்தலைவர்...செயல் - வருஞ்சரிதத் தோற்றுவாயாகிய குறிப்பு - இப்பாட்டு இச்சரித முடிப்பும் வருஞ்சரிதத் தோற்றுவாயுமாகிய கவிக்கூற்று. 7

சரிதச்சுருக்கம் - புகழ்த்துணை நாயனார் புராணம் :—செருவிலி புத்தூரிலே சிவவேதியர் திருமரபிலே சிவனது அகம்படிமைத் தொண்டிற் சிறந்தவர் புகழ்த்துணையார். அவர் சிவபெருமானைத் தத்துவ நெறியில் சிவாகம விதிப்படி வழிபட்டு வந்தார். அக்காலத்தில் வற்கடம் வந்தது. அவர் பசிபால் வாடினர். அப்போதும் இறைவரை விடுவேனல்லேன் என்று இரவும் பகலும் விடாது பூவும் நீரும் கொண்டு பூசித்து வந்தனர். ஒருநாள் பசியால் வாடி இறைவரை திருமஞ்சன மாட்டும் பொழுது திருமஞ்சனக் குடத்தைத் தாங்க மாட்டாமையால் கைதவறிக் குடத்தினை இறைவர் திருமுடிமேல் விழுத்திட்டு நடுங்கி வீழ்ந்தனர். அப்போது இறைவரது திருவருளால் துயில் வந்தது. இறைவர் அவர் கனவில் தோன்றி உணவுப் பொருள் மங்கியகால முழுதும்,நாள் ஒருகாசு நாம் தருவோம் என்று அருளினர். புகழ்த்துணையார் துயிலுணர்ந்து எழுந்து பீடத்தின் கீழ்ப் பொற்காசு கண்டு கைக்கொண்டு களித்தனர். அவ்வாறு வற்கடம் நீங்கும்வரை இறைவர் நாடோறும் அளித்த காசு கொண்டே துன்பம் நீங்கியிருந்து, இறைவரது வழிபாடு செய்து வாழ்ந்திருந்து பின் சிவனடி சேர்ந்தனர்.

கற்பனை :—(1) சிவமறையோர் திருக்குலம் சிவனுக்கு வழிவழி யடிமையே செய்யும் சிறப்புடையது.

(2) சிவபூசை வழிபாடு செய்தல் நலமாம். அது தத்துவத்தின் வழிச் சிவாகம விதிவழியே செய்யத்தக்கது.

(3) வற்கடம் வந்து பசிப்பிணியால் வாடியபோதும் சிவபூசை விடாது செய்யத் தக்கது.

(4) பசிப்பிணியால் வருந்திடினும் உடல் தளர்ந்து வீழ்வளவும் பூசைசெய்தல் வேண்டும்; அந்நிலையில் இறைவர் அருள் புரிந்து காத்து வழிபாட்டினை முட்டாமற் செய்யத் தருவது திண்ணம்.

(5) சிவ வழிபாடு வீடுபேற்றுக்குச் சாதனமாம்.

தலவிசேடம் - செருவிலிபுத்தூர் :—மூவர்பாடலும் பெற்ற திருப்பதி ; அரிசிற்கரைப் புத்தூர் என்றும், அழகாத்திரிப் புத்தூர் என்றும், அழகார்புத்தூர் என்றும் வழங்குவது. காவிரித்தென்கரை 66-வது பதி : சுவாமி - படிக்காசு வைத்த பரமர்; அம்மை - அழகம்மையார்; பதிகம் 3 ; 2301 பாட்டின்கீழ்ப் பார்க்க.

கும்பகோணத்துக்குத் தெற்கில் 4 நாழிகையளவில் குடவாயிலுக்குச் செல்லும் பெருவழிக் கற்சாலையில் உள்ளது.

56. புகழ்த்துணை நாயனார் புராணம் முற்றும்.

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# 57. கோட்புலி நாயனார் புராணம்

## தொகை

" அடல்சூழ்ந்த வேனம்பி கோட்புலிக்கு மடியேன் "
—திருத்தொண்டத் தொகை (9)

## வகை

" பெற்ற முயர்த்தோன் " விரையாக் கலி"யிழைத் தோர்சமைத்து
சுற்ற மறுக்குந் தொழிற்றிரு நாட்டியத் தான்குடிக்கோன்
துற்ற மறுக்குநல் கோட்புலி நாவற் குரிசிலருள்
பெற்ற வருட்கட லென்றுல கேத்தும் பெருந்தகையே."
—திருத்தொண்டர் திருவந்தாதி (68)

## விரி

4134. நலம்பெருகுஞ் சோணாட்டு நாட்டியத்தான் குடிவேளாண்
குலம்பெருக வந்துதித்தார் கோட்புலியா ரெனும்பெயரார்
தலம்பெருகும் புகழ்வளவர் தந்திரியா ராய்வேற்றுப்
புலம்பெருகத் துயர்விளைப்பப் போர்விளைத்துப் புகழ்விளைப்பார், க

4135. மன்னவன்பாற் பெறுஞ்சிறப்பின் வளமெல்லா மதியணியும்
பிஞ்ஞகர்தங் கோயிறொறுந் திருவமுதின் படிபெருகச்
செந்நென்மலைக் குவடாகச் செய்துவருந் திருப்பணியே
பன்னெடுநாட் செய்தொழுகும் பாங்குபுரிந் தோங்குநாள், உ

4136. வேந்தனே வலிற்பகைஞர் வெமுனைமேற் செல்கின்றார்,
பாந்தள்பூ ணெனவணிந்தார் தமக்கமுது படியாக
ஏந்தலார் தாமெய்து மளவும்வேண் டுஞ்செந்நெல்
வாய்ந்தகூ டவைகட்டி வழிக்கொள்வார் மொழிகின்றார், ௩

4137. தந்தமர்க ளாயினார் தமக்கெல்லாந் தனித்தனியே
" எந்தையார்க் கமுதுபடிக் கேற்றியநெல் லிவையழிக்கச்
சிந்தையாற் றானினைவார் திருவிரையாக் கலி "யென்று
வந்தனையா லுரைத்தகன்றார் மன்னவன்மாற் றார்முனைமேல். ௪

புராணம் :—முன்னுரைத் தாங்குரைத்துக்கொள்க.

தொகை :—வல்லமையினைக் கொண்ட வேலேந்திய ஆண்மக்களிற் சிறந்த கோட்புலியார்க்கும் அடியேன்.

வேல் நம்பி - அரசர் சேனாபதி யாதலும், அடல்சூழ்ந்த - அன்பின் வலிமையும், அதன் நெறியினை நிறைவேற்றலின் வல்லமையும் குறித்தது. சரிதக்குறிப்பு. தொகைநூல் சரித வரலாற்றுக் குறிப்பும் பெயரும் கூறிற்று.

வகை :—பெற்ற முயர்த்தோன்...கோன் - இடபக் கொடியினை உயர்த்த இறைவரது "திருவிரையாக்கலி" என்னும் ஆணையினைப் பிழைத்தவர்களாகிய தமது சுற்றம் முழுதும் அறுக்கும் தொழிலையுடைய திருநாட்டியத்தான் குடியின் தலைவர்; குற்றமறுக்குங் கோட்புலி - குற்றத்தினை அறுத்துப் போக்குகின்ற கோட்புலியார்; நாவல் குரிசிற்...பெருந்தகையே - திருநாவலூராராகிய ஆளுடைய நம்பிகளுடைய திரு அருள் பெற்ற அருட்கடல் போன்றவர் என்று உலகவர் ஏத்தும் பெருந்தகையே.

கோட்புலி - தமது சுற்ற மறுக்கும் தொழிற்கோன்; அருட் கடல்; என்று உலகு புகழும் பெருந்தகையாராவர்.

விரையாக்கலி-சிவனது ஆணை; விரையாக்கலி எனும் ஆணை; "பொய்தீர், விரையாக் கலியெனு மாணையும்" (கோயினான்-4); பிழைத்தல்-அவ்வாணையினை மீறிப் பிழைசெய்தல் : சுற்றமறுக்குந் - சுற்றமறுக்கும்-சுற்றத்தைக் கொன்ற வகையினாலே அவர்கள் செய்த சிவாபராதமாகிய குற்றத்தினுக்குக் கழுவாய் வகுத்தலைக் குறித்தது. நாவற்குரிசில் - திருநாவலூராராகிய ஆளுடைய நம்பிகள்; அருட்கடல் - இவர் செயல் வன்கண்மையுடன் கூடிய மிகக்கடிய தொன்றாகக் காணப்படினும், அஃது உண்மையில் அச்சுற்றத்தாரது சிவாபராதப் பெரும்பிழையினைத் தண்டம் செய்து அறுக்கும் கருணையினை உட்கொண்டது. "உன்னுடைய கைவாளால் ஊறுபாச மறுத்த திளை, பொன்னுலகின் மேலுலகம் புக்கணைய" (4144) என்பதும், இயற்பகையார் சரிதமும் காண்க. கோன் - கோட்புலி - பெருந்தகை என்று கூட்டுக. தொகைநூல் கூறியவற்றுடன் திருத்தொண்டின் வரலாறும் வகைநூல் கூறியது.

விரி :—4134. (இ - ள்) நலம் பெருகும்...பெயரார் - நன்மை பெருகுகின்ற சோழநாட்டில் திருநாட்டியத்தான் குடியில் வேளாளர் குலம் புகழால் மிகப் பெருகும் படி வந்து அக்குலத்தில் அவதரித்தவர் கோட்புலியார் என்னும் பெயரினை யுடையவர்; தலம்பெருகும்...விளைப்பார் - உலகில் பெரு ஆட்சி நிகழ்கின்ற புகழினையுடைய சோழமன்னரது சேனாபதியாராகிய பகையரசரது நாட்டவர்க்கு மிக்க துன்பம் விளையும்படி போர் செய்து புகழ் விளைப்பாராய், க

4135. (இ - ள்) மன்னவன்பால்...வளமெல்லாம் - அரசனிடம் அத்தொழிலிற் பெறுகின்ற சிறந்த வளங்களை யெல்லாம்; மதியணியும்...திருப்பணியே - சந்திரனை அணிந்த இறைவரது கோயில்கள் தோறும் திருவமுதுக்குரிய படித்தரம் பெருகுவதற்காகச் செந்நெல்லினை மலைச்சிகரம் போலக் குவித்துச் செய்துவரும் திருப்பணியினையே; பன்னெடு...ஒழுகுநாள் - பல நீண்ட காலங்கள் செய்துவருகின்ற ஒழுக்கு பெறும்படி செய்து பணிசெய்து சிறந்து வாழும் நாளிலே. உ

4136. (இ - ள்) வேந்தன்...செல்கின்றார் - அரசனது ஏவலினாலே பகைவர்களது கொடிய போரின் மேற் செல்கின்றாராகிய அந்நாயனார்; பாந்தள்...கட்டி - பாம்பினையே பூணாக அணிந்த இறைவர்க்குத் திருஅமுதுக்குரியபடியாகப் பெருமையுடைய அவர்தாம் வரும் வரையில் வேண்டிய அளவு செந்நெல் பொருந்திய நெற்

கூடுகளைக்கட்டி ; வழிக்கொள்வார் மொழிகின்றார் - பயணம் செல்பவர் சொல்கின்றாராகி, க

4137. (இ - ள்) தம்...தனித்தனியே - தமது சுற்றத்தார்களாயினார்களவர்கள் எல்லாருக்கும் தனித்தனியே ; எங்கைபார்க்கு...என்று - எமது இறைவருக்கு அமுது படிக்காகச் சேர்த்துள்ள இந்நெற்கூடுகளைத் தாம் அழிக்கும்படி மனத்தினாற்றானும் நினைப்பார்களாயின் திருவிரையாக்கலியின் மேல் ஆணை நிகழ்வதாக என்று கூறி ; வந்தனையால்...முனைமேல் - வந்தனை செய்து கூறிவிட்டு அரசரது பகைவர்களது போரின் மேல் சென்றனர். ச

இந்நான்கு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

4134. (வி - ரை) தலம் பெருகுதல் - குலம்புகழாற் பெருக நிகழ்தல் ; உயர்வடைதல் ; தந்திரியார் - சேனாபதியார் : தந்திரம் - சேனை ; வேற்றுப்புலம் - பகைவரது நாடு ; புலம் - இடம் ; இடவாகு பெயராய் மக்களைக் குறித்தது ; வேறு - பண்பாகு பெயராய்ப் பகைவேந்தரைக் குறித்தது.

வேற்றுப்புலம்...போர் விளைப்பார் - இவர் போர் முனையிற் சென்று போர்புரிந்தாற் பகைவரது நாடுகளில் பெரிய துன்பம் வருவதன்றி வேறில்லை; இவரது வெற்றியினால், என்பது. தலம் பெருகும் - நன்மை மிக்க : துயர்பெருக விளைப்ப எனக.

புகழ்விளைப்பார் - வெற்றியினால் தமது அரசருக்கும் தமக்கும் புகழ் பெருகச் செய்வார். தலம் பெருகும் - உலகிற்சிறக்க ;

சோணாட்டு - சோழநாட்டிலே. சோழன்நாடு - சோணாடு என வந்தது - மரூஉ மொழி.

துயர்விளைய - என்பதும் பாடம். 1

4135. (வி - ரை) பெரும் சிறப்பின் வளம் - சேனாபதித் தன்மைக்காகவும், அதனில் விளைக்கும் வெற்றியின் புகழுக்காகவும் வளமையமாகவும் சிறப்பாகவும் பெறும் பொருள்கள் ; வளம் - வளமையம் சிறப்பு - அவ்வப்போது செய்வது.

திருவமுதின்...தவாத - இறைவரது பூசையினில் வேண்டும் திருவமுதுக் கட்டளை மேன்மேற் பெருகும்படிக்குரிய செந்நெல்லினை மலையின் உச்சி போலாக ; மலைக்குவடு ஆக - குவடு - சிகரம் ; நெற்குவைகள் சிகரத்தையுடைய மலைகளைப் போன்றன என்பது ; ஆக - ஆக்கச் சொல் உவமை குறித்தது.

செயிதுவரும் திருப்பணியே - சிவனுக்கமுதுபடி பெருகச் செய்தல் திருப்பணியா மென்பது ; சிவனுக்காகும் படியினைக் குறைத்தல் மாபாவ மென்பதும், அது ஆயுளைக் குறைக்கு மென்பதும் மந்நாதா என்னும் அரசரது வரலாற்றினின்றும் அறியப்படும். (1116) இவையெல்லாம் எண்ணாது சிவன்கோயிற் படித்தரத்தினைக் குறைத்தலும், சிவநிரயியல்கொண்டு ஆடம்பரங்கள் செய்தலும், பசதருமங்களை மேலானவை (மருத்துவச்சாலை - தண்ணீர் வசதி - சாலை முதலியன) என்று கொண்டு மனம்போனபடி சிவனுக்குரிய பதிபொருள்களை தத்தம் அற்ப அதிகாரச் செருக்குக்கொண்டு பசுதருமங்களிற் செலவு செய்தலும் இந்நாளிற் கோயில் அதிகாரிகளின் கொடுந் தொழிலாயிருக்கக் காண்கின்றோம். கொடிது ! கொடிது !!

பாங்கு - அதற்கு வேண்டும் ஒழுங்குகள் ; ஓங்குதல் - சிறப்புறுதல்.

ஒழுகுநாள் - என்பதும் பாடம். 2

4136. (வி - ரை) செல்கின்றார் - செல்கின்ற நாயனார் அவ்வாறு செல்லும் போது.

ஏந்தலார் - மேன்மையுடையவர். ஏந்தல் - ஆண்பாற் சிறப்புப் பெயர் ;
தாம் எய்துமளவும் - போர் முற்றித் தாம் திரும்பிவரும் வரையில்.
அமுது படியாக - வேண்டும் - என்று கூட்டுக ; வேண்டும் - வேண்டிய அளவு. ஆக - ஆகும் பொருட்டு.

செந்நெல் - சிவன் அமுதக்குச் செந்நெல்லே சிறந்தது. ஏனைக் கார் நெல் முதலியவை அத்துணைச் சிறப்பில; அரிவாட்டாய நாயனாரது வரலாறும், பிறவும் பார்க்க ; ஆனால் பொருளாசையினால் கோயிலுக்குள்ள சிறந்த சம்பா நெல்லை விற்றுவிட்டுத் தாழ்ந்த குறுவை நெல்லை அமுதுக்கு வைக்க என உத்தரவிடும் கோயில் அதிகாரிகளையும் காண்பது இக்காளின் காலக்கொடுமையும் எங்கள் பாவப்பயனுமாம் ; கொடுமை!

வாய்ந்த கூடு - அளவு குறித்துப் பொருந்திய நெற்கூடுகள்.
வழிக்கொள்வார் - பயணம் போவாராகிய நாயனார். 3

4137. (வி - ரை) தமர்களாயினார் - தாம் இல்லாத காளில் தமது பொருள்களைக் கையாண்டு செயல் செய்யும் நிலையுடையவர் ; ஆயினார் - என்றது அக்குறிப்புத் தருவது ; அவர்கள்பால் நாயனார் சொல்லிச் சென்ற கருத்துமிது. தமர் - தம்மைச் சேர்ந்தவர் ; சுற்றத்தார்; காரணப்பெயர் ;

தமக்கெல்லாம் தனித்தனியே - உரைத்து என்றுகூட்டுக. தமக்கு எல்லாம் - தம் எல்லாருக்கும் என நான்கனுருபு பிரித்துக்கூட்டி முற்றும்மை விரிக்க.

ஏற்றிய - குறித்த ; அழிக்க - கூடுகளை அழித்துக் கவர ; சிவனுக்கு அமுதுக்கு என்று ஆக்கிய பொருளை வேறொன்றற் காக்குதல் அதனை அழித்தலேயாம் என்றபடி.

சிந்தையாற்றனும் என்று உம்மை விரிக்க - நினைத்தலும் செய்ததனோடு ஒக்குமாகலின் பிழை என்பது சிந்தையில் - என்க ; உருபுமயக்கம். "தீண்டுவீ ராயினெம்மைத் திருநீல கண்ட மென்பார்" என்புழிப்போல. இவ்வாறு சிவன்மேல் ஆணை வைத்துக் கூறுதல் அக்கால வழக்குப்போலும்; "நாதன்றன் வல்லாணை" (4141).

அழிக்க - நினைவார் - திருவிரையாக்கலி - அழிக்க நினைவாரேனும் சிவனாணை பிழைத்தவராவர் என்பது ; திருவிரையாக்கலி - சிவனது ஆணை ; முன் வகை நூலின் உரைக் குறிப்பு பார்க்க. அழிக்க - செலவழிக்க என்றலுமாம்.

வந்தனையால் உரைத்து - நன்மொழி பகர்ந்து அவர்களை வேண்டிக் கொண்டனர் என்பதும், நல்ல சிவதருமத்தை இன்மொழிகளாற் கூறினும் கேளாதார் தண்டிக்கப்படுதற்குரியார் என்பதும் பெற வைத்தது, பிற்சரித விளைவுக் குறிப்புப்படக் கூறியபடி. வந்தனையால் - வந்தனையோடு : ஆல் - ஒடு உருபின் பொருளது. 4

4138. மற்றவர்தாம் போயினபின் சிலநாளில் வற்காலம்
உற்றலுமச் சுற்றத்தா "ருணவின்றி யிறப்பதனிற்
பெற்றமுயர்த் தவரமுது படிகொண்டா கிலும்பிழைத்துக்
குற்றமறப் பின்கொடுப்போ" மெனக்கூடு குலைத்தழித்தார் ; ரு

(இ - ள்) மற்றவர்தாம்...உற்றலும் - அவர் போன பின்பு சிலநாளில் வறுமைக்காலம் வருதலும் ; அச் சுற்றத்தார் - (முன்கூறிய அவ்வாறு அறிவுறுத்தப்பெற்ற) அந்தச் சுற்றத்தார்கள் ; உணவின்றி...என - உணவில்லாமற் சாவதனினும் இடபத்தைக் கொடிமேல் உடைய இறைவரது திருவமுதுக்குரிய படி நெல்லினைக் கொண்டாகிலும் உயிர் பிழைத்துக் குற்றமில்லாமற் பின்னர்த் திரும்பக் கொடுத்து விடுவோம் என்று துணிந்து ; கூடு குலைத்து அழித்தார் - நெற்கூடுகளைக் குலைத்து அழித்தனர்.

(வி - ரை) மற்று அவர் - முன் கூறியபடி மறுத்து ஆணையிட்டுக் கூறிய அவர் என்றதும் குறிப்பு.

வற்காலம் உற்றலும் - வற்காலம் - பஞ்சம்; வற்கடம்; உணவுப் பொருள்களின்றி மக்கள் வருந்தும் காலம்; உறுதலும் என்பது உற்றலும் என நின்றது.

அச்சுற்றத்தார் - முன் நாயனாரால் ஆணையிட்டும் வந்தனை பாதுகாத்தும் அறிவுறுத்தப்பட்ட அந்த என அகரம் முன்னறி சுட்டு; சுற்றத்தார் - தம் தமர்களாயினார் (4137).

உணவின்றி இறப்பதனில் - அமுதுபடி கொண்டாகிலும் பிழைத்து - இந்நெல் இல்லையேல் உணவின்றி இறப்போம்; அவ்வாறிறந்துபடுவதனிலும், அமுதுபடி நெல்லினைக் கொண்டு உணவுண்டு பிழைத்திருந்து என்றபடி; கொண்டாகிலும் பிழைத்து - உம்மை, இது செய்யத்தகாததேயாயினும் உயிர்பிழைத்திருந்துவருதலால் பிழைசெய்தேனும் உயிர்காக்க என்றனர் உலக நீதியினை எண்ணிக் கூறியது; பிழைத்து - உயிர்தப்பிப் பிழைத்து; பிழைசெய்து என்ற குறிப்பும் காண்க.

குற்றமறப் பின் கொடுப்போம் - குற்றம் - இது பெருங்குற்றமா மென்பதனை அறிந்தே துணிந்தனர் என்பது; பின் கொடுப்போம் - நெல்லைத் தாமே கவர்ந்து கொள்ள எண்ணினாரிலர்; இப்போது கொண்டு உயிர்காத்துப் பின் திரும்பக் கொடுத்தலே அவர் கருதியது. Temporary misappropriation என்பர் நவீனர்; இவ்வாறு இந்நாள் உலகோர் சட்டத்தினும் இது குற்றமாதல் காண்க; அழித்தார் - கூட்டினைக் குலைத்து அழித்ததனோடு ஆணையினையும் அழித்தனர் என்பார் குலைத்தார் என்றமையாது குலைந்து அழித்தார் என்றார். குற்றம் அறப் பின் - பஞ்சம் நீங்கிய பின்பு என்றலுமாம்: கூடு - நெற்கூடு; அழித்தார் - நெல்லைச் செலவழித்தார் என்றலுமாம்.

உணர்வின்றி என்பது பாடமாயின் தாமே உணர்ந்து ஒழுகவேண்டிய உண்மையினைக், கட்டுரைத்து எடுத்துணர்த்தவும் உணர்வில்லாமல் என்றுரைக்க.

உற்றிட—என்பதும் பாடம். 5

4139. மன்னவன்றன் றெம்முனையில் வினைவாய்த்து மற்றவன்பால்
நன்னிதியின் குவைபெற்ற நாட்டியத்தான் குடித்தலைவர்
அந்நகரிற் றமர்செய்த பிழையறிந்த தறியாமே
துன்னினார் "சுற்றமெலாந் துணிப்ப"னெனும் துணிவினராய். ௩

(இ - ள்) மன்னவன்றன்...தலைவர் - அரசனது போர் முனையில் வெற்றி கொண்டு (மீண்டு) அவ்வரசன்பாலே நல்ல நிதியின் குவியலினைப் பெற்ற நாட்டியத்தான் குடித்தலைவராகிய கோட்புலியார்; அந்நகரில்..அறிந்து - அந்நகரத்தில் தம் சுற்றத்தார்கள் செய்த பிழையினை அறிந்து; சுற்றமெலாம்...துணிவினராய் - சுற்றத்தாரெல்லாரையும் துணிப்பேன் என்னும் துணிந்து கொண்டவராகி; அது அறியாமே துன்னினார் - தாம் அறிந்து துணிவுகொண்டதனை அவர்கள் அறியாத நிலையில் வந்து சேர்ந்தனர்.

(வி - ரை) வினைவாய்த்து - வினை - போரில் தாம் நினைத்துச் சென்ற செய்கையாகிய வெற்றி; வாய்த்தல் - கிடைக்கப்பெறுதல். வினை – போர்த்தொழில்; ஈண்டு அதில் வெற்றியைக் குறித்து.

மற்றவன்பால்...பெற்ற - போரில் வெற்றி பெற்றுவந்த சேனைத் தலைவருக்கு அரசர் செய்யும் சிறப்பு; சிறுத்தொண்ட நாயனார் புராணம் பார்க்க.

அந்நகர் - தமது நகரும் அரசனது நகரமுமாகிய அந்த என முன்னறிசுட்டு. அந் நகரினைக் குறிப்பார் நாட்டிபத்தான் குடிந்நிலைவர் என்றார்.

அறிந்து - தெரிந்துகொண்டு; அது அறியாமே - தாம் அறிந்த அதனைச் சுற்றத் தார் அறியாதபடி மறைத்து ஒழுகி. தமது கருத்து நிறைவேற்ற இது வேண்டப் பட்டது.

துன்னுதல் - சேர்தல்; துணிப்பான் - துண்டமாக்குவன்; துணி - துண்டம்; துணிவினர் - துணிந்த காரணமும் பயனும் மேலிரண்டு பாட்டுக்களானும் கூறுகின் றார். துணிவினராய்த் துன்னினர் என்க. 6

4140. எதிர்கொண்ட தார்க்கெல்லா மினியமொழி பலமொழிந்து
மதிதங்கு சுடர்மணிமா ளிகைபின்கண் வந்தணைந்து
"பதிகொண்ட சுற்றத்தார்க் கெல்லாம்பைந் துகினிதியம்
அதிகந்தந் தளிப்பதனுக் கழைமின்க" ளென்றுரைத்து, எ

4141. எல்லாரும் புகுந்ததற்பி னிருநிதிய மளிப்பார்போல்
நல்லார்தம் பேரோன்முன் கடைகாக்க, "நாதன்றன்
வல்லாணை மறுத்தமுது படியழித்த மறக்கிளையைக்
கொல்லாதே விடுவேனோ?" வெனக்கனன்று கொலைபுரிவார், அ

4142. தந்தையார் தாயார்மற் றுடன்பிறந்தார் தாரங்கள்
பந்தமார் சுற்றத்தார் பதியடியார் மதியணியும்
எந்தையார் திருப்படிமற் றுண்ணவிசைந் தார்களையுஞ்
சிந்தவாள் கொடுதுணித்தார் தீயவினைப் பவந்துணிப்பார். கூ

4140. (இ - ள்) எதிர்கொண்ட...மொழிந்து - தம்மை எதிர்கொண்டு வர வேற்ற சுற்றத்தாரெல்லாருக்கும் இனிய மொழிகள் பலவற்றையும் சொல்லி; மதி தங்கு... அணைந்து-சந்திரன் தங்கும் ஒளியும் அழகும் உடைய தமது திருமாளிகையில் வந்து அணைந்து; பதிகொண்ட...உரைத்து-அப்பதியில் உள்ள சுற்றத்தார்களுக்கெல் லாம் பைந்துகிலும் நல்ல நிதியமும் தந்தளிப்பதற்கு அழையுங்கள் என்று சொல்லி, எ

4141. (இ - ள்) எல்லாரும்...காக்க - சுற்றத்தார் எல்லாரும் வந்து புகுந் தபின் பெரிய நிதியம் கொடுப்பவர் போலக் காட்டி நல்லவராகிய கோட்புலியார் தமது பெயரினையுடைய காவலாளன் முன்வாயிலினைக் காவலாக நின்று காக்க; நாதன்றன்...எனக்கன்று - இறைவரது வலிய ஆணையினையும் மறுத்து அமுதுக்காக இருந்த நெல்லை அழித்து உண்ட பாவம்புரிந்த கிளைஞரை யெல்லாம் கொல்லாதே விடுவேனோ? என்று மிகச் சினந்து; கொலைபுரிவார் - கொலை செய்வாராகி, அ

4142 (இ - ள்) தந்தையார்...பதியடியார் - தந்தையார், தாயார், மற்று உடன்பிறந்தவர், மனைவியர்கள், பந்தமுடைய சுற்றத்தவர்கள், அவ்வூரின் உரிமை அடிமைகள் என்ற இவர்களெல்லாரையும்; மதியணியும்...இசைந்தார்களையும் - எமது தந்தையாராகிய இறைவரது திருவமுது படி நெல்லினை இன்னும் உண்ணு தற்கு இசைந்தார்களையும்; தீய...துணிப்பார் - தீயவினையின் பயனைச் சேதிப்பா ராகிய நாயனார்; சிந்த...துணித்தார் - உடல் சிதையும்படி வாளினைக்கொண்டு துண்டமாக வெட்டினர். கூ

இம்மூன்று பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

4140. (வி - ரை) எதிர்கொண்ட - தம்மை எதிர்கொண்டு வந்து வரவேற்ற. மதிதங்கு - மாளிகையின் உயர்ச்சி குறித்தது ; மதி - உண்மையறிவு என்று கொண்டு மெய்யறிவே உருவமாக உள்ள நாயனார் தங்குகின்ற என்று உரைக்கவும் நின்றது ; மதி - ஆகுபெயர். பைந்துகில் - பசுமை - புதுமை குறித்தது ; அழகு என்றலுமாம் ; அதிகம் - மிகுதியும். துகில் - பட்டாடை. தூய நன்மை பயத்தலால் இது பொய்ம்மையாகாமை உரைக்க. 7

4141. (வி - ரை) அளிப்பார்போல் - அரியாமே (4139) என்றும், இனிய மொழிபல மொழிந்து (4140) என்றும், அளிப்பார்போல் (4141) என்றும் இவ்வாறு மனமொழி மெய்களால் மாறுபட ஒழுகுதல் தகுமோ ? எனின், இச்சுற்றத்தாரை வினைப்போகந் துய்ப்பித்துத் தூிசறுத்து நற்கதியடையச் செய்தற்கண் இவை வேண்டப்பட்டனவென்க. "தீவினைப் பயன் துணிப்பார்" என்று மேற்கூறும் கருத்தும் காண்க. இறைவரது திரோதான சத்தி தொழிற்பட்டு உயிர்களைக் கன்ம போகங்களைத் துய்க்கச் செய்யும் நிலையும் ஈண்டுக் கருதத்தக்கது.

நல்லார் - கோட்புலிநாயனார் ; சுற்றத்தார்க்குத் தீவினை தீர்த்து நலம் செய்கின்றமையால் இப்பெயராற் கூறினார் ; தம்பெயரோன் - தமது பெயரினை உடைய கோட்புலி என்னும் காவல் வீரன்

முன்கடைகாக்க - முன்கடை வாயிலிற் காவலாக நின்று ஒருவரும் தப்பாமே காக்க.

நாதன்றன் வல்லாணை - இறைவரது திருவாணையாகிய "திருவிரையாக்கலி" என்பது ; மறுத்த - ஆணையினைக் கடந்து அழித்த.

மறுத்து அமுதுபடி அழித்த - ஆணைமறுத்த தொன்றும், சிவனமுதுக்காகிய நெல் வினை உண்டதுமாகிய இருபெருங் குற்றங்கள் என்றவாறு.

மறம் - தீய பாவம் ; கொல்லாதே விடுவேனோ ? - ஏகாரமும் ஓகாரவினாவும் ஆகிய எதிர் மறைகள் கொன்றேவிடுவேன் ; என உறுதிப் பொருள் தரும் உடன் பாடு குறித்தன.

கனன்று - மிக்க சினங்கொண்டு ; கனன்று கொலைபுரிவார் - மூண்ட சினமின்றிக் கொலைத்தொழில் நிகழாமை குறிக்கது.

உரைத்துப் - புரிவார் - துணிப்பார் - துணித்தார் - என்று கூட்டி இம்மூன்று பாட்டுக்களையும் ஒரு தொடராக்கி முடிக்க. 8

4142. (வி - ரை) தந்தையார்...சுற்றத்தார் - இவர் தோன்றுதற்கு முதலில் நிற்பவர் தந்தை ; அதன்பின் நிற்பவர் தாயார் ; அத்தாய் வயிற்றில் முன்னும் பின்னும் வரும் அதன்பின் தொடர்புடையார் உடன்பிறந்தார் ; இவர் ஒவ்வொருவர் பாலும் பற்றுகப்பந்தித்து அதன்பின் வருவோர் சுற்றத்தார் என்றிவ்வாறு வரிசைப் படுத்திய நிலைகாண்க. "தந்தையார் - தாயா ருடன் பிறந்தார் - சுற்றமார்" என்ற திருத்தாண்டகம் ஈண்டு நினைவு கூர்தற்பாலது.

பந்தமார் - பற்றுச்செய்து பந்தப்படுத்தல் குறிப்பு.

பதியடியார் - பதியில் உள்ள தொடர்பு கொண்ட அடிமைகள் ; இவரெல்லாம் ஒரு தொடர்பு கொண்டவர்கள். தந்தையார் முதலியவை உம்மைத் தொகைகள்.

மற்று உள்ள இசைந்தார்கள் - இவர்கள் தொடர்பு பற்றாது இறைவர்பால் அபராதம் செய்த அவ்வொன்றினால் கூடி ஒற்றுமைப்பட்டோராதலின் மற்று என்று வேறுபிரித்துக் கூறினார்.

**தீயவினைப்பயன் துணிப்பார் - சிந்த வாள்கோடுதுணித்தார் - என்க;** இவர் துணித்தது உடலினையேயாயினும் அது கருத்தன்று; அவ்வுடலால் ஈட்டப்பட்ட தீய வினையாகி உயிருடன் சாரும் அவ்வினையால் வரும் பாவத்தினை அவ்வாறு சாராது துணித்தனர் என்பதாம். இவ்வாறு வினைப்பயன் துணிக்கப்பட்டமையாலே இவர்கள் பாசமறுத்துத் தூய்மைபெற்று மேலுலகம் எய்தினர் என மேற் கூறப்படு தல் காண்க. துணிப்பார் – துணிப்பாராகிய நாயனார்; வினையாலணையும் பெயர்.

**சிந்த - உடல் கூறுபட;** உயிர் போம்படியாக - தந்தையார் தாயார் என்பன சிறப்புப் பண்மைகள்; வாள்கோடு – வாளினைக் கொண்டு; கோடு – இடைக்குறை; 3ம் வேற்றுமை உருபு – கருவிப்பொருள்.

**தீவினையின் பயன் துணிப்பார் - என்பதும் பாடம்.** 9

4143. பின்னங்குப் பிழைத்ததொரு பிள்ளையைத்தம் பெயரோனவ்
வன்னந்துய்த் திலது;குடிக் கோருபுதல்வ;னருளு"மென,
"விந்நெல்லுண் டாண்முலைப்பா லுண்ட" தென வெடுத்தெறிந்து
மின்னல்ல வடிவாளா லிருதுணியாய் விழவேற்றார். ௧0

(இ - ள்) பின் அங்கு...பிள்ளையை - அதன்பின் அங்குப் பிழைத்த ஒரு குழந் தையைச் சுட்டி; தம் பெயரோன்...அருளும் என - தமது பெயரையுடைய காவலா ளன் "இந்த அந்தச் சோற்றினை உண்டிலது; அன்றியும் ஒரு குடிக்கு ஒரு புதல்வ னாகும்; வெட்டாது அருள்புரியவேண்டும்" என்று கூற; இந்நெல்...உண்டது என - அன்னமுண்டில தாயினும் இந்நெல்லுண்டவளது முலைப்பாலினை உண்டது என்று கூறி; எடுத்தெறிந்து...ஏற்றார் - எடுத்து மேலே வீசி எறிந்து மின்னுகின்ற நல்ல வடித்த வாளினால் இரண்டு துண்டாகி விழும்படி ஏற்றனர். (தாங்கினர் - துணித்தனர்).

(வி - ரை) நாயனாரது திட்பமான மனநிலையினைக் காட்டுவது இத்திருப்பாட்டு.

பிழைத்தது - நாயனாரது கொலைவாளுக்குத் தப்பிப் பிழைத்துக் கிடந்ததாகிய; ஒரு பிள்ளை - ஒருகுழந்தை; அஃதொன்றுதான் தப்பியது என்றும், பிள்ளை ஒரே பிள்ளை என்றும் உரைக்க நின்றது.

" அவ்வன்னம்... அருளும் "—இஃது அக்காவலாளன் அக் குழந்தைக்காகப் பரிந்து சொல்லிய பேச்சு; காவலாளன் பேசினன் எனவே, ஏனையோர் அனைவரும் கொல்லப்பட்டொழிந்தனர் என்பது குறிப்பு. இக்காவலாளன் கூறிய காரணங்கள் இரண்டு; இப்பசுங் குழவி திருவமுதுக்காகிய செல்லரிசியின் சோற்றை உண்டி லது என்பதொன்று; ஒருகுடிக்கு ஒரு குழவி என்பது மற்றொன்று; இவற்றுள் பின்னையது ஈண்டைக்கேலாமையின், அதனை விடுத்து முன்னையதற்கே நாயனார் விடை கூறி மேற் செயல் செய்கின்றார். அந்த விடையாவது :—அவ்வன்னத்தைத் தான் உண்ணாவிடினும் அதனை உண்டவளது முலைப்பாலினை உண்டு வளர்ந்தது; அம் முலைப்பால் அவ்வன்னத்தின் சாரமாய் உள்ளது; அச்சிவாபராதம் இக் குழவி யின் உயிரினையும் பற்றும்; ஆதலின் ஏனையோரிற் போல அதனைச் சேதித்து வினையினை ஒழித்தல் வேண்டும் என்பதாம். வினைப்பவம் துணிப்பதன்கண் வயதிற் சிறியவர் பெரியவர் என்ற பாகுபாடின்றி எல்லா வுயிரும் ஒன்றுபோலவே பொறுப் பேற்பர் என்பது ஞானநூன் முடிபு. வயதின் இளமை பற்றியும், எண்ணாது செய்தல் என்பது பற்றியும், பிறவாறும், செய்த குற்றங்களுக்குப் பொறுப்பின்மை கூறி, மன்

விப்பதென்பது இக்கால் உலகியற் சட்டங்களிற் காண்பது. அஃது உயிரினியல் பற்றிய கன்மப் பொறுப்புக் கேலாததாம்.

எடுத்தெறிந்து...எற்றி - அக்குழவியை நாயனார் துண்டிக்க வில்லை; குழவி மேலே கிடப்பதொரு சிறுபண்டமாதலின் கிடந்தவாறே துண்டித்தல் இயலாமையின் எடுத்தெறிந்து துண்டமாக்க வேண்டியதாயிற்று என்க.

மின் நல்ல வடிவாள் - மின்னுதல் - வாளின் ஒளி; வடித்தல் - கூர்மை குறித்தது. நல்ல - நன்மை பயத்தற் குறிப்பு; எறிபத்த நாயனார் புராணத்துள் எறிபத்தர் கையிற்கொண்டது மங்கலம் பொருந்திய மழுவென்ற வரலாறும், மேல் "உன்னுடைய கைவாளால்" என்பதும் காண்க. "சேய்ஞலூர்ப் பிள்ளையார்தந் திருக்கையிற் கோல மழுவால்" (1263) என்ற கருத்தும் கருதுக.

இவ்விரண்டு பாட்டினாலும் நாயனார் உலகியல்பு எல்லாம் கடந்து முற்றும் சிவமே பற்றாக நின்றநிலை கூறப்பட்டன. "உலகினி லியற்கையை ஒழித்திட் டுற்றவர்க் குற்ற சிவன்" (தேவா) என்றபடி அந்நிலையே சிவன் வெளிப்பட்டருளும் நிலை என்பதற்கெழுந்தது மேல்வரும் திருப்பாட்டு. 10

4144. அந்நிலையே சிவபெருமா னன்பரெதிர் வெளியேநின்
"றுன்னுடைய கைவாளா லுறுபாச மறுத்தகிளை
பொன்னுலகின் மேலுலகம் புக்கணையப் புகழோய்நீ
இந்நிலைநம் முடனணை" யென் றேயெழுந் தருளினார். கக

(இ - ள்) அந்நிலையே...நின்று - அந்நிலையிலே அப்போதே சிவபெருமான் அன்பரெதிரில் வெளிப்பட்டு எழுந்தருளி நின்று; உன்னுடைய...என்று ஏவி - உன்னுடைய கையில் ஏந்தியவாளினால் துண்டமாக்கித் தண்டிக்கப்பட்டதனாலே இங்குத் தம்மைப்பற்றிய பாசத்தை அறுத்துப் புனிதராகிய உன் சுற்றத்தார்கள் தேவருலகத்திலும் மேலாகிய உலகங்களிலும் புகுந்து பின் வந்து முறையில் நமது உலகத்தினிற் சார, நீ இந்நிலையில் இப்போதே நம்முடனே அணைவாயாக என்று கட்டளையிட்டு; எழுந்தருளினார் - அன்பரை உடன் கொண்டெழுந்தருளினார்.

(வி - ரை) அந்நிலையே - உயிர்ச்சார்புகளாகிய அனைத்தையும் அறுத்தெறிந்த அந்நிலையில் அப்போதே.

வெளியே - வெளிப்பட்டு; முன்னரும் அந்நிகழ்ச்சிகளின் உடனாய் மறைந்து தாமிருந்தனர். இப்போது வெளிப்பட்டனர் என்க.

உன்னுடைய...அணைய - பொன்னுலகு - தேவருலகு; மேலுலகம் - போக பூமிகள்; பொன்னுலகினும் மேல் உலகங்களிலும் என்க; புக்கு - அணைய - புகுந்து பின்னர் வந்து சார; இவ்வாறு புகுதல் முன் கன்மங்கள் அறும் பொருட்டென்க. நாயனாரது வாளால் வெட்டப்பட்டுத் தீர்ந்தது சிவனாரை மறந்ததும் சிவன்பொருள் நுகர்ந்ததுமாகிய சிவாபராதங்களேயாம். அதற்குமுன் உள்ள பிற கன்மங்களும் தீர்ந்த பின்னரே, சிவனுலகம் புகலாமாதலின் அவை தீரும் பொருட்டு விண் முதலிய உலகங்களிற் சேறல் வேண்டப்பட்டதென்க.

உறுபாசம் உன்னுடைய கைவாளால் அறுத்த - கிளை - அணைய என்க. அறுத்த - அறுக்கப்பட்ட; செயப்பாட்டுவினைப் பொருளில் வந்தது; உறுபாசம் - ஆணை மறுத்ததனால் உற்ற பாவம்; அறுத்த கிளை-அறுத்ததனால் புனிதராகியமையின் எனக் காரணக் குறிப்புப்பட உடம்பொடு புணர்த்தி ஓதினார்; இக்கிளைஞர், உயிர் நீத்து இறந்துபடாமைக் காக்க நேரும்போது செய்யத்தருவன என்ற உலகியல்

அறம்பற்றிச் செயல் செய்தனராதலானும், "குற்றமறப் பின் கொடுப்போம்" (4138) என்றதனால் சிவதிரவியங் கவரும் கருத்திலர் ஆதலானும், ஆணைமறுத்து உண்டதற்கு உரியதண்டம் செய்யப்பட்டாராதலானும் இவர்களும் முறையிற் கன்மானுபவம் தீர்ந்த பின் முத்தி பெற்றனர். புக்குப் - பின் அணைய என்க; "கலந்தணைவாய்" (37) என்புழிப்போல; இங்கு, இவ்வாறன்றிப், பொன்னுலகின் மேலுலகம் என்றதற்கு தேவருலகத்தின் மிக்கதாகிய சிவனுலகம் என்றும், கிளைஞர் பெற்றது உடலை விட்டுச் சென்று சிவனுலகு புகும் விதேகமுத்தி என்றும், அவ்வாறன்றி நாயனார் பெற்றது சதேக (உடலுடன் கூடிய) முத்தி என்றும் உரைப்பாரு முண்டு. சதேகமுத்தியாவது - நம்பிகள், சேரமானார், கண்ணப்பர், ஆனாயர் முதலியோர் பெற்றது போல வருவது; கிளை - கிளைஞர் - மரத்தின் கிளை போல்வார்; உவம வாகுபெயர்; அணைக என்று - என்றது அணை கென்று என வந்தது தொகுத்தல் விகாரம். இவர்களைச் சிவன் அடியாருடன் பகையாய் முத்திபெற்றவர்களுள் வைத்து வகுத்தனர் திருத்தொண்டர் புராண வரலாறுடையார்; இயற்பகை நாயனாரது கிளைஞர்போல. நாயனாரது சொல்லையும் திருவாணையையும் மறுத்துச் செயல் செய்து தம் உயிர் காத்துக் கொண்ட செயலையே பகைத்து என்று கொண்டனர்.

இந்நிலை - இங்நின்ற நிலையே; தமது வளமெல்லாஞ் சிவன் திருவமுது பெருகுதற்காக்கியமையாற் பொருட் சார்பு நீங்கிய நிலையும், கிளை முழுதுமற வெறிந்தமையாலுடற்சார்பு உயிர்ச்சார்புக ணீங்கியமையும் பெறப்பட்டன; இவ்வாறு சார்பு கெட ஒழுகினமையால் மேல்வரும் வினைகணீங்கச் சிவனைச் சாருநிலை பெற்றனராதலின் இந்நிலையே நம்பால் அணைக - என்றருளினர்; இனி இவர் இவ்வுலகிற் றங்குதற்குக் காரணமில்லை என்பதாம்.

ஆர் உயிர் ஆய் - சித்துப் பொருள்களாகிய உயிர்கள் தோறும் நிறைந்தவனாகியும்; ஆர்தல் - நிறைதல்; கிளைமுதல் தடிந்த உம் வேற்றுமைத் தொகை; முதல் - வினைமுதல், வேர்; தடிந்த - வெட்டி வீழ்த்திய; குறிப்புப் பொருள்; "மாமுதல் தடிந்த" (முருகு); தொணி என்பர்; தாள் அடைந்து - நியாணித்து; அடைந்ததனால்; ஞானமூட்டிச் செந்நெறி நிற்பித்தலின் அத்தனாய் என்றும், ஊட்டி வளர்த்தலின் அன்னையாய் என்றும், உயிர்க்குயிராதலின் ஆருயிராய் என்றும் அழியாத மீளா நிலை தருதலின் அமிர்தாகி என்றும் கூறினார் என்பர். 11

4145. அத்தனா யன்னையா யாருயிரா யமிர்தாகி
முத்தனா முதல்வன்றா ளடைந்துகிளை முதறடிந்த
கொத்தலர்தார்க் கோட்புலியா ரடிவணங்கிக் கூட்டத்திற்
பத்தராய்ப் பணிவார்தம் பரிசினையாம் பகருவாம். கஉ

(இ - ள்) அத்தனாய்...முத்தனாம் - தந்தையும் தாயும் ஆருயிரும் அமிர்தமும் ஆகி முத்தனாகிய; முதல்வன்தாள்...வணங்கி - இறைவரது திருவடியினை உட்கொண்டதனால் சுற்றத்தின் பந்தத்தினை வேரறத்தடிந்த கொத்தாகிய அலர்களைக் கொண்ட மாலையினை அணிந்த கோட்புலி நாயனாரது திருவடியை வணங்கி; கூட்டத்தில்...பகருவாம் - கூட்டத்தவர்களாகிய அடியார்களுள்ளே பத்தராய்ப் பணிவார்களது தன்மையினைச் சொல்வோம்.

(வி - ரை) அத்தனாய்...முத்தனாம் முதல்வன் - ஆய் - ஆக்கச் சொற்கள் அதுவாந்தன்மை கொண்டிருத்தற் குறிப்புத்தருவன. எண்ணும்மைகள் விரித்

துரைத்துக்கொள்க ; அத்தன் முதலிய தன்மைகளை உடையனாயினும் அவற்றுட் படாது வேறு முத்தனுமாவன் என்க. முத்தன் - இவற்றுட் கட்டுப்படாது நீங்கியவன் ; இயல்பாகவே பாசங்களின் நீங்கியவன்.

அடைந்து கீளைமுதல் தடிந்த - அடைந்து - அடைந்தமையாலே ; இறைவரே அத்தன் முதலிய எல்லாமாவார் ; ஏனையோராகிய உலக பாசத்தவர் அவ்வாறுதார் என்ற துணிவு பெற்றவராதலின் அவர்களை வேரறத் தடிந்தார் என்பதாம் ; முதல் - வேர் ; "நம்பொருட்டா லீன்ற தாதை விழவெறிந்தாய் ; அடுத்த தாதை யினி யுனக்கு நாம்" (1259) என்ற சண்டீச நாயனார் சரிதம் காண்க. இஃது இந்நாயனாரின் சரித சாரமாகிய முடிபு.

கூட்டத்தில் - திருக்கூட்டத்தவர்களாகிய தொகைபடியார்களுள்ளே ; பரிசு - தன்மை ; திருக்கூட்டத்தவர்களைப்பற்றிப் பண்பு மட்டிற் போற்றலாம் தகைமைத்து அன்றி, வரலாறுகள் பேசுதற்கு இயைபின்றாதலின் பரிசு என்றார் ; இவ்வாறாதலின், "பொய்யடிமை யில்லாத புலவர் கூட்டத்"தைப்பற்றி, அவர்களுள் வகைநூலிற் குறித்த கபிலர் பரணர் நக்கீரரின் வரலாறுகள் இவ்விரிநூலுட் காணவில்லை என்றும், அவர் திருவாரூரடிகளாவார் என்றும், பலவாறு நவீன ஆராய்ச்சியாள் கிளப்பிய வாதங்களுக்கு ஈண்டு இடமின்மை தெரிந்து கொள்க. 12

சிவமயம்

# சுந்தரமூர்த்தி நாயனார் துதி

## தொகை

" ஆரூரனாரூரி லம்மானுக் காளே - "

—திருத்தொண்டத்தொகை - (9)

## வகை

தருமகட் பேசினேன் வீயவே நூல்போன சங்கிலிபாற்
புகுமணக் காதலி னாலொற்றி யூருறை புண்ணியன்றன்
மிகுமலர்ப் பாதம் பணிந்தரு ளாலிவ் வியனுலகம்
நகும்வழக் கேநன்மை யாப்புணர்ந் தானவ் வூரரசே.

—திருத்தொண்டர் திருவந்தாதி - (69)

## விரி

4146. மேவரிய பெருந்தவம்யான் முன்புவிளைத் தனவென்னோ?
யாவதுமோர் பொருளல்லா வென்மனத்து மன்றியே
நாவலர்கா வலர்பெருகு நதிகிழிய வழிநடந்த
சேவடிப்போ தெப்போதுஞ் சென்னியிலு மலர்ந்தனவால். கரு

**தொகை :—முன் உரைத்தபடி உரைக்க.**

வகை :—தருமகள்...பால் - தகுதியானதென்ற முறைமையாலே மகட்கொடை பேசியவன் செல்லவிடுத்தாருடன் சென்றிடவே நூல்போயின சங்கிலியார் மாட்டு; புகு...பணிந்து - சென்ற மணக்காதலினாலே திருவொற்றியூர் இறைவரது மிக்க மலர்ப்பாதம் பணிந்து ; அருளால் - திரு அருளினாலே ; இவ்வி புலகம்...அரசே - இந்தப் பெரிய உலகம் தருகின்ற வழக்கினையே நன்மையாக் கொண்டு புணர்ந்தார் திருநாவலூராசர்.

தருமகட் பேசினேன்...அருளால் - முன் 3368 - 3370. பார்க்க. புகுமணக் காதல்...அருளால் - 3380 - 3420 பார்க்க. தரும் வழக்கு - சங்கிலியார் களவு - மகிழ்க் கீழ் நிகழ்ச்சி முதலாயின ; தருதல் - பாராட்டுதல் என்னும் 'பொருளில் வந்தது. இதனை முன்னர் நூல்போன சங்கிலிபால் என்றதனுடன் சேர்த்து, இடர்ப்படுவாரு முளர் ; அவர் நூல்போன என்றதற்கு நூலிழந்த என்று உரைத்து மயங்குவர். அப்பொருள் பொருந்தாமை முன் உரைக்கப்பட்டது. நூல்போன என்றதற்கு நூற்றுறையிற் புகழப்பட்ட என்க. நூல் - நூற்றல் - மிகுதியாக எண்ணுதல் ; முதனிலைத் தொழிற்பெயர். ஆலோசித்து நேர்மையாகிய சிவத்தொண்டின் நெறியிலே ஒழுகிய சங்கிலியார் என்றலுமாம். அவரது சரிதக் குறிப்புக் காண்க. அன்றிப், பிறர் கொள்ளுமாறு கொள்ளின், நூலிழந்ததென்றற் கொப்ப அறியாரால் உரைக்கப்பட்ட என்று உரைத்துக் கொள்க. புதுமணக் காதல் - முன்வழியே வந்து புகுந்த (3380 - 3381 - 3382) ; புணர்ந்தான் - இஃது உலகம் (உயர்ந்தோர்) தரும் வழக்காமோ ? என்று கூறலுமொன்று ; மகட் பேசினேன் - மணமகளாகப் பெற மணம் பேசியவன்.

விரி :—4146. (இ - ள்) யாவதுமோர்...மலர்ந்தன - ஒன்றுக்கும் பொருள் அல்லாத எளியேனது மனத்தின் மட்டுமன்றிப், பெருக்கெடுத்த காவிரி ஆறு இடையீடுபட்டுக் கீறிக்காட்டிய வழியில் நடந்தருளிய திருநாவலூர்த் தலைவரது சேவடிப் போதுகள் எப்போதும் எனது தலையின் மேலும் மலர்ந்தன; மேவரிய...என்னோ? - இப்பேறு பெறுதற்கு பொருந்துதற்கரிய பெருந் தவம் யான் முன்னே விளைவு செய்தன எவையோ ?

(வி - ரை) சேவடிப்போது — மனத்தகத்தும் அன்றியே - சென்னியினும் மலர்ந்தன ; (இதற்கு) முன்பு - விளைத்தன தவம் என்னோ ? என்க. தவம் யாதோ அறியேன் என்பது.

மனத்து மலர்தல் - நினைத்தல் ; சென்னியின் - மலர்தல் - மெய்யினால் வணங்குதல். சென்னியிலும் — மனத்தேயன்றிச் சிரத்திலும் என உம்மை இறந்தது தழுவியது. யாவதும் - மனத்தும் உம்மைகள் இழிவு சிறப்பு.

தவம் என்னோ என்ற இதனால் வாயினால் வாழ்த்துதலாயிற்று ; எனவே முக்கரணங்களாலும் வணக்கம் குறித்தபடி.

யாவதும் - யாதும் ; வகரம் விரிக்கும்வழி விரித்தல் விகாரம். அடிப்போது - உருவகம் ; எப்போதும் - முற்றும்மை.

எப்போதும் மலர்ந்தன என்பதனை முன்னுங் கூட்டுக.

மனம் - சென்னி என்பன உள்ளும் புறம்பும் நின்ற ஒரு தன்மையினை உணர்த்தின ; " சிந்தையி னுள்ளுமென் சென்னியினுஞ் சேர, வந்தவர் வாழ்கவென் றுந்தீபற " (உந்தி - 44) ; " சிந்தையிலு மென்றன் சிரத்தினிலுஞ் சேரும்வகை, வந்த வினை மண்ணிடை நாம் வாராமற் - றந்தவனை " (களிறு 100) என்று இதனை ஞானநூல் விரித்தல் காண்க.

முன்பு யான் விளைத்தன பெருந்தவம் என்னோ?-விளைந்தன-நம்பிகளது திருவடிச் சிந்தையும் வணக்கமும் முன்னைப் பெருந்தவத்தாலன்றிக் கூடா என்பதாம்; விளைத்தன - தவப்பயன்கள்; முன் விளைத்தன என்னோ? – இப்பேறு பெற இப்பிறவியிற் செய்த தவங்களை யானறியேன்; ஒன்றும் செய்யவில்லை; ஆனால், இதுவோ தவமன்றிக் கூடாது; ஆதலின் முன்பு விளைத்தனவே ஆதல் வேண்டும் என்பதாம்; "மேற் செய்தழி" என்ற ஞான நூற்கருத்து; விளைந்தன - ஒன்றினாற் கூடா தென்றற்குப் பன்மையாற் கூறினார்.

பெருகு நதி கிழிய வழிநடந்த சேவடி - நம்பிகளும் சேரமானாரும்,காவிரி நீங்கிக் காட்டிய மணல் வழியாற் சென்று திருவையாற்றினை வணங்கி மீண்டருளிய நிகழ்ச்சி குறித்தது. (3878 - 3886); நதிகிழிய - மேல்பாற்றடையுண்டும் கீழ் பால் வடிந்தும் காட்டிய; வழி - வழியின்கண்ணே. 13

சரிதச்சுருக்கம்: கோட்புலி நாயனார் புராணம்:—சோழநாட்டில் திரு நாட்டியத்தான் குடியில் வேளாண்குடியில் வந்த கோட்புலியார் அரசரிடத்துச் சேனாதிபதியாராய் மாற்றாரது புலங்களைப் போரில் வென்று புகழுடன் விளங்கினார். அரசன்பாற்பெற்ற சிறப்பின் வளங்களை யெல்லாம் சிவன் கோயிலில் திருவமுது படி பெருகச் செய்யும் திருப்பணிக்காக்கி அதனையே பன்னெடு நாள் செய்தனர். அந் நாளில் அவர் அரசரது போரினை மேற்கொண்டு பகைவர்மேற் செல்ல நேர்ந்தது. அப்போது தாம் திரும்பிவரும் வரையில் சிவனுக்கமுதுபடிக்காகும் நெல்லினைக் கூடு கட்டி வைத்துத், தம் சுற்றத்தார்க் கெல்லாம் தனித்தனியே, இந்நெல்லை அழிக்க மனத்தா லினைப்பினும் "திருவிரையாக்கலி" என்று சிவனது ஆணையினை வந்தனை செய்து கூறிப், போர்முனைமேற் சென்றார். சில நாளில் வற்காலம் வந்தது. உணவுப் பண்டங்களின்றிச் சுற்றத்தார் வாடினர்; "உணவின்றி யிறப்பதனின், சிவனமுது படியினை உண்டாகிலும் பிழைத்துக் குற்றமறப் பின் கொடுப்போம்" என்று துணிந் தனர்; நெற்கூடு அழித்து உண்டனர்.

சில நாளில் வெற்றியுடன் மீண்டு அரசன்பால் நிதிக்குவை முதலிய சிறப்புப் பெற்ற கோட்புலியார், இச்செய்தியினைத் தெரிந்து, அவ்வாறு தாம் தெரிந்த செய்தி யைப் பிறர் தெரியாதபடி, அச்சுற்றத்தாரை யெல்லாம் துணிப்பன் என்னும்துணிவு டன் திருமாளிகைக்குச் சென்றணைந்தனர். தம்மை எதிர்கொண்ட சுற்றத்தார்க்கெல் லாம் இனியவற்றை மொழிந்தனர். அவ்வூரில் தமது சுற்றத்தார்க்கெல்லாம் நிதியும் துணியும் அதிகமாகக் கொடுக்க எல்லாரையும் அழைக்க என்று உரைத்தனர். அவர் கள் எல்லாரும் வந்ததற்பின் தமது பெயரினை உடைய கோட்புலி என்ற காவலா ளனை முன்கடை காக்கவைத்தனர். நிதியம் அளிப்பார் போலச், சிவனதாணையினை மறுத்து அமுதபடியை அழித்த மறக்கிளையைக் கொல்லாதே விடுவேனோ? என்று கனன்று, வாளினை எடுத்துக் கொல்வாராயினர். தந்தையார்–தாயார்–உடன்பிறந் தார்–சுற்றத்தார்–பதியடியார்–மற்றும் அமுதபடியுண்ண இசைந்தார்–இவர்களை யெல்லாம் அவர்களது தீயவினைப் பவத்தினைத் துணிப்பாராய்த் துண்டஞ்செய்தனர். அங்கு ஒரு பசுங்குழவி தப்பியது; காவலாளன் இக்குழவி அமுதபடி யன்னமுண் டிலது; ஒரு குடிக்கு ஒரு மகன்; அருள் செய்ய வேண்டுமென்று இறைஞ்சினான். "அவ்வன்னம் முண்டவளது முலைப்பாலினை உண்டது" என்று கூறி அதனை எடுத்து எறிந்து வாளினால் இரு துணியாக விழ ஏற்றனர்.

அப்போது இறைவர் வெளிப்பட்டனர். உன் கைவாளினால் உறுபாசம் அறுத்த கிளைஞர் தேவருலகம் முதலிய போக பூமிகளிற் புக்குப், பின்னர்,

நம்முலகம் அடைய, நீ இந்நிலையே நம்முடன் அணைக என்று அருளி எழுந்தருளினர்.

குறிப்பு :—இந்நாயனாரது, நம்பிகள் சார்புபற்றிய வரலாறு முன் ஏயர்கோன் கலிக்காமனார் புராணத்து உரைக்கப்பட்டது.

கற்பனை :—(1) தாம் தாம் செய்தொழிற் பெருஞ்சிறப்பின் வந்த வளமெல்லாம் சிவன்திருவமுதின் படி பெருகச் செய்தல் சிவன்றிருப்பணியாகிய பெருஞ்சிவ தருமமாம்.

(2) சிவனது திருவமுதுபடிக்குரிய நெல்லினை எவ்வகையாலேனும் எக்காலத்திலேனும் அழித்தலும், கவர்தலும், தாமுண்ண நினைத்தலும் பெரும்பாவமும் சிவாபராதமுமாம்.

(3) சிவன் திரு ஆணையாகிய "திருவிரையாக்கலி"யின் வரம்பை மறுத்தல் பெரும் சிவாபராதமாம் ; அதற்குக் கொலைத்தண்டமே விதி.

(4) உணவின்றி இறக்க நேரிட்டாலும், சிவனமுதுபடியினைப் பின் கொடுப்போமென்றுகிலும் உண்டு உயிர் பிழைத்தலும் சிவாபராதமாம்.

(5) சிவாபராதத்திற்கு உரிய வினைத்தீர்வாகிய தண்டமியற்றுதலில் தந்தை, தாய், மனைவி, மகவு, குழவி என்று உடற்சார்பு பற்றிய பாகுபாடுகளைக் கருதுதற்கு இயைபின்று.

(6) சிவச்சார்பு ஒன்றினையே பற்றி உடற்சார்புத் தொடக்குகளை அறுத்த அந்நிலையே சிவன் வெளிப்பட்டுத் தம் கழற் சார்பு தந்தளிப்பர்.

(7) சிவனே, ஒருவற்கு உற்ற நித்தமாகிய அத்தன் அன்னை முதலிய எல்லாச் சார்புகளும் ஆவன்.

தலவிசேடம் : திருநாட்டியத்தான்குடி :—முன்னர் உரைத்தது கடைப்பிடிக்க.

57. கோட்புலிநாயனார் புராணம் முற்றும்

10-கடல் சூழ்ந்த சருக்கம் முற்றிற்று



உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

பதினொன்றாவது

# பத்தராய்ப்பணிவார் சருக்கம்

திருச்சிற்றம்பலம்

பத்தராய்ப் பணிவார்க ளெல்லார்க்கு மடியேன்
பரமனையே பாடுவா ரடியார்க்கு மடியேன்
சித்தத்தைச் சிவன்பாலே வைத்தார்க்கு மடியேன்
திருவாரூர்ப் பிறந்தார்க ளெல்லார்க்கு மடியேன்
முப்போதுந் திருமேனி தீண்டுவார்க் கடியேன்
முழுநீறு பூசிய முனிவர்க்கு மடியேன்
அப்பாலு மடிச்சார்ந்த வடியார்க்கு மடியேன்
ஆரூர னாரூரி லம்மானுக் காளே.

—திருத்தொண்டத்தொகை - (10)

திருச்சிற்றம்பலம்

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# 58. பத்தராய்ப்பணிவார் புராணம்

தொகை

"பத்தராய்ப் பணிவார்க ளெல்லார்க்கு மடியேன்"

—திருத்தொண்டத்தொகை - (9)

வகை

அரசினை யாரூ ரமரர் பிரானை யடிபணிந்திட்
டுரைசெய்த வாய்தடு மாறி யுரோம புளகம்வந்து
கரசர ணாதி யவயவங் கம்பித்துக் கண்ணருவி
சொரிதரு மங்கத்தி னோர்பத்த ரென்று தொகுத்தவரே.

—திருத்தொண்டர் திருவந்தாதி - (70)

விரி

4147. ஈசருக்கே யன்பானார் யாவரையுந் தாங்கண்டாற்
கூசிமிகக் குதுகுதுத்துக் கொண்டாடி மனமகிழ்வுற்
றாசையினா லாவின்பின் கன்றணைந்தாற் போலணைந்து
பேசுவன பணிந்தமொழி யினியனவே பேசுவார். க

பத்தராய்ப்பணிவார் சருக்கம் :—இனி, திருத்தமுறையானே, ஆசிரியர், திருத்தொண்டத் தொகையுள் பத்தாவதாகத் திருக்கூட்டத்துட் "பத்தராய்ப் பணிவார்" என்று தொடங்கும் பாட்டினுள் உள்ள ஏழு தன்மைப்பட்ட தொகை யடியார்களது பண்புகூறுகின்றார். தொகையடியார்களாதலின் வரலாறு பற்றிப்

புராணம் :—முன் உரைத்தவாறுரைக்க.

தொகை :—முன்கூறியாங்குக் கூறுக.

எல்லார்க்கும் என்ற முற்றும்மையினால் எக்காலத்தும் எவ்விடத்தும் என்று கொள்க.

வகை :—அரசினை...பணிந்திட்டு - அரசரைத், திருவாரூரில் எழுந்தருளிய தேவர்களது பெருமானைத் திருவடி வணங்கி; உரை...வந்து-கூறித் துதித்த வாக்குத் தழுதழுத்து மயிர்க் கூச்செறிந்து; கர...கம்பித்து - கைகால் முதலிய உறுப்புக்கள் நடுங்கி; கண்ணருவி...சொரிதரும் - கண்களினின்றும் அருவிபோலக் கண்ணீர் சொரிகின்ற; அங்கத்தினோர் - இவ்வாறு கூறும் தன்மைபெற்ற அங்கங்களை யுடையவர்கள்; பத்தரென்று தொகுத்தவரே - பத்தராய்ப்பணிவார்கள் என்று தொகுக்கப்பட்டவர்கள்.

அரசு - ஸ்ரீதியாகராசர் ; அமரர்பிரான் - தேவலோகத்தில் வீற்றிருந்த இந்திரனும் வானவர்களும் வணங்க, எழுந்தருளிய குறிப்பு ; வாய்தடுமாறுதல், மயிர்சிலிர்த்தல், உடல் நடுங்குதல், கண்ணீர் பாய்தல் முதலிய இவை பத்தி மேம்பாட்டில் நிகழும் மெய்ப்பாடுகள். " ஆகம் விண்டு கம்பம் வந்து குஞ்சி யஞ்ச லிக்கணே, யாக வென்கை கண்க டாரை யாற தாக வையனே " (திருவா. சத - 72), " திருமேனி தன்னிலசைவும் வந்திழி கண்ணீர் மழையும் " (2168). உரைதடுமாறுதல்-வாக்குப் பேசவாமல் வாய்குழறுதல் ; அங்கத்தினோர் - முன்கூறிய எல்லா அங்கங்களையும் குறித்தது. சராசரணுதி - வடசொற்சந்தி ; உம்மைத் தொகை ; தோதுத்தவர் - தொகுக்கப்பட்டவர். படு விகுதி தொக்குவந்தது ; செயப்பாட்டுவினை ;

தொகைநூல் பணியும் தன்மை (பண்பு) பற்றிப் பெயர் கூறியது. அப் பண்புகளின் வெளிப்பாடான மெய்ப்பாடுகளை வகைநூல் வகுத்தது. இவற்றை மேலும் விரித்தருளியது விரிநூல்.

விரி :—4147. (இ - ள்) ஈசனுக்கே ..கண்டால் - சிவபெருமானுக்கே அன்பாகியவர்கள் எவரையும் தாம் கண்டால் ; கூசி...மனமகிழ்வுற்று - கூசி மிகவும் பெருவிருப்பமுற்றுப் பரவி மனமகிழ்ச்சிபெற்று ; ஆசையினால்... அணைந்து - ஆசையினாலே தாய்ப்பசுவின் பின்பு கன்று அணைவது போலச் சேர்ந்து ; பேசுவன ...பேசுவார் — அவர்கள்பாற் பேசுவன எல்லாம் இனிய மொழிகளாகவே பேசுவார்கள்.

(வி - ரை) ஈசனுக்கே - இனியனவே - ஏகாரங்களிரண்டும் பிரிநிலை.

யாவரையும் - முற்றும்மை; "எவரேனும் தாமாக" என்ற அரசுகள் தேவாரக் கருத்து.

கூசுதல் - அவர்களது அளவிறந்த பெருமையினையும், தமது சிறுமையினையும் நோக்கி அஞ்சுதல் ; " விண்ணோர்க ளேத்துதற்குக் கூசு மலர்ப்பாதம் " (திருவா); " கூசி மொழிந்து " (சித்தி - 12 - 2)

துதுதுத்தல் - பெருவிருப்பமேலிடுதல் ; குதூகலம் என்ற வழக்குக் காண்க.

ஆவின்பின் கன்றணைந்தாற்போல - அன்புமீக் கூர்ந்த நிலைக்குச் சிறக்க வழங்கும் உவமை ; வினைபற்றிய உவமம். ஆசையினால் என்றதனை உவமையினும் பொருளினும் கூட்டி உரைக்க முதலில் வைத்தார்.

பேசுவன - பேசுவனவாகிய மொழிகளை ; வினையாலணையும் பெயர். அகரவீற்றுப் பலவறி சொல் ; இரண்டனுருபு விரிக்க. மனம் - உளத்தின்நிலை ; பணிவு - உடலின்நிலை ; இனிமை - வாக்கின் தன்மை.

வகைநூலுள் இறைவன் பத்தியைபற்றிக் கூற, ஈண்டு ஆசிரியர், அப் பத்தி உருப்பட்டுப் பயனெய்து மிடமாகிய அடியார்பத்தியினை உள்ளடக்கி உரைத்தனர். 1

4148. தாவரிய வன்பினாற் சம்புவினை யெவ்விடத்தும்
யாவர்களு மர்ச்சிக்கும் படிகண்டா லினிதுவந்து
பாவனையா லேக்கினாற் பலர்காணப் பயன்பெறுவார்
மேவரிய வன்பினான் மேலவர்க்கு மேலானார். உ

(இ - ள்) தாவரிய...கண்டால் - கெடுதலில்லாத அன்பினாலே சிவபெருமானை எவ்விடத்திலும் எவர்களாயினும் வழிபடும்படியினைக் காணப்பெற்றால் ; இனிது உவந்து - இனிமையாக மகிழ்ந்து (அவ்வாறு உவந்த தன்மையால்) ; பாவனையால்...பெறுவார் - அவர்களது சத்தாகிய பாவனையினாலேயும் அருணோக்கத்தாலும்

பலரும் காணும்படி பயன் பெறுவார்கள் ; மேவரிய...மேலானோர் - பொருந்துதற் கரிதாகிய அன்பின் திறத்தாலே மேம்பாடுடையவர்களுக் கெல்லாம் மேம்பாடுடைய வர்களாய் விளங்குவார்கள்.

(வி - ரை) தாவரிய - கெடுதலில்லாத ; தா - கேடு ; தாவு - குறைதல் ; சம்பு - சுகத்துக்கிருப்பிடமானவர்.

அர்ச்சிக்கும்படி - பூசிக்கும் படியினை ; படி - படிமை ; பண்பினை. இரண்டனுருபு விரிக்க.

உவந்து - பயன்பெறுவார் என்று கூட்டுக.

பாவனையால் - நோக்கினால் - பூசனையை உவந்து நோக்கும் இப்பத்தர்களை அவ்வாறு பூசிப்பவர்கள் சத்பாவனை செய்து நன்னோக்கம் செய்தலால் ; பாவனை - நோக்கம் - இவர்கள் நன்மைபெறுக என்ற எண்ணத்துடன் செய்வன.

பலர்காண - " பல்லோருங் காணவென்றன் பசுபாச மறுத்தானை " (திருவா).

பாவனையால் நோக்கினால் - முன்கூறியவாறன்றி, இதற்கு, இப்பத்தர்கள் அவர்களை சிவமாகப் பாவிப்பதனாலும் அவ்வாறு நோக்குதலினாலும் என்றுரைத்தனர் முன் உரைகாரர்.

மேலவர்க்கு மேலானார் - பிற மேன்மைகள் படைத்த எவர்க்கும் இவரே மேல் என்று கூறும்படி என்க.　　2

4149. அங்கணனை அடியாரை யாராத காதலினாற்
பொங்கிவரு முவகையுடன் முன்விரும்பிப் பூசிப்பார்
பங்கயமா மலர்மேலான் பாம்பணையா னென்றிவர்கள்
தங்களுக்குஞ் சார்வரிய சரண்சாருந் தவமுடையார்.　　௩

(இ - ள்) அங்கணனை...பூசிப்பார் - இறைவரையும் அடியார்களையும் ஆராமையுடைய பெருவிருப்பத்தினாலே மேன்மேலும் பொங்கி வருகின்ற மகிழ்ச்சியுடனே விரும்பிப் பூசிப்பார்கள் ; பங்கயம்...தவமுடையார் - தாமரைப் பூவின்மேல் இருக்கும் பிரமதேவனும் பாம்பணையின் மேலிருக்கும் விட்டுணுமூர்த்தியும் என்ற இவர்களுக்கும் சார்தற்கரிய திருவடிகளைச் சாரும் தவத்தினை உடையவர்கள்.

(வி - ரை) அங்கணனை அடியாரை - மலர்மேலான் - அணையான் - எண்ணும்மைகள் தொக்கன.

தவமுடையார் - முன்னைத் தவமுடையாரே பத்தர்களாவார்கள் ; சார்பு - " சார்புணர்ந்து " (குறள்).

தங்களுக்கும் - உம்மை உயர்வு சிறப்பு ; சார்தல் - அடைதல்.

பத்தராய் - என்ற தொகை நூலுக்கு இறைவர்பாலும் அடியார்பாலும் ஒன்று போலவே பத்திசெய்வது என்று உரை விரிப்பது இத்திருப்பாட்டு.　　3

4150. "யாதானு மிவ்வுடம்பாற் செய்வினைக ளேறுயர்த்தார்
பாதார விந்தத்தின் பாலாக" வெனும்பரிவாற்
காதார்வெண் குழையவர்க்காம் பணிசெய்வார் கருக்குழியிற்
போதார்க ளவர்புகழ்க்குப் புவனமெலாம் போதாவால்.　　௪

(இ - ள்) யாதானும்...எனும் பரிவால் - இந்த உடம்பினாற் செய்யும் செயல்கள் எவையேயாயினும் அவையெல்லாம் இடபத்தினை உயர்த்த பெருமானது

திருவடித் தாமரைகளின் பக்கத்திற் சேரும் தகுதியுடையனவாகுக என்கின்ற அன்பி னாலே ; காதார்...செய்வார் - காதிலே வெண்குழையினை அணிந்த இறைவருக் காகிய திருப்பணிகளைச் செய்பவர்கள் ; கரு...போதாவால் - கருப்பமாகிய குழியிலே செல்லமாட்டார்கள் ; அவர்களது புகழுக்கு இவ்வுலகமெல்லாம் ஒப்பாகமாட்டா.

(வி - ரை) பாதார விந்தம் - வடநூன்முடிபு. உருவகம் ; கருக்குழி - பிறவி ; உருவகம் ; போதார்கள் - புகுதமாட்டார்கள்.

சிவனுக்காம் பணிகளே எனது செய்தொழில்களெல்லாமாகுக என்ற அன் புடன் பணி செய்கின்றவர்களுக்கு இனிப் பிறவியில்லை ; இந்த அன்புடன் செய்யும் பணிகள் எவையேயாயினும் அவை சிவனுக்கேற்பனவாகும், வீடுபேற்றுக்குச் சாதனமாம் என்பது.

போதா – ஒப்பாகா ; போதியனவாகா. 4

4151. சங்கரனைச் சார்ந்தகதை தான்கேட்குந் தன்மையராய்
அங்கணனை மிகவிரும்பி யயலறியா வன்பினாற்
கங்கைநதி மதியிதழி காதலிக்குந் திருமுடியார்
செங்கமல மலர்ப்பாதஞ் சேர்வதனுக் குரியார்கள். ௫

(இ - ள்) சங்கரனை...தன்மையராய் - சங்கரனாகிய சிவபெருமானைச் சார்வாக வுடைய கதைகளையே கேட்கும் தன்மையுடையவர்களாகி ; அங்கணனை...அன்பி னால் - இறைவரை மிகவும் விரும்பிப் பிறர் அறியாத நிலையினிற் செய்யும் அன் பின் திறத்தாலே ; கங்கைநதி...உரியார்கள் - கங்கைநதியினையும் பிறையினையும் கொன்றை மலரினையும் விரும்பிச் சூடும் திருமுடியினை உடைய இறைவாது செந் தாமரை மலர்போன்ற திருவடிகளைச் சேர்வதற்கு உரியவர்களாவார்கள்.

(வி - ரை) சங்கரன் - இன்பஞ் செய்பவன் ; சிவபெருமான்.

சங்கரனை...கேட்குந்தன்மை - அன்பு செய்து இறைவரைச் சார்ந்த அடியார் களின் சரிதங்களைக் கேட்கும் விருப்பம் "ஞானநூல்...கேட்டல்" (சித்தி - 8.)

அயலறியா அன்பு - பிறரறியாத வகையிற் செய்யும் அன்பு ; "அயலறியாமை வாழ்ந்தார்" (307) ; பிறர் கண்டுமெச்சுதற்காகச் செய்யப்படுவன ஆதல நீர்மை யன ; (ஆதலம் - ஆரவாரம்.); அன்றியும் இறைவர்பாற் செய்யும் அன்பு ஒரு நாயகி தனது காதல் நாயகனிடம் செய்யும் அன்பு ஆதலின் அயலறிதற்பாலதன்று என்பதுமாம். உலகவர் பிறர் எவ்விதமாக எண்ணினும் பொருட்படுத்தாது உண்மை யினைச் சிவனே அறியும்படி அன்பு செய்தல் என்றலும்ஆம். "அண்டர்நாயகனு ரென்னை யறிவரேல் அறியா வாய்மை யெண்டிசை மாக்க ளுக்கியா னெவ்வுரு வாயென் ?" (1770) என்றது காண்க.

கங்கை நதிமதியிதழி - உம்மைத்தொகை ; மலர்ப்பாதம் - உவமைத்தொகை.

அன்பினால் – அன்பு செய்தலினால் – அன்புகாரணமாக ; அன்பினால் – உரி யார்கள் – என்று கூட்டுக. அன்புப்பணி செய்பவர்கள் என்ற எழுவாய் தொக்கு நின்றது. 5

4252. ஈசனையே பணிந்துருகி யின்பமிகக் களிப்பெய்திப்
பேசினவாய் தழுதழுப்பக் கண்ணீரின் பெருந்தாரை
மாசிலா நீறழித்தங் கருவிதர மயிர்சிலிர்ப்பக்
கூசியே யுடல்கம்பித் திடுவார்மெய்க் குணமிக்கார். ௬

(இ - ள்) வெளிப்படை. இறைவனையே வணங்கி மனமுருகி, அதனால் உள்ளூற வரும் இன்பம் மிகுதலாலே மகிழ்ச்சியடைந்து, மொழி குழறி, மார்பின்மேற் பூசிய திருநீற்றினைக் கண்ணீரின் பெருந்தாரையானது அழித்து அருவி போல வழியவும், மயிர்க்கூச்செறியவும் கூசிஉடல் நடுங்குவார்கள் மெய்க்குணமிகுந்தபத்தர்களாவார்கள்.

(வி — ரை) இன்பம் - மனத்துள் நிகழும் இன்ப உணர்ச்சி; மிக — மிகுதலால்; பேசின - போற்றின; வாயீ - நா; " கூறுநாவே " (திருவா); தழுதழுத்தல் — குளறுதல்; நீறழித்தலாவது - கண்ணீர் பெருகி மார்பில் பூசிய திருநீறு கரைதல். " திருமேனி வெண்ணீற்று வண்ட லாட ", " மார்பாரப் பொழிகண்ணீர் மழைவாருந் திருவடிவும் ".

அருவிதர — அருவிபோல இடையறாது பெருக.

மெய்த்துணம்—மெய்ப்பாடு; உண்மையன்பின்குணம் என்ற குறிப்புமாம். (4152)

நீற்றின்மிசை வழிந்திழிய—என்பதும் பாடம். 6

4153. நின்றாலு மிருந்தாலுங் கிடந்தாலு நடந்தாலும்
மென்றாலுந் துயின்றாலும் விழித்தாலு மிமைத்தாலு
மன்றாடு மலர்ப்பாத மொருகாலு மறவாமை
குன்றாத வுணர்வுடையார் தொண்டராங் குணமிக்கார். எ

(இ — ள்) வெளிப்படை. நிற்பினும், இருப்பினும், கிடப்பினும், நடப்பினும் உண்ணினும், உறங்கினும், இமைப்பினும்,திருவம்பலத்தில் ஆடுகின்ற மலர்போன்ற பாதங்களை ஒருபோதும் மறக்காமையாற் குறைவில்லாத உணர்வினையுடையவர்கள் திருத்தொண்டர்கள் எனப்படும் குணமிகுந்தவர்களாவார்.

(வி - ரை) இக்கூறப்பட்டவைகள் உலகியலில் மக்களுக்கு உள்ள அவத்தை பேதங்கள். எவ்வவத்தையில் யாண்டிருந்தாலும் மக்கள் தம் அறிவைச் சிவன் பாலேவைத்து மறவாத நிலையின் நிற்கவல்லாராயின் அவரே பத்தராய்ப் பணிவார் எனப்படுந் தன்மையுடையார் என்பதாம்.

கிடத்தல் — நிலத்தில் உடல் தோயக்கிடத்தல்; பாயிற் படுத்தல்.

மென்றலும் — உணவு உண்ணும் போதும்.

இமைத்தல் — துயிலும் விழிப்புமென்றிரண்டின் இடைப்பட்ட நிலை.

மறவாமை - மறவாத தன்மையுடன்.

இவ்வேழுபாட்டினும் தொண்டர்க்கின்றியமையாத எட்டுக் குணங்களும் கூறப்பட்டன. " தொண்டரடித் தொழல்பூசைத் தொழின்மகிழ்த லழகார் துளங்கியவர்ச் சனைபுரித லுருகுதிநிய மங்கள், கொண்டபணி திருவடிக்கே கொடுத்த லீசன் குண மருவு மருங்கதையைக் குலவிக் கேட்டு, மண்டிவிழி துளும்பன்மயிர் சிலும்ப லூன்னன் மருவுதிருப் பணிகாட்டி வருப வாங்கி, யுண்டிகொளா தொழிதலென விவை யோரெட்டு முடையரவர் பத்தரென வுரைத்த னோரே " என்று தொகுத்தனர் திருத்தொண்டர்புராணசாரமுடையார்; " நின்று மிருந்துங்கிடந்து நடந்து நினை, என்றுஞ் சிவன்றா ளிணை " என்பதும் காண்க.

இவ்வேழுபாட்டுக்களும் பழைய ஏட்டுப்பிரதிகளில் இல்லை. 7

4154. சங்கரனுக் காளான தவங்காட்டித் தாமதனாற்
பங்கமறப் பயன்றுய்ப்பார்; படிவிளக்கும் பெருமையினார்;
அங்கணனைத் திருவாரூ ராள்வானை யடிவணங்கிப்
பொங்கியெழுஞ் சித்தமுடன் பத்தராய்ப் போற்றுவார். அ

(இ - ள்) ஈசனுக்கு...பயன்றுய்ப்பார் - சிவபெருமானுக்கே ஆளாகிய தவத்தினை மேற்கொண்டு உலகு விளக்கித் தாம் அதனால் குற்றமறப் பயன் பெறுவர்; படிவிளக்கும் பெருமையினூர் - உலகினை விளங்கச் செய்யும் பெருமையினை உடைய வர்கள் ; அங்கணனை...போற்றுவார் - அங்கணராகிய சிவபெருமானைத் திருவா ரூரினை ஆளும் இறைவரைத் திருவடிகளில் வணங்கி மேன்மேல் எழுகின்ற சித்தத் துடனே பத்தராய்ப் போற்றுபவர்கள்.

(வி - ரை) துய்ப்பாரும் பெருமையினூரு மாவார்கள் பத்தராய்ப் பணிவார்கள் என்று இயைக்க ; பெயர்ப்பயனிலை.

தவங்காட்டி - தவம் - சிவவேடமும் சிவபூசையும் ; காட்டுதல் - இவையுடை மையினுல் உள்ளே நிகழும் அன்பினை அறியச் செய்தல்.

தாம் - தாமும் என எச்ச உம்மை விரிக்க ; உலகறியவைத்த பயன்றருதலே யன்றித் தாமும் அத்தவத்தால் வரும்பயனை அனுபவிப்பர். உலகறியத் தவவேடம் பூணலேயன்றித் தாம் அதன் பயன் துய்யாதாரும் உளராதலின் அவரினின்றும் வேறுபிரித்துணரத் தாமும் அதனுற் பயன்றுய்ப்பார் என்றூர் ; முத்தநாதன், அதி சூரன் முதலாகவந்த தருதவவேடத்தாரையும், வயிற்றுப்பிழைப்புக்காகத் தாங்கும் தவவேடத்தாரையும் நீக்குதலின் பிறிதினியைபு நீக்கிய விசேடணம் ; பங்கமற - என்ற குறிப்புமது ; பயன் - சாதனமுறையாலே தவத்தால் வரும் பயன்.

படி - உலகு; உலகருக்கு; இடவாகு பெயர் ; படிவிளக்கும் - உலகை விளங்கச் செய்யும் ; விளக்குதல் - எடுத்துக்காட்டாக நிற்றலால் அறிவுறுத்துதல் ; நடந்து (ஒழுகிக்) காட்டுதல் ; படி - இதன்படி என்ற மேற்கோள்நிலை (Example - உதா ரணம்) என்றுரைக்கவும் நின்றது ; பத்தர் குணங்கள் எட்டின் நிலை.

அங்கணனைத் திருவாரு ராள்வானை - "அரசினையாரு ரமரர் பிரானை அடிபணிந் திட்டு" (திருவந் - 70) என்ற வகைநூற் கருத்தினை விரித்தவாறு.

படிவிளக்கும் பெருமையினூர் " உரை செய்த...அங்கத்தினோர் " (திருவந்.70) என்ற வகைநூற்கருத்தினைக் காட்டியவாறு.

பொங்கி எழும் சிந்தம்-மேன்மேல் அன்புபொங்கி எழும் உறைப்பாகிய சித்தம்.

பயன்றுய்ப்பார் என்ற பாடம் தவறு. 8

பத்தராய்ப்பணிவார் புராணம் :—பண்பு - அடியார்களைக் கண்டாற் பசுவின் பின் கன்று போல அணைகுவர் ; சிவபூசை செய்வோரைக் கண்டால் உவந்து பயன் பெறுகுவர் ; அடியார்களையும் அரனையும் வழிபடுவர் ; தாம் செய்யும் எத்தொழிலும் சிவனுக்காவன வென்றே செய்குவர் ; சிவனடியார் கதையினை விரும்பிக் கேட்பர் ; எப்போதும் சிவனை மறவார் ; உலகு விளங்கத் தவம் காட்டிப் பயன்பெறுவர் ; பத்தராய்ப் பணியும் படியினை உலகில் விளக்கம் செய்குவர் ; அவரே சித்தம் பொங்கிய எழுச்சியுடன் பத்தராய்ப் பணிவார்கள்.

கற்பனை :—(1) ஆசையொடும் அரனை வழிபடுதலும் அடியாரை அடைந்து வழிபடுதலும் பத்திச்செயல்கள்.

(2) உடம்பாற் செய்வினைகள் யாவும் சிவன்பாலே யாகுக என்ற சித்தத் துடன் எல்லாத் தொழில்களும் செய்தல் வீடுபேற்றுக்குரிய சிறந்த சாதனம்.

(3) சிவனடியார்சரிதங்களைவிரும்பிக்கேட்பதுபத்தியின்தன்மைகளுட் சிறந்தது

(4) எந்த அவத்தையினின்றூலும் சிவனை மறத்தலாகாது.

(5) தவத்தைத் தாம் மேற்கொண்டு காட்டித் தாமும் பயன்றுய்த்தலும் அதனுல் உலகை விளக்குதலும் பத்தரின் பண்பு.

**58. பத்தராய்ப்பணிவார் புராணம் முற்றும்**

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# 59. பரமனையேபாடுவார் புராணம்

## தொகை

“ பரமனையே பாடுவா ரடியார்க்கு மடியேன் ”

—திருத்தொண்டத் தொகை - (10)

## வகை

“ தொகுத்த வடமொழி தென்மொழி யாதொன்று தோன்றியதே
மிகுத்த வியலிசை யவ்வகை யாலவ்விண் டோயுநெற்றி
வகுத்த மதிற்றில்லை யம்பலத் தான்மலர்ப் பாதங்கண்மே
லுகுத்த மனதொடும் பாடவல் லோரென்ப ருத்தமரே ”

—திருத்தொண்டர் திருவந்தாதி - (71)

## விரி

4155. புரமூன்றுஞ் செற்றானைப் பூணாக மணிந்தானை
யுரனில்வரு மொருபொருளை யுலகனைத்து மானானைக்
கரணங்கள் காணாமற் கண்ணார்ந்து நிறைந்தானைப்
பரமனையே பாடுவார் தம்பெருமை பாடுவாம். க

புராணம் :—இனி, நிறுத்த முறையானே, பதினொன்றாவது பத்தராய்ப்பணி வார் சருக்கத்துள், இரண்டாவது, பரமனையே பாடுவாரது புராணம் கூறத் தொடங்கு கின்றார். பரமனையே பாடுவாரது பண்புகூறும் பகுதி.

தொகை :—இதன் பொழிப்பு முன் உரைத்தவாறு உரைத்துக்கொள்க ; பரமனையே-ஏகாரம் பிரிநிலை ; பாடுதல் - ஈண்டு இயலிசைப் பாட்டினைக்குறித்தது ; இசை - கீதம் என்பன ஒரு பொருள் ; முன்னர்ப் பொய்யடிமையில்லாத புலவர்கள் பாடியன வேறு; அவை இயற்றமிழ்ப பாட்டுக்கள் ; இவை கீதங்கள் ; இசையுடன் பாடும் இயற்பாட்டுக்கள். “சொரயவலகீதம்” “கீதத்தை மிகப்பாடு மடியார்கள்”.

வகை :—தொகுத்த...தோன்றியதே - சிறப்பாகத் தொகுக்கப்பட்ட வட மொழியும், தென்மொழியும் என்னும் இவற்றுள் எது தங்களுக்குக் கைவந்ததோ அதனில் ; மிகுத்த...வகையால் - மேலான இயலும் இசையும் என்ற இருவகையா லும் ; விண்தோயும்...பாதங்கள் மேல் - ஆகாயத்தை அளாவும் முடியின் அமைதி யுடைய மதில்சூழ்ந்த தில்லைத் திருச்சிற்றம்பலத்தின் இறைவரது மலர்போன்ற

பாதங்களின்மேல் ; உகுத்த...உத்தமர் - செலுத்திய மனத்தினுடனே பாட வல்லோர்கள் உத்தமர்களென்று கூறுவர்.

தோகுத்த - எல்லா மொழிகளினுஞ் சிறந்தன என்று பெரியோர்களாகிய முந்தையோர் தொகை செய்த மொழிகள் வடமொழியும் தென்மொழியு மென இரண்டேயாம் என்றபடி ; யாதொன்று - இரண்டில் ஒன்று ; அவ்வகையால் - அமைந்த அவ்வளவினால் ; "கோழைமிட றாககவி கோளுமில வாகவிசை கூடும் வகையால்" (பின். தேவா. வைகாவில் : 1.) ; நெற்றி - உச்சி ; உகுத்தல் - முழுதும் வைத்தல்.

1:—4155. (இ - ள்) வெளிப்படை. அசுரர்களது மூன்று புரங்களையும் எரித்தவரும், பூணாக நாகங்களை யணிந்தவரும், ஞானம் முதிர்ந்த இடத்து வெளிப் படும் ஒப்பற்ற பொருளானவரும், எல்லாவுலகங்களையும் தமது மாயாசத்தியால் உளவாக்கியவரும், கருவிகரணங்களாற் காணப்படாதவராயினும் அவற்றுள் நிறைந்து நின்று காட்டுபவரும் ஆகிய பரமனையே பாடுவார்களது பெருமையினைப் பாடுவோம்.

(வி - ரை) உரன் - ஞானம் ; ஈண்டுப்பதிஞானம் என்ற பொருளில் வந்தது. "உரனென்னுந் தோட்டியான்" (குறள்) ; உரனில் வரும் - பதிஞானத்தாலறியப் படுபவன் ; "உறவு கோனட் டுணர்வு கயிற்றினன், முறுக வாங்கிக் கடையமுன் னிற்குமே" (தேவா).

உலகனைத்துமானான் - உலகமெங்கும் நிறைந்தவன் என்பதுமாம் ; ஆனான் - ஆக்கினான். "அவையே தானேயாய்" (போதம் - 2).

காணமல் - நிறைந்தான் - காணமுடியாதபடி அங்கு நிறைந்து நின்று காட்டு பவன் ; காணமல் - பசுஞானத்தால் அறியப்படாதவன்.

செற்றானை - முதலிய ஐந்தினையும் என உம்மைவிரித்து, இவ்வைந்து குணங் களையுமுடைய பரமனையே என்க. ஏகாரம் பிரிநிலை.

இப்பாட்டுச் சில பிரதிகளில் இல்லை.

கண்ணார்ந்து நின்றானை—என்பதும் பாடம். 1

4156. தென்றமிழும் வடகலையுந் தேசிகமும் பேசுவன
மன்றினிடை நடம்புரியும் வள்ளலையே பொருளாக
ஒன்றியமெய் யுணர்வோடு முள்ளுருகிப் பாடுவார்
பன்றியுடன் புட்காணாப் பரமனையே பாடுவார். உ

(இ - ள்) தென்றமிழும்...தேசிகமும் - தென்றமிழும் வட மொழியும் பிற தேசமொழிகளும் யாதொன்று அடுத்ததாகக் கைவரினும் ; பேசுவன...பொருளாக- திருவம்பலத்தில் நடம் புரியும் வள்ளலாகிய ஸ்ரீ நடேசப் பெருமானையே அவற்றுள் பேசப்படும் உயர்ந்த குறிக்கோளாக, உட்கொண்டு ; ஒன்றிய...பாடுவார் - ஒன்றாகப் பொருந்திய மெய்யுணர்வினோடும் மனமுருகிப் பாடுபவர்களே ; பன்றி யுடன்...பாடுவார் - பன்றியாகிய விட்டுணுமூர்த்தி யுடனே அன்னப்பறவையாகிய பிரமதேவனும் அறியமுடியாத பரமனையே பாடுவார் எனப்படுவார்கள். 2

(வி - ரை) பொருளாக...உள்ளுருகிப் பாடுவார் - பரமனையே பாடுவாரவர் - என்று முடிக்க ; ஆவார் என ஆக்கச்சொல் வருவிக்க. பின்னுள்ள பாடுவார் என்ற பெயர்ப்பயனிலைகொண்டு முடிந்த தென்றலுமாம்.

தென்றமிழும் வடமொழியும் தேசிகமும் - ஆகிய இவற்றுளொன்று இட்டுவது எதுவாயினும் அது என்க. வடமொழி - ஆரியம்; "ஆரி யத்தொடு செந்தமிழ்ப் பயன்", "தமிழ்ச்சொலும் வடசொலுந் தாணிழற் சேர" (தேவா), "ஆரிய முந்தமி ழும்முட னேசொலி" (திருமந்), "வடமொழியுந் தென்றமிழு மறைக ணான்கு, மானவன்காண்" (தேவா). சிறப்புப்பற்றித் தமிழை முன்வைத்து, வடகலையை அதன்பின் சார்த்தி ஓதினர்.

தேசிகம் - பிற தேசமொழிகள்; திசைச் சொல்; பேசுவன - பேசப்படுவன; பேசுவன - பொருளாக-என்க; தென்றமிழ்-முதலியன சொல்லும், வள்ளல்-சொல்லாற் குறிக்கப்படும் பொருளுமாக; "உரையின் வரையும் பொருளி னளவு, மிரு வகைப் பட்ட வெல்லை" (11. திருமுறை - கோயினான்).

ஒன்றிய...உருகி - இவை மனநிலை; முன்கூறிய சொல்லும் பொருளும் - பாட்டு; இங்குக் கூறியவை பாடுங்கால் உள்ள மனநிலை; இம்மனநிலைகள்கூடாது பாடுமவர்களது பாட்டினுற் பயனில்லை என்பதாம்; கூலிக்குப் பாடுவார்களது பாட்டில் மயங்கிப் பொறியிழந்து வீழும் உலகமாக்கள் இவ்வுண்மையினை உணர்ந்துய்வார்களாக. உள்உருகி - மனமுருகி.

ஒன்றுதல் - சிவபரம் பொருளோடு வேறின்றி மனமொழிகள் ஒற்றித்தல்; வள்ளலையே பொருளாக - பாடுவார் - சிவனையே பொருளாகக்கொண்ட பாட்டுக்களே பாடத்தக்கன. ஏனையோர்களைப் பொருள்களாகக் கொண்டவை பாடத்தக்கன வல்லவென்பது; திருக்கோவையார் - ஞானஉலா - முதலியவற்றின் பொருள் காண்க; வள்ளல் - என்றதனுல் இடைவிடாமை பற்றிச் சிவனடியாரையும் உள்ளிட்டுக் கொள்க. ஏகாரங்கள் பிரிநிலை. 2

இவர்களை இசைத்தமிழ் வல்லார் நால்வருள் வைத்தார் உமாபதியார். இசைத்தமிழாவது ராகம், தாளம், மொழிப்பாட்டு என்ற இம் மூன்றும் இசைந்திருத்தலையுடைய பாட்டு என்றும், தாள அளவுக்கேற்ற குறிலும், நெடிலும், இசையளவு முதலிய ஓசைக்கேற்ற ஓசையும், எழுத்துக்களும், அமைந்த தமிழ்ச் சொற்களால் ஆக்கப்பட்டிருத்தலோடு இடத்திற் கேற்றவாறு வேறு மொழிச் சொற்களும் அமைந்திருத்தல் வேண்டும். இங்ஙனம் இலக்கணமும் இலக்கியங்களும் உள்ளன வென்றும் கூறுவர்.

பரமனையே பாடுவார் புராணம் - பண்பு - சிவனையே பொருளாகக் கொண்டு தென்றமிழ், வடமொழி, தேசிகம் என்றிவற்றின் வாய்த்த ஏதானுமொன்றிற் சிவனையே பொருளாகக் கொண்ட இய லிசைப் பாட்டுக்களை உரிய இசைவாய்த்த வகையால் ஒன்றிய மெய்யுணர்வினுடன் உள்ளுருகிப் பாடும் மெய்யடியார்கள் பரமனையே பாடுவார் எனப் படுவார்கள்.

கற்பனை :—(1) கீதங்கள், தென்றமிழ் வடமொழி தேசிகம் என்ற இவற்றில் வாய்த்த எம்மொழியினும் பாடத்தகுவன.

(2) அவற்றுள் சிவனடியே பொருளாகக் கொண்ட இயலிசைப் பாட்டுக்களே, பாடத்தக்கன.

(3) அப்பாடல்கள் ஒன்றித்த மெய்யுணர்வினோடும் உள்ளமுருகிப் பாடத் தகுவன.

59. பரமனையேபாடுவார் புராணம் முற்றும்

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# 60. சித்தத்தைச் சிவன்பாலே வைத்தார் புராணம்

தொகை

" சித்தத்தைச் சிவன்பாலே வைத்தார்க்கு மடியேன் "

—திருத்தொண்டத் தொகை - (10)

வகை

*உத்தமத் தானத் தறம்பொரு ளின்ப மொடியெறிந்து*
*வித்தகத் தானத் தொருவழிக் கொண்டு விளங்கச்சென்னி*
*மத்தம்வைத் தான்றிருப் பாத கமல மலரடிக்கீழ்ச்*
**சித்தம்வைத் தாரென்பர் வீடுபே றெய்திய செல்வர்களே.**

—திருத்தொண்டர் திருவந்தாதி - (72)

விரி

4157. காரணபங் கயமைந்தின் கடவுளர்தம் பதங்கடந்து
பூரணமெய்ப் பரஞ்சோதி பொலிந்திலங்கு நாதாந்தத்
தாரணையாற் சிவத்தடைந்த சித்தத்தார் தனிமன்றுள்
ஆரணகா ரணக்கூத்த ரடித்தொண்டின் வழியடைந்தார். க

புராணம் :—இனி, நிறுத்த முறையானே, பதினொன்றாவது பத்தராய்ப் பணிவார் சருக்கத்தில், மூன்றாவதாகச் சித்தத்தைச் சிவன்பாலே வைத்தார் பண்பு கூறும் பகுதி.

தொகை :—பொழிப்பு உரைத்துக் கொள்க.

சித்தம் - உள்ளம் ; சிவன்பாலே - ஏகாரம் பிரிநிலை ; ஏனை அதிகாரக் கடவுளர்பாலன்றிச் சிவன்பாலே என்க. " கடவுளர்தம் பதங்கடந்து " (4157) என்பது விரிநூல் ; வைத்தல் - பொருத்துதல் ; சித்தத்தைச் சிவன்பாலே வைத்தல் என்பது சித்தத்துள்ளே சிவனை வைத்தலும் சிவனையன்றி வேறெவரையும் வைக்காமையுமாம் ; " பொது நீக்கித் தனைநினைய வல்லோர்க்கு " (தேவா).

வகை :—உத்தமத்தானத்து...எறிந்து - உத்தமமாகிய சிவபுண்ணிய மேலீட்டினாலே அறமும், பொருளும், இன்பமுமென்னும் காட்டினை ஒடிபோலாக்கியெறிந்து; வித்தகத்தானத்து ஒரு வழிக்கொண்டு - இதயம் முதலியனவாகிய ஐந்து ஞான

இருப்பிடங்களாகிய தானங்களையும் கடந்து, அதன்மேல் சுழுமுனை திறந்து அவ் வழியே சென்று ; விளங்க...கீழ் - விளங்கும்படி தலையில் ஊமத்தப் பூவைச்சூடிய இறைவரது திருவடிக்கீழ் ; சித்தம் வைத்தார்...செல்வர்களே - சித்தத்தை நிறுத்தி வைத்தவர்கள் இம்மையிலே வீடுபேற்றினை அடைந்த செல்வர்களே என்பர்.

உத்தமத்தானம் - சிவபுண்ணியம் ; எதனைநோக்கித் தகாம் மிக்கது ; அறம் பொரு ளின்பம் என்பவை உலகநெறி நிறுத்தற் பயத்தனவையே யன்றி வீட்டுக் குரிய சாதனமாகா ; இவை மூன்றும் பரனைநினைந்து விட்ட நிலையே வீடுபேறும் என்ப : " பரனைநினைந் திம்மூன்றும், விட்டதே பேரின்ப வீடு " என்றது காண்க. அவ்வாறு பரனைநினைந்து செய்வன சிவபுண்ணியச் செயல்களேயாம் ஆதலின் உத்தம தானம் - எனப்பட்டவை சிவபுண்ணியங்களாம் ; அறமுதலிய மூன்றன் நிலைகளையும் விடுத்தெறிதலை ஓடி எறிந்து - என்றார் ; ஓடியாகக்களைந்து ; ஓடி - சிறுகிளைகளை ஒடிக்கும் நிலை : "ஓடி யெறிந்து" (724) ஒடித்தலாலுளதாவது ஓடி: விந்தகத்தானம். ஞான நிலையங்கள் ஐந்து : இதயம் - கண்டம் - நாவினடி - புருவநடு - பிரம்மாந்திரம் என்பன. இவற்றின் தானங்கள் ஐந்து கமலங்கள் எனப்படும்; இவற்றையே " காரண யிங் கயமைந்தின் கடவுளர்தம் பதம் " என்பது விரிநூல் (4157) ; தானந்து -தானங் களின்மேல் செல்லும்; ஒருவழி-சுழுமுனை: "ஒரு வழியைத் திறந்து" (திருவாதவூரர் புரா - பெருந்-சருக் 71) ; வழிக்கொள்ளுதல் - அவ்வொருவழியிலே செல்லுதல்- " நாதாந்தத் தாரணையாற் சிவத்தடைந்த " (1157) ; மலரடிக்கீழ்ச் சித்தம்வைத்தார்- " பூரண மெய்ப பரஞ்சோதி...சிவத்தடைந்த " (4157) ; வீடுபேறெய்திய செல்வர் களே என்பர்-இம்மையிலே சீவன்முத்தர்கள் என்று சொல்லுவர். " எவருமறியச் சீவன்முத்தரா யிங்கிருப்பவர்கள் " புராணவரலாறு (26) ; மத்தம் - ஊமத்தமலர்.

விரி :—4158. (இ - ள்) காரண...கடந்து - பிரமன் முதலாகிய காரணக் கடவுளர் ஐவர்க்குமுரிய ஐந்து தாமரைகளுடனிருக்கும் தானங்களைக் கடந்து மேற் சென்று ; (அப்பால்) பூரண...தாரணையால் - நிறைவுடையதாய், உள்பொருளாய், சுயஞ்சோதியாய் உள்ள சிவம் ஞான ஒளிவீசி விளங்கும் நாதாந்தத்திற் சித்தத்தை நிறுத்துதலினாலே ; சிவத்தடைந்த சித்தத்தார்-சிவத்தினிடத்தே நிறுத்திய சித்தத்தை யுடைமையால் சித்தத்தைச் சிவன்பாலே வைத்தார் என்கின்றவர்கள் ; தனி மன்றுள்...அடைந்தார் - ஒப்பற்ற திருவம்பலத்தினுள் விளங்கும் வேதகாரணராகிய கூத்தருடைய திருவடித் தொண்டின் வழியிலே நின்று அவரை அடைந்தவர் எனப்படுவர்.

(வி - ரை) காரணபங்கயம் ஐந்தின் கடவுளர் தம்பதம் - படைத்தல் முதலிய ஐந்தொழில் செய்யும் பிரமதேவர் முதலிய அதிகாரக்கடவுளராகிய ஐம்பெருங் கடவுளர்களும் இருக்கும் ஐவகைத் தாமரைப்பீடங்களையுடைய பதங்கள் ; பதவிகள். காரணம் - ஆதார காரணம் ;

* கடவுளர் தம்பதம் கடந்து பூரண மெய்ப்பரஞ்சோதி பொலிந்திலங்கு நாதாந்தம் என்றது இவ்வைந்து அதிகாரக கடவுளர் பதங்களுக்கு மேலாகிய நாதாந்தத்துட் சிவனிருக்குமிடம்.

நாதாந்தத் தாரணையாவது-நாதாந்த பதத்தினிற் சித்தத்தை நிறுத்துதல். நாதாந் தம் - சுத்த தத்துவங்களாகிய விந்துநாத முதலியவையும் நீங்கிய பரமுத்தியாகிய சிவ சாயுச்சியப் பேறுதலான் நாதாந்தம் எனப்பட்டது.

கடந்து...தாரணையாற் சிவத்தடைதலாவது அட்டாங்கயோகத்துள் இயமம் நியமம் ஆசனம் பிராணாயாமம் பிரத்தியாகாரம் என்னும் ஐந்தினையும் பயின்று, மேல்,

தாரணை - என்ற யோகவழியால் சிவத்தினிற் சித்தத்தை நிலைபெறுத்துதல். இது உடலில் குண்டலித்தானத்திலுள்ள குண்டலிசத்தியைப் பிரணவத்தால் எழுப்பிச் சுழுமுனை வழியாய் மேலே செலுத்துதலாலாம்.

ஐந்தின் கடவுளர்தம் பதங்கடத்தல் என்பது - (1) முதலில் நாற்கோணம் - பொன்னிறம் – லகார அக்கரம் - உடைய பிருதவியை (மண்) இதயத் தானத்தில் வைத்து அதன் கடவுளாகிய பிரமதேவரைத் தியானித்தலும்; பின் அதன் மேற் சென்று (2) இரண்டாவது இருகோணம் (தாமரை என்போருமுண்டு)-வெண்ணிறம்-வகார அக்கரம் உடைய அப்பு (நீர்)வைக் கண்டத்தானத்தில் வைத்து அதன் கடவுளாகிய விட்டுணுவைத் தியானித்தலும்; பின், அதன் மேற் சென்று, (3) மூன்றாவது முக்கோணம் – செந்நிறம் – ரகார அக்கரம் - உடைய தேயு (தீ) வை உண்ணாக்கின் தானத்தில் வைத்து அதன் கடவுளாகிய உருத்திர மூர்த்தியைத் தியானித்தலும்; பின், அதன்மேற் சென்று (4) நான்காவது, அறுகோணம் - கருநிறம் - யகார அக்கரம் - உடைய வாயுவைப் புருவநடுத் தானத்தில் வைத்து அதன் கடவுளாகிய மகேச மூர்த்தியைத் தியானித்தலும், பின், அதன் மேற் சென்று, (5) (ஐந்தாவது) – வட்டம் - புகைநிறம் - ஹகாரவக்கரம்–உடைய ஆகாயத்தை பிரமரந்திரத் தானத்தில் வைத்து அதன் கடவுளாகிய சதாசிவமூர்த்தியைத் தியானித்தலும்; அவ்வம்மூர்த்திகளை ஆங்காங்கும் தரிசித்தலும், அத்தியானத்தில் அசைவற்றிருந்து சென்று, முத்திக் கபாடம் திறக்க, ஆறாவதாகிய நாதாந்தத்தில் சேறலுமாம்; இவை முறையே மூலாதார முதல் விசுத்திவரை உள்ள ஐந்து ஆதாரத் தானங்கள் என்பர்.

சிவத்தடைந்த சித்தத்தார் – நாதாந்தம் என்னும் ஆறாவது ஆதாரமாய்ப், பிரமரந்திரத் தானத்தின் மேற்பட்ட ஆணை என்றும் தானத்தில் சிவம் பூரணமாய் - மெய்யாய்ப் – பரஞ்சோதியாய்ப் பொலிந்து விளங்குவர். அவரை அங்கு அவ்வாறு தியானித்துத் தரிசித்து அசைவற்று அங்குச் சித்தத்தை நிலைபெற வைத்தவர் என்க. "பேணு தத்துவங்க ளென்னும் பெருகுசோ பான மேறி. ஆணையாஞ் சிவத்தைச் சார அணைபவர்" (752) என்றதும் ஆண்டுரைத்தவையும் ஈண்டுச் சிந்திக்கற்பாலன. (II–பக். கூசஅ); சிவம் - இலயம் போகம் அதிகாரங்களுக்கு மேலாய்ப், புறப் பொருளை நோக்காது பேரறிவு மாத்திரையாய், எங்கும் நிறைவுடையதாய்ச், சத்தாய்ச், சுயஞ்சோதியாகிய ஞானப்பிழம்பாய் நிற்கும் சைதன்னியம்; நிட்களசிவம் என்பர். இவரிருப்பது ஆயிரமிதழ் அமலநிராதார கமல மெனப்படும். பங்கயத் தானங்கள் மூலாதாரம், நாபி, இருதயம், முகம், துவாதசாந்தம் என்பதும் ஓர்வகை.

"பாரணவும் புலனந்தக் கரண மொன்றும் படராமே நடுநாடி பயிலு நாதங், காரணபங் கயன்முதலா மைவர்வாழ்வுங் கழிவுநெறி வழிபடவுங் கருதி மேலைப், பூரண மெய்ப் பரஞ்சோதி பொலிவு நோக்கிப் புணர்ந்தணைந்த சிவானுபவ போக மேவுஞ், சீரணவுமவரன்றே வெம்மையாளுஞ் சித்தத்தைச் சிவன்பாலே வைத்து ளாரே" என்னும் புராணசார விளக்கமுங் காண்க.

தாரணை – தரித்தலால் வரும் நிலை. வழி - நெறி; ஞானயோக நெறி; பூரணம் - நிறைவு; வியாபகம்;

காரணபங்கயம் ஐந்தின் கடவுளர் - ஐந்தொழிற்கும் காரண கர்த்தர்களாகிய ஐவரும் சிவத்தின்வழியே போந்து அவராணையின் நிகழ்வார் என்பதாம். இக்கூறிய பிரமன் முதலியோர் பிறந்திறந்துழலும் பசுக் கூட்டத்துட்பட்ட "ஆட்டுத் தேவர்" களோடு மயங்கி யறிதற்பாலரல்லர்; "செத்துச் செத்துப் பிறப்பதே தேவென்று பத்தி செய்மனப் பாறைகட் கேறுமோ, அத்தனென் றரியோடு பிரமனும், துத்தியஞ்

செய நின்றநற் சோதியே " (அரசு - ஆதிபுராணக் குறு - 2) என்பன முதலியவை காண்க. இவர்களோ சிவபேதங்களாவர்; சிவனே, படைத்தல் முதலிய ஐந் தொழில்களைச் செய்யும் பொருட்டு இவ்வடிவங்களை மேற்கொண்டு இப்பதங்களில் அவ்வக் கமலங்களில் வைகுவர் என்பதும், இவ்வடிவங்களைப் பின்வரும் பிரமன் முதலியோர் கொண்டு அவ்வவர்க்கு நியமித்த படைப்பாதி தொழில்களைச் செய்குவர் என்பதும் ஞானநூல்களாலறியப்படும்; " சார்முத லியர்திகழ்கரு முயி ரவை யவைதம, பவமலி தொழிலது நினைவொடு பதுமநன் மலரது மருவிய சிவன்"- (1) " உலகுகள் நிலைபெறு வகை நினை வொடுமிகும், அலைகட னடுவறி துயிலம ரரியுரு வியல்பான் " (2) " உயி ரவையவை, முழுவது மழிவகை நினைவொடு முதலுரு வியல்பரன் " (3) என்ற ஆளுடைய பிள்ளையாரது (திருச்சிவபுரம் - திருவி ராகம் - நட்டபாடை) தேவாரமும் காண்க.

சிவத்தடைந்த சிந்தந்தார் - " சித்தத்தைச் சிவன்பாலே வைந்தார் " என்று முதனூலிற் போற்றப்பட்டோர்; முன்கூறிய முறைப்படி சிவத்தை யுணர்ந்து, கலந்து, தன்னை மறந்திருக்கும் நிலை; இது சிவயோக சமாதி எனப்படும். இதன் விரிவு சித்தாந்த சாத்திரங்களிலும்; காசிகாண்டம், வாயுசங்கிதை முதலிய நூல்களி லும், திருமந்திர முதலாகிய சிவாகமங்களிலும் கண்டுகொள்ளவும், அனுபவமுடைய தேசிகர்கள்பால் உபதேசமுகத்தால் அனுசந்திக்கப்படவும் உரியது; " ஒட்டற்று நின்ற வுணர்வு பதிமுட்டித்,கேட்டற் றிடஞ்சிவ முந்தீபற; கேடு மிடமதன் றுந்தீபற" உந்தி. (13); " மெய்ம்மைச், சிவயோக மேயோக மல்லாத யோக, மவயோக மென்றே யறி" (களிறு-74) " ஆதாரத் தாலே நிராதாரத் தேசென்று, மீதானத் தே செல்க வுந்தீபற; விமலற் கிடமதென் றுந்தீபற" (உந்தி-8), "திருச்சிலம் போசை யொலிவழி யேசென்று, நிருத்தனைக் கும்பிடென் றுந்தீபற; நேர்பட வங்கேநின் றுந்தீபற" (ஷை 17), என்றுவரும் சிவாகமங்களும், "ஒருவழியைத் திறந்து தாண்ட வச் சிலம்பொலி யுடன்போய்த், தக்க வஞ்செழுத் தோரெழுத் தருவாந் தன்மை கண்டரு டரும்பெரு வெளிக்கே, புக்கழுந்தினர் " (திருவாத - புரா - பெருந். 71); மூச்சதுர முதலாதாரங்கள், அகமார்க்க மறிந்தவற்றி னரும்பொருள்க ளுணர்ந்தங் கணைந்துபோய் மேலேறி யலர்மதிமண் டலத்தின், முகமார்க்க வமுதுடல முட்டத் தேக்கி, முழுச்சோதி நினைந்திருத்தல் முதலாக வினைகள், உகமார்க்க வட்டாங்க யோக முற்று முழத்தல் " (சித்தி. 8-21) என்பனமுதலாக வருவனவும், பிறவும் காண்க.

சித்தத்தார் - அடித்தொண்டின் வழியடைந்தார் - அடிந்தொண்டின்வழி - சரி யையாதி நான்னெறி; இவற்றுள் சரியை கிரியை முற்றிச் சிவயோகத்தே வழிவந் தோரே சிவன்பாலே சித்தம் வைத்தற்குரியார் என்பதுமாம்.

ஆரண காரணக் கூத்தர் - இறைவர் தமது கூத்தினாற் சுத்தமாயையினின்றும் வேதங்களைத் தோற்றுவிக்கின்றார் என்பதாம்.

சித்தத்தை சிவன்பாலே வைத்தார் புராணம்-பண்பு - ஐம்பெருங் கடவுளாது பதங்களாகிய காரணபங்கயமைந்தும் கடந்து தாரணையாலே பூரணமெய்ப் பரஞ்சோதி பொலிந்து விளங்கும் நாதாந்தத்தில் சித்தம் வைத்துச் சிவத்தையடைந்து நிற்பவர்கள் சித்தத்தை சிவன்பாலே வைத்தார் எனப்பெறுவார்கள்.

கற்பனை :—(1) அட்டாங்க யோகத்தின் வழியேசெய்யப்படும் தாரணையினால் நாதாந்தத்திலே விளங்கும் சிவன்பாலே சித்தத்தினைப் பிறழாமல் நிறுத்துதல் சிவனை அடையும்வழி; (2) இது யோக நெறி.

## 60. சித்தத்தைச் சிவன்பாலேவைத்தார் புராணம் முற்றும்.

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# 61. திருவாரூர்ப்பிறந்தார் புராணம்

---

தொகை

" திருவாரூர்ப்பிறந்தார்க ளெல்லார்க்கு மடியேன் "

—திருத்தொண்டத்தொகை - (10)

வகை

" செல்வந் திகழ்திரு வாரூர் மதில்வட்டத் துட்பிறந்தார்
செல்வன் றிருக்கணத் துள்ளவ ரேயத னூற்றிகழச்
செல்வம் பெருகுதென் னூரூர்ப் பிறந்தவர் சேவடியே
செல்வ நெறியுறு வார்க்கணித் தாய செழுநெறியே "

—திருத்தொண்டர் திருவந்தாதி - (73)

விரி

4158. அருவாகி யுருவாகி யனைத்துமாய் நின்றபிரான்
மருவாருங் குழலுமையாண் மணவாளன் மகிழ்ந்தருளுந்
திருவாரூர்ப் பிறந்தார்க டிருத்தொண்டு தெரிந்துணர
ஒருவாயாற் சிறியேனு லுரைக்கலாந் தகைமையதோ ? க

புராணம் :—இனி, சிறந்த முறையானே, பதினொன்றாவது பத்தராய்ப் பணிவார் சருக்கத்துள், நான்காவது திருவாரூர்ப் பிறந்தார்கள் புராணங் கூறத் தொடங்குகின்றார் ; இவர்களது பண்புகூறும் பகுதி.

தொகை :—பொழிப்பு உரைத்துக்கொள்க. எல்லார்க்கும் - முற்றும்மை ; திருவாரூரிற் பிறக்கும் முன்னைத் தவமுடைய எல்லாவுயிர்களையும் உள்ளடக்கி நின்றது ; " திருவாரூர்த் தோற்றமுடை யுயிர்கொன்றான் " (126) " சங்கையிலா வருந்தவ முன் புரிந்தார் " (புராணசாரம்.)

வகை :—செல்வம்...அதனால் - செல்வம் விளங்கிய திருவாரூரின் திருமதிலின் வட்டத்தினுட் பிறந்தவர்கள் சிவபிரானது திருக்கணத்திற் சேர்ந்தவர்களே யாவர் ; ஆதலினால் ; திகழ...சேவடியே - விளங்க உயர்ந்த வளங்கள் பெருகும் தென்றிருவாரூரிற் பிறந்தவர்களின் திருவடியே ; செல்வ...நெறியே - வீட்டு நெறியினை அடைவார்களுக்கு அணிமையாகிய நல்ல நெறியாகும்.

செல்வம் - சொற்பின் வருநிலை ; மதில்வட்டம் - நகரின் மதிலாற் சூழப்பட்ட இடம்; சோழ அரசாது தலைநகராதலாலும், தியாகராசர் ஆளும் நகராதலாலும் இது

மதிலாற் சூழப்பட்டுள்ளது ; செல்வன் - மேம்பட்ட ஐசுவரியத்தை யுடையவன் ; சிவன் ; செல்வநெறி - முத்திநெறி ; செல்வம் - முத்தித்திரு ; அணித்தாய - மிக அணிமையாகிய; சமீபித்த ; திருவாரூர்ப் பிறந்தார்களைப் பணிதல் முத்தியை அணிமையில் தேடித்தரும் என்பதாம்.

விரி :—4158. (இ - ள்) அருவாகி...மணவாளன் - அருவமாயும், உருவமாயும், எல்லாப் பொருள்களுமாயும் நின்ற பெருமானும், மணம் நிறைந்த கூந்தலையுடைய உமையம்மையாரது மணவாளனும் ஆகிய இறைவர் ; மகிழ்ந்தருளும் திருவாரூர்ப் பிறந்தார்கள் - மகிழ்ந்து வீற்றிருந்தருளும் திருவாரூரில் பிறந்தவர்களுடைய ; திருத்தொண்டு...தகைமையதோ - திருத்தொண்டினைச் சிறியேனால் ஒரு வாக்கினாலே தெரிந்து உணரும்படி உரைப்பது இயலும் தன்மையதாகுமா? ஆகாது. என்றபடி.

(வி - ரை) இப்பாட்டுப் பல பிரதிகளில் இல்லை.

அருவாதல் - உருவாதல் — இறைவரது பொதுவியல்பெனப்படும் தடத்த இலக்கணம்.

அனைத்துமாய்நின்ற — எல்லாமாய் நிற்கும்நிலை. ஆதல் - நிறைதல் என்ற பொருளில் வந்தது ; எங்கும் நிறைந்த தன்மை ; சர்வ வியாபகம் என்பர் ; ஆயி - மாயையினால் எல்லாவற்றையும் ஆக்கும் தன்மை குறித்தது என்றலுமாம். நின்ற திருத்தாண்டகப் பொருளைப் பார்க்க. " அவையே தானே யாய் " — (போதம் - 2) " அருவமு முருவா ரூப மானது மன்றி நின்ற வுருவமு மூன்றுஞ் சொன்ன வொருவனுக் குள்ள வாமே." (சித்தர்).

உணர உரைத்தல் ஒருவாயால் ஆம் தகைமையதோ என்க. " ஒருநாவுக் குரைசெய்ய வொண்ணுமை " (1266) என்ற கருத்து. ஓகாரம் எதிர்மறை குறித்தது.

திருத்தொண்டு - திருத்தொண்டுகள் ; சாதியொருமை.

தேர்ந்துணர - தெரிந்துரைக்க - என்பனவும் பாடங்கள்.　　1

4159. திருக்கயிலை வீற்றிருந்த சிவபெருமான் றிருக்கணத்தார்
பெருக்கியசீர்த் திருவாரூர்ப் பிறந்தார்க ளாதலினால்
றருக்கியவைம் பொறியடக்கி மற்றவர்தந் தாள்வணங்கி
யொருக்கியநெஞ் சுடையவர்க்கே யணித்தாகு முயர்நெறியே.　　உ

(இ — ள்) திருக்கயிலை...ஆதலினால் — பெருக்கிய சிறப்பினையுடைய திருவாரூர்ப் பிறந்தார்கள் திருக்கயிலையில் வீற்றிருக்கும் சிவபெருமானது கணங்களேயாவார்கள் ; ஆதலினாலே ; தருக்கிய...உடையவர்க்கே — செருக்குடன் எழும் ஐம்பொறிகளையும் அடக்கி மற்று அவர்களுடைய திருவடிகளை வணங்கி ஒற்றுமைப்படுத்திய மனத்தையுடையவர்களுக்கே உயர்நெறி அணியதாகும்.

(வி - ரை) பிறந்தார்கள் — கணத்தார்கள் - ஆதலினால் என்க ; சிவகணத்தவர்களே அத்தவத்தினால் திருவாரூரில் வந்தவதரிக்கப்பெற்றவர்கள்; "திருவாரூர்ப் பிறக்கும் பெருமைத் தவமுடையார்" (3592). ஆதலினால் - கணத்தவர்களே இவர்களாதலினால் இவர்களது திருவடி வணங்குதல் சிவகணங்களை வணங்கிய பயன் தந்து உயர்நெறியினை அணுகச் செய்யும் எனக் காரணக் குறிப்புப்பட உரைக்க. திருக்கணங்களே என்ற தேற்றேகாரமும், ஐம்பொறியும் என்ற முற்றும்மையும் தொக்கு

தருக்குதல் - அகங்கரித்தெழுதல்.

ஒருக்கிய - இரண்டற ஒன்றுபடுத்தப்பட்ட.

உயர் நெறி - சிவநெறி.

இவர்கள் சிவகணங்களேயாவர் என்பது நமிநந்தியார் புராண வரலாற்றானு முணர்க. "அணித்தாய செழுநெறி" - வகைநூல்.

தாள்வணங்க - என்பதும் பாடம். 2

திருவாரூர்ப் பிறந்தார்கள் புராணம்-பண்பு - சிவபெருமான் திருக்கணத்தவர்களே திருவாரூர்ப் பிறந்தார்கள். அவர்கள் திருவடிகளை வணங்குதல் சிவநெறி அணுகப் பெறும் சாதனமாகும்.

கற்பனை :—(1) திருவாரூரிலேபிறத்தற்கு முன்னைத் தவமுதிர்ச்சி வேண்டும்.

(2) முன்னைத் தவமுற்றியோர் சிவகணங்கள்.

(3) சிவகணங்களே திருவாரூர்ப்பிறந்தார்கள்.

(4) இவர்களை வணங்குதல் சிவநெறிப் பேறுதரும்.

**61.** திருவாரூர்ப் பிறந்தார் புராணம் முற்றும்.





திருவாரூர் சித்தீச்சரம் தட்சிணாமூர்த்தி
(கமலைஞானப் பிரகாசருக்கு அருள் வழங்கிய மூர்த்தி)



காசியில் குமாரசாமி மடத்தில்
ஸ்ரீ ஆதிகுமரகுருபர சுவாமிகள்

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# 62. முப்போதுந் திருமேனி தீண்டுவார் புராணம்

தொகை

" முப்போதுந் திருமேனி தீண்டுவார்க் கடியேன் "

—திருத்தொண்டத் தொகை - (10)

வகை

" நெறிவார் சடையாரைத் தீண்டிமுப் போதுநீ டாகமத்தின்
அறிவால் வணங்கியர்ச் சிப்பவர் நம்மையு மாண்டமரர்க்
கிறையாய்முக் கண்ணுமெண் டோளுந் தரித்தீறில் செல்வத்தொடும்
உறைவார் சிவபெரு மாற்குறை வாய வுலகினிலே "

—திருத்தொண்டர் திருவந்தாதி - (74)

விரி

4160. எப்போது மினியபிரா னின்னருளா லதிகரித்து
மெய்ப்போத நெறிவந்த விதிமுறைமை வழுவாமே
அப்போதைக் கப்போது யார்வமிகு மன்பினராய்
முப்போது மருச்சிப்பார் முதற்சைவ ராமுனிவர். க

புராணம் :—இனி, நிறுத்த முறையானே, பதினொன்றாவது, பத்தராய்ப்பணிவார் புராணத்துள், ஐந்தாவது, முப்போதுந் திருமேனி தீண்டுவார் புராணம் கூறத் தொடங்கி அவர்களது பண்பு கூறுகின்றார்.

தொகை :—பொழிப்பு உரைத்துக் கொள்க. முப்போதும்-காலை, நண்பகல், மாலை என்ற மூன்று சந்திப் பொழுதுகள். " முட்டாத முச்சந்தி மூவா யிரவர்க்கு மூர்த்தியென்னப் பட்டானை " (நம்பி-கோயில்-7) "சந்தி மூன்றிலுந் தாபர நிறுத்திச் சகளி செய்திறைஞ் சகத்தியர் " (நம்பி. தேவா) ; உம்மை முற்றும்மை ; திருமேனி-சிவலிங்கம் முதலிய சிவக் குறிகள் ; தீண்டுதல் - தீண்டித் திருமஞ்சன மாட்டுதல், அணி, மாலை, சாந்து, சாத்துதல் முதலாகிய அகம்படித் தொண்டு செய்தல். திருமேனி-வடிவம் ; இறைவருக்குத் திருவைந்தெழுத்தும் பஞ்சப்பிரமம் முதலிய மந்திரங்களும் தூலவடிவம்; ஆன்மா சூக்குமவடிவம்; சித்சத்தி அதிசூக்கும வடிவம். மந்திர நியாசம் செய்யப்பட்ட சிவலிங்கம் முதலிய வடிவுகளும் இப் பெயரான் திருமேனி யென்று உபசாரமாக வழங்கப்படும்.

வகை :—நெறிவார்...தீண்டி - நெறித்த நீண்ட சடையினையுடைய சிவபிரான் திருமேனியைத் தீண்டி ; முப்போதும்...அர்ச்சிப்பவர் - அழியாத சிவவாக்காகிய ஆகமங்களிற் கூறியவழியால் மூன்று காலமும் வணங்கிப் பூசித்து வழிபாடு செய்கின்றவர்கள் ; நம்மையும்...இறையாய் - நம்மையும் ஆட்கொண்டு தேவர்களுக்கு அதிபர்களாய் ; சிவபெருமாற்கு...உலகினிலே - சிவபெருமானுக்கு உறைவிடமாகிய சிவலோகத்தில் ; முக்கண்ணும்...உறைவார் - மூன்று கண்களும் எட்டுத் தோள்களுமாகிய சிவசாரூபம் பெற்று அழிவில்லாத சிவச் செல்வத்தோடும் இருப்பவர்கள்.

நெறி - நெறித்தல் ; சிறு வளைவுகளுடன் செறிவுடைத்தாதல் ; நீடு ஆகமம் - சிவவாக்காய் அநாதியாய் அழியாதுள்ள சிவாகமங்கள் ; ஆகமத்தினறிவு - ஆகமஞானத்தினால் அவ்விதிப்படி ; அர்ச்சித்தல் - வழிபாட்டு முறையெல்லாம் குறித்தது. நம்மையும் ஆண்டு - " அடியேன் " என்ற முதனூற் பொருள் கூறியபடி ; முக்கண் - எண்டோள் - இவை சிவசாரூபக் குறிகள் ; இவர்கள் செய்யும் பணி, சைவ நாற்பாதங்களுள் வைத்துக் கிரியா யோகங்களாதலானும், அவற்றின் பயன் சாமீப சாரூபங்கள் பெறுதலாம் எனப்படுதலானும், சிவன் உலகினிலே - முக்கண்ணும் எண்டோளும் தரித்து உறைவார் என்றார். சிவவழிபாட்டில் அந்தரியாகம் பிராணாயாமம் பாவனை முதலிய அங்கங்கள் சிவராஜயோகம் எனப்படுவன. ஈறில் செல்வம்-ஏனைய பதங்கள்போல அழிவுறாது என்றும் இருக்கும் சிவச்செல்வம்; முத்தித்திரு. உறைவு - இருப்பிடம்.

விரி :—4160. (இ - ள்) எப்போதும்...அதிகரித்து - எக்காலத்தும் ஆன்மாக்களுக்கு இனியவராகிய சிவபெருமானது இனிய திருவருளினாலே பெருகி ; மெய்ப்போத...வழுவாமே - உண்மையான சிவாகமஞான நெறிப்படி வந்த விதியின் முறைமைகள் தவறாமல் ; அப்போதைக்கப்போதும்... அர்ச்சிப்பார் - அவ்வக்காலந் தோறும் ஆசைமிகும் அன்புடையவர்களாகி முக்காலத்தினும் அருச்சிப்பவர்கள் ; முதற் சைவராம் முதல்வர்-ஆதி சைவர்களாகிய முனிவர்கள்.

(வி - ரை) எப்போதும் இனியபிரான் - உயிர்களிடத்தில் நீங்காது எக்காலத்திலும் இனியனவே செய்யும் இறைவர் ; சிவபிரான். எப்போதும் - மறந்த காலத்தும், அறியாக்காலத்தும், இகழ்ந்தகாலத்தும் என்றின்னன எல்லாம் கொள்க.

இனிய - இனிமையே செய்யும் ; இனிமை - உண்ணின்று நீங்காதுடனிருந்து நன்மை தீமை யறிவுறுத்திக் கண்டுகாட்டி உய்விக்கும் அருள்; "நானேது மறியாமே யென்னுள் வந்து நல்லனவுந் தீயனவுங் காட்டா நின்றாய் ", " எப்போது மினியானை யென்மனத்தே வைத்தேனே", "என்னி லாரு மெனக்கினி யாரில்லை, என்னிலும்மினி யாரொரு வன்னுளன் " (தேவா). உயிர்களை உய்விக்கும் தொழிலை இடையறாது செய்தருள்பவராதலின் எப்போது மினியபிரான் என்றார் ; மலத்திற் கேவலத்திற் கட்டுண்டு கிடந்த உயிர்களைக் கருணைக்கையால் எடுத்து, உடல் கருவி கரணங்களையும் உலகபோகங்களையும் தந்து உயிர்க்குயிராய் உண்ணின்று, உண்மைப் பொருளை அவ்வவற்றின் பக்குவப்படி உணர்த்திச், செலுத்தி, மலபரிபாகம் விளைவித்துத் திருவடிப்பேறாகிய முத்திநெறியிற் செலுத்துதல் ஈண்டுக் கூறப்பட்டது.

பிரான் இன் அருளால் அதிகரித்து - பிரமதேவன் முகத்திற் றோன்றிய மகா சைவர்களாகிய ஏனைய வேதியர் போலல்லாது இவர்கள் முதற்படைப்பிலே சிவபெருமானது ஈசானம் தற்புருடம் அகோரம் வாமதேவம் சத்தியோசாதம் என்ற ஐம்முகங்களின் வழியே சிவசிருட்டியாக உதித்த அகத்தியர், கௌதமர், பாரத்துவாசர்,

காசிபர், கௌசிகர் என்ற ஐந்து இருடியரின் கோத்திரங்களின் வழியே விருத்தியாகி வழிவழி வருபவர்கள் என்பது; இவ்விருடியர் சிவபெருமான்பால் உபதேசம் பெற்றவர்கள்; இவர்கள் வழிவழி சிவபிரானுக்கே அகம்படித் தொண்டுபுரிபவர்கள். "மாதொரு பாக னார்க்கு வழிவழி யடிமை செய்யும் வேதியர் குலம்" (149) என்றதும், ஆண்டுரைத்தவையும் பார்க்க.

மெய்ப்போதநெறி வந்தவிதி - உண்மைஞானமாகிய சிவாகம நெறி; இது சத்தி நிபாதர்க்குணர்த்தும் சிறப்புநூல் விதி. வேதம் உலகர்க்குணர்த்தும் பொதுநூல் விதியாம். மெய்ப்போதம் - சிவாகமம்; நெறி - சரியையாதி நானெறி.

விதிமுறைமையாவது - விதித்த, மந்திரம்-பாவனை - கிரியை என்ற மூன்றானும் வழிபாடு செய்யும் முறை.

ஆர்வம் மிகும் அன்பு - அன்பினை அடிப்படையாகக் கொண்டு முற்றிய ஆசை.

முதற்சைவராம் - சிவன் அநாதி சைவன்; சிவனிடமாக வந்த முகற்றீக்கை பெற்று வழிவழி வருதலின் முதற்சைவர் - ஆதிசைவர் எனப்படுவர்; முனிவர் - மனனசீலர்; புகழ்த்துணை நாயனார் புராணம் பார்க்க.

முப்போதும்-காலை-நண்பகல்-மாலை-என்ற மூன்றுகாலங்கள். "முப்போதும்" (வகைநூல்) திரிகால சந்தி என்பது வடமொழி: இந்நிலை இறப்பு, நிகழ்வு, எதிர்வு என்ற மூன்றினும் ஆகும் படியினை மேல்வரும்பாட்டிற் காண்க. எப்போதும் - முப்போதும் - முற்றும்மைகள். "சந்தி மூன்றிலுந் தாபர நிறுத்தி" (நம்பி - தேவா). 1

4161. தெரிந்துணரின் முப்போதுஞ் செல்கால நிகழ்காலம்
வருங்கால மானவற்றின் வழிவழியே திருத்தொண்டின்
விரும்பியவர்ச் சனைகள்சிவ வேதியர்க்கே யுரியன;வப்
பெருந்தகையார் குலப்பெருமை யாம்புகழும் பெற்றியதோ? உ

(இ - ள்) தெரிந்து உணரின் - ஆராய்ந்து உணர்ந்தால்; முப்போதும் - முன்கூறிய மூன்று காலங்களிலும்; செல்காலம்... ஆனவற்றின் - இறப்பு - நிகழ்வு - எதிர்வு என்று மூன்றாகப் பகுக்கப்படும் எக்காலத்திலும்; வழிவழியே...உரியன - வழிவழியாகச் சிவனது அகம்படித் திருத்தொண்டில் விரும்பிய வழிபாட்டர்ச்சனைகள் சிவமறையோர்களுக்கே உரியனவாம்; அப்பெருந்தகையார்...பெற்றியதோ? - அந்தப் பெருந்தகையாளர்களின் குலத்தின் பெருமை எம்மாற் புகழப்படும் தன்மையுள் அடங்குமோ? (அடங்காது).

(வி - ரை) தெரிதல் - ஆராய்தல்; முப்போது - முன் பாட்டிற் கூறிய வழிபாட்டுக் காலங்கள்.

செல்காலம்...ஆன - செல்காலம் - சென்றகாலம் - இறந்தகாலம்; இவை காலப்பாகுபாடுகள். முன் கூறியவை நாட்கூறுபாடுகளும் வழிபாட்டுக்குரிய நேரங்களுமாம். செல்கால முதலிய மூன்றினும் என முற்றும்மை விரிக்க.

ஆனவற்றின் - உரியன - முன்காலத்திலும் உரித்தாயிருந்தன; இப்போதும் உரியன; இனியும் உரியனவாவன.

வழிவழியே - பரம்பரையாக; முன் பாட்டின் உரை பார்க்க.

வழிவழியே - சிவ வேதியர்க்கே உரியன-ஏகாரங்களுள் முன்னையது தேற்றம். பின்னையது பிரிநிலை; ஏனையமறையோர் முதலிய எவர்க்கும் உரியனவல்ல என்பதாம்; இக்கூறிய அர்ச்சனைகள் சிவாலயங்களிற் செய்யும் பரார்த்தபூசை; ஏனைய பிரமவேதியர்களாகிய சிவதீக்கை பெற்ற மகாசைவர் முதலியோர் ஆன்

மார்த்த பூசைக்கு மட்டும் உரியோர். அவர்கள் பரார்த்த பூசையினை ஆசையினாலும், அதிகாரத்தாலும், பிறவாற்றானும் இந்நாளிற் சில இடங்களிற் காண்பது போலக், கவர்ந்து செய்யப்புகின் நாட்டுக்கும் அரசுக்கும் கேடுபயக்கும் என்பது சிவாகமங்கள் முதலிய ஞானநூல்களின் விதி ; சிவன் கோயில்கள் எல்லாம் சிவாகம விதியின் படியே அமைத்துத் தாபிக்கப்பட்டவை யாதலின் அவற்றின் வழிபாட்டர்ச்சனை முறைகளும் அவ்வாகமங்களின்படியே நிகழத்தக்கவை என்பதே நீதி.

அர்ச்சனைகள் - நித்தம், நைமித்திகம், காமியம் என்ற மூன்றும் இவற்றினங்களாகிய மூன்றும் ஆக ஆறுவகையுமாம். அர்ச்சனை - வழிபாட்டு விதிகளாகிய பூசை ஒழுங்குகள் யாவும் என்ற பொருளில் வந்தது.

சிவ வேதியர்க்கே உரியன - பிரிநிலை ஏகாரத்தால் ஏனையோர்க்கில்லை என்பது பெற்றாம். " பேர்கொண்ட பார்ப்பான் பிரான்றனை யர்ச்சித்தாற், போர்கொண்ட வேந்தர்க்குப் பொல்லா வியாதியாம், பார்கொண்ட நாட்டுக்குப் பஞ்சமுமாமென்றே, சீர்கொண்ட நந்தி தெரிந்துரைத் தானே" (திருமந்),"சிவன் முகத்திலே செனித்த விப்பிர சைவர்,இவரே யருச்சனைக்கென் றெண்", "அயன்முகத்திற் றோன்றிய வந்தணரர்ச் சித்துப் பயனடைதற் கிட்டலிங்கம் பாங்கு", "பாங்கில்லை தீண்டப் பாரார்த்தமிவர் தீண்டிற், றீங்கலருக் காமென்று தேறு" சைவசமய நெறி) ; சிவ வேதியர் ஆன்மார்த்தம் பரார்த்தம் என்ற இரண்டற்கு முரியவர்கள்.

இவ்வாறு உண்மையாகவும், குலம் எனபதேயில்லை ; எதுவும் எவரும் செய்யலாம் ; பிறப்பால் செயலுரிமைப் பேதமில்லை : என்றிவ்வாறு கூவிப புரட்சி புரியும் மாக்கள் இத்தத்துவங்களை உய்த்துணர்ந்து, உண்மை நெறியில் ஒழுகியும் உலகினரை ஒழுகச் செய்தும் உய்வார்களாக.

பெற்றியதோ - ஓகாரம் வினா ; எதிர்மறையின்கண் வந்தது. பெற்றியதன்று என்க.

இப்பாட்டுப் பல பிரதிகளில் இல்லை.
வழிவழிசெய்—என்பதும் பாடம் 2

வேறு

4162. நாரணற்கு நான்முகற்கு மறிய வொண்ணா
நாதனையெம பெருமானை ஞான மான
ஆரணத்தி னுட்பொருள்க ளனைத்து மாகும்
அண்ணலையெண் ணியகால மூன்று மன்பின்
காரணத்தா லர்ச்சிக்கு மறையோர் தங்கள்
கமலமலர்க் கழல்வணங்கிக் கசிந்து சிந்தைப்
பூரணத்தான் முழுநீறு பூசிவாழும்
புனிதர்செய லறிந்தவா புகல லுற்றேன். ௩

(இ - ள்) நாரணற்கும்...நாதனை - விட்டுணுவுக்கும் பிரமனுக்கும் அறிய வொண்ணாத இறைவரை ; எம்பெருமானை - எமது பெருமானாரை ; ஆரணத்தின்...அண்ணலை - ஞானமயமான வேதங்களினுட்கிடையான பொருள்களெல்லாம் ஆகின்ற பெருமையுடைய பிரானை ; எண்ணிய . வணங்கி - விதிக்கப்பட்ட மூன்று சந்தியாகாலங்களிலும் அன்புகாரணமாக அருச்சிக்கும் சிவமறையோர்களுடைய தாமரை போன்ற கழல்களை வணங்கி, அத்துணைகொண்டு ; கசிந்து...புகலலுற்றேன்-

மனங்கசிந்த நிறைவுடைமையாலே முழுதும் நீறு பூசிவாழும் தூயவர்களது செயலினை அறிந்தவாறு சொல்லப்புகுகின்றேன். ௩

(வி - ரை) இப்பாட்டும் பல பிரதிகளில் இல்லை ;

நாதனை - பெருமானை - அந்நாணலே - என மூன்றுவகையாற் கூறியது சரியை கிரியை யோகம் என்ற மூன்று நெறிகளின் வழிபாட்டுரிமை உணர்த்தற்கு.

அறியவோண்ணு-நெறியல்லா நெறியாற் றேடினாராதலின் இருவருங் கண்டிலர் என்றார் பேராசிரியர்.

ஞானமான ஆரணம் - வேதங்களின் ஞானகாண்டமானவும் வேதசிரசு என்னும் உபநிடதங்களும் ஆம் ; சிவவேதியர்கள் வேதம் ஆகமம் என்ற இரண்டற்கும் உரிமையுடையவர்.

உட்பொருள்கள் - உட்குறிப்பாய் இதயத்துட் கொண்டு வைத்துவிளங்கும் சிறந்த உண்மைகள்.

எண்ணிய - எண்ணப்பட்ட ; விதித்த.

சிந்தை கசிந்துள்ள அப்பூரணத்தினாலே என்க ; பூரணம் ; நிறைவு - நிறைவாவது வேறொன்றற்கும் இடங்கொடாது முழுமையும் வியாபித்தல்.

முழுநீறு பூசி - முழுமையும் நீறு அணிந்து. "முழுவதுமெய் யணிவ ரன்றே" (4168.) அறிந்த ஆ - அறிந்த ஆறு - தொகுத்தல்விகாரம் ;

புனிதர் - முனிவர். 4

முப்போதும் திருமேனி தீண்டுவார் புராணம் - பண்பு - எப்போதும் இனியாராகிய சிவன் முகத்தில் தோன்றி, அவரருளாலே விருத்தியாகிச், சிவாகம நெறி வழுவாமல், ஆர்வமிகும் அன்புடன் முப்போதும் சிவனை அருச்சிக்கும் ஆதிசைவர்களாகிய முனிவர்கள் முப்போதும் திருமேனி தீண்டுவார்கள் எனப்பெறுவார்கள்.

கற்பனை :—(1) சிவன் எல்லாவுயிர்க்கும் எப்போதும் இனியவர்.

(2) சிவவேதியர்கள் சிவ சிருட்டியாகச் சிவனைம்முகங்களினின்றும் தோன்றி விருத்தியாயினவர்கள்.

(3) சிவ பரார்த்த பூசை சிவாகம விதிப்படி அம்முறையிற் செய்யத்தக்கன.

(4) சிவார்ச்சனை மூன்றுகாலமுஞ் செய்யத்தக்கது.

(5) எல்லாக்காலத்திலும் சிவார்ச்சனைகள் சிவவேதியர்க்கே உரியன ; ஏனையோர்க்குப் பரார்த்த பூசை உரியதன்று.

(6) சிவவேதியர்கள் வேதாகம மிரண்டற்கும், ஆன்மார்த்த பரார்த்த பூசைகள் இரண்டற்கும் உரியவர்கள்.

(7) வேதங்களின் ஞானகாண்டத்தின் உட்பொருளாகிய சிவனது பூசையும் தியர்களுக்கேரியது வாகும்.

## 62. முப்போதும் திருமேனி தீண்டுவார் புராணம் முற்றும்.

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# 63. முழுநீறு பூசிய முனிவர் புராணம்.

தொகை

"முழுநீறு பூசிய முனிவர்க்கு மடியேன்"

—திருத்தொண்டத் தொகை - (10)

வகை

உலகங் கலங்கினு மூழி திரியினு முள்ளொருகால்
விலகுத லில்லா விதியது பெற்றநல் வித்தகர்தாம்
அலகில் பெருங்குணத் தாரூ ரமர்ந்த வரனடிக்கீழ்
இலகுவெண் ணீறுதம் மேனிக ளணிபு மிறைவர்களே.

—திருத்தொண்டர் திருவந்தாதி - (75)

விரி

4163. ஆதார மாயனைத்து மாகி நின்ற
வங்கணனெம் பெருமானீ ரணிந்த வேணிக்
காதார்வெண் திருக்குழையா னருளிச் செய்த
கற்பமநு கற்பமுப கற்பந் தானும
ஆகாதென் றங்குரைத்த வகற்ப நீக்கி
யாமென்று முன்மொழிந்த மூன்று பேத
மோகாதி குற்றங்க ளறுக்கு நீற்றை
மொழிகுதுநம மிருவினைகள் கழிவ தாக. க

திருநீற்றின் வகை

புராணம் :—இனி, நிறுத்தமுறையானே, பதினொன்றாவது பத்தராய்ப்பணிவார் சருக்கத்துள் ஆறாவது முழுநீறு பூசிய முனிவர் பண்பு கூறும் பகுதி

தொகை :—பொழிப்பு உரைத்துக் கொள்க.

முழுநீறுபூசிய - முழுமையும் நீறுபூசிய ; "அருமுனிவர் முழுவதுமெய் யணிவரன்றே" என்று விரிநூல் இதனை விரித்தபடி காண்க. (4168) ; முனிவர் - மனனசீலர்.

வகை :—அலகில்...இறைவர்களே - அளவுபடாத பெரிய எண்குணங்களையுடைய திருவாரூர்ப் பெருமான் திருவடிக்கீழே விளங்கும் திருவெண்ணீற்றினைத் தமது மேனியில் அணியும் எமது தலைவர்களே ; உலகம்...வித்தகர் - உலகங்கள் எல்லாம் கலங்கினாலும், ஊழிக்காலம் மாறுபட்டாலும் ஒருகாலத்தும் உள்ளம் தாம் கலங்காத நிலைபெற்ற வித்தகர்களாவார்.

"வானந் துளங்கிலென் மண்கம்ப மாகிலென்...வேலைநஞ்சுண், டூனமொன் றில்லா வொருவனுக் காட்பட்ட வுத்தமர்க்கே" (அரசு-திருவிருத்) என்ற திருவாக்கின் கருத்துக் காண்க; நீற்று நெறியே சிவநெறியாதலின் சிவனுக்காட்பட்ட தன்மையினைத் திருநீறுதரும் என்பதாம். இறைவர்களே - வித்தகர் என்க ; வித்தகம் - ஞானம் ; அறிவின் மேன்மை. ஊழிதிரிதல் - காலநிலை மாறுபடுதல் ; உலகம் இடத்தையும், ஊழி காலத்தையும் குறித்து நின்றன. விலகுதல் - தந்நிலையிற் பிரிந்து மாறுபடுதல் ; ஒருகால் - ஒருகாலும் ; அலகில் பெருங்குணம் - அளக்கலாகாத எண் குணங்கள் ; அடிக்கீழ் இலகு வெண்ணீறு - "திருவடி நீறெனைப் பூசு" (அரசு - தேவா.) உள் - உள்ளம் ; விதி - தன்மை.

விரி :—4163. (இ - ள்) ஆதாரமாய்...குழையான் - எல்லாவற்றுக்கும் ஆதாரமாயும் எல்லாப் பொருள்களுமாகியும் நின்ற அங்கணனும், எமது பெருமானும், கங்கையைத் தரித்த சடையினையும் காதிற்பொருந்திய குழையினையும் உடையவரும் ஆகிய சிவபெருமான் ; அருளிச்செய்த – சிவாகமங்களில் அருளியவற்றுள்ளே ; ஆகாதென்று...நீக்கி - கைக்கொள்ளத் தகாதென்று அங்குச் சொல்லிய அகற்பம் என்ற வகையுட்பட்டதனை நீக்கி ; கற்பம்...தானும் - கற்பமும் அநுகற்பமும் உபகற்பமும் என்ற ; ஆமென்று...பேதம் - இவை கொள்ளத்தக்கன வாகுமென்று முன்னே கூறிய மூன்றுவகைப்பட்ட ; மோகாதி...நீற்றை - காமாதி குற்றங்களை நீக்கும் திருநீற்றினை ; மொழிகுதும்...ஆக-நமது இருவினைகளுக்கு கழிவு சேர்வதற்காக மொழிவோம்.

(வி - ரை) இதுமுதல் ஐந்து பாட்டுக்களும் பல பிரதிகளில் இல்லை. இவை ஐயப்பாடு ; இவை திருநீற்றின் வகைகளையும், தன்மைகளையும், பெறும் பரிசினையும் கூறுவன. *இவற்றைப்பற்றிய ஐயப்பாட்டின் விவரங்கள் எனது "சேக்கிழார்" என்ற நூலினுள் (பக் - உ௨௪ - உ௨௫) விரித்துள்ளேன். ஆண்டுக் கண்டுகொள்க. இவற்றின் பொருளைப் புராண சாரமுடையார் அமைத்துள்ளமையின் இவை முன்பே புகுத்தப்பெற்றிருத்தல் கூடும் என்று கருதப்படுகின்றது.

ஆதாரமாய் – எல்லாப் பொருள்கட்கும் ஆதாரமாய் உள்ளவர் ; ஆதாரம் - தாங்குதல் - நிலைபெறுவித்தல், மாயையினின்றும் தோற்றுவித்தல் என்ற பொருளில் வந்தது.

---

*பெரியபுராணச் செய்யுட்டொகை மொத்தம் 4283 என்று கொண்ட ஒரு வெண்பாவை ஆதாரமாகக் கொண்டு அதனையே தாபித்துத் திருவாவடுதுறை வித்துவான் திரு. சிதம்பர இராமலிங்கம் பிள்ளை அவர்கள் ஞானசம்பந்தம் பத்திரிகையில் ஒரு கட்டுரை வரைந்துள்ளார்கள். அதனுள்,"திருவிருத்த நாலாயிரத்திரு நூற்றைம்பத்து மூன்றாக வகுத்து" என்று புராண வரலாற்றுள் (53) வரும் பாட்டுப் பாடபேத மென்றும், அது "எண்பத்து மூன்றாக" என்றிருத்தல் வேண்டுமென்றும் சாதித்துள்ளார்கள் ; திரு. நாவலரவர்கள் பதிப்பாக வழங்கும் பதிப்புக்களில் 4281 பாடல்களே மொத்தம் காணப்பயிலுகின்றன. "காதில் வெண்குழையோன்" (18) என்ற திருமலைச் சிறப்புப்பகுதியிலுள்ள பாட்டும், கண்ணப்பநாயனார் புராணத்துள் "பொருப்பினில் வந்து" என்பது முதல் "மன்பெருமா" என்பது வரை (158 - 162) ஐந்து பாட்டுக்களும், இங்கு முன் காட்டியபடி வரும் ஐந்து பாட்டுக்களும் இடைச் செருகல்களான வெள்ளி பாடல்கள் என நீண்டகாலமாகப் பல பெரியோர்களாலும் துணியப்பட்டன என்பது இங்குநினைவு கூர்தற்பாலது. I சரித்ர ஆராய்ச்சிக் குறிப்புக்கள் I பக்கம் 79 - பழைய ஏட்டு சுவடியின் படம்பார்க்க,

அருளிச்செய்த - அருளிச் செய்யப்பட்டவை, அகரவீற்றுப் பன்மைப் பெயர்.

மோகாதி - காமம், குரோதம், லோபம், மோகம், மதம், மாச்சரியம் என்ற ஆறு தீக்குணங்கள். மோகாதி - வடமொழிச் சந்தி; கற்பம், அனுகற்பம், உப கற்பம் — என்ற மூன்றுவகைத் திருநீறும் தீக்கை பெறுதற்குரிய சைவர்களுக்கு உரியது; அகற்பம் இவையல்லாதது; தீக்கைக் குரியரல்லாதார்க்குரியது அசைவ விபூதி எனப்படும்; இதனை ஆசாரியர் நீங்கநிரைத்த அகற்பம் என்றார்; கற்ப முதலிய மூவகை நீறும் வைதிகம், இலௌகிகம் என இரண்டு வகையுள் இலௌகிகத்திற் சேர்ந்தவை; இவற்றுள் வைதிகவிபூதி-பிரமன் ஓமகுண்டத்திற் றோன்றும் புரோதனி என்றும், பிராம்மணாது ஓமகுண்டத்திற் றோன்றும் சத்தியோசாதை என்றும் இருதிறப்படும்; முன்கூறிய கற்ப முதலிய மூன்றும் உற்பத்தி வேறுபாட்டால் அம் மூவகையாயின. இவற்றின் விரிவெல்லாம் சிவாகமங்களுள்ளும் சைவசமயநெறி முதலிய நூல்களுள்ளும் கண்டுகொள்க. ஆம் - ஆகும் என்பதன் இடைக்குறை;

குற்றங்களறுக்கும் நீறு - உயிர்களைக் காத்தல் செய்தலின் இரட்சை என்றும், பாவங்களை நீறுசெய் தழித்தலின் நீறு என்றும், சிறந்த செல்வமாதலின் விபூதி என்றும், அஞ்ஞான அழுக்கைப் போக்குதலால் சாரம் என்றும், ஞான வொளியைத் தருதலின் பசிதம் என்றும் இவ்வாறு பல காரண பெயர்கள் போதரும் குறிப்பாம்.

முன்மொழிந்த மூன்றுபேதம் - கற்ப முதலிய மூன்று.

மொழிவதுநம்—என்பதும் பாடம். 1

4164. அம்பலத்தே யுலகுய்ய வாடு மண்ண
லுவந்தாடு மஞ்சினையு மளித்த வாக்கள்
இம்பர்மிசை யநாமயமா யிருந்த போதி
லீன்றணிய கோமயமந் திரத்தி னலேற்
றும்பர்தொழ வெழுஞ்சிவமந் திரவோ மத்தா
லுற்பவித்த சிவாங்கிதனி லுணர்வுக் கெட்டா
வெமபெருமான் கழலினை தங் கிட்ட தூநீ
றிதுகற்ப மென்றெடுத்திங் கேத்த லாகும். ௨

கற்ப நீறு

(இ - ள்) அம்பலத்தே...ஆக்கள் - உலகம் உய்யும்படி திருவம்பலத்திலே திருக்கூத்து ஆடுகின்ற இறைவர் திருவுளமகிழ்ந்து திருமஞ்சனம் செய்தருளும் ஆனைந்தினையும் தரும் பசுக்கூட்டங்கள்; இம்பர்...போதில் - இவ்வுலகில் நோயில்லாதவையா யிருந்தபோது; ஈன்றணிய கோமயம் - கன்றீன்று அணிமையாகிய பசுவின் சாணத்தை சத்தியோசாத மந்திரத்தினால் ஏற்று; உம்பர் தொழ...சிவாங்கி தனில் — தேவர்கள் தொழும்படி மேல் ஓங்கி எழுகின்ற சிவமந்திரங்களால் உண்டாக்கப்பட்ட சிவாக்கினியில்; உணர்வுக்கு...தூநீறு - உணர்வுக்கு எட்டாத எமது பெருமானது திருவடியை நினைந்து இட்டெடுத்த தூயதிருநீறு; இது...ஆகும் - இது கற்ப மென்று எடுத்துச் சொல்லப்படும்.

(வி - ரை) அஞ்சு — ஆனைந்து; பஞ்சகவ்வியம் என்பது வடமொழி. எண்ணளவை யாகுபெயர்.

அநாமயம் - நோயின்மை. ந - ஆமயம்-அநாமயம்; ஆமயம் - நோய். "ஆமயந் தீர்த் தடியேனை யாளாக் கொண்டார்" (அரசு - அதிகை - தாண்)

ஈன்றணிய கோமயம் - கன்றீன்று அணிமையாகிய பசுவின் சாணம்; மயம் - சாணம்.

மந்திரத்தினால் - சத்தியோசாத மந்திரம் சொல்லி

ஏற்ற — ஏற்றல் - கொள்ளுதல் ; எடுத்தல் ; ஏந்துதல் ; இது சாந்திகம், பௌட்டிகம், காமதம் என மூவகைப்படும் ; சாந்திகம் - கோமயமிடும்போது பசுவின் பிற்றட்டிலே கைவைத்து ஏற்பது ; பௌட்டிகம் - நிலத்தில் விழுமுன் தாமரை யிலையில் ஏற்பது ; காமதம் - நிலத்தில் விழுந்தபின் எடுப்பது.

சிவமந்திர வோமத்தால் - சிவாங்கி - சிவமந்திரங்களால் உளதாக்கி வளர்த்த சிவாக்கினியாகிய ஓமத்தீ.

இட்ட - தீயில் இட்டுச் சாம்பராக்கி எடுத்த.

திருக்கயிலையில் இடபதேவருடன் வாழ்கின்ற நந்தை, பத்திரை, சுரபி, சுசீலை, சுமனை எனனும் ஐந்து பசுக்களின் வழியாயச் சிவனாணைப்படித் திருப்பாற்கடலி னின்றும் இவ்வுலகில் வழிவழிவரும் பசுக்களுள், ஈன்ற பத்து நாட்குட்பட்டதும், ஈனாத கிடாரியும், நோயுடையதும், கன்று செத்ததும், கிழடும், மலடும், மலந் தின்பதும் ஆகிய இவற்றை நீக்கிச் சிறந்தனவற்றுள், பங்குனி, தை மாதங்களில் வைக்கோலை மேய்ந்த பசுச் சாணத்தை முன்கூறிய வகையால், அட்டமி, அமாவாசை - பௌர்ணமி, சதுர்த்தசி, இந்நாட்களில் சத்தியோசாத மந்திரத்தால் ஏற்று, மேலிருக்கும் வழும்பை ஒழித்து, வாமதேவத்தாற் பஞ்சகவ்வியம் விட்டு, அகோரத்தாற் பிசைந்து, தற்புருடத்தால் உருண்டை செய்து, ஈரமாகவேனும் உலர்ந்தபின்னரேனும், ஓமத்தீயினுள் ஈசானத்தால் இட்டுச் சுட்டு எடுத்த நீறு கற்ப மாகும் என்பதாம் ; இது சிவாகமவிதி.

4165. ஆரணியத் துலர்ந்தகோ மயத்தைக் கைக்கொண்
டழகுறநுண் பொடியாக்கி யாவின் சுத்த
நீரணிவித் தத்திரமந் திரத்தி னாலே
நிசயமுறப் பிடித்தோம நெருப்பி லிட்டுச்
சீரணியும படிவெந்து கொண்ட செல்வத்
திருநீறு மநுகற்பந் தில்லை மன்றுள்
வாரணியு முலையுமையாள் காண வாடு
மாணிக்கக் கூத்தர்மொழி வாய்மை யாலே. ௩

அநுகற்ப நீறு

(இ - ள்) தில்லை மன்றுள்...வாய்மையாலே - தில்லையம்பலத்திலே வார் அணிந்த தனங்களையுடைய உமையம்மையார் காணும்படி திருக்கூத்தியற்றுகின்ற மாணிக்கக்கூத்தப் பெருமான் அருளிய சிவாகம விதிப்படி ; ஆரணியத்து...பொடி யாக்கி-காட்டில் உலர்ந்த பசுச்சாணத்தைக் கொண்டுவந்து சிறக்க நுண்ணிய பொடி யாக்கி ; ஆவின்...கொண்ட - பசுவினது சுத்தமாகிய கோசலத்தை விட்டுப் பிசைந்து அத்திரமந்திரத்தினாலே உண்டையாகப் பிடித்து ஓமத்தீயில் இட்டுச் சிறப்புற வெந்த பின் கைக்கொண்ட செல்வத்திருநீறு அநுகற்பமாம் - செல்வமாகிய திருநீறு அநு கற்பமெனப்படும்.

(வி — ரை) ஆரணியம்-பசுக்கள் மேயும் காடு ; ஆவின் சுத்த நீர்-பசுவின் தூய மூத்திரம் ; சுத்தம் - இயற்கை யடைமொழி ; சுத்தம் செய்யும் நீர் என்க.

நீர் அணிவித்துப் - பிடித்து - என்க. நிசயம் - திரட்சி ; உண்டை.

வெந்து கொண்ட-வெந்தபின் கைக்கொண்ட; வெந்து-வினையெச்சத்திரிபு ;

ஓம நெருப்பு - சிவ ஓமத்தீ.

செல்வம் - பெருஞ் செல்வம் ஆகிய முத்தித்திருவை விளக்கும்.

மாணிக்கக்கூத்தர் - மாணிக்கம் போன்ற கூத்து இயற்றுபவர்; இரத்தின சபாபதி என்பர்.

மொழி - சிவாகமம்; ஆகுபெயர். 3

4166. அடவிபடு மங்கியினால் வெந்த நீறும்
ஆனிலைக ளனலெரிடக்க வெந்த நீறும்
இடவகைக ளெரிகொளுவ வெந்த நீறும்
இட்டிகைகள் சுட்டவெரி பட்ட நீறும்
உடனன்றி வெவ்வேறே யாவி னீரா
லுரைதிகழு மந்திரங்கொண் டுண்டை யாக்கி
மடமதனிற் பொலிந்திருந்த சிவாங்கி தன்னால்
வெந்ததுமற் றுபகற்ப மரபி னாகும். ௪

உபகற்ப நீறு

(இ - ள்) அடவி...நீறும்-பசுக்கள் மேயும் காடுகள் மரங்களின் உராய்தலினால் உண்டாகிய தீயினாலே வெந்த நீறும், பசுக்கள் தங்கும் இடங்கள் தீப்பற்றிக்கொள்ள வெந்த நீறும், இவ்வாறுள்ள பல இடங்கள் தீப்பற்ற வெந்த நீறும், செங்கற்களைச் சுட்ட தீயின் உண்டாகிய நீறும் ஆகிய இவற்றை; உடனன்றி...உண்டையாக்கி - ஒன்றுசேர்க்காமல் தனித்தனியே சிவாகமங்களில் விதித்த உரிய மந்திரங்களாலே பசு மூத்திரத்தினாலே பிசைந்து உண்டையாகச் செய்து; மடமதனில்...மரபினாகும் - திருமடங்களில் விளங்கும் சிவாக்கினியினால் விதித்தப்படி நீற்றப்பட்டது உபகற்ப மென்று சொல்லப்படும்.

(வி - ரை) படும்அங்கி - மூங்கில் முதலியவற்றால் தோன்றும் தீ.

வெந்தநீறு – வேகுதலால் உண்டாகும் நீறு.

ஆனிலைகள் - பசுக்கள் இருக்கு மிடங்கள்; இவை பசுவின் சாணம் நிறைந்து கிடக்குமிடம்.

இட்டிகைகள் - செங்கற்கள். இட்டிகா - இட்டிகை; வடசொற்றிரிவு.

மடம் - முனிவர், மறையோர், பெரியோர்கள் வாழும் இடங்கள்; சிவாங்கி – இவர்கள் நாளும் வளர்க்கும் நியமமாகிய சிவவேள்வித் தீ. 4

4167. இந்தவகை யாலமைத்த நீறு கொண்டே
இருதிறமுஞ் சுத்திவரத் தேறித்த பின்னர்,
அந்தமிலா வரனங்கி யாறு மெய்ம்மை
யறிவித்த குருநன்மை யல்லாப் பூமி
முந்தவெதி ரணியாதே யணியும் போது
முழுவதுமெய்ப் புண்டரஞ்சந் திரனிற் பாதி
நந்தியெரி தீபநிகழ் வட்ட மாக
நாதரடி யாரணிவர் நன்மை யாலே. ௫

நீறு அணியும் பரிசு

(இ - ள்) இந்த...கொண்டே-முன்கூறிய இவ்வாறு அமைத்து விளைத்து எடுத்த திருநீற்றினைக் கொண்டு; இரு...பின்னர் - அகம் புறம் என்னும் இரண்டிடத்தும் சுத்திவரும்படி பாவித்து ஒரு சிறிது கிருதி மூலையிலே (தென்மேற்கில்) உரிய மந்திரத்

தால் தெறித்த பின்பு ; அந்தமிலா...அணியாதே - அழிவில்லாத சிவன் சந்நிதியும், தீயும், ஆறும், உண்மை நெறியினை உபதேசித்த குருவும், வழி நடையும், நன்மை சாராத பூமியும் என்றிவ் விடங்களின் முன் அணியாது ; அணியும் போது - விதிப் படி அணிகின்ற காலத்தில் ; முழுவது மெய்...வட்டமாக — உடல் முழுதும் பூசுதல், திரிபுண்டரம், பிறைவடிவம், ஓங்கி யெரிகின்ற விளக்குச் சுடராகிய முக்கோணம், விளங்குகின்ற வட்டம் ஆகிய இவ்வடிவிலே ; நாதனடியார்...நன்மையாலே - சிவ னடியார்கள் நன்மையினால் அணிகுவர்.

(வி - ரை) முதற் பாட்டினால், திருநீற்றின் வகைகளைக் கூறி, அதன் மேல் மூன்று பாட்டுக்களினால் மூவகைத் திருநீற்றினையும் பெறும் வகையும் பண்பும் கூறி, இப்பாட்டினால் நீறு அணியத்தக்க இடமும் அணியும் வகையும் கூறுகின்றார்.

அமைத்த - விளைவித்தெடுக்கப்பட்ட; இருதிறம் - அகமும் புறமும் ; தெறித்து — சிறிதளவு எடுத்து அசுர பீடையணுகாதபடி அத்திர மந்திரத்தினால் விரலினால் தெறித்து.

அரன் - அங்கி - ஆறு - குரு - நன்மையல்லாப்பூமி - இவ்விடங்களின் எதிரில் திருநீறணியலாகாது என்பது விதி ; ஆறு - நடந்து செல்லும் வழியிடை; நன்மை யல்லாப் பூமி - தூய்மையில்லாத நிலம்

மெய் முழுவதும் - இது (தூளிதம்) பொடியாக உடல் முழுதும் பூசுதல் குறித்தது.

புண்டரம் - திரிபுண்டரம் - மூன்று கீற்றுக்கள்; சந்திரனிற்பாதி-பிறை வடிவம்.

நந்தி எரிதீபம் - நந்துதல் இங்கு ஒளிவிட்டு - சுவாலித்து - எரியும் தன்மை குறித்தது ; தீபம் - விளக்குச் சுடர் - மேல் நோக்கிய முக்கோண வடிவம். வட்டமாக அணிதல் - சிறுத்தொண்ட நாயனாருக்கு அருள் புரியவந்த வயிரவர் திருநீற்றுப்பொட்டு அணிந்த திருக்கோலம் காண்க. "இளம்பிறை தன்னைப், பெருகு சிறு மதியாக்கி...சாத்தியதென்னத் திருநுதன்மேற் றிருநீற்றுத் தனிப்பொட்டுத் திகழ்ந்திலங்க" (3687)

நன்மை - நலம்தரும் விதி. 5

4168. சாதியினிற் றலையான தரும சீலர்
தத்துவத்தி னெறியுணர்ந்தோர் தங்கள் கொள்கை
நீதியினிற் பிழையாது நெறியி னிற்போர்
நித்தநிய மத்துநிக ழங்கி தன்னிற்
பூதியினைப் புதியபா சனத்துக் கொண்டு
புலியதளி னுடையானைப் போற்றி நீற்றை
ஆதிவரு மும்மலமு மறுத்த வாய்மை
யருமுனிவர் முழுவதுமெய் யணிவ ரன்றே. சு

முழுநீறு பூசிய முனிவர்

(இ - ள்) சாதியினில்...சீலர் - சாதி யொழுக்கத்தில் தலைமையான தரும சீலத்தையுடையவர்களும் ; தத்துவத்தின் நெறியுணர்ந்தோர் - தத்துவ நெறியினை உணர்ந்தவர்களும் ; தங்கள்...நிற்போர் - தமது கொள்கை நீதியின் வரும் நெறியி னின்றும் சிறிதும் தவறாது நிற்பவர்களும் ஆகி ; ஆதி...முனிவர்-தொன்று தொட்டு வரும் மும்மலங்களையும் அறுத்த வாய்மையுடைய அரு முனிவர்கள்; நித்த...பூதியினை- நியமம்தவறாது செய்யும் நித்தியாக்கியினில் விளைத்தெடுத்த திருநீற்றினை; புதிய பாச

னத்துக்கொண்டு - புதிய பாத்திரத்தில் வைத்துக் கொண்டு; புலி...போற்றி - புலித் தோலை உடுத்த இறைவனை வணங்கி; நீற்றை முழுவது மெய்யணிவர் - அத்திரு நீற்றினைத் திருமேனி முழுவதும் பூசுவர்; இவரே முழுநீறு பூசிய முனிவர் எனப் படுவார்.

(வி - ரை) இவரே முழுநீறு பூசிய முனிவர் எனப்படுவார் என்பது இசை யெச்சம்.

சாதியினிற் றலையான - என்பது பிறப்பின் மேன்மையும், தருமசீலர் — என்பது அக்குலத்தின் ஒழுக்க மேன்மையும் குறித்தன; சாதி என்பது பிறப்பினால் வருவது; நெல் முதலிய விதைமணிகள் பொறுக்கி எடுத்து, மேலும் விளைந்தபின் பொறுக்கி, இவ்வாறு சேர்ந்தெடுத்த மணிகளை வேறு சாதியாகக் குறிக்கும் உழவுத் தொழில் முறை பற்றி இங்கு வைத்துக் காணில், ஒழுக்கம் பற்றி வழிவழி வரும் குண நிலை மேன்மைகள் புலப்படும். சாதி குலம் பற்றிய பூசல்களும் ஒழிந்துபோம்;

தத்துவத்தின் நெறி — இஃது உயிரினைப்பற்றி வரும் தத்துவ ஞானம் பற்றிய நெறி; உண்மைநெறி; தத்துவம் — உண்மை; சிவம்; சிவநெறி;

கொள்கை நீதியினிற் பிழையாது - கொள்கை - என்றது முன் கூறிய உடல் - உயிர் இருநெறியும் பற்றிய ஒழுக்கத்தில் தாம் தாம் பற்றி நின்றதோர் கொள்கை வழக்கு; இவை பலப்பலவாகி இப்புராணத்துள் வந்த அடியார்களது பலதிறப் பட்ட தொண்டு நெறிகளை உணர்த்திற்று; நெறி - தொண்டின் நெறி; திருநீற்று நெறியில் நின்ற மெய்ப்பொருளார் - ஏனாதியார் வரலாறுகள் இங்குக் கருதற்பாலன.

ஆதிவரும் மும்மலமும் - அநாதியாக உயிரினைப்பற்றிப் பிறப்பிற்கு காரணமாகி வரும் மூலமலங்கள். ஆதி - தொடக்கம்; மும்மலமும் - என்ற உம்மையினால் மலவா தனையும் கொள்க; அறுத்தல் - வலியின்றிச் செய்தல்; பாசனம் - பாத்திரம். 6

முழுநீறு பூசிய முனிவர் புராணம் - பண்பு - சாதியிற் றலையானவர்; தரும சீலமுடையோர்; தத்துவ நெறி யுணர்ந்தோர்; தமது கொள்கை நீதி பிழையாத நெறி நின்றோர்; நித்த நியம அங்கியில் (மூன்று வகைப்பட்ட) விதிப்படி எடுத்த திருநீற்றைப் புதிய பாத்திரத்திற்கொண்டு சிவனைப் போற்றி மேனி முழுவதும் அணிவோர்கள் முழுநீறு பூசிய முனிவர்கள் எனப்படுவர்.

கற்பனை :— (1) திருநீறு பெறும் வகையால் நான்கு வகைப்படும். இவற்றுள் அகற்பம் ஆகாது; ஏனைய கற்பம், அநுகற்பம், உபகற்பம் ஆவன.

(2) இவை சிவாகமங்களின் விதித்தன.

(3) முழுநீறு பூசிய முனிவராந் தன்மையோர் சாதியிற் றலையானவரும், தரும ஒழுக்கமுடையவரும், தத்துவ நெறியுணர்ந்தோரும், தமது கொள்கை பிழையாத நெறி நிற்போரும் ஆவர்.

(4) திருநீறு, நித்த நியம அக்கினியில் விதிப்படிக் கொண்டு புதிய பாசனத்தில் ஏற்கத்தக்கது.

(5) திருநீற்றை அணியும்போது சிவனை உன்னி வணங்கி அணிதல் வேண்டும்.

(6) பொடியாகப் பூசும்போது மெய்ம் முழுதும் திருநீறு அணியலாம்.

(7) திருநீறு, மும்மலங்களையும் அறுத்து உயிருக்கு உய்திதரும்.

63. முழுநீறுபூசிய முனிவர் புராணம் முற்றும்



சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# 64. அப்பாலும் அடிச்சார்ந்தார் புராணம்

தொகை

" அப்பாலும் அடிச்சார்ந்தா ரடியார்க்கு மடியேன் "

—திருத்தொண்டத் தொகை (10)

வகை

*வருக்க மடைத்துநன் ஞவலூர் மன்னவன் வண்டமிழாற்*
*பெருக்க மதாத் தொகைபிறை சூடிதன் பெய்கழற்கே*
*யொருக்கு மனத்தொடப் பாலடிச் சார்ந்தவ ரென்றுலகிற்*
*றெரிக்கு மவர்சிவன் பல்கணத் தோர்நஞ் செழுந்தவரே.*

—திருதொண்டர் திருவந்தாதி (76)

விரி

4169. மூவேந்தர் தமிழ்வழங்கு நாட்டுக் கப்பால்
முதல்வஞ ரடிச்சார்ந்த முறைமை யோரும்
நாவேய்ந்த திருத்தொண்டத் தொகையிற் கூறும்
நற்றொண்டர் காலத்து முன்னும் பின்னும்
பூவேய்ந்த நெடுஞ்சடைமே லடம்பு தும்பை
புதியமதி நதியிதழி பொருந்த வைத்த
சேவேந்து வெல்கொடியா னடிச்சார்ந் தார்கள்
செப்பியவப் பாலுமடிச் சார்ந்தார் தாமே. க

புராணம் :—இனி, நிறுத்த முறையானே, பதினொன்றாவது, பத்தராய்ப் பணி வார் சருக்கத்துள், ஏழாவது அபபாலும் அடிச்சார்ந்தாரின் பண்களைக் கூறும் பகுதி.

தொகை :—பொழிப்பு உரைத்துக் கொள்க.

அப்பாலும் - இடத்தாலும் காலத்தாலும் அப்பாற்பட்ட என்பது விரிநூல் இதனைப் பொருள் செய்தவாறு.

வகை :—வருக்கம் அடைத்து - வரிசைப்பட அடைவு படுத்தி ; நன்ஞவலூர் மன்னவன்...தொகை - நல்ல நாவலூர்த்தலைவராகிய நம்பிகள் வளப்பமுடைய தமிழினாற் பெருகக் கூறிய அந்த இனிமையான திருத்தொண்டத் தொகையின் கண்ணே ; பிறை சூடிதன்...அவர் - பிறையினைச் சூடியவராகிய இறைவரது பெய் கழலுக்கே ஒருப்பட்ட மனத்துடன் அப்பாலும் அடிசார்ந்தவர் என்று உலகில் விளங்க உரைத்த அவர்கள் ; சிவன்...செழுந்தவரே - சிவனது பல்கணத்தோர் களாகிய நமது உயர்ந்த தவத்தை உடையவர்களேயாவர்.

வருக்கம் - வரிசை ; அடைத்தல் - அடைவுபடக் கூறுதல்; பெருக்கு அம்மதுரத் தொகை - என்க ; அகரம் பண்டறிசுட்டு ; மதுரத்தொகை - திருத்தொண்டத் தொகை ; பெருக்குதலாவது அளவுபடாத தொகை யடியார்களை எடுத்துக் கூறுதல் ; தொகையடியார்களின் முடிபு காட்டுமிடமாதல் குறிப்பு ; பண்பு கூறிப் பெருகச் செய்தல் ; கழற்கே ஒருக்கு மனத்தோடு - சார்ந்தவர் என்று கூட்டுக ; கழற்கே - உருபு மயக்கம்; தொகை என்று-தெரிக்கும் என இயைக்க ; பெய்-கட்டிய; அணிந்த ; கழல் - கழலையணிந்த திருவடிக்கு வந்தது ; பெருக்கும் - என்றதனால் அப்பாலும் - என்றதற்கு இடத்தால் அப்பால் என்றும், காலத்தால் அப்பால்-முன்னும் பின்னும் - என்றும் இதனைப் பெருக உரைத்தது விரிநூல் ; இவ்வாறன்றி ஒருக்கு மனத்தோடு என்றதனை நாவலூர் மன்னவனுடன் கூட்டி உரைத்தனர் முன் உரைகாரர் ; ஒருக்கு மனத்தோடு சார்ந்தவர் - என்க ; சார்புணர்ந்து சார்பு கெட ஒழுகுதல் ; அப்பாலு மடிச்சார்ந்தார்கள் எனப்படுவோர் தவமுதிர்ச்சியினாற் சிவகணத்தோரேயாவர் என்பது. மதுரம் - இனிமை ; இன்பம் ; பேரின்பம்.

விரி :—4169 ; (இ - ள்) மூவேந்தர் ...முறைமையோரும் - மூவேந்தர்களது தமிழ் வழங்கும் நாடுகளுக்கு அப்பால் சிவபெருமானாரது அடியினைச் சார்ந்த முறைமையினர்களும் ; நாவேய்ந்த...பின்னும் - நம்பிகளது தெய்விக நாவின்கட் பொருந்திய திருத்தொண்டத் தொகையிலே துதிக்கப்பட்ட திருத்தொண்டர்களாகிய தனியடியார்களின் காலத்துக்கு முன்னும் அதன் பின்னும் ; பூவேய்ந்த...அடிச் சார்ந்தாரும் - பூக்கள் பொருந்திய நீண்ட சடையின் மேலே அடம்பு மலரும் தும்பை மலரும் கங்கையும் கொன்றையும் பொருந்தும்படி சூடிய, இடபத்தைப் பொறித்த வெற்றி பொருந்திய கொடியினையுடைய சிவனது திருவடியிற் சார்ந்தார்களும் ; செப்பிய...தாமே - சொல்லப்பட்ட அப்பாலு மடிச்சார்ந்தார் எனப் பெற்றவர்கள் தாமே யாவர்.

(வி - ரை) மூவேந்தர் தமிழ்வழங்கு நாடு - என்றது, தமிழ் வழங்காத நாடுகளும் மூவேந்தர் கீழ் நின்றன வாதலின் அவற்றுள் தமிழ் வழங்கு நாட்டை வேறு பிரித்து ஓதினர். பிறிதினியைபு நீக்கிய விசேடணம்.

தமிழ்வழங்கு நாட்டினை வேறு தனியாகக் கூறினமை திருத்தொண்டத் தொகையுள் போற்றப்பட்ட அடியார்கள் பெரும்பான்மையும் தமிழ் வழங்கு நாட்டினுட் சேர்ந்தவர்களாதலின் என்க ; தமிழ் வழங்கும் நாடல்லாத பிறமொழி வழங்கும் 17 நாடுகளிலும் சிவனடிச் சார்ந்த தொண்டர்களுண்டு என்பதாம் ; இவர்கள் இடத்தால் அப்பாலும் அடிச்சார்ந்தார். இவை சிங்கள முதலாகக் கூறப்படும்.

திருத்தொண்டத் தொகை...முன்னும் பின்னும் என்பது காலத்தால் அப்பாலும் அடிச்சார்ந்தார்களைக் குறித்தது. காலத்தாலும் பெரும்பான்மை பற்றி அடியார்கள் திருத்தொண்டத் தொகையுட் டனித்தனி எடுத்துக் கூறப்பட்டார்கள். முன் - இறந்த காலத்தினையும், பின் - என்பது எதிர்காலத்தினையும் உணர்த்த நிறுத்தித் திருத் தொண்டத் தொகையுட் போற்றப்பட்ட அடியார்களின் காலத் தொகுதியை நிகழ் காலமாக வைத்து, முக்காலத்தும் என விரித்த நிலை கண்டு கொள்க.

அப்பாலும் - இடத்தாலும் காலத்தாலும் அப்பால் என்று விரிநூலுள் உரை விரித்தனர் ஆசிரியர். சைவத்தின் பரந்த முற்றிய நிலையினை நாட்டிக் காட்டியருளுவது இத்திருப்பாட்டு.

அடிச்சார்ந்தார் - திருவெண்காட்டடிகள் முதலாயினோர். இப் பாட்டால் சைவத்தின் சமரசம் நன்கு விளங்குதல் காண்க என்றும், சைவத்தைத் தமிழ்

நாட்டளவில் கட்டி ஆளக்கருதும் கண்முடிகள் இப்பாடலைப் பன்முறை உற்று நோக்கி உண்மை யுணர்வார்களாக என்றும் இங்கு விசேட ஆராய்ச்சியுரை காண்பாரு முண்டு. சமரசம் என்ற உரைப் பொருளுக்கு ஈண்டு ஒரு தொடர்பு மில்லை. பொருளிரண்டாயினன்றோ சமரசம் காணலாம்; இங்குத் தமிழ் வழங்கு நாட்டுக்கப்பாலும் சிவனடிச்சார்ந்தோர் உண்டு என்பது தான் கருதிய பொருள். தமிழ் நாட்டுக்கப்பாலும் சிவனடிச்சார்ந்தோர் உள்ளார் என்றதனால் அங்கு உள்ளார் எல்லாரும் சிவனடிச்சார்ந்தோர் என்றாவது, அங்குள்ளன வெல்லாம் சைவநெறி என்றாவது ஆகாது; அந்நாடுகளிலுள்ள கிறித்துவம், பௌத்தம், சமணம் முதலிய புறச்சமயங்கள் எல்லாம் சைவமே என்னவும் வாராது; அவை, ரூபாவில் பைசா அணுக்கள் போல, இலைமறைகாய்கள் போலச் சைவ உண்மைகள் சிலவற்றைக்காட்டி னால் அது கொண்டு அவை முழுமைச் சைவத்தோடொப்பன என்றலும் ஆகாது. அன்றியும் அமெரிக்கா, சாவகம், கடாரம் முதலிய புறநாடுகளிலும் மிகப் பழங்காலங் களில் சிவலிங்க வழிபாடு இருந்த அடையாளங்கள் இப்போதும் காணப்படுகின்றன என்பது சரித ஆராய்ச்சியாளர்கள் கண்டவுண்மை. இனிச் சமரசம் என்பது உண்மைப் பொருளில்லாத நிலையில் ஈண்டு வழங்கப்பட்டுள்ளது; எவ்வெப் பொருளையும் அவ்வ வற்றின் தகுதிக் கேற்பப் படிமுறையில் (சோபான பட்சம்) வைத்து நிறுத்திக் காணுதலே சமரசம் என்பதன் உண்மைப் பொருளாம். இப்படிக்கன்றிக் காண்பன வெல்லாம் சமமே என்பது குருட்டுச் சமரசமேயாதும். இனி, எம்மொழியோ எந்நாடோ யாண்டிருப்பினும் சைவத்தின் மெய்ப்பொருணிச்சயம் கொண்டதுவே சைவமாவது என்பது "அப்பால் முதல்வன ரடிச்சார்ந்த முறைமை யோரும்" என்றத னாலும், "சேவேந்து வேல்கொடியா னடிசேர்ந்தார்" என்றதனாலும் விளக்கப் பட்டது. "சிவன் கழற்கே ஒருங்கிதுமனந் தொடு" என்ற வகைநூலும் காண்க. இவற்றை யெல்லாம் விடுத்துக், காலமும் இடமும் கூறி அப்பால் என்ற துணையானே, தமிழ் நாட்டின் மேல் உள்ளன வெல்லாம் சைவத்தின் முடிந்த திறமே யாம் என்று முடிப்பது உண்மை யுணராதார் கூற்றேயாம். அன்றியும், "பேசி லத்திசை யெவ்வா பிறதிசை" (46) என்ற திருவாக்கின் கருத்தும் உணரத் தக்கது. இக்கூறியவை யெல்லாம் எண்ணும்போது கண்மூடிகள் யாவர் என்பது போதரு மென்று விடுக்க.

தமிழ் விளங்த - என்பதும் பாடம். 1

அப்பாலு மடிச்சார்ந்தார் புராணம்-பண்பு - மூவேந்தர்களது தமிழ் வழங்கும் நாட்டுக்கு அப்பாற்பட்ட நாடுகளிலும், திருத்தொண்டத் தொகையிற் போற்றப்பட்ட அடியார்களது காலத்துக்கு முன்னும் பின்னும் சிவபெருமானது அடிச்சார்ந்தவர்கள் அப்பாலு மடிச்சார்ந்தார் எனப்படுவார்கள்.

கற்பனை :—(1) மூவேந்தர் தமிழ் வழங்கு நாட்டுக்கப்பாலும் சிவனடிச் சார்ந்தவர்கள் நம்மால் வணங்கப்படுபவராம்.

(2) திருத்தொண்டத்தொகையிற் றனித்தனி போற்றப்பட்ட அடியார்களின் காலத்துக்கு முன்னும் பின்னும் சிவனடிச்சார்ந்தவர்கள் நம்மாற் போற்றப்படுதற் குரியவர்கள்.

(3) சிவனடியார்களின் தொகுதி காலத்தையும் இடத்தையும் கடந்தது; எக்காலத்திலும் எவ்விடத்திலும் நிகழ்வது சிவனடிமைத் திறம்.

அப்பாலும் அடிச்சார்ந்தார் புராணம் முற்றும்.

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# சுந்தரமூர்த்தி நாயனார் துதி

தொகை

" ஆரூர னாரூரி லம்மானுக் காளே "

—திருத்தொண்டத்தொகை - (10)

வகை

செழுநீர் வயன்முது குன்றினிற் செந்தமிழ் பாடிவெய்ய
மழுநீள் தடக்கைய னீந்தபொன் னாங்குக்கொள் ளாதுவந்தப்
பொழினீ டருதிரு வாரூரில் வாசியும் பொன்னுங்கொண்டோன்
கெழுநீள் புகழ்த்திரு வாரூ ரனென்றுநாங் கேட்பதுவே.

—திருத்தொண்டர் திருவந்தாதி - (77)

விரி

4170. செற்றார்தம் புரமெரித்த சிலையார் செல்வத்
திருமுருகன் பூண்டியினிற் செல்லும் போதிற்
சுற்றாருஞ் சிலைவேடர் கவர்ந்து கொண்ட
தொகுநிதியின் பரப்பெல்லாஞ் சுமந்து கொண்டு
முற்றாத முலையுமையாள் பாகன் பூத
முதற்கணமே யுடன்செல்ல முடியாப் பேறு
பெற்றார்தங் கழல்பரவ வடியேன் முன்னைப்
பிறவியினிற் செய்ததவம் பெரிய வாமே. உ

தொகை :—பொழிப்பு உரைத்துக்கொள்க.

வகை :—செழுநீர்...பாடி-செழிப்புடைய வயல்கள் சூழ்ந்த திருமுது குன்றில் செந்தமிழ்ப்பதிகம் பாடி (அதற்குப் பரிசிலாக) ; வெய்ய...பொன் - விரும்பத்தக்க மழுவினை யேந்திய பெரிய கையினையுடைய இறைவர் ஈந்த பொன்னினை ; ஆங்குக் கொள்ளாது வந்து - அங்குப் பெற்றுக்கொள்ளாமல் போந்து ; அப்பொழில்நீள்... கொண்டோன்-பொழில்கள் சூழ்ந்த திருவாரூரிலே மாற்று நிறைவையும் அப்பொன் னினையும் பெற்றவர் ; கெழுநீள்...கேட்பதுவே - செழிப்புடைய நீண்ட புகழ்களை யுடைய நம்பியாரூரர் என்பது நாம் பெரியோர் சொல்லக் கேட்டறிகின்ற உண்மை.

இது நம்பிகள் திருமுதுகுன்றத்தில் இறைவரைப் பாடிப் பெற்ற பன்னிரண் டாயிரம் பொன்னையும் பெருமானை வேண்டி அங்குத் திருமணிமுத்தாற்றினிலிட்டுத்

திருவாரூர்க் குளத்தில் அவர் திருவருளாற் பெற்றதுவும், அவ்வாறு பெறும் போது மாற்றுக் குறைய அதனையும் நிறையத் திருவருளாற் பெற்றதுமாகிய வரலாறுகளைக் குறித்தது. (ஏயர்கோன் - புரா - 104/3251 - 105/3264 ; ஷை 127/3281 - 137/3291 ; பாட்டுக்கள் பார்க்க.) வேய்ய - விரும்பத்தக்க ; வேய்மை விருப்பம் ; அடியாரிடுக்கண்களைப் போக்கும் படையாதலின் விருப்பம் விளைப்பதென்க ; வெம்மையாகிய கொடிய என்பாரு முண்டு. கோள்ளாது - பெற்றவுடன் எடுத்துக் கொண்டு போகாமல் ; வாசி - மாற்றுக் குறைவு ; ஈண்டு அதனை நிறைவாக்குதல் குறித்தது; கேட்பது-அறிந்தார் சொல்லக் கேட்பது. வேய்ய·பொன் என்று கூட்டி உரைப்பதுமாம்.

விரி :—4170. (இ - ள்) செற்றார்தம் ..போதில் - பகைவர்களது திரிபுரங் களை எரித்த மலை வில்லை ஏந்திய சிவபெருமானது செல்வ நிறைந்த திருமுருகன் பூண்டியின் வழியிற் போகும்போது ; சுற்றாரும்...எல்லாம் - சுற்றி நிறைந்த வில் வேடர்கள் பறித்துக் கவர்ந்து கொண்ட மிக்க நிதியின் சுமைகளை யெல்லாம் ; சுமந்து...உடன் செல்ல-என்றும் இளமுலை நாயகியாராகிய உமை அம்மை பங்கரது முதன்மையுடைய பூதகணங்கள் தாமே சுமந்து கொண்டு உடன் போதும்படி ; முடியாப் பேறு...ஆமே - அளவற்ற பெரும் பேற்றினைப் பெற்ற நம்பியாரூரரது திருவடிகளைத் துதிக்க அடியேன் முன்னைப் பிறவிகளிற் செய்த தவங்கள் மிகப் பெரியனவாகும்.

(வி - ரை) முன் பல பிறவிகளிலும் செய்த பெரிய தவங்கள் பலவற்றின் பயனாலன்றி நம்பிகளது கழல்பரவும் பேறு வாய்க்கப் பெறாதென்பது.

செல்வத் திருமுருகன் பூண்டியினில் - வேடுவர் உருவொடு சிவகணங்கள் வந்து நிதி பறித்தது செல்வமின்மையாலன்று ; தாமே மிக்க செல்வமுடையார் என்பது குறிப்பு ; "வாங்கிப் பின் கொடுப்பதற்கோ" (3912) என்று குறித்தல் காண்க.

வேடர் - வேடர் வடிவில் வந்த சிவகணங்கள்.

முற்றாத முலையுமையாள் - தல அம்மை பெயர். "ஏந்து பூண் முலைமங்கை" (பதிகம்).

கணமே - ஏகாரம் தேற்றம் ; உடன் செல்ல - ஏந்தித் துணை போத.

முடியா - அளவுபடாத ; பெற்றீ - நம்பிகள் ; வினையாலணையும் பெயர்.

தவம் - சாதி யொருமை.　　2

64. அப்பாலும் அடிச்சார்ந்தார் புராணம் முற்றும்.

11. பத்தராய்ப் பணிவார் சருக்க முற்றும்.



சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# மன்னியசீர்ச் சருக்கம்

திருச்சிற்றம்பலம்

" மன்னியசீர் மறைநாவ னின்றவூர்ப் பூசல்
வரிவளையாண் மானிக்கு நேசனுக்கு மடியேன்
தென்னவனா யுலகாண்ட செங்கணார்க் கடியேன்
திருநீல கண்டத்துப் பாணனார்க் கடியேன்
என்னவனா மரனடியே யடைந்திட்ட சடையன்
இசைஞானி காதலன் றிருநாவ லூர்க்கோன்
அன்னவனா மாரூர னடிமைகேட் டுவப்பார்
ஆரூரி லம்மானுக் கன்பரா வாரே."

—திருத்தொண்டத் தொகை - (11)

திருச்சிற்றம்பலம்

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# 65. பூசலார் நாயனார் புராணம்

தொகை

" மன்னியசீர் மறைநாவ னின்றவூர்ப் பூசல்
(வரிவளையாள் மானிக்கு நேசனுக்கு) மடியேன் "
—திருத்தொண்டத் தொகை - (11)

வகை

" பதுமநற் போதன்ன பாதத் தரற்கோரு கோயிலையான்
கதுமெனச் செய்குவ தென்றுகொலா ? " மென்று கண்டுயிலா
ததுமனத் தேயெல்லி தோறு நினைந்தருள் பெற்றதென்பர்
புதுமணற் றென்ற லுலாநின்ற வூர்தனிற் பூசலையே"
—திருத்தொண்டர் திருவந்தாதி - (78)

விரி

4171. அன்றினார் புரமெரித்தார்க் காலய மெடுக்க வெண்ணி
யொன்றுமங் குதவா தாக "வுணர்வினா லெடுக்குந் தன்மை
நன்"றெனா மனத்தினாலே நல்லவா லயந்தான் செய்த
நின்றவூர்ப் பூச லார்தம் நினைவினை யுரைக்க லுற்றும். க

சருக்கம் :—இனி, நிறுத்த முறையானே, பன்னிரண்டாவதாக "மன்னியசீர்" என்று தொடங்கும் திருத்தொண்டத் தொகைப் பாசுரத்திற் போற்றும் அடியார்களின் வரலாறு கூறும் பகுதி.

புராணம் :—பன்னிரண்டாவது மன்னியசீர்ச் சருக்கத்துள் முதலாவது பூசலார் நாயனாரது வரலாறும் பண்பும் கூறும் பகுதி.

தொகை :—நிலைபெற்ற சிறப்பினையுடைய, வேதமோதும் வாக்கினையுடைய, திருநின்றவூரில் அவதரித்த பூசலார் நாயனாருக்கும் (வரிவளை யணிந்த மானியார் என்னும் மங்கையர்க்கரசி யம்மையாருக்கும் நேச நாயனாருக்கும்) அடியேனாவேன்.

மன்னியசீர்ப் - பூசல் என்று கூட்டுக. மன்னிய சீராவது புறப்பூசையினும், நிலைபெற்ற உறைப்புடைய அகப்பூசைத் தொழில் சிறப்புடையது என்று உலகினுக்கு இறைவர் காட்டியருளக் கருவியாயமைதல் ; நாவன் - வாக்கினையுடையவன்; " மறைபயி றிப்பிய வாசகன் " (திருமுறை - ஆளுடைய பிள் - கலம் - 9) ; நின்றவூர் - நாயனாரது பதி ; பூசல் – நாயனாரது பெயர். இங்குத் தொகை நூலுள் ஓரடியிற்பாதியில் மூன்று நாயன்மாரைப் போற்றிய சிறப்புக்குறிக்க.

வகை :—பதும... என்று - தாமரையின் நல்லமலர் போன்ற பாதத்தையுடைய சிவனுக்கு ஒரு கோயிலை யான் விரைவாக அமைப்பது எப்போது என்று கவன்று; கண்டுயிலாது...என்பர் - கண் உறக்க மின்றி அதனையே பகலுமிரவும் தமது மனத்தில் நினைந்து அந்நினைப்பினாலே கோயில் எடுத்துத் திருவருளினைப் பெற்றது என்று எடுத்துக் கூறுவர்; புது...பூசலையே - புதிய மணற் கானல்வழியே தென்றற் காற்று வந்து வீசுதற்கிடமாகிய திருநின்றவூரில் வந்த பூசலார் நாயனாரையே.

கோயிலைச் செய்தவதென்று கோலாம்-நிதியின்மையால் கோயில் அமைக்க வழியின்றி வேறு எவ்வாற்றானமைப்பேன் என்று கவலைப்பட்ட நிலை; கண்துயிலாது... நினைந்து—தூக்கமின்றி அப்பொருளையே நாள்தோறும் எண்ணி; எல்லி-பகல்; இங்கு நாள்என்ற பொருளில் வந்தது. எல்லி தோறும்-நாடோறும்; நினைந்து-நினைப்பினாற் கோயில் அமைத்து; "நினைவினை" (4171) என்பது விரிநூல்; பூசலைப்(பற்றி) - நினைந்தருள் - பெற்றது - என்பர் என்று கூட்டுக. நினைந்து — பெற்றது என்க.

ஊரும் பேரும் பண்பும் தொகைநூல் பேசிற்று; இவற்றுடன் வரலாறும் வகைநூல் வகுத்தது.

விரி :—4171. (இ - ள்) அன்றினர்...எண்ணி - பகைவர்களுடைய புரங்களை எரித்த சிவபெருமானுக்கு ஒரு கோயில் அமைக்க எண்ணி; ஒன்றும் அங்கு உதவாதாக - அதற்கு வேண்டும் நிதி ஒரு சிறிதும் அங்குக்கிடையாமற் போக; உணர்வினால்... என - நினைப்பினாலே அமைத்தலே நல்ல பணியாகும் என்று உட்கொண்டு; மனத்தினாலே...உற்றாம் - மனத்தினாலே நல்ல கோயிலை அமைத்த திருநின்றவூரில் வந்த பூசலாருடைய நினைப்பினாலாகிய வரலாற்றினைச் சொல்கின்றோம்.

(வி - ரை) அன்றினர் - பகைவர்; "அன்றின ரரியென வருபவர்" (பிள்-வீழி-வியாழக்கு - திருவிரா — 6); எடுத்தல் - அமைத்தல்; கட்டுதல்; ஒன்றும் - பொருள் ஒரு சிறிதும்; முற்றும்மை.

உதவாதாக - பெறாது போக.

உணர்வினால் எடுக்கும் - மனத்தின் நினைத்தலாலே அமைக்கும்; நன்று — இதுவே சிறந்ததாகச் செய்யத்தகுந்தது.

மனத்தினாலே...செய்த-மனத்தின் செயலாற் கோயில் அமைத்த; மனத்தினாலே-செய்த என்று கூட்டுக.

நினைவினை - நினைப்பினாற் செய்த திருப்பணியினை; இப்பாடல் சில பிரதிகளில் இல்லை.

எடுக்க வேண்டி — என்பதும் பாடம். 1

4172. உலகினி லொழுக்க மென்று முயர்பெருந் தொண்டை நாட்டு
நலமிகு சிறப்பின் மிக்க நான்மறை விளங்கு மூதூர்
குலமுதற் சீல மென்றுங் குறைவிலா மறையோர் கொள்கை
நிலவிய செல்வ மல்கி நிகழ்திரு நின்ற வூராம். ௨

(இ - ள்) உலகினில்...நாட்டு - இந்நிலவுலகில் நல்லொழுக்கம் எக்காலத்திலும் உயர்ந்து ஓங்கும் பெருமை யுடைய தொண்டை நாட்டிலே; நலமிகு...மூதூர் - நலம் மிக்க சிறப்புடைய நால்வேதங்களும் விளங்குதற் கிடமாகிய பழைய ஊராகும்; குலமுதல்...திருநின்ற ஊராம் - குலத்திற்கு முதன்மையாகிய ஒழுக்கம் எந்நாளும் குறைவில்லாத மறையவர்கள் தமது கொள்கையின் நிலைநின்ற செல்வம் நிகழ்கின்ற திருநின்ற ஊராகும்.

(வி - ரை) முதூர் - திருநின்றவூராம் என்ற கூட்டுக.

ஒழுக்கம் — நல்லொழுக்கம்; "தொண்டை, நன்னாடு சான்றோ ருடைத்து" என்பது பழமொழி. "தீய வென்பன கனவிலு நினைவிலாச் சிந்தைத், தூய மாந்தர் வாழ் தொண்டை நாடு" (1124) என்று ஆசிரியர் இந்தன்மைகளை யெல்லாம் தொகுத்துக் கூறியது இங்கு நினைவு கூர்தற்பாலது. தொண்டை நாட்டினைப்பற்றி இப்புராணத்துள் முடிந்த நிலையிற் கூறும் இடம் இதுவாதலின் இவ்வாறு இங்குத் தொகுத்துக் கூறினார்.

தொண்டைநாட்டு-முதூர் என்க. நான்மறை விளங்கும் - இப்புராண முடைய நாயனாரது மரபுபற்றி இத்தன்மையினை விதந்து கூறினார்.

குலமுதற்சீலம் என்பது "பார்ப்பான் பிறப்பொழுக்கம்" (குறள்).

கோள்கை நிலவிய செல்வம் - கோள்கை என்பது உயிரின் மேம்பாடு பற்றிய குறிக்கோள்; நிலவுதல்-அக்குறிக்கோளிற் பிறழாத முயற்சியுடைமை; இந்நாயனாரது வரலாற்றின் வைத்துக்காண்க.

நிலவிய செல்வம் மல்கி நிகழ் — என்றது திருநின்ற என்ற வூர்ப்பெயரின் காரணப்பொருள் பற்றி விளக்கியவாறு; "திருவாரூர்" (1277) முதலியவை போலக் காண்க; இது தின்னனூர் என வழங்குகின்றது (இரயில்பாதை நிலையம்).

என்னும் — விளக்கு—என்பனவும் பாடங்கள். 2

4173. அருமறை மரபு வாழ வப்பதி வந்து சிந்தை
தருமுணர் வான வெல்லாந் தம்பிரான் கழன்மேற் சார
வருநெறி மாறு வன்பு வளர்ந்தெழ வளர்ந்து வாய்மைப்
பொருள்பெறு வேத நீதிக் கலையுணர் பொலிவின் மிக்கார். ௩

(இ - ள்) அருமறை...வந்து - அரிய வைதிக மரபு வாழும்படி அப்பதியிலே அவதரித்து; சிந்தை...சார - சித்தத்திலே வரும் உணர்வுகள் எல்லாம் சிவபெருமான் திருவடியிலே சாரும்படி; வருநெறி...வளர்ந்து-வரும் வழியினின்றும் பிறழாத அன்பு வளர்ந்தோங்கத் தாமும் வளர்ந்து; வாய்மை...மிக்கார்-உண்மைப் பொருளைப் பெறுதற்கேதுவாகிய வேதநீதிக் கலைகளை உணர்கின்ற விளக்கத்தின் மிகுந்தனர்.

(வி - ரை) மறை மரபு — வேதியர் குலம்; வந்து — அவதரித்து.

அன்பு வளர்ந்தெழ வளர்ந்து - பிறந்த போதே சிவன்பா லன்புடன் தோன்றி அதனோடு மேன்மேல் வளர்ந்து; பூசல்- அன்பு; பூசலார் - காரணப் பெயர்.

வாய்மைப்பொருள் - மெய்ப்பொருள்; பெறுதல் - பெறுவித்தல்.

கலையுணர் பொலிவு - உணர்தலான் மிக்க விளக்கம். இது கலைகளை உணர்ச்சியிற் கொண்டொழுகுதலால் வரும் ஞான விளக்கம்.

உணர்வான எல்லாம்-என்றதனாற் சொல்லும் செயலும்உடன் கொள்ளப்படும். 3

4174. "அடுப்பது சிவன்பா லன்பர்க் காம்பணி செய்த" லென்றே
கொடுப்பதெவ் வகையுந் தேடி யவர்கொளக் கொடுத்துக் கங்கை
மடுப்பொதி வேணி யையர் மகிழ்ந்துறை வதற்கோர் கோயில்
எடுப்பது மனத்துட் கொண்டா ரிருநிதி யின்மை யெண்ணார். ௪

(இ - ள்) அடுப்பது...என்றே - சிவனுக்கும் அவனன்பர்க்கும் தமக்கு ஆகும் பணிகளைச் செய்தலே தக்கதாம் என்றே துணிந்து; கொடுப்பது...கொடுத்து-கொடுப்ப

தற்காக எவ்வகையாலும் பொருளைத் தேடி அவ்வடியவர்கள் கொள்ளும்படி கொடுத்து ; இருநிதியின்மை எண்ணார் - கோயில் அமைப்பதற்குப் பெருந்திரளான செல்வம் தம்மிடம் இல்லாமையை எண்ணாதவராய்; கங்கை...மனத்துக் கொண்டார் - கங்கை வெள்ளம் நிரம்பிய சடையினையுடைய இறைவர் மகிழ்ந்து எழுந்தருளியிருப்பதற்கு ஒரு கோயிலைக் கட்டும் செயலை மனத்துட் கருதினார்.

(வி - ரை) அடுப்பது - செய்யத்தக்கது ; பணி - பணிகளின் தொகுதி.

சிவன்பாலன்பர்க்கு - சிவன்பாலும் அன்பர்க்கும் என்க. இவ்வாறன்றி சிவனிடத்தன்பு பூண்ட அடியவர்க்கு என்று ஒன்றாகக் கூட்டியுரைப்பினுமமையும்.

அடுப்பது - இதுவே மக்கட் பிறப்புக்கு அடுப்பது; ஏனைய வெல்லாம் அடாதன. 1832 - 2985 - பார்க்க.

என்றே - என்றே துணிந்து ;

கொடுப்பது - அடியார்க்குக் கொடுக்கும் பொருளை ; எவ்வகையும் - தம்மாலியன்ற எவ்வகையாலும். அவர் - அன்பர்.

கங்கை மடு - கங்கை வெள்ளம்; மடு - ஆழமாகிய பெரிய நீர்நிலை; போதிதல் - நிறைதல்.

கோயில் எடுப்பது - எடுத்தல் - அமைத்தல் ; கட்டுதல் ; எடுப்பதனை என்று இரண்டனுருபு விரிக்க.

இருநிதி - கோயில் அமைத்தற்கு வேண்டும் பெரும் செல்வம்' 4179 - பார்க்க. இன்மை – தம்பால் இல்லாமையினை ; இரண்டனுருபு விரிக்க.

எண்ணார் - எண்ணாதவராகி; முற்றெச்சம். எண்ணார் - மனத்துட்கொண்டார் – என்று கூட்டுக. கோயில் எடுக்கும் திருப்பணிக்கு இருநிதி முதலில் வேண்டப்படுவது என்ற உண்மையை ஆர்வ மிகுதியினால் நினையாது. 4

4175. மனத்தினாற் கருதி யெங்கு மாநிதி வருந்தித் தேடி
எனைத்துமோர் பொருட்பே றின்றி "யென்செய்கே" னென்று
நினைப்பினா லெடுக்க நேர்ந்து நிகழ்வுறு நிதிய மெல்லாந் [நைவார்
தினைத்துணை முதலாத் தேடிச் சிந்தையாற் றிரட்டிக் கொண்டார். ௫

(இ - ள்) மனத்தினால்...தேடி - பொருள் தேடிப்பெறும் இடங்களை மனத்தினால் கருதி எங்கும் பெருநிதியினை வருந்தித் தேடியும் ; எனைத்தும்...நைவார் - எவ்வாற்றினும் ஒரு சிறிதும் பொருளைப் பெறும் நிலை கிட்டாமல் "இனி என் செய்வேன்" என்று வருந்துவாராகி ; நினைப்பினால் எடுக்க நேர்ந்து - நினைவினாலே கோயில் எடுப்பதனைத் துணிந்துகொண்டு ; நிகழ்வுறும்...திரட்டிக் கொண்டார் - செயல் நிகழ்வதற்குற்ற நிதியங்களை எல்லாம் தினை அளவுள்ள சிறிது சிறிது அளவாகத் தேடி மனத்தினாற் சேர்த்துக் கொண்டனர்.

(வி - ரை) மனத்தினாற் கருதி - பொருள் பெறும் இடங்களையும் வகைகளையும் மனத்திற்றேர்ந்துகொண்டு ; தேடி - தேடியும் ; எனைத்தும் – எவ்வாற்றானும்; ஓர் - ஒரு சிறிதும் ; பொருட்பேறு - பொருள் பெறும் நிலை. நைவார் - நைதல் - மனம் மிக வருந்துதல். நேர்ந்து - துணிவு பூண்டு. தினைத்துணை - தினையின் அளவு ; முதலான - சிறிது சிறு அளவாக. "தினைத்துணை யுள்ளதோர் பூவினிற்றேன்" (திருவா). "தினைத்த னைப்பொழு தும்மறந் துய்வனோ" (அரசு) ; தினை(பனை) என்பன சிறுமை பெருமைகட்கு எடுத்துக் காட்டும் அளவு (பரிமே); நாயனாரின் முயற்சியின் பெரிய அளவு காட்டத் "தினைத்துணை முதலா" என்றார்.

திரட்டி - ஒன்று சேர்த்து ; வேண்டும் நிதியம் முற்றும் சேகரித்துக் கூட்டி.

மனத்தினாற் - தேடி - நைவார் - பொருள் வளமில்லாதார் பணி செய்யப் புகின் உலகம் ஆதரிக்காது வருந்தச் செய்யும் என்னுமியற்கை குறித்தது. ஏன் ? பொருள் வளமுள்ளார் தேடினும் உலகர் பணம் மனமுவந்து சிவன் பணிக்குதவ முன்வாராது கண்கூடன்றோ ? நைவார் - நைவாராகி ; முற்றெச்சம் ; நைவாராகிய நாயனார் என்று வினைப்பெயராக வுரைப்பினுமாம்.

மனத்தினாற் றிரட்டிக் கொண்டு - செல்வம் திரட்டுதல் மனத்தின் றொழிலிற் றொடங்கும். அது முற்றினால் புறச் செல்வம் விளையும். ஈண்டு நாயனார் அகச் செல்வமே ஆணிவேர் என்பதனை உணர்ந்து அதனைத் தேடி அமைத்தார். அகத் தொழிலே வினைவிளைவுக்குக் காரணமாகும் தன்மை திருமலைச் சிறப்பிற் காண்க. 5

4176. சாதனத் தோடு தச்சர் தம்மையு மனத்தாற் றேடி
நாதனுக் கால யஞ்செய் நலம்பெறு நன்னாட் கொண்டே
ஆதரித் தாக மத்தா லடிநிலை பாரித் தன்பாற்
காதலிற் கங்குற் போதுங் கண்படா தெடுக்க லுற்றார். சு

(இ - ள்) சாதனத்தோடு...தேடி - கோயில் கட்டுதற்குரிய சாதனங்களோடு தச்சர்களையும் மனத்தினாற் றேடிக்கொண்டு ; நாதனுக்கு...நன்னாட் கொண்டே - இறைவருக்குக் கோயில் செய்தற்குரிய நன்மை பெறும் நல்ல நாளும் வேளையும் குறிக்கொண்டு ; ஆதரித்து ..பாரித்து - விரும்பி ஆகம விதிப்படி அடிநிலை எடுத்து ; அன்பால்...எடுக்கலுற்றார் – அன்பின் நிறைவினாலே ஆசை மிகுந்து இரவினும் உறங்காமல் கோயில் எடுக்கலாயினார்.

(வி - ரை) சாதனம் - கோயில் எடுப்பதற்கு வேண்டும் கல் - மண் - சுண்ணம் - மரம் முதலாயின.

தம்மையும் - தேடி - முன் பாட்டிற் பொருள் தேடியது பற்றிக் கூறியவாறே என்று இறந்தது தழுவிய எச்சவும்மை.

தச்சர் – கல் - மண் - மரமிவற்றாற் கோயில் எடுக்கும் பணியாளர் ; சிற்பிகள்.

நலம்பெறும் நன்னாட்கொண்டே – நன்மை பெறுவிக்கும் நன்னாளும் ஓரையும் நிச்சயித்து அந்நாளில் அவ்வேளையில் தொடங்கி ;

ஆலயம் செய்நாள் – ஆலயப் பணிக்குரிய நாள் ; செய் - கட்டுதற்குரிய.

நலம் பெறும் - நலத்தினைப் பெறுவிக்கும் ; செய்யும்.

கொண்டே – ஏகாரம் தேற்றம்.

ஆகமத்தால் - கோயிற் சிற்பமும் கணிதமும்பற்றிச் சிவாகமங்களிற் கூறும் விதியின்படி அளவு முதலியவை கண்டு ; மேல் வரும் பாட்டுக்களில் உரைப்பனவும் சிவாகமங்களில் விதித்த கோயிற் சிற்ப அமைப்புக்கள்.

அடிநிலை – கடைகால் ; அஸ்திவாரம் என்பர் ; பாரித்தல் - பரப்புதல் – கால் கொள்ளுதல்.

அன்பால் - காதலில்-ஆலயம் எடுத்தல் அன்பினாலும், அதனைக் கங்குல் போதும் கண்படாதெடுத்தல் காதலாலும் ஆவன. காதல் - ஆசை; விரைவில் எடுத்து முடித்துக் காணும் ஆசை ; முறுகிய அன்பினால் விளைவது ஆசை.

கங்குற்போதும் - உயிர்கள் எல்லாம் கண்படும் கங்குலிலும் என உம்மை சிறப்பு. பகற் போதில் ஓய்வின்றி எடுப்பதன்றிக் கங்குலிலும் என இறந்தது தழுவிய எச்சமுமாம். 6

4177. அடிமுத லுபான மாதி யாகிய படைக ளெல்லாம்
வடிவுறுந் தொழில்கண் முற்ற மனத்தினால் வகுத்து மான
முடிவுறு சிகரந் தானு முன்னிய முழத்திற் கொண்டு
நெடிதுநாள் கூடக் கோயி னிரம்பிட நினைவாற் செய்தார். ௭

(இ - ள்) அடிமுதல்...வகுத்து – அடி வரி முதல் உபான வரி முதலாக வரும் அடுக்குகள் எல்லாவற்றையும் சித்திர வேலைப்பாடுகள் திருந்த மனத்தினாலே அமைத்து ; மானம்...கொண்டு-விமானத்தின் முடிவில் வரும் சிகரமும் விதித்த முழ அளவிற் கொண்டு ; நெடிது நாள்...செய்தார் - நீண்ட நாட்கள் செல்லக் கோயில் நிறைவுபட நினைப்பினாலே செய்தனர்.

(வி - ரை) அடி - அடிநிலை வரி ; உபானம் - கோபுரத்தின் அடிக்கீழ் அமைக்கும் முதற் சித்திர வரி.

ஆதியாகிய படைகள் - அடி உபானம் என்பன வாதியாகப் பெயர் வழங்கும் அடுக்கு வரிசைகள்; படை – அடுக்கு ; படு - பகுதி ; படுத்தல்-பொருந்த வைத்தல் ; படவைப்பது படை.

வடிவுறுந்தொழில்கள் - அவ்வப் படைக்கும் உரிய தொழில் வேலைப்பாட்டுத் திறம் பொருந்திய அழகு.

மானம் முடிவுறு சிகரம் – விமானம் என்றது மானம் என நின்றது ; விமானமும் சிகரமும் முடியும் அளவுகளை அவ்வக்கோயில் மூலமூர்த்திகளுக் கேற்றவாறு அளவுபடுத்தும் விதிகள் சிவாகமங்களில் உண்டு ; முடிவுறு என்றார் விமானப்பணி ஏனைய ஆலய அமைப்புப் பணிகள் நிரம்பியபின் இறுதியிற் செய்யப்படுதல் குறிக்க. சிகரம் - விமானத்தின் கூரிய உச்சியமைப்பு.

முன்னிய முழம் – விதித்த முழ அளவு ; முழம் - ஆலய சிற்பத்திற் கூறப்பட்ட அளவுள்ளது. கரமானம் - முழுஅளவு - 24 அங்குலம் என்பர். தேவாங்குலம் மானுங்குலம் என்னும் வகையுள் இங்குந் தேவாங்குலம் கொள்ளப்படும். முழம் - நீட்டலளவை.

நெடிது நாள் கூட - ஆலயங்கள் அமைத்தலிற் படும் கால தாமத எல்லைக் குறிப்பு ; பல நாள் செல்லும்படி.

நினைவால் - நினைப்பினாலே ; 7

4178. தூபியு நட்டு மிக்க சுதையுநல் வினையுஞ் செய்து
கூவலு மமைத்து மாடு கோயில்சூழ் மதிலும் போக்கி
வாவியுந் தொட்டு மற்றும் வேண்டுவ வகுத்து மன்னுந்
தாபரஞ் சிவனுக் கேற்ப விதித்தநாள் சாரு நாளில், அ

4179. காடவர் கோமான் கச்சிக் கற்றளி யெடுத்து முற்ற
மாடெலாஞ் சிவனுக் காகப் பெருஞ்செல்வம் வகுத்தல் செய்வான்
நாடமா லறியா தாரைத் தாபிக்கு மந்நாண் முன்னாள்
ஏடலர் கொன்றை வேய்ந்தா ரிரவிடைக் கனவி லெய்தி, கூ

4180. "நின்றவூர்ப் பூச லன்ப னெடிதுநா ணினைந்து செய்த
நன்றுநீ டாலயத்து நாளைநாம் புகுவோ நீயிங்

கொன்றிய செயலை நாளை யொழிந்துபின் கோள்வா" யென்று [தார்.
கொன்றைவார் சடையார் தொண்டர் கோயில்கொண் டருளப் போந்

4178. (இ - ள்) தூபியும்...செய்து - தூபியினையும் நாட்டிச், சுண்ணச்சாந்து பூசி, மேல் சிற்ப அலங்கார வகைகளையும் செய்து; கூவலும் அமைத்து - தீர்த்தக்கிணறும் அமைத்து ; மாடு...போக்கி - பக்கத்திலும் கோயிற் சுற்றிலும் மதில்களைக் கட்டி ; வாவியும் தொட்டு - தடாகமும் அகழ்ந்து அமைத்து ; மற்றும் வேண்டுவ வகுத்து - மேலும் வேண்டுவனவற்றையும் வகைபடச் செய்து ; மன்னும்...நாளில் - நிலை பெற்ற தாவரத்தைச் சிவபெருமானுக்குப் பொருந்தும்படி நிறுத்திய நாள் அணுகும் போது ; அ

4179. (இ - ள்) காடவர் கோமான்...எடுத்து - காடவர் பெருமானாகிய பல்லவ அரசன் கச்சியம்பதியிலே கற்கோயில் எடுப்பித்து; முற்ற...செய்வான் - முழுதும் பக்கமெல்லாம் சிவனுக்காகப் பெருஞ் செல்வங்களை நியமிக்கின்றவன் ; நாட... முன்னாள் - திருமாலும் தேடியறிதற்கரியாராகிய இறைவரைத் தாபித்தற்கு நியமித்த அற்றை நாளைக்கு முன்னாளிலே ; ஏடலர்...எய்தி - இதழ்கள் விரிகின்ற கொன்றை மலர்களைச் சூடிய இறைவர் இரவினில் அவனது கனவில் தோன்றி ; கூ

4180. (இ - ள்) நின்றவூர்...புகுவோம் - திருநின்றவூரில் உள்ள பூசல் என்கின்ற அன்பன் நீண்ட நாட்களாக நினைந்து நினைந்து செய்த நன்மையால் நீடும் கோயிலிலே நாளை நாம் புகுவோம் ; நீ...கொள்வாய் – (ஆதலால்) நீ இங்கு இக் கோயிலிற் பொருந்திய செய்கையை நாளைக்கழித்து வைத்துக்கொள்வாயாக என்று அருளிச் செய்து ; கொன்றை...போந்தார் – கொன்றை சூடிய நீண்ட சடையினையுடைய இறைவர் தொண்டரது கோயிலின் தாவரத்தைக் கொண்டருள எழுந்தருளினர். ௬0

இம்மூன்று பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

4178. (வி - ரை) தூபி–விமானத்துச்சியில் அமைக்கும் கூரிய சிகரம்; நடுதல் - அதனை நிறுத்துதற்காகத் தறி நடுதல்.

சுதை - நல்வினை - விமானம், கோபுரம் முதலியவற்றிற் சுண்ணச் சாந்து வேலை. நல்வினை–உரிய விதிப்படி அட்டகயம், நாகம், இடபம் முதலிய உருவங்கள் தீட்டுதல்.

கூவல் - கோயிலினுள் இறைவர் திருமஞ்சனத் தீர்த்தத்துக்குரிய கிணறு ; வாவி - கோயிற் புறத்து அடியார்க்குப் பயன்படும் தடாகம் - திருக்குளம்.

கோயில் மாடு - கோயில் சூழ்மதில் - என்க. கோயில் மாடு என்பது உட் சுற்று மதில் ; கோயில் சூழ்மதில் - புறச்சுற்று ; போக்குதல் - நேர்பட அமைத்தல்;

தொட்டு - அகழ்ந்து அமைத்து ; தோடுதல் - தோண்டுதல்.

மற்றும் வேண்டுவ - சுற்றாலயங்கள், திருநந்தவனம், ஏனைய மண்டபங்கள் முதலியவை.

மன்னும் தாவரம் - சிவனை அவரது திருமேனியாகிய திரு உருவத்தில் (சிவலிங்கத்தில்) நிலைபெறச் செய்யும் சிவாகமச் சடங்கு ; பிரதிட்டை ; " தாபர லிங்கம் " (திருமந்) ; " சந்தி மூன்றினுந் தாபர நிறுத்தி " (தேவா). சிவனுக்கேற்ப - ஏனைய பரிவாரத் தெய்வங்களுக்கு வெவ்வேறு நாள்களும் சிவனுக்கு வேறு நாளுமாகக் கொண்டு செய்தல் குறித்தது.

விதித்த - குறித்த ; கும்பாபிடேகத்துக்குக் கொண்ட.

சாரும் நாளில் – அதனைச் சார்ந்த முன்னாளில்.

நாளில் - எய்தி - என்று - போந்தார்-என மேல்வரும் பாட்டுக்களுடன் கூட்டி முடிக்க.

இப்பாட்டாற் கோயில் அமைப்புக்கு வேண்டிய அங்கங்கள் எல்லாம் கூறப் பட்டன.

தாவாரம் - தாபனம் (பிரதிட்டை) - என்பனவும் பாடங்கள். 8

4179. (வி - ரை) காடவர்...எடுத்து - இந்தக் காடவர் - பல்லவ அரசராகிய இராச சிங்கர் என்றும், இந்தக் கற்றளி - கச்சியிற் சிறந்த கைலாயநாதர் கோயில் என்றும், இது சிகயிலாயத் திருக்கோயில் போன்ற அமைப்புக்களுடன் நிறுவப்பட்ட தென்றும் சரித்திர ஆசிரியர்கள் கூறுகின்றனர். கோமான் - கருத்தர்.

தாபிக்கும் அந்நாள் - கும்பாபிடேகம் செய்து பிரதிட்டை செய்தல் என்பர். சிவாகம விதிப்படி மந்திரம் பாவனை கிரியைகளால் சிவனை அங்கு மந்திரத்திரு மேனியினின்றும் இலிங்கத் திருமேனியில் நிறுத்தல்; அந்நாள் - குறித்த நாள்.

அந்நாளீ முன்னாள் - அந்நாளின் முந்திய நாளிலே; உருபு விரிக்க.

மாடெலாம்...பெருஞ்செல்வம் - பக்கங்களில் எல்லாம் விளைநிலம் முதலிய செல்வங்கள்.

மாடு - பக்கம்; செல்வங்கள் - பொருள். தமது பொருள்கள் எல்லாம் சிவனுக் காகும்படி என்றலுமாம்.

செய்வான் - செய்வானாகி; செய்வான் - தாபிக்கும் - என்று கூட்டுக.

நாட...தாபிக்கும் – திருமாலுக்கும் தேட அறியாராயினும் அன்பர் விருப்பின் படி அங்குச் சிவலிங்கத் திருமேனியில் வெளிப்பட வீற்றிருக்கச் செய்யும் என்பது குறிப்பு. மோனை நயம்பற்றி ஆடமால் என்று கொண்டு அகந்தையால் அடிகாண் பன் என்று உரையாடியமால் என்றும், அரவின் மீதாடியமால் என்றும் கூறுவாரு முண்டு.

ஏடு - இதழ்; வேய்தல்: சூடுதல்.

கனவில் - அக்காடவர் கோமானது கனவில். 9

4180. (வி - ரை) நெடிது நாள் நினைந்து - "நெடிது நாள் கூட" (4177); மனத் திருப்பணி முற்றச் செய்த நிலை காட்டியபடி. நினைந்து - நினைவினாலே.

நன்று நீடு - நன்மை நீடிய; புறக்கோயில்கள்போலக் காலாந்தரத்தில் அழி வுறாது என்றும் நீடும் நன்மையுடையது அக்கோயில் என்பது.

புகுவோம் - இலிங்கத் திருமேனியில் விளங்க எழுந்தருளுவோம்; வெளிப்படும் இடமாகக் கொள்வோம்.

இங்கு ஒன்றிய செயல் - இங்கு அத்தன்மை பொருந்த எண்ணிய செயல்; செயலைப் - பின் - கொள்வாய் - என்க. நாளை ஒழிந்து - நாளையதினத்தை நீக்கிப் பின்னர். கொள்வாய் - நிகழ்த்துவாயாக; செயல் - தாபனம்.

தொண்டர் கோயில் - பூசலாரது மனக்கோயில்.

கொண்டருளுதல் - இருப்பிடமாகக் கொண்டு விளங்க வீற்றிருந்தருளுதல்.

போந்தார் - மறைந்தருளினர். இவ்வருளிப்பாடு அரசருக்கு பூசலாரது திருத் தொண்டின் உயர்வினையும், பூசலாரது பெருமையினையும் அறிவித்தருளி, அதன் மூலம் உலகறியச் செய்து உய்விக்கும் திருவுள்ளக் கருணைபற்றி எழுந்தது; கழறிற் றறிவாருக்கு நம்பிகளை நினைப்பிக்கும் வகையாற் செய்த (3791 - 44) அருளிப்பாட் டினை இங்கு நினைவு கூர்க; இங்கு இரண்டு கோயில்களிலும் ஒருங்கே விளங்கும்

நிலை இறைவரது தன்மைக்குச் கூடாதென்பதன்று; பூசலாரது பெருமையினை உலகறியச் செய்தலே திருவுள்ள மென்க. "தொண்டரை விளக்க" (4181) என மேற் கூறுதல் காண்க.

பூசலன்பால் - பூசலேன்பால் - சடையாரன்பர்—என்பனவும் பாடங்கள். 10

4181. தொண்டரை விளக்கத் தூயோ னருள்செயத் துயிலை நீங்கித்
திண்டிறன் மன்ன "னந்தத் திருப்பணி செய்தார் தம்மைக்
கண்டுநான் வணங்க வேண்டு" மென்றெழுங் காத லோடுந்
தண்டலைச் சூழல் சூழ்ந்த நின்றவூர் வந்து சார்ந்தான். கக

(இ - ள்) தொண்டரை...அருள்செய - தொண்டராகிய பூசலாரை உலகத்தார் அறியச் செய்யும் பொருட்டுத் தூயசிவபெருமான் இவ்வாறு அருளிச் செய்தாராக; துயிலை நீங்கி - துயிலுதலை விட்டு; திண்திறல்...காதலோடும் - திண்ணிய திறலினையுடைய அவ்வரசன் அந்தத் திருப்பணி செய்தவரைக் கண்டு நான் வணங்கிட வேண்டும் என்று மேன்மேல் எழுகின்ற பெருவிருப்பினோடும்; தண்டலை...சார்ந்தான் - சோலைகளின் கூட்டம் சூழ்ந்த திருநின்றவூரில்வந்து சார்ந்தனன்.

(வி - ரை) தொண்டரை விளக்க - இறைவர் அரசரது கனவில் முன்கூறிய படி உரைத்தருளியதற்குக் காரணம் கூறியவாறு; "வாலிதா நிலைமை காட்ட" (378), "தம் தொண்டர் மருத வண்ணமுங் காட்டுவான்" (407), "அல்ல னல்குர வான போதிலும் வல்ல ரென்றறி விக்கவே" (445), "ஞாலத்தார் விரும்பி யுய்யும் அந்நெறி காட்டு மாற்றால்" (திருநீல-புரா-10), "தொண்டரை விளக்கங் காண" என்பன முதலியவை காண்க. அருள் செய - அருளிச் செய்து மறைந்தருள.

கண்டு நான் வணங்க வேண்டும் - அவரை விசாரித்துத், தம்மிடம் வரச்செய்ய வொட்டாது தாமே சென்று கண்டு வணங்க வேண்டும் என்பது தற்போத மற்ற அன்பின் பெருக்கு. நாயனாரை வணங்க வந்ததேயன்றிக் கோயில் தாபரம் காண அரசன் எண்ணி வந்தானல்லன்; இது திருவருட் குறிப்பு.

எழு காதல் - மேன்மேல் பொங்கும் பெருவிருப்பம்.

சூழல் - .ட்டம்; செறிவு - இடம்; த ண்டலை - சோலைகள். 11

4182. அப்பதி யணைந்து "பூச லன்பரிங் கமைத்த கோயில்
எப்புடை யது ?" வென் றங்க ணெய்தினர் தம்மைக் கேட்கச்
"செப்பிய பூசல் கோயில் செய்த தொன்றில்லை" யென்றார்;
"மெய்ப்பெரு மறையோ ரெல்லாம் வருக" வென் றுரைத்தான்வேந்தன்.

(இ - ள்) வேந்தன் - அரசன்; அப்பதி...கேட்க - அந்தப்பதியினை யணைந்து பூசலார் என்னும் அன்பர் செய்த கோயில் எப்பக்கத்திலுள்ளது என்று அங்கு அணைந்தவர்களைக் கேட்க; செப்பிய...என்றார் - நீங்கள் சொல்லிய பூசலார், கோயில் செய்த ஒன்றும் இல்லை என்று சொன்னார்கள்; மெய்...உரைத்தான் - அது கேட்டு, உண்மை நெறியினிற்கும் மறையவர்கள் எல்லாம் வருக என்று ஆணையிட்டான்.

(வி - ரை) அங்கண் எய்தினர் - தன் வரவு கண்டு அங்கு வந்த பதியவர்.

புடை - பக்கம்.

செப்பிய பூசல் - நீங்கள் சொல்லிய பூசலார் என்பவர்.

"மெய்ப்பெரு...வருக" – அங்கு எய்தினர் பூசல் கோயில் செய்ததொன்றில்லை என்று சொல்லவே, அவர் அறியார், மறையோர் அறிகுவர் என்று கொண்டு மறையோரைக் கூயினன் என்பதாம். அவருள்ளும் சிலர் அறிந்தும் சிலர் அறியாமலுமிருத்தல் கூடுமாதலின் எல்லாம் வருக என்றான் என்பதாம்; பூசலன்பர் - இருபெயரொட்டு; புடை - இடம். மெய்ப்பெருமறையோர் - ஆதிசைவர் என்ற குறிப்புப் போலும்; "சூழ்ந்த பெருமறை யவர்கு ழாமும் நம்பியும்" (தடுத்-புரா-65). 12

4183. பூசுர ரெல்லாம் வந்து புரவலன் றன்னைக் காண
"மாசிலாப் பூச லார்தா மா?" ரென, மறையோ ரெல்லாம்,
"ஆசில்வே தியனிவ் வூரா" னென்றவ ரழைக்க வொட்டான்
ஈசனா ரன்பர் தம்பா லெய்தினன் வெய்ய வேலான். ௧௩

(இ – ள்) பூசுரர்...காண - வேதியர்களெல்லாரும் வந்து அரசனைக்காண; மாசிலா...ஆர் என-குற்றமற்ற பூசலார் தாம் யாவர்? என்று கேட்க; மறையோர்... ஒட்டான் - அதற்கு மறையோர்கள் எல்லாம் அவர் குற்றமற்ற வேதியர்; இவ்வூரினர் என்றவர்களை அவரைப் போயழைக்க வொட்டாமல்; ஈசனாரன்பர்... வேலான் - இறைவரது அன்பராகிய பூசலாரிடத்தில் வெவ்விய வேலையுடைய அரசன் சென்று சேர்ந்தனன்.

(வி - ரை) பூசுரர் - நிலத்தேவர்; மறையவர்; புரவலன் - அரசன் - உலகங் காக்கின்றவன்.

என்றவர் - என்ற அவர்களை; அழைக்க வொட்டான் - அவர்கள் போய் அவரை அழைத்து வருதலை இசையாதவனாகி.

ஒட்டான் – ஒட்டாதவனாகி;

எய்தினன் - தான் சென்று சேர்ந்தனன்; வெய்ய வேலான் - வெய்ய வேலானாயினும் அன்பரிடம் விதிப்படி பணிதல் வேண்டி என்றபடி.

ஒட்டா - ஈசனார்-மாசிலாப்பூசலார்—என்பனவும் பாடங்கள். 13

4184. தொண்டரைச் சென்று கண்ட மன்னவன் றொழுது "நீரிங்
கெண்டிசை யோரு மேத்த வெடுத்தவா லயந்தான் யாதிங்
கண்டர்நா யகரைத் தாபித் தருளுநா ளின்றென் றும்மைக்
கண்டடி பணிய வந்தேன் கண்ணுத லருள்பெற்" றென்றான். ௧௪

(இ - ள்) தொண்டரை...தொழுது - சென்று அத்தொண்டர் பெருமானைக் கண்ட அரசர் அவரைத்தொழுது; நீர்...யாது – தேவரீர் இவ்விடத்து எத்திசையார்களும் போற்றும்படி எடுத்த கோயில் எது?; இங்கு...என்று - அண்டத் தேவர் பெருமானாகிய சிவபெருமானை அத்திருக்கோயிலில் தாபித்தருளும் நாள் இன்று என்று தெரிந்து; உம்மை...பெற்று என்றான்-கண்ணுதற் பெருமானது திருவருளினால் அவ்வாற்றினைத் தெரிந்தவதனால் உம்மைக்கண்டு திருவடி தொழுவதற்கு வந்தேன் என்று சொன்னார்.

(வி – ரை) நீர் இங்கு...அருள்பெற்று – என்றது அரசர் பூசலாரை நோக்கிக் கூறி வினவியது.

எண்டிசையோரும் ஏத்த - இறைவர் இத்திருப்பணியினை ஏற்றருளுதல் அறிவிக்க அறிந்தானாதலின் எல்லாரும் பரவும் நிலைமையினது என்றான். தான் எடுத்த கோயில் போன்ற தொன்றெனக் கருதினன் என்றலுமொன்று.

இந்த - ஏத்த - என்பது இச்சிலவுலகில் வந்து துதிக்க என்றதாம்; இந்தத் தாபித்தருளும் - என்றது இவ்வூரில் கோயிலினுள் திருமேனியில் தாபித்தருளும், என்றதாம்.

கண்ணுதலருள்பெற்று - இறைவரது திருவருளால் அறிவிக்கப் பெற்று என்று தாம் அறிந்தவகையினை அந்நாயனாரது உயர்வு தோன்ற எடுத்துக் கூறியபடி.

யாது?-அடிபணிய வந்தேன் - என்றது யாது? என்று வினவியதற்குக் காரணங் கூறியவாறு. யாது என்று வினவியது வேறொரு காரணம் பற்றியதன்று என்பதாம்.

தாபித்தருளுதல் - பிரதிட்டை; ஒருசொல். 14

4185. மன்னவ னுரைப்பக் கேட்ட வன்பர்தா மருண்டு நோக்கி
"என்னையோர் பொருளாக் கொண்டே யெம்பிரா னருள்செய் தாரேல்
முன்வரு நிதியி லாமை மனத்தினுன் முயன்ற கோயில்
இன்னதாம்" என்று சிந்தித் தெடுத்தவா றெடுத்துச் சொன்னார்.

(இ - ள்) மன்னவன்...நோக்கி - அரசர் இவ்வாறு சொல்லக் கேட்ட அன்பராகிய பூசலாரும் மருட்சியடைந்து அவரைப்பார்த்து; என்னை...அருள் செய்தாரேல் - என்னையும் ஒரு பொருளாகக் கொண்டே எமது பெருமான் அருளிச் செய்தாராயின்; முன் வரும்...இன்னதாம் என்று - முன்னர்ப்பெறும் நிதி கிடையாமையால் மனத்தினாலே முயன்று நினைந்து நினைந்து செய்த கோயில் இதுவாகும் என்று; சிந்தித்து...சொன்னார் - சிந்தனையின் செயலாகவே செய்த கோயிலினைத்தாம் விளங்க எடுத்துக் கூறினார்.

(வி - ரை) மருண்டு - தாமும் இறைவருமே அறிய நின்ற இந்நிகழ்ச்சிகள், தாம் எதிர்பாராத நிலையில், இறைவர் திருவருளால் வெளிப்பட்டு அரசர் வினவ நேர்ந்தது பற்றி மனமருட்சியடைந்து;

என்னை - என்னையும்; இழிவு சிறப்பும்மை தொக்கது;

அருள் செய்தாரேல் - அருளிச் செய்து வெளிப்படுத்தினாராயின்; அவர்தாமே வெளிப்படுத்தினாராதலின் தாம் அதனை உள்ளவாறே சொல்ல வேண்டுமென்று நினைந்து சொல்லப் புகுந்து என்க. அல்லாவிடின் தமது பணியை அவர், எவரும் அறியவெளிப்படுத்துவாரல்லர் என்பதாம்.

நிதியிலாமை - நிதியில்லாமையால்.

மனத்தினால் முயன்ற—நினைந்து நினைந்து முயன்று எடுத்த. சிந்தித்தெடுத்தவாறு - சிந்தனையினாற் செய்த; மனத்தினால் முயன்ற கோயில் - என்பது ஆலயந்தான் யாது என்றதற்கு விடை; சிந்தித்தெடுத்தவாறு - என்பது தாபித்தருளுநாள் இன்று என்று அருள் பெற்றுப் பணியவந்தேன் என்றதற்கு விடை; ஆதலின் கூறியது கூறலன்மையாதல் உணர்க.

இதற்கு, இவ்வாறன்றி, என்னையோர்...சிந்தித்து - கோயில் அமைக்கத் தகுதியில்லாத சிறியேனாகிய என்னையும் ஒரு பொருளாகத் தமது பெருங் கருணையினாலே ஏற்றுக்கொண்டு எமது பெருமான் இவ்வாறு அருளிச் செய்தாராயின், முன்னே கோயிற் பணிக்கு வேண்டும் நிதியில்லாமையால் வருந்தி, அதற்கடுத்த நிலையில் மனத்தினாலாயினும் கோயில் எடுப்பேன் என்று முயன்று செய்த இக்கோயிலும் இவ்வாறு அருள் ஏற்கப் பெற்ற தன்மையதாயிற்றே என்று திருவருட் பெருமையைச் சிந்தித்துத் துதித்து, என்றுரைத்தலும் பொருந்தும்.

எடுத்து - விரித்து ; விளக்கி. 15

4186. அரசனு மதனைக் கேட்டங் கதிசய மெய்தி "யென்னே !
புரையறு சிந்தை யன்பர் பெருமை !" யென் றவரைப் போற்றி
விரைசெறி மாலை தாழ நிலமிசை வீழ்ந்து தாழ்ந்து
முரசெறி தானை யோடு மீண்டுதன் மூதூர்ப் புக்கான். கசு

(இ - ள்) அரசனும்...எய்தி - அரசனும் அதைக் கேட்டு அங்கு மிக்க அதிசயம் அடைந்து ; என்னே...போற்றி-குற்றமற்ற சிந்தையினையுடைய அன்பரது பெருமை இருந்தவாறுதான் என்னே ! என்று அவரைத் துதித்து ; விரை...தாழ்ந்து—மணமிக்க மாலை கீழே படியும்படி நிலத்தின் வீழ்ந்து வணங்கி ; முரசு...புக்கான் - முரசுகள் சத்திக்கும் சேனைகளுடனே மீண்டு சென்று தனது பழைய ஊரினையடைந்தான்.

(வி - ரை) அதிசயம் - பெருமிதமாக அறிந்து மகிழ்ந்த மன நிலை. "அதிசயம் கண்டாமே" (திருவா).

புரை அறு — புரை — குற்றம் ; இங்கு நிதியின்மையாகிய குறை என்ற பொருளில் வந்தது. புரை அறு சிந்தை அன்பர் - அக்குற்றத்தைத் தமது சிந்தையின் செயலால் அறுவித்தவர் என்பது ; "செல்வ மென்பது சிந்தையின் நிறைவே."

பெருமை - இறைவரது திருவருளுக்கு இலக்காக விளங்குதல்.

மாலைதாழ - வீழ்ந்து தாழ்ந்து—அன்பின் பெருமையின்முன் அரசரின் பெருமை தாழ்ந்துவிழ; தன்முனைப்பு அற்றநிலை.

மூதூர் - காஞ்சிபுரம். "கச்சிமூதூர்" (நம்பி). 16

4187. அன்பரு மமைத்த சிந்தை யாலயத் தரனார் தம்மை
நன்பெரும் பொழுது சாரத் தாபித்து நலத்தி னோடும்
பின்புபூ சனைக ளெல்லாம் பெருமையிற் பலநாட் பேணிப்
பொன்புனை மன்று ளாடும் பொற்கழ னீழல் புக்கார். கஎ

(இ - ள்) அன்பரும்...தாபித்து - அன்பராகிய பூசலாரும் தாம் மனத்தினு லமைத்த ஆலயத்தில் சிவபெருமானை நல்ல பெரும்பொழுது வரத் தாபித்து ; நலத்தினோடும்...பேணி — நன்மையோடு அதன்பின்பு செய்ய வேண்டிய பூசனைகளையெல்லாம் பெருமையோடும் பல நாட்கள் விரும்பிச் செய்து வாழ்ந்து; பொன்புனை... புக்கார் - பொன்னாலியன்ற திருவம்பலத்தில் ஆடுகின்ற பொன்னடியின் நீழலை அடைந்தனர்.

(வி - ரை) அன்பரும் - அன்பர் செயல் கேட்ட அரசனும் மூதூர்ப்புக்கான் (4186) ; அரசனால் உலகறிய விளக்கம்பெற்ற அன்பரும் தாபித்துப் - பேணி - நீழல் புக்கார் என, உம்மை இறந்தது தழுவிய எச்சவும்மை.

சிந்தை(யால் அமைத்த) ஆலயம் - என்க. சிந்தையினால் எனக் கருவிப் பொருளில் வரும் மூன்றனுருபு விரிக்க ; சிந்தை — மனம் என்று கொண்டு, சிந்தையின்கண் அமைத்த என ஏழனுருபு விரித்தலுமாம். சிவபூசை (ஆன்மார்த்த பூசை)யில் அந்தரியாக பூசை (அகப்பூசை)யை முன்னே சிறப்பாகச் செய்யும்படி வரும் சிவாகம விதிகள் காண்க.

நன்பெரும் பொழுது — நல்ல வேளை ; நற்பொழுது ; பொழுது - ஓரை முதலிய காலப்பாகுபாடு; பெருமையாவது சிவனைத் தாபித்தற்கு யன்பபட்ட கலம்.

பின்பு பூசனைகள் எல்லாம் - தாபித்ததன் பின்னர்ச் செய்யத்தக்க மண்டலாபிடேக பூசை, நித்திய பூசை முதலாயின ; எல்லாம் - என்றதனால் நைமித்திக பூசையும் விழாவும் கொள்ளப்படும்.

பேணி - விரும்பிச் செய்து ; பெருமையிற் பேணுதலாவது இறைவர் மகிழ்ந்தருளப் பெற்ற பெருமையினால் மேலும் மிக விரும்புதல்.

பொன்புனை மன்று - பொன்னம்பலம்.

பொற்கழல் நீழல் புக்கார் - திருவடி நிறைவுக்குள் அடங்கி நிற்றல் இங்குப் புகுதல் எனப்பட்டது. 17

4188. நீண்டசெஞ் சடையி னார்க்கு நினைப்பினாற் கோயி லாக்கிப்
பூண்டவன் பிடைய றாத பூசலார் பொற்றாள் போற்றி
ஆண்டகை வளவர் கோமா னுலகுய்ய வளித்த செல்வப்
பாண்டிமா தேவி யார்தம் பாதங்கள் பரவ லுற்றேன். கஅ

(இ - ள்) நீண்ட...போற்றி - மிக நீண்ட சிவந்த சடையினையுடைய இறைவருக்கு நினைப்பினாலேயே கோயில் அமைத்து மேற்கொண்ட அன்பு இடையறாது செய்த பூசலாருடைய பொன்னடிகளைத் துதித்து ; (அத்துணையாலே) ஆண்டகை... பரவலுற்றேன் - ஆண்மை மிக்க சோழர் பெருமான் உலக முய்யத் திருவுயிர்த்த செல்வப் பாண்டிமாதேவியாராகிய மங்கையர்க்கரசி யம்மையாரது திருவடிகளைத் துதிக்கப் புகுகின்றேன்.

(வி - ரை) நீண்ட செஞ்சடையினார் - "எறிநீர்க் கங்கை தோய்ந்த நீள் சடையார்" (831) என்றதும் ஆண்டுரைத்தவையும் பார்க்க ; புறத்தே நீண்ட தன்றியும் இங்கு நாயனாரது அகத்திலும் நீண்டு கோயில் கொண்ட நிலைக்குறிப்பு.

நினைப்பினால் கோயில் - மனக்கோயில் ; அன்பிடையறாத - முன்னும் பின்னும் நீங்காத அன்பின் தொடர்ச்சியுடைய. (4187).

ஆண்டகைமையாவது "சிலம்பணிசே வடியார்தம், மன்னியசை வத்துறையின் வழிவந்த" எக்காலத்தும் பிறழாது சிவநெறி நிற்கும் வீரம்.

உலகுய்ய அளித்த - மங்கையர்க்கரசியார் வரலாற்றின் விரிவு காண்க. (ஆளுடைய பிள்ளையார் புராணம்); பரசமய நிராகரணமும் சைவத்தாபனமும் ஆகிய உய்தியினை உலகம் பெறவைத்த.

வளவர் கோமானளித்த - பாண்டிமாதேவியார் - "வளவர்கோன் பாவை... பாண்டிமாதேவி" (தேவா); இவரது வரலாற்றுக் குறிப்பு.

பரவல் - துதித்தல் ; மேல்வரும் இவரது புராணம் துதி உருவமாயே யமைந்திருத்தல் காண்க. 18

ஆசிரியர் தமது மரபுப்படி, இதுவரை கூறிய சரித சாரங்கூறி முடித்துக் காட்டி, மேல் வருஞ் சரிதத்துக்குத் தோற்றுவாய் செய்தநிலை கண்டுகொள்க.

சரிதச்சுருக்கம்: பூசலார் நாயனார் புராணம் :—நல் ஒழுக்கம் என்றும் உயர்ந்த தொண்டை நன்னாட்டில் மறையவர் செல்வமிக்கவூர் திருநின்றவூர் என்பதாம். இவ்வூரில் வேதியர் மரபில் அவதரித்தவர் சிவனன்பில் சிறந்து மறைவிளங்கிய ஒழுக்க முடையாராகிய பூசலார். அவர் அன்பர்க்காம் பணிசெய்தலே மக்கட்பிறப்புக்கு அடுத்த செயல் என்று எவ்வகையாலும் பொருள் தேடி அடியவர்க்குக் கொடுத்து வந்தார். அதன்மேல் அரன்பணி செய்ய எண்ணித், தமக்கு நிதியின்மையையும்

எண்ணாமல் முயன்றனர்; எவ்வாற்றானும் வருந்திப் பொருள் தேடினர்; ஆனால் சிறிதும் பொருள் பெறாது வருந்தினர்.

மனத்தினாலே கோயிலமைக்கத்துணிந்தனர். மனத்தின்கட் சிறிது சிறிதாகத் தேடிப் பெரும்பொருள் திரட்டிக் கொண்டனர். அவ்வாறே கல் மரம் முதலிய சாதனங்களையும் தச்சரையும் மனத்தாற் தேடினர். நன்னாட்கொண்டு அன்பினாலே இரவும் துயிலாமல் கோயில் எடுத்தனர். அடிமுதல் உபானமாதியாகிய வரிசைகளை எல்லாம் வகுத்தனர். உரிய அளவுப்படி விமானமும் சிகரமும் அமைத்தனர்; தூபி நட்டனர்; சுதை வேலையும் நிறைவாக்கினர்; கூவல், மதில், வாவி முதலாக வேண்டுவன எல்லாம் செய்து, இறைவரைத் தாபிக்க நன்னாளும் வேளையும் வகுத்தனர்.

இதனிடையில் காடவ அரசன் கச்சியில் சிவனுக்குக் கற்றளி எடுத்துப், பெருஞ் செல்வம் வகுத்துச், சிவனைத்தாபிக்க அந்நாளையே குறித்தனன்.

அதன் முன்னாளிரவில் அரசனது கனவில் இறைவர் எழுந்தருளி "நின்றவூர்ப் பூசல் அன்பன் நெடிதுநாள் நினைந்து செய்த நன்மை நீடும் ஆலயத்தில் நாளை நாம் புகுவோம்; உனது தாபனத்தை நாளை ஒழித்துப் பின்னர்க் கொள்வாய்!" என்றருளி மறைந்தருளினர்.

தொண்டரது பெருமையை உலகில் விளக்கி உலகுய்யச் செய்ய இறைவர் இவ்வாறு அருளவே, அரசன் துயிலுணர்ந்து எழுந்து அந்தப் பெரிய திருப்பணி செய்தவரைச் சென்று நான் காண வேண்டுமென்று மிகவும் விரும்பித் திருநின்றவூர் வந்து சேர்ந்தான்; அங்கு அருகணைந்தார்களைப் பூசலார் செய்த கோயில் எங்கு உளது என்று கேட்டான். அவர்கள் அவ்வாறொன்று மில்லை என்றனர். அவ்வூர்ப்பெருமறைய வர்களை அழைத்துப் பூசலார் ஆர் என்று கேட்டான். அவர்கள் அவர் இவ்வூரினர்; குற்ற மற்ற வேதியர் என்றனர். அவர்களழைக்க வொட்டாது தானே அவரிடம் சென்று "தேவரீர் எடுத்த ஆலயம் யாது; இன்று சிவனைத்தாபிக்கும் நாள் என்று இறைவர் அருளத் தெரிந்து உம்மைக் கண்டு பணியவந்தேன்" என்றான். அவர் மருண்டு, என்னையும் பொருளாக இறைவர் அருள் செய்தாராயின், அக்கோயிற் பெருமை இருந்தவாறு என்னே என்று சிந்தித்து வணங்கிக் கொண்டு, மனத்தால் முயன்று செய்த கோயிலின்னதென்று எடுத்துச் சொன்னார். அரசன் அதிசயித்து அவரை நில முறத் தாழ்ந்து வணங்கித் தனது நகருக்குச் சென்றனன்.

பூசலார் தமது மனக்கோயிலில் நல்வேளையில் சிவனைத் தாபித்துப், பின்பு சனைகள் எல்லாம் பல நாட்பேணிச் செய்திருந்து சிவனடி நீழலடைந்தனர்.

கற்பனை :—(1) நல்லொழுக்கமுடைய குடிகள் வாழப்பெற்றதே சிறந்த நாடு. (4172).

(2) மறையவர் பிறப்பொழுக்கம் குன்றாது ஒழுகுதல் வேண்டும். இஃது எல்லாக் குலத்தாருக்கும்ஒத்ததாயினும், மறையவர்க்குச் சிறப்பாய் வேண்டப்படுவது. (4172).

(3) சிவன்பா லன்புட னுதித்துத், தாம் வளர அன்பும் வளர நிகழ்வது தவப் பயன். (4173).

(4) சிவன்பாலன்பர்க்காம் பணி செய்தலே ஒருவர்க் கடுப்பது.

(5) எவ்வகையானும் பொருள்தேடிச் சிவன் அடியவர்க்குக் கொடுத்தல் சிவபுண்ணியமாம்.

(6) சிவனுக்குக் கோயில் அமைத்தல் சிறந்த சிவபுண்ணியம்.

(7) நிதியில்லவர் சிவன் கோயில் அமைக்க முயன்றால் உலகம் அவரை ஆதரித்து நிதி தராது.

(8) புறத்திலே கோயில் அமைக்க நிதியின்மையா லியலாமற் போயினும், அகத்திலே மனத்தினால் நிதியையும் சாதனத்தையும் தச்சரையும் தேடிக் கோயில் அமைத்தால் அப்புண்ணியத்தினு மிக்க பேறு பெறலாம். இது யாவரும் செய்யத் தக்கது ; புறக்கோயிலமைத்தலினும் இது சிறந்ததுமாம்.

(9) புறத்தே அமைக்கும் கோயிலினும் அகத்தே அமைக்கும் கோயிலினில் இறைவர் மிக விரும்பி எழுந்தருளுவர்.

(10) மனக்கோயிலின் பெருமை இறைவரே உலகறியச் செய்யும் சிறப்புடையது.

தலவிசேடம் - திருநின்றவூர் :—இது தொண்டை நாட்டில் உள்ளதோர் பதி ; தேவாரப் பாடல் பெறாவிடினும் பூசலார் நாயனார் அவதரித்து மனக்கோயில் அமைத்துப் பணி செய்து அதில் இறைவரைத்தாபித்துப் பல நாள் பூசித்து இறையடியடைந்த சிறப்புடைய பதி ; திருத்தொண்டத் தொகையுட் பேசப்படுதலால் தேவார வைப்புத் தலமுமாம்.இப்போது தின்னனூர் என்று மருவி வழங்கப்படுகின்றது. இங்குச் சிவாலயம் உண்டு. அதில் பூசலார் நாயனாரது திருவுருவம் தாபித்து வழிபடப் பெறுகின்றது. கோயில் நன்கு கவனிக்கப்படுகின்றது. சுவாமி — மனக்கோயில் கொண்ட நாதர்; அம்மை - உமையம்மை.

இது தின்னனூர் என்ற நிலயத்தினின்றும் தெற்கே கற்சாலை வழி ஒரு நாழிகையளவில் அடையத்தக்கது. (தின்னனூர் நிலயத்தினின்றும் நேர் வடக்குக் கற்சாலை வழி 12 நாழிகை சென்றால் ஆரணியையடைந்து, அங்கு நின்றும் 6 நாழிகை யளவில் திருக்கள்ளில் என்ற தொண்டை நாட்டுப் பாடல் பெற்ற தலத்தை அடையலாம்.)

கச்சிக்கற்றளி - (4179) காஞ்சிபுரத்தில் உள்ள கைலாச நாதர் கோயில் என்பர். இது மிகச் சிறந்த சிற்ப ஓவிய வேலைப்பாடுகளமைந்தது. திருக்கயிலாய மலையின் இயற்கையமைப்பினைப் போலவே சிகரங்களுடன் காணக் கோயில் அமைக்கப்பட்ட தென்பர். நாட்டுச் சரித்திர சம்பந்தமான சிறப்புக்கள் பலவுடையது.

65. பூசலார் நாயனார் புராணம் முற்றும்.



சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# 66. மங்கையர்க்கரசியம்மையார் புராணம்

தொகை

“ மன்னியசீர் மறைநாவ னின்றவூர்ப் பூசல்
வரிவளையாண் மானிக்த (நேசனுக்கு) மடியேன் ”
—திருத்தொண்டத் தொகை - (11)

வகை

பூச லயிற்றென்ன ஞர்க்கன லாகப் பொறுமையினல்
வாச மலர்க்குழற் பாண்டிமா தேவியா மானிகண்டீர்
தேசம் விளங்கத் தமிழா கரர்க்கறி வித்தவரால்
நாசம் விளைத்தா ளருகந் தருக்குத்தென் னாட்டகத்தே.
—திருத்தொண்டர் திருவந்தாதி – (79)

விரி

4189. மங்கையர்க்குத் தனியரசி, யெங்க டெய்வம்,
வளவர்திருக் குலக்கொழுந்து, வளைக்கை மானி,
செங்கமலத் திருமடந்தை, கன்னி நாடாள்
தென்னர்குலப் பழிதீர்த்த தெய்வப் பாவை,
எங்கள்பிரான் சண்பையர்கோ னருளி னாலே
யிருந்தமிழ்நா டுற்றவிடர் நீக்கித் தங்கள்
பொங்கொளிவெண் டிருநீறு பரப்பி னாரைப்
போற்றுவார் கழலெம்மாற் போற்ற லாமே. க

புராணம் :—இனி, நிறுத்த முறையானே, பன்னிரண்டாவது மன்னியசீர்ச் சருக்கத்துள், இரண்டாவது மங்கையர்க்கரசியம்மையார் புராணங் கூறத் தொடங்குகின்றார். மங்கையர்க்கரசியம்மையாரது வரலாறும் பண்பும் கூறும் பகுதி.

தொகை :—பொழிப்பு உரைத்துக் கொள்க. வரிவளையாள் மானி - வரிகளையுடைய வளையல்களை அணிந்த மானியார் என்னும் மங்கையர்க்கரசியம்மையார். மானி-பெருமையுடையவர் ; “ வரிவளைக் கைமட மானி ” (பின் - தேவாரம்).

வகை :—பூசல்...பொறுமையினல் - பகைவரைப் போரில் வெல்லும் கூரிய வேல் ஏந்திய பாண்டியருக்கு அனல் காரணமாக வெப்பு நோய் வந்தமையால் பொறுக்கலாற்றாதவராகி ; தேசம்...அறிவித்து - உலகமெல்லாம் சைவ நெறியின்

உண்மைப் பெருமை கண்டு விளங்கி உய்யும்படி தமிழாகரராகிய ஆளுடைய பிள்ளையாருக்கு அங்கோயினை விண்ணப்பித்து; வாசமலர்...மானி-மணம் பொருந்திய மலர்களைச் சூடிய கூந்தலையுடைய பாண்டிமா தேவியாராகிய மானியார் என்னும் மங்கையர்க்கரசியம்மையார் ; அவரால்...நாட்டகத்தே - அந்த ஆளுடைய பிள்ளையாரது திருவருட்டுணையால் இந்நாட்டினில் அருகந்தர் என்னும் சமணர்களுக்கு நாசம் விளைவித்தார் ; கண்டீர் - காண்மின்கள்.

பூசல் அயில் - பூசல் - போர் ; போரில் வெல்லும் கூரிய படை ; அனலாக - சமணர் இட்ட தீயே வெப்பு நோயாகப் பற்ற ; பொறாமையினால்-பொறுக்கலாற்றாமையால் ; பாண்டிமாதேவி - மானி - இவை பிள்ளையாரது தேவார ஆட்சி ; மானி - அறிவித்து - விளைத்தாள் - கண்டீர் - என்று கூட்டுக. தேசம் விளங்க - தேசம் - உலகவர் ; தேசத்தவர் சைவ நெறியில் விளங்க ; தமிழாகரர் - ஆளுடைய பிள்ளையார் ; அருகந்தர் - சமணர். இவ்வரலாறு பற்றி ஆளுடைய பிள்ளையார் புராணம் பார்க்க. இஃது அச்சரிதப் பகுதிக்கு ஆதாரவாதலும் காண்க. கண்டீர் - காணுங்கள் ; அசை என்பாருமுண்டு.

விரி :—4189. (இ - ள்) மங்கையர்க்குத் தனியரசி - மங்கையர்க்கெல்லாம் ஒப்பற்ற அரசியும் ; எங்கள் தெய்வம் - எமது தெய்வமும் ; வளவர் திருக்குலக் கொழுந்து - சோழர்களது திருக்குலத்தின் கொழுந்து போல்பவரும் ; வளைக்கை மானி - வளையலையணிந்த மானியாரும் ; செங்கமலத் திருமடந்தை - செங்கமலத்தில் வீற்றிருக்கும் திருமடந்தைபோல்பவரும்;கன்னிநாடாள்...பாவை-பாண்டி நாட்டை ஆளும் பாண்டியர்களது குலத்தக்கு நேர்ந்த பழியினைத் தீர்த்த தெய்வத்தன்மையுடைய பாவைபோல்பவரும் (ஆகிய) ; எங்கள் பிரான்...பரப்பினரை - பெரிய தமிழ் நாட்டிற்கு வந்த இடரை எங்களுடைய பெருமானாகிய சீகாழித் தலைவரது திருவருளினாலே நீக்கித் தமது பொங்கும் ஒளியைத் தரும் திருநீற்றினைப் பரவச் செய்தவரை ; போற்றுவார்...போற்றலாமே - போற்றுகின்றவர்களுடைய திருவடி எம்மாற் போற்றத் தக்கதாகும்.

(வி - ரை) முன், பாதங்கள் பரவலுற்றேன் - என்று தோற்றுவாய் (4188) செய்தாராதலின் அதற் கேற்ப இப்பாட்டினால் துதியை விரிக்கின்றார் ; பாதங்கள் பரவுதலாவது அத்திருவடி பரவுவாரது திருவடியைப் போற்றுதலாம் என்பதாம்.

மங்கையர்க்த...பாவை-இப்பண்புகள் ஆளுடைய பிள்ளையாரது "மங்கையர்க்கரசி" (ஆலவாய் - புறநீர்மை) என்ற திருப்பதிகப் பாட்டிற் கண்டவாறு விரித்து உரை கூறியபடி.

எங்கள் தெய்வம் - சைவவுலகுக்கும் சைவ நெறிக்கும் காவல் பூண்டு வளர்த்தலின் எங்கள் தெய்வம் - என்றார். எங்கள் என்றது சைவவுலகம் முழுவதையும் உளப்படுத்திக் கூறியது.

வளவர் திருக்குலக் கொழுந்து - "சென்னி வளர் மதியணிந்த சிலம்பணிசேவடியார்தம், மன்னியசை வத்துறையின் வழிவந்த குடிவளவர்" (1900) என்ற பெருமை குறித்தது. இப்பெருமை பற்றியே ஆளுடைய பிள்ளையார் புராணத்தைத் தொடங்கிய குறிப்பும் காண்க ; வளவர்கோன் பாவை - என்ற பதிகப் பகுதியை விரித்துரைத்தது. கொழுந்து போல்வார் என்க.

மங்கையர்க்குத் தனியரசி - மங்கையர்க்கரசி என்று பிள்ளையார் பாராட்டியதைத் தனி - என்ற பண்பு தந்து மேலும் சிறப்பித்தவாறு ; அரசிகள் பலரு மிருத்தல் கூடுமாதலின், தனி - (ஒப்பற்ற) என்பது பிறிதினியைபு நீக்கிய விசேடணம்.

வளைக்கை மானி – "வரிவளைக் கைமட மானி" என்பது பதிகம். மானி- பெருமையை யுடையவர்; மானம் – பெருமை.

செங்கமலத் திருமடந்தை - ஆயிரம் இதழ்க் கமலத்தில் வீற்றிருக்கும் ஞானம் பிகை போல்பவர்; இலக்குமி போல்வார் என்பாருமுண்டு. "பங்கயச் செல்வி" என்பது பதிகம்.

கன்னிநாடு ஆள் தென்னர் - கன்னிநாடு - பாண்டிநாடு. தென்னர் - பாண்டியர்; தெற்கில் உள்ள பாண்டி நாட்டை ஆள்பவர்.

தென்னர் குலப்பழி - கூன் பாண்டியர் சமணத்தைச் சார்ந்து சைவ நெறிக்குத் தீங்கு விளைக்கத் துணையாய் நின்ற சிவாபராதமாகிய பெரும்பழி; "தென்னவன் றானு முன்செய் தீவினைப் பயத்தி னாலே, அந்நெறிச் சார்வு தன்னை யறமென நினைந்து நிற்ப...கன்னெறி திரிந்து மாறி நவைநெறி நடந்த தன்றே" (2499) என்றதும், ஆளுடைய பிள்ளையார் புராணத்துள் அதன்மேல் விரித்தனவும் காண்க. ஒரு குலத் துள் வந்த ஒருவர் பெரும்புகழ் விளைத்து வாழ்ந்தால் அப்புகழ் அக்குலமுழுதும் சார்தல் போலவே, ஒருவரது பழியும் அக்குல முழுதும் பற்றும் என்பது நீதியாதலின் தென்னர் குலப்பழி என்றார்.

தென்னர் குலப்பழி தீர்த்த தெய்வப் பாவை - குலப்பழியானது அக்குலத்துள் வந்த கற்பரசியாராலே தீரப்பெறுவதாம் என்பது. பாவை - பவைபோல்வார்.

எங்கள்பிரான் - சைவ வுலகின் ஞானத்தலைவர். எங்கள் தெய்வம் என்றதற் கேற்ப இவ்வாறு கூறினர்.

எங்கள்...பரப்பினாரை - திருநீறு பரப்புதற்குக் காரணமாயிருந்தவரை; தங் கள்...திருநீறு - திருநீற்றினைச் சோழமரபுக்கு உரிமையாக்கிய திறம் காண்க.

தனித்திலதம் - பரவினரை - புகழேம்மால்—என்பனவும் பாடங்கள். 1

4190. பூசுரர்சூ ளாமணியாம் புகலி வேந்தர்
போனகஞா னம்பொழிந்த புனித வாக்காற்
றேசுடைய பாடல்பெறுந் தவத்தி னாரைச்
செப்புவதியா மென்னறிந்து?; தென்னர் கோமான்
மாசில்புகழ் நெடுமாறன் றனக்குச் சைவ
வழித்துணையாய் நெடுங்கால மன்னிப் பின்னை
ஆசினெறி யவரோடுங் கூட வீச
ரடிநிழற்கீ ழமர்ந்திருக்க வருளும் பெற்றார். ௨

(இ – ள்) பூசுரர்...என் அறிந்து - மறையவர்கள் தலைவராகிய சீகாழி வேந் தராது சிவஞான முண்டு பொழிந்த தூய திருவாக்கினாலே ஞான வொளியுடைய பாடலினாற் பாராட்டப் பெறுதற்கு உரிய பெரிய முன்னைத்தவமுடைய அம்மை யாரது பெருமையினை நாம் என்னென் றறிந்து போற்ற வல்லோம்?; தென்னர்... மன்னி – பாண்டி மன்னராகிய குற்றம்நீங்கிய புகழினையுடைய நின்ற சீர் நெடுமாறனாருக்குச் சைவத்திறத்தின் வழித்துணைவியாராகி நீண்ட காலம் நிலை பெற்றிருந்து; பின்னை – அதன் பின்பு; ஆசில்...பெற்றார் - குற்றமற்ற சிவநெறி யிலே அவரோடும் கூட இறைவரது திருவடிக்கீழே நிலைபெற்றிருக்கும் திருவருளி னையும் பெற்றார்.

(வி - ரை) பூசுரர் சூளாமணி-மறையவர்கள் தலைமேற்சூடும் முடிமணிபோன் றவர்; பூசுரர் - மறையவர்; "நிலத்தேவர்" (1994); சூளாமணி - முடிமணி.

போனக ஞானம் பொழிந்த – ஞானப்பால் உண்டமையினாலே வெளிப்பட்ட.

புனித வாக்கு - சிவனையன்றிச் சொல்லாத திருவாக்கு ஆதலின் புனித வாக்கு என்றார். "கைச்சிறு மறியவன் கழலலாற் பேணாக் கருத்துடை ஞானசம்பந்தன்" (பின் – அச்சிறு பாக்கம் – 11). "கொன்றையா னடியலாற் பேணா வெம்பிரான் சம்பந்தன்" (திருத்தொண்டத் - 5). "போதியோ வென்று, மன்ன மெய்த்திரு வாக்கெனு மமுதம்" (2986); "பிள்ளையார்தந் திருவாக்கிற் பிறந்த வாலே நாலமு முன், புள்ள பாசம் விட்டகல வொழியாப் பிறவி தனையொழித்து...சிவமே கூடின" (2881) என்பனவாதி உண்மை வரலாறுகள் இங்கு நினைவு கூர்தற்பாலன.

தேசுடைய பாடல் பெறுந் தவத்தினார் - தேசு - அருள்ஞான விளக்கம். தவத்தினார் - முன்னைப்பெருந்தவத்தினாலன்றி இப்பேறு பெறுதலமையா தென்பதாம். இப்பாடல்களாவன: "மங்கையர்க்கரசி" என்ற திருப்பதிகத்துப் பாராட்டப் பட்டனவும், "மானினேர் விழி" என்ற பதிகத்துள் முன்னிலைப்படுத்தி யருளி யனவுமாம்; இவ்வாறு பிள்ளையாரால் முன்னிலைப்படுத்தியருளிய பெருமை அம்மை யார் ஒருவருக்கே சிறப்பாய் உரியது; தவம் என்றது இக்குறிப்பும் தந்து நின்றது தேசுடைய பாடல் பெறும் - சமணர் புத்தராதி நலமில்லாதோரும் பிள்ளையார் திரு வாக்கிற் பட்டனர் தாமே? எனில், அவ்வவர்க்கேற்ற தகுதிப்படி அவர்களும் உய்தி பெற்றனரேயாம் என்க. இவர்கள் நிலைமைபற்றி வேறு பிரித்தற் பொருட்டுத் தேசுடைய - என்றார். பிறிதினியைபு நீக்கிய விசேடணம்.

யாம் என் அறிந்து செப்புவது? - என்க. என்னென்றறிந்து செப்புவது? செப்பவல்லோமல்லோம் என்றபடி.

தென்னர்...அருளும் பெற்றார் - முன் ஆளுடைய பிள்ளையார் புராணத்துள் பிள்ளையாருடனிருந்து, பாண்டி நாட்டுப் பதிகளைப்பணிந்து, பின் அவர்பால் விடை பெற்று, மணமேற் குடியினின்றும் போந்தபின் (2791 - 2793) நிகழ்ந்த வரலாறுகள் நெடுமாறனாரைப் பற்றியவற்றை அவர் தம் புராணத்துள்ளும் (4070-4077); அம்மை யாரைப் பற்றிய வரலாற்றை இங்கும் கூறிமுடிக்கும் அமைப்புக் கண்டுகொள்க.

மாசில் புகழ் நெடுமாறன் தனக்கு - மாசு இல்லையாகச் செய்யப்பட்டமையால் அதன்பின் நின்றசீர் நெடுமாறனாராகியவருக்கு என்க; மாசின்மையாற் புகழுடைய நெடுமாறனாராயினர் என்பது.

நெடுமாறன் தனக்குச் சைவ வழித்துணையாய்-ஆசறப்பெற்றபின் சைவ நெடுமாற னாராயினாராதலின் அவருக்குச் சைவ வழித்துணையாய் மன்னினர்; இஃது உயிரினுக்கு வழித்துணையாம். அதன்முன், அவர் கூன் பாண்டியனாராய் இருந்தனர்; அப்போது அம்மையார் அவரது பாண்டிமா தேவியாராய் உடல் பற்றிய துணையளவில் அமைந்து, அவருயிருக்குரிய நன்மையைத் தாமே தேடிக்கொடுத்தனர். அதன் பின்னர்ச், சைவத்துள் நின்றமையால் சைவ வழித்துணையாய் நெடுங்காலமிருந்து சிவநெறிபாலித்தனர் என்பதாம்.

ஆசில் நெறி - குற்றத்தை இல்லையாக்கும் சிவஞான நெறி; ஆசு - ஆணவமலக் குற்றம்.

அருளும் - சைவ வழித்துணையாய் மன்னியதன்றி அருளும் என்று உம்மை இறந்தது தழுவிய எச்சவும்மை. இவ்வாறு அம்மையாரது பிற்சரிதம் கூறி முடித் தமை காண்க. அவரோடும் கூட - அந்நாட் கற்புடைமகளிர் கணவனாருடன் செல் லும் மரபு குறித்தது. நெடுமாறனாரது சரித முடிபு அவரைப்பற்றிய அளவில் அவரது சரிதத்தில் முன் (4077) இவ்வாறு கூறி நிறைவாக்கியது காண்க. 2

4191. வருநாளென் றும்பிழையாத் தெய்வப் பொன்னி
வளம்பெருக்க வளவர்குலம் பெருக்குந் தங்கள்
திருநாடு போற்செழியர் தென்னாடு விளக்குஞ்
சீர்விளக்கின் செய்யசீ றடிகள் போற்றி
ஒருநாளுந் தஞ்செயலில் வழுவா தன்பர்க்
குடைகீளுங் கோவணமு நெய்து நல்கும்
பெருநாமச் சாலியர்தங் குலத்தில் வந்த
பெருந்தகையார் நேசர்திறம் பேச லுற்றும். ௩

(இ - ள்) வருநாள்...திருநாடுபோல் - நீர்ப்பெருக்கு வரும் நாள் ஒரு காலத்தும் பொய்யாது வரும் தெய்வத்தன்மை வாய்ந்த காவிரியாறு வளம் பெருக்கச் சோழர் திருமரபு பெருக்கும் தங்களுடைய சோழநாட்டினைப் போலவே; செழியர்... போற்றி - பாண்டியர்களது பாண்டி நாட்டினையும் விளங்கச் செய்த சிறப்புடைய விளக்காகிய மங்கையர்க்கரசி யம்மையாரது செய்ய சிறிய திருப்பாதங்களைத் துதித்து (அத்துணையாலே); ஒருநாளும்...பேசலுற்றும் - ஒரு நாளிலும் தமது செயலிற் பிழையாது சிவனடியார்களுக்கு உடையும் கீளும் கோவணமும் நெய்து கொடுக்கும் பெரும்புகழ் வாய்ந்த சாலியரது குலத்தில் அவதரித்த பெருந்தகையாராகிய நேச நாயனாரது தன்மையினைப் பேசத் தொடங்குகின்றோம்.

(வி - ரை) இஃது இதுவரை கூறிய சரிதமுடிப்பும், மேற் கூறப்புகும் சரிதத் தோற்றுவாயுமாம்.

வருநாள் என்றும் பிழையா - வருநாள் - நீர்ப்பெருக்கு வரும் நாள்; இஃது உழவுக்குதவியாகிய பருவத்தே பெருகுதல்; "எந்நாளும் பொய்யா தளிக்கும்" (1206); "வான் பொய்ப்பினும் தான் பொய்யா" (பட் - பாலை - 5); தெய்வப் பொன்னி - தெய்வத்தன்மை வாய்ந்த என்றது பயிரையும் உயிரையும் வளர்க்கும் தன்மை. உயிர்களைச் சைவத்திறத்திற் பெருகச்செய்து உய்வித்தல் காவிரியின் சிறப்பு.

பொன்னி வளம்பெருக்க வளவர்குலம் பெருக்கும் - குடிவளம் பெருகச் சோல் வளம் பெருகும் என்ற உண்மை.

தங்கள் திருநாடு போல் — சைவத்திற் பிறழாது வளர்க்கும் தன்மை உவமை; தங்கள் திருநாடு - தாம் அவதரித்த நாடாகிய சோழநாடு.

சீர்விளக்கின் - சிறப்புடைய விளக்குப் போன்ற அம்மையாருடைய.

தம்செயல் - அன்பர்க்களிக்கும் தொண்டு.

நல்கும் — பெருந்தகையார் என்று கூட்டுக. உடைகீள் - உடையும் கீளும்; உம்மைத் தொகை; கீள் - லங்கோடு என்பர்; திறம் - திருத்தொண்டின் திறத்தினை.

ஒருநாளும்...நேசர் - நேசநாயனாரது வரலாற்றுச் சுருக்கமாகிய தோற்றுவாய்.

பெருநாமம் — பெருகிய நற்பண்பு; சாலியர் - துணி நெய்யும் குலத்தவருள் ஒருவகையினர். அறுவையர் குலம் - (4193) என்பது காண்க. சாலிகர் என்றும் வழங்கும். 3

சரிதச்சுருக்கம்: மங்கையர்க்கரசியம்மையார் புராணம் :—இவர், மங்கையர்க்கெல்லாம் ஒப்பற்ற அரசியார்; எமது குலதெய்வம்; சோழர்களது திருக் குலக் கொழுந்து; செங்கமலத் திருமடந்தை; பாண்டியர் குலத்துக்குவந்த பழிதீர்த்த தெய்வப்பாவை; ஆளுடைய பிள்ளையாரருளினாலே தமிழ்நாட்டுக்கு நேர்ந்த சமணப்

பீடையினை நீக்கித் திருநீற்றினைப் பரவச் செய்தவர்; ஆளுடைய பிள்ளையாரது புனித வாக்கினாலே பாடல்பெறும் பெருந்தவத்தினையுடையார்.

நெடுமாறனாருக்குச் சைவ வழித்துணையாய் நெடுங்காலம் வாழ்ந்து குற்றமறுக்கும் நெறியாகிய சிவநெறியில் நின்று அவரோடுங்கூட சிவன்றிருவடிக்கீழ் அமர்ந்தனர்.

கற்பனை :—(1) தாம் புகுந்த மரபுக்கு வரும் பழியை நீக்கி நன்னெறிப்படுத்துதல் கற்புடைய மங்கையர் கடமை.

(2) தமது குடும்பத்தைப் போலவே தமது நாட்டுக்கு வரும் இடர்நீக்கி நன்னெறியிற் செலுத்துதல் கற்புடைய மங்கையர் செய்கையாம்.

(3) திருநீற்று நெறியின் விளங்குதல் நாட்டுக்கு நன்மையேயாகும்.

(4) ஞானசாரியரை அடுத்து நாடு நலம்பெறுதற்பொருட்டு அவரானைத் தேடுதல் பெருங்கற்புடைய மங்கையர் செயலாம்.

(5) பெரியோராற் பாராட்டப் பெறும் பேறு முன்னைப் பெருந்தவத்தாலன்றி இசையாது.

(6) தமது நாயகரது உயிர்க்குறுதியாகிய நெறிதேடி யடைவித்தல் கற்பரசிகளின் செயல்.

(7) தம் நாயகருக்கு உடற்றுணையாவது மட்டுமன்றிச் சைவவழித் துணையுமாகி நின்று அவருடனே இறைவரது திருவடியடைதல்கற்புடைய சிறந்த மங்கையர் தன்மை.

தலவிசேடம் : மதுரை - முன் உரைக்கப்பட்டது. III. பக். ௬௩௪௦.

66. மங்கையர்க்கரசியம்மையார் புராணம் முற்றும்



சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# 67. நேசநாயனார் புராணம்

தொகை

“ மன்னியசீர் மறைநாவ னின்றவூர்ப் பூசல்
வரிவளையாண் மானிக்கு நேசனுக்கு மடியேன் ”
—திருத்தொண்டத்தொகை - (11)

வகை

“ நாட்டமிட் டன்றரி வந்திப்ப வெல்படை நல்கினர்தந்
தாட்டரிக் கப்பெற் றவனென்பர் சைவத் தவரரையிற்
கூட்டு மகப்படக் கோவண நெய்து கொடுத்துநன்மை
யீட்டுமக் காம்பீலிச் சாலிய நேசனை யிம்மையிலே ”
—திருத்தொண்டர் திருவந்தாதி - (80)

விரி

4192. சீர்வளர் சிறப்பின்மிக்க செயன்முறை யொழுக்கங் குன்றா
நார்வளர் சிந்தை வாய்மை நன்மையார் மன்னி வாழும்
பார்வளர் புகழின் மிக்க பழம்பதி மதிதோய் நெற்றிக்
கார்வளர் சிகர மாடக் காம்பீலி என்ப தாகும். க

புராணம் :—இனி, நிறுத்த முறையானே, பன்னிரண்டாவது மன்னியசீர்ச் சருக்கத்தினுள் மூன்றாவது நேசநாயனார் புராணம் கூறத் தொடங்குகின்றார் ; நேசநாயனாரது வரலாறும் பண்பும் கூறும்பகுதி.

தொகை :—பொழிப்பு உரைத்துக் கொள்க.

நேசனுக்கும் - உம்மை - எண்ணும்மை ; நேசன் - காரண இடுகுறிப் பெயர் ; சிவனையும் சிவனடியாரையும் போற்றும் நேசு (ஞான விளக்கம்) நேசம் எனப்பட்டது என்பது ஆசிரியர் திருவாக்கு (4192) ; “ தாள்தரிக்கப் பெற்றவன் ” (வகை)

வகை :—நாட்டமிட்டு...நல்கினர்தம் - கண்ணைத் தோண்டி இட்டு அருச்சித்து முன்னாள் திருமால் வழிபட வெற்றிதரும் சக்கரப்படையினை அளித்த இறைவரது ; தாள்...என்பர் - திருவடியைத் தாங்கப்பெற்றவர் என்று எடுத்துக் கூறுவர் ; சைவத்தவர் அரையில்...கொடுத்து - சிவனடியார்களுடைய அரையில் கட்டும் உடையும் கீளொடு கோவணமும் தாமே நெய்து கொடுத்து ; நன்மை...இம்மை

யிலே - இம்மையிலே நன்மையினைப் பெருகப்பெற்ற காம்பீலி நகரத்தில் சாலியர் மரபில் உதித்த நேசநாயனாரை.

நாட்டம் - கண்; நாட்டத்திற்குரிய கருவியாகிய கண்ணை நாட்டம் என்றார்; ஆகுபெயர்; இனி, நாடு பகுதியாகக் கொண்டு, நாட்டமிட்டு - மனத்தெளிவு பூண்டு வந்திப்ப என்றுரைத்தலுமாம். வேல்படை - சக்கரம்; திருவீழிமிழலையில் மால், கண்மலர் கொண்டு அருச்சித்துச் சக்கரம் பெற்ற சரிதக் குறிப்பு; "நீற்றினை நிறையப் பூசி" என்பது முதலிய தேவாரத் திருவாக்குக்களிலும் இவ்வரலாறு போற்றப்பட்டது; தாள்தரிக்கப் பெறுதலாவது எப்போதும் திருவடியை மனத்துள் வைத்து நினைந்திருத்தல்; அரையிற்கூட்டும் - இடுப்பில் சேர்த்துக் கட்டும் உடை; அகப்படக் கோவணம் - அகப்படமும் கீளும் கோவணமும்; அகப்படம்-உள் உடை; "உடையுங் கீளும் கோவணமும்" (4194 - 4195).

சைவத்தவர் - சிவனடியார்; காம்பீலி - நகரம். தலவிசேடம் பார்க்க; சாலியர் - குலமரபு; இம்மையிலே - கூட்டும் என்க. நேசனை - என்பர் என்று இயைக்க. கூட்டுமக்கப்படம் - என்பதும் பாடம். கப்படம் - உடை; (க.உடம்பு).

தொகை நூல் பெயர் கூறிற்று; ஊரும் மரபும் தொண்டும் வரலாறும் பண்பும் வகைநூல் வகுத்தது.

விரி :—4192. (இ - ள்) சீர்வளர்...குன்றா - சீர்களை வளர்க்கும் தன்மையுடைய சிறப்பின் மிக்க செயல்களின் முறைமையில் நல் ஒழுக்கம் குறையாத; நார் வளர்...நன்மையார் - அன்புமிக்க சிந்தையும் வாய்மையும் நன்மையும் மிக்கவர்கள்; மன்னிவாழும்...பழம்பதி - நிலைபெற்று வாழ்தற்கிடமாகிய உலகில் ஓங்கிய புகழால் மிகுந்த பழம்பதியாவது; மதிதோய்...என்பதாகும் - சந்திரன் தவழ்கின்ற முகட்டினையும் மேகங்கள் தோயும் சிகரங்களையும் உடைய மாடங்கள் நிறைந்த காம்பீலி என்ற ஊராகும்.

(வி - ரை) சீர்வளர் - சீர் - சீர்த்தி; பெருமை. சீர்...ஒழுக்கம் - உலகியல் பற்றிய ஒழுக்கங்களின் மிக்கனவாகிய உயிரினியல் பற்றிய ஒழுக்கம் என்பது குறிப்பு.

வளர் - செயல் என்று கூட்டுக. வளர்க்கும் தன்மையுடைய சிறந்த செயல்கள்.

சீர்வளர் - நன்மையார் - அப்பதியில் வாழும் குடிகளின் மேன்மைத் தன்மையால் பதியின் சிறப்புக் கூறியவாறு.

சிந்தை - வாய்மை - நன்மையார் - மனம் வாக்குக் காயம் என்ற மூன்றனும் நலமிக்கவர்கள். நன்மை - செயல் முறை ஒழுக்கம். நார் - அன்பு. நன்மையார் - பெரியோர்கள்.

நெற்றி - முகடு; சிகரம் - சிறு தூபிகள்.

மதிதோய் - கார்வளர் - என்பன மாடங்களின் உயர்ச்சி குறித்தன.

காம்பீலி—பல்லாரிச் சில்லாவில் உள்ளதொரு நகரம். தலவிசேடம் பார்க்க. 1

4193. அந்நக ரதனில் வாழ்வா ரறுவையர் குலத்து வந்தார்
மன்னிய தொழிலிற் றங்கண் மரபின்மேம் பாடு பெற்றார்
பன்னகா பரணற் கன்பர் பணிதலைக் கொண்டு பாதஞ்
சென்னியிற் கொண்டு போற்றுந் தேசினார் நேச ரென்பார். ௨

(இ - ள்) அந்நகரதனில்...வந்தார் - அத்திருநகரத்தில் வாழ்கின்றவர்; அறுவையர் என்னும் சாலியர் குலத்தில் அவதரித்தவர்; மன்னிய...பெற்

ரூர் - நிலைபெற்ற சிவனைத் தொழிலில் தமது மரபில் மேன்மையுற்றனர் ; பன்னகாபரணற்கு...தேசிகனர் - பாம்பினை அணியாக அணிந்த சிவனுக்கு அன்பர்களாயுள்ளவர்களது பணியினைத் தலையாக மேற்கொண்டு அவர்களது திருப்பாதங்களைத் தலையிற் சூடிப் பணிந்து துதிக்கும் ஒளியினையுடையவர் ; நேசரென்பார் - நேசரென்று சொல்லப்படுபவர்.

(வி - ரை) அறுவையர் குலம் - துணி செய்பவர் மரபு ; அறுவை வாணிகர் மரபு என்பர் ; தொகை நூல்களுள் மதுரை அறுவை வாணிகன் இளவேட்டனர் என்னும் சங்கப்புலவர் பெயர் காணப்படுகின்றது ; அறுவை - தறியினின்றும் அறுத்தெடுப்பதனல், உடை, அறுவை எனப்படும் ; துணித்தெடுப்பதால் துணியென்றும், வெட்டி எடுப்பதால் வேட்டி என்றும் இவ்வாறு காரணப் பெயர்கள் பலவும் காண்க.

மன்னிய...பெற்றார் - இஃது உலக நிலையில் அவரது குலத்தொழில் மேம்பாடு பற்றியது ; திருநீலகண்டர், திருநாளைப்போவார், அதிபத்தர் முதலிய நாயன்மார்களது வரலாறுகளும் ஈண்டுச் சிந்திக்கற்பாலன. குலத்தொழிலில் மேம்பட்டு அத்தொழிலினைப்பற்றி நின்றே திருத்தொண்டின் மேன்மை யொழுக்கம் செலுத்திய சிறப்பும் காண்க.

பன்னகாபரணர் - சிவபெருமான் ; பன்னகம் - பாம்பு ; பாம்பினை அணியாகக் கொண்டவர்.

அன்பர் பணி தலைக்கொள்ளுதல் - அடியார்களது பணியினைச் சிரமாக மேற்கொண்டு செய்தல் ; "அன்பர்பணி செய்யவெனை யாளாக்கி விட்டுவிட்டால், இன்பநிலை தானேவந் தெய்தும் பராபரமே" (தாயுமா).

பாதம் சென்னியிற் கொண்டு - அன்பர்களது திருவடியில் வணங்கி.

பணி தலைக்கொள்ளுதல் என்றதனல் மனத்தின் றொழிலும், சென்னியிற் கொண்டு என்றதனல் உடலின் றொழிலும், போற்றும் என்றதனல் வாக்கின்றொழிலும் ஆக முக்கரணங்களாலும் செய்யும் வழிபாடு கூறப்பட்டது. முன் பாட்டிற் கூறிய குறிப்பும் காண்க. மேல்வரும் பாட்டில் மேலும் விரித்தல் காண்க.

தேசினர் - அடியார் பணிகளை முட்டாமற் செய்வோர் பால் ஞானவொளி விளக்கமுண்டாம் என்பது ; தேசினர் நேசர் - நேசர் என்ற சொற்பொருள் விரித்தபடி. தேசு - ஒளி - புகழ்; ஈண்டு அன்பு என்னும் பொருள் குறித்து நின்றது.

4194. ஆங்கவர் மனத்தின் செய்கை யரனடிப் போதுக் காக்கி
ஓங்கிய வாக்கின் செய்கை யுயர்ந்தவஞ் செழுத்துக் காக்கி
தாங்குகைத் தொழிலின் செய்கை தம்பிரா னடியார்க் காகப்
பாங்குடை யுடையுங் கீளும் பழுதில்கோ வணமு நெய்வார். ௩

4195. உடையோடு நல்ல கீளு மொப்பில்கோ வணமு நெய்து
விடையவ ரடியார் வந்து வேண்டுமா றீயு மாற்றால்
இடையறா தளித்து நாளு மவர்கழ லிறைஞ்சி யேத்தி
அடைவுறு நலத்த ராகி யரனடி நீழல் சேர்ந்தார். ௪

4194. (இ - ள்) ஆங்கவர்...போதுக்காக்கி - அந்நிலையில் அவர் தமது மனத்தின் றொழிலைச் சிவனது திருவடித் தாமரைக்கு ஆக ஆக்கி ; ஓங்கிய...எழுத்துக்காக்கி - மேன்மேல் ஓங்கிய வாக்கினது தொழிலை உயர்வுடைய திருவைந்தெழுத்தினுக்காக

ஆக்கி ; தாங்கு...ஆக - தாங்கிய கைத்தொழிலின் செயல்களை யெல்லாம் தமது பெருமானுடைய அடியவர்களுக்கு ஆகும்படி ; பாங்குடை...செய்வார் - பாங்கு பெறும் உடையும் கீளும் பழுதிலாத கோவணமுமாகிய இவற்றை செய்வாராகி ;

4195. (இ – ள்) உடையொடு...நெய்து - உடையினோடு நல்ல கீளினையும் ஒப்பில்லாத கோவணத்தினையும் நெய்து ; விடையவர்...அளித்து - இடபத்தை யுடைய இறைவரது அடியார்கள் வந்து வேண்டியவாறே கொடுக்கின்ற முறைப்படி இடையறாது கொடுத்து ; நாளும்...ஆகி - ஒவ்வொரு நாளும் அவர்களுடைய திருவடிகளை வணங்கித் துதித்து அடையும் நன்மையைப் பெற்றாராகி ; அரனடி நீழல் சேர்ந்தார் - சிவபெருமானது திருவடிநீழலினை அடைந்தனர். ௬

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன ; தொண்டு செய்தலும் அதன் பயனும் இடையீடின்றித் தொடர்ந்துவரும் நிலைக்குறிப்புப்பட இவையும் தொடர்ந்து நின்றன.

4194. (வி - ரை) குறிப்பு :—திருவாசகச் சொற் பொருளாட்சியினை மேற் கொண்டு போற்றி ஆசிரியர் அழகுபட எடுத்துக்காட்டியருளிய இடங்களில் இது சிறந்தவொன்றாகும். "சிந்தனைநின் றனக்காக்கி நாயி னேன்றன் கண்ணிணைநின் றிருப்பாதப் போதுக் காக்கி, வந்தனையும் அம் மலர்க்கே யாக்கி வாக்குன் மணிவார்த் தைக் காக்கி" என்பது திருவாசக திருவாக்கு. (சத - 26)

ஆங்கு - முன்பாட்டிற் கூறிய "நேசரு"ராய் ஒழுகிவரும் அந்நிலையில்.

மனத்தின் செய்கை - நினைப்பு ; செய்கை - நிகழ்த்திய செயல் ; அரனடிப் போது - போது - மலர் ; "திருப்பாதப்போது" - என்பது திருவாசகம்.

இங்குக் கூறிய மூவகைச் செய்கைகளையும் ஆக்குதலாவது அவ்வந்நிகழ்ச்சி களையும் வேறொன்றிற் சேராது அவ்வவற்றின்பாலே யாகும்படி பயிலச் செய்தல்.

மனம்-வாக்கு கைத்தொழில்-என்பன மூன்று கரணங்களையும் குறித்தல்காண்க.

மனத்தின் செய்கை - அரனடிப் போதுக்காக்கி - மனம் சிவன்றிருவடிகளையே இடையறாது நினைந்திருத்தல்; சிவன் உயிர்களுக்கு இடையறாது செய்யும் பேரருளை இடையறாது நினைந்தவண்ணமாக நிற்றல். இஃது இடையறாத பயிற்சியால் வருவது.

ஓங்கிய - மேன்மேல் எழுகின்ற - வாக்கு, முன்கூறிய மனத்தின் றொழிற்பாட் டின்படியே எழுகின்றதனாலும், பிறருமறிய வருதலானும் ஓங்கிய வாக்கு - என்றார்.

வாக்கின் செய்கை உயர்ந்த அஞ்செழுத்துக்காக்குதலாவது வாக்கினால் இடை யறாது திருவைந்தெழுத்தினை எண்ணி உச்சரித்துக் கொண்டிருத்தல். (போதம். 9ம். சூத்),

உயர்ந்த அஞ்செழுத்து-மந்திரங்கள் யாவற்றினும் தலைசிறந்ததிருவைந்தெழுத்து ; "ஆதிமந்திர மஞ்செழுத்து" (2596) ; மகாமந்திரம் ; "சிவனுக்கு மேற்பட்ட தெய்வமில்லை ; ஐந்தெழுத்துக்கு மேற்பட்ட மந்திரமில்லை" என்பது பழமொழி.

உயர்ந்த - எல்லா மந்திரங்களினும் மேலாகியதும், அம்மந்திரங்களை யெல்லாம் உண்ணின்று இயக்கும் சிவ சிற்சத்தியே உருவமாகியதும் ஆகிய; "ஆதி மந்திர மஞ் செழுத் தோதுவார் நோக்கு, மாதி ரத்தினும் மற்றைமந் திரவிதி வருமே" (2596) என்ற விடத்து இப்பெருமையினை எடுத்துக் காட்டியவாறு காண்க. "வாக்குன் மணிவார்த்தைக் காக்கி" (திருவா). அங்கு மணிவார்த்தை என்றது திருவைந் தெழுத்தேயாம் என்று ஆசிரியர் பொருள் காட்டியருளும் நிலையும் கண்டுகொள்க. "சிவனஞ் செழுத்து", "திருநாம மஞ்செழுத்து", "மாசின் மணியின் மணி வார்த்தை" என்பனவாதி திருவாக்குக்களும் காண்க. "இருதலை மாணிக்கம்" என்ற வழக்கும் காண்க.

உயர்ந்த - உயர்த்துகின்ற எனப் பிறவினையாகப் பொருள் கொண்டு ஆன்மாக்களைப் பிறவிப் படுகுழியினின்றும் மேல் எடுத்து உயர்த்தும் என்ற குறிப்புப்பட உரைத்தலுமாம்.

கைத்தொழிலின் செய்கை - கைத்தொழில்-இங்கு உடம்பாற் செய்யும்தொழில்கள் எவையும் என்ற பொருள் தந்து நின்றது. தாங்குதல் - மேற்கொள்ளுதல்.

பாங்கு - உரிய பண்பு; நிலை; இதனை உடை, கீள், கோவணம் என்ற மூன்றுக்கும் கூட்டுக.

பழுதில் கோவணம் - பழுதில் - "ஒங்கு கோவணப் பெருமை" (515) என்று பலவும் அமர்நீதியார் புராணத்துட் கூறுவன வெல்லாம் இங்கு நினைவு கூர வைத்து இந்த அடைமொழி தந்தோதினர்.

மேல் வரும் பாட்டிலும் "ஒப்பில் கோவணம்" என்பது காண்க. பிறிதினியைபு நீக்கிய விசேடணம்.

நெய்வாரர் - முற்றெச்சம்; நெய்வார் - நெய்து-அளித்து - ஏத்தி - ஆகிச் - சேர்ந்தார் என்று முடிபுகொள்க. 3

4195. (வி - ரை) நெய்து - நெய்வாரர் (ஆகி) - நெய்து - அளித்து என்று கூட்டுக. முன்னர் நெய்வாரர் என்ற முற்றெச்சம், மனவெழுச்சியினையும் தொழில் முயற்சியினையும் குறித்தது; இங்கு நெய்து என்றது தொழில் முற்றியநிலை குறித்தது.

வேண்டுமாறு - வேண்டும்படியே; வேண்டியவாறே.

ஈயுமாற்றினால் அளித்தல் - ஆறு - முறை; கொடுக்கும் வகையாவது மனநெகிழ்ச்சி, பணிவு, இன்சொல் முதலிய முறைமையுடன் ஈதல்; அவர் - அடியவர்.

அடைவுறும் நலம் - அளித்தலாலும், இறைஞ்சி ஏத்தலாலும் அடையும் நலம்; அடைவுறும் - அவர்களையே தமது தலைவர் என்றுட்கொண்டுசாரும் என்றலுமாம்.

அறியுமாற்றால்—என்பதும்பாடம். 4

வேறு

4196. கற்றை வேணி முடியார்தங் கழல்சேர் வதற்குக் கலந்தவினை
சேற்ற நேசர் கழல்வணங்கிச் சிறப்பான் முன்னைப் பிறப்புணர்ந்து
பெற்ற முயர்த்தார்க் காலயங்கள் பெருக வமைத்து மண்ணாண்ட
கொற்ற வேந்தர் கோச்செங்கட் சோழர் பெருமை கூறுவாம். ரு

(இ-ள்) கற்றை...வணங்கி - கற்றையாகிய சடையினை முடியாகவுடைய இறைவரது திருவடிகளைச் சேர்தவற்காக முன் தம்மைக் கலந்திருந்த வினைச் சார்புகளை அறுத்த நேசநாயனாரது திருவடிகளை வணங்கி, அத்துணைகொண்டு, சிறப்பான் முன்னைப் பிறப்புணர்ந்து - தவமுதிர்வாகிய சிறப்பினாலே தமது முன்னைப் பிறப்பினை உணர்ந்து, அவ்வுணர்ச்சியுடனே வந்தவதரித்து; பெற்றம்...வேந்தர் - இடபக்கொடியை உயர்த்திய சிவபெருமானுக்கு ஆலயங்கள் அனேகம் எடுத்து, மண்ணுலகம் காவல்பூண்ட அரசாட்சிசெய்து வெற்றியையுடைய வேந்தராகிய; கோச்செங்கட் சோழர்...கூறுவாம் - கோச்செங்கட் சோழரது பெருமையினைக் கூறத் தொடங்குகின்றோம்.

(வி - ரை) ஆசிரியர் தமது மரபின்படி இதுவரை கூறிவந்த சரிதத்தை வடித்து முடித்துக்காட்டி மேல்வரும் புராணத்துக்குத் தோற்றுவாய் செய்யும் வகையாலே அச்சரிதச் சருக்கமும் அறிவிக்கின்றார்.

கழல் சேர்வதற்குச் - செற்ற - என்றுகூட்டுக ; கழல் சேர்வதற்கு - சேர்வதன் பொருட்டு ; வினை செற்ற திறம் அடியார்க்களித்து வழிபட்டதும், அரனை இடையறாது நினைந்து வந்ததும் ஆம்.

சிறப்பு - முன்னைத் தவ முதிர்ச்சி.

முன்னைப் பிறப்புணர்ந்து - முன் பிறப்புணர்வுடனே பிறந்தனர் என்பது ; மேலும் " அருளால் முன் உணர்ந்து " என்பது காண்க. முன்னுணர்தல் தவமுதிர் வாலும் திருவருளாலுமே வருவதாம்.

ஆலயங்கள் - பெருக - மேல் வரும் 4208-4211 பாட்டுக்களையும், ஆண்டுரைப் பவையும் பார்க்க.

கொற்றம்-வெற்றி; தவத்தின்வெற்றியும் அரசாதுவெற்றியுமாம். இவர்தென்னவனு யுலகாண்ட என்றபடி பாண்டிய நாட்டையும் ஆண்டனர் என்ற வரலாறுங்குறித்தது.

பெருமை கூறுவாம் - சரிதம் கூறுவாம் என்னாது பெருமை என்றது, முன்னை நிலையும் இந்த வந்த வரலாறும் என இரண்டு சரிதங்கள் ஒரு புராணத்துட் கூறவரும் இப்பெருமையும், ஆளுடைய பிள்ளையார் அரசுகள் நம்பிகள் முதலிய பரமாசாரியர்க ளாலும் போற்றப்படும் பெருமையும், வைணவ ஆசாரியர்களாகிய ஆழ்வாராதிகளும் போற்றும் பெருமையும் முதலிய அளவிறந்த பெருமைகளைக் குறிக்க. 5

சரிதச்சுருக்கம் - நேசநாயனார் புராணம் :—நல்லொழுக்கமுடைய பெரியோர் கள் நிலைபெற வாழும் காம்பீலி என்னும் பழம் பதி ஒன்றுண்டு. அதில் அறுவையர் குலத்தில் செல்வம்மிக்க குடியில் வந்தவர் நேசர் என்பவர். அவர் இடையறாது சிவனடியார்களைப் போற்றிவந்தார். ஒருபோதும் சிவனடிச் சிந்தனைமறவார். வாக்கினால் திருவைந்தெழுத தோதுதலையும் மறவார். தமது மரபின் கைத்தொழி லாகிய நெசவுத்தொழிலைச் சிவனடியார்க்காகவே செய்து வந்தார். உடையும் கீளும் பழுதில் கோவணமும் நெய்து அடியவர்களுக்கு இடைவிடாது, நாளும், அவர் வேண்டியவாறே முறையால் ஈந்து வந்து சிவனடி நிழல்சேர்ந்தார்.

கற்பனை :—(1) நல் ஒழுக்கம் பிறழாத மக்கள் வாழ்வது நகரத்துக்குப் பெருஞ் சிறப்பாகும்.

(2) குலமரபுத் தொழில் செய்து வாழும் நிலையில் அதனையே சிவத்தொண்டாகச் செய்தல் பெருமையுடையது.

(3) சிவனை இடையறாது நினைந்திருப்பதும் திருவைந்தெழுத்தை இடையறாது ஓதுதலும், உடம்பினால் செய்தொழில்களைச் சிவனடியார்க் களிக்கும்படி செய்தலும் ஆக மன மொழி மெய் என்ற மூன்றாலும் அடியார் பணிசெய்தல் மிக அரிது.

(4) அடியார்களுக்கு வேண்டுவனவற்றை வேண்டுமாறு ஈயும் ஆற்றால் அளிப் பது சிறந்த சிவபுண்ணியமாம்.

(5) அடியவர் வழிபாடே வீடுபேறு தரவல்லது.

தலவிசேடம் - காம்பீலி :—பல்லாரிச் சில்லாவில் காம்பிலி (Kambili) தாலூகாவில் உள்ளது காம்பிலி என்னும் நகரமாகும். அது நேசநாயனாரது தலம். இவர் தஞ்சைச் சில்லா மாயவரம் - கூறைநாடு என்னும் கொரநாட்டில் வதிந்தார் என்றும், அங்கே சிவாலயத்தில் காம்பிலியிலிருந்து கொணர்ந்த விநாயகர்-தண்டபாணி இம்மூர்த்திகளது திருவுருவங்களைத் தாபித்தார் என்றும் சொல்லப்படுகிறது. இவ் வூரில் உள்ள சாலியர்கள் இவரது திருநாளாகிய பங்குனி - ரோகிணியில் இவரது விழாக் கொண்டாடுகிறார்கள்.

67. நேச நாயனார் புராணம் முற்றும்

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# கோச்செங்கட்சோழ நாயனார் புராணம்

## தொகை

" தென்னவனா யுலகாண்ட செங்கணார்க் கடியேன் "

—திருத்தொண்டத் தொகை - (14)

## வகை

மைவைத்த கண்ட னெறியன்றி மற்றோர் நெறிகருதாத்
தெய்வக் குடிச்சோழன் முன்பு சிலந்தியாய்ப் பந்தர்செய்து
சைவத் துருவெய்தி வந்து தரணிநீ டாலயங்கள்
செய்வித் தவன்றிருக் கோச்செங்க ணானெனுஞ் செம்பியனே.

செம்பொ னணிந்துசிற் றம்பலத் தைச்சிவ லோகமெய்தி
நம்பன் கழற்கீ ழிருந்தோன் குலமுத லென்பர்நல்ல
வம்பு மலர்த்தில்லை யீசனைச் சூழ மறைவளர்த்தான்
நிம்ப நறுந்தொங்கற் கோச்செங்க ணானெனு நித்தனையே.

—திருத்தொண்டர் திருவந்தாதி - (81-82)

## விரி

4197. துலையிற் புறவி னிறையளித்த சோழ ருரிமைச் சோணாட்டில்
அலையிற் றரள மகிலொடுசந் தணிநீர்ப் பொன்னி மணிகொழிக்குங்
குலையிற் பெருகுஞ் சந்திரதீர்த் தத்தின் மருங்கு குளிர்சோலை
நிலையிற் பெருகுந் தருமிடைந்த நெடுந்தண் கான மொன்றுளதால். க

புராணம் :—இனி, நிறுத்த முறையானே, ஆசிரியர், பன்னிரண்டாவது மன்னியசீர்ச் சருக்கத்துள், நான்காவது கோச்செங்கட்சோழ நாயனாரது புராணங்கூறத் தொடங்குகின்றார். கோச்செங்கட்சோழரது வரலாறும் பண்புங்கூறும் பகுதி.

தொகை :—பாண்டிய அரசருமாயிருந்து உலகத்தை ஆண்ட கோச்செங்கட் சோழருக்கும் நான் அடியேன்.

தென்னவனுமாய் - என்க. சோழராயிருந்து சோழ நாட்டினை ஆண்டதுடன் தென்னவனுமாய் என்று இறந்தது தழுவிய எச்சவும்மை விரிக்க. இவர் பாண்டிய நாட்டையும் தம் அடிப்படுத்தி ஆண்டனர் என்பது சரிதவரலாறு. இதுபற்றியே வகைநூலுள் " நிம்ப நறுந்தொங்கல் " என்று பாண்டியர்க்குரிய வேப்பமாலை

பற்றிக் கூறினார். செங்கண்ணான் - நாயனாரது பெயர். அப்பெயர் அவரது தாயார் இட்டழைத்த செல்வப் பெயராகும் (4206) ; "செங்கட் பெயர்ச் செம்பியர் கோன்" என்பது முதலாகத் தேவாரத் திருவாக்குக்களினும் வழங்கியது காண்க.

வகை :—மை வைத்த...சோழன் - நீலகண்டராகிய சிவனது நெறியல்லாமல் மற்றை எந்நெறியினையும் பொருள் என்று கருதாத தெய்வத்தன்மையுடைய குடியில் வந்த சோழனார் ; முன்பு ..வந்து - முன்னைப் பிறப்பில் சிலந்தியாயிருந்து இறைவரது திருமேனிமேற் சருகுவிழாமை, தன் வாய்நூலினால் மேற்கட்டிப் பந்தரினைச் செய்து, அதனால் சைவத்திறத் துருவின் வந்து அவதரித்து ; தாணி...செய்வித்தவன் - இந்நிலவுலகிலே சிவனுக்கு நீடிய மாடக்கோயில்களாகிய ஆலயங்களை அமைத்தவர் ; கோச்செங்கணானெனும் செம்பியனே - கோச்செங்கணான் என்னும் பெயரினையுடைய சோழமன்னராவார். (81)

சிற்றம்பலத்தைச் செம்பொன் அணிந்து - சிற்றம்பல முகட்டினைச் செம்பொன்னினால் எழுதிவேய்ந்து ; சிவலோகம்...இருந்தோன் — சிவலோகமடைந்து இறைவரது திருவடிக்கீழ் அமர்ந்தவராகி ; குலமுதல் என்பர் - வழிவந்தவர் என்று சொல்வர் ; நல்ல...மறைவிரித்தான் - நல்ல மணமுள்ள மலர்களையுடைய தில்லை இறைவரது திருவம்பலத்தைச் சூழ மறையவர்க்கு மாளிகைகள் பல அமைத்தவரும் நிம்ப...நித்தனையே - மணமுடைய வேப்பமாலையையுடைய கோச்செங்கணான் என்னும் நித்தியத்துவம் வாய்ந்தவருமாகிய சோழனாரையே. (82)

81. தெய்வக்குடிச்சோழன் - தெய்வத்தன்மை வாய்ந்த சோழர் குடியில் - வந்தவர் ; முன்பு...வந்து - இவ்வரலாற்றினை விரிநூல் (4197 - 4206) விரித்துரைத்தது ; ஆலயங்கள் செய்வித்தவன் - 4208 - 4211 பார்க்க ; நீடாலயங்கள் - மாடக்கோயில்கள். செய்வித்தவன் - " மந்திரிகள் தமை ஏவி " (420) என்பது விரிநூல் .சைவத்துரு - சிவனடியார். செம்பியன் - சோழன்.

82. சிற்றம்பலத்தை (முகடு)ச் செம்பொன் அணிந்து என்க. செம்பொன்... கழற்கீழிருந்தோன் - இரணியவர்மச்சக்கரவர்த்தி ; கோயிற் புராணத்தன் இவ்வரலாறு விரிக்கப்பட்டுள்ளது ; இவர் பணி செய்தது சிற்றம்பலம் ; ஆதித்தச் சோழர் பொன்வேய்ந்தது பொன்னம்பலம் (அதற்கு முன்புள்ளது) (4111); அபயர் பொன்வேய்ந்தது பேரம்பலம் (இவற்றின் வேறாயது) (8); இவை ஒன்றோடொன்று மயங்கி யறியத்தக்கனவல்ல ; குலமுதல்-வழி தோன்றல்; "குடிமுதலோர்"(4111); ஈசனைச்சூழ மறைவளர்த்தான் - திருவம்பலத்தைச் சுற்றிலும் திருவீதிகளில் மறையவர்களுக்குத் திருமாளிகைகள் பல சமைத்தார் ; (4212) ; மறை - திருவுடையந்தணர்களது வீடுகள் ; வளர்த்தல் - கட்டுதல் ; நிம்ப நறுந்தொங்கல் - " தென்னவனாயுலகாண்ட " (தொகை) ; பாண்டிய நாட்டினையும் இவர் ஆட்சி செய்தனர் என்பது சரிதவரலாறு ; நித்தன் - சிவபதமாகிய அழியா நிலைபெற்றவர்.

விரி :—4197. (இ - ள்) துலையில்...சோணாட்டில் - துலைத்தட்டில் வைத்துப் புறவின் எடைக்குச் சமமாகத் தனது உடற் றசையை நிறுத்துக் கொடுத்த சிபிச்சக்கரவர்த்தி மரபில் வரும் சோழர்களுக்கு உரிமையாகிய சோழநாட்டில் ; அலையில்... மருங்கு - அலைகளினால் முத்துக்களையும் அகிலொடு சந்தனத்தையும் கொண்டுவரும் அழகிய நீரினையுடைய காவிரியாற்றின் மணிகளைக் கொழிக்கும் கரையில் பெருகுகின்ற சந்திர தீர்த்தத்தின் பக்கத்திலே ; குளிர் சோலை...உளது - குளிர்ச்சியையுடைய சோலைகளில் நிலையாக வளர்ந்தோங்குகின்ற மரங்கள் நெருங்கிய நீண்ட குளிர்ந்த கானம் ஒன்று உள்ளது ; (ஆல் - அசை).

(வி - ரை) துலையிற் புறவின் நிறை அளித்த சோழர்-இது சிபிச்சக்கரவர்த்தியின் சரிதம் குறித்தது. சிபிச்சக்கரவர்த்தி ஒருகாலத்தில் சீகாழியில் அரியதொரு யாகம் செய்திருந்தபோது அவரது பெருமையை உலகுக்கு அறிவிக்கத் திருவுளங்கொண்டு இறைவர் பணித்தருளியவாறு, தீக்கடவுள் ஒரு புறாகவும், இந்திரன் அதனைத் துரத்திவரும் பருந்தாகவும் உருவெடுத்துப் போந்து, புறா அவர்பால் அடைக்கலம் புக்கது ; பருந்து தனக்கு இரை யென்று அதனைத் தன்னிடம் விடும்படி கேட்டது ; சிபி அப்புறாவின் எடைக்கு ஈடாகத் தமது உடலின் தசையினை அரிந்து துலையிலிட்டனர். அது எடை குறையத் தாமே துலை ஏறி நிறைவு செய்து திருவருள் பெற்றனர் என்பது அச்சரித வரலாறு.

அடைக்கலம் புகுந்தாரைக் காக்கத் தன்னுயிரினையும் தரும் அறம்பற்றிச் சோழர் மரபின் பெருமை விளங்க நாட்டுச் சிறப்புக் கூறினார், ஈண்டு இப்புராணத்தினுள் அதனினும் மிக்கதாய்ச் சிவதருமங் காத்தற்பொருட்டு யானையினை ஒறுத்தல் காரணமாகத் தன்னுயிரினையும் தரும் கோச்செங்கட் சோழர் பெருமைக் குறிப்புப் படுதற்கு. "இவர் குலத்தோன் மேற்பறவை, மன்னுயிர்க்குத் தன்னுயிரை மாறாக வழங்கினனால்" (இராமா - குலமுறை - பட் 7) என்று, பிறரும் இப்பெருமையை எடுத்துக் கூறுதல் காண்க. சங்க நூல்களிலும் மற்றும் பல பெருநூல்களிலும் சிறப்பாக இச்சரிதம் போற்றப் பட்டுள்ளது.

நிறை - எடை சமமாகத் தமது தசையின் அளவு ; துலை - தராசு ; அலையில் தரளம் அகிலோடு சந்து அணி - அலைகளினால் முத்து அகில் சந்து இவற்றை வாரிவரும் அமைதியாகிய வெள்ளம்.

மணிகொழிக்கும் தூலை-தாளம் அகில் சந்து இவற்றைக்கொண்டுவரினும், மணிகளைப் பக்கங்களிற் பெருக இறைத்துச் செல்வது ; தூலை - கரை.

சந்திரதீர்த்தம் - சந்திரன் தனக்குத் தக்க சாபத்தால் நேர்ந்த குறை நோயினைத் தீர்க்க இங்குத் தீர்த்தங் கண்டு வழிபட்டு நலனடைந்தான் என்பது தலவரலாறு. பெருகு - ஊற்றுமிகும்.

நிலையிற் பெருகும் - இருந்தவாறே பரவி வளரும்.

சந்திரகாந்தத்தின்—என்பதும் பாடம். 1

4198. அப்பூங் கானில் வெண்ணாவ லதன்கீழ் முன்னா ளரிதேடும்
மெய்ப்பூங் கழலார் வெளிப்படலு மிக்க தவத்தோர் வெள்ளானை
கைப்பூம் புனலு முகந்தாட்டிக் கமழ்பூங் கொத்து மணிந்திறைஞ்சி
மைப்பூங் குவளைக் களத்தாரை நாளும் வழிபட் டொழுகுமால். உ

(இ - ள்) அப்பூங்...வெளிப்படலும்-அந்தப் பூங்கானிலே வெண்ணாவல் மரத்தினடியிலே, முற்காலத்தில் விட்டுணுதேடிய உண்மையுருவாகிய பூப்போன்ற திருவடியுடைய இறைவர் வெளிப்பட்டருள; மிக்க...இறைஞ்சி - மிகுந்த தவத்தினையுடைய ஒரு வெள்ளையானை கையினாலே அழகிய நீரை முகந்து திருமஞ்சன மாட்டி மணமுடைய பூங்கொத்துக்களையும் இறைவரது திருமேனியிலணிந்து வணங்கிக், கரிய குவளை போன்ற கழுத்தினையுடைய இறைவரை நாடோறும் வழிபட்டு ஒழுகி வந்தது.

(வி - ரை) அப்பூங்கான் – முன்கூறிய அந்த மலர் வனம் என்று அகரம் முன்னறிசுட்டு.

வெண்ணாவல் – " ஞானச் சார்வாம் வெண்ணாவல் " (4209) ; இத்தலத்துள் வெண்ணாவல் வனத்துத் தவம்புரிந்த சம்புமுனிவர் ஒருநாள் தாம் முன் கண்டறியாத

அதி தெய்வீகமாகிய ஒரு வெண்ணாவற் கனி தம்முன் விழ, அதனைத் திருக்கயிலையில் இறைவருக்கு ஊட்டி எஞ்சிய அதன் விதையைத் தாம் உண்ண, உடனே அது முளைத்துச் சிரத்தின் வழியே வெளிப்பட்டு எழுந்து - வேதங்கள் - வேர்; உபநிடதங்கள் - அடிமரம் ; ஆகமங்கள் - கிளைகள் ; சரியை கிரியை யோகம் — கிளை சிறுகிளை - பூங்கொத்து ; இவகை ஞானங்கள் அரும்பு மலர் காய்கள் இரதம் - என இவ்வாறு தழைத்து வானளாவ உயர்ந்து எவர்க்கும் மலபரிபாகம் தந்துவிளங்கக் கண்டு முனிவர் வியந்து, பெருமானைப் பிரார்த்தித்து அவர் அருளியவாறே இத்தலத்தெல்லையில் அம் மரத்தினடியில் தவம் புரிந்து இருக்கின்றனர். இதனடியில் இறைவரும் வெளிப்பட்டெழுந்தருளியிருக்கின்றனர் என்பது தலமான்மிய வரலாறு.

அரிதேடும்...வெளிப்படலும் — தற்போதத்தால் தாம் காண்போம் என்பார்க்கு அரியவர் ; அன்புடைய அடியவர்க்காகத் தாமே வெளிப்பட்டருளுவர் என்பது. வெளிப்படலும் - சிவலிங்கக்குறி காண்டலும் ; தானே முளைத்தவர் என்பார் வெளிப்படலும் என்றார்.

மிக்க தவத்தோர் வெள்ளானை - முன்னைப் பெருந்தவப் பேறுடையது ஒரு சாபத்தால் வெள்ளானையாய் வந்தது என்பது வரலாறு ; ஓர் - இஃது, இந்திரனது யானையன்று ; வேறொன்று என்பது.

வெள்ளானை - வழிபட்டோழுதமால் — யானை வழிபட்ட தலங்கள்பற்றித் தேவாரத் திருவாக்குக்களுள்ளும் போற்றப்படுதல் காண்க. "பிடியெலாம் பின் செலப் பெருங்கைமா மலர்தழீஇ, விடியலே தடமூழ்கி விதியினால் வழிபடும்" (பிள் - தேகானப் பேர் - கொல்லி - 7) ; "அடைந்தயிரா வதம்பணிய, மிக்கதனுக் கருள் சுரக்கும் வெண்காடும்" (ஷை வெண்காடு. சீகாமரம் - 7) என்பன முதலியவை காண்க. கை - துதிக்கையினால் ; குவளை - கருங்குவளை ; நீலமலர் ; நீலோற்பலம். மை - கரிய ; பூ - பூவாகிய; அழகிய என்றலுமாம்.

திருக்கயிலையில் சிவகணத்தவர்களுள் மாலியவான், புட்பதந்தன் என்ற இருவர் தம்முள் ஒருவரினொருவர் சிவன்திருத்தொண்டில் சிறந்தவராய், பொறாமையும் சினமும் மேலிட்டு, மாலியவான் புட்பதந்தனை யானையாகுக எனச்சபிக்க, அவன் மாலியவானைச் சிலந்தியாகுக எனச் சபிக்க, இருவரும் இறைவராணையின் வழியே இத்தலத்து யானையும் சிலந்தியுமாக வந்து சிவன் பணியிலே இகலி இறந்து பேறு பெற்றனர் என்பது தலமான்மிய வரலாறு ; மேல் ஆசிரியர் விரித்தலும் காண்க ; முன்னைநிலையிற் றவமுடைய சிவகணத்தவருள் ஒருவராயிருந்த நிலையினை மிக்க தவத்தோர் என்றார். இது போலவே மற்றையவரையும் ஞானமுடைய வொரு சிலந்தி (4199) என்று முன்னைக் குறிப்புப் பெறக் கூறினர். இவ்வாறு குறிப்பினாலன்றி முன்னை நிலைகளை வெளிப்பட உணர்த்துதல் ஆசிரியர் மரபன்று. ஆனால் இந்நாயனாரது சரிதத் தொடர்பு கூறவேண்டியது அவசியமாதலின் சிலந்தியே சோழராயினர் என்று அவர்தம் முன்னைநிலையை குறித்தார் என்க; அதற்குமேல் அச் சிலந்தியின் முன்னைநிலை கூறவேண்டியது அவசியமில்லாமையினையும் உணர்க. நாளும் - ஒவ்வொருநாளும் ; நாணாளும். 2

4199. ஆன செயலாற் "றிருவானைக் கா"வேன் றதற்குப் பெயராக
ஞான முடைய வொருசிலந்தி நம்பர் செம்பொற் றிருமுடிமேற்
கானல் விரவுஞ் சருகுதிரா வண்ணங் கலந்த வாய்நூலான்
மேனற் றிருமேற் கட்டியென விரிந்து செறியப் புரிந்துளதால். ௩

(இ - ள்) ஆன...பெயராக - முன்கூறிய அவ்வாறாயின செயலினாலே அப்பதிக்குத் திருவானைக்கா என்று பெயர் ஆயினதாக; ஞானமுடைய ஒரு சிலந்தி - ஞானம்பொருந்திய ஒரு சிலந்திப்பூச்சி; நம்பர்...புரிந்துளது - இறைவரது செம்பொன் போன்ற திருமுடியின்மேல் சூரியவெப்பமும் சருகும் படாதபடி தன்னுட் கலந்த வாயின் நூலினாலே முடிமேல் கட்டும் நல்ல மேற்கட்டிபோல விரிவுடையதாய் செறுங்கச் செய்தது; (ஆல் - அசை.)

(வி – ரை) ஆனசெயல் - முன்பாட்டிற் கூறிய அவ்வாறாயின செயல்.

ஆனைக்கா என்று பெயர் ஆக - ஆனை வழிபட்ட காரணத்தால் அப்பெயர் வழங்கியதாக.

ஞானமுடைய ஒரு சிலந்தி - ஞானம் - சிவன் பணிசெய்யும் ஞானம் - (அறிவு): இது முன்னைத் தவத்தால் - பூர்வ புண்ணியத்தால் - வந்த ஞானம்.

வாயினூலால் - மேற்கட்டியென - சிலந்தி தன் வாய்நூலால் செறிவுள்ள பந்தல் போல இழைக்க. சருகு உதிராவண்ணம் - திருமுடியின் மேல் அங்குள்ள கானல் மரங்களின் சருகு உதிராதபடி காக்க.

கலந்த – சிலம்பியின் உடலுட் கலந்துவந்த. கலத்தலாவது உடம்பினுள்ளிருந்து வாய்வழி நூலாக வந்து பின்னரும் அதனை உள் ஒடுக்கிக்கொள்ளும் நிலைகுறித்தது.

திருமேற்கட்டி - திருமுடியின் மேலே கட்டும் விரிப்பு; இது பட்டு முதலியவற்றாலியல்வது; கட்டி - கட்டப்படுவது; பெயர்; விரிதல் - பரப்பு; செறிதல் - வாய்நூலினால் சருகுகள் புகாதபடி இடைவெளி சிறிதாய் அமைய.

சிலம்பி - கானில்—என்பனவும் பாடங்கள். 3

4200. நன்று மிழைத்த சிலம்பிவலைப் பரப்பை நாத னடிவணங்கச்
சென்ற யானை "யநுசித"மென் றதனைச் சிதைக்கச், சிலம்பிதான்
"இன்று களிற்றின் கரஞ்சுலவிற்" றென்று மீள விழைத்ததனை
அன்று கழித்த பிற்றைநா ளடல்வெள் ளானை யழித்ததால். ௪

(இ - ள்) நன்றும்...சிதைக்க - நன்றாகச் சிலம்பி இழைத்த வாய்நூல் வலையின் பரப்பினை இறைவரது திருவடியிறைஞ்சச் சென்ற யானை, இஃது "அநுசித" மென்று சிதைக்க; சிலம்பிதான்...இழைத்ததனை - இன்று யானையின் கை சுழன்றதனால் அவ் வலயம் அழிந்ததென்று கருதி, மீண்டும் அதனை இழைக்க, (அதனை); அன்று...அழித்தது - அந்நாள் கழித்த பின்னாளில் வலிய வெள்ளானை அழித்தது.

(வி - ரை) நன்றும் - நன்றாக; வலைபரப்பு - பரவிய வலையம். அநுசிதம்... சிதைக்க - அநுசிதம் - வாய் எச்சில்பட்ட நூலால் இழைக்கப்படுதலின் தூய்மையற்றதென்று கொண்டது. சிதைத்தற்குக் காரணம் கூறியபடி. வாய்நீர் பற்றியது அநுசிதம் என்று கொள்கை பற்றித் திருநீலநக்கநாயனார் சரிதம் காண்க. இவ்வாறு எண்ணித் துணிந்த செயலைச் சிலம்பி தனது நன்மையாகிய கருத்தினால் யானையினது கரம் சுலவியதனாலாகியதென்று எண்ணியது; இன்று - என்ற கருத்துமிது.

இழைத்ததனை - இழைத்த அதனை என்று பிரித்து உரைத்துக் கொள்க.

அடல் - தான் அநுசிதம் என்று சிதைத்தனைச் சிலம்பிமீள இழைத்தது கண்டு சினந்து அழித்தது என்பார் அடல் என்ற அடைமொழி தந்தோதினார். 4

4201. "எம்பி ரான்றன் மேனியின்மேற் சருகு விழாமை யான்வருந்தி
இம்ப ரிழைத்த நூல்வலய மழிப்ப தே"யென் றுருத்தெழுந்து

வெம்பிச் சிலம்பி துதிக்கையினிற் புக்குக் கடிப்ப, வேகத்தாற்
கும்ப யானை கைநிலத்தின், மோதிக் குலைந்து வீழ்ந்ததால். ௫

(இ - ள்.) எம்பிரான்றன்...என்று - எமது பெருமானது திருமேனியின் மேல் சருகுகள் விழாமைப் பொருட்டு நான் வருந்தி மேற்கட்டியாக இழைத்த நூல்வலயத்தினை இந்த யானை அழிப்பதா? என்று; உருத்தெழுந்து...கடிப்ப - மிகச்சினந்து எழுந்து மனம்புழுங்கி யானையினது துதிக்கையினுள்ளே புகுந்து கடிக்க; வேகத்தால்...வீழ்ந்ததால் - அதன் குடைச்சலினாலே கையைத் தரையில் அடித்து மோதி நிலைகுலைந்து, வீழ்ந்து இறந்தது; (ஆல் - அசை).

(வி - ரை) எம்பிரான்றன்...அழிப்பதே - இது யானையின் செயலைப்பற்றிச் சிலம்பி எண்ணியது. முதலில் கரம் சுலவிற்று என்று நல்ல எண்ணத்தையே கொண்ட சிலம்பி, மீள மீளச் செய்யக்காணலின் பகைமைச் செயலாகக் கண்டு சினந்தது.

உருத்து எழுந்து வெம்பி - சிலம்பியின் மிகச்சினந்த மனநிலை.

துதிக்கையினிற் புக்குக் கடிப்ப - மிகச் சிறியோரும் மிகப் பெரியோரை நிலை குலையச் செய்யவல்லராகுவர் என்பதுண்மை.

வேகத்தால் ..குலைந்து - வீழ்ந்ததால் - துதிக்கையின் உட்புறம் மூளையின் அணிமையில் மிக நுட்பமான தசைகளையுடையது; அதில் விளைந்த ஊற்றின் துன்பம் பெரிதாகலானும், வேறு எவ்வழியானும் அதனைப் போக்கிக்கொள்ளுதல் யானைக்கு இயலாமையானும் கையைத் தரையில் மோதி நிலைகுலைந்து வீழ்ந்தது.

வீழ்ந்தது - வீழ்ந்திறந்தது; சிலம்பி - சுதைச்சிலம்பி போன்ற பெரும் சிலம்பி வகை. இது விடத்தன்மையுடைய தாதலின் இறப்பை விளைத்தது என்க. 5

4202. தரையிற் புடைப்பக் கைபுக்க சிலம்பி தானு முயிர்நீங்க
மறையிற் பொருளுந் தருமாற்றன் மதயா னைக்கும் வரங்கொடுத்து
முறையிற் சிலம்பி தனைச்சோழர் குலத்து வந்து முன்னுதித்து
நிறையிற் புவனங் காத்தளிக்க வருள்செய் தருள நிலத்தின்கண், ௬

வேறு

4203. தோன்மைதரு சோழர்குலத் நரா னுஞ் சுபதேவன்
தன்னுடைய பெருந்தேவி கமலவதி யுடன்சார்ந்து
மன்னுபுகழ்த் திருத்தில்லை மன்றாடு மலர்ப்பாதஞ்
சென்னியுறப் பணிந்தேத்தித் திருப்படிக்கீழ் வழிபடுநாள், எ

4204. மக்கட்பே றின்மையினால் மாதேவி வரம்வேண்ட
செக்கர்நெடுஞ் சடை முடியார் திருவுள்ளஞ் செய்தலினால்
மிக்கதிருப் பணிசெய்த சிலம்பிகுல வேந்துமகிழ்
அக்கமல வதிவயிற்றி னணிமகவாய் வந்தடைய, அ

வேறு

4205. குழையார் தோளி கமலவதி தன்பாற் கருப்ப நாணிரம்பி
விழைவார் மகவு பெறவடுத்த வேலை யதனிற், காலமுணர்

பழையா "ரொருநா ழிகைகழித்துப் பிறக்கு மேலிப் பசுங்குழவி
யுழையார் புவனமொருமூன்று மளிக்கு" மென்ன வொள்ளிழையார்,

4206. "பிறவா தொருநா ழிகைகழித்தென் பிள்ளை பிறக்கும் பரிசென்கால்
உறவார்த் தெடுத்துத் தூக்கு"மென, வுற்ற செயன்மற் றதுமுற்றி
யறவா ணர்கள்சொல் லியகால மணையப், பிணிவிட் டருமணியை
இறவா தொழிவாள் பெற்றெடுத் "தென்கோச்செங்கண்ணனோ?"வென்றாள்.

4202. (இ - ள்) தரையில்...நீங்க - முன்கூறியபடி நிலத்தில் மோதிய தனாலே துதிக்கையினுள்ளே புகுந்த சிலம்பியும் இறக்க; மறையிற் பொருளும்... வரங்கொடுத்து-வேதங்களின் பொருளாவார் அருள் தரும்முறையின்படி மதமுடைய அந்த யானைக்கும் ஏற்ற வரத்தினைக்கொடுத்து; முறையில்...அருள் செய்தருள - முறைப்படி சிலம்பியினைச் சோழர் குலத்திலே முன்வந்து பிறந்து நிறுத்தும் முறைப் படி உலகங் காவல் செய்து அரசுபுரியும்படி அருள்புரியவும்; நிலத்தின்கண் - இந்நில உலகிலே; ௬

4203. (இ - ள்) தொன்மைதரு...சார்ந்து - பழமையாய் வருகின்ற சோழர் குலத்தில் வந்த அரசனாகிய சுபதேவன் தனது பெருந்தேவி கமலவதியுடனே சார்ந்து; மன்னுபுகழ் ..வழிபடுநாள் - நிலைபெற்ற புகழினையுடைய திருத்தில்லை யம்பலத்தில் திருக்கூத்தாடுகின்ற கமலமலர்போன்ற திருவடியினைத் தலையார வணங்கித் துதித்துத் திருப்படிக்கீழ் வழிபட்டுவருகின்ற நாளிலே; ௭

4204. (இ - ள்) மக்கட்பேறு...வேண்ட - மக்கட்பேறு இல்லாமையாலே அரசமாதேவி வரத்தினைவேண்ட; செக்கர் நெடும்...செய்தலினால் - செவ்வானம் போன்ற நீண்ட சடைமுடியினையுடைய இறைவனார் அதற்கிரங்கித் திருவுள்ளம் பற்றியதனாலே; மிக்க...வந்தடைய - மிக்க திருப்பணியைச் செய்த சிலம்பியானது குலவேந்தன் மகிழும் தேவியாகிய அக்கமலவதியின் திருவயிற்றிலே அழகிய மகவாக வந்தடைய; ௮

4205. (இ - ள்) கழையார்...நிரம்பி - மூங்கில்போன்ற தோளினையுடைய கமலவதியினிடத்தில் கருப்பமுற்றும் நாள்நிரம்பி; விழைபார்...அதனில் - விருப்ப முறும் மகவினைப் பெறுதற்கடுத்த நேரத்தில்; காலமுணர்...என்ன - காலநிலையை யறிந்த சோதிடர்கள் ஒரு நாழிகை கழிததுக் குழந்தை பிறக்குமாகில் இப்பிள்ளை இடமகன்ற மூவுலகங்களையும் அரசுபுரியும் என்று சொல்ல; ஒள்ளிழையார் - ஒளி விளங்கும் அணியினை அணிந்த அரசமாதேவி; ௯

4206. (இ - ள்) பிறவாது...என - (இப்போது) பிறவாது ஒரு நாழிகை கழித்து என்பிள்ளை பிறக்கும்படி எனது கால்களைப் பொருந்தக் கட்டித் தூக்குங்கள் என்று சொல்ல; உற்ற செயல்மற்றது முற்றி - பொருந்திய அச்செய்கை நிறைவு பெற்று; அறவாணர்கள்...அணைய - சோதிடர்கள் சொல்லிய அக்கால எல்லை சார; பிணிவிட்டு...எடுத்து - கட்டவிழ்த்து விடுவிக்க, இறவாதுள்ள அக்கமலவதி அரிய மணிபோன்ற குழந்தையைப்பெற்றுக் கையில் எடுத்து; என்...என்றாள் - இவன் எனது செல்வக்கோச் செங்கண்ணனோ? என்று பாராட்டினாள். ௧0

இவ்வைந்து பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிவுகொண்டன.

4202. (வி - ரை) தரையிற் புடைப்ப - தரை - நிலம் ; புடைப்ப - புடைத்ததனாலே எனக் காரணப்பொருளில் வந்தது.

சிலம்பிதானும் உயிர்நீங்க - சிலம்பி தானும் - யானை வீழ்ந்திறந்ததனோடு சிலம்பியும் என உம்மை இறந்தது தழுவிய எச்சவும்மை.

மறையிற்பொருள் - வேதங்களின் பொருளாவார் இறைவர். தரும் ஆற்றல் - தருகின்ற முறையாலே; ஆறு - வழி ; வரங்கொடுத்து - சிவபதம் கொடுத்து. பனைமரங்களும் சிவத்தை அடைந்த நிலை கருதுக (2581).

நிறை - உலகை முறைசெய்து நிறுத்துதல். பொறுமை என்றலுமாம். 6

4203. (வி - ரை)தோன்மைதரு-பழைமையாகிய படைப்புக் காலமுதல் என்பர்.

பெருந்தேவி - பட்டத்தரசி.

திருப்படி - திருக்களிற்றுப்படி. பஞ்சாக்கரப்படி.

திருவடிக்கீழ் - என்பதும் பாடம். 7

4204. (வி - ரை) மக்கட்பேறின்மையினால் - மகவில்லாமையால் ; "பிள்ளைப் பேறின்மையினால்" (875) ; "மகவி லாமையின் மகிழ்வில்லா வாழ்க்கையின் மருண்டு" (2938). வரம் - வேண்டும் பொருள்.

சேக்கர் - செவ்வானம்.

திருவுள்ளஞ் செய்தல் - வரந்தருதல்.

மிக்க திருப்பணி - மிக்க - யானை, புனலாலும் மலராலும் வழிபாட்டினளவில் ஒழுகச், சிலம்பி அதனின் மிக்கதாகிய, இறைவரது திருமுடிமேற் சருகுவிழாதபடி திருப்பணியாய் திருமேற்கட்டியிழைத்தது ; வழிபாட்டினும் மிக்க என்றபடி ; ஒரு முறை யானை அழிக்க மறுபடியும் என மேல் மேல் மிக்கதாய் இவ்வாறு என்றலுமாம். சிலம்பி தன் சிறிய ஆற்றலுக்கு மிகுந்த என்றலும் பொருந்தும். வாய் நூலின் மிகுதிப்பாடாகிய அளவு என்றலுமாம் ; இவ்வாறு பலவும் கண்டு கொள்க.

திருப்பணி - இறைவர் தனது மேற்கட்டியின் கீழேதங்கும் கோயிலாக அமைத்ததனால் திருப்பணி என்றார்.

அக்கமலவதி - அகரம், முன்பாட்டிற்கூறிய அந்த என்று முன்னறிசுட்டு.

அணிமகவு - அணி - சிவனுக்குக் கோயில் அமைக்கும்; அழகிய என்றலுமாம்.

வயிற்றில் - வந்து - அடைய - கருப்பத்தன் வந்து புக ; "பனியிலோர் பாதி சிறுதுளி மாது பண்டியில் வந்து புகுந்து" (உடற்கூற்று வண்ணம்) ; "விழுங்கரு விற் றூன்" (போதம்) ; "ஆவி வைத்தார்" (தேவா).

மாதேவியார் தமக்கு - என்பதும் பாடம். 8

4205. (வி - ரை) கழை ஆர் தோளி - கழை - மூங்கில் ; ஆர் - உவமவுருபு ; பெண்களின் தோள்களுக்கு மூங்கிலினை உவமை கூறுதல் மரபு ; பசுமை, நயப்பு, திரட்சி முதலிய பண்புகள் பொதுத்தன்மை.

கருப்பநாள் - கருப்பமுற்றி மகவு பிறத்தற்குரிய நாள் எல்லை. 280 நாள் முதல் 300 நாள்கள்வரை இதன் எல்லை என்று கணக்கிடுவர்.

விழைவு ஆர்மகவு - விழைவு - பெருவிருப்பம் ; நீண்டகாலம் பிள்ளைப் பேறின்றி இறைவர்பால் வரம்வேண்டிப் பெற்றமகவாதலின் விழைவார் என்றார் ; யாவரும் விரும்பும் என்றலுமாம்.

மகவு பெற அடுத்த வேலை - பிள்ளை பிறக்கும் நேரம்.

காலம் உணர் பழையார் - கணிதர்கள்; சோதிடர்; பழையார் - பழைமை யாகப் பயின்ற நூலுணர்வுடையோர்.

ஒரு நாழிகை...அளிக்கும் - இது குழந்தை பிறக்கும் நேரத்தை ஒட்டி அதன் வாழ்க்கைப்பயன்களை நிச்சயித்துச் சாதகபலன் கூறும்நிலை - "மதியணி புனித னன்னுள் மங்கல வணியாற் சாற்றி" (278); "அருக்கன் முதற் கோளனைத்து மழகிய உச்சங்களிலே, பெருக்கவலி யுடனிற்கப் பேணியசுல் லோரைபெழத், திருக்கிளரும் ஆதிரைநாள்" (1920) என்பன முதலியவை காண்க.

ஒள்ளிழையார் - என - என்று மேல்வரும் பாட்டுடன்கூட்டி முடிக்க.

உழையார் புவனம் ஒரு மூன்றும் - உழைஆர் - இடமகன்ற; உழை - பக்க இடம் இடமாவன மேல் நடு கீழ் என்பன; புவனம் ஒருமூன்றும் - மேல் நடு கீழ் என்ற மூன்றிடங்களில் உள்ள ஏழேழ் உலகங்கள். உழை - மான் என்று கொண்டு, மானேந்திய சிவனது மூன்று புவனம் என்றலுமாம்.

அளிக்குமாறு - புகழும் அருள்பெற்ற வலியும் செலுத்துதல்.

இப்பகுந்தழவி பிறக்குமேல் அது - என்க. 9

4206. (வி - ரை) பிறவாது மகவுபெற அடுத்தவேளை இப்போதுவரினும், இப்போது பிறவாமல்.

"என்கால்...தூக்கும்" என - கால்களைக்கட்டி மேலேதூக்கி நிறுவுக என்று சொல்ல; கால்களை மேனோக்கித் தூக்கிக்கட்டி நிறுத்தலால் நிலம்நோக்கி விழும் குழவியின் வெளிப்பாடு நிகழ இயலாது தாழ்த்தல் கருத்து.

உற்ற செயல் அது - முற்றி - அவ்வாறே செய்யவுற; அச்செயலைச் செய்தனர் என்று தானும் கூறத் தரியாது ஆசிரியர் உற்ற செயல் அது முற்றி என்றருளினர்; இஃதவர் மரபு. முற்றி - அணைய - என்று கூட்டுக.

அறவாணர்கள் - சோதிடர்கள்; அறநூல் விதிப்படி காலக் கணித நிலைகளால் கோள்களின் பலன்பற்றி அறிந்துகூறி மக்களை அறவழி நிறுத்தும் துணைவர்களாத லின் அறவாணர் எனப்பட்டனர். "ஓதுங்க ளுன்மறை யுத்தமரே" (திருக்கோவை).

பிணிவிட்டு - பிணி - காலைப்பிணித்து மேல் ஏற நிறுவியநிலை; விட்டு - கட்டு நீக்கி யியல்பிற் கீழே விட்ட அதனால்; விட்டு - விடப்பட்டதனால்; விடுவிக்க என்னும் பிறவினை யெச்சம் விட்டு எனத் தன்வினை யெச்சமாய் திரிந்து நின்றது.

இறவா தொழிவாள் — அன்று பிள்ளைபிறந்த சின்னேரத்துள் இறப்பவளாயி னும் கோச்செங்கண்ணரின் தாய் என்ற புகழால் என்றும் இறவாதிருப்பவள்; கால் மேலே தூக்கி நிறுவிய நிலையிலும் குறித்தகால எல்லையளவும் சாவாமல் இருந்தவள் என்றுரைத்தனர் முன்னுரைகாரர்கள். ஒழிவாள் - இறவாது பெற்றெடுக்க - என்று கூட்டி யுரைப்பாரு முண்டு. ஒழிவாள் - உடன் விரைவில் இறப்பவள். மணி முத்து முதலியவை வெளிப்பட்டவுடன் அவற்றின் ஆதாரப் பொருள்கள் அழிவுறுந் தன்மையும் காண்க.

அருமணி - மணிபோன்ற மகன்; "வலம்புரி முத்தின்" என்பது திருவானைக் காப் புராணம். மணி - மகவுக்கு உவமையாகுபெயர்.

என் கோச்செங்கண்ணனோ? - பிள்ளை பிறக்கும் நேரம் கழித்து ஒருநாழிகை யளவும் பிறவாமல் ஒடுக்கிவைத்தமையின் குழவியின் கண் சிவந்திருந்தமை நோக்கித் தாயார் இவ்வாறு பெயரிட்டழைத்தனள் என்க. அன்னையார் அன்பு மேலிட் டழைத்த அதுவே பெயராய் வழங்கலாயிற்று; சோதிடர் சொல்லக்கேட்டுச் சோழன் என்செய்வோம் என மயங்கியபோது, தேவி தமதுகாலை ஆர்த்துத் தலை

கிழாகத் தூக்கிக் கட்டும்படி சொல்ல அதன்படி செய்தனர் என்று திருவாலவாய்ப் புராணமுடையார் இதனை விரித்துரைத்தனர். 4203–4204 இந்த இரண்டு பாட்டுக் களின் தொடர்பின்றியே சரிதம் பொருளும் யாப்பும் தொடர்ந்து செல்லுதல் கண்டுக் கருதத்தக்கன. 10

4207. தேவி புதல்வற் பெற்றிறக்கச் செங்கோற் சோழன் சுபதேவன்
ஆவி யனைய வரும்புதல்வன் றன்னை வளர்த்தங் கணிமகுடம்
மேவு முரிமை முடிகவித்துத் தானும் விரும்பு பெருந்தவத்தின்
தாவி னெறியைச் சென்றடைந்து தலைவர் சிவலோ கஞ்சார்ந்தான்.

(இ - ள்) தேவி...இறக்க - தனது தேவியாகிய கமலவதி புதல்வனைப் பெற்று எடுத்த உடனே இறந்துவிட; செங்கோல்...வளர்த்து - செங்கோற்சோழனாகிய சுபதேவன் தனது உயிரேபோன்ற அரிய புதல்வனை வளர்த்து; அங்கு...கவித்து - உரிய பிராயத்திலே அணிசெய்யப்பட்ட மகுடத்தினைப் பொருந்திய உரிமைப்படி முடியிற்சூட்டி அரசப்பட்டங் கொடுத்து, தானும்...அடைந்து - தானும் விரும்புகின்ற பெரிய தவஞ் செய்கின்ற குற்றமற்ற நெறியினைச் சென்று அடைந்திருந்து (பின்னர்); தலைவர்...சார்ந்தான் - இறைவரது சிவலோகத்தினைச் சார்ந்தனன்.

(வி - ரை) தேவி புதல்வற் பெற்றிறக்க - புதல்வரைப் பெற்றெடுத்தவுடன் முன்னை நிகழ்ச்சியால் நேர்ந்த உடற்பிணி காரணமாகத் தேவி இறந்தனள். பெற்றதும் இறந்ததும் உடனிகழ்ச்சிகளாக விரைவில் நேர்ந்தமை குறிக்க புதல்வற் பெற்றுத் தேவியிறக்க என்னாது, தேவி - புதல்வர்ப் பெற்று என்று மாற்றிவைத் தோதினர்.

சுபதேவன் - வளர்த்து - கோச்செங்கண்ணார் அன்னையின் அன்பார்ந்த வளர்ப்புப் பேறு பெறாது தந்தையாலே இயன்றவாறு வளர்க்கப்பட்டார் என்பதாம்.

ஆவி அனைய அரும்புதல்வன் - சுபதேவன் புதல்வரைத் தம் உயிரேபோற் பாதுகாத்தான் என்பது குறிப்பு.

உரிமை முடிகவித்து - உரிமைப்படி முடிசூட்டு விழாச் செய்து; முடிகவித்து என்றது சூட்டி என்ற அளவில் நின்றது; உரிமை-சோழமரபிற்கு உரிய முடிசூட்டு நிகழ்ச்சிகளை யெல்லாம் குறித்து நின்றது.

தானும் - தனது முந்தையோர் போலவே தானும் என உம்மை இறந்தது தழுவிய எச்சவும்மை.

விரும்பு பெருந்தவம் - விரும்பு - தான் விரும்பிய - தனது பெரியோர் விரும்பிய - அறிவோர் விரும்பிய - என்று பலவாறும் உரைக்க நின்றது.

தானும்...அடைந்து - உரிய பருவத்தில் மகனை முடிசூட்டித் தந்தையர் தவஞ் சார்தல் நல்ல பழைய அரசமரபின் வழக்கு; ஐயடிகள் காடவர்கோனாயனார் வரலாறு "அரசாட்சி, யின்னலென விகழ்ந்ததனை யெழிற்குமரன் மேலிழிச்சி" (4048); கழறிற்றறிவார் வரலாறு "தாணி நீத்துத் தவஞ்சார்ந்தான்" (3757) முதலியவை பார்க்க. இந்தச் செங்கோற் பொறையன் என்னும் சேரலன் துறவு மேற்கொண்டு தனக்குப்பின் அரசபட்டம் நிகழ்வது பற்றிக் கவலாதே தவஞ்சார்ந்தனன் என்பது குறிக்கத்தக்கது. இஃது அம்மரபின் அந்நாள் உயர்நிலை. இராமன் கதையினுள் தசரதனும் இந்நெறியையே விரும்பியும் பெறாதொழிந்த வரலாறும் இங்கு நினைவு கூர்தற்பாலது. அடைந்து - அடைந்து தவஞ் செய்திருந்து பின்.

சார்ந்தான் - உலகச் சார்பாகிய அரசாட்சியினை முதலிற் சார்ந்து, அதன் துணையாலே, பின், அதனை விட்டுத் தவநெறி சார்ந்து, அத்துணையாலே முடிபிற் சார்தற்குரிய சிவலோகம் சார்ந்தனன். "சார்புணர்ந்து சார்புகெட வொழுகின்" என்ற திருக்குறட்பொருள் ஈண்டுக் கருதற்பாலது. 11

4208. கோதை வேலார் கோச்செங்கட் சோழர் தாமிக் குவலயத்தில்
ஆதி மூர்த்தி யருளான்முன் னறிந்து பிறந்து மண்ணுள்வார்
பூத நாதன் றான்மகிழ்ந்து பொருந்தும் பெருந்தண் சிவாலயங்கள்
காத லோடும் பலவெடுக்குந் தொண்டு புரியுங் கடன்பூண்டார். கஉ

(இ - ள்) கோதை வேலார்...மண்ணுள்வார் - மாலையணிந்த வேலேந்திய கோச்செங்கட் சோழனார் இந்நிலவுலகில் ஆதிநாயகராகிய சிவபெருமான் திருவருளினாலே தமது முன்னைப் பிறப்பின் நிலையினை அறிந்த நினைவுடனே பிறந்து இந்நிலவுலகினை அரசாள்வாராய்; பூதநாதன்...கடன் பூண்டார் - பூதநாதராகிய சிவபெருமான் தாம் மகிழ்ச்சி கொண்டு பொருந்தி வீற்றிருக்கும் பெரிய குளிர்ந்த சிவாலயங்கள் பலவற்றையும் பெருவிருப்புடன் எடுக்கின்ற திருத்தொண்டினைச் செய்யும் கடமையினை மேற்கொண்டனர்.

(வி - ரை) கோதை - மாலை. அவ்வரசர்க்குரிய அடையாளமாலை ; வேலார் - வேல் - ஆயுதப்பொது ; கோதை - வெற்றி மாலை என்றலுமாம். படைக்கலங்களுக்கும் மாலையணிவர். அவற்றில் தெய்வங்கள் உறைவர் என்பது கருத்து.

ஆதிமூர்த்தி.. முன் அறிந்து - உலகில் தமது முன்னை நிலையின் நினைவுடன் யாரும் பிறப்பதரிது ; இவர் சிவனருளால் முன்னை நிலையின் நினைவுடன் பிறந்தார் ; குவலயத்தில் - அறிந்து பிறந்து - என்க.

மண் ஆள்வார் - கடன்பூண்டார் - மண்ணுள்வார் - முற்றெச்சம். மண் ஆள்வாராகி. கடன் - கடமையாக மேற்கொண்ட நிலை ; முன் அறிந்து பிறந்தமையால் இந்தக் கடன் பூண்டார் என்க. என்னை? முன்னைநிலையில் சிலந்தியாயிருந்துசிவன்திருமேனிமேற் சருகுவிழாமை நூல்வலய மிட்டுப் பந்தரிழைத்த செயல் சிவாலய அமைப்பாகும் ஆதலின் என்பதாம். சிலந்தியா யிருந்தபோது இயன்றவாறு அவ்வளவிற் செய்த அப்பணி நிறைய முற்றாமையால் அதனையே தொடர்ந்து இப பிறவியில்-ஒன்றன்று-ஆலயங்கள் பலவும் வலிய மாடக்கோயில்களாகவே எடுத்தனர்.

காதலோடும் பல எடுக்கும் தொண்டு- ஆர்வமிகுதியினாலே (ஆராமையால்) பல கோயில்களை எடுத்தனர். இவர் எடுத்த மாடக் கோயில்கள் 78 என்பர். "பெருங்கோயிலெழுபதி னோடெட்டும்" (அரசு - தாண்); வைணவ ஆழ்வார் கூறிய 70க்குப் பின் எடுத்தவை 8 கோயில்கள் போலும். இதனை வைணவப் பெரியார் போற்றியுள்ளார்.

பெருந்தண் சிவாலயம் - இவை பெருங்கோயில்கள் எனப்படும் மாடக் கோயில்கள் என்பதாம். அனைத்தையும் யானைபுகா மாடக் கோயில்களாக எடுத்தமைக்கும் முன்னறிந்த நினைவு காரணமென்ப. அஃதாவது யானையினால் தமது முன்னைநிலை வாய்நூற்பந்தர் நாளும் அழிக்கப்பட்டமையின் இனி அவ்வாறாகாது இக்கோயில்களைத்தும் யானை உட் புகாதவாறமைந்த மாடக் கோயில்களாக எடுத்தனர் என்பர். 12

4209. ஆனைக் காவிற் றாமுன்ன மருள்பெற் றதனை யறிந்தங்கு
மானைத் தரித்த திருக்கரத்தார் மகிழுங் கோயில் செய்கின்றார்

ஞானச் சார்வாம் வெண்ணாவ லுடனே கூட நலஞ்சிறக்கப்
பானற் களத்துத் தம்பெருமா னமருங் கோயிற் பணிசமைத்தார். ௧௩

(இ - ள்) ஆனைக்காவில் .. அறிந்து - திருவானைக்காவில் தாம் முன்னை நிலையில் திரு அருள்பெற்ற அவ்வரலாற்றினை அறிந்தாராதலின்; அந்த...செய்கின்றார் - அப்பதியில் மானை ஏந்திய திருக்கரத்தினையுடைய இறைவர் மகிழ்ந்தெழுந்தருளும் திருக்கோயிலைச் செய்கின்றாராகி; ஞானச்சார்வாம்...கூட - மெய்ஞ் ஞானத்தின் சார்பினையுடைய வெண்ணாவல் மரத்தினுடனே பொருந்த; நலம்... சமைத்தார் - நன்மை சிறந்தோங்க நீல மலர் போன்ற கழுத்தினையுடைய தமது இறைவர் வீற்றிருக்கும் திருக்கோயிற் பணியினைச் செய்தமைத்தனர்.

(வி - ரை) ஆனைக்காவில்...அறிந்து - திருவருளால் தமது முன் பிறப்பின் நிலையினை அறிந்து பிறந்தாராதலின் தாம் முன்பு திருவானைக்காவில் சிலந்தியா யிருந்து பணிசெய்து யானைப் பகையினை வென்று சோழனாக அவதரிக்கப் பெற்ற வரலாற்றினை அறிந்தார். அறிந்து - அறிந்தாராதலின்; காரணப் பொருளில் வந்த வினையெச்சம். (4199 - 4202.)

அந்த - முன்னர்ச் சிலந்தியாயிருந்த நிலையில் தன்னாலியன்ற அளவு நூல்வலய மாகிய மேற்கட்டி யென இயற்றியது; இப்போது அரசராகிய நிலையில் இறைவர்க்கு முற்றிய இனிய கற்றிருப்பணியாக அப்பதியிலே இயற்றவேண்டும் என எண்ணிய நிலை குறிக்க அந்த - என்றார்; அந்த - அங்கேயே தேற்றேகாரம் விரிக்க.

மகிழும் - மகிழ்ந்து வீற்றிருக்கும்; மகிழ்தலாவது மேற் சருகு விழாமையும், யானையால் பகை நேராமையும் பொருந்த யாவரும் கண்டு வணங்கி யினிதினருள் பெற உள்ள நிலை.

நலம்சிறக்க - முன்னிருந்த நிலையும் சிறப்புத்தான்; அதனினும் பெருகச் சிறப்பு ஓங்க.

அமர்தல் - விரும்பி வெளிப்பட வீற்றிருத்தல். செய்கின்றார் - செய்கின்ற அந் நாயனார்; வினையாலணையும் பெயர்.

ஞானச்சார்வாம் வெண்ணாவல் - இவ்வரலாறு முன் உரைக்கப்பட்டது; சம்பு முனிவரும் மற்றும் பல முனிவர்களும் இதன்கீழ்த் தவம் செய்து ஞானம் பெற்றமையும், இதன்கீழ் ஞானப்பயனாக இறைவர் வெளிப்பட்டு வீற்றிருத்தலும் குறிக்க ஞானச்சார்வாம் என்றார். "வெண்ணாவ லதன்கீழ் முன்னா ளரிதேடு மெய்ப்பூங்கழலார் வெளிப்படலும்" (4198).

வெண்ணாவலுடனே கூட — கோயிற்பணி சமைத்தார் — வெண்ணாவல் மரத்தினையும், அதன் கீழ் அமரும் இறைவரையும் சேர்த்துக் காணத்தக்க ஒரு கோயிலாக அமைத்தார்; இப்பதியில் இன்றும் இறைவரது சந்நிதி வெண்ணாவல் மரத்தினடியில் ஒன்றாய்க் கண்டு வழிபட உள்ள நிலை கண்டு கொள்க.

ஞானச்சார்வு ஆம் — ஞானத்தினைச் சாரும் நிலை உளதாகும் தானமாகிய என்றதும் குறிப்பு. பானல் - அதன் பூவுக்கு முதலாகுபெயர்.

வெண்ணாவலுடனே கூட — தலமரமும் அதனடியே எழுந்தருளும் இறைவரும் கூட ஒன்றாகச் சேர்த்துக்கண்டு வழிபடுதல் வேண்டுமென்பது. இவ்வுண்மை யறியாது பல பதிகளில் தலமரங்களைக் கோயிற்பணியின் பொருட்டு அப்புறப்படுத்தி அமைவுகள் செய்தல் காணப்படும். அது வருந்தத்தக்கது. "கடம்பமர் காளை தாதை" என்பது முதலாக வரும் திருவாக்குக்கள் காண்க. தலமரங்களை எவ்வாற்றானும் சிதைத்தல், அப்புறப்படுத்தல் முதலியவை செய்யலாகாது. அது சிவாபராதமாகும். 13

வேறு

4210. மந்திரிக டமையேவி வள்ளல்கொடை யநபாயன்
முந்தைவருங் குலமுதலோ ராயமுதற் செங்கணார்
அந்தமில்சீர்ச் சோணாட்டி லகனாடு தொறுமணியார்
சந்திரசே கரனமருந் தானங்கள் பலசமைத்தார். ௧௧

(இ - ள்) வள்ளல்...செங்கணார் - கொடைவள்ளலாகிய அநபாயச் சக்கரவர்த்தியின் முந்தையோராகவரும் குலமுதல்வராகிய முதன்மை பொருந்திய கோச்செங்கண்ணனார்; மந்திரிகள் தமை ஏவி — தம் உரிய மந்திரிகளை ஏவி யனுப்பி; அந்தமில்...அகனாடுதொறும் — சிறப்பினையுடைய சோழநாட்டில் அகன்ற பதிகள்தோறும்; அணியார்...சமைத்தார் - சந்திரசேகரராகிய இறைவர் விரும்பி எழுந்தருளியுள்ள அழகு நிறைந்த மாடக் கோயில்கள் பலவற்றையும் அமைப்பித்தனர்.

(வி - ரை) செங்கணார் - மந்திரிகள் தமை ஏவி - தானங்கள் - அமைத்தார் என்க.

மந்திரிகள் தமை ஏவி - அமைத்தார் — திருவானைக்காவில் தாம் முன் அருள் பெற்றமை அறிந்து அங்குக் கோயிலைத் தாமே நேரில் இருந்து அமைத்தனர். ஏனை இடங்களில் அங்கங்கும் மந்திரிகளை ஏவி அமைத்தனர். விரைவில் பலப்பல கோயில்களையும் எடுப்பிக்கும் ஆர்வம் குறித்தது. அணியார் - தானங்கள் என்க.

வள்ளல் கொடை அனபாயன் முந்தைவரும் குலமுதலோர் - சோழ அரச மரபில் வந்த திருத்தொண்டர்கள் வரலாறுகளில் இவ்வாறு இப்புராணம் பாடக்காரணராகிய தமது அரசரை அத்தொடர்புபற்றிப் பாராட்டுதல் ஆசிரியர் மரபு. மனுச்சோழரை "அநபாயன் வழிமுதல்" (98) என்றும், புகழ்ச்சோழ நாயனாரைச் "சென்னி நீடநபாயன் திருக்குலத்து வழிமுதலோர்" (3949) என்றும் கூறியவையும், பிறவும் பார்க்க.

கொடைவள்ளல் என்னாது வள்ளல் கொடை என்றது கொடையால் மட்டுமல்லாது மற்றெல்லா வகையாலும் வள்ளற்றன்மையுடையோர் என்ற குறிப்புத் தருதற்கு. கொடைச் சிறப்பு மட்டில் அமைவதாயின் வள்ளல் என்றலே போதியதாதல் அறிக. வள்ளற்றன்மை ஈண்டுத் திருநீற்றுநெறி பாலித்தமையும், அதுபற்றித் திருநீற்றுச் சோழர் என்றும் பெயர் பெற்றமையும் ஆகிய புகழ்பற்றிய குறிப்புடையது. இப்புராணம் பாடக் காரணராயினமையும் கருதுக.

முந்தைவரும் - மரபில் முன்னே வரும்; இது காலம்பற்றியது; குலமுதலோர் என்றது முதன்மைப் பண்பு பற்றியது; ஆதலின் கூறியதுகூற லன்மையுணர்க.

அகனாடு—இங்கு நாடு என்றது சோழநாட்டின் கிளைச் சிறுபகுதிகளும், பதிகளுமாகிய உள்நாடு நகரங்களை.

அணியார் - தானங்கள்-என்று கூட்டுக. அழகிய மாடக்கோயில்கள் என்றதாம்.

தானங்கள் பல - இதனைப்பற்றி "இருக்குமணிவா யெண்டோ ளீசற் கெழில் மாட மெழுபதுசெய் துலக மாண்ட, திருக்குலத்து வளச்சோழன்" என்று பாராட்டிப் போற்றினர் வைணவாழ்வாரும்; பல - இவை எழுபத்தெட்டு மாடக்கோயில்கள் என்றதொரு குறிப்புமுண்டு; இங்கு ஆசிரியர் இவற்றின் தொகை குறியாது பல என்றமைந்தது என்னை? எனின், நல்ல அறங்கள் செய்தனவற்றைக் கணக்கிடலாகாது என்ற சைவமரபுபற்றியும், செயலால் முற்றியன இவ்வளவேயாயினும்

செய்ய எண்ணியன மேலும் மிகப் பலவாமாதலின் அவை இப்பயனே தருதல்பற்றி யும் தொகையால் அளவிட்டுக் கூறிற்றிலர் என்பது. "வேள்வித வெண்ணி லா ... மாண வியற்றினன்" (99); "எங்கு மாகி யிருந்தவர் பூசனைக் கங்கண் வேண்டு மி... தம்" (100); "கோயி லெங்கணும் பூசை சிடி..." (469); "முடிவிலா வறங்கள் செய்து" (1785); "தப்பின்றி யெங்குமுள" (1789).

ஏவிச் - சமைத்தார் - என்க. ஏவுதற் கருத்தா; இவர் விஷ்ணுவாலயங்களும் பல எடுப்பித்தார் என்பர். 14

4211. அக்கோயி றொறுஞ்சிவனுக் கமுதுபடி முதலான
மிக்கபெருஞ் செல்வங்கள் விருப்பினுன் மிகவமைத்துத்
திக்கனைத்துந் தனிச்செங்கோன் முறைநிறுத்தித் தேர்வேந்தர்
முக்கண்முத னடமாடு முதற்றில்லை முன்னினர். ௧௫

(இ - ள்) அக்கோயில் தொறும்...அமைத்து - அந்தத் திருக் கோயில்கள் தோறும் இறைவருக்குத் திருவமுதுக்குரிய படித்தரம் முதலான மிகுந்த செல்வங் களைத் தம் விருப்பத்தினாலே மிகவும் அமைத்து; திக்கனைத்தும்...நிறுத்தி - எல்லாத் திக்குக்களினும் ஒப்பற்ற தமது செங்கோல் ஆணைமுறையினைச் செலுத்தி நிறுத்தி; தேர்வேந்தர்...முன்னினர்-தேர்ப்படையினையுடைய செங்கணார் முக்கணுடைய முதல்வராகிய இறைவர் திருநடம் செய்கின்ற முதன்மை பொருந்திய திருதில்லை யினை நினைந்து முற்படச் சென்றடைந்தனர்.

(வி - ரை) அக்கோயில் தோறும் - அவ்வாறு மந்திரிகளை ஏவி அமைத்த அந்த என அகரம் முன்னறி சுட்டு; அமுதுபடி - முதலான மிக்க பெருஞ் செல்வங்கள் - திருவமுதுக்குரிய படித்தரம் முதலிய மானிபங்கள்; நிபந்தங்கள்; செல்வங்கள்விருப்பி னால் மிக அமைத்து-இத்தனை போதியன-இத்துணை வேண்டப்படுவன-என்று கணக் கிட்ட அளவுட்படாது விருப்பம் ஆர்தல் உறும்வரை மிகவும் அமைத்து என்றபடி; சிவனுக்குச் செய்வன வெல்லாம் இவ்வாறு செய்தல் வேண்டு மென்பது குறிப்பு.*

தேர் - இனம்பற்றி யானை குதிரை முதலியவையும் கொள்ளப்படும். திக்கனைத் தும் - எண்டிசைகளினும்; முன்னினர் - சிந்தித்து அடைந்தனர்.

திக்கனைத்தும்...நிறுத்தி - தமது அரசாணை எங்கும் செல்லும்படி முடிமன்ன ராக ஆட்சிபுரிந்து.

முக்கண் முதல் - முக்கண்ணராகிய முதல்வர்; சிவபெருமான். முதல் - முதல் வர். முதற்றில்லை - முதல் - முதன்மை; சிறப்பு. தலவரிசையுள் முதலாக வைத்து எண்ணப்படுதலும் காண்க.

*குறிப்பு: இச்செங்கணனார் அமைத்த இந்த மிக்க படித்தாச் செல்வங்கள் இப்போது அங்கங்கும் காணப்படவில்லை; எங்குச் சென்று யாவரிடத் தொளித் தனவோ? இம்மாடக் கோயில்கள் பலவும் "அன்று கண்ட மேனிக் கழிவில்லை" என்ற பழமொழிப்படி, பிற்காலத்தன்பர்களால் அவ்வப்போது வேண்டியபடி செப்ப னிட்டுச் சிறிய திருத்தொண்டுகளும் செய்யப்படாமல் சிதைவுற்று நிற்கும் நிலையும், ஒரு வேளைக்குத் தானும் சிறிய அளவு திருவமுதும் திருவிளக்கும் முதலியவைக்கும் இல்லாத நிலையும், பிறவும் காண மனம் மிக வருந்துகின்றது; இவற்றுட் சில கோயில் களில் "அடையாத வாயி லகம்" என்றபடி கதவுகள் தாமும் இல்லாத நிலையும் காணவுள்ளது. சைவவுலகம் இந்நிலைகளைக் கண்டுகொண்டுதானிருக்கின்றது! காலக் கொடுமை!

முன்னினார் - முன்னிச் சென்று அடைந்தனர் என்ற பொருள்தந்து நின்றது.15

4212. திருவார்ந்த செம்பொன்னி னம்பலத்தே நடஞ்செய்யும்
பெருமானை யடிவணங்கிப் பேரன்பு தலைசிறப்ப
உருகாநின் றுளங்களிப்பத் தொழுதேத்தி யுறையுநாள்
வருவாய்மை மறையவர்க்கு மாளிகைகள் பலசமைத்தார். கசு

(இ - ள்) திருவார்ந்த...வணங்கி - சைவமெய்த்திருவே மிக்க செம்பொற்றிரு வம்பலத்திலே திருநடம் செய்தருளுகின்ற இறைவரை அடிவணங்கி; பேரன்பு... உறையுநாள் - பேரன்பு மேன்மேலோங்க மனமுருகி மகிழ்ச்சியடையத் தொழுது துதித்து அங்குத் தங்கும் நாளிலே; வருவாய்மை ..சமைத்தார் — வாய்மையொழுக் கத்தில் வருகின்ற தில்லைவாழந்தணர்களுக்கு உறையுளாகிய திருமாளிகைகள் பல வற்றையும் எடுப்பித்தார்.

(வி - ரை) திரு - சைவமெய்த்திரு; முத்தித்திரு; தலைசிறத்தல் - மிக்கோங்கு தல்; உளம் உருகா நின்று களிப்ப என்க; உருகா நின்று - உருகி;

உறையுநாள்...சமைத்தார்—தில்லையில் செங்கண்ணார் பலகாலம் தங்கி யிறைவரை வழிபட்டிருந்தனர் என்பதாம்; தானங்கள் பல சமைத்தார் - (4210) என்று கூறிய படியே ஈண்டும் "மறையவர்க்கு மாளிகைகள் பலசமைத்தார்" என்றார், "நாமிவரி லொருவர்" என்று இறைவரால் அருளிச் செய்யப்பெற்ற சிவத்திருப் பண்புடையார் கள் இத் தில்லைவாழந்தணர்களாதலின், இவர்கள் உறையும் திருமாளிகைகள் "தற் றூங் கெரியோம்பும்" சிறப்பினால் சிவனுறையும் தானங்களோ டொப்ப எண்ணப் படும் சிறப்புடையன என்ற குறிப்புத்தருதற்கு; இச்செய்தி "நல்ல வம்புமலர்த் தில்லை யீசனைச் சூழ மறைவளர்த்தான்" என்ற வகைநூலின் ஆதாவுபெற்று அதனை விரித்துரைத்தபடியாம்.

வாய்மை வருமறையவர் என்க. தில்லைவாழந்தணர்கள். வாய்மையின் வருத லாவது சத்தாகிய தத்துவ நெறியில் வழிவழி ஒழுகிவருதல். (354 - 356) முதலியவை பார்க்க. எனவே இவையும் சிவன் திருத் தொண்டாகப் போற்றப்பட்டன.

தலைசிறக்க - சிறந்தோங்க. 16

4213. தேவர்பிரான் திருத்தொண்டிற் கோச்செங்கட் செம்பியர்கோன்
பூவலயம் பொதுநீக்கி யாண்டருளிப் புவனியின்மேல்
ஏவியநற் றொண்டுபுரிந் திமையவர்க ளடிபோற்ற
மேவினார் திருத்தில்லை வேந்தர்திரு வடிநிழற்கீழ். கஎ

(இ — ள்) தேவர்பிரான்...செம்பியர்கோன் - தேவர்பெருமானாகிய சிவ பிரானுடைய திருத்தொண்டினாலே கோச்செங்கட்சோழராக அவதரித்த செங்கண் ணார்; பூ...புரிந்து - உலகம் பிறர்க்கும் பொது என்னாது தமக்கே சிறப்பாயுரியது என்று சொல்லும்படி தனியரசாட்சி புரிந்தருளி; புவனியின்மேல் ஏவிய நற் றொண்டு புரிந்து - இந்நிலவுலகில் சிவபெருமான் அருள்செய்து செலுத்தியவாறு நல்ல சிவத்தொண்டுகளைச் செய்து; இமையவர்கள்...கீழ் — தேவர்கள் வணங்கும்படி திருத்தில்லை நடராசரது திருவடி நிழலின்கீழ்ப் பொருந்தினார்.

(வி - ரை) திருத்தொண்டில் - முன் சிலந்தியாயிருந்து செய்த திருத்தொண் டின் பயனாலே; திருத்தொண்டுடனே ஆட்சியும் புரிந்து என்று கூட்டியுரைத்தனர் முன் உரைகாரர்.

ஆண்டருளி – ஏவிய நற்றெண்டு புரிந்து - ஆண்டருளுதலும் தொண்டுபுரிதலும் என்ற இரண்டும் சிவனேவல் வழியமைந்தவாறே புரிந்தருளினர். சிவனியக்கிய வாறே ஆன்மாக்கள் இயங்குவன என்பது பொதுவுண்மையே யாயினும், அதனை அறிந்து திருவருளின் உணர்வினுள் அடங்கி நின்று ஒழுகுதல் இவருக்குச் சிறப்புரிமை என்க. இவருக்குச் சிவன் ஏவியருளிய நிலை, "முறையிற் சிலம்பி தனைச்சோழர் குலத்து வந்து முன்னுதித்து, நிறையிற் புவனங் காத்தளிக்க வருள்செய் தருள" (4202) என்றவிடத்துக் கூறப்பட்டது. ஏவிய - அடியார்கள் ஏவிய என்றலுமாம்.

பூவலயம் - வட்டமாகிய பூவுலம்; பூமி.

பொதுநீக்கி - இவர் பாண்டிய நாட்டினையும் பிறநாடுகளையும் அரசு செலுத்திய சரிதக் குறிப்பு; "தென்னவனு யுலகாண்ட செங்கணார்" (தொகை); "நிம்ப நறுந் தொங்கல்" (வகை).

இமையவர்கள் அடிபோற்ற - சிவத்தொண்டர்கள் தேவர்களும் பணியும் உயர்வுடையோர் என்பது. "தேவாசிரியன்." 17

வேறு

4214\. கருநீல மிடற்றார் செய்ய கழலடி நீழல் சேர
வருநீர்மை யுடைய செங்கட் சோழர்தம் மலர்த்தாள் வாழ்த்தித்
தருநீர்மை யிசைகோள் யாழின் றலைவரா யுலக மேத்தும்
திருநீல கண்டப் பாணர் திறமினிச் செப்பலுற் றேன். ௧௮

(இ – ள்) கருநீல...வாழ்த்தி - கரிய நீல மலர்போன்ற மிடற்றினையுடைய இறைவரது செம்மைதரும் கழலணிந்த திருவடி நீழல் சேரவரும் சீர்மையுடைய கோச்செங்கட் சோழரது மலர்போன்ற பாதங்களை வாழ்த்தி அத்துணைகொண்டு; தருநீர்மை...தலைவராய் - நீர்மைதரும் இசையினையுடைய யாழினது தலைவராய்; உலகமேத்தும்...செப்பலுற்றேன் – உலகம் பரவும் திருநீலகண்ட யாழ்ப்பாணரது திறத்தினை இனிச் சொல்லப்புகுகின்றேன்.

(வி - ரை) ஆசிரியர், தமது மரபின்படி இதுவரை கூறிவந்த சரிதத்தை முடித்துக்காட்டி, இனிக் கூறப்புகும் சரிதத்துக்குத் தோற்றுவாய் செய்கின்றார்

கருநீலம் - நீலமலர். கருமை - இயற்கை யடைமொழி. அடிநீழல் சேரவரும் நீர்மையுடைய - ஏனையோர்க்குப் போலக் கன்மம் புரிந்து பிறவி பெருக்கும் நிலையினன்றி, இவரது பிறவி திருத்தொண்டு செய்து திருவடி சார்தற் கென்றே இறைவரால் தரப்பட்ட தென்பதாம். வருதல் - பிறவியில் வருதல்; இதனால் ஆசிரியர் இவரது முற்பிற் சரித முழுதும் குறிப்பிற் பெறவைத்த சதுரப்பாடு கண்டுகொள்க; சேர - சேர்வதற்காகவே; நீர்மை - தன்மை; நீர்மையாவது இங்கு முன்னைத் தவ முதிர்ச்சியாகிய அன்பின் விளைவு.

நீர்மை தரும் இசை என்க. இங்கு நீர்மையாவது இனியதன்மையும் இன்னிசையின் பயனுமாம்.

இசைகோள் - இசையினை விளக்கும் தன்மை கொண்ட.

யாழின் தலைவர் - யாழிசைக் கலைவல்லமையில் முதல்வர். 18

சரிதச்சுருக்கம் : கோச்செங்கட்சோழ நாயனார் புராணம் :—அடைக்கலம் புக்க புறவினுக்காக அதன் எடைக்குத் தமது தசையை அரிந்துகொடுத்த பெருமை

வாய்ந்த சிபிச்சக்கரவர்த்தியின் மரபாகிய சோழமரபினர்களின் உரிமையாகிய சோழநாட்டில், காவிரிக்கரையில், சந்திரதீர்த்தத்தின் பக்கத்தில் பெருமரங்கள் நிறைந்த கானம் ஒன்று உண்டு ; அதில் ஒரு வெண்ணாவல் மரத்தினடியில் இறைவர் வெளிப்பட்டருளினர் ; அத்திருமேனியைக் கண்டு மிக்க தவத்தையுடையதொரு வெள்ளானை கையினால் நல்ல நீரை முகந்து அவரைத் திருமஞ்சனம் செய்து பூச்சூட்டி வணங்கி நாளும் வழிபட்டுவந்தது. அதனால் அதற்குத் திருவானைக்கா என்று பெயராயிற்று. அங்கு ஞானமிக்கதொரு சிலம்பி இறைவரது திருமுடிமேல் கானல் மரங்களின் சருகு விழாதபடி தனது வாய்நூலால் மேற்கட்டிபோல் நூல்வலயப் பந்தர் செய்தது; யானை வணங்கச் சென்றபோது அதனை அநுசிதமென்று நினைத்துச்சிதைத்தது ; அதுகண்ட சிலம்பி யானையின் கை சுழன்றதால் நூற்பந்தர் சிதைந்ததென்று கொண்டு, மறுநாள் மீளஇழைத்தது; அதனை மறுநாளும் யானை அழிக்க, "இறைவர் திருமுடிமேல் சருகு விழாதபடி நான்வருந்தி இழைத்த நூல் வலயத்தை இவ்வாறு யானை அழிப்பதோ?" என்று கோபித்து,எழுந்து,சிலம்பி,யானையின் துதிக்கையினுள்ளே புகுந்து கடித்தது ; அவ்வருத்தம் பொறாமல் யானை கைநிலத்தில் மோதி வீழ்ந்திறந்தது; அதன் துதிக்கையினுள்ளே புகுந்து கடித்த சிலம்பியும் உயிர் நீங்கிற்று ; இறைவர் அருள்புரியும் வழியால் யானைக்கு வரங்கொடுத்து வீடளித்தனர் ; வழிபட்ட முறையினால், சிலம்பியைச் சோழர் குலத்தில் வந்து உதித்து உலகங்காத்து முறையாலே சிவத்தொண்டு செய்து பின்னர் வீடுபெற அருள்புரிந்தார்.

அந்நாளில் சோழ அரசனாகிய சுபதேவன் தனது பெருந்தேவி கமலவதியுடனே திருத்தில்லை சார்ந்து இறைவரை வழிபட்டனன் ; அவர்களுக்கு மக்கட்பேறில்லாமையால் தேவி வரம்வேண்ட இறைவர் அருள்புரிந்தனர். பெருந்திருப்பணி செய்த சிலம்பி அரசியாகிய கமலவதியின் கருப்பத்துள் மகவாய்ச் சார்ந்தது ; கருப்பநாள் நிரம்பி மகவுபெறும் வேளை வந்தபோது சோதிடர்கள் இன்னும் ஒரு நாழிகை கழித்துப் பிறக்குமாயின் இக்குழந்தை மூன்றுலகமும் அரசாளும் என்றனர். அது கேட்ட கமலவதி "அவ்வாறு ஒரு நாழிகை கழித்துப் பிள்ளை பிறக்கும்படி என் காலைப் பிணித்து மேலேதூக்கி நிறுவுங்கள்" என்ன, அவர்கள் அவ்வாறே செய்தனர். ஒரு நாழிகை கழித்து அவர்கள் சொல்லிய காலம்வரக் கட்டு அவிழ்த்துவிடக் கமலவதி குழவியை ஈன்றெடுத்தாள். அதனுடைய கண்கள் கால நீட்டிப்பினாற் சிவத்திருந்தமைகண்டு "என் கோச்செங்கணானோ?" என்று அருமைபட வழைத்துத் தேவி யிறந்தனள். அரசன் அக்குழந்தையை தன் உயிரேபோன்று அருமையாக வளர்த்து உரியபருவத்தில் முடிசூட்டித் தான் தவநெறி சார்ந்து சிவலோகமடைந்தான்.

கோச்செங்கட்சோழர் இறைவரருளால் தமது முன்னைப் பிறப்பின் நினைவுடனே வந்து பிறந்து உலக ஆட்சிபுரிந்தமையால் இறைவருக்குப் பெரிய ஆலயங்கள் எடுக்கும் கடப்பாட்டினை மேற்கொண்டனர். தாம் முன்பு திருவானைக்காவில் அருள் பெற்றதனை அறிந்து அங்கு ஞானச்சார்வாம் வெண்ணாவலுடனே கூட இறைவருக்கு அரிய கோயில் அமைத்தனர். மந்திரிகளை ஏவிச் சோணாட்டில் அனேகம் பகுதிகளில் எங்கும் இறைவருக்குப் பெருங்கோயில்கள் சமைத்தனர். அங்கங்கும் வழிபாட்டுக்கு அமுதுபடி முதலியனவற்றுக்குரிய பெருஞ்செல்வங்களை விருப்பத்தோடு மிகவும் பெருக அமைத்தனர். இவ்வாறு எல்லாத் திக்குக்களிலும் தமது செங்கோல்முறை நிறுத்தினர். திருத்தில்லைப் பதியினைச்சார்ந்து கூத்தப்பெருமானை வணங்கித் தங்கி, அங்குத் தில்லைவாழ்ந்தணர்களுக்குப் பல மாளிகைகள்

சமைத்தனர். இவ்வாறு சிவத்தொண்டின் நெறியில் உலகங்காத்துச் செம்பியனார் சிவனடி நீழலடைந்தனர்.

கற்பனை :—(1) தம்பால் அடைக்கலம் புக்கவர்களை தம் உயிர்கொடுத்தும் காப்பாற்றுவர் பெரியோர்.

(2) அடைக்கலம் புக்கவர் மனிதரேயன்றிச் சிறிய பிராணியாகிய பறவையாயிருப்பினும் அதனையும் உயிர்க்கீடாக மதித்து அதன்நிறைக்குத் தமது தசையை அரிந்து கொடுத்தும் காத்தனர் சிபிச்சக்கரவர்த்தி ; இதுமிக்க பெரும்புகழ்ச் செயலாகும் (4198).

(3) முற்றிய அறிவு இல்லாத யானை - சிலம்பி - முதலிய பிராணிகளும் தமக்கேற்றவாறு சிவவழிபாடு செய்யும் ; இது முன்னைவினைப்பயனால் வருவது. "மிக்க தவத்தோர் வெள்ளானை" (4187) ; "ஞானமுடையவொரு சிலந்தி" (4199) ; இவற்றது முன்பிறப்பு வரலாறு புராணத்துட் பேசப்படுவது.

(4) சிலம்பி வாய்நூலால் மேற்கட்டியெனப் பந்தர் செய்த செயல் இறைவர் திருமுடிமேல் சருகுதிராதபடி எண்ணிச் செய்தமை அன்பின் றன்மை ; அதனை வாய் எச்சில் நூலால் அமைந்த தென்று யானை எண்ணிச் சிதைத்ததும் அன்பின் செயல் ; அதனால் சிலம்பி சினந்து யானையினைத் துதிக்கையின்வழி உட்புக்கு மூளைப்பக்கம் கடித்து இறக்கச் செய்ததும் அன்பின் செயல். இவை இருபாலும் அனைத்தும் சிவன்பால்வைத்த அன்பின் செய்கைகளாதலின் எல்லாம் சிவபுண்ணியச் செயல்களேயாய் அவ்வாறே பலன்றந்தன. சிவபுண்ணியச் செயல்களுட் காணப்படும் சினம், வன்கண்மை போன்றவை, ஏனை உலகச் செயல்களிற் பாவப்பலன் தருதல் போலன்றிப், புண்ணியப் பலன்களையேதரும்.

(5) தனது வாய்நூல் வலயப் பந்தலின்கீழ் இறைவரிருக்க எண்ணிச் சிலம்பி செயல் செய்தமையின் அதனை அரசாரகப் பிறக்கச் செய்து, அவர் ஆணையின்கீழ் உலகம் இருக்க அருளினர் இறைவர். இது புண்ணியப்பலன் வருமாறு. "முறையில்...காத்தளிக்க" (4202).

(6) சிலம்பி, தனது சிறுசத்தி கொண்டு இறைவரது திருப்பணி செய்தலும், அதன் நிறைவுவாராமையால் வருந்தவும் நேர்ந்தமையால், அதனை அரசாக்கிச் சிவனுக்குப் பெருங் கோயில்கள் பலவற்றையும் எடுக்கும்நிலை யருளினர் இறைவர். இதுவும் புண்ணியம் விளையும் வழியாம். "நூணிலாச் சிலந்தி தன்னை முடியுடை மன்னனாக்கித், தாணிதா னுள வைத்தார்" (தேவா). "சிலந்திவாய்ப் பந்தர் சிக்கென வியற்ற...மருவு கோச்செங்க ணன்றனக் களித்த" (நம்பி).

(7) யானை மிக வலிமையுடைய பெரிய பிராணியாயினும் சிறிய சிலந்தி உள் புக்குக் கடித்ததனையும் ஆற்றமாட்டாது உயிர் நீத்தது ; நட்ப உணர்ச்சியுடையதாதலின் ; "சிறிய பகையெனினு மோம்புத றேற்றார்" (4201) என்றபடி பகைவரின் எளிமை நோக்கி இகழ்ச்சி செய்தலாகாது.

(8) சிவவழிபாடு இம்மையேயும் மகப்பேறு முதலிய எல்லா வரங்களையும் தரவல்லது. (4204)

(9) தம் உயிர்க்கு இறுதிவரும் காரியமேயாயினும் தமது மகவு பெருமைப்பட வாழவேண்டுமென்பது கருதி, அதனையும் உட்பட்டு, உயிர் ஈவது தாயின் தலையன்பின்திறம். (4206)

(10) தமது மக்களுக்கு உரியபருவத்தில் முடிசூட்டித், தாம் தவஞ்சார்தல் நமது நாட்டில் அரிய பழைய அரசமரபுகளின் வழக்கு. (4207)

(11) முன்பிறப்பின் நினைவுடன் பிறந்து நல்வாழ்வு பெறுதல் யாவர்க்கும் அரிது. அது சிவன்திருவருளாலன்றி அமையாது. (4208)

(12) முன்பிறப்பிற்றும் செய்த பணியின் குறையினை அறிந்து பின்னைப் பிறப்பில் அதனை மனமார முற்றுவிக்கப் பெறுவது பெருந்தவப் பயனாகச் சிவனருளால் வருவது. (4208)

(13) இறைவர் எழுந்தருளியுள்ள தலமரங்களை மிகப்புனிதமாகப் பாதுகாத்து அவற்றின்கீழ் எழுந்தருளும் இறைவருக்கு அதனோடு உடனாகத் திருப்பணி செய்தல் வேண்டும். (4209)

(14) சிவனுக்குப் பெருங்கோயில்கள் பல எடுத்தல் பெருந்தவப் பயனால் வருவது. (4210)

(15) சிவனுக்கு ஆலயங்கள் வகுப்போர் அதற்கு உரியவாறு அமுதுபடி முதலானவற்றுக்கு பெருஞ் செல்வங்கள் விருப்பமுடன் மிக அமைத்தல் வேண்டும்.(4211)

(16) தில்லைவாழ்ந்தணர்களுக்கு மாளிகைகள் சமைத்தல் அவர்களுள் ஒருவரான சபாநாயகருக்குக் கோயில் சமைத்ததனோடொத்த பயனுடையது. (4212)

(17) திருத்தொண்டர்களை இமையவர்களும் அடிபோற்றுவர். (4213)

தலவிசேடம் – திருவானைக்கா:—III - பக. ௫௧௩ - பார்க்க.

கோச்செங்கட் சோழரது - சிறப்பு :—இவர் சைவசமய பரமாசாரியர்கள் மூவாரும் பல திருப்பதிகங்களுள்ளும் போற்றப்படும் பெருமைவாய்ந்தவர் ; "புத்தியினாற் சிலந்தியுந்தன் வாயி னூலாற் புதுப்பந்த ரதுவிழைத்துச் சருகான் மேய்ந்த, சித்தியினா லரசாண்டு சிறப்புச் செய்து சிவகணத்துப் புகப்பெய்தார்; திறலான் மிக்க, வித்தகத்தால் வெள்ளானை வின்ளா வன்பு விரவியவா கண்டதற்கு வீடு காட்டிப், பத்தர்களுக் கின்னமுதாம் பாசூர் மேய பரஞ்சுடரைக் கண்டடியே னுய்ந்த வாறே "; (அரசு - தேவா); "மையகண் மலைமகள் பாக மாயிருள், கையதோர் கனலெரி கனலவாடுவர், ஐயநன் பொருபுன லம்பர்ச் செம்பியர், செய்யக ணிறைசெய்த கோயில் சேர்வரே" (பிள் - தேவா). "கருவரை போலரக் கன்கயி லைம்மலைக் கீழ்க்கதறப் பொருவிர லாலடர்த் தின்னருள் செய்த வுமாபதிதான், திரைபொரு பொன்னிநன் னீர்த்துறை வன்றிகழ் செம்பியர்கோன், நரபதி நன்னிலத்துப் பெருங்கோயி லயர்ந்தவனே" (நம்பி - தேவா) முதலிய எண்ணிறந்த திருவாக்குக்கள் காண்க.

(2) இவர் திருவருளால் முற்பிறப்பின் நிலையறிந்து பிறந்து திருத்தொண்டுடனே மண்ணாண்ட சிறப்புடையவர்.

(3) முன்னறிந்த நிலையினால் இவர் அமைத்த சிவன் கோயில்கள் அனைத்தையும் யானைபுகாத மாடக்கோயில்களாகவே யமைத்தார்.

(4) இவர் சிவனுக்கு மாடக்கோயில்களை அமைத்த சிறப்புப்பற்றி வைணவப் பெரியார்களும் பாராட்டித் துதித்த பெருமை இவருக்குரியது

(5) இவர் அமைத்த மாடக்கோயில்கள் தேவாரப்பாடல் பெற்ற சிறப்புடையன. அத்தேவாரங்களுள் இவரும் சேர்த்துப் பாடப்பெற்றுள்ளனர்.

(6) இவர் முன்னர்ச் சிவகணங்களுள் ஒருவராய் மாலியவான் என்ற பெயருடன் சிவப்பணி பெருகச்செய்தனர் என்றும், அப்பணியில் கணத்தவராய்ப்

பணிபெருகப் புரிந்த மற்றொரு புட்பதந்தருடன் அப்பணியில் இகலி இவ்வாறு சிலந்தியாய் வந்து பிறந்தனர் என்றும், இந்நிலையின் மீண்டும் சோழ அரசராய் வந்து பிறந்து வீடுபெற்றனர் என்றும், இவ்வகையால் இவரது மூன்று பிறப்புக்களின் தொடர்ந்த சிவபுண்ணிய வரலாறு கேட்பப்படும் பெருமை இவருடைய சிறப்பாகும்.

(7) இனி, இவர் திருவானைக்காவில் இறைவருக்கு எடுப்பித்த விமானமும் ஆலயமும் முன்னமே அவருக்குச் சாத்தும்படி தேவத்தச்சனால் அமைக்கப்பட்டுக் கெண்டகை மலைச்சாரலில் கெண்டகை நதியில் இடப்பட்டுக் கோடியுருத்திரரால் பூசிக்கப்பட்ட இறைவருக்குச் சாத்தப்பட்டிருந்ததென்றும், அதனை, இறைவர் அருளியபடி அறிந்து சென்று இவர் கொணர்ந்து, இங்கு இறைவருக்குச் சாத்தினார் என்றும் அறியப்படுகின்ற பெருமை இவருடையதாகும்.

**68. கோச்செங்கட்சோழ நாயனார் புராணம் முற்றும்**



சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# 69. திருநீலகண்ட யாழ்ப்பாண நாயனார் புராணம்

---

தொகை

" திருநீல கண்டத்துப் பாணனுர்க் கடியேன் ".

—திருத்தொண்டத் தொகை - (11)

வகை

தனையொப் பருமேருக் கத்தம் புலியூர்த் தரும்புகழோன்
கிளையொப் பருந்திரு நீலகண் டப்பெரும் பாணனைநீள்
சினையொப் பலர்பொழிற் சண்பையர் கோன்சேந் தமிழொடிசை
புனையப் பானருள் பெற்றன னென்பரிப் பூதலத்தே.

—திருத்தொண்டர் திருவந்தாதி - (83)

விரி

4215. எருக்கத்தம் புலியூர் மன்னி வாழ்பவ ரிறைவன் றன்சீர்
திருத்தகும் யாழி லிட்டுப் பரவுவார் செழுஞ்சோ ணாட்டில்
விருப்புறு தான மெல்லாம் பணிந்துபோய் விளங்கு கூடற்
பருப்பதச் சிலையார் மன்னு மாலவாய் பணியச் சென்றார். க

புராணம் :—இனி, சிறந்த முறையானே, ஆசிரியர், பன்னிரண்டாவது மன்னியசீர்ச் சருக்கத்துள், ஐந்தாவது திருநீலகண்ட யாழ்ப்பாணனார் புராணங்கூறத் தொடங்குகின்றார். திருநீலகண்ட யாழ்ப்பாண நாயனாரது வரலாறும் பண்புங் கூறும் பகுதி.

தொகை :—இதன் பொழிப்பு உரைத்துக்கொள்க.

திருநீலகண்டர் என்பது இந்நாயனாரின் இயற்பெயர்; பாணனார்-என்பது அவரது திருமரபின் பெயர் ; இப்பெயருடன் (குயவனார்) முன்னம் ஒரு நாயனார் போற்றப் பட்டமையால், அவரினின்றும் வேறுபிரித்துணர்தற் பொருட்டு, மரபுடன் சேர்த்துத் திருநீலகண்டத்துப் பாணனார்க் கடியேன் என்றார் ; இக்கருத்தேபற்றி முன்னர்க் குயவனார்கடியேன் என்றதூஉமென்க-பெயரும் மரபும் தொகைநூல் உணர்த்திற்று.

வகை :—தனை...புகழோன் - தனக்கொப்பில்லாத திருஎருக்கத்தம்புலியூரில் வந்தவதரித்த பெரிய புகழினை உடையவராகிய ; கிளை ஒப்பரும்...பாணனை -



யாழ்மூரிநாத காரைக்கால்) திருத்தருமபுரம்



சிதம்பரம்-நிர்த்தனசபையில் ஊர்த்துவதாண்டவமூர்த்தி

பணிபெருகப் புரிந்த மற்றொரு புட்பதந்தருடன் அப்பணியில் இகலி இவ்வாறு சிலந்தி யாய் வந்து பிறந்தனர் என்றும், இந்நிலையின் மீண்டும் சோழ அரசராய் வந்து பிறந்து வீடுபெற்றனர் என்றும், இவ்வகையால் இவரது மூன்று பிறப்புக்களின் தொடர்ந்த சிவபுண்ணிய வரலாறு கேட்கப்படும் பெருமை இவருடைய சிறப்பாகும்.

(7) இனி, இவர் திருவானைக்காவில் இறைவருக்கு எடுப்பித்த விமானமும் ஆலயமும் முன்னமே அவருக்குச் சாத்தும்படி தேவதச்சனால் அமைக்கப்பட்டுக் கெண்டகை மலைச்சாரலில் கெண்டகை நதியில் இடப்பட்டுக் கோடியுருத்திரரால் பூசிக்கப்பட்ட இறைவருக்குச் சாத்தப்பட்டிருந்ததென்றும், அதனை, இறைவர் அருளியபடி அறிந்து சென்று இவர் கொணர்ந்து, இங்கு இறைவருக்குச் சாத்தினார் என்றும் அறியப்படுகின்ற பெருமை இவருடையதாகும்.

**68. கோச்செங்கட்சோழ நாயனார் புராணம் முற்றும்**



பழுவது. சோழியில் வந்தபின்னர் ஆளுடைய பிள்ளையாரது அருள் பெற்றபின்பு அவருடனேகூட அமர்ந்திருந்து அவர்தம் திருமணத்தில் இறைவரது திருவடி சேர்ந்த வரையில் உள்ளது அவரது சரிதத்தின் பிற்பகுதி ; அதனைப் பிள்ளையாரது சரிதத்துடன் சார்த்தி முன்பே விரித்துரைத்தனாராதலின் அதனை அம்முறையே ஈண்டு ஒரேபாட்டினாற் (4225) சுருக்கிச் சுட்டிக்கூறியும், முற்பகுதியினைப் (4215–4224) பத்துப்பாட்டுக்களால் விரித்துக் கூறியும் அருளிய அமைப்புக் கண்டுகொள்க. இவ்வாறே புகழ்ச்சோழரது யானைபற்றிய வரலாற்றினை எறிபத்த நாயனார் புராணத் தொடர்புடைமை பற்றி முன்னமே 43 பாட்டுக்களால் விரித்துக்கூறிய (561–603) ஆசிரியர், அதனை அவர்தம் புராணத்துள் வரும் முறையே ஒரு பாட்டினாற் (3956) சுருக்கிக்கூறிய அமைதியும் ஈண்டு வைத்துக் கருதற்பாலது.

மன்னி வாழ்பவர் - அவதரித்து நிலையான குடியிருப்பு வாழ்வுடையவர்.

இறைவன்றன் சீர்திருத்ததும் யாழிலிட்டு - சீர் - சீரை எத்தும் பாடல்களுக்காகி வந்தது ; திருத்ததும் - இறைவன் சீர்ப்பாடலிசைகளே யாழிலிடத்தக்கன ; அழிவுடைய ஏனைய போலி யிசைகளை இடுதல் தகாது என்பார் திருந்ததும் என்றார். பாணனாரது யாழ் இறைவரது சீர்களை இசைத்தற்கே பயன்பட்டது ; இவ்வாறு முன்னர்ப் பண்பட்ட தவத்தாலே பிற்றை நாளில் பிள்ளையாரது பதிகங்களை அவர் அருளிய ஆங்காங்கும் யாழிலிடப் பயன்படும். மேலும் அதுகொண்டு வீடுபெறும் பேறும்பெற்றது ; திருத்தகும் என்றது அக்குறிப்பும் தருவதாம். இங்குக் குறித்தது யாழ்வகை நான்கனுட் பாணனார் கொண்ட சகோடயாழ் ; இது 16 நரம்புகளையுடையது. ஏனை மூன்று யாழாவன - பேரியாழ், மகரியாழ், செங்கோட்டியாழ் என்பன. இவை முறையே 21 - 17 - 7 நரம்புகளையுடையன. யாழ் வாசிக்குமுறை " நல்லிசை மடந்தை நல்லெழில் காட்டி, யல்லியம் பங்கயத் தயனினிது படைத்த, தெய்வஞ் சான்ற தீஞ்சுவை நல்லியாழ், மெய்பெற வணங்கி மேலொடுகீழ் புணர்த்து, இருகையின் வாங்கி யிடவயி னிரீஇ, மருவி யவிநய மாட்டுதல் கடனே " என்பதனாறிக.

விளங்குகூடல் - இறைவரருள் தாவிளங்க வீற்றிருக்கும் பதி என்பதாம்.

ஆலவாய் - கோயிலின் பெயர். 1

4216\. ஆலவா யமர்ந்தார் கோயில் வாயிலை யடைந்து நின்று
பாலையீ ரேழு கோத்த பண்ணினிற் கருவி வீக்கிக்
காலமா தரித்த பண்ணிற் கைபல முறையு மாராய்ந்
தேலவார் குழலாள் பாகர் பாணிகள் யாழி லிட்டார். ௨

(இ - ள்) ஆலவாய்...நின்று - திருவாலவாயில் விரும்பி வீற்றிருக்கும் இறைவரது திருக்கோயிலின் வாயிலைச் சார்ந்து அங்கு நின்று ; பாலை...வீக்கி - பாலையாய் நின்ற பதினான்கு வகையின் நிறுவிய உரிய பண் பெறும்படி கருவியின் நரம்புகளை முறுக்கி ; காலம்...ஆராய்ந்து - பண்கள் பலவற்றுள்ளும் அக்காலத்துக்கிசைந்த பண்ணிலே வர நரம்புகளைக் கைவிரலின்றொழிலினால் பலமுறையினும் சோதித்துப் பண்ணமைதி கருவியினில் வரப்பெற்ற பின்னர் ; ஏலவார்...இட்டார் - மணமூட்டிய நீண்ட கூந்தலையுடைய உமையம்மையாரை ஒரு பாகத்தில் உடைய இறைவரது இசைக்கீதங்களை யாழில் இட்டனர்.

அமர்ந்தார் - விரும்பி வீற்றிருக்கின்ற சிவபெருமான்; வினையாலணையும் பெயர்.

(வி - ரை) பாலை...ஆராய்ந்து - பாடல், கண்டப்பாடல் என்றும் கருவிப் பாடல் என்றும் இருவகைப்படும். இவற்றுள் கண்டப்பாடல் உயிர்க்கிடனும் கருவி யாகிய உடற்பகுதிகளால், இயற்றப்படுதலாற் சிறப்புடையது. கருவிப்பாடல், உயிரற்ற கருவிகளாலியற்றப் படுதலின் அத்துணைச் சிறப்பில ; அவை எந்த அளவுக்கு மிடற்றுப்பாடலுடன் ஒப்பிடவருமோ அந்த அளவுக்குச் சிறப்புடையன ; அவ்வொற்றுமை பற்றித் தலைசிறந்த கருவிகள் குழலும் யாழுமாம் ; இவ்விரண்டனுள்ளும் சொல்லையே ஒலிப்பதுபோன்ற தன்மையாற், குழல், மிகச் சிறந்தமையால் முன்வைக்கப்படும். இம்மூன்றனுள் கண்டப்பாடற் பாகுபாட்டமைதியினை முன்னர்த் தடுத்தாட்கொண்ட புராணத்துள்ளும் (221), குழற்கருவியின் அமைதியினை ஆனாய நாயனார் புராணத்துள்ளும் (938 ; 947-953) விரித்தருளினர். ஆண்டாண்டும், பிறாண்டும் (III - பக். ௧௨௨௩) உரைத்தவை யெல்லாம் இங்கு வைத்துக் கண்டுகொள்க. குழற்கருவிக் குரைத்த தன்மைகள் எல்லாம் பெரும்பாலும் யாழ்க் கருவிக்கும் ஒக்கும். அவற்றுள் யாழ்ப் பண் அமைதிபற்றிச் சிறப்பாயறியப்படும் ஒருசில பண்புகளை மட்டும் ஈண்டுச் சுருக்கி ஆசிரியர் எடுத்துக் கூறியருளுகின்றார் ; அத்தன்மைகளுள் கருவி வீக்குதலும் கை பலமுறையு மாராய்தலும் குழலுக்கின்றி, யாழுக்குச் சிறப்பாயுரியனவாதலின் ஈண்டு எடுத்துக் கூறப்படுதல் கண்டுகொள்க.

பாலை ஈரேழு கோத்த பண்ணினில் - பாலை - ஆயம், சதுரம், திரிகோணம், வட்டம் என்று நான்கு வகைபபடும் ; அவற்றுள், பாலையாழ், குறிஞ்சியாழ், மருதயாழ், நெய்தல்யாழ் என்ற நான்குவகைப் பண்களும் பிறக்கும் ; பாலையாழுள்ளே செம்பாலை, படுமலைப்பாலை, செவ்வழிப்பாலை, அரும்பாலை, கோடிப்பாலை, விளரிப்பாலை, மேற்செம்பாலை என்ற ஏழு பாலையிசைகளும் பிறக்கும் ; அவை வலன்முறை, இடமுறை எனத் திரிபுவகையால் இருதிறப்படும் ; அவற்றுள் பல பண்களும் பிறக்கும்; ஆயப்பாலையாய் நின்ற பதினாற்கோவையி னிறுவிய செம்பாலை முதலியஇவ்வேழினையும் பாலையீரேழு என்பர். இங்குப் பண் என்றது ஆயப்பாலையை.

பண்ணினிற் கருவி வீக்கி - யாழிலிட நினைந்த பண்ணுக்கு இணை, கிளை, பகை, நட்பு ஆகிய நரம்புகளை அறிந்து வீக்கி ; இதனைக் கலைத்தொழில்கள் எட்டனுள் பண்ணல் என்பர்.

கை பலமுறையும் ஆராய்ந்து - முன்கூறிய அவ்வாறு வீக்கின நரம்பை, அகவிரல் புற விரல்களால் காணம் செய்து கடவிபபார்க்கல் பரிவட்டணையாம் ; ஆரோகண - அவரோகண (ஏற்றல் - இறக்குதல்) வகையால் இசையினைத் தெரிதல் ஆராய்தலாம் ; அநுசுருதி யேற்றல் தைவரல் எனப்படும் ; இவற்றோடு வார்தல் முதலிய எட்டுவகை யிசைக் கரணங்களையும் இயற்றி என்க.

இசைக் கரணங்கள் எட்டாவன: வார்தல், வடித்தல், உந்தல், உறழ்தல், உருட்டல், தெருட்டல், அள்ளல், பட்டடை என்பன ; வார்தலாவது - சுட்டுவிரலாற் செறிழில் செய்தல்; வடித்தலாவது-சுட்டுவிரலும் பெருவிரலும் கூட்டி நரம்பை உள்ளும் புறமும் ஆராய்தல் ; உந்தலாவது-நரம்புகளைத் தெறித்து வலிவும் மெலிவும் கிரலும் அறிதல் ; உறழ்தலாவது-ஒன்றிடையிட்டும் இரண்டிடையிட்டும் நரம்புகளைத் தெறித்தல் ; உருட்டல் - நான்குவகை ; இடக்கைச் சுட்டுவிரலுருட்டல், வலக்கைச் சுட்டுவிரலுருட்டல், சுட்டுவிரலொடு பெருவிரற்கூட்டி உருட்டல், இருபெருவிரலுமியைந்துடனுருட்டல் என்பன ; தெருட்டலாவது - திருந்திய நரம்பை மிகவுந் தொட்டுத் திருகிவிடுதல் ; அள்ளலாவது - சுட்டுவிரலாலும் பெருவிரலாலும் அள்ளுதல் ; பட்டடையாவது - நரம்பு முற்றும் விளிமுறையாற் பற்றி எழுப்புதல்.

இன்னும் இவற்றின் விரிவெல்லாம் இசைநூல்களுள்ளும், சிலப்பதிகாரம் அரங்கேற்றுகாதை - கானல்வரி - அடியார்க்கு நல்லாருரை, முதலியவற்றுட் கண்டு கொள்க. கூர்ம புராணம் கண்ணன் மணம்புணர்ந்த அத்தியாயமும் காண்க. மேற் கூறியவை பெரும்பாலும் சிலப்பதிகார உரையைத் தழுவி எழுதப்பட்டன.

காலம் ஆதரித்த பண் - பாடும் நேரத்துக்கும் காலத்துக்கும் உரிய பண் ; பகல் இரவு - யாமம் - பெரும்பொழுது முதலிய காலக் கூறுபாடு பற்றி உரிய பண்கள் வகுக்கப்படும் ; இப்பண்பு இந்நாளில் கைவிடப்பட்டு வருகின்றமை வருந்தத் தக்கது !

ஏலம் - மயிர்ச்சாந்து ; "ஏல வார்குழ லாளுமை நங்கை" (நம்பி).

பாணிகள் - இசைப்பாட்டுக்கள் ; கீதங்கள் ; பாணனார் யாழினொடு பொருந்த மிடற்றுப்பாடலும் பாடினார் என்பது மேல் அறியப்படுதலால் (பாடுகின்றார் (4218) ; பாடக் கேட்டு 4219) அதற்குரிய பாட்டின் பகுதியில், செலவு, விளையாட்டு, கையூழ், குறும்போக்கு என்ற நான்கு அமைதிகளும், மிடற்றுப் பாடற் பகுதியில் எடுத்தல், படுத்தல், நலிதல், கம்பிதம், குடிலம் என்ற ஐந்தும் நிகழ்தல் முதலிய இலக்கணமெல் லாம் மேற்கொள்ளப்படும். இவைபற்றி முன் உரைத்தவை எல்லாம் ஈண்டு நினைவு கூர்தற்பாலன.

பாணிகள் யாழில் இடுதலாவது - கீதங்களின் சொல்லமைதி யாழ் இசையில் வெளிப்பட இயற்றுதல். 2

4217. மற்றவர் கருவிப் பாடன் மதுரைநீ டால வாயிற்
கொற்றவன் றிருவுள் ளத்துக் கொண்டுதன் றொண்டர்க் கெல்லாம்
அற்றைநாட் கனவி லேவ, வருட்பெரும் பாண னாரைத்
தெற்றினர் புரங்கள் செற்றார் திருமுன்பு கொண்டு புக்கார். ௩

(இ - ள்) மற்றவர்...கொண்டு - மற்று அவரது (பாணனாரது) யாழ்க்கருவியி விடப்பட்ட பாடலினை மதுரையில் நீடுகின்ற திருவாலவாயில் எழுந்தருளியுள்ள சௌந்திரபாண்டியராகிய அரசர் தமது திருவுள்ளத்துக் கொண்டருளி ; தன்...ஏவ - தமது திருத்தொண்டர்களுக் கெல்லாம் அன்று கனவிலே தோன்றி ஏவியபடியி னாலே ; அருட்பெரும்...புக்கார் - (அவ்வடியார்கள் மறுநாள்) சிவனருளைப் பெற்ற பெரும் பாணனாரைப் பகைவர்களது புரங்களை அழித்த இறைவரது திருமுன்பிலே கொண்டு புகுந்தனர்.

(வி - ரை) மற்று அவர் - மற்று - உட்புகுந்து முன்பு பாடவேண்டிய நிலைபி லிருந்தும், அவ்வாறு இல்லாது புறவாயிலின் நின்று பாடிய அவர் என்ற குறிப்பு டன் நின்றது.

கருவிப்பாடல் - யாழ்ப்பாட்டு ; திருவுள்ளத்துக்கொண்டு - திருவுளத்தில் விரும்பியமையால் ; கனவில் - கனவில் தோன்றி ; ஏவ - அவரைத் திருமுன்பு கொண்டு புகும்படி ஏவ ; அருள் - திரு அருளுக்கிலக்காகி அதனை நிரம்பப் பெற்ற.

தெற்றினர் - பகைவர். வினையாலணையும் பெயர்.

பெரும்பாணனர் - பாணர், பெரும்பாணர் சிறு பாணர் என்று இருவகையினர்; இப்பகுப்பு அவர்களது யாழின் தன்மை பற்றியது. பெரும்பாணாற்றுப்படை - சிறு பாணாற்றுப்படை என்பன காண்க. "பெரும்பாணராவார் குழலர் பாணர் முதலிய பெரிய இசைக்காரர்" (அடியார்க்).

ஏவ - திருமுன்பு கொண்டு புக்கார் - நாயன்மார்கள் காலத்தில் சாதி முறை இருந்ததென்றும், அதனைப் போக்கும் அன்புநெறியில் அவர்கள் ஒழுகினர் என்றும், பாணர் மரபினர் கோயிலுக்குள் செல்லலாகாது என்ற பொல்லா விதியை உடைக்க இங்கு ஆண்டவன் திருவுள்ளம் பற்றினன் என்றும், திருக்கோயிலில் தீண்டாமை பாராட்டுவோர் ஆண்டவன் திருவுள்ளக் குறிப்புக்கு மாறுபட்டு நடப்பவரே யாவர் என்றும், பிறவாறும், ஈண்டு விசேட ஆராய்ச்சி உரைகண்டு குறிப்பிடுவாருமுண்டு; சாதிமுறை, தீண்டாமை முதலியவற்றின் உண்மை நிலைபற்றி முன் பல விடங்களிலும், சிறப்பாகத் திருநாளைப்போவார் நாயனார் புராணத்துள்ளும், பிறாண்டும் விரித்துரைக்கப்பட்டன. கடைப்பிடிக்க. ஈண்டுத் திருநீலகண்டப் பாணனாரைத் திருமுன் கொணர இறைவர் தொண்டர்க்கெல்லாம் கனவில் ஏவினாரே யன்றி, அவரது மரபினர் எல்லாரையும் திருமுன்னர்க் கொண்டு புக ஏவியருளினாரல்லர்; அவ்வாறே திருநாளைப் போவார் நாயனாரை மட்டில் எரியின்கண் மாயப்பிறப்பினை ஒழித்து வரும்படி ஏவினாரன்றி அம்மரபினர்கள் பிறரைப்பற்றி ஏவுதல் இல்லை. இவ்வாறு அவ்வவர்க்குச் செய்த அருள் அவ்வவர் நிலைபற்றிய தன்றி அவர்தம் மரபுபற்றிய தன்று என்பது வெளிப்படை. இவர்கள் தன்மைபற்றி அங்கங்கும் தனித்தனி ஏவியருளிய நிலையினால் சாதிமுறை ஒழுக்கவிதிகள் திருவுள்ளக் குறிப்புக்கடுத்த தென்பதே முடிவாகும். ஒழுக்க அறநூல்கள் இறைவர் வகுத்தவையேயாம். அவ்வப்போது நிகழும் அரசியலாற்றின் சமூகநிலைகள பற்றி எழும் கருத்துக்களை அறநூல் ஒழுக்க விதிகளுள்ளும் சமயநிலை விதிகளுள்ளும் புகுத்தி யிடர்ப்படுதல் வேண்டாத காரியம் என்க.

ஈண்டு யாழ்ப் பெரும்பாணனாரை அவரது தன்மைபற்றி, முன்பு, ஆளுடைய பிள்ளையார் சீகாழிப்பதியில் புறத் திரு முன்றிலினுள் அழைத்துச்சென்று அங்கு நின்று யாழியற்ற அருள்புரிந்தருளினர். இங்குத் திருவாலவாயினுள்ளும் பாணனார் தாம் கோயில் வாயிலினின்று யாழியற்றினர்; இறைவர் ஏவத் தொண்டர்கள் அவரைத் திருமுன்பு கொண்டு புக்கனர். பின்னர்த் திருவாரூரில் கோயில்வாயில் முன் அடைந்து யாழியற்றிப்பாட, வடதிசையில் வாயில் வேறு வகுப்பப் புகுந்து வணங்கும் நிலையும் காணப்படும் (4222). இவற்றின் நுட்பங்கள் ஆராயத்தக்கன; இங்கும், உட்புக்கது இறைவர் பணியாம் என்று தமக்கும் மெய்யுணர்தலாலே பாணனார், இருமுன்பிருந்து பாடினர் (4218) என்பதும் கருதுக. 3

4218. அன்பர்கள் கொண்டு புக்க பொழுதினி லரிவை பாகன்
றன்பெரும் பணியா மென்று தமக்குமெய் யுணர்த லாலே
மன்பெரும் பாண னாரு மாமறை பாட வல்லார்
முன்பிருந் தியாழிற் கூடன் முதல்வரைப் பாடு கின்றார்; ௪

4219. திரிபுர மெரித்த வாறுந் தேர்மிசை நின்ற வாறுங்
கரியினை யுரித்த வாறுங் காமனைக் காய்ந்த வாறும்
அரியயற் கரிய வாறு மடியவர்க் கெளிய வாறும்
பரிவினாற் பாடக் கேட்டுப் பரமனா ரருளி னாலே, ௫

4220. அந்தரத் தெழுந்த வோசை "யன்பினிற் பாணர் பாடுஞ்
சந்தயாழ் தரையிற் சீதந் தாக்கில்வீக் கழியு" மென்று

"சுந்தரப் பலகை முன்னீ ரிடு"மெனத் தொண்ட ரிட்டார்;
செந்தமிழ்ப் பாண ஞருந் திருவருள் பெற்றுச் சேர்ந்தார். ௬

4218. (இ - ள்) அன்பர்கள்...பொழுதினில் - அன்புடைய அடியவர் முன் கூறியவாறு கொண்டு திருமுன்பு புகுந்தபோது; அரிவைபாகன்...உணர்தலாலே - உமையம்மைபங்கராகிய இறைவரது பெரிய ஆணையே யாகும் இஃது என்று தமக்கும் உணர்வினுள்ளே உண்மை புலப்படப் பெற்றமையினாலே; மன்...பாடுகின்றார் - நிலைபெற்ற பெரிய யாழ்ப்பாணரும் பெரிய வேதங்களைப் பாடவல்லாராகிய திருவாலவாயுடையாரது திருமுன்பு இருந்துகொண்டு, அக்கூடலாலவாய் முதல்வரைப் பாடுகின்றாராகி; ௪

4219. (இ - ள்) வெளிப்படை; முப்புரங்களையும் எரித்த பண்பினையும், (அதன்பொருட்டுத்) தேரின் மீதுநின்ற தன்மையினையும், யானையை, உரித்த வரலாற்றினையும், மன்மதனைக் காய்ந்த நிலையினையும், திருமாலுக்கும் பிரமதேவனுக்கும் அறிதற்கரியராயின் வரலாற்றினையும், (ஆயினும்) அடியவர்களுக்கு எளியராயுள்ள ஆற்றினையும்; அன்பினாலே பாடக் கேட்டு இறைவனாரது திருவருளினாலே; ௫

4220. (இ - ள்) அந்தரத்து எழுந்த ஓசை - ஆகாயத்தில் எழுந்த ஓசையானது; அன்பினில்...என - அன்பினாலே பாணனார் பாடுகின்ற சந்தத்தினையுடைய யாழானது தரையில் உள்ள சீதந்தாக்கினால் நரம்புகளின் இறுக்கம் சிதையுமாதலின் அழகிய பலகையினை முன்னர் நீங்கள் இடுங்கள் என்று கூற; தொண்டர் இட்டார் - தொண்டர்கள் அவ்வாறே பலகை இட்டார்கள்; செந்தமிழ்...சேர்ந்தார் - செந்தமிழ்ப் பாணனாரும் திருவருளினைப் பெற்று அதனில் இருந்தனர். ௬

இம்மூன்று பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

4218. (வி - ரை) புக்க - திருமுன்பு புகவைத்த; பணி - கட்டளை.

அரிவை பாகன்...உணர்தலாலே - இஃது இறைவரது கட்டளையேயாம் என்று அன்பர்கள் அறுவுறுத்தி அழைத்துக் கொண்டு புக்கதேயன்றித் தமது உணர்வினுள்ளும் இறைவரது திரு அருளினாலே உணர்த்தப்பெற்று உணர்ந்தபடியினாலே; மெய் - உண்மைத் தன்மை. தமது மரபின் நிலை ஒழுக்கின்படி திருவாயிலின் நின்றபடி பாடுகின்ற பாணனார் அவ்வொழுக்கம் இறைவரது கட்டளையாயினவாறே, இச்செயலும் இறைவரது கட்டளையாமென்று அடியவர்கள் சொல்லக் கேட்டும் திருவருள் உணர்த்தவும் உணர்ந்தனர். ஆதலின் மரபொழுக்க நிலையினைத் தாண்டித் திருமுன்பு இருந்து பாட ஒருப்பட்டனர் என்பதாம். அரிவைபாகன்-ஈண்டு அருளுடைமைக் குறிப்பு.

மாமறை பாடவல்லார் - இறைவர்; முன்பு - திருக்கோயிலினுள் நேர்திருமுன்பில். யாழிற் பாடுகின்றார் - யாழியற்றி அதனுள், பாட்டின் சொல்லிசை யமைதிவரப் பாடுகின்றாராகி; பாடுகின்றார் - முற்றெச்சம்; பாடுகின்ற பாட்டின் பொருள் மேல்வரும் பாட்டில் கூறுதல் காண்க. பாடுகின்றார் - பாடக்கேட்டு - என வரும் பாட்டுடன் முடிக்க. பாடவல்லார்முன் - பாடுகின்றார் என்பது அணிநயம்.

கூடல் முதல்வரை - பாட்டின் பொருளாவார் கூடனாயகர் என்பது. 4

4219. (வி - ரை) இப்பாட்டினால் இறைவரைப் பாணனார் யாழியற்றிப் பாடியபாட்டின் பொருள் கூறப்பட்டது.

திரிபுரமெரித்த...எளியவாறும் - இவை பாணனார் பாடிய பாடற்பொருள்கள். இறைவரது அருட் செயல்களையும், அவற்றாற் போந்த திருவருட் பண்புகளையும் பொருளாக் கொண்டன என்பதாம்.

திரிபுரமெரித்த...காய்ந்தவாறும் - இவை இறைவர் செய்த வீரங்கள் ; "அயன் றலை கொண்டுசெண் டாடல் பாடி யருக்க னெயிறு பறித்தல் பாடி, கயத்தினைக் கொன்றுரி போர்த்தல் பாடிக் காலனைக் காலா லுதைத்தல் பாடி, யியைந்தன முப்புர மெய்தல் பாடி யேழை யடியோமை யாண்டு கொண்ட, நயந்தனைப் பாடிநின் றாடி யாடி நாதற்குச் சுண்ண மிடித்து நாமே" (திருவா - திருப்பொற். 18) என்பது முதலாகிய திருவாக்குக்கள் கண்டு நினைவுகூர்ந்து ஒப்புநோக்கற்பாலன ; தேர் - பூமி யாகிய தேர்.

அடியவர்க் கெளியவாறும் - இறைவர் செய்த அரும்பெரும் வீரங்கள் எல்லாம் அவர் அடியவர்க் கெளிவந்த அருளையே உட்பொருளாக உடையன என்பது.

கேட்டுப் பாமனர் செய்த அருளினாலே, எழுந்த ஓசை...என - என்று மேல் வரும் பாட்டுடன் கூட்டி முடித்துக் கொள்க.

கேட்ட—என்பதும் பாடம். 5

4220. (வி - ரை) அந்தரம் - வானம். ஆகாயம் - மேலிடம் ; ஓசை...என - என்க. என - என்று கூற ; என்று ஆணையிட் டறிவிக்க.

சந்தயாழ் - இசைநூல் விதிப்படி உரிய பக்குவமுடைய மரத்தினால் அமைந்த யாழ். சந்தம் - சந்தத்தினை எழுப்பும் தன்மை பொருந்திய ; நட்பவெப்ப நிலைகளின் சமனாக அமைந்தபோதே மரத்தினின்றும் சந்தம் ஒழுங்குபடக் கிளம்பும் என்பது. சந்தம் - பெருமை - புகழ் - என்றலுமாம்.

தரையிற் சீதந்தாக்கில் வீக்கழியும் என்று - தரையிலிருந்து பாடுகின்றாராதலின் யாழும் தரையில் வைக்கப்பட்டதாம் ; தரையினுடைய குளிர்ச்சி பாணனாரது கை விரல்களின் மூலமும், யாழின் மரத்தண்டு உடல் இவற்றின் மூலமும் தாக்க நரம்பு களின் முறுக்கு அழியும் ; நரம்புகள் என்பது தொக்கு நின்றது ; வீக்கு - இறுக்கம் ; முறுக்கு ; அழிதல் - முறுக்க மதிகமாதலும் இளகுதலும் குறித்தது.

சுந்தரப்பலகை - பொற்பலகை ; பலகையிடும் என - பலகையிட்ட திருவிளை யாடல் வரலாறு பார்க்க. "தார முய்த்தது பாணர்க் கருளொடே" என்ற பிள்ளையார் தேவாரத் திருவாக்கும், அதற்குத் "திருவிய மகத்தி னுள்ளும் திருநீல கண்டப் பாணர்க் கருளிய திறமும் போற்றி" (2769) என்று ஆசிரியர் உரைவிரித்தருளிய தும் இங்கு நினைவுகூர்தற்பாலன.

செந்தமிழ்ப் பாணனார் - செந்தமிழ்ப் பாடல்களைக் கருவியிலும் கண்டத்திலும் பாடும் பாணனார் ; தமிழ்ப்பாடல்களையே யன்றி ஏனைய மொழிப் பாடல்களை யாழியற்றும் நிலை தமிழ்நாட்டில் அந்நாள்வரை வழக்கில் இல்லை என்பது கருதப் படும் ; அப்படி இருந்தமை பெறப்படின், அவற்றைப் பொருள் எனக் கருதாது ஒதுக்கிச் சிறப்பு நோக்கித் தமிழ்ப பாட்டுக்களையே பாடும் என்றுரைத்துக்கொள்க ; பாணனார் ஆளுடைய பிள்ளையாரது செந்தமிழ்த் திருப்பாடல்களையே யாழியற்றி உடனிருந்த வரலாறுங்கருதுக.

கழியுமின்று - என்பதும் பாடம். 6

4221. தமனியப் பலகை யேறித் தந்திரிக் கருவி வாசித்
தமையொரு பாகர் வண்மை யுலகெலா மறிய வேத்தி,
யிமையவர் போற்ற வேகி யெண்ணிரு ணங்கள் கும்பிட்
டமரர்நா டாளா தாரூ ராண்டவ ராரூர் சேர்ந்தார். எ

(இ - ள்) தமனியப்பலகை...வாசித்து - பொற்பலகையின்மேல் ஏறியிருந்து யாழினை வாசித்து; உமை...அறிய-உமையம்மையை ஒருபாகத்தில் உடைய இறைவரது வள்ளன்மையினை உலகமெலாம் அறியும்படிக்கும் ஏத்தி போற்றும்படிக்கும்; இமையவர்...ஏகி - தேவர்களும் ஏத்த அங்கு நின்றும் சென்று; எண்ணில்...கும்பிட்டு-அளவற்ற பதிகளைக் கும்பிட்டுச் சென்று; அமரர்நாடு...சேர்ந்தார் - தேவருலகத்தின் ஆட்சியை விட்டு வந்து திருவாரூரினை ஆட்சிபுரிகின்ற தியாகேசப் பெருமானார் எழுந்தருளிய திருவாரூரினைச் சேர்ந்தனர்.

(வி - ரை) தமனியப் பலகை - பொன் வேலைப்பாடுகளமைந்த பலகை; தமனியம் - பொன்; ஏறி - ஏறி யமர்ந்து; தந்திரிக்கருவி - யாழ்; தந்திரி - நரம்பு; வண்மை - வினைக்கீடாக இறைவனுணையால் வரும் சாதி ஆயுப் போகம் என்ற ஒழுக்க நியமத்தின்படி, வாய்தலில் நிற்கத்தக்க தம்மை அதனைக் கடந்து திருமுன்பு புகுத்திப் பாடலியற்றச் செய்த திருவருள், வண்மை எனப்பட்டது. "நம்மையு மோர் பொருளாக்கி நாய்சிவிகை யேற்றுவித்த, அம்மையெனக் கருளியவா றார்பெறுவா ரச்சோவே" (திருவா) என்று பாராட்டுதல் "வண்மை யுலகெலா மறிய வேத்தி" எனப்பட்டது; வாய்மை - என்பது பாடமாயின் அதற்குத்தக வுரைத்துக் கொள்க.

இமையவர் போற்றல் - அடியவர்க் கெளியதாம் திருவருள் கண்டு துதித்தல்.

எண்ணில் தானங்கள் தும்பிட்டு - தானங்கள் - சிவன் வெளிப்பட்டு விளங்கும் பதிகள். இவை, திருவாலவாயினின்று திருவாரூர் செல்லும் வழியிலும் மருங்கிலும் உள்ளவை; தானங்கள் தும்பிட்டு - என்றதனால் பாணனார் தமது மரபு ஒழுக்கின்படி வாயிற்புறத்து நின்று பாடிய நிலையும், பதிகளையே வணங்கிச் சென்ற நிலையும் கருதப்படும்.

அமரர் நாடு...ஆண்டவர் - "அமரர்நா டாளாதே யாரூ ராண்ட, வயிரா வணமே" (தேவா) என்ற திருவாக்கினை மேற்கொண்டு ஆண்டருளியது; அமரர் நாடா ளாதே-தியாகேசர், இந்திரனால் தேவருலகிற் கொண்டு வைக்கப்பட்டு, அங்கு அமரர்களால் வழிபடபபட்டிருந்த நிலையினை விட்டு, முசுகுந்தச் சக்கரவர்த்திக் கருளி, அவர்மூலம் இந்நிலவுலகில் திருவாரூரில் எழுந்தருளியுள்ள வரலாற்றுக் குறிப்பு. கந்த புராணம் பார்க்க.

வண்மை - அருளிப்பாடுகளை. 7

வேறு

4222. கோயில் வாயின் முன்னின்று கூற்றஞ் செற்ற பெருந்திறலுந்
தாயி னல்ல பெருங்கருணை யடியார்க் களிக்குந் தண்ணளியும்
ஏயுங் கருவி யிற்றொடுத்தங் கிட்டுப் பாடக் கேட்டங்கண்
வாயில் வேறு வடதிசையில் வகுப்பப் புகுந்து வணங்கினார். அ

(இ - ள்) கோயில்...அடைந்து - திருக்கோயில் திருவாயிலின் முன்னே சேர்ந்து; கூற்றம்...பாட - கூற்றுவனை உதைத்தருட்டிய பெரிய வன்மையினையும், தாயினும் நலமிக்க பெருங்கருணையினை அடியார்களுக்கு அளிக்கின்ற குளிர்ந்த பேரருட்டிறத்தினையும் பொருந்திய யாழ்க்கருவியிலே அமைத்து அங்குப் பொருத்திப் பாட; கேட்டு...வகுப்ப - (இறைவர்) அதனைக் கேட்டருளி அங்கு வடதிசையில் (பாணனருக் கென்று) வேறுவாயிலை வகுத்தருள; புகுந்து வணங்கினார் - அதன் வழியே உள்ளே புகுந்து வணங்கினர்.

(வி - ரை) கோயில் வாயில்முன் அடைந்து - தமது மரபொழுக்கத்தின் படியே கோயில் வாயிலின்முன்பு சேர்ந்து.

கூற்றம்...இட்டுப்பாட - திறனும்-அளியும் - என்ற இவை இறைவரது அருட்டன்மைகள்; கோபப் பிரசாதம் எனப்படும்; இப்பெயருடையதொருநூல் நக்கீரரால் அருளப்பட்டுப் பதினொராந் திருமுறையுள் கோவை செய்யப்பட்டுள்ளது; அதன் கருத்துக்கள் ஈண்டுச் சிந்திக்கத்தக்கன. இவை யிரண்டும் எல்லா ஆன்மாக்களுக்கும் பொதுவாயும், அடியார்களுக்குச் சிறப்பாய்வேறாயும் இறைவர் செய்யும் அருள்கள்; திறல்-வீரம் ; அளி - அருட்செயல்கள் ; முன் (4219) உரைத்தவையும் பார்க்க. இறைவரைத் துதிப்பன இவ்விரண்டனுள் அடங்குவன என்பதும் குறிப்பு.

தாயின் நல்ல - தாயினும் நல்ல என்க சிறப்பும்மை தொக்கது, "பாணிலோர் ஊட்டும் தாயினும் சாலப் பரிந்து" (திருவா) ; "தாயிற் சிறந்த தயாவான" "தாயினு நல்ல சங்கரன்" (தேவா) ; தண்ணளி - இறைவர் செய்யும், செற்றம் போன்ற செறுகின்ற செயலும் அளியே எனப்படுமாதலின் அத்தன்மையினின்றும் வேறு பிரிக்கத் தண் என்ற அடை மொழி தந்தோதினர். அறக்கருணை மறக்கருணை என்பர்.

கருவியிற் றொடுத்தலாவது - யாழினில் பாடற் பண்ணுடன் சொல்லமைதி வரச்செய்தல் ; இட்டு - அதற்கேற்ற யாழ்முறைகள் எல்லாம் செய்து ; பாட - கண்டப்பாட்டும் கூடப்பாட , கேட்டு - இறைவர் கேட்டு என்க. எழுவாய் வருவிக்க.

அங்கண்-பாணர்க்கு அருள்புரியும் அதன் பொருட்டு; திருவாலவாயில் அடியார்க்கருளி உட்புகச் செய்தமைபோல, அங்கண் வடதிசையில் வேறுவாயில் வகுத்தருளினர் என்க. இவ்வாறு ஒருவருக்கே இருவேறு விதம்பட விதிகதருளிய தென்னையோ? எனின், திருவாலவாய், உச்சிக்குமேல் 12 அங்குலம் உயர்ந்த பதியாயும் அங்கு இறைவர் மாபாதகந் தீர்த்தது, பன்றிக் குட்டிகளுக்கு அருளியது முதலிய திருவிளையாடல்களை இயற்றிய பதியாயும உள்ளது ; திருவாரூர், இறைவர், அரசாக்கு புரிந்து உலகுக்கு அறநெறி வகுத்து அமரும் பதியாகும்; எனபவை முதலியவற்றை ஈண்டுக் கருதலாம் போலும். இனையவகை யறநெறியி லெண்ணிறந்தோர்க் கருள்புரிந்து, முனைவரவ ரெழுந்தருளப் பெற்றுடைய மூதூர்" (நகரச் சிறப்பு) ; "ஆட்பா லவர்க் கருளும் வண்ணமும்...கேட்பான் புகில் அளவில்லை ; கிளக்க வேண்டா" என்றமைக.

புகுந்து - திருமூலத்தானர் திருமுன்பு புகுந்து; மேல் (4223) பாட்டுப் பார்க்க.

வாயில்...வகுப்ப - இவ்வருளிப் பாட்டின் வகையினையும், திருவாலவாயின் இறைவரது அருளிப்பாட்டினையும், தெரிந்த பின்னரே சீகாழியில் ஆளுடைய பிள்ளையார் பாணனாரைப், புறத்திரு முன்றிலிற் கொடுபுக்குக் கும்பிடுவித்து, "யாழ் உங்கள் இறைவருக்கு இங்கு இயற்றும்" (2032) என்றருளிய நிகழ்ச்சியைப்பற்றி, முன் அறிந்தோம். இஃதென்னையோ? எனின் முன்னர்க் கூறியவை ஆண்டவரது அருளிப்பாடுகள் ; பின்னையது, ஆண்டவனது ஆணை மொழியாகிய வேதாகமங்களின் வழியினைக் கைக்கொண்டு உலகை வழிப்படுத்த வந்தருளிய கடப்பாடுடைய ஆசாரியரின் செயல் ; இவ்வேறுபாடு கண்டுகொள்க.

குறிப்பு : இவ்வடதிசை வாயிலின் அடையாளங்கள் இன்றும் காண உள்ளன. சரித ஆராய்ச்சியாளர் காணலாம்.

வந்துபுகுந்து - என்பதும் பாடம்.

4223. மூலத் தானத் தெழுந்தருளி யிருந்த முதல்வன் றனைவணங்கிச்
சாலக் கால மங்கிருந்து தம்பி ரான்றன் றிருவருளாற்
சீலத் தார்கள் பிரியாத திருவா ரூரி னின்றும்போய்
ஆலத் தார்ந்த கண்டத்தா ரமருந் தானம் பலவணங்கி, ௯

4224. ஆழி சூழுந் திருத்தோணி யமர்ந்த வம்மா னருளாலே
யாழின் மொழியா ளுமைஞான மூட்ட வுண்ட வெம்பெருமான்
காழி நாடன் கவுணியர்கோன் கமல பாதம் வணங்குதற்கு
வாழி மறையோர் புகலியினில் வந்தார் சந்த யாழ்ப்பாணர். ௧0

4223. (இ - ள்) மூலத்தானத்து...வணங்கி - திருமூலத்தானத்தில் விளங்க வீற்றிருந்தருளும் இறைவரை வணங்கி; சால...இருந்து - மிகுந்த காலம் அங்கு இருந்து; தம்பிரான்றன்...போய் - இறைவது திருவருள் விடைபெற்றுச் சீல முடைய அடியவர்கள் நீங்காமல் வாழ்கின்ற திருவாரூரினின்றும் போய்; ஆலத்து... வணங்கி - விடம் நிறைந்த கழுத்தினையுடைய இறைவர் விரும்பி வீற்றிருக்கும் பதிகள் பலவற்றையும் வணங்கி; ௯

4224. (இ - ள்) ஆழி...உண்ட - கடலாற் சூழப்பட்ட திருத்தோணியிலே விரும்பி எழுந்தருளிய இறைவரது திருவருளினாலே யாழிசையினும் இனிய மொழி யாளராகிய உமையம்மையார் ஞானவமுத மூட்ட வுண்டருளிய; எம்பெருமான்... வணங்குதற்கு - எமது பெருமானும், சீகாழி நாடுடையவரும், கவுணியர் தலைவரும் ஆகிய ஆளுடைய பிள்ளையாரது தாமரைபோன்ற திருவடிகளை வணங்கும் பொருட்டு; வாழி...யாழ்ப்பாணர் - வாழ்வுடைய மறையவர்களது பதியாகிய சீகாழிப்பதியினில் சந்தமுடைய யாழ்ப்பாணனார் வந்தனர். ௧0

இந்த இரண்டு பாட்டுகளுக்கும் தொடர்ந்து ஒருமுடிபு கொண்டன.

4223. (வி - ரை) மூலத்தானத்து ..வணங்கி-"புகுந்து வணங்கினார்" (4222) என முன்பாட்டிற் கூறிய ஆசிரியர், அந்தத்திருக்கோயிலினுள் திருமூலத்தானத்துள் புற்றிடங்கொண்ட இறைவர் திருமுன்பு வணங்கினர் என்று அந்த இடத்தினைக் கூறியவாறு. சீலத்தார்கள் - தேவாசிரியனில் உள்ள மெய்யடியார்கள்; முத்தி பெறும் தகுதியார்களாய திருவாரூர்ப் பிறந்தார்கள் என்றலுமாம்.

முதல்வன் - புற்றிடங்கொண்ட பெருமான்.

சாலக்காலம் அங்கிருந்து - அந்த - திருமுன்பு; வணங்கியபின் மிக்ககாலம் - வழிபாட்டுக் காலங்கள் முழுதும் அங்கிருந்து; இவ்வாறன்றிச் சாலக்காலம் - அத்திரு நகரில் பின்னர் தங்கிய பல நாட்கள் என்றலுமாம்; இப்பொருளில் அந்த அத்திருநகரில் என்றுரைத்துக்கொள்க.

திருவருளால் - திருவருள் விடைபெற்று; திருவருளால் - போயென்று கூட்டுக.

தானம்பல - பல பதிகளையும்; உம்மை தொக்கது; "தானங்கள்" (4221) "தானமெல்லாம் பணிந்துபோய்" (4215) என்றாங்கு உரைத்துக் கொள்க. இத் தானங்கள் - திருவாரூரினின்றும் சீகாழிக்குச் செல்லும் இடையில் வழியினும் மருங்கினும் உள்ளவை. ஆலத்து ஆர்ந்த - ஆலம் ஆர்ந்த; அத்து சாரியை.

வணங்கி - வணங்குதற்கு - வந்தார் என வரும் பாட்டுடன் கூட்டி முடிக்க. 9

4224. (வி - ரை) ஆழிசூழும் திருத்தோணி - ஊழி வெள்ளத்தில் மிதத்தலால் ஆழிசூழும் என்றார்.

**யாழின் மொழியாள்** - யாழினும் இனிய மொழியாளாகிய; "யாழைப் பழித் தன்ன மொழி மங்கை" (நம்பி - தேவா - மறைக்காடு).

**அம்மான் அருளாலே** - உமையாள் - ஊட்ட - "துணைமுலைகள், பொழிகின்ற பாலடிசில் பொன்வள்ளத் தூட்டென்ன" (1964) என முன்கூறிய வரலாறுகள் நினைவுகூர்க.

**ஞானம்** - சிவஞானவமுதம் குழைத்த திருமுலைப்பால்; ஞானம் - ஞானம் குழைத்த பாலுக்காகி வந்தது ஆகுபெயர்.

**எம்பெருமான்** - எமது பரமாசாரியர்.

**வணங்குதற்கு** - திருவாலவாயினிலும் திருவாரூரினிலும் இறைவரது கோயில் பணியச் சென்றனர். இங்கு ஆளுடைய பிள்ளையாரது திருவடிகளை வணங்குதல் குறித்து வந்தனர்.

**மறையோர் புகலியினில்** - மறையவர்கள் பதியாகிய புகலியினில்; பிள்ளையாரது திருவடிகளை வணங்குதற்காகவன்றி அங்குப்பாணனார் அணுக்கமாய் வருதற்கிலை யில்லை என்பது குறிப்பு. திருநாளைப்போவார் நாயனார் வரலாறு பார்க்க. 10

4225. ஞான முண்டார் கேட்டருளி நல்ல விசையாழ்ப் பெரும்பாணர்க்
கான படியாற் சிறப்பருளி யமரு நாளி லவர்பாடும்
மேன்மைப் பதிகத் திசையாழி லிடப்பெற் றுடனே மேவியபின்
பானற் களத்தார் பெருமணத்தி லுடனே பரமர் தாளடைந்தார். கக

(இ - ள்) **ஞானமுண்டார்...நாளில்** - (முன்கூறியபடி பாணனார் வந்த செய்தியினைச்) சிவஞானமுண்டருளிய பிள்ளையார் கேட்டருளி நல்ல இசையினையுடைய யாழ்ப்பெரும்பாணனாருக்கு ஏற்றபடியினாற் சிறப்புச் செய்து விரும்பி உறையு நாளில்; **அவர்பாடும்...மேவியபின்** - அப்பிள்ளையார் பாடியருளுகின்ற மேன்மையுடைய திருப்பதிகத்திசையினை யாழில் இட்டு வாசிக்கும் பேறுபெற்று அவருடனே கூட உறைந்து இருந்தபின்; **பானற்களத்தார்...அடைந்தார்** - நீலமலர் போலும் நிறம் பொருந்திய கழுத்தினையுடைய இறைவரது திருநல்லூர்ப் பெருமணத்தில் அவருடனே இறைவரது திருவடிகளை அடைந்தனர்.

(வி - ரை) **ஞானமுண்டார்...நாளில்** - இவ்வரலாறு முன் ஆளுடையபிள்ளையாரது புராணத்துள் (2029 - 2037) விரிக்கப்பட்டுள்ளது.

**ஆனபடி** - மரபுக்கும் அன்பிற்கும் இயைந்த வகையாக;

**அவர்பாடும்...மேவியபின்** - (2037 - 2039) ஆளுடையபிள்ளையார் புராணம் பார்க்க; உடனே மேவுதல் - பிள்ளையாரைக் கண்டு பணிந்து அவரது அருள்பெற்ற நான்முதலாக அவரது திருமணத்தில் உடனாக இறைவரது திருவடியடையும் வரை, அவரைப் பிரியாது உடனிருக்கவும், அவரது திருப்பதிகங்களை அவ்வப் போதும் அங்கங்கும் அவராணைப்படி யாழிலிட்டுச் சேவித்து வரவும் பேறுபெற்றதுவும் இங்கு நினைவு கூர்க; ஆண்டு முன்னர் விரித்தமையின் இங்குச் சுட்டிய மட்டிற் சுருக்கக் கூறினார்.

**பானற்களத்தார்** - பானல் - நீலமலர்; நீலமலர்போன்ற கரிய கண்டம்.

**உடனே** - ஆளுடையபிள்ளையாரும் அவரது பரிசனங்கள் முதலாகிய எல்லவரும் கூடிய கூட்டத்துடனே. 3148-ம் பிறவும் பார்க்க. 11

4226. வரும்பான் மையினிற் பெரும்பாணர் மலர்த்தாள் வணங்கி வயற்சாலிக்
கரும்பார் கழனித் திருநாவ லூரிற் சைவக் கலைமறையோர்
அரும்பா நின்ற வணிநிலவும் பணியு மணிந்தா ரருள்பெற்ற
சுரும்பார் தொங்கற் சடையனார் பெருமை செப்ப லுறுகின்றாம். ௧௨

(இ – ள்) வரும்...வணங்கி - பான்மைபற்றி வரும் திருநீலகண்டப் பெரும் பாணருடைய மலர்போன்ற திருத்தாள்களை வணங்கி, (அத்துணை கொண்டு); வயற்சாலி...மறையோர் - வயல் நெல்லும் கரும்பும் நிறைந்த கழனிகளையுடைய திருநாவலூரில் வந்த சிவாகம நியதியினையுடைய சிவவேதியரும்; அரும்பா நின்ற...சடையனார்-முளைக்கின்ற அழகிய பிறையினையும் பாம்பினையும் சூடிய சிவபெருமானுடைய திருவருளைப் பெற்றவரும் ஆகிய வண்டுகள் மொய்க்கும் மாலையினை அணிந்த சடையனாரது; பெருமை செப்பலுறுகின்றாம் - பெருமையினைச் சொல்லப் புகுகின்றோம்.

(வி - ரை) ஆசிரியர் தமது மரபுப்படி இதுவரை கூறிவந்த சரிதத்தை முடித்துக்காட்டி இனி வரும் வரலாற்றுக்குத் தோற்றுவாய் செய்கின்றார்; இவ்வாறு வரும் முடித்துக் காட்டுதலும் தொடங்கிக்காட்டுதலும் (உபசம்மாரம் உபக்கிரமம் என்பது வடமொழி வழக்கு) இப்புராணத்துள் இதுவே கடைசியாகும்.

மலர்த்தாள் - உவமைத் தொகை, சாலிக்கரும்பு - உம்மைத் தொகை; சாலியும் கரும்பும்; "நிலத்திற் கனியென்ப நெல்லுங் கரும்பும்" என்பது காண்க.

வயற்சாலி - புன்செய் நிலத்தும் ஆறு ஏரிகளிலும் விளையும் நெல்வகைகளினின்றும் பிரிக்க வயற்சாலி என்றார்.

சடையனார் பெருமை - என்றதனுள் அவரது தேவியாராகிய இசைஞானியாரது பெருமையும் இவர்களது திருமைந்தராய் "மூல மான திருத்தொண்டத் தொகைக்கு முதல்வ ராய், இந்த, ஞால முய்ய எழுந்தருளும் நம்பி களது வரலாறும் அமைந்துகொள்வதனால் திருத்தொண்டத்தொகையினுள்" "என்னவனும்...அன்பரா வாரே" என்ற இரண்டடிகளின் பொருளும் விரிக்கப்பெற்று இச்சருக்கம் நிறைவுறுதல் கண்டுகொள்க.

பான்மையினில் வரும் - என்று மாற்றிக்கொள்க; பான்மை – ஊழ் - நியதி; இங்குப் பான்மையில் வருதலாவது பாணர் மரபில்வரினும் மேம்பட்டு இறைவராருளும் பிள்ளையாராருளும் பெற்று இப்பிறவியிலே சிவத்தை அணைந்த திறம். பால்-ஊழ்;

திருநாவலூரில் - சடையனாரது பதி; சைவக்கலை - சிவாகமம். சைவக்கலை மறையோர் - சிவாகமங்களின் வழிவரும் ஒழுக்கமே யன்றி வேறு நெறி பயிலாத நியமமுடைய சிவவேதியர். "மாதொரு பாக னார்க்கு வழிவழி யடிமை செய்யும், வேதியர் குலத்திற் றோன்றி மேம்படு சடையனார்" (149); "எப்போது மினிய பிரா னின்னருளா லதிகரித்து...விதிமுறைமை வழுவாமே, முப்போது மருச்சிப்பார்" (4160)

அரும்பாநின்ற...அருள்பெற்ற - "என்னவனா மானடியே யடைக்கிட்ட சடையன்" என்பது முதனூல்; அரும்பா நின்ற - அரும்புகின்ற; அரும்புதல் - முளைத்தல்.

சுரும்பார் தொங்கல் - வேதியர் மரபுக்குரிய தாமரை மாலையினைக் குறித்தது.

பெருமை - வரலாறின்றித் தன்மை குறித்தது.

சரிதச்சுருக்கம்: திருநீலகண்டயாழ்ப்பாண நாயனார் புராணம்:—நடு நாட்டில், திரு எருக்கத்தம்புலியூரில், பாணர் மரபில், நற்பான்மையினால் வந்தவதரித்தவர் திருநீலகண்ட யாழ்ப்பாண நாயனார். அவர் யாழ் பயிற்றும் சிறப்புக் காரணமாக யாழ்ப்பாணர் என்றழைக்கப் பெற்றனர். குயவராகிய திருநீலகண்ட நாயனாரினின்றும் வேறுபிரித்து உணர்தற்பொருட்டு இவர் பெயரை யாழ்ப்பாணர் என்ற அடைமொழி புணர்த்தியே ஓதுவர். இவர் சிவபெருமானிடத்து மிக்க அன்புடையவர்; சிவனது சிறப்புக்களை யாழிலிட்டு வாசித்துப் பரவும் நியமமுடையவர்; இவரது மனைவியார் இசையே வடிவாயமைந்த மதங்க சூளாமணியார் என்பவர். இவ்விருவரும் யாழிசையுடன் பொருந்தச் சிவன் புகழ்களைக் கண்டப்பாட்டும் உடன் பாடிப் பரவிவருதல் வழக்கம்.

இவர் சிவன் தானங்கள் பலவும் பணிந்துபோய்த் திருவாலவாயுடையாரது கோயிலையணைந்து, திருவாயிலையடைந்து, வாயிலின் முன் நின்று, இறைவர்புகழ்களை விதிமுறைமையில் யாழிலிட்டு அருமையாக வாசித்தனர்; அது கேட்டு மகிழ்ந்து, இறைவர், அதனைத் திருவுள்ளத்துக் கொண்டு, அன்றிரவு தமது தொண்டர்க்கெல்லாம் கனவிற்றோன்றிப் பாணனாரைத் தமது திருமுன்பு கொண்டு புகச்செய்ய ஆணையிட்டருளினர்; அவ்வாறே பாணனாரது உணர்ச்சியிலும் உணர்த்தியருளினர். அதனால் பாணனார் இறைவர் திருமுன்பு புகுந்து இருந்து அவரது புகழ்களை யாழிலிட்டுப் பாடினார்; தரையினிற் சீதம் தாக்கில் சந்தயாழ் வீக்கழியும் என்று இவருக்குப் பலகையிடும்படி இறைவர் அசரீரி வாக்கினால் ஆணையிட, அவ்வாறே தொண்டர்கள் பலகையிட்டனர். பாணனார் அதன்மேல் ஏறியிருந்து யாழியற்றித் துதித்துத் திருவருள் பெற்றுச் சென்றனர்.

அதன்பின், இடையில் உள்ள பல தானங்களையும் கும்பிட்டுப், பாணனார், இறைவரது திருவாரூரினை அணைந்து தமது மரபின்படி கோயில்வாயில் முன்னின்று இறைவர் புகழ்களை யாழிலிட்டுப் பாடினர்; இவருக்காக இறைவர் வடதிசையில் வேறுவாயில் வகுத்தருளப் புகுந்து, திருமூலத்தான நாதர் முன்பு சென்று வணங்கினர். திருவருள் பெற்றுப் போந்து இடையில் பல பதிகளையும் வணங்கிப்போய் ஆளுடைய பிள்ளையாரை வணங்கும் பொருட்டுச் சீகாழியில் அணைந்தனர்.

ஆளுடையபிள்ளையார் இவருக்குத் தக்கவாறு சிறப்பருளித் தமது பதிகங்களை யாழிலிட்டுப் பிரியாது உடனிருக்கும் பேற்றினை அளித்தருளினர். அவ்வாறு பல காலம் ஆளுடையபிள்ளையாருடனே இருந்து திருநல்லூர்ப் பெருமணத்தில் அவரது திருமணத்திலே அடியார் கூட்டத்துடன் அவருடனே கூடப் பரமர் திருவடி நீழலடைந்தனர்.

கற்பனை:—(1) யாழியற்றுதல் பாணர்க்குச் சிறப்பாயுரிய தொழில்.

(2) பாணர்கள் திருக்கோயிலின் வாயிலில் அமர்ந்து இறைவரது புகழ்களை யாழிலிட்டுப் பாடுதல் மரபு ஒழுக்கம். (4216 - 4222)

(3) தீவிர மிகுதிப்பட்ட அன்பர்க்கு அவ்வவர் பக்குவ நிலைக்கேற்றவாறு அவரவர் மரபொழுக்க நிலையினும் மேம்பட்ட திருவருள்களையும் செய்தருளுவர் இறைவர். அதுபற்றி அவ்வவர் உலகியல் மரபொழுக்க விதி நியமங்களுக்கு இழுக்கில்லை; இவ்வுண்மை கண்டு உலகம் ஒழுக்கநூல் விதிகளைக் கைவிடாதொழுகி நலம் பெறுதல் வேண்டும். (4217 – 4222)

(4) இங்கு யாழ்ப்பாணருக்குத் திருவாலவாயுடையாரும் திருவாரூரிறைவரும் செய்த பேரருள்களின் திறம் இவ்வாற்றால் வைத்துணர்தற்பாலது. கண்ணப்பர் - திருநாளைப்போவார் வரலாறுகளும் இங்கு வைத்து ஒப்புநோக்கிச் சிந்திக்கற்பாலன.

(5) சிவபெருமானது புகழ்கள் மறக்கருணை அறக்கருணை - (நிக்கிரக அநுக்கிரகங்கள்) கோபப்பிரசாதம்-என்றிவ்விரண்டு திறத்துள் வைத்து வரலாறுகள் பற்றித் துணிக்கற்பாலன.

(6) பரமாசாரியாரது திருவடிகளை அடைந்து அவரருள் பெற்றோர் பரமன் திருவடி சேர்ந்து மீளா நெறி பெற்றுய்வர். (4226)

(7) மறையவர் பெருமானாகிய ஆளுடையபிள்ளையாரது திருக்கூட்டத்துடன் சேர்ந்து உடனிகழ்ந்து முத்திபெறும் பேறு திருநீலகண்ட யாழ்ப்பாணனார் பெற நேர்ந்ததிலே முன்னைத் தவமுதிர்ச்சியால் அன்பு மேலிட்டு ஒன்றுபட்ட முறைபற்றியதாகும்.

**69.** திருநீலகண்டயாழ்ப்பாண நாயனார் புராணம் முற்றிற்று



சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# 70. சடைய நாயனார் புராணம்

தொகை

" என்னவனா மரனடியே யடைந்திட்ட சடையன்
இசைஞானி காதலனை திருநாவ லூர்க்கோன் "

—திருத்தொண்டத் தொகை - (11)

வகை

தலம்விளங் குந்திரு நாவலூர் தனணிற் சடையனென்னுங்
குலம்விளங் கும்புக ழோனை யுரைபபர் குவலயத்தின்
நலம்விளங் கும்படி நாம்விளங் கும்படி நற்றவத்தின்
குலம்விளங் கும்படி யாரூ ரனைமுன் பயந்தமையே "

—திருத்தொண்டர் திருவந்தாதி - (84)

விரி

4227. தம்பி ரானைத் தோழமைகொண் டருளித் தமது தடம்புயஞ்சேர்
கொமப னார்பா லொருதூது செல்ல வேவிக் கொண்டருளும
எம்பி ரானைச் சேரமான் பெருமா ளிணையில் துணைவராம
நம்பி யாரூ ரரைப்பயந்தார் ஞால மெல்லாங் குடிவாழ. க

புராணம் :—இனி, நிறுத்த முறையானே, பன்னிரண்டாவது மன்னியசீர்ச் சருக்கத்துள் ஐந்தாவது சடைய நாயனாரது புராணங்கூறத் தொடங்குகின்றார்; சடைய நாயனாரது வரலாறும் பண்பும் கூறும் பகுதி.

தொகை :—எமது பிரானாகிய சிவபெருமான் திருவடிகளையே அடைந்திட்ட சடைய நாயனாருக்கும் இசைஞானியாருக்கும் காதலனாகி வந்த திருநாவலூர்த் தலைவனாகிய அடியேன்.

என்னவன் - எனது தலைவராகிய அவன்; அவன்-இவன்-என்பன மகாவாக்கியப் பொருள் குறித்தன; (சிவஞா); அவன் - தற்பதப் பொருளாயுள்ளவன்; என்னை ஆளாக உடையவன்; அடியே - ஏகாரம் பிரிநிலை; வேறொருவருக்கும் ஆளாயடையாதவர்; இதனை " நிலவும் பணியு மணிந்தாரருள் பெற்ற...சடையனார் " (4226) என ஆசிரியர் முன்னர் விரித்தருளினர்; அடைதல் - புகலாகச் சார்தல்; இங்கு நம்பிகள் தம்மைச் சடையனார் - இசைஞானியார் - இவர்களின் காதலன் என்று அறிவிக்கும் வகையால் அவர்களைத் துதிக்கும் திறம் காண்க. இது பற்றியே நம்பி

யாண்டார் நம்பிகள் இவ்விருவருக்கும் இரண்டு பாட்டுக்களால் துதியும் வரலாறுமாகத் திருவந்தாதியுள் இயற்றிவைத்தருளினர். "அடிமை கேட்டுவப்பார்" என்பது காண்க. அதனைப் பின்பற்றியே ஆசிரியர் இவ்விருவர்க்கும் தனித்தனித் தோத்திர வகையாலமைந்த புராணங்களும், வரலாறும் பண்பு முறைக்கு முகத்தால் உரைத் தருளினர்.

வகை :—தலம் விளங்கும்...புகழோனை - இந்நிலவுலகில் விளங்குகின்ற திருநாவலூரில் சடையனார் என்ற பெயரையுடைய, சிவமறையோர் குலம் விளங்கும் புகழினையுடையவரை ; குவலயத்தின்...பயந்தமையே - இவ்வுலகில் நன்மைகள் எல்லாம் விளங்கும்படிக்கும், நாம் விளக்கமடைந் தோங்கும்படிக்கும், நல்ல தவத்தாலாகிய பயன் விளங்கும்படிக்கும், திருவாரூர் நம்பிகளை முன்பெற்றெடுத்த தன்மையினைப் பற்றி ; உரைப்பர் - எடுத்துப புகழ்ந்து கூறுவர்கள் (அறிஞர்கள்).

தலம் - நிலவுலகம் ; தலம்விளங்கும் - உலகில் பெருமை பெற்று விளங்கும் ; இவ்விளக்கமாவது சைவசமய பரமாசாரியர் திருவவதரிக்கும் இடமாயிருக்கும்பேறு பெறுதல் ; "பிறந்தருள வுளதாளுல்" என்று முன் (1276-ல்) உரைத்த கருத்துக் காண்க.

சடையன் என்னும் - சடையன் - இறைவரது பெயர் ; அதனை மக்களுக்கு இட்டு வழங்குவர் ; "கலையர்" என்பது போல ; என்னும் - எனப்படும் ; குலம் விளங்கும் புகழ் - குலம் விளக்கமடைதற்கேதுவாகிய புகழ்; இவர் புகழினால் இவரது குலம் விளங்கிற்று என்பதாம்; குலம் - இங்குச் சிவவேதியர் குலத்தினைக் குறித்தது ; பயந்தமையே - பயந்த காரணம் பற்றியே ; சடையன் என்னும் புகழோனைப் - பயந்தமையே - உரைப்பர் என்க ; அறிஞர்கள் என்ற எழுவாய் தொக்கு நின்றது ;

நலம் - நன்மை-யானவைகளுட் சிறந்தவை ; இவை சிவநெறி ; நாம் விளங்கும் படி என்றது அந்நன்னெறி பற்றி உயிர்கள் உய்யும்படி ; தவத்தின் நலம் - அடியார் கூட்டம் ; தவம் - சிவபூசை ; தவத்தின் பலன் - சிவனையடையும் நெறியிற் சார்தல்; இவை திருத்தொண்டத் தொகை யருளியமையால் உலகை வழிப்படுத்திய தன்மை குறித்தன ; " தீதி லாத்திருத் தொண்டத் தொகைதரப், போதுவார் " (35) என்று தொடக்கத்தில் ஆசிரியர் இதனைக் காட்டியருளியமை காண்க.

சடைய நாயனாரது ஊரும், பெயரும், பண்பும், வாலாறும் தொகைநூல் கூறிய தனைத் தழுவி வகைநூல் வகுத்தது.

விரி :—4227. (இ - ள்) தம்பிரானை...கொண்டருளி - தமது தலைவராகிய சிவபெருமானையே தமக்குத் தோழராக ஆக்கிக்கொண்டருளி ; தமது...எம்பிரானை- (அவரையே) தமது பெரிய தோள்களைத் தழுவும் பூங்கொம்பர் போலும் அம்மையாரிடத்துத் தூதாகச் செல்லும்படி ஏவிக் கொண்டருளும் எமது பெருமானாகியவரை ; சேரமான் பெருமாள்...நம்பியாரூரரை - சேரமான் பெருமாள் நாயனாரது ஒப்பற்ற துணைவராகிய நம்பியாரூரரை ; ஞால மெல்லாம் குடிவாழ - உலகத்தில் எல்லாவுயிர்களும் வாழ்வடையும் பொருட்டு ; பயந்தார் - பெற்றனர் (சடையனார்).

(வி - ரை) தம்பிரானைத் தோழமை கொண்டருளி - தமக்கு மேலான தலைவரைத் தமக்கு ஒப்பாந்தன்மையிற் றோழராகக் கொள்ளுதல் தகாதென்பது குறிப்பு.

ஏவிக் கொண்டருளும் - இனி, அதனோடமையாது ஏவலையும் கொள்ளுதல் அதன் மேலும் தகாது என்பதாம்; இனி, அதன்மேலும் "அவ்வேவல்" தானும் கொம்பனார் பால் ஏவுதல் அதனினும் தகாது என்பதாம். இக்குறிப்புக்கள் படக்கூறியது இத்தைத்

தறியாகக்காட்டி அவரது இணையற்ற அன்பின் பெருமையையும் மேம்பாட்டையும் புலப்படுத்திய உட்குறிப்புப் பெறக் கூறியவாறும்.

கொம்பனார்-பூங் கொம்புபோல்வார்; பரவையம்மையாரைக் குறித்தது. இனி, சங்கிலியார்பால் இறைவர் சென்றருளிய நிகழ்ச்சிகளும் ஒருவாற்றால் இதன் பாற் படுமென்க. "கொம்பருண்டேல்" (திருக்கோவை).

எம்பிரான் - எமது பரமாசாரியர்.

சேரமான்...துணைவராம் - "சேரமான் றோழர்" என்னும் நாமமுடையார். 3812 - பார்க்க (கழறிற் - புரா. 66); இங்கு இவ்வாற்றாற்கூறி முடித்தது அடுத்து இருபெருமக்களும் ஒருசேரத் திருக்கயிலை செல்லும் சரிதக்குறிப்புக் காட்டுதற் கென்க. ஒரு தூது - ஒப்பற்றதூது.

ஞாலக் குடி எல்லாம் வாழ என்க. குடி - உயிர்வருக்கம், "பூத பரம்பரை பொலிய" (1899); இவ்வாறன்றி ஞாலமெல்லாம் - உலகுயிர்கள் யாவும்; குடி - இறைவாருளிற்றிறம்பாது நிலைபெற்றுக் குடியாக; வாழ - வாழும்படி; என்றுரைப் பினுமமையும். ஞாலம் - இடவாகு பெயர்; தவலயத்தினலம் விளங்கும்படி...தலம் விளங்கும்படி - என்ற வகைநூற் கருத்தை வடித்துக் காட்டியபடி.

பயந்தார் - பயத்தல் - மகனைப் பெறுதல்; சடையனார் என்னும் எழுவாய் அவாய் நிலையான் வந்தது. நம்பிகளைப் பெற்றளித்ததே இவர்தம் வரலாறும் என்பது; "உலகுய்ய மகப்பெற்றார்" (1951) என்பது முதலியவையும், சிவபாத விருதயர் மகப் பேறு வேண்டித் தவம்புரிந்த வரலாறும் (1917) கருதுக; "உலக முய்யத் திருவவ தாரஞ் செய்தார்" (149) என்று தொடக்கத்துக் கூறியதனையும் நினைவுகூர்க. பயந் தமை - என்பது வகைநூல்.

இவ்வொரு பாட்டினுல் தடுத்தாட் கொண்ட வரலாறு முதலாக வெள்ளானை மேற் கயிலை சேரும்வரை உள்ள, நம்பிகள் சரித முழுதும் குறிப்பிற் காட்டி, அப் பெருமை முழுதும் அவரைப் பெற்று உலகுக்கீந்த இவர்பாலதாம் என்று இவரது பெருமையும் காட்டிய கவிநயம் கண்டுகொள்க.

சரிதச்சுருக்கம் - சடையநாயனார் புராணம்: தம்பிரான் றோழராய் இறை வரைத் தூது கொண்டவரும் சேரமான் றோழருமாகிய நம்பியாரூரரை உலகுய்ய வரும் மகவாகப்பெற்றீந்த பெருமையுடையவர் சடையனாராகும். திருநாவலூரில் சிவமறையோர் குலத்தில் அவதரித்து அக்குலம் விளங்க வாழ்ந்தவர்.

கற்பனை:—(1) இறைவரைத் தோழராகப் பெறுதலும் அவரைத் தூது கொள்ளுதலும் பேரன்பின் திறத்தாலாவன.

(2) இறைவர் தமது தலைமையினை எண்ணாது அன்பருக் கெளிய தோழரும் தூதருமாவர்.

(3) ஆரூர் நம்பிகள் சேரமானாரது தோழராந் தன்மை இறைவராற் கூட்டப் பட்டதாதலின் இணையற்றது.

(4) தமக்கென்றன்றி உலகுய்யும்படி நன்மகப் பெறுதல் பெரியோர் திறம்.

தலவிசேடம் - திருநாவலூர்:—முன் உரைக்கப்பட்டது; I - பக்கம் உ௯௮, பார்க்க. (பாட்டு - 224). சுக்கிரன் பூசித்த தலம்; சுவாமி - பக்தஜனேஸ்வரர்; அம்மை - மனோன்மணியம்மை எனவும் வழங்குவர்; நம்பியாரூரர் சந்நிதி கோயி லின் வெளிச்சுற்றில் தென் கிழக்கில் உள்ளது; வரதராசப் பெருமான் சந்நிதி கோயிலுக்குள் உள்ளும், அம்மை கோயிலின் முன்னும் உள்ளன; தலமரம் - நாவல்; மேற்புறம் கோமுகி தீர்த்தம் என்ற சிற்றோடையுண்டு; கோயிலுக்குத் தெற்கில் ½ நாழிகை யளவில் கெடில நதி ஓடுகின்றது.

70. சடைய நாயனார் புராணம் முற்றும்

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# 71. இசைஞானி யம்மையார் புராணம்

தொகை

" என்னவனு மானடியே யடைந்திட்ட சடையன்
இசைஞானி காதலன் றிருநாவ லூர்க்கோன் "
—திருத்தொண்டத் தொகை - (11)

வகை

பயந்தாள் கறவுடைச செங்கண்வெள் ளைப்போள்ள னீள்பனைக்கைக்
கயந்தா னுகைத்தநற் காளையை யென்றுங், கபாலங்கைக்கொண்
டயந்தான் புகுமா றுநர்ப் புனித வான்றிருந்தாள்
நயந்தா டனதுள்ளத் தென்று, முரைப்பது ஞானியையே "
—திருத்தொண்டர் திருவந்தாதி - (85)

விரி

4228. ஒழியாப் பெருமைச் சடையனு ருரிமைச் செல்வத் திருமனையார்
அழியாப் புரங்க ளெய்தழித்தா ராண்ட நம்பி தனைப்பயந்தார்
இழியாக் குலத்தி னிசைஞானிப் பிராட்டி யாரை யென்சிறுபுன்
மொழியாற் புகழ முடியுமோ முடியா தெவர்க்கு முடியாதால். க

புராணம் :—இசைஞானியம்மையாரது வரலாறும் பண்பும் கூறும் பகுதி. பன்னிரண்டாவது, மன்னியசீர்ச் சருக்கததுள், ஆறுவது, இசைஞானியம்மையார் புராணங்கூறுகின்றார் ; இசைஞானி - எடுத்துரைக்கப்படும் புகழ்களையுடைய ஞானி என்ற பெயருடையவர்.

தொகை :—இசைஞானி யம்மையாருடைய மகனார் திரு நாவலூர்த் தலைவ ராகிய நம்பியாரூரர்.

வகை :—பயந்தாள். கறவுடை...காளையை என்றும் - கறவுதற் பண்பும், செங்கண்ணும், வெள்ளை நிறமும், துளையுடைய நீண்ட பனைபோன்ற கையும், ஆகிய இவற்றையுடைய யானையினை மேல்கொண்டு திருக்கயிலைக்குச் செலுத்திய காளை யைப் பெற்றெடுத்தவ ரென்றும் ; கபாலம்...உள்ளத்து என்றும் - பிரமகபாலத் தினைக் கையில் ஏந்திப் பலியேற்கும் அரசனாரும், திருவாரூரில் எழுந்தருளிய புனிதரும், ஆகிய இறைவரது திருவடிகளைத் தன்னுள்ளத்து விரும்பி வைத்துள்ளவர் என்றும் ;

உரைப்பது ஞானியையே - எடுத்துத் துதிப்பது இசைஞானிப் பிராட்டியாரையே யாம்.

காளையைப் பயந்தாளென்றும், அரன் திருத்தாள் தன் உள்ளத்து வைத்தாள் என்றும் ஞானியையே உரைப்பது என்று கூட்டுக ; கறு - கறுவுதல் - கோபித்தல்.

பொள்ளல் - உள்துளை ; பனைக்கை - பனைபோன்று பருத்து நீண்ட துதிக்கை; "பனைக்கை மும்மத வேழம்" (தேவா) ; காளை - காளைபோன்ற நம்பியாரூரர் ; இளமை, வீரம், பெருமிதம் முதலிய பண்புகள் பற்றிக் காளை என்றார் ; காளை போன்றவரைக் காளை என்றதுபசாரம் ; நயந்தல்-விரும்பி யமர்ந்திக்கொள்ளுதல் ; ஞானி - இசைஞானியார் ; இசைஞானி - என்ற சொற் பொருள்தர உரைப்பது ஞானியை என்றார் ; ஆநரர்ப்புனித அான்றிருந்தாள் தன் உள்ளத்து நயந்தாள் - என்க. இவ்வம்மையார் கமலாபுரத்தில், சிவகௌதம கோத்திரத்தில், ஞானசிவாசாரியார் பரம்பரையில் அவதரித்தவர் என்று திருவாரூர்ச் சாசனம் ஒன்றினுலறியப்படும் செய்தி இங்குவைத்துக் கருதத்தக்கது. (கமலாபுரம் = திருவாரூர்) ; இவ்வம்மை யாரது ஊர் திருவாரூர் என்பதும், அதுகாரணமாக இவரது மகனுருக்கு ஆரூரன் என்று அடிப்பேர் வைக்கக் காரணமாயிற்று என்பதும், இதுபற்றியே ஆரூர்த் திருமூலத் தானத்தே யடிப்பே ராரூரன்," "ஆரூரன் பேர் முடிவைத்த" என்பனவாதி நம்பிகள் திருவாக்குக்கள் எழுந்தன என்பதும் ஈண்டுக் கருதத்தக்கன. இவ்வாறே ஆசிரியர் சேக்கிழார் பெருமான் தமது தாயாரது தலமாகிய சோழநாட்டுத் திருநாகேச்சரத்தைத் தமது ஆன்மார்த்த தலமாகக் கொண்டதுபற்றி எனது "சேக் கிழார்" (9) பக்கத்தில் உரைத்தவையும் கருதுக.

விரி :—4228. (இ - ள்) ஒழியா...திருமனையார் - குறைவில்லாத பெரு மையினை யுடைய சடைய நாயனாரது செல்வம் பொருந்திய திருமனைவியாரும் ; அழியா...பயந்தார் - வேறெவ்வாற்றானும் அழியாத வலிமையுடைய முப்புரங்களை எய்து அழித்தவராகிய சிவபெருமான் ஆண்டருளிய நம்பியாரூரரைப் பெற்றவரும் ஆகிய ; இழியா...பிராட்டியாரை - இழிவில்லாத உடர்வுடைய குலமாகிய சிவவேதி யரது குலத்தின் வந்த இசைஞானிப் பிராட்டியாரை ; என் சிறபுன்.. முடியாது - எனது சிறிய புன் மொழிகளாற் புகழ முடியுமோ? எனக்கு முடியாமையேயன்றி வேறு எவருக்கும் முடியாது. (ஆல் - அசை)

(வி — ரை) ஒழியாப் பெருமை - அளவில்லாத பெருமைகளை உடைய. நீங்காத என்றலுமாம்

செல்வம் - அருட்செல்வம் ; சிவச்செல்வம். உரிமை - இல்லற உரிமைக்குரிய.

அழியா...அழித்தார் - அழியா - வேறெவராலும் எவ்வாற்றாலும் அழிக்கலாகாத.

இழியாக்குலம் - சிவவேதியர் மரபு ; குலத்தின் இழிவாவது - பிரமதேவனு டைய படைப்பினுட்பட்டுப் பிறந்திறந்து உழலும் கீழ்மை; இழியாக்குலம் - அவ்விழி புக் கிடமின்றிச் சிவனது சிருட்டியுட்பட்டுச், சிவ னைம்முகங்களின் வழித் தோன்றி, அவ்வழிவழி அதிகரித்துச் சிவாகமப்படி சிவனை அருச்சித்தலையே தமது மாபுரிமை யாகக் கொண்டொழுகும் குலம். "இழியாக் குலத்திற் பிறந்தோ மும்மை யிகழா தேத்துவோம்" (நம்பி - தேவா - திருவாரூர் - செந்துருத்தி - 8) ; "எப்போது மினியபிரா னின்னருளா லதிகரித்து ;" (4160) "மாதொரு பாக னார்க்கு வழிவழி யடிமை செய்யும் வேதியர் குலம்" (149) ; "மாசிலா மாபில் வந்த வள்ளல்" (186) என்பன முதலியவை காண்க. பயந்தார்-"பயந்தாள்" என்பது வகைநூல். பயந்தார்- தென்றமிழ்ப் பயனுயுள்ள திருத்தொண்டத் தொகை தரும் நம்பியைத் தந்தவர்

என்பது குறிப்பு. பயின் - பயம்; இழியாக்குலம் - சிவன்படைப்பில் வந்தமை குறிப்பு; " தானேனை முன்படைத்தான் " (நம்பி).

ஆண்ட - தடுத்தாட் கொண்டருளிய; பயந்தாரும் இழியாக்குலத்தில் வந்தவருமாகிய இசை ஞானிப் பிராட்டியாரை என்க.

என்...முடியுமோ? - புகழ்தல் எனது சிறு சொல்லளவிற் படுமோ? படாது என்றபடி. எவர்க்கும் - எனக்கேயன்றி மற்று எவருக்கும் என்று இறந்தது தழுவிய எச்சவும்மை.

சரிதச்சுருக்கம் - இசைஞானியம்மையார் புராணம் :—இசைஞானி யம்மையார் உலவாத பெருமையினை யுடைய சடைய நாயனாரது உரிமைத் திருமனைவியார்; சைவ முதல்வராகிய ஆளுடைய நம்பிகளைப் பெற்ற பெருமையினை உடையவர்; திருவாரூர் இறைவரது திருவடிகளை என்றும் மறவாத மனமுடையவர். அவரது புகழ்களைக் கூறுதல் எவராலும் இயலாது.

கற்பனை :—(1) நன்மக்கட்பேறு இல்லறத்தின் நன்கலமாம்.

(2) தமது இல்லறத்துக்கே யன்றி உலகமெல்லாம் உய்யச் செய்யவல்ல மகனாரைப் பெறுதல் தாயர்செய்த பெருந்தவமும் புகழுமாம்.

(3) அவ்வாறு பெற்ற தாயரைப் புகழ்தல் எவர்க்குமரிது.

## 71. இசைஞானி யம்மையார் புராணம் முற்றும்

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

## சுந்தரமூர்த்தி நாயனார் துதி

### தொகை

அன்னவனா மாரூ ரனடிமைகேட் டுவப்பார்
ஆரூரி லம்மானுக் கன்பரா வாரே "

—திருத்தொண்டத்தொகை - (11)

### வகை

ஞானவா ரூரரைச் சேரரை யல்லது நாமறியோம்
மானவ வாக்கை யொடும்புக் கவரை வளரொளிப்பூண்
வானவ ராலு மருவற் கரிய வடகயிலைக்
கோனவன் கோயிற் பெருந்தவத் தோர்தங்கள் கூட்டத்திலே (86)

---

### திருத்தொண்டத் தொகைத் தனியடியார்களும் தொகையடியார்களும்

கூட்டமொன் பானொ டறுபத்து மூன்று தனிப்பெயரா
மீட்டும் பெருந்தவத் தோரெழு பத்திரண் டாம்வினையை

வாட்டேர் தவத்திருத் தொண்டத் தொகைபதி னொன்றின்வகைப்
பாட்டேர் திகழ்திரு நாவலூ ராளி பணித்தனனே (87)

திருத்தொண்டத்தொகைப் பாட்டு முதற்குறிப்பு

பணித்தகற் றொண்டத் தொகைமுதற் றில்லை யிலைமலிந்த
வணித்திகழ் மும்மைத் திருநின்ற வம்பரு வார்கொண்டதோர்
இணைத்திகழ் பொய்யடி மைக்கறைக் கண்டன் கடல்சூழ்ந்தபின்
மணித்திகழ் சொற்பத்தர் மன்னிய சீர்மறை நாவனொடே (88)

பலனருள் கவி

ஓடிடும் பஞ்சேந் திரிய மொடுக்கியென் னுள்வினைகள்
வாடிடும் வண்ணநின் றெத்தவஞ் செய்தனன் வானினுள்ளோர்
சூடிடுஞ் சீர்த்திருப் பாதத்தர் தொண்டத் தொகையிலுள்ள
சேடர்தஞ் செல்வப் பெரும்புக ழந்தாதி செப்பிடவே (89)

—திருத்தொண்டர் திருவந்தாதி. (முற்றிற்று)

விரி

மேல்வரும் வெள்ளானைச் சருக்க முழுமையும் 86-ம் திருப்பாட்டின் விரியாகக் கொள்ளத்தக்கது ; இச் சருக்க முடிவின் பொருட்டும், ஆசிரியர், காவிய நிலைபற்றித் தொடக்கத்துத் திருமலைச் சருக்கமும் இறுதியில் வெள்ளானைச் சருக்கமும் வைத்து முடித்ததன்பொருட்டும், அதனை ஈண்டு வைக்காது வேறுவைத்து உரை ஓதப்படுகின்றது.

தொகை :—அத்தன்மையுடைய ஆரூரனது அடிமைத் திறத்தினைக் கேட்டு மகிழ்ந்து வாழ்பவர்கள் திருவாரூரில் அம்மானுக்கு அன்புடையவராகுவர்.

அன்னவன் - முன்கூறிய அந்த என முன்னறி சுட்டு ; அத்தன்மையாவன தில்லைவாழந்தணர் முதலாகத் திருநீலகண்டப்பாணரீறாகக் கூறி வழிபடப்பட்ட திருத்தொண்டர்களுக்கெல்லாம் அடியவராய்ச், சடையனா ரிசைஞானியார் காதலராகிய தன்மை ; அடிமை - அடிமை செய்யும் பண்பு ; மனமொழி மெய்களால் வழிபட்டமுறை ; அது தடுத்தாட்கொண்ட புராணத்துட் கூறப்பட்டது. (335 - 349) ; அடிமைத் திறங்கூறும் திருத்தொண்டத் தொகை ; உவந்தல் - மகிழ்ந்து அவ்வாறே தாமும் அடியார்க்கு அடிமைகளாக ஒழுக அமைதல் ; அன்பராவார் - சிவனுக்கு அன்பாந்தன்மை பெற்று வீடடையும் தகுதிபெறுவர். சிவனடியார்பாற்செலுத்தும் மனமே சிவன்பாலன்பினை விளைத்து அதுவே முத்தி சாதனமாம் என்பது சிவஞான நூல்களின் துணிவு ; ஏகாரம் - தேற்றம். அம்மான் - இறைவர்.

வகை :—(86) வளரொளிப்பூண்...கூட்டத்திலே - மேன்மேல் வளர்கின்ற ஒளியுடைய அணிகளையுடைய தேவர்களாலும் சென்றடைதற்கரிய வடகயிலை மலையின்கண் எழுந்தருளியுள்ள முழுமுதற் றலைவராகிய சிவபெருமானது திருக்கோயிலில் உள்ள அடியார் திருக்கூட்டத்தில் ; மானவ...புக்கவரை - மனித உடம்புடன் கூடிப்புகுந்திருப்பவர்களை ; ஞான...நாமறியோம் - ஞானத்திரு நம்பியாரூரரையும் சேரமான் பெருமாள் நாயனாரையும் அல்லாது வேறு எவரையும் நாம் அறியோம்.

ஞான ஆரூரர் - ஞானத்தையுடைய நம்பி ஆரூரர். ஞானம் - சிவஞானம்; இங்குச் சிவஞான வாழ்வுடைமை குறித்தது; ஆரூரரையும்-சேரரையும் என்க. எண்ணும்மைகள் தொக்கன; சேரர் - சேரமான் பெருமான்; மானவ ஆக்கை - மனித உடம்பு; தவத்தோர் - அடியார்; சிவகணங்களாகிக் கயிலையில் இருப்பவர்; கயிலைக் கோன் - சிவபெருமான்; கூட்டம் - கயிலையின் திருக் கூட்டம்; சிவ கணங்களின் கூட்டம்; இவ்விரு பெருமக்களும் இங்கு நின்றவாறே மனித உடம் புடன் முறையே யானைமீதும் குதிரைமீதும் திருக்கயிலைக்குச் சென்று சேர்ந்து அங் குக் கணநாதர்களாய் அடியார் கூட்டத்தினில் அமரும் வரலாறு மேல் வெள்ளா னைச் சருக்கத்துட் பேசப்பெறும்; அச்சருக்கத்தை வேறாக வகுத்து இப் புராண காவியத்தை நிறைவாக்குதற்கு ஆதரவு நம்பியாண்டார் நம்பிகளருளிய இத்திருப பாட்டேயாகும் என்க; வானவராலும் மருவற்கரிய - வானவர் பசுபுண்ணியங்கள் செய்து போக பூமியாகிய, மீண்டும் பிறவிக் கேதுவாகிய, சுவர்க்கத்திற் புக உரியவரே யன்றிச், சிவனடியார் போலச் சிவபுண்ணியப் பேற்றினாற் பிறவா நெறி பெற்றுச் சிவனுலகம் புக உரியரல்லர் என்பது ஞானநூற் றுணிபு; கோன்-முழுமுதற்றலைவர்; இப்பாட்டின் விரிவு மேல்வருஞ் சருக்கமாம்.

(87) இப்பாட்டினால் திருத்தொண்டத் தொகையினுள் தனியடியார்களும் தொகையடியார்களும் இத்துணையாவர் என்று நம்பியாண்டார் நம்பிகள் வகுத்துக் காட்டியருளினர்; கூட்டமொன்பானோடு...எழுபத்திரண்டாம் - திருக்கூட்டத்தின் வரும் அடியார்களின் வகை ஒன்பதாம்; (அதனோடு), 'அறுபத்து மூன்றுபேர் தனி யடியார்களாக, இவ்வாறு பெருந்தவத்தினை ஈட்டும் அடியார்கள் எழுபத்திரண்டாவர் (என்று); திகழ்திரு நாவலூராளி-விளங்கும் திருநாவலூர் நம்பியானவர்; வினையை... பாட்டும் - வினையைப் போக்கும் தவத்தைத் தரும் திருத்தொண்டத் தொகையினிற் பதினொன்றாக வகுத்த பாட்டுக்களையும்; பணித்தனனே - அமைவுபடுத்தினரே;

கூட்டமோன்பானோடு - திருக்கூட்டம் - தொகையடியார்களாகப் போற்றப்படும் ஒன்பதனோடு; இவர்கள் தில்லைவாழந்தணர்கள், பொய்யடிமையில்லாத புலவர், "பத்தராய்ப் பணிவார்கள் எல்லார்க்குமடியேன்" என்ற திருப்பாட்டிற் போற்றப் பட்ட ஏழு திறத்தினர் ஆக ஒன்பதின்மர். தனிப்பெயர் அறுபத்து மூன்று - திருநீல கண்டக் குயவனார் முதலாகத் திருநீலகண்ட யாழ்ப்பாண ரீறாகத் தனித்தனி அடியேன் என்று போற்றப்பட்ட அறுபதின்மருடன், அரனடியே அடைந்திட்ட சடையன் (1), இசைஞானி (2), காதலன் திருநாவலூர்க்கோ னன்னவனு மாரூரன் (3) என்ற மூவரும் சேர்த்து அறுபத்து மூவராவர்; ஈட்டும் பெருந்தவத்தோர் - மீட்டிய பெருந்தவத்தவர்கள்; தவம் - சிவபூசைப்பயன்; வினையை...திருத்தொண்டத் தொகை - திருத்தொண்டத் தொகையின் பயனாவது வினையை வீட்டுகின்ற தவ நெறியிற் செலுத்துவதாம். வகைப்பாட்டும் - வகைப்படுத்தி ஓதியபாட்டுக்களையும்; திருநாவலூராளி - நம்பியாரூரர்.

(88) இப்பாட்டினால் திருத்தொண்டத் தொகைத் திருப்பதிகத்தை நியமமாகப பாராயணஞ் செய்வோர்க்கு அத்திருப்பாட்டுக்கள் முறை பிறழாது நினைவுக்கு வரு தற்கு உதவியாக அவற்றின் முதற் குறிப்புக்களைக் கோர்த்து ஒரு கவியாக்கிக் கருணை யினாலே தந்தருளினார் நம்பியாண்டார் நம்பிகள். இம்மரபு பிறபதிகங்களுக்கும் தேவாரப் பள்ளிக்கூடங்களில் கையாளப்படுகின்றது.

பணித்த நற்றேண்டத்தோகை முதல் - முன்கூறிய அவ்வாறு திருநாவலூராளி அருளிய வினைவீட்டும் தவத் திருத்தொண்டத் தொகைத் திருப்பதிகப் பாட்டுக்களின்

முதற்சொற் குறிப்பாவன ; தில்லை...மறைநாவனொடே - தில்லை என்பது முதல் மன்னியசீர் மறைநாவன் என்பதனொடே வருவனவாம்.

அணித்திகழ் - அழகுடன் விளங்கும் ; எதுகை நோக்கித் தகரம் இரட்டித்தது செய்யுள் விகாரம் ; இணைந்திகழ் - பொருந்த விளங்கும் ; மணித்திகழ்சொல் - மணிபோல விளங்கும் பதிகப் பாட்டுச் சொற்கள். முதல் - மறைநாவனொடேயாம் - என்று முடிக்க. ஆம் என்பது வருவிக்க.

(89) இப்பாட்டினால் இத்திருவந்தாதியினைப் பயில்வதன் பல னருளிச்செய் கின்றார்.

வானினுள்ளோர்...பாதத்தார் - தேவருலகத்தில் உள்ள தேவர்களும் சிரத்திற் சூடும் சிறப்பினையுடைய திருவடிகளை உடையவர்களாகிய; தொண்டத் தொகையில் உள்ள சேடர்தம் - திருத்தொண்டத் தொகையிற் போற்றப்பட்ட பெரியோர்களது; பெரும்புகழ்...செப்பிட - பெரிய புகழ்களைத் துதிக்கும் இத்திருவந்தாதியினைச் சொல்ல ; ஓடிடும்...செய்தனன் - கட்டுப்பட்டு நில்லாது மாறி மாறி ஓடுகின்ற ஐந் திந்திரியங்களையும் அவ்வாறு ஓடாமல் ஒடுக்கி ஒருமுகப்படுத்தி என் உள் வினைகள் அறும்படி நின்று என்ன பெருந்தவத்தினைச் செய்தேன் ; (ஒன்றும் செய்யவில்லையே!)

ஐந்திந்திரியங்களையும் ஒடுக்கி வினையை வாட்டும் தவஞ் செய்திருந்தாலன்றித் திருத்தொண்டர்களின் புகழ்களைக் கூறும் இத்திருவந்தாதியினைச் செப்பலரிது என்பதாம் ; இத்திருவந்தாதி தவப்பயனாகச் செப்ப வருவது என்பதாம் ; ஓடிடும் — கட்டிடங்காது இச்சை வழியே மாறுபட்டுப் பல இடமும் ஓடும் ; எத்தவம் செய்தனன் அத்தகைய எத்தவமும் செய்யவில்லை என்பது குறிப்பு ; அவ்வாறாகவும் இப்பேறு கிடைத்தது எவ்வாறோ? என்றதாம் ; "அரும்பின வன்பில்லை யர்ச்சனை யில்லை...என் னனே வந்து நேர்பட்டதால்...கழலடியே" (ஆளுடையபிள் — அந். 24) ; வானினுள்ளோர் சூடிடும் சீர்த்திருப்பாதத்தர் - திருத்தொண்டர்களை வானவர்கள் வணங்கி வரம்பெறுவர் என்பதாம் ; "தேவாசிரியன்" என்றதன் கருத்து ; சேடர் - பெரியோர் ; அறிவிற் சிறந்தவர் என்றலுமாம் ; அந்தாதி - இத்திருவந்தாதி ; செப்பிடவே - இத்திருவந்தாதி "செப்பத் தகுபுகழ்" என்று தொடங்கிய ஆதியே அந்தமாக மண்டலித்து முடிந்ததனை கண்டுகொள்க. சேடன் - அஞ்சிநின்றவன் - சிவன் என்று கொண்டு சேடர் - சிவத்தன்மை பெற்ற பெரியோர் என்றலுமாம்.

## திருத்தொண்டர் திருவந்தாதி முற்றிற்று

## 12-வது மன்னியசீர்ச் சருக்கம் முற்றிற்று

குறிப்பு:— இரண்டாவது தில்லை வாழந்தணர் சருக்கம் முதல், பன்னிரண்டாவது மன்னியசீர்ச் சருக்கம்வரை உள்ள 11 சருக்கங்களும் முறையே திருத்தொண்டத் தொகையின் ஒவ்வோர் திருப்பாட்டின் தொடக்கத்தையே பெயராகக் கொண்டுள்ளதுவும், அவ்வச் சருக்கள் அவ்வத் திருப்பாட்டினுட் போற்றப்பட்ட அடியார்களின் வரலாறுகளை ஓதியதுவும் இவ்வாறு திருத்தொண்டத் தொகையின் அடியார்கள் எல்லாருடைய திருத்தொண்டுகளும் போற்றப்பட்டதுவும் கண்டு கொள்க. "தமிழ் முறையே...எத்தலுறுகின்றேன்" (349) பார்க்க.



சிவமயம்

திருச்சிற்றம்பலம்

பதின்மூன்றாவது

# வெள்ளானைச் சருக்கம்

4229. மூல மான திருத்தொண்டத் தொகைக்கு முதல்வ ராயிந்த
ஞால முய்ய வெழுந்தருளு நம்பி தம்பி ரான்றோழர்
காலை மலர்ச்செங் கமலக்கட் கழறிற் றறிவா ருடன்கூட
ஆல முண்டார் திருக்கயிலை யணைந்த தறிந்த படியுரைப்பாம். க

(இ - ள்) மூலமான...தம்பிரான்றோழர் - திருத்தொண்டர் சரிதங்களைக் கூறும் இந்நூலுக்கு மூல நூலாகிய (முதனூல்) திருத்தொண்டத்தொகை அருளிச் செய்வதற்குரிமையுடைய முதல்வராக இந்த நிலவுலகம் உய்யும் பொருட்டே இங்கு எழுந்தருளி வந்த நம்பிகளாகிய தம்பிரான் றோழர்; காலை...கூட - காலையில் மலரும் தன்மைத்தாகிய செந்தாமரைபோன்ற கண்களையுடைய கழறிற்றறிவார் நாயனாருடன் கூட; ஆல முண்டார்...உரைப்பாம் - விடத்தை உண்டருளிய இறைவரது திருக்கயிலையின் கண் அணைந்த வரலாற்றினை அறிந்தவாறு சொல்வோம்.

(வி - ரை) மூலமான - இப்புராணத்துக்கு முதனூலாகிய. மூலம் - மூலநூல்; முதனூல். மூலம் - பிறிதோர் நூலினின்றும் எவ்வாற்றானும் எடுத்துக் கொள்ளப் படாது உண்டாகியது; திருத்தொண்டத் தொகைப் பதிகத்தினையே முதனூலாகவும், திருவந்தாதியினை வழி நூலாகவும் கொண்ட சார்பு நூலாக இப்புராணம் போந்ததென்பது முன் திருமலைச் சருக்கத்துள் (47 - 48 - 49) உரைக்கப்பட்டது; கடைப்பிடிக்க. இதனாலே இப்புராணம் மொழி பெயர்ப்புநூல் என்ற போலியுரைகாரர் கூற்றும் மறுக்கப்பட்டதும் காண்க

முதல்வர் - ஆசிரியர். செய்தவர்; முதல்வரோ டொப்பாத் தன்மையுடையவர் என்ற குறிப்பும் காண்க. முன் உபமன்னிய முனிவர் கூற்றும் (29) காண்க.

ஞாலமுய்ய எழுந்தருளும் நம்பி - "மாதவஞ் செய்த தென்றிசை வாழ்ந்திடத், தீதிலாத்திருத் தொண்டத் தொகைதரப், போதுவார்" (35) என்ற தொடக்கத்துக் கூறியதனைப் புராண முடிவில் இங்கு நினைவு கூர்ந்து மனத்துள் வைத்தற் பொருட்டு இவ்வாற்றாற் கூறினர். மூலமான ..முதல்வர் - என்றதும் "தீதிலாத் திருத் தொண்டத் தொகைதர" என்ற கருத்தைச் சுட்டி நிற்றல் காண்க.

காலைமலர்ச் செங்கமலக் கண் - காலையில் மலருக் மலராகிய செங்கமலம்; இடையறாத கண்ணோட்டம் பெரிதும் வேண்டி வரம்பெற்ற குறிப்புப் பெறக் கூறியது; "திருவுடை மன்னரைக் காணிற் றிருமாலைக் கண்டேன்" என்றபடி

உலகங்காக்கும் அரசர், திருமாலின் கூறுடைமையால் திருமால் போன்ற செந்தாமரைக் கண்ணுடையார் என்ற குறிப்புமாம்.

கழறிற்றறிவார் என்ற இத்தன்மையாற் கூறியது உலகுயிர்களின் மேல் வைத்த கண்ணோட்டமாகிய தன்மை குறித்தற்கு.

கூட - சேர்ந்து. 1

4230. படியி னீடும் பத்திமுத லன்பு நீரிற் பணைத்தோங்கி
வடிவு நம்பி யாரூரர் செம்பொன் மேனி வனப்பாகக்
கடிய வெய்ய விருவினையின் களைகட் டெழுந்து கதிர்பரப்பி
முடிவி லாத சிவபோக முதிர்ந்து முறுகி விளைந்ததால். ௨

(இ - ள்) படியில் நீடும் பத்திமுதல் - உலகில் நீடிய பத்தி முதலானது; அன்பு...ஓங்கி - அன்பாகிய நீரினாலே பருத்து மேல் எழுந்து; வடிவு...வனப்பாக - நம்பியாரூரது செம்பொன் போன்ற வனப்புடைய மேனியே தனது வடிவமாக; கடிய...கட்டு - கடுமையாகிய வெவ்விய இருவினைகள் என்னும் களையினைக் கடிந்து அகற்றி; எழுந்து கதிர்பரப்பி - மேலோங்கி எழுந்து ஞானக் கதிர்களாகிய கதிர்களைப் பரப்பி; முடிவிலாத...விளைந்தது - அழிவில்லாத சிவபோக மென்னும் பலம் முதிர்ச்சி பெற்று மிகவும் விளைந்தது; (ஆல் - அசை).

(வி - ரை) இப்பாட்டுச், சொற்பொருட் சிலேடை கலந்த முற்றுருவகவணி. முதன்முறை கழறிற்றறிவாரைக் கண்டு பிரிந்து திருவாரூர் சேர்ந்தபின், நம்பியாரூர், மீளவும் அவரை நினைந்து கொடுங்கோளூர் சாரும்வரை அவரது பிற்றை வாழ்க்கை நிலை, இவ்வுலகில் வாழ்ந்தவாறே சிவபோக விளைவாக நின்ற தன்மை இப்பாட்டால் (நெற்) பயிர்களின் போக விளைவுபற்றிய உருவகமாக வைத்து உணர்த்தப்பட்டது.

நெற்போக விளைவுபற்றிய நிலையில் - படி - நிலம்; பத்தி-பயிர்களின் வரிசை; முதல் - நாற்று; நீர் - பயிருக்குரிய தண்ணீர்; பணைத்தோங்குதல் - தூறு கொண்டு பயிர் மிக வளர்தல்; வடிவு - பயிரின் வண்ணம்; களைகட்டல் - பயிர்க்குப் பகையாகிய களையினைத் தெரிந்து களைதல்; எழுந்து கதிர்பரப்புதல் - பயிர்த்தாள்களினின்றும் கதிர்கள் தோன்றி விரிதல்; முதிர்ந்து முறுகி விளைந்தது - கதிர்கள் முற்றிச் செறிந்து விளைதல்.

நம்பியாரூரர்பாற் சிவபோக விளைவு பற்றிய நிலையில் - படியில் - இவ்வுலகில்; விதியின்படி என்றலுமாம்; பத்திமுதல் - சிவன்பாலும் அடியார்பாலும் கொண்ட பரிவாகிய மூலம்; அன்பு நீரில் - (நீர் - நீர்மை) அன்பாகிய பண்பினோடு; பணைத்தோங்குதல் - கிளைத்தெங்கும் பாவுதல்; வனப்பு மேனி வடிவு - வனப்புடைய திருமேனியினையே பற்றி வடிவம் கொண்டு; இருவினையின் களைகட்டு-சிவப்பயிர்க்குக் கேடு செய்யும் இருவினைகளையும் வாராது ஒறுத்தல்; எழுந்து கதிர்பரப்புதல்; எங்கும் சிவஞான வொளி வீசுதல்; சிவபோகம்...விளைந்தது-போகம்-பயன்; சிவபோகம்-சிவானந்தானுபவமாகிய விளைவு; முதிர்ந்து முறுகி விளைதல் - மேன்மேல் முதிர்ச்சியும் செறிவும் பெற்று மிக்கு உண்டாதல்.

பணைத்தல் - கிளைத்து ஓங்குதல்.

வடிவு - பிழம்பு; வனப்பு மேனியாக - என்று கூட்டுக.

மேனி — பயிர்கள் மேனி காணுதல் என்பதும் மரபு. களைகட்டல் - களையினைக் களைதல்; வெய்ய வினையிரண்டும் - தீவினை போல நல்வினையும் பிறவிக் கேது வாதலின் இருவினைகளையும் களை என்றார்; கட்டல் - பிடுங்குதல்; மரபு வழக்கு.

"கண்கட்டதனோடு" (குறள்); கதிர்-ஒளிக்கதிர் (மற்) பயிர்க்கதிர்; இரண்டிற்கும் சிலேடை; போகம் - பயிர் விளைவுக்கும் பெயர்.

ஆளுடைய நம்பிகள் அவதரித்ததன் பயனாகச் சிவபக்தி உலகில் அன்பின் றன்மையாலே ஓங்கி இருவினைகளைக் களைந்து ஞானம் பெருகிச் சிவானந்தத்தைப் பெருக்கிற்று என்பது கருத்தாகக் கொள்வதுமாம். பத்தி, அன்பு, இருவினை, ஞானம், ஆனந்தம் என்ற இவை எல்லாம், பண்பு கண்டு பிழம்பு காணப்படாத, அருவப் பொருள்களாதலின் நம்பிகளது திருமேனியினையே பிழம்பாகப் பற்றுக்கொண்டு இவை புலப்பட நின்றன என்பது உருவகக் கருத்து.

சிவபோகம் – சிவானந்தப் பெருக்கம். ௨

4231. ஆர முரக மணிந்தபிரா னன்ப ரணுக்க வன்றொண்டர்
ஈர மதுவார் மலர்ச்சோலை யெழிலா ரூரி லிருக்குநாட்
சேரர் பெருமா டனைநினைந்து தெய்வப் பெருமாள் கழல்வணங்கிச்
சாரன் மலைநா டணைவதற்குத் தவிரா விருப்பி னுடன்போந்தார். ௧

(இ - ள்) ஆரம்...வன்றொண்டர் - பாம்பினை ஆரமாக அணிந்த இறைவரது அன்பராகிய அணுக்கமுடைய வன்றொண்டர்; ஈர...நாள் - குளிர்ந்த தேன் பொருந்திய மலர்கள் நிறைந்த சோலைகள் சூழ்ந்த அழகிய திருவாரூரில் இருக்கும் நாட்களில்; சேரர்பெருமாள்...வணங்கி - சேரமான் பெருமாள் நாயனாரை நினைந்து தெய்வப்பெருமானாகிய தியாகேசரை வணங்கி அருள் விடை பெற்று; சாரல்... போந்தார் - சாரல்களையுடைய மலைநாட்டினை அணைவதற்குத் தடுக்கலாகாத பெரு விருப்பத்துடனே போயினர்.

(வி - ரை) உரகம் ஆரம் அணிந்த - என்க. உரகம் - பாம்பு.

அணுக்க வன்றொண்டர் - அணுக்கராய்ப் பணி செய்யும் உரிமையுடைய நம்பிகள். அணுக்கப் பணிகளாவன-நீறும் மாலையும் சாத்துதல், திருமஞ்சன மாட்டுதல் முதலிய திருமேனிப்பாங்குகள் செய்தல். முப்போதுந்திருமேனி தீண்டும் மரபினராதல் குறிப்பு. நம்பிகளது முன்னை நிலைக்குறிப்பும் காண்க. இனி இறைவருக்கு அணியராய்த் தோழமையாகிய உரிமையுடையர் என்றலுமாம்.

ஈரம்...எழிலாரூரில் இருக்குநாள் - நினைந்து - அடைமொழிகள் திரு ஆரூரின் பண்புகளையும், அதில் இருப்போர் அதனை விட்டு நீங்க மனங்கொள்வதரிதாம் நிலைமையினையும் உணர்த்தி நின்றன; முன்னர் நம்பிகள் சேரமானாரால் உபசரிக்கப்பட்டு அவருடன் கொடுங்கோளூரில் இருந்தநாளில் திருவாரூர் நகராளும் தேவர் பிரானை மிக நினைந்து பாடி வழிக்கொண்டார்; (3903—3910); இங்குத் திருவாரூரில் இருக்குநாளில் சேரமானாரை நினைந்து செல்கின்றார்; இவை திருவருள்வழி இயங்கு நிலைகள் என்க. பிற்சரிதவினைவும் கருதுக. தெய்வப் பெருமான் கழல் வணங்கி என்றும் தவிரா விருப்பினுடன் என்றும் வருவன இக்குறிப்புத் தருவன. இறைவர் தாமே தோழமையருளத் தம்பிரான் றோழராகிய நம்பிகள், தம்மைச் சேரமான் றோழராக அமைத்துக் கொண்டருளியமையாலும் சேரனாரது தோழமை தெய்வத்தன்மையாலும் சரிதத்திலும் ஒக்கவே நம்பிகளது ஆர்வம் சென்றது என்பதும் கருதப்படும். சேரர் பெருமாள் - தெய்வப்பெருமான் என்ற சரிதத்தும் ஒப்பக்கூறும் குறிப்பும் கருதுக.

ஆரம்...கழல் வணங்கி - திருவாரூரையும் தியாகேசரையும் புற்றிடங்கொண்டாரையும் வணங்கிச் செல்லும் நிலை இதுவே இறுதிமுறையாதல் குறிப்பு. ஆளுடைய

பிள்ளையார் திருமணத்துக்கு எழுந்தருளும்போது "மூலமான தோணிமேல் முதல்வரை வணங்கி"ச் (3094) சென்றருளினர் என்பதும் காண்க.

சாரல் - மலைநாட்டிற் பெய்யும் மழைச்சாரல்களும் அதனால் வரும் ஏனைய தாவரச்சார்புகளும் கொண்ட என்பது.

தவிரா விருப்பு - தடுக்கலாகாத பெருவிருப்பம்.

சேரர் பெருமை - என்பதும் பாடம். 3

4232. நன்னீர்ப் பொன்னித் திருநாட்டு நாதர் மகிழுந் திருப்பதிகள்
முன்னி இறைஞ்சி யகன்றுபோய் முல்லைப்படப்பைக் கோல்லைமான்
துன்னி யுகைக்குங் குடக்கொங்கி லணைந்து தூய மதிவானீர்
சென்னி மிசைவைத் தவர்செல்வத் திருப்புக்கொளியூர் சென்றடைந்தார்.

(இ - ள்) நன்னீர்...போய் - நல்ல நீரையுடைய காவிரித்திருநாடாகிய சோழ நாட்டிலே இறைவர் மகிழ்ந்தெழுந்தருளும் திருப்பதிகளை நினைந்தும் வணங்கியும் நீங்கிச்சென்று; முல்லை... அணைந்து - முல்லை நிலச்சார்புடைய புறவங்களில் தோட்டங்களில் மான்கள் துள்ளி ஆடுதற்கிடமாகிய மேல் கொங்கு நாட்டில் சேர்ந்து ; தூய... அடைந்தார் - தூய மதியினையும் கங்கையினையும் சிரத்தில் வைத்த இறைவரது செல்வ நிறைந்த திருப்புக்கொளியூரினைச் சென்று அடைந்தனர்.

(வி - ரை) நன்னீர் - ஒருதுளி யளவும் வீணாகாது பயிர்களுக்கும் உயிர்களுக்கும் பயன்படும் நிலையும், இருகரையிலும் பதிகளை வணங்கி வழிபட்டுச் சென்று எல்லா உயிர்களும் சிவனை வழிபட்டுய்யச் சாதனமாயிருக்கும் நிலையும் குறிப்பு.

முன்னி இறைஞ்சி - நினைந்தும் நேரே வணங்கியும் என்று எண் உம்மை விரிக்க; வழியிடைப் பட்ட பதிகளை இறைஞ்சியும், அவ்வாறு படாதவற்றை நினைந்தும் சென்றார் என்பதாம்.

முல்லைப்படப்பை - குடக்கொங்கில் அணைந்து - காவிரிசூழும் சோழநாட்டை யகன்று, காவிரியைக் கடந்து, கீழ்கொங்கு நாட்டை நீங்கி, மேல்கொங்கு நாட்டினை அணைந்தனர் என்பதாம் ; இவ்வழிகள் முன் சேரனுடன் செல்லும் போது கூறியமையால் இங்குக் கூறினாரிலர் ; (3876—3888); முல்லைப்படப்பை - முல்லைப்புறவு நிலம் ; மலைநாட்டினை அணுகுமுன் உள்ள காடுகளடர்ந்த காட்டுப்பரப்பு. "குன்றுங் கானு முடைக்குறும்ப ரிடங்க டோறுங் குறைவறுப்பத், துன்று முரம்புங் கான்யாறுந் துறைகற் சுரமும் பலகடந்து" (3798) என்று முன் இதனைக் கூறியது காண்க.

கோல்லைமான் துன்னி உகைக்கும் - முல்லைப் புறவுகளைக்கடந்து அந்நிலத்தின் ஊர்களை அணுகச் செல்லும் இடங்களின் பண்பு ; காட்டின்றன்மையும் நாடு நகரங்களின் தன்மையும் கலந்த பகுதிகள் ; காடாரம்பமாகிய இந்நிலைகள் இங்கு இன்றும் காண உள்ளன.

குடக்கொங்கு - மேல்கொங்கு. கீழ்கொங்கு, வடகொங்கு, மேல்கொங்கு என்று கொங்குநாடு மூன்று பிரிவுகளையுடையது; அவற்றுள் மேல்கொங்குநாடு ; சோணாட்டிலிருந்து வரும் வழியில் இதனைக் கடந்து மலைநாட்டினை அணைதல் வேண்டும். இதனை "மீகொங்கு" (மீ - மேல்) என்பது தேவாரம். "மீகொங்கி லணிகாஞ்சிவாய்ப் பேரூர்" (நம்பி) ; இது பற்றி முன் (3242) உரைத்தவையும் பார்க்க.

தூயமதி - இறைவரை அடைந்தமையாற் றூய்மை பெற்ற மதி. அப்பிராகிருத சந்திரன் என்றும் கூறுவர். "ஞானசந்திர கலான்விதம்" என்பர்.

திருப்புக்கொளியூர் – இப்பதி திருப்புக்கொளியூர் அவிநாசி என வழங்கும். பதிகம் பார்க்க. அவிநாசி என்றே உலகில் விளக்க வழங்கப்படும். புக்கொ பெயர்க்காரணம்பற்றித் தலவிசேடம் பார்க்க.

செல்வம் - அருட் செல்வம் ; தல அம்மை, கருணாம்பிகை என்று வழங்கப்ப காரணப் பெயருடையாராதலும் குறிப்பு.

4233. மறையோர் வாழு மப்பதியின் மாட வீதி மருங்கணைவார்
நிறையுஞ் செல்வத் தெதிர்மனைக ளிரண்டி, னிகழ்மங் கலவியங்கள்
அறையு மொலியொன் றினி,லொன்றி லழுகையொலி,வந்தெழுதலு,மாங்
குறையு மறையோர் களை,"யிரண்டு முடனே நிகழ்வ தென்?"னென்றார்.

(இ - ள்) மறையோர்...அணைவார் – அப்பதியில் வேதியர்கள் வாழும் மாட வீதியின் பக்கத்தில் அணைவாராகிய நம்பிகள் ; நிறையும் ..இரண்டில் – நிறையும் செல்வத்துடன் எதிர் எதிராயமைந்த இரண்டுமனைகளில் ; நிகழ்... எழுதலும் - ஒரு மனையில் நிகழும் மங்கலத் தொழில்களுக்கான இயங்களின் ஒலியும், மற்றொன்றில் அழுகை ஒலியும் வந்து எழுதலும் (அவற்றைக் கேட்டு) ; ஆங்கு ..என்றார் - அங்கு உறைகின்ற வேதியர்களை நோக்கி, மாறுபட்ட இவ்விரண்டு ஒலிகளும் ஒரே காலத்தில் நிகழ்வதற்கு என்ன காரணம் ? என்று கேட்டருளினர்.

(வி - ரை) இத்திருப்பாட்டும், மேல்வரும் பாட்டும் கதை சொல்லும் உரை நடைப் போக்கில் சொற்சுருக்கமும் பொருட் பெருக்கமும் கொண்ட செம்பாகமான இனிய நடையில் அமைந்துள்ளமை கண்டுகளிக்கத்தக்கது. இவ்வாறு நேர்நின்று பேசுதல்போலச் சரிதம் கூறிப்போதல் ஆசிரியரின் சிறப்பான கவி அருமைப்பாடுகளுள் ஒன்று. ஆளுடையபிள்ளையார்புராணத்துள் திருமருகல் நிகழ்ச்சி கூறும் பாட்டுக்களையும் பார்க்க. இதனை ஆங்கிலத்தில் சரிதம் கூறல் - Narration - என்றதொரு அழகு என வகுப்பர்.*

அப்பதியில் மறையோர் வாழும் மாட வீதி - என்க. அப்பதி செய்குளூர் முதலியவைபோல முற்றும் மறையவர் பதியன்றாதல் கருதி இவ்வாறுரைக்கப்பட்டது. இவ்வீதி, இப்போது தெற்கில் வஞ்சிப்பாளையம் என்ற இருப்புப்பாதை நிலயத்தினின்றும், அவிநாசிக்கு வரும் வழியில் அமைந்திருந்தது ; புக்கொளியூர் என்னும் நகரம் திருக்கோயிலுக்குத் தென்புறம் தாமரைக்குளத்தின் தெற்கில் அமைந்த நிலப்பரப்பில் இருந்ததென்பதும், பின்னர்க் காலாந்தரத்தில் அழிந்துபட்டதென்பதும், நாட்டு நடப்புச் சரித ஆதாரங்களாலும், அரசாங்க நிலக்கணக்குப் பதிவு முதலியவற்றாலும் அறியப்படுகின்றன. நகரமிருந்து அழிந்துபட்ட அடையாளங்கள் இப்போது இந்நிலப்பரப்பிற் காணலாம் ; "புக்கொளியூர் மடம்" என்ற பழயது ஒரு அறநிலையமும், பெயர் வழக்கும் இதற்குச் சான்று பகர்கின்றன. இவ்வழியாய் வரும்போது தான் நம்பிகள் இப்பாட்டிற் கூறியவாறு நிகழ்ச்சிகளைக் கண்டு கேட்டனர் என்பது கருதப்படுகின்றது. சோழநாட்டினின்றும் மலைநாட்டுக்குச் செல்வோர் திருவீங்கோய் மலை அருகு காவிரியைத் தாண்டித், திருப்பாண்டிக் கொடுமுடியின் வழிபோவந்து, திருமுருகன்பூண்டி திருப்புக்கொளியூர் வழியாக மேற்கு நோக்கிச் செல்லும் ஒரு பழஞ் சாலை வழி முன்னாளில் இருந்தது என்பதும் அறியப்படும். இதுபற்றி, முன், "காருரு மலைநாடு நடந்தருளிக் கற்சுரமு, நீருருங் கான்யாறு நெடுங்கானும் பலகழியச், சேரு

---

*இதுபற்றி எனது சேக்கிழார் பக்கங்கள் [illegible] பார்க்க.

ருர் திருமுருகன் பூண்டிவழிச் செல்கின்றார் " (3911) என்றதும், ஆண்டுரைத்தவை யும் இங்கு நினைவு கூர்தற்பாலன. (இப்போது நகரம் கோயிலுக்கு வடக்கில் உள்ளது காலாந்தரத்தின் மாறுதல்.) இவ்வீதியினைக் கடந்து சென்றால் முதலை பிள்ளையை உண்ட மடு என்னும் ஏரியும், அதனைக்கடந்து சென்றால் திருக்கோயிலும் அடைய உள்ளன. பழைய இந்நிலைகளை மனம் கொண்டாலன்றி மேல்வரும் சரித நிகழ்ச்சிகள் (4237 - 4238) அமைவுபடா.

நிறையும் செல்வத்து எதிர் மனைகள் இரண்டில் - அவ்வீதியில் எதிர் எதிராக இரண்டு செல்வமனைகள் ஒன்று போன்ற செழிப்புடன் விளங்க அவற்றுள்.

நிகழ்மங்கல...எழுதலும் - இருமனைகளும் ஒன்றுபோலச் செல்வமுடன் விளங்க, அவற்றுள் அவ்வொரு காலத்தில் நிகழ்ச்சிகள் மாறுபட்டன என்க; இவ்வாறு தோற்றமும் நிகழ்ச்சியும் மாறுபாடு படக் கண்டநிலை நம்பிகள் அவற்றைத் திருவுளங் கொள்ளக் காரணமாயிற்று; ஆயின் சிவானந்தப் பெருவாழ்விற் றிளைத்த வாறே சிவயோக வாழ்வுடன் உலகில் பரமே பார்த்திருக்கும் எந்தம் பெருமக்கள் இவ்வாறு வரும் உலக நிகழ்ச்சிகளில் மனம் செலுத்துவரோ? எனின், அற்றன்று; பின் விளைவு கருதித் திருவருள் இவர்களது திருவுள்ளத்துள் நின்று இவ்வாறு செலுத்தியருளும் என்பதாம்; திருமருகலில் கும்பிடச் சென்ற ஆளுடைய பிள்ளையார் வழியில் வணிகப் பெண்ணின் அழுகை கேட்டுச் சென்று வினவி அருள்புரிந்த வரலாறும் ஆண்டுரைத்தவையும் இங்கு நினைவுகூர்தற்பாலன; அவ்வரலாற்றிற் போலவே, இங்கும், மகவிழந்த மறையோனும் மனைவியும் சிறந்த சிவத்தொண்டர்களெனவும், நம்பிகள்பால் மிக்க அன்புபூண்டொழுகியவர்கள் எனவும் "முன்னே கண்டிறைஞ்ச — வந்து" (4235) "முன்னே வணங்க முயல்கின்றோம்; அன்பு பழுதாகாம லெழுந்தருளப் பெற்றோம்" (4236) என்றவற்றால் ஆசிரியர் அறிவிக்கும் திறமும் காண்க. திருவருள் நிறைவுபெற்ற பெரியோர் செய்கையும் திருவருள் செலுத்துமாறுகளையும் அளக்க எவரே வல்லார்?

மங்கலவியங்கள் அறையும் ஒலி ஒன்றில்; ஒன்றில் அழுகை ஒலி - ஒலிகளின் வேறுபாட்டையும் மாறுபாட்டையும் குறிக்க, "ஒன்றில் ஒன்றில்" என்ற சொற்களை இடையிட்டுச் சேய்மைப்படப் பிரித்த கவிநயம் கண்டு கொள்க; மங்கலத்தையும் மாறுபட்ட பண்பையும் புலப்படக் காண நின்றமையால் இரண்டனையும் ஒலி என்றார். அன்றியும் சிவானந்தத்துட் டிளைக்கும் பெரியோர் நன்மை தீமை இரண்டனையும் ஒப்ப நாடுவர் என்ற குறிப்பும் காண்க. ஆயின் இம்மாறுபாடு கருதி வினவியதென்னை எனின், உலகுபகாரமாக எழுந்த திருவருட் குறிப்பாகுமென்க.

ஆங்கு உறையும் மறையோர்களை — ஆங்கு — அவ்விடத்து; முன்னர்க் கூறிய மங்கலவியங்கள் அறையும் ஒலி எழுந்த மனைப்பக்கம், சேய்மைச் சுட்டினாற் சுட்டப் படுவது அதுவே யாதலின்; மேல்வரும்பாட்டில், அவர்கள், கலியாணம் இந்தமனை என்று அதனையே அண்மைச் சுட்டினாற் கூறுதல் காண்க. மக்கள் குழுமிக்கூடும் இடம் அதுவாகும் இயல்பும் குறிக்க.

இரண்டும் உடனே - மங்கலமும் அமங்கலமுமாக மாறுபட்ட இரண்டும்; உடனே - ஒரே காலத்து ஒரே பக்கமாக. 5

4234. அந்த-ணாளர் வணங்கி"யரும் புதல்வ ரிருவ; ரையாண்டு
வந்த பிராயத் தினர்;குளித்த மடுவின் முதலை யொருமகவை
முந்த விழுங்கப் பிழைத்தவனை முந்நூ லணியுங் கலியாணம்
இந்த மனை;மற்-றந்தமனை யிழந்தா ரழுகை;" யென்றுரைத்தார். ௬

(இ - ள்) அந்தணாளர் வணங்கி - வினவப்பெற்ற அந்தணர்கள் வணங்கி; அரும்புதல்வர்... அழுகை - அரிய புதல்வர்கள் இருவர் ஐந்து வந்தவர்கள்; குளித்த மடுவிலே ஒரு பிள்ளையை முதலை முன்விழுங்கிவிடத் பிழைத்த பிள்ளைக்குப் பூணூல் அணியும் கலியாணமாகிய உபநயனம் நிகழ்வது இந்த மனை; மற்று ஒரு பிள்ளையை இழந்தாரது அழுகை அந்த மனையில் நிகழ்வது; என்று உரைத்தார் - என்று விடை கூறினார்கள்.

(வி - ரை) அந்தணாளர் - உரைத்தார் என்க. பிராயம் - வயது, பருவம்; குளித்த மடுவின் - விழுங்க - மடுவிற் குளித்தபோது ஒரு மகவை விழுங்கிவிட; மடு - ஆழமாகிய நீர்நிலை; விழுங்க - மென்று இன்னும் இயல்பின்றி முதலைகள் தமது இரையினைப்பற்றி விழுங்கும் இயல்புடையன; விழுங்கியபின் ஒருவராற்றால் முதலைவயிற்றினைக் கிழித்து வெளிப்போந்து உயிர் பிழைக்காத வரலாறு முண்டு.

பிழைத்தவன் - முதலை வாயிலகப்படாது தப்பிவந்து பிழைத்தவன்.

முந்நூலணியும் கலியாணம் - உபநயனம் பூணூல் கல்யாணம் என்னும் வழக்கும் காண்க.

கலியாணம் இந்தமனை - கலியாணம் இந்தமனையில் நிகழ்வது.

பிரமோபதேசம் என்னும் ஞான வாணியைச் சேர்வித்தல் என்பது குறிப்பு. மற்று - வினைமாற்றின்கண் வந்தது; அந்தமனை - அந்தமனையில் நிகழ்வது என்க.

இழந்தார் - முதலையால் விழுங்கப்பட்டு மகவை இழந்தவர்களது; ஆறனுருபு விரிக்க. 6

4235. இத்தன் மையினைக் கேட்டருளி யிரங்குந் திருவுள் ளத்தினராம்
மொய்த்த முகைத்தார் வன்றொண்டர் தம்மை முன்னே கண்டிறைஞ்ச
வைத்த சிந்தை மறையோனு மனைவி தானு மகவிழந்த
சித்த சோகந் தெரியாமே வந்து திருத்தா ளிறைஞ்சினார். ௭

(இ - ள்) இத்தன்மையினை...வன்றொண்டர் தம்மை - இந்தத் தன்மையைக் கேட்டு இரக்கங் கொண்ட திருவுள்ளத்தினைக் கொண்ட பூக்கள் நிறைந்த மாலையினை யணிந்த வன்றொண்டரை; முன்னே...மனைவிதானும் - பார்த்து வணங்கவேண்டுமென்று முன்னமே மனம் வைத்திருந்த அந்த வேதியரும் அவரது மனைவியும்; மகவிழந்த...இறைஞ்சினார் - தமது மகவை இழந்த சித்தசோகத்தை அறியாராய் வந்து அவரது திருவடிகளை வணங்கினார்கள்.

(வி - ரை) இத்தன்மை - முன்பாட்டிற் கூறியவரலாறுகளின் நிலை.

இரங்கும்...வன்றொண்டர் - இரங்கும் திருவுள்ளம் - இது வன்றொண்டர் திருவுள்ளத்து எழுந்த எல்லாவுயிர்களின் மேலும் பொதுவாய்ச் செல்லும் கருணைத் தன்மை; பூததயை என்பர்; மேல் (4237) கூறுவது, அம்மறையோன்பாலும் அவரது மனைவிபாலும் அவர்களது சிவனடிமைப பண்புகண்டெழுந்த சிறப்புக் கருணைநிலை.

முன்னே...சிந்தை — நம்பிகளது பெருமை கேட்டு அவர் திருவடிகளில் அன்பு கொண்டு அவரைக்கண்டு வணங்கவேண்டும் என்று இவர்கள் முன்னே பலநாளும் கொண்டிருந்த ஆர்வமுடைய மனம்.

சோகம் தெரியாமே - வலியதாகிய புத்திர சோகத்தின்பாற்பட்டு அப்போது அழுதுகொண்டிருந்த இவர்கள், நம்பிகளது வரவு கேட்டவுடன், முன்னர் மனத்துள் அழுந்தியிருந்த ஆர்வ மேலெழப் புத்திரசோகம் இருந்த இடம் தெரியாது தானே

நீக்க; இவர்களது வினைப்பற்றின் உறைப்புச், சோகத்தைத் தேக்கி, மேலோங் கியது; சோகம் தெரியாமை மட்டுமன்றி, முகமலர்ச்சியும் போந்தது என்பதை மேல் வரும் பாட்டாலறிக; நம்பிகளது வரவு தெரிந்து என்பது குறிப்பெச்சம். 7

4236. துன்ப மகல முகமலர்ந்து தொழுவார் தம்மை முகநோக்கி
"இன்ப மைந்தன் றனையிழந்தீர் நீரோ" வென்ன வெதிர்வணங்கி
"முன்பு புகுந்து போனதது; முன்னே வணங்க முயல்கின்றோம்;
அன்பு பழுதா காமலெழுந் தருளப் பெற்றோ" மெனத்தொழுதார். 8

(இ - ள்) துன்பமகல...நோக்கி - மகவிழந்த சோகமாகிய துன்பம் நீங்க முக மலர்ந்து தொழுவாராகிய மறையவனையும் மனைவியையும் எதிர்நோக்கி, (வன் றொண்டர்); இன்ப...என்ன - இன்பமகனை யிழந்தவர்கள் நீங்களோ? என்று வினவ; முன்பு புகுந்து...தொழுதார் அந்நிகழ்ச்சி முன் காலத்து நேர்ந்து கழிந் தது; முன்னமே தேவரீரை வணங்க முயல்கின்றோம்; எங்கள் அன்பு வீண் போகாமல் தேவரீர் இங்கு எழுந்தருளும் பேறு பெற்றோம் என்று சொல்லித் தொழுதார்கள்.

(வி - ரை) துன்பமகல முகமலர்ந்து - துன்ப நீக்கம் மட்டுமேயன்றி இன்ப ஆக்க மும் கொண்டு.

இன்ப மைந்தன் - இல்லறத்துக்கு நன்கலமாய் இன்பந் தரத்தக்க மகன்; மகன் இறந்து பல காலமாகியும் இங்கு இன்ப மைந்தன் என்றது அவன் மீண்டு உயிர் பெற்று எழுந்து இன்பந் தரவுள்ள நிலையின் திருஅருளின் முற்குறிப்பு.

எதிர் வணங்கி - முன்னர் "இறைஞ்சினர்" (4236) என்றது அவர்கள் முதலிற் செய்த வணக்கம். இங்கு வணங்கி என்றது நம்பிகளின் அருள் வினவுக்கு விடை கூறு முகத்தால் வணங்கிக் கூறும் மரபு பற்றிய வணக்கம்.

அது முன்பு புகுந்து போனது - என்க. அது வெகுநாட்களின் முன் கழிந்த செயல். அது பற்றிக் கவலை வேண்டா என்பது.

முன்னே வணங்க முயல்கின்றேம் - தேவரீரைக் கண்டு வணங்கப் பலகாலமாக முயன்று வருகின்றோம்; இதனால் இவர்கள் நம்பிகளிடம் நீண்ட காலமாக அன்பு பூண்டொழுகிய திறம் புலப்படக் கூறியவாறு.

அன்பு பழுதாகாமல்...பெற்றேம் - நாங்கள் செலுத்திய அன்பின்றிறம் வீண் போகாமல் தேவரீர் எமது முயற்சியின்றியே இங்கு எழுந்தருளும் பேறு பெற்றோம்; பல நாட் செய்த அன்பாகிய தவப்பயனுய் இன்று இப்பேறு பெற்றோம் என்றபடி. அப்பூதியார் அரசுகள் வரலாறு இங்கு நினைவு கூர்தற்பாலது. முன் (1792)ல் உரைத்தவையும் பிறவும் பார்க்க.

தொழுதார் - இது சிறப்பு வணக்கம்.

தம்மை நோக்கி யந்த—என்பதும் பாடம். 8

4237. "மைந்தன் றன்னை யிழந்ததுயர் மறந்து நான்வந் தணைந்ததற்கே
சிந்தை மகிழ்ந்தார் மறையோனு மனைவி தானுஞ் சிறுவனையான்
அந்த முதலை வாய்நின்று மழைத்துக் கொடுத்தே யவிநாசி
எந்தை பெருமான் கழல்பணிவே" னென்றார்; சென்று நிடர்களைவார்.

(இ - ள்) மைந்தன்...மறந்து - மகனை இழந்த துக்கத்தினையும் மறந்து; நான்...தாலும் - நான் வந்ததன் பொருட்டே மறையவனும் மனைவிதானும் மனம் மகிழ்ந்தார்கள்; சிறுவனை...பணிவேன் - அச்சிறுவனை, விழுங்கிய அந்த முதலையின் வாயினின்றும் அழைத்துக் கொடுத்த பின்னரே, நான் அவிநாசியாகிய எமது பெருமானது திருவடிகளைச் சென்று வணங்குவேன்; என்றார் சென்றார் இடர்களைவார் - தம்பால் அன்பினாற் சென்றவர்களது இடரைக் களைவாராகிய நம்பிகள் என்று இவ்வாறு சொன்னார்.

(வி - ரை) சென்றார் இடர்களைவார் - என்றார் என்று கூட்டுக. சென்றார் - அன்பினாலே வந்து தம்பால் அடைந்தவர்களை, களைவார் - களைவாராகிய நம்பிகள். மைந்தன்...மறந்து - புத்திரசோகம் மறக்க முடியாததாகிய பெருவலிமையுடையது என்பது; துயர் - வலிய அதுபரிவினையும் என உயர்வு சிறப்பும்மையும் உருபும் தொக்கன.

நான் வந்தணைந்ததற்கே - மகிழ்ந்தார் - நான் - பலகாலம் தாங்கள் கண்டுபணிய எண்ணி முயன்றிருந்ததற்குப் பொருளாகிய நான், வந்து - எதிர்பாராது தாமே வந்து; அடிமைத்திறம் புத்திர சோகத்தையும் கீழாக்கி மேலிட்டது என்பது அவர்களது அன்பின் பெருமையினைக் காட்டிற்று. ஆதலின் அதன் பொருட்டு அன்பரின் துயர் மாற்றும் வகை செய்வேன் என்பதாம். இவ்வாறன்றி, நான் வந்தணைந்ததற்கே என்பதனைத் தமது பெருமை தோன்றக் கூறியவாறும், அழைத்துக் கொடுத்தே என்பதனைத் தமது செயலின் வலிமையாகக் கூறியவாறும், பிறவாறுமாக உரைப்பன வெல்லாம் பொருந்தா என்க; மனைவிதானும் - மகனை இழந்த துயர் பெரிதும் ஆற்றொணாகிய நிலை தாயினுக்கு உளதாம்; அத்தகைய அவளும் என்று குறிப்புப்படக் கூறியவாறு; மனைவியும்; தான் - அசை.

சிறுவனை - அந்த முதலை என்றதற்கேற்ப அச்சிறுவனை எனச் சுட்டு விரிக்க.

யான் - பணிவேன் - என்று முடிக்க; யான் - அழைத்துக் கொடுத்தே-என்றது நான் இறைவரை வேண்டி அவரருளாற் பெற்றுக் கொடுப்பேன் என்றபடியாம்; "முதலையைப் பிள்ளைதரச் சொல்லு காலனையே" (தேவா) என்ற பதிகம் காண்க. இவ்வாறன்றி, நம்பிகள் தாமே அழைத்துக் கொடுக்க என்று கொண்டார் என்றுரைத்தல் பொருந்தாதென்க; தாமே அழைத்துக் கொடுத்தல் துணிந்தார் என்றுரைப்பின், அஃது, இறைவன் போலவே ஐந்தொழிலியற்றும் தன்மை ஏனை உயிர்களுக்கும் உண்டாம் எனப்பட்டுச், சிவாகமங்களின் துணிபுக்கு மாறுபட்டுப் பிழையாய் முடியும். "ஈசன தியல்பரு ளெய்துயி ரியற்றல், பேசுத றவறெனப் பெருமறை யறைய, ஐந்தொழி லுயிருந் தந்திட றருமே?, ஆவதென முன்னுறு வலர் பெருமான், பண்டொரு முதலை யுண்டமைந் தனைவா வழைத்தன னென்றுப் பிழைப்பில தாஉம்; "தந்திட வேண்டு" மென்றன னன்றே" (சங்கற்ப நிராகரணம் - சிவசமவாத நிராகரணம் - 30 - 36). என இதனை ஞான சாத்திரம் விளக்குதல் காண்க.

அழைத்துக் கோடுத்தே - அழைப்பித்துத் தந்தை தாயர்கட்குக் கொடுத்த பின்னரே; ஏகாரம் - தேற்றம்; பணிவேன் - சென்று திருக்கோயிலில் வணங்குவேன்; அழைத்துக் கொடுக்கும் இடத்தும் இறைவரை வேண்டிப் பணித்தே தருகின்றாராதலின் இங்குப் பணிவேன் என்றது திருக்கோயிலிற் சென்று வணங்கும் வழிபாடு குறித்து நின்றது. நம்பிகள் சென்றவழி புக்கொளியூர் நகர்த் திருவீதியும் முதலை மடுவும் தாண்டி, அவற்றின் வடக்கே சென்று, திருக்கோயிலை அடையும் நிலையில் அக்கரையில் இருந்தது என முன்னர் உரைக்கப்பட்டது.

அவிநாசி எந்தை - அவிநாசியாகிய எந்தை ; அவிநாசி - இறைவரது பெயர் ; முதலையும் அதனால் விழுங்கப்பட்ட மைந்தனும் நாசமாயினவாகக் காணப்படினும், நாசமின்றி நல்கவல்லவர் இங்கு இறைவராதலின் அவிநாசி என்ற இவ்வாற்றாற் கூறினார். "புக்கொளியூ ரவிநாசியே!" என்பது பதிகம்.

"மைந்தன்...பணிவேன்" என்றார் - இது நம்பிகள் தமது திருவுள்ளத்திற் செய்து கொண்ட அருட்சங்கற்பம்.

நான் - யான் - முன்னையது மறையவனும் மனைவியும் தம்மை எண்ணிய நிலை ; பின்னையது தாம் இறைவரானை எண்ணிய நிலை ; ஆதலிற் கூறியதுகூற லன்மை யுணர்க. 9

4238. இவ்வா றருளிச் செய்தருளி "யிவர்கள் புதல்வன் றனைக்கோடிய
வெவ்வாய் முதலை விழுங்குமடு வெங்கே?" என்று வினவிக்கேட்,
டவ்வாழ் பொய்கைக் கரையிலெழுந் தருளி, யவனை யன்றுகவர்
வைவா ளெயிற்று முதலைகோடு வருதற் கெடுத்தார் திருப்பதிகம். ௧0

(இ - ள்) இவ்வாறு...அருளி - முன் கூறியபடி அருளிச் செய்தருளி ; இவர்கள்...கேட்டு - இவர்களது புதல்வனைக் கொடிய கூரிய வாயினையுடைய முதலை விழுங்கிய மடு எங்கே உள்ளது ? என்று கேட்டு அறிந்து ; அவ்வாழ்...எழுந்தருளி - அந்த ஆழமுடைய பொய்கையின் கரையில் சென்றருளி ; அவனை...திருப்பதிகம் - அப்புதல்வனை அன்று முன்னாளில் விழுங்கிய கூரியவாள் போன்ற பற்களையுடைய முதலை மீளக் கொண்டுவருதற்குத் திருப்பதிகம் எடுத்தருளினர்.

(வி - ரை) இவ்வாறு...அருளி - முன் கூறியபடி திருவருட் குறிப்புடைய திருவுள்ளங் கொண்டருளி ; புதல்வன்தனை - தன் - சாரியை.

இவர்கள்...வினவிக்கேட்டு - "இவர்கள்" என்றதனால் அந்த மடுவைப் பற்றிய செய்தியினை உழையிருந்தாரை வினவியருளினார் என்பது ; அவர்களையே வினவாத தென்னை ? எனின், மகவிழந்த செய்திபற்றிய குறிப்புக்கள் எவற்றையும் அவர்களுக்கு நினைவூட்டலாகாது என்ற உலகநிலைத் தன்மை பற்றி என்க.

மடு - ஆழமான நீர்நிலை ; முதலைகள் தங்குதற்குரிய இடங்கள் இவையேயாம்.

வினவிக் கேட்டு - அது அறியக்கூடாத நிலையில் பொய்கை நீர் வறண்டிருந்தமை குறிப்பு என்பர் முன் உரைகாரர். குளத்தில் நீரினையும், நீரினுள் முதலையினையும், முதலை வயிற்றில் மதலையினையும், மகலையில் சென்ற ஆண்டுகளையும் வருவித்தருளினர் என்ற குறிப்பும் பெற உரைத்தனர். "வறந்திடு பொய்கைமு னிரம்ப மற்றவ, ணுறைந்திடு முதலைவந் துதிப்ப வன்னதா, லிறந்திடு மகன்வளர்ந் தெய்தப் பாடலோன், றறைந்திடு சுந்தர னடிகள் போற்றுவாம்" என்னும் கந்தபுராணப் பாடலையும் உதகரித்தனர். இதனைப் பின்பற்றித் திரு அவிநாசித் தலபுராணத்துள்ளும் பொய்கை நீரின்றி வறண்ட நிலை முதலியவை கூறப்பட்டுள்ளன. ஆசிரியர் இவற்றைக் கூறினாரிலர் ; இவை ஆங்காங்கு வழங்கப்படும் தல ஐதீகச் சிறப்புச் செய்திகள் போலும் ! ஆயினும், மேல்வரும் பாட்டில் பதிகந் தொடங்கிப்பாடி அதனுள் - நான்காவது "உரைப்பாருரை" என்ற திருப்பாட்டு முடியும் முன் "திரைப்பாய் புனலின் முதலை வயிற்றுடலிற் சென்ற வாண்டுகளுந், தரைப்பால் வளர்ந்ததென நிரம்ப" என்ற குறிப்புக்கள் மேற் கூறிய தன்மைகள் பெறநிற்பதும் கண்டுக் கருதத்தக்கன. ஆளுடைய பிள்ளையார் திருமயிலையில் என்பு பெண்ணாக்கியருளிய வரலாற்றை விரித்தருளிய நிலைகள் இங்கு ஒப்பு நோக்கி உணர்தற்பாலன.

அவ்...எழுந்தருளி-அத்திரு வீதியினின்றும் பொய்கைக் கரையில் சென்றருளி; வாழ் பொய்கை எனப் பிரித்து மகன் முன்னர் இறந்தானாயினும் பின்னர் வாழ்வுதரும் பண்புடைய பொய்கை என்றும், இவ்வரலாற்றினை யறிந்து உலகம் வாழ்வு பெற நிற்கும் பொய்கை என்றும் குறிப்புப்பட உரைக்க நிற்பதும் காண்க. பொய்கை - மானிடராக்காத நீர்நிலை என்பர் நச்சினார்க்கினியர். கோடு - கொண்டு ; இடைக் குறை.

கரையில் எழுந்தருளி - என்றும், முதலை அவனைக் கோடுவருதற்கு - என்றும் கூறிய நிலைகள் "யாது யாண்டொடுங்கிற்று அஃது ஆங்கு நின்று மீள உளதாகும்" என்னும் சைவசித்தாந்த உண்மையினை உளடக்கி விளக்கி நிற்கின்றன. "ஒடுங்கி மலத்துளதாம்" (போதம் 1 - சூ.). முன்பாட்டினும் "அந்த முதலை வாயின்றும்" என்றதும் காண்க. எலும்பைப் பெண்ணாக்கிய அற்புததிலும் இவ்வுண்மை விளங்குதல் காண்க.

எடுத்தார் - தொடங்கிப் பாடியருளினார்.

வருதற்கு - வரும் பொருட்டுத் திருவருளினை நோக்கி ஆணை யிட்டருளி ; காரணப் பொருளில் வந்தது.

திருப்பதிகம் - எடுத்தார் என்க.

4239. "உரைப்பா ருரை"யென் றெடுத்ததிருப் பாட்டு முடியா முன்னுயர்ந்த
வரைப்பான் மையினீ டடமபுயத்து மறலி மைந்தனுயிர்கொணர்ந்து
திரைப்பாய் புனலின் முதலைவயிற் றுடலிற் சென்ற வாண்டுகளுந்
தரைப்பால் வளர்ந்த தேனநிரம்ப முதலை வாயிற் றருவித்தான். கக

(இ - ள்) உரைப்பார்...முன் - எடுத்த அத்திருப் பதிகத்தில் "உரைப்பாருரை" என்று தொடங்கிய திருப்பாட்டு நிறை வெய்தா முன்னே ; உயர்ந்த...மறலி - உயர்ந்த மலையின் தன்மைபோல நீண்ட பெரிய தோள்களையுடைய இயமன் ; மைந்தனுயிர் கொணர்ந்து - மகனுடைய உயிரைக் கொண்டு வந்து ; திரைப்பாய்...நிரம்ப- அலைகளையுடைய நீரில் முதலையின் வயிற்றிலே நிலத்தில் இருந்து வளர்ந்ததுபோலக் கழிந்த (இரண்டு) ஆண்டுகளும் உடம்பில் நிரம்ப ; முதலைவாயில் தருவித்தான் - முதலையின் வாயில் வரச் செய்தான்.

(வி - ரை) "உரைப்பாருரை" என்று-இது திருப்பாட்டின் தொடக்கம்; எடுத்த- தொடங்கிய ; இஃது அத்திருப்பதிகத்தின் நான்காவது திருப்பாட்டு; இதன் ஈற்றடியில் "அவிநாசியே ! கரைக்கால் முதலையைப் பிள்ளைதரச் சொல்லு காலனையே" என்று நம்பிகள் இறைவர்பால் விண்ணப்பிக்கின்றார். திருப்பாட்டு - நம்பிகளின் பாடலுக்குச் சிறப்பாய் வழங்கும் பெயர் வழக்கு ; பிள்ளையார் பாடல் திருக்கடைக் காப்பு என்றும், அரசுகள் திருவாக்குத் தேவாரம் என்றும் வழங்கும் ; "படியிலாநின் பாட்டில்" "வீட்டுக்கு வாயி லெனுந் தொடை" என்னும் குறிப்புக்கள் காண்க.

முடியா முன் - முடிந்த உடனே என்று விரைவு குறித்தது; முடியுமுன் என்னாது முடியா முன் என்ற குறிப்புக் காண்க. "நாவா யசைத்த வொலியொலி மாறிய தில்லை" (தேவா) என்புழிப் போலக் கொள்க. பதிகப்பாட்டுக் குறிப்புப் பார்க்க.

உயர்ந்த வரைப் பான்மை - உயர்ச்சியுடைய மலையின் தன்மை; வரை - மலை ; வரைப்பான்மை என்னின், வலிமை மட்டிலமையுமாதலின், உயர்ச்சியும் கூடக் குறிக்க, உயர்ந்த - என்றார், உயராதவரைகளும் (சிறுகுன்றுகளும்) உளவாகலான் ; பிறிதினியைபு நீக்கிய விசேடணம் ; மேல் நீள் தடம் என்பதும் காண்க.

நீள் நடம் புயந்து மறலி - இரண்டாண்டுகளின் முன் கழித்த உயிரை அந்தக் காளினுள்ள நிலையினின்றும் கொணரவும், அவ்வாறே முதலையினையும் கொணரவும், ஈராண்டு உடல் வளர்ச்சியும் தரவும் மேற் கொண்ட நீண்ட வலிமை குறித்தன இவ்வடை மொழிகள். ஐயாண்டில் மகன்பிரிந்தானாதலின், இப்போது உபாயனப் பிராயவிதி ஏழாண்டாதல் வேண்டப்படுதலின், சென்ற ஆண்டுகளும் வளர்ந்ததென - என்பதற்கு ஈராண்டுகள் எனப்பொருள் கொள்ளத்தக்கது. வரை - நீலமலை.

திரைப்பாய்புனல் - ஆழ்ந்தகன்ற நீர் நிலை.

உடலில் - மகவினுடைய உடம்பில். பெருவாய் முதலை - தன்மை நவிற்சி.

தரைப்பால் வளர்ந்ததென நிரம்ப - முதலையினாற் கவரப்பட்டிறவாது நில உலகில் வளர்ந்திருந்தாற்போல வயது நிரம்ப ; என - உவமவுருபு ; ஆண்டுகளும் நிரம்ப - என்க. மகவு வந்ததனோடு வயதும் நிரம்ப என உம்மை இறந்தது தழுவிய எச்சம். தருவித்தான் - வரச்செய்தான் ; "பிள்ளைதரச் சொல்லு காலனையே" என்ற பதிகத்துக் கேற்ப மறலியின் செயல் விரிக்கப்பட்டது.

திருப்பதிக முடியா முன் - என்பதும் பாடம். 11

4240. பெருவாய் முதலை கரையின்கட் கொடுவந் துமிழ்ந்த பிள்ளைதனை
யுருகா நின்ற தாயோடி யெடுத்துக் கோடுவந் துயிரளித்த
திருவா ளன்றன் சேவடிக்கீழ்ச் சீல மறையோ னொடுவீழ்ந்தாள்
மருவார் தருவின் மலர்மாரி பொழிந்தார் விசும்பில் வானோர்கள். கஉ

(இ - ள்) பெருவாய்...பிள்ளைதனை - பெரிய வாயினின்றும் முதலை கரையினிடத்துக் கொண்டுவந்து உமிழ்ந்த அந்தப் பிள்ளையினை ; உருகா நின்ற...வீழ்ந்தாள் - அன்பு மேலீட்டினால் மனமுருகிய தாய் ஓடிச்சென்று எடுத்துக் கொண்டு வந்து உயிரினை மீளக் கொடுத்த திருவாளராகிய நம்பிகளது சேவடியின் கீழே சைவ ஒழுக்க மிக்க மறையவனோடும் விழுந்து வணங்கினாள் ; மருவார்...வானோர்கள் - ஆகாயத்திலே தேவர்கள் மணமுடைய தெய்வ மரங்களின் பூ மழை பொழிந்தார்கள்.

(வி - ரை) கரையின்கண் வந்து முதலை பெருவாய் கோடு உமிழ்ந்த - என்க.

பெருவாய் கோடு உமிழ்ந்த - முதலையின் பிளந்த பெரிய வாயின் தன்மையினையும், அது அதனைத் திறந்து உமிழ்ந்த தன்மையினையும் குறித்தது ; "வாய்திறந்து முதலை கக்க மகனை நீ அழைத்ததோ? என்றார் பிற்காலத்தான்றோர் ; உமிழ்ந்த - முதலை தனது இரையினை மென்று தின்னாது பிண்டமாக விழுங்கும் நிலையினையும், அவ்வாறு விழுங்கிய உணவு தனது பகுதிக் கொள்ளாத போது மீள உமிழும் நிலையினையும் குறித்தது. "விழுங்க" (4231) ; முதலை வாயில் உள்ள கூரிய வரிசையின் பற்கள் அதன் இரையினைவிடாது பற்றிக் கொள்வதற்கே பயன்படுவன வன்றி மென்று தின்பதற்கல்ல என்பது அதன் உடல் நூல் அறிஞர் கூற்று.*

*குறிப்பு :—இங்கு அனுபவத்திற் றெரிந்த செய்தி ஒன்று குறிப்பிடத்தக்கது ; சில ஆண்டுகளில் முன் ஒரு சிறுவன் ஆற்று மடுவில் முதலையினால் விழுங்கப்பட்டு அதன் வயிற்றுக்குட் போயினன்; ஆனால் உயிர் நீங்கவில்லை. அங்கு அவ்வயிறு பெரியதொரு வளைவாகிய குகைபோலப் புலப்பட, அவன், அதன் உட்புறத்தைத் தன் கைநகங்களாலும் தன்னிடமிருந்ததொரு சிறிய கத்தியாலும் பிறாண்ட, அதற்கு வயிற்றில் வேதனை யுண்டாயினமையின், முதலை அவனை மீளக் கொணர்ந்து (கக்கி) உமிழ்ந்து விட்டது. உணர்வற்ற நிலையில் கிடந்த அவனைச் சிலர் கண்டு எடுத்து உபசரிக்க

உமிழ்ந்த பிள்ளைதனை - மறலிமைந்தன் உயிர் உடலின் வளர்ச்சியுடன் முதலை வாயிற் றருவித்தான் என்ற மட்டில் முன்பாட்டில் கூறிய ஆசிரியர், அது அவனை உமிழ்ந்த செயலை வேறு கூறாது உமிழ்ந்தபிள்ளை என்றதனாற் பெறவைத்தார். உமிழ்ந்தது-அவ்வாறு உமிழ்ந்த என்று பிரித்துரைத்துக் கொள்க. பெற்றோரது சோகத்தை விரைவில் போக்கவந்த வரலாற்றின் விரைவுக்கேற்பச் சொற்சுருக்கம் படக் கூறியது கவிநயம். மறலிமைந்தனைத் தருவித்த செயல் கூறும் சுருக்கமும் இக் கருத்துப்பற்றியது. இனி, மேல்வரும் உவகை நிகழ்ச்சி கூறும் விரிவை இவற்றுடன் ஒப்பு நோக்குக.

உருகாநின்ற தாய் ஓடி எடுத்துக்கொடுவந்து - வீழ்ந்தாள் - தந்தையினும் தாயின் அன்பு மிகுந்த நிலை குறித்தது. வீழ்ந்தாள் - தன் செயலற்ற நிலையில் வீழ்ந்த குறிப்பு; எடுத்துக்கொடுவந்து - மைந்தன் இவ்வாலாறு அறியானாதலால் அவனையும் உடன் பணியச் செய்யும் நிலைபற்றி அவனைத் தாய் தானே எடுத்துக்கொண்டுவந்து சேவடியில் விழுத்தி வீழ்ந்தாள். சீலமறையோனோடு – வீழ்ந்தாள் - மறையோன் விழுந்ததும் மனைவி விழுந்ததும் உடன் ஒருங்கே நிகழ்ந்தன என்பது ; சீலம் - சைவசீலம்; இது முன் (4235 - 4237) உரைக்கப்பட்டது ; இதுவே நம்பிகளது திருவருள் பெறக் காரணமாய் நின்றமையால் அதனை எடுத்துக் கூறினர்; அருள் பெறக் காரணமாகிய சீலம் என்க.

வீழ்ந்தாள் - என்றமையால் மறையோன் - மகன் - மனைவி மூவரும் வீழ்ந்தாராயினும் இதனுள் அவ்வம்மை செயலே மிக்கிருந்தது என்பார் அவள் செயலாக வீழ்ந்தாள் என முடித்தருளினர். "தானுந்தன் தையலுந்தாழ் சடையோனுண் டிலனேல்" (திருவா).

தரு - தேவமரங்கள் ; மந்தாரம் முதலியன.

உயிரளித்த திருவாளன் - நம்பிகள் ; திருவாளன் - சைவத் திருப் பெற்றவர் ; "திருவாளன் றிருநீறு" (1332) என்றபடி சிவபெருமான் ஒருவரே திருவாளரெனப்படுவார் ; "திருவுடையார்" (நம்பி - பூவணம் - திருப்பதிகம் 1) ; அவரேயனையவராதலின் நம்பிகளும் திருவாளன் எனப்பட்டார். அன்றியும், உயிரளித்தல்- இறைவர் செய்யும் ஐந்தொழிலினுட்பட்ட தொன்றாப், இங்கு அவரருளால் தாம் செய்யும் தன்மைகளையும் இவர்பாலாக்கி யிட்ட நிலையும் கருதுக. 12

4241. மண்ணி னுள்ளா ரதிசயித்தார் ; மறையோ ரெல்லா முத்தரியம்
விண்ணி லேற விட்டார்த்தார்; வேத நாத மிக்கெழுந்த ;
தண்ண லாரு மவிநாசி யரனார் தம்மை யருமறையோன்
கண்ணின் மணியாம் புதல்வனையுங் கொண்டு பணிந்தார் காசினிமேல்.

(இ – ள்) மண்ணில் உள்ளார் அதிசயித்தார் - நிலவுலகிலுள்ள மக்கள் அது கண்டு அதிசயித்தனர் ; மறையோர்...ஆர்த்தார் - மறையவர்கள் எல்லாரும் உத்தரியங்களை ஆகாயத்தில் மேலே வீசி ஆர்த்தனர் ; வேத...எழுந்தது – வேத ஒலி மிக எழுந்தது ; அண்ணலாரும்...காசினிமேல் - பெருந்தகையாரான நம்பிகளும் அவி

---

அவன் உயிர் பிழைத்தனன். அவன் சொல்லிய வரலாறு இது. அவன் உடலில் முதலையின் பற்களால் முதலை விழுங்கியபோதும் பற்றும்போதும் உளவாகிய கீறல் புண்கள் மட்டும் கண்டன. அவை நாளடைவில் ஆறிவிட்டன என்பது. இச் செய்தி பத்திரிகைகளிலும் வெளி வந்தது.

நாசியாகிய சிவபெருமானை அரிய மறையோனது கண்மணிபோன்ற மகனையுங் கொண்டுசென்று உலகில் பணிந்தனர்.

(வி - ரை) உத்தரியம்...ஆர்த்தார் - உத்தரியத்தை ஆகாயத்தில் வீசி ஆரவாரித்தல் மகழ்ச்சி காட்டும் செயல்களுள் ஒன்று ; இது வேதியர்கள் முதலிய உயர்ந்தோர்பால் மிக்கு வழங்குவதொரு மரபு ; மறையோ ரெல்லாம் என்றது காண்க. "தாமறவை யுத்தரியந் தனிவிசும்பி லெறிந்தார்க்கும் தன்மை" (1993). களிப்பினால் சிறு துணிகளை மேல் விரி ஆரவாரிக்கும் வழக்கு இந்நாளிலும் நிகழ்வது.

வேதநாதம் மிக்கு எழுந்தது - ஒலிப்பவரின்றியே வேத முழக்கம் கேட்பது ஒரு நன்னிமித்தம் என்பது ; (1929) ; வேதியர் வேதம் ஓதினர் என்றலுமாம்.

அண்ணலார் - நம்பிகள் ; புதல்வனையுங் கொண்டு பணிந்தார் - சிவன் அருளால் உயிர் பெற்று வந்தமை குறித்துப் புதல்வனைக்கொண்டு பணியச் செய்தார் ; தமக்கு அருளியமை குறித்து உடன் திருமுன் சென்று பணிந்தார். முன் 4239ல் உரைத்த நிலையும் கருதுக.

கண்ணின் மணியாம் - அருளால் மீள உயிர் பெற்றுவந்த அருமைப்பாடு குறித்தது. மணிஆம் - ஆம் - ஆக்கச் சொல் உவமம் குறித்தது.

பணிந்தார் – மறையோர் முதலியோர் தமது கழல்பணிய, அந்நிகழ்ச்சி இறைவரது செயலாதல் பற்றி அவரைப்பணிந்தார் என்பதாம். "எவ்வுயிர்க்குங், காவலனார் பெருங்கருணை கைதந்த படிபோற்றிப், பாவலர்செந் தமிழ்பாடிப் பன்முறையும் பணிந்தெழுவார்" (3016) என்ற ஆளுடைய பிள்ளையார் சரிதம் இங்கு நினைவுகூர்தற்பாலது. 13

4242. பரவும் பெருமைத் திருப்பதிகம் பாடிப் பணிந்து போந்தன்பு
விரவு மறையோன் காதலனை வெண்ணூல் பூட்டி யண்ணலார்
முரச மியம்பக் கலியாண முடித்து, முடிச்சே ரலர்தம்பாற்
குரவ மலர்ப்பூந் தண்சோலை குலவு மலைநா டணைகின்றார் ; ௧௪

4243. சென்ற சென்ற குடபுலத்துச் சிவனா ரடியார் பதிதொறு
நன்று மகிழ்வுற் றின்புற்று நலஞ்சேர் தலமுங் கானகமுந்
துன்று மணிநீர்க் கான்யாறுந் துறுகற் சுரமுங் கடந்தருளிக்
குன்ற வளநாட் டகம்புகுந்தார் குலவு மடியே னகம்புகுந்தார். ௧௫

4242. (இ - ள்) பரவும்...போந்து – துதிக்கின்ற பெருமையுடைய திருப்பதிகத்தினைப்பாடித் திருக்கடைக் காப்புச் சாத்தி வணங்கிப் புறம்போந்து ; அன்பு...முடித்து - பெருமையுடைய நம்பிகள் (தம்பால்) அன்பு பொருந்திய வேதியனது மகனைப் பூணூல் அணிவித்து முரசங்கள் சத்திக்க உபநயன மங்கலம் முடித்து; முடிச்சேரலர் தம்பால்...அணைகின்றார் - முடிமன்னராகிய சேரனாரிடத்துச் சேர்வதற்கு, நறுமணமுடைய மலர்கள் நிறைந்த அழகிய குளிர்ந்த சோலைகள் நிறைந்த மலைநாட்டில் அணைகின்றாராய், ௧௪

4243. (இ - ள்) குலவும்...அகம்புகுந்தார் – அடியேனுடைய விளங்கிய உள்ளத்திற் குடிபுகுந்தவராகிய நம்பிகள் ; சென்ற ..இன்புற்று - மேற்றிசையில் உள்ள நாட்டில் போயின அங்கங்கும் சிவனாடியார் பதிகள்தோறும் மிகவும் மகிழ்ந்து இன்பம் அடைந்து ; நலம்...கடந்தருளி - நன்மை பொருந்திய தலங்களையும்,

காடுகளையும், நிரம்பிய மணிகளையுடைய நீர் பொருந்திய கான்யாறுகளையும், துறு கற்சாரல்களையும் கடந்து சென்றருளி; குன்ற...வளநாட்டகம் புகுந்தார் - வள முடைய மலைநாட்டினுட் புகுந்தருளினர். ௧௩

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

4242. (வி - ரை) பரவும் பெருமை - இறைவரைத் துதிக்கும் பெருமை யுடைய என்றும், உலகவரால் துதிக்கப்படும் பெருமை என்றும் உரைக்க நின்றது.

பாடி - பாடி முடித்துத் திருக்கடைக் காப்புச் சாத்தி; இத்திருப்பதிகம் பொய் கைக் கரையிற் றொடங்கப்பட்டு "உரைப்பாருரை" என்ற நான்காவது பாட்டள வும் அங்கு அருளப்பட்டது; அதன்பின் மகனை முதலை வாயினின்று பெற்றபின் அவனையும் உடன்கொண்டு திருக்கோயிலுக்குப் போந்து திருமுன்பு ஏனைய ஆறு பாட்டுகளும் அருளி நிறைவாக்கப்பட்டது எனபதாம். "அழைத்துக் கொடுத்தே அவிநாசி யெந்தை பாதம் பணிவேன்" (4237) என்றதும், "உரைப்பா ருரையென் றெடுத்ததிருப் பாட்டு முடியாமுன்...கருவிகதாம" (4239) என்றதும், உடன், "முதலை கரையின்கட் கொடுவந்து உமிழ்ந்த" (4240) என்றதும், அதனைத் தொடர்ந்து அரனார் தம்மை - புதல்வனையும் கொண்டு பணிந்தார்" (4291) என்றதும் காண்க.

போந்து - கோயிலின் புறம்பு போந்து.

அன்பு விரவு மறையோன் - அன்பு - நம்பிகள் திருவடிகளிடத்து அடிமைபூண்ட அன்பு. அன்புவிரவு - விரவியதனால் என்ற காரணங் குறிப்புடன் நின்றது.

வெண்ணூல் பூட்டிக் - கலியாணம்முடித்து - உபநயனச் சடங்காகிய மங்கலம் தாமே முன்னின்று செய்வித்து; பூணூற்கலியாணம் என்பது மரபு; பிரமோப தேசத்தால் ஞானஞ்சேர்தல் குறிப்பு.

முரசம் இயம்ப - சிறிது நேரம் முன்பு அழுகையொலியாயிருந்த அந்தமனையில் முரசம் இயம்ப மங்கலவொலி முழங்கச்செய்து.

வெண்ணூல் பூட்டி - எதிர்மனையில் இம்மகனுடனிருந்து பிழைத்த மகனது உபநயனக் காரணமாக இவ்வரலாறு நிகழ்ந்ததாகலின் அந்நிகழ்ச்சியை முற்றுவித்து என்பது; திருமருகலில் ஆளுடைய பிள்ளையார் வணிகனை விடந்தீர்த்துத் தாமே அவர்களுக்கு மணம்புணரும் பெருவாழ்வும் வகுத்துவிட்ட வரலாறு இங்கு நினைவு கூர்தற்பாலது.

சேரலர்பால்...அணைகின்றார் - சாம் கருதிவந்த செயல் (4231). 14

4243. (வி - ரை) சென்ற சென்ற தடபுலம் - மேற்றிசைத் தேயத்தில் நம்பிகள் போயின அங்கங்கும்; இவை மலைநாடு சாரும்வரை இடைப்பட்ட கொங்கு நாட்டுப் பகுதிகள்.

சிவனார்...இன்புற்று...கடந்தருளி - சிவனடியார்கள் இருக்கும் பதிதோறும் நம்பிகளை வரவேற்று உபசரித்துக் குறைவறுத்தமையால் மகிழ்ந்து. "கொங்கர் நாடு கடந்தருளி" (3797); "சென்ற திசையிற் சிவனடியார் சிறப்பினொடு மெதிர் கொள்ளக், குன்றுங் கானு முடைக்குறும்ப ரிடங்க டோறுங் குறைவறுப்பத், துன்று முரம்புங் கான்யாறுந் துறுகற் சுரமும் பலகடந்து" (3798) என்று சேரனாது யாத்திரைக் குரைத்தவை இங்கு நினைவுகூர்தற்பாலன.

நலஞ்சேர் தலம் - இடைப்பட்ட நிலவெளியிற் காணும் நல்ல தனி நகரங்கள்; நலஞ்சேர் என்றது அந்நாட்டுப் பகுதிகளுள் அந்நாளில் அங்கங்கும் சில தனி நகரங்க ளன்றி ஏனையவை நலம் பொருந்தாதன என்ற நிலைக்குறிப்பு.

மணிதுன்று நீர் - மலைகள் குன்றுகளிலிருந்து மணிகளை வாரி அலைத்துக் கொண்டுவரும் நீர். அழகிய நீர் என்றலுமாம்; "மணிநீரு மண்ணும்" (குறள்).

கான்யாறு - இந்நாட்டுப் பகுதிகளின் இயற்கை யமைப்புக் குறித்தது.

துறுகற்சுரம் - துறுத்தல் - மேற்செல்ல வொட்டாது தன்புறத்துதல்; கற்சுரம் - கற்கள் பொருந்திய கானங்கள்; இவை கோய்க்கிடமாயுள்ளவை என்பது சுரம் என்ற சொற்கிலேடையாற் குறிப்பிட்டது கவிநயம்.

குன்ற - வள - நாடு என்றமையால் முன் கடந்து போந்த நாட்டுப் பகுதிகள் அத்துணை வளமில்லாதன என்பது குறிப்பு; நலமல்லாதவற்றை வெளிப்படக் கூறாது, குறிப்பிற் காட்டும் உயர் கவிமரபு பற்றியது. புகுந்தார் - வினைமுற்று.

துலவுமடியே னகர்புகுந்தார் - புகுந்தார் - வினைப்பெயர்; புகுந்தாராகிய நம்பிகள்; இவ்வாறு குறித்தது மலைநாட்டு இவ்யாத்திரையுடன் நம்பிகளது இந்நிலவுலக யாத்திரைகள் நிறைவுபெற்று இனிக் கயிலைக்குச் செல்லுநிலை வருதலால், அவரது வரலாறு கூறவந்த நிலை முற்றுப் பெறுமிடத்து வணக்கம் செய்யும் மரபுக்குறிப்பு. அடியேனது வலிய வறிய கற்போன்ற அகத்தினும் புகுந்த அவருக்கு, அதனை நோக்க மெல்லிய கல் நிறைந்த வளமுள்ள குன்ற நாட்டிற் புகுதல் எளிது என்றதொரு குறிப்பும் கண்டு கொள்க; மேல் வரும் கல்லில் நடக்கப் பழகிக் கொள்ள எனது கல் மனத்தைக் கருவியாக்கிக் கொண்டு எனக்கும் ஓர் அருளிப்பாடு செய்தது அவரது பெருமை என்பதும் குறிப்பு. "வரையின்பாற் குஞ்சரி நடந்தசெயல் கூறுபுதுமைத்தோ ?...செம்மலடி நீயே னெஞ்சக வறுக்கலினு நின்றுலவு மென்றால்" (தெய் - திருமணப் - 231) என்ற கந்த புராணம் காண்க. துலவும் - விளங்கும்; விளக்கமாவது நம்பிகளை வணங்கும் வாய்ப்புடையதன்மை; 'அகம் - இரண்டனுள் முன்னையது எழனுருபு; பின்னையது மனம்; சொற்பின் வருநிலை. 15

திருப்புக்கொளியூர் (அவிநாசி)

திருச்சிற்றம்பலம் (பண் - குறிஞ்சி - 7-ம் திருமுறை)

முதலைவாய்ப் பிள்ளையழைத்த திருப்பதிகம்

எற்றான் மறக்கே னெழுமைக்கு மெம்பெரு மானையே
உற்றாயென் றுன்னையே யுள்குகின் றேனுணர்ந் துள்ளத்தாற்
புற்றா டர்வா புக்கொளி யூரவி நாசியே!
பற்றாக வாழ்வேன் பசுபதி யேபர மேட்டியே. 1

வழிபோவார் தம்மோடும் வந்துடன் கூடிய மாமணி நீ
ஒழிவ தழகோசொல் லாயரு ளோங்கு சடையானே
பொழிலாருஞ் சோலைப் புக்கொளி யூரிற் குளத்திடை
யிழியாக் குளித்த மாணியென் னைக்கிறி செய்ததே. 2

எங்கேனும் போகினு மெம்பெரு மானை நினைந்தக்கால்
கொங்கே புகினுங் கூறைகொள் ளாறலைப் பாரிலைப்
பொங்கா டரவா புக்கொளி யூரவி நாசியே!
யெங்கோ னேயுனை வேண்டிக்கொள் வேன்பிற வாமையே. 3

உரைப்பா ருரையுகந் துள்கவல் லார்தங்க ளுச்சியாய்!
அரைக்கா டரவா! வாதியு மந்தமு மாயினாய்!
புரைக்காடு சோலைப் புக்கொளி யூரவி நாசியே!
கரைக்கால் முதலையைப் பிள்ளை தரச்சொல்லு காலனையே. 4

நள்ளாறு தெள்ளா றரத்துறை வாயெங்க ளப்பனே !
வெள்ளாடை வேண்டாய் வேங்கையின் றோலை விரும்பினாய் !
புள்ளேறு சோலைப் புக்கொளி யூரிற் குளத்திடை
யுள்ளாடப் புக்க மாணியென் னைக்கிழி செய்ததே. 9

நீரேற வேறு நிமிர்புன் சடை நின்மல மூர்த்தியைப்
போரேற தேறியைப் புக்கொளி யூரவி நாசியைக்
காரேறு கண்டனைத் தொண்டனு ரூரன் கருதிய
சீரேறு பாடல்கள் செப்பவல் லார்க்கில்லை துன்பமே. 10

திருச்சிற்றம்பலம்

**பதிகக் குறிப்பு** :—இறைவரிடம் வேண்டி முதலை வாயினின்றும் மகனை மீண்டுப் பெறுதல் ; பதிகம் 2-4-9. பாட்டுக்கள் பார்க்க.

**பதிகப்பாட்டுக் குறிப்பு** :—(1) எற்றான் மறக்கேன் - " எத்தால் மறவாதே " (நம்பி-தேவா) என்றபடி எவ்வாற்றாலும் மறக்கமாட்டேன் என்பதாம்; எழுமை - ஏழு பிறப்பு; ஏழு வகைப் பிறப்பு என்றலுமாம்; உற்றார்-உற்றவர் ; உறவு என்றும் விடாது உடனாகிப் பொருந்தியவர் ; ஆதலின் எழுமையும் மறக்கேன் என்றார் ; உணர்ந்து-உணர்ச்சியிற் கொண்டு ; புற்றில் அரவு - அரவுக்கு இயற்கை யடைமொழி; இறைவர் அணிந்த அரவு புற்றில் உள்ளதென்பதன்று ; அவிநாசியே-விநாசமில்லாதவரே! அவிநாசி-இறைவர் பெயர்; புக்கொளியூரில் எழுந்தருளிய நாசமில்லாத இறைவரே ; மேல்வரும் பாட்டுக்களிலும் இவ்வாறே விளிப்பது காண்க. அவிநாசியைக் - காரேறு கண்டனை (10) என்றதும் காண்க. அவர் இருக்கும் இடமாதலின் ஆகு பெயராய் ஊரும் அப்பெயரால் வழங்கலாயிற்று ; ஊர்ப் பெயராகவே கொள்ளும் வழக்குத் தவறு ; புக்கொளியூர் - ஊர்ப்பெயர் ; சிவபெருமான் ஊழிக்காலத்தில் அக்கினிதாண்டவம் செய்தபோது அரியயன் முதலிய தேவர்கள் அஞ்சிப் புகுந்து இங்கு ஒளித்தமையால் இப்பெயரெய்தியதென்பது தலபுராணம் ; பற்றாக - உம்மையே பற்றாகக் கொண்டு ; அவ்வாறு பற்றுதற்குக் காரணம் நீர் பசுபதியாயும் பரமேட்டியாயும் உள்ள தன்மையேயாம் என்றது ; எந்தாய் - என்பதும் பாடம் ;—(2) வழிபோவார்...அழகோ - இது முதலைவிழுங்கிய சிறுவனது வரலாறு என்றும், அருளோங்கு சடையான் என்பது அவன் பெயர் என்றும், வரலாறு கர்ண பரம்பரை; இது அவனை விளித்துக் கூறிய தனியகாதை பொருளுரைப்பர் ; இழியா - இழிந்து - இறங்கி ; மாணி - பிரமசாரி ; அச் சிறுவன். என்னை கிழி செய்தது - மாணியே இவ்வாறு அழித்தது என்னை ?—(3) கோங்கே...இலை - இது நம்பிகளது திருமுருகன்பூண்டி வேடுபறி வரலாற்றின் அகச்சான்று ; (3911 - 3918). வேடர்களாய் வந்தவர்கள் சிவனருள் வழியே வந்த சிவகணங்கள் என்பதும் போதருதல் காண்க ; சிவனருள் நினைவுடனிருப்பார்க்கு எத்துன்பங்களும் வாரா என்பதும் அறிவுறுத்தியருளப்பட்டவாறும் காண்க. கோங்கே - தீய குணமுடையார் வாழும் கொங்கு நாட்டினிலே என்பது குறிப்பு ; அவர் குணஞ் செயல்களைப் பற்றித் திருமுருகன் பூண்டிப் பதிகத்துட் கூறியவை பார்க்க. உனை...பிறவாமையே - நான் வேண்டும் வரம் ஒன்றிருக்குமாகில் அது பிறவா வரமொன்றே என்பது. " வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை " (குறள்) என்றதும், அதனை எடுத்தாண்டு விரித்தருளிய திருக்களிற்றுப்படியாரும் (40) இங்கு நினைவு கூர்தற்பாலன. " வேண்டினசீ

தொன்றுமே வேண்டுவது ";—(4) இத் திருப்பாட்டின் விண்ணப்பம் முடியாமுன் முதலை வாயில் மகனைக் காலன் தருவித்தான்; அது அம்மகனைக் கரையில் கொடுவந்து உமிழ்ந்தது என்ற உண்மை ஆசிரியர் அறிவிக்க அறிகின்றோம்; 'அவிநாசியே! (பெருமானே) காலனை முதலையைப் பிள்ளையைத் தரச் சொல்லு!' என்பது நம்பிகள் இறைவர்பால் வேண்டிய விண்ணப்பம். "தந்திட வேண்டும் என்றனர்" சங். நிரா. சிவசமவாதி மறுப்பு, பஞ்சகிருத்தியமின்று என்றது (35, 36) என்று உமாபதி சிவாசாரியார் இதன் கருத்தருளியது காண்க. உரைப்பார் - ஞான அருளுபதேசம் செய்யும் தேசிகர்; உரைப்பாரது என ஆறனுருபு விரிக்க; உகந்து - மனமகிழ்ச்சியோடு; உள்குதல் - உபதேசச் சொற்பொருளைத் தியானித்தல்; உரை - ஸ்ரீபஞ்சாக்கரம்; சிவநாமம்; உள்குதல் - அதன் பொருளைத் தியானித்தல்; இதன் தன்மை சிவஞானபோதம், சித்தியார், 9ம் சூத்திரத்தினுள்ளும், மற்றும் ஞான நூல்களுள்ளும் சிவாகமங்களுள்ளும் கண்டு கொள்க. இவை அனுபவமுள்ள தேசிகர் வாய்க்கேட்டுணரத் தக்கன; வல்லார் - வல்லமை இதன் அருமை குறித்தது. உச்சியாய் - இறைவரைத் தலையினுச்சியினும், அதன்மேற் பன்னிரண்டங்குலத்திலும் உள்ள யோகத்தானத்தும் வைத்துத் தியானிக்கும் சிவயோக சாதனை குறித்தது; "என்றலையி னுச்சி யென்றுந் தாபித் திருந்தானை" (தேவா - தாண் - திருவாலவாய் - 10); "பாதபங்கயமும் சூட்டும்" (சித்தி); ஆதியும் அந்தமும் ஆயினாய் - "அந்தமாதி" (போதம் - 1 - சூத்); "ஒடுங்கி-உளதாம்" (ஷை); புரை - உயர்ச்சி; "முனிவன் புரைவரைக் கீறி" (பரிபா - 11 - 11); பெருமை என்றலுமாம். "புரையோய் புரையின்று" (ஷை. 20 - 77); புரைக்காடு-உயர்ந்த-பெரிய - காடுபோன்ற; காடு சோலை - காடு போன்ற சோலை; உவம உருபு விரிக்க; கரைக்கான் முதலை - கரையில் வந்து உமிழும் முதலை; காலனை முதலை வாயில் பிள்ளையைத் தருவிக்கும்படி கட்டளையிடுவீராக என்க; "மறலி...வாயிற் றருவித்தான்" (4239) என்று ஆசிரியர் பொருள் விரித்தமை காண்க. முதலையை - முதலை வாயினின்றும்; ஐகாரம் ஐந்தனுருபாகி நீக்கப் பொருளில் வந்தது; பிள்ளையை-என இரண்டனுருபு விரிக்க; உரைப்பார்...உச்சியாய் - சிவராஜயோக நிலையில் வழிபடும் எனது தலைவரே என்றும், ஆதியுமந்தமு மாயினாய் - இங்கு முதலை விழுங்குதலால் (அந்தமாகி) உன்னுள் ஒடுங்கிய மகனுயிரை மீள (ஆதியாகி) இவ்வுலகில் உளதாகச் செய்ய வல்லவரே என்றும், கரைக்கான் - காலனையே-காலன் உமதேவல்வழி நிற்பானாதலின் அவனை இவ்வாறேவிப் பணி கொள்க என்றும், பிறிதோர் உட்குறிப்புப் பொருள் பெறுமாறுய்த்துணர்ந்து கொள்க;—(5) அரங்கு - ஆடுமிடம்; அரங்காவது - இடுகாடு - இடுகொட்டிலாடல்; சங்காரங் குறித்தது. சங்காரம் புனருற்பத்திக்கு - மீளச் சிருட்டிக்கு - ஏதுவாதல் குறித்து, இங்கு மகனை மீளத்தந்த நிகழ்ச்சியை உட்குறித்து நின்றது; "வருங்கடன் மீளநின் றெம்மிறை நல்வீணை வாசிக்குமே" (தேவா); சரம் கோலை - சரம் அம்பு; சரமாகிய கோலினை; கோல் - அம்பினது பகுதி; வரிசிலை வாங்கி நாணியிற் சரங்கோலை சந்தித்து - என்க; வாங்குதல் - வளைத்தல்; நாணியில் - நாணில் என்பது நாணியில் என நின்றது. நாண் - வில் பூட்டும் கயிறு; சந்தித்து - அளவுபடப் பூட்டி; கோத்து; எய்தாய் - எய்தல் உபசாரமாத்திரையாய் நின்றது; சோலைக் கோயில் - சோலை சூழ்ந்த கோயில்; இந்நிலை இன்றும் காணலாம்; கோண்ட - இடங்கொண்ட; குழகனே என்பதும் பாடம்; புரங்கெட எய்தாய் - முப்புரம் எய்தலும் மூவரைக் காத்தலும் உடன் நிகழ்ந்தவாறு இங்கு மகனைச் சங்கரித்தலும் மீள உயிர்தருதலும் நிகழ்ந்தன என்ற குறிப்பு முடையது;—(6)

நாத்தாலும் - நாவின் செய்கையாலும் ; போற்றியென்று - வணக்கம் என்று ; போற்றி என்று ; நா - இங்கு அதன் செய்கைக்கு வந்தது ; பூந்தாழ் - பூக்கள் மிகுந்த ; சூட்டப்பட்ட குற்றம் - சூட்டப்பட்டிருக்கும் அல்லேன் என்ற குற்றம் ; தமது சரித வரலாறு. குற்றமே - குற்றமாமோ? ஆகாது என்று எதிர்மறை குறித்தது ; நீ அதனைக் குற்றமாகக் கொள்ளாது குணமாகவே கொண்டனை ஆதலின் உன் அடியானாகிய என்பாலன்பு பூண்ட மறையவன் சிறுவனை உயிர்ப்பித்து என் அடிமைத் தன்மையை ஏற்றுக் கொள்ளுதல் வேண்டும் என்பது குறிப்பு ;—(7) மந்தி...வழிபட - மந்தி - பெண் குரங்கு ; கடுவன் - ஆண் குரங்கு ; மந்தி கடுவனுக்குத்தன் பழநாடி மலைப்புறம் - தன் நாயகனாகிய ஆண் குரங்குக்கு உண்ணுதற்குப் பழங்களை மலைப்புறத்தில் நாடிப் பெண் குரங்கு செல்வதாகக் கூறுதல் இயற்கைவர்ணனை ; இதனுள் கணவனையும், மக்கள் - சுற்றத்தாரையும், உணவு தந்து காக்க, இல்வாழ்க்கையில் மனைவிக்குள்ள கடமை, குறிப்பிற் பெறவைத்துக் கூறியது தமிழ் நாவலர் பெருமானது கவிநயம் ; இனி அவ்வாறு குடும்பக் கடமையை எண்ணிச் சென்று அதன் பொருட்டு இறைவனை நினைந்து சந்திதோறும் சலமும் பூவும் இட்டு வழிபடுகின்றது என்றது மேலும் பெரியதோர் கவிநலம்; இவ்வாறு அறிவு குறைந்த பிராணிகளும் வழிபடுதல் நம்பிகளது திருக்கேதாரப் பதிகம் முதலியவற்றுட் காண்க ; இனி, அவ்வாறு தன் நாயகனுக்கு உண் பழநாடிச் சென்ற மந்தி சந்திகள் தோறும் மக்கள் இறைவனைச் சலபுட்ப மிட்டு வழிபடுதலைப் பார்த்து, தானும் அவ்வாறு செய்ய, தன் செயலை மறந்து இறை வழிபாட்டிற் புகுந்தது என்றுரைத்தலுமாம் ; இவ்வாறு கூறிய, பின்னும் பெரியதோர் கவிநயமும், மக்கள் செய்கைகளைப் பார்த்து அவ்வாறே தாமும் செய்யும் குரங்குகளின் இயல்பினைக் கூறியதுமாம். (Imitative instinct of monkeys) ; இனி, இவ்வாறு குரங்குகள் தமது குடும்பச் செயலை மறந்து வழிபாட்டிற் புகும் பதி என்று தலவிசேடங் கூறுமாற்றால், இங்கு மறையோனும் மனைவியும் மகவிழந்த சித்தசோகந் தெரியாமே வந்து சிவன்பால் அன்பு நிறைதலின் தமது இருக்தாளிறைஞ்சிய செயலைக் குறிப்பித்த வாறுமாம்; "புந்தியுறைவாய்" என்ற குறிப்புமிது. நந்தி - இறைவனது திருநாமம் ; நரகம் புகாமை வேண்டிக் கொள்வேன்; முன்னர்ப் பிறவாமை வேண்டினர் ; அவ்வாறு பிறவாமை பெறாது பிறக்க நேரிடினும் உன்னை மறந்து துயருழக்கும் நரகம் புகாமை வேண்டுவன் என்றதாம். "பிறவாமை வேண்டும் மீண்டும் பிறப்புண்டே லுன்னை யென்று, மறவாமை வேண்டும்" (1776) என்று, அம்மை வேண்டியவாம் இங்கு நினைவு கூர்தற்பாலது : சிவனை மறந்தவிலே நரகம் புகுதலோம் என்பது; இனி, இங்கு மகனை மீள அழைத்துக் கொடுக்கும் திருவுள்ளக் குறிப்புடனே பதிகம் எடுத்துப்பாடியும், முதல் மூன்று பாட்டளவும் இறைவர் அருள் செய்யாதிருந்தனர் என்று கருதி நான்காவது பாட்டில் "அவிநாசியே! முதலையைப் பிள்ளை தரச் சொல்லு காலனையே!" என்று வற்புறுத்துதல் போல அரிதிற் கேட்க, அது முடியும் முன் மகன் வந்தது கண்டு, திருவுள்ள மறியாதே இறைவனை ஏவியது போன்று அபசாரப் பட்டமை கருதி இவ்வாறு வேண்டித் துதித்த குறிப்புமாம் ; ஆளுடைய அரசுகள் திருமறைக்காட்டிற் கதவம் திறப்பித்த வரலாறு இங்கு நினைவு கூர்தற்பாலது ; முன் மூன்றாவது பாட்டிற் பிறவாமை வேண்டிக் கொண்ட குறிப்பு வேறு ; அது முன் உரைக்கப்பட்டது ; "பேணு தொழிந்தே னுன்னையல் லாற்பிற தேவரை" என்று மேல் வரும் பாட்டிற் கூறும் தொடர்ச்சியும் கருதுக ;—(8) உன்னையல்லாற் பிறதேவரைப் பேணு தொழிந்தேன் - எதிர் மறையாற் கூறினர் உறுதி குறித்தற்கு ; பேணுது என்றது மனத்தின் செயலும், காணுது - என்றது புறவிந்திரியங்களின்

செயலும் குறித்தன ; இன்னும் காட்டுதியேல் நான் காண்பன் - என்க. "காட்டு வித்தா லாரொருவர் காணு தாரே காண்பாரார் கண்ணுதலாய் காட்டாக் காலே" (தேவா) என்ற கருத்துக்கள் காண்க; மேல் "காணுத கண்கள் காட்ட வல்ல" என்ற கருத்துமிது ; "காண வுள்ளத்தைக் கண்டு காட்டலின்" என்பது ஞான சாத்திரம் ; காணுத - காண மாட்டாத ; காட்ட - காட்டுவிக்க ; இங்குக் கூறிய காட்சிகள் இறைவர், நம்பிகளுக்கும் அவர்மூலம் உலகுக்கும் செய்யும் பொருட் டிறங்களின் தன்மைகள்; காணு தொழிந்தேன் - தேவரீர் அருள்புரிவீர் என்பதனை உட்கொள்ளாது நான்காவது பாட்டில் எடுத்துக்கூறி விண்ணப்பித்த நிலையினைக் குறிப்பில் உணர்த்துதலும் காண்க. ஆட்பாலவர்க் கருளும் வண்ணங்கள் அளவில என்ற திருப்பாசுரக் கருத்துக்களும் இங்குச் சிந்திக்கற்பாலன;—(9) நள்ளாறு - இப்பதியில் ஓடும் ஆற்றின் பெயர் ; தல புராணம் பார்க்க ; தேள்ளாறு - அவ்வாற்றின் சிறப்பு ; அரந்துறை ; சிவத்தன்மை கொண்ட அதன் துறை ; திருவரத்துறை என்னும்பதி என்றலுமாம் ; திருவரத்துறைத் திருப்பதிகத்தினுள் நிவா நதியின் சிறப்புக் கூறிய பகுதிகள் இவ்வாற்றிற்கும் பொருந்தக்காணும் நினைவுபற்றி இப்பதியினைக் கூறினார் போலும் ; புள் - சோலைகளில் வாழும் கிளி குயில் முதலிய புட்கள் ; ஏறுதல் - நிறைதல் ; இங்கு இக்குளத்திடையிலும், சூழ்ந்த சோலைகளிலும் புட்கள் நிறைதல் இன்றும் கண்டுகளிக்கத் தக்க காட்சியாம் ; துளத்திடை...கிறிசெய்ததே - முன் (2) வது பாட்டிற் கூறியது மகன் மீண்டு வருதலைத் திருவுள்ளத்திற் கண்டு முன்னிலைப்படுத்தியது. இங்கு மகன் வந்து விட்டானாதலின் அவனையே முன்னிலையிற் கண்டு கூறியது; ஆதலின் கூறியது கூறலன்மையுணர்க ; சரித ஆதாரவாகிய அகச்சான்று ; 2ம் பாட்டிலுரைத்தவை பார்க்க ; - (10) நீர் - கங்கை ; ஏற ஏறு - சடை - அதன் மிகுதிக்கு மேல் ஓங்கித் தடுத்து நிற்கும் நிலை குறித்தது ; நிமிர் புன்சடை - புன் சடையாயினும் நீர் ஏறத் தானும் நிமிர்வதாம் என்றபடி ; ஏறி - பெயர் ; காரி - நிறம் ; கரிய நிறமுடைய விடத்துக்கு வந்தது ஆகுபெயர் ; ஏறு - தனது விடத்தன்மை நீங்கி அமுதத் தன்மை பெற்றதாதலின் ஏற்றம் - மேன்மை - கொண்ட ; சீர் - சிறப்பு ; "காலனையன் றேவிக் காரங்கொண்ட - பாலன், மரணந் தவிர்த்ததுவு மற்றவர்க்கு நந்தம், காரணம்போ லல்லாமை காண்" (களிறு - 12) என்று ஞானநூல் இதனைப் போற்றியது காண்க ; "பாவும் பெருமை" (4242).

குறிப்பு :—இப்பதிகத்துள் முதல நான்கு திருப்பாட்டுக்கள் குளக்கரையில் நின்று மகன் உயிர் பெற்று வருமுன்னும், ஏனைய ஆறு பாட்டுக்கள் அதன்பின் அவனையும் கொண்டு சென்று திருக்கோயிலில் இறைவர் திருமுன்பும் அருளப் பட்டன என்பது கருதப்படும் ; "எடுத்தார் திருப்பதிகம்" (4238) என்றும், "பாவும் பெருமைத் திருப்பதிகம் பாடிப்பணிந்து" (4242) என்றும் ஆசிரியர் அருளிய கருத்துக்கள் காண்க.

தலவிசேடம் : திருப் புக்கொளியூர் - (அவிநாசி):— இது கொங்கு நாட்டுப் பாடல் பெற்ற பதிகள் ஏழனுள் ஒன்று. முதலை விழுங்கி மூன்றாண்டு சென்ற மகனை ஆளுடைய நம்பிகள் "எற்றான்" என்று பதிகம்பாடி முதலை வாயினின்றும் வரவழைத்து உபநயனமும் செய்வித்து அவனுடைய பெற்றோரை மகிழ்வித்த பேரற்புதச் செயல் நிகழ்ந்த பதி. அற்புதம் நிகழ்ந்த அக்குளக்கரையில் அவ்வரலாறு குறிக்கும் திருவுருவங்களுடன் நம்பிகளது தனிக்கோயில் உள்ளது ; பங்குனி உத்திரத்தில் இவ்விழா கொண்டாடப்படுகிறது ; கோயிற் கொடிக் கம்பத்திலும், முன்புறம் திரு

விளக்குப் பெருங்கம்பத்திலும் இவ்வுருவங்கள் உள்ளன. வரலாறு புராணத்துட் பார்க்க; அம்பிகை தவஞ் செய்து இறைவனை மணந்து வலப்பாகம் பெற்றனர் என்பது தல வரலாறு. அம்பிகையாரது தவக்கோலத் திருவுருவம் தனிக்கோயிலில் வெளிப்புறத்தில் திருக்குளத்து மேற்குக் கரையில் உள்ளது. அம்மையார் அங்கு ஒரு பாதிரி மரத்தின்கீழ் எழுந்தருளி யுள்ளார்; "பாதிரிமரத்தம்மன்" என்று வழங்கு கிறார்கள். பாதிரி தல மரமன்று; சில வரலாறுகளில் அவ்வாறு குறித்திருப்பது தவறு; இப்பதியின் தல மரமும் அம்பிகை தவம் செய்ததும் மாமரம் என்பது தல புராணம்; காலாந்தரத்தில் பாதிரி மரம் உண்டானது போலும். "காசியில் வாசி அவிநாசி" என்பது இந்நாட்டில் வழங்கும் பழமொழி; இத்தலத்துக்கு தட்சிண காசி (தென்காசி), திருநெல்வேலிச் சில்லாவில் இப்பெயருடைய தலத்துடன் மயங் கற்பாலதன்று, என்ற பெயரும், சுவாமி கோயிலில் உள்ள தீர்த்தக் கிணறு காசிக் கிணறு - காசிக் கங்கை - என்று வழங்கப் படுவதும் பிரசித்தம்; தலபுராணம் பார்க்க; 63 நாயன்மார்கள் திருவுருவங்களும், முதலை வாய்ப்பிள்ளை திருவுருவங்களும் ஆகிய அழகிய செப்புப் படிமங்கள் உற்சவ மூர்த்திகளாக உள்ளன; கொங்கு நாட்டில் இவ்வமைப்பு இவ்வொருபதியிலே தான் உண்டு. இவர்கள் சித்திரைப் பெருவிழா வாகிய இந்திர விழாவில் உற்சவங் கொண்டு பெருஞ் சிறப்பாகக் காட்சி யளிப்பர். புக்கொளியூர்-என்பது ஊர்ப் பெயர்; "செல்வத் திருப்புக் கொளியூர் சென்றடைந் தார்" (4232) என்று ஆசிரியர் கூறுதல் காண்க. அவிநாசி என்பது இப்பதியில் விளங்கும் இறைவர் பெயர். பதிகம் பார்க்க. இப்பொழுது பழயவூர்ப்பெயர் மறைந்து அவிநாசி என்பது ஊர்ப் பெயராகத் தவறி வழங்குகின்றது; இறைவர் அக்கினி தாண்டவஞ் செய்தபோது காணலாற்றார்களாகி அஞ்சிய தேவர்கள் புகுந்து ஒளித்துக் கொண்ட இடமாதலால் இப்பெயர் பெற்றதென்பது தல வரலாறு; இவ்வூர் முன் இருந்த இடம் கோயிலின் தென்புறம் முதலைவாய்ப்பிள்ளை அழைத்த குளத் (ஏரி) தினை அடுத்துத் தென்புறமாக உள்ள தொல்லைவெளி என்பது அரசாங்கப் கணக்குக் களாலும், அந்நிலத்தின் அடையாளங்களாலும், ஊரார் வழங்கும் வழக்காலும் அறியப் படும். பழய ஊர் காலாந்தரத்தில் சிதைவுண்டது; புராணத்திற் கூறும் வரலாறு கள் நிகழ்ந்த இடம் அதுவாம். ஆளுடைய பிள்ளையார் புராணத்தினுள் "அப்பாலைக் குடபுலத்தி லரனார் மகிழுந் தானங்கள், எப்பாலுஞ் சென்றிறைஞ்சித் திருநணுவினை யிறைஞ்சி" (2225) என்றதனால் பிள்ளையார் இத்தலத்துக்கு எழுந்தருளி யிருத்தல் கூடுமென்று கருதப்படுகின்றது. பிள்ளையாரும் அரசுகளும் அருளிய க்ஷேத்திரக் கோவைத் திருப்பதிகங்களால் இந்தப் பதியுள்ள மேல் கொங்கு நாட்டின் பலபகுதிகளையும் அவ்விரு பெருமக்களும் வந்து வணங்கியருளியமை கருதப்படும். *"மோக்கணி யருளிய முழுத்தழல் மேனி, சொக்கதாகக் காட்டிய தொன்மையும்" (திருவா - கீர்த்தித்திருவகவல் - 33 - 34 வரிகள்) என்றும், "அரிய பொருளே யவி

---

*மோக்கணி - மொக்கணீச்சரம் என்னும் திருவாசக வைப்புத்தலங்களுள் ஒன்று. இது திருப்புக்கொளியூரின் (அவிநாசி) அணிமையில் மேற்கில் 5 நாழிகை யளவில் உள்ள சேவூர் (மாட்டூர் என்னும் தேவார வைப்புத்தலம். "மாட்டூரறவா" ஊர்த்தொகை) னின்றும் மேற்கில் 3 நாழிகை யளவில் உள்ளது. பூசையுமின்றிச் மூர்த்திகளும் சிதலமாய்க் கிடக்கின்றன! சரித ஆராய்ச்சியாளர்கள் மட்டில் எப்போ தாவது போய்க்கண்டு ஆய்ந்து வருகின்றனர். அன்பர்கள் கவனித்து ஆலயப்பணி செய்வார்களானால் பெருஞ் சிவபுண்ணியமாகும்!

ராசி யப்பா பாண்டி வெள்ளமே" (டை. ஆனந்த மாலை - 7) என்றும் வரும் திருவாசகத் திருவாக்குக்களால் திருவாதவூரடிகள் இந்நாட்டுக்கும் இப்பதிக்கும் எழுந்தருளியமையும் கருதப்படும். அன்றியும் திருவாதவூரடிகள் நம்பிகள் திருவுருவங்கள் பெரிய அளவில் கோபுரவாய்தலினுள் தீட்டப்பட்டுள்ளன.

ஏறக்குறைய 120 ஆண்டுகளின் இப்பதியின் அணிமையில் வாழ்ந்த, சிர்க்கருணீகர் மரபு, இளையான் கவிராயர் என்ற புலவர் பெருமானால் இதற்குத் தலபுராணம் எழுதப்பட்டுள்ளது ; இதனைக் கோயமுத்தூர் வித்வான் கந்தசாமி முதலியார் அவர்களும் நெகமம் வித்வான் முத்துநாகப்ப முதலியாரும் பரிசோதித்து 62 ஆண்டுகளின் முன் அச்சியற்றினர். முகவுரைச் சருக்கம் முதல் சுந்தரச் சருக்கமீறாக 13 சருக்கங்களுக்கு 1020 பாட்டுக்கள் உடையது. சருக்கங்களின் வசனமும் படங்களும் சேர்க்கப்பட்டுள்ளன ; இதுவேயுமன்றி செட்டிபாளையம் மகாவித்வான் வாசுதேவ முதலியார் இயற்றிய "கருணாம்பிகை சதகம்", சிவக்கவிமணி - C. K. சுப்பிரமணிய முதலியார் இயற்றிய "பெருங்கருணையம்மை பிள்ளைத்தமிழ்" முதலிய பிரபந்தங்களும், கருணைதாசர் இயற்றிய கீர்த்தனங்களும் உண்டு.

சுவாமி - அவிநாசியப்பர் ; அம்மை - பெருங்கருணையம்மை ; தலமரம் - மா ; தீர்த்தம் ; காசிக்கங்கை (கோயிலினுள் உள்ள தீர்த்தக்கிணறு) ; நள்ளாறு (கோயிலின் வடக்கில் ஓடும் நதி); பதிகம்-1.

இது திருப்பூர் நிலயத்தினின்றும் வடக்கில் 7 நாழிகையளவில் நல்ல கற்சாலை வழி அடையத்தக்கது ; இடையில் 5 நாழிகையளவில் திருமுருகன்பூண்டி உள்ளது ; மோட்டார் பஸ்வசதியும் உண்டு ; வஞ்சிப்பாளையம் நிலயத்தினின்றும் வடக்கே கற்சாலை வழி 5 நாழிகை யளவிலும் அடையலாம் ; வண்டிவசதி உண்டு ; கோயமுத்தூரினின்றும் மோட்டார் பஸ்கள் நிறைய ஓடுகின்றன. 24 நாழிகை; நல்லவழி.

4244. "முன்னாண் முதலை வாய்ப்புக்க மைந்தன் முன்போல் வரமீட்டுத்
தென்னா ரூர ரெழுந்தருளா நின்றா" ரென்று சேரர்பிரார்க்
கந்நாட் டரசு ரடியார்கண் முன்னே யோடி யறிவிப்பப்
பொன்னார் கிழியு மணிப்பூணுங் காசுந் தூசும் பொழிந்தளித்தார்.

(இ - ள்) முன்னாள்...என்று-முன்னாளிலே முதலையின் வாயில் விழுங்கப்பட்ட மைந்தனை முன்போல உயிர்பெற்று வர மீட்டுக் கொடுத்துத் தென்னாரூர் நம்பிகள் எழுந்தருளி வருகின்றார் என்று ; சேரர்பிரார்க்கு . அறிவிப்ப - அந்நாட்டில் உள்ள சிவனடியார்கள் முன்னாக ஓடிச் சென்று சேரர் பெருமானாருக்கு அறிவிக்கவே ; பொன்னும்...அளித்தார் - அறிவித்தவர்களுக் கெல்லாம் பொற்கிழியும் மணிப்பூண்களும் காசும் துணியும் மழைபோல மிகுதியாக அளித்தனர் (சேரனார்).

(வி - ரை) அரசுரடியார்கள்...அறிவிப்ப - நம்பிகள் எழுந்தருள்வது பெரிய நல்ல சிவச் செய்தி யாதலின் அடியார்கள் அதனை அரசனுக்கு முன்னாக ஓடி அறிவித்தனர்; அந்நாள் அரசரியல்பும் அடியாரியல்பும் அன்பின்ஒழுக்கமும் குறித்தவாறு.

முன்னாள்.. என்று - இஃது அடியார் சேரனாருக்கு அறிவித்த செய்தி ; செய்தற்கரிய அரும் பெருஞ் செய்தியாதலும் இறையருள் வெளிப்பாடும் பற்றி இதனை அறிவித்தனர்.

தென்ஆரூர் - தென் - ஆரூர் - திரு ஆரூர் உள்ள பகுதி - "தென் திருவாரூர் புக்கு,......என்று கொலெய்துவதே" (நம்பி - தேவா).

பொன்னூர்கிழியும்...அளித்தார் – அறிவித்த செய்தியின் பெருமையும் தன்மையும் பற்றி மகிழ்ந்த நிலை. பொழிதல் - மழைபோல மிகுதி பெறக் கொடுத்தல்; மேல் வரும் பாட்டுப் பார்க்க. தூசு - சிறந்த உடை. 16

4245. செய்வ தொன்று மறியாது சிந்தை மகிழ்ந்து களிகூர்ந்"தென்
ஐய னணைந்தா ; னெனையாளு மண்ண லணைந்தா ; னாரூரிற்
சைவ னணைந்தா; னென்றுணையாந் தலைவ னணைந்தான் றரணியெல்லாம்
உய்ய வணைந்தா னணைந்தா"னென் றோகை முரசஞ் சாற்றுவித்தார்.

(இ - ள்) செய்வதொன்றும்...களிகூர்ந்து - செய்வது இன்னதென்று ஒன்றும் தோன்றாமல் மனமகிழ்ச்சி மேலிட்டு ; "என்...அணைந்தான்" என்று - "என் ஐயனாகிய நம்பிகள் வந்தணைந்தனர் ; என்னை ஆட்கொள்ளும் பெருமையுடையவர் வந்தணைந்தனர் ; திருவாரூரின் மகிழ்ந்தருளும் சைவப் பெருமகனார் வந்தணைந்தனர் ; எனது துணைவராகிய தலைவர் அணைந்தனர் ; உலகமெல்லாம் உய்யும் பொருட்டு இவ்வுலகில் வந்தவதரித்தவராகிய நம்பிகள் வந்தணைந்தனர் !" என்று பலவாறும் எடுத்துச் சொல்லி ; ஓகை முரசம் சாற்றுவித்தார் - உவகை முரசத்தை நகரமெங்கும் சாற்றும்படி செய்தனர்.

(வி - ரை) செய்வதொன்றும் அறியாது - இது மகிழ்ச்சி மீக்கூர்தலால் வரும் நிலை ; "மூண்டபெரு மகிழ்ச்சியினால் முன்செய்வ தறியாதே" (1801) என்ற நிலையும், ஆண்டுரைத்தவையும் பார்க்க; ஆண்டு, அப்பூதியார் "காண்டலைமை யின்றியும் முன்கலந்த பெருங்கேண்மையினால்" அன்பு பூண்டு தியானப் பொருளாய்க் கொண்டு வழிபட்டருளு மூர்த்தியாகிய அரசுகள் தாமாகவே தமது கடைத்தலையில் வந்து நிற்கக் கண்ட செய்தி பெருமகிழ்ச்சி விளைத்தது. ஈண்டு, முன் சேரலனாருக்கு இறைவர் அறிவிக்க அறிந்து, முன்னர்ச் சென்று வரவேற்று வருந்தியழைத்துக்கொண்டுவந்து வழிபட்ட தெய்வமாகிய நம்பிகள், எதிர்பாராது தாமாகவே தம்மை நினைந்து எழுந்தருளக் கேட்ட செய்தி அவ்வாறே பெருமகிழ்ச்சியை விளைத்தது. இவ்வாறு இவற்றுள் ஒற்றுமை நயங்களைக் கண்டுகொள்க ; பின் கூறப்பட்ட செய்திகள் அப்பெரு மகிழ்ச்சி காரணமாகப் பலபடப் பண்ணியுரைத்த தன்மையும் கண்டுகொள்க.

என் ஐயன் - எனை ஆளும் அண்ணல் - ஐயன் - முதல்வன் ; ஆளும் அண்ணல் - ஆளாகக் கொள்ளத் தகுதியற்ற என்னையும் ஆளும் பெருமையுடையவன் ; எனை - என்னையும் என இழிவு சிறப்பும்மை தொக்கது ; ஆளும் - ஆளுதலினால் எனக் காரணக் குறிப்புடன் நின்றது ; உடம்பொடு புணர்த்தி யோதியது அக்கருத்துடையது.

ஆரூரிற் சைவன் - திருவாரூரில் உள்ள சிவனுக் கடிமைப்பட்டவர் ; நம்பிகளது தேவாரங்கள் காண்க ; "ஆரூர்ச் சிவம்பேர் சென்னியில் வைத்த ஆரூரன்" என்பன முதலியவை.

என் துணையாம் தலைவன் - எனை ஆளாகக் கொண்டதனோ டன்றி எனக்குத் துணையுமானவன்; "சேரமான் றோழரென்று பார்பரவு மேன்மை நாமம் முனைப்பாடி வேந்தர்க்காகி விளங்கியதால்" (3813) ; துணையாதலோடு தலைவருமானவர்.

தரணி எலாம் உய்ய அணைந்தான் அணைந்தான் - உலகம் எல்லாம் உய்யும் பொருட்டு வந்தவராகிய (நம்பிகள்) அவர் அணைந்தார் ; முன்னது வினைப்பெயர் ; பின்னது வினைமுற்று. இஃது ஆசிரியரது கவிநயம். "மாதவஞ் செய்த தென்றிசை

வாழ்ந்திடப், போதவார் " (35) என்று தொடக்கத்திற் கூறியதனை முடித்துக் காட்டிய கவிநயமும், பொருத்தமும் காண்க.

ஒகை முரசம் - ஒகை - உவகை ; தமது மகிழ்ச்சியை ஊரவர் அறிய வெளிப் படுத்தற்கு இவ்வாறு முரசம் சாற்றுதல் செய்வித்தார் ; பெரு நிகழ்ச்சிகளை முரச மறைவித்து அறிவித்தல் மரபு. சந்தோட பேரிகை என்பர் வடவர். 17

4246. பெருகு மதிநூ லமைச்சர்களை யழைத்துப் பெரியோ ரேழுந்தருளப்
பொருவி னகர மலங்கரித்துப் பண்ணிப் பயணம் புறப்படுவித்
தருவி மதமால் யானையினை யணைந்து மிசைகொண் டரசர்பெருந்
தெருவு கழிய வெதிர்வந்தார் சேரர் குலமுய்ந் திடவந்தார். ௧௮

(இ - ள்) பெருகு...அழைத்து - பெருகும் மதிநூல் வல்ல அமைச்சர்களை வரவழைத்து ; பெரியோர்...புறப்படுவித்து - பெரியோராகிய நம்பிகள் எழுந்தருளு தற்காக ஒப்பற்ற அந்நகரத்தினை அலங்கரித்துப் பண்ணிப் பயணம் புறப்படச் செய்து ; அருவி...மிசை கொண்டு - அருவி போலப் பாயும் மதத்தினை யுடைய யானையை அணைந்து அதனை மேல் கொண்டு ; அரசர்...உய்ந்திட வந்தார் - அரசர் களது பெருந் தெருவு கழிந்திட எதிர் கொள்ளும் பொருட்டு வந்தார் சேரர் குலம் உய்ந்திட வந்தவராகிய சேரமானார்.

(வி - ரை) உய்ந்திட வந்தார் - எதிர் வந்தார் - என்க ; உய்ந்திட வந்தார் - வந்தவராகிய சேரலனார் என வினையாலணையும் பெயர்.

அமைச்சர்களை அழைத்து...புறப்படுவித்து - அரசர் அமைச்சர்களுடனே சென்று எதிர் கொள்ளுதல் அரசாங்கத்தின் சிறப்பாகிய பெரிய மரபு ; எழுந்தருள - எழுந்தருளுதற்காக ; அதற்குத் தகுதியாக.

அலங்கரித்துப் பண்ணி - அலங்காரங்களை யெல்லாம் விதிப்படி செய்வித்து ; " மிசைகொள் பண்ணும் பிடி வெள்ளம் " (3890) ; " தோன்றப் பண்ணும் பிடி " (3894) ; பண்ணுதல் - வினை முற்றுதல்.

யானையினை - மிசை கொண்டு வந்தது நம்பிகளை எதிர்கொண்டு வணங்கி அவரை அந்த யானையின் மேல் ஏற்றித் தாம் பின்னிருந்து உபசரித்து வருவதற்கு ; மேல் " வரு கைவரையின் மிசையேற்றித் தாம்பின் மதிவெண் குடைகவித்தார் " (4249) என்பது காண்க ; முன்னர் வரலாறும் (3894) காண்க.

அரசர் பெருந்தெருவு கழிய - அரசர் வாழும் பெருந்தெருவு பிற்பட மேற் சென்று அத்தெரு வளவிலமையாது, நாட்டின் எல்லை பெற நெடுந்தூரம் சென்றமை மேற் பாட்டிற் கூறுதல் காண்க. அதன் தொடக்கம் இவ்வாறு கூறப்பட்டது. 18

4247. மலைநாட் டெல்லை யுட்புகுத வந்த வன்றொண் டரைவரையிற்
சிலைநாட் டியவேல் கொடித்தானைச் சேரர் பெருமா னெதிர்சென்று
தலைநாட் கமலப் போதனைய சரணம் பணியத் தாவில்பல
கலைநாட் டமுத வாரூரர் தாமுந் தொழுது கலந்தனரால். ௧௯

(இ - ள்) மலைநாட்டு...வன்றொண்டரை - மலை நாட்டின் எல்லையினுள்ளே புகுதும்படி வந்தணைந்த நம்பிகளை ; வரையில்...சேரர் பெருமான் - மேரு மலையி னுச்சியில் தமது விற்கொடியைப் பொறித்த வெற்றிக் கொடியினையும் சேனைகளையும்

உடைய சேரமான் பெருமானார்; எதிர் சென்று...பணிய - எதிர் கொண்டு சென்று, அன்றலர்ந்த தாமரை மலர் போன்ற பாதங்களை வணங்க; தாவில்...கலந்தனர் - கேட்டினை நீக்கும் அமுதமயமாகிய பல கலைகளையும் நாட்டும் நம்பியாரூரரும் எதிர் தொழுது கலந்தனர்; (ஆல் — அசை)

(வி - ரை) மலை நாட்டு எல்லையுட் புகுதவந்த - மலைநாட்டின் எல்லை வரையிலும் சென்று சேரலனார் எதிர் கொண்டனர் என்பதாம்.

வரையில் சிலைநாட்டிய - வரை - மேரு; சிலை - வில்; சிலை நாட்டுதல் - மேரு மலை வரையில் செயித்து அதனுச்சியில் தமது விற்கொடியினைப் பொறித்தல்.

தலைநாட் கமலப் போது - அன்று காலை யலர்ந்த தாமரை மலர்.

தாவில்பல கலை நாட்டு-தாவில்-கேட்டினை யில்லையாகச் செய்யும்; கலை நாட்டு கலைகளையும் தாபிக்கும்; பல கலைகளுக்கும் இருப்பிடமாகிய திருப்பதிகங்களை அருளும் என்பதாம். நம்பிகளது பல பதிகங்களின் பயன் விளைந்தமையும் காண்க.

அமுதம் - பிறவிப்பிணி போக்கும்; முதலை வாய்ப்பிள்ளை யழைத்த வரலாற்றுக் குறிப்பு. கலைகள் உணர்த்தும் சிவன் முத்தராகிய என்றலுமாம்.

தாமும் - சேரனார் பணிந்தது போலத் தாமும் தொழுது என்று உம்மை இறந்தது தழுவிய எச்சவும்மை.

கலந்தனர் - கூடிக் கொண்டனர்; கூடினர் 19

4248. சிந்தை மகிழுஞ் சேரலனார் திருவா ரூர ரெனுமிவர்கள்
தந்த மணிமே னிகள்வேறா மெனினு மொன்றாந் தன்மையராய்
முந்த வெழுங்கா தலிற்றொழுது முயங்கி யுதியர் முதல்வேந்தர்
எந்தை பெருமான் றிருவாரூர்ச் செல்வம் வினவி யின்புற்றார். ௨0

(இ - ள்) சிந்தை...தன்மையராய் - (முன் கூறியவாறு கூடி) மன மகிழும் சேரமானாரும் திருவாரூர் நம்பிகளும் என்னும் இவ்விருவ ருடைய அழகிய மேனிகள் வேறாயிருந்தும், ஒன்றே யாகும் தன்மை யுடையவர்களாய்; முந்த...முயங்கி - முற்பட்டு எழுகின்ற பெரு விருப்பத்தினாலே தொழுது தழுவிக் கொண்ட பின்; உதியர் ...இன்புற்றார்-சேரர் குலத்து வந்த முதன்மை பெற்ற அரசராகிய சேரமானார் எமது பெருமானாரது திருவாரூரின் சிறப்புடைய நன்மைகளைக் கேட்டு இன்ப முற்றனர்.

(வி - ரை) சிந்தை...இவர்கள் - முன் கூறியவாறு கலந்ததனால் இருபாலும் மகிழ்வந்த இருவர்களும்.

மணிமேனிகள்...முயங்கி - பெரு விருப்பத்தாற் றழுவிக் கொண்டமையால் இருவரது மணிமேனிகள் வேறு வேறாக இரண்டாயினும் ஒரே மேனியாக எண்ணக் கூடிய தன்மை பெற்றன என்பது. முயங்குதல் - தழுவிக் கொள்ளுதல்; முந்த - ஒருவர் ஒருவரை முற்பட்டு; முன்னரும் "முன்பு பணிந்த பெருமானைத் தாமும் பணிந்து முகந்தெடுத்தே, யன்பு பெருகத் தழுவவிரைந் தவரு மார்வத் தொடுதழுவ, வின்ப வெள்ளத் திடைநின்று மேற மாட்டா தலைவார்போல், என்பு முருகி யுயிரொன்றி யுடம்பு மொன்று மெனவிசைந்தார்" (3812) என்று இந்நிலையின் தன்மையை விரித்துக் கூறியது காண்க; இவ்வாறு தழுவிக் கொள்ளுதல் அரசர், பெரியோர் முதலியோர்களிடையில் இன்றும் நிகழும் மரபு.

உதியர் - சேரர்கள்.

திருவாரூர்ச் செல்வம்-திருவாரூர்ப் பெருமானாரது அருட் டிறங்களை ; செல்வம்-நன்மைகள் ; " திருவாரூர் நிகழ் செல்வஞ் சொன்னார் " (2393) என முன்னர் வந்த கருத்தும் காண்க.

வினவி இன்புற்றார் - வினவி, அதனை நம்பிகள் சொல்லக் கேட்டு,. இன்புற்றார் என்க ; அதனை நம்பிகள் சொல்லக் கேட்டு என்பது இசையெச்சம்.

முதல் - முதன்மை பெற்ற ; முதல்வராகிய. 20

4249. ஒருவ ரொருவ ரிற்கலந்து குறைபா டின்றி யுயர்காதல்
இருவர் நண்பின் செயல்கண்ட விரண்டு திறத்து மாந்தர்களும்
பெருகு மகிழ்ச்சி கலந்தார்த்தார் பெருமா டமிழின் பெருமாளை
வருகை வரையின் மிசையேற்றித் தாம்பின் மதிவெண் குடைகவித்தார்.

(இ - ள்) ஒருவர்...கண்ட - ஒருவர் ஒருவருள்ளே மனங்கலந்து எவ்விதமான குறைவும் இல்லாமல் உயர்வாகிய பெரிய விருப்பமுடைய இருவரது நட்பின் செயலைக் கண்ட ; இரண்டு...ஆர்த்தார் - இருபக்கத்தில் உள்ள மக்களும் பெரிய மகிழ்ச்சி பொருந்தி ஆரவாரித்தார்கள் ; பெருமாள்...கவித்தார் - சேரமான் பெருமாள் தமிழின் பெருமானாகிய நம்பிகளைத் தாம் ஏறி வந்த யானையின் மேல் ஏற்றித் தாம் அவர் பின்னே யமர்ந்து மதிபோன்ற வெண் கொற்றக் குடையினைக் கவித்தனர்.

(வி - ரை) ஒருவர் ஒருவரிற் கலந்து - கலத்தலாவது மன வொற்றுமையுடைய நட்பினால் ஒன்று கூடுதல் ; ஒருவர் ஒருவரில் - நம்பிகள் மனம் சோலனாருள்ளும், அவர்மனம் நம்பிகள் மனத்துள்ளும் நண்பினால் ஒருமைப்படுதல் ; " காத லிருவர் கருத்தொருமித்து."

உயர்காதலிருவர் நண்பின்செயல் - உயர்ந்த பெரு விருப்பத்தினை மேற்கொண்டமையால் இவ்விருவரது நட்பினால் விளைத்த முன்பாட்டிற் கூறிய செயல்.

இரண்டு திறத்து மாந்தர்கள் - நம்பிகள் உடன் வந்த பரிசனங்களும், சோலனாருடன் போந்த மந்திரிமார்கள் முதலியோரும்.

பெருமாள் தமிழின் பெருமாளை - இருவரும் தோழமையால் ஒப்பாந்தன்மை பெற, இருவரையும் பெருமாள் என்ற ஒரு தன்மை குறிக்கும் பெயராற் கூறினார் ; பெருமாள் - அரசர். சேர அரசர்களைப் பெருமாள் என்று வழங்குதல் மரபு ; தமிழின் பெருமாள் - தமிழின் தலைவர் ; " தமிழ்நாதன் " (232).

வரு கைவரை - வரும் - தாம் ஏறிக்கொண்டுவர வந்த ; கைவரை - யானை ; கையையுடைய மலைபோன்றது என்பது சொற்பொருள்.

தாம்பின்...கவித்தார் - அவர்பின் தாம் ஏறி அமர்ந்து வெண் கொற்றக் குடை ஏந்தினார் ; கவித்தல் - முடிமீது நிழல்படக் குடைபிடித்தல். " பிடிமேற் பார், முழுதுமேத்த நம்பியை முன் பேற்றிப் பின்பு தாமேறிப், பைம்பொன் மணிச்சாமரைவீசி " (3894) ; என்றபடி முன் முறையிற் சேரலனார் யானையின்மேல் நம்பிகளை முன் ஏற்றிப் பின்பு தாம் அமர்ந்து சாமரை யிரட்டினார் ; இங்கு நீண்ட தூரம் செல்லவேண்டியிருத்தலிற் வெண்குடை கவித்தார் என்பது. 21

4250. உதியர் பெருமாள் பெருஞ்சேனை யோதங் கிளர்ந்த தெனவார்ப்பக்
கதிர்வெண் டிருநீற் றன்பர்குழாங் கங்கை கிளர்ந்த தெனவார்ப்ப

எதிர்வந் திறைஞ்சு மமைச்சர்குழா மேறு மிவுளித் துகளார்ப்ப
மதிதங் கியமஞ் சணியிஞ்சி வஞ்சி மணிவா யிலையணைந்தார். உஉ

(இ - ள்) உதியர்...ஆர்ப்ப - சேரமன்னரது பெரிய சேனை கடல் கிளர்ந்தது போல ஆரவாரிக்க; கதிர்வெண்...ஆர்ப்ப - ஒளிவீசும் வெள்ளிய திருநீற்றினை அணிந்த அன்பர் கூட்டங்கள் கங்கையாறு முழங்கி எழுந்தது போல ஆரவாரிக்க; எதிர்...துகள் ஆர்ப்ப – எதிரே வந்து வணங்கும் அமைச்சர் கூட்டங்கள் ஏறிவரும் குதிரைகளின் காலிலிருந்து எழும்பும் மண்தூசிகள் எங்கும் எழுந்து பரவ; மதி... அணைந்தார் - சந்திரன் தவழும் மேகங்கள் படியும் மதில்களையுடைய வஞ்சிமா நகரத்தின் அழகிய வாயிலை அணைந்தனர் (இவ்விரு பெருமக்களும்).

(வி - ரை) ஓதம் கிளர்தல் கடலோசையினையும், கங்கை கிளர்தல் - தூய வெள்ளிய பரப்பினையும் உணர்த்தின. கங்கைநீர் - மிகத்தூய வெண்மை நிறமுடையது என்பது.

சேனை - நம்பிகளை எதிர்கொள்ளச் சேரனுருடன் வந்தவை.

அன்பர் கூட்டம் - நம்பிகளுடன் வந்தவர்; சேனை ஆர்த்தமை – சேரனார் செயலைக்கண்டு "நல்ல தோழர் நம்பெருமா னமக்கு நம்பி" (3895) என்று கருதியதனாலும், அன்பர் ஆர்த்தமை-சேரனாரது அன்பின் பெருமை கண்டதனாலுமாம். கங்கை கிளர்ந்ததென – "மன்னியொளிர் வெண்மையினாற் றூய்மையினால்...கங்கை யணைந்ததெனும் கவின்காட்ட" (2550) என்றது காண்க. கங்கை நீர் வெண்ணிற முடையது. "கங்கையும்...கூடிய..." (பொன்வ - 90).

இவுளித்துகள் - குதிரைகள் வேகத்திற் செல்லும் போது கிளம்பும் காற்றூசி; குதிரை.

வஞ்சி - சேரனாருடைய தலைநகரம். திருவஞ்சைக்களம் - கொடுங்கோளூர் என்பது (3890 - 3892) பார்க்க. இரண்டும் ஒன்று சேர்த்துக் கூறப்படுவன. 22

## வேறு

4251. ஆரண மொழிகள் முழங்கிட ஆடினர் குணலைக ளந்தணர்
வாரண மதமழை சிந்தின வாசிகள் கிளரொளி பொங்கின
பூரண கலச மலிந்தன பூமழை மகளிர் பொழிந்திடுந்
தோரண மறுகு புகுந்தது தோழர்க ளடலிய குஞ்சரம். உஙு

(இ - ள்) ஆரண...அந்தணர் - வேதப்பதங்களைச் சொல்லும் ஒலி முழங்கியிட வேதியர்கள் குணலைக்கூத் தாடினார்கள்; வாரண...சிந்தின - யானைகள் மழைபோல மதநீர் சொரிந்தன; வாசிகள்...பொங்கின - குதிரைகள் கிளர்ச்சியின் ஒளிகள் வீசின; பூரண...மலிந்தன - நிறை குடங்கள் எங்கும் மலிந்திருந்தன; பூ...குஞ்சரம் – மங்கலப் பெண்கள் பொழியும் பூமழை சிந்துகின்ற தோரண நிறைந்த வீதியினுள்ளே தோழர்கள் ஊர்ந்த யானை புகுந்தது.

(வி - ரை) ஆரண...அந்தணர் - வேதியர்கள் வேதங்களை முழக்கிக் குணலைக் கூத்தாடினர்; குணலை - கைகொட்டி ஆரவாரித்து ஆடும் ஒருவகைக் கூத்து, ஆனந்த மிகுதியால் வருவது. "கும்பிட்டுத் தட்டமிட்டுக் கூத்தாடித் திரியே" (சித்தி).

வாரணம் - வாசிகள் - சேனை வந்தமையால் யானைகளும் குதிரைகளும் நிரம்பியிருந்த நிலை குறித்தது.

பூரணகலசம் - நீர் நிறை குடம் ; மங்கலப் பொருள்களுள் ஒன்று.

தோழர்கள் - சேரலனும் நம்பிகளும் ; நடவிய - நடத்தி ஏவிய; ஊர்ந்த.

மறுகு - வீதி. கடவிய—என்பதும் பாடம்.

இப்பாட்டு முதல் 4 பாட்டுக்களும் எதிர்கொள் மகிழ்ச்சிக்கேற்ற சந்தயாப்பி லமைந்த யாப்பு அமைதியும் கவிநயமும் கண்டுகொள்க. 23

4252. அரிவையர் தெருவி னடம்பயி லணிகிளர் தளிரடி தங்கிய
பரிபுர வொலிகள் கிளர்ந்தன பணைமுர சொலிகள் பரந்தன
சுரிவளை நிரைகள் முரன்றன துணைவர்க ளிருவரும் வந்தணி
விரிதரு பவன நெடுங்கடை விறன்மத கரியி னிழிந்தனர். உச

(இ - ள்) அரிவையர்...கிளர்ந்தன - தெருவிலே ஆடற் பெண்கள் நடம்பயில்கின்ற அணிகள் ஒலிக்கின்ற தளிர்போன்ற பாதங்களில் பொருந்திய சிலம்புகளின் ஒலிகள் மேலெழுந்தோங்கின ; பணை...பரந்தன - பெரிய முரசங்களின் ஒலிகள் பரவியன ; சுரிவளை...முரன்றன - சுழியுடைய சங்குக் கூட்டங்கள் வரிசைகளாக ஒலித்தன ; துணைவர்கள்...இழிந்தனர் - தோழர்கள் இருவரும் வந்து அழகுவிரிந்த அரண்மனையில் நீண்டவாயிலில் தாம் செலுத்திவந்த வல்லமைமிக்க யானையினின்றும் இறங்கினர்.

(வி - ரை) தெருவில் அரிவையர் நடம்பயில் என்க.

அடிதங்கிய - அடியில் அணிந்த ; பரிபுரம் - சிலம்பு.

பணைமுரசு - பெரிய முரசங்கள் ; முரசு விசேடம் என்றலுமாம். கூட்டமாகிய என்பதும் பொருந்தும். பணை - பண்ணை ; கூட்டம்.

சுரிவளை - சுரி - உள்ளே சுழிகளை உடைய ; முரலுதல் - சத்தித்தல்.

வந்து - இழிந்தனர் - என்று கூட்டுக.

அணி விரிதரு பவனம் - அணிவகைகள் பெருகும் ; அணி - அலங்கார வகை ; பவனம் - அரண்மனை ; கடை - வாயில்.

முன்முறை நம்பிகள் எழுந்தருளியது முதல்முறை ஆதலின் திருவஞ்சைக்களத்துக்கு அழைத்துச் செல்லப்பட்டுப் பின் அரண்மனையடைந்தனர். இம்முறை நேரே அரண்மனை வாயிலுக்கு வந்தனர். முன்முறை சேரனார் அழைத்து வந்தமையும் கருதுக. 24

4253. தூநறு மலர்தர ளப்பொரி தூவிமு னிருபுடை யின்கணும்
நான்மறை முனிவர்கண் மங்கல நாமநன் மொழிகள் விளம்பிட
மேனிறை நிழல்செய வெண்குடை வீசிய கவரி மருங்குற
வானவர் தலைவரு நண்பரு மாளிகை நடுவு புகுந்தனர். உரு

(இ - ள்) தூநறும்...தூவி - தூய மணமுடைய மலர்களையும் முத்துக்களையும் பொரியினையும் கலந்து தூவி ; முன்...விளம்பிட - முன்னே இரண்டு பக்கங்களிலும் நான்மறைகளும் வல்ல முனிவர்கள் மங்கலமுடைய நன்மொழிகளைச் சொல்ல ; மேல்நிறை...குடை - மேலே வெண் கொற்றக்குடை நிறைந்த நிழல் பரப்ப ; வீசிய கவரி மருங்குற - வீசப்படும் சாமரைகள் பக்கங்களிற் பொருந்த ; வானவர் தலைவரும்...புகுந்தனர் — சேரனாரும் அவரது தோழராகிய நம்பிகளும் அரண்மனையின் நடுவுட் புகுந்தருளினர்.

(வி - ரை) முன் 4250-ம் பாட்டில் இருவரும் யானைமிசைதேறிவரத் தொடங்கியதுமுதல் நகர்வாயிலை யடையும்வரை உள்ள சிறப்புக் கூறினர்; நகர்வாயிலினின்றும் நகரத்தின் பல தெருவுகளையும் தாண்டி அரசர் தெருவு புகும்வரை உள்ள சிறப்பினை மேல் (4251) ஒரு பாட்டாலும், அரசர் தெருவினூடுவந்து திருமாளிகை வாயிலை அணைந்தவரை உள்ள சிறப்பு (4252) ஒரு பாட்டாலும் உரைக்கப்பட்டன; இப்பாட்டில் அரண்மனையினுள் புகும் சிறப்புக் கூறுகின்ற அமைதி கண்டுகொள்க.

நான்மறை ..விளம்பிட - இவை அரண்மனையினுட் புகும்போது மறைமுனிவர்கள் நம்பிகளைப் பல மங்கல மொழிகளால் அவர் பெயரைக் கூறி வாழ்த்தியவை.

முன் "ஆரண மொழிகள் ..அந்தணர்" - (4251) என்றது வேத மொழிகளுடன் நம்பிகளை நகரவாயிலின் குதூகலத்துடன் அந்தணர் எதிர்கொண்டு தெருவில் உடன் போந்த நிலை. முன் ஆரண மொழிகள் என்றும், இங்கு மங்கல நாம நன்மொழிகள் என்றும் கூறியது காண்க. நாமங்களைப் பற்றி (332)ம் பிறவும் பார்க்க.

தூநறுமலர் தரளம் பொரி - இவற்றைக் கலந்து முன் தூவி வாழ்த்துதல் மங்கல வரவேற்பு மரபு. தரளம் - முத்துக்கள் மலைநாட்டில் மிக உளவாதும் நிலைபற்றி முன் விறன்மிண்ட நாயனார் புராணத்துள் "வாரி சொரியுங் கதிர்முத்தம்" (692) என்ற திருப்பாட்டில் மலைநாட்டுச் சிறப்புக் கூறும் வகையால் ஆசிரியர் கூறியருளியதும், ஆண்டுரைத்தவையும் பார்க்க. மணிகளுள்ளே சிறப்புடைமை பற்றியும், அந்நாட்டின் சிறந்தெய்தும் நிலை பற்றியும் பெரியோர்களை வாழ்த்தி வரவேற்கும்போது மணிகளையும் மலர்களையும் தூவும் நிலைபற்றியும், இங்கு முத்துக்களைத் தூவுதல் கூறப்பட்டது. திருவாரூர்த் தியாகேசப் பெருமானாரது எழுச்சியில் பொற்பூக்களைக் கலந்து தூவுதல் இன்றும் காண நிகழும் காட்சியாகும்.

இருபுடையின்கணும் - நம்பிகளும் சேரலனும் திருமாளிகையின் நடுவட்புகும் போது மறைமுனிவர்கள் இருபுறமும் அணிவகுத்தாற்போல் நின்று மலர் முதலியன தூவி நம்பிகளது பெயர்களைக் கூறி வாழ்த்தினர் என்பது.

மேல் வெண்குடை நிறை நிழல் செய - என்க; கவரி வீசி என்றது வீசிய கவரி என்றது கவரிகள் தனித்துத் தோன்றாது அவை இடைவிடாது வீசப்படுநிலையே காணப்பட்டது என்றதாம்; வீசிய - வீசப்பட்ட எனச் செயப்பாட்டு வினைப் பொருளில் வந்தது. இவ்வாறு குடைகவித்தும் கவரி வீசியும் விளக்கேந்தியும் கோயில்களிலும் மாளிகைகளிலும் செல்லும் நிலை இன்றும் மலைநாட்டில் நிகழ்வது காணலாம்; மருங்குற - கவரிகள் (சாமரைகள்) இரண்டு பக்கங்களில் நின்று வீசப் பெறுவன.

வானவர் தலைவர் - சேரனார்; சேரர்களுக்கு வானவரம்பர் என்று பெயர் கூறுதல் மரபும் வழக்குமாம். "பெருவானவ ரம்பனார்" (3904). நண்பர் - நம்பிகள்; "சேரமான் றோழர்" 3813 பார்க்க; மாளிகை - அரண்மனை.

இருபுடை எங்கணும்—என்பதும் பாடம். 25

4254. அரியணை யதனில் விளங்கிட வடன்மழ விடையெனு நம்பியை
வரிமல ரமளி யமர்ந்திட மலையர்க டலைவர் பணிந்துபின்
உரிமைநல் வினைகள் புரிந்தன வுரைமுடி விலவென முன்செய்து
பரிசன மனமகி ழும்படி பலபட மணிநிதி சிந்தினர். உ௬

(இ - ள்) அரியணை...பணிந்தபின் - நம்பிகளைச் சிங்காசனத்தில் வண்டுகள் மொய்த்த மலர்கள் பரப்பிய பூந்தவிசிலே வல்லமையுடைய விடைபோல விளக்கம் பொருந்த வீற்றிருக்கும்படி மலைநாட்டவர்களுக்கு அரசராகிய சேரனார் வணங்கி

வேண்டிக்கொண்டு அதன்பின்னர் ; உரிமை...முன் செய்து - விரும்பியனவாகிய நல்ல பூசைகளைச் சொல்லளவிலடங்காதன என்னும்படி முன்னே செய்து ; பரிசனம்... சிந்தினர் - பரிசனத்தவர்கள் மனம் மகிழும்படி பலவாறாக மணிகளை வாரி வழங்கினர்.

(வி - ரை) அரியணையதனில் - விடை என - விளங்கிட - அமர்ந்திட - நம்பியைத் - தலைவர் - பணிந்து - என்று கூட்டுக ; அரியணை - சிங்காதனம் ; அரியணை மீதிருத்துதல் முன்னரும் (3897) காண்க. சிங்கக்கால்கள் போல அமைப்புடையவை.

விடை என விளங்கிட - வீரமும், வெற்றிப்பாடும், இளமையும் என இவை மிக்குயர்ந்த தோற்றங் குறிக்க விடை என என்றார். "வென்றி யடல்விடை போனடந்து" (275) ; விடை என-விடையிற் போல இறைவர் விளங்கி இருக்குமிடமாக என்பதும் குறிப்பு ; இருத்தற்கிடமாதல் சிவராசயோகத்தினாலே தமது திருமேனியை யிடமாகக் கொண்டு சிவம் விளங்கப் பெறுதல் ; " வடிவு நம்பி யாரூர் செம்பொன் மேனி வனப்பாக...சிவபோக முதிர்ந்து முடுகி விளைந்ததால்" (4230) ; விடையினது இப் பெருமை பற்றிச் " சடையார் தேவர்கடம் பிராட்டி யுடனே சேரமிசைக், கொள்ளுஞ் சினமால் விடைத் தேவர் குலம்" (1227) என்றதும், பிறவும் பார்க்க. விளங்கிட என்ற குறிப்புமிது ; நம்பிகள் எழுந்தருளி யமர்ந்ததனைச் சிவம் - விளங்குவதாகவே நாங்கள் காண என்பதாம். மலையர் - மலைநாட்டவர்கள்.

மலரமளி - அரியணைமீது அமைத்த பூந்தவிசு (மலராசனம்).

நல்வினைகள்-பாதம் விளக்கல், புகை-விளக்கு ஏந்துதல், முதலிய பூசைவகைகள். (3898 - 3899).

புரிந்தன வாகிய - உரிமை நல் வினைகள் என்க. புரிதல் - விரும்புதல் ; முன்னர்ப் புரிந்த - செய்த - என்றலுமாம். உரிமை - செய்தற்குரிமை. (3898).

உரை முடிவில என - முன்னர் விரித்துக்கூறியமையால் இவ்வாறு சுட்டிக் கூறி, அதனினும் மேலாக என்று கொள்ளவைத்தார்.

பரிசனம் - இருபாலும் உள்ள பரிசனங்களும். பரிசனம் மனமகிழும்படி...சிந்தினர் என்றனர், சிந்திய மணி நிதிகளைக் கொண்டு மகிழ்வோர் அவரேயாகலான். அவ்வாறு சிந்திய மணிநிதிகளை வேறு எவரும் கொள்ளும் நிலையின்மையும் குறிப்பித்தவாறு. மணிநிதி - உம்மைத் தொகை.

பலபட - பல திறப்படவும், நிறைவாகவும் ; சிந்துதல் - வாரி யிறைத்தல்.

பலபடி என்பதும்—பாடம். 26

வேறு

4255. இன்ன தன்மையி லுதியர்க டலைவர்தா மிடர்கெட முனைப்பாடி
மன்னர் தம்முடன் மகிழ்ந்தினி துறைபுநாண் மலைநெடுநாட்டெங்கும்
பன்ன கம்புனை பரமர்தந் திருப்பதி பலவுடன் பணிந்தேத்திப்
பொன்னெ டுந்தட மூதெயின் மகோதையிற் புகுந்தனர் வன்றொண்டர்.

(இ - ள்) இன்ன தன்மையில்...உறையுநாள் - இவ்வாறாகிய தன்மையில் சோர்வுதது அரசராகிய சேரலனார் இடர் நீங்கும்படி முனைப்பாடி நாட்டின் அரசராகிய நம்பிகளுடனே மகிழ்ச்சியுடன் இனிமையாகக் கூடியிருக்கும் நாள்களில் ; வன்றொண்டர் - நம்பிகள் ; மலைநெடு...ஏத்தி - நீண்ட மலைநாட்டில் எங்கெங்கும் முன்ன, பாம்பினைப் புனைந்த இறைவனார் எழுந்தருளிய திருப்பதிகள் பலவற்றையும்

சேரலனுருடனே கூட அணைந்து பணிந்துதித்து; பொன்னெடும்...புகுந்தனர் - பொன்புனைந்த நீண்ட பெரிய மதில் சூழ்ந்த மகோதை நகரினுள்ளே வந்து புகுந்தருளினர்.

(வி - ரை) இன்னதன்மை - முன்பாட்டிற் கூறியவாறு உபசரிக்கப்பட்ட நிலை.

இடர்கெட - ஏத்தி - என்றது இந்த இரண்டு பெருமக்களும் மலைநாட்டுப் பதிகளைச் சென்று பணிந்து ஏத்தியதனால் உலகம் இடர் நீங்கி உய்தி பெற்றது என்றதாம். "மாதவஞ்செய்த தென்றிசை வாழ்ந்திடப் - போதுவார்" (35) என்றதும், ஆண்டுரைத்தவையும் பார்க்க; உலகமுய்ந்திட என்க. இவர்களுடைய பாவனை நோக்கம் முதலியவற்றால் வரும் நன்மைகளாற் றுன்ப நீங்க என்பதாம்.

மலை...பதிபல - இவை திருச்சிவப்பேரூர் விடைக்குன்று நாதேச்சரம் (திருச்சூர் - Trichur எனப் பிழைபட மருவி வழங்குவது); வைக்கம் (கரன் பூசித்தது); திருச்செங்குன்றூர் (விறன்மிண்ட நாயனாரது பதி); சுசீந்திரம் (திருவிதாங்கூர் சீமை) முதலாயின என்பது கருதப்படும்.

உடன் - சேரலனுருடன் கூடி. விரைவாக - அன்புடனே - என்றலுமாம்.

மகோதை - சேர அரசர் தலைநகர், அஞ்சைக்களம் - கொடுங்கோளூர்; "மகோதை யணியார் பொழி லஞ்சைக் களம்" (தேவா) (3751) பார்க்க.

வன்றொண்டர் ஏத்திப் புகுந்தனர் - என்க. சேரலனார் நம்பிகளைப் பின்பற்றி நீங்கா நிழல்போல உடன் சென்றமையால் சிறப்புப்பற்றி வன்றொண்டர் புகுந்தனர் என அவரொருவரது தொழிலாக உரைத்தருளினர். உடன் - ஏத்திப் - புகுந்தனர். 27

4256. ஆய செய்கையி னுள்பல கழிந்தபி னரசர்கண் முதற்சேரர்
தூய மஞ்சனத் தொழிலினிற் றொடங்கிடத் துணைவராம் வ
பாய கங்கைசூழ் நெடுஞ்சடைப் பரமரைப் பண்டுதாம் பிரிந்தெய்துஞ்
சேய நன்னெறி குறுகிடக் குறுகினார் திருவஞ்சைக் களந்தன்னில். ௨௮

(இ - ள்) ஆய...பின் - முன் கூறியவாறு ஆகிய செயலிலே பல நாட்கள் கழிந்தபின் (ஒரு நாள்); அரசர்கள்...தொடங்கிட - (முடியுடை மூவேந்தர்களுள்) முதலில் வைத்தெண்ணப்படும் சேரலனார் தூய திருமஞ்சனம் செய்தருளும் தொழிலில் தொடங்கியிட; துணைவராம் வன்றொண்டர் - அவரது தோழனாராகிய வன்றொண்டர்; பாய...குறுகிட - பரவிய கங்கையினைச் சூழ்ந்து முடித்த நீண்ட சடையினையுடைய சிவபெருமானை முன்னை நிலையிற் றாம் பிரிந்து போந்து இவ்வுலகில் வந்த தூரமாகிய நல்ல நெறியானது முடியும் எல்லை வர; திருவஞ்சைக்களந்தன்னிற் குறுகினார் - திருவஞ்சைக்களத்தில் அணைந்தனர்.

(வி - ரை) ஆய - முன் பாட்டிற் கூறியவாறு ஆகிய; ஆய - ஆக்கமுடைய என்ற குறிப்புமாம்.

கழிந்த பின் - கழிந்த பின்னர் ஒருநாள்; ஒருநாள் என்பது இசையெச்சம்.

அரசர்கள் முதற் சேரர் - மூவேந்தர்களை எண்ணும்போது சேர சோழ பாண்டியர் என்று முறைப்படுத்தி முதலிற் சொல்லவரும் சேரர்; இவ்வாறன்றி அரசர்களுள் மேம்பட்ட என்றலுமாம்.

மஞ்சனத் தொழில் - நீராடும் செயல்.

மஞ்சனத் தொழில் தொடங்கிட வன்றொண்டர் - திருவஞ்சைக்களந்தன்னில் - குறுகினார் - என்க; பதிவழிபாட்டு நிலைகளின்போது முன்னரெல்லாம் சேரனார்

ங்க நின்றது கண்டும், நம்பிகள், அன்று அவரைப் பிரிந்து, அவர் திருமஞ்சனத் தொழில் தொடங்கிடும்போதே தாம் தனித்துத் திருவஞ்சைக்களத் திற் சென்றருளினர். அதன் காரணம் என்னையோ? என வரும் ஐயப் பாட்டினை நீக்குதற்குப் "பரமரைப் பண்டுதாம் பிரிந்தெய்துஞ், சேய நன்னெறி குறுகிட" என்றருளி, அதன் மேல் திருவஞ்சைக்களஞ் சார்தலைக் கூறுகின்ற அருட் கவிநயம் காண்க. இறைவரைத் தாம் பிரிந்து போந்த நிலை நீங்கிச் செல்கின்ற காலம் அணித் தாயினமையால் இவ்வாறு தமது தோழனாரைப் பிரிந்து போந்தனர் என்பது.

மஞ்சனத் தொழில் - நீராடுதல்; பெரியோர்கள் அரசர்கள் முதலாயினவர் நீராடுதலை இவ்வாறு கூறுதல் மரபு; பெருமடங்களில் இன்றும் இவ்வழக்குக் காண லாம்; இறைவரது திருமுழுக்கினைத் திருமஞ்சனம் என்றும், திருமுழுக்குக்குரிய நீரினைத் திருமஞ்சன நீர் என்றும் கூறும் மரபு இன்றியமையாத வழக்கு; மற்றும் பெரியோர்களைப் பற்றிக் கூறுதல் இறைவரோடொப்ப எண்ணும் முறை பற்றிய உபசார வழக்கு.

துணைவராம் - வன்றொண்டர் - குறுகிடக் குறுகினார் - இணைபிரியாத துணைவரா யிருந்தும் பிரிந்து குறுகினார்; (அதற்குக் காரணம் குறுகிடலாலாவது என்றபடி) துணை வராம் - என்றது பிரியாத் துணைவராயிருந்தும் என்ற குறிப்புடன் நின்றது.

துணைவர் ஆம் - ஆம் - ஆகும்; துணைவராதலின் பின்னர், அவரை (தோழரை - சேரரை) இறைவர்பால் அணைவிக்கும் தன்மையராகும் என்ற குறிப்பும் காண்க. "உவப்பத் தலைக்கூடி உள்ளப் பிரிதல்" என்ற திருக்குறட் கருத்தும் ஈண்டு நினைவு கூர்தற்பாலது.

பாய - பரவிய - நிரம்பிய; கங்கைசூழ் - கங்கையினைக் கரை போலச் சூழ்ந்து

சூழ் - கங்கை உள் நிரம்பிய என்

றுரைத்தனர் முன் உரைகாரர்.

நெடுஞ்சடை - நெடுமையாவது ஆயிர முகத்தாலும் பரவி எழுந்த கங்கைப் பெரு நீரினை அடக்கி முடிக்கு மளவு நீளுதல்.

பரமரை...நன்னெறி - திருமலைச் சிறப்பிற் கூறிய வரலாறு; (31 – 39).

சேய – சேய்மையாகிய; செம்மைதரும் ஞானநெறி என்றலுமாம். செம்மை - சிவத்தன்மை; நன்னெறி - என்ற குறிப்புமது.

குறுகிடுதல் - தீரும் - முடியும் - எல்லை அணித்தாதல்; சேய்மை குறுகுதல்; "தடுத்த செய்கைதான் முடிந்திட" (4260) என மேல் இதனை விளக்குதல் காண்க. எய்தும் - கூடும் நெறி; குறுகிட - சார என்றுரைத்தலுமாம். 28

4257. கரிய கண்டர்தங் கோயிலை வலங்கொண்டு காதலாற் பெருகன்பு
புரியு முள்ளத்த ருள்ளணைந் திறைவர்தம் பூங்கழ லிணைபோற்றி
அரிய செய்கையி லவனியில் விழுந்தெழுந் தலைப்புறும் மனைவாழ்க்கை
சரிய வே"தலைக் குத்தலை மாலை"யென் றெடுத்தனர் தமிழ்மாலை. உகூ

(இ - ள்) கரிய...வலங்கொண்டு - நீலகண்டரது கோயிலினை வலமாகச் சுற்றி வந்து; காதலாற் பெருகன்பு புரியும் உள்ளத்தார் - பெருவிருப்ப மிக்கோங்குதலாற் பெருகிய அன்பு நிலையே சிந்தையினை முழுதும் இடங்கொள்ளப் பெற்றவராகிய நம்பிகள்; உள் அணைந்து...போற்றி - உள்ளே சேர்ந்து இறைவரது பூப்போன்ற திருவடிகளிரண்டினையும் துதித்து; அரிய...எழுந்து - அருமையாகிய செயலினாலே நிலமிசை விழுந்து எழுந்து; அலைப்புறும்...தமிழ்மாலை - அலைத்தல் பொருந்திய

இவ்வுலகத்து மனை வாழ்க்கை தம்மைவிட்டு நீங்கி ஒதுங்கி யிடவே " தலைக்குத் தலை மாலை " என்று தமிழ் மாலையாகிய திருப்பதிகத்தினைத் தொடங்கினர்.

(வி - ரை) காதலால்...உள்ளத்தார்-இஃது அன்று கோயிலை வலங்கொண்ட பின் உள்ளணையும்போது நம்பிகளது மனநிலை, புரியும் உள்ளத்தர் - இடைவிடாத நினைப்பினாலே உள்ள முழுதும் விழுங்கிய நிலையினர் ; " ஒன்று சிந்தைநம் மூரன் " (4260) என்பது காண்க.

போற்றி - பலவாறும் துதித்து ; இஃது இறைவாது புகழ்களைக் கீதம் முதலியவற்றால் எடுத்துச் சொல்லி வணங்குதல். பதிகம் பாடுதல் வேறு; அது மேல் வருதல் காண்க.

அரிய செய்கையில் - செய்தற்கரிய தன்மையில் நின்று ; இவ்வுலக வாழ்விலே தமக்குப் பெரிதும் அன்புடைய தேவிமாரிருவாது இன்பமும், முடியுடை மன்னராகிய சேரனாது அரசச் செல்வ வாழ்வும், "இறைகளோ டிசைந்த இன்பமும், இன்பத்தோடிசைந்த வாழ்வும்", இறைவாது அருட் பெருஞ் செல்வமும் நிறைந்திருக்கப் பெற்ற நம்பிகள் அத்தகைய இவ்வுலக மனை வாழ்க்கையினை வெறுத்து முத்தி விண்ணப்பம் செய்ய வருகின்றாராதலின் அக்குறிப்புப்பட "அரிய செய்கையில்" என்றார். " செயற்கரிய செய்வார் பெரியர் " (குறள்).

அலைப்புறும் - அலைத்தலைப் பொருந்திய ; அலைத்தலாவது இன்பத் துன்பங்களுக்கும் அவை காரணமாக விருப்ப வெறுப்புக்களுக்கும், அவற்றால் மீள மீளப் பிறவிக்கும், அதனால் சென்று சென்று வரும் அலைச்சலுக்கும், காரணமாதல்.

மனைவாழ்க்கை சரியவே - சரிதல் – தாமாகவே கழன்று விடுதல் ; ' உறங்கினேன் கை வெறும்பாக் கௌ'ப் பற்றுவிட்டொழிதல். மனைவாழ்க்கை – இங்கு இல்வாழ்க்கையை உள்ளிட்ட இவ்வுலக வாழ்வு முழுதினையும் உணர்த்தி நின்றது ; இது பதிகத்தின் உட்குறிப்பு. மேற்பாட்டும், பதிகம் 8-வது பாட்டும் பார்க்க. சரியவே - சரிந்திடற்பொருட்டே. சரிதலாலே என்றலுமாம்.

தலைக்குத் தலைமாலை என்று - இது பதிகத் தொடக்கமாகிய முதற் குறிப்பு. எடுத்தல் - தொடங்குதல். 29

4258. எடுத்த வத்திருப் பதிகத்தி னுட்குறிப் " பிவ்வுல கினிற்பாசம்
அடுத்த வாழ்க்கையை யறுத்திட வேண்டு"மென் றன்பரன் பினிற்
கடுத்த தும்பிய கண்டர்தங் கயிலையிற் கணத்தவ ருடன்கூடத்[பாடச்,
தடுத்த செய்கைதான் முடிந்திடத் தங்கழற் சார்புதந் தளிக்கின்றார் ;

4259. மன்ற லந்தரு மிடைந்தபூங் கயிலையில் மலைவல்லி யுடன்கூட
வென்றி வெள்விடைப் பாகர்தாம் வீற்றிருந் தருளிய பொழுதின்கண்
" ஒன்று சிந்தைநம் மூரனை யும்பர்வெள் ளானையி னுடனேற்றிச்
சென்று கொண்டிங்கு வாரு"மென் றயன்முற் றேவர்கட் கருள்
[செய்தான்.

4258. (இ - ள்) எடுத்த...என்று - அவ்வாறு தொடங்கிய அந்தத் திருப்பதிகத்தின் உட்குறிப்பு இந்த உலகத்திற் பாசத் தொடக்குள்ள வாழ்க்கையினை அறுத்திட வேண்டு மென்று கொண்டு ; அன்பர்...பாட - அன்பராகிய நம்பிகள் அன்பு மிகுதியுடன் பாடியிட ; கடுத்ததும்பிய கண்டர் - விடம் மிக்கு விளங்கும் கழுத்

தினையுடைய இறைவர் ; தம் கயிலையில்...கூட - தமது திருக்கயிலையில் சிவகணத்தவர்களுடன் கூட இருக்கும்படி ; தடுத்த...முடிந்திட - முன்னர்த் தடுத்து உலகில் அவதரிக்கும்படி ஆணையிட்ட செய்கையின் அளவு தீர்ந்திட; தங்கழல்...அளிக்கின்றார்- தமது திருவடிச் சார்பினைத் தந்தருள்கின்றாராகி ; ௩௦

4259. (இ - ள்) மன்றல்...பொழுதின் கண் - மணமுடைய அழகிய மாங்கள் நெருங்கிய பூங்கயிலாயத்தில் மலைவல்லியாருடனே கூட வெற்றி பொருந்திய வெள்ளிய இடபத்தின் பாகர் எழுந்தருளியிருந்த பொழுது; ஒன்று...அருள்செய்தார்- நம்முடன் ஒன்றிச்த சிந்தையினை யுடைய நமது நம்பியாரூரனைத், தேவருடைய வெள்ளானையுடன் சென்று அதன் மீது எற்றிக் கொண்டு இங்கு வாருங்கள் என்று பிரமன் முதலாகிய தேவர்களுக்குக் கட்டளை யிட்டருளிச் செய்தார். ௩௧

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

4258. (வி - ரை) உட்கூறிப்பு - பதிகம் பாடும் திருவுள்ளக் குறிப்பு. கருதிய பொருள் ; உட்கிடையாகிய விண்ணப்பம்.

உலகினில் பாசம் - உலகில் வருதற் கேதுவாகிய தொடக்கு ; அடுத்த - பாசத்தால் பொருந்திய ;

கணத்தவருடன் கூடக்-கழற் சார்புதந்து-கூடுதற் கேதுவாகிய திருவடிச்சார்பு.

தடுத்த செய்கை-முன்கணத்தவருடன் கூடியிருந்ததனைத் தடுத்த ஆணை; "மாதர் மேன்மனம் வைத்தனை தென்புவி, மீது தோன்றி...அணைவாய்" (37) என்ற செய்கை; முடிந்திடுதல் - எல்லையறுதல்; " குறுகிட " (4256) என்ற கருத்து; முடிந்திட - முடிந்திடுதலால்.

கழற்சார்பு - கழலை நீங்காது சார்ந்திருக்கும் நிலை ; அளிக்கின்றார்-முற்றெச்சம். அளிக்கின்றாராகிப் - பொழுதின்கண் - அருள்செய்தார்—என மேல் வரும் பாட்டுடன் முடிக்க. 30

4259. (வி - ரை) பொழுதின் கண் - விடையின்மீது மலைவல்லியுடன் கூட இருந்து அருள் செய்தார். இஃது அடியார்களுக் கருளும் நிலை.

ஒன்று சிந்தை - சிவராச யோகத்தால் இரண்டற்றுத் தம்மையே மனத்துட் கொண்ட நிலை; " ஒன்றி யிருந்து நினைமின்கள் " (தேவா); " காதலாற் பெருகன்பு புரியு முன்னைத்தார் " (4259).

உம்பர் வெள்ளானை-தேவருலகத்துள்ள வெள்ளையானை ; இந்திரனது ஐராவதம் என்பது. அதுவன்று, கயிலையிலுள்ள ஐராவணம் என்பாருமுண்டு. ஊரன் - நம்பியாரூரன். உம்பர் - உவ்விடத்துள்ள என்றலுமாம்.

உடன் ஏற்றிக்கொண்டு-உடன் சென்று அதன் மிசை எற்றிக்கொண்டு ; சென்று அதன் மிசை என்பது இசை எச்சம்.

கொண்டுவாரும் - அழைத்துக் கொண்டு வாருங்கள்.

அருள் செய்தல் - கட்டளை யிடுதல். 31

திருவஞ்சைக்களம்.

திருச்சிற்றம்பலம் பண் - இந்தளம்

தலைக்குத் தலைமாலை யணிந்த தென்னே
சடைமேற் கங்கைவெள்ளந் தரித்த தென்னே
அலைக்கும் புலித்தோல்கொண் டசைத்த தென்னே
யதன்மேற் கதநாகக்கச் சார்த்த தென்னே

மலைக்குந் நிகரொப் பனவன் றிரைகள்
வலித்தெற் றிமுழங் கிவலம் புரிகொண்
டலைக்குங் கடலங் கரைமேன் மகோதை
யணியார் பொழிலஞ் சைக்களத் தப்பனே. (1)

வெறுத்தேன் மனைவாழ்க் கையைவிட் டொழிந்தேன்
விளங்குங் குழைக்கா துடைவே தியனே
இறுத்தா யிலங்கைக் கிறையா யவனைத்
தலைபத் தொடுதோள் பலவிற் றுவிழக்
கறுத்தாய் கடனஞ் சமுதுண்டு கண்டங்
கடுகப் பிரமன் றலையைந் திலுமொன்
றறுத்தாய் கடலங் கரைமேன் மகோதை
யணியார் பொழிலஞ் சைக்களத் தப்பனே. (8)

எந்தம் மடிக ளிமையோர் பெருமா
னெனக்கென் றுமளிக் குமணி மிடற்றன்
அந்தண் கடலங் கரைமேன் மகோதை
யணியார் பொழிலஞ் சைக்களத் தப்பனை
மந்தம் முழவு குழலும் மியம்பும்
வளர்நா வலர்கோ னம்பியூ ரன்சொன்ன
சந்தம் மிகுதண் டமிழ்மா லைகள்கொண்
டடிவீழ வல்லார் தடுமாற் றிலரே. (10)

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—" அத்திருப்பதிகத்தினுட் குறிப்பு, இவ்வுலகினிற் பாசம் அடுத்த வாழ்க்கையை அறுத்திட வேண்டும்" என்று விண்ணப்பித்து என்பது ஆசிரியர் காட்டியவாறு (4258).

பதிகப் பாட்டுக் குறிப்பு :—குறிப்பு : " என்னே ?" என்று இப்பாட்டிலும் மேல்வரும் 2–5–6லும் வரும் வினாக்கள் இறைவரது தன்மைகளை எடுத்துப் பன்னிக்கூறி, இறைவரையே முன்னிலைப்படுத்தி, அறியார்போன்று வினவுதல் குறித்தன. ஆளுடைய பிள்ளையாரது திருவலஞ்சுழி - பண் இந்தளம் - " விண்டெலா மலரா " என்ற வினாவுரைத் திருப்பதிகம் பார்க்க ; இவ்வாறே இறைவரது புகழ்களை எடுத்துக்கூறி, "அருத்தனைத்திற மடியர் பால்மிகக் கேட்டு கந்த வினாவுரை" யாக அமைந்த, ஆளுடைய பிள்ளையாரது, பண் - கொல்லி - திருக்கண்டியூர்த் திருப்பதிகமும், ஆளுடைய அரசுகளது திருவினாத் திருத்தாண்டகத் திருப்பதிகமும், பிறவும் இங்குக் கருதி ஒப்பு நோக்கற்பாலன. அவை அடியாரை முன்னிலைப் படுத்தி வினவியவாற்றால் அமைந்தன.—(1) தலைக்குத் தலைமாலை – தலைக்கணியாக ; " தலைமாலை தலைக்கணிந்து " (அரசு - அங்கமாலை) ; இஃது திருவஞ்சைக்களத்தப் பாது சிவக்குறியிற் காணும் சிறப்பாகிய அடையாளம் ; சிவமூல லிங்கத்தின் திருமுடியின்மேல் பின்னும் ஒருபுறம் புடைப்பாகிய தொரு திருவடையாளங் கூர்ந்து நோக்கினாற் காணலாம் ; அதனையே தலைக்கு தலைமாலை என்றருளியபடி ; முன்னர் இத்தலத்திற் பாடியருளியதாக, ஆசிரியர் அறிவிக்க நாம் அறியும், மற்றொரு பதிகத்துள் " முடிப்பது கங்கை " என்று கூறிய கருத்தும் இது. மேல் " சடைமேற்

கங்கை வெள்ளந் தரித்ததென்னே?" என்பதும் முன் பதிகக் கருத்தும் இதுவே யாதலை விளக்குவது; அசைத்தது - உடையாகக் கட்டியது; கச்சு - உடையினை நெகிழ விடாமல் மேற்கட்டும் உடைவகை; அதன் மேல் என்றது காண்க; வலித்தேற்றி - மிக்க ஆர்ப்புடன் மோதி; வலம்புரி - சங்கு; கடல்படு பண்டம்; அலைத்தல் - வீசிப்பரவுதல்; கடலங் கரைமேல் - மகோதை கடற்கரையில் உள்ள பட்டினம்; உததி - கடல்; அஞ்சைக்களம் - மகோதையின் தொடர்புடைய ஒரு பகுதி அஞ்சைக்களம் என்பது; அஞ்சைக்களத் தப்பன் - தலச்சுவாமி பெயர்; திருகயிலாயபதிக்கு வேறு பெயரின்றித் தலத்தினை ஒட்டி அதன் பதி - (அப்பன்) என்று வழங்குதல்போல் இங்கும் தலத்தினை ஒட்டி அதன் "அப்பன்" என வழங்கும் சிறப்புக் காண்க. அம்மையும் "உமை" எனப்படுதலுங் காண்க; அணியார் பொழில் - இச்சிறப்பும் கடற்கரைச் சிறப்பும் இன்றுங் காண உள்ளது; கடல் - மேல்கடல்; அங்கரை - கரையின் அழகிய அமைதி குறித்தது.—(2) பொடி - திருநீறு; புகர் ஏறு - ஒளியும் அழகுமுள்ள இடபம்; மடித்து ஓட்டந்து - உயர்ந்து சுருண்டு ஓடி; ஓட்டந்தந்து என்றது ஓட்டந்து என நின்றது; சங்கம் அங்காந்து முத்தஞ் சொரிய - சங்குகள் வாய்திறந்து முத்துக்களைச் சொரிய;—(3) நெல்லிக்கனி - "அங்கையி னெல்லிக் கனியெனக் காயினன்" (திருவா); "காத லாமல கக் கனி யொக்குமே" (குறுந்); கையிலேந்தி நோக்க உள்ளிருக்கும் விதையின் வரைகளை வெளியில் நெல்லிக்கனி வரைகளாற் தெரியக் காட்டுதல் போலச் சிந்தித்தெழுவார்க்கு வெளிப்படக் காணப்படுபவன்; சிறியார் - பெரியார் - சிறியாராயினும் பெரியாராயினும்; மனத்தேறலுறுதல் - மனத்துள் இடைவிடாது தெளிய வைத்தல்; முந்தி - முற்பட்டு; சிறியார்...பிறவார் - சிறியாரேனும் பெரியாரேனும் மனத்துள் ஏறவைத்தாராயின் முற்படத் தொழுவார்கள்; அதனால் அவர்கள் இறவார்; இறந்தாராயினும் இனிப்பிறவார்; இப்போது பிறப்பு நேர்ந்துவிட்டதாதலின் அடுத்துவரும் இறப்பு நிகழாது என்ற குறிப்புத்தர் இறவார் என்பதனை முதலில் வைத்தார். ஒருவேளை இறப்பு நிகழினும் இனிப்பிறவார் என்பதாம்; இறவா திருத்தலாவது சிவன் முத்தராய் நிலைத்தல்; இனிமேல் நிகழும் சரித வரலாற்றின் படி நம்பிகளும் சேரனும் இறவாதிருக்கப் பெறும் நிலைகளைக் கருதுக; முனிகள் - முனிகளுக்கு; சந்தி...வரை - மலைகள் கூடுமிடம்; தணியாமையர்வது பேரலைகள் கரையிற் சேர்ந்து மோதும்போது ஏனைக்கரைகளிற் போல உயரமும் விசையும் குறையாமை. அந்தித்தலை - தலை - ஏழனுருபு; அந்தியின் கண்; வானே - ஏகாரம் தேற்றம்; மேல்வரும் பாட்டில் வரும் உயிரே - இலையே - உளையே - புயலே - குடியே - என்ற ஏகாரங்களு மிவ்வாறே கொள்க;—(4) இழைக்கும் — ஒலிக்கும்; இழைத்தல் — செய்தல்; இங்கு ஒலித்தல் செய்யும் என்க; வரைதலுமாம்; உயிரே - இங்கு உயிர்களுள்ளும் உயிர் எழுத்தாய் நிற்கும் அகரத்தைக் குறித்து நின்றது. உயிர்க்குயிராதற் றன்மை குறிப்பு; இழைக்கும் எழுத்து என்ற கருத்துமிது; ஒத்தி - ஒப்பாயிருக்கின்றாய்; இலையே ஒத்தி - உளையே ஒத்தி - காணக் கிடையாமையால் இல்லாதவன் போலவும், கருதப் பெறவருதலின் உள்ளவன் போலவும், உள்ளாய்; இலை - இல்லாதவர்; உளை - உள்ளவர். பயிர்க்கோர் புயல் - "பயிர்வளர்க்குந் துளியவன்காண் துளியினின்ற நீரவன்காண்" (தேவா); "கார்பெறு கானம் போல" (859); புயலே என்றது காக்கும் தன்மை குறித்தது; குழைக்கும் - குழையும் என்பது எதுகை யின்பநோக்கிக் குழைக்கும் என்று பிறவினையாய் வந்தது; குழைதல் - வாடுதல்; குடி - குடியிருக்கும் - வாழும் - இடம்; குடி - குடிமகன் - ஏவலாளன்; அடியார்பாற் குழைந்து ஏவலும் செய்பவன் என்ற குறிப்புமாம்.

மழைக்கு நிகர் ஒப்பன — மழை - மேகம். நிகர் ஒப்பன - ஒருபொருட் பன்மொழி; திரைகள் மழைக்கு நிகராதலாவது நீரினை மிகுதியாய் எடுத்து வீசுதல்; மேகங்களைப் போல அலைகளும் கடலின் நீரை மொண்டு தரையில் வீசுதலும் குறிப்பு; இவ்விரு வகையும் குறிக்க, நிகர் - ஒப்பன - என்று உவமவுருபுகள் இரண்டு வைத்தருளினர் என்றலுமாம். வலித்து - வலியுடன் - விசையாக; வலம்புரி கொண்டு-அழைக்கும் - தன்னகத்துள்ள வலம்புரிச் சங்கங்களை முழக்கி அழைப்பது போல ஒலிக்கும்—(5) வீடின்...பயனென் - சிவனை வணங்காவிடில் வீடு - பிறப்பு - என்ற இவை என்ன பயன்றருவன; விடை...நிற்க - "கடகரியும் பரிமாவும்" என்ற திருவாசகமும், (சாழல்), "மற்றேறும் பரிமாவு மதகளிறு மிவையொழியப், பெற்றேறும் பெருமானூர் பெருவேளூர் பிரியாரே" என்ற தேவாரமும் (பிள்ளையார்) காண்க. கூடும்... என்னே - "மலைமகளை" என்ற (சாழல்) திருவாசகம் காண்க; பாடும் புலவர்க் கருளும் பொருள் என்? - நம்பிகள் தம்மையே குறித்துப் படர்க்கையில் வைத்துக் கூறிய குறிப்பு; நிதியம் பல செய்த - வாணிப முறையால் பலவும் உளவாக்கும்; கலச்செலவு — மரக்கலங்களின் செல்கை; 7—வது பாட்டும் பார்க்க—(6) இரவந்து- இரவில் - அந்து - சாரியை; எழுனுருபு விரிக்க; பரவி...என்னே - முன் பாட்டில் "பாடும்...என்?" என்ற கருத்து; பண்டம் - நற்பொருள்;—(7) சொற்பொருள் — சொல்லுக்கெல்லாம் பொருளானவர்; நாக்கு...நான் - பொறிகளுள் இருந்து உயிர் அவ்வவுணர்வுகளைப் பெற அருள்பவர்; நோக்கு...ஆர்க்கும் - 5-வது பாட்டில் "நிதியம் பல செய்த கலச் செலவு" என்ற கருத்து; ஏறநுந்தி - ஏற்றியும் தூர்த்தியும்; செலுத்தியும் வரவழைத்தும்;—(8) இத்திருப்பாட்டுப் பதிகத்தின் உட்கருத்துக் கூறி விண்ணப்பிக்கும் நிலை காண்க. (4258); மனைவாழ்க்கை - ஈண்டு இந்நிலவுலக வாழ்வு என்ற பொருள் தந்து நின்றது. "இவ்வுலகினிற் பாசம் அடுத்த வாழ்க்கை" (4258) என்று ஆசிரியர் இதற்குப் பொருள் விரித்தருளினர்; விட்டொழிந்தேன் - துறந்தேன். "பற்றற்ற கண்ணே பிறப்பறுக்கு மற்று, நிலையாமை காணப் படும்" (குறள்); இங்குப் பற்று விட்டொழிந்த நிலையே கயிலையிற் சென்ற நிலை கூடுதல் காண்க — கண்டங்-கறுத்தாயே என்று, "இற்று விழ இறுத்தாயே" என்றும் கூட்டுக; —(9) பிடிக்குக் களிறே - என்றது எடுத்துக்காட்டு; "பெண்ணாகிப் பெண்ணுக்கோ ராணு மாகி" என்றதும், "காதன் மடப்பிடி யோடுங் களிறு வருவன கண்டேன், கண்டே னவர்திருப் பாதம்" என்பன வாதியாக வருவனவும் கருதுக. உனைநான் மறவேன் - மறவாத நிலை - சிவயோக நிலை; மேல்வருஞ் சரிதக் குறிப்பு;—(10) எனக்கென்று மளிக்கும் - சரிதக் குறிப்பு; தடுமாற்று — பிறவி வாழ்க்கை; அடிகள்- தலைவர்.

தலவிசேடம் :—3893-ம் பாட்டின் கீழ் உரைக்கப்பட்டது காண்க;

குறிப்பு :—சென்ற 500 ஆண்டுகளின் மேலாய் இந்நாடு மலையாள மொழியின் கீழ்ப்பட்டுத் தமிழை மறந்தொழிந்தமையின் நம்பிகளது பெருமையினையும் சேரமானாரது பெருமையினையும் உளங்கொளாது மறந்தது. சிறப்பு வழிபாடுகளும், தேவார பாராயணம், சேரனாரது அருணூற் பாராயணம் குருபூசை முதலியவை ஒன்றும் நடைபெறவில்லை. சென்ற 18 ஆண்டுகளின் முன் 1935 (கொல்லம்-1110)-ல் அடியேனும் சில அன்பர்களும் பெருமுயற்சி செய்ததன் பலனாகத் திருவருள் கூட்டிய வகையால் ஆடிச் சுவாதித் (கற்கடகம்) திருநாள் சேக்கிழார் திருக்கூட்டத்தாராற் சிறப்பாக ஆண்டுதோறும் கொண்டாடப்பெற்று வருகின்றது. அவ்வாண்டிலே இப்புராண உரை எழுத்துப் பணி தொடங்கியது. இவ்வாண்டு நிறை வெய்தும் நிலை அஞ்சையப்ப

ரது இடைவிடாத வழிபாட்டின் பயனும். மாட்சிமையுடைய கொச்சி மன்னர் இத்திருவிழாவுக்குக் கருணைகூர்ந்து அனுமதியளித்ததோடு தமது அரசாங்கத்தில் ஆண்டுதோறும் ரூ 100 - இவ்விழாவுக்கு அனுமதித்துள்ளார்கள் ; திருப்பனந்தாள் ஸ்ரீகாசிமடத் ததிபர் ஸ்ரீமத் அருணந்தித் தம்பிரான் சுவாமிகள் சேரமான் பெருமா ளுயனுர் பெயரால் ஆடிச்சுவாதி நாளில் தேவாரப்பரிசுக்கு ரூ. 5000/-ம், ஆடிச் சுவாதி விழாவில் மாகேசுவர பூசைக்கு ரூ. 7000-ம் மூலதனம் வைத்து அச் சிவ நல்லறங்கள் நீடு நடைபெற நிறுவியுள்ளார்கள் ; சேரமானுர் பெயராற் சத்திரம் நிறுவக் கொச்சி மன்னர் சமஸ்தானத்தார் திருவஞ்சைக் களத்தில் கோயிலடியில் 11 செண்டு நிலம் கோவைச் சேக்கிழார் திருக்கூட்டத்தார் வசமாக்கி உத்தரவும் அளித்துள்ளார்கள் ; ஷை சத்திரமும் ஷை ஸ்ரீ காசி மடத்து அதிபர்கள் அளித்த ரூ. 5000-ல் தாபிக்கப் பட்டிருக்கின்றது. இவற்றுக்கெல்லாம் சர். R. K. சண்முகஞ் செட்டியார் பேராதரவளித்தார்கள்.

சுந்தரமூர்த்தி நாயனுர் திருவடி வாழ்க! சேரமான் பெருமாணுயனுர் சேவடி வாழ்க!

4260. வான நாடர்க ளரியயன் முதலினோர் வணங்கிமுன் விடைகொண்டு
தூந லந்திகழ் சோதிவெள் ளானையுங் கொண்டுவன் றொண்டர்க்குத்
தேன லம்புதண் சோலைசூழ் மகோதையிற் றிருவஞ்சைக் களஞ்சேரக்
கானி லங்கொள வலங்கொண்டு மேவினுர் கடிமதிற் றிருவாயில். ௩௨

(இ - ள்) வான நாடர்கள்...விடைகொண்டு-அவ்வருளிப்பாட்டினைக் கேட்ட தேவர்களும் விட்டுணு பிரமன் முதலினோர்களும் முன் வணங்கி விடை பெற்றுக் கொண்டு; தூநலம்...வன்றொண்டர்க்கு - வன்றொண்டருக்காகத் தூய நன்மை விளங்கும் ஒளியுடைய வெள்ளானையினையும் உடன் கொண்டு; தேனலம்பு...கானிலங் கொள - தேன் துளிக்கின்ற சோலைகள் சூழ்ந்த மகோதை நகரத்தில் திருவஞ்சைக் களத்தினைச் சார அணுகும்போது கால் நிலத்திலே பொருந்த ; வலங்கொண்டு... திருவாயில் - வலமாக வந்து காவலுடைய மதிற்றிருவாயிலை அடைந்தனர்.

(வி - ரை) வான நாடர்கள் - தேவர் உலகத்தவர். தேவர்கள் ;

தூ...வெள்ளானை - இவ்வடை மொழிகளின் சிறப்பினுல் இது அயிராவணத் தினைக் குறித்ததென்பாரு முண்டு ; வன்றொண்டர்க்கு - வன்றொண்டர்க்காக ;

தேன் அலம்பு - தேன் துளிக்கும் ; மகோதையில் திருவஞ்சைக்களம் - மகோதை-திருக்கொடுங்கோளூரும் அஞ்சைக்களமும், பிறவும் சேரர் தலைநகர் என்பது குறிக்க மகோதையில் என்றுர் ;

சேரக் கால் நிலம் கொள - தேவர்கள் கால் நிலம் தோயாத தன்மையுடையவர் கள். ஆதலின் இங்குத் தாம் வந்த செயல் நிகழ்த்தலுக்காகத் திருவஞ்சைக்களம் சேரக் கால் நிலந்தோயக் கொண்டனர் என்க. இங்கு, இவ்வாறன்றி நம்பிகள் கானிலம் தோய வலங்கொண்டு என்று கூட்டியுரைத்தனர் முன் உரைகாரர். அது பொருந் தாமைஉணர்ந்து கொள்க. ''விண்மேற் செலும்'' ''விசும்பெழு'' (4263-4) பார்க்க.

சோலைசூழ்ந் திருக்குமத் - என்பதும் பாடம். 32

4261. தேவர் தங்குழா நெருங்கிய வாய்தலிற் றிருநாவ லூரர்தங்
காவலன் மன்னரும் புறப்பட, வெதிர்கொண்டு ''கயிலைவீற் றிருக்கின்ற
பூவ லம்புதண் புனற்சடை முடியவ ரருளிப்பா'' டெனப்போற்றி
''ஏவ''லென்றபின்செய்வதொன்றிலாதவர்பணிந்தெழுந்தெதிரேற்றுர்.

(இ - ள்) தேவர்...புறப்பட - முன் கூறியவாறு தேவர் கூட்டங்கள் வந்து நெருங்கிய திருவாயிலின் வழியே திருநாவலூரார்களது காவலினைத் தரும் மன்னவராகிய நம்பிகளும் (வழிபாடு முற்றியபின்) புறப்பட்டு வெளியேவர ; எதிர்கொண்டு ...என்ற பின் - எதிர் கொண்டு திருக்கயிலையில் வீற்றிருந்தருள்கின்ற கொன்றை முதலிய பூக்கள் பொருந்தித் ததும்பும் தண்ணிய கங்கை நீரினை ஏற்ற சடைமுடியவராகிய இறைவரது அருளிப்பாடு என்று சொல்லித் துதித்து ; அவருடைய ஏவல் இஃது என்று கூறியபின் ; செய்வதொன்று...ஏற்றார் - வேறு செயலொன்றும் இல்லாதவராகிப் பணிந்து எழுந்து எதிராக அந்த ஆணையினை உடன்பட்டருளினர்.

(வி ரை) தேவர் நெருங்கிய-நெருங்கிய - முன் பாட்டிற் கூறியபடி வந்து கூடிய. வாய்தலில் - வாய்தலின் வழியாக - புறப்பட - நம்பிகள் வழிபாடு முடித்துப் புறத்தே செல்ல அணைய ; வாய்தல் - இவ்வாயில் அபிமுகத்துத் திருவாயில் என்பது கருதப்படும். யானை வருதலும் நம்பிகள் புறப்படுதலுமாகிய அடையாளங்கள் இங்குப் பொறிக்கப்பட்டுள்ளன.

திருநாவலூரர்...மன்னர் - நம்பிகள்; திருநாவலூரர் - நாவலூர் மக்கள்; மன்னர் - தலைவர்.

அருளிப்பாடு – ஆணை ; கயிலை...அருளிப்பாடு-இறைவரது ஆணையினைத் தெரிவிக்கும் முறை ; மரபு ; மேல் 4272-ல் வருவதும் காண்க. என - என்று கூறி ;

ஏவல் - " தேவரீரை யானையின் மீதேற்றிக் கொண்டு வரும்படி இறைவரது ஆணை " என்ற இறைவர் கட்டளையினை விரித்துரைத்தப்படி ; என்ற பின் - என்று கூறக்கேட்ட பின்பு ;

செய்வ தொன்றிலாதவர்-வேறு ஒன்றும் செயலில்லாதவராய் ; ஒன்று-ஒன்றும்; முற்றும்மை தொக்கது. சிவபெருமானது நியதியின்படி வரும் காலன் முதலியோரது ஆணை வந்தபோது வேறு செயலிலாது செல்லும் நிலையிலுள்ள உயிர்கள், இறைவரது ஆணை நேரே வந்தபோது உடன்பட்டுச் செல்வதன்றி வேறென் செய்ய வல்லர் ?

எதிர் ஏற்றார் - அவர் கூறிய ஆணைக்குட்டு ஏற்று நின்றனர். 33

4262. ஏற்ற தொண்டரை யண்டர்வெள்ளானையினெதிர்வலங்கொண்டேற்ற
நாற்ற டங்கடன் முழக்கென வைவகை நாதமீ தெழுந்தார்ப்பப்,
போற்றி வானவர் பூமழை பொழிந்திடப் போதுவா ருயிரெல்லாஞ்
சாற்று மாற்றங்க ளுணர்பெருந் துணைவரை மனத்தினிற் கொடுசார்ந்தார்.

(இ - ள்) தொண்டரை...ஏற்ற - தேவர்கள் இவ்வாறு ஆணையினை ஏற்ற நம்பிகளை எதிர்வலஞ் செய்து வணங்கித் தாங் கொணர்ந்த வெள்ளானையின் மீது ஏற்ற ; நாற்றடங்கடல்...ஆர்ப்ப - நான்கு திசைகளிலு முள்ள பெரிய கடல்களின் முழக்கம் போன்று ஐவகைத் தேவ துந்துபிகளும் எழுந்து சந்திக்க ; போற்றி... பொழிந்திட - துதித்துத் தேவர்கள் பூமாரி பொழிய ; போதுவார்...சார்ந்தார் - போவாராகிய நம்பிகள் எல்லாவுயிர்களும் கூறிய சொற்களை யறிவாராகிய தமது பெருந்தோழராகிய சேரமான் பெருமாளுயனாரைத் தம் மனத்தினுள்ளே நினைந்து கொண்டவாறே சார்ந்தருளினர்.

(வி - ரை) ஏற்ற - முன் கூறியவாறு அருளிப்பாட்டின் ஏவலை எதிர் ஏற்ற ; தொண்டரை - நம்பிகளை ;

அண்டர் - தொண்டரை - எதிர் வலங்கொண்டு வெள்ளானையின் ஏற்ற என்க.

நாற்றடங்கடல்...ஆர்ப்ப - நாற்றடங்கடல் - முழக்கு - திருவஞ்சைக் களத்தினைச் சூழ்ந்த கடலின் முழக்கு; "அஞ்சைக் களத்தினைச் சூழ்ந்த" என்பது குறிப்பெச்சம். "மலைக்கு நிகரொப்பன வன்றிரைகள் வலித்தெற்றி முழங்கி வலம்புரிகொண் டலைக் குங்கடல்" (பதிகம் – 1) என்பது முதலாக நம்பிகள் பதிகத்தினுள் எல்லாப் பாட்டுக்களினும் சிறப்பித்தருளும் கடல் என்பது குறிப்பு ; கடல் பெரிதும் முழங் கிற்று; அதுபோல ஐவகை நாதமும் மீது எழுந்து ஆர்த்தன என்பதாம் ; மீதெழுதல் கடல் முழக்கினையும் அடக்கி மேலெழுதல் ; தேவதுந்துபி முழங்குதலும் வானவர் பூமழை பொழிதலும் முதலாயின சிவனருள் வெளிப்பாடுகளின் போது நிகழ்வன. "ஓசை யைந்து மார்கலி முழக்கங் காட்ட" (750) என்றது காண்க ; திருவருள் விளக்கமாவது நம்பிகள் இவ்வுலகினிற் பாசமடுத்த வாழ்க்கையை யறுத்துச் சிவனுல கிற்கு அவ்வுடலுடனே வெள்ளானையின்மீது செல்லுதல் ; அரசுகள் சிவப்பேறு பெற்ற போதும் (1693) இவ்வாறே ஐவகையொலி-பூமழை முதலியவை நிகழ்ந்தது காண்க.

போதுவார் - வினைப்பெயர் ; போதுவாராகிய நம்பிகள் ; போதுவார் - சார்ந் தார் - என முடிக்க.

உயிரெல்லாம்...துணைவர் - சேரலனார். கழறிற்றறிவார் என்ற பெயர்க் காரணம் பற்றி, முன்னர், "யாவும் யாருங் கழறினவு மறியும் உணர்வும்...கைவந் துறப் பெற்றார்" (3761) என்று உரைத்தவை காண்க. பெருந்துணைவர் - தோழர் ; உயிரெல்லாம்...உணர் - என்ற இத்தன்மையால் இங்குக் கூறியது, ஈண்டு விரைவில் அவர் அவ்வலிமையாற் றம் குதிரைக்குச் சிவமந்திரமோதி அதனை வானிற் செலுத்தி நம்பிகளுடன் கயிலைக்குச் சென்று சேரும் நிலைக் குறிப்பு உணர்த்தற்கு ; பெருந் துணைவர் - என்ற குறிப்புமது ; மேற்பாட்டில் உரைப்பனவும் காண்க.

பெருந்துணைவர் - இவ்வுலகில் துணையாவார் பிறரெல்லாம் இவ்வுலகத்தொடர் புடனொழிகுவர் ; இவர், அவ்வாறன்றிக் கயிலை செல்லும் நிலையிலும் பின்னர் அங்கு நிலையாக வீற்றிருக்கும் நிலையிலும் பிரியாது துணைவராயிருக்கும் தன்மை குறிக்கப் பெருந்துணை என்றார்.

மனத்தினிற் கோடு - நினைத்துக்கொண்டு ; எண்ணிக்கொண்டு ; சிவபெருமா னாது அருளிப்பாடுடைய ஏவல் பெற்றதனால் உடனே ஏற்றுச் செல்ல வேண்டிய நிலையினின்றாராதலின், கொடுங்கோளூரின் "தூய மஞ்சனத் தொழிலினிற் றொடங் கிய" (4256) தமது தோழனார்பாற் சென்றறிவித்து விடைபெற இயலாதவரா யினர் நம்பிகள். ஆதலின் அவரை மனத்தினில் எண்ணிக்கொண்டு சார்ந்தார் ; உல கினிற் பாசமடுத்த வாழ்க்கையை யறுக்க வேண்டி, "வெறுத்தேன் மனை வாழ்க்கையை விட்டடியேன்" (பதிகம்) என்ற நம்பிகள் இத்துணைவரை மட்டில் மனத்தினிற் கொடு சென்றமை என்னை? இஃது உலகினிற் பாசமாகாதோ ? என்னின்; ஆகாது; இவரது தொடர்பு பாச சம்பந்தமான தொன்றன்று; இறைவர் கூட்டுவிக்க நிகழ்ந்தது; பதிசம்பந்தப் பட்ட அன்பு காரணமாக நிகழ்ந்தது ஆகலான் என்க. தமது தேவியார்க ளிருவரையேனும், பிறர் எவரையேனும், மனத்தினிற் கொடு செல்லாமையுங்காண்க.

4263. சேரர் தம்பிரான் தம்பிரான் றோழர்தஞ் செயலறிந் தப்போதே,
சார நின்றதோர் பரியினை மிசைக்கொண்டு திருவஞ்சைக் களஞ்சார்வார்
வீரவெண்களிறுகைத்துவிண்மேற்செலுமெய்த்தொண்டர் தமைக்கண்
பாரி னின்றிலர் சென்றதம் மனத்தொடு பரியுமுன் செலவிட்டார். [டார்

(இ - ள்) சேரர்... அறிந்து - சேரமான் பெருமானார் தம்பிரான் தோழராகிய நம்பிகளது செயலினை அறிந்து அப்பொழுதே; சார...சார்வார் - சார நின்றதாகிய ஒரு குதிரையின் மேற்கொண்டு திருவஞ்சைக் களத்தினைச் சார்வாராக; வீர... கண்டார் - வீரமுடைய வெள்ளானையினைச் செலுத்தி ஆகாயத்தின் மேலே செல்லும் மெய்த் தொண்டராகிய நம்பிகளைக் கண்டனர்; பாரின்...செலவிட்டார் - நிலத்தில் நிற்கலாற்றாராய்த் தமக்கு முன்னே விரைவாய்ச் சென்ற தமது மனத்தினோடு குதிரையும் முன்பு செல்லும்படி விட்டனர்.

(வி - ரை) சேரர் தம்பிரான் - தம்பிரான் - அரசர், மேலோர் முதலியோர்க்கு மலைநாட்டில் இன்றும் வழங்கும் மரபு வழக்குப் பெயர்; தம்பிரான்-தம்பிரான்றோழர்- சொற்பின் வருநிலை; தம்பிரான் தோழர் - இங்குத் தம்பிரான் - என்றது இறைவரது பெயராகவும், இடநோக்கி அரசர் பெயராகவும் சிலேடை வகையால் உரைக்க நின்றது; இது குறிக்கச் சேரர்தம்பிரான் என்றவாற்றாற் கூறிய குறிபபும் காண்க. தம்பிரான் (தோழர்) - அரசர் தோழர் எனக் கொள்ளும்போது தமது தோழர் என்க.

செயல் அறிந்து - செயல் - நம்பிகள் மனத்தினுட் கொண்ட செயல்; அவர் தம்மைப் பிரிந்து திருவஞ்சைக்களம் போந்து முத்தி விண்ணப்பம் செய்ததும், வெள்ளானையினைக் கொண்டு தேவர்கள் போந்து இறைவரது அருளிப் பாட்டினைக் கூறியதும், அதனை ஏற்று, அவர் வெள்ளானையின் மேற் கொண்டு தம்மை மனத்தினுட் கொண்டவாறே விண்மேற் செல்வதுமாகிய எல்லாம் அறிந்து. இத்துணையும் செயல் என்ற வொருசொல்லாற் பெற வைத்தது ஆசிரியரது தெய்வக்கவி நலம்; இத்துணையும் சேரனார் கொடுங்கோளூரிலிருந்தவாறே அறிந்தது உயிரெல்லாம் சாற்று மாற்றங்களுணரும் அவரது சத்தியினாலும், அவருக்கு உணர்த்துமாறு எண்ணிய நம்பிகளது நினைப்பின் உறைப்பினாலுமாம்; "உயிர் எல்லாம் சாற்று மாற்றங்க ளுணர்பெருந் துணைவர்" (4262) என்றவாற்றாற் குறிப்பித்த நயமும் காண்க.

நீண்ட தூரத்து அப்பாற் கிளம்பும் மொழிகள், ஓசைகள் முதலியவை ஒலியலைகளாகப் பூத ஆகாயம் பற்றுக்கோடாக இப்பால் வந்து அவற்றை வாங்கும் கருவியமைப்பின் ஒழுங்கு மூலமாக நமக்குச் செவிப் புலப்படுதல், இந்நாளில், வானொலி தத்துவ ஆராய்ச்சியின் பயனாய் நாம் கண்ட உண்மை; Rodio Transmitting and Recieving Stations; Recieving set; என்பனவாதி விஞ்ஞான முறையமைப்புக்கள் ஆங்கிலத்திற் பேசப்படுவன. இதுபோல, இதனினும் மேலாய், நுண்ணிய அறிவாகாயம் பற்றுக் கோடாகக்கொண்டு ஒருவர் எண்ணிய நினைவுகள் ஒத்த உறைப்புடைய ஒருவரது உள்ளத்தினுள், அறிவலைகளாகச் சென்று தாக்கி, அந்நினைவுகளை அவர் அறிவுக்குப் புலப்படுத்துவன என்பது மனத் தத்துவ நூலோர் கண்ட மறுக்கலாகாத அனுபவவுண்மை; இவையெல்லாம் ஈண்டுப் "பெருந்துணைவரை மனத்தினிற் கொண்டு சார்ந்தார்" (4262) என்றும், "தோழர் தஞ்செய லறிந்து" (4263) என்றும் கூறியவாற்றால் உய்த்துணரவைத்தது ஆசிரியரது தெய்வக்கவி நலம்.

இவ்வாறு நிகழ்வதற்கு இருவருக்குமிடையே செறிவுடைய மனவுறைப்பாகிய துணைத்தொடர்பு இருத்தல் வேண்டுமென்பதும் குறிப்பித்தவாறு காண்க. காணாமலே நட்புப் பூண்ட புலவர் பிசிராந்தையார் - கோப்பெருஞ் சோழர் இவர்களைப் பற்றிப் புறநானூற்றில் வரும் வரலாறுகளும் இங்குக் கருதற்பாலன; ஆயின், இங்கு, அதற்கு மேலாய் விளைந்த இவர்களது தோழமை, இறைவர்பால் கொண்ட அன்பு தரவந்த

அழியாத பதித் தன்மையாய்ந்த தூய உயிர்த்தொடர்பு ; மற்றது அவ்வாறன்றிப் பசுத்தன்மை பற்றிய அழியும் தன்மையவாகிய பாசத்தொடர்பு ; காணுமலே அன்புத் தொழும்பு பூண்ட அப்பூதியாரது எண்ணம், அரசுகளைத் தம்மையறியாமலே அப்பூதியாரது கடைத் தலையிற் செலுத்திய மனவுணர்வின் வலிமையும் ஈண்டுக் கருதற்பாலது.

சார நின்றது ஓர் பரியினை - சார-அடுத்து; சிவமந்திரச் சார்பும், அது வாயுகத் திருக்கயிலைச் சார்பும் பெற நின்றதாகிய ஒரு ஒப்பற்ற பரி என்ற குறிப்பும் காண்க.

சார்வார்...கண்டார் - முன்னர்க் கூறியபடி ஞானகாய வழியினாலே அறிவினுள் வெளிப்படக் கண்டார் ; அது மனத்துள் அறிந்ததில்லை ; "அறிந்து" என்றது அக் குறிப்புடையது ; கண்டார் - என்றது குதிரை யேறிக் கொடுங்கோளூரில் தமது திருமாளிகையினின்றும் திருவஞ்சைக்களம் சாரப் புறப்பட்ட எல்லையில் கண்ணாற் கண்ட வாயிற்காட்சி ; முன்னர் அறிவினுள் அறிந்தது யோகக் காட்சி என்பர்.

விண்மேற் செலும் மெய்த் தொண்டர் - நம்பிகள் ; சேரனார் கண்டபோது நம்பிகள் ஆகாய வீதியில் யானையின் மேற் செல்கின்றார் என்பது. யானையேறி நிலத்திற் சென்று, பின்னர்க் கடல்வழிச் சென்று கடலரையன் அலர் கொண்டு முன் வந்திறைஞ்சி வழி தந்த பின் ஆகாயத்திற் சென்ற நிலைகள் முன்னர் நிகழ்ந்தன. என்பதுமாம். பதிகம் பார்க்க. தொண்டர் - பெருந் தொண்டராகு நிலையிலே இறைவர் அறிவிக்க அறிந்து, அந்நிலையிலேயே நின்று நம்பிகள்பாற் சேரனார் அன்பு பூண்டொழுகியமையால் ஈண்டு இவ்வாற்றாற் கூறினார்.

பாரில் நின்றிலர்...விட்டார் - அவர் விண் மேற் செலக் கண்டனராதலின் அவரைப் பிரிந்து ஒரு சிறிதும் நிலத்தில் நிற்க இசையாது மனத்தை அவர்பாற் செலுத்தினார் ; அதன் வேகத்தோடு ஒப்பப் (மனோ வேகத்தில்) பரியினையும் செலுத்தினார் என்பது ; நின்றிலர் - நின்றிலராகி ; பாரில் நின்றிலர் - நிற்கலாற்றாராய் ; முற்றெச்சம். சென்ற - இறந்த காலம், மனம் முன் சென்றுவிட்டது என்றுணர்த்திற்று ; சென்ற - தம் மனத்தோடு - என்றதும் விரைவுக் குறிப்பு.

முன் செலவிடுதலாவது - மனத்தின் முன்னே என்றும், யானையின் முன் செல்ல என்றும் கொள்ள நின்றது ; "முன் வலங்கொண்டு" (4264) என மேற் கூறுதல் காண்க.

திருவஞ்சைக் களஞ்சார - என்பதும் பாடம். 35

4264. விட்ட வெம்பரிச் செவியினிற் புவிமுதல் வேந்தர்தாம் விதியாலே
இட்ட மாஞ்சிவ மந்திர மோதலி னிருவிசும் பெழப்பாய்ந்து [கத்தை
மட்ட லர்ந்தபைந் தெரியல்வன் றொண்டர்மேல் கொண்டமாதங்
முட்ட வெய்திமுன் வலங்கொண்டு சென்றது மற்றதன் முன்னாக.௩௬

(இ - ள்) விட்ட....ஓதலின் - முன் கூறியபடி கடவி விட்ட விருப்பமுடைய குதிரையின் செவியிலே நில அரசர்களுள் முதன்மை பெற்ற வேந்தராகிய சேரமானார் விதிப்படி இட்டமாம் சிவமந்திரத்தினை ஓதினாராதலின் ; இருவிசும்பு எழப் பாய்ந்து - பெரிய ஆகாயத்திலே எழும்பப் பாய்ந்து மேற்சென்று ; மட்டலர்ந்த... எய்தி - மணம் பொருந்த அலர்ந்த மலர்களையுடைய பசிய மாலையணிந்த வன்றொண்டர் மேல் கொண்ட வெள்ளானையினை அணுகச் சேர்ந்து ; முன் வலங்கொண்டு... முன்னாக - முதலில் வலமாக வந்து அதன் முன்னாகச் சென்றது.

(வி - ரை) விட்ட - முன் பாட்டில் "சென்றதம் மனத்தொடு பரியும்முன் செலவிட்டார்" (4263) என்று கூறியவாறு மனவேகத்தில் விட்ட.

வெம்பரி - தாம் விரும்பி யூர்ந்த குதிரை ; வெம்மை - விருப்பம். .

புவிமுதல் வேந்தர் - தமிழ் மூவேந்தர்களுள் முதலில் வைத்தெண்ணப்பட்டவர்; முதன்மை என்றலுமாம் ; இவ்வொருமரபே இன்றும் ஒருவாறு அரச தாங்கி நிலவி வருதல் காண்க

விதியாலே - சிவாகம விதிப்படி ; விதித்தல் - ஆக்ஞை செய்தலுமாம். விதி - நியதி என்று கொண்டு அக் குதிரையின் மேல் விண்ணிற் சென்று கயிலை சாரும் விதியுண்மையாலே என்றலுமாம்.

இட்டமாம் – தமக்கு இட்டமாகிய ; மிகக் கைவசமாய்த் தாம் விரும்பிக் கணித்து வரும் ; இட்டம் ஆம் - விருப்பத்தை முற்றிவைக்கும் என்றலுமாம். இப்பொருளில் ஆம் - ஆக்குவிக்கும் எனப் பிறவினைப் பொருளில் வந்தது.

சிவமந்திரம் - இதுபற்றிச் சிவாகமம் வல்ல அனுபவமுடைய தேசிகர்பால் அறிந்துகொள்க.* ஓதலின் - ஓதலினால் ; தரையில் ஓடும் குதிரை ஆகாயத்தில் எழுந்து பாய்ந்து ஓடுதல் யாங்ஙனம் என்றையுற்று அவநம்பிக்கைப்படும் மாக்களுக் கறிவுறுத்தக் காரணங் கூறியருளினர் ; சடப்பொருள்களாகிய பொறிகளும் ஓர் சட சத்தியதாகிய விசையினால் நிலத்தினின்று ஆகாயத்தில் எழுந்து இந்நாளிற் பறக்கக் காண்போமாகில், உயிரும் அறிவும் உள்ள பொருளாகிய குதிரை ஓர் சித் சத்தியாகிய மந்திரவலிமையால் ஆகாயத்தில் பறத்தல் எளிதேயாம் என்று விடுக்க ; சட சத்தியில் நம்பிக்கைகொண்டு மந்திர சிற்சத்தியில் நம்பிக்கை யில்லையேல் அது வேறுவகை யால் விடுக்கற் பாலதாம்; ஈண்டு விடுத்தல் மற்றொன்று விரித்தலாய்ப் பெருகுமென்று விடுக்க ; இன்னோர்க்கு இறைவர் அருள்வாராக என்று வேண்டுவோம்.

விசும்பு எழ - விசும்பின்கண் எழ என்று ஏழனுருபு விரிக்க.

பைந்தேரியல் - பசிய மாலை ; பசுமை-ஈண்டுப் புதுமையும் அழகும் குறித்தது.

மாதங்கம் - யானை ; ஈண்டு வெள்ளானையினைக் குறித்தது ; மூட்ட - அணுக.

முன்வலங்கொண்டு - முதலில் வலமாகச் சூழ்ந்து ; அதன் முன்னாகச் சென்றது - என்க ; வினைமுற்று முன்வந்தது விரைவுப்பொருட்டு ; மற்று - அசை. 36

4265. உதியர் மன்னவர் தம்பெருஞ் சேனையி னுடன்சென்ற படைவீரர்
கதிகொள் வாசியிற் செல்பவர் தம்மைத்தங் கட்புலப் படுமெல்லை
எதிர்வி சும்பினிற் கண்டுபின் கண்டில ராதலி னெல்லாரும்
முதிரு மன்பினி லுருவிய சுரிகையான் முறைமுறை யுடல்வீழ்த்தார்.

(இ - ள்) உதியர்...வீரர் - சேரமான் பெருமாணுபனூர்த பெருஞ் சேனையி னுடனே சென்ற படையின் வீரர்கள் ; கதிகொள்...ஆதலின் - மிக்க வேகத்தில் விண்ணின் மேற் செல்கின்ற தமது மன்னரைத் தமது கண்ணிற்கு புலப்படும் எல்லை அளவும் ஆகாயத்திற் கண்டு அதன்மேல் கண்டிலராயினர் ; ஆதலின் ; எல்லாரும்...

*இது பரியை விரைந்த செலவினதாக்கு விக்கும் பஞ்சாக்கரம். அஷ்ட கர்ம பஞ்சாக்கர மாறுதல் பேதங்களுள் ஒன்றாகிய உச்சாடன கர்மாவின் பிரிவைச் சேர்ந்த மிருக உச்சாடன பஞ்சாக்கரத்துட்பட்ட அசுவமனோகதி பஞ்சாக்கர மென்பது க. சிவப்பிரகாச குருக்களையா அவர்கள் குறிப்பு.

வீழ்த்தார் - எல்லாரும் அவர்பால் வைத்த முதிர்ச்சியுடைய அன்பினாலே உருவிய தமது உடைவாளினாலே முறைமுறையாகத் தமது உடலினை வீழ்த்தினர்.

(வி - ரை) இதனால் சேரனாரது படைவீரர் தமது அரசர்பாற் கொண்ட அன்பின் முதிர்ச்சியின் செயலும் வீரமும் கூறப்பட்டன. "ஈறில்லாத், தாவில் விறலும் ...படைவாகன முதலாய், காவன் மன்னர்க் குரியனவும்" (3761) இறைவரருளாற் றாப்பெற்ற சேரனாரது படையின் வீரர்களாதலாலும், இதுவரை குறையாத விறலும் வெற்றியுமே பெற்று விளங்கிய வீரர்களாதலாலும், அவர்பால் வைத்த அன்பின் முதிர்ச்சியாலே அவரைப் பிரிந்திருக்கலாற்றாது இவ்வாறு தம் சுரிகையாலே தமது உடலினை வீழ்த்தினர் என்க. வீழ்த்திய செய்கையால் வீர யாக்கையுடன் அவரைப் பிரியா நிலையும் சேவகமும் பெற்றனர் என்பதும், அதன் பொருட்டே அவ்வாறு செய்தனர் என்பதும் மேல்வரும் பாட்டிற் காண்க. சேரலனாரது பெருமையும் உடன் கூறப்பட்ட குறிப்பும் கண்டுகொள்க.

உதியர் - போரிற் சிறந்தவராதல்பற்றி வந்த பெயர்; யுத் - யுத்தம் - போர்.

உடன் சென்ற படைவீரர் - சேரலனார் பரிமேற் கொண்டு திருவஞ்சைக் களத்தினின்றும் தனி போதக் கண்டு அவருடன் சென்ற வீரர்கள்.

கதிகோள் - நிலமிசை யன்றி விண்ணிற் கதியுடன் சென்ற. கதி - விண்ணிற் சென்று சிவகதி கொள்ளநின்ற என்ற குறிப்புமாம்.

வாசியிற் செல்பவர் - திருவருளாலே சிவத்தையடையச் செல்பவர் என்பதும் குறிப்பு; வா - அருள்; சி - சிவம்.

தம் கட்புலப்படும் எல்லை கண்டு பின் கண்டிலர்-கண்ணிந்திரியம் சேய்த்தாகச் சென்று ஒளியலைகள் மூலம் சேய்மைப் பொருள்களையும் அறியவல்லது. ஆயின் அதற்கோர் எல்லையுண்டாதலின் அதனளவும் கண்டுகொண்டு நின்றனர். அதன் பின் காண இயலாமையின் உடலினை வீழ்த்தி, நுண்ணுடம்பு பெற்று, அவர் முன் சென்று சேவக மேற்றனர்; கண்ணின் நின்று மறைந்த பின்னரே இக் கருத்துத் தோன்றிச் இச்செயல் செய்தனர் என்க; ஆதலின் - என்ற குறிப்புமிது.

முதிரும் அன்பினில் - அன்பினால் என்க; அவர்பால் கொண்ட அன்பின் முதிர்ச்சி யினாலே; கணவன் மனைவி யிருவருள் ஒருவர் இறந்தபோது பிரிவாற்றாது மற்றவர் தாமே உயிர்துறத்தல் இன்றும் உலகியலில் காண்கின்றோம்; ஆயின் இங்கு இவர்கள் உடல் வீழ்த்தக் காரணமாய் நின்றது வீரர்கள் தலைவர்பால் கொண்ட சிவ வீர அன்பு.

சுரிகை - உடைவாள்; க்ஷுரிகா என்னும் வடமொழியின் திரிபு; சூரி என்ற வழக்கும் காண்க.

உடல்வீழ்த்தார் - மங்கல வழக்கு; உடலானது உயிர் செலுத்திய வழிச் செல் லும் பண்டம் என்ற உண்மையினை அனுபவத்திற் கொண்டனர்.

உடல் - தூலமாகிய பூதவுடல். 37

4266. வீர யாக்கையை மேல்கொண்டு சென்றுபோய் வில்லவர் பெருமானைச்
சார முன்சென்று சேவக மேற்றனர்; தனித்தொண்டர் மேல்கொண்ட
வாரு மும்மதத் தருவிவெள் ளானைக்கு வயப்பரி முன்வைத்துச்
சேரர் வீரருஞ் சென்றனர் மன்றவர் திருமலைத் திசைநோக்கி. ௩௮

(இ - ள்) வீர...ஏற்றனர் - அவ்வீரர்கள் நுண்ணிதாகிய வீர உடலினை மேல் கொண்டு சென்று போய்ச் சேரர் பெருமானாரைச் சார முன்னே சென்று, அவரது

சேவகத்தினை (பணியினை) ஏற்றனர் ; தனித்தொண்டர்...முன் வைத்து - ஒப்பற்ற பெருந்தொண்டராகிய நம்பிகள் மேல் கொண்ட மும்மதம் அருவியாகப் பாய்கின்ற வெள்ளானைக்குக் கொற்றக் குதிரை முன்னே செல்ல அமைய ; சேரர் வீரரும்... நோக்கி - சேரர்களின் வீரத்தலைவராகிய சேரனாரும் அம்பலவாணரது கயிலைத் திரு மலையின் திசையினை நோக்கிச் சென்றனர்

(வி - ரை) வீரயாக்கை - போரிலும்; பிறவிடத்தும் உடல்விடும் வீரர்கள் மேற் கொள்ளும் புண்ணிய உடல் (சூக்கும வுடம்பு) வீரயாக்கை எனவும், அவர்கள் அடைவது வீர சுவர்க்கம் எனவும் படும்.

சென்று போய் - சென்று - என்பது இவ்வுலக நில எல்லை யளவும், போய் என்பது விண்ணுலகிலும் சென்ற நிலைகள் குறித்தன.

வில்லவர் பெருமான் - வில்லவர் - சேரர் ; மரபுப் பெயர். "தென்னவன் செம்பியன் வில்லவன் சேருமூக்கீச் சரக்கடிகள்" (பின் - தேவா) விற்கொடியுடைய காரணம் பற்றிப் போந்த பெயர் என்பர். சேரமானாரது திருவுருவம் கையில் வில் ஏந்திய கோலத்துடன் திருவஞ்சைக்களத்தில் உள்ளது. வீரர்கள் சென்றடைந்த தலைமை குறிக்க இப்பெயராற் கூறினார்; மேல் "சேரர் வீரர்" என்பதும் காண்க.

சேவகம் - பணி ; சேவை தனித்தொண்டர் - நம்பிகள்.

முன் வைத்து - முன்னே சென்றவாறே.

வெள்ளானைத்து முன் வைந்துச் சென்றனர் - ஆகாய வீதியில் திருமலைத் திசை நோக்கி வெள்ளானையும் அதன் முன்பு வயப்பரியுமாக இவ்வாறு சென்றன என்பது.

சென்றனர் - திருமலைத் திசைநோக்கி - ஆகாய வீதியாகலின் திசையறி கருவி யாக ஒரு குறிக்கோள் வேண்டுமாதலின் அது திருமலை நோக்கியவாறே பொருந்த என்பதாம். திருமலை - கயிலை. "திருமலை, அதிர வார்த்தெடுத் தான்" (அரசு - தேவா). 38

4267. யானைமேல்கொண்டு செல்கின்றபொழுதினிலிமையவர்குழாமென்னுந்
தானை முன்செலத் "தானெனை முனபடைத் தா"னெனுந் தமிழ்மாலை
மான வன்றொண்டர் பாடிமுன் னணைந்தனர் மதிநதி பொதிவேணித்
தேன லம்புதண் கொன்றையார் திருமலைத் தென்றிசைத் திருவாயில்.

(இ - ள்) யானை...பொழுதினில் - வெள்ளை யானையின்மேல் ஏறிக்கொண்டு செல்கின்றபோது ; இமையவர்...முன் செல-தேவர்களின் கூட்டம் என்னும் சேனை முன்னே செல்ல ; தானெனை...பாடி - "தானெனை முன் படைத்தான்" என்று தொடங்கும் தமிழ்மாலையினைப் பெருமையுடைய வன்றொண்டர் பாடி; மதிநதி...திரு வாயில் - தேன் பிலிற்றுகின்ற குளிர்ந்த கொன்றை மலர் சூடிய இறைவரது திருமலை யின் தென்றிசைத் திருவாயிலின் ; முன் அணைந்தனர் - முன்னே சேர்ந்தனர்.

(வி - ரை) யானை - "சென்று, ஆரூரனை இந்த யானையின்மேல் ஏற்றிக் கொண்டு வாருங்கள்" என்று அயன் முதற்றேவர்களுக்குச் சிவபெருமான் கட்டளை யிட்டனுப்பிய வெள்ளை யானை. 4254.

"தானெனை முன் படைத்தான்" எனும் – இது நம்பியாரூரர் கயிலை மலையினை நோக்கி வரும்போது வழியிற் பாடியருளிய பதிகத்தின் தொடக்கமாகிய முதற் குறிப்பு. தானை - இங்குக் கூட்டம் என்ற பொருளில் வந்தது. சேரர்க்கு ஒப்ப நம்பிகளுக்கும் சேனை முன் சென்றது என்றதும் குறிப்பு.

மானம் - பெருமை ; முன் அணைந்தனர் - முன் - உடன்வந்த சேரமான் பெருமாளுக்கு முன்பு.

திருமலை – கயிலைமலை. அடைமொழியின்றியே சிறப்புப் பற்றி அறியப்படுவது.

தென்றிசைத் திருவாயில் – தென்றிசையினின்றும் வடக்கிலுள்ள கயிலையினை நோக்கி நம்பிகள் வருகின்றாராதலின் தெற்குத் திருவாயிலின் வந்தணைந்தனர் என்க.

கொன்றையார் - திருவஞ்சைக் களத்தினின்றும் நம்பிகள் எழுந்தருளி வருகின்றாராதலின் அப்பதியின் சிறந்த தலமரமாகிய கொன்றையினைப் பற்றிக் கூறிய குறிப்பும் காண்க. 39

திருநொடித்தான் மலை

*சிற்றம்பலம் பண் – பஞ்சமம்

தானெனை முன்படைத்தா னதறிந்துதன் பொன்னடிக்கே
நானென பாடலந்தோ நாயினேனைப் பொருட்படுத்து
வானெனை வந்தெதிர்கொள்ள மத்தயானை யருள்புரிந்து
ஊனுயிர் வேறுசெய்தா னொடித்தான்மலை யுத்தமனே. (1)

அரவொலி யாகமங்க ளறிவாரறி தோத்திரங்கள்
விரவிய வேதவொலி விண்ணெலாம்வந் தெதிர்ந்திசைப்ப
வரமலி வாணன்வந்து வழிதந்தெனக் கேறுவதோர்
சிரமலி யானைதந்தா னொடித்தான்மலை யுத்தமனே. (8)

இந்திரன் மால்பிரமன் னெழிலார்மிகு தேவரெல்லாம்
வந்தெதிர் கொள்ளவென்னை மத்தயானை யருள்புரிந்து
மந்திர மாமுனிவ "ரிவனா?ரென" வெம்பெருமான்
"நந்தம நர"னென்ற னொடித்தான்மலை யுத்தமனே. (9)

ஊழிதோ றூழிமுற்று முயர்பொன்னொடித் தான்மலையைச
சூழிசை யின்கரும்பின் சுவைநாவல வூரன்சொன்ன
ஏழிசை யின்றமிழா லிசைந்தேத்திய பத்தினையும்
"ஆழிகட லரையா! வஞ்சையப்பர்க் கறிவிப்பதே" (10)

ம்பலம்

பதிகக்குறிப்பு :—திருவஞ்சைக்களத்தினில் வணங்கும்போது, அலைப்புறு மனைவாழ்க்கை சரிபவே "தலைக்குத்தலை மாலை" என்று தொடங்கிய திருப்பகத்தி னுட் குறிப்பு "இவ்வுலகினிற் பாச மடுத்த வாழ்க்கையை யறுத்திடவேண்டு" மென்று நம்பிகள் பாடி, அப்பதிகத்தின் 8-வது திருப்பாட்டில் "வெறுத்தேன் மனைவாழ்க்கையை விட்டடியேன்" என்று முத்தி விண்ணப்பம் செய்தனர். திருக்கயிலையில் இறைவர் அயன் முதலிய தேவர்களுக்கு அருள்செய்து "நம் ஊரனை உம்பர் வெள்ளானையி னுடனேற்றிக் கொண்டிங்கு வாரு"மென்று ஆணையிட்டருளியபடி அவர்கள் திருவஞ்சைக்களத்திற் றிருக்கோயில் வாயிலில் வந்திருந்தனர். நம்பிகள் பதிகத்தினை முடித்து வலம் வந்து திருவாயிலில் வரும்போது அவர்கள் "இறைவாது அருளிப்பாடு" எனப் போற்றி, "ஏவல்" என்று இறைவாது ஆணையை அறிவித்து நம்பிகளை வலங்கொண்டு யானையின் மீதேற்றினர். ஐவகை நாதமுமெழுந்தார்த்தன.

இவ்வாறு நம்பிகள் கழறிற்றறிவாரை மனத்தினிற் கொண்டு வெள்ளை யானையின் மீது திருக்கயிலையினை நோக்கிச் செல்கின்றபோது, இறைவரது திருவருளை எண்ணி யெண்ணி மனமுருகி வழியிடை இப்பதிகத்தை அருளிக்கொண்டே செல்கின்றனர். இறைவரது பேரருளினை வியந்து போற்றிய குறிப்புடையது இத்திருப்பதிகம்.

குறிப்பு :—இத்திருப்பதிகம் நம்பிகளது சரிதத்துக்குப் போதாரவாகிய அகச் சான்றுகள் பலவும் கொண்டு விளங்குகின்றது.

பதிகப்பாட்டு குறிப்பு :—(1) தானெனை ..பாடல் - இறைவன் என்னை தென் றிசைமீது தோன்றுக என்று ஆணையிட்டுத் திருநாவலூரில் பிறக்கும்படி படைத் தான் ; சிவன் படைப்பு என்பதும் குறிப்பு ; அது அறிந்து - அதனை முன் அறியாமலிருந்தேன் ; அவன் வல்வழக்கிட்டு ஆளாகக் கொண்டபின் அதனை அறிந்து ; தன் பொன்னடிக்கே நான் எ(ன்)ன பாடல், "அருச்சனை பாட்டே யாகும்" என்ற ஆணையின்படி பாடினேன். தன் பொன்னடிக்கே நான் பாடலாயினேன் ; என்ன - என் பாடல்கள் தாம் என்ன ? சிறியனவேயாம் ; நாயினேனைப் பொருட்படுத்தி - அப்பாடல்களுள் முத்தி விண்ணப்பம் செய்த (திருவஞ்சைக்களம்) பாடலினைக் கேட்டு நாயினேனையும் பொருளாகக்கொண்டு ; வானெனை...யானையருள் புரிந்து - அயன் முதல் வானவர் வந்து எதிர்கொள்ள வெள்ளை யானையினை அருளி ; இது சரித ஆதாரவாகிய அகச்சான்று ; இதனை, மேல் வரும் எல்லாப் பாடல்களிலும் குறித்துப பாடித் திருவருளின் பெருமையை நினைந்து நினைந்துருகிய நிலையினைக் காண்க. "எனை ஏறவைத்த ஆனை";—(2) "மால்விசும் பில் அழகானை யருள்புரிந்த துந்தரமோ?" (3) "அமரரெல்லாஞ், சூழவருள் புரிந்து தொண்டனேன்பர மல்லதொரு, வேழ மருள்புரிந்தான்" (4) "வெள்ளை யானை யின் மேல் என்னுடல் காட்டுவித்தான்" (5) "வெஞ்சின வானை தந்தான்" (6) "யானையேறி" (7) "யானை தந்தான்" (8) "மத்தயானை யருள்புரிந்து" (9) என்பன காண்க ; ஊனுயிர் வேறு செய்தான் - ஊன் - கருவி கரணங்களுடன் கூடிய உடல் ; உயிர் - ஆன்மா ; இவற்றை வேறு செய்தலாவது, அவை இவ்வுலகிற் சரித்த நிலையினின்றும் வேறு தன்மையனவாகச் செய்தல் ; ஊன் வேறு செய்தல் - பசுகர ணங்கள் பதிகரணங்களாகச் செய்தல் ; பகல் விளக்குப்போல அருளொளியினடங்கச் செய்தல் ; உயிர் வேறு செய்தல் - மாயா கருவிகளானறிந்து ஏகதேசப்படாமல் அரு ளொளியி னடங்கி வியாபகமாக அறியச்செய்தல். மேல், என்னுடல் காட்டுவித்தான் (5) என்கின்றமையால் நம்பிகள் இவ்வுலகிற் சரித்த திருவுடம்பினுடனே கயிலைக்குச் சென்று அங்கு வீற்றிருக்கின்றார் என்பது பெறப்படும் ; இதுபற்றியே "ஞானவா ரூரரைச் சேரரை யல்லது நாமறியோம், மானவ யாக்கை யொடும்புக் கவரை வள ரொளிப்பூண், வானவ ரானு மருவற் கரிய வடகயிலைக், கோனவன் கோயிற் பெருந் தவத் தோர்தங்கள் கூட்டத்திலே" (திருத்தொண் - திருவந் — 86) என்ற நம்பி யாண்டார் நம்பிகள் திருவாக்குமெழுந்தது. "பாதமேத்துவார், வேறுபட்ட சிந்தை யார், விண்ணி லெண்ண வல்லரே" (தேவா - பிள் - ஆனைக் - 2) என்றது காண்க. (2) ஆனை...கோல்லோ - முன் யானையினை உரித்ததோர் கோபமாகியது பகையருட் செயல். இப்போது யானைக்கும் என் பொருட்டு அருள்செய்தது பிரசாதமாகிய அருட்செயல். அப்பகை இதனுல் மீளும்படியோ ? - மாற்றும் கருத்தோ ? என்ற படி ; "முன்றான் கடனஞ்ச முண்ட வதனுலோ ? பின்றான் பரவைக் குபகாரஞ் செய்தாயோ ?" (கோடிக் - குழகர் - நம்பி) என்ற கருத்துக் காண்க. ஊனை உயிர் வேருட்டி - உயிரின் வீடுபேறு கருதி உடம்பினை வெறுத்து ; ஊன் - உடம்பு ; அது

பெயர் ; " ஊனைக்காவல் கைவிட்டு " (பின் - தேவா) ; ஊ - இறைச்சி ; ன் - சரிரை ; ஆகுபெயராய் உடலுக்காயிற்று ; ஒள்ளியான் - வாலறிவன் ; ஞான வொளிப் பிழம்பானவன் ;—(3) மனைவாழ்க்கை...தொண்டன் - நம்பிகளது சரித ஆதாரவாகிய குறிப்பு : சுந்தர வேடங்களால் - இறைவரது திருவேடங்களாகிய கவசகுண்டலங்களும் திருநீறும் கண்டிகையும் பிறவும் ; " சைவமெய்த் திருவின் கோலம்" (331); துரிசு - குற்றம்; "யான் செய்யும் துரிசுகளுக் குடனாகி " (நம்பி-ஆரூர் - பழம் பஞ்சரம் - 10); துரிசுகள் என்று நம்பிகள் கொண்ட செயல்கள் பற்றிச் சரித வரலாறுகளைக் காண்க. ஏகாரம் பிரிநிலை ; இவ்வாறு வருந்தி மனம் உருகுதல் பெரியோர் இயல்பு. சுந்தர வேடங்கள் - சுந்தரத்துக் கேதுவாகிய வேடம் பூண்டு அதற்குரிய நெறி நில்லாமல் , என்னை - எனக்கு ; உருபு மயக்கம். மந்திரமொன்றறியேன் என்றது மிகவியல்பாம் ; நெஞ்சமே - தம் நெஞ்சினைப் பார்த்துத் தாமே சொல்லி இரங்கியது ; மேல்வரும் பாட்டும் இக்கருத்துடையது ; வாழ்வு — உலக வாழ்வு ; அழுந்த - அதனுள்ளே அழுந்திய ; பரம் - தகுதி ;—(5) மண்...கண்டொழிந்தேன் - சரித ஆதாரவாகிய அகச்சான்று ; வழியடியார்கள் உயர்வு பெறுவர் என்பது என் அனுபவத்தில் கண்ட செய்தி ; ஒழிதல் - விடுதி ; துணிவுப்பொருள குறித்தது. பொன்னுலகம் - சிவனுலகம் ; பொன்-சிவம்; தேவர்கள் சூழ வெள்ளையானை யேறிச் செல்லும் நிலையின் குறிப்புமாம் ; மேல் விண்ணுலகத்தவர்கள்...உடல் காட்டுவித்தான் - என்பது காண்க : உடல் காட்டுவித்தான்- உடல் மட்டும் யானையின்மேல் நின்றது ; உயிர் சிவத்தைச் சார்ந்திருந்தது என்பது குறிப்பு;—(6) அஞ்சு - பஞ்சபூதச் சேர்க்கையாகிய உடல் ; ஒன்றிநின்று - அதனையே உறுதியாகச் சார்ந்து நின்று ; ஒன்றுதல்-அதுவே தானாய்ப் பற்றுக்கோடாக எண்ணி வாழ்தல் ; அஞ்சு - ஐம்பொறிகளுமாம் ; அலர் - பழிச்சொல். துஞ்சுதல் - இறத்தல் ; இவ்வுலகில் வாழ்ந்து இறப்பும் பிறப்பும் பட்டு உழலுதலைக் குறித்தது ;—(7) நிலை - உலக வாழ்வின் நிலை ; மலையிடை கடலால் வழிதந்தது - கயிலைக்குச் செல்லும் வழியினிடையே மலைகளின் வழியே முதலில் நம்பிகள் சென்றருளினர் என்பதும், பின்னர்க் கடல் வழி தந்திட, அது ஆறாகச் சென்றருளினர் என்பதும் கருதப்படும். அதன்பின் ஆகாய வழியே சென்றனர் என்பதும் ஆசிரியர் அறிவிக்க அறிகின்றோம் " விண்மேற் செலும் " (1263) " விசும்பெழ " (4264) ; இதனை ஒன்றற்கொன்று மாறுபடுவனவாகக் கொண்டு சில நவீன ஆராய்ச்சியாளர் மயங்குப. அரையன் கடலால் அலர் கொண்டு வந்திறைஞ்ச - வருணன் கடலரசன் அலைகளாகிய கைகளால் மலர்களை அலைத்து வந்து நம்பிகளது திருவடிகளில் இட்டு இறைஞ்சினன என்பதாம். கடலால் - தேவர்களோடு ஒருவனாக இருப்பவன் கடலின் உருவமாகிய கைகளினால் என்க. " கருணை வாரசினைத் தீரைக் கரங்களாற், றெருணெறி நீர்மையிற் சிரத்திற் றாங்கிட, வருணனுஞ் செய்தனன் முன்பு மாதவம்" (1395) என்ற கருத்து ஈண்டு வைத்துக்கண்டு, அடியார்களது சிறப்புக் காணத்தக்கது; மலர்கொண்டு இறைஞ்சி வருணன் கடலினூடே வழி தந்தனன் என்பதும், அதன் வழியே நம்பிகள் யானைமீது சென்றருளினர் என்பதும் ஆம். மேல் " வழிதந்தெனக்கு " என்பது காண்க ;—(8) அரவொலி - அர என்னும் சிவநாம முழக்கம் ; அரவொலி...இசைப்ப - நம்பிகளை எதிர்கொண்டு யானைமீதேற்றி உடன் சூழ்ந்து சென்ற தேவர்கள முழக்கிய முழக்கம் ; தேவர்கள், தவத்தினும் அறிவினும் மிக்கவர்களாதலின் அவருள் வேதாகமங்கள்-தோத்திரங்களில் வல்லவர்கள் இருந்தனர் என்க : சிரம் - முதன்மை ; அன்றி, இவ்வுலகில் உள்ளோர் நம்பிகள் வெள்ளை யானையின் மேற் செல்வதனைத் தம் கண் புலப்படுமெல்லை கண்டு திருவருளை வியந்து போற்றி

நின்று முழக்கிய முழக்கம் விண்ணெல்லாம் வந்து எதிர்ந்திசைக்க என்றலுமாம்;—(9) இந்திரன்...அருள் புரிந்து - சரித ஆதாரவாகிய சிறந்த அகச் சான்று; ஈண்டுக் குறித்த இந்திரன் முதலியோர் சிவதத்துவத்தின் பாற்பட்ட வித்தியா தத்துவத்தில் வாழ்பவர் என்பர். மந்திரமா முனிவர்......நந்தமர் ஊரன் என்றன் - இது திருமலைச்சிறப்பிற் கூறியபடி உபமன்னிய முனிவர் கூற்றுக்குச் சிறந்த பேராதரவாகிய அகச்சான்று; மந்திரமா முனிவர்-உபமன்னிய முனிவர்; இவன் ஆர் என - "அண்ணல் தாள் சிந்தியா" (27), இறைவரை நினைந்து, "வருகின்ற இவர் யார்" என்று வியானிந்துக் கேட்க, "நந்தமர் ஊரன்" என்றன் நோடித்தாண்மலையுத்தமனே—அதற்கு, "வருகின்றவன் நமது தமர் (அன்பன்) ஆகிய நம்பியாரூரன் என்று அவருக்கு உணர்த்த, அவர் "உணர்ந்து" ஏனை முனிவர்களுக்கு உணர்த்தியருளினர்; எனவே, வெள்ளையானையின் மேல் திருக்கயிலையினை நோக்கித் திருவருளால் வருகின்ற நம்பிகளது உடல் மட்டும் யானையின் மேலிருக்கச், சிந்தனை முழுதும் கயிலையில் அழுந்தி நிற்றலின், அங்கு இறைவரை உபமன்னியர் சிந்தித்ததும், இறைவர் அவருக்கு உண்ணின்று உணர்த்தியதும் அந்நிறைவாகிய தமது நினைவில் இங்கு நின்றபடியே நம்பிகள் உணர்ந்தனர் என்பதாம். கயிலாய யாத்திரையில் ஆளுடைய அரசுகளது திருவுடல் தேய்ந்து கிடக்கச் சிந்தை கயிலையைச் சென்று சேர்ந்த நிலை ஈண்டுக் கருதத் தக்கது. "அங்க மெங்கு மரைந்திடச், செப்பருங் கயிலைக் குலக்கிரி சிந்தை சென்றுறும்" (1625); நம்பிகளது உயிர் சிவத்தன்மை பெற்றிருந்தபடியால் அவர் அருளால் இவ்வாறு அறிந்து பாடவல்லவராயினர் என்க. இதன் அருமை பெருமைகள் மிகவும் போற்றத்தக்கன.—(10) ஊழி...உயர் - உகக்கடை முடிவுதோறும் அழுந்தாது உயரும்; ஆழி கடலரையா...அறிவிப்பதே - இப்பதிகப் பாட்டான பத்தினையும், வருணனே! நீ சுமந்து சென்று திருவஞ்சைக் களத்தப்பன் திருமுன்பு அறிவிக்கக் கடவாய் என்று ஆணையிட்டனர் என்க. அவ்வாணையின்படியே வருணன் அறிவித்தபடியால் கயிலை செல்லும் வழியிலே அருளப்பட்ட இப்பதிகம் இந்நிலவுலகில் அறியப்பட்டு வழங்கலாயிற்று என்பது. கடலரசன் திரைகளாகிய கைகள் மோதும் கரைமேல் திருவஞ்சைக்களம் உள்ளதாதலின் அப்பொருத்தம்பற்றி அங்கு இந்திரன் முதலிய தேவர்களுடனே வந்திருந்த வருணனுக்கு ஆணையிட்டபடியாம். கடலுக்கு உரியவன் வருணனாதலின் அவ்வழியே அவன் அதனைச் செலுத்தினன் என்க. ஒலியலைகள் ஆகாய வெளியின் மூலம் யாண்டும் பரவுமியல்புடையன என்னும் உண்மை, நீண்ட தொலைதூர மிடைப்பட்ட பேச்சுக்கள் வானொலியில் வாயுவினாற் செலுத்தப்பட்டுக் கேட்கப்படுதல் காணும் இந்நாள் மாக்கள் இவ்வரலாற்றில் ஐயங்கொள்ள இடமில்லை என்க; "கடல் அரையா!" என்றது அவ்வொலியலைகளைத் தன்வசம் வாங்கிப் புலப்படுத்தும் நிலையம் என்ற துணையே யமைந்தது; (Receiving Station); "கடலங் கரைமேன் மகோதை யணியார் பொழி லஞ்சைக்களத் தப்பனே" (தேவா); திருவஞ்சைக்களத் தப்பரிடம் நம்பிகள் செய்த விண்ணப்பம் திருக்கயிலையிற் கேட்டுக் கயிலாயநாதர் யானையினை யனுப்ப, அதன் மேலேறிக் கயிலை சென்றாராதலின், தாம் குறித்த இடத்தைச் சென்று சேர்ந்த நிலையினை உலகியல் முறைப்படி தாம் புறப்பட்ட இடத்துக் கறிவித்த முறையும் காண்க. (இருப்புப்பாதை வண்டி நிலையங்களின் வழக்கு).

4268. மாசில்வெண்மைசேர்பேரொளியுலகெலா மலர்ந்திடவளர்மெய்ம்மை
ஆசி லன்பர்தஞ் சிந்தைபோல் விளங்கிய மணிகிள ரணிவாயில்
தேசு தங்கிய யானையும் புரவியு மிழிந்துசே ணிடைச்செல்வார்
ஈசர் வெள்ளிமா மலைத்தடம் பலகடந் தெய்தினர் மணிவாயில். ௪௦

(இ - ள்) மாசில்...மலர்ந்திட-குற்றமற்ற வெண்மையோடு பொருந்திய திருநீறு போன்ற பெரிய ஒளியானது உலகெல்லாம் விரிய ; வளர்...மணிவாயில் - வளரும் மெய்ம்மையாகிய குற்றமில்லாத அன்பர்களுடைய சிந்தைபோல விளங்கிய அழகு மிகுந்த மலையின் அணிவாயிலின்கண் ; தேசு...செல்வார் - ஒளியினையுடைய யானையி னின்றும் குதிரையினின்றும் முறையே இருவரும் இறங்கி நெடுந்தூரம் செல்வார் களாகி ; ஈசர்...மணிவாயில் - இறைவருடைய பெரிய வெள்ளிமலையின் இடங்கள் பலவற்றையும் கடந்து அழகிய மணிவாயிலில் வந்து சேர்ந்தனர்.

(வி - ரை) மாசில் வெண்மைசேர் பேரொளி - இது இமயமால் வரையின் சாரலில் உள்ளமையாலும், கயிலைமலை பனியினால் மூடப்பட்டமையாலும் ஆவது. "பொன்னின் வெண்டிரு நீறு புனைந்தென" (11) என்றது காண்க. மாசில் வெண்மை என்றது அக்குறிப்புத் தருவது. மாசில் - குற்றத்தை நீக்கும் என்ற குறிப்புமுடையது; ஆசில் - குற்றமற்ற.

"உலகெலாம்" - இப்புராணத்திற்கு இறைவர் கொடுத்தருளிய முதன் மொழி; கயிலையினின்றும் போந்த நம்பிகள் மீளத்திருக்கயிலைக்கு வரும் அரிய பெரிய நிலை குறிக்கும் இடமாதலின் இங்கு அதனை வைத்தருளினர் என்க.

வளர்...வாயில் - அன்பர்களது சிந்தைபோல மலையின் வாயில் விளங்கிற்று. மெய்பற்றி வந்த உவமம். என்னை ? இறைவர் வீற்றிருப்பதனாலும், பெருமையினா லும், மெய்யொளித் தூய்மையினும் அன்பர் சிந்தை போன்றது என்க. 22வது பாட்டுப் பார்க்க; ஆசிலன்பர் - நம்பிகளும் சேரமானும் ஆகிய குறிப்பும், அகபாயர் என்ற குறிப்பும் காண்க. "ஓங்கு நிலைத்தன்மை"யாலும், "தீங்கு நெறியடையாத தடை" யாதலாலும், வாயில், அன்பர் சிந்தைபோல் விளங்கிற்று என்றலுமாம். (1165) முன் உரைத்தவை பார்க்க.

அணிவாயில் - இது மலையினை அணுக உள்ள தாழ்வரையின் வாயில் ; மேல் மணிவாயில் என்பது மலையின் மேல் உள்ள திருக்கோயிலின் வாயில்.

யானையும் புரவியும் இழிந்து - யானையினின்றும் குதிரையினின்றும் முறையே நம்பிகளும் சேரர் பெருமானும் இழிந்து : நீக்கப் பொருளில் வரும் ஐந்தனுருபுகள் தொக்கன.

சேணிடை - மலைத்தாழ்வரை வாயிலினின்றும் நெடுந்தூரம் ஏறிச் சென்ற பின்னரே கோயிலின் திருவாயில் அடையத்தக்கது.

தடம் - இடங்கள் ; தடை - என்பது பாடமாயின் வழியிடைப் பலவாயில்கள் என்க. 40

4269. அங்க ணைய்திய திருவணுக் கன்றிரு வாயிலி னடற்சேரர்
தங்கள் காவலர் தடையுண்டு நின்றனர் ; தம்பிரா னருளாலே,
பொங்குமாமதம் பொழிந்தவெள்ளானையினும்பர்போற் றிடப்போந்த
நங்கள் நாவலூர்க் காவலர் நண்ணினா ரண்ணலார் திருமுன்பு. ௪௧

(இ - ள்) அங்கண்...நின்றனர் - அவ்விடத்துச் சார்வாகிய திருவணுக்கன்திரு வாயிலில் விறலுள்ள சேரமான் பெருமானார் உள்ளே செல்லாமல் தடுக்கப்பட்டு நின்றனர்; பொங்குமாமதம் பொழிந்த வெள்ளானையின் - பொங்கும் கரிய மதநீர் பொழிந்த வெள்ளானையின் மேலே; தம்பிரானருளாலே - இறைவரது திருவருளினாலே; உம்பர்...காவலர் - தேவர்கள் சூழ்ந்து போற்றிட வந்த நந்தம் பெருமானாராகிய திருநாவலூர்த் தலைவராகிய நம்பிகள்; அண்ணலார் திருமுன்பு நண்ணினார் - இறைவரது திருமுன்பு சார்ந்தனர்.

(வி - ரை) திருவணுக்கன் திருவாயிலின்கண் சேரர் காவலர் தடையுண்டு நின்றனர்; நாவலூர்க்காவலர் திருமுன்பு நண்ணினார்; இவ்விரண்டினுக்கும் காரணம் அண்ணலார் திருவருளே யாம் என்பார் அதனை இரண்டிற்கும் இடையில் வைத்தனர்.

சேரர் காவலர் - நாவலூர்க் காவலர்-என்று இருவர்க்கும் ஒப்புக் கூறிய நயமும் கண்டுகொள்க. அன்பினால் இருவரும் ஒப்பர்; அழையாமை வந்ததும், ஒருவர் விண்ணப்பித்து அழைக்கப்பட்டு வந்ததும் இவர் தம்முள் வேறுபாடாம். (4273) பார்க்க.

தடையுண்டு - கோயினாயகராகிய நந்திபெருமானாரால் உள்ளே செல்லாமல் தடுக்கப்பட்டு.

நாவலர் காவலர் நண்ணினார் திருமுன்பு—என்பதும் பாடம். 41

4270. சென்று கண்ணுத றிருமுன்பு தாழ்ந்துவீழ்ந்தெழுந்துசேணிடைவிட்ட
கன்று கோவினைக் கண்டணைந் ததுவெனக் காதலின் விரைந்தெய்தி
நின்று போற்றிய தனிப்பெருந் தொண்டரை நேரிழை வலப்பாகத்
தோன்று மேனிய "ரூரனே வந்தனை" யென்றன ருலகுய்ய. ௪௨

(இ - ள்) சென்று...எழுந்து-உள்ளே சென்று இறைவரது திருமுன்பு வணங்கி விழுந்து பின் எழுந்து, சேணிடை ..எய்தி - நீண்டகாலம் நீளிடை விட்ட ஆன் கன்று தனது தாய்ப்பசுவினைக் கண்டு ஆர்வமுற அணைவது போல விரைவாகச் சென்று சேர்ந்து; நின்று...தொண்டரை - நேர்நின்று துதித்த ஒப்பற்ற பெரிய அத் திருத்தொண்டராகிய நம்பிகளைநோக்கி; நேரிழை...உலகுய்ய — உமையம்மையார் பொருந்திய வலப்பாகத் திருமேனி யுடையாராகிய இறைவனார் "நம்பி ஆரூரனே! உலகுய்ய வந்தனையோ ?" என்று அருளிச் செய்தனர்.

(வி - ரை) சேணிடை...அணைந்தது வென - ஆன் கன்றும் ஆவும் என்ற, இவ் வுவமை பலவிடத்தும் பயின்று வருவதொன்று; ஆயின் இதனை ஆசிரியர் எடுத்துக் கையாளும் முறைகள் மிகச்சிறப்புடையன. "ஈன்றவான் கனைப்புக் கேட்ட கன்று போல்" (214); "கன்று தடையுண் டெதிரழைக்கக் கதறிக் கனைக்கும் புனிற்றாப் போல்" (3882) என்ற இரண்டிடங்களிலும் இவ்வாறு நம்பிகளைக் கன்றாகவும் இறைவரை, அதனை உடனின்று ஊட்டிக் காக்கும் தாயாகவும் உவமித்த நியமம் காண்க. "கன்றகல் புனிற்றாப் போல்வர்" (761) என்றவிடத்து இறைவரைக் கன்றாகவும் கண்ணப்ப நாயனாரை அதனைக் காக்கும் தாயாகவும் அவ்விடத் தமைதி பெற உவமித்த நயமும் கண்டுகொள்க. அங்கங்கும் உரைத்தவையும் பார்க்க.

நேரிழை வலப்பாகத் தோன்று மேனியர் - "பொருப்பரையன் மடப்பாவை யிடப்பாலானை" முதலாகப் பயின்று வருவன ஐயன் சார்பு பற்றிக் கூறுவன. இங்கு "நேரிழை ஒன்றும் வலப்பாக மேனியர்" என்றது அம்மையாரது சார்பின் மிகுதி

பற்றிக் கூறியது. அம்மைக்கு ஐயன் வலப்பாகத்தர் என்பது. இரண்டும் ஒரு பொருளையே குறிப்பனவாயினும், ஈண்டு, அருள் பழுத்தொழுகும் மிகுதி பற்றி இவ்வாறு கூறினர். அம்மை - வீட்டுக்குடையவன் என்ற வழக்கும் காண்க.

ஊரனே உலதுய்ய வந்தனை - என்க ; உலகுய்யச் செய்து வந்தனையே ! என்று நன்மையருளி ஆட்கொண் டழைத்தபடி ; "மாதவஞ் செய்த தென்றிசை வாழ்ந்திட" (35) ; செய்து என்பது குறிப்பெச்சம். "என்றவந் தாயென்னு மெம்பெரு மான்றன் றிருக் குறிப்பே " (தேவா) ; ஊரன் - நம்பியாரூரன்.

தனிப்பெருந் தொண்டர் - நம்பிகளது ஒப்பற்ற சிறப்புடைமை குறித்தபடி. 42

4271. "அடியனேன்பிழைபொறுத்தெனையாண்டுகொண்டத்தொடக் கினைநீக்கி
முடிவிலாநெறிதரும்பெருங் கருணையென் றரத்ததோ?" வெனமுன்னர்ப்
படியு நெஞ்சொடு பன்முறை பணிந்தெழும் பரம்பரை யானந்த
வடிவு நின்றது போன்றின்ப வெள்ளத்து மலர்ந்தனர் வன்றொண்டர். சரு

(இ - ள்) அடியனேன்...என - அடியேன் செய்த பிழையினைப் பொறுத்து என்னை ஆளாகக்கொண்டு, பிழையினாற் போந்த அந்தத் தொடக்கினை நீக்கி, முடிவில்லாத மீளா நெறியாகிய திருவடிப் பேற்றினைத் தருகின்ற தேவரீரது பெரிய கருணையானது சிறிய எனது தரத்துக்குத் தகுதியாமோ ? என்று துதித்து ; முன்னர் - திருமுன்பு ; படியும்...எழும்-படிகின்ற உள்ளத்தோடு பலமுறையும் பணிந்து எழுகின்ற, பரம்பரை - அடுத்து அடுத்துத் தொடர்ச்சியோடு வரும் ; ஆனந்த...வன்றொண்டர் - ஆனந்தமே ஒரு வடிவெடுத்து நின்றது போன்று இன்ப வெள்ளத்தில் அழுந்தி வன்

(வி - ரை) அடியனேன் – என்தரத்ததோ ? - அடியேன் செய்த பிழை பெரிது ; அப்பெரிய பிழையினையும் பொறுத்து ஆட்கொண்ட தேவரீரது கருணை மிகப் பெரிது ; அத்துணைக் கருணை பெறுதற்கு அடியேன் எத்துணையும் தகுதியில்லேன் என்பதாம் ; இவ்வாறு தமது சிறுமையினையும் தகுதியின்மையினையும், இறைவரது கருணையின் பெருமையினையும் எண்ணி எண்ணிப் பாராட்டுதல் பெரியோரியல்பு ; " பித்தனேன் பேதையேன் பேயே னாயேன்...பிழைத்தனக ளெத்தனையும் பொறுத்தா யன்றே, யித்தனையு மெம்பரமோ, வைய ! வையோ ! வெம்பெருமான் றிருக்கருணை யிருந்த வாறே !" (அரசுகள் - தாண்) ; பிழை என்று நம்பிகள் கூறியவை கயிலையின் முன் நிகழ்ச்சியும், ' அடியேனலேன் ' என்ற வழக்கும், பிறவுமாம் ; தொடக்கு - பந்தம்.

பன்முறை பணிந்தெழும் பரம்பரை - வணங்கி எழுதற்கு விதித்த முறைகளின் மிக்கு ஆராமையால் பன்முறை பணிந்தெழுந்தார் ; பரம்பரையால் - என மூன்றனுருபு விரிக்க ; பரம்பரையாவது ஒன்றன்பின் அதுபற்றிய ஒன்றாகத் தொடர்ச்சியாய் வருவது. இடையறுதொழுகும் நீரோட்டம் போல என்றுவமை கூறுவர்.

ஆனந்த வடிவு நின்றது போன்று-ஆனந்தமென்பதே ஓர் வடிவெடுத்து நின்றது போல; ஆனந்தம், அனுபவிப்போனும் அனுபவிக்கப் படுவோனும் ஆனந்தமும் என்ற உணர்வு இன்றி அதுவே மயமாக நிற்பது என்பதாம்.

மலர்தல் - சிவானந்த வெள்ளத்தில் மூழ்கித் திளைத்தல். 43

4272. நின்ற வன்றொண்டர் நீரணி வேணியர் நிறைமலர்க் கழல்சாரச்
சென்று " சேரலன் றிருமணி வாயிலின் புறத்தின" னெனச் செப்பக்

குன்ற வில்லியார் பெரியதேவரைச்"சென்றுகொணர்"கெனவவரெய்தி
"வென்றி வானவர்க் கருளிப்பா"டெனவவர்கழலுெழ விரைந்தெய்தி,

4273. மங்கை பாகர்தக் திருமுன்பு சேய்த்தாக வந்தித்து மகிழ்வெய்திப்
பொங்கு மன்பினிற் சேரலர் போற்றிடப், புதுமதி யலைகின்ற
கங்கை வார்சடைக் கயிலைநா யகர்திரு முறுவலின் கதிர்காட்டி
"இங்கு நாமழை யாமைநீ யெய்திய தேன் ?"னென வருள்செய்தார்.

4272. (இ - ள்) நின்ற...சென்று - முன் கூறியவாறு நின்றவராகிய வன்றொண்டப் பெருமான் கங்கையைத் தரித்த சடையவராகிய இறைவரது நிறைந்த மலர் போன்ற திருவடிகளினருகே சென்று சேரலன் தேவரீரது கோயிலின் மணி யாணியன்ற திருவணுக்கன் திருவாயிலின் புறத்தில் உள்ளான் என்று விண்ணப்பிக்க; குன்றவில்லியார்...கொணர்க என - மேருவை வில்லாகவுடைய பெருமான் திருநந்தி தேவரை நோக்கி அவரைச் சென்று கொண்டு வருக என்று ஆணையிட; அவர்எய்தி...என - அவர் போய் ஞான வெற்றி பொருந்திய சேரலனுருக்கு (உள்ளே வர) ஆணை என்று அறிவித்த உடனே; அவர்...எய்தி - அவர் (இறைவரது) திருவடியைத் தொழுவதற்கு விரைந்து சார்ந்து, ௪௮

4273. (இ - ள்) மங்கை...போற்றிட - உமையம்மையாருடைய வலப்பாகத் திருமேனியாது திருமுன்பு சென்று தூரத்தே நின்று தொழுது மகிழ்ச்சியுற்று மேன் மேல் அதிகரிக்கின்ற அன்பினாலே சேரலர் துதித்திட; புதுமதி...கயிலை நாயகர் - பிறைச் சந்திரன் சஞ்சரிக்கும் கங்கை சூடிய நீண்ட சடையினை உடைய கயிலையினிறைவர்; திருமுறுவலின்...அருள் செய்தார் - திருப்புன் முறுவலையுடைய இனிய ஒளியினைக்காட்டி "நாம் அழையாமல் இங்கு நீ வந்தது என்னை ?" என்று அருளிச் செய்தனர். ௪௯

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிவு கொண்டன.

4272. (வி - ரை) கழல் சாரச் சென்று - திருவடியின் அருகே சென்று வணங்கி; இது விண்ணப்பம் செய்யும் முறை.

நீரணி வேணிய! நின்மலர்க்கழல் சாரச்சென்று - என்பது பாடமாயின், வேணியரே - உமது திருவடி சாரும்படி இங்குப் போந்து என்றுரைத்துக் கொள்க; ஆயின் சேரனார் இறைவரது வினாவுக்கு விடையாக அறிவிக்கும் விண்ணப்பத்தை நோக்க, முந்தியபாடமே பொருந்துவதாகக் காணப்படுகின்றது.

சேரலன் புறத்தினன் எனச் செப்ப - இது நம்பிகள் தமது தோழராகிய சேரமானார் பொருட்டு இறைவர்பால் செய்துகொண்ட விண்ணப்பம். இஃது இறைவர் தாமே நினைப்பித்துக் கூட்டுவித்த நற்சார்பின் பயனாகக் கிடைத்த பெரும் பேறு என்க; உலக நிலையிலும் சார்கின்ற நற்சார்புகள் அவ்வந் நிலைக்கேற்றவாறு நற்பயன்றருதல் காணப்படும். உயர்ந்தோர் சார்பும் நன்னடையும் இவ்வாறு சிறந்த பயன்றருவன.

பெரியதேவர் - நந்தியெம் பெருமானார்; நந்தி - அபர சிவனே எனப்படுவார்; நந்தி - சிவன் பெயராதலுமறிக; வானவர்க்கு - சேரனுருக்கு; சேரர்களுக்கு வானவரம்பர் எனப் பெயர் வழங்குதல் குறித்தது.

அருளிப்பாடு - ஆணை; உள்ளே வரும்படி இறைவரது ஆணை பிறந்துள்ளது என்பதாம்.

கழல் தொழ-இறைவரது திருவடிகளைக் கண்டு தொழும்பொருட்டு; விரைந்து-விரைவு ஆர்வங் குறித்தது. கழல் வீழ்ந்து - என்பது பாடமாயின், பெரிய தேவரை வணங்கி என்க.

விரைந்தெய்தி-வந்தித்துப்-போற்றிட என்று மேல்வரும் பாட்டுடன் முடிக்க.

நின்மலர்க்கழல் - நிரைமலர்க்கழல்—என்பனவும் பாடங்கள். 44

4273. (வி - ரை) போற்றிட - துதித்து நிற்க.

புதுமதி - தேய்மதியின்பின் புதிதின் முளைத்து விரியநின்ற ஒற்றைக்கலையுடைய மதி; பிறை.

அலைகின்ற கங்கை - அலைதற்கிடமாகிய கங்கை.

திருமுறுவலின் கதிர்காட்டி - திருப் புன்முறுவலின் இள ஒளியினைக் காட்டி; முறுவல் - சிறுநகை; வரவு அங்கீகரித்த கிலைகாட்டும் மெய்ப்பாடு. இறைவரது முறுவலே புரமெரித்தது; இங்கு அவ்வாறன்றி அருட்புன்முறுவலாயிற்று என்பது; "குமிண்சிரிப்பும்" - "சிரித்த முகம் கண்ட" (தேவா)

"நாம் அழையாமை நீ இங்கு எய்தியதென்னை?" - இஃது இறைவர் சேரலனாரை நோக்கி வினவியருளியது. 45

4274. அரச ரஞ்சலி கூப்பிநின் "றடியனே னாரூரர் கழல்போற்றிப்
புரசை யானைமுன் சேவித்து வந்தனன்; பொழியுநின் கருணைத்தெண்
டிரைசெய்வெள்ளமுன்கொடுவந்துபுகுத்தலிற்றிருமுன்பு வரப்பெற்றேன்;
விரைசெய் கொன்றைசேர் வேணியா! யினியொரு விண்ணப்பமுள தென்று,

4275. "பெருகு வேதமு முனிவருந் துதிப்பரும் பெருமையா! யுனையன்பாற்
றிருவு லாப்புறம் பாடினேன்; திருச்செவி சாத்திடப் பெறவேண்டும்
மருவுபாசத்தையகன்றிடவன்றொண்டர்கூட்டம்வைத் தா"யென்ன,
அருளு மீசருஞ்"சொல்லுக" வென்றன; ரன்பரும் கேட்பித்தார்.

4274. (இ - ள்) அரசர் அஞ்சலி கூப்பிநின்று - சேரனார் சிரமேற் கைகூப்பி நின்று; அடியனேன்...வந்தனன் - அடியேன் நம்பியாரூராருடைய திருவடிகளைப் போற்றிக்கொண்டு அவர் அருளினால் ஏறிவந்த புரசையானையின் முன்னே அவரைச் சேவித்துக்கொண்டு வந்தேன்; பொழியுநின்...வரப்பெற்றேன் - தேவரீரது மிக்குப் பொழிகின்ற கருணையாகிய தெள்ளிய அலையினையுடைய பெருவெள்ளமானது அடியேனை உந்திக்கொண்டுவந்து இங்கே புகுத்தியதனாலே தேவரீரது திருமுன்பு வந்து சேரும் பேறு பெற்றேன்; விரைசெய்...என்று-மணமுடைய கொன்றைமலர் மாலையினை யணிந்த சடையினையுடைய பெருமானே! மேலும் ஒரு விண்ணப்பம் உளது" என்று கூறி, சு

4275. (இ - ள்) பெருகும்...பெருமையாய்! - பெருகுகின்ற வேதங்களும் முனிவர்களும் துதித்தற்கரிய பெருமையுடையவரே!; உனை...வைத்தாய் என்ன - அன்பினாலே தேவரீரைத் திருவுலாப்புறப் பாட்டுப் பாடினேன்; அதனை அருள் செய்து திருச்செவி சாத்திக் கேட்டருள வேண்டும்; பொருந்திய பாசத்தினின்று நீங்கிட வன்றொண்டரது கூட்டத்தினைச் சாரவைத்தவரே! என்று விண்ணப்பிக்க; அருளும்...என்றனர் - அருளே புரிகின்ற பெருமானும் சொல்லுக என்றருளினர்; அன்பரும் கேட்பித்தார் - அன்பராகிய சேரனாரும் பாடி அவரைக் கேட்பித்தனர்.

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு பொருள்மேனின்று ஒருமுடிபு கொண்டன.

4274. (வி - ரை) அடியனேன்...வரப்பெற்றேன் - புன்முறுவல்பூத்து இங்கு நாம் அழையாமை நீ வந்ததென்? என்று வினவியருளியதற்குச் சேரர் கூறிய விடை : முதலாவது, அடியேன் இங்கு வரக்கருதி வரவில்லை ; நம்பியாரூரைப் பிறிவின்றிச் சேவித்துவருதலையே கருத்தாகக்கொண்டு யானையின்முன் அவரைச் சேவித்துக்கொண்டே வந்தனன்; அச்சேவை அடியேனைத் தேவரீரது திருவணுக்கன் திருவாயில்வரை கொண்டுவந்து விட்டது ; இரண்டாவது, இனி அதன்மேல் இங்குத் திருமுன்பு வந்த செயலும் அடியேனது செயலாவதன்று ; தேவரீரது அருளிப்பாடு என்னும் கருணைப் பெருவெள்ளம் என்னை உந்திக்கொண்டு வந்து திருமுன்பு புகுத்தியது. இரு வழியும் அடியேன் இங்கு வரவேண்டும் என்ற முனைப்பின்றித் திருவருட்செயலாகவே வரப்பெற்றேன் என்றதாம் ; இஃது அரசரது சொற்பெரு வன்மையும், தற்போதமிழந்த பேரடிமைத் திறமும் ஆம் ; இவை கண்டு பின்பற்றி உலகம் உய்யத்தக்கது. புரசை - யானைக் கழுத்திடு கயிறு. "உடையா னடியா ரடியா ருடன் போய்ப், படையா ரழன்மேனி பதிசென்று புக்கேன், கடையார நின்றவர் கண்டறிவிப்ப, வுடையான் வருகென வோலமென் றானே" திருமந் II. 211

தெள் - திரை - செய் - வெள்ளம் - நோடுவந்து புகுந்தலின் - அலையினாலும், பெருவெள்ளமாம் தன்மையாலும், அசைவைப்பட்டுப புகுதப்பெற்றேன் என்றது அவரது திருவருளின்றி நிகழ்ச்சி யொன்றுமில்லை என்றபடி. இறைவர் அருளின்படி நந்தியெம்பெருமான் "வானவர்கள் அருளிப்பாடு" என்று அழைத்தருளிய செயலைக் குறித்தது

கொன்றைசேர் வேணியாய் - சிவனுக்குரிய சிறப்பாகிய கொன்றைத் திருவடையாள மாலை. நியதியாய்த் தாம் வழிபட்ட திருவஞ்சைக்களத்தினின்றும் வழிப்பட்டுப் போந்தமையால் அது அப்பதியின் தல மரமாதலும் குறிப்பு.

புகுதலின்—என்பதும் பாடம். 46

4275. (வி - ரை) பெருநூல்...துதிப்பார் பெருமையாரி - தேவரீரது பெருமை துதிகதற்கும் அரியது. உமது வாய்மையறியாவிய பெரிய வேதங்களாலும், உம்மையே உணர்ந்து உள்ளந் தழுவிய பெரு முனிவர்களாலும் துதித்தற்கரியது ; ஆயின் வேறுயாவர் துதிக்க வல்லார்?

அன்பால் உனைத் திருவுலாப்புறம் பாடினேன்-அவ்வாறாகவும் அறிந்துவைத்தும், திருவுலாப்புறம் பாடி உன்னைத் துதித்தேன். என்னை? எனின், அஃது அன்பின் திறத்தலாகியதன்றி நான் துதிப்பேன் என்ற எண்ணத்தலாகியதன்று என்பது.

திருவுலாப்புறம் - புறப்பாட்டின் வகையுள் ஒன்றாகிய திருவுலா என்னும் நூல். புறத்திணைகள் பன்னிரண்டனுள், புறப்புறம் என்னும் பாடாண் திணையுள் வருவது. அதன் துறைகள் 47-ல் கடவுள்மாட்டு மானிடப் பெண்டிர் நயந்த பக்கம் என்ற துறையுள் முற்பகுக்கப்பட்டது. இதுவே முதலிற் பாடப்பட்டதாதலின் ஆதியுலா என்றும், சிவஞானமே கருத்தாகப பதிபோகத்தால் கயிலை நாயகர்மேல் அருளப்பட்டதாதலின் திருக்கயிலாய ஞானவுலா என்றும், தெய்வத்தன்மை வாய்ந்ததாதலின் தெய்வவுலா என்றும் பலவாறும் விதந்து போற்றப்படுவது.

திருச்செவி சாத்திடப் பெறவேண்டும் - கேட்டருளுதல் வேண்டும். கேட்டலாவது அருள்புரிதல்.

மருவு...வைத்தாய் - மருவுபாசம் - ஆன்மாவுடன் சகசமாயுள்ள ஆணவமலமும் வாசனாமலமும் ; வன்றொண்டர் கூட்டம் வைத்தாய் - முன்னர் அவரை நினைப்பித்துச் சாரச்செய்த திருவருட்செயல் (3791) ; மருவுபாசத்தை அகன்றிட என்றது

தேவரீரது வழிபாட்டினால் ஆணவமல நீக்கமும் சிவப்பேறும் பெற்ற நிலையும், அடியார் கூட்டச் சார்வினால் வாசனாமல நீக்கமும் பெற்ற நிலையும், என்ற ஞானசாத்திரம் 12-ம்சூத்திரத்தின் உண்மை விளக்கங் கூறியபடி ; மருவுதல் - தங்கி நிற்றல்.

அருளும் ஈசரும் சொல்லுக என்றனர் - அருளும் ஈசர் - தமது செயல் யாவும் அருளேயாக இயற்றும் இறைவர்; ஐந்தொழில்களும் அருட்செயலேயாவன என்பது ஞானநூற் கருத்து. முன்னர் இவரது உள்ளத்துள் நின்று பாடுவித்து அருளிய ஈசர் என்பதும் குறிப்பு. இனி, அதனைக் கேட்டு அருள்புரிய நின்ற இறைவர் என்பதும் குறிப்பு. அவ்வருள் மேற்பாட்டிற் கூறப்படும்.

அன்பரும் கேட்பித்தார் - அன்பர் - சேரமானார். அன்பினாற் பாடினேன் என்ற குறிப்பு. கேட்பித்தார் .''கேளாதே எல்லாம் கேட்டார்'' என்றபடி பிறர் கேட்பிக்காமலே இருந்தவாறே எல்லாவற்றையும் கேட்கவல்ல இறைவரைத், தாம் சொல்வது போலவும், அவரைக் கேட்கச்செய்வது போலவும், நிகழ்த்துதல் அன்பின் பெருக்காலாவதாம் என்பது குறிப்பு. பரிவுடன் கேட்பித்த என்று மேற்பாட்டிற் கூறுவதும் இக்குறிப்புடையது.

உலைப்போற்றி—என்பதும் பாடம். 47

4276. சேரர் காவலர் பரிவுடன் கேட்பித்த திருவுலாப் புறங்கொண்டு
நாரி பாகரு நலமிகு திருவரு ணயப்புட னருள்செய்வார்
"ஊர ளுகிய வாலால சுந்தர னுடனமர்ந் திருவீருஞ்
சார நங்கண நாதராந் தலைமையிற் றங்கு"மென் றருள்செய்தார். சஅ

(இ - ள்) சேரர்காவலர்...கொண்டு-சேரமான்பெருமாள் அன்புடனே கேட்பித்த திருவுலாப்புறப் பாட்டினை ஏற்றுத் திருவுளங்கொண்டு; நாரிபாகரும்...அருள் செய்வார் - அம்மைபாகராகிய இறைவரும் நன்மை மிகுந்த திருவருளின் விருப்பத்துடனே அருளிச்செய்வாராகி ; ஊரனாகிய ..அருள செய்தார் - நம்பியாரூரனாகிய ஆலாலசுந்தரனுடனே கூடி விரும்பியிருந்து நீவிர்கள் இருவீரும் சார நமது கணங்களுக்கு நாயகராகிய தலைமை பெற்று இங்குத் தங்குவீராக என்று அருளிச்செய்தனர்.

(வி - ரை) திருவருள் நயப்பு - திருவருளால் மேற்கொண்ட பெருவிருப்பம்.

நாரிபாகரும் - அருள் மிகச் செய்யும் முகமாக என்பது குறிப்பு. " நேரிழை வலப்பாகத் தோன்று மேனியர் " (4270) ; " மங்கை பாகர் " (4273) என ஈண்டு முன்னரும் இவ்வாற்றாற் கூறியமை காண்க.

ஊரனாகிய ஆலாலசுந்தரனுடன் - இங்கு முன் ஆலாலசுந்தரனாக இருந்து, நமது ஆணையின்படி தென்றிசையிற் சென்று, நம்பி ஆரூரனாகி மீண்ட என்பது. ஆகிய - ஊரன் என்ற பெயருடைய தொண்டனாகிய ; ஆரூரன் என்பது ஊரன் என நின்றது. (32-4277 பார்க்க.) இருவீரும் - இணைபிரியாது என்ற குறிப்புடையது.

தங்கும் - மீளாநிலை பெற்றுத் தங்கியிருப்பீராக.

சாருநங் கணநாதர்தம்—என்பதும் பாடம். 48

4277. அன்ன தன்மையி லிருவரும் பணிந்தெழுந் தருடலை மேற்கொண்டு
மன்னும் வன்றொண்ட ராலால சுந்தர ராகித்தாம் வழுவாத
முன்னைநல்வினைத் தொழிற்றலை நின்றனர் ; முதற்சேரர் பெருமானும்
நன்மை சேரர்கண நாதரா யவர்செயு நயப்புறு தொழில்பூண்டார்.

(இ - ள்) அன்ன...மேற்கொண்டு - அத்தன்மையிலே இரு பெருமக்களும் பணிந்து எழுந்து இறைவரது திருவருளினைத் தலைமேற்பூண்டு ஏற்றுக்கொண்டு; மன்னும்...நின்றனர் - நிலைபெற்ற வன்றொண்டப் பெருமான் ஆலாலசுந்தரராகித் தாம் வழுவாதியற்றிய முன்னை நல்வினையின் தொழிலினில் நிலைநின்றனர்; முதற்சேரர் பெருமானும்...தொழில் பூண்டார் - முதன்மையுடைய சேரரும் நன்மை சேரும் சிவகணநாதராகி அவர்கள் செய்யும் விருப்பமிக்க திருத்தொண்டினை மேற்கொண்டனர்.

(வி - ரை) அன்னா...மேற்கொண்டு - முன்கூறிய அவ்வாறு; முன் பாட்டுக்களில் இவ்விருவரையும் பற்றிக் கூறிய நிலை; அருள் தலை மேற்கொள்ளுதலாவது - அருளியவாறே மேற்கொண்டொழுகுதல்.

மன்னும்...நின்றனர் - நம்பிகள் தமது முன்னை நிலையில் உள்ள ஆலாலசுந்தரராகிய நிலையிற்செய்த திருத்தொண்டு பூண்டு நின்றனர். மலர்மாலை சாத்தியும், திருநீறு எடுத்து ஏந்தியும் வரும் செயல்கள். (31)

முதற்சேரர்...பூண்டார் - இது சேரமான் பெருமாள் மேற்பூண்டு கயிலையிலமர்ந்த நிலை. அவர் செய்யும் தொழில் - அவர் - அக்கணநாதர்கள்; அவர் தாம் முன் செய்த என்றுரைக்கலுமாம். அவை முன் (3755 - 3770 - 3756 - 3771) உரைக்கப்பட்டன. நயப்பு - அன்படன் கூடிய விருப்பம். முதல் - மூவேந்தருள் முதன்மை. (4264). 49

4278\. தலத்து வந்துமுன் னுதயஞ்செய் பாவையார் சங்கிலி யாரென்னும்
நலத்தின் மிக்கவர் வல்வினைத் தொடக்கற நாயகி யருளாலே
அலத்த மெல்லடிக் கமலினி யாருட னனிந்திதை யாராகி
மலைத்த னிப்பெரு மான்மகள் கோயிலிற் றந்தொழில் வழிநின்றார். ௫௦

(இ - ள்) தலத்து...மிக்கவர் - இந்நிலவுலகத்தில் வந்து முன் அவதரித்த பாவையார் - சங்கிலியார் என்ற பெயர்பூண்ட நன்மைமிக்க இருவரும்; வல்வினை...அனிந்திதையாராகி - வலிய வினைபபாசம் நீங்க உமையம்மையாரது திருவருளினாலே முன்னை நிலையில், செம்பஞ்சூட்டிய மெல்லிய அடியினையுடைய கமலினியாருடனே அனிந்திதையார் என்ற பெயருடைய சேடியர்களாகி மலைமகளாராகிய அம்மையாரது கோயிலில் தாம் முன்னர்ச் செய்த திருத்தொண்டின் வழியே நிலைபெற்றனர்.

(வி - ரை) நம்பி ஆரூரர் ஆலாலசுந்தரராகித் தமது முன்னைத் திருத்தொண்டின் வழியே நின்றதனை முன்னுரைத்த ஆசிரியர், இதுவரை கூறிவந்த காவிய வரலாற்றினை முடித்துக் காட்டும் வகையாலே, கயிலையினின்றும் ஆணையின்படி ஆலாலசுந்தரருடனே அவர் பொருட்டுத் தென்றிசையிற்றோன்றி அவரை மணந்த இரு சேடியர்களும் மீண்டு தத்தமது முன்னைத் தொழில் வழிநின்றதனை இப்பாட்டாற் கூறிமுடிக்கின்றார். தம்தொழில் - முன்னை நிலையிற் செய்த திருநந்தனவனத் தொழில் செய்தலும், மாலை தொடுத்துச் சாத்துதலும், இறைவியார் திருமுன்பு பாடலாடல் பயிலுதலும் முதலாயின. (33 - 34 - 35). அலத்தகம் - செம்பஞ்சு; இங்கு அதன் குழம்பைக் குறித்தது.

வல்வினைத்தொடக்கற - "காதல் மாதரும் காட்சியிற் கண்ணினர்" (35) என்றதனாற் றொடங்கிய வில்வினைத் தொடர்பு.

கமலனியாருட னனிந்திதையாராகி மலைத்தனிப் பெருமான் மகள் கோயிலில் - வழி நின்றார் - தோற்ற முறையில் இக்காவிய முகப்பில் 1. ஆளுடைய நாயகி (33),

2. அனிந்திதை, 3. கமலினி (34) என்று கூறினர்; இக்குக் காவிய நிறைவிடத்தில் (சங்கார) ஒடுக்க முறையில் 3. கமலினியாருடன்; 2. அநிந்திதையாராகி; 1. மலைத் தனிப்பெருமான் மகள் கோயிலில் என்று இம்முறை கூறிய தெய்வக் கவி நலம் கண்டு கொள்க.

தலத்து - தலம் - நிலவுலகம்; வல்வினைத்தொடக்கு - கருமகாண்ட விளைவு; அலத்த - செம்பஞ்சு ஊட்டிய.

வழிநிற்றல் - அவ்வழியே நிலைபெறுதல். 50

4279. வாழி மாதவ ராலால சுந்தரர் வழியிடை யருள்செய்த
ஏழி சைத்திருப் பதிகமிவ் வுலகினி லேற்றிட வெறிமுந்நீர்
ஆழி வேந்தனும் வருணனுக் களித்திட, வவனுமவ் வருள்சூடி
ஊழி யிற்றனி யொருவர்தந் திருவஞ்சைக் களத்திலுய்த் துணர்வித்தான்.

(இ - ள்) வாழி...திருப்பதிகம் – வாழ்வுதரும் மாதவராகிய ஆலாலசுந்தரர் திருக்கயிலையினை நோக்கி வரும் வழியிலே அருளிச்செய்த ஏழிசைத் திருப்பதிகத்தினை; இவ்வுலகினில்...அளித்திட - இவ்வுலகத்தில் யாவரும் உய்யும் பொருட்டுப் பரவச்செய்ய; அலை எறியும் முந்நீர்க்கடலின் அரசனாகிய வருணனுக்குத் தந்து அவர் ஏவியிட; அவனும்...உணர்வித்தான் - அவ்வருணனும் அவ்வருளினைச் சிரமேற் றாங்கி ஊழியிலும் அழியாத ஒருவராகிய சிவபெருமானது திருவஞ்சைக்களத்தில் சேர்த்து உணர்வித்தனன். (அதனால் அத்திருப்பதிகம் இங்கு வழங்கலாயிற்று).

(வி - ரை) ஆலாலசுந்தராராகிய நம்பிகள் திருவஞ்சைக்களத்தினின்றும் இறைவ ரருளிய வெள்ளை யானையின்மேல் திருக்கயிலையினை நோக்கிச் செல்லும் வழியிடைத் "தானெனை முன் படைத்தான்" என்று தொடங்கும் திருப்பதிகத்தினை ஓதிக் கொண்டே சென்றனர் என்பது முன் உரைக்கப்பட்டது (4167). ஆயின், அத்திருப் பதிகம் இந்நில வுலகில் வந்து வழங்குவதாமாறு யாங்ஙனம்? என்னும் ஐயத்தினை நீக்குதற்கு எடுத்து வாலாறு கூறியது இத்திருப்பாட்டு.

உய்த்துணர்வித்தான் - நம்பிகள் அப்பதிகத்தினை வருணனுக்கு அளித்து, "இதனைக் கொண்டு சென்று அஞ்சையப்பர்க் கறிவிக்க" என்று ஆணையும் இட்டாராதலின், அவனும் அவ்வாணையினைச் சிரத்திற்சூடி அவ்வாறே திருவஞ்சைக்களத்தில் உய்த்து உணர்த்தினனாக, இவ்வாறு வழங்கலாயிற்று என்பது. "இசைந் தேத்திய பத்தினையும், ஆழி கடலரையா அஞ்சையப்பர்க் கறிவிப்பதே" (பதிகம். 10) என்ற பதிகப்பகுதி இதற்கு அகச்சான்றாகிய ஆதாரவாகும்.

வழியிடை - திருவஞ்சைக்களத்தினின்றும் திருக்கயிலைக்குச் சேரும் வழியில்.

ஏழிசைத் திருப்பதிகம் - "தானெனை முன் படைத்தான்" என்று தொடங்கும் திருநொடித்தான்மலைத் திருப்பதிகம். (4267 பார்க்க) "ஏழிசை யின்றமிழா லிசைந் தேத்திய பத்தினையும்" (பதிகம் 10).

வருணனுக் களித்திட - ஆழிகடலரையா! பத்தினையும் அஞ்சையப்பர்க் கறி விப்பதே (பதிகம் 10).

ஊழியிற் றனி ஒருவர்-"ஊழிதொ றூழி முற்றும் முயர்" என்று கூறிய பதிகக் குறிப்பு; உணர்வித்தல் – அறிவித்தல். (பதிகம்). 51

4280. சேரர் காவலர் விண்ணப்பஞ் செய்தவத் திருவுலாப் புறமன்று
சாரல் வெள்ளியங் கயிலையிற் கேட்டமா சாத்தனார் தரித்திந்தப்

பாரில் வேதியர் திருப்பிட வூர்தனில் வெளிப்படப் பகர்ந்தெங்கும்
நார வேலைசூ ழுலகினில் விளங்கிட நாட்டினர் கலத்தாலே. ௫உ

(இ - ள்) சேரர்...திருவுலாப்புறம் - சேரர்பெருமான் விண்ணப்பித்தருளிய அந்தத் திருவுலாப் புறப்பாட்டினை; அன்று...தரித்து-(விண்ணப்பித்த) அன்று சாரல்களையுடைய வெள்ளியங் கயிலை மலையினில் உடனிருந்து கேட்ட - மாசாத்தனார் - அதனைத் தரித்து ; இந்த...பகர்ந்து - இந்த நிலவுலகத்தில் வேதியர்கள் வாழும் திருப்பிடவூரில் வெளிப்படச் சொல்லியருளி ; எங்கும்...கலத்தாலே - நீர்மிகுதியுடைய கடல் சூழ்ந்த இந்நிலவுலகினில் எங்கும் நன்மையாலே விளங்கிட நாட்டியருளினர்.

(வி - ரை) நம்பிகளது பதிகம் வந்து வழங்கிய வரலாற்றினை விளக்கிய ஆசிரியர், அஃதற்றுயின், கயிலையில் இறைவரது திருமுன்பு சேரனார் கேட்பித்த திருவுலாப்புறம் இந்நிலவுலகில் வந்து வழங்குமாறு யாங்ஙனம் ? என்னும் ஐயத்தினை நீக்குதற்கு, அவ்வரலாறு கூறியது இத்திருப்பாட்டு.

சேரர்...திருவுலாப்புறம் - சேரனார் திருகயிலையில் இறைவர் திருமுன்பு கேட்பித்த திருவுலா. (4275).

கயிலையிற் கேட்ட மா சாத்தனார் - கயிலை மலையில் அன்று உடனிருந்து கேட்ட மாசாத்தனார். ஐயனார்-அரிகர புத்திரர் என வழங்கப்படுவர். தரித்து - முற்றும் மேற்கொண்டு எடுத்து; சாத்தன்-தீயோரைத் தண்டிப்பவன்; சாத்திரங்களில் வல்லவன்.

பிடவூர்தனில் வெளிப்படப்பகர்ந்து - எங்கும் விளங்கிட நாட்டினர் - பிடவூரினில் வெளிப்படப் பகர்ந்த வகையினாலே உலகில் விளங்கிடச் செய்தருளினர்.

ர - நீர். நாரம் - நார்களின் தொகுதி - மக்கட் கூட்டம் எனினுமாம். 52

தலவிசேடம் :—திருப்பிடவூர் - இது தேவார வைப்புத்தலங்களுள் ஒன்று. திருச்சிராப்பள்ளியினின்றும் பிரம்பலூருக்குப் போகும் கற்சாலைப் பெருவழியில் திருச்சிராப்பள்ளியினின்றும் 15 நாழிகையளவிலுள்ள சிறுகனூருக்கு வட மேற்கே இரண்டு நாழிகை யளவில் அடையத்தக்கது. துறையூருக்குக் கிழக்கில் 12 நாழிகையிலும் அடையலாம். இப்போது திருப்பதட்டூர் - என வழங்குகிறது ; இக்கோயிலினுள் பழங்காலக் கல்வெட்டுக்கள் பல உண்டு அவற்றால், பிடவூர் நாட்டுப் பிடவூர் என்பது இதன் பெயர் என விளங்குகின்றது. கல்வெட்டுக்களில் இதற்கு மூவாயிர நல்லூர் - பிரம்மதேயம் - என்றும் பெயர் கூறப்படுகிறது. " உறந்தைக் குணது, அருங்கடிப் பிடவூர், அறப்பெயர்ச் சாத்தன் " (புறம் 395-19-21) எனவருமாறு இவ்வூர் உறையூருக்குக் கிழக்கில் உள்ளது ; இங்கு மாசாத்தனார் கோயில் விளக்கம். ஆனால் இப்போது கிலமாக உள்ளது. இவர் திருவுருவத்தில் கையில் திருவுலா ஏடு அமைந்தபடி உள்ளது ; இவர் அரங்கேற்றிய ஐயனார் என வழங்கப்படுவர் என்பது கன்ன பரம்பரை ; திருவஞ்சைக்களத்திலும் சாத்தனார் கோயில் தாபிக்கப்பட்டுள்ளதும் காண்க.* மூலமூர்த்தி சுயம்பு ; பதஞ்சலி வியாக்ரபாதர் இவர்களுக்குச் சரி உபாதி நீங்கின இடம். பிரமன் 12 இலிங்கங்கள் வைத்துப் பூசித்த பதி. பிரமனது பெருவடிவம் பெரு வனப்பினதாய் முதற் சுற்றில் உள்ளது. முருகப் பெரு

* இன்னும் இதுபற்றிய பல வரலாறுகள் " ஞானசம்பந்தம்" ஏழாவது ஆண்டு மலரில் " தமிழ் " நூல்களும் கல்வெட்டுக்களும், என்ற கட்டுரையில் அன்பர், திரு. சுந்தரேச வாண்டையார் எழுதியுள்ளவற்றுள்ளும், அன்பர், திரு. பஞ்சாதம் பிள்ளை எழுதிய தலவாலாற்றுள்ளும் காண்க.

மான் படை பெற்றமையால் இது திருப்படையூர் எனப்பெறும். பங்குனி ௴ 18 தேதி முதல் 21 தேதி வரை சூரிய பூசை காணப்படும்; கைலாய நாதர் கோயில் தேர் போலக் கல்லால் நல்ல பணி செய்யப் பட்டுள்ளது. தில்லை மூவாயிரவர் பூசித்தது; இந்திரன் - மால் - மண்டூக முனிவர் - ஏழு கன்னியர் இங்குப் பூசித்துப் பேறு பெற்றனர். குறிப்பு: இங்கு உள்ள மாசாத்தனார் கோயிலை உள்ளவாறே திருப்பணி செய்து செப்பனிடுவது சிறந்த சிவபுண்ணியமாகும். சுவாமி-பிரமபுரீசர் - கைலாய நாதர்; அம்மை - பிரமநாயகி - கௌரி; தீர்த்தம்-புலிப்பாய்ச்சித் தீர்த்தம்; இதில் ஆடி 18 தேதி சிறப்பு. இதன் நீரை எடுத்து வீட்டில் வைத்து வழிபடுவோர் பலர்; வியாக்ரபாதர் வழிபாடு பற்றி இப்பெயர் பெற்றது போலும்.

கோயில் கொண்டருளுதல் - கோயிலில் நிலைபெற விளங்க வீற்றிருத்தல்.

வேறு

4281. என்று மின்பம் பெருகு மியல்பினால்
ஒன்று காதலித் துள்ளமு மோங்கிட
மன்று ளாரடி யாரவர் வான்புகழ்
நின்ற தெங்கும் நிலவி யுலகெலாம். ருக

(இ - ள்) எக்காலத்தும் எவ்விடத்தும் சிவனது இன்பம் பெருகுகின்ற இயல்பினால் காதலிக்கத்தக்க தொரே பொருளாகிய இறைவனைக் காதலித்து உயிர் சிவனடிக்கீழ் ஓங்கும்படி, அம்பலவாணரதும் அவரடியார்களதும் ஆகிய பெரும் புகழ்கள் உலகத்தில் என்றும் நிலவி நின்றது. "அம்மையு மிம்மையு முறுதி பயக்கத் தக்க சிவகதை எது" என்பது முதலாக மன்னர் பெருமான் அநபாயச் சோழரால் வினவப்பட்ட வற்றுக்கு அளித்த விடைகளையே உட்பொருளாகக் கொண்டு, சைவ சித்தாந்த மெய்ந்நெறியின் முழு முதல்வனாகிய திருச்சிற்றம்பலவனது சிறப்பியல்பு பொதுவியல்புகளும், அவனை வழிபாடு செய்யும் நெறிகள் முதலாயினவும் விளக்கு முகத்தால், பெருங்காப்பிய உறுப்பாகிய மங்கலங் கூறவான் புகுந்து, "ஆதியு மந்தமு நடுவு மங்கலம், ஓதிய மொழிகளா னுரைப ராயிடின், ஏதமி லிரு நிலக் கிழத்தி யின்புற, நீதியம் பனுவல்க ணிலவு மென்பவே" என ஆசிரியர் பதஞ்சலியார் மாபாடியத் தொடக்கத்து ஓதியவாறு, இந்நூலின் முகத்தும் இடையினும் மங்கலங்கூறிய ஆசிரியர், காப்பியத் தலைவர் வரலாற்றை முடித்துக் காட்டி நூலிறுதியினும் மங்கலங் கூறுவது வாயிலாக நூன்முகத்துக் கூறிய உட்பொருளை முடிந்தது முடித்தல் என்பதனால் நினைப்பிக்கின்றார்.

என்றுமின்பம்...உலகெலாம் - என்றும் இன்பம் பெருகும் இயல்பினால் - இடையறவின்றி இன்பம் வளருதற் கேதுவாகிய சாதனங்களோடு; ஒன்று காதலித்து - ஏகமாகிய சிவபரம் பொருளையே விரும்பி; உள்ளமும் - உயிரும்; ஓங்கிட - கூன் நிமிர்ந்து செம்மை பெறும்படி; மன்றுளார் அடியார் அவர் வான்புகழ் - சிற்றம்பலவருடைய தொண்டர்களது சிறந்த புகழ்ச்சரிதமானது; உலகெலாம் நிலவி எங்கும் நின்றது - உலகங்களெல்லா வற்றிலும் விளக்கமுற்று யாங்கணும் நிலைபெற்றது. எ - று).

(வி - ரை) காலத்தான் வரையறைப்படாது பெருகும் இன்பம் என்பார் என்றும் இன்பம் பெருகும் என்றும், ஒன்றற்கொன்று இன்பத்தாற் பெருகும் இயல்பினையுடையன சரியை கிரியை முதலான சாதனமென்பார் இன்பம் பெருகும் இயல்பினால்

என்றும் கூறியருளினர். இயல்பு என்பது ஆகுபெயராய்ச் சரியை முதலிய சாதனங்களை உணர்த்தி நின்றது. ஆல், ஒடு உருபின் பொருட்டு; ஒன்று - சிவபரம்பொருள்; உள்ளம் - உயிர் ; சாதி ஒருமை; ஆணவ மலத்தால் அறி விச்சை செயல்கள் மறைப்புண்டு இலதென்றற் குரித்தாய், பின் சகலத்தில் எழு பிறப்பின் முடங்கிக் கிடந்த உயிர் என்பது தோன்ற இழிவு சிறப்பும்மை தந்து உள்ளமும் என்றார். காதலித்தென இச்சை வியாபரித்தல் கூறவே, இனம் பற்றி அறிவும் தொழில்களும் வியாபரித்தலும் பெறப்படும். பெறவே அவை மூன்றும் ஏகமாய மெய்ப்பொருள் ஒன்றனையே விடயித்து நிற்கும் நிலையே ஓங்குநிலை என்றவாறாயிற்று. அவர் - பகுதிப் பொருள் விகுதி ; "சிவனவன்" என்புழிப் போல. இனி, மன்றுளாரும் அடியாரும் ஆகிய அவர் எனக்கொண்டு ஆண்டாளும் அடியாருமாகிய அவ்விரு திறத்தார் புகழ் என்றலும் ஒன்று. இறைமைக் குணங்கள் முழுவதும் உடைய இறைவன் புகழும் அவன் அடியார் புகழுமே "பொருள் சேர் புகழாம்" ஆதலின் வான்புகழ் என்றார்.

"இன்றிச் சமயத்தி னல்லதமற் றேனைழையுடன், ஒன்றசொலி மன்றத்து நின்றவாரா்—இன்றிங்கே, அங்க முயிர்பெறவே பாடு மடியவரார், எங்குமிலை கண்டாயிது" (65) என்பது திருக்களிற்றுப்படி ; இவ்வாறு ஆசிரியர் எடுத்துக் கொண்ட நூலை முடித்துக் காட்டிய பொருளுடை மங்கலம் நின்று நிலாவுக உலகெலாம்—இவை ஸ்ரீமத் முத்துக்குமார முனிவர் பெருமான் அருளிய குறிப்புக்களாகும்.

என்றும் இன்பம் பெருக மியல்பினால் - சரியை முதலிய மூன்று சாதனங்களினால் ; இயல்பினாற் காதலித்து - என்று கூட்டுக.

ஒன்று - சிவம் ; உள்ளம் - உயிர் ; உள்ளம் - காதலித்து - ஓங்கிட - என்க. காதலித்து-காதலித்தலால். "ஏகமாய் நின்றே யிணையடிக ளொன்றுரைா"(போதம்).

ஓங்குதல் - ஞானம் பெறும் வழியில் நிற்றல். "கண்ணுக்குக் காட்டுமுளம் போல்" (போதம்).

இவை "உலகெலாம்" என்ற முதற் பாட்டிற் கூறிய சாதனங்களின் முற்றுப் பேற்றினை உணர்த்தி முடித்தல் காண்க. ஒன்று - "அங்கையாற் காளாமது" (அற். அ - 11) என்ற அம்மையார் வாக்கின் படியுமாம்.

மன்றுளார் - "அம்பலத்தாடுவான்" (1).

புகழ் நின்றது - இப்புராணத்தினுட் கூறிய புகழ்கள் நிலைத்து வாழிய என்பதும் குறிப்பு. வான் - பெருமை.

நின்றது எங்கும் நிலாவி உலகெலாம் - காலத்தாலும் இடத்தாலும் முற்றிய நிலை பெறு குறித்தது. உலகெலா முணர்ந்தோதற்கரியவன் - என்று தோற்று முறையில் விரிந்த இந்நூல் எங்கு நிலவியுலகெலாம் - என்று ஒடுக்க முறையில் முடிவுறுதல் காண்க.

இவ்வாறு முதலிடை கடை என்ற மூன்றிடங்களிலும் வைத்த "உலகெலாம்" என்றமும் மங்கலங்களும் வாழ்த்துக்களும் ஒரே யாப்பில் அமைந்த தெய்வக் கவி அமைதியும் கண்டு கொள்க.

(குறிப்பு :—இடைச் செருகல்களாகிய 28 பாடல்களை நீக்கினால் "சோதி முத்து" என்றது புராணத்தின் நடுவில் அமைவது காணலாம்.) 53

வெள்ளானைச் சருக்கம் - சரிதச் சுருக்கம் :—திருவாரூர் நம்பிகள் சேரமானாரிடம் விடைபெற்றுத் திருமுருகன் பூண்டி வழியாகக் கொங்குநாடு கடந்து திருவாரூரை அடைந்து பலநாள் இறைவனை வழிபட்டிருந்தனர்.

அந்நாள்களில் நிலவுலகில் பத்தி முதலானது, அன்பு நீரிற் பணைத்து வளர்ந்து நம்பிகளது செம்பொன்மேனி வனப்பே வடிவாக ஓங்கி, இருவினைக்களைகட்டெறிந்து, கதிர்களைப் பரப்பி, முடிவில்லாத சிவபோகம் முதிர்ந்து முறுகி விளைந்தது.

அக்காலத்தில் நம்பிகள் சேரமான் பெருமாளை மிகவும் நினைந்து இறைவரை வணங்கி, அவரைக் காணும் பொருட்டு மிக்க விருப்புடன் மலைநாட்டில் அணைவதற்குச் செல்வாராயினர்; இடையிலே உள்ள திருப்பதிகள் பலவற்றையும் வணங்கிச் சென்று கொங்கு நாட்டினில் அணைந்து திருப்புக் கொளியூரினைச் சேர்ந்து மாட வீதியில் சென்றனர். அங்கு எதிர் எதிராகச் செல்வ மனைகளிரண்டனுள், ஒரே காலத்தில் ஒன்றில் மங்கல இயங்களின் ஒலியும், ஒன்றில் அழுகை ஒலியும் எழுந்தன ; அதனைக் கண்டு இரண்டும் உடனே நிகழ்வது என்?" என்று அங்குள்ள மறையோர்களை நம்பிகள் வினவியருளினர்; அதற்கு அவர்கள் அந்தணச் சிறுவர்களிருவர், ஐயாண்டு வந்த பிராயத்தினர், குளித்த மடுவில், ஒருவனை முதலை விழுங்கியிடப் பிழைத்து வந்த சிறுவனுக்குப் பூனூல் அணியும் கலியாணம் நிகழ்வது இந்த மனை ; மற்று அந்த மனையில் எழுவது மகனை இழந்தவர்களது அழுகை என்றுரைத்தனர். இதனைக் கேட்டு இரங்கிய திருவுள்ளத்துடன் நம்பிகள் நின்றருளினர். அவரைக் காணும்படி நீண்ட நாட்கள் சிந்தை வைத்த மறையவனும் மனைவியும் அவரது வரவு கேட்டலும், மகனை யிழந்த சோகமும் தெரியாதே விரைந்து வந்து அவரது திருவடிகளை இறைஞ்சினர் ; துன்ப நீங்கி முகமலர்ச்சியுடன் தொழுகின்ற அவர்களை நோக்கி, "இன்ப மகனை இழந்தவர்கள் நீரோ?" என்றருள, அவர்கள் வணங்கி "அது முன் காலத்து நிகழ்ந்து போனது ; எங்கள் அன்பு பழுதாகாமல் தேவரீர் எழுந்தருளும் பேறு பெற்றோம்; முன்னே வணங்க முயல்கின்றோம்" என்று தொழுதனர் ; மைந்தனை இழந்த துயரினையும் மறந்து நான் வந்தணைந்ததற்கே அதனினும் மிக்க பதி அன்பு காரணமாக இவர்கள் சிந்தை மகிழ்ந்தனர்; ஆதலின் திருவருட்டுணை கொண்டு அந்த முதலை வாயினின்றும் அந்த மகனை அழைத்துக் கொடுத்தபின்பே அவிநாசி எந்தை பாதம்பணிவேன் என்றருளி இடர் களைவாராகி, அந்த மடு எங்கே என்று கேட்டறிந்து, அங்குச் சென்று அவ்விடத்தே நின்று, முதலை, மகனைக் கொண்டு வரும்படி "எத்தான் மறக்கேன்" என்று தொடங்கித் திருப்பதிகம் பாடினர். அதனுள் "உரைப்பாருரை" என்ற நான்காவது திருப்பாட்டு முடியா முன்னரே கழிந்த இரண்டாண்டு வளர்ச்சியும் நிரம்பச்செய்து மறலி, அம்மகவை முதலை வாயினிற்றருவித்தான். அது கரையில் மகனைக் கொண்டுவந்து உமிழ்ந்தது. அது கண்டு உருகிய தாயானவள் ஓடிச் சென்று அவனை எடுத்து வந்து, தான், கணவனுடன், உயிர் கொடுத்த திருவாளராகிய நம்பிகள் திருவடிகளில் வீழ்ந்து வணங்கினள். தேவர்கள் மலர் மழை பெய்தனர். மண்ணோர் அதிசயித்தனர் ; மறையவர்கள் மகிழ்ந்தனர் ; நம்பிகள் அம்மறையவனையும் மகனையும் உடன் கொண்டு இறைவர் திருக்கோயிலுக்குச் சென்று பணிந்து திருப்பதிகம் நிறைவாக்கித் துதித்துச் சிறுவனுக்குப் பூணூல் அணிவித்துக் கலியாண முடித்துக் கொடுத்தருளினர்.

அதன் பின் மலைநாட்டுக்குச் செல்வாராகி, நம்பிகள், மேற்சென்று இடையில் பதிகள் தோறும் வணங்கி நாடும் காடும் கான்யாறும் பல கடந்து மலைநாட்டினை அணைந்தருளினர். இவ்வாறு முதலைவாய்ப் பிள்ளை யழைத்து நம்பிகள் அணைகின்றார் என்ற செய்தியினை அந்நாட்டடியார்கள் சேரனார்பால் ஓடி அறிவிக்க, அவர் அவர்க்கெல்லாம் பொன்னும் மணியும் காசும் தூசும் பொழிந்தளித்தார். சிந்தை மகிழ்ந்து களிகூர்ந்து செய்வதொன்று மறியாது, என் ஐயன் அணைந்தான்!; அண்ணல்

அணைந்தான் !; என் தலைவன் அணைந்தான்!; என்று பலவாறும் ஓகை முரசம் சாற்று வித்தார் ; அமைச்சர்களைப் பயணம் புறப்பட ஏவினர் ; யானை மேல் எதிர்கொண்டு புறப்பட்டுச் சென்று நம்பிகளை எதிர்கொண்டு வணங்கினர். அவருந் தொழுது கலந் தனர்.இருவரும் அன்பு மீக்கூர இருமேனிகளும் ஒன்றாந் தன்மையிற்றழுவிக்கொண் டனர்; சேரனார் நம்பிகள்பாற் றிருவாரூர்ச் செல்வம் வினவி மின்புற்றனர். அதன்பின் நம்பிகளை யானையின் மேலேற்றிச் சேரனார், பின் ஏறியிருந்து அவருக்குக் குடை கவித் தனர் ; சேனைகளும் அடியாரும் ஆர்ப்பெடுக்க வந்து நகர்வாயிலை யடைந்து அலங் கரிப்புகளுடன் ஆடல் பாடல் முதலியவற்றுடன் கூடிய நகரத்தின் ஊடே சென்று அரண்மனைவாயிலை அணைந்தனர். அந்த யானையினின்றும் இருவரும் இறங்கி இரு புறமும் அந்தணர் வாழ்த்தக், கவரிகள் நிரைநிரை வீச மாளிகையின் நடுவுட் புகுந் தனர். அடல் விடையென நம்பிகளைச் சேரனார் தமது சிங்காசனத்தில் எழுந்தருளச் செய்து உரிமை நல்வினைகளாகிய பூசனை பலவும் செய்து பரிசனங்கள் மகிழ நிதிபல சிந்தினர்.

இவ்வாறு சேரனார் மகிழ நம்பிகள் எழுந்தருளியிருந்த நாளில் அந்நாட்டில் உள்ள அரனார் பதிகள் பலவற்றையும் உடன்பணிந்தேத்தி மகோதையிற் புகுந்திருந்தருளி னர். பின் ஒருநாள், சேரனார், திருமஞ்சனத் தொழில் தொடங்கிட, அவர் துணைவ ராகிய நம்பிகள் பண்டுநாம் இறைவரைப் பிரிந்து போந்த நன்னெறியின் எல்லை குறுகத் திருவஞ்சைக்களஞ் சார்ந்தனர். இறைவர் கோயிலினை வலங்கொண்டு திரு முன்பு வீழ்ந்து வணங்கினர் ; அலைப்புறு மனைவாழ்க்கை சரியத் தமிழ்மாலை தொடங்கி "இவ்வுலகினிற் பாசம் அறுத்த வாழ்க்கையையறுத்திடவேண்டு" மென்ற உட்குறிப்பினுடன் பாடியருளினர். இக்குறிப்புத் திருக்கயிலையில் அம்மையாருடன் கூட வீற்றிருந்த இறைவர் திருவுள்ளத்தில் ஏற்றுக்கொண்டருளி, அயன் முதலாகிய தேவர்களை நோக்கி " வெள்ளானையும் உடன்கொண்டு சென்று நம்மூரனை அதன் மேலேற்றிக் கொண்டிங்கு வாரும் " என்றருளிச் செய்தனர். அவ்வண்ணமே அவர்கள் திருவஞ்சைக் களத்தினை அணைந்து கோயிலை வலங்கொண்டு வணங்கித் திருவாயிலில் நெருங்கினர் ; அப்போது திருப்பதிகம் முடித்து வழிபட்டுப் புறப்பட்ட நம்பிகள் திருவாயிலை அணைந்தனர் ; தேவர்கள் அவரை வலம்வந்து வணங்கி இறைவரது அருளிப்பாட்டினை அறிவித்தனர். இறைவரது " ஏவல் " என்று கேட்டபின் நம்பிகள் வேறு செயலின்றி அதனை எதிர் ஏற்க, அவரை வணங்கி வெள்ளானையின் மேலேற்றினர். ஐந்து துந்துபிகளும் முழங்கின ; தேவர்கள் பூமழை பெய்தனர் ; நம்பிகள் தமது தோழராகிய கழறிற்றறிவாரை மனத்தி னுட் கொண்டு சார்ந்தனர். இவ்வாறு வேழம் நடந்தது.

இச் செயலைச் சேரனார் உணர்ந்து அப்போதே சாரநின்றதோர் குதிரையினை மேல்கொண்டு திருவஞ்சைக்களம் சார ஆகாயத்திற் செல்லும் தமது துணைவரைக் கண்டனர் ; நிலத்தில் நிற்கலாற்றாதவராய் விதியாலே அப்பரியின் செவியினில் இட்டமாஞ் சிவமந்திரம் ஓதினர். அது விண்மேல் எழப்பாய்ந்து நம்பிகள் ஏறிச் சென்ற யானையினை அணுகி முறையாக வலங்கொண்டு அதன் முன்பு சென்றது ; சேரனாருடன் சென்ற படைவீரர் தமது கண்ணுக்குப் புலப்படு மெல்லைவரைத் தமது தலைவரைக் கண்டுகொண்டிருந்து, பின் காணாமையால், அன்பினால் பிரிவாற்றாத வராய்த் தத்தம் சுரிகையை உருவி முறை முறை உடல் வீழ்த்து வீரயாக்கை யினைக் கொண்டெழுந்து சேரனாரைச் சார முன்சென்று சேவகம் ஏற்று உடன் சென்றனர்.

இவ்வாறு செல்லும் இடையில் நம்பிகள் "தானெனை முன் படைத்தான்" என்று தொடங்கும் திருப்பதிகத்தினைப் பாடிக் கயிலாய பதியினைத் துதித்துக்கொண்டு சென்றருளினர்; இத்தன்மையில் இவர்கள் கயிலைமலைத் தாழ்வரைத் திருவாயிலில் சார யானையினின்றும் குதிரையினின்றும் இறங்கினர். அம்மலைத் தடம் பலவற்றையும் கடந்து திருவணுக்கன்திருவாயிலினை அடைந்தனர். அங்குச் சேரர் காவலர் தடையுண்டு நின்றனர். நாவலர் காவலர் உட்சென்று இறைவர் திருமுன்பு சென்று நெடுந்தூரத்துப் பிரிந்துவிட்ட ஆன் கன்று தாய்ப்பசுவினைக் கண்டணைந்தது போன்று பெருவிருப்புடன் விரைந்து சேர்ந்து நின்று போற்றினர். அவரை நோக்கி அம்மைபங்காகிய இறைவர் அருணோக்கம் செய்து "ஊரனே உலகுய்யச் சென்று வந்தனையோ?" என்றருளிச் செய்தனர்; நம்பிகள், அடியேனது பிழையினைப் பொறுத்து ஆட்கொண்டு, பிழையால் நேர்ந்த அத்தொடக்கினை நீக்கி மீளா நெறிதரும் தேவரீரது பெருங்கருணை அடியேன் பெறுந்தரமுடையதோ? என்று ஊன்றிய நெஞ்சினொடு பலமுறையும் பணிந்தெழுந்தனர்; பரம்பரையில் வரும் ஆனந்த வடிவம் நின்றதுபோலப் பேரின்ப வெள்ளத்துள் திளைத்தனர்; பின்னர் இறைவர் கழல்சாரப் பணிந்து நின்று, "சேரலன் திருவாயிற் புறத்தினுள்ளான்" என்று விண்ணப்பித்தனர். இறைவர் நந்தியெம்பெருமானாரைச் சென்று அவரைக் கொணர்க என ஆணையிட, அவரும் அவ்வாறே சென்று அருளிப்பாட்டினை அறிவித்தனர். சேரலனார் பணிந்து, உடனே திருமுன்புவந்து தூரத்தே வணங்கிப் போற்றினர். இறைவர் புன்முறுவல் செய்து "இங்கு நாம் அழையாமை வந்ததென்னை" என்று அருளியிட, அவர், "அடியேன் நம்பிகளது கழல்போற்றி வந்தனன்.

ாம் உந்திக்கொடு வந்து புகுத்தியிடத் திருமுன்பு வரப் பெற்றேன் என்று கூறிப், பின்னரும், "பெருமானே! இனியும் ஒரு விண்ணப்பமுண்டு; தேவரீரைத் திருவுலாப்புறம் பாடினேன்; திருச்செவி சாத்தியருளுதல் வேண்டும்; அடியேனது பாசநீங்கிட வன்றொண்டர் கூட்டத்தைத் தந்தருளினை!" என்று விண்ணப்பித்தனர். அதுகேட்ட இறைவர் "சொல்லுக" என்றருள் செய்ய, அன்பரும் கேட்பித்தார். இறைவர் திருவுள்ளக்கருணை செய்து "ஆலால சுந்தருடன் அமர்ந்து நீவிர் இருவீரும் நமது கணநாதர் தலைவர்களாய்த் தங்குங்கள்" என்று அருள் செய்தனர்.

அதனைத் தலைமேற்கொண்டு வன்றொண்டர் முன்புபோல ஆலால சுந்தராகித் தாம் வழுவாதியற்றிய முன்னை நல்வினைத் தொழிலிற் றலைநின்றனர்; சேரனாரும் கணநாதராய் அவர் செய்யும் அன்புடைத் தொழில் பூண்டார்; நிலவுலகில் வந்தவதரித்த பரவையார் சங்கிலியார் என்ற இருவரும் ஆளுடைய நாயகியாரருளாலே கமலினியாருடன் அனிந்திதையாராக ஆகிப் பார்வதியம்மையார் கோயிலிற் றமது முன்னைத் தொழில்வழி நின்றனர்.

ஆலாசுந்தரர் தாம் வழியில் அருளிச் செய்த திருப்பதிகத்தினைக் கடலரசனும் வருணனுக்கு அளித்து, அதனைக் கொண்டு சென்று திருவஞ்சைக்களத்தப்பருக்கு அறிவிக்கும்படி ஆணையிட, அவனும் அவ்வாறே கொண்டு உய்த்தது அறிவித்தனன்; சேரலனார் அருளிய திருவுலாப்புறத்தினை அன்று உடனிருந்து கயிலையிற் கேட்ட மாசாத்தனார் அதனைத் தரித்து இவ்வுலகில் வேதியர் திருப்பிடவூரினில் வெளிப்படப் பகர்ந்து உலகிடை நாட்டினர்.

மன்றுளா ரடியா ரவர் வான்புகழ், நின்ற தெங்கு நிலவி யுலகெலாம்!

**கற்பனை :—** (1) சிவயோக முதிர்ந்து முறையேபோது சிவபோகம் விளையும். (4220)

(2) முன்னர்க் கொடுங்கோளூரில் இருக்குங்கால் திருவாரூரை நினைந்துகொண்டு, "ஆரூரனை மறக்கலு மாமே" என்று பாடி, அங்கு நின்றும் திருவாரூரினை அடைந்த நம்பிகள், இப்போது திருவாரூரிலிருக்கும்போது சேரர்பெருமானை நினைந்து கொண்டு மலைநாட்டுக்குப் புறப்படுகின்றார் ; (4231) இது "பாரோடு விசும்பாட்சி எனக்குமது பாதமலர்" (3906) என்று இடைவிடாது நம்பிகளை நினைந்திருந்த சேரலனாரது நினைப்பின் உறைப்பினாலாகியது ; சேரனாருடன் நம்பிகளைக் கயிலைக்குச் செலுத்தும் சிவசத்தியின் விளைவுமாம்.

(3) சிவனருள் நிறைந்த பெரியோர்கள்பால் வைத்த அன்பு, எல்லாம் செய்ய வல்லது ; சில ஆண்டுகள்முன் இறந்த மகனை எண்ணிச் சோகத்துள் மூழ்கி அழுது கொண்டிருந்த (புக்கொளியூர்) மறையோனும் மனைவியும், தாம், நெடுநாள் காண ஆவல்கொண்டு தியானித்திருந்த நம்பிகள் தாமே தம் வாயிலின் வந்ததனைக் கேட்டவுடன் சோகத்தினை மறந்து அவரை வணங்கி மகிழ்ந்தனர். அதுவே ஆகத் தாம் முன் இழந்த மகனையும் மீளப் பெற்றனர் (4237).

(4) இறைவரைப பிரிக்கெய்தும் சேய நன்னெறி குறுகிட, இவ்வுலகவாழ்வில் வெறுப்பும் சிவனைச் சேரும் விருப்பும் சிவனருட்சத்தியால் விளையும் (4256 - 4257). "பற்றுநான் மற்றிலேன் கண்டாய்...சிவபுரத்தரசே – வார்கட லுலகில் வாழ்கி லேன் கண்டாய் வருகவென் றருள்புரி யாயே" (வாழாப்பத்து - திருவா) என்றது சிவயோக நிலைகூடிய பெரியோரது மனநிலையின் பண்பு.

(5) சிவாஞ்ஞையின்வழி யானையேறிச் சிவனகர் புகப்போகும் நம்பிகள் கழறிற் றறிவாராகிய தமது தோழரை நினைந்து சென்றனர் ; இது சிவன்பாலன்பினாற் பிணைக்கப்பட்ட தூய நட்பின்றிறம் ; ஏனை நட்புகளின் நினைவுகள் பாசசம்பந்தப் பட்டுப் பிறவிக் கேதுவாவன; இது பிறவி போக்கி முத்திக்கேதுவாதல் கண்டு கொள்ளத் தக்கது ; இவ்வகைத்தாகிய நட்பினை உலகர் பெருக்க முயலுதல் வேண்டும் (4264).

(6) திருவஞ்சைக்களத்திலிருந்து நம்பிகள் வானவீதியில் செல்லும்போது தம்மை நினைந்ததனைச் சேரனார் கொடுங்கோளூரி லிருந்தவாறே உணர்ந்தனர் ; இஃது அவர் சிவன்பால் வரம்பெற்றுக் கழறிற்றறிவாராய் நின்ற பண்பினாலும், நம்பிகளது சிவம்பற்றிய தூய சிந்தனையின் நட்பாகிய உறைப்பாலுமாகியது.

(7) சேரனாரது பரி, ஆகாய வீதியில் எழப்பாய்ந்து சென்ற செயல், இட்டமாஞ் சிவமந்திரத்தின் வலிமையாலும், சேரனாரது தவவலிமையாலும், பெற்ற வரத்தின் வலிமையாலுமாகியது (4264).

(8) நம்பிகளது முத்திவிண்ணப்பத் திருப்பதிகம் முடியுமுன் தேவர்களும் வெள்ளானையும் வாயிலில் வந்து நின்ற செயல் சிவனருள் செய்கின்ற விரைவினைப் புலப்படுத்துவது; பெரியோர்களது நினைவினை இறைவர் உடனே நிறைவாக்கியருளுவர்.

(9) சிவாஞ்ஞைவழிச் சார்பவர் சிவன் சந்நிதியில் உடனே சார்குவர். அவ்வாறன்றித் தம் நினைவின் முயற்சியாற் சார்பவர்கள் அவனது ஆணைநிகழும் வரை காத்திருந்து அருள்வந்த பின்னரே சார்குவர் (4209 - 4274).

(10) சிவனடியார்களை வானோரும் வணங்கி ஏவல் கேட்பார்கள் (4262-4279)

(11) சேரனாரது பிரிவாற்றாமையால் அவரது சேனைவீரர்கள் சுரிகையால் உடல் வீழ்த்தி வீரயாக்கையுடன் எழுந்து அவர்பாற் சேவகம் ஏற்று அவருடனே தாமும் திருக்கயிலையடைந்தனர்; இஃது அரசரினும் மேலாய்ச், சிவனடியாராகிய சேரனார்பால் அவ்வீரர் கொண்ட அன்பின் உறைப்பினால் ஆகியது.

## வெள்ளானைச் சருக்க முற்றும்.

## இரண்டாங் காண்டம் முற்றிற்று.

பெரிய புராணம் என்னும் திருத்தொண்டர் புராணம்
சிவக்கவிமணி - C. K. சுப்பிரமணிய முதலியார்
உரையுடன் முற்றுப்பெற்றது

சேக்கிழார் பெருமான் சேவடி வாழ்க

உரை எழுத்துச்சுவடி : சர்வதாரி ஆண்டு ஆனித்திங்கள் இருபத்தொன்பதாம் நாள் சிதம்பரத்தில் காலை 10 நாழிகை யளவில் ஆனி உத்தரத் திருநாளில் ஆயிரக் கால் மண்டபத்தில் எழுதிமுடித்து (12—7—1948) ஸ்ரீ நடேசப் பெருமான் திருவடியிற் சார்த்தி வழிபடப்பெற்றது.

அச்சு முடித்த உரைச்சுவடிகள் :

நிறைவேறி ஜய ஆண்டு சித்திரைத்திங்கள் இருபத்துநான்காம் நாள் (6—5—1954) காலை 10 நாழிகை யளவில் சித்திரைத் திருவாதிரை நாளில் சிற்சபையில் ஸ்ரீநடேசப்பெருமானாரது திருவடியிற் சார்த்தி வழிபடப் பெற்றது. நிறைவு விழாவும் கொண்டாடப் பெற்றது.



**பிற்சேர்க்கை - 1**

சிவமயம்

# அருஞ்சொற்றொட ரகராதி

## (3748—4281)

[எண்கள் - பாட்டு எண்கள்]

- அடிநிலை பாரித்து 4176
- அடியார்க்கேற்கும் படி 3820
- அத்தாணி மண்டபம் 3954
- அயலறியா அன்பு 4151
- அரசிய லாயம் 4099
- அரசுறுப்பு 3783
- அருளிப்பாடு 4261
- அலைப்புறு மனை வாழ்க்கை சரிய 4257
- அவ்வினைஞர் பல ருளராக 4033
- அறிவினெல்லை 3808
- அறுவையர் குலம் 4193
- அனுமயம் 4165
- அன்றினர் 3905
- ஆகாரம் 3944
- ஆண்மைத் திருப்பணி 4043
- ஆதிரை நாள் 3986
- ஆயமாகிய தனங்கள் 3909
- ஆயோகம் 3796
- ஆராமங்கள் 3901
- இட்டிகை 4166
- இரணத் தொழில் 3972
- இரப்பஞ்சி 4059
- இருமை யுலகு 3763
- இருவினைபோல் மாண்டது 4029
- உணங்கல் மீன் 3998
- உணவயர்த்து 4005
- உண்டசோறு க
- உதியர்
- உபானம் 4177
- உரிமைத் தேவி 4102
- உள்ளுறையூர் 3942
- உவளகம் 4082
- எதிர் நின்றருளா தெழுமொலி 3790
- ஒருக்கிய நெஞ்சு 4159
- ஓடை 3765
- ஓட்டத் தமபொன் 3777
- 3763
- கடற் படப்பை 4078
- கமுகின் காடு 4023
- கருவிப் பாடல் 4217
- களமர் 4039
- காடுகாள் 3836
- காரண பஞ்சயம் 4157
- கால மாதரிசத பண் 4216
- காலமுணர் பழையார் 4205
- குடக்கொங்கு 4232
- குதிகுதித்து 4147
- குலகிரி 3942
- குலக் கொழுந்து 4189
- குறைகொள்ள 3822
- குறை வறுத்தார் 3842
- குறை வறுப்ப 3798
- கைகோட்டி 3900
- கையறவு 4034
- கைவகுத்து 3959
- கை வினைஞர் 3919
- கொடுமுடி 3942
- கொட்டகாரம் 4115
- கோடாதநெறி 3983
- சட்டறங்கள் 4115
- சயத்தம்பம் 4039
- சயத் தொடர் வல்லி 4073
- சித்த சோகம் 4235
- சிவாங்கி 4164
- சிறுசோற்றுப் பெருஞ் சிறப்பு 3962
- சிவபோகம் 4230
- செய்யுணிகழ்சொற் றெளிவு 3939
- செல்வத்துழனி 4030
- சேமவைப்பு 4080
- சேயகன்னெறி 4256
- தளர்ப்பாய்ச்சல் 3873
- தடுமாறுநெறி 4069
- தண்டாரம் 4042
- தத்துவத்தின் வழி படும் 4128
- தத்துவத்தினெறி 4168
- தந்திரிக்கருவி 4221
- தந்திரியா 4184
- தமிழின்பெருமான் 4249
- திருநீறுசேர்ந்தார் 3989
- திருப்பாட்டு 3756
- திருமுகம் 3778
- திருமேற் கட்டி 4199
- தில்லை வட்டம் 3806
- திருவிரையாக்கலி 4137
- திருவிளக்கி னணி 4028
- திருவுலாப்புறம் 4275
- தேசிகம் 4186
- தேடாதபெருவளம் 3988
- தொண்டரை ஆக்கி 3926
- தொய்யில் 4109
- தொழில் செய்யும் தமர் 4017

சிவமயம்

# தேவார முதற் குறிப்பு

[எண் - பக்க எண்]



தேவார முதற் குறிப்பும், புராணப் பாட்டு முதற் குறிப்பும் தொகுத்தவர் - திரு. K ஆறுமுக நாயனர், திருநாவுக்கரசு சுவாமிகள் சைவ சித்தாந்தக் கழகம், திருத்துறையூர், 'நடோடு'.

சிவமயம்

# புராணப் பாட்டு முதற்குறிப்பு

## புராணப் பாட்டு முதற்குறிப்பு

சிதம்பரம்

(6—5—1954)



திருவம்பலத்தில் போர்த்திய பொன்னாடையுடன்
உரைச்சுவடிகளுடன் உரையாசிரியர்
கோவை - சிவக்கவிமணி
திரு. C. K. சுப்பிரமணிய முதலியார், B.A.

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# பெரியபுராணப் பேருரை நிறைவு விழா நிகழ்ச்சிகளின் சுருக்கம்

## 5–5–1954 நிகழ்ச்சி

விழாச் செயற்குழுவினர் வெளியிட்ட நிகழ்ச்சிகளிற் கண்டபடி 5-5-54 புதன் கிழமை காலை 7-30 மணிக்கு, சுவாமிமலை ரயில்வே நிலயத்தில் கோயமுத்தூர், சேலம், திருச்சி, மதுரை, திருநெல்வேலி, இராமநாதபுரம் முதலிய பல ஜில்லாக்களிலிருந்து தம் குடும்பங்களோடு வந்திருந்த பல அன்பர்களும் ஒன்று கூடினார்கள். இவர்களின் தொகை சுமார் 60 பேருக்கு மேலிருக்கும். இவர்களைக் குடந்தைச் சிவனடியார் திருக்கூட்டத்தாரின் சார்பாக ஷை கூட்டத் தலைவர், சிவசேனாதிபதி, உயர்திருவாளர் P. T. S. குமாரசுவாமி செட்டியார் அவர்களும், அவர்களின் சகோதரர் அவர்களும், Retired Commercial Tax Officer திருவாளர் P. இரத்தினசபாபதி பிள்ளையவர்களும், மற்றும் அன்பர்களும் ரயில் நிலயத்தில் வரவேற்றுத் திருவலஞ்சுழித் திருக்கோயிலுக்கு எதிரிலுள்ள வைத்தியலிங்கம்பிள்ளை தர்ம சத்திரத்தில் இடவசதியும், நித்திய கருமங்களுக்கும் பூஜை முதலியவைகளுக்கும் வசதிகளும், அடியார்களுக்கு வேண்டும் சிற்றுண்டி முதலிய வசதிகளும் செய்து கொடுத்தார்கள்.

அடியார்கள் பூசை முதலியவை முடித்துக்கொண்டு காலைசந்தியில் திருவலஞ்சுழிப் பெருமானது திருக்கோயிலில் முறைப்படி வழிபாடுகள் செய்தார்கள். திருக்கோயிலில் எழுந்தருளிய வெள்ளை விநாயகர், சடையப்பர், பெரியநாயகியம்மை, வலஞ்சுழிநாதர், நால்வர் முதலிய எல்லா மூர்த்திகளுக்கும் வழிபாடு செய்யப்பெற்றன. ஷை வழிபாட்டில் கலந்துகொண்டு, திருச்சுழியல்-மதுரை-ஸ்தானிகர் சிவஸ்ரீ கற்பூரசுந்தரபட்டர் அவர்களும், திரு. S. தர்மலிங்க முதலியார் அவர்களும், வித்துவான் திரு. S. அருணாசலம் பிள்ளையவர்களும், குமாரிகள் மயில்-கௌரி-மங்கையர்க்கரசி முதலிய பெண்மக்களும் தேவாரபாராயணம் செய்தார்கள். இறுதியில் வலஞ்சுழி விநாயகர் சந்நிதியில் அடியார்கள் எல்லாரும் அருட்பிரசாதங்கள் பெற்றுக்கொண்டனர். அப்போது சிவக்கவிமணி திரு. C. K. சுப்பிரமணிய முதலியார் அவர்கள் சிவத்தல யாத்திரையின் பெருமையைப்பற்றியும் அடிமைத் திறத்தின் பெருமைகளைப்பற்றியும், அந்தத் தலத்தின் பெருமையைப்பற்றியும் திருஞான சம்பந்தநாயனாரது அத்தலத்தேவாரத்தின் கருத்துக்களைக் கொண்டு சிறிது நேரம் பேசினார்கள். அதன் சுருக்கம்:—

இத்தலமானது சைவத்தில் சிறந்த பெருமையுடையது. காவிரி வலமாகச் சுழித்து உள்ளே இறங்கிய காரணத்தால் திருவலஞ்சுழி எனப் பெயர்பெற்றது

என்பது புராணவரலாறு. வலமாகச் சுழித்தல் நல்ல அடையாளம். பிரணவத்தின் உருவமுமாகும். இத்தலத்தில்வந்து வழிபடும் பேறுனது முன்னே செய்த சிவ புண்ணியங்களின் பயனுற்றுன் கிடைக்கத்தக்கது என்று திருஞானசம்பந்தநாயனுர் இத்தலத் தேவாரம் முதற்பாட்டில் அருளிச் செய்துள்ளார்; சைவத்தில் பேசப்பட்ட முடிந்த உண்மைகள் இரண்டு. அவை சிவன் வழிபாடும் அடியார் வழிபாடுமே யாகும்; இந்த இரண்டு உண்மைகளையும் இத்தலத் தேவாரம் முதலிரண்டு திருப்பாட்டுக்களில் விளக்கமாக உபதேசித்தருளியிருக்கிறுர்; சைவசாதனமும் அதன் பயனுமாக உள்ள பெரும்பொருள்களை மூன்றுவது திருப்பாட்டில் உபதேசிக்கின்றுர். இவ்வாறு இத்தலத்தின் பெருமை திருஞானசம்பந்த நாயனுர் தேவாரத்தால் விளக்கமாக அறிகிறேும். புராண உரை நிறைவு விழாவுக்கு இத்தலத்தின் வழிபாடு சிறந்த அருட்சாதனமாக விளங்குகிறது. இவ்வழிபாடுகளுக்கு எல்லா உதவிகளும் செய்த குடந்தைச் சிவனடியார் கூட்டத்திற்கு எங்கள் நன்றி உரித்தாகுக : என்பதாம்.

இதன்மேல் உச்சிக்காலத்தில் அடியார்கள் சுவாமிமலையில் சென்று முருகப் பெருமானை வழிபாடு செய்வதற்குரிய எல்லாச் சாதனங்களையும் முன்னேற்பாடாகக் குடந்தைச் சிவனடியார் கூட்டத்தார் செய்துவைத்திருந்தபடி அத்திருக்கோயிலில் வழிபாடும் நடைபெற்றது. அதன்பின் மேற்படி திருக்கூட்டத்தாரின் அமைப்பின்படி ஷை சத்திரத்தில் மாகேசுர பூசை நடந்தது. மாலை வண்டியில் திருக்கூட்டத்தார் சென்று இரவு 9-மணிக்குச் சிதம்பரத்தைச் சேர்ந்தனர்.

## முதல்நாள் விழா: முற்பகல் நிகழ்ச்சி
## (1954 மே, 6உ)

அதிகாலை 3மணிக்குச் சிவநாம முழக்கத்துடன் அடியார்கள் கூட்டம்கூடிச் சிவபூசை வழிபாட்டிற்குச் சித்தமாயினர். சிவகங்கைக் கரையின் தெற்கு மண்டபம் பூப்பந்தலும் சிவபூசைக்குரிய ஆசனம், வேதிகை, தனித்தனியாகத் திருவிளக்கு, புட்பம் முதலிய சாதனங்களுடன் சிறப்பாய் விளங்கிற்று. அடியார்கள் சுமார் 75 பேருக்குமேல் சரியாக4மணிக்குப் பூசைதொடங்கி அவரவர்கள் ஆன்மார்த்தபூசையை 6மணிக்குள் முடித்துக்கொண்டார்கள். சிவபூசைக் காட்சியை விழாவிற்கு வந்திருந்த மக்கள் அனைவரும் கண்குளிரச் சேவித்து வணங்கினுர்கள். சிவகங்கைக் கரையானது பூலோக சிவலோகமாகவே விளங்கிற்று. இந்த ஏற்பாடுகளெல்லாம் சிறப்பாக முன்னெச்சரிக்கையுடன் செய்து கண்டு மகிழ்ந்தவர் சிவபூசா துரந்தரர், பேரன்பர், உயர்திரு. ஆடூர் சு. கணபதி பிள்ளையாவர்கள். பூசை முடிந்தவுடன் பூசகர்களுக்குச் சிற்றுண்டி முதலிய சிரமபரிகாரங்களும் அங்கேயே உடனே அவர்களால் செய்து தரப்பட்டன. அதன்பின் சீர்காழியிலிருந்து தருமபுர ஆதினம் ஸ்ரீமகா சந்நிதானங்களால் அனுப்பப்பெற்ற யானைமீது பெரியபுராணப் பேருரைச் சுவடிகளை யலங்கரித்து வைத்து நகர்வலம், பேரணிகள் செய்து விளங்கிய ஆயிரக்கால்மண்டப முகப்பிலிருந்து கிழக்குக் கோபுரவாயில் வழியாகத் துவக்கப்பட்டது. சேக்கிழார் பெருமான் திருவுருவப்படமும் முத்து விமானத்தில் உடனே எழுந்தருளச்செய்யப்பட்டது. "மாதவங்கள் நல்குந் திருவீதி நான்கி"லும் சமயாசாரியார் நான்குபேர்பேராலும் சந்தானுசாரியார் நான்குபேர்பேராலும் காவணங்கள் அமைக்கப்பட்டிருந்தன. திருவீதிகள் தோரணங்களால் அலங்கரிக்கப்பெற்றுக் குளிர்ச்சியும் செய்யப் பெற்றிருந்தன. கும்பகோணம் பாண்டு வாத்தியமும், இசைவாணர், வித்வான், திருவெண்காடு திரு. T. P. சுப்பிரமணிய பிள்ளையவர்களுடைய நாதசுர இன்னிசை முழக்கமும் விண்ணதிர முழங்கி

மக்களை ஆனந்த பரவசமாக்கி மகிழ்வித்தன. நூற்றுக்கணக்கான சாதுக்கள் கூட்டம் பெருந்திரளாக இடபக் கொடிகளையும் வெண்கொடிகளையும் ஏந்திக்கொண்டு சிவநாம முழக்கத்துடன் நகர்வலத்தின் முன்னே நல்வழி காட்டிச் சென்றனர். அதன்பின் திருமுறைகளை எடுத்துத் தில்லைத் திருமுறைக் கழகத்தாரும் மற்றைய அடியார் கூட்டங்களும் சிவபுராணம் முதலிய திருமுறைகளை நியமமாகப் பாராயணம் செய்துகொண்டு சென்றார்கள்.

திருக்கடவூர்ப் பிச்சக்கட்டளை தேவாரப்பாடசாலை ஆசிரியரும் மாணவர்களும், சிதம்பரம் பழனியப்ப முதலியார் தேவாரப்பாடசாலை ஆசிரியரும் மாணவர்களும் இன்னிசைகளுடன் தேவாரபாராயணம் செய்துகொண்டு எழுந்தருளினார்கள். ஆங்காங்கு பூரணகும்பம், திருவிளக்கு, தோரணம் முதலிய அலங்காரத்துடன் பொதுமக்கள் நகர்வலத்தை வரவேற்று மகிழ்ந்தார்கள். இவ்வாறாக நகர்வலமாகப் பேருரைச்சுவடிகள் 10 மணியளவில் திருக்கோயில் வந்து சேர்ந்தன. உரைச்சுவடிகளை யானையிலிருந்து இறக்கிச் சிற்றம்பலத்தில் நடராசப்பெருமானுடைய திருவடியின் கீழே சாரவைத்துத் தில்லைவாழந்தணர்கள் வழிபாடு செய்தார்கள். உரையாசிரியரைப் பேரம்பலத்திற்கு அழைத்துச்சென்று, அமர்த்தித் திருமாலையும் சிறந்த பொன்னுடைப் பரிவட்டமும் திருநீறும் அளித்து பொதுத் தீட்சிதர்களின் சார்பில் காரியதரிசி ஸ்ரீ. இரத்தினசபாபதி தீட்சிதர் அவர்கள் உரையாசிரியரின் பெருமையைப்பற்றியும் உரையைப்பற்றியும் பேசி ஆசிமொழி கூறினார்கள். உரையாசிரியர் அவர்கள் விடைகூறிக், கோயிற் புராணப்பாயிரத்தில் 'மண்ணில் இருவினைக்கு உடலாய்' என்ற திருப்பாட்டின் கருத்தை விளக்கி, தில்லை வாழ்ந்தணர்கள் பெருமையையும் நடேசப் பெருமானின் திருவருட்சிறப்பினையும் எடுத்துக்கூறி நன்றி பாராட்டினார்கள். அதன்மேல் திருச்சிற்றம்பலம் சபையில் இரத்தினசபாபதி மூர்த்திக்கும் ஸ்ரீசந்திரமௌலி ஈசுவரருக்கும் மகாபிடேக வழிபாடும் திருப்பாவாடையுடன் நடேசப் பெருமானுக்கு இரண்டாங்கால விசேட பூசையும் சிறப்பாய் நடைபெற்றன. அதன்பின் நால்வர் பரமாசாரிய மூர்த்திகளைத் தரிசித்துக்கொண்டு அடியார்கள் எல்லாம் மாகேசுர பூசைக்கு எழுந்தருளினார்கள். தேவாரப்பாடசாலை பழனியப்பமுதலியார் அவர்கள் வீட்டிலும், சி.ப தேவாரபாடசாலையிலும், அன்பர், திருவைத்தியலிங்க செட்டியார் அவர்கள் வீட்டிலுமாக அன்பர்களுக்கெல்லாம் சிறப்பாக அறுசுவையுண்டியுடன் சிறந்த பண்ணியங்களுடன் மாகேசுர பூசை செய்யப்பட்டது. ஞானப்பிரகாச குளத்தைஅடுத்துள்ள திருப்பனந்தாள் காசி மடத்தில் அதிபர் ஸ்ரீமத் அருணந்தி தம்பிரான் சுவாமிகளின் பேருதவியினாலே சுமார் 700 பேர்களுக்கு மேற்பட்ட சாதுக்களுக்குப் பலகாரம் பாயசத்துடன் அன்னமளிக்கப்பட்டது. அதுபோலவே அடுத்தநாளும் ஷை இடத்தில் ஷை யார் அருள் உதவியினாலே சுமார் 1500 அடியார்களுக்கும் ஏழைகளுக்கும் அன்னம் அளிக்கப்பட்டது. முதல்நாள் முற்பகல் நிகழ்ச்சி இதனுடன் நிறைவெய்தியது.

## முதல்நாள் : பிற்பகல் நிகழ்ச்சி

பிற்பகல் நிகழ்ச்சிக்காக ஏராளமான மக்கள் குறித்தநேரத்திற்கு முன்னமேயே ஆயிரக்கால் மண்டபத்தின் முகப்பில் கூடியிருந்தார்கள். தலைமை தாங்கும் மதுரை திருஞானசம்பந்தர் ஆதீனம் இளவரசு ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தர அடிகளார் அடியார் கூட்டங்களும் தம்பிரான்களும் புடைசூழ 4 மணிக்கு எழுந்தருளினார்கள். வரவேற்புக்குரிய நிலைமைகளுடன் வரவேற்புக்குழுத் தலைவர் ஸ்ரீமான் சர். பி. டி. ராஜன் பி.ஏ., பார் அட் லா ; அவர்களும் செயற்குழுவினரும் மற்றும் கனவான்களும் முன்னதாக

வந்து கூடியிருந்தனர். தலைவர் எழுந்தருளியிருத்தற்குரிய மண்டபம் முத்துக்களால் அலங்கரிக்கப்பட்டுச் சிறப்பாக விளங்கிற்று. அதனிடையில் பொற்கலத்தில் ஆசனமிட்டு அலங்கரிக்கப்பட்ட உரைச்சுவடிகளும் அவற்றின் பின்புறம் சேக்கிழார் பெருமான் திருவுருவப்படங்களும் அநபாயச் சக்கரவர்த்தி, இராஜராஜ சோழர் முதலியோர் திருவுருவப்படங்களும் அலங்காரமாக விளங்கின.

4-45 மணிக்குச் சபை துவக்கப்பட்டது. திருவிடை மருதூர் வித்துவான் திரு. நடேச தேசிகர், சிதம்பரம் சி. ப. தேவார பாடசாலை ஆசிரியர் திரு. S. இராமலிங்க ஓதுவார், வித்துவான் S. அருணாசலம் பிள்ளை, சேலம் திருமதி ஜயம்மாள் அவர்கள், திருமதி குப்பம்மாள் அவர்கள் ஆகியோர்கள் தேவாரம் திருப்புகழ் பாடிச் சபையைத் துவக்கினார்கள். அதன்பின், வந்திருந்த அனைவரையும் வரவேற்றுத் திரு. சர். பி. டி. ராஜன் அவர்கள் அச்சிட்ட வரவேற்புரையை வாசித்து ஸ்ரீ அடிகளாருக்கு மாலை சூட்டித், தலைமை தாங்கிச் சபையை நடத்திக்கொடுக்கும்படி வேண்டிக்கொண்டார்கள். பலத்த கரகோஷத்தினிடையேயும் சிவநாம முழக்கத்தினிடையேயும் தலைவரவர்கள் தலைமை தாங்கி யருளினார்கள்.

சிறப்புரை நிகழ்த்த வேண்டியபடி நிகழ்ச்சிக்குறிப்பில் கண்டிருந்த, குன்றக்குடி அடிகளார் ஸ்ரீலஸ்ரீ தெய்வசிகாமணி அருணாசல பரமாசாரிய சுவாமிகள் உடல் நிலைக் குறைவு காரணமாக எழுந்தருளக்கூடாமையின் அவர்களின் பிரதிநிதியாக மேற்படி ஆதீனத்து முனிவர்களுள் ஒருவர் சிறப்புரையை வாசித்து உரையாசிரியருக்குச் சிறந்த பொன்னாடை சாத்தித் திருவருட்பிரசாதங்களும் வழங்கினார். தலைமை தாங்கும் அடிகளாரவர்கள் உரையாசிரியருக்கு மாலை சூட்டிப் பொன்னாடை போர்த்தித் திருவருட் பிரசாதங்கள் வழங்கி ஆசீர்வதித்தார்கள். உரையாசிரியர் அவர்களும் ஷை அடிகளார் அவர்களின் பாதசேவை செய்து திருவருட்பிரசாதங்களை ஏற்றுக்கொண்டார்கள். அடிகளார் அவர்கள் முன்னமே அச்சிட்டிருந்த தலைமையுரையை வாசித்து முடித்தார்கள். (சர். பி. டி. ராஜன் அவர்களின் வரவேற்புரையும் அடிகளாரின் தலைமையுரையும் கீழே தரப்பட்டுள்ளன.) அதன்பின் தருமபுர ஆதீனம், மகா சந்நிதானம் சார்பிலும், மயிலம் ஆதீனம மகாசந்நிதானம் சார்பிலும் பொன்னாடைகளும் பூமாலைகளும் உரையாசிரியருக்குச் சாத்தி ஆசியுரைகளும் வாசிக்கப்பட்டன. திருவாலவாய், திருவாதவூர், திருநெல்வேலி, திருச்சுழியல், திருச்செந்தூர், திருப்பேரூர் ஆகிய தேவஸ்தானங்களிலிருந்து அதிகாரிகளின் ஆணைப்படி அனுப்பப்பட்ட பொன்னாடை பரிவட்டம் பூமாலை முதலிய திருவருட் பிரசாதங்கள் உரையாசிரியருக்கு வழங்கப்பட்டன. இதனோடு திருச்சுழியல் தேவஸ்தானஸ்தானிகர் மதுரை திரு. கற்பூர சுந்தரபட்டர் அவர்களும், திருவாடானை ஸ்தானிகர் ஸ்ரீ முத்துசாமிக் குருக்கள் அவர்களும், பேரூர் ஸ்ரீமத் நாகராஜ ஓதுவா மூர்த்தி அவர்களும் வாழ்த்துப் பத்திரங்கள் வாசித்துக் கொடுத்தார்கள்.

தேவக்கோட்டை சைவபரிபாலகரும் சேக்கிழார் கழகத் தலைவருமான சிவத்திரு. மெய்யப்பச் செட்டியார் அவர்கள் சார்பில் சென்னை, பன்மொழிப் புலவர் திரு. T. P. மீனாட்சிசுந்தரம் பிள்ளை, எம்.ஏ., பி.ஓ.எல்., எம்.ஓ.எல்., அவர்கள் உரையாசிரியரின் அரிய சேவையைப் பாராட்டிச், செட்டியார் அவர்கள் பரிசாக அளித்த நடேசப் பெருமான் திருவுருவம் பொறித்த செம்பொற்றகடு போர்த்திய பெரிய புராணப் பிரதியொன்றை உரையாசிரியருக்குப் பரிசாக அளித்தார்கள். அந்தச் சிறந்த பரிசிலைச் சிறப்பாக ஏற்றுக்கொண்டு உரையாசிரியர், அநபாயரது திருவுள்ளம் செட்டியாரது மனத்தின் விளங்குகின்றது; அவர் புராணத்தைச் செப்பேடு செய்து மகிழ்ந்தார்; இவர் அதனைப் பொன்னேடு போர்த்தி

மகிழ்கின்றார் என்ற கருத்துப்பட அதற்குரியபடி நன்றி செலுத்தினார். அதன்பின் சீர்காழி மிராசுதார்களும் பேரன்பர்களுமாகிய திரு. மு. த. குழந்தைவேல் செட்டியாரவர்களால் நடராசர் திருவுருவமும் வெள்ளி விளக்கும், திரு. C. கிருஷ்ணமூர்த்தி முதலியார் அவர்களால் பொற்பதக்கமும், திரு. S. சதாசிவ முதலியார் அவர்களால் 101 ரூபா யடங்கிய வெண்பொற்கிழியும், திரு S. சுப்பராய முதலியார் அவர்களால் பொன்னாடையும், திரு. C. சீனிவாச முதலியார் அவர்களால் வெண்பட்டும் உரையாசிரியருக்கு அளிக்கப்பட்டவற்றை அவர்கள் பணிவுடன் ஏற்றுக்கொண்டார்கள்.

சாது அச்சுக்கூடத்தின் மானேஜர் திருவாளர் M. நாராயணசாமி முதலியார் அவர்களும், திருத்துறையூர் திரு. K. ஆறுமுக நாயனார் அவர்களும் புராண உரை வெளியீட்டில் நீண்டகாலமாகச் செய்த அரிய சேவைகளைப் பாராட்டி உரையாசிரியர் அவர்களால் பரிசுகளுடன் கூடிய பீதாம்பரங்கள் தலைவரவர்கள் மூலம் அவர்களுக்கு அளிக்கப்பட்டன. எல்லா அன்பர்களுக்கும் நன்றி பாராட்டும் முறையில் உரையாசிரியர் அவர்களால் சில வார்த்தைகள் பேசப்பட்டன.

## இரண்டாம் நாள் நிகழ்ச்சி

### 7-5-54 (காலை)

காலை 7 மணிக்கு ஞானப்பிரகாசக் குளக்கரையில் உள்ள சேக்கிழார் திருக்கோயிலிலிருந்து சேக்கிழார் பெருமானுடைய திருவுருவமும், யானையின்மேல் எழுந்தருளிச் செய்யப்பட்ட பெரிய புராண உரைச் சுவடிகளும் இன்னிசை முழக்கம் தேவார பாராயணம் சிவநாம முழக்கம் முதலியவற்றுடன் திருவீதி நான்கிலும் பெருஞ் சிறப்பாக நகர்வலஞ் செய்யப்பட்டன. இம்மூர்த்திகள் செங்கழுநீர்ப் பிள்ளையார் கோவில் தெரு, சி. ப. தேவார பாடசாலை முன்வந்ததும் பாடசாலையி லிருந்து நால்வர் திருவுருவப்படமும் அறுபத்துமூன்று நாயன்மார்கள் திருவுருவப் படமும் விமானத்தில் அலங்கரித்து இந்த நகர்வலத்துடன் எழுந்தருளச் செய்யப் பட்டன. அன்றைய காலை வழக்கம்போல் திருக்கோயிலில் நடைபெறவேண்டியதாகிய திருஞானசம்பந்தப் பெருமான் திருமுலைப்பால் உற்சவம் நடைபெற்றது. அதில் மதுரைத் திருஞானசம்பந்தர் ஆதீனம் அடிகளாரும் கலந்துகொண்டது இவ் விழாவின் தெய்வீகச் சிறப்பை விளக்குவதாயிருந்தது.

### ஷை தேதி (மாலை)

அன்று மாலை 6 மணிக்கு ஆயிரக்கால் மண்டபத்தில் வந்த அடியார்களின் திருக் கூட்டத்தைப் புகைப்படங்கள் எடுக்கப்பட்டன. அதன்மேல் மதுரை ஆதீனம் ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தர அடிகளார் தலைமையில் பொதுமக்களின் சார்பில் ஓர் கூட்டம் நடைபெற்றது. கடவுள் வணக்கம் திரு. முத்துச் சுகவனம் முதலியார் அவர்களின் குமாரிகள் பாடினார்கள்.

சீர்காழி மிராசுதாரர், பெருநிலக்கிழார், திரு. S சுப்பராய முதலியார் அவர் கள் தகுந்த மொழிகளால் தமது வரவேற்புரை நிகழ்த்தினார்கள். அதன் சுருக்கம்: நடராசப்பெருமான் திருவருளாலே வெளிப்பட்ட பெரியபுராணத்திற்கு அவர் திருவருளாலே உயர்திரு. C. K. சுப்பிரமணிய முதலியார் அவர்களால் இவ்வுரை கிடைத்திருக்கிறது. அது நமது பாக்கியமாகும். திருஞானசம்பந்தப் பெருமான் அவதரித்த பதி எங்களூராயிருக்கிறது. சைவ சமயத்தை வளர்த்த திருஞானசம்பந்தப் பெருந்தகையார் சைவத் தாபனம் செய்த பதியாகிய மதுரையிலிருந்து வந்த

திருஞானசம்பந்த சுவாமிகள் தலைமைதாங்குவது மிகவும் பொருத்தமானது. பல ஊர்களிலிருந்தும் சைவ நலத்தின் பெருமை ஒன்றையே கருதிக்கூடியிருக்கின்ற உங்களனைவரையும் வரவேற்கின்றேன். உங்கள் வரவு நல்வரவாகுக. சைவ நெறி ஓங்க இறைவன் அருள் புரிவானாக. அதன்பின் செயற்குழுத் தலைவர் திரு. பி. டி. ராஜன் அவர்கள் நிறைவு விழாவைப் பற்றிச் சில வார்த்தைகள் பேசினார்கள். தலைவர் முகவுரைக்குப்பின், சென்னைச் சர்வகலாசாலையின் பிரதிநிதியாகத் திவான்பகதூர் திரு.T.M. நாராயணசாமி பிள்ளையவர்கள், எம்.ஏ.,பி.எல். பேசினார்கள். அதன் சுருக்கம் : நான் சென்னைப் பல்கலைக்கழகத்தின் துணைவேந்தர் திரு. சர். ஏ. இலட்சுமண சாமி முதலியார் அவர்களின் கட்டளைக்கிணங்க வந்திருக்கிறேன். துணைவேந்தர் இப்போது ஜினிவாவில் ஒரு பெருங்கூட்டத்திற்குப் பிரதிநிதியாகச் சென்றிருக்கிறார். அவர்களின் பிரதிநிதியாக நான் வந்திருக்கிறேன். துணைவேந்தர் அவர்கள் உரையாசிரியர் அவர்களிடம் மிகுந்த மதிப்பு உடையவர்கள். இப்பேருரைக்கு ஆரம்பத்தில் 1000 ரூ. பல்கலைக்கழகத்தார் நன்கொடையாகக் கொடுத்தார்கள். இப்போது டிபேருரை நிறைவானதைப் பாராட்டி 1000 ரூ. கொடுக்கிறார்கள் அதன்(செக்கை) அனுமதிச்சீட்டை முதலியார் அவர்களுக்குக் கொடுக்கிறேன். இப்பேருரையைப் பற்றி நான் பேசத்தகுதியில்லை. (Revered Professor) திரு. R.P. சேதுப்பிள்ளை பேசுவார்கள் என்று கூறி டி செக்கை உரையாசிரியருக்குக் கொடுத்தார்கள். அவர் வணங்கி அதனை ஏற்றுக்கொண்டார்கள். அதன்பின் சென்னைப் பல்கலைக்கழகப் பேராசிரியர் திரு. R. P. சேதுப்பிள்ளையவர்கள் பேசியதின் சுருக்கமாவது:

இந்த நிறைவுவிழாவில் கலந்துகொள்ள மிகுந்த மகிழ்ச்சியுடையவனாய் இருக்கிறேன். பெரியபுராணம் மிகச் சிறந்த நூல். அநபாயச் சக்கரவர்த்தி அவகதையாகிய சிந்தாமணியில் காலம் போக்கியதைத் தடுத்துத் தவகதையாகிய சிவகதையைக் கேட்கும்படி செய்த பக்தி நூல். கம்பராமாயணத்தின் முன்னே வழிகாட்டியாக எழுந்த காவியமுமாகும். இதனுள் கற்பனைகள், இலக்கணம், கவிநயங்கள் சிறந்து விளங்குகின்றன. கம்பன் காவியம் கவியின்பம் நிறைந்தது. இஃது, அதனுடனே பக்தியின்பமும் நிறைந்தது. இதுபற்றியே மகாவித்வான் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் " பக்திச் சுவைநனி சொட்டச் சொட்டப் பாடிய கவிவலவன் " என்று பாராட்டியுள்ளார்கள். சேக்கிழார் பெரியபுராணம் பக்தியில் சிறந்த நூல். உரை செய்ய வந்த சிவக்கவிமணியவர்களும் பக்தியிற் சிறந்தவர். தேவார திருவாசகம் முதலிய அருள் நூல்களை மிகப்பயின்றவர். அருள் நூல்களில் சேர்த்துவைத்த பொக்கிஷங்களை இவ்வுரையில் அமைத்திருக்கிறார். இவர்கள் இளமையில் பல்கலைக்கழக மாணவராயிருந்தபோது பி. ஏ. பரீட்சையில் இராஜதானியில் முதல்வராகத் தேறியபோது பல்கலைக்கழகத்தார் பொற்பதக்கம் அளித்தார்கள். அதை அவர்கள் பேரூர் சேக்கிழார் பெருமானுடைய திருவுருவத்தில் சேர்த்து விட்டார் என்று தலைவாவர்கள் முகவுரையில் கூறியிருப்பதனால் தெரிந்து மகிழ்கிறேன். இது பல்கலைக் கழகத்தாருக்கே பெருமை தரத்தக்கதாகும். அதன்பின் பல்கலைக்கழகத்தார் சிவக்கவிமணியவர்களைக் கொண்டு சேக்கிழாரைப் பற்றி மூன்று பிரசங்கங்கள் செய்வித்தார்கள். அது சேக்கிழார் என்னும் நூலாக வெளிவந்திருக்கிறது. 6 ஆண்டுகளுக்கு முன் புராண உரை எழுத்து நிறைவான போது விழா இங்கே கொண்டாடினர். அச்சு நிறைவேறும் முன் இவ்விழா அவர் கொண்டாடியது அதுவரை தம்முடைய ஆயுள் நீடிக்குமோ என்ற ஐயப்பாட்டினால்தான். இந்த இடத்தில் இரவரண்டு ஜி. யூ. போப் அவர்களுடைய செய்தி ஒன்று நினைவுக்கு வருகிறது. அவர் திருவாசகத்தின் ஆங்கில மொழி பெயர்ப்பைத் தமது 75-வது வயதில் தொடங்கினர். அப்போது அவருக்கும்

இதேபோன்ற ஐயம் எழுந்தது. அவரை விட மூத்த நண்பர் ஒருவர் அவரிடம் பேசியபோது இப்பெரிய வேலையை என் இளமையான காலத்தில் தொடங்காமல் இவ்வயோதிகப் பருவத்தில் தொடங்குகிறேன். இது முடியுமோ முடியாதோ என்று ஐயப்படுகிறேன், என்று கூற அதற்கு அப்பெரியவர் இப்பெரிய காரியம் முடியும்வரை கடவுள் உங்களை ஆயுளுடன் வைத்திருப்பார். ஒரு பெரிய நல்ல பணி தொடங்கினால், அதுமுடியும்வரை அவர் ஆயுள் நீடித்திருக்கும் என்பது ஒரு உண்மை என அறிவுறுத்தினர். அது போலவே அவர் தன் 80 வயதுவரை வாழ்ந்திருந்து அப்பெரும் பணியை நிறைவேற்றினர். அவ்வாறே திரு. C. K. S. அவர்களும் 20 ஆண்டுகளாக முயன்று இவ்வரிய வேலையை நிறைவேற்றி யிருக்கிறார்கள். இது திருவருட் செயலாகும். இவர் இன்னும் பல்லாண்டு வாழ்ந்து தேவாரம் திருவாசகம் முதலிய மற்ற அருள் நூல்களுக்கும் உரை கண்டு உதவ வேண்டுமென்பது என்னுடைய விருப்பம்.

பின் திரு. T. M. நாராயணசாமி பிள்ளையவர்கள், பெரியபுராணம் பொதுநூல். திருவாசகம்போல எல்லா நாட்டிலுள்ள மக்களுக்கும் பொதுநூல் என்றும் எல்லோரும் அதைப்படித்து நல்லறிவு பெறவேண்டு மென்றும் பேசினர்கள்.

அதன்பின், செயற்குழுவின் பொருள்காப்பாளர் கோவை-திரு. M.S. பழனியப்ப முதலியார் B.A., அவர்கள், தனது பெரியமாமனர் காலஞ்சென்ற கோவை-வக்கீல் B. வேங்கடாசல முதலியார் அவர்கள் பெரியபுராணத்தில் மிகவும் ஈடுபட்டிருந்தார் என்றும், அதைப் பின்பற்றியே தானும் தங்கள் குடும்பத்தாரும் இவ் விழாவில் பணி செய்ய நேர்ந்துள்ளது என்றும், கோவையில் திரு. சதாசிவஞ்செட்டியார் அவர்கள் பெரியபுராணம் படித்து முடித்தபோது நான்கு வருடம் சிவக்கவிமணி அவர்கள் கையேடு வாசித்தது தனக்கு நினைவு இருக்கிறது என்றும் இன்னும் சில செய்திகளையும்

அதன்பின், அண்ணாமலைப் பல்கலைக்கழகத் துணைவேந்தர் திரு. A. இராமநாத பிள்ளையவர்கள் பேசினர்கள். சென்னைப் பல்கலைக்கழகத்தார் முதலில் 1000 ரூபாயும் இப்போது 1000 ரூபாயும்கொடுத்துள்ளார்கள். எங்கள் பல்கலைக் கழகம் சிறிது எனினும் புராண நிறைவின் பொருட்டுத்திரு.சர். R.K. சண்முகஞ் செட்டியார் காலத்தில் ரூ. 1500 நன்கொடை கொடுத்துள்ளோம். எங்கள் துணைவேந்தர் திரு. சர். C. P. இராமசாமி ஐயர், Kt. C. I. E. அவர்கள் இப்போது சிம்லாவில் இருக்கிறபடியால் அவர்களின் ஆணைப்படி அவர் பிரதிநிதியாக நான் இங்கு வந்துள்ளேன். பெரியபுராண உரையைப் பற்றிப்பேசப் போதிய ஆற்றல் எனக்கில்லை. இது ஒரு சிறந்த தமிழ்ப்பணி என்று உலகம் அறியும். இது பொது நூலாகையால் ஆங்கிலத்தில் மொழிபெயர்ப்பது அவசியம் என்று எண்ணுகிறேன். அப்பணியை சிவக்கவிமணி அவர்கள் தொடங்குமாறு அவர்களை வேண்டுகிறேன்.

அதன்பின் பல்கலைக்கழகத் தமிழ்ப்பேராசிரியர் டாக்டர் திரு. A. சிதம்பரநாதஞ் செட்டியாரவர்கள் பெரியபுராணத்தின் ஆசிரியராகிய சேக்கிழார் நாயனர் தமிழ்ப் பெருவீரர் என்றும் தமிழிலேயே அர்ச்சனைகள் செய்து வழிபட்டாலும் இறைவன் அருள் புரிவான் என்றும் கருத்துப்படப் பேசினர்கள்.

பிறகு மதுரை ஸ்ரீமதி புஷ்பம் நடராஜன் அம்மை அவர்கள் பேசியதன் சாரம் வருமாறு :

5 ஆண்டுகளுக்கு முன் எழுத்து நிறைவுவிழா இங்கு நடைபெற்றபோது நான் வந்திருந்தேன். இம்மண்டபத்தில் 1000 தூண்களைத் தவிர மக்களின் கூட்ட

யில்லை. அப்போது நான் வருந்தினேன். இன்று என் உள்ளங்குளிரக் கண்குளிர மகிழ்ச்சியுடன் இந்தச் சிறந்த விழாவைக் காண்கிறேன். முதல் முதல் தென்காசியில் 14 ஆண்டுகளுக்கு முன் திருஞானசம்பந்த நயனர் திருமணத்தைப் பற்றிச் சிவக்கவி மணி ஐயா அவர்கள் பேசினார்கள். கருத்து நயங்களும் பக்திச் சுவைகளும் விளங்கப் பேசியதைக் கேட்டு மகிழ்ந்தேன். பெரியபுராண உரையில் பெண்கள் அதிகமாக ஈடுபடவேண்டும். குழந்தைகளையும் அதில் பயிலும்படி செய்யவேண்டும். பெண்கள் புடவைகளும் நகைகளும் வாங்கும் பணத்தில் ஒரு சிறிது சேமித்தால் இப் பெரிய புராணப் பேருரை வாங்கிவிடலாம். கிடைத்த ஓய்வு நேரத்தில் பெண்கள் படிக்க வேண்டும். சி. ப. தேவார பாடசாலை அதிபர் பழனியப்ப முதலியார் குடும்பத்தார் வந்திருந்த எல்லோருக்கும் அன்னமளித்து உதவி செய்தமைக்கு அவர்களுக்கு நன்றி.

பின் சென்னை ஸ்ரீமதி, பாப்பாத்தி அம்மாள் அவர்கள் சேக்கிழார் புராணம் இயற்றி அரங்கேற்றிய காலத்தில் நாம் பார்க்கவில்லை. இன்று பெரியபுராணப் பேருரை அரங்கேற்றத்தைப் பார்க்கும் பாக்கியம் பெற்றோம். உரையாசிரியரை அப்பர் சுவாமிகள் போலவே காண்கிறேன். அவருக்கு இறைவன் அருள் புரிவாராக.

அதன்பின் அண்ணாமலைப் பல்கலைக்கழகத் தமிழ்ப் பேராசிரியர் திரு. G. சுப்பிரமணிய பிள்ளையவர்கள் பேசினார்கள். அதன் சுருக்கம்: இவ்வைபவத்தில் திரு. C. K. S. அவர்களையும் கூட்டத்தாரையும் பார்க்கவில்லை. 1000 ஆண்டுகளுக்கு முன் நடைபெற்ற சேக்கிழார் பெரியபுராண அரங்கேற்றத்திற்குச் சென்று விட்டால் சேக்கிழார் திரு. C. K. S. அவர்கள் போலத்தான் இருந்திருப்பார். திரு. C. K. S, அவர்கள் பெரியபுராணம் படிக்கும்போது ஆனந்தக் கண்ணீர் சொரிய அனுபவத்தோடு படிப்பார்கள். 'அன்பிற்கு முண்டோ அடைக்குந்தாழ்' என்றபடி இத்திறமானது அன்பின் பெருக்கத்தால் ஆவது. The Quality of mercy is not trained என்றபடி அன்பின் பெருக்கு இயல்பாக விளைவது. தீக்கை பெற்றுச், சிவசின்னம் அணிந்து இந்நூலைப் படிக்கவேண்டும். மற்றையோர் படித்தால் விளக்கம் இராது. தேவாரத்திற்கு மகாபாடியம் பெரியபுராணம். அவ்வுரையாசிரியர்க்கு உரையாசிரியராக இருக்கிறார் திரு. C. K. S. இப்புராணம் மொழிபெயர்ப்பன்று; தமிழ் மூலநூல்; உண்மை நூல்; இந்நூலைப்போல வேறு தமிழ் நூல் இல்லை. சேக்கிழார் நூல் ஒரு குலப்பெண் போன்றது. கம்பர் காவிய நூல் ஒரு கவர்ச்சியான பெண் போன்றது. பெரியபுராணம் தமிழனுடைய பண்பாடு காணப்படும் நூல். சேக்கிழார் இயற்றியநூல் உலகத்திற்கு ஒரு பொக்கிஷமாக விளங்குவது. பெரியபுராணம் உண்மைநூல் என்பதற்கு சரித்திரம், கல்வெட்டு, தேவாரம், வேறு பாடல்கள் சான்றுகளாகும். திரு. C. K. S. அவர்களுக்கு இறைவன் அருள்புரிவாராக. உரைப்புத்தகத்தின் விலை அதிகம். சாதாரண மக்களுக்கும் கிடைக்கும்படி செய்தால் நலம்.

அதன்பின் ஈரோடு நகரசபைத் தலைவர் திரு. மீனாட்சிசுந்தர முதலியார் அவர்கள், B.A., L.T. பேசியதன் சுருக்கம்: பெரியபுராணத்தை எரிக்க வேண்டுமென்பது ஈரோட்டுப் பேச்சு. அந்த ஈரோடிலிருந்து வந்த நான் அதற்கு மறுமொழி கூற வேண்டியதவசியம். செயற்கரிய செய்த பெரியாரின் சரிதம் பெரியபுராணம். பள்ளிமாணவர்கள் யாவரும் படித்துப் பயன்பெறவேண்டுமென்பது என் கருத்து. அவர்கள் ஆலயத்தொண்டு செய்ய முன் வந்தால் நன்மைதரும். கோயில் மதில்களையும் மண்டபங்களையும் அவற்றின் மேல் முளைத்திருக்கும் செடி, மரங்களையும் பார்க்

[illegible] கள்ளரிச் [illegible] நாத்திகக் கூட்டங்கள் இவ்விதம் [illegible] முடிந்து கோயில்களைத் தாக்க முன்வந்திருக்கின்றன என்று சொல்[illegible]கிறேன். ஆளுக்கொரு ரூபாய் கொடுத்தால் மண்டபங்களை நல்ல நிலையில் [illegible]லாம். எல்லாரும் பணி செய்யலாம். பணி செய்து அரும்பேறு பெற்ற சரிதம்தான் பெரியபுராணம். அதற்கு உரை செய்த பெருமை திரு. C. [illegible] சுப்பிரமணிய முதலியார் அவர்களுடையது.

அதன்பின், திருவாசகமணி திரு. K. M. பால சுப்பிரமணியம் அவர்கள் பேசியதாவது: மொழிப் பிரச்சினையைக் கிளப்பிக் காலத்தைப் போக்கவேண்டாம். அதில் காலத்தைப் போக்கினால் இறைவனையடைதல் இயலாது. புதிய ஆராய்ச்சிக் கண்கொண்டு பெரியபுராணத்தைப் பார்க்கக்கூடாது. அது அன்பு நூல். தொண்டை மண்டல வேளாளராகிய பெருமக்களுக்கே சிறந்த நூல்களாகிய பெரியபுராணத்தையும் கம்பராமாயணத்தையும் உண்டாக்கியும் உண்டாகச் செய்தும் உலகில் பரவச் செய்த பெருமை உரியதாகும் என்று சொல்லலாம் போலத்தோன்றுகிறது சேக்கிழாரும், அதற்கு உரை எழுதிய திரு. C. K. S. அவர்களும், கம்பராமாயணத்தைத் தோற்றுவித்த சடையப்ப வள்ளலும், அதற்கு உரை செய்ய முயன்ற திரு. T. K. சிதம்பரநாத முதலியார் அவர்களும் அந்த மரபினர் என்பதை இங்கே நினைவூட்டலாம் என்று எண்ணுகிறேன். பெருநூல்களுக்கு உரைசெய்ய வந்த பலர் உரையை முடிக்கவில்லை. ஆனால் திரு. C. K. S. அவர்கள் 7 வால்யூம் எழுதி முடித்து விட்டார்கள். அது நடராசப் பெருமானின் அருள் துணையேயாகும். இப்பெரிய புராணப் பேருரையின் விலையைக் குறைக்க வேண்டுமென்று ஓர் அன்பர் சொன்னார். அதைக்குறைக்க வேண்டாமென்பது அடியேன் கருத்து. ஏழு திருமுறைகள் போல ஏழு வால்யூம்களாக உரை வெளிவந்துள்ளதும் இறைவன் திருவருள்தான்.

அதன்பின் சிதம்பரம் சி. ப. தேவாரபாடசாலை அதிபர் திரு. சின்னையா முதலியார் அவர்கள் பேசினார்கள். அதன் சுருக்கம் :

தேவாரம் முதலிய அருள்நூல்களில் இப்போது நம்பிக்கை குறைந்துவருகிறது. சிதம்பரத்தில் நாஸ்திகம் பரவி வருகிறது ஆச்சரியம்தான். திருஞானசம்பந்த மூர்த்தி நாயனார் நெருப்பில் இட்ட தேவாரம் எரியவில்லை என்றால் யாரும் நம்புவதில்லை. ஆனால் சமீபத்தில் நாகபுரி விமான விபத்தில் விமானமும் அதில் சென்றவர்களும் எரிந்துபோக, அதிலிருந்த 2500 ரூ. உண்டியல் (செக்) மட்டும் வேகாமல் இருந்தது என்றும் ஷை செக் ஸ்ரீமத் காசிவாசி அருள்நந்தித்தம்பிரான் அவர்கள் தேவாரப் பணிக்காக அனுப்பியது என்றும் காண்போமானால் அருள் செயல்களில் மக்களுக்கு நம்பிக்கை குறைவானேன் ? அப்பூதியடிகள் திருநாவுக்கரசு நாயனார் பெயரைத் தன் மக்களுக்கும் மனைவிக்கும் மற்றுமுள்ள பொருள்களுக்கும் வைத்தார் என்றால் அதைக் குறைவாகப் பேசும் மாக்களும் உண்டு. ஆனால் இக்காலத்தில் கொள்கைக்காக அண்ணா வாசகசாலை என்றும், இராவணன் டீஸ்டால் என்றும் பெயர் வைப்பதைக் காண்கிறோமல்லவா ?

1935-ம் வருஷத்தில் இப் பெரியபுராண உரை முதல் சஞ்சிகை வெளியிடப்பட்டது. அக்கூட்டத்திற்கு வெகு சில பேர்தான் வந்திருந்தார்கள். 1948-ல் உரை யெழுத்து நிறைவும் இங்குதான் நடந்தது. அதற்கு அதைவிட அதிக மக்கள் கூடியிருந்தார்கள். ஆனால் இப்போது பேருரை நிறைவு விழாவின்போது மக்கள் பெருந்திரளாகக் கூடியுள்ளார்கள். இதிலிருந்து மக்கள் பெரியபுராணத்தில் கொண்[illegible] பெரிய ஆர்வம் தெரிகிறது. உரை எழுத்து நிறைவுவிழாவின்போது மன்[illegible]

காரி போன்ற அம்மையார் திருமதி புஷ்பம் பொன்னுசாமி அவர்கள் சிதம்பரனாரின் பேரனாக ஆராவு நாள்... என்று குறை கூறினார்கள். ஆனால் இப்போது எல்லாச் சிறப்பும் செய்து அக்குறையை நீக்கிவிட்டோம். உரையாசிரியர் திரு. C. K. S. அவர்கள் தெய்வாம்சம் பொருந்தியவர்கள் என்பது விளங்குகிறது. அவர்களுக்கு எப்போதும் கோபம் என்பதே வருவதில்லை. பெண்களும் போதிய அளவு பங்கெடுத்துக் கொண்டது மகிழ்ச்சியும் பெருமையும் தருகிறது.

பின்னர் மதுரை வித்துவான் திரு. இராமையா பிள்ளையவர்கள் பேசினார்கள். அவர்கள் பேச்சின் சுருக்கம்: திருத்தொண்டர் புராணத்திற்கு உரை எழுதுதல் எளிதான காரியமல்ல. உதாரணமாக ஞானசம்பந்த சுவாமிகள் திருமருகலில் விடந்தீர்த்த சரிதத்தைக் கூறும்போது ஆசிரியர் "பதிகநூல்" என்று சொல்கிறார். அச்சொல்லுக்கு வழிச்செல்வோன் என்று பொருள். இப்பொருளை யறியாது பாதி என்று பொருள் செய்திருக்கிறார் ஒருவர். இச்சொல் கலவு மணமாகிய தமிழ் மரபைக் காட்டுகின்ற சொல்லாகும். அதைத் தெரிந்திருந்தால் அவ்வாறு பொருள் செய்திருக்கமாட்டார். உரையாசிரியர் ஆங்கிலம் பயின்றவராதலால் இந்நூலின் உரைக்குரிய ஆதாரங்களை ஆங்கிலத்திலிருந்தும் தருவார். உதாரணமாக ஆங்கிலத்தில் Swan Song என்று ஒரு மரபு உண்டு. அது இறுதிப் பாட்டு என்பதை குறிக்கும். திருமருகல் நிகழ்ச்சியில் "அன்னமென அயர்வாள்" என ஆசிரியர் கூறுகிறார். ஆங்கிலத்தின் ஆட்சி பொருத்தமாக உரையாசிரியர் காட்டியிருக்கிறார். உரையாசிரியர் தேவாரம், பெரியபுராணம் முதலிய நூல்களில் மிகுந்த பயிற்சி உடையவராய் அவற்றின் அருட்பொலிவுகள் கைவரப் பெற்றவர்.

பின்பு, சிதம்பரம் தண்டபாணி பிள்ளையவர்கள் பேசினார்கள். அவர்கள் பேசிய விவரம்: இக்கூட்டத்தில் பெரியபுராணப் பெருமையைப் பற்றிப் பேச நான் தகுதியுடையவன். 28 ஆண்டுகளுக்கு முன் என் மகனுக்குச் சேக்கிழார் என்று பெயர் வைத்திருக்கிறேன். அதன் பின் பிறந்த பெண்ணுக்கு மங்கையர்க்கரசி என்றுபெயர் வைத்திருக்கிறேன். பெரியபுராணத்தைச் சுபமரியாதைக்காரர் இகழ்வது தவறுடையதாகும். தமிழ் வல்லல்களாயுள்ளவர்கள் இவ்வுரையை வாங்கிக்கொடுக்கலாம். பலர் சேர்ந்து படிக்கலாம்.

அதன் பின், திருமுக்திரமணி தொடிசைகிழார் A. சிதம்பரமுதலியார் (Retired Circle Inspector of Police) அவர்கள் இக்கிறைவுவிழாவிற்குத் தில்லைத்திருமுறைக்கழகத்தாரும்,உரையாசிரியரும் விழாக்குழுவினரும் தனித்தனி நிகழ்ச்சிநிரல்கள் வெளியிட்டுள்ளார்கள். அதைபொட்டிக் கொங்கு நாட்டைப் பற்றிச் சிறப்பாக நான் சொல்லவேண்டியதன்று. அதன் சார்பாக இவ்வாழ்த்தை நான் படிக்கிறேன் என்று பேசித் தமது வாழ்த்துரையை வழங்கினர். பின்னர்வாழ்த்துக்கள் வழங்கப்பட்டன. அவை நூற்றுக்கு மேற்பட்டிருந்தனவாதலாலும், படிக்க நேரமில்லாதலாலும், யார் யாருடைய வாழ்த்துரை என்று பெயர் சொல்லி அவ்வவர்களால் வழங்கப்பெற்றன. பின்னர்க் குலசேகரன் பட்டினம் வீர சுப்பிரமணியம் அவர்கள், உரையாசிரியர் திரு. C. K. சுப்பிரமணிய முதலியார் அவர்கள் இங்கு நம்முன் நின்றது சேக்கிழார் பெருமானே நினைவூட்டுகிறது என்று பேசினர்.

செயற்குழுவின் சார்பாக நிதிகாப்பாளர் திரு. M. S. பழனியப்ப முதலியார் அவர்கள் டெ. செயற்குழுவின் சார்பாக சி.ப.தேவாரப் பாடசாலை முதல்வர்களாகிய முதலியார்களுக்கும், திரு. கணபதி பிள்ளையவர்களுக்கும், திரு. S. இராமலிங்க ஓதுவார் அவர்களுக்கும் மாலை சூட்டிச் சிறப்பித்தார்கள்.

அதன் பிறகு உரையாசிரியர் திரு. C. K. S. அவர்கள் நன்றியுரை நிகழ்த்தினார்கள். அதன் சுருக்கம் :

காலம் இடந்தாராததால் ஐந்து நிமிட நேரத்தில் நன்றி செலுத்துகிறேன். பெரியபுராணப் பேருரையை நான் எழுதுகிறேன் என்ற எண்ணமே எனக்கில்லை. இறைவன் தான் சிறியவனாகிய என்னைக் கருவியாகக் கொண்டு எழுதவைக்கிறான் என்ற எண்ணம் எப்பொழுதும் என் முன் வருகிறது. இப்புராணத்தின் 40... பாட்டுக்களிலும் ஐந்து பாட்டுக்கள் எனக்குச் சிறப்பாக முன்வந்து நிற்கின்றன. அவை முதலிடைகடைகளில் " உலகெலாம் " என்று போதிக்கப்பட்டுள்ள மூன்று திருப்பாட்டுக்களும் " மார்பாரப் பொழிகண்ணீர் " என்று தொடங்கும் திருநாவுக்கரசு நாயனாருடைய திருவுருவத்தை நமக்கு எழுதிக் காட்டும் திருப்பாட்டும் " ஞானத்தின் திருவுருவை " எனத் தொடங்கும் திருஞான சம்பந்தருடைய அருநிலையை எடுத்துக்காட்டும் திருப்பாட்டும் ஆம். என் நண்பர் திரு. R. K. சண்முகம் செட்டியார் அவர்கள் அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தின் சார்பாக 7-வது பகுதி நிறைவுக்காக 1500 ரூபாய் அன்புடன் அளித்தார்கள். இப்புராண விரிவுரை நிறைவின் பரிசிலாகச் சென்னைப் பல்கலைக்கழகத்தார் உரைத்தொடக்கத்தில் கொடுத்த 1000 ரூ. அல்லாமல், இப்போது 1000 ரூ. பரிசாக் கொடுத்துள்ளதை நீங்கள் கேட்டு கண்டீர்கள். பல நாடுகளிலிருந்தும் மக்கள் கல்யாணத்திற்கு வந்திருப்பது போல வந்து கூடியிருக்கிறீர்கள். சேக்கிழார் பெருமானுடைய பெருமையைக் கண்டு களிகொள்ள வேண்டுமென்ற ஒரே எண்ணத்துடன்தான் வந்து கூடியிருக்கிறீர்கள். உங்கள் எல்லாருக்கும் என் நன்றி உரியது. திருப்பனந்தாள் மடம் காசிவாசி ஸ்ரீமத் அருள் நந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள் இவ்வுரை வெளியீட்டுக்காகச் செய்துள்ள உதவிகள் மிகப் பெரியன. உதாரணமாக ஒன்று சொல்ல நினைக்கிறேன்: திருப்பனந்தாளுக்குத் திருஞானசம்பந்தப் பெருமான் எழுந்தருளிய செய்தி பெரியபுராணத்தில் வருகிறது. அந்தப் பகுதி வரும் சஞ்சிகையை அவர்களது திருமடத்தின் சார்பில் அச்சிட்டுக் கொடுக்கும்படி விண்ணப்பித்துக்கொண்டேன். அதன் செலவுக்காக 1000 ரூ. அளித்தார்கள். ஆனால் திருப்பனந்தாள் செய்தி புராணத்தில் வரும் இடம் 14 வார்த்தைகள்தான் என்று நீங்கள் தெரியும்போது கொடையின் பெருமை நன்கு விளங்கும். அதன் பின்னும் முன்னுமாக அனேக ஆயிரம் ரூபாய்களை அன்போடு அளித்துள்ளார்கள். இப்போதும் இந்நிறைவு விழாவில் 1000 அடியார்களுக்கு அன்னதானம் செய்வதற்வதற்காக 1000 ரூ. அன்புடன் அளித்துள்ளார்கள். தருமபுரம் முன்னைய ஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கள் திருநாவுக்கரசு நாயனார் புராண உரை முழுவதும் தமது திருமடத்தின் சார்பாக அச்சிட்டு உதவினார்கள். இப்போது ஆட்சி புரியும் ஸ்ரீமகாசந்நிதானங்கள் திருஞானசம்பந்த நாயனார் புராணத்தில் 100 திருப்பாட்டுக்கள் அச்சிட்டுதவினார்கள். இன்னும் பல நண்பர்கள் பல உதவிகள் செய்துள்ளார்கள் ; எல்லோருக்கும் என் நன்றியைச் செலுத்துகிறேன். தில்லை வாழந்தணர் சமூகத்தார் இப்புராண உரை தொடக்க முதல் செய்துவந்த பேருதவிகள் என்றும் மறக்கற்பாலன அல்ல. அவர்களுக்கெல்லாம் என் நன்றியும் வணக்கமும் உரியன.

அதன் பின் தலைமை தாங்கிய திருஞானசம்பந்த மடாலய ஸ்ரீமத் சோமசுந்தர அடிகள் அவர்கள் தன் முடிப்புரையை நிகழ்த்தினார்கள். அதன் சுருக்கமாவது :

பெரியபுராணத்தைப் பற்றியும் உரையாசிரியரைப் பற்றியும் பலர் பாராட்டினார்கள். பலர் பெரியபுராணத்தின் பெயரில் புராணம் என்ற பெயரை மாற்ற

பின்னும் என்ற உணர்ச்சியுடன் பேசினார்கள். ஆண்டவனுக்கே "புராணன்" என்ற பெயர் உண்டு. ஆண்டவன் அடியவர்களுக்கு அருள் செய்த வரலாறுகளைக் கூறுவது பெரியபுராணம். ஆகையால் பெயரைப் பற்றி மாறுபாடு சொல்ல வேண்டிய அவசியமில்லை.

மொழிப்பிரச்சினையைப் பற்றியும் பேசப்பட்டது. நமக்கு எந்த மொழியில் விருப்பமோ அதில் துதி செய்யலாம். பொருளுணர்ந்து கூறினால் ஆண்டவனுக்கு ஏற்றது. பெரிய புராணம் உலகம் போற்றும் நூல். அது எல்லா மொழிகளிலும் மொழிபெயர்க்கப்படவேண்டும். ரெவரண்ட் ஜி. யூ. போப் அவர்கள் திருவாசகத்திற்குச் செய்த பணிபோல மற்ற புலவர்களும் பெரிய புராணத்தில் மனங்கொண்டு பணி செய்யலாம். உரையாசிரியர் சிவக்கவிமணியவர்கள் 24 வருடம் செய்த தொண்டுபோல எல்லாப் பெருமக்களும் செய்யலாம். ஆண்டவன் எல்லாருக்கும் உணர்த்துகிறார். பன்மொழிப்புலவர்கள் இதில் ஈடுபடவேண்டும். நடராசப்பெருமான் அவர்களுக்கு உணர்த்தி ஆட்கொள்ள வேண்டும். திரு. C. K. S. அவர்களின் உழைப்பு மற்றவர்களுக்கும் ஊக்கத்தைக் கொடுக்கவேண்டும்.

அதன்பின், செயற்குழுவின் செயலாளர் ராவ்பகதூர் திரு. C. M. இராமச்சந்திரன் செட்டியார் அவர்கள் குழுவின் சார்பாக நன்றிகூறினார்கள் :—இந்த விழாவிற்குப் பலருக்கு அழைப்பில்லை என்றும், போதுமான விளம்பரமில்லை என்றும் கூறப்பட்டது. எங்களால் இயன்றவரையில் விளம்பரம் செய்தோம்; அழைப்புக்களும் அனுப்பினோம். அழைப்புக்கள் சேராமல் இருந்தால் அவர்களிடம் மன்னிப்புக் கோருகிறோம்; பெரியபுராண உரையின் அதிகப்பிரதிகள் வாங்குபவர் ஈழநாட்டுப் பெருமக்கள். அவர்களும் பெருந்தொகையாக வந்து சிறப்பித்துள்ளார்கள். அவர்களுள் ஒருவர் தந்தியின் மூலமாக தமிழ்ப்பாட்டை ஆங்கிலத்தில் பேரார்வத்துடன் அனுப்பியிருக்கிறார் தில்லைவாழ்ந்தணர்களாகிய பொது தீட்சிதர்கள் இந்நிறைவு விழாவுக்கு எல்லாவகையான உதவிகளும் செய்து ஆசீர்வதித்துச் சிறப்பித்திருக்கிறார்கள். அவர்களுக்கும், தலைமைதாங்கிச் சிறப்பாக நடத்திக்கொடுத்த அடிகளாருக்கும், மற்றும் விழாவிற்கு யானை அனுப்பியும் ஆசியுரைகள் அனுப்பியும் வாழ்த்துரை அனுப்பியும் சிறப்பித்த சைவாசாரியர்களாகிய தருமபுரம், குன்றக்குடி, மைலம் முதலிய மடாதிபதிகளுக்கும், வாழ்த்துரை வழங்கிய சங்கங்கள் பெருமக்கள் இவர்களுக்கும், பொன்னாடைகளும் மற்றும் பல சிறப்பான பரிசுகளும் வழங்கிய அன்பர்களுக்கும், வாழ்த்துரை வழங்கிச் சொற்பொழிவுகள் செய்த புலவர் பெருமக்களுக்கும், சிவபூசகர்களைப் பெருந்திரளாக வரவழைத்துத் திருவிழாவின் நிகழ்ச்சிகளின் நிலைகளை நிறுவி, விழாவிற் சிவப்பொலிவு நிரம்ப அணிசெய்து சிறப்பித்த தில்லைத்திருமுறைக் கழகத் தலைவர் திரு. ஆ. க. கணபதி பிள்ளையவர்களுக்கும், விழாவிற்கு வந்திருந்த அனைவருக்கும் திருவிருந்து அளித்து உபசரித்த தேவாரப் பாடசாலை முதலாளிகளுக்கும் மாகேசுரபூஜை செய்வித்த திரு. வைத்திலிங்கம் செட்டியார் அவர்களுக்கும், அடியார்களுக்கு அன்னதானம் அளித்த திருப்பனந்தாள் மடத்தின் அதிபர் அவர்களுக்கும், மின்சார விளக்குகளுக்கும் திருவுலாவின் இன்னிசை விருந்திற்கும் பொருளுதவிசெய்த - திருச்சி - கொளூர் கர்ணம் திரு. B. வைத்திலிங்கமுதலியார் அவர்களுக்கும், திருவிழாவின் தேவாரத்திற்கும் இன்னிசைவிருந்திற்கும் ஒழுங்குசெய்த திருக்கடவூர் திரு. கைலாசம்பிள்ளையவர்களுக்கும், திருவுலாவில் இன்னிசைப் பெருவிருந்து இசைபாடச்செய்த திருவெண்

காரு ஆதகர வித்துவான் திரு. டி.பி. சுப்பிரமணியபிள்ளையவர்களுக்கும், எல்லோ ரும் தங்குவதற்கு இடவசதியும் மற்றைய வசதிகளும் செய்துகொடுத்த அண்ணாமலைப் பல்கலைக்கழக அதிகாரிகள், பச்சையப்பன் உயர்நிலைபபள்ளி தலைமையாசிரியர், மெய்கண்ட . வித்தியாசாலை, சி. ப. தேவாரபாடசாலை அதிபர்கள், ஆறுமுக நாவலர் மடததின் அதிபர்கள், ஆச்சாபுரம் மைனர் முத்துக்குமரன், R. சம்பந்தம் பிள்ளை இன்னும் மற்றையோர்க்கும், மற்றும் இவ்விழாவிற்குரிய எலலாப் பணி கஃாயும் மனம் மொழிமெய்களால் செய்து பேருதவிபுரிந்த பச்சையப்பன் பள்ளிச் சாரணப் படையினர், புகைப்படம் எடுததுத் தந்த R. T. வேல்பிரதர் திரு. சொக்க லிங்க முதலியார், (ஜெயவேல் ஸ்டுடியோ, கெம்பு ஸ்டுடியோ), மின்சார உதவிபுரிந்த மாடர்ன் ஸ்டுடியோ சர்விஸ் முதலிய எல்லாப் பெருமக்களுக்கும் மனமார்ந்த நன்றி யைச் செயற்குழுவினரின் சார்பாகச் செலுத்துகிறேன் என்பது அவர் பேச்சின் சுருக்கம்.

திரு. சிதம்பரேச தீட்சிதர் அவர்கள் ஓர் வேண்டுகோள் வழங்கினர். அஃதாவது உலகெலாம் என்பது ஓங்காரவடிவம். அந்த வடிவத்தின் விரிவு இம்மண்டபத்தில் தான் வெளிபபட்டது. இநத மண்டபத்தைத் திருப்பணிசெய்யவேண்டும். திருமதில் களும் திருப்பணிசெய்யவேண்டும். அன்பர்கள் யாவரும் உதவுவார்களாக.

ஷை தீட்சிதர் அவர்களின் குமாரர் தேவாரம் பாடினர். அதன்பின் தேவார ஆசிரியர் திரு. S. இராமலிங்க ஓதுவார் அவர்கள் வாழ்த்துபபாட இரவு 11 மணிக்கு விழா இனிது நிறைவெய்தியது.

சிவனருள் சிறக்க! சேக்கிழார் பெருமான் சேவடி வாழ்க!
புராண விரிவுரை ஓங்குக!
திருச்சிற்றம்பலம்

---

## நிறைவு விழாக் கமிட்டித் தலைவர் திரு சர். P. T. ராஜன் அவர்களின் வரவேற்புரை

தில்லையம்பலத்திலே திருக்கூத்தாடும் சிவபெருமான் திருவருளாலே " அவனருளாலே அவன்தாள் வணங்கி " என்ற திருவாதவூரர் வாக்கிற்கிணங்க திருவாளர் C. K. சுப்பிரமணிய முதலியாரவர்களால இயற்றப்பெற்ற, பெரிய புராணப் பேருரையை அரங்கேற்றுச செய்வதற்காக, அன்புடன பல்வேறிடங்களி லிருந்தும் வந்து இங்கு கூடியிருக்கின்றீர்கள். மெய்யன்புசான்ற சானறோர்களாகிய தங்களது வருகை நம் நாட்டிற்கும், சிறப்பாகச் சைவத்திற்கும் சிறந்ததொன்றாகவே நிகழ்கின்றது. இத்தகைய நிலையில் தங்களையெல்லாம் நான் மகிழ்வுடனும் அன்புட னும் வரவேற்கிறேன்.

பெரியபுராணம் இந்நாட்டிற்கும் சைவத்திற்கும் தனிச்சிறப்பு வாய்ந்த கருவூலம் என்பது தாங்களறிந்ததே. இந்நூல் ஓர் வரலாற்றுச் சிறப்புவாய்ந்த நூல். மெய்யடி யார்களின் வாழ்க்கை நிலையைச் செவ்விதின் விளக்கும் ஓர் சிறந்த பெட்டகம். கி. பி. 3-ம் நூற்றாண்டு முதல் ஏறக்குறைய கி. பி. 7ம் நூற்றாண்டுவரை, வரலாற்று முறையில் தமிழ்நாட்டின் இருண்டகாலமென்றேதான் சொல்லவேண்டும்.

சமணமும் பௌத்தமும் தலைதூக்கிச், சைவம், மக்களாலும், அரசர்களாலும் போற்றிக் கொண்டாடப்பெறாத காலம். அக்கால வரலாற்றை இப்பெரியபுராணத் [illegible] நோக்கின், அவ்விருண்டகால வரலாறும் நமக்கு ஒருவாறு கிடைக்கப்

——————தமிழுலகுக்கு அத்தகைய ஓர் சிறந்த நூலுக்கு திரு. C.K.S. அவர்கள் "தாம்பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்" என்பதற்கேற்பவும் "என் கடன் பணிசெய்து கிடப்பதே" என்பதற்கேற்பவும் ஓர் அரியவுரையைத் தமது நீண்டகால அனுபவ ஆராய்ச்சியின் மூலம் வெளியிட்டிருக்கிறார்கள். "நன்றி மறப்பது நன்றன்று" என்று கூறியதற்கேற்ப C K.S. அவர்களின் பேருரையை அரங்கேற்றஞ் செய்து சிறப்பிக்கக்கூடியுள்ள தங்களை வரவேற்கும் பேறு எனக்குக் கிடைத்தமைக்குப் பெரிதும் மகிழ்கின்றேன். C.K.S. அவர்கள் இன்றைய உலகின் நிலையையொட்டிய புத்தகங்களை எழுதுவதில் தமது கருத்தைச் செலுத்தாமல், சைவத்தின் கருவூலமாய் விளங்கும் பெரியபுராணத்திற்குப் பேருரை எழுதி வெளியிட முன்வந்தமையை நாம் எல்லாம் பெரும் பேறாகக்கொண்டு மகிழவேண்டும் என்று கூறியும் தங்களை எல்லாம் அன்புகொண்டு வரவேற்கிறேன்.

## உரை

கருத்துரைத்தலும், கண்ணழித்தலும்,
பொழிப்புத்திரட்டலும், அகலங்கூறலும்

என்னும் நான்கு வகையாலும் நம்மவர் பெருநூல்களுக்கு உரை கண்டு மகிழ்ந்திருக்கின்றனர்.

1. கருத்துரைத்தலாவது:—செய்யுளின் கருத்தை மட்டும் கூறுதல்.
2. கண்ணழித்தலாவது:—மூலபாடத்தைப் பதம் பதமாகப் பகுத்தெடுத்து அவற்றிற்கு, அன்மை, அவாய்நிலை, தகுதி என்னும் முறைகொண்டு உரை கூறல்.
3. பொழிப்புத்திரட்டலாவது:—மூலபாடத்தை நீக்கிப் பதங்கட்கு உரிய பொருள்களை மாத்திரம் தொகுத்திடல்.
4. அகலங்கூறலாவது:—செய்யுளின் இலக்கண முறை கண்டு உரை கூறும் ஆசிரியரே வினுச்செய்து அவற்றிற்கு விடையுங்கூறி சந்தேக விபரீதங்களைக் களைந்து உரை கூறல்.

நம் அருமைத் திருநூலாம் பெரியபுராணமாகிய உயர் நூலுக்கு மேலே காட்டப்பட்ட நால்வகை முறையில் இதுவரை யாருமே உரை எழுதவுமில்லை; அம்முயற்சியை மேற்கொள்ளவும் இல்லை. இதனால் முன்னவர்கள் யாவரும் உரையெழுதும் ஆற்றல் அற்றவர்கள் என்று அர்த்தமில்லை. அவர்கள் வாழ்ந்த சூழ்நிலைக்கேற்ப, காலத்திற்கேற்ப, சைவப் பெருநூல்களுக்கு "சிற்றறிவினையுடைய எம் உரை கூறல் தகாது என்றும் அங்ஙனம் செய்தல் பாபம் என்றும் நினைத்துப் பெரியபுராணத்திற்கும் தேவார திருவாசகங்கட்கும் உரையெழுதாது விட்டனர்".

உதாரணமாக வித்துவான் சிவாகாரச் செட்டியாரவர்களிடம், ஒருவர் தேவாரத்திற்கு உரையெழுதுமாறு கேட்டுக்கொண்டாரென்றும், செட்டியாரவர்கள் மேலே கூறிய காரணத்தை மனதிற்கொண்டு கேட்டுக்கொண்டவரின் மனம் புண்படக்கூடாதென்பதற்காகச் "செய்வோம், செய்வோம்" என்று காலந்தாழ்த்தி வந்ததாகவும், ஒருநாள் செட்டியாரவர்களும் அந்நண்பரும் காவிரிக்கரைக்கு உலாவச் சென்றபோது அந்நண்பர் செட்டியாரை நோக்கி "ஐயா இவ்வாண்டில் எப்படியாவது தேவாரத்திற்கு உரையெழுதி முடித்துவிடவேண்டும்" என்று கூறியதாகவும், செட்டியார் கோபித்து "ஐயா அத்தெய்வீக நூலுக்கு என்னையொத்த அற்ப அறிவுடையவர்களை உரை எழுதச் செய்து நரகத்தில் தள்ளுவதைக்காட்டிலும்,

இந்தப் புண்ணிய நதியாகிய காவிரியிலாவது தள்ளிக் கொன்றுவிடுங்கள்! அதனால் நான் சிவபதமாவது அடைவேன்" என்று கூறியதாகவும் திரு. உ. வே. சாமிநாதையரவர்கள் எழுதியிருக்கிறார்கள். இதிலிருந்து நம் முன்னவர்கள் அந்நூல்களில் அவர்கள் வைத்த பெருமதிப்புக் காரணமாகவே, உரையெழுதாது விட்டனர் என்று தெரியவருகிறது.

நம் C.K.S. அவர்கள் வாழுகின்ற இக்காலமும் சூழ்நிலையும் எந்தப் பொருளையும் ஆராய்ந்தறிந்து தாம் இன்புறுவதோடு நில்லாது, அதனை உலகின்புறும்வண்ணம் செய்யவேண்டும் என்னும் காலமும், சூழ்நிலையுமாக இருக்கின்ற காரணத்தால், இவர்கள் இந்நிலைக்கேற்ப, இந்த அரிய பேருரையைச் செய்து உபகரித்துள்ளார்கள். இவர்களால் காணப்பட்ட உரைநயம் அச்சுவாகனமேறி யாவரும் படித்தின்புறும் வாய்ப்புடைத்தாக இருக்கிறது. இத்தகைய சிறந்த உரையைப் பதப்பொருள் இலக்கிய நுணுக்கம், இலக்கணப் பொருத்தம், சமயநோக்கு, மேற்கோள் காட்டல், முதலிய அரிய முறைகளைக் கையாண்டு, உரையாசிரியர் அவர்கள் செய்த பேருபகாரம் உலகம் உள்ள அளவும் நின்று நிலவுவதோடு, அந்நிலைபேற்றில் நம்மையும் அவ்வின்பத்தில் இணையும்படி செய்கிறது.

இவ்வரிய உரையை இயற்றிய பெரியார் அவர்களின்பேரிலுள்ள நன்மதிப்புக் காரணமாக இங்கு வந்து கூடி இவ்வுரையை அரங்கேற்றச் செய்ய இருக்கும் உங்களையெல்லாம் மனமார, வாயார, மெய்யார வாழ்த்தி வரவேற்கின்றேன்.

மும்மலமும் கழுவும் முழுமுதல் இறைவன் செம்மலர்ப் பாதம் சிறப்புடன் தூக்கித் திருநடனம் செய்யும் இத் தில்லைப் பெரும்பதியுள் இவ்வரங்கேற்றச் செயல் குறித்துக் காரியம் செய்வோர், புலவர் பெருமக்கள், சான்றோர், அரசியலார், பார்வையாளர் அனைவரையும், அகங்குழைந்து அன்புடன் வரவேற்கிறேன்.

வாழ்க சைவம்

வளர்க பைந்தமிழ்

"வாழ்க அந்தணர் வானவர் ஆனினம் - வீழ்க தண் புனல் வேந்தனும் ஓங்குக
ஆழ்க தீயது எல்லாம் அரன் நாமமே - சூழ்க வையகமும் துயர் தீர்கவே."

---

மதுரை திருஞானசம்பந்த நாயனார் ஆதீன இளவரச
திருப்பெருந்திரு திருவருள் தவயோகி

## சோமசுந்தர தேசிக பரமாசாரிய சுவாமிகள் அருளிய

## தலைமை உரை

செல்வ நெடுமாடஞ் சென்று சேணோங்கிச்
செல்வ மதிதோயச் செல்வ முயர்கின்ற
செல்வர் வாழ்தில்லைச் சிற்றம் பலமேய
செல்வன் கழலேத்துஞ் செல்வஞ் செல்வமே. —திருஞானசம்பந்தர்

மெய்யன்பர்களே !

பெரிய புராணப் பேருரை வெளியீட்டு நிறைவு விழாவின் வைதிக வைபவத்தின் நன்னாளாகிய இந்நாள் இப்புனித தலத்தில் கோயில் கொண்டருளும் அம்பலவாணரைத் தரிசிக்கவும், இப்பேரவையில் தலைமை தாங்கிச் சிறப்பிக்கவும், பேரன்பர்க

னாகிய உமையை யெல்லாம் கண்டு களிக்கவும் அருள்பாலித்த எல்லாம் வல்ல சிவ பரம்பொருளின் திருவருளுக்கு வணக்கம்.

பெரியபுராணத்தை அருளிச்செய்த சேக்கிழார் பெருமானும், அதை உடனிருந்து கேட்டுகந்த அநபாயச்சோழமன்னனும் சிறந்த சித்திரை மாதத்தில் திருவாதிரை நட்சத்திரத்தில், இதே ஆயிரக்கால் மண்டபத்தில் அரங்கேற்றுவிழாக் கொண்டாடியதுபோல், பெரியபுராணப் பேருரை வெளியீட்டு நிறைவு விழாவும் சித்திரை மாதத்திய திருவாதிரை நாளாகிய இன்று கொண்டாடப்பெறும்படி நிர்மாணித்த விழாச் செயற்குழுவினரை நாமெல்லோரும் பாராட்டக் கடமைப்பட்டிருக்கிறோம். அதற்கு அன்பே உருவாக, தியாகமே சின்னமாகக் கொண்டொழுகும் சர். பி. டி. இராசன் அவர்களின் சீரிய தலைமையும், தமிழுக்கும் சமயத்திற்குமே தன்னை அர்ப்பணம் செய்த தொண்டாற்றிருவரும் திரு. சி. எம். இராச்சந்திரன் செட்டியார் அவர்களின் பண்பாடும் செயலாற்றும் திறமுமே காரணமென்று கருதுகின்றோம்.

தெய்வமணம் கமழும் பெரிய புராணத்திற்குப் பலர் உரை எழுதியிருக்கிறார்கள். அவர்களுள் ஸ்ரீ மகாலிங்க ஐயர் அவர்களுடைய பொழிப்புரை திருக்குறிப்புத் தொண்ட நாயனார் புராணம் வரையே நடைபெற்றிருக்கின்றது. காஞ்சி ஸ்ரீ ஆலால சுந்தரம்பிள்ளை அவர்கள் 3 சருக்கங்களுக்கு மாத்திரம் உரை எழுதியிருக்கிறார்கள். கயப்பாக்கம் திரு. சதாசிவச் செட்டியார் அவர்கள் குறிப்புரை மாத்திரம் எழுதி அச்சேற்றப் பெறாமல் இருந்து வருகிறது. அதுபோலவே திரு. இராமநாதன் செட்டியாரவர்கள் எழுதிய கையெழுத்துக் குறிப்புக்களும் அச்சில் வாராதவையே.

பெரியபுராணம் முழுவதையும் உரையுடனே வெளியிட்டிருப்பவர்கள் திருவாரூர் திரு.வி. கலியாணசுந்தர முதலியாரவர்களும், திரு. ஆறுமுகத் தம்பிரான் சுவாமிகளும் திரு. சுப்புராயலு நாயக்கர் அவர்களும், நாம் விழாக்கொண்டாடுகின்ற பேருரை தந்திருக்கும் சிவக்கவிமணி திரு. சி. கே. சுப்பிரமணிய முதலியாரவர்களும் ஆவார்கள்.

சிவக்கவிமணி அவர்களுடைய பேருரையானது சேக்கிழார் சுவாமிகளது ஆழ்ந்த தெய்வீகக் கருத்துக்களை அகழ்ந்தெடுத்த பெரியதோர் அருட்புதையலாக அமைந்து இருக்கிறது. ஆங்கிலத்தில் முழுவிவரங்களையும் விளக்குகின்ற நூலுக்கு (Encyclopedia) கலைக்களஞ்சியம் எனப் பெயர். அதுபோலச் சிவக்கவிமணியவர்களுடைய பேருரையும் சைவ சமயத்தின் கலைக் களஞ்சியமாக அமைந்திருக்கிறதென்றே சொல்லலாம். அவ்வண்ணம் அமைந்த காரணம் சிவக்கவிமணியார் சேக்கிழார் சுவாமிகளிடத்தில் இடையறாத அன்பு பூண்டு அவருடைய தெய்வீகத் திருவாக்குக்களைத் திருவருள் உணர்த்த உணர்ந்ததேயாகும். சேக்கிழார் பெருமானுக்குச் சிறப்பான வகையில் வழிபாடுகள் செய்வதும், அன்னாருடைய திருநட்சத்திரத்தில் மாகேசுவரபூசை நடத்துவதும், பெரியபுராணத்தில் உள்ள தெய்வக் கவிதைகளையும் திருவருட் பெருமைகளையும் கேட்பவர் மனம் கசிந்துருகும்படி விளக்க உரைகள் நிகழ்த்துவதுமே நியமமாகக்கொண்டு ஒழுகி வந்திருக்கிறார்கள்.

சிவக்கவிமணியார் சேக்கிழார் பெருமானிடத்தில் கொண்டுள்ள பேரார்வம் காரணமாக அப்பெருமானுடைய திருவுரு ஒன்று வார்ப்பித்து, திருப்பேரூர்ப் பட்டிப்பெருமான் திருக்கோயிலில் வழிபாடு செய்யப் பெறல்வேண்டுமென்று எண்ணி அத்திருவுருவத்தை வார்க்கும்படி ஏற்பாடு செய்தபொழுது, அந்த வார்ப்பில் தங்கம் சிறிதளவு சேர்க்கப்பெறல் வேண்டுமென்று தெரிவித்திருந்த சமயம் சிவக்கவிமணியார் தமது கைக்கெடியாரத்தில் சங்கிலியுடனிருந்த, ஒரு தங்கப் பதக்கத்தைக்

எழுதிக்கொடுத்துச் சேர்த்துக்கொள்ளும்படி செய்திருக்கிறார்கள். அப்பொற்பதக்கம் சிவக்கவிமணியாருக்குப் பி. ஏ. பரீட்சையில் தமிழில் முதலாவதாகத் தேறினதற்குச் சென்னைப் பல்கலைக்கழகத்தாரால் பரிசாக வழங்கப்பெற்றது. தம் வாழ்நாள் முழுவதும் போற்றி வைக்கப்பெறவேண்டியவற்றில் அப்பொற்பதக்கம் ஒன்றாகும்.

தாம் பெற்ற பரிசுப்பொருளையே சேக்கிழார் பெருமானுக்கு முதல் காணிக்கையாக அர்ப்பணம் செய்திருக்கிறார்களென்றால், சேக்கிழார் பெருமானிடத்தில் சிவக்கவிமணியார் கொண்டுள்ள பேரார்வத்தையும் பேரன்பையும் இச்செயல் வெளிப்படுத்துகின்றதல்லவா? இவற்றின் விளைவுதான் உரையாசிரியருக்குச் சேக்கிழார் பெருமானது கருணைமுழுதும் பாலிக்கப்பெற்றது; பெரியபுராணச் செய்யுளின் உட்கருத்துக்கள் உணர்த்தப்பெற்றன.

விளையும் பயிர் முளையிலேயே தெரியும் என்றபடி சிவக்கவிமணியாருக்கு அவரது இளமைப்பருவ முதலே பெரியபுராணத்தைப் படித்து வருவதிலுள்ள இணையற்ற விருப்பம் தன்னியல்பாகவே இனிது வளர்ந்து வந்ததென்பது தெரியவருகின்றது.

1894-ம் ஆண்டு முதல் 1906-ம் ஆண்டுவரை தமது தமிழாசிரியராகிய திரு. ச. திருச்சிற்றம்பலம் பிள்ளை (பெயரைக் குறித்துக் கவனித்துக் கொள்ளவேண்டியது. எந்த ஆண்டவனிடத்து ஈடுபாடோ, அந்த ஆண்டவன் திருப்பெயர் தாங்கிய ஒருவனோ ஒருத்தியோ நமக்குத் துணைசெய்கிறது அநுபவ உண்மை) அவர்களிடம் தமிழ் பயின்று, பெரியபுராணத்திடத்துப் பேரார்வம் கொண்டார்கள்.

1917-ம் ஆண்டிலிருந்து பெரியபுராணத்தைச் சிவக்கவிமணி முறையாக வாசித்து வந்தார்கள். 1918 ம் ஆண்டு திருப்பேரூரில் ஸ்ரீ சாந்தலிங்க சுவாமிகள் சங்கத்தின் இரண்டாவது ஆண்டுவிழாவிற்குத் தலைவராக வந்த திருவாளர் சுயம்பாக்கம் சதாசிவசெட்டியாரவர்கள் (பெயரைக் குறித்துக்கொள்க) நிகழ்த்திய தலைமையுரையில் சிவக்கவிமணியார் பன்னிருதிருமுறைகளின் பெருமைகளைச் "செவி வாயாக, நெஞ்சகலனாக" கேட்டுப் பெருமிதம் கொண்டார்கள். திரு. செட்டியாரவர்களைக் கொண்டே, கோவை நகரில் பெரியபுராணப் பிரசங்கம் நாள்தோறும் நடைபெறத் திருவருள் கூட்டிற்று. திரு. செட்டியாரவர்களுக்குக் கையேடு படிக்கும் பெருவாய்ப்பு சிவக்கவிமணியாருக்குக் கிடைத்தது. திரு. செட்டியாரவர்கள் பெரியபுராணத்திலுள்ள தெய்வ நலங்களையெல்லாம் கூறியதைச் சிவக்கவிமணியார் செவிகுளிரக்கேட்டு மகிழ்ச்சி பொங்கினர்.

திரு. செட்டியாரவர்களைப் பின்பற்றி 1918 முதலே சிவக்கவிமணியார் ஒரு ஆண்டுக்குள் பன்னிருதிருமுறைகளிலுள்ள எல்லா அருட்பாடல்களையும் ஆண்டுதோறும் தவறாது ஓதிவருகின்ற நியதியை மேற்கொண்டனர்.

சிவபூசா துரந்தரராகிய சிவக்கவிமணியார் பெரிய புராணத்தைப் படிக்குந்தோறும் தெய்வக் கவிநயங்களை உணர்ந்தும் அவற்றைப் பலமுறை போற்றியும், வர அந்த நயங்களை முன்பே அறியவில்லையே என்ற எண்ணமும் தோன்றப் பெரியபுராணத்திற்கு ஓர் உரை எழுதவேண்டுமென்ற கருத்து சிவக்கவிமணியார் உள்ளத்தில் திருவருளால் பிறந்தது. அதுமுதல் பெரிய புராணத்திலுள்ள நுணுகிய செம்பொருள் நயங்களைப் பெரியோர்கள் போற்றுமாறு பல பேரவைகளிலே சொற்பொழிவு வாயிலாக வெளியிட்டு வந்தார்கள்.

## சென்னைப் பல்கலைக்கழகத்தில் பெரியபுராண விரிவுரை

1930-ம் ஆண்டில் சென்னைப் பல்கலைக்கழகத்தார் சார்பில் நடைபெற்ற விரிவுரை " சேக்கிழார் " என்ற நூலாக வெளியிடப்பெற்றிருக்கிறது. இந்த வெளியீட்டின் மூன்றும் பதிப்பு 1952-ம் ஆண்டில் வெளியாகியுள்ளது.

உலகப் புகழ்பெற்ற சர். ஆர். கே. சண்முகம் செட்டியாரவர்கள் உடல் நலம் குன்றியிருந்த காலத்தில், " சேக்கிழார் " என்ற நூலின் விழுப்பொருளைச் சிவக்கவி மணியாரிடம் கேட்டு மகிழ்ந்து மிகவும் பாராட்டியிருக்கிறார்கள். இலங்கைச் சைவப் பேரறிஞர் திரு. சு. சிவபாத சுந்தரம் அவர்களும் " சேக்கிழார் " என்ற நூலை மிகவும் பாராட்டி யிருப்பது நினைவுகூரத்தக்கது.

இன்று விழாக்கொண்டாடப்பெறுகிற திருப்பணி சிவக்கவிமணியவர்களால் 1930—ம் ஆண்டில் கூத்தப்பெருமான் திருவருளால் துவக்கப்பெற்றது.

சேக்கிழார் பெருமான் இதே மண்டபத்தில்தான் கூத்தப்பெருமான் தமக்கு " உலகெலாம் உணர்ந் தோதற் கரியவன் " என அடியெடுத்துக் கொடுத்தருளிய ... " வானிழல் கூடிய பொருளின் " துணைகொண்டு பெரியபுராணத்தைப் பாடிப், புகழும் சிறப்பும் நிறைந்த அநபாய சோழப் பேரரசது சபையிலே அரங்கேற்றினார் என்பது வரலாறு. திருவருளின் வழியே பெரிய புராணப் பேருரையின் முதற் சஞ்சிகையின் முதற்பகுதி இந்த ஆயிரக்கால் மண்டபத்தில் சேக்கிழார் சுவாமிகளது திருநட்சத்திர தினத்திலே (யுவ வருடம் வைகாசி மாதம் 23-ம் தேதி; 5-6-1935) புதன்கிழமையன்று வெளியிடப்பெற்றது. இன்று (6-5-1954) பெரிய புராணப் பேருரை அரங்கேற்றப்பெறுகிறது.

திருப்பேரூரில் சுந்தரமூர்த்தி சுவாமிகள் தரிசித்த கூத்தப்பெருமானையே தில்லையிலும் கண்டு தரிசனம் செய்து பாடியருளிய திருப்பாடல் வருமாறு :—

> பாரூரும் அரவல்குல் உமைநங்கை அவள்பங்கன் பைங்க ணேற்றன்
> ஊரூரன் தருமனார் தமர்செக்கில் இடும்போது தடுத்தாட் கொள்வான்
> ஆரூரன் தம்பிரான் ஆரூரன் மீகொங்கில் அணிகாஞ்சிவாய்ப்,
> பேரூரர் பெருமானைப் புலியூர்ச் சிற் றம்பலத்தே பெற்றா மன்றே.

அதைப்போல் நமது உரையாசிரியரும் திருப்பேரூர்ப் பெருமான் திருமுன்பு உரை எழுதத் துவங்கி, 18 ஆண்டுகளுக்குப்பின் சிதம்பரத்தில் நிறைவு செய்திருக்கிறார்கள். என்னே திருவருளின் திருக்கூத்து! என்னே சிவக்கவிமணியாரின் உண்மை அன்பும் உலைவிலா முயற்சியும்!

### பேருரையின் அமைப்பு

பெரிய புராணத்தில் போற்றப் பெறும் நாயன்மார்களது அவதாரத்தலங்களும், அத்தலங்களுக்குச் சென்றடையும் வழி முதலிய விவரங்களும் சிவக்கவிமணியாருடைய உரைப்பகுதிகளில் தெளிவாகக் குறிக்கப்பெற்றுள்ளன. இந்த நாயன்மார்கள் அவதரித்த தலங்களுக்கு நேரிற் சென்று வழிபட்டும், கண்டும், அறிந்தோர் மூலம் கேட்டும், தல சரித்திரக்குறிப்புக்கள், கல்வெட்டுக்கள் முதலியனவற்றை ஆராய்ந்து திருவருள் துணைகொண்டு தெளிந்தும் புராண உரைப் பகுதிகளில் வெளியிட்டுள்ளது போற்றத்தக்கதேயாகும்.

சிவக்கவி மணியாரது திருத்தொண்டர் புராண உரை, தற்காலத்திற்கு வேண்டியவாறு புராணத்திலுள்ள செம்பொருள்களையும், திருப்பாடல்கள்தோறும் செறிந்து கிடக்கும் தெய்வநயங்களையும் எளிமையான நடையில் விளக்கிப், படிப்பவர்களைத்

தவநெறியில் செலுத்தும் போற்றல் உடையதாக உள்ளது. இந்த உரைப்பகுதிகள் தெளிவும் ஆழமும், அகலமும் நிறைந்து திருநெறிய தமிழ் நலங்களைத் தன்பால் பெற்றுத் திருவருளைத் துணைகொண்டு முடிந்துள்ளது. புராணவிளக்கங்களில் "வாலடைந்த பிறவியில்" மேற்கொள்ளவேண்டிய சரியையாதி செந்நெறிகள் தெளிவாக எடுத்துக் காட்டப்பெற்றுள்ளன. அந்நெறிகளில் நின்று ஒழுகிய மெய்த் தொண்டர்களின் அநுபவங்கள் ஆங்காங்கு விரித்துரைக்கப் பெற்றுள்ளன. சமய கோடிகளின் அரசென விளங்கும் சைவத்தின் சித்தாந்த நுண்மாண்பொருள்கள் அடங்கியுள்ள தெய்வக்கவிநயங்கள் எடுத்துரைக்கப்பெற்றுள்ளன. இந்த உலக வாழ்க்கையில் பலவகைப்பட்ட தொழில்களை மேற்கொண்டோர், அவ்வத்தொழிலி லேயே அமைந்து, இறைவழிபாடு செய்ய ஏற்ற வழிவகைகள் தெளிவாக விளக்கம் செய்யப்பெற்றுள்ளன. செய்யுள்களில் பொதிந்துள்ள இலக்கிய நயங்கள், தீந்தமிழ்க் கலைப்பகுதிகள், தற்காலத்தில் புதியவை எனத்தோன்றுகின்ற நவீனக் கருத்துக்கள், இனி எதிர்காலத்தில் தோன்றவுள்ள கருத்துக்கள் உண்டானால் அவைகள் எல்லாம் நன்கு எடுத்து இயம்பப் பெற்றுள்ளன. இக்காலத்திற்கும், வரும் காலத்துக்கும் தமிழருடைய சிறந்த வாழ்வுக்குப் பெரியபுராணம் ஒப்புயர்வற்ற ஒழுக்க நூலாகு மென்பது வியத்தகுவண்ணம் விரித்துரைக்கப் பெற்றிருக்கிறது.

## பெரியபுராணத் தெய்வக் கவிநயங்கள்

தேவாரம் முதலிய பதினொரு திருமுறைகளின் விளக்கவுரை பெரியபுராணம் என்பது நாயன்மார்களின் சரிதப் பகுதிகளில் ஆங்காங்கு நன்கு விளக்கப்பெற் றுள்ளது. முதல் ஏழு திருமுறைகள் அருளிய திருஞானசம்பந்த நாயனார், திருநாவுக்கரசு நாயனார், சுந்தரமூர்த்தி நாயனார்; திருமுகப்பாசுரமருளிய திருவால வாயுடையார், காரைக்காலம்மையார், சேரமான் பெருமாள் நாயனார், திருமூலதேவ நாயனார், ஐயடிகள் காடவர்கோன் நாயனார் அருளியுள்ள அருள் வாக்குக்களாகிய கடலுள் சிவக்கவிமணியார் மூழ்கித் திளைத்து, அவ்வப் பாடல்களிற் கண்ட அரிய கருத்து மணிகள் தமிழகமும் உலகமும் பயன்பெறுதற்பொருட்டுப் பதிகக்குறிப்பு, பதிகப்பாட்டுக் குறிப்புக்களோடு வெளியிடப்பெற்றிருக்கின்றன

திருஞானசம்பந்தப்பெருமான், திருநாவுக்கரசு நாயனார், சுந்தரமூர்த்தி நாயனார் அருளியுள்ள தேவாரப்பதிகங்களில், தலயாத்திரை செய்யும்பொழுது வழி யில் பாடிய பதிகங்கள் இன்னின்னவை என்றும், திருத்தலங்களின் எல்லைகளில் பாடியவை இன்னின்னவை என்றும், தலங்களுக்குள்ளே வந்ததும் பாடியவை இன்னின்னவை என்றும், திருக்கோயிலில் திருப்பணிகள் செய்யும் பொழுது பாடியவை இன்னின்னவை என்றும், திருத்தலங்களில் திருக்கோயில் கொண்டருளிய மூர்த்திகள் திருமுன்பு பாடியவை இன்னின்னவை என்றும், திருத் தலங்களிலுள்ள அடியார்களை முன்னிலைப்படுத்திப் பாடியவை இன்னின்னவை என்றும், புராண உரைப்பகுதிகளில் படிப்பவர் மனங்கொள்ளும்படி தெளிவான நடையில் குறித்துள்ளமை காலத்தினால் செய்த சீரிய சிவப்பணியாகும். முதல் ஏழு திருமுறைகளாகிய தேவாரப்பதிகங்களில், சில பதிகங்களுக்கு இதுவரைவெளி வந்திராத குறிப்புக்கள் வெளியிடப்பெற்றுள்ளன. இந்தக் குறிப்புக்களும் சேக்கிழார் பெருமானுடைய திருவருள் கைவரப் பெற்ற வலிமைகொண்டு "உலகெலாம்" உணர்ந்து உய்யச் சிவக்கவிமணியார் அருளியிருப்பது மிகவும் பாராட்டற்குரியது.

அவற்றுட் சில:—ஆளுடைய பிள்ளையார் பிரமதீர்த்தக்குளக்கரையில் "தோடு டைய செவியன்" என்ற தலைப்புடைய திருப்பதிகம் அருளிச்செய்து, இரண்டா

வது பதிகமாகத் திருத்தோணியப்பர் திருமுன்பு தக்கேசிப்பண்ணில் " இமையோ ரேத்த உமையோ டிருந்தானே " என்ற மகுடமுள்ள பதினொரு பாடல்களைப் (முதல் திருமுறை - பண்-தக்கேசி-பதிகம் 74) பாடியது எடுத்துக்காட்டப்பெற்றிருக்கிறது.

சுந்தரமூர்த்தி நாயனார் அருளியுள்ள " முடிப்பது கங்கை " என்ற தலைப்புடையதும், கொல்லிக்கௌவாணப் பண்ணையுடையுமாகிய பதிகம் (7-வது திருமுறை-கொல்லிக்கௌவாணம் பதிகம் 44) திருவஞ்சைக்களத்தில் திருக்கோயில் கொண்டருளிய இறைவன் திருமுன்பு பாடியதாகக் குறிக்கபபெற்றுள்ளது. இப்பதிகம் இதுகாறும் பொதுப்பதிகங்களின் சேர்க்கையிலிருந்து வந்தது.

## புராணப்பாடல்களின் யாப்பின் அமைப்பு

சேக்கிழார் பெருமான் இப்பொழுதுள்ள 24 தேவாரப் பண்களின் யாப்பிலே, புராணப் பாடல்களை உரிய இடங்களிலே பாடியுள்ளது உரையில் விளக்கப்பெற்றிருக்கிறது.

திலகவதியம்மையாருடைய விண்ணப்பங்களுக்கு இரங்கித் திருவதிகை வீரட்டானத்திறைவன் "இனிச் சூலை மடுத்து ஆள்வம் " என்ற அருட்டிறத்தினைக் கூறிய சந்த யாப்பையே தொடர்ந்து, சூலை நோயுடன் திருநாவுக்கரச நாயனார் திருவதிகை வீரட்டானத்து இறைவன் திருமுன்பு தரிசித்து உணர்வு பெறும்வரை, கொச்சகக் கலிப்பா சந்தத்தில் யாக்கப்பெற்றுள்ளது பின்னர்த் திருநாவுக்கரசு நாயனார் அருளுணர்வு பெற்றுத் திருப்பதிகம் பாடி, அந்தச் சூலையே அருட்சத்தியாக மாறப்பெற்ற நிலையில் நாயனார் அருளியுள்ள, "கூற்றாயினவாறு விலக்ககிலீர்" என்று தொடங்கும் சந்தத்தில் யாக்கப்பெற்றது ஆசிரிய விருத்தமாக அமைந்துள்ளது ! தேவாரப் பதிகத்துக்கேற்ற சந்தமாகப் புராணப்பாடலை அருளியது திருநாவுக்கரசுநாயனுடைய முன்னைய சமணப்பிணி மாறுகின்ற நிலைக்கேற்ப கொச்சகக்கலிப்பா யாப்பிலிருந்து ஆசிரிய விருத்த யாப்பாக மாறிய தெய்வக் கவிநயத்தை நாம் கண்டு உணரும்படி உரையில் எடுத்துக்காட்டியுள்ள தனித்திறன் போற்றற்குரியது.

## அருட்பாடல்களின் எண் அமைந்த நயங்கள்

திருக்கண்ணப்பநாயனார் புராணத்தில் திருக்கண்ணப்பநாயனார் முருகப்பெருமானுடைய அருளினால் அவதாரமானதைச் சேக்கிழார் பெருமான் அருளியுள்ளது 12-வது திருப்பாடலாகும். இந்தத் தெய்வக் கவிநயத்தின் அமைப்பைப் புராண உரையில் மேது உரையாசிரியர் விளக்கியுள்ளமை மிகவும் பாராட்டி மகிழ்தற்குரியது. " பன்னிரண்டு கண்ணுடைய பிள்ளை தோன்றும் " என்று தேவாரத் திருப்பகத்தில் அருளியுள்ளபடி பன்னிரண்டு திருக்கண்களும், பன்னிரண்டு திருக்கைகளும் உடைய வாகிய முருகப்பெருமானுடைய திருவருள் வெளிப்பாட்டைக் கூறும் இப் பொருளைப் பன்னிரண்டாவது திருமுறையாகிய பெரிய புராணத்தில் பன்னிரண்டாவது திருப்பாட்டில் கூறிய தெய்வச்சிறப்பை எண்ணி மகிழுமாறு செய்திருப்பது உரையாசிரியரது புலமைத்துறையன்று என்பதற்குத், திருமூல தேவநாயனாரது திருமந்திரம் நாலாம் தந்திரத்தில் வைகுண்டப்பகுதியில் முருகப்பெருமானைக் கூறும் "எந்தை பிரானுக்கு இருமூன்று வட்டமாய்த், தந்தைதன் முன்னே சண்முகத் தோன்றலால்" என்னும் பாடல் பன்னிரண்டாவது திருமந்திரமாக அமைந்த தெய்வச்சிறப்பை மேற்கோளாகக் காட்டியுள்ளமை புகழ்தற்குரியது.

திருக்குறிப்புத்தொண்ட நாயனார் புராணத்தில் அம்மையார் திருக்காஞ்சிப் பகுதியிலே இறைவனைப் பூசித்ததை 51-வது பாடலில் சேக்கிழார்பெருமான் பாடியுள்ளது குறிக்கப்பெற்றிருக்கிறது.

> " எண்ணில் ஆகமம் இயம்பிய இறைவர் தாம் விரும்பும்
> உண்மை யாவது பூசனை எனவுரைத் தருள
> அண்ண லார்தமை அர்ச்சனை புரியஆ தரித்தாள்
> பெண்ணின் நல்லவ ளாயின பெருந்தவக் கொழுந்து "

" ஐம்பத்தோரக்கரம் " என்றபடி ஐம்பத்தொரெழுத்து உருவமுடையவராய் விளங்கும் அம்மையார் விரும்பிய பொருளைச் சொல்லும் இத்திருப்பாட்டு 51-வது பாடலாக அமைந்துள்ளது தெய்வீகநயமென்று உரையில் குறிக்கப்பெற்றுள்ளது.

திருமூலதேவ நாயனார் புராணத்தில் இருபத்தெட்டு சிவாகமங்களின் பொருள்களைத் தமிழில் திருமந்திரங்களாக அருளிய திருமூல தேவநாயனார் சரிதத்தை 28 திருப்பாடல்களால் வகுத்தமைத்த தெய்வீகச் சிறப்பு உரையில் விதந்தோதப் பெற்றிருக்கிறது.

## புராணப் பாடல்களின் சீர்களில் தேய்வீக அமைப்பு

உருத்திர பசுபதிநாயனார் புராணத்தில் திரு உருத்திரம் திரு ஐந்தெழுத்தை உள்ளுறையாகக் கொண்டு, மறையின்பயனாய் விளங்குதலின், இந்தப் புராணத்தை ஐந்துசீர்க் கலித்துறையால் கூறும் சிறப்பு உரையில் காட்டப்பெற்றிருக்கிறது.

சிவபாத இருதயர் பிரம்ம தீர்த்தத்தில் அகமருட ஸ்நானம் செய்யும்பொருட்டு மூழ்குதலும் தந்தையைக் கண்ணெதிரே காணாத பிள்ளையார், குளக்கரையினின்றும், " தம் மேலைச் சார்புணர்ந்தோ சாரும் பிள்ளைமைதானோ ?, செம்மேனி வெண்ணீற்றார் திருத்தோணிச் சிகரம் பார்த்து, ' அம்மே ! அப்பா !' என்று அழுதருளி"னார் என்கிறார் சேக்கிழார் பெருமான்.

சிகரம் என்பதை சிகரப்பொருளாகிய சிவபெருமானைக் குறிக்கிறதெனச் சிவக்கவிமணியார் உட்கிடக்கையை உணர்ந்து உரை வரைந்திருக்கும் ஒப்பற்ற திறனை எவ்வளவு பாராட்டினாலும் தகும்.

## பெரியபுராண உரையில் மேற்கோள்கள் கற்பனைகள் முதலியன

பெரியபுராணப் பேருரையில் பெரும்பாலும் பன்னிரண்டு திருமுறைகளிலிருந்தும், பதினான்கு சாத்திரங்களிலிருந்தும், திருக்குறளிலிருந்தும் மேற்கோள்கள் குறிக்கப் பெற்றுள்ளன. ஒவ்வொரு நாயனார் சரித்திரத்தின் முடிவில் கற்பனை என்ற தலைப்பின்கீழ் உலக வாழ்க்கைக்கு வேண்டுவதாகிய பொன்மொழிகள் போன்ற நீதிகளும், கருத்துக்களும் குறிக்கப்பெற்றுள்ளன. நாயன்மார்கள் வழிபட்டுவந்த திருத்தலங்களின் படங்களும் குறிப்புக்களும், நாயன்மார்கள் திருவுருப்படிமங்களின் படங்களும் இந்தத் திருத்தலங்களைத் தரிசிப்பதற்கு இப்பொழுதுள்ள வழிகளின் குறிப்புக்களும் புராண உரையில் காட்டியிருப்பது படிப்போரின் அறிவுக்கு விருந்தாய் அமைந்துள்ளது.

1940-ல் சென்னை மாகாணத் தமிழ்ச்சங்கத்தார் பெரிய புராணப் பேருரைத் திருப்பணியைப் பாராட்டி, " சிவக்கவிமணி " என்ற பட்டம் சூட்டிச், சிறப்புச் செய்தது நினைவுகூர்தற்குரியது.

சிவக்கவிமணியார் தாம் எடுத்துக்கொண்ட பெரிய திருப்பணியாகிய பேருரை வேலைகளைத் தம்முடைய உடல் நலம் குறைந்ததால் முற்றுவிக்க முடியாதெனக் கருதினார். ஆதலால் அச்சிட்ட பகுதிகளையும் அச்சிடவேண்டிய கையெழுத்துப் பகுதிகளையும் தில்லையில் கூத்தப்பெருமானிடம் ஒப்படைக்க எண்ணினார். 1948-ம் ஆண்டில் ஆனித்திருமஞ்சனதரிசனத்திற்கு வந்தார்கள். ஆனி உத்தர தினத்தில் அச்சிட்ட பகுதிகளையும் அச்சிடப்பெறவேண்டிய பகுதிகளையும் சிவக்கவிமணியார் திருக்கோவில் வலம் வந்து, இந்த மண்டபத்தில் சிவகாம சுந்தரியுடன் கொலுவீற்றிருந்தருளிய கூத்தப்பெருமான் திருமுன்பு கொண்டுவந்தனர். தில்லைவாழ் அந்தணர்கள் பெருமான் அருகில் பெரிய புராண உரைப்பகுதிகளை வைத்துத் தீபாராதனை செய்து சிவக்கவிமணியாருக்கு மாலை சூட்டித், திருவெண்ணீறு கொடுத்து நல்வாய்மொழி கூறினர். கூத்தப்பெருமான் திருவருளால் புதிய ஊக்கம்பெற்றனர். திருவருளால் உரை முழுதும் அச்சேறி இன்று பாராட்டப் பெறுகிறது.

மெய்யன்பர்களே !

தில்லை நடராசப்பெருமான் "உலகெலாம்" என்று அடியெடுத்துக் கொடுக்கத் திருத்தொண்டர் புராணத்தைப் பாடியருளிய சேக்கிழார் பெருமான் "உலகெலாம்" என்று அடியெடுத்து "உலகெலாம்" என்ற அடியுடன் முடித்திருப்பது அவற்றிற்கு இடையேஅமைந்த சேக்கிழார் பாடல்கள் அத்தனையும் நடராசப் பெருமானது திருவருள் உணர்த்த உணர்ந்து பாடப்பெற்ற தெய்வத் திருவாக்கே என்பதைக் காட்டுகின்றது. திருஞானசம்பந்த நாயனார் 3-வது பிராயத்தில் உமையம்மை பாலூட்டவும் தேவாரம் அருளிச்செய்யத் தொடங்கியதாகக் காண்கிறோம்.

மெய்கண்டதேவர் 2-வயது பிராயத்தில் அருளிச்செய்த சிவஞானபோதம் ஆகாயத்தில் சென்றுகொண்டிருந்த பரஞ்சோதி முனிவர் பக்குவமறிந்து உணர்த்த உணர்ந்து அருளிச்செய்யப்பெற்றது என்று காண்கிறோம். நம்பியாண்டார் நம்பி, பொல்லாப்பிள்ளையார் உணர்த்த உணர்ந்து தேவாரத் திருமுறைகளைக் கண்டெடுக்க முடிந்தது என்றும், விபரங்களை அருளிச்செய்ய முடிந்தது என்றும் காண்கிறோம். பக்தர்கள் இவற்றை ஆண்டவன் அவரவர்களுடைய உள்ளத்தில் அதிட்டித்து அருளிய திருவருள் திறன் என்றுகொண்டார்கள். பொதுவாக எல்லாப் புராணங்களிலும் அநேக இடங்களில் அசரீரி வாக்குப் பிறந்தது என்றும், கனவில் பலவிதமாக அறிவிக்கப்பட்டதென்றும், அதையெல்லாம் பக்குவமுள்ள மக்கள் தெய்வத்திருவருள் என்றும் கொண்டொழுகி வந்தார்கள் என்பதையும் அறிகின்றோம். இவற்றுள் பேசுகின்றவரின் உருவமும் தெரியாது சப்தம் வருவதை அசரீரியாகத் திருவருள் அருளியதென்றும், கனவில் வந்து உணர்த்துவதை திருவருள் நேரில் வந்து உணர்த்திய அருளிப்பாடு என்றும் பக்தர்கள் கொண்டார்கள். இந்த உண்மைகளை ஒப்புக் கொள்ளத் தயங்குகின்றவர்க ளெல்லாம் முதலாவதாக இறந்தவர்கள் நம்முடைய கண்களுக்குச் சாதாரண நிலையில் காணப்படாமல் இருந்துகொண்டு பக்குவமுள்ளவர்களின் ஸ்தூல உடலைப்பற்றி (அதிட்டித்து) நின்று அவர்களுடைய கருத்துக்களையெல்லாம், பற்றி நின்ற ஸ்தூல உடம்பின் வாயிலாக (Medium) இருக்குள்ளவர்களுடன் தங்களுடைய கருத்துக்களை அறிவிப்பதை அறிந்துகொள்ளவேண்டும். இரண்டாவதாக இறந்தவர்களுடைய சரீரம் காணப்படாமல் அவர்கள் பேசுவதை மாத்திரம் கேட்கக்கூடிய சக்தி (clair audience) வாய்ந்தவர்களுடன் பேசுவதை அறிந்துகொள்ள வேண்டும். மூன்றாவதாக இறந்தவர்களில் சிலர் பின்னால் நடக்கக்கூடியதை முன்னமேயே கனவில்

அறிவிக்கின்ற (Premonition) தன்மையை உணர்ந்துகொள்ள வேண்டும். இறந்தவர்களின் உருவங்களைப் பார்க்கும் சக்தி (clairvoyance) பெற்றவர்கள் இறந்தவர்கள் என்ன முறையில் தோற்றமளிக்கிறார்கள் என்ற விபரம் சொல்லுவதையும் மற்றையோர் தங்களுக்கு அவர்கள் காணப்படாத நிலையையும் அறிந்துகொள்ள வேண்டும்.

இங்கிலாந்திலும், அமெரிக்காவிலும், பிற மேல்நாடுகளிலும் இறந்தவர்கள், அறிவுடையவர்களாகவும், ஆற்றலுடையவர்களாகவும் இருக்கிறார்களென்றும்; நம்மோடு பற்றுடையவர்களாகவும் ஆதரவு உடையவர்களாகவும், நம்மோடு தொடர்பு வைத்து மேலுலக விஷயங்களை அறிவிக்க வேண்டுமென்ற விருப்பம் உடையவர்களாகவும் இருக்கிறார்களென்றும் அறிவியல் துறையில் ஆராய்ச்சி செய்து நிரூபித்திருக்கிறார்கள்.

ஆனதால் நம்முடைய சோதனைக்கு அப்பாற்பட்ட சர்வவல்லமையுள்ள ஆண்டவனுடைய அருள்திறங்களை அறியவிருப்பமுள்ளவர்கள் முதலாவதாக நம்முடைய சோதனைக்குட்பட்ட நம்முடைய நண்பர்கள் உற்றார் உறவினர்கள் ஆணாகிலும் சரி பெண்ணாகிலும் சரி இறந்தபின் என்ன நிலையில் இருக்கிறார்கள், அவர்கள் என்னென்ன முறைகளில் நம்முடன் தொடர்புவைத்து நமக்கு அறிவிக்க வேண்டியவற்றை அறிவிக்கமுடிகிறதென்பதைச் சோதித்துப்பார்த்து அதனுடைய உண்மையை உபமானமாக வைத்துக்கொண்டு, ஆண்டவனுடைய அருள்விளையாடல்களை உபமேயமாக வைத்துச் சிந்திப்பவர்களுக்குப் புராண நிகழ்ச்சிகளில் ஒரு சிறிதும் சந்தேகம் வாமுடியாது. இதை விரித்துக்கூறினாலன்றி விளக்கிக்கொள்ள முடியாதென்பதை நாம் அறிவோமாகிலும் இஃது அதற்குரிய சந்தர்ப்பம் அன்றாகையால் ஒன்றே ஒன்றை உதாரணத்திற்குச் சொல்லி மேற்செல்லக் கருதுகிறோம். நாம் எல்லோரும் நனவிலும் கனவிலும் பற்பலவிதமாகத் தொழிற்பட்டுக்கொண்டிருக்கிறோம். நாம் கனவில் தொழிற்படுகின்றது உடல் கொண்டா அல்லது மனம் கொண்டா அல்லது அவை இரண்டும் கொண்டா என்பதையும், நமது தூல உடல் கனவு நிலையின் நிகழ்ச்சிகளை உண்டுபண்ணுகிறதா என்பதையும் நாம் தெரிந்து கொள்ளாதிருக்கிறோம். இங்குள்ளவர்களில் பலர் தூல உடல்தான் கனவு நிலையை உண்டுபண்ணுகின்றது என்று நினைக்கலாம். ஆனால் ஆராய்ச்சி செய்துபார்த்தால் உண்மையில் கனவில் தொழில்படுகின்ற சரீரம்தான் நனவில் தூல உடலோடு ஒன்றுயிருந்து தொழில்படுத்துகிறது. கனவில் அந்தச் சரீரமே உடனுயிருந்து தூல உடலோடு தொழில்படுத்திக்கொண்டும், வேறுயிருந்து தான் தொழிற்பட்டுக்கொண்டும் இருக்கிறது. கனவில் தொழிற்படுகின்ற அந்த சரீரமே நாம் இறந்தபின் தூல உடம்பை விட்டு அறவே பிரிந்து வேறுகவே தொழிற்பட்டுக்கொண்டுமிருக்கிறது என்பதைத் தெளிந்துகொள்ளலாம். கனவு காணுகின்ற சரீரத்தையே யாதனு சரீரம், சூக்குமசரீரம், ஆவி உடல் என்று நம் முன்னோர்கள் கூறியிருக்கிறார்கள். அந்தச் சரீரத்தில்தான் அந்தக் கரணங்களாகிய மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்பவையும், நமக்குரிய எல்லா உறுப்புக்களும் இருக்கின்றன. கனவில் தொழில்படுகின்ற உடலே மாயையிலிருந்து உண்டாக்கப்பெற்ற சரீரம். அதனுள்ளேதான் உயிர் வியாபித்திருக்கிறது. அதனாலேயே “ மாயா இயந்திர தனுவினுள் ஆன்மா ” என்றார் நமது மெய்கண்டதேவர். அவை பரிணமித்ததே தூல உடம்பிலுள்ள கருவிகளாகும். உயிர்களை ஆண்டவன் படைக்கவில்லை என்பதையறிவோம். கனவில் தொழில்படுகின்ற உடலையே நமக்கு ஆண்டவன் படைத்திருக்கிறான். அது இவ்வுலகிலுள்ள ஐம்பூதங்களாலோ அணுக்குண்டாலோ ஐட்ரஜன் குண்டாலோ

அழியாது. தூல உடல்விட்டு நீங்கின பிறகும் அந்த உடலுக்கு வளர்ச்சியும் வாழ்க்கையும் இன்பதுன்ப அநுபவிப்பும் உள்ளது. அப்படிப்பட்ட சரீரத்தைக் கொடுத்திருலேயே ஆண்டவனை நாம் " அம்மை அப்பன் " என்கிறோம். ஆன்றோர்கள் காரணமின்றி எதையும் கூறவில்லை என்பதை உணரவேண்டும். நாம் இறந்தபின், நமக்கு வளர்ச்சியும் வாழ்க்கையும் உண்டு என்பதை சுந்தரமூர்த்தி நாயனார் முதலையுண்ட பாலனைக் காலனிடமிருந்து திருவருள் துணைகொண்டு தருவித்ததும், திருஞானசம்பந்தப்பெருமான் பூம்பாவையைத் தாமே நேராக வரவழைத்ததும் சான்றுசொல்லும். இவ்விரு நிகழ்ச்சிகளிலும் இறந்தவர்கள் திரும்ப அழைக்கப்பெற்றபொழுது, அவர்கள் இறந்துபோகாதிருந்தால் என்னென்ன வயதில் இருந்திருப்பார்களோ, அந்தந்த வயதில் தோன்றினார்கள் என்பதை அறிகிறோம். ஆனதால் இறந்தவர்கள் எல்லோருக்கும் தூலஉடல் அழிக்கப்பட்டபிறகு, அழியாது தொழில்படுகின்ற ஆவி உடல் உண்டு என்றும், அதற்கு அங்கும் வளர்ச்சி உண்டென்றும், புராணங்களில் சொல்லப்பெற்றவைகளை யெல்லாம் நாம் சிற்றறிவு கொண்டு புறக்கணித்துவிடக் கூடாதென்றும் உணர்ந்துகொள்ளவேண்டியது உண்மையாளரின் கடப்பாடாகும். இறந்தவர்களைப் போலவே எல்லாம்வல்ல பரம்பொருளும் நம்மோடு ஒன்றாயும், உடனாயும், வேறாயும் நின்று பற்பல விதங்களில் நமக்கு அறிவிக்கவேண்டியவற்றை அருளுகிறான் என்பதையே " பெரியபுராணம் " வலியுறுத்துகின்றது. அதனாலேயே விறன்மிண்ட நாயனார் புராணத்தில்,

" ஞாலம் உய்ய நாமுய்ய நம்பி சைவ நன்னெறியின்
சீலம் உய்யத் திருத்தொண்டத் தொகைமுன் பாடச் செழுமறைகள்
ஓல மிடவும் உணர்வரியார் ' அடியா ருடன்நாம் உளது ' என்றால்,
ஆலம்அமுது செய்தபிரான் அடியார் பெருமை அறிந்தாரார் "

என்று அருளிச்செய்திருக்கிறார்.

மெய்யன்பர்களே !

ஆட்டுவித்தால் ஆரொருவர் ஆடா தாரே
அடக்குவித்தால் ஆரொருவர் அடங்கா தாரே
ஓட்டுவித்தால் ஆரொருவர் ஓடா தாரே
உருகுவித்தால் ஆரொருவர் உருகா தாரே
பாட்டுவித்தால் ஆரொருவர் பாடா தாரே
பணிவித்தால் ஆரொருவர் பணியா தாரே
காட்டுவித்தால் ஆரொருவர் காணா தாரே
காண்பாரார் கண்ணுதலாய் காட்டாக் காலே.

திருவருள் இயக்க இயங்குகின்றோம். இத்திருத்தலத்தில் இன்று இந்தப் பாராட்டு விழா நடைபெற அருள்பாலித்துதவிய சைவப் போசகளாகிய ஆதீனங்களுக்கு நமது மகிழ்ச்சி. சென்னை அண்ணாமலைப் பல்கலைக்கழகங்களுக்கு நமது வாழ்த்து. வந்திருந்து சிறப்பித்த புலவர் மணிகளுக்கும், எல்லா வகையான முயற்சிகள் எடுத்துச் சிறப்பித்த வரவேற்புக் குழுவினர்களுக்கும், தொண்டர்களுக்கும் மற்றும் எல்லாமெய்யன்பர்களுக்கும் நமது நல்லாசி.

இத்தலைமை உரைக்கு வேண்டும் குறிப்புக்கள் தந்த நமது நிலைமைத் தொண்டரும், சிவபூஜா துரந்தரரும், செக்கவிமணியின் உறவின்முறையாரும், செக்கவி

## சிதம்பரம் நகர்வலம் - (6-5-54 காலை)



யானையின்மேல்
திருமுறைச்சுவடிகள்



முத்து விமானத்தில்
சேக்கிழார் பெருமான்

சிதம்பரம்



நகர்வலம் வந்தபின் கீழைக்கோபுரம் உட்புறம
அன்பர்கள் உரையாசிரியருடன்

மணியாரைத் தமது முதபெரும் குரவராகக்கொண்டு திகழ்பவரும், திருமுறைகளிடத்து இடையறுப் பேரன்பும் சிவபெருமான் திருவடிக்கே பதித்த நெஞ்சம் கொண்ட நமது உழுவலன்பருமாகிய திரு S. தருமலிங்க முதலியாரவர்களுக்கு நமது சிறந்த வாழ்த்து.

செயற்கரிய செயல்செய்து விளங்கும் நமது பேரன்புக்குரிய சிவக்கவிமணி, பெரியபுராணப் பேருரை அருள்மணி, சைவத்திரு சி. கே. சுப்பிரமணிய முதலியாரவர்கள் சம்மிடையே பல்லாண்டு பல்லாண்டு வாழத் திருவருள் துணைபுரிவதாக என வாழ்த்துகின்றோம்.

வான்முகில் வழாது பெய்க ! மலிவளம் சுரக்க ! மன்னன்
கோன்முறை அரசு செய்க ! குறைவிலா துயிர்கள் வாழ்க !
நான்மறை அறங்கள் ஓங்க ! நற்றவம் வேள்வி மல்க !
மேன்மைகொள் சைவ நீதி விளங்குக உலக மெல்லாம். —கந்தபுராணம்.

வாழ்க அந்தணர் வானவர் ஆனினம் ;
வீழ்க தண்புனல் ; வேந்தனும் ஓங்குக ;
ஆழ்க தீயது ; எல்லாம் அரன் நாமமே
சூழ்க ; வையக முந்துயர் தீர்கவே. —திருஞானசம்பந்தப் பெருமான்.

சிவமயம்

# வாழ்த்துத் தந்திகள், வாழ்த்துக் கடிதங்கள், வாழ்த்துரைகள், பத்திரிகைச் செய்திகள்

முதலியவற்றின் விவரம் :

## (1) வாழ்த்துத் தந்திகள்

1. கொழும்பு, மந்திரி திரு. ஸர் கந்தையா வைத்தியநாதன் அவர்கள்.
2. டாக்டர் திரு. சிவானந்தம் அவர்கள், கோயம்புத்தூர்.
3. பம்பாய்-திரு. வன்மீகநாதன் அவர்கள்.
4. புதுச்சேரி-திரு. தேசிகன் அவர்கள்.
5. புரிசை - திரு. சு. முருகேச முதலியார் அவர்கள்.
6. திருப்பனந்தாள் - மஹாலிங்கத்தம்பிரான் அவர்கள்.
7. கொழும்பு - திரு. ஸ்வர்ணம்பிள்ளை அவர்கள்.
8. கொழும்பு - திரு. சரவணமுத்து அவர்கள்.
9. கண்டி - திரு. வேலுப்பிள்ளை அவர்கள் (இவர் தமிழ்ப்பாட்டை ஆங்கில எழுத்தில் எழுதித் தந்தி அனுப்பி இருக்கிறார். அப்பாட்டாவது :—

   பண்ணிய வினையின் வெம்மை பற்றறப் பரமன் பாதம்
   கண்ணிய அடியார் நேயக் கழனியிற் பத்தி வித்தித்
   தண்ணியல் ஞானப் பைங்கூழ் தழைத்திட உரையைப் பெய்யும்
   புண்ணிய சுப்ர மண்யப் பொன்முகில் வாழி ! வாழி !

   இவர் இன்னும் இரண்டு பாட்டை இத்துடன் சேர்த்துத் தபால் கடிதத்திலும் எழுதி அனுப்பியிருக்கிறார்.
10. நாகர்கோயில் - திரு. வள்ளிநாயகம்பிள்ளை அவர்கள்.

## (2) வாழ்த்துக் கடிதங்கள்

1. சென்னை அரசாங்க அமைச்சர் திரு. M. பக்தவத்ஸலம் அவர்கள்.
2. உதகமண்டலம் - திரு. N. லக்ஷ்மிநாராயணராவ் அவர்கள். (Govt. Epigraphist for India)
3. சென்னை அரசாங்க அமைச்சர் திரு. C. சுப்ரமண்யம் அவர்கள்.
4. திரு. Dr. A. L. முதலியார் அவர்கள், சென்னைப் பல்கலைக்கழகத் துணைவேந்தர்.
5. சென்னை அரசாங்க முன்னாள் முதல் மந்திரி திரு. C. ராஜகோபாலாச்சாரி அவர்கள்.

Dear Sir,

Your scholarship is well-known. You should therefore approach some good Tamil scholar for blessings. This definition excludes me.

6. திரு. P. G. N. Unnithan Avl., திருவாங்கூர் தேவஸ்வம் போர்டு பிரஸிடெண்டு.
7. சென்னை அரசாங்க முன்னாள் அமைச்சர்–திரு. அவிநாசிலிங்கம் அவர்கள்

சிவக்கவிமணி அவர்களின் நெடுநாளத்திய தவத்தின் பயன், இப்பேருரை அனைவரையும் நன்னெறியில் உய்விக்க அவர்கள் முயற்சி உதவுமாக. அவர்கள் நெடுநாள் வாழ்ந்து அனைவருக்கும் சிவபக்தி ஊட்டுவிப்பார்களாக. விழாவில் இறைவனருள் பாலிக்கட்டும்.

8. சிவகிரி ஸ்ரீ அப்பூதி நிலையம் அப்பூதித்தொண்டர் ஸ்ரீ கண்ணய்யர் அவர்கள்.

(இவர் வாழ்த்துக் கடிதத்தில், உரையாசிரியருக்குக் கந்தபுராணத்துக்கும் உரை எழுதுவதற்கு ஸ்ரீ முருகப்பெருமானை அருள் புரியுமாறு பிரார்த்திக்கிறார்)

9. Dr. K. V. சுப்ரமண்யம் அவர்கள், கோயம்புத்தூர்.
10. திருப்பூர் மிராஸ்தார், திரு. கந்தசாமிசெட்டியார் அவர்கள்.
11. திரு. S. சதாசிவ முதலியார் அவர்கள், சீர்காழி.

தங்கள் விரிவுரை முடிவுபெற வேண்டுமே, அதிக காலம் தாமதப்படுகிறதே, என்ற கவலை இங்கு எல்லோருக்குமே இருந்துவந்தது. அவ்விரிவுரை அணிமையில் நிறைவாகின்றதென்பதைக் கேட்க அளவிலா மகிழ்ச்சியைத் தருகின்றது. தாங்கள், சிறப்பாகச் சைவர்களுக்கும், பிறருக்கும், வெகுகாலம் சிரமப்பட்டுச் செய்த பேருதவிக்கு என்ன கைமாறு செய்யக்கூடும். எல்லாம்வல்ல இறைவனை, தாங்கள் நீடூழிகாலம் சகல சம்பத்துடன் நோயற்ற வாழ்வுடன் வாழவேண்டுமென்று வேண்டிக்கொள்வதைத் தவிர வேறென்ன கைமாறு அளிக்கக்கூடும். அப்பெரியபுராணப் பேருரை நிறைவுவிழா சிதம்பரத்தில் நடைபெறச் செய்வதும் மிக்க பொருத்தம் உடையதே.

12. திரு. க. வைத்தியநாதன், கொழும்பு.

உயர்திரு C. K. சுப்பிரமணியமுதலியார் அவர்கள் ஏறக்குறைய 50 ஆண்டுகளாக ஆராய்ச்சிசெய்து இப் பெரிய புராணப் பேருரையை வெளியிட்டுள்ளார்கள். சிவனடியார்களின் வரலாறுகிய பெரிய புராணத்தைப் பண்டிதரும், பாமரரும் பொருள் அறிந்து கற்றறிதற்கு ஏற்ற உறுதுணையைத் தமிழ் உலகிற்கு அளித்த இவ் வுரையாசிரியர் அவர்கட்கு எனது இதய பூர்வமான பாராட்டைத் தெரிவிக்கிறேன்.

பெரியபுராணப் பேருரையின் நிறைவேற்றுவிழாவைச் சிதம்பரத்தில் கொண்டாட ஏற்பாடு செய்ததையிட்டு மிகவும் மகிழ்ச்சியடைகிறேன். இம்மாபெரும் விழா சிறப்பாக நிறைவேற நடராசப்பெருமானை வேண்டுகின்றேன்.

**13. திரு. P. திருஞானசம்பந்தன், எம்.ஏ., எல்.டி., சென்னை-6.**

சைவப் பெரியார் திரு. C. K. சுப்பிரமணியமுதலியார் அவர்கள் திருத்தொண்டர் புராணத்திற்குப் பேருரை எழுதியிருப்பதானது பாணினி வகுத்த இலக்கண நூலுக்கு மஹாபாஷ்யம் என்னும் பேருரை எழுதிய பதஞ்சலி முனிவரை நினைவூட்டுகின்றது. சேக்கிழார் நூல் நயத்தைப் பலரும் படித்துணரும் வகையிலும் உய்யும் வகையிலும் உரை எழுதப்பட்டிருப்பது தமிழ் நாட்டவர் செய்த தவத்தின் பயனே ஆகும்.

**14. Rao Sahib T.T. Rathnasabapathy Pillai, B.A., B.L.,**
**Advocate, Coimbatore.**

"I wish, however, the celebrations best of success. Mr. Mudaliar has immortalised himself by his great work and it is an excellent idea on your part to have arranged this function to do him this honour which he richly deserves. May Lord Nataraja grant him a very long life and sufficient energy so that he may produce many more such works and enrichen Hindusim in general and Saivaism in particular.

**15. வித்துவான், ந. சேதுரகுநாதன், விருதுநகர்.**

கடவுட் பண்பும் தமிழ்ப்பண்பும் நிரம்பிய தமிழ்ச்சான்றோர்களின் வழி வழிவந்த பெருந்தகை அன்பர்களே! தமிழமுதப் பெருங்கடலாம் பெரியபுராணத்திற்கு விரிவுரையியற்றி யருளிய அருட்கனிவுச் செல்வர் உயர்திரு. C. K. சுப்பிரமணிய முதலியாரவர்களை நாம் பாராட்டவும் வாழ்த்தவும் கடமை உடையோம்.

இந்த நிறைவுவிழா நமக்கு ஓர் புத்துயிர் அளிப்பதாகும்.

**16. திரு. T. S. சோமசுந்தரம்பிள்ளை, ஹானரரி மாஜிஸ்டிரேட் கரூர்.**

சைவ சமயத்திற்கும் தென்னாட்டினுக்கும் பெரிய பொக்கிஷமாக விளங்கும் பெரியபுராணத்துக்குச் சிரிய உரை எழுதி வழங்கியுள்ள பேரன்பர் சி. கே. சுப்பிரமணிய முதலியாரைத் தமிழ்நாட்டில் பிறந்த மகன் எம்மதத்தவனாயினும் எக்கொள்கையுடையவனாயினும் போற்றாமலிருக்கமுடியாது.

பக்திரசம் ததும்பப் பாசுரங்களாக நமக்கு அளித்த சேக்கிழார் பெருமானை நாம் உச்சிமேல்வைத்துப் போற்றுகிறோம். தமிழ்நாட்டில் இறைபணி செய்து இல்லறத்தை இயற்கையாய் நடத்திக்காட்டி இறைவனடி சேர்ந்தும் இறைவனுடன் கலந்தும் சென்றுள்ள அடியார்களுடைய சரித்திரங்களைப் படிக்கவும் கேட்கவும் பயனடையவும் ஆவல் கொண்டுள்ள சைவர்களுக்குச் சேக்கிழார் பாசுரங்களில் பொதிந்திருக்கும் சித்திரங்களையும் பொருள் நுட்பங்களையும் விளக்கிக்காட்டும் பெருமை ஒருசிலருக்குத்தான் உண்டு. ஒவ்வொரு செய்யுளிலும் இருக்கும் பதங்கள் எவ்வளவு பொருத்தமானவையென்றும் முன்கூட்டியே பின்வரும் நிகழ்ச்சிக்கேற்பப், பதங்களை அமைத்துக்கொடுத்த சேக்கிழார் திறத்தை அன்பர் பல இடங்களில் காட்டி நம்மை மகிழ்விக்கிறார்.

பெரியபுராணத்திலிருந்து சில பகுதிகளைக் கற்றுப் பௌராணிகர் என்று பெயர் படைத்து பிரசங்கங்கள் செய்துவரும் பலஅன்பர்களும் இந்த உரையைப் படித்தபிறகு தங்கள் நோக்கு விசாலப்பட்டு, கற்பனையின் திட்டத்தை அறிந்து மக்களுக்குத், தமிழில் பற்றும், இறைவன்பால் பக்தியும், வாழ்க்கையில் ஒரு நல்ல மாறுதலையும் இன்று கண்டு வருகின்றது உண்மை.

நமது பெரியார் உரை எழுத ஆரம்பித்த காலத்தில், நம் போன்றவர்களெல்லாம் இந்த உரைநூல் முற்றுப்பெறுமா என்ற ஐயப்பாடு ஒரு பக்கம் தோன்ற, ஒவ்வொரு செய்யுளுக்கும் நீண்ட உரையும் இலக்கண இலக்கியப் புதையல்களையும் தோண்டி விளக்கிவரும் இவருக்கு நூலை முடிக்க ஆயுள் இருக்குமா என்ற சந்தேகமிருந்தது. எடுத்துக்கொண்ட பணி சிவத்தொண்டு என்றும் எழுதிமுடிப்பதே தனது கொள்கையென்றும் உறுதிபூண்ட அன்பருக்கு அவர் ஒருமைப்பட்ட நினைவும் எண்ணமும் உற்றதுணையாக நின்று நீண்ட ஆயுளையும் நூலை முடிக்கும் ஆற்றலையும் அளித்திருக்கிறது. உறைத்த எண்ணம் மனத்துள் புகுந்து இறைபணியென்னும் ஏக நோக்குடன் ஒருபணியைச் செய்ய முன்வருவோர்க்கு இறைவன் உடனிருந்து முடித்துக்கொடுப்பான் என்பதற்கு இவரும் இவர்நூலும் சான்றாகும்.

பெரியபுராணச் செய்யுள்கள் சாதாரணமாகத் தமிழ் கற்றவர்களுக்கு எளிதில் விளங்கும்படி தெள்ளியநடையில் இருந்தபோதிலுங்கூடச், செய்யுளின் நடுவே தொனிக்குஞ்சித்திரங்களைக் காணவும் எடுத்துச்சொல்லவும் பலர் அறியார் என்பது உண்மை. பல இடங்களில் இந்த நுண்ணிய கருத்துக்களை அன்பர் விளக்கிக்கொண்டே செல்லுகிறார். இந்த ஆற்றல் எல்லோரிடமும் காண்பது அரிது.

நாயன்மார்கள் சரித்திரங்களை நாம் அறியச் சேக்கிழார் பாசுரங்களாக நமக்கு வாழ்க்கை வழிகாட்டியாக அளித்ததுபோல, எளிதில் பாசுரங்களின் அருமையைத் தெரிந்துகொண்டு மேலும் பெரியபுராணத்தில் நாம் ஆழ்ந்து அறிவைப் பெருக்க இந்த உரைநூலை இவ்வளவு சிறியகாலத்தில் பூர்த்திசெய்துகொடுத்த ஆசிரியருக்குச் சைவ உலகம் என்ன கைம்மாறு செய்யப்போகின்றது ?.

கைம்மாறு எதிர்பார்த்து இந்நூல் எழுதப்படவில்லை என்பது உலகம் ஒப்புக்கொள்ளும் உண்மை. மக்களெல்லாம் சிவனடியார்கள் பெருமையை நன்கு உணர வேண்டும் என்ற ஒரே நோக்கத்துடன் எழுதப்பட்ட இந்த உரைநூல் ஒவ்வொரு சைவர்கள் வீட்டிலும் இருத்தல்வேண்டும். தினகாலம் சிலநேரம் சில பகுதிகளாவது வாசிக்கப்படல்வேண்டும். ஒவ்வொரு இல்லின்கண் இந்த நூல் மணம் கமழவேண்டும். நூல் இருக்குமிடமும், சூழ்நிலையும், அதனாலேற்படும் காற்று வாசனையும், இல்லத்தைப் புனிதப்படுத்தவும், இல்லில் வசிப்பவர்களையும் அங்கே வந்து போகுபவர்களையும் காந்தத்தைப்போல் இழுத்து ஆன்மாக்களைப் பக்குவமடையச் செய்யவும் உதவிபுரியும் என்பதில் சிறிதும் ஐயமில்லை.

சேக்கிழார் புராணத்தை எவ்வளவு புனிதமாக நாம் போற்றுகிறோமோ, அவ்வளவு புனிதமாக அன்பர் எழுதிய உரைநூலையும் நாம் போற்றி வணங்கி வாழ்த்துகிறோம். சேக்கிழார் நாமம் புகழுடன் விளங்குவதுபோல் உரையாசிரியரின் புகழ் தமிழ்நாட்டில் என்றும் நிலவும் என்பதை ஒருவர் கூறவும் வேண்டுமோ!

எவராலும் செய்யமுடியாத பணியை அன்பர் உள்ளத்திலும் தலைமேலும் தாங்கி விடாமுயற்சி ஒன்றே இவருக்கு ஆயுளையும் ஆற்றலையும் கொடுத்து உதவிய தென்றால் ஏதோ இறை சக்தியால்தான் இப்பணி செவ்விதாய் முடிந்தது என்று நாம் கொள்ளுதல் வேண்டும்.

17. திரு. K. சிவஞானண்டிதேவர், மதுரை.

விழாச் செயற்குழுவினர் பெயர் கண்டதும், சைவ உலகில் காஸ்திகத்தைப் புகுத்திச் சீர்குலைத்து விடலாமென முயற்சி செய்வோர் முழு முயற்சியும், எண்ணமும் சூரியனைக் கண்ட பனிபோல மறைந்தோடித் தீரும் என்ற திடநம்பிக்கை ஏற்பட்டுவிட்டது. இத்திருவிழாக் காட்சியையும், வெற்றிகரமாக நடத்தி முடிவுகாண முன்வந்த செயற் குழுவினரையும், வைபவத்தில் ஆர்வத்துடன் கலந்துகொள்ளும் சைவத் திருமேனிகளையும், பிரமுகர்களையும் நேரில் கண்டு களிக்கும் வாய்ப்பு வாய்த்தது என்ற பேரவாவுற்றேன். ஆனால் என் எண்ணத்திற்கு இடையூறாக ஐதராபாத்தில் இதே தேதிகளில் நடைபெறும் அகிலபாரத இந்துமகா சபை மகாநாட்டிற்கு உபதலைவன் என்ற ஹோதாவில் நான்போக வேண்டியது தவிர்க்கமுடியாததாக இருக்கிறது.

பேரன்பும், உதாரகுணமும், சீலமும், பாஷைப் பொறாமை விரோதமற்ற தன்மையும் குடிகொண்டு குரோதபுத்தி அறவே இல்லாத கல்விச் செல்வர், கவிச் செல்வர், புவிச்செல்வர், சைவத்திருமேனி, சைவசிகாமணி, சைவம் தழைக்க என ஜனித்த பெரியார், சைவ உலகத்திற்குத் தன் வாழ்நாள் முழுமையும் அர்ப்பணித்து, என்றுமறியாத, பெரியபுராணப் பேருரை என்னும் சைவப் பொற்குவியலைத் தானம் செய்யமுன் வந்த உயர்திருவாளர் சிவக்கவிமணி C. K. சுப்பிரமணிய முதலியாரவர்களை இந்தக் கடிதம் மூலம், மனமொழி மெய்களால் வணங்குவதுடன், அவர்களுக்குச் சகல நலன்களும், திடகாத்திர சுகசரீரமும் அருள எல்லாம் வல்ல இறைவனை வணங்குகின்றேன். நிறைவுவிழா வெற்றிகரமாக நடைபெறப் பிரார்த்

18. திரு. C. N. சண்முக கவுடர், கௌரவ மாஜிஸ்ட்ரேட் - போர்டு தலைவர், கோயம்புத்தூர்.

கோவை சைவப் பெரியார் சிவக்கவிமணி உயர்திருவாளர் சி.கே.சுப்பிரமணிய முதலியார் அவர்கள் நெடுங்காலமாகச் செய்துவந்த அரிய முயற்சியின் பயனாகத் திருத்தொண்டர் புராணப் பேருரை இன்று வெளியிடப்படுவது கேட்டுப் பெருமகிழ்வு எய்துகின்றேன்.

"இடையறா அன்புனக்குஎன் னூடகத்தே நின்றுருகத் தந்தருள்எம் முடையானே" — என்று மணிவாசகப் பெருமான் திருவாய் மலர்ந்தருளியவாறு, நமது கொங்கு நாட்டின் தலைசிறந்த சைவப் பெரியார் சிவக்கவிமணி அவர்கள் ஆண்டவன் திருவடியில் தமது நெஞ்சினைப் பதித்து, மாசபடிந்த மக்களது உள்ளத்தைத் தூய்மைப் படுத்துகின்ற வகையிலே, நாட்டில் கடவுளுணர்வு மக்களிடம் குறைந்து வருகின்ற காலநிலையிலே, அன்புக் கருவூலமா யமைந்துள்ள திருத்தொண்டர் புராணப் பேருரையை வெளியிட்டு அதனால் மக்களெல்லாம் இணையிலாப் பேறு பெறவேண்டுமென்ற அவாவினால் செய்துவரும் இத்தெய்வத் திருப்பணியைப் பெரிதும் பாராட்டுகின்றேன்.

19. திரு. M. பாலசுப்பிரமணிய முதலியார், பி.ஏ., பி.எல்., சென்னை ; முகாம்: குன்னூர், நீலகிரி.

• • • பெரியபுராணத்திற்குப் பெரிய உரையே போற்றற்பாலது. அரும்பத உரை, குறிப்புரை முதலியன சிறப்புடையன ஆகா. தாங்கள் வெளியிட்டுள்ள பெரிய உரை போன்றது, தமிழின் இதுவரையில் வேறு எந்தத் தமிழ் நூலுக்கும் எழுதப்

படவே இல்லை. தங்கள் வெளியீடு பற்பல அருமைப்பாடுகள் நிறைந்த ஒரு பெரிய பொக்கிஷம் என்றே சொலலத் தக்கது. தமிழ்நாட்டிலுள்ள சிவஸ்தலங்கள், திருக்கோயில்கள், அவற்றிலுள்ள பல அழகிய திருவுருவங்கள் எல்லாம் இவ் வெளியீட்டில் காட்சி அளிக்கின்றன. தாங்கள் அடியேனுக் கெழுதிய கடிதத்தில் கண்டபடி, அச்சுவேலை இருபது ஆண்டுகளாகவும், அதற்கு முந்திய வேலை முப்பது ஆண்டுகளாகவும் நடந்து வந்தன என்றால், இந்த ஐம்பது ஆண்டுகளும் தமிழ்நாடு செய்த தவமே, தங்களுடைய அரும்பணிக்கு ஓரளவு துணை செய்தது என்பது மிகையாகாது. இப்பெரிய உரையின் அரிய அச்சு நிறைவுப் பாராட்டு விழாவில் சைவ நன்மக்களும் சைவத் திருமடங்களும் கலந்து கொள்வதோடு, தங்கள் உரைப் பிரதிகளை நூற்றுக் கணக்கில் விலைகொடுத்து வாங்கி, நமது நாட்டிலுள்ள கல்லூரி நூல்நிலையங்களில் வைப்பதற்கு ஏற்பாடு செய்வதுதான் நல்லவழியாகும் என்பதையும் நினைவூட்டுகிறேன்.

கல்லூரி மாணவர்களும் ஆசிரியர்களும் தங்கள் உரை முழுவதையும் பயின்றால் அவர்கள் உயிரை மறைத்துள்ள ஆணவ இருள் விலகும், நாஸ்திகம் அகலும், ஆஸ்திகம் தளிர்க்கும்.

## 20. சைவ சித்தாந்த மகா சமாஜம், சென்னை.

* * * தங்களுடைய பேருரையின் சிறப்பு நலன்களை எண்ணிக் கூறுவது மிகையாகும். இதுபோல் ஆழ்ந்தகன்ற பேருரை இதுவரை வெளிவந்திலது. சைவத் திருமுறைகளிலிருந்து மேற்கோள்களும், சைவசித்தாந்த ஞானசாத்திர உண்மைகளும் ஆங்காங்கு இதில் எடுத்துக்கூறப் பட்டிருக்கின்றன. தங்கள் முதிர்ந்த கல்வி கேள்விகளின் பயனாகக் கிடைக்கப்பெற்ற இவ்வுரை சைவர்களுக்கு மிகவும் பயன்படும். சித்தாந்த சாத்திரங்களின் உட்கருத்தை அறிய விரும்புவோர் தெய்வச் சேக்கிழார் அருளிய அநுபவம் சான்ற திருத்தொண்டர்களின் சரித்திரத்தைக் கொண்டே அவற்றை அறியக்கூடும். ஆகவே தங்களது பேருரையானது சித்தாந்த சைவர்களுக்குப் பெரிய பொக்கிஷமாகப் பயன்தரும். இவ்வுரைக்குச் "சித்தாந்த ஞானமீர்தம்" என்றே பெயர் சூட்டலாம்.

இத்தகைய சிறப்புக்களையுடைய உரையைச் செய்து தந்த தங்களுக்குச் செய்யக்கூடிய கைம்மாறு அவ்வுரையை நன்றாக வாசித்துப் பயன் அடைவதும், தாங்கள் நீடூழி வாழ்க என்று அம்பலவாணன் திருவடிகளுக்குப் பிரார்த்திப்பதுமாகும்.

## 21. ராவ்சாஹிப் T. R. சுந்தரம் பிள்ளை, பி.ஏ., பி.எல்., (Public Prosecutor), கோயம்புத்தூர்.

புனிதமான சைவ உலகிற்குப் பெரியார் சிவக்கவிமணி அவர்கள் செய்துள்ள பெரியபுராணப் பேருரையானது வழிவழியாகப் போற்றும் அரிய சாதனையாகும். திருத்தொண்டர் புராணத்தின் அருமை பெருமைகளைத் தமிழ்மக்கள் கூர்ந்து படித்து நல்ல புண்ணியத்தையும், பலனையும் அடையவேண்டும். அதுவே நாம் செய்யக் கூடிய கைம்மாறாகும்.

பெரியார் அவர்களுக்குத் தில்லையம்பலத்தின் திருநடனம் புரியும் நடேசப் பெருமான் உடல் நலம்தந்து பல்லாண்டு பல்லாண்டு வாழ அருள்புரியும்படி மனமார வணங்குகின்றேன்.

22. திரு. S. மீனாட்சிசுந்தர முதலியார், பி.ஏ., எல்.டி., தலைவர்,
நகரசபை, ஈரோடு.

இறைவன் அருட்புகழை உலகிற்கு வெளிப்படுத்திய பெருமை திருத்தொண்டர்களைச் சாரும்; திருத்தொண்டர்கள் பெருமையை உலகெலா முணர்ந்தோத அருளிய பெருமை சேக்கிழார் பெருமானைச் சாரும். அப்பெருமானின் அருள்நூலை ஓதி இறைவனருள்பெறத் தமிழுலகிற்கு வாய்ப்பளித்த பெருமை கோவை சிவக்கவிமணி திருவாளர் C. K. சுப்பிரமணிய முதலியாரைச் சேரும். சைவத்திற்கும், தமிழுக்கும் சிவக்கவிமணி செய்துள்ள தொண்டு சைவமும் தமிழும் உள்ளவரை நிலைத்து நிற்கும். கூத்தப் பெருமான் அவர்களுக்கு எல்லா நலனும் அருளுமாறு நாம் அனைவரும் உளம்கனிந்து வணங்குவோமாக!

23. சர். பி. டி. இராசன், தல்லாகுளம், மதுரை.

"செயற்கரிய செய்வர் பெரியார்" என்பர் வள்ளுவர். சாதாரண மக்களாற் செய்துமுடிக்க முடியாததைத்தான் பெருமக்கள் செய்வர் என்பதுதான் அதன் கருத்து. திரு. C. K. சுப்பிரமணிய முதலியார் அவர்களை வள்ளுவர் கூறிய பெரியாரோடுதான் நாம் வைத்தெண்ணப் பிரியப்படுவோம். ஏனெனில் அவர்கள் செயலும் அத்தகைய அருமையுடையது.

பொதுவாக அறிவியல் கண்ணுடையார் எவரும், சிறப்பாகச் சைவர்களும் உச்சிமேல் வைத்துப் போற்றத்தக்க, சேக்கிழார் சுவாமிகள் இயற்றிய பெரிய புராணத்திற்குத் திரு. C.K.S. அவர்கள் அரிய, அழகிய, இன்றியமையாத உரையை இயற்றி உபகரித்திருக்கிறார்கள். இது உலகிற்குப் பேருதவி, போற்றத்தக்க உதவி, வேண்டத்தக்க உதவி.

இவ்வுரை சிற்றறிவினர் முதல் பேரறிவினர் வரை எவர் பார்ப்பினும் அந்தந்த அறிவினர்க்குத் தக்கபடி பயன்தந்து விளங்குகிறது.

"ஊருணி நீர்நிறைந் தற்றே" என்பதை இவ்வுரைக்கு உவமை கூறலேசாலும்.

இத்தகைய பண்பாடு பொருந்திய உரையை இத் தெய்வீக நூலுக்குச் செய்தளித்த சொல்லின் செல்வரை, ஆற்றலும் அனுபவ அறிவும் பெற்ற அன்பரை, வழக்கறிஞர்த் தொழில் துறையில் நுணுக்க மிக உடையாரை, நான் புகழ்ந்து கூறுவது பொருத்தமற்றதுதான்; என்றாலும் பெரியோர்களைச் சிறியோர்கள் வாழ்த்த வேண்டுவது முறைமையாம் என்பது பற்றி நான் அன்னாரையும், அன்னாரது உரையையும் சிறப்பித்துக் கூற ஆசைப்படுகிறேன்.

நகரங்கள் எங்கும், சிற்றூர்கள்எங்கும் ஒவ்வோர் நூல்நிலையம் இருக்கவேண்டும்; அந்த நூல்நிலையங்கள் ஒவ்வொன்றிலும் திரு. C. K. S. அவர்கள் இயற்றிய உரை போன்ற பேருரைகள் வைக்கப்படவேண்டுமென்பது என் பேராசை. நூல் செய்வதிலும் உரைசெய்வதுதான் மிகக் கடினச்செயல் என்பது யாவரும் அறிந்த பேருண்மை. அக்கலையில் தனிச்சிறப்புடன் விளங்கும் நம் திரு. C.K.S. அவர்களுக்கு எல்லாம் வல்ல கடவுள் நிறைந்த ஆயுளும் சிறந்த உடல் நலனும் அருளுமாறு அவன் திருவடிகளை இறைஞ்சுகின்றேன். "தமிழும் சைவமும் தழைத்தினி தோங்குக"

24. ராவ்பஹதூர் - கல். முருகேச முதலியார், பி. ஏ., தலைவர்,
சைவ சித்தாந்த மகா சமாசம், சென்னை.

சைவப்பெரியர் சிவக்கவிமணி உயர்திரு சி. கே. சுப்பிரமணிய முதலியார் அவர்கள் பல ஆண்டுகளாக அரிய முயற்சி செய்து வெளியிட்டு வரும் திருத்தொண்

டர் புராணப் பேருரை வெளியீடு பூர்த்தியானதைக் குறித்துச் சைவ உலகம் மகிழ்ச்சியுறுகிறது.

இப்பெரியார் அவர்களின் பேருரையின் சிறப்பு நலன்களை நன்குக் கூறுவது மிகையாகும். இதுபோல் ஆழ்ந்தகன்ற பேருரை இதுவரை வெளிவந்திலது. திருமுறைகளிலிருந்து மேற்கோள்களும் சைவசித்தாந்த ஞான சாத்திர உண்மைகளும் ஆங்காங்கு எடுத்துக் கூறப் பட்டிருக்கின்றன. ஆக்கியோர் முதிர்ந்த கல்விக் கேள்விகளின் பயனாகக் கிடைத்த இவ்வுரை நம்மனோருக்கு மிகவும் பயன் தரும். சித்தாந்த சாத்திரங்களின் உட்கருத்தை அறிய விரும்புவோர் தெய்வச்சேக்கிழார் இயற்றிய அநுபவம் சான்ற திருத்தொண்டர்களின் சரித்திரத்தைக் கொண்டே அவற்றை அறியக்கூடும். ஆகவே, இப்பேருரையைச் சித்தாந்த சைவர்கள் பெரிய பொக்கிஷமாகக் கருதுவார்கள். இவ்வுரைக்கு, "சித்தாந்த ஞானமிர்தம்" என்றே பெயர் சூட்டலாம்.

இத்தகைய சிறப்புக்களையுடைய உரையைச் செய்த சிவக்கவிமணி அவர்களுக்குச் செய்யக்கூடிய கைம்மாறு அவ்வுரையைச் சைவர்கள் சிரத்தையுடன் படிப்பதேயாகும்.

அம்பலவாணன் அருளால் இப்பெரியார் நீடூழி வாழ்க!

25. திரு. E. Sankaralingam Pillai, Coimbatore.

May God bless the author and the celebrations with success and glory.

26. திரு. G. கலியாணம்பிள்ளை, M.A., D. Econ. இராமநாதபுரம்

நன்றி. தலைசிறந்த காவியங்களில் ஒன்று சேக்கிழார் பெருமான் செய்தருளிய திருத்தொண்டர் புராணம்; பக்திச் சுவை சொட்டும் பனுவல்: அடியவர் வரலாறுகளை அறிந்துகொள்ள உதவும் கருவூலம்; தமிழ் நாட்டு வரலாற்றுக் குறைதீர்க்கும் ஆராய்ச்சிநூல். இந்நூலுக்குப் பெரும் பேருரையை இயற்றித் தந்தவர்கள் கொங்குமண்டலக் கோவை மாநகர் வாழ் சிவக்கவிமணியவர்கள். வாணாளை வீணாக்காமல் அரும்பாடு பட்டுப் பேருரையை நமக்கு அளித்துள்ளார்கள். அதன் நிறைவுவிழா தில்லையில் பெரிய புராண அரங்கேற்றமான அதே இடத்தில் நடைபெறுவது மிகவும் தகுதியுடையதே. பேருரையை நமக்கு அளித்தபெரியார், அன்பர்கள் உள்ளத் தகலாதிருந்து இன்பமுது அளிக்கும் எம்பிரான் அருளால் எல்லா நலன்களும் பெற்று வாழும் வண்ணம் தமிழர்களும், சைவர்களும் வணங்குவோமாக!

27. திரு. P. இராமசாமிபிள்ளை, பி.ஏ., பி.எல்.,
சீதாராம் காட்டேஜ் எம்.எல்.ஏ., திருவாங்கூர்.

கோவை, சைவப் பெரியார் சிவக்கவிமணி திரு. C. K. சுப்பிரமணிய முதலியார் அவர்களின் பெரு முயற்சியால் கிடைக்கப்பெற்ற இந்த வெளியீடு தமிழ் உலகத்தில் என்றும் குன்றுவிளக்காக விளங்குமென்பதில் சந்தேகமில்லை. நமது நாட்டிலேயே மிகச் சிறந்த பணிகளில் ஒன்றெனக்கூறும் பெரியபுராணத்தை எளிய முறையில் சாதாரண மக்களுக்குப் புரியும் பாணியில் பேருரை எழுதிய பெருமை நமது முதலியாரவர்களைச் சார்ந்ததாகும்.

28. திரு. ச. சிவகுமாரன், எம். ஏ., காரியதரிசி,
சைவ சித்தாந்த மகா சமாஜம், சென்னை.

நம் சிவக்கவிமணி C. K. சுப்பிரமணிய முதலியாரவர்கள் பதினெட்டாண்டுகள் திருவருள் துணைகொண்டு பெரிய புராணத்திற்குப் பேருரை யெழுதி அதனைப் பூர்த்தி செய்திருக்கிறார்கள் என்றால், இதைக் காட்டிலும் சைவத் தமிழ் உலகம் மகிழக்கூடியதும் பெருமிதம் அடையக்கூடியதுமான பெரு நிகழ்ச்சி இக்காலத்தில் வேறெதுவும் இல்லை.

சிவக்கவிமணியின் புலமையையும் சைவப்பணியையும் பாராட்டி அப்பெரியார் நீடூழிவாழ இறைவனை வழுத்துகின்றேன்.

29. திரு. க. க. முருகேசபிள்ளை, "ஈழமணி" ஆசிரியர், தென் புலோலியூர்,
பருத்தித்துறை, (இலங்கை.)

தாங்கள் இவ்வுரையை வெளியிட்ட காலந்தொடங்கி அதன் பெருமையை என் னண்பர், மாணவர் பலருக்கும் சொல்லி அவர்களையும் இவ்வுரையை வாசிக்கும்படி யூக்கி வருகின்றேன். சேக்கிழார் பெருமான் காலத்திருந்த பெருந்தகையாளர் போல் இக்காலத்திலும் தங்கள் உரையைப் பாராட்டிக் கௌரவிக்கும் சைவப் பெரியார்களிருப்பதை நினைத்துப் பெருமையடைகின்றேன்.

30. **Sri. V. Rajagopala Iyer.** "Ramani House" Fernhill; Nilgiris,
S. India.

As one of the most devoted sons of the Paramatma, please permit me to offer our hearty congratulations both to yourself and to your friends for the trouble taken to edit the sacred and devotional *Sri Peria Puranam* in easy style with meanings and commentaries for the use of the tamil-loving public, successfully, thus fulfilling a long-felt want. The book will be read and appreciated not only by the scholars in the India and the Far East but also by all who are interested in the subject residing all over the world.

May you all be blessed with longevity and prosperity coupled with energy to do some further similar research work in the field.

With due respects to one and all, I pray that the celebration of the auspicious festivities of the completion of the publication of the Periapuranam at the sacred spot where the Saguna Brahmam has assumed the forms of Sri Natarajamurti and loving Sivakami Devi for the welfare of the humanity in general, amidst a distinguished gathering of highly devotional, cultured and holy personages, be crowned with success.

With best regards. Om Santi Santi Santi.

31. திரு. இராசை - N. அருணாசலம், இராசிபுரம்.

* * * முப்பது ஆண்டுகளாகப் பெரிய புராணத்தைத் தருவித் தருவி ஆராய்ந்து விடாமுயற்சியுடன் சிவன் அடியார்களின் உள்ளங்களில் எல்லாம் ஊடுருவிப்பாய்ந்து

ஆங்காங்கே சிவமணமும் தொண்டும் எப்படிக் கமழ்கிறது என்பதை எம்போன்றோரும் அறியும் வண்ணம் எளிய இனிய முறையில் உவந்தளித்த பெருமையை என்னென்று போற்றுவேன். தங்கள் தொண்டு பெருந்தொண்டு. சேக்கிழார் எங்கிருக்கிறாரோ அங்கே நீவிரும் காணப்பெறுவீர். பெருந்தகையீர்! தாங்கள் இன்பமாகவும் புகழுடனும் பல்லாண்டு வாழ எல்லாம் வல்ல சிவகாமி நேயனை வேண்டுகின்றேன்.

32. திரு. கி. வா. ஜகந்நாதன், ஆசிரியர், கலைமகள், சென்னை.

1

பெரியபுராண உரைவெளியீட்டு நிறைவுவிழா அழைப்பிதழ் கிடைத்தது; நன்றி.

விழாவுக்கு வரவேண்டுமென்ற ஆர்வம் இருந்தும் இங்குள்ள இன்றியமையாத சில பணிகள் அவ்வாறு செய்ய இயலாமல் தகைகின்றன.

விழா இனிது நிறைவேற வேண்டுமென்று இறைவன் திருவருளை எண்ணி வாழ்த்துகிறேன்.

சிவக்கவிமணி அவர்கள் செய்துள்ள தொண்டு தமிழ் இலக்கிய வரலாற்றில் தக்க இடம் பெறுவதற்குரியது. அறுபத்து நான்காவது நாயனாராக மதிக்கப் பெறுவதற்குரிய தகுதி உடைய அவர்கள் பல காலமாகத் தம் கல்வியினாலும் கேள்வியினாலும் பெரிய புராணப் பூம்பொழிலில் புகுந்து ஆழ்ந்து அங்கே காணும் தண்ணிழலில் நின்று மலர்மணம் நுகர்ந்து கனிகளைச் சுவைத்துத் தேனைக்குடித்துச் செம்மாந்து நிற்பவர்கள். புலமையினாலும் பக்தியினாலும் ஒழுக்கத்தினாலும் பெரிய புராணத்தைப் படித்து அறிந்து உணர்ந்து நுகர்ந்து அதன்கண் வாழ்ந்து வருகிறவர்கள். அவர்கள் எழுதியுள்ள பேருரையின் அளவைப் பார்த்தாலே மலைத்துப் போகிறோம். அதனூடே காணும் நுட்பத்தையும் சுவையையும் கண்டால் உள்ளம் கொள்ள இன்பம் உண்டாகிறது. தமிழ்நாட்டின் பாக்கியம் திருத்தொண்டர் புராணத்தைப் பெற்றது. அந்தப் பாக்கியத்தின் மேற் பாக்கியம் இந்தப் பேருரையைப் பெற்றது.

சிவக்கவிமணியவர்களைப் பாராட்ட இன்று அநபாயச் சோழன் இல்லை. ஆனால் அருள்பொழிய அன்றிருந்த, பொன் மன்றுளாடும் பெம்மான் இருக்கிறான். நல்லோர்களும் இருக்கிறார்கள்.

சிவக்கவிமணியவர்கள் இன்னும் பல்லாண்டு வாழ்ந்து இதுபோன்று தாம் நிறைவேற்ற எண்ணியிருக்கும் பிற இலக்கியப் பணிகளையும் தக்கவண்ணம் செய்து நிறைவேற்ற எல்லாம் வல்ல இறைவன் திருவருள் பாலிக்கவேண்டுமென்று வழுத்துகிறேன்.

2

இறைவன் திருவருளால் தங்கள் பெரிய உரை நிறைவேறியது குறித்துப் பெருமகிழ்ச்சி அடைகிறேன். இந்தக் காலத்தில் இராஜ ராஜ சோழன் இல்லையே என்ற எண்ணமும் உடன் உண்டாகிறது; அநபாயன் இருந்தால் எவ்வாறு இருக்கும் என்று கற்பனை செய்து பார்க்கிறேன்.

33. சிவஸ்ரீ - ஈசானசிவாசாரியர், பழநி.

சிவஞானச் செல்வராக விளங்கும் சிவத்திரு எங்கள் ஐய! ஸ்ரீ சிவகாமியம்பாள் சமேத ஸ்ரீமத் ஆநந்த நடேசப்பெருமான் திருவருளும், சிவாநுபூதிப் பெருவாழ்வும் எங்கள் குலதெய்வமுமாகிய ஸ்ரீ சேக்கிழார் சுவாமிகள் குருவருளும் மென்மேலும் நிரம்பப் பல்லாண்டு வாழ்கவென அத்திருவருளை வழுத்துகின்றேன்.

பன்னெடுங்காலமாகத் தாங்கள் ஆற்றிவரும் சைவநற்றவமாகிய சிவபூசையின் பலனும் திருமுறைப் பாராயண நற்பலனும் ஆகிய தவ நலன்கள் பெரிய புராணப் பேருரை வருக்கும் அருள் நலத்தைத் தங்களுக்குத் தந்தன. அதனுல் யாங்கள் உய்தி பெறுவேமாயினேம்.

பெரிய புராணப் பேருரையிலே தாங்கள் தங்கள் தவப்பயனுல் தெரித்தருளிய சைவ நலன்கள், புறச்சமய நிராகரணம், சுவமதஸ்தாபனம், சைவ சாதனங்கள் என்றின்னோரன்ன சைவ சமயநலன்களெல்லாம் எம்மவருளத்தே நின்று நிலவுக.

சிவாநுபூதிப் பெருவாழ்வாகிய ஸ்ரீ அநபாய வேந்தரின் சைவ நலன்களை நாங்கள் நினைந்துபோற்றும் வகையில் இன்று இங்ஙனம் பெரிய புராணப் பேருரை நிறைவு விழாவை நடாத்த முன்வந்த சைவப் பெரியார் எல்லோருக்கும் சிவப்பிரசாதமும் குருப்பிரசாதமும் நிரம்புவதாக.

34. திரு. M. காசி விஸ்வநாத பிள்ளை, எம்.ஏ.,
(Asst. Commissioner, Income-tax), விஜயவாடா.

தங்கள் பெரியபுராணப் பேருரையை எனக்குச் சமயம் வாய்த்த போதெல்லாம் படித்து வருகிறேன். இத்தகைய பேருரையை எழுதி உதவியிருக்கும் தங்களுக்குத் தமிழ்ச் சைவ உலகு மிகவும் கடமைப் பட்டுள்ளது.

தாங்களால் சைவ உலகு இன்னும் அடைய வேண்டியது அதிகம் இருக்கிறது. வேண்டத்தக்கதை அறியும் திருவருளைச் சிந்திக்கின்றேன்.

35. திருமுருக - கிருபானந்தவாரி, ஆசிரியர் "திருப்புகழமிர்தம்", மதுரை.

நேரிசை வெண்பா.

போற்றுதிருத் தொண்டர் புராணத்தின் பேருரையை
வேற்றுமை யின்றி விரித்துரைத்தான்—நீற்றணிசெய்
கோவையுறை சுப்ரமணிக் கோமான் குறுமுனியார்
தேவைநிக ரண்ணல் சிறந்து.

தங்கள் தொண்டு என்றும் நிலவ இறைவனை இறைஞ்சுகின்றேன்.

36. சைவசபை, பாளையங்கோட்டை.

பெரிய புராணப் பேருரை இயற்றி எழு தொகுதிகளாக வெளியிட்டு நாளது மே மாசம் 6, 7 நாட்களில் சிதம்பரத்தில் அரங்கேற்றுப் பெருவிழா நடைபெறுவதற்குக் காரணரான கோயமுத்தூர் வக்கீல் திருவாளர் சிவக்கவிமணி, C. K. சுப்பிரமணிய முதலியார், B.A. அவர்கள் உழைப்பையும் அறிவாராய்ச்சியையும் பாராட்டுவதாக இச்சபையார் தீர்மானிக்கிறார்கள்.

37. திரு. Dr. அ. சிதம்பரநாதன், அண்ணுமலை நகர்.

C. K. (சிவக்கவிமணி) சுப்பிரமணிய முதலியார் அவர்கள் எழுதியுள்ள பெரிய புராணப் பேருரை குறித்து அன்னர் பாராட்டத் தக்கவர். தமிழ் மொழியிடத்து மிக்க காதலொடு எழுதப்பட்டது பெரிய புராணம் என்பது ஒப்புக்கொள்ளத் தக்கது. வேறு மொழிவழியாகத்தான் கடவுளை வழிபடக்கூடும், வேறு மொழியில் அமைந்த பாக்களுக்கே கடவுள் செவிசாய்த்தருள்வர் என்பன போன்ற தவமுன கருத்துக்கள் தமிழ் நாட்டில் இடம் பெற்ற இடைக்காலத்தில் சேக்கிழார் தோன்றித் தமிழினுல்

உய்யலாம் என்பதைக் காட்டினர். அப்பூதியடிகள் புராணம், திருஞானசம்பந்தர் புராணம், திருநாவுக்கரசர் புராணம், தடுத்தாட்கொண்ட புராணம், ஏயர்கோன் கலிக்காம நாயனர் புராணம் போன்றவற்றுள் உள்ளடங்கிக் கிடக்கும் இக்கருத்து வலியுறுத்தத் தக்கது.

இப்பணியில் ஈடுபட்டு நெடுங்காலம் உழைத்து, தமது மதிநுட்பத்தினுலும் நூலறிவினுலும் சிறந்ததொரு உரையைத் திரு. C. K. சு. அவர்கள் ஆக்கி முடித்துத் தந்துள்ளார்கள். ஒவ்வொரு அடியார் சரிதத்தையும் தொகை வகை விரிகளால் அமைத்துக் காட்டி, பெரிய புராணச் செய்யுட்களுக்கு இனிய எளிய பதவுரையும் அரிய விளக்கவுரையும் இயற்றித் தந்துள்ள இத்தமிழர் பாராட்டத் தக்கவர். சில விடங்களில், " மாநடம்—இதனை ஊர்த்துவதாண்டவம் என்பர் வடவர் " என்பன போன்ற குறிப்புக்கள் எழுதப்பட்டிருப்பவை நோக்கத் தக்கன. (3-ஆம் பகுதி—2-ம் பாகம், பக்கம் 882). அவர் உரையைப் படிப்பார் பெரிய புராணத்தைப் படித்து முடிப்பதோடன்றி, பன்னிரு திருமுறைகளிலும் பெரிய பயிற்சியும் அறிவும் பெறுவர் என்பது உறுதி. ஒவ்வொரு பகுதியின் ஈற்றிலும் வரும் கதைச் சுருக்கம் முதலியா ரவர்களுடைய உரைநடைத் திறத்தைக் காட்டுகின்றது. அவர்கள் இவ்வுரையை முழுதும் முடித்துத் தந்தமை பாராட்டத்தக்கதே.

38. திரு. T. பழநியப்பன், ஈரோடு.

"உலகெலாம் என்று இறைவன் அடியெடுத்துக்கொடுக்க, அவன் திருவருள் துணைகொண்டு சேக்கிழார் பெருமான் செய்தருளிய பெரியபுராணத்திற்கு, அவன் அருள்கொண்டு பெரிய உரைகண்ட பெரியோராகிய தங்களைத் தில்லைத் திருக் கோயில் ஆயிரக்கால் மண்டபத்தில் 6, 7—5—54உ களில் நடைபெறும் " பெரிய புராண விரிவுரை " அரங்கேற்றுவிழாவிலே பல பெருமக்கள் பாராட்டுவார்கள், சைவ உலகம் ஒன்று திரண்டு தங்களையும், இறைவன் திருவருளையும், சிறப்பிக்கும். இவ்வரிய நிகழ்ச்சிகளைக் காணும் வாய்ப்பு அடியேனுக்குக் கிடைக்கவில்லை. இறைவன் திருவருள் இது என்று மன அமைதி பெறுகின்றேன். எனது உளத்தெழுந்த " ஐயங்களைக் " கடிதத்தின்மூலம் பலதடவை நீக்கி அருளிய தங்கள் திருவுளத்திற்கு எனது நன்றி.

இறைவன்பால் மாருத அன்புகொண்ட ஐயா! சேக்கிழார் வாக்கு இறைவன் வாக்கு என்ற பெரியபுராணத்தின் அடிப்படைக் கருத்தை மறந்து, சேக்கிழார் கருத்துக்கு மாருகத் தங்கள் மனம்போல் மாறுபட்ட கருத்துக்களைச் சொல்லித்திரியும் பேதைகள் நிறைந்த 20-ம் நூற்றுண்டிலே, சேக்கிழார் வாக்கு இறைவன் வாக்கு என்பதைத் தெளிவாக உளத்திற்கொண்டு அதற்கேற்ப இறைவன் திருவருள் துணை கொண்டு பெரியபுராணத்தில் அரியபெரிய உரைசெய்த தாங்கள் இறைவன் திருவருளால் எல்லா நலனும் எய்தி, நீடு வாழ்ந்து சைவ சமயத்திற்குப் பலவழிகளிலும் அரிய பணிகளைச் செய்யவேண்டும் என்று உளங்கனிந்து எல்லாம் வல்ல இறைவனை வேண்டுகின்றேன்.

39. திரு. Dr. P. R. அண்ணுமலை, பெருமாள்புரம், பாளையங்கோட்டை.

இன்று தில்லையில் நடக்கும் அரங்கேற்றுவிழா, இந்நூற்றுண்டிலேயே, மிகச் சிறந்த விழா என்று கூறுவது மிகையாகாது. C. K. S. ஐயா போன்ற தூய்மை நிறைந்த பழவடியார்கள் இவ்வுலகில் இருப்பதாலாயே, உலகம் அழியாமல் உய்ந்து வருகின்றதென்பது என்மனதிற் பதிந்த உண்மை.

40. திரு. சி. சரவணமுத்து, செல்வவிநாயக ஸ்டோர்ஸ், கொழும்பு.

அன்று மந்திரியாக இருந்த சேக்கிழார் பெருமான் இன்று வக்கீலாக வந்திருந்து உரை காணுகிறார் என்று முழுநம்பிக்கையுடைய அடியேனுக்கு இப்பெரு விழாவில் பங்கு பற்றும் பாக்கியம் கிடைக்கவில்லையே என்றதை நினைக்கும்போது பெரும் துக்கம். ஆனால், எனது எண்ணம் சிந்தனையாகவும் பெருவிழாவில்தான் நிற்கிறது.

எனது தந்தையும் குருவுமாய சிவப்பெருந்திரு சோமசுந்தர அடிகளார் அங்கு வந்து தலைமையுரை நிகழ்த்தக் கேட்கப் பாக்கியம் இல்லை. யாவும் தில்லைக்கூத்தன் திருவருளேயாகும். எனது உளங்கனிந்த வாழ்த்துக்கூறி—இதுபோன்ற ஒரு விழா இலங்கையில் நடக்கத் தாங்கள் அதில் பங்குபற்ற அடியேன் கண்டு தெரிசிக்கத் தில்லைக்கூத்தன் திருவருள்புரிவாராக.

41. திரு. டாக்டர் மா. இராஜமாணிக்கம், எம்.ஏ., எல்.டி., எம்.ஓ.எல்., பிஎச்.டி. 15. மேட்டுத்தெரு, சென்னை.

சிவராசதானியாக விளங்கும் திருத்தில்லையில், கூத்தப்பிரான் அணித்தேயுள்ள ஆயிரக்கால் மண்டபத்தில்—சேக்கிழார் பெருமான் ஏறத்தாழ எண்ணூறு ஆண்டு கட்குமுன் திருத்தொண்டர் புராணத்தை அரங்கேற்றிய ஆயிரக்கால் மண்டபத்தில்—நேற்றும் இன்றும் அப்பெருமானது புராணத்திற்குச் சிறந்தமுறையில் பேருரை இயற்றியருளிய பெரியார் சிவக்கவிமணி சி. கே. சுப்பிரமணிய முதலியார் அவர்களைப் பாராட்டும் விழா நடைபெறுதல் மிகப் பொருத்தமாகும்.

விழாவிற்கு மதுரைத் திருஞானசம்பந்தர் மடாலயத் தலைவரவர்கள் தலைமை தாங்குதல் முற்றிலும் பொருத்தமாகும்.

திரு. முதலியார் அவர்கள் இப்பேருரையை வெளியிட மேற்கொண்ட முயற்சிகள் பல. உரைவிளக்கம் உரையாசிரியருடைய உழைப்பையும் ஆழ்ந்த கல்வி யறிவினையும் நன்கு புலப்படுத்தும். இத்தகைய பேருரை இயற்றிய இவ்வுண்மைச் சைவப் பெரியாரைச் சைவ உலகம் நன்முறையில் போற்றியதில்லை! ஆதரவு போதிய அளவு காட்டியதுமில்லை: சேக்கிழாரால் நாயன்மார் பெருமை புலப்பட்டாற்போல இப்பெரியார் உரைவளத்தால் சேக்கிழார் புலமையும் பெருமையும் அவர் புராணம் பாட மேற்கொண்ட அரிய உழைப்பும் நன்கு வெளியாகும். இத்தகைய அரியபெரிய முயற்சியில் பல்லாண்டுகள் ஈடுபட்டு, இடையிடையே தோன்றிய மலைபோன்ற இடர்களைக் கடந்து இறுதியில் தம் முள்ளத் திண்மையால் எண்ணிய எண்ணியாங்கு இயற்றி முடித்த இப்பெரியார்க்கு உண்மைச் சைவர்களின் உளமார்ந்த வாழ்த்து உரியதாகும்.

42. திரு. சு. இராமசுவாமி நாயடு, முன்னாள் மேயர், சென்னை.

பெரியபுராணத்துக்குப் பேருரை காண்பதற்குப் பதினெட்டு ஆண்டுகளாகத் தாங்கள் இடையறாது மேற்கொண்ட அரும்பணி பெரும்பணியன்றோ!

விளக்கவுரை, பொருள் நயம், வரலாற்றுக் குறிப்பு முதலிய எல்லா வகையாலும் திட்பநுட்பம் செறியத் தருவித் தருவி ஆராய்ந்து தாங்கள் எழுதிய உரை தமிழ்த்தாய்க்குச் சிறந்த அணியாய் என்றும் நின்று நிலவும் என்பதில் ஐயமில்லை.

தில்லைக்கூத்தனால் அடியெடுத்துக் கொடுக்கப்பெற்ற பெரியபுராணத்துக்குத் தாங்கள் எழுதிய பேருரை வெளியீட்டு நிறைவு விழாவைத் தில்லையிலே நடத்துவதும், அவ்விழாவில் அறிஞர் பெருமக்கள் பலர் கலந்து தங்களைப் பாராட்டிப் பொன்னாடை போர்த்தி வாழ்த்துரை வழங்குவதும் சாலப்பொருத்தமுடையனவாகும்.

சைவமும் தமிழும் தழைத்தினிதோங்கத் தாங்கள் மேலும் மேலும் பல தொண்டுகள் புரிந்து இன்னும் பல்லாண்டு இன்புற்று வாழ அருள இறைவன் திருவடிகளை இறைஞ்சுகிறேன்.

43. சேக்கிழார் திருப்பணிக் கழகம், குன்றத்தூர் (சென்னை அருகே).

"அன்பில் கனிந்து—அருளில் உருவான பெரியபுராணத்தின் பேராசிரியராகிய தெய்வச் சேக்கிழார் பெருமானின் பெருமை பேசற்கரியது. அடியார்பால் அளவிலா அன்புகொண்டு—உண்மையை ஊற்றுக்கோலாக எடுத்து—அம்பலக் கூத்தன் அருள் ஊக்கச் செந்தமிழின் தலைமைக்காப்பியமாம் அப்புராணத்தை அருளிய அருண்மொழித்தேவரே மீண்டும் உருக்கொண்டு அந்நூலுக்குப் பேருரை வரைந்தாலொப்ப அகலவுரை ஆக்கிய நம்மண்ணல்—திரு. சிவக்கவிமணி சி. கே. சுப்பிரமணியமுதலியாரவர்கட்குச் சைவப்புலமை உலகம் பெரிதுங் கடமைப்பட்டுள்ளது. அப்பெருமான் நீடூழி இனிது வாழத் தில்லைச் செல்வன் அடிமலர்களை இறைஞ்சுகின்றேன்.

44. திரு. தே. பொ. மீனாட்சிசுந்தரன், எம்.ஏ., எம்.ஓ.எல்., சென்னை.

பெரியபுராணம் சோழப் பேரரசில் அமைச்சராக விளங்கிய பெரியார் எழுதியது. புறவிளக்கம் சிறந்த தமிழ்நாட்டில் தோன்றக்கண்ட சேக்கிழார், அகவிளக்கமும் அதற்குத் தக ஒளிர்ந்தோங்க வேண்டும் என விரும்பினார். அவர் ஒரு தீர்க்கதரிசி, அகவிளக்கம் ஒளிராமையாலேயே தமிழ்நாடு தன்னரசிழந்து நேற்று உரிமைபெறும் வரை வாடியது; இன்றும் வாடுகிறது. தமிழ்நாட்டில் தமிழராய் வாழ்ந்த அடியார்கள் அகவிளக்கம் பெற்று முன்னாளில் உயர்ந்தோங்கிய வரலாற்றைப் பாட்டாகப் பாடி மக்களைச் சேக்கிழார் உயர்த்த முயன்றார். அவர்போல் மனத்தின் வரலாற்றைப் பாடும் புலவர் மிகமிகச் சிலர். வரலாற்றாராய்ச்சியிலும் தமிழ்நாட்டில் அவர் போலச் சிறந்தவர் வேறு ஒருவரும் இலர். நடையின் எளிமை கருத்தின் ஆழம்—இவற்றை வேறெங்கும் காண்பது அருமை.

இத்தகைய சீர்மைபெற்றதொரு தமிழ்த் தேசிய காப்பியத்தை இந்த வகையில் எல்லாம் உணர்ந்து துய்ப்பதற்குச் சிறந்த வழிகாட்டி வேண்டும். இந்த நூலின் சுவை எல்லாம் தம் உடலிலும் உள்ளத்திலும் உயிரிலும் ஊறநின்று அனுபவித்த பெரியார் ஒருசிலரில் திரு. சுப்பிரமணியமுதலியார் ஒருவர் ஆவர். பெரியபுராணத்திற்கு உரை எழுதுவதனையே தம் வாணாள் தொண்டாகக் கொண்டு சிறப்புற அவர் முடித்துள்ளார். இந்த இருபதாம் நூற்றாண்டிலும் தமிழ்நாடு உயிர்வாழ்கிறது என்பதற்கு இந்த உரை ஒரு சிறந்த சான்றாகும். வாழ்க தமிழ்நாடு! வாழ்க பெரியபுராணம்! வாழ்க சுப்பிரமணிய முதலியார்!

45. **Sri. Dr. Sir. A. L. Mudaliar**, M.D., LL.D., D.C.L. (Oxon)., F.R.C.O.G., F.A.C.S., Vice-Chancellor, Madras-5.

I am very glad that it is proposed to celebrate the completion of Periyapurana Urai by Sivakkavimani Sri C. K. Subramania Mudaliar of Coimbatore on the 6th and 7th May 1954 at Chidambaram.

I very much regret that I shall not have the pleasure of being present on the occasion, as I expect to be away from India early in May. The Senate of this University, on the recommendation of the Syndicate, has in appreciation of the great work that he has done sanctioned an additional grant of Rs. 1000 to him. I shall ask the Registrar to have the cheque presented to him on the occasion and I shall ask Divan Bahadur Sri T. M. Narayanaswami Pillai, a member of the Syndicate, to be kind enough to present it to him on behalf of the University on the occasion.

46. திரு. டாக்டர்-மு. வரதராசன், தமிழ்ப் பேராசிரியர்,
செல்லம்மாள் தெரு, சென்னை 10.

உரையாசிரியர் உயர்திரு. முதலியாரவர்களின் திருத்தொண்டு தமிழ்மக்கள் என்றும் மறவாமல் போற்றத் தக்க பெருந்தொண்டாகும். விழா இனிது நடைபெறுக! வாழ்க பெரிய புராணம்! வாழ்க திரு. சி. கே. சு. முதலியார்.

47. திரு. ஜே. எம். சோமசுந்தரம்பிள்ளை. B.A., B.L.,

சிவக்கவிமணி ஒரு தவப் பெருஞ் செல்வராவர். தில்லையம்பல அருட்கூத்தனின் பேருருள் பெற்றவர். கருவுயிர் பெற்ற நாள் முதல் சிவனையே சிந்தித்த அருளாளர் எனவும் சொல்லலாம்.

இளமை முதற்கொண்டு சைவ ஒழுக்கத்தில் நின்று, ஆங்கிலம் பயின்று, வழக்கறிஞராய் வாழ்க்கை நடத்துவாராயினும், சிவனையே சிந்தித்து அறம் வழுவாது நிறைநின்றார். தமது வாழ்க்கையினிடையே, பூர்வபுண்ணியமும் துணைநிற்பச், சைவத் துறையில் திருக்கோயில் பாதுகாப்பு, சைவபுராணச் சிந்தனையில் ஈடுபட்டார்கள்.

ஆரூரர், ஆரூரில் திருத்தொண்டத் தொகையை, தில்லையை முதலாகக்கொண்ட அந்தணரை வழி நின்று, அறுபதது மூவரை நமக்கு அளித்தார் பழைய சேக்கிழார் தில்லையில் நமக்குத் திருத்தொண்டர் புராணத்தை ஆக்கி யருளினார். அதன் வழி நம்பியாண்டார் நம்பிகள் திருத்தொண்டர் திருவந்தாதியும் தந்தார். இவையாவருக்கும் பேரறிவு புகுத்துவன. இவ்வருள் நூல்களின் விளக்கமாக, நமது சிவக்கவிமணி அவர்கள், சேக்கிழாரே புதிய உருவில் உருக்கொண்டு வந்தாற்போன்று தாம் இயற்றியுள்ள திருத்தொண்டர் புராணப் பேருரையை இதுபோது வழங்கியுள்ளார்கள். எல்லோரும் படிக்கக்கூடிய அளவில், எளிமையும், விரிவும் உடையதாகவுள்ளது. இதற்காகப், பல்லாண்டுகள் முயன்று எழுதி முடித்துதவிய அவர்களுக்குத் தமிழகத்தாரது நன்றியும் பாராட்டும் உரியனவாகும். தில்லையம்பலவன் திருவருளால் திரு. முதலியார் அவர்களும் அவரது அறிவுத் தொண்டுக்குத் துணைபுரிந்த அவர்களது வாழ்க்கைத் துணைவியாராகிய அம்மையார் அவர்களும், உடல் நலமும், உடல் நலமும் ஒருங்குபெற்று 'நீடு வாழ்க' எனத் தில்லையம்பலவன் திருவடிகளை இறைஞ்சிப் போற்றுகின்றேன். சிவக்கவிமணி வாழ்க! சைவம் வெல்க!

48. திருமதி. ச. சிவகாமி அம்மாள், செயலாளர்,
திரு. பாகம்பிரியாள் மாதர் கழகம், தூத்துக்குடி.

கோயம்புத்தூர் சிவக்கவிமணி, திருமிகு பெரியார் C. K. சுப்பிரமணிய முதலியார் அவர்கள் பெரியபுராண விரிவுரைப் பாராட்டு விழா நடைபெறப் போவ

தரித்து நாங்கள் மிகவும் மகிழ்வடைகிறோம். சேக்கிழார் பெருமானே 20-ம் நூற்றாண்டில் மறுபடி தோன்றி பெரியபுராணத்திற்கு விரிவுரை எழுதியதாக நாங்கள் எண்ணுகிறோம். முதலியார் அவர்கள் பல்லாண்டு வாழ்க!

49. **Sri. R.V. Krishna Ayyar,** B.A., M.L.

I am very glad that the completion of Sri C. K. Subramania Mudaliar's great commentary on the Thiru Thondar uranam is going to be celebrated on the 6th and 7th May 1954, at Chidambaram.

It is a great literary achievement and the future historian will record it as a landmark in the progress of Tamil studies in this century. I have been a regular reader of the commentaries from the very commencement and I have been struck with the vast erudition, clearness of exposition, and fairness of presenta ion which were characteristic of the distinguished commentator. The work of Mr. Mudaliar is not merely a commentary on Sekkizar's Puranam, but it is also an invaluable exposition of the whole of the Saivite Thirumurais. The Tamil reading public will ever be greateful to Sri Mudaliar for his pious and patriotic work and wish him long life and every kind of prosperity.

I had myself intended to be present at Chidambaram at the celebrations, but owing to the meetings of the Madras Legislative Assemly which are scheduled to commence on 5-5-54, I am unable to be present and so I am sending this message of gratitude and good wishes.

50. திரு. க. கி. குலரத்னம், கந்தர்மாடம், யாழ்ப்பாணம்.

உலகெலாமென ஒருவன் அடியெடுத்துக் கொடுப்ப, அதனைக் கேட்டுத் திருத்தொண்டர் புராணமாக்கிய பெருமையாளன்போன்று, அந்நூலுக்கு என் நூலுக்குமில்லாத விரிந்த அளவில் திருந்திய உரையினைப் பொருந்த முடித்த புனிதன் வாழ்க! உரை வாழ்க! * * *

தில்லைப்பெருமான் திருமுன்னரின் நீங்கள் நிகழ்த்தும் விழாவை அவன் எம் நெஞ்சிலும் உறைவான் ஆகையில் நாம் உணரும் பேறுடையேம் ஆதலின் மகிழும்.

51. குன்றத்தூர் சேக்கிழார் சங்கம், குன்றத்தூர்.

பெரிய புராண விரிவுரைச் சுவடிகள் பூர்த்தியாகி இன்று நிறைவேற்றுவிழா சிதம்பரத்தில் சிறப்பாக நடைபெறுவதை எங்கள் மனக்கண்களால் கண்டு அகமகிழ்கின்றோம்.* * * *

அக்காலத்துச் சேக்கிழார் இக்காலத்தில் தாங்கள் அவதரித்து சென்னெறியைப் பரப்பி வருகின்றீர்கள் போலும்.

52. திரு. சே. வெ. ஜம்புலிங்கம் பிள்ளை, மயிலாப்பூர்.

இச் சைவத் திருமுறை நூலுக்கு மழவை மகாலிங்க ஐயர், திருவண்ணாமலை ஆதீனம் ஆறுமுகத் தம்பிரான், காஞ்சி ஆலாலசுந்தரம் பிள்ளை முதலிய சைவப் பேரறிஞர்கள் உரையெழுத முன் வந்தனர். ஆனால் உரையை முடிப்பதற்குள்

சிவபதமடைந்தனர். ஆறுமுகநாவலர் சூசனம் எழுத ஆரம்பித்தனர். அச்சூசனம் காரைக்காலம்மையார் புராணத்தோடு நின்றுவிட்டது சைவ உலகத்தின் தவக் குறைவு என்று கூறலாம். அச்சூசனத்தை எழுதி முடிக்கத் தக்கவர் இக்காலத்தில் எவரும் இல்லை யென்று கூறுவதே கால நிலைமை.

இதை ஒருவாறு தவிர்க்க வந்தது கோவை சுப்பிரமணிய முதலியார் 1935-ல் ஆரம்பித்து இப்போது முடிக்கும் விருத்தியுரையாகும். கடந்த 20-ஆண்டுகளாக இந் நூலை அச்சிடுவதில் பல சங்கடங்கள் ஏற்பட்டிருக்கலாம். அவற்றை யெல்லாம் கடந்து எடுத்த கருமத்தை முடித்தது மிகவும் போற்றத் தக்கது. ஆதி முதல் அந்தம்வரை உரையாசிரியருக்கு இந் நன் முயற்சியில் உதவி புரிந்தவர்களாகிய சிதம்பரம் வித்து வான் ந. சிவப்பிரகாச தேசிகர், ஆறுமுக நாயனர் முதலியோரின் சைவத்தொண்டு கள் மிகவும் பாராட்டற்பாலன.

"யார்க்கும் முன்னவனே முன்னின்றால் முடியாத பொருளுளதோ" என் னுஞ் சேக்கிழார் திருவாக்கு முதலியாரிடத்தில் பலித்தது அவர் செய்த சிவபுண் ணியம் போலும்! நமச்சிவாய வாஅழ்க! நாதன்தாள் வாழ்க!

53. **Sri. R. Kandasamy Mooppanar**, Kumbakonam.

It gives me immense pleasure to learn that the committee with Sir P. T. Rajan as the head, is celeberating the function of the completion of the monumental Commentary of Periapuranam. It is rarely given to one to see and enjoy fruits of one's labour in his lifetime. By the grace of God our Sri. Subramanya Mudaliar has been able to write his famous commentary and see that the committee is honouring the author at Chidambaram for having, produced the immortal work. I am sending my humble contribution, which may be kindly accepted. I wish and pray that the author may be spared long to live the longest period of life, so that he may continue to do the service to man and God.

54. பு. சு. சிவசுப்பிரமணிய பிள்ளை, "முருகானந்த விலாசம்" தூத்துக்குடி.

தில்லைக் கூத்தன் திருச் சபையில் தமிழகத்தின் தலைசிறந்த திருவிழா நடை பெறுகின்றது. இலக்கிய உலகில் குன்றாப் புகழுடன் திகழும் "பெரிய புராணம்" உரைபெற்றுவிட்டது! தமிழர்களின் பெருங்குறை தீர்ந்துவிட்டது!

சேக்கிழார் பெருமானின் செந்தமிழ் ஓவியத்துக்கு திரு. சி. கே. சு அவர்கள் உரை தந்து விட்டார்கள். அருள் நிறைந்த நூலுக்குப் பொருள் சிறந்த உரை கிடைத்திருப்பது தமிழர்களின் தவப்பயனே. கருவிலே திருவுடைய பெருமக்கள் வழியிலே வந்துதித்த பெருமகன் சி. கே. சு. அவர்களின் பேருரை சைவத்துக்குப் புத்துயிர் கொடுக்கும் பெரு மருந்தே ஆம்!

மணிவாசகரின் "திருவாசகம்" அரங்கேற்றப் பெற்ற திருவம்பலப் படியில் இப்பேருரையும் சார்த்தப்படுவது பெருமையும் தகுதியும் உடையதாகும்.

சி. கே. சு. அவர்கள் தமிழுக்கும் சைவத்துக்கும் முயன்று புரிந்த இப் பெருந் தொண்டுக்கு நந் தமிழ் மக்கள் என்றும் கடப்பாடுடையவர்கள்.

இவ்விழா இனிதே நடைபெறத் தில்லையம்பலத்தான் திருவடியை வழுத்தி இறைஞ்சி நிற்கின்றோம்.

55. திரு. K. சோமசுந்தரன், Asst. Secretary to Govt. of Madras, சென்னை.

மெய்த்திருவந் தற்றாலும் வெந்துயர் வந்துற்றாலும் ஒத்திருக்கும் உள்ளத்தரா வோராய், ஓடும் செம்பொனும் ஒக்கவே நோக்கி, வீடும் வேண்டாவளவு ஆசாபிகளந் தகளாக்கி இருவினையொப்பு அடைந்து, மேல், ஈசன் தனது திருக்கோலம் காட்டக் கண்டவர்களாய அடியார்கள் என்னும் மெய்ப்பெரியார்களுடைய உண்மை வர லாற்றுக்களையே தன்னகத்துக் கொண்டு திகழும் திருத்தொண்டர் புராணம் என்னும் பெரிய புராணம் நம்மனோரது தவம் செய்த தவத்தின் பயனாகும். அது அழகிய கருத்துச் செல்வங்களாகிய மணித்திரள்களும் ஏனைய செம்பொருட் குவியல்களும் உள்ள அமிழ்தினுமினிய செந்தமிழ் மொழிச் செய்யுட் கடல் கொண்டது. அத் தகைய புண்ணிய நூலைத் தந்துதவிய சேக்கிழார் பெருமான் தாட்களில் நமது சென்னிகள் சேர்வனவாக.

மாண்புடைப் புண்ணிய நூலுக்கு நத்தம் கோவைப் பெருந்தகையார் உயர் திருவாளர் C. K. சுப்பிரமணிய முதலியாரவர்கள் ஒரு விரிவுரை தந்துள்ளார்கள். அவர்கள் அவ்வுரை எழுத எல்லாவகையாலும் தகுதியுடையவர்களென்பது சொல் லாமலே விளங்கும். பதவுரை பொழிப்புரை போன்ற பண்டையுரைகள் போலாது ஒரு பெரிய விரிவான வுரையாகும். ஆங்கிலத்தில் மகாகவி ஷேக்ஸ்பியர் அவர்களது நாடகங்களைப் பதிப்பித்து உரைதந்த பதிப்புக்களில் தலைசிறந்ததாகிய Variorum பதிப்புப் போன்றது. இலக்கிய நயங்களும் தத்துவார்த்தங்களும் தொடர்களின் பொருட்களும் அமைப்புக்களும் வெகு அழகாக உரைகளில் ஆங்காங்கு காட்டப் பெற்றிருக்கின்றன. அவ்வத்தலங்களின் சிறப்புகளும் ஏனைய கதைக் குறிப்புக்களும் தனிப்பட்ட முறையில் தரப்பட்டிருக்கின்றன. முன்னர் வல்லே ஓடி முடிவில் களைத்துப் போகும் வேட்டை நாய்போன்ற தன்மை கொள்ளாது அவ்வுரை எங்கும் ஒரே படித்தான தன்மை வாய்ந்தது. இதுபோன்ற உரை முன்னுமிருந்ததில்லை. இனியும் வருமோ என்ற ஐயப்பாடு உளது. மாணவர்களுக்குப் பாடம் போதிக்கும் என் போன்றாருக்குப் பெரிதும் பயனளிக்கிறது. அவ்வாறு அதனிடத்து உழைத் துதவிய பெருந்தகைக்குக் கைம்மாறு யாதாகும். அவ்வுரையை நாளும் ஓதுவதேதான். திரு. முதலியாரவர்கள் "ஈசனுக்கன்பில்லார் தமக்குமன்பில்லார்" என்னும் குறிக்கோளுடையவர்கள். தமது வாழ்நாட்களில் பெரும்பகுதியை இவ்வுரைக்கே செலவு செய்தார்கள். அத்தகைய பெரியாருக்குத் தமிழுலகத்தின் நன்றி சூரிய சந்திராளுள்ளளவும் உரித்தாகுக.

அவ்வுரை உலகெலாம் உணர்ந்து ஓதிப் போற்றற்குரியது; புகழுலாவிய பெரும் புண்ணியமுடையது; அளவில் ஒளியது; அது அம்பலத்தேறுவது. அத் தகைய உரையை நாம் நாளும் நவையற ஓதி நலம் பெறுவோமாக! திரு. முதலியா ரவர்கள் நீடூழி நல்வாழ்வு வாழ்வாராக!

56. கண்டி (இலங்கை) திரு. க. வேலுப்பிள்ளையவர்கள்

(இவர்கள் தபால்தந்திமூலம் அனுப்பிய தமிழ்ப்பாட்டு மேலே தரப்பட்டுள்ளது.)

முப்பது யாண்டு தோறும் முதல்வனின் னருளி னாடி
இப்படி மக்கள் நோய்க்கோ ரீடிலா வமிர்த மாகச்
செப்பிடும் தெய்வ நன்னூற் சிறந்தபே ருரையைத் தந்த
சுப்பிர மண்ய வள்ளல் சுபத்துடன் பன்னாள் வாழி.

சேக்கிழார் கமல பாதம் சிறியனேன் சென்னி பூக்க
ஆக்கிய தெய்வ நன்னூல் அடியனேன் சிந்தைபூக்க
பாக்கியப் பயனுமெய்யப்பில் லெனுமுரை யெனதுநல்ல
வாக்கினிற் பூக்க வேண்டி வழங்குவை யாசி யையா.

## (3) வாழ்த்துப் பத்திரங்கள்

1. தருமபுர ஆதீனம், ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள், தருமபுரம், மாயூரம்.

'ஞாலம் நின்புகழே மிகவேண்டும் தென்—ஆலவாயில் உறையும் எம் ஆதியே'

பெரியர் புராணமே பெரிய புராணம். இதுவே தமிழுலகத்தின் நினைவு. அது மட்டுமல்ல. பெரிய வடிவத்தையுடையதாலும் பெரிய புராணம். இது இன்று தோன்றியது. இத்தோற்றம் மெய்யா? பொய்யா? என்று சோதனை செய்ய விரும்பினல் சி.கே.எஸ்.முதலியார் எழுதிய பெரியபுராண உரை வெளியீட்டை ஒன்றன் மேலொன்றாய் அடுக்கலாம். ஏழடுக்கு மாடிவீடும் இதற்கு ஈடாகுமோ? அவ்வேழு பாகங்களையும் ஒருமுறையேனும் படித்தால் ஏழ்பிறப்பும் இல்லாதொழியும். சேக்கிழார் பண்டு பெரிய புராணத்தை அருளினர். சேக்கிழார் மரபில் வந்த முதலியார் இன்று அதன் உரையாகிய கடற்பரப்பை எவரும் காணாத அளவு கண்டு காட்டினர். மேலுங் காண்பன தோன்றும் வரையில் இவரே பெரியர்.

அன்றும் தில்லையில் நிறைவு விழா நடந்தது. இன்றும் அங்கேயே நிறைவு விழா நடக்கின்றது. அது புராண நிறைவு. இது உரை நிறைவு. அதை நடத்தியவன் காவலன் ஒருவன். இதை நடத்துவோர் ஆவலர் பலர். அதற்கு விழா நடந்தது ஒருமுறை. இதற்கு விழா நடந்தது பலமுறை. அன்று யானைமேல் சேக்கிழாரும், பெரியபுராணமும், வேந்தனும் அவன் வீசிய கவரியும் கண்டார்க்குக் களிப்பூட்டின. இன்றும் அதன் உரையாசிரியரையும், உரைநூலையும் உயர்ந்த யானைமேலேற்றித் தில்லையம்பலத்தை வலம் வந்து திளைக்கின்றது சைவ உலகம். சேக்கிழாரோ தொண்டர்சீர்பரவுவார்; முதலியாரோ அச்சேக்கிழாரது சீரைப் பரவுவார். எல்லாத்தொண்டரையும் பரவிய பெருமை சேக்கிழார்க்கு மிக்க அரிய செயல். முதலியார்க்கோ அச்சேக்கிழார் பெருமானைப் பரவிய ஆற்றலால் மிக எளிதாயிற்று. ஆயினும் மற்றெவர்க்கும் அரிது அரிது காண்.

சைவ சமய வளர்ச்சிக்கு ஒரு புதிய கிளர்ச்சியாகிய இப்பெரிய புராண உரை நிறைவு விழா இனிது நடைபெறுக. விழாவின் அமைப்பாளர் அனைவரும் அருட் செல்வம் அடைக. சிவக்கவிமணி முதலியார் பவக்கடலைத் தாண்டிவிட்டாலும் அன்பர் அன்புக்கடலைத் தாண்டமாட்டாமல் இன்னுமோர் நூற்றாண்டு இனிது இருந்து செந்தமிழ்ச்சொக்கர் திருவருளை உலகெலாம் செழிக்கச் செய்க. வளர்க சைவம். வாழ்க உலகெலாம்.

2. பன்னிருதிருமுறை மன்றத்தார், மதுரை, திருஆலவாய்.

'தோன்றிற் புகழொடு தோன்றுக' என்னும்
ஆன்றோர் மொழியின் அரும்பொருள் உணர்ந்தோய்!
கற்றநூற் பயனெலாம் கற்றைச் சடையன்
நற்றாள் தொழுத நலம்பெறல் என்னும்
உண்மை உணர்ந்த திண்மைக் குணத்தோய்!

'தொண்ட ரொடினி திருந்தமை யாலே
விண்டொ ழிந்தன வல்வினை' என்ற
ஞானசம் பந்தர் தேனெனு மொழியின்
மெய்ம்மைகண் டுணர்ந்த செம்மைசேர் பெரியோய்!
'தொண்டர்க்குத் தொண்டராம் புண்ணியப் பேறுதான்
உண்டுகொ லோகமக்' கென்றெடுத் துரைத்த
அப்பர் பெருமான் அருண்மொழி அறிந்தோய்!
'அடியார்க்கும் அடியேன் யா'னெனப் பாடிய
சுந்தரர் செம்மொழி வந்திசெய் மனத்தோய்!
'அடியரிற் கூட்டிய அதிசயங் கண்டாம்'
எனமன முருகும் எழில்மணி வாசகர்
இன்பகன் மொழியின் இயலறி புலமையோய்!
பத்திச் சுவைநனி சொட்டச் சொட்டப்
பாடிய கவி,மதி சூடிதந் நடிமை,
சேக்கிழார் மொழியே பாக்கியப் பொருளெனத்
தொண்டர் புராணச் சுவைத்தேன் முழுமையும
பருகியும் உண்டும் பன்முறை களிதத
வண்டென நின்னை வாழ்த்தும்; மற்றும்
பெரிய புராணத் துரையமு தத்தை
சார்களுக் களித்த நற்செயல் கண்டு
பாற்கடல் வந்த பதுமைதன் நாயகன்
சுவையமு தத்தைச் சுரர்களுக் களித்த
தேவர் பெருமான் திருமா லேஎன
உனைத்தினம் வழுத்தி உளங்குளிர் வோம்யாம்;
சுப்பிர மணிய ஒப்பிலா மணியே!
தவக்கடல் குளிக்கும் சிவக்கவி மணியே!
பன்னிரு திருமுறை பன்முறை ஒழுக்கமாய்ப்
படித்துப் படித்துத் திருத்திகொள் அருத்தியோய்!
நால்வர் அருளிய நற்பா அமுதம்
ஒவ்வொன் றாக உரைநயம் தெரிக்க
ஒண்மதி சூடிய கண்ணுதல் அருளால்
வண்டமிழ்ப் புலவ! வளர்க நின் ஆயுள்,
வளர்க நின் ஆயுள், வளர்க நின் ஆயுள்;
கடற்கரை எக்கர் மணலினும் பலவாய்
எனமொழிந் தேதிதம் மனமொழி மெய்யால்
தணிகை நாதனைப் பணிகுவம் யாமே.

இயற்றியவர் சிவத்திரு - தணிகைமணி வ. சு. செங்கல்வராய பிள்ளை, M.A.
சென்னை.

3. சைவ இளைஞர்கள், சின்னதாராபுரம்.

திருவெலாம் நிறைந்த செந்தமிழ் நாட்டின்
பெருமையை விளக்கும் பேரூர் என்னும்

நற்பதி தன்னில் ஞாலம் உய்ந்திட
அற்புத நடனம் ஆடிடும் கூத்தன்
எழில்மிகு சேவடிக் கென்றும் நீங்காது
வழிவழி அடியாராய் வந்தநற் குலத்தினர்
கொங்குநன் னாட்டிற் கோவைப் பதிதனில்
தங்கிடும் சுப்பிர மணியத் தோன்றல்
செந்தமிழ் மொழிக்கும் சிவநெறி தனக்கும்
தந்ததோர் நிதிக்குவை தனக்குநே ருண்டோ ?
அவிநாசி யம்மை அருமைத் தமிழும்
புவியா ளமைச்சினை நீத்தார் பெருமையும்
கருவூர்த் தேவரும் கலைச்சேக் கிழாராய
அரும்பெரு நூல்கள் அளித்ததும் அன்றி
அடியார் சீர்எனும் ஆழ்ந்த அகன்ற
முடிவிலாத் தொண்டர் புராணக் கடலைப்
புலமை மத்தாற் புகழுறக் கடைந்து
நலமிகு அமுதென நல்லுரை தந்தார் ;
உச்சிமேல் புலவர் உகந்தினி தேற்ற
நச்சினார்க் கினியர் நல்லிளம் பூரணர்
சேனா வரையரும் பேரா சிரியரும்
தேனும் திருக்குறள் தனியுரை கண்ட
பரிமேல் அழகரும் பலரும் பாரினில்
அரிஅயன் போற்றும் அரனார் அடியார்
பெருமைப் புகழைப் பேசும் நூலாம்
திருமுறைத் தொகைக்குத் தெள்ளுரை கண்டிலர் ;
அக்குறை தீர்க்க அரும்பெரும் தனியுரை
தக்கவே தந்த தனிப்பெரும் புலவர்
சைவம் தழைக்கவும் செந்தமிழ் சிறக்கவும்
மைவளர் கண்டன் மெய்ப்புகழ் பரவவும்
விண்மீன் தொகையினும் நன்மணல் அளவினும்
பன்னாள் வாழ்கெனப் பரவுதும் யாமே.

4. அருள்நெறித் திருக்கூட்டத்தார், ஈரோடு.

தில்லை வாழந்தணரே முதலாகச் சீர்படைத்த
தொல்லையதாந் திருத்தொண்டத் தொகையடியார் பதம்போற்றி ;
ஒல்லையவர் புராணகதை உலகறிய விரித்துரைத்த
செல்வமலி குன்றத்தூர்ச் சேக்கிழா ரடிபோற்றி.

தண்டமிழ் நாட்டின் தவமிகு பெரியோய் !

கல்தோன்றி மண்தோன்றாக் காலத்தே, முன் தோன்றி மூத்தகுடியாகிய சோழ மன்னர்களின் குலத்துங்களாய்த் திகழ்ந்த, அநபாயனென்னும் அருந்தமிழ் மன்னர் மன்னன் அடிபணிந்து வேண்ட, அம்பலவாணன் அடியெடுத்துதவ அடியவர்களின் அருமை பெருமை பாராட்டித் தெய்வப் புலவர் சேக்கிழார் பெருமான் பத்திச்சுவை நனி சொட்டச் சொட்டப் பாடித் "திருத்தொண்டர் புராணம்" என்னும் அருந்தமிழ்

நூலை, 12-நூற்றாண்டில், அநபாயன் முன்னிலையில் ஆயிரக்கால் மண்டபத்தில் அரங்கேற்றி அருளினார். அந்நாள் வாழ்ந்த புலவர் பெருமக்கள் அப்பெரும் நூலின் அருமை பெருமை பாராட்டி இது "சேக்கிழார்க் கொளிதலது தேவர்க்கும் அரிதே" என்று வியந்து போற்றினர். கடந்த 800ஆண்டுகளாகத் தண்டமிழின் மேலாந் தரத்ததாகிய இப் பெரும் நூலைப் படித்துப் பயன்பெற்றோர் பலபேர், படித்துப் பிறர்க்குப் பயன்படப் பகர்ந்தோர் சிலபேர், பகர்ந்தவற்றை உரையிற்காண முயன்றோர் ஓரிருவர், முன்னைத் தவம் இன்மையால் உரைமுற்றக் காணமுடியாது, அப்பெருமக்கள் விட்டுச் சென்றனர் விதியின் கொடுமையால்.

பெரிய புராணம் என்னும் இப் பொன் மாளிகையின் உட்புகுந்து, திருவருட்டுணைகொண்டு அதனுள் அமைந்த எழுபத்திரண்டு பேரறைகளையும் திறந்து எம்போலியரும் கண்டு மகிழும் வண்ணம், அதனுள் பொதிந்து கிடந்த அரும் பொருள்களை எடுத்துக் காட்டி 7 பெரும் பகுதிகளாக உரைகண்ட உத்தமப் புலவோய்! இது "கோலை முதலியார்க் கொளிதலது தேவர்கோவிற்கு மரிதே" என்று ஆனந்தப் பரவசம் அடைகின்றோம். வாழ்க நம் திருத்தொண்டு! வளர்க நம் பெரும் புகழ்!

தவப்புலவோர் போற்றும் சிவக்கவிமணியே!

புன்கவி பாவும் இன்றைய நாளில் சிவக்கவியாம் கருணாம்பிகை பிள்ளைத் தமிழ் பாடியும், மணிவாசகர் வரலாறு கண்டும், எளிய முறையில் அரும் பொருள் தன்னை யாவரும் உணரும் வகையில் விரிவுரை நிகழ்த்தியும், தண்டமிழ் நாட்டைத் தட்டி எழுப்பிச் செந்நெறி வளர்க்கும் செம்மால்! நமக்கு நீடிய ஆயுளும், நிறைந்த புகழும், எல்லாப் பேறும் எளிதில்கூட, அம்பலக்கூத்தன் அருள்பாலிக்க அப் புண்ணியன் பொன்னடி போற்றுகின்றோம்.

5. சாது அச்சுக்கூடத்தினர், சென்னை.

அன்பிற் கனிந்த அரும்பெரு மணியே!

அன்பினர் போற்று மருண்நெறியினையும், கலைஞானம் வல்லாரேத்தும் காவிய நலங்களையும் ஒருங்கமைந்ததாயும், உலகில் தங்கு மிருவகை யிருள்களுள், புறவிருளைப் போக்குகின்ற செங்கதிரவனைப் போன்று உயிர்களுள்ளத்தே விளங்கும் அகவிருளை யழிக்கவல்லதாயுமுள்ள திருத்தொண்டர் புராணம் எனுமருணூல் புராணங்களுள் தலைசிறந்த தென்பது உலகமறிந்த தொன்றாகும். அங்ஙனம் சிறப்புறும் அவ்வருணூலுக்குப் பேருரை காணுந்தகுதி, அந்நூலை யாக்கியோர்பால் இடையறாப் பேரன்பால் நிகழ்வது. எனவே, தங்கட்குத், தெய்வச் சேக்கிழாரடிகள்பால் பதிந்த அன்பும் அவரது கருத்துவிதென்று கசிந்தருகியறியும் பான்மையும் தாங்களருளிய பேருரை வெளிப்படுத்துஞ் சிறப்புடையது. பொருட்சுவையும் சொற்சுவையும் கலந்து பண்டிதரும் பாமரரும் பருகுங் நலம் தங்கள் பேருரை தந்ததெனல் மெய்ம்மையே யாகும்.

எம்மைத் தொண்டாற்ற வமைத்த பெரும!

சென்னையில் உண்மைச் சிவநேயராய் அமைதியும், ஆன்றவறிவும், அன்பும், ஒழுக்கமும் குன்றாச் செல்வர்களாய் விளங்கிய இரு சகோதரர்கள் திருவாரூர் - வி. உலகநாத முதலியார், கலியாணசுந்தர முதலியார் அவர்கள், அமைத்த அச்சகத்துப் பணிசெய்ய அமர்ந்த எங்களை இத் திருத்தொண்டர் புராணப் பேருரையை அச்சிடுவிக்கச், சென்ற பதினெட்டாண்டுகளாக வழிப்படுத்திய தங்கட்கு மிகுதியும்

நன்றியை அறிவித்துக்கொள்கின்றோம். எங்கட்கு அபுத்திபூர்வமாக வந்த இந்தச் சிவபுண்ணிய வினைவிற்கு யாங்கள் செய்யும் கைம்மாறறிகிலோம். ஆயினும் தங்கள் அருட்பேருரையை உலகம் போற்றுவதாக எனும் விழைவுடையோம். எல்லாம் வல்ல பரம்பொருள் தங்கட்கு உடல்வன்மையையும் இகபர நலங்களையும் நிறைந்த ஆயுளையும் அருள்புரிவாருகவென வாழ்த்துகின்றோம்.

6. ஸ்ரீலஸ்ரீ சிவஞானபாலய சுவாமிகள், மயிலம்.

சிவன் எனும் நாமம் தனக்கேயுடைய செம்மேனியெம்மானும், பிறவா யாக்கைப் பெரியோனுமான மாதொரு பாகனுர் தம் பேரருள் திறத்தையும், அவ்வருட்டிறமாம் மூவா வமுதைப்பெற்றுப், போவின்பம்பெற்ற அடியார் வரலாற்றினையும், அறிந்து கொள்ளத் தன்னேரில்லாத உறுதுணையாக இருப்பது தமிழ்ப் பேரிலக்கியமாய பெரிய புராணம் என்னும் திருத்தொண்டர் புராணம் என்பது அறிஞர் கூறுவதொன்று.

இவ்வரும் பெரும் நூற்கு இதுவரை உரைகண்டோர் மிகப் பலராவர்; எனினும், கோவை சட்டநூற் புலமையாளரும், இலக்கிய இலக்கண சாத்திர நூற்பயிற்சி மிக்கவரும், இறைவன் திருவருளைக்கூறும் செய்யுட்களை நவிலுந்தோறும் நெக்கு நெக்கு நகும் நெஞ்சம் உடையவரும், கண்டார்க்குச் சிவம் எனவே தோற்றமளிக்கும் பொலிவுடையவரும் ஆகிய சிவக்கவிமணி, சி. கே. சுப்பிரமணிய முதலியார், B.A., அவர்கள் எழுதி இருக்கும் உரை சாலச் சிறந்ததென்பது பல அறிஞர்களும் ஒப்புக்கொண்டதொன்றாகும்.

இவ்வுரை முந்தையோர் கொள்கையினின்றும் வழுவாமல் இக்காலத்தார் கொள்கையுள் வேண்டியவற்றைத் தழுவிச், சொல் நயம், பொருள் நயம், எளிதில் தோன்றும்படி எழுதப்பட்டுள்ளது. அன்றியும், நூலுள் பொதிந்துள்ள சாத்திரக் கருத்துக்கள் வெளிப்படுத்தப்பட்டிருப்பதோடு, வேண்டும் இடங்களில் இலக்கணக் குறிப்புக்களை எழுதியும், கற்பார்க்குவரும் ஐயம் நீக்கப்படவேண்டிய இடங்களில் பிறநூல்களைக்கொண்டு நீக்கியும் செம்மையான நடையில் எழுதப்பட்டிருப்பது மிகவும் பாராட்டத்தக்கது.

தில்லைக்கூத்தன் திருவருளால் 'உலகெலாம்' என்று எடுத்துக் கொடுக்கப்பட்டு அன்று இவ்வாயிரக்கால் மண்டபத்தே ஆக்கப்பட்ட இவ்வலகிலாக் காப்பியம் இன்று அம்மண்டபத்தேயே செந்நெறி புரக்கும் சிவக்கவி மணியின் பேருரையோடு, சைவம் வளர்க்கும் தவத்தலைவர்களும், அவர்களது பிரதிநிதிகளும், சைவ மெய்யடியார்களும் குழுமியுள்ள பேரவையில் நிறைவேற அருள்புரிந்த தில்லைபாடியின் திருவருளை உள்ளுந்தோறுள்ளம் உருக்கவல்லதாயுள்ளது.

தமிழ்நாடு செய்த தவப்பயனாய்த் தோன்றிய முதலியாரவர்கள், சைவத்திற்கும் தமிழுக்கும் செய்த இத்தொண்டினை அன்பர் பலரும்போற்றிப் புகழ்ந்திருந்து பொய் கெட்டு மெய்யாகி வாழவேண்டும் என்பதோடு, முதலியாரவர்கள் திருவருள் பெற்றுச் சிவமணம் கமழச் சிறப்புறவேண்டும் என்று எமது இட்டலிங்கப்பெருமான் அருளை வேண்டி நிற்கிறோம்.

7. கோவைத் தமிழ்ச் சங்கத்தார், கோவை.

மலர்தலை யுலகில் மன்னிய பதியாம் - கலைநிறை கோவைக் கவின்பெறு நகரினில்
பேரொடு வாழ்ந்த சீருடை வித்வான் - கற்றவர் மணியாம் உற்றநற் குரிசில்
கந்த சாமிப்பேர்ச் சுந்தர வள்ளல் - போத மார்தரு மாதவர் புதல்வர் ;
சீருடைச் சான்றோர் சிவக்கவி மணியெனும் - ஒப்பில தான திப்பிய பட்டம்

அன்பினுற் றாப்பெறும் இன்பநூற் புலவர் ; - செப்பிய புகழ்சேர் சுப்பிர மணிய
அண்ணல் எங்கட்கு அறிவுசொல் குரவர் - விருப்பொடு பேரூர் விமலனை யென்றும்
மனமொழி மெய்யால் வழிபடும் ஐயர் ; - சிவபூ சையினைச் செம்மையா யாற்றி
நித்தமும் திருமுறை பத்தியால் ஓதும் - பண்புடை யன்பர் அன்புடைச் சிலர் ;
எமக்கு மாக்கதை யினிதெடுத் தோதிய - தெய்வச் சேக்கிழார் மெய்யடி மறவார் ;
மன்பதை யோர்கள் இன்புடன் போற்றும் - பெரிய புராண விரிவுரை வகுத்து
அரிய தொண்டினை யாற்றிய அண்ணல் ; - அண்மையிற் றில்லை யரச சபைதனில்
அப்பே ருரையின் அழகிய நிறைவை - தில்லைவா ழந்தணர் திறமுடன் நடத்தி
எல்லையில் சிறப்பு இயற்றின ராங்கே ; - எங்கள் செந்தமிழ்ச் சங்கத் தலைமை
பன்னாள் பூண்டு பணிசெய் பெரியோர் - அவர்தாம்
மங்கை பங்கன் பொங்கரு ளாலே - எல்லா நலனும் எழிலுடன் பெற்று
பல்லாண்டு வாழப் பரவுதும் யாமே.

8. வித்துவான் - S. அருணசலம் பிள்ளை, வடகோவை.

சீரெலாம் நிறைந்த செந்தமிழ் நாட்டின் - பேரெலாம் பெற்ற பெரியநற் பதியாம்
கொங்கிற் சிறந்த கோவை நகரினில் - கல்வியா லுயர்ந்த கந்தசாமி செய்
அருந்தவக் தன்னால் அவனியிற் றோன்றிய-சிவக்கவி மணியெனும் சீர்கொள் செம்மல்
ஒப்பிலா மணியாம் சுப்பிர மணிய ! - வழிவழி பேரூர்ப் பெம்மான் றன்னை
வழிபடும் குலத்தில் வந்துதித் தோனே!-விருந்தினர்ப் பேணும் அருங்குணம் படைத்த
மாதர் திலகம் மீனாட்சி யம்மையை - மாண்புடன் மணந்த மேன்மைபெற் றோனே !
நல்லுரை பெறவும் நல்வழி காணவும்-முன்னேன் அனுப்பினன் முறையால் நின்பால்
சிறியேன் முன்னாள் செய்தவந் தன்னால் - அரிதாய்ப் பெற்ற அருளா சானே !
தெய்வத் தமிழாஞ் சைவத் திருமுறை - தினமும் ஓதும் திறமுடை யோனே !
அக்கமும் கண்டியும் அழகுடை நீறும் - எக்கா லு மணிந்து எழிலுடன் விளங்கும்
தக்கார் புகழும் தவமுடை யோனே ! - பெரிய புராணப் பேருரை யதனை
யாவரும் போற்றும் இயல்பொடு எழுதி — தில்லையம் பதியிலும் திருப்பே ரூரிலும்
எல்லையில் சிறப்புடன் இனிதாங் கேற்றிய-சீருடைச்செயல்கள்செப்பவுந்தகையவோ!
வளமெலாம் பெற்ற வண்சிறப் புடனே—வாழ்கபல் லாண்டு வாழ்கபல் லாண்டென
எல்லாம் வல்ல இறைவ னடியினை - என்றும் ஏத்தி யிறைஞ்சுவன் யானே ;
ஞால நின்புக ழேமிக வேண்டுந்தென் - ஆல வாயி லுறையுமெம் மாதியே.

9. திருமந்திரமணி - துடிசைகிழார் - அ. சிதம்பரனுர், கோயமுத்தூர்.

ஒன்பது நூற்றாண்டுகளுக்கு முன் தமிழ்நாட்டில் சென்னி - அபயன் - அன பாயன் - பண்டிதச்சோழன் — உத்தமச்சோழன் என்ற பெயர்களுடைய சோழ அரசர்க்கரசன் இமசேதுபரியந்தம் ஆண்டுகொண்டிருந்தபொழுது, அவரிடம் அமைச்சராக இருந்த அருண்மொழித்தேவர் என்ற சேக்கிழார் பெருமான், அரசன் கேட்டுக்கொண்டபடி, திருவருட்டுணைகொண்டு, பெரிய புராணம் என்ற திருத் தொண்டர் வரலாறு என்னும் நூலைப்பாடி, ஒரு சித்திரை ஆதிரைநாள் தொடங்கி, மறு சித்திரை ஆதிரைநாள்வரை அப்புராணச் செய்யுள்களுக்குத் தில்லை ஆயிரங்கால் மண்டபத்தில் விரிவுரை நிகழ்த்தினர் என்று அறிகிறோம்.

அத்தொண்டர் வரலாற்றுநூலைப் பாடுவதற்கு அவருக்கு ஆதாரமாக இருந்த நூல்கள், சுந்தரமூர்த்தி சுவாமிகளுடைய திருத்தொண்டத்தொகையும், நம்பி யாண்டார் நம்பிகளுடைய திருவந்தாதியும், மூவர் தேவாரங்களும், திருமூலர்

திருமந்திரமும், காரைக்கால் அம்மையார் பதிகங்களும், கழறிற்றறிவார் செய்யுள் களும், ஐயடிகள் வெண்பாக்களும், கல்வெட்டு செப்பேட்டுச் சாசனங்களும் பிறவுமாம்.

சேக்கிழார் பெருமான் விரிவுரை நிகழ்த்தும்போது, அன்று அங்குக் குழுமியிருந்த அடியார்கள் எப்படி இருந்தார்கள், என்ன செய்துகொண்டிருந்தார் என்பதனை,

" மருவுதிரு முறைசேர்ப்பார் எழுதுவார் இருந்து
வாசிப்பார் பொருள் உரைப்பார் கேட்டிருப்பார் மகிழ்ந்து
சிரமசைத்துக் கொண்டாடிக் குதகலிப்பார் சிரிப்பார்
தேனிப்பார் குன்றைமுனி சேக்கிழார் செய்த
அரியதவத் தினைநினைப்பார் அம்பலவர் முன்னாள்
அடியெடுத்துக் கொடுக்கஇவர் பாடினர்என் றுரைப்பார்
பெரியபுரா ணங்கேட்ட வளவர்பிரான் செவிக்குப்
பிடிக்குமோஇனிச்சிந்தா மணிப்புரட்டென் றுரைப்பார் "

என்று உமாபதி சிவாசாரிய சுவாமிகள் கூறுவதைப் படித்து இன்புறத்தக்கது. அந்த விரிவுரை நமக்கு இப்போது கிடைத்திலது.

சேக்கிழார் பெருமான் தாம்பாடிய பெரிய புராணத்தில்

" நேச நிறைந்த உள்ளத்தால் நீல நிறைந்த மணிகண்டத்து
ஈச னடியார் பெருமையினை எல்லாவுயிரும் தொழஎடுத்து
தேச முய்ய திருத்தொண்டத் தொகைமுன் பணித்த திருவாளன்
வாச மலர்மென் கழல்வணங்க வந்த பிறப்பை வணங்குவாம் "

என்று கூறுகிறார். அதாவது, பிறவி எடுப்பது தீது என்றும், ஆனால், அப்படி எடுத்த பிறவிக்குத் திருத்தொண்டத் தொகையை விரித்துப்பாடும் புண்ணியம் கிட்டியதால், தம்முடைய பிறப்புப் பயனுடையதாயிற்று என்றும், அதனால் அத்தகைய பிறப்புக்குத் தம் வணக்கம் உரித்தாகுக என்றும் கூறுவது படித்து மகிழத்தக்கது.

சேக்கிழார் காலத்தில் அவர் செய்த விரிவுரையினை நாம் கேட்கும் புண்ணியம் பெற்றிலேம். ஆயினும் அவ்விரிவுரையினை ஒருவாறு ஒத்த நம் சிவக்கவிமணி செய்த பெரிய புராண விரிவுரையினையாவது கேட்கும் புண்ணியம் நாம் இன்று அதே ஆயிரக்கால் மண்டபத்தில் ஆதிரை நாளில் பெற்றோம். அதனால் அவருடைய பிறவியும் நம்முடைய பிறவியும் பயனுடைத்தாயிற்று.

பெரிய புராண விரிவுரை நமக்கு கிட்டியதோடு தில்லைக்கூத்தப் பெருமானுடைய நடனக் காட்சியும் இன்று நமக்குக் கிடைத்தது.

" குனித்த புருவமும் கொவ்வைச்செவ்வாயிற் குமிண்சிரிப்பும்
பனித்த சடையும் பவளம்போல் மேனியிற் பால்வெண்ணீறும்
இனித்த முடைய எடுத்தபொற் பாதமும் காணப்பெற்றால்
மனித்தப் பிறவியும் வேண்டுவதே இந்த மாநிலத்தே "

என்ற அப்பர் சுவாமிகளுடைய வாக்குப்படி நாம் எடுத்த மனிதப் பிறவியின்பயன் (இவ்விரண்டு காரணங்களாலும்) நமக்குக் கிட்டுவதாயிற்று.

ஆதலின், இத்தகைய அரிய சமயத்தை நமக்கு வாய்க்கும்படி செய்த திரு. சிவக்கவிமணி சி. கே. சுப்பிரமணிய முதலியார் அவர்கள் நோயற்ற வாழ்க்கையுடன் குறைவற்ற பொருள்—அருள்—செல்வங்களுடன் நீடூழி வாழ்ந்து, அடியார் பெருமையினை விளக்கிக்கொண்டிருக்கத், தில்லைவாழ் நடராசப் பெருமானை இறைஞ்சுகின்றோம்.

அவர் செய்த பெரிய புராண விரிவுரையானது உலகின் கண் எங்கும் பரவி, இல்லங்கடோறும், புத்தக நிலயங்கடோறும், வாசகசாலைகடோறும் மிளிர்ந்து எல்லோருக்கும் அவரவர் விரும்பும் பலனை அளிக்குமாறு இறைவனை வேண்டு கின்றோம்.

" வாழ்க அந்தணர் வானவர் ஆனினம் - வீழ்க தண்புனல் வேந்தனும் ஓங்குக
ஆழ்க தீயது எல்லாம் அரனாமமே, சூழ்க வையக முந்துயர் தீர்கவே "

10. தமிழ்நாடு அருள் நெறித் திருக்கூட்டத்தார், குன்றக்குடி.

உலகமெலா முணர்ந்தோதற் கரியவனாய் அம்பலத்தே யுவப்பி னாடும் (1)
நிலவணியு நிமலனார் திருவடிக்கீழ்ப் புகுத்துநெறி நெஞ்சால் வாக்கால்
இலகுடலால் என்னான்றும் தொண்டுசெய முனைதலிலே எளிதா யீசன்
நிலவுதிரு வருள்கூட்டி வாழ்விக்கும் நம்சைவ நெறிதா னம்மா !

பத்திரசங் கனிந்தொழுகும் ; அருள்நெறியின் மணம்வீசும் : பயின்றோர் தங்கள் (2)
சித்தமல மறுவித்துச் சிவமாக்கும் ; ஒருகவிதை செப்புங் காலை
நத்துகண்ணீர் மழைபொழியும் ; கரணமெலா முடனுருகும் ; நாடுந் தொண்டர்
பத்திமையாற் புரிதொழிலின் வளங்காட்டும் சேக்கிழார் பாடல் மாதோ !

அருள்மொழியாந் தேவர்புகல் மாக்கதையின் உரைகண்டார் அகில மேத்தும் (3)
திருவண்ணா மலையமரா தீனத்தார் ஆறுமுகத் தம்பி ரானார் ;
மருவுமவர் உரைபுலவர் குழுப்போற்ற மாண்பினதால் ; மற்றிந் நாளில்
திருவளருங் கோவைநகர்ச் சிவக்கவியா மணியுமுரை செய்தார் நன்றே.

சாத்திரநூல் தோத்திரநூற் கரைகண்டு கல்லெழுத்துந் தகவி னாய்ந்தே (4)
எத்துவா லாற்றுநூல் இனிதாய்ந்து " நூலாசான் இங்ஙன் தோன்றி
ஆத்தவுரை பகர்ந்தருளு மற்புதமே " எனப்பலரும் இயம்ப ஆக்கும்
கேத்திரமாஞ் சுப்பிரமண்ய கேசன்விரி வுரையுலகில் நிகழ்க மாதோ !

கந்தனருள் தவழ்குன்றக் குடியடிகள் தலைமையினிற் கலந்து நாட்டிற் (5)
சந்ததமும் அருள்நெறியைப் பரப்பிவரும் கூட்டத்தேம் சார்ந்து வாழ்த்தும்
இந்நாலம் அடைந்திட்டேம் ; எதிர்காலச் சிறப்புணர்ந்தேம் : இனிதே யன்பன்
எந்தை யருளாற் சைவ நெறிபரப்பித் தமிழ்மணியாய் இனிது வாழி !

11. ஸ்ரீ ஆறுமுகநாவலர் சைவப்பிரகாச வித்தியாசாலை சித்தாந்தப்
புலவர் கல்லூரி மாணுக்கர்கள், சிதம்பரம்.

உம்பருரை தந்திமுக னோயிலோன் சங்கரிசேர்
நம்பிசிவ சங்கரனை நாடு.

மணிகொண்ட நெடுநேமி வலயமுழு தும்புகழு - மாதொண்டை நாடு தன்னில்
மருவிவளர் குன்றைவே ளாளர்தங் குடிமரபில் - வந்தவ தரித்த மைந்தன்
வன்றொண்ட னார்தொகையு நம்பியாண் டார்நம்பி - வகையது மறிந்த மேலோன்
வளவனன பாயனது சமணநூன் மோகத்தை - வாட்டி யழித்த மெய்யன்
கனிகொண்ட மூவர்தே வாரமும் வாதவூர்க் - கனிரசமு முண்ட வாயோன்
கருவூர்க் கல்லாட ராதியோர் பனுவல்கள் - களிக்கத் தெவிட்ட வுண்டோன்
கருவழி புகாதமா மூலர்திரு மந்திரம் - கண்டுகண் டுள்ள மகிழ்வோன்
கருணைகுடி கொண்டநற் றொண்டர்சீர் பாவுவான் - கருதுமன மிகவுடைய வன்

பணிகொண்ட வடியார்க ளறுபதின் மூவர்நூல் - பத்தியொடு தந்த சீலன்
பற்பமுங் கண்டிபஞ் சாக்கரம் கொண்டவன் - பரமனைப் பாடு நாவன்
பரிப்பவர் மனத்தினைப் பங்குகொள் சேக்கிழான் - பகர்பெரிய நூலி னுக்குப்
பாரித்த வுரையினைப் பண்பொடு பகர்ந்தவன் - பாக்கியம் பெருத்த பூமான்
அணிகொண்ட கோவைநகர் திணிகொண்ட நல்லனு - மாண்மைமிகு சுப்ர மணிய
னனுதினமு மம்பலக் கூத்தனைப் பணிகின்ற - வருளுருவ மான படியா
லாறுமுக னைங்கர னீன்றவ னருளினு - லன்புதயை யோடு வாழி
யகலகல் லுரைதரு நூலெலா மாக்கியே - யகிலமெங் கணும்வா ழியே.

12. திருக்குடந்தைச் சிவனடியார் திருக்கூட்டத்தினர், கும்பகோணம்.

உலகெலா முணர்ந்தினி தோதற் கரியவன் - நிலவு லாவிய நீர்மலி வேணியன்
அலகில் சோதிய னம்பலத் தாடுவான் - மலர்சி லம்படி வாழ்த்தி வணங்கியெம்
தெய்வச் சேக்கிழார் அருளிய தொண்டர்-புராணமாம் பெரிய புராணமாக் கதைக்குப்
பெரியோர் பலர்சொல் லுரைபல விருக்கப் - பொருவரு முரைநனி பொருந்தக்
[கண்டோன்
கோவைப் பதியினன் மூவர் ஓதிய - திருநெறித் தமிழைப் பெருநெறிக் குரித்தாப்
பாம்பரை பயிலும் அரும்பெறற் குரிசில்-தொண்டை மண்டல வேளாண் குலத்துயர்
தொண்டருட் டூய தொண்டினை யுடையோன் தண்டமிழ்ப் புலவன் தாவறு வழக்கினுக்
கெண்டகு மறிஞன் மண்டுபே ரன்பன் ·'மகன்றந்தைக் காற்று முதவி யிவன்றந்தை
என்னோற் றான்கொ லெ'னத்திரு வள்ளுவர் - சொல்லிய குறட்கோ ரிலக்கெனத்
[தோன்றியோன்
கந்த சாமி முதலியார் தவத்தினில் - வந்த சிவக்கவி மணியென வாழ்வோன்
பிறந்து மொழிபயின்ற பின்னெலாம் பிஞ்ஞகன்-தூயவெண் ணீறுங் கண்மணிவடமும்
மேயவஞ்செழுத்துமே பொருளெனக் கொண்டோன்-நாயகன் சேவடி தைவருசிந்தை
னைந்துனைந் துருகப் பைந்தமிழ்ப் பதிக-வாய்மையை நாளும் ஆய்ந்துரை விரிப்போன்
பன்னிரு திருமுறை முழுவது மிடையறு-தின்னுயிர்க் குறுதியா வெண்ணியெண்ணி
காற்பத் திரண்டின் மேலுமெண் ணுடைத்தா - ஏற்பப் பத்தியின் இயம்பிய நியமம்
கொண்டுறு பெரியோன் கோதிலாத் தவத்தோன் - புறத்தினு மகத்தினும் புண்ணி
[யன் பூசையும்
திறம்பாச் சீரடி யாரடிப் பூசையும் - வருகுரு பூசையும் மகிழ்ந்தினி தாற்றும்
திப்பிய ஞானச் சுப்பிர மணியப் - பெயரோன் வாழிய வாழிய பெரிதே.

13. திரு. சிவசங்கர-சின்னையா முதலியார், சிதம்பரம்.

பொன்னி புரக்குங் கோவைநகர்ப் புனிதன் கந்த சாமிமகிழ்
மன்னு மமரா வதிவனத்தான் மல்குங் கருவூ ரெனும்பதியின்
கன்னி வடிவாம் பாளென்பாள் கருவிற் றிருவாய்ப் பிறந்தவனே
சென்னி வளவ னனபாயன் சிவனைக் காணற் குறுநூலால். (1)

இம்மா நிலத்தி லுள்ளோர்க ளிருமைப் பேறும் பெறுமாறு
செம்மா னேந்தி செப்புவழிச் செய்தற் கரிய வுரைதந்தாய்
பெம்மான் பூசை யறுகாலும் பேணிப் புரியுந் தில்லைதனி
லெம்மா னுலக மூர்த்திமடத் தெழிலார் தீக்கை பெற்றவனே. (2)

கன்னித் தமிழு மாங்கிலமும் கற்ருய் தக்க விடந்தனிலே
பன்னிப் பேசும் வழக்கறிஞர் பதவி பெற்ருய் பண்போடு
துன்னு மதிசேர் மீனுக்ஷி தூய கற்பின் சோதரிகள்
மன்ன மணமுஞ் செய்தனையால் மன்றம் பேசு மகத்துவனே. (3)

சாலை சங்க மூர்த்தொண்டுஞ் சாலப் புரிந்தாய் சற்சனனே
நூலைப் போற்றிப் பாட்டுரையும் நுணுகி யாய்ந்தே வெளியிட்டாய்
மேலைப் பேரூர்த் திருக்கோயில் மேவப் பணியும் புரிந்திட்டாய்
காலை மாலை யெப்போதுங் கங்கா தானை யர்ச்சிப்போய். (4)

பெரிய வுரையும் பெரும்புகழும் பேச்சும் வீச்சு முடையவனே
உரிய துதிகொள் தேவார முண்மை விளம்புஞ் சித்தாந்தம்
அரிய பொருள்சேர் வாசகமு மமையுஞ் சமய மமர்ந்தனையால்
துரியா தீதப் பரவெளியிற் ரேன்று மொளியைக் காண்பவனே. (5)

உடலின் மென்மை யுற்றிடினும் முள்ளத் திண்மைப் பலமுடையோய்
கடலிற் பெரிய ஞாலத்துங் கவின்சேர் மலையிற் பெரிதுமென
அடங்கொள் புலவ ரூர்க்குமொழி காண எடுத்துக் காட்டனுய்
இடங்கொள் ஞான திரவியமே தீர்க்க ஆயுள் பெறவாழி. (6)

சுப்பிர மணிய போற்றி சொற்பொருட் பெருக்கே போற்றி
செப்பிய குன்றத் தூரான் செய்யுளை யுரையி னேடே
யிப்புவி யளித்து மேன்மை யெய்திடு மிறையே போற்றி
தப்பிலா வுலக நாதன் றனயனின் றனய போற்றி. (7)

பெரிய புராண உரைச்சிறப்பு

உலகெலா மெனவெடுத்த திருவாக்கா லுரைத்தமொழி யுணர்விற் கொண்டே
மலரகித ரானசிவ னடியார்க ளேழொன்பான் மன்னு மேன்மை
நிலவுதிருத் தொண்டரவர் புராணகதை நினைந்தெழுது நிமலன் குன்றை
குலவுசேக் கிழான்பின்னர்க் கோவைநகர்த தோன்றியுரை குயிற்றி ஞனே (8)

திருவிருக்குங் கோவைநகர்ச் செல்வன் சுப் பிரமணியன்
மருவிருக்குந் திருத்தொண்டர் மான்மியஞ்செய் யுரைநூலை
யுருவிருக்கு முளத்திடைநா முன்னுதொறுந் தேனூறக்
கருவிருக்கு மிடமகற்றிக் கனிவுள்ள மாக்கிடுமே. (9)

வாழிய சீறு மக்கம் வள்ளலைந் தெழுத்தும் வாழி
வாழியமூவர் பாடல் வாசகர் தொண்டர் நூலும்
வாழிசித் தாந்த போதம் வாழிய சைவ ரெல்லாம்
வாழிசுப் பிரம ணியனின் னுரைவளம் வாழி வாழி. (10)

14. திரு. P.L. நாகராஜ ஓதுவார், பட்டீசுரர் தேவஸ்தானம், பேரூர்-கோவை.

செந்தமிழன்பும் சிவநேயமும் நிறையப்பெற்ற பெரியீர்!

தாங்கள் மேலைச்சிதம்பரமாகிய எங்கள் பேரூர் பட்டிப் பெருமானுக்கு செய்து வரும் திருப்பணி தங்கள் அருட் டந்தையினும் சிறந்தது. சித்திரைப் பெருவிழாவாகிய திருத்தேர்விழாவை அரசம்பலவாணருக்குச் செய்வதோடு அதிகார நந்தி சேவை திரு முறைவிழா, சண்டேசுரர்விழா, முதலியன நிகழச்செய்வது மிகப் போற்றற்குரியது.

பட்டிப்பெருமானுக்குச் செய்யும்மிகச் சிறந்த விழாவாகிய நாற்று நடவு விழாவை தக்க முறையில் தாங்கள் செய்விப்பது மெய்யன்பர்களுக்கு மிக மகிழ்ச்சியை ஊட்டுவதாகும்.

பங்குனிப் பெருவிழாவில் பெரும் பங்குகொண்டு பத்துநாட்களிலும் தேவார பாராயணம் அடியார்க்கமுதளித்தலும், குருபூசைகளும், மிகச்சிறப்பாகக் கண்ணப்ப நாயனர், சேக்கிழார் நாயனர் குருபூசை முதலியன செய்வித்தல் தங்கள் சிவப்பெருந் தொண்டையும் பேருபகாரத்தையும் காட்டும் சான்றாகும். பங்குனியில் நடராஜப் பெருமான் எழுந்தருளுதற்கு ஆயிரம் ரூபாய்க்கு மேற்பட்ட செலவில் செய்துள்ள ஊர்தித் திருப்பணியானது பேரூர் மெய்யன்பர்களுக்கும் மற்றையோர்களுக்கும் தங்கள் பெரியபுராணப் பேருரை கண்டு அகமகிழ்வதுபோல் மகிழ்தற்குரியது. இவ்வாறாகச் சிவநெறித் தொண்டும், தெய்வமணம் கமழும் திருமுறைகளுக்கு அரியபேருரைகளும் வழங்கும் தாங்கள் தில்லைக்கூத்தன் திருவருளால் எல்லா நலன்களும் பெற்று இனிதுவாழ எல்லாம்வல்ல இறைவனை வாழ்த்தி வணங்குகின்றேன்.

15. சேக்கிழார் கழகத்தினேம், தூத்துக்குடி

''மதிவளர் சடைமுடி மன்றுளாரை முன்-துதிசெயும் நாயன்மார் தூய சொன்மலர் பொதிநலன் நுகர்தரு புனிதர் பேரவை-விதிமுறை புலரினில் விளங்கி வெல்கவே.''

''வேத நெறி தழைத்தோங்க மிகு சைவத்துறை விளங்க'' வந்த திருஞான சம்பந்தர் முதலிய ஞானகுரவர் நால்வர் நெறி நின்று வளர்ந்த சைவ பரம்பரையின் தவப் பயனாகத் தோன்றிய சிவஞானச் செல்வர் சேக்கிழார் பெருமான். அவர் அருளிய திருத்தொண்டர் புராணம், சமய ஞானக் கருவூலமாகவும், சமய வொழுக்கப் பொருள் நிலையமாகவும், உண்மை யுணர்வின் வரலாற்று நூலாகவும் திகழ்வது உலகறிந்த உண்மை. அஃது 'உலகெலாம்' என்னும் உயர்தனித் திருவருட் செம்மொழியை இறைவன் முதன் மொழியாக அருளிய பேராக்கமுடையது. சிவ ஞானப் பேருட் செந்நெறி இலக்கணம் காட்டும் பன்னிரண்டாம் சூத்திரத்துக்குப் பரந்த பேரிலக்கியமாகும் பண்புடையது.

இன்னோரன்ன திருவருட் சிறப்பால் பன்னிரண்டாம் திரு முறையாகச் சைவ வுலகுபரவும் இப் பொருள் நூல் தோன்றி ஒன்பது நூற்றாண்டுகளாகியும் இதற்கொரு பேருரை தோன்றாத நிலையினை மாற்றி, இன்று ஓர் பெறற்கு அரும் பேருரை தோற்றுவித்த பெருமையால் கோவை, சைவத்திரு, சிவக்கவிமணி சி. கே. சுப்பிரமணிய முதலியார் அவர்கள் பிறங்குகின்றார்கள். திரு. முதலியார் அவர்களின் சைவமரபும் மெய்ந்நிலை யொழுக்கமும் பரந்த புலமையும் சிறந்த உள்ளமும் இப் பேருரை வெளியீட்டில் ஒன்றியுயர்ந்து விளங்குகின்றன.

பண்டு சோழமன்னர் ஆட்சியில் சேக்கிழார் பெருமான் தமது அருணூலைத் தில்லை ஆயிரக்கால் மண்டபத்தில் அரங்கேற்றியது போல இன்று அச் சேக்கிழார் வழிவந்த சிவக்கவிமணி அவர்களால் அதே அருணூலின் பேருரை, திருப்பனந்தாள் காசிமடத்துத் தலைவர்: ஸ்ரீலஸ்ரீ அருணந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்களின் அருளாட்சியில் தில்லை, ஆயிரக்கால் மண்டபத்தில் அரங்கேறுவது சைவமும் தமிழும் செய்த தவப்பேறாகும்.

இந்த இனிய சைவப் பெருஞ் செல்வத்தை அரங்கேற்றி உலகுக்கு நல்கும் கோவை சிவத்திரு. சிவக்கவிமணி சி. கே. சுப்பிரமணிய முதலியார் அவர்கட்குத்

தில்லை மன்றில் வாழ் எல்லையில் தனிப் பெருங் கூத்தன் மல்லல் பேரருள் இன்பமும் மன்னிய வாழ்வும் பெருக நல்குக என அப்பெருமான் திருவடிகளைப் பரவுகின்றனம்.

வாழ்க சைவம் ! வாழ்க சீரடியார் ! வளர்க சிவஞானம் !

## 16. சத்வித்யா சன்மார்க்க சங்கத்தார், திருப்பேரூர்.

அறுசீர்விருத்தம்.

சிவமேறுந் திருத்தொண்டர் புராணமதைச் சேக்கிழார் செய்து சோழன்
தவமேறுஞ் சைவநெறி கொள்ளவரங் கேற்றல்தில்லைத் தலத்தி லென்பார்
பவமேறும் நாத்திகராய்ப் பலர்வாழு மிந்நாளப் பண்பார் நூற்கு
நவமேறும் பொருளெவரும் உணரவிரித் தெழுதி யின்று நல்கினரே. 1

பேரூர்வாழ் சாந்தலிங்கப் பெருமான்றன் குருபூசைப் பெருவி ழாவின்
சீரூர்சத் வித்யாசன் மார்க்கசங்கப் பேரவையிற் சேர்ந்து பல்லோர்
காரூர்சொற் பொழிவாற்றுங் கடமையினிற் பிறம்பாத நலமிக் கேற்றோன்
ஏரூர்பத் தியிலினையான் பாரூர்மே னியின்முதிய பருவத் தோனே. 2

கற்றவர்சொல் கோவைநகர் மருவுசிவக் கவிமணியாக் கழறும் சீலன்
பெற்றமுகைப் பவனருட்சீர் பெற்றவன் சுப்பிரமணியப் பேரார் மேலோன்
உற்றபெரு வழக்கறிஞன் சிவனடிக்கண் மாறாத உண்மை யன்போன்
நற்றவர்வாழ் பேரூர்ப்பட் டீசனருள் கொண்டுபல நாளும் வாழ்க ! 3

## 17. சைவ சித்தாந்த சபையினேம், தூத்துக்குடி.

1. உலகெலாம் போற்றுஞ் சைவ உன்னத மாண்பு தேற்ற
ஓங்கிய நூல்கள் பன்னீர் உயர்திரு முறைகள் தம்மில்
உலகுய்ய மன்று ளாடும் ஒப்பிலா னந்தக் கூத்தர்
உருகியுள் கனிந்து போற்றும் உத்தமச் சேக்கி ழார்க்கு
“ உலகெலாம் ” என்றே விண்ணின் றுணர்த்திய உரையின் மேன்மை
உளங்கொண்டு தொன்மை அன்பர் ஊர்பெயர் வரலா றெல்லாம்
உலகினர்க் கனபா யன்பால் உவந்தளித் துரைத்த குன்றை
ஒருதவச் சீலர் உள்ளம் உணர்ந்துரை வளயே செய்தார்.

2. கோவையில் முதன்மை சான்ற குடிப்பிறந் துற்ற பண்பில்
கோதறக் கலைகள் தேர்ந்து கூடிய தவத்தாற் சைவம்
மேவிநற் சீலம் வாய்மை மிளிர்தரும் உளத்தாற் பண்டை
மெய்யடி யார்கள் மேன்மை விளக்கிடும் சேக்கி ழார்நூல்
பாவியன் வளமும் சீரார் பயன்றரு விரிவும் பேணிப்
பண்புறத் தொகுத்தே யச்சில் பலப்படப் பொறித்தே யாரும்
காவிய நயமும் மன்னும் கருத்துரைப் பொலிவுந் தேறக்
காதலா மலக மென்னக் காசினிக் கீந்தார் பேரார்.

3. சி வே யெல் என்றே யாரும் செப்பிடும் சுப்ர மண்யச்
சீலராம் சிந்தை செய்கை சிவனதே யாக நாளும்
மகேசன் பூசை யாற்றி மானிடப் பிறப்பின் பெற்றி
வழுவற அவன்ருள் போற்றல் வாழ்வாங்கு வாழ லென்னப்

புகாமனம் வினையைப் பற்றிப் பொறிவழி யுழலு மென்றும்
புனிதமாம் வாழ்வு ஈசன் பொற்பினை நாளும் ஓதல்
சிகாரமே முதலா மைந்தைச் சிரவணம் செய்த லென்றும்
தெரிக்குநூல் லுண்மை தன்பால் திகழ்தர வாழுஞ் செல்வர்.

4. சிவன்கழல் போற்றி நிற்கும் சிந்தையின் நிறைவே செல்வம்
சிறிதுமத் தொண்டில் முட்டுச் சேருமேல் வாழ்வை நீக்கல்
உவப்பெனக் கொண்டுநின்ற உத்தமர் காதை நம்மால்
உரம்பெற வுணரு மாறு உரைகண்டு தந்த மேன்மைத்
தவந்திகழ் சுப்ர மண்ய தகைமைசால் தோன்றற் கிந்தத்
தராதலம் செய்கைம் மாறு சாற்றிடில் அன்னார் செய்த
சிவப்பணிச் சீரைப் போற்றித் திருத்தொண்டில் திளைத்து நின்று
சேக்கிழார் பாதம் பேணும் சீலராய் வாழ்வ தாகும்.

5. பொருந்தவே வழக்கு ரைக்கும் புலமைசால் பட்டம் பெற்றும்
புன்மையென் றதனை நீத்துப் புனிதனைப் போற்று வாய்மை
திருந்திய சேவை கொண்ட சிவக்கவி மணியாம் சீலர்
திருமந்திர நகரத் தெங்கள் சித்தாந்த சபைக்கு முன்னம்
பொருந்தவே தலைமை தாங்கிப் புகழுரை மூன்றங் கீந்த
புரையறு காட்சி மிக்கார் பொங்கியூற் றெழுதண் ணீரால்
அருண்மொழித் தேவர்ப் பேணி அரன்கழற் கன்பு தேங்கும்
அழகிய வுள்ளத் தாரை அனைவரும் போற்றல் சீராம்.

6. சிதம்பரத் தலத்தில் முன்னாள் சேக்கிழார் மன்னர்க் காநூல்
செய்தரங் கேற்று வித்த சிறப்புறு மண்ட பத்தே
இதம்பெற உரைகண் டீந்த இற்றைநாள் சேக்கி ழார்தம்
இன்னுரை யரங்கேற் றம்மிங் கெய்திடப் பத்தர் சூழ்ந்து
துதிபெறு மந்நூற் பேரார் துலங்குநல் விழாவின் வாய்ப்பைச்
சுகிர்தமாய்த் திளைக்கக் கண்டோம் சுந்தர நடரா சர்தாள்
துதித்துநின் றன்னார் வாழ்வின் றூய்மையாற் பல்லாண் டிங்கண்
சுகம்பெற வாழ்க வென்றே சொல்லுவோ முளங் கனிந்தே.

நேரிசை வெண்பா.

சீரோங்கு தில்லைத் திருத்தலத் தாயிரக்கால் - ஏரோங்கு மண்டபத்தில் ஏற்றசய-சே
சித்திரையீர் பத்தைந்தில் சீரார் உரைவிழாப்-பத்தர்குழு வாற்றியதிப் பார். [ரோங்கு

குறிப்பு :— பாட்டு 5-ல் மூன்றாண்டென்பது எங்கள் சபையின் 39, 47, 59-ஆம் ஆண்டு நிறைவு விழாக்களில் தலைமை தாங்கினமையைக் குறிக்கும்.

18. திரு. சி. இராமநாத முதலியார், சீகாழி.

உலகினிற் சைவப் பயிரது மக்கள் உளமெனும் விளைவயற் புலத்தே
இலகுறச் செழிக்கக் குன்றையூர் முகில்பெய் எழில்திருத் தொண்டர்தம் புராண
நலமதை நாளும் அறிந்ததை ஆய்ந்து நம்மனோர்க் குரைவிருந் தளித்த
புலமைசால் கோவைச் சுப்பிர மணிய புரவலற் போற்றிடார் யாரே. க

சேவைக்கா வலன்செய் தொண்டர்மாக் கதையே செவ்விதின் வேண்டிய இன்பம்
யாவையும் ஒருங்கே அளிக்குமென் பதையீண் டெழுத்திலும் பேச்சிலுந் தெரித்துச்

சேவையே புரிவோன் யாவனே என்னில் செக்கலி மணியெனப் புகழும்
கோவையூர் கிழாராம் சுப்பிர மணியக் குரிசிலாம் சைவசா லவனே. உ

தெய்வகல் லருளால் தொண்டமண் டலவேள் சேக்கிழார் அருளுமாக் கதைக்கோர்
செய்வதற் கரிய பேருரை யதனைச் சீர்பெறத் தந்ததால் பெரும!
உய்வகைச் செந்நெற் பயிர்தனை வளர்த்தே உலகுயப் பிறந்ததும் குடிக்குச்
சைவநற் பயிரை வளர்த்துயிர் தன்னைத் தருதியிற் காப்பதும் இயல்பே ௩

புவிபுகழ் சைவப் பூம்பொழிற் சமண்நூற் புதர்களால் மூடுமவ் வமயம்
தவமிறை திருத்தொண் டத்தொகை திருவந் தாதியென் றிரண்டையும் வழிக்கொண்
டவிர்சிவ மணம்பெற் றப்பொழில் செழிக்க அமைதிருத் தொண்டர்தம் புராணம்
கவிதொறும் இன்பம் காண்வகை நீவிர் காணுரை மாட்சிதான் என்னே! ௪

திருத்தகு தொண்டர் புராணமிவ் வுலகில் சிவனடி தொடங்கிடச் செயலால்
கருத்தினுற் பொருளின் திறத்தினுல் பக்திக் காப்பியச் சொற்பொருள் நயத்தால்
கருத்தவிர் முத்தி யளித்திடு மாண்பால் கவின்திரு முறைதனைச் சேர்ந்த
தாத்தினுற் பெரிய புராணமென் பதையிவ் வுலகினுக் குணர்த்துதும் உரைபே. ௫

அடியவர் சரிதம் விளக்கிடும் ஆற்றல் ஆண்டவன் நல்லருள் திறமும்
பொடியணி பரன்வாழ் தலங்களின் மாண்பும் புகழ்திரு முறைகளின் சிறப்பும்
படியிசைச் சிவசா தனத்திறன் யாவும் பக்தியோ வியமுறூற் றிரையில்
படமெடுத் தெமக்குக் காட்டுவான் போலப் பகரும்நும் உரைச்சிறப் பென்னே. ௬

மன்புகழ் பெருமை யன்னிய சிந்தா மணிபுகழ் மழுங்ககல் லீசன்
தன்புகழ் விளங்கச் சேக்கிழார் பெருமான் தருதிருத் தொண்டர்மா புராணத்
தின்புகழ் எங்கும் துலங்கநல் கதற்கோர் இன்னுரை விரித்ததும் புகழை
என்புகழ் கின்ற தென்றுயாம் வியக்க இயற்றுமுன் முயற்சிதான் எளிதோ. ௭

மன்றுவாழ் தில்லைப் பரனரு ளாலோர் மந்திரக் கிழவர்செய் நூலை
நன்றுதீ தறிந்து மதித்து நன் னீதி நல்கவோர் வழக்கறி புலவர்
தன்றனை தேவை எனவறிந் துமையித் தாணியில் வரப்பணித் தந்நூற்
கின்றுரை விரிக்கச் செய்ததப் பேரூர் இறைவனு ளருள்கொலோ அறியோம். ௮

'எற்றைக்கும் யாங்கள் திருவரு ளுடையோம்' எனச்சொல்லும் சேக்கிழார் வாக்கு
கற்றைச்செஞ் சடையார் அருளினுல் இந்தக் காலத்தும் பலித்திடச் சைவ
நற்றிறம் விளக்கும் சுப்பிர மணிய நம்பநும் சேவையால் யாங்கள்
இற்றைக்கும் சிவனுர் திருவரு ளுடையேம் எனச்சொல்லும் பேறுபெற் றனமால். ௯

தன்னடைந் தவர்க்கே பொன்னுமெய்ப் பொருளும் தந்துகாப் பவன்சபா நாதன்
என்னுமெய்ம் மொழிக்கோர் இலக்கிய மாக இலங்குசுப் பிரமணி யப்பேர்
மன்னிய குரிசல் தம்முனத் துன்னு மாண்பொருள் யாவுமீந் தவனை
கன்னரே வாழச் செய்வதுன் பாங்காண் ஞானநற் சபைநடத் தரசே. ௧௦

## 19. திருஞானசம்பந்தர் கழகத்தார், சீகாழி.

உலகில்பல் வளமும் நிலவிடுங் கோவைத்-தலமதில் தொண்டமண்டலவேள்குலமதில் பிறப்புரி மையிற்பல சிறப்புந் தருதியும் - இயற்கையிற் பெற்றே இலங்குநற் குடியில் தந்தையாம் கந்த சாமிதான் செய்த - முந்திய தவமது முறைமையிற் பலிக்க நற்றம்மை வற்றிறன் காணுமே யோங்கத்-தக்கசான் றோர்களைப் பெற்றிடும் தாத்தினுல்

சிதம்பரம் (6—5—54 காலை) நகர்வலத்தின்பின்



உரைச்சுவடிகளை யானையினின்றும் இறக்கித் திருச்சிற்றம்பலவன் திருமுன்புக்குச் சாரக் கொணடுபோகும காட்சி

சிதம்பரம் 7—5—54 மாலை



உரை நிறைவு விழாத் தலைவர்
ஸ்ரீலஸ்ரீ மதுரை ஆதீனம் மகாசந்நிதானங்களும் உரையாசிரியரும் அன்பர்களுடன் ஆயிரக்கால் மண்டபம் முன்பு

திருப்பேரூர்



உரை நிறைவு விழா : உரைச் சுவடிகள் யானைமீதும்
ஸ்ரீ சேக்கிழார் பெருமானுடன் உரையாசிரியரும் அன்பர்களுடன்

முத்தமிழ் நாட்டினுள் முதன்மைய தான-தொண்டமண்டலமெனும்தூயநாட் டின்புகழ்
மண்டலம் எங்கும் மாண்புடன் விளங்க - வந்துற் பவித்த மாண்புடைக் குரிசிலே !
சிவப்பணி செய்வதே தவப்பணி என்னும்-குறிக்கோள் தனைநும் வாழ்வினிற்கொண்டு
தெய்வப் பணிபுரி சிவக்கவி மணியே ! - பற்பல அவையில் பான்திறம் விளங்கச்
சொற்போர் புரியும் சுப்பிர மணிய ! - இறைதிரு வருளால் எழில்தவச் சேக்கிழார்
அருமையி னியற்றிய பெரிய புராண - விரிவுரை கண்டநும் வியத்தகு சிறப்பை
வாழ்த்துவ தன்றி மதித்தலை அறியோம் - தோழமை நம்பிசெய் நூல்திருத் தொண்டத்
தொகைஎனும் அரும்பு தொண்டரந் தாதிபாய்-நாரையூர் நம்பிவாய்ச்சொற்று மலர்ந்து
குன்றையூர் நம்பிசெய்தொண்டர்புராணமாய்க்-காய்த்துப்பழுத்தவக் கனியைப்பிழிந்து
கற்றவ ரன்றி மற்றவ ரெவரும் - பருகிச் சுவைத்திடும் பண்புறு தேனென
அரிதின் முயன்று பெரிதெமக்களித் தநும்-பேருரைத்தன்மையைப்பெரிதும்புகழ்வமோ
செயற்கரும் உரைசெய்நும் முயற்சியைப் புகழ்வமோ - இப்பணி நீர்செய இளமையி
லேமுனம்

கற்பித் தருளிய நற்குரவன் திருச் - சிற்றம் பலவன் சீரருள் புகழ்வமோ
சைவசித் தாந்த சாத்திரக் கருத்தை - உய்வகை எவர்க்கும் உணர்த்தியே மூவகைப்
பத்திச் சுவைநனி சொட்டப் பாடிய - கவிவல வன்செய் கவின்புரா ணத்திற்
கினியொரு விரிவுரை இயற்றிட இடமிலை - எனச்சொலும் வண்ணம் இனியமெய்ப்
பொருள்காண்

உரைவல வன்னிவண் உமதல தியாரே - உலகியற் பொருளை ஓர்ந்தால் லறிஞரும்
இறையருள் நாடச் செய்திடும் எந்தையே - மண்ணினல் லவணம் வாழுமா வாழ்ந்து
எண்ணிய இன்பம் யாவும் பெற்று - ஞானசம் பந்தன் நற்றிரு வருளால்
வாழிய பெரும வாழி - சீரிய சைவம் திகழ்தாற் பொருட்டே.

## 20. திருநெல்வேலிச் சிவபூசைச் செல்வர் திருக்கூட்டத்தார்

மருந்தவை மந்திரம் மறுமைநன் னெறியவை மற்றும்எல் லாம்
அருந்துயர் கெடும்அவர் நாமமே சிந்தைசெய் நன்னெஞ்ச மே
பொருந்துதண் புறவினில் கொன்றைபொன் சொரிதரத் துன்றுபைம் பூஞ்
செருந்திசெம் பொன்மலர் திருநெல்வே லியுறை செல்வர்தா மே.

—திருஞானசம்பந்தர்.

சேக்கிழார் விரிநூற் சிறப்புரைச் செல்வ !

உலகெலாம் உணர்ந்து ஓதற்கு அரியவன் பொன்மொழி போற்றித் திருத்தொண்டர் புராணம் செய்தருளிய சேக்கிழார் பெருமான் குலத்தில் தோன்றி வழி வழி சிறந்த தமிழ்ப் புலவராய் உலக நூலும் அறிவு நூலும் ஆராய்ந்து தெளிந்து, ஆண்டுதோறும் பன்னிரு திருமுறையும் ஓதி வரும் பண்பிற்சிறந்து, தாம் பயின்றறிந்து தேர்ந்த உண்மை மணிகளைப் பிறர்க்கும் எடுத்து மகிழ்விக்கும் பேரெண்ணத்தால் உந்தப்பட்டு ஒரு நாற்பதாண்டுகள் பயின்றுணர்ந்தவற்றைத் தமிழ் மக்களுக்கு எடுத்துக் காட்டுவன 1935 முதல் வெளியிட்டுவரும் பெரியபுராணம் விரிவுரைப் பகுதிகள் எழும். இன்று நிகழும் அரங்கேற்றப் பெருவிழாவிற் கலந்து கொள்ளும் தமிழகச் சைவ மடாதிபதிகள், செல்வர்கள், தமிழ்ப் புலவர்கள் அடையும் மகிழ்ச்சிப் பேற்றிற்கு எல்லையுளதோ ?

தங்கள் அரு முயற்சியில் வெளியாயிருக்கும் விரிவுரை, பெரியபுராணத்தமைந்த சாத்திரக் கருத்துக்கள் உந்தி களிறு உயிர்போதம் சித்தி முதலிய சாத்திர மேற்

கோள்களுடன் பொருந்தி விளக்கும் திறத்தனவென்பதையும், தல சம்பந்தமான செய்திகளும், சாசனப் பதிப்புகளும் படங்களும் உரிய இடங்களில் அமைந்து ஒளிரும் தன்மையன என்பதையும் எவர்க்கும் எடுத்துக்காட்டும்.

பிறர் நலம் பேணும் பெரும !

கோவைமா நகரில் சிறுவர் சிறுமியர் சிவனடி மறவாச் சிந்தையராய்த் திருநெறித் தமிழ் மறை ஓதுமுறை தேவாரப் பாடசாலை நிறுவியும், தமிழ்மக்கள் பலரும் கலந்தாய்ந்தின்புறத் தமிழ்ச் சங்கம் நிறுவியும், திருவாதவூரர், தெய்வச் சேக்கிழார் பெருமான் இவர்களை வரலாற்றினை விளக்கும் ஆராய்ச்சி நூல்களும், அவிநாசி அருளுருத் தலைவி பிள்ளைத்தமிழும் இயற்றி வெளியிட்டும், சைவமும் தமிழும் வளர்க்கும் சங்கங்கள்தோறும் தலைமை தாங்கியும் சொற்பொழிவாற்றியும் வரும் அரும் பெருந் தொண்டை யாமெலாம் பாராட்டி மகிழ்கின்றோம்.

தொண்டர் சீர்பரவுந் தூநெறிப் புலவ !

மூவேந்தரும் போற்றுந் தமிழ் முடி வேந்தராய்த் திகழ்ந்த தெய்வச் சேக்கிழார் பெருமான் திருத்தொண்டர் புராணந்தனைத் தில்லையில் அரங்கேற்றி அரசராலும் மடாதிபதிகளாலும் செந்நெறிச் செல்வர்களாலும் பாராட்டப்படு முறையில் விளங்கினர். அஃது, வள்ளுவர் ஆண்டு 1985 சய வருடம் சித்திரைத் திங்கள் 24 திருவாதிரைத் திருநாளாகிய இன்று தங்கட்கும் கிடைத்துள்ள அருட் பேறுணர்ந்து அகமகிழ்கின்றோம்.

> ஆயிரக்கால் மண்டபத் தன்பாய்த் திருத்தொண்டர்
> தூயவா லாறுரைத்த தொன்மையினில்—பாயசீர்ச்
> சுப்ரமணி யன்விரிதாள் சொல்புகழ்சீர் ஆயுளுடன்
> திப்பியமா வாழி சிறந்து.

21. ஸ்ரீலஸ்ரீ தவத்திரு குன்றக்குடி அடிகளார்

சித்தாந்த சிவநெறிச் செல்வர்களே !

தமிழகம் தெய்வமணங் கமழுந் திருநாடு. இறைமணங்கமழும் இன்பத் திருநாடு. கற்றவ வேள்வியும் நான்மறை யறங்களும் வளர்ந்த வளம்படைத்த நாடு. தம்மையுணர்ந்து தமையுடைய தலைவனையும் உணர்ந்து தக்கவாறு ஒழுகிய உத்தமர்களே பிறந்த பெருமையுடையது இந்நாடு. ஞான மெய்க்கும் சிவநெறியும் செந்தமிழும் பரவிச் சிறப்புற நிலவ இந்த நாட்டு அருள்நெறியாளர்கள் செய்த சேவை அளப்பில. பிறந்து மொழிபயின்ற பின்னெல்லாம் காதல் சிறந்து கண்ணுதற் பெருமான் கழலிணைகளை உளத்தும் புறத்துங்கண்டு அகங்குழைந்த அன்பினராய் - அருள்நெறியாளர்களாய் வாழ்ந்தனர் நம் தமிழினத்தார். அதைத் தெரிவிப்பனவே பத்திச் சுவை கனி சொட்டச் சொட்டப் பாடிய கவிவலவர் சேக்கிழாரின் செஞ்சொற்காவியம். திருத்தொண்டர் புராணம், வாழ்க்கையினின்றும் எழுந்த நூல். மக்களினத்தை வாழ வைப்பதற்குரிய தனித்தமிழ்த் தவநூல். திருத்தொண்டர் புராணம் ஒன்றே இன்றைய உலக அரங்கில் சைவத்திருநெறியின்-சீர்மையை சமரசப் பண்பாட்டை—சமூக நலம் நாடும் நற்றவப் பண்பை எடுத்துக்காட்டுவதாக அமைந்திருக்கிறது.

இத்தகு திருநூல் சிதம்பரத்தில் அன்றொருநாள் உருவாகியது. உருவான நான்தொட்டு இன்றுவரை படித்துப் பண்புநலம் பெற்றுப் பயனடைந்தோர் பலர். சொல்லொடு பொருளையும் கலந்து அனுபவிக்கவேண்டும் என்ற உயரிய நோக்கொடு

இதற்கு உரைகாண முயன்றார் பலர். அன்னாருள் நமது ஆதீன ஸ்ரீமத் ஆறுமுகத் தம்பிரான் சுவாமிகளவர்கள் சிறந்த முறையில் உரையொன்றை எழுதி உதவினார்கள். தமிழ்த்தந்தை திரு.வி.க. அவர்களும் ஓர் அரும்பதவுரை எழுதி உபகரித்தார்கள். இன்றைக்கு, பண்டு எந்தத் தலத்தில் திருத்தொண்டர் புராணம் உருவாகியதோ அதே தலத்தில் அத்திருநூலுக்கு ஒரு பேருரையும் உருவாகி நிறைவெய்துகிறது. இத்திருத் தொண்டை இனிதே நிறைவேற்றித் தந்துதவிய அன்பர் சிவக்கவிமணி சி. கே. சுப்பிரமணிய முதலியாரவர்கள் சிறந்த சிவநெறிச் செல்வர். சைவ நெறியினை வாழ்க்கையில் மேற்கொண்டொழுகும் பண்பாளர். சேக்கிழாரடிகள் போலவே நாயன்மார் மாட்டு அளவுகடந்த பத்தியும் ஈடுபாடுமுடையவர்கள் இத்தகு உரையினை எழுதுதற்கு முற்றிலும் தகுதியானவர்கள். இங்ஙனம் தமிழ்நாட்டுச் சைவ உலகிற்கு இத்தகு பேருதவியைச் செய்த சிவக்கவிமணியவர்களுக்கு நமது உளங்கலந்த நன்றியும் வாழ்த்தும். இன்னும் பல பேருரைகளை அன்னார் நமக்கு அளித்துதவ அருள்பாலிக்கும்வண்ணம் ஆடுகின்ற அம்பலவன் அடியிணைகளை இறைஞ்சுகின்றோம். இப்புனித விழாவில் கலந்துகொள்கின்ற சிவநெறிச் செல்வர்கட்கும், திருநெறித் தொண்டர்கட்கும் இதயங் கலந்த வாழ்த்து.

22. திருஞானசம்பந்தம் அண்டு கம்பெனி-கவுணியன் அச்சகத்தார், சென்னை.

தெய்வத் தமிழும் சிவன்திரு நெறியும் - மெய்மை சுத மாண்பு விளக்குபு அருளால்
திருத்தொண்டத் தொகையெனும் திருமுறை மாமறை - இன்தமிழ் மொழியா
லன்றிஎம் மொழியினும்
எழுதவொண் ணுமை யாண்டும் தெரிக்க - வெள்ளி மால்வரை வீற்றருள் நம்பி
தென்தமிழ் அகத்துத் தோன்றினன் அருளால்-தொண்டத் தொகையும் தூயபதினொரு
திருப்பாட் டதனுல் சிவனடி தேற்றும்-ஈரேழா றேழீரா றெட்டீரைந் தேழெட்டோ
டோரொழுபான் சேரிரண்டும் ஓர்ந்து தொகை-ஓதுவார் சிவனடி உற்றுவாழ் குவரே
நாறையூர் நம்பி யாண்டார் நம்பி - அந்தாதி எண்பக் தாறுல் வகுத்தனன்
குன்றை யருள்முனி கோநில் சேக்கிழார்-குடிவருஅருண்மொழித்தேவர் தவப்பயன்
அருளினர் தொண்டர் சீர்அருள் விரிநூல் - அதனது தொகைநா லாயிரத் திருநூற்று
எண்பத்து ஆறென இயம்புவர் அடியவர்-அதற்கோர் விரிவுரை அருளினன் அருளால்
திருமுறை முற்றும் செவ்விய முறையில்-ஐயெட் டாண்டின்மேல் ஓதிவரும் அன்பன்
கோய முத்தூர் வேளாண் குலஞ்செய் தவத்தால்தோன்றியதமிழ்ப்பெருந்திருவினன்
மாசிலா மணியெனும் சுப்பிர மணியப்-பெரும்பெயர் தாங்கிய பேசரும் குணத்தோன்
நீறுமணி ஐந்தெழுத்து நீங்காமனத்தோன்-மும்மொழிவல்லான்முப்பொருள்நல்லான்
பல்லாண்டருளால்பணியெனப்போற்றிச்-சொல்லரும்பேருரைதொடங்கினன் தில்லை
அம்பல மன்றிற்கால் ஆயிர மண்டபத்து - அடியார் புரவலர் அருள்திரு மடத்தார்
நாவலர் பாவலர் நானெறிச் செல்வர் - யாவரும் போற்ற அரங்கேற்று விழாவும்
தேவரும் வாழ்த்தத் திருமுறை ஓத - எண்ணரும் சிறப்பால் பண்ணினன் அன்பர்
வாழ்த்துபொன்னுடைவளர்பொற்கிழிமுதல்பல்வேறுசிறப்புக்கள்பாங்குறஅளித்தனர்
யாங்களும் அன்பால் இச்சிறு வாழ்த்துரை - ஒப்பித் தவனடி தொழுதனம்
வாழ்கநீ டூழி தமிழ்சிவம் வளர்த்தே

23. கோனியம்மன் தேவஸ்தான தர்மகர்த்தர்கள், கோவை.

உலகினில் பல்வளம் நிலவிடும் பதிகளில் - அலகிலாப் புகழுடன் அழகுற விளங்கும்
கோவைமா நகரினிற் கோனியம் மன்பேர் - காவலார் தெய்வம் காக்கும் எல்லையில்

ண்யமாய் விளங்கிய புண்ணிய சீலர் - கந்த சாமியும் கற்பிற் சிறந்த
வடிவாம் பாளும் விரும்பிய தவத்தால் - படிமிசைத் தோன்றிப் பல்கலை கற்ற
சிவக்கவி மணியாம் தவப்பெருஞ் செல்வ ! - ஒப்பில் புகழுடைச் சுப்பிர மணிய !
பேரூர் ஆலயஞ் சீர்பெறச் செய்த - சேவை எம்மால் செப்பவும் தகைத்தோ !
எங்கள் தேவிக் கென்றும் பணிசெய்து - தங்கும் மகிழ்வுடன் தானிருப் பவனே !
சமயப் பணியிற் சாலவும் விருப்புற - சீருடைச் செம்மல் ! பேருடைத் தலைவ !
அறபான் மும்மை அடியவர் பெருமையை - இம்மை மறுமைப் பயனுடன் கூறும்
செம்மைசேர் பெரிய புராணந் தன்னை - விரிவுரை செய்து விளங்கச் செய்தனை ;
சிற்றம் பலத்தில் சிறப்புடன் செய்த - விரிவுரை நிறைவை விரும்பிக் கண்டோம் ;
திருப் பேரூரிலும் திவ்விய நிறைவைக் - கவினுடன் காணும் காட்சியும் பெற்றோம்
எல்லாம் வல்ல இறைவியின் அருளால் - பல்லாண்டு வாழ்கெனப் பாவுதும் யாமே.

24. பட்டீச்சுரர் தேவஸ்தான ஆதிசைவ குழுவினர், திருப்பேரூர்

தமிழுக்குத் தொண்டுசெயும் தனிப்பேரொன்றே
தன்வாழ்வின் குறிக்கோளாய்க் கொண்டார் நின்றார்
அமிழ்தென்னும் தமிழைத்தன் உயிராய் எண்ணி
ஆக்கங்கள் பலசெய்தார் புகழைப் பெற்றார்
இமிழ் கடலின் அடித்தோன்றும் முத்துப் போல
இத்தரைமேல் அவர்பிறந்தார் செயல்கள் செய்தார்
தமிழ்வாழும் நாளெல்லாம் அவரும் வாழ்வார்
தனிச்சிறப்பாய் அவர்நூற்கள் நின்று நிலவும் ! (1)

வாழ்வெல்லாம் இலக்கியத்தின் வழியினிலே
வண்தமிழின் உயர்வுக்குப் பாடு பட்டார்
தாழ்வொன்று மொழிக்கென்றால் தனக்கென்று
தமிழார்வம் படைத்திங்கு வாழ்கின்றார்
சூழ்ந்திருந்த காவியங்கள் அனைத்துள்ளும்
சுற்றித்தன் அறிவொளியால் இன்பம் கண்டார்
வாழ்க்திருப்பார் நூறாண்டு வாழ்த்து கின்றோம்
வாழ்வென்னில் அவர்வாழும் வாழ்வே வாழ்வு ! (2)

அவருள்ளம் நமக்கெல்லாம் வருதல்வேண்டும்
அழியாத கலைவளர்க்கும் உள்ளம் வேண்டும் !
அவனியெலாம் அவர்புகழைப் பரப்பல் வேண்டும்
அருந்தமிழின் மேன்மையினை உயர்த்தல் வேண்டும் !
எவரிடத்தும் எப்பொழுதும் இன்முகமாய்க் குலவும்
எளிமையது அவரைப்போல் வேண்டும் வேண்டும் !
தமிழ்சைவப் பெருந்தலைவ வாழி ! வாழி !
கலைக்குன்றாய் இலகுதமிழ்க் கடலே வாழி ! (3)

25. புலவர், திரு. அ. துரைசாமி பிள்ளை, பெள்ளாச்சி

சொற்பதங் கடந்த தொல்லோன் மேய - தில்லை மூதூரிற் சித்திரை ஆதிரை
சேர்நல் நாளில், திருவருள் கூட்ட - நற்கதி பெற்றுயர் நாயன் மார்களின்
மெய்ச் சரிதம்நிறை விழுமிய பெட்டகம் - பொற்புடைத் தொண்டர் புராணப்
நிறைவு விழாவை நிகழ்த்தக் குழுமிய - பல் சான்றீரே ! பல் சான்றீரே ! [பேருரை

அன்பும் அருளும் அறிவும் தெளிவும் - பண்பும் நிறைந்த பல் சான்றீரே !,
பேருரை அருளிய ஆசான் பெருமையை - யானறி அளவையிற் கூறுவன் கேண்மின்
பேர் ஊர் இல்லாப் பெருமான் மகிழ்ந்து - பாரோர் போற்றப் பட்டிகொள் பேரூர்ப்
பதியுடன் கயிலைப் பதிநிகர் வெள்ளிப் - பொருப்பும் செவ்வேள் புக்குயர் குன்றும்
மருதம் பூத்தொளிர் மருத மலையும் - ஒருங்கே காணும் குடபுலக் கொங்கிற்
காஞ்சனம் கொழிக்கும் காஞ்சிமா நதிசூழ்-கோவையம் பதிசெய் மாதவம் இதுவெனக்
கொண்டடல் கட்டிச் சைவத் தொல்குடிக் - கந்தசாமிப் பேர்க் கவியருள் சுதனாய்
வந்தவ தரித்தனன் செந்தமிழ்க் கடவுளின் - பேரான் சுப்பிர மணியெனும் சீரான்
இற்றைக் கெழுபத் தாறாண்டுகள் முன் - கேடிலாச் செல்வம் கல்வியே என்னும்
ஈடிலாச் சொல்லை எண்ணித் தந்தையார் - இளமையில் மகனுக் கெழுத்தறி வித்தார்,
கருவிலே திருவைப் பெற்றுள பிள்ளையும் - கடிதிற் பலநூல் கைவரப் பெற்றார்.
பதினோ ராட்டைப் பாலனை விடுத்துச் - சென்றார் தந்தை ; அந்தோ ! அப்பால்
கல்லூரி சேர்ந்து கணித போதகராம் - "வாத்தியார்" வைத்தியலிங்கம் பிள்ளையால்
உடனுறை மாணவனாகிப் பயின்றனர்;-தாய்மொழிப் பற்றால் தமிழினைச் சிறப்பாய்க்
கற்றிட வேண்டிக் கலைவல பண்டிதர் - திருச்சிற்றம்பலம் பிள்ளை அவர்களை
அண்மித் தமிழ்க்கடல் அமுதைப்பருகி - ஐயம் திரிபறக் கற்றபின் சென்னைசென்(று)
அரசினர் கல்லூரி யதனிற் சேர்ந்து - பி. ஏ. வகுப்பைப் படித்து முடித்ததன்
இறுதித் தேர்வில் தமிழில் முதன்மை - பெற்றுத் தங்கப் பதக்கமும் பெற்றனர்.
அப்பால் சட்டம் படித்துத் தேறி - அப்பாவைப் போல் வக்கீலாகி
அறநெறி வழுவா தத்தொழில் புரிந்தும் ;-இல்லற வாழ்க்கை இதுவென உலக்குக்(கு)
அறிவித்திடுவான் அத்துறை வாழ்ந்தும் ; - பொதுநலச் சேவையே பொய்தீர்
[முறையெனக்
கோவைக்கிழாருடன் தோழமை பூண்டு, - சைவப்பிரசங்கச் சபையையும் கோவைத்
தமிழ்ச் சங்கத்தையும் பரிபாலித்துயர் - சைவமும் தமிழும் தழைத்திட உழைத்தும் ;
நகரான் கழகத் துறுப்பினராகி - உளத்தெழுமாணைகொண் டூர்ப்பணி புரிந்தும் ;
அறநிலைக் கழகத் தமர்ந்து பற்பல - அறநிலை யங்களைத் திறம்பட நடத்தியும் ;
தேவ கோட்டங்களைத் திருத்தியமைத்தும் ; - பல்கலைக் கழகத் திருந்து தமிழ்மொழி
பல்கலைப் பலவகைப் பணிகளைச் செய்தும் ; - சேக்கிழார் என்னும் செம்பொருள்
[பற்றியும்
வாக்குக் கிறைவன் மணிவாசகரின் - பெருநிலை பற்றியும் பேருரை பொழிந்தும்,
அவிநாசிப்பதிக் கருணாம்பிகைக்குப் - பிள்ளைத் தமிழாம் பிரபந்தம் செய்தும் ;
ஈழம் முதலிய செந்தமிழ் சிவண்ணிய - தேசங்கள் தோறும் சென்றுரை பகர்ந்தும் ;
விஞ்ஞானம் தரும் வியத்தகும் அறிவின் - ஆற்றலைப் போற்றிய அடியேன் அகஇருள்
இரிஇய நல்லொளி எந்தனுக் கருளியும் ; - மெய்கண்ட சாத்திர விரிவெலாம் பார்த்தும்,
ஐம்பதின் மேலாம் ஆண்டுகள் கழியவும் ;-அமைவுறு நின்றும் அணிகொள் பேரூரில்
தமிழ்க்கல்லூரியைத் தாபிதம் செய்ததில் - ஆசானாகி அறிவுரை அளித்தும் ;
மாசிலா மணியாய்த் தேசுடன் மிளிரும் - சுப்பிர மணியனார் சீரெலாம் சிறியேன்
செப்பிடத் தகுமோ ? செயற்கரும் செயல்பல - செறிந்திடும் வாழ்க்கையின் சிகரமாய்
[என்றும்
அழியாய்ப் புகழ்தரும் மணிமுடிப் பணியாய் - விளங்குமிப் பெரிய புராண விரிவுரை
வெளி யீடாகும். மெய்யிது வாதலின், - உரையின் சிறப்பை உள்ளவா றுணர்ந்து,
தமிழகம் செய்த தவப்பயன் என்போம்-சென்னி மேற்கொண்டு சிறப்புச் செய்வோம்;
பொன்னெனப் போற்றிப் புகழ்வோம் ; மற்றும்,-உரையா சிரியரை உயர்தவி சிருத்தி,

வாழ்த்தி வணங்குவோம், வந்தனை செய்வோம் - நலந்தரு திருவும் நலிவிலா உடலும்
அலகில் சோதியான் அருள, - உலவா துற்று நிலவுக என்போம் !
வாழ்க சிவக்கவி மணிபல் லாண்டு ! - வாழ்க தமிழ்மொழி ! வாழ்க தமிழகம் !

## 26. முத்தமிழ்க்கவி – வித்துவான் திரு. K. R. அரசப்பன், கோவை.

வெண்பா

பூவைப் பசந்திருவும் பொன்னித் தமிழ்மகளும்
காவற் பெறவாழ் கடிநகராம்—கோவையிலே
வாழ்வுபெறும் பெற்றியர்காண் வையகத்துள் இந்நகர்க்கே
தாழ்வுவருந் தன்மையுண்டோ தான்.

ஆசிரிய விருத்தம்

உலகங்க ளேயுணர்ந் தோதுதற் கரிதான ஒப்பற்ற மெய்ப்பொரு ளெனும்
உயர்தமிழ்க் கடவுள்அருள் சேக்கிழார் ஆக்கினார் ஓர்ந்துமடி யார்புரா ணம்
பலகமல மிதழ்விரிய மலர்களே மலர்விக்கும் பைங்கதிர்ச் செல்வனே போல்
பாருளோர் யாவரும் பாவுபொரு ளறியவே பண்ணியதோர் புண்ணிய மிதே
நிலவுமிசை குலவிவா ரேர்ந்தவுரை யோர்ந்துமே நீணிலத் தீந்தருளி னார்
நெறிமிகு சிவக்கவி மணிசுப்ர மண்யராம் நேரிவர்க் கியார்தா முளர்
பலர்புகழ் ஞாயிறு கடலிலே கண்டாங்கு பசியவருள் கனிவழகி னார்
பாரிலிவர் பலவளம் சேரவுடல் நலனொடும் பல்லாண்டு வாழ்க மாதோ.

## 27 .திருப்பேரூர் திருக்கோயில் அறநிலையத்தார்கள், பேரூர்.

இறைவனிடத்து இடையறப்பணி செய்துவரும் பேரன்பரே !

தாங்கள் ஆயுட் காலம் முழுதும் இறைபணியிலேயே படிந்து கிடந்து அப்பணிக்கு ஏற்ற எடுத்துக்காட்டாக அடியார்கள் வரலாறுகளாகி விளங்கி நிற்கும் திருத் தொண்டர் புராணத்தைப் பொதுமக்களுக்கு அறிவுறுத்தல் பொருட்டு அருமையான பேருரை எழுதிப் பிறர் எவராலும் செய்ய முடியாத பெருங்கைங்கரியத்தைச் செய்ததை எவரே வியவாதார் ?

தமிழ்நாட்டிலும் ஈழத்திலும் சைவம் தழைத்தோங்க அருஞ்சேவை செய்த அண்ணலே!

நம் புனித நிலத்தில் பாடல்பெற்ற தளிகள், வைப்புத் தளிகள், திருமுறை கண்ட தளிகள், மற்ற அருட் பாடல்கள் கூறும் தளிகள் எல்லாம் சென்று இறைவனைத் தொழும் முகத்தான் அவ்வவ்விடங்களிலே சைவத்தை நிலைநாட்டி அத்தலங்களின் மூர்த்தி தலம் தீர்த்தங்களின் புனிதத் திருவுருவங்களைச் சேகரித்து அங்கே செல்ல முடியாதவர் கண்டு கொண்டாவது புனிதம் அடையும்படி தம் வெளியீட்டில் திருவுருவங்களை பதிப்பித்த பெருஞ் சிறப்பை யாரே அறியாதார் ?

உலகம்உய்யும் பொருட்டுப் பேருரையை ஞானக்களஞ்சியமாகத் தந்தருளிய புனித வள்ளலே !

சைவ சித்தாந்தத்தின் நுட்பப் பொருள்கள், நிலையங்களின் தத்துவார்த்தங்கள், சைவக் கலைகளின் அரிய மேன்மைகள் முதலிய பெருஞ் சாதனங்களை முற்றும்

தொகுத்து இனிவேறு நூல் தொடவேண்டியதில்லை என்று கூறும் வண்ணம் வாழ்வின் பயன் பிறிதில்லை என்று பரிணமிக்க அரிய பேருரையை எங்கட்களித்த பெருங்கொடைச் செல்வத்தை எவரே அமைக்கவல்லார்?

அறிதற் கரியபெருந் தொண்டை இயற்றி எல்லா மக்களையும் உய்வித்த பெருந்தகையரே!

தாங்கள் இடையறாப் பணியில் இதுவரை இருந்துவந்தபடி இனியும் பல்லாண்டுகள் சமூக சேவையிலும், சைவச் சேவையிலும் இருந்துவர எங்கள் இறைவன் தங்களுக்கு நீண்ட ஆயுளும் அருளிச் செய்வானாக! அதையே என்றும் எங்கள் வாழ்த்தாகக்கொண்டு இறைவனை வழுத்தித் தங்களைப் பாராட்டுகின்றோம்.

28. வித்துவான் திரு. ரா. இராமையாபிள்ளை மதுரை,

அருட்செல்வம் செல்வத்துட் செல்வம் என அறிந்து தலைப்பட்ட ஆலவாய் அடிகளே! எப்பொருள் எத்தன்மைத்தாயினும் அப்பொருள் மெய்ப்பொருள் காண்பது அறிவு எனக் கொண்டு அநபாயன் அமைச்சர் ஆக்கியருளிய திருத் தொண்டர் திருப்புராணத்திற்கு விரிவான விளக்கவுரை கண்ட சிவக்கவி மணிச் செம்மலே! அறிவு நிரம்பிய பெரியோர்களே! அன்னைமார்களே! அனைவர்க்கும் என் வணக்கம்.

இவண் எழுந்தருளியுள்ள, பாராட்டுக்குரிய பெரியார் கோவை வழக்கறிஞர் சுப்பிரமணிய முதலியார் அவர்கள் என்று என்மனம் எண்ண மறுக்கிறது. முதலையுண்ட பாலனை யழைத்துத் திருத்தொண்டத் தொகைபாடிய சுந்தரமூர்த்தியே இவர்கள் என்று கருதுவதா? அத்தொகையை விளக்கி அம்மையப்பருக்குத் தொண்டு செய்த நம்பியாண்டார் நம்பியே இவர்கள் என்று நம்புவதா? "சீவக சிந்தாமணி கற்றால் சிந்தை சிதையும்; மந்தாகினியைச் சடைமகுடத்திலமைத்த எந்தாய்போன்ற இறைவனுடைய நெறிபற்றிய தொண்டர்கள் புராணம் "இந்தா" என்று அநபாயனுக்கு வழங்கிய சேக்கிழார் என்னும் வாக்கருள் வேந்தரே இவர்கள் என்று நினைப்பதா? என்மனம் மருளுகிறது. எனினும் மூவரும் சேர்ந்த மூர்த்தியே இவர்கள் என்று துணியின் தவறாகாது எனச் சமாதானம் சொல்லுகிறது. ஏனெனின் திருத்தொண்டர் வரலாற்றைத் தொகைமூலம் சுந்தரர் அருள, சிறு செய்திகள் நம்பியாண்டார் நம்பிகவில, வரலாற்று முறையில் சேக்கிழார் பெருமான் வழங்க, அவற்றையெல்லாம் வைத்துக்கொண்டு அவர்கள் கருத்துக்கள் எவையும் சிதையாது பேருரை கண்டார்கள் இவர்கள் என்றால், அதுவும் ஈடும் எடுப்பு மற்ற விளக்கவுரை இதுவல்லதில்லை என்றால், அம்மூர்த்திகள்சேர்ந்தவர்கள் தாம் இவர்கள் என்று கொள்ளத் தடை என்ன?

காலந்தோறும் நிலவுலகில் அவர்கள் மாறித் தோன்றி அறிவையும் அன்பையும் வளர்த்து அரன்பால் மாறா அடிமையையும் காட்டிப், பிறப்பறுக்க வழி வகுத்துச் சென்றார்கள் எனலாம். காலந்தோறும் விளக்கமும் விரிவும் தேவைப்பட்டதால் அவற்றை எடுத்துக்காட்டவே அவர்கள் அவதரித்தனர் எனக் கொள்ளுதலும் தகும். அவ்வாறு அவதரித்தவர்கள் இவர்கள் என்று யான் துணிவேன்.

இவர்கள் விளக்கவுரையில் நயம் ஒன்று காண்போமாக.

பிரமபுரத்துப் பிள்ளையார், தோணிபுரத்துத்தோன்றல், சீர்காழிச் செம்மல், திருமருகல், நகரின்கண் எழுந்தருளிப், பெருகுதமிழ்த்தொடை சாத்தியங்கிருந்தார்.

அக்காலில் ஒருவணிகன் பதிகனாகி அணைவான் ஓர் கன்னியையும் உடனேகொண்டு பொன்னூர் மெருச்சிலையார் கோயில் மாடு-புறத்திலொருமடத்திலிரவுதுயிலும்போது அரவுதீண்ட உயிர் நீங்கும் நிலையடைந்தான்.

பதிகன் என்பதற்குப் பாவி என்று பொருள்கொண்டு தமிழ்நாட்டின் களவு, கற்பு மணத்திற்குக் களங்கம் ஏற்படுத்தினர் உரைகாரர் பலர். இவர்கள் பதிகன் என்னும் சொல்லிற்கு “ வழிச்செல்வோன் ” என்று பொருள்கொண்டு தமிழ் மரபு காத்தார்கள். என்னையெனின் ஏழு பெண் மக்களையுடைய வணிகர் ஒருவர் உரிமை உடையார் ஒருவருக்குப் பெண் கொடுப்பதாகப் பகர்ந்து அறுவரையும் வேறு வேறு மணமுடித்துக் கொடுத்துவிட்டார். இதைக்கண்ட இளையவள் உரிமையுடையாருடன் உடன்போகி மணக்க ஒருப்பட்டாள் இது களவு மணத்தின்பாற் பட்டது. இதனை யறியாது பதிகன் என்ற சொல்லுக்குப் “ பாவி ” என்று பொருள் கண்டாரது தவறு மாற்றியருளிய பெருமை இவர்களைச் சாரும்.

காசி சென்ற குமரகுருபரர் இந்துஸ்தானி மொழி பயின்று தில்லி யரசுடன் சொல்லாடிச் சிவத்தின் பெருமையை விளக்கினர் என்ப. அதுபோல, இவர்கள் ஆங்கிலம் பயின்று அனைவரும் இறும்பூது எய்தும் வண்ணம் தம் பேருரைக்கு ஆதாரம் பல தருகின்றார்கள்.

திருமருகலிலே தன் தலைவனை அரவு தீண்டி, அவன் ஆவி நீங்கும் தன்மை கண்டு ஏங்கும் வணிகர் பெருமகளின் ஆற்றாத்தன்மையைச் சேக்கிழார் பெருமான் “ அன்னமென அயர்வாள் ” எனக் குறித்துப் போந்தார். இத்தொடருக்கு இவர்கள் வகுத்த உரை, “ உதவுவோர் யாரும் இலராயின் அப்பெண்ணும் இறந்து படுவாள் என்பது குறிக்க, மயில், குயில் என்னாது அன்னம் என்றார்; ஆங்கிலத்திலும் Swan Song (அன்னப்பாட்டு) இறுதியுறுங்காலத்தே பாடுதலைக் குறிக்கும் ” என எடுத்துக்காட்டியுள்ளார்கள்.

ஆங்கிலக்கவியரசன் சேக்ஸ்பியர் தரும் வேனிஸ் வணிகன் (The Merchant of Venice) என்னும் நாடகத்தே, சொல்லால் விரிக்கமுடியாத அழகு நிரம்பிய போர்சியா என்னும் பெருமாட்டி பெசானியோ என்னும் இளைஞனைக் காதலிக்கின்றாள். எனினும் அவளை மணக்க ஒரு போட்டியில் அவன் வெற்றிகாணல் வேண்டும். மூன்று பெட்டிகள் உண்டு. அவற்றுள் ஒன்றில் அவள் படம் உண்டு. அதனைத் தேர்ந்தெடுத்தாரே அவளுக்கு மணவாளன் ஆகலாம். ஈடுபட்டான் போட்டியில் இளைஞன் பெசானியோ. இச்சமயத்தில் போர்சியா, “ இசைக் கருவிகள் முழங்கட்டும் ; இவர் தவறின் அன்னப்பாட்டாக அது அமையட்டும் ” என்ற கருத்துப்பட, Let music sound while he doth make his choice Then, if he lose, he makes a Swan end like Fading in music, என்று கூறுகின்றாள்.

இவற்றையெல்லாம் நன்கு அறிந்த இவர்கள் உரிய இடங்கள்தோறும் சுட்டிச் செல்லும் அழகும் ஆற்றலும் சொல்லுந்தரமன்று. இவ்வாறு பல பல கூறலாம். காலம் கட்டுப்படுத்துகிறது. எனவே இம்மட்டோடு இதனை நிறுத்தி எனக்கும் இவ்வுரைகூற இடமளித்த தலைவர்பெருமானுக்கும் விழாச் செயற்குழுவினருக்கும் நன்றிகூறி வணக்கம் தெரிவித்து சிவக்கவிமணி ஐயா அவர்களுக்கு எல்லா நலனும் நிலையப்பன் அருளவேண்டும் என்று பணிந்து விடைபெறுகின்றேன்.

29. வித்வான், திரு. பூ. ஆலாலசுந்தரம் செட்டியார், கிறிஸ்தவக் கல்லூரி தாம்பரம், சென்னை.

இப்பெரிய புராணப் பேருரையின் முதல் சஞ்சிகை 5-6-1935 சேக்கிழார் திருநாளன்று தில்லையில் ஆயிரக்கால் மண்டபத்தில் வைத்து வெளியிடப்பட்டது. ஜய ஆண்டு வைகாசித் திங்கள் 23-ம் நாள் 5-6-1954 சேக்கிழார் திருநாளாகும். 19 ஆண்டுகளுக்கு முன் சேக்கிழார் திருநாளன்று முதலில் வெளியிடப்பட்டு, வெற்றி ஆண்டு எனப் பொருள்படும் ஜய ஆண்டில், சேக்கிழார் திருநாளுக்கு முன்பு ஒரு திங்களில் இவ்வரிய பேருரையின் வெளியீடு, ஆளுடைய பிள்ளையார் அவதரித்தருளியதும், அவர் உமையம்மையாரளித்த ஞானப்பாலுண்டருளியதும் ஆகிய சித்திரைத் திருவாதிரையில் முற்றுப்பெறுதல் மிகவும் பொருத்தமாகும். பெரிய புராணத்திற்கு இதுவரை இத்தகைய அரிய பேருரை வெளிவந்ததில்லை. சிவஞான போதத்திற்கு ஸ்ரீ மாதவச் சிவஞான யோகிகள் இயற்றிய விருத்தியுரை போலச் சைவத்திருவாளர் சிவக்கவிமணி சி. கே. சுப்பிரமணிய முதலியார் பி. ஏ. அவர்கள் திருத்தொண்டர் புராணத்திற்கு இந்த அரிய பேருரை இயற்றியுள்ளார்கள். இப்பேருரை தொடங்கிய நாள் தொட்டு அதனை வாங்கிப் படித்துப் பயன்பெறும் புண்ணியம் எனக்குக் கிடைத்தது கண்டு மகிழ்கின்றேன். இப்பேருரையினைப் "பெரிய புராணக் களஞ்சியம்" அல்லது "கருவூலம்" எனக் கூறத்தகும். இதுவரை வெளிவந்த 44 சஞ்சிகைகளும் 5424 பக்கங்கள் கொண்டுள்ளன. பன்னிரு ஆழ்வார்கள் பாடிய நாலாயிரப் பிரபந்தத்திற்குப் பல பேருரைகள் விளங்குவது போலப் பன்னிரு திருமுறைகளுக்கும் பேருரைகள் இயற்றப்படவேண்டும். சைவர்களின் தவப்பயனால் சிவக்கவிமணி அவர்கள் 12-ம் திருமுறைக்குப் பேருரை வழங்கியுள்ளார். அவர்களே உரைகள் இல்லாத பிற திருமுறைகளுக்கும் பேருரை எழுதி வழங்கவேண்டும் என்பது எனது வேண்டுகோளாகும். சிவக்கவிமணி அவர்கள் இப்பேருரை எழுதுவதற்குப் பல்லாற்றானும் தகுதி வாய்ந்தவர். அவர் அன்பு அடக்கம், ஒழுக்கம், புலமை, நேர்மை, விடாமுயற்சி, பக்தி முதலிய பண்புகள் நிரம்பப் பெற்றவர்; மேலும் இறைவன் திருவருளில் முழு நம்பிக்கை உடையவர்; "இறைவன் திருவருளால் இந்தப் பகுதி வெளிவந்தது. இன்னும் பிற பகுதிகள் வெளிவருவதற்குத் திருவருள் கூட்டுவதாக" என அவர் ஒவ்வொரு சஞ்சிகை முன்னுரையிலும் எழுதியது அன்பர்களுக்கு நினைவிருக்கலாம். இப்பேருரை வெளிவருதற்குப் பொருள் முட்டுப்பாட்டாலும் காகிதப் பஞ்சத்தாலும் திரு. முதலியார் அவர்கள் அடைந்த இன்னல்கள் பல என்பதை யான் அறிவேன். ஆனால் "முன்னவனே முன் நின்றால் முடியாத பொருள் உளதோ" என்ற சேக்கிழாரின் திருவாக்கின்படி 20-ம் நூற்றாண்டின் சேக்கிழாராக விளங்கும் திரு. முதலியார் அவர்களின் திருத்தொண்டினைப் பாராட்டித் திருப்பனந்தாள், தருமபுரம், திருவாவடுதுறை முதலிய மடங்களின் தலைவர்களும், இன்னும் பிற புரவலர்களும் பொருள் உதவி புரிந்தனர். இந்நூல் வெளிவருதற்கு உறுதுணையாக இருந்த மஹா சந்நிதானங்களுக்கும் பிற புரவலர்களுக்கும் சைவ உலகம் என்றும் கடப்பாடுடையது.

இந்நூல் வெளிவருதற்கு உறுதுணையாக விளங்கிய அன்பர் பலராவர். இப்பேருரையில் நாயன்மார்களைப் பற்றிய கல்வெட்டுக் குறிப்புக்களும் வரலாற்றுக் குறிப்புக்களும் எழுதி உதவியவர் திருவாளர் சி. எம். இராமச்சந்திரன் செட்டியார் பி. ஏ., பி. எல். அவர்கள். அவர் சிறந்த தமிழ்ப் பேரறிஞர் என்பதைத் தமிழ் நாடு நன்கு அறியும். இடையிடையே ஒப்பிட்டுப் பார்த்து உதவி புரிந்த சூரியனூர் கோயில்

ஆதீனத்து ஸ்ரீமத் முத்துக்குமாரத் தம்பிரான் சுவாமிகள், தனிகைமணி வ. சு. செங்கல்வராயப்பிள்ளை, எம். ஏ., திரு. வித்துவான் பி. பெரியசாமிப் பிள்ளை, திரு. கே. சோமசுந்தரம் செட்டியார், திரு. ஆர். சண்முக சுந்தரம் செட்டியார் முதலிய அன்பர்களுக்கும் நாம் நன்றி பாராட்டக் கடமைப் பட்டுள்ளோம். புகைப் படம் எடுத்துத் தருதல், காகிதம் வாங்கித் தருதல், சஞ்சிகை விற்றுக் கொடுத்தல் முதலிய திருத்தொண்டுகளில் ஈடுபட்ட திருத்துறையூர் கே. ஆறுமுக நாயனுர் அவர்களுக்கும் சைவ உலகம் என்றும் கடப்பாடுடையது. இவ்வெளியீட்டுக்குச் சென்னைப் பல்கலைக் கழகம் 2000 ரூபாய் உவந்தளித்தது மிகவும் பாராட்டற் குரியதாகும். இந்த அரிய வெளியீட்டிற்கு அரசாங்கத்தாரும் பொருள் உதவி புரிதல் வேண்டும். என்பது எனது வேண்டுகோள். தமிழ் நாட்டில் ஒவ்வொரு உயர்நிலைப்பள்ளி நூல் நிலையங்களிலும், கல்லூரி நூல்நிலையங்களிலும், பொது நூல்நிலையங்களிலும் இப் பேருரை வாங்கி வைக்கப்படுதல் வேண்டும். இப்பேருரையின் 7 பகுதிகளும் எப்போதும் விலைக்குக் கிடைக்கும்படி நாம் பார்த்துக்கொள்ளவேண்டும். இது சைவ நன்மக்களின் தலையாய கடமையாகும். எங்கள் சிவக்கவிமணி நீடூழி வாழ்ந்து மற்ற திருமுறைகளுக்கும் இத்தகைய பேருரை எழுதிப் பணிபுரிந்து பன்னெடுங் காலம் சிறக்க வாழுமாறு எமது குருநாதனுகிய ஸ்ரீ நடராசப் பெருமானை யான் எனது மனமொழி மெய்களான் இறைஞ்சுகின்றேன்.

" வாழ்க சீர் அடியா ரெல்லாம். "

30. திரு. மா. சிவகுருநாதன், சுந்தரபெருமான் கோயில்.

திருச்சிற்றம்பலம்

செல்வ நெடுமாடஞ் சென்று சேணோங்கிச் - செல்வ மதிதோயச் செல்வம் உயர்கின்ற
செல்வர்வாழ் தில்லைச் சிற்றம்பலமேய-செல்வன் கழலேத்துஞ் செல்வஞ் செல்வமே.

திருச்சிற்றம்பலம்

நம் பண்டைய நிகழ்ச்சிகளை உணர்த்தும் விழாக்கள் நம் நாட்டில் ஆண்டுதோறும் நடைபெறுவன பலப்பலவாகும். ஒரு சில எப்போதாவது நடப்பன. இவற்றைக் காணும்போதும் அவை நம்மை அக்கால நிலைக்கு இழுத்துச் செல்கின்றன.

சைவத்திருமுறைகள் வகுக்கப் பெற்றதும், திருத்தொண்டர் புராணம் சேக்கிழார் அடிகளால் பாடி அரங்கேற்றப் பெற்றதும் உலக இதயமாய் விளங்கும் தில்லைப் பதியிலாகும்.

சேக்கிழார் அன்று திருத்தொண்டர் புராணம் அரங்கேற்றிய சிறப்பை உமாபதி சிவத்தால் உணர்ந்தவரும் நமக்கு, அதனை எல்லாவிதப் பொருத்தங்களுடன் அமைத்துத் தாம் இதுவரை ஆராய்ந்துவந்த திருத்தொண்டர் புராணம் உரை அரங்கேற்ற விழாவில் காணும் பெரும் பேற்றை இன்று நமக்களிக்கின்றார்கள் சிவக்கவிமணி உயர்திரு சி. கே. சுப்பிரமணிய முதலியார் அவர்கள். காண்டற்கரிய இவ்விழா திருச்சிற்றம்பலவன் திருவருளால் இனிது நடைபெறவேண்டும்.

31. திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்

திருமுறை பன்னிரண்டு.

செந்தமிழ் மாமறை எனத், திரு அருள் கைவரப்பெற்ற நம்முன்னோச் செம் பொருட் டுணிவினராகிய சித்தாந்தசைவச் செந்நெறிச் சான்றோர் வகுத்தருளிய திரு

முறை பன்னிரண்டு. அவை முறையே மூவர்பாடியருளிய திருநெறிய தமிழாகிய தேவாரம் ஏழு, மணிமொழிப்பெருமான் அருளிய திருவாசகம் திருக்கோவையார் எட்டு, சேந்தனர் முதலிய ஒன்பதின்மர் அருளிய திருவிசைப்பா திருப்பல்லாண்டு ஒன்பது, திருமூலநாயனர் அருளிய திருமந்திரம் பத்து, இறைவன் உள்ளிட்ட பன்னிருவர் அருளிய பதினொராம் திருமுறை பதினொன்று, சேக்கிழார் அடிகள் அருளிய திருத்தொண்டர் புராணம் பன்னிரண்டு, இப்பன்னிரண்டு திருமுறைகளும் தெய்வ முழுமுதலுண்மையும், அவன் ஒருவனே என்னும் அருமையும், ஆவிகள் பலவும் யாண்டும் அடிமையே என்னும் தன்மையும், மலநீக்கற்காகச் சேர்க்கப்படும் மாயை வினைகள் அவன் உடைமையாம் என்னும் வாய்மையும், நானெறிப் பண்பும், நற்றுள்சேர் தொழுகையும், ஆண்டவன் அம்மையப்பராகி யாட்கொள்ளும் அருண்மையும் விளக்கும் தெய்வத்தமிழ்மாமறை என்ப. இவையே தமிழ்வேதம். இவற்றிற்கு இலக்கணம் போன்று அமைந்துள்ளது மெய்கண்ட நாயனர் அருளிய செந்தமிழ்ச் சிவஞானபோதம் ஆகும். திருமுறை பன்னிரண்டும் திருஐந்தெழுத்தின் தொகையாகிய "ஓம்" என்னும் முறையோடு விளங்கும் உண்மை "தோடு" என்று தொடங்கி "உலகெலாம்" என்று முடிவதால் பெறப்படும். "தோடு" என்பதன்கண் உள்ள தகரமெய் தமிழ்த் தகர மெய்யினைக் குறிப்பதாகும். திருமுறைத்திருமாமறைத் திருப்பாட்டுக்கள் தொடங்கும்போதும் முடிக்கும்போதும் "திருச்சிற்றம்பலம்" என்று ஓதிவருவது ஆன்றோர் அருண்மரபு. இத்திருச்சிற்றம்பலம் எழுத்தெண்ணுங்கால் ஆறேழுத்தாகும். திருமுறை சொல்லுங்கால் பன்னிரண்டு எழுத்தாகும். இவை பன்னிரண்டு திருமுறையினையும் நினைப்பூட்டும் எண்முறையாகும்.

## பேருரை

பன்னிரண்டாம் திருமுறையாகிய பெரியபுராணத்துக்குச் சிவக்கவிமணியாகிய திரு. சி. கே. சுப்பிரமணிய முதலியார் அவர்கள் பல்லாண்டு அரிதின்முயன்று பன்முறை ஓதிப்பயின்று திருவருள் துணையால் விரிந்த பேருரை விளக்கம் கண்டுள்ளார்கள். அவர்கள் வழிவழியாகச் செந்தமிழ்ப்புலமையும் சித்தாந்த வாய்மையும் கைக்கொண்டொழுகும் கடப்பாடு வழுவாக்குலத்துத் தோன்றியவர்கள். மும்மொழி வல்லார் ; செம்மொழிப்புலவர் ; நாவலர் ; பாவலர்; நாயன்மாரடிமறவா நன்னலத்தார் ; சிவனடிவழுத்தும் திருவினர்; திருமுருகன் தாள்சேர் செம்மலார்; திருமுறை பன்னிரண்டும் திங்கட்கு ஒவ்வொன்றாக ஓதி ஓராண்டில் சீருற முற்றுவிக்கும் திருவினர். அங்ஙனம் நாற்பதுயாண்டுகளுக்குமேலாக நாற்பதுமுறை ஓதி ஒழுகும் ஒப்பில் ஒருவர். நாம் எல்லாம்செய்த பெருந்தவப் பேற்றால் அவர்கள் இப்பேருரைப் பெருந்தொண்டை மேற்கொண்டு நிறைவேற்றியுள்ளார்கள். இப்பேருரை அளவிறந்த விரிவுடையதுபோல் தோன்றினும் அஃதோர் விரிவுரையாகமட்டும் அமையாமல் ஆராய்ச்சி, வரலாறு, கல்வெட்டு, ஏனைத்திருமுறைத் திருப்பாட்டுகளின் குறிப்புரை, அகச்சான்று புறச்சான்றுகள் அறிவுறுத்தும் திருப்பாட்டுகள், பல்வேறு திருக்கோவில்கள் - நாயன்மார்கள் முதலியோரின் நிழலோவியங்கள், இன்னும்பல இன்றியமையாச் சிறப்புக்கள் பலவும் அறிவுறுத்தும் அருள்நிறை கருவூலமாக அமைந்துள்ளது. இதனைச் செந்தமிழன்பர்களும் செந்நெறிச் செல்வர்களும் வாங்கியும் வாங்குவித்தும் கற்றுப்போற்றுவார்களாக.

## அரங்கேற்றம்

முதனூலாகிய திருத்தொண்டபுராணம் சேக்கிழாரடிகளால் திருத்தில்லை ஆயிரக்கால் மண்டபத்தில் பொன்னம்பலவாணர் திருவருளால் துவக்கி அரங்

கேற்றுவித்த முறைபோல் எம் செக்கவிமணியவர்களும் இவ்வாயிரக்கால் மண்டபத்து அருளாள் துலக்கி திறைவுறுத்தி அரங்கேற்றுவித்தார்கள்.

இவ்வரங்கேற்றுவிழா நாம் காணும்படியான பேறு பெற்றது நம் தவப்பயனே யாம். இவ்விழாவிலும் திருமடமுதலிகள், சிறப்புறு ஓதுவார், வேத்தவை முதன்மையர், பல்கலைக்கழகப்பயனுர் வேந்தர்கள், நாவலர் பாவலர், நற்றமிழ்மாந்தர், செய்தவச் சான்றோர், திருவுடைச்செல்வர் யாவரும் ஒருங்குகுழுமிப், பொலிவுறு பொன்னுடை போர்த்தல், பொற்கிழிவழங்கல் முதலிய அருஞ்சிறப்பு அருளால் நிகழ்த்தினர். திருக் கோவிற் சிறப்பு, அடியார்க்கு அமுதளித்தல், ஆனைமேல் திருமுறை உலாவரல் முதலியனவும் கண்கொள்ளாக் காட்சியாக் கண்டு களித்தனம். நாட்டவர், நகரத்தவர், பல்வேறுகழகத்தவர்தம் வாழ்த்துரையும், மகிழ்வளிப்பும் பற்பலவாகும்.

இத்தகு பேராசிரியரவர்கள் பொன்னம்பலவாணர் திருவருளால் நீடுவாழ்ந்து எல்லாநலமும் எய்தி ஏனைத்திருமுறைகளுக்கும் நல்லுரைவகுத்து நமக்கருள நாம் அவன் திருவடியை வாழ்த்துவோமாக. வாழ்க பேருரை! வாழ்க சிவக்கவிமணி! வாழ்க திருமுறை! வாழ்க சிவநெறி! வாழ்க வையகம்!

## 32. மாம்பாக்கம் - குருகுலத்தார்

காவலன் அன்று கரிசுமக்கப் போற்றினன்,
கோவையார் பேருரை கூடியிற்று—சேவை திருத்
தொண்டர் புராணமாத் தூக்கினர் நாசுமக்க,
உலகம் உயர்வு;

## 33. சிவஸ்ரீ ஈசானசிவாசாரியார், திருவாடானை.

செல்வமலி தில்லைச் சிவபெருமான் தன்னருட்
சொல்லின் வழிவந்த தூயதமிழ்.—அல்லல்
தவிர்த்தெங்கு மானந்தம் தந்திடுமா குன்றைச்
கவிசெய்த காவியமே காண்.

காண்பார் மனமுருக்கிக் கண்பனிப்ப மெய்புளக
மாண்பாரு மிக்கவிதை மாநிலத்துப்—பூண்பார்
சிரமீது மெய்யடியார் தேடிநித மேற்றிக்
கரமீது கொள்வார் களித்து.

களித்து நடம்பயிலும் கண்ணுதலோன் தாளில்
துளிர்த்த மறையமுதம் துய்த்தே—அளித்த
பெரிய புராணமெனும் பேசரிய காதை
விரித்தவுரை யீதாம் விளம்பு.

விளம்பினனே சுப்ரமண்ய வித்தகனு மன்பால்
உளங்கனியத் தோய்ந்திட்ட உண்மை—வளங்கொழிக்க
கல்விதமாம் பேருரையை நாட்டிச் சிவனருளால்
பல்லூழி வாழ்க பரிந்து.

## 34. வித்வான் திரு. கு. நடேச கவுண்டர், கோவை.

எண்டிசையும் வாழறிஞர் பயில்மொழிக ளெவற்றன்றும் இணையில் லாமல்
தண்டமிழே மலைஞ்சிறப்பத் தமிழ்நாடே சிவநாடாத் தகைமைத் தாகக்

கண்டதிருக் கழுமலக்கோன் முதற்பெரிய ரருண்மறையின் கருத்தெம் போல்வார்
மொண்டருந்தத் தருமருளால் திருத்தொண்டர் புராணமென மொழிவர் மேலோர். 1

அருந்தமிழின் இயற்கெடுத்துக் காட்டாகிச் சிவானுபவ வமுத மாகிப்
பெருந்தகைக்ம விறைகோலாய்த் தமிழ்மறைக்குப் பேருரையாய்ப் பிறவி நோய்க்கு
மருந்தனைய திதுவென்று மெய்கண்ட நூலறிஞர் மதிப்ப தாகும்
திருந்துபுகழ்ச் சேக்கிழார் அம்பலவ ரருள்கொண்டே செய்த விந்நூல் 2

இந்நூற்கு முன்னாளில் எழுந்தஉரை பலவேனும் எவரும் ஓத
இந்நாளில் கிடைப்பரிதாங் குறையொழியத் தொகுத்துவிரித் திதுவே மாசு
துன்னாத வுரையென்னக் காட்டிநெடு நாளுழைப்பால் துலக்கித் தந்தே
எந்நாளும் நிலையான பொருட்புகழைத் தகுதியினால் எய்தி னானால். 3

இருக்கோலக் கழற்பேரூர்ப் பட்டீசர்க் கினியபணி இயற்றி வாழ்வோன்
கருக்காத பேரன்பால் என்போல்வார் சைவநலந் தோயச் செய்தோன்
பெருக்கோவில் செல்வர்வாழ் கோவைநகர்ப் புண்ணியமாய்ப் பிறந்து வாழ்வோன்
திருக்கேது மில்லாத சுப்பிரமண்யப் பெயர்க்குச் சிறந்துள் ளோனே. 4

நன்னூலாந் தொன்னூல்கள் நவையறக்கற் றேசைவ நலமுந் தோய்ந்து
பன்னூலின் பயனுய பானுவழி படுபுலவர் பார்க்கக் கிட்டா
இந்நாளில் அரும்பெறற் சுப்பிரமணிய னபிநவசேக் கிழான்என் சீர்த்தி
என்னானை யன்னானை யம்பலவன் பெருங்கருணை இனிது காக்க. 5

## 35. திருக்குறள் கழகம், சேலம்

பெரியார் புராணப் பெருமையைப் பாரோர்
உரிய முறையிலே ஓர்ந்து - தெரிய
அகல உரைசெய்த அன்பர்கள் நாளும்
இகலின்றி வாழ்க வினிது.

பண்டு புரமெரித்த பண்பாளன் நல்லருளை த
தொண்டர் புராணமெனுந் தூக்கினத்தால் - மொண்டு
குடிக்கின்ற நல்லுயிர்கள் கூர்நரகாந் தீவாய்
மடிக்கின்ற தில்லையென நாட்டு.

சேக்கிழார் செய்த திருமறை என்னான்றும்
வாக்கிறந்த பல்லூழி வழியரோ - ஆர்க்கும்
மனமும் மலமும் மருளும் அவற்றின்
இனமும் இரிந்தோட ஈண்டு.

## 36. திருவாசகமணி, திரு. K. M. பாலசுப்பிரமணியம், பி. ஏ., பி. எல்,
திருப்பரங்குன்றம்

வெண்பா

வள்ளுவர் நூல் கற்பதற்கு வாய்த்தபரி மேலழகர்
தெள்ளுரையை நாடும் திறம்போல—வள்ளலவர்
சேக்கிழார் நூல்கற்க 'ஸ்ரீ.கே.எஸ்.' சீருரையை
நோக்குவார் என்றே நுவல்.

37. தணிகைமணி-திரு. வ. சு. செங்கல்வராய பிள்ளை, M. A. சென்னை.

என்னிருகண் மணியாகும் பன்னிருகண் கொண்டபிராற் கியைந்த பேராய் !
பன்னிருநற் றிருமுறைகள் தமையாண்டு தோறுமுறையே படிக்குஞ் சீரோய் !
அன்னைதிரு வுடன்வாணி அமர்ந்திலகும் எழிற்கோவை யாமவ் வூரோய் !
கன்னலனுந் தமிழுடனே சைவநெறி பெருகவழி காணு நீரோய் ! 1

சிவஞானம் நிறைதவத்தர் கந்தசாமிப் பெயர்கொள் செல்வர் நல்ல
தவஞானச் செல்வரவர் செய்தவத்தின் பயனாகத் தரணி வந்து
பவமாற்றும் வழிகண்டு திருத்தொண்டர் புராணமதைப் பாரில் உள்ளோர்
அவமாறித் தவம்பற்றச் சொற்பொழிவு பலசெய்யும் ஆற்றல் வாய்ந்தோய் ! 2

அருமையுள தென்றளத்தில் அசவாமை வேண்டுமெனும் அந்த வாக்கின்
பெருமையுணர்ந் தருமையுள திருத்தொண்டர் புராணமதைப் பெரிதும் ஆய்ந்து
தருமுறையொன் றுலகுக்கு நீயளித்த திறமதனைத் தமிழர்யாரும்
ஒருமுறையோ பலமுறையாப் புகழ்ந்துபுகழ்ந் துளங்களிப்பர் உண்மை யீது. 3

அடியார்கள் இணக்கமதே பேறுதரும் எனுமுண்மை அதனைக் கண்டு
குடியாகத் தொண்டுசெயும் ஆறுமுக நயினர்போற் குறைவி லன்பைப்
பிடியாகப் பிடித்த அன்பர் நின்பணியைப் பெரிதுவந்து பேசு கின்ற
ஒடியாத புகழ்ப்பேச்சைக் கேட்டிங்கென் உளமுவக்கும் உண்மை யீது. 4

என்னேயிவ் விவர்பக்தி என்னேயிவ் விவர்சைவ யீடு பாடு
என்னேயிவ் விவர்க்குள்ள கலைஞானம் தமிழ்ஞானம் என்று நாளும்
நன்னேய அன்புடனே நானிலத்தோர் புகழ்கின்ற நலஞ்சால் கீர்த்தி
பொன்னேபோற் பெற்றதிரு மிக்கோய்நீ பல்லாண்டு பொலிந்து வாழ்க. 5

தில்லையிலே சேக்கிழார் பெரியபுரா ணக்கவிகள் சிறக்கச் சொற்றார்
தில்லையிலே நீயுமின்று பெரியபுரா ணத்துரையைச் சிறக்கச் செய்தாய்
தில்லையிலே, தில்லையதன் எல்லையிலே, சேர்ந்தார்க்குத் தீய காலன்
தொல்லையில்லை அதனால்நீ சிவனருளாற் பல்லாண்டு சுகமே வாழ்க. 6

38. வித்வான்-திரு. லெ. ப. கரு. இராமநாதன் செட்டியார், அண்ணாமலைநகர்.

உலகமெலாம் தனதுருவில் ஒடுங்கியுதித் திடப்புரியும் ஒருவற் கன்பு
பலபலவா றியற்றுதிருத் தொண்டர்புரா ணத்தினுக்குப் பதினெட் டாண்டு
நலமலிய ஆராய்ந்து விரிவாக உரைவகுத்து நயங்கள் கண்டு
புலவர்விருந் தெனப்புகலப் பதித்துவெளிப் படுத்ததிறன் புகலற் பாற்றே. 1

எத்தனையோ திருத்தலங்கட் கேகியங்கட் சான்றாகு மெல்லாந் தந்து
வித்தகத்தே வாரமுதற் றிருமுறையின் மேற்கோளும் விளங்கக் காட்டி
முத்தமிழின் நெறிவழுவா திலக்கணமுங் குறித்திந்நூல் முழுதுங் கற்றோர்
சித்தநிறை வுறச்செய்த சி.கே.சுப் பிரமணியச் செம்மல் வாழ்க. 2

செயற்கரிய செயல்செய்த பெரியர்வர லாறுகளைத் தேடி யாய்ந்து
மயற்கறைநீர் சேக்கிழார் பெருமானார் அருள்நூலின் மாண்பு குன்றா
தியக்கியுரை வளத்தாலும் பெரியபுரா ணம்மெனுமா றியற்றி யோர்க்கும்
புயற்கும்உல கஞ்செய்யும் கைம்மாறுண் டோகல்லீர் புகலு வீரே. 3

ஆன்றதமிழ்ச் சங்கத்தால் அரும்பணிசெய் துரைநடைநூல் ஆக்கிச் சைவத்(து)
ஊன்றியமெய் யன்புடனே பற்பலசொற் பொழிவாற்றி உயர்ந்த சீலம்
என்றுசிவ நெறிக்குஞ்செந் தமிழ்க்கும்வாழ் நாள்முழுதும் இருந்தொண் டாற்றும்
சான்றவன்சுப் பிரமணியத் தோன்றல்பல் லாண்டுநலஞ் சார்ந்து வாழ்க. 4

39. வித்துவான் சே வெங்கடராமச்செட்டியார் அவர்கள், திருப்பதி.

ஆழ்கடலில் குளித்தொளிரும் அருமுத்துத் திரளினையோர் அல்ல லின்றி
எழ்புவியின் மக்களெலாம் பெற்றணியத் தருந்தொழிலை எற்றோர் போலத்
தாழ்வில்லாத் திருத்தொண்டர் புராணமெனும் கடல்குளித்துத் தாமே கண்டு
சூழ்ந்தபெரும் பேருரையைச் சி.கே.சுப் பிரமணியம் தோன்றச் செய்தார். (1)

பலநல்ல நூல்கற்றுப் பழகியநல் லறிவாலும் பரமன் றனைக்
கலந்துணர்ந்து வழிபட்டுப் பழகியநற் றெளிவாலும் கற்றோர் காணப்
புலமிக்க பொருளுரையைப் புவிமக்கள் தெருளுறவே பொருந்தச் செய்தார்
நலமிக்க நெஞ்சத்தார் சி.கே.சுப் பிரமணிய நாவல் லோரே. (2)

அவ்வுரையின் தெளிவுதனை அழகியநல் நயவுரையை ஆழ்ந்து கண்டோர்,
தெவ்வகல வுலகாண்ட அநபாயன் றனைத்திருத்தச் சேக்கி ழார்தாம்
இவ்வய்ய முய்யச்செய் பெரியபுரா ணந்தனக்கே இணையி லாத
இவ்வுரையை யியற்றுதற்குச் சி கே.சுப் பிரமணியம் ஆனார் என்பர். (3)

வேறு

இலக்கியத் தெளிவ தென்கோ இலக்கண வரம்ப தென்கோ
நலமிகு சித்தாந் தத்தின் நன்மைசேர் விளக்க மென்கோ
புலத்துறை கடந்த அன்பின் பொருந்திய வடிவ மென்கோ
புலமுடைச் சுப்ரம ணியம் புகன்றபே ருரையை யானே. (4)

இன்றள வுயின்சோழன் இருகையிற் கவரி கொண்டு
நின்றுநம் முதலி யார்க்கு நினைவொடும் வீசு வானே!
என்றதோர் குறையுண் டேனும் இருநில மக்கள் நெஞ்சில்
நின்றுபல் லாண்டு வாழ்க நீளுரை செய்தோர் வாழ்க. (5)

40. வித்துவான் ந. சேதுரகுநாதன், அவர்கள், விருதுநகர்.

காரண காரியங்கடந்து கடவுளையே காண்பதற்குத் துணையாய்க் காட்டுஞ்
சீரணவு பெரியபுரா ணத்திற்குச் சிறந்தவுரை செய்த சீர்த்திப்
பேரணவு சுப்பிர மணியனார் புகழ்பரவிப் பிறங்கு கீர்த்திப்
பாரணவு தமிழ் வளர்த்து நீடூழி பைந்தமிழ்போல் வாழ்வோ மாக. (1)

அம்பலத்தார் திருமுன்பு அரங்கேற்றும் உரையமிழ்தம் ஆர்ந்து நாமும்
உம்பருல கெய்தாத பெருங்களிப்பில் உளங்களித்து உலகம் போற்றும்
செம்பொருளைப் பரவுதமால் சீர்பெருகு வாழ்த்துடனே செயல்கள் செய்யும்
நம்பனார் எல்லோர்க்கும் என்வணக்கம் நாள்நாளும் தழைக மாதோ. (2)

41. தொண்டைமண்டல வேளாண்குடிப் பெருமக்கள், ஆனைமலை.

வாழ்த்து

அம்மையு மப்பனுமாகிய எம்பிரான்-இம்மை மறுமையினெண்ணற் கரியவன் [வாம்!
தம்மை யுணர்த்த வர்க்காதியாஞ் சோதியன்-செம்மை வளர்ப்பவன் சேவடி வாழ்த்து

### வாழ்த்தியோர் நகர்ச்சிறப்பு

பூசிறை பொலியும் மாநில மீதில் - பழமை நிலையில் புதுமை யாகி
வளம்பெரு நிலமுங் களம்நிறை நெல்லும் - பெருகப் பெருகும் நதியின் பெருக்காற்
குன்றாச் செழிப்போ டொன்றிய நாடாங் - தமிழ்நா டென்னுந் தலம்புகழ் நாடே !
நாடே யாதல் வளர்பல தேடாம் ; - பலநூ றாணும் நலஞ்சேர் வாழும்

ஆழி நதியின் மேல்கரை யமைந்த - யானை மலையென வானை யடைபெய
ராகி விளங்க லோடு அறிவிலும் - ஆற்றலும் வண்மையு மாற்றல ரின்மையுஞ்
சீர்மையுந் தெய்வச் சிறப்பும் வழிவழி - நேர்மையு மழியா நிலையின் முறையுந்
தன்னுடைத் தாமென தோடு - மன்னுடைத் தமிழ்வல் லாரிலும் மலிவே !

—கு. சண்முகம்

### பெரிய புராணப் பெருமை

சைவந் தழைத்ததும் உய்வழி சார்ந்திடக் - கைவந்து உற்றதும் அன்புங் கருணையுந்
தைவந்த நாவெனத் தெய்வத் தலங்களி - லைவந் துயர்ந்ததன் றையனின் வாயினால்!

### சேக்கிழார் பெருமான் சேவை

அன்றத்தன் வாக்கினைக் - குன்றத்தூர் சேக்கிழார்
மன்றத்து ஆக்கினார் - நன்றோத்து வாழவே !

### தமிழ்ப் பெரியார் திருவாளர் சிவ. ஆதிநாராயணன் பிள்ளை அவர்கள்

[நிலை மண்டில ஆசிரியப்பா]

மலர்தலை யுலகின் மனவிரு ளிரியப் - பலகலை நிரம்பிய பாவலர் வாழுங்
கொங்குக் கணியெனக் குலவுங் கோவையில்-எங்கள் குருவாய் இதயங் (
சங்கரன் தொண்டன் சற்குண நேயன் - இங்கிலீஷ் பி.ஏ. எனுமகு டத்தோன்
மருதங் கோவை மாற்றயர் பேரூர்க் - கருமை பிரபந் தங்கள் ஆக்கிய
வழக்கறி ஞர்வித்வான் வல்லோர் வழுத்துங் - குழக நாமக் குரிசில் கந்த
சாமி முதலியார் சந்ததி வந்தோன் - பூமியிற் புருடர் புகழ்ந்திடு பொருநிஷ்
காமிய தவமே கருத்திற் கொண்டோன் - நாமிவர் நாநலம் நாளுங் காணச்
சொன்மாரி பெய்யுந் தூய வுளத்தன் - எந்நா ளுந்திரு நீறட னெழில்மிகு
கண்டிகை யேற்ற மார்பன் கருத்திற்-றொண்டர் புராணந் தொகைவகை விரிவாய்ச்
சொல்ல வெண்ணித் தூர தேயத் - தொல்பதி யாவுந் துருவிப் புதுமைகள்
கண்டுவந் தெமக்குக் காசற விளக்கிய - பண்டைப் பெருமையன் பசுபதி தான்நினை
சிவக்கவி மணியெனச் சீர்சால் புலவர் - உவக்க வுரைக்கு முறுதி யுளத்தன்
சீ.கே. சுப்பிர மணியாம் முதலியார் - வாக்கே கேட்க வகுத்திடு மாங்குதான்
செயமாம் வருடஞ் சித்திரை மாமதி - பயமி லிருபத் தைந்து வெள்ளி
பஞ்சமி திதியும் பகர்திரு வாதிரையுஞ் - சங்கர சயந்தியுஞ் சார்ந்தநா ளிதனில்
சிதம்பர மாயிரக் கால்மண்டபத் தான்றோர் - நிதம்பரவப் பொன்னுடை போர்த்துப்
[பொற்கிழியும்

நவா ரெனக்கேட் டென்னுள மெழுந்த - ஓவா வுவகையா லோரிருசொன் மலர்
பெய்தவர் பொன்னடி பேணித் துதிக்கவே-பையன் றணிந்தனன் பாவலர் பொறுப்
தில்லைநட ராசர் திருவரு ளதனால் - எல்லையில் காலம் நம்இவர் வாழ்ந்து [பீர் !
பல்கலைப் பண்பும் பார்த்துப் பார்த்துச் - சொல்வளம் பெருக்கிச் சுத்த சைவமே
நின்று நிலவ நிலவுல கிதனில் - தன்றுணை சுற்றமொடு தனம்பெற வாழியே !

வித்வான் திரு. சு. வேங்கடசாமி ராசு அவர்கள்

[விருத்தம்]

தண்டமிழ்க் கோவை தன்னில் தலைமைசால் புலவ னாகி
மண்டிணி ஞாலத் தோர்க்கு வழிபாடு கூறு நேர்மைத்
திண்டிறல் ஞானி யான திறமைசேர் சுப்பிர மண்யம்
கண்டவர் வியந்து கூறக் கவிப்பணியி லுயர்ந்தோன் மன்னோ ! (1)

வாக்கினி லூக்கம் பொங்கும் மனத்தினி லன்பு பொங்கும்
நோக்கினில் சமதை பொங்கும் நுண்ணறி வாற்றல் பொங்கும்
ஆக்கையில் நீறு பொங்கும் ஆகமம் பொங்கும் பாட்டில் !
வாக்கினில் வல்லா னிந்த மகிமைசால் சுப்பிர மண்யம் ! (2)

கோக்கிழா ராகவந்த கோவையின் கிழவன் நாளும்
சேக்கிழா ரன்பு கூர்ந்து திருத்தொண்டர் பெருமை தன்னை
நாக்கிழா ரெல்லா மெச்ச நானிலம் புகழ விங்கு
ஆக்கினா னாக்கந் தந்தா னருமையி னருமை யாக ! (3)

தந்நாட்டு மொழியா மிந்தத் தாரணி தமிழ தான
நந்நாட்டு மொழியா லிங்கு நயம்பட வுரைத்த சீலன் ;
எந்நாட்டு மொழியு மொவ்வா வின்தமிழ்ப் புலவ ரேற்குப்
பொன்னாடை போர்த்த லொன்றோ? போதுமோ? புவியி லின்று? (4)

பத்தியின் கோவை நல்ல பற்றற்ற கோவை மெத்தப்
புத்தியின் கோவை நல்ல புதுமொழிக் கோவை யென்றும்
வித்தையின் கோவை நல்ல மெய்ஞ்ஞானக் கோவை நாமும்
பத்தியிற் போற்றி யுள்ளப் பண்பினில் வைத்துக் காப்போம் ! (5)

வித்தகக் கோவை யின்றி விறல்பட வெத்தி யென்றும்
புத்தகக் கோலங் காணப் புதுவழி வகுத்த சீலர் !
மெத்தவே கீர்த்தி பெற்ற மெய்ப்புகழ் சுப்பிர மண்யம்
பத்தியை மெச்சி யின்று பதமலர் சூடி வாழ்த்தி, (6)

யானைமா மலையி னன்பர் அருந்தமிழ் வேங்க டேசன்
ஞானமா முனியை யின்று நயந்துபல் லாண்டு பாடித்
தானமாம் வித்தை யீயுஞ் சதுரனெப் போதும் வாழ
ஞானநா யகனின் பாதம் நாளும்நாம் வழுத்தி வாழ்வாம் ! (7)

திரு. ஆ. ர. நரசிம்மன், பி.ஏ., அவர்கள்

[ஆசிரியப்பா]

சொல்லாற் பொருளாற் சொலிக்குங் கோவை - மல்லல் மாநகர் மன்னிய செல்வன்
வழிவழி சிவனடி வாழ்த்தி வணங்கும் - விழுக்குடி விளக்க வந்தவன், வரம்பில்
தொண்டர்சீர் பரவுவார் தொல்குலத் தோன்றல் - கந்த சாமிக் கண்ணியன் செய்த
முந்திய தவப்பயன் முழுதுந் திரண்டு - வந்ததென் றியாவரும் வந்தித் துரைப்ப
வாய்ப்பா யமைந்த வடிவந் தாங்கி - ஒப்பிலா மணியாம் சுப்பிர மணிய
நற்பெயர் பூண்டவன் நானிலம் போற்றும் - ஆங்கிலங் கற்ற மேதை யாகியுந்
தீஞ்சுவைத் தமிழுந் தெளிவுறத் தேர்ந்தோன் - அஞ்செழுத் தோதி ஓதி யன்பினால்

நெஞ்சநெக் குருகி நிற்கும் நேயன் - சைவந் தழைக்கத் தமிழுந் தழைக்கச்
சலியா துழைக்குஞ் சதுரன், சற்றும் - கலயிலார் வளர்க்கும் நாத்திகப் பனிக்கோர்
பலகலைப் பகலவன், பத்திப் பெருங்கடல், - கற்றவர் கற்பகம், கருணையின் நிலயம் !
அருண்மொழித் தேவர் பொன்மொழி நூற்கு-விரிவுரை கண்ட வித்தகன், முன்னாள்
நாவலர் வைகிய நல்லூ சறிஞர் - ஆவலாய்க் கூடி அகில மறியச்
சிவக்கவி மணியெனச் சிறப்பாம் பட்டம் - அளித்துப் பெருமை எய்தினர் ! அம்மா !
'உலகெலா' முதவிய பெருமா னடியவர் - அலகில்சீர் வாலா றமைந்த காவியம்
கலங்கினர் சேக்கிழார் கன்னய நாவினால் - வலம்படத் தில்லையில் வளராங் கேறிய
இடமும் ஆயிரங் காலா லாகிய - இடங்கொள் மண்டபம் நாளுஞ் சித்திரைத்
திருவா திரையே திருநா ளிதனைத் - திருவிழா வாக்கித் திரளாய்க் கலைஞர் [டையும்
ஒருவழிக் குழுமி ஓங்கும் மண்டபத் - தொருஙிழிப் பொன்னும் உயர்ந்தபொன்னு
உரிய முறையி லுய்வான் உதவும் - பெருமை யெய்தினர் பெரிதும் அம்மா !
ஊழி யூழி அவன்புக(ழ்) உயர்க ! - தாழ்விலா தின்றுபோல் என்றும்,
வாழ்க ! வாழ்கவில் வண்புக ழோனே !

திரு. தென்மொழி ஞானபண்டிதன் அவர்கள்

தொண்டாற்றும் நல்ல துநிமனத்த னுங்கியவன்
'கண்டேன் சிவனை'யெனக் காட்டவே-உண்டாமால்,
சேக்கிழார் வாய்தந்த திருத்தொண்டர் புராணமதை
வாக்கினார் சி.கே.எஸ். வாய் ! (1)

வெண்ணீ றணிந்ததிரு மேனியு மானந்தக்
கண்ணீர் சொரியுமருட் கண்களும் - புண்ணிய
சேவையும் வாய்மையுஞ் சிவவழிக் கவிமணி
நாவையும் வாழ்த்துமென் நா ! (2)

உள்ளுத லுரைத்தல் செய்தல் உலகுயி ருய்தல் வேண்டிக்
கொள்ளுதல் நோன்பின் கொள்கை ! குலமெலா மொன்றென் றொப்பித்
தெள்ளுதல் பெற்ற செல்வ ! சிவக்கவி சுப்பிர மண்ய
வள்ளலே சைவந் தந்த வரமேசல் வலமே ! வாழி ! (3)

திருச்சிற்றம்பலம்.

42. ஸ்ரீ தாயுமான சுவாமி சன்மார்க்க சங்கத்தார், இராமநாதபுரம்

ஆசிரியப்பா

மலர்தலை யுலகத்து வாழ்பவர்க் கெல்லாம்
பலகலை யுணர்த்தும் பைந்தமிழ்ச் செல்வி
இலகுபன் னூல்கள் எய்திடப் பெற்றாள்
அன்னையள் பெற்ற அருந்தமிழ் நூலுள்
சிந்தைக்கு வேதம் செவிக்குயா ழிசையென
உலகெலாம் போற்றும் ஒப்பிலா நூலாம்
பெரிய புராணப் பீடுறும் நூற்கு
அமரர்கள் அருந்தும் அமிழ்தினைக் கொணர்ந்து
தரணியர்க் களித்த தன்மையே போன்றும்

நாத்திகம் என்னும் தனிபெரும் பகையைப்
போக்குதற் கெழுந்த புரவலன் போன்றும்
சைவத்தின் மேன்மை தனையறி யார்க்கும்
ஐயம தகற்றும் அறிவொளி போன்றும்
அருண்நெறி யறியா தலைகுநர் தமக்கும்
மருளகற் றிடும்நன் மருந்தே போன்றும்
பன்னாள் முயன்று பலநூ லாய்ந்து
பேருரை பகர்ந்து பெரும்புகழ் கொண்டான்
சொல்லரும் புகழ்சேர் சுப்பிர மணியன்
அன்னவன் தொண்டை அனைவரும் உணர்ந்து
எம்பெரு மானின் இணையடி தொழுக
அன்புபொங் கிடுக அறம்வளர்த் திடுக
இன்பமே செய்க எழிற்கலை கற்க
அருளுளம் கொண்டு யாண்டும்
வாழ்க வாழ்க வாழ்க வாழியவே !

விருத்தம்

உலகெலாம் சைவ மோங்கி உயிரெலாம் அன்பு தாங்கி
அலகிலாம் பணிவு மோங்கி அருளுடன் ஈகை யோங்கி
இலகுநூல் உணர்வு மோங்கி யாங்கணும் நேர்மை யோங்கப்
பலகதிர்ப் பரிதி யென்னப் பேருரை பகர்ந்தான் மாதோ

வெண்பா

வாழ்க சிவனுமம் வாழ்க திருச்சைவம்
வாழ்க தமிழ்நூல்கள் வாழியவே—ஆழ்கடல்சூழ்
எந்நாடும் போற்ற இசைசேர் சிவனடியார்
எந்நாளும் வாழ்க இனிது

43. திருஞானசம்பந்தர் திருவருட்கழகத்தார், பேட்டை

எழுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்

சீரார் சைவத் திருநெறி பேணத் திருந்திய வுள்ளமே வாய்த்த
ஏராரும் கோவை சிவக்கவி மணியாம் இன்சொலார் சுப்பிர மணியப்
பேராரும் முதல்வர் பெரியபு ராணப் பேருரை விளக்கமே திரட்டிப்
பாரோருக் கீந்த பணியையா மெல்லாம் பாராட்டுங் கடமைப்பா டுடையோம்.

உடையவ னடியில் உறுதியே கொண்டு உரம்பெறு தொண்டினில் திளைத்த
அடியவர் வரலா றம்பல வாணன் அருள்சுரந் தருளிய வாறே
நெடியகா வியமாய்ச் சேக்கிழார் செய்து நிரம்பிய வளம்பெறத் தந்தார்
படிமிசை யதனைப் பன்னிரண் டாகும் பயில்திரு முறையெனப் பெற்றோம்.

பெற்றவர் நூலின் பெரும்பயன் நாமும் பிழையறக் கண்டுதுய்த் திடவே
உற்றதன் விளக்க உரைபல வாண்டாய் உரிமைதேர் உழைப்பினால் தந்த
நற்றவர் சுப்பிர மணியராம் தோன்றல் நற்பிறப் பெய்திய பயனைக்
கற்றதன் கடமை நிறைவுறப் பெற்றார் கங்கைவார் சடையவன் காப்பே.

'காப்பது விரதம்' என்னவே கூறும் கவினுரைக் கருத்தினைத் தேரில்
பாப்பணி பாமன் பதமலர்க் கன்பு பழுதறக் கொண்டுதன் வாழ்வில்
ஏற்பதோர் பணியை இனிதுற முடித்தற் கிறைபருள் கூடுதல் காண்மின்
சேர்ப்புறும் வாழ்க்கைச் சித்திர மிதனைத் தெளிந்திடற் கிதுவொரு சான்றும்.

தெளிந்துணர்ந் தறிதற் கரியதாம் சிவனைத் திருவிரற் சுட்டினூற் காட்டித்
தினைத்திட வல்ல காழியின் வள்ளல் திருப்பெயர் துலங்கவே திகழும்
வளர்திரு மங்கை நகரெனும் பேட்டை மருவிய கழகத்தி லீராண்
டெழில்பெறத் தலைமை தாங்கியின் னுரைகள் இசைத்தனர் சிவக்கவி மணியே.

சிவக்கவி மணியின் சிலம்பாம் தேரில் சிந்தையும் செயலுமே யொத்துப்
பவக்கடல் நீந்தப் பண்புறு பணியைப் பயன்பெறக் கடைப்பிடித் தேற்று
தவப்பெரு மலிவால் நிறைவுறப் பெற்ற சால்பினைப் போற்றியா மெல்லாம்
உவப்புடன் அன்னார் பல்லாண்டு வாழ உமாபதி தாள்பணி வோமே.

நேரிசை வெண்பா

ஈசன் புகழ்பேச என்றென்றும் உள்ளுருகும்
நேச வுளம்படைத்த நேர்மையார்—தேசுதிகழ்
கோவை நகர்ச் சுப்ர மண்யக்கோ மான்செய்த
சேவைக்குப் பாராட்டுச சீர்.

சீரார் ஜயசித்ரை தேதியிரு பத்தைந்தில்
ஏரார் திருவா திரைநாளில்—பேருரைப்
பாராட்டு நல்விழா பண்பார்தில் லைப்பதியில்
கோராக வுற்றதுவும் நேர்.

44. புலவரேறு - திரு ஆ. வரதநஞ்சைய பிள்ளை அவர்கள், தோரமங்கலம்

எண்சீர்க் கழிநெடிலடி யாசிரியவிருத்தம்

பெரும்புகழாம் இகலமும் பரத்து வீடு
பேறுநல்கும் செந்நெறியான் றிருக்க வேயும்
கரும்பிருக்க இரும்பை மெல்லுமவர்போற் செத்த
கதைவிரும்பும் வீணர்களைத் திருத்த அந்நாள்
பொருந்திய சேக்கிழானை இறைவன் றன்போற்
புனிதப்பே ருடையாரைப் பணித்துத் தானே
திருந்தமுத லடியெடுத்துக் கொடுத்து நன்கு
செய்வித்தான் தனதன்பர் சரிதம் அம்மா.

[சே-எருது; கிழான்-உரியோன், எனவே இடபத்தை வாகனமாக உடைய சிவபெருமா னென்னல் அறிக.]

சொற்சுவையும் பொருள்வளமும் நிரம்பப் பத்திச்
சுவைபொங்கிப் பொழிந்துபெருக் கெடுப்ப வூன்றிக்.
கற்குநர்தம் முளமுருகிப் போ ரானந்தக்
கடறிளைப்ப வுயர்சைவ சித்தாந் தத்தின்

பற்பலநாட் பழுங்காண விளங்கு மந்தப்
பனுவலின்பேர் திருத்தொண்டர் புராண மாமால்
விற்பனாற் புதமெனக்கொண் டாடு மந்நூல்
விரித்தவுரை பெறுதபன்னு ளிருந்த தன்றே.

இங்குயிர்க்கு மறுபிறபபும் வினையின் செய்தி
யியல்நரகும் வீடுமில்லை இறைவ னில்லை
மங்கையர்தம் முடனுடி மகப்பெ றெய்தி
வாழ்வதுவே கைகண்ட பலனு மென்னச்
சங்கையிலார் குழாம்பெருகு மிக்கா லத்தே
தானந்த வுரைவருதல் தருமென் றெங்கோன்
செங்கமலப் புனல்வயல்சூழ் கோவை மேவும்
சேக்கிழார் திருமாபிற் றோன்றுஞ் செம்மல்.

சிவபெருமா னேபதியெவ் வுயிர்கரு மன்பு
செய்கின்ற பெரியோரே யவனைச் சார்வார்
தவங்கடமை மக்களுக்கென் றுணர்த்துங் கந்த
சாமி வள்ளல் நல்வினையோ ருருவாய்த் தோன்றும்
சிவக்கவிமா மணிசுப்பிர மணியப் பேர்
திகழ் முருகன் பேராகுந் தகுதி நோக்கி
யவர்க்கருளி யுரைவிரிப்பித் தம்ப லத்தே
யரங்கேற்றல் கூத்தன்வினை யாட்டே யன்றே.

தில்லையா மிப்பதிபோ லுலகத் தில்லை
சிவபெருமான் போற்றெய்வம் பிறிதொன் றில்லை
நல்லசைவ சித்தாந்த நிகர்நூ லில்லை
நவில்பத்திச் சுவையுரைக்கச் சேக்கி ழார்போன்
றில்லையவர் கவிக்குரைகாண் பதற்கே தோன்றும்
இனியசுப் பிரமணியர்போ லெவரைச் சொல்வோம்
வல்லவுரை நேர்கேட்கும் பேறு பெற்ற
மாண்பினர்போல் வாரெவரே வழுத்து வீரே.

உலகமெலாம் படைத்தளித்திட் டொடுக்கக் காணும்
ஒருவனே பதியவனுற் பயன்பெற் றுய்யும்
பலவுயிரும் பசுக்களன்பா லன்றி வாழும்
பரிசில்லை யெனத்தெரிந்து பகைமை நீங்கி
நலமுறயா வரும்வாழ்க வுரை கண்டோரும்
நயந்துதவி புரிந்தவரும் கேட்போர் தாமும்
குலவுசிவ காமவல்லி மணாளன் றில்லைக்
கூத்தனுர் திருவருளா லினிது வாழி.

45. மெய்கண்டார் கழகத்தினர், காஞ்சிபுரம்

நிலைமண்டில ஆசிரியப்பா

உலகெலாம் புகழும் உயர்தனிப் புராணம் - அலகில் சோதியன் அன்பர் புராணம்
நிலவு செஞ்சடை நின்மலன் புராணம் - மலரு நாவலவன் றொண்டர் புராணம்

சிவமணங் கமழுந் தெய்விகப் புராணம் - பவப்பிணி யோட்டும் பரம புராணம்
பெரிய புராணம் பெரிய புராணம் - பெரிய புராணம் அரிய புராணம்
தெய்வச் சேக்கிழார் பிரானிம் மாநிலம் - உய்வகைக் களித்த உயர்தனிப் புராணம்
மண்டலம் போற்றி வாழுஞ் சீர்த்திருத்-தொண்டர் புராணந் தொன்மை-யினனதே
இதற்குப் பலருரை எழுதின ரேனும் - கோயம் புத்தூர்ப் பேரூர் வாழ்தவன்
சேக்கிழார் பெருமான் திருவடிக் கன்பு - தேக்கிய மோவோன் சிவக்கவி மணியென
விளங்குந் தூயோன் மெய்வகைச் சைவ - மரபு வழாத மாண்பு மிக்கவன்
சுப்பிர மணியத் தோன்ற லளித்த - பெரிய புராணப் பேருரை போல
எளிமையு மருமையுஞ் சைவ எற்றமும் - உரியதாய் ஒன்றும் உள்ளதா யின்றே
பெரிய புராணப் பேருரை யாளன் - அம்பல வாணன் அருளால் வாழ்க
நிறைவிழா வாழ்க சேர்ந்தவர் வாழ்க - இதற்கா னவெலா மினைக்கா தியற்றும்
இராமச் சந்திர வந்தல் வாழ்க - சண்முக சுந்தரச் சைவன் வாழ்க
சேக்கிழார் பெருமான் திருவடி வாழ்க - தில்லையம் பலத்தான் திருவருள் வாழ்க
தூய நிறைவிழாத் தொண்டர்கள் வாழ்க - சைவமுந் தமிழுந் தழைத்துவாழ் குகவே.

## 46. வித்வான் திரு. E. S. வரதராஜய்யர், பி.ஏ, அண்ணாமலைப் பல்கலைக்கழகம்

கொன்றைச் சடிலன் அடியெடுத்துக் - கொடுப்பக் கோதில் அடியவர் சீர்
குன்றை முனிவன் புலவருளம் - கொள்ளப் புகன்றான் கவிதை யினில்
நன்றந் நூற்கு விருத்தி யுரை - நவின்றான் கோவை நகர்ப் பெரியோன்
துன்று புகழ்ச்சுப் பிரமணிப் பேர்த் - தூயோன் சைவச் சுடர் மணியே. 1

வளமார் கவிதை வளமுழுதும் - மனத்தா னுய்ந்து பதவுரையும்
நலமார் மொழிப்பும் மேற்கோளும் - நயங்கள் பலவும் வயங்க விரு
நிலமார் தருவென் றறிவருரை - நிகழ்த்த வளித்தான் நீண்டவுரை
புலமார் சுப்ர மணியனெனும் - பொருவில் சைவப் புரவலனே. 2

அன்று யிரக்கால் மண்டபத்தில் - அணிசேர் தில்லை யக நகரில்
குன்றாத் தனுவைக் கொண்டவன் சீர் - குலவும் கவிதை வகுத்து ரைத்தான்
பொன்றாப் புகழ்சேர் குன்றைமுனி - பொருந்த விருத்தி யதற்கெழுதி
யின்று டகப்பொன் அம்பலத்தின் - இசைத்தான் உயர்சுப் பிரமணியே. 3

பத்தியின் தீஞ்சுவை சொட்டப் பகர்ந்தான் பலவடியார்
முத்தித் திறஞ்சொற் கவிதையைக் குன்றை முனிவனதை
புத்துரை யீந்தனன் கோவை நகர்வாழ் புலவனெழில்
உத்தமன் சைவன் உயர்சுப் பிரமணி யுண்மகிழ்ந்தே 4

சொல்லற் கெளிதன்று தொண்டர் றுபான்மூவர்
நல்ல சரிதை நயம்பலவும்—பல்புலவர்
கொள்ளப் பகர்ந்த புகழ்க்கோவைச் சிவக்கவிப்பேர்
வள்ளற் பணியுரையின் மாண்பு. 5

## 47. கு. ஆறுமுக நாயனார், திருத்துறையூர்

திருவார் கொங்குப் பெருநாட் டகத்துப் - பல்வளம் பழுநிய நல்வளத் தோடு
பொறிவழிச் செயலாம் நெறியுறு கைத்தொழிற் - பஞ்சநூல் ஆடைப் பலவகை ஆலை
மிக்க கோய முத்தூர் அதனுள் - விழுமிய வேளாண் குலஞ்செய் தவத்தால்

கந்தன் அருள்பெறு கந்த சாமி - எனும்பெயர்ச் செல்வர் ஈன்ற செல்வன்
மாசிலா மணியெனும் வண்பெயர் ஆகும் - சுப்பிர மணிய முதலியா ரென்னும்
ஒப்பில் தவத்தோன் ஓங்கிய சிவவுரு - வைப்பாம் செல்வன் வள்ளி மணாளன்
தாளிணை மறவாத் தனிப்பெருங் காதலன்-செந்தமிழ் ஆங்கிலம் வடமொழி முதலாம்
மூன்று மொழிசேர் பலகலை வல்லோன் - வெண்ணீறு கண்மணி மெய்ஐந் தெழுத்தும்
அத்தன் அன்னை அடியின் பாக்கும் - பக்தி விளைவெனும் பாங்கினிற் கொண்டோன்
புலமைசால் தந்தையின் புண்ணியத் தோடு - தில்லைச் சிவஞானத் தனிவாழ் அடிகள்
இலக்கணம் முத்துக் குமார சாமித் - தம்பிரான் சார்பும் தக்க சுயப்பாக்கச்
சதாசிவச் செட்டியார் தனித்துணைச் சார்பும் - தெய்வ அருளால் கிடைத்துப் புலமை
எய்திய செம்மல் எண்ணருந் தவத்தால் - சிதம்பரம் முத்துக் குமாரக் குருக்கள்[மேல்
உணர்த்து தீக்கை ஒருமூன் றதனால் - உடையவர் பூசை அடைவுறக் கொண்டோன்
திருமுறை பன்னிரண்டும் திங்கள்பன்னிரண்டினுள் - திருவருட் டுணையால் சீர்பெற
மீட்டும் மீட்டும் ஓதும் ஒழுக்கினன் - இம்முறை நாற்பது யாண்டின்மே லாக [ஓதி
செம்மையுறச் செய்யும் சீரிய சைவன் - செந்தமிழ் அன்பால் நீத்தார் பெருமை
சேக்கிழார் ஆய்வு கருவூர்த் தேவர் - அவிஞுசிக் கருணை அம்மையின் கலைத்தமிழ்
முதலாம் பலநூல் யாத்த முதல்வன் - தொண்டத் தொகை வகை விரிஎனப்
பண்டமை மும்மைப் பனுவல் ஓர்ந்து - கொண்ட கருத்தும் இறைநிறை உணர்வும்
ஒருவழித் தூண்ட ஒப்பில் தொண்டர்சீர் - விரிஎன விளக்கம் வேண்டுவ தந்து
பொருள்நூல் புகழ்நூல்அருள்பெருந் துணையுடன்-ஆக்கிய சேக்கிழார் ஆரருள்விளக்கத்
தில்லைஆ யிரக்கால் திகழ்மண் டபத்துள் - அம்பல வாணர் அடியிணை தலைக்கொண்
டிம்பரும் உம்பரும் யாவரும் வியக்கப் - பேருரை கண்டனன் பேசருந் திறலோன்
யாமெலாம் எழுபிறப் பிசைத்துமே உய்ய - ஏழ்பெரும் தொகுதியாய் எழிலுற
[அமைத்தனன்
எல்லாம் எழுதியும் அச்சிடும் காலம் - தாழ்ப்பது கண்டுவெள் ளானைச் சருக்கம்
முன்னுற அச்சிட்டுத் தில்லையரங் கேற்றினன்-கூத்தப் பெருமான் திருவரு ளதனால்
யாத்தநூல் முழுவதும் இனிதுற முற்றி - அம்பல வாணர் ஆயிரக் கால்சேர்
மணிமண் டபத்தரங் கேறு மாண்பு - கழிபெரும் சிறப்பாம் கட்டுரைக் கொண்ணாது
பொன்னம் பலவன் இன்னரு ளதனால் - வாழிய பெரிதே வழிவழிச் சிறந்தே
இப்பெருந் தொண்டினுக்கு ஒப்புநோக் கல்முதல்-செப்பரும் உதவி செய்தனர் பலரே
அவருட் சிலரை அன்பினால் ஏத்துவன் - பெரிய சாமிப் பிள்ளைஎன் பாரொடு
செங்கல்வ ராய பிள்ளை சீர்சால் - சண்முக சுந்தரம் செட்டியார் முத்து
மாணிக்கம் என்னும் வண்புல வேரே - முன்னாள் வெள்ளி மலைவாழ் முன்னோன்
திருமுனைப் பாடி நாடாள் ஆரூரர் - தன்னைஆள் ஓலை காட்டித் தடுத்தாட்
கொண்ட பான்மை சைவச் சிறப்பே - ஒன்றுக்கும் பற்றா ஒருவனும் அடியனை
அம்முனைப் பாடி நாட்டுட் பிறக்கும் - அருந்தவம் முன்னோர் செய்தஅவ் வாற்றால்
பிறக்கும் பெரும்பேறு பெற்றேன் ஆதலின் - தூய ஞானம் நிறைந்த சிவச்சுடர்
தானே யாய தன்மைச் சுப்பிர - மணிய குரவன் ' பரமனைப் பாடும் '
அணிசேர் ஏடுங் கடியனைக் காட்டி - மீளா ஆளாய் மேவுவித் தனனே
தலைவன் தலைவியர் சார்பு நிறைபோல் - இட்ட பணியெலாம் இயன்றவா றியற்றித்
தொண்டர்சீர் விளக்கத் தொண்டும் புரிந்தேன்-திருத்துறை யூர்க்கண் சீர்பெற விளங்
திருநாவுக் கரசு நாயனார் சைவ - சித்தாந்தக் கழக வேண்டுகோட் கிணங்கித் [கும்
திருநாவுக் கரசர் சம்பந்தர் அப்பூதி - அடிகள் திருப்பா சுரமாம் விளக்கம்
உரைநடை வெளியிட உதவிய வள்ளல் - அனபாயன் சேக்கிழார் அடிக்கட் சாற்றிய

அத்தனைச் சிறப்புகம் தலைவர்க் காற்றுதல் - ஆட்சித் தலைவர் அருங்கட னமால்
ஒருசிலர் இயற்றினர் யாமெலாம் குழீஇ - வாழ்த்து வணக்கம் வண்கொடை சிறப்பு
முன்னவ னருளால் முயன்றுசெய் வோமால் - எழிலுறம் எழு தொகுதியும் ஒதி
விழுப்பே றெய்தி மேலோர் விழைய - வாழ்வோம் அவன் பொன்னடியிணை
வாழ்க வாழ்க வழிவழி சிறந்தே.

## 48. பி. ஆறுமுகம்பிள்ளை, துறைசை ஆதீன சைவப்பிரசாரகர்.

சீராரும் திருத்தொண்டர் புராணத்தின் சேக்கிழார் செய்யுட் கேற்ற
பாராரும் விரிவுரையை அவர்போலச் சிற்சபையில் பரிசில் வைத்தான்
கோராரும் அறிவுடையான் ஒழுக்குடையான் சிவபக்தி நிதிய மன்னன்
காராரும் கோவைசிவக் கவிமணிப்பேர் சுப்பிரமணிய னாயன் வாழ்க.

## 49. வித்யாலங்கார C. சிவசுப்ரம்மண்ய குருக்கள் & பிரதர்ஸ், சேலம்.

சீர்மணி முத்த வளம் பெறு சேலத் - தேர் வரு சொர்ணச் செல்வியி னருளாற்
பேர்புகழ் மிக, நற் புத்திரப் பேறும் - பார்தனி லாண்டு நூறதும் பெறுக
நோயறு உடலும் நன்மனை மாண்பும் - மாசறு குணமும் மங்கள வாழ்வும்
தூசறு வணிகமும் தூய்மன நிலையும் - தேசுறு தனமும் செழிக்க நீ வாழ்க.

## 50. V. C. S.

தெய்வச் செந்தமிழ்த் திருவளர் நாட்டிற்
கொங்குநாட் டணியாம் கோவையம் பதிக்கண்
உயரிய சைவ ஒண்குடிப் பிறந்து
பன்னூ லறிந்து பாமனற் பத்தி
உள்ளு ரக்கொண் டொழுகுநற் பண்போன்
நால்வர்சொல் இன்றமிழ் சுவையறப் பயின்றோன்
சேக்கிழார் செய்த திருத்தொண்டர் காதையை
உரைவகை யதனுல் உயர்வுறப் படித்து
உட்பொரு ளெவரும் உணர்ந்து பயன்கொள
உள்ளத் தெழுந்து ஒளிர்பே ராவலால்
கறைமிடற் றண்ணல் கண்ணருட் டுணைகொடு
விரிவுரை யெழுதி வியனுறப் பதித்துப்
பக்தர்கள் பாவலர் பண்புற அளித்தனன் ;
அஃதான்று
அதன்பினவ் வுரையினை அணிமலி தில்லையில்
அம்பலக் கூத்தன் அடியிணை போற்றி
அறிஞர்கள் வாழ்த்த அரங்கேற் றினனால்,
நாத்திக மாக்கள் நாத்திற மடங்கினர் ;
ஆத்திக மக்கள் ஆர்வம் பெருகினர் ;
தில்லை மன்றீசன் திருவருள் வளர்க !
வாழ்கநம் சிவக்கவி மணியாம் பெரியோன் !
வாழ்கநம் சுப்பிர மணியனார் மகிழ்ந்தே.

51. சித்தாந்த கலாநிதி, பேராசிரியர், திரு. ஔவை. சு. துரைசாமிப்பிள்ளை,
மதுரை.

தரவு

சீரார்ந்த கலைநலமும் சிறந்தபொருள் மிகுநலமும்
பேரார்ந்த சிவஞானப் பெருநலமும் எனமூன்றும்

கண்ணாளும் நல்லொளிபோல் கருத்தாள்வான் கலைக்கழகம்
அண்ணாமலை யரசின் அரும்பணியால் அமைந்தமையால்

ஊனநடம் புரியுயிர்கட் குறுதியருள் வான்பரமன்
ஞானநடம் புரிவன்எனும் நல்வாய்மை நாட்டியதே.

தாழிசை

திருமாமகளும் பூமகளும் சிறக்க விரும்பும் செல்வத்தால்
பெருமாண் புடைத்து நங்கள்தமிழ்ப் பெருநா டென்ப பெரியோர்கள்
பெருமாண் புடைத்து நங்கள்தமிழ்ப் பெருநா டென்பேம் பெரியோர்கள்
வருமாண் புடைய வரலாறு மன்னி வழங்கு மதனாலே

தென்னர் சோழர் சேரரெனத் திருவின் செல்வர் ஆட்சியினால்
மன்னி வருமே எங்கள்தமிழ் வண்மை மொழியென் றுரைப்பரால்
மன்னி வருமே எங்கள்தமிழ் வண்மை மொழியென் றுரைப்பதெலாம்
நன்னர் சைவத் திருமுறைகள் நான்மூன் றாய நலத்தாலே

திருவள் ளுவர்செந் தமிழ்க் கபிலர் சேர ரிளங்கோ செய்நூலால்
பெருவள் ளியது நமதுதமிழ்ப் பெருநூற் பரப்பென் றிசைப்பரால்
பெருவள் ளியது நமதுதமிழ்ப் பெருநூற் பரப்பென் றிசைப்பதெலாம்
தெருள்உள் ளியசீர் அருண்மொழியாம் சேக்கி ழார்நூல் திறத்தாலே

தொன்னூல் பலவும் இன்றுவரைத் தொலையா நிலைமைக் குறைகண்ட
நன்னூ லறிஞர் பலருடைத்து நங்கள் தமிழ்நா டென்பரால்
நன்னூ லறிஞர் பலருடைத்து நங்கள் தமிழ்நா டென்பதெலாம்
பன்னி ரண்டாம் திருமுறைக்குப் பாங்க உரைசெய் ததனாலே

மலரும் மணமும் போல்தமிழும் மருவும் சிவமும் மணத்தலால்
உலகு விரும்பும் உயர்வுடைத்தால் ஒண்டீந் தமிழ்என் றுரைப்பரால்
உலகு விரும்பும் உயர்வுடைத்தால் ஒண்டீந் தமிழ்என் றுரைப்பதெலாம்
இலகு தமிழ்ப்பே ரறிஞருளம் எல்லாம் சிவமாம் அதனாலே

தனிச்சொல்

(3) என வாங்கு

சுரிதகம்

பாடியும் ஆடியும் பகர்ந்தும் இளையோர்
கூடி யின்பம் குலாத்தில்லை மேவிய
ஆயிரம் கால்கொள் அரியமண் டபமே !
தூக்குசீர்த் தொண்டர் தொல்வர வுரைத்த
சேக்கிழார்க்கு அன்று சிராங் காயினை ; இன்றே,

திருக்கிளர் கோவைத் திருநகர்ச் செல்வன்
சிவக்கவி மணியாய்த் திருமிகு சுப்பிர
மணியனார் தொண்டர் மாநூற் குரைத்த
அணிமிகு பேருரைக் காங்க மாதலின்
கோற்றேய் மன்ற நீயே
மாற்றரும் பேரருள் மாநலம் சிறந்தே.

## 52. திரு. T. S. சோமசுந்தரம் பிள்ளை, பி.ஏ.,எம்.ஆர்.ஏ.எஸ்., கரூர்.

விருத்தம்

சிரமசைத்தார் சிலம்பொலித்தார் சிவபெருமானன்றொருக்கால் சேக்கி ழாரின்
பரந்தபொருள் திருத்தொண்டர் புராணகவி கேட்டகாள் பாரோர் கண்டார்
விரிந்தவுரை யக்கவிக்குக் கோவைசுப்ர மணியனெனும் வேளா ணிந்நாள்
தரமறிந்து தருகின்றான் அதைகேட்க அவன்சபையே தகுதி யாகும். (1)

அருந்தமிழின் சுவையறிந்து பலதுறையில் புகழ்செறிந்த அறிஞர் கூட்டம்
இருந்தின்று போற்றுகின்றார் கவியிலுள்ள சித்திரத்தை யெடுத்துக் காட்டும்
விரிவுரையி னற்புதத்தைச் சொற்களிலே புதைபொருளை விளங்க வைத்து
தருநூல்போல் வேறுளதோ சைவரொடு மற்றவரும் சாற்று கின்றார். (2)

கோவிலெனும் பெரும்பதியில் சேக்கிழார் கவிகேட்ட குகேச னிந்நாள்
பூவினிலே மணம்பிரித்து விரித்ததுபோல் கவிக்குரையும் பொருந்தக் கேட்டான்
யாவரினி யிப்பணிபோ லியற்றவலார் அரிதரிது எனவே வாழ்த்தி
தேவரொலா மாசிசொலி யந்தரத்து மகிழ்கின்றார் சிவன்தான் போற்றி. (3)

கவிசொன்னான் உரைசொன்னான் இருவருமே வேளாளர் கண்டோ மின்று
புவியின்வளம் பெருக்குகின்ற இக்குலமே பக்தியெனும் பொக்கி ஷத்தைச்
சுவையுடனே தீட்டவலா ரெனக்கூறி யவ்வழியில் சுகமாய் வாழ
உவகையுட னேற்கின்றார் உடலாவி யொன்றுபட உரையீந் தாரை. (4)

## 53. சிவஸ்ரீ G. சிவசுப்ரம்மண்ய குருக்கள், கார்யதரிசி,
ஸ்ரீஸ்வர்ணாம்பிகை சைவ சித்தாந்த சபை, சேலம்

ஜெயவருடச் சித்திரை யிவிருபத் தைந்தில்
வியப்புறவே சேக்கிழார் போல்விரித்த நூலை
மயல்தீரச் சிதம்ப ரத்து மண்ட பத்தில்
நயமாக வரங்கேற்றி நலமே துய்த்தான். (1)

கோவைதிகழ் சைவமணிக் கந்த சாமிச்
சேவைகுலச் சுவகவிநம் சுப்ரம் மண்யன்
பாவைவிரித் தரங்கேற்றிப் பிறவி யுய்ந்தான்
கோவைபணிக் குவலயத்திற் குணர்த்தி வாழ்க (2)

விருப்புவெறுப் பென்னுமிவை விலக்கி வாழப்
பெருமையுட னரங்கேற்றிப் பிறவாப் பேறு
தரிசனத்தால் தந்தருளும் தகர மேவிப்
பெருமைபெறப் பெற்றியுறப் பேணி வாழ்க. (3)

சுகவனத்துச் சண்முகனார் செல்வி வேட்டு
அகமகிழ அன்புறவே அரங்க மேற்றித்
தகாமெனுஞ் சிதம்பரத்துத் தழையுஞ் சைவப்
புகழ்பெற்றுப் புண்ணியரும் போற்றி வாழ்க. (4)

54. பெருஞ்சொல் விளக்கனார்-திரு. அ. மு. சரவண முதலியார், லால்குடி.

நெடுங்காலமாகப் பொதுவாகத் தமிழுலகமும் சிறப்பாகச் சைவ உலகமும் கண்டுவந்த கனவை நனவாக்கிய தங்களுக்கு யான் என்ன கைம்மாறு செய்ய வல்லேன்? இழ்க்கண்டவாறு தங்களை வாழ்த்தி வணங்குகின்றேன்.

" நவக்கவி யனேகம் முந்திரிப் பழம்போல் நாடொறும் வெளிவரு கின்ற
அவப்புவி தனிலே மாதுளம் பழம்போல் அளவிலாப் பொருள்பொதிந் திலங்கும்
தவக்கவி யாகும் சேக்கிழார் நூற்குத் தரும்பொருள் விரித்துரை சைவச்
சிவக்கவி மணியே சுப்பிர மணியச் செம்மலே நீடுவா ழியரோ "

55. திரு. தி.செ. முருகதாச பிள்ளை, தண்டபாணி சுவாமிகள் மடம்,
அடிவாரம், பழனி.

அறுசீர் விருத்தம்

கோவைநகர்க் கணி, சைவக் குலமணி, வித் துவமணி, யெக் கோவு மேத்தும்
சேவையிவர்ந் தருள்பரமன் றிருத்தொண்டர் புராணமணி, சேக்கி ழார்செய்
சேவையினை மக்களுணர்ந் துய்யவழி காட்டுமணி, செந்த மிழ்த்தாய்ப்
பாவையருள் நீடுசிவக் கவிமணி, சுப் பிரமணியாம் பண்பி னோனே. (1)

பெரியபுரா ணத்தினுட்சேர் பேருரையைச் சீருறச்செய் பெருமை யாளன்,
உரியவந்த விரிவுரையாற் றமிழுலக ருண்மையினை யுணர்ந்து கொள்வார்
தெரியவரும் பொருள்சொலிவன் அபிநவசேக் கிழாரென்னச் செப்ப லாகும்
பெரியசெய லினைத்தொடங்கி முடித்தவிந்தப் பெரியவன்றான் பெரிய னம்மா! (2)

கண்ணீர்விட் டரன்புகழைக் கனிந்தமனத் தன்புமிகக் கழறும் பண்போன் ;
பண்ணீடு நால்வர்தமிழ்த் திருநூல்களிடைநாளும் பதிந்த நெஞ்சான் ;
வெண்ணீறும் கண்டிகையும் பூண்டுசிவ பூசைசெய்வோன் ; விழைபல் லாண்டு
விண்ணீடும் சார்பாவ மண்ணீடு மன்பர்சொல்சீர் மேவி வாழ்க! (3)

சேக்கிழார் தில்லையினிற் புராணமிசைத் தரங்கேற்றம் செய்தா ரென்கை
நோக்கினு லறிந்ததில்லை ; உமாபதியார் புராணத்தில் நுவன்ற தெய்வ
வாக்கினு லறிந்துவந்தோம், இன்று தில்லை யினிற்சுப்பிர மணியச் செம்மல்
தேக்கினர் பெரியபுரா ணத்துரையை அரங்கேற்றம் செயக்கண் டோமே. (4)

கால விளக்கம்

வெண்பா

செயவருடச் சித்திரையிற் சேரிருபா னன்காம்
நயமலிபொன் னளாம்நன் னளில் - வயமிகவும்
கூடுதொண்டர் காதையுரை கூறியரங் கேற்றினன்சீர்
நீடிசைச் சிவக்கவி மணி. (5)

56. மாணவர், மாணிக்கவாசகர் மன்றம்,

சாந்தலிங்க அடிகளார் திருமடம், பேரூர்.

கட்டளைக் கலித்துறை

நேசம் பொலிசிவப் பண்பா டகன்று நிறைசமணர்
வாசம் பொலிந்தவந் நாள்சேக்கி ழார்தொண்டர் மாண்புரைத்தார்
நீசம் பொலிபல நாத்திக வாதர் நிலவுமிந்நாள்
தேசம் பொலியன்பர் கொள்ளவந் நூற்குரை செய்தனரே. 1

வெண்பா

மன்னுதிருப் பேரூர் மணிவா சகமன்றம்
துன்னுதொடக் கப்பள்ளி தோயிளைஞர் - பன்னுகுழு
வாரவழி பாட்டுவிழா மாண்புறந டத்திவரும்
சீரமைந்த பண்பாட் டினன். 2

கத்தூர் வளப்பழனம் நண்ணு மெழிற்கோய
முத்தூர்வாழ் சுப்ரமண்ய மூதறிஞன்—சத்தூர்
சிவக்கவிம ணிப்பெரியோன் செல்வமுடன் பல்லோர்
உவக்கவிம ணிவாழ்க ! உற்று. 3

57. சேக்கிழார் திருநாட்கழகத்தார், தேவகோட்டை.

தில்லையம் பலத்தி லாடுந் திருவடிக் கன்பு பூண்டார் ;
எல்லையில் தவத்தின் செல்வர் ; ஈசனார் பணியே பூண்டு
ஒல்லையீ டெய்தும் வேட்கை யொழித்தவர் ; அருளுமன்பும்
பல்லுயி ரிடத்துங் காட்டும் பான்மையர் சிவனார் தொண்டர். 1

அன்னவர் மாண்பு தன்னை அகங்கனிந் துருகும் வண்ணம்
கன்னய மொழிக ளாலே நவின்றமாக் கதை இயற்றும்
சொன்னலச் சேக்கி ழாரார் தொண்டர்சீர் பரவு வாரின்
மன்னுசீர் தமிழ கத்தே வளர்ந்தினி தோங்கு மாலோ. 2

அருண்மொழித் தேவர் தந்த அன்புறு லதனில் தோய்ந்து
பொருள்நலன், சொல்லின் மாண்பு பொருந்துசாத் திரநுட் பங்கள்
தெருள்மிகு புலவர் போற்றுந் திறத்தினில் விரித்துக் கூறி
அருள்புரி சுப்ர மண்ய அண்ணலே ! நின்சீர் வாழி. 3

நச்சினார்க் கினியர் போல ஆசிரியர்போல் நாட்டில் தோன்றி
மெச்சிடுஞ் சைவ மார்க்கம் விழுத்தமிழ் இரண்டும் ஓங்க
நிச்சலும் அருட்கு றிப்பே நினைந்துபூ சனையு ளுற்றி
உச்சிமேற் கரங்கள் கூப்ப உரைவளம் பகர்ந்தாய் அண்ணல் ! 4

தேவகோட் டையினில் ஓங்கும் சேக்கிழார் கழகத் தேம்யாம்
நாவலர் மணியே ! நின்சீர் நாடொறும் நவின்று நிற்பேம் !
ஆவலாய்த் தமிழ்த்தாய் சூட அருமணி யளித்த அன்ப !
மேவுறும் தமிழர் வாழ்வே ! இசைநல மிளிர்ந்து வாழி. 5

வெண்பா

வாங்கி விழிஒத்தி மகிழ்ந்தேம் தலைமீது
தாங்கித் துதித்துத் தழுவியுடல் - வீங்கினமால்
சீருலவுஞ் சுப்ரமண்யச் செம்மல்தரு மாக்கதையின்
பேருரையை யாங்காணப் பெற்று.

## 58. சிவஸ்ரீ திருவாடானை ஈசான சிவாசாரியார்.

செல்வமலி தில்லைச் சிவபெருமான் தன்னருட்
சொல்லின் வழிவந்த தூயதமிழ் - அல்லல்
தவிர்த்தெங்கு மானந்தந் தந்திடுமா குன்றைக்
கவிசெய்த காவியமே காண். 1

காண்பார் மனமுருக்கிக் கண்பனிப்ப மெய்புளக
மாண்பாரு மிக்கவிதை மாநிலத்துப் - பூண்பார்
சிரமீது மெய்யடியார் தேடிநித மேற்றுக்
கரமீது கொள்வார் களித்து. 2

களித்து நடம்பயிலும் கண்ணுதலோன் தாளில்
துளிர்த்த நிறையமுதம் துய்த்தே - அளித்த
பெரிய புராணமெனும் பேசரிய காதை
விரித்தவுரை யீதாம் விளம்பு. 3

விளம்பினனே சுப்ரமண்ய வித்தகனு மன்பால்
உளங்கனியத் தோய்ந்திட்ட உண்மை - வளங்கொழிக்க
நல்விதமாம் பேருரையை நாட்டிச் சிவனருளால்
பல்லூழி வாழ்க பரிந்து. 4

## 59. ஸ்ரீமத் மதுரை மாணிக்கவாசகத் தம்பிரான்.

திருவருட் சால்பினை உலகினர்க்கு எடுத்துக்காட்டி உலகத்து மக்கள், தங்கள் தங்கள் நிலையில் நின்றே இறைவனை வழிபட்டுத் திருவருளையடைய வழி வகுத்தது அருட்பனுவலாகிய நமது பெரியபுராணமாகும். திருவருள் இயல்பும், சைவ சித்தாந்த உண்மையும், உலகியல் நுணுக்கமும், வரலாற்று உண்மை அடிப்படையும், திருந்திய பெருங்காப்பியத்தின் இலக்கணமும் ஒருங்கமையப் பெற்ற சிறந்த செந்தமிழ்க் களஞ்சியம் பெரியபுராணமாகும். ஆரூரில் முதலெடுத்துக்கொடுத்த திருவருளே தில்லையிலும் "உலகெலாம்" என முதலெடுத்துக் கொடுத்துச் சேக்கிழார் பெருமான் மூலமாகப் பெரியபுராணத்தை வழங்கியுபகரித்தது என்பதை நாமறிவோம். ஏனைய எல்லாச் சமயக் கொள்கைகளையும் தன்னுள் அடக்கிக்கொண்டு தான் அவற்றுள் அடங்காது மேற்பட்டு நிற்கும் சைவசித்தாந்தம் போலப், பெரிய புராணமும் ஏனைய உலகச் சமயப் பெரியார்கள் வரலாற்று அடிப்படைகளெல்லாம் தன்னுள் அமையப்பெற்றதாகித், தான் அவையனைத்தினும் மேற்பட்டுத் திருவருளை நேரே கண்டும், பிறர்க்குக் காட்டியும், பின்னோரும் காண வழிவகுத்தும் உதவிய அருட் செல்வர்கள் வரலாறாகத் திகழ்வது. இத்தகைய அழியாப் பெருஞ் செல்வமாகிய உலகப் பெருநூலை வழங்கிய ஞானமூர்த்தியாகிய சேக்கிழார் பெருமான் மாண்பினை,

மதாதி ராமா யணகதை யுரைசெய்த வான்மிக பகவனு மொப்பல்ல
விதிவழி பாரதம் உரைசெய்து கரைசெய்த வேதவி யாதனு மொப்பல்ல
சிதைவற ஆயிர காவுடன் அறிவுள சேடவி சேடனு மொப்பல்ல
பொதிய மலைக்குறு முனிவனு மொப்பல புகழ்புனை குன்றைமு னிக்கென்பார்.

என்ற செய்யுள் எடுத்துக் காட்டுகின்றது.

## பேருரை மாண்பு

ஆசிரியர் கயப்பாக்கம் சதாசிவச் செட்டியாரவர்கள் ஆகமநெறி வழுவாது சிவபூசை செய்தும் பன்னிரு திருமுறைகளையும் இடையறாது பண்முறை ஓதி யுணர்ந்தும் திருவருள் விளக்கம் பெற்றவர்கள். அவர்களிடத்து நேர்முகமாகப் பாடங்கேட்டுப் பயின்ற நமது சிவஞானச் செல்வர் சிவக்கவிமணி அவர்கள் பெரிய புராண விளக்கத்திற்காகவே தமது வாணாளை அர்ப்பணித்தவர்கள். பெரியபுராண மும் தாமும் வேறன்றென்னும்படி அவ்வருள் நூலோடு தோய்ந்து நின்று சேக்கிழார் பெருமானே உள்நின்றுணர்த்தத் திருவருளால் இப்பேருரை நிறைவெய்தியதாகவே கொள்ளவேண்டும். சேக்கிழார் பெருமானைக்கொண்டு பெரியபுராணத்தை வழங்கிய திருவருளே நமது சிவக்கவிமணி அவர்களைக்கொண்டு அப்புராணப் பேருரையும் வெளியிட்டதாகக் கொள்ளுதலும் பொருந்தும். தில்லைவாழந்தணர்களை முதலாகக் கொண்டதும், தில்லையிலேயே முதல் கொடுக்கப்பெற்று நிறைவேறியதுமான பெரிய புராணப் பேருரை விழா தில்லையிலேயே நிகழ்வது மிகவும் பொருத்தமும் சிறப் புடையதுமாகும். ஆசிரியர் சிவக்கவிமணி அவர்களைத் தற்காலத்தில் கண்காணவந்த சேக்கிழாராகவே சைவத்தமிழ் ஞாலம் போற்றுமாறும், விழா தில்லைக்கூத்தன்திரு வருளால் இனிது நிறைவெய்துமாறும் எங்கள் ஞானசம்பந்தப் பெருமான் திருவடித் தாமரைகளைச் சிந்தித்து வாழ்த்துகிறேன்.

60. சிவஸ்ரீ கைலாச நாத குருக்கள், ஆதிமத்யார்ஜுன சுவாமி
தேவஸ்தானம, திரு இடையாறு.

உலகெலா முணர்ந் தோதற் கரியவன்
நிலவு லாவிய நீர்மலி வேணியன்
அலகில் சோதியன் அம்பலத் தாடுவான்
மலர்சிலம் படி வாழ்த்தி வணங்குவாம்.

இன்று ஒரு புனிதநாள். பெரியபுராணம் பேருரையுடன் வெளியிடுவது மிகவும் போற்றத்தக்க ஒரு சிறந்த பணியாகும். இந்த அருமையான பணியை ஆர்வத்துடன் நீண்ட நாட்கள் ஈடுபட்டுப் பெருமையாக எழுதிய சைவப பெரியார், சிவக்கவிமணியின் நூல், நாத்திகம் தலைவிரித்தாடும் இக்காலத்தில் ஆத்திகம் நிலை பெற்று இருக்க ஓர் வித்தாகும். இதுபோல் இன்னும் பல சிறந்த நூல்களை எழுதி மக்களை நல்வழிப்படுத்தக் கவிமணி அவர்களுக்கு நீண்ட ஆயுளும், நல்ல திடகாத்திர மும் அருளுமாறு எல்லாம் வல்ல இறை சிற்றம்பலவாணனைப பிரார்த்திப்பதுடன், கோவை, தமிழ்ச்சங்க செயலாளர் சி. எம். இராமச்சந்திரன் செட்டியாரவர்கள் இது போன்ற இன்னும் பல அரியநூல்களை வெளியிட ஊக்கமும், உணர்ச்சியும் பெற்றுப் பூரண ஆயுளுடன் இருந்து இம்மாதிரி விழாக்கள் நடத்த வேணுமாய் சிறசபேசனை வேண்டுகிறேன். பெரியபுராணப் பேருரை வெளியீட்டு விழா, சிதம்பரம் ஆயிரக் கால் மண்டபத்தில் நடைபெறுவது சேக்கிழார் ஞாபகார்த்த நாளாகும். இந்த

அரும்பெரு விழா, சிறப்புற நடைபெற வேணுமாய் அம்பலவாணனைப் பிரார்த்திக்கிறேன்.

61. மாகாளியம்மன் கோயில் தர்மகர்த்தர்கள், கோவை.

அன்பிற் கனிந்த எங்கள் தலைவ, வருக ! வருக !!

பாராண்டு, சைவநெறியினை உலகில் பரப்பிய தெய்வச் சேக்கிழார் மாபினில் தோன்றி, சைவ சமயச் சிறப்பினை உலகிற்கு ஊட்டிய உங்கள் சிறந்த பணி முற்றுப் பெற்றதை அறிந்து இறும்பூதெய்துகிறோம். தொண்டர்தம் பெருமை சொல்லுதற் கரியது. அதனை விளக்கிய உங்கள் குடிமுன்னோர் சென்ற அறுநூறு ஆண்டுகட்கு முன்னர்ச் செய்ததோர் சிறந்த பணியை இன்று நீங்கள் செய்து முடித்திருக்கிறீர்கள். இப்பணியும் தெய்வச் சேக்கிழார் புராணம் உரைத்த இடமாகிய சிதம்பரத்தில் அதே ஆயிரக்கால் மண்டபத்தில் நிறைவேறியது தமிழ் நாடு செய்த தவப்பயனாகும். தங்கட்குப் பொன்னுடை போர்த்துப் பொற்கிழியளித்த நிகழ்ச்சியினை நினைவுகூர்ந்து கோவை மக்களாகிய நாங்கள் தங்களைப் பெரிதும் பாராட்டுகிறோம். அன்று அநபாயச் சோழரும் சேக்கிழாரும் தமிழ் மக்களை நன்னெறிப்படுத்திய காட்சியினை இன்று தமிழ் நாட்டின் முடிசூடா மன்னராகிய மதுரை பொன்னம்பலத் தியாகராஜ வள்ளலும் கோவை கிழாராகிய தாங்களும் தமிழ் மக்களை நன்னெறிப்படுத்தும் காட்சி நினைவூட்டி எங்களைப் பரவசப்படுத்துகிறது.

சைவம் வளர்க்கும் வள்ளால் வருக !

இளமைப் பருவத்திலிருந்தே இன்று வரை சைவ சமயத்தில் ஆழ்ந்த பற்றுக் கொண்டு, சொல்லும் செயலும் ஒன்றி நடந்து சைவத்தினை வளர்த்துவரும் திறனைப் பாராட்டுகிறோம். அன்று குன்றத்தூர் கிழார் சமண இருளை நீக்கத் தொண்டர் புராணம் இயற்றினர். இன்று உலகினைக் கவ்விவரும் போலி விஞ்ஞான இருளைப் போக்க அத்தொண்டர் புராணத்திற்குப் பேருரைகண்டு அதனை அழகாக அச்சிட்டு அரங்கேற்றித் தமிழகத்திற்குப் புத்துயிர் அளித்துள்ளீர்கள். செயற்கரிய இச்செயலை செய்துமுடிக்க அருள்புரிந்த பேரூர்ப் பெருமானின் பேரருளை வியந்து தங்களை வாழ்த்துகிறோம்.

ஆங்கிலமும், செந்தமிழும் ஆராய்ந்தறியும் நல்லிசைப்புலவோய் வருக ! வருக !!

பண்டையில் உலகினை ஒரு குடைக்கீழ் ஆண்டு மாட்சிமையடைந்தது தமிழ் மொழி. இன்று உலகினை ஒரு குடைக்கீழ் சேர்ப்பது ஆங்கிலமொழி. இருபெரு மொழிகளிலும் ஆழ்ந்து ஆராய்ச்சி செய்யும் நல்லிசைப் புலமை பெற்றுள்ளீர்கள். ஆங்கிலத்தில் ஷேக்ஸ்பியர் என்ற நாடகப்பேராசிரியரின் நூல்களுக்குத்தான் சிறந்த பேருரைகள் உண்டு என அறிஞர் போற்றுவர். தமிழில் பேருரைகள் கிடையாது எனக்குறை கூறுவதுண்டு. ஆனல் தங்களது 30-வருஷ உழைப்பால் ஷேக்ஸ்பியரின் நூல்களுக்கு 300 ஆண்டுகளாய் ஆங்கில மக்கள் கண்ட பேருரைகளைக்காட்டிலும் சிறந்தபேருரையினைத் தமிழ் உலகிற்கு அளித்துள்ளீர்கள். தமிழ்த்தாய்க்கு இந்த நல் லணியை அணிவித்துள்ள தங்கள் புலமையையும் புகழினையும் உலகம் என்றென்றும் போற்றுமென உளமாறக் கூறுகிறோம்.

எல்லாம் வல்ல இறைவன் தங்கட்கு உடல் வலிமையையும், இகபர நலங்களையும், நிறைந்த ஆயுளையும் அருள்புரிவானாக என்று வாழ்த்துகிறோம்.

62. கோவை இரத்தின சபாபதிபுரம் இரத்தின விநாயகர் ஆலயம்
திருக்கார்த்திகை விழாக் குழுவினர்.

சீர்பெற் றோங்கும் செந்தமிழ் நாட்டின்
பேர்பெற் றிலங்கும் பெரும்பதி களிலே
கோலநன் னகராம் கோயமுத் தூரில்
சீலமாய் விளங்கும் செம்மைசேர் மரபில்
கந்தசா மிப்பேர்க் கவினுறு வள்ளல்
தந்தநற் குமரன் சுந்தர வடிவன்
செப்பருங் குணமிகு சுப்பிர மணிய
வூருக் கழகு சீருடைக் கோயில்
என்பதை யறிந்து மன்பதை யோர்க்கு
எங்கள் பகுதியில் எழிலுடைத் தலத்தில்
இரத்தின விநாயக ராலயந் தன்னை
அமைக்க அருந்துணை யாற்றினை யன்பால்
பன்னாள் ஆங்குப் பரமன் புகழைப்
பல்லோர் அறியப் பண்புடன் பேசும்
செந்தமிழ்ச் செல்வ ! நந்தமிழ் வீர !
அடியார் தன்மையை அனைவரும் அறியப்
படிமிசைத் தோன்றிய பயனுறு நூலாம்
பெரிய புராண விரிவுரை கண்ட
அறிவுடை யண்ணல் ! அரியநற் புலவ !
சேக்கிழார் மன்றம் செம்மையாய் நடைபெற
ஊக்கமாய்ப் பணிபுரி உயர்தனித் தலைவ !
கிருத்திகை முதலாம் விருப்புறு திருநாள்
சிறப்பா யேற்கும் சரவண னருளால்
வாழ்க நலனுடன் வாழ்க மகிழ்வுடன்
வாழ்கபல் லாண்டென வாழ்த்துதும் யாமே.

63. மாணவர் அருள் நெறி மன்றம், தவத்திரு சாந்தலிங்க அடிகளார்
தமிழ்க்கல்லூரி, பேரூர், கோவை.

வெண்பா

கொங்கிற் சிறந்த குலவுமெழிற் கோவைநகர்
தங்குமுயர் சைவத் தவமரபிற் - பொங்குசிவத்
தொண்டர்புகழ் விளக்கும் சுப்பிரமண் யப்பெரியோன்
மண்டலப்பா வாணர் மணி. 1

சைவமணி இன்பத் தமிழ்மணியீ சன்றனருள்
கைவரக்கொள் கண்மணிச்சீர் நாட்டுமணி - மெய்மைச்
சிவக்கவிம ணிப்பேர் சிறக்குமணி அன்பர்
உவக்குமணி சுப்ரமணி யோர். 2

பெரியபுரா ணத்துரையைப் பேசியெழுதா
அரியவெழுத் திற்பதிப்பித் தன்பிற் - பெரியார்

மகிழத் திருத்தில்லை மன்றிலாங் கேற்றி
அகிலமுயச் செய்தா னருள். 3

சைவ மடத்துறவு சற்சனரும் பாவலரும்
மெய்வளர் பத்திப்பண்பார் மேலவரும் - தெய்வவருட்
சேக்கிழார் செய்நூற் றிறம்வினவச் செப்புமிந்தப்
பாக்கியத்துக் கீந்தார் பரிசு. 4

சாந்தலிங்க சாமி தமிழ்க்கல்லூ ரிக்கணன்பாற்
போந்திளைஞர் கொள்ளஅறம் போதித்துத் - தீந்தமிழின்
இன்சுவையை யூட்டும் இயற்சுப் பிரமணியார்
பொன்பொழிந்து நீள்க புகழ். 5

வாழ்கதிருத் தொண்டர்தம்சீர் வாழ்கஅவர் மாண்புரைப் போர்
வாழ்கசைவம் போற்றுதவ மக்களெலாம் - வாழ்கதமிழ்
வாழ்கசுப்ர மண்ணியனார் வாழ்கஇவ்வி ழாப்புரிவோர்
வாழ்கஇரா மச்சந் திரர். 6

64. கௌமார சபையார், கௌமார மடாலயம், சிரவணபுரம்.

எழுசீர் விருத்தம்

தவக்கவி வாணர் புகழ்திருத் தொண்டர் தந்திருக் காதைபாம் அமுதை
நவக்கவிப் புலவோ ரன்பர்தம் உணர்வால் நாடியுண் டிடமிக விரித்துச்
சிவக்கவி மணியாம் சுப்பிர மணியச் செம்மல்மா யவனெனத் தோன்றி
உவக்கவின் றளித்தான் பவக்கவி வீணர் உளமிகு வெருண்டொதுங் கிடவே. 1

சிரவையெங் கந்த சாமிமா தவனாற் சிறப்புரை வழங்கிடப் பெற்றோன்
விரவுபல் லவையிற் சொற்பொழி வாற்று மேலவன் ஆலமுண் டவனைப்
பரவுநற் பூசைப் பண்புறு சைவப் பழங்குடி தன்னிலுற் பவித்தோன்
கரவறு மன்பு கனிந்தவுள் ளத்துக் கண்ணியன் புண்ணிய வானே. 2

தில்லையிற் பெரிய புராணமன் றுரைத்துச் சேக்கிழார் அரங்கிலேற் றிடல்போல்
அல்லைதீர் பெருமைச் சைவ ஆதீனத் திருந்தவர் புலவர்அன் புடையோர்
இல்லையென் னாமல் ஈந்திடும் செல்வர் ஏனையர் நிறைந்தபே ரவையில்
எல்லோர் களத்தான் தில்லையி லந்நூல் அணியுரை பரங்கி லேற்றினனே. 3

வெண்பா

மன்னுபொழிற் கோவை வருசுப் பிரமணியும்
என்னுமுயர் பெரியோ னின்பமுடன் - பன்னுசிவப்
பத்தரெலாம் போற்றப் பரவுசைவ சித்தாந்த
வித்தகரா வாழ்கபுவி மேல்

65. திரு ஆ. சு. கணபதி பிள்ளை, தலைவன், தில்லைத் திருமுறைக் கழகம்,
சிதம்பரம்.

முன்நூல் சிறப்பு

திருவாரு ருடையானே திருத்தொண்டத் தொகைநூலிற் றில்லை மூதூர்
மருவாரு மந்தணர்த மடியார்க்கு மடியனென மலர்ந்த சொல்லை

யுருவாகக்கொள் ளமெய்யுரை யந்தாதி வகைநூலு முவப்பக் கண்டு
திருவாகக்கொள் ளாறணமொழிப்பே விரிவாக வொருபெருநூல் விளம்பித் தந்தான். 1

## உரை ஆசிரியர் சிறப்பு

அத்திரு வாசகப் போற்றி யரும்பொரு ளுரையுந் தந்தாய
பத்திமேற் கொள்ளுஞ் சுப்ர மணியனும் பாவ லோனே
முத்திறத் தீக்கை பெற்று முதல்வனுய் முன்னு ணின்ற
வித்தகச் சேக்கி ழானுய் விளங்கினை போற்றி போற்றி 2

## வேறு

வண்மை யுடைய முனமனைவி வளாப்பே றறங்கள் பலசெய்தாள்
திண்மை யுள்ள மீனுக்ஷி திறலசோ வ உ சி யவரி
னுண்மை நாடுங் கடிதங்க ளோம்பா மாக்க ளாங்கிலரி
னெண்ண முடியா மறப்போக வெரியி லிட்டே யழித்திட்டாள். 3

அன்ன படியாம் பெருமாட்டி யன்பி னுருவாந் தங்கச்சி
பன்னற் கரிய விருந்தோம்பிப் பத்தி செய்யும் பாக்கியத்தாற்
கன்ன லென்னும் பேருரையைக் கண்டாய் கற்றோ ரெல்லாருந்
துன்னச் சேரும் ராசசபைத் துங்கத் தில்லை யம்பலத்தில் 4

## அரங்கேற்றச் சிறப்பு

மன்னுஞ் சயநல் லாண்டதனில் மருவுஞ் சித்திரை யாதினையில்
பொன்னனை பேர்கொள் தினமாகும் புனித நாலா முநாளிற்
சென்னி வளவ னனபாயன் சிறந்கை கூப்பிக் கேட்டதுபோல்
வன்னி யிடக்கை யுடையானை வழுத்துந் தொண்டர் கேட்டனரால் 5

## திருத்தில்லைப் பவனியுலாத் தோற்றம்

மங்கல கீத மெங்கும் மகரதோ ரணங்க ளெங்கும்
துங்கநற் பூதி பூசுந் தொண்டர்தங் குழாங்க ளெங்கும்
புங்கன மடத்து ஞானப் புரவலர் கூட்ட மெங்கும்
தங்குநற் பந்த ரெங்குந் தண்டமிழ்ப் புலவ ரெங்கும் 6

ஓதுவார் கூட்ட மெங்கு முண்ணுநா றுறு பத்துப்
போதங்கொ ளடியா ரெங்கும் புண்ணிய னருள்செய் நந்தி
சாதங்கொள் சாலை யெங்குஞ் சற்சனர் கூட்ட மெங்கும்
வேதஞ்சொல் கோட்ட மெங்கும் விளங்கின மாடவீதி 7

சமயநற் குரவர் நாலவர் சந்தான குரவர் நால்வ
ரமைவுற வண்ணற் காவண மெட்டோ டொன்றுயச்
சமையக்கோ புரம தொன்றுஞ் சாரந்தாற் சேக்கி ழாரங்கி
லிமயமே யெழுந்த தென்னு மொழிலதர் மணிக்கு மாமால 8

வீதியில் விளக்க மெங்கும் விளங்குபூ ரணங்கும் பங்கள்
ஆதியிற் சேக்கி ழானை யாவலாய்க் கண்டாற் போலக்
கோதிலாக் கூட்ட மெங்கு குலவுபூ சகர்க ளெங்குஞ்
சோதியாய் நிலவு தில்லைச் சுந்தரப் பவனி கண்டாம். 9

**வாழ்த்து**

*ஆதலாற் சுப்ர மணியனி னகலாவ் லுரையும் வாழி*
*நீதகல் நீறும் வாழி திருமணி யகம் வாழி*
*சேதம தகற்று மைந்து செல்வமா செழுத்தும் வாழி*
*நீதிசேர் மன்னர் வாழி நிலவிய வுலக மெல்லாம்.*

## (4) பத்திரிகைச் செய்திகள்

### 1. சுதேசமித்திரன்—(10—5—54)

சிதம்பரம் ஸ்ரீ நடராஜர் கோயில் ஆயிரக்கால மண்டபத்தில் கோவை சிவக் கவிமணி ஸ்ரீ சி.கே. சுப்பிரமணிய முதலியார் பெரிய புராண பேருரை வெளியீட்டை நேற்று அரங்கேற்றி வைத்தார்.

மேற்படி வைபவம் சிவகங்கைக் கரையில் சிவபூஜையுடன் ஆரம்பமாயிற்று. பிறகு திருமுறைகள், பெரிய புராண பேருரைச் சுவடிகள் எல்லாம் யானைமேல் வைக்கப்பட்டுத் தேவார பாராயணத்துடன் நகர்வலம் வந்தன. அரங்கேற்றப் போகும் பெரிய புராணப் பேருரை 7 வால்யூம்களும் நடராஜர் சித்சபையில் நடராஜப் பெருமான் திருப்பாதங்களில் வைத்து பூஜை, ஆராதனைகள் செய்யப்பட்டன. அப்பொழுது பொது தீட்சிதர்களின் சபை காரியதரிசி ஸ்ரீ வி. வி. கல்யாணசுவாமி தீட்சிதர் தீட்சிதர்களின் சார்பில் ஓர் பொன்னாடை சிவக்கவிமணி ஸ்ரீ சி. கே. எஸ். முதலியாருக்குப் போர்த்தினர். நடராஜப்பெருமானுக்குத் திருப் பாவாடை வழிபாடு, அபிஷேகம் முதலியவை நடைபெற்றன. திருப்பனந்தாள் மடாலயம் சுவாமிகளால் மாலை 1000 பேருக்கு அன்னதானம் நடைபெற்றது.

மாலை 6-மணிக்கு ஆயிரக்கால் மண்டபத்தில் திருஞான சம்பந்தர் மடாலயம் இளவரசுப்பட்டம் ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தர தேசிக அடிகளார் தலைமையின்கீழ் ஓர் பொதுக்கூட்டம் நடைபெற்றது. கூட்டத்திற்குப் பிரசன்னமாயிருந்த முக்கியமானவர்கள் ஸ்ரீமான்கள் டி.எம். நாராயணசாமி பிள்ளை, ஸர். பி.டி. ராஜன், அண்ணாமலை சர்வகலாசாலை உதவி உப அத்யட்சகர் வ. ராமநாதம் பிள்ளை, ரா.பி. சேதுப்பிள்ளை, சி.எம். ராமச்சந்திரன் செட்டியார், எஸ். சச்சிதானந்தம் பிள்ளை, சேவு. மெய்யப்ப செட்டியார், டி. பி. மீனாட்சிசுந்தரம் பிள்ளை ஆவார்கள்.

வரவேற்புரை : கடவுள் வாழ்த்துக்குப் பிறகு விழாக் கமிட்டியின் தலைவர் ஸர். பி.டி. ராஜன் தமது வரவேற்புரையை நிகழ்த்தினர் அவர் கூறியதாவது :—

சமணமும், பௌத்தமும் தலைதூக்கிச், சைவம் மக்களாலும் அரசர்களாலும் கொண்டாடப் பெறாத கால வரலாற்றைப் பெரிய புராணக் கண்கொண்டு நோக்கின் அவ்விருண்டகால வரலாறும் நமக்கு ஒருவாறு கிடைக்கப்பெற்றதென்றே மகிழலாம். இத்தகைய ஒரு சிறந்த நூலுக்கு ஸ்ரீ சி கே.எஸ். அவர்கள் தமது நீண்ட கால அனுபவ ஆராய்ச்சியின் மூலம் ஒரு அரிய உரையை வெளியிட்டிருக்கிறார்கள். கருத்துரைத்தல், கண்ணழித்தல், பொழிப்புத் திரட்டல், அகலங் கூறல் என்ற நால்வகையிலும் பெரிய புராணத்துக்கு இதுவரை யாருமே உரை எழுதவுமில்லை. இம்முயற்சியை மேற்கொள்ளவுமில்லை. செய்தல் தவறு என நினைத்தே பெரியார்கள் எண்ணியிருந்தனர். அக்காலத்திய சூழ்நிலை அது.

ஆனால் இக்கால சூழ்நிலை எந்தப் பொருளையும் ஆராய்ந்தறிய முற்படுவதால் ஸ்ரீ சி.கே.எஸ். தமது பேருரையை உபகரித்துள்ளார்கள். இத்தகைய சிறந்த உரையைப் பொருள், இலக்கிய நுணுக்கம், இலக்கணப் பொருத்தம், சமய நோக்கு, மேற்கோள் காட்டல் முதலிய அரிய முறைகளைக் கையாண்டு உரையாசிரியர் செய்துள்ள பேருழியம் உலகம் உள்ளளவும் நின்று நிலவும்.

வாழ்த்துரைகள் :—பின்னர்த் தமிழ்நாடு அருள்நெறி திருக்கூட்டத்தார் சார்பில் வாழ்த்துப்பா திருவண்ணாமலை ஆதீன வித்வான் ஸ்ரீ எம். முத்துவேங்கிடாஜலம் வாசித்தளித்தார்.

குன்றக்குடி அடிகளார் அருளிய வாழ்த்துரையை ஸ்ரீ சபாபதி தம்பிரானும், பின்னர் திருப்பனந்தாள் ஆதீனம், தருமபுரம், திருவாவடுதுறை, மயிலம் முதலிய மடாதிபதிகள் சார்பிலும் வாழ்த்துப்பாக்கள் வாசித்தளிக்கப்பட்டன. தவிரத் தனி நபர்கள் பலர் வாழ்த்துப்பாக்கள் வாசித்தளித்தனர். எல்லோரும் ஸ்ரீ சி.கே.எஸ். முதலியாருக்கு பொன்னாடைச் சாத்தினார்கள். தவிர வேறு சில பரிசுகளும் வழங்கப்பட்டன.

குன்றக்குடி அடிகளவர்கள் அருளிய வாழ்த்துரை :—

இன்றைக்குப், பண்டு எந்தத் தலத்தில் திருத்தொண்டர் புராணம் உருவாகியதோ அதே தலத்தில் அத்திருநூலுக்கு ஒரு பேருரையும் உருவாகி நிறைவெய்துகிறது. இத்திருத்தொண்டை இனிதே நிறைவேற்றித் தந்துதவிய அன்பர் சிவக்கவி மணி சி.கே. சுப்பிரமணிய முதலியாரவர்கள் சிறந்த தவநெறிச் செல்வர். சைவ நெறியின் வாழ்க்கையில் மேற்கொண்டொழுகும் பண்பாளர். சேக்கிழார் போலவே நாயன்மார் மாட்டு அளவுகடந்த பக்தியும் ஈடுபாடுமுடையவர்கள். இதற்கு உரையினை எழுதுவதற்கு முற்றிலும் தகுதியானவர்கள். இங்ஙனம் தமிழ்நாட்டுச் சைவ உலகிற்கு இத்தகைய பேருதவியைச் செய்த சிவக்கவிமணியவர்களுக்கு நமது உளங்கலந்த நன்றியும் வாழ்த்தும்.

கடைசியாகத் தேவகோட்டை தமிழ் வள்ளல் உ. ராம. மெ. சுப. சேவு. மெ. மெய்யப்ப செட்டியாரவர்கள் 20 பவுன் மதிப்புள்ள தங்கவுறையிட்ட பெரிய புராண நூல் ஒன்றை அன்பளிப்பாக வழங்கினர். ஷை தங்கஉரைகொண்ட நூல் ஸ்ரீ டி.பி. மீனாட்சிசுந்தரனாரால் செட்டியார் சார்பாக வழங்கினர். சிதம்பரம் பொது தீட்சிதர்களின் சார்பிலும் வாழ்த்துப்பா அளிக்கப்பட்டது.

தலைமை உரை ; ஸ்ரீ சோமசுந்தர தேசிக பரமாசாரிய சுவாமிகள் தமது தலைமை உரையில் அருளியதாவது :—

பெரியபுராணம் அரங்கேற்றப்பட்ட ஸ்தலத்திலேயே அதேநாளில் பேருரை வெளியீட்டு நிறைவு விழாவும் கொண்டாடப்பெறும்படி தீர்மானித்த விழா செயற்குழுவினரை நாமெல்லோரும் பாராட்டக் கடமைப்பட்டிருக்கிறோம். அதற்கு அன்பே உருவாக, தியாகமே சின்னமாகக் கொண்டொழுகும் சர். பி.டி. ராஜன் அவர்களின் சீரிய தலைமையும், தமிழுக்கும் சமயத்திற்கும் தம்மை அர்ப்பணம்செய்து தொண்டாற்றிவரும் ஸ்ரீ சி.எம். ராமச்சந்திரன் செட்டியார் அவர்களின் பண்பாடும் செயலாற்றும் திறமுமே காரணம் என்று கருதுகின்றோம். பெரியபுராணம் முழுவதையும் உரையுடனே வெளியிட்டிருப்பவர்கள் ஸ்ரீ திரு.வி. கலியாணசுந்தர முதலியாரவர்களும் ஸ்ரீ ஆறுமுகத் தம்பிரான் சுவாமிகளும், ஸ்ரீ சுப்பராயலு நாயக்கர் அவர்களும், நம் விழாக் கொண்டாடுகின்ற பேருரை தந்திருக்கும் சிவக்கவி மணி ஸ்ரீ சி.கே. சுப்பிரமணிய முதலியாரவர்களும் ஆவார்கள்.

சிவக்கவிமணியின் பேருரை சேக்கிழார் சுவாமிகளது ஆழ்ந்த தெய்வீகக் கருத்துக்களை அகழ்ந்தெடுத்த பெரியதோர் அருட்புதையலாக அமைந்திருக்கிறது. அதைச் சைவ சமயத்தின் கலைக்களஞ்சியமெனலாம். புராண உரை தற்காலத்துக்கு வேண்டியவாறு உருவெடுத்துளது மிகவும் சிறப்பானது. நம் அருள்மணி நம்மிடையே பல்லாண்டு பல்லாண்டு வாழத் திருவருள் துணை புரிவதாக.

ஸ்ரீ சி.கே.எஸ். முதலியார் தம்மை வாழ்த்தி அன்பு மாலை பொழிந்த யாவருக்கும் நன்றியளித்தார்.

## 2. THE HINDU—(9-5-54)

The Arangetram of the commentary on Periapuranam, written by Mr. C. K. Subramania Mudaliar of Coimbatore, was held this evening in the thousand pillar mantapam of Sri Nataraja Temple. A large gathering of Tamil scholars, Tamil lovers and representatives of Mutts was present. Srila Sri Somasundara Desika Paramacharya Swamigal of the Tirugnanasambandar Mutt, Madurai presided. Mr. Subramania Mudaliar has written seven volumes of about 1,000 pages each and has taken about 14 years to complete the work.

Placed on a decorated elephant, the volumes were taken in procession this morning round the four Car streets, and special poojas were offered to Sri Nataraja. At the conclusion of the poojas, on behalf of the Podhu Dikshitars of Sri Nataraja Temple, Mr. V.V. Kalyanaswami Dikshitar, Secretary presented a Ponnadai to Mr. Subramania Mudaliar in recognition of his services to Tamil L terature.

In the evening, Sir. P. T. Rajan, Chairman of the Celebrations Committee, welcomed the President and the gathering. He stated that the Periapuranam could rightly be called the treasure-house of the Saiva faith. It dealt with the life and teachings of the Nayanmars and it was also a historical document. The period between the third and seventh centuries A.D., he pointed out, might be considered as the "dark age" so for as the history of Tamilnad was concerned. That was a time when Jainism and Buddhism were largely patronised by the rulers, and Saivism was neglected. The Periapuranam gave some glimpses of the history of Tamilnad in that "dark age" and he congratulated Mr. Subramania Mudaliar on his achievement. He said that the great service of the commentator would always be remembered by the people.

Srila Sri Somasundara Desika Paramacharya Swamigal felt glad that the celebrations committee has chosen for the release of the commentary the very place at Chidambaram and the very same day (Tiruvadhirai of Chitrai month), when the Periapura-

nam written by Sekkizhar was ushered in to the public by a Chola King some hundreds of years ago. He said that the commentary written by Mr Subramania Mudaliar dealt in extense with all the religious tenets of Saiva Siddhantha and it could rightly be called the *encyclopaepia of Saivism.* The great respect that Mr. Subramania Mudaliar had for Sekkizhar inspired him and was mainly responsible for his turning out such a mighty task. The speaker said that the commentary would be of great help, not only to the present generations but also to the future generations as well *to lead a better and happier life.* The Swamigal then garlanded Mr. Subramania Mudaliar and presented the Ponnadai.

On behalf of the Dharmapuram, Kunrakkudi, Mailam and Perur Mutts, addresses of felicitations were read and Silk cloths were presented to Mr. Subramania Mudaliar in recognition of his services. Mr. Se. Vu Meiyappa Chettiar of Devakottah presented him a volume of Periapuranam with a golden casing. Several other religious institutions and organisations and individuals presented him with addresses and offered valuable presents on the occasion.

Replying to the felicitations. Mr. Subramania Mudaliar thanked them for the great honour done to him and expressed his gratefulness to all those, who helped him to bring out the publication.

Mr. C. M. Ramchandran Chettiar, Secretary of the celebrations committee, proposed a vote of thanks.

## 3. செட்டிநாடு (19—11—53) “அரியசெயல்”

“செயற்கரிய செய்வார் பெரியர்” என்பது தமிழ் மறை. உலகிடை நிகழுகின்ற அனைத்துச் செயல்களுக்கும் ஆண்டவனது அருளாற்றமே அடிபபடைக்காரணம். எனினும்: அவ்வருள் நிலையானது விளங்கியிருந்து தூண்ட அதனால் நிகழும் செயல்களும் சில உள்ளன என்பதை அநுபவ வாயிலாக நாமறிகின்றோம்.

மனித எத்தனத்திலும், முயற்சியிலுமே எல்லாம் நடைபெறுகின்றன என்பது பேதைமையாளர் கூற்று. சிறு முயற்சியின் பயனாகப் பெரும் பயனும், பெரு முயற்சியின் பயனாகச் சிறுபயனும் கிடைப்பது கண்கூடு. “ஆட்டுவித்தா லாரொருவர் ஆடாதாரே” என்ற அப்பரடிகள் திருவாக்கினால், செய்விக்கும் கருத்தாவினுண்மையைத் தெளிந்து கொள்ளலாம்.

பன்னிருதிருமுறைகளையும் பதினான்கு சாத்திரங்களையும் ஓதி உணர்ந்தவர்க்கன்றி உண்மை ஞானங் கைகூடா தென்று உயர்ந்தோர் கூறுவர். பதினான்கு சாத்திரங்களில் தலைமணியாகத் திகழுவது சிவஞான போதம். கயிலைப் பொருப்பிலிருந்து கண்ணுதற் பெருமான் பரம்பரையில் உபதேசிக்கப் பெற்று, ஞாலமுய்ய நாமுய்ய வந்த ஞான நூலாகிய இது, சிவாகமங்களிலே தேர்ந்து பயின்ற அறிவைத் தெளிவு படுத்துவது.

இவ்வரிய நூல், பன்னிரண்டு சூத்திரங்களைக் கொண்டது. சைவத் தெய்வத் திருமுறைகள் பன்னிரண்டும், சிவஞான போதப் பன்னிரு சூத்திரக் கருத்துக்களைத் தெளிவுறுத்துவன என்று ஆன்றோர் கூறுவர். இந்தவகையில் இறுதிச் சூத்திரமாகிய பன்னிரண்டாஞ் சூத்திரம் திருத்தொண்டர் புராணத்தின் அமைதியை முன்னிலைப் படுத்துவதென்பது உணரத் தக்கதாகும்,

வேதப் பொருள்களின் முடிபு சிவாகமப் பொருள்க ளென்பதும், அவற்றின் முடிபு சிவஞானபோதப் பொருளென்பதும், அச் சீரிய பொருளுடையனவே திருமுறைகளும் மற்றைய மெய்கண்ட நூல்களுமென்பதும் சான்றோர் கூறிய உண்மைகளாகும். சிவஞானபோத முடிவைத் திறம்பெற விளக்குகின்ற திருத்தொண்டர் புராணம் உயர்கதியைப் பெறவேண்டுமென்னும் குறிக்கோளையுடைய மக்களுக்கு, ஒப்புயர்வற்ற வழிவகுத்துத் தரும் ஞானக் கருவூலமல்லவா ?

தண்டமிழின் மேலாந்தரமென்று அறிஞர்களாற் பாராட்டப் பெறுகின்ற திருத்தொண்டர் புராணத்திற்கு அரும்பதவுரையும் குறிப்புரையும் போன்ற சிற்றுரைகள் பல இதுவரை வெளிவந்துள்ளன. ஸ்ரீலஸ்ரீ ஆறுமுக நாவலரவர்கள் எழுதிய சூசனத்தைக் காரைக்காலம்மையார் புராணத்திற்கு மேலே பெறும்பேறு நமக்குக் கிடைக்கவில்லை.

ஆலால சுந்தரம் பிள்ளையவர்கள், ஆறுமுகத் தம்பிரான் சுவாமிகளாகிய பெருமக்களின் உரைப் பிரதிகள் அரியனவாகிவிட்ட இக்காலில், திருத்தொண்டர் புராணத்திற்கு மரபோடு பொருந்திய அமைதியும் விளக்கமும் விரிவுமாகிய நல்லுரையை எழுதி, அழகான முறையில் அச்சிட்டு வெளியிட்ட செயல் அரியதொரு பெருஞ் செயல் என்பதை யாரே மறக்கவல்லார் ?

இவ்வருஞ் செயல் செய்து புகழையும் புண்ணியத்தையும் கொள்ளைகொண்டுள்ள நமது பேரன்பர் சைவத் திருவாளர் கோவை சிவக்கவிமணி சி. கே. சுப்பிரமணிய முதலியாரவர்களுக்குச் சைவத்தமிழுலகம் மிகவும் கடமைப் பட்டிருக்கின்றது.

திருத்தொண்டர் புராண விரிவுரையின் கடைசிப் பகுதி, அண்மையில் பதிப்பு வேலை நிறைவாகி வெளிவரவிருக்கிறதென அறிகிறோம். இம்மைப் பயனை மட்டுமே நல்கும் நூல்களில் ஈடுபட்டுப் பாராட்டும் தமிழகம், இருமைப் பயனையும் நல்கும் இந்நூலுக்கு விரிவுரை யெழுதிய பேராசிரியரை அளவில்லாத சிறப்புச் செய்து கொண்டாடுமென்பது, நமது உறுதியான நம்பிக்கை. அந்த நன்னாளை விரைவில் எதிர்நோக்கி யிருக்கின்றோம்.

4. செட்டிநாடு (29-4-54) "பெரியபுராணப் பேருரை"

ஒரு சிறு செயல் செய்வதனால் இரண்டு பெரும்பயன்கள் விளையுமாயின் அச் செயல் முயற்சியில் ஈடுபட அனைவரும் விரும்புவது இயல்பு. எனினும் ஒரு பயன் குறித்து முயற்சி செய்து உழைத்துக் குறித்தபயன் கிடைக்காமையால் வருந்துவோர் பலர். நற்பயனை வேண்டியுழைத்த உழைப்பின் பயனாகத் தீப்பயன் வந்து பொருந்த அதனால் பெருந்துன்ப முறுவோர் சிலர். இந்த நிலையில் எண்ணிய எண்ணியாங் கெய்துகின்ற திண்மை, ஒரு சிலருக்கே வாய்க்கின்றது என்பதை நாம் கண் கூடாகக் காண்கின்றோம்.

அநபாய சோழன் ஒரு செயலால் ஒரேபயனைப்பெற்று அந்த அளவில் மகிழ்ந்திருந்தான். செந்தமிழ்க் காப்பியங்களனைத்தும் சிந்தைக்கும் செவிக்கும் இனியவாய் இன்பநலத்தை நல்கும் இயல்பினைப் பெற்றவை. புரவலரேறாக விளங்கிய சோழமன்னன்

புலவரேறாகவும் விளங்கினானாதலின், சிந்தாமணி முதலிய காப்பியங்களில் ஈடுபட்டுப் பொழுது கழிக்கும் வழக்கத்தை மேற்கொண்டான்.

உலகியல்வளமும், இறையியல் வளமும் ஒருங்கே வாய்க்கப்பெற்ற, அவனது ஆட்சிச் சிறப்புக்கு அச்சாணியாக, அமைச்சர் பதவியேற்றிருந்த சேக்கிழார் பெருமானுக்கு அவன் அடைகின்ற குறையான பயனைப்பற்றிய எண்ணம் உண்டாயிற்று. மந்திரிக்கழகு வரும்பொருள் உரைத்தல் அல்லவா? எனவே, இம்மைக்கும் மறுமைக்கும் இன்பம் நல்குகின்ற திருத்தொண்டர்புராணத்தைப்பற்றி அரசனுக்குநினைவூட்டினார்.

தில்லைப்பெரும்பதித் திருத் திருக்கோயிலிலுள்ள ஆயிரக்கால் மண்டபத்திலிருந்து கொண்டு, கனக சபையார் ' உலகெலாம் ' என்ற முதலளிக்கக், கலைக்கன்னி நின்று ஏவல் கேட்க, ஒரு சித்திரை ஆதிரைத் திருநாளில் திருத்தொண்டர் புராணத்தைச் சேக்கிழார் பெருமான் இயற்றத் தொடங்கி, மறு சித்திரை ஆதிரைத் திருநாளில் முடித்து அரங்கேற்றித், தனக்குத் தலைவனாகவிருந்த அரசனை அடிமைகொண்ட வரலாறு நாமறிந்தேயாகும்.

வேதாந்தம் என்பது, வேதங்களின் முடிவு என்னும் பொருளையுடையது. உபநிடதங்களை வேதாந்த நூல்கள் என்று சொல்லுவார்கள் ; அவற்றின் முடிவுக்கு அப்பாற்பட்டது சித்தாந்தம். சித்தாந்தம் என்பது, முடிந்ததன் முடிவு என்னும் பொருளையுடையது. சிவாகமங்கள் சித்தாந்த நூல்களாம். அச்சிவாகமங்களின் ஞான பாதப்பொருளை ஐயந்திரிபற அறிவுறுத்துவது சிவஞானபோதம். சிவஞான போதத்தின் முடிபாயமைந்த பன்னிரண்டாஞ் சூத்திரம், குருவருளால் சாதனங்களைக் கைக்கொண்டொழுகிப் பாச நீக்கமும் சிவப்பேறும் பெற்ற அணைந்தோர் தன்மையைக் கூறும்.

அந்தச் சூத்திரத்திற் கூறப்பெறும் இலக்கணத்திற்கு இலக்கியமாயிருப்பவர்கள் சேக்கிழார் பெருமானது திருவாக்கிலமைந்த திருத்தொண்டர்களாவார்கள். திருத்தொண்டர்களதுதிறம் பேசுதற்குத் திருவருளாற்றல் உடையவர்களே வல்லமையுடையவர்கள். ' திருத்தொண்டர் புராணத்தை யளவிட நம் சேக்கிழார்க் கெளிதலது தேவர்க்கும் மரிதே' யாகும்.

சித்தாந்த சைவச் செந்நெறிச் செல்வர்களாகிய திருத்தொண்டர்களை அளவிட்டுக் காட்டியருளிய சேக்கிழார் பெருமானது உதவியோடு உடன்வைத்தெண்ணத்தக்கது, அப்பெருங் காப்பியத்திற்கோர் பேருரையெழுதி வெளியிட்டதென்பதை மறக்க முடியுமா ?

கோவை சிவக்கவிமணி சி. கே. சுப்பிரமணிய முதலியாரவர்கள், தாம் பலகாலம் தவமுயன்று அரிதிற் பெற்ற தனிப்பெரும் உரையை அச்சுவாகன மேற்றித் தமிழ்நாடு வாழத் தந்திருக்கிறார்கள். அவர்களது இப்பேருதவிக்கு நன்றி காட்டும் முகமாகச் சித்திரைத் திருவாதிரை நாட்களாகிய 6-5-54லும் அதற்கு மறுநாளிலும் சிதம்பரம் ஆயிரக்கால் மண்டபத்தில் விழா நடைபெற இருக்கிறது.

இவ்விழாவைச் சைவ நன்மக்கள் ஒவ்வொருவரும் தங்கள் தங்கள் சொந்த விழாவாகக் கொண்டு பேருரையாசிரியரைப் பாராட்டுதற்கு, அவரவர்களாலான எல்லா வகைகளிலும் முன்னிற்கவேண்டுமென்று வேண்டிக் கொள்ளுகின்றோம்.

5. செட்டிநாடு (20-5-54) " சேக்கிழார் திருநாட் கழக அன்பளிப்பு "

சிதம்பரம் ஸ்ரீ நடராஜர் கோயில் ஆயிரக்கால் மண்டபத்தில் கோவை சிவக்கவிமணி ஸ்ரீ ஸி. கே. சுப்பிரமணிய முதலியார் பெரியபுராணப் பேருரை வெளியீட்டை நேற்று அரங்கேற்றி வைத்தார்.

மேற்படி வைபவம் சிவகங்கைக் கரையில் சிவபூஜையுடன் ஆரம்பமாயிற்று. பிறகு திருமுறைகள், பெரிய புராணப் பேருரைச் சுவடிகள் எல்லாம் யானைமேல் வைக்கப்பட்டுத் தேவார பாராயணத்துடன் நகர் வலம் வந்தன. அகத்தேற்றப் போகும் பெரிய புராணப் பேருரை 7 வால்யூம்களும் நடராசர் சிற்சபையில் நடராஜப் பெருமான் திருப்பாதங்களில் வைத்துப் பூஜை ஆராதனைகள் செய்யப்பட்டன. அப்பொழுது தீட்சிதர்களின் சபை காரியதரிசி ஸ்ரீ வி. வி. கல்யாணசுவாமி தீட்சிதர் பொது தீட்சிதர்களின் சார்பில் ஓர் பொன்னாடை சிவக்கவிமணி ஸ்ரீ ஸி. கே. எஸ். முதலியார்க்குப் போர்த்தினர். நடராசப் பெருமானுக்குத் திருப்பாவாடை வழிபாடு அபிஷேகம் முதலியவை நடைபெற்றன. திருப்பனந்தாள் மடாலயம் சுவாமிகளால் 1000 பேருக்கு அன்னதானம் நடைபெற்றது

மாலை 6 மணிக்கு ஆயிரக்கால் மண்டபத்தில் திருஞான சம்பந்தர் மடாலயம் இளவரசு ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தர தேசிக பரமாசாரிய சுவாமிகள் தலைமையின்கீழ் ஓர் பொதுக்கூட்டம் நடைபெற்றது. கூட்டத்திற்குப் பிரசன்னமாயிருந்த முக்கியமானவர்கள் ஸ்ரீமான்கள் டி. எம். நாராயணசாமி பிள்ளை, ஸர் பி. டி. ராஜன், அண்ணாமலை சர்வகலாசாலை உதவி உப அக்யட்சகர் எ. ராமநாதம் பிள்ளை, ஆர். பி. சேதுப் பிள்ளை, சி. எம். ராமச்சந்திரன் செட்டியார், எஸ். சச்சிதானந்தம் பிள்ளை, சுப. சேவு. மெய்யப்பசெட்டியார், டி. பி. மீனாட்சி சுந்தரம் பிள்ளை ஆவார்கள்.

கடவுள் வாழ்த்துக்குப் பிறகு விழாக் கமிட்டியின் தலைவர் ஸர். பி. டி. ராஜன் தனது வரவேற்புரையை நிகழ்த்தினர்.

குன்றக்குடி அடிகளார் வாழ்த்துரை ஸ்ரீ சபாபதித் தம்பிரானும், திருப்பனந்தாள், தருமபுரம், திருவாவடுதுறை, மயிலம் முதலிய மடாதிபதிகள் சார்பில் வாழ்த்துப் பாக்களும் வாசித்தளிக்கப்பட்டன.

தேவகோட்டை சேக்கிழார் திருநாட்கழக அன்பளிப்பாக அதன் தலைவர் தமிழ் வள்ளல் உ.ராம.மெ.சுப.சேவு.மெ. மெய்யப்பசெட்டியார் அவர்கள் தங்கவுரை யிட்ட பெரிய புராணநூல் ஒன்றை அன்பளிப்பாக வழங்கினார்கள். சிதம்பரம் பொது தீட்சிதர்களின் சார்பிலும் வாழ்த்துப்பா அளிக்கப்பட்டது.

இரண்டாம்நாள் விழாவில் திருவாளர்கள் டி. எம். நாராயணசாமி பிள்ளை, ஆர். பி. சேதுப்பிள்ளை, எம். எஸ். பழனியப்ப முதலியார், எ. ராமநாதம் பிள்ளை, எ. சிதம்பரநாதச் செட்டியார், புஷ்பம் நடராசன், மீனாட்சி சுந்தரம், திருவாசகம் கே. எம். பாலசுப்பிரமணியம், ராமய்யா பிள்ளை, இ. என். தண்டபாணி பிள்ளை, குலசேகரப்பட்டினம் வீரசிவசுப்பிரமணியம், சிதம்பரேஸ்வர தீட்சிதர் ஆகியோர்கள் உரை ஆசிரியரைப் பாராட்டிப் பேசினார்கள்.

பிறகு சிதம்பரம் பழனியப்ப முதலியார் தேவாரப் பாடசாலை தர்ம பரிபாலகர் திரு. எஸ். சின்னையா முதலியார் உரை ஆசிரியரைப் பாராட்டிப் பேசினர்.

கோயம்புத்தூர் மிட்டாதார் முத்துக்குமாரசாமி முதலியார், ஆனைமலை வெங்கடாசல முதலியார் இருவர்களும் உரை ஆசிரியர் அவர்களுக்கு இரு பொன்னாடைகளைப் போர்த்தினார்கள்

உரை ஆசிரியர் திரு. ஸி. கே. சுப்பிரமணிய முதலியார் தனக்கு உபசரிப்புச் செய்த அனைவர்களுக்கும் நன்றியைத் தெரிவித்துக் கொண்டார்.

விழாத்தலைவர் திருப்பெருந்திரு சோமசுந்தர அடிகளார் முடிவுரை கூறுகையில் "இங்கு அறிஞர்களும் புலவர்களும் நிறையக்கூடி யிருக்கின்றீர்கள். நீங்கள் அனைவரும் மக்கள் பயன்பெறக்கூடிய வகையில் நல்ல நூல்களை எழுதி வெளியிட முற்படல் வேண்டும்" என்று கேட்டுக்கொண்டார்கள். திரு. இராமலிங்க ஓதுவார், மதுரை

திரு. சுப்பையா ஓதுவார் இருவர்களும் வாழ்த்துப்பாடல் பாடிய பிறகு விழா முடிவு பெற்றது.

இரண்டுநாள் விழாவிலும் திருப்பனந்தாள் காசிமடம் திருப்பெருந்திரு காசி வாசி அருள் நந்திக் தம்பிரான் சுவாமிகள் அன்பளிப்புச் செய்திருந்த ரூபாய் 1000க்கு காசிமடத்தில் 1500 ஏழைகளுக்கும், விழாவிற்கு வந்திருந்த சுமார் 1000 பேர்களுக்கும் பழனியப்ப முதலியார் சேவாரப் பாடசாலை அதிபர் திரு, எஸ். சின்னையா; முதலியாராலும் அன்னதானம் செய்யப்பெற்றது.

6. தமிழ்நாடு (11–5–54)

கோயம்புத்தூர் சிவக்கவிமணி திரு. சி. கே. சுப்பிரமணிய முதலியார் எழுதிய பெரிய புராணப் பேருரை நிறைவு விழாவின் 2-வது நாள் வைபவம் நேற்று மாலை 6-மணிக்கு சிதம்பரம் நடராசர் கோயில் ஆயிரக்கால் மண்டபத்தில் மதுரை திரு ஞான சம்பந்தர் மடாலயம் இளவரசு திருப்பெருந்திரு. சோமசுந்தர அடிகளார் தலைமையில் நடைபெற்றது.

சீர்காழி பெரு நிலக்கிழார் திரு. எஸ். சுப்பராய முதலியார் வரவேற்புரை நிகழ்த்துகையில் சைவசமயம் குன்றிச் சமண சமயம் தழைக்க முற்பட்டபோது ஞான சம்பந்தர் தோன்றிச் சமண சமயத்தை முறியடித்துச் சைவத்தைத் தழைத்தோங்கச் செய்ததுபோல், சற்சமயம் நாட்டில் ஏற்பட்டிருக்கும் பிற்போக்குக் கொள்கைகளை முறியடித்துச் சைவத்தை தழைத்தோங்கச் செய்யவே ஞானசம்பந்தரைப்போல் திருப்பெருந்திரு. அடிகளார் தோன்றியுள்ளார்கள். இந்நிலையில் பெரியபுராணப் பேருரை நிறைவு விழா நடப்பதே ஓர் பெரிய சான்றாக விளங்குகின்றது என்று கூறினார்.

டி. எம். நாராயணசாமி பிள்ளை, எம். எல். சி. சென்னைப் பல்கலைக் கழகத்தின் சார்பில் உரை ஆசிரியர் அவர்களுக்கு 1000 ரூபாய் நன்கொடையளித்துப் பேசுகையில், உரை ஆசிரியர் திரு. சி. கே. சுப்பிரமணிய முதலியார் சென்னைப் பல்கலைக் கழகத்தில் படித்து வித்துவான் பட்டம் பெற்ற பேராசிரியராவார். 1930-ம் ஆண்டில் பல்கலைக் கழகத்தில் சொற்பொழிவுகள் செய்துள்ளார்கள். பெரிய புராணப் பேருரைக்காக அப்போது ரூ. 1000 கொடுக்கப்பட்டது. இப்போதும் 1000 ரூபாய் கொடுக்கப்பட்டது. உரை ஆசிரியர் எழுதிய பெரிய புராணப் பேருரையை அறிவுடனும் அன்புடனும் பக்தியுடனும் எழுதி சாதாரண மக்களும் எளியமுறையில் படித்துப் பயன் பெறும் அளவில் வெளியீடு செய்திருக்கின்றார்கள். பெரிய புராணம் சைவசமயத்தவர்களுக்கு மட்டும் அல்ல, உலகத்திற்கே ஓர் நூலாக விளங்கி வரும் நூலாகவும் இருக்கின்றது என்று கூறினார்.

சென்னைப் பல்கலைக் கழகப்பேராசிரியர், திரு. ஆர். பி. சேதுப்பிள்ளை பேசியதாவது : இன்று சைவத்திருநாள் ஆகும். இங்கு கூடியிருக்கும் மக்களைப் பார்த்தால் சைவம் தழைக்கத் தீர்மானித்துவிட்டது என்று காணப்படுகின்றது ; என்று கூறிவிட்டு, மேலும் திரு. ஆர். பி. சேதுப்பிள்ளை பேசுகையில் நாட்டில் எத்தனையோ காவியங்கள் இருக்கின்றன. அவைகளில் பெரியபுராணம் ஓர் பெரிய காவியமாகும். சிந்தாமணி, கம்பராமாயணம் இவைகளின் நயங்களின் நடுவில் பெரியபுராணம் தோன்றியுள்ளது. பெரியபுராணத்தில் பக்தியாகிய தேன் சொட்டுகள் திகழ்கின்றது மட்டும் அல்ல, பக்தி என்ற செல்வத்தைத் தேவாரப் பாடல்களிலிருந்தும் நமது உரை ஆசிரியர் தேடிப்பிடித்துப் பெரியபுராணப்பேருரையில் ஆங்காங்கு சேர்த்திருக்கின்றார் நமது சி. கே. எஸ். அவர்கள். ஆங்கில நாட்டைச் சேர்ந்த போப்பையர் தன்னுடைய 75–வது வயதில் திருவாசகத்தை மொழிபெயர்க்க

முற்பட்டார். போப்பையர் தன்னுடைய 80-வது வயதில் திருவாசக மொழி பெயர்ப்பை முடித்தார். ஆகவே எமது சி. கே. சுப்பிரமணிய முதலியார் மேலும் பல ஆண்டு வாழவேண்டும். அதற்காகத் திரு. சி. கே. சுப்பிரமணிய முதலியார் வேறு ஏதாவது ஒரு நூலுக்கு உரை எழுதத் தொடங்கவேண்டும். அப்படித் தொடக்கம் செய்தால் ஆண்டவன் உங்களை நீடித்து வாழவைத்து வருவார் என்று கேட்டுக்கொண்டார்.

கோயம்புத்தூர் எம். எஸ். பழனியப்ப முதலியார் பேசுகையில் குன்றத்தூர் சேக்கிழார் கோயில் பழுதுபட்டு இருப்பதைச் சைவர்கள் சீர்திருத்தம் செய்ய முற்படல் வேண்டுமென்று கேட்டுக்கொண்டார்.

அண்ணாமலைப் பல்கலைக் கழக உதவித் துணைவேந்தர் திரு. ஏ. ரங்கநாதம் பிள்ளை துணைவேந்தர் டாக்டர். சி. பி. இராமசாமி அய்யர் சார்பாக உரை ஆசிரியர் அவர்களுக்குப் பாராட்டுக் கூறி கோவை சர். ஆர். கே. சண்முகம் செட்டியார் துணை வேந்தராக இருந்த காலத்தில் பேருரைக்காக ரூ. 1500 கொடுக்கப்பட்டது என்றும் பெரியபுராணத்தை ஆங்கிலத்திலோ அல்லது வேறு மொழியிலோ மொழிபெயர்த்து உலக நூலாக விளங்கும்படி செய்தல் வேண்டும் என்று கேட்டுக்கொண்டார்.

அண்ணாமலைப் பல்கலைக் கழகப் பேராசிரியர் திரு. ஏ. சிதம்பரநாதஞ் செட்டியார் பேசுகையில் 1800 ஆண்டுகளுக்கு முன்பு நாட்டில் எல்லாம் தமிழ் மொழியில்தான இருந்துவந்துள்ளது. வடமொழியினால்தான் ஆண்டவனைக் காணமுடியும் என்று ஒரு சிலர் தவறாகக் கூறிவருகிறார்கள். அது தவறு. தமிழ் மொழியினாலேயே ஆண்டவனை அடையலாம் பெரிய புராணத்தை இலக்கியங்களோடு பார்க்க வேண்டும். பாமரமக்களுக்கும், பண்டிதர்களுக்கும் பயன்படக்கூடிய வகையில் சி. கே. சுப்பிரமணிய முதலியார் பேருரைவெளியீடு செய்துள்ளதை பெரிதும் பாராட்டிப் பேசி விட்டு மேலும் பேசுகையில் 12-வது நூற்றாண்டில் புரட்சி வீரராக நமது சேக்கிழார் தோன்றியவராவார். சேக்கிழார் பெருமானுக்கு நாம் நன்றி செய்தவர்களாக இருக்கப்பட வேண்டுமேயானால் கோயில்களில் தமிழிலேயே அர்ச்சனைகள் செய்து வரல் வேண்டும். அதற்காகச் சட்டமும் இயற்றவேண்டிய காலமும் வருகின்றது அதுவரையில் தமிழில் அர்ச்சனைகள் செய்ய விரும்பினால் அதன்படி செய்ய ஆட்கள் இருக்கவேண்டும். சிறக, தனிப்பட்ட மடாலயத்தார்கள் தங்களிடம் உள்ள கோயில்களில் தமிழிலேயே அர்ச்சனைகள் செய்துவர முற்படல் வேண்டும்.

திருமதி புஷ்பம் நடராஜன் பேசுகையில் தமிழ்நாட்டிலுள்ள பெண்மணிகள் அவசியம் பெரிய புராணத்தை வாங்கி ஓய்வு நேரங்களில் படித்துவர முற்படல் வேண்டும் என்று கேட்டுக்கொண்டார். திருமதி பாப்பாத்தியம்மாள் பேசியபிறகு அண்ணாமலைப் பல்கலைக்கழகம் ஆராய்ச்சித்துறைத் தலைவர் திரு. ஜி. சுப்பிரமணிய பிள்ளை பேசுகையில் தேவாரத்திற்கு பாஷியம் போன்றது பெரிய புராணமாகும் தற்சமயம் பெரிய புராணம் என்று கூறாது, அடியார்களின வரலாற்றைக் கூறும் நூல் என்று கூற வரமுற்படல் வேண்டும். பெரிய புராணத்திற்குத் தொல்காப்பியம் ஒன்றுதான் இலக்கண நூலாகும். பெரிய புராணத்தை எல்லோரும் படித்து விட்டால் நாட்டில் பொதுவுடைமைக்கே வழியில்லை என்று கூறினார்.

பிறகு ஈரோடு நகராட்சித் தலைவர் திரு. மீனாட்சிசுந்தரம் பேசுகையில் கொடியில் சுவர்களில் முளைத்திருக்கும் மரம் செடிகள் நமக்கு விரோதியாக இருந்து கோயிலை அழிக்க முற்பட்டுள்ளன என்று அந்த மரம் செடிகளைக் களைந்தெறிய சைவ சமய மக்கள், மாணவர்கள் ஆகியோர்கள் முற்படல் வேண்டும் என்றும் கேட்டுக் கொண்டார்.

திருவாசகம் திரு. கே. எம். பாலசுப்பிரமணியம், திரு. ராமய்யா பிள்ளை, திரு. இ. என். தெண்டபாணி பிள்ளை, குலசேகரப்பட்டினம் திரு. வீரசுப்பிரமணியம், திரு. சிதம்பரேஸ்வர தீட்சிதர் ஆகியோர்கள் உரை ஆசிரியரைப் பாராட்டிப் பேசினார்கள்.

பிறகு சிதம்பரம் பழனியப்ப முதலியார் தேவாரப் பாடசாலை தர்ம பரிபாலகர் திரு. எஸ். சின்னையா முதலியார் உரை ஆசிரியரைப் பாராட்டிப் பேசுகையில் 1935-ம் ஆண்டில் இப் பேருரையின் முதல் சஞ்சிகை நிறைவு விழாவை இதே மண்டபத்தில் கொண்டாடியபோது சுமார் 15 நபர்கள் கூடியிருந்து கொண்டாடினார்களென்றும், 1948-ம் ஆண்டில் பேருரை எழுதிய கைப்பிரதிகளை இதே மண்டபத்தில் 2-வது நிறைவு விழா கொண்டாடியபோது சுமார் 150 அன்பர்கள் தான் கூடியிருந்தார்களென்றும் அது சமயம் சொற்பொழிவாளராக இருந்த திருமதி புஷ்பம் நடராசன் அக் கூட்டத்தைப் பார்த்து இவ்விழாவிற்கு இவ்வளவு தானு கூட்டம் என்றும் சிதம்பரம் மக்களுக்கு இவ்வளவுதான் பக்தி இருக்கிறதா என்றும் கூறினர் என்றார்.

கோயம்புத்தூர் மிட்டாதார் திரு. முத்துக்குமாரசாமி முதலியார், ஆனைமலை திரு. வெங்கிடாசல முதலியார் இருவர்களும் உரை ஆசிரியர் அவர்களுக்கு இரு பொன்னாடைகளைப் போர்த்தினார்கள்.

பிறகு உரை ஆசிரியர் அவர்களுக்குப் பல வாழ்த்துப் பத்திரங்கள் அளிக்கப் பட்டன. மேலும் மேற்படி நிறைவு விழாவை முன்னிட்டு இந்தியா இலங்கை முதலிய நாடுகளிலிருந்தும் சுமார் 300-க்கு மேற்பட்ட வாழ்த்துச் செய்திகள் அனுப்பியிருந்தார்கள்.

ஒருவர் தன்னுடைய தந்திமூலம் வாழ்த்துப் பாடலை ஆசிரியருக்கு தெரியப் படுத்தியிருந்தது குறிப்பிடத்தக்கது. உரை ஆசிரியர் திரு. சி. கே. சுப்பிரமணிய முதலியார் தனக்கு உபசரிப்புச்செய்த அனைவர்களுக்கும் நன்றியைத் தெரிவித்துக் கொண்டார்.

விழாத்தலைவர் திருப்பெருந்திரு சோமசுந்தர அடிகளார் முடிவுரை கூறுகையில் "இங்கு அறிஞர்களும் புலவர்களும் நிறைய கூடியிருக்கின்றீர்கள். நீங்கள் அனைவரும் மக்கள் பயன்பெறக்கூடிய வகையில் நல்ல நூல்களை எழுதி வெளியிட முற்படல் வேண்டும்" என்று கேட்டுக்கொண்டார்கள். திரு. ராமலிங்க ஓதுவார், மதுரை திரு. சுப்பையா ஓதுவார் இருவர்களும் வாழ்த்துப்பாடல் பாடிய பிறகு விழா முடிவுபெற்றது.

இரண்டுநாள் விழாவிலும் திருப்பனந்தாள் காசிமடம் திருப்பெருந்திரு காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் அன்பளிப்புச் செய்திருந்தரூபாய் 1000-க்கு காசிமடத்தில் 1500 ஏழைகளுக்கும், விழாவிற்கு வந்திருந்த சுமார் 1000-ம் பேர்களுக்குப் பழனியப்ப முதலியார் தேவாரப் பாடசாலை அதிபர் திரு. எஸ். சின்னையா முதலியார் அன்னதானம் செய்துள்ளார்கள்.

## 7. ஈழகேசரி, (16-5-54)

கோவை, சைவப் பெரியார் சிவக்கவிமணி திருவாளர் சி. கே. சுப்பிரமணிய முதலியார் அவர்கள் தங்களது வாழ்க்கைப் பயனாகக் கணக்கற்ற ஆண்டுகளாய் அரிய முயற்சி செய்து வெளியிட்டு வரும் திருத்தொண்டர் புராணப் பேருரை வெளியீட்டு நிறைவு விழா மே மாதம் 6, 7 தேதிகளில் சிதம்பரம் திருக்கோவிலில் ஆயிரக்கால் மண்டபத்தில் சிறப்பாக நடைபெற்றது.

திரு. வி. எஸ். இரத்தின சபாபதி முதலியார் வாழ்த்துரை நிகழ்த்தினர். திருவாளர்கள் எஸ். இராமசாமி நாயுடு, டி. எம். நாராயணசாமி பிள்ளை, ஏ. இராம நாத பிள்ளை, ஆர். பி. சேதுப்பிள்ளை, மு. வரதராசனர், ஏ. சிதம்பரனர், முத்து சு. மாணிக்கவாசகர், ஜி. சுப்பிரமணிய பிள்ளை, ஔவை துரைசாமிப் பிள்ளை ஆகியோர் இவ் விழாவிற் பங்குபற்றி விரிவுரைகள் ஆற்றினர்.

தலைமை உரை:—திரு. சோமசுந்தர தேசிக பரமாசாரிய சுவாமிகள் தமது தலைமையுரையில் அருளியதாவது:—

பெரிய புராணம் அரங்கேற்றப்பட்ட தலத்திலேயே அதே நாளிற் பேருரை வெளியீட்டு நிறைவு விழாவும் கொண்டாடப் பெறும்படி தீர்மானித்த விழாச் செயற்குழுவினரை நாமெல்லோரும் பாராட்டக் கடமைப் பட்டிருக்கிறேம். அதற்கு அன்பே உருவாக, தியாகமே சின்னமாகக் கொண்டொழுகும் சர் பி. டி. ராஜன் அவர்களின் சீரிய தலைமையும், தமிழுக்கும் சமயத்திற்கும் தம்மை அர்ப்பணம் செய்து தொண்டாற்றிவரும் திரு. வி. எம். ராமச்சந்திரன் செட்டியார் அவர்களின் பண்பாடும் செயலாற்றும் திறமுமே காரணம் என்று கருதுகின்றேம். பெரிய புராணம் முழுவதையும் உரையுடனே வெளியிட்டிருப்பவர்கள் திரு. வி. கலியாணசுந்தர முதலியாரவர்களும், ஸ்ரீ ஆறுமுகத் தம்பிரான் சுவாமிகளும், திரு. சுப்பராயலு நாயக்கர் அவர்களும், நம் விழாக் கொண்டாடுகின்ற பேருரை தந்திருக்கும் சிவக்கவிமணி திரு. வி. கே. சுப்பிரமணிய முதலியாரவர்களும் ஆவார்கள்.

சிவக்கவிமணியின் பேருரை சேக்கிழார் சுவாமிகளது ஆழ்ந்த தெய்வீகக் கருத்துக் களை அகழ்ந் தெடுத்த பெரியதோர் அருட்புதையலாக அமைந்திருக்கிறது. அதைச் சைவ சமயத்தின் கலைக்களஞ்சிய மெனலாம். புராண உரை இக்காலத்துக்கு வேண்டியவாறு உருவெடுத்துளது மிகவும் சிறப்பானது. நம் அருள்மணி நம்மிடையே பல்லாண்டு பல்லாண்டு வாழத் திருவருள் துணை புரிவதாக.

குறிப்பு:—அண்ணமலைப் பல்கலைக் கழகப் பேராசிரியர் திரு. ஏ. சிதம்பரநாத செட்டியார், பேசியதன் சுருக்கமும், சென்னைப் பல்கலைக்கழகப் பேராசிரியர் திரு. ஆர். பி. சேதுப்பிள்ளை, அவர்கள் பேசியதன் சுருக்கமும் மேலே 6-தமிழ்நாடு 11-5-54 பத்திரிகைச் செய்தியில் வந்துள்ளன.

பின்னர் உரை ஆசிரியர் அவர்களுக்குப் பலவாழ்த்துப் பத்திரங்கள் அளிக்கப் பட்டன. நிறைவு விழாவை முன்னிட்டு இந்தியா இலங்கை முதலிய நாடுகளிலிருந்தும் சுமார் 300க்கு மேற்பட்ட வாழ்த்துச் செய்திகள் அனுப்பியிருந்தார்கள்.

உரை ஆசிரியர் திரு. சி. கே. சுப்பிரமணிய முதலியார் தனக்கு உபசரிப்புச் செய்த அனைவர்களுக்கும் நன்றியைத் தெரிவித்துக்கொண்டார்.

## 8. கல்கி (5-6-54)

. தில்லை வெளியில் ஆனந்தக் கூத்தாடிய நடராஜப் பெருமான் "உலகெலாம்" என்று அடியெடுத்துக் கொடுக்க, சேக்கிழார் தம் பெரிய புராணத்தைப் பாடத் தொடங்கினர். சிதம்பரத்தில் சபாநாதர் கோயிலின் ஆயிரக்கால் மண்டபத்தில் சித்திரை மாதம் திருவாதிரை நக்ஷத்திரத்தில் தொடங்கி, அடுத்த சித்திரை மாதம் திருவாதிரையில் முடித்தனர் என்பதையும்,பெரியபுராணத்தைச் செவிமடுத்து மகிழ்ந்த அநபாய சோழன் (இரண்டாம் குலோத்துங்கன்) சேக்கிழார் சுவாமிகளையும் திருத் தொண்டர் புராணத்தையும் யானைமீது ஏற்றித் தானும் பின் இருந்து கவரி வீசி ஊர்வலமாகவந்து சேக்கிழார் பெருமானுக்குப் பல சிறப்புகள் செய்தான் என்பதையும் உமாபதி சிவாச்சாரியார் அருளியுள்ள சேக்கிழார் புராணத்தால் நாம் அறிகின்

ரூம். எனவே பெரிய புராணம் அரங்கேற்றப்பட்ட சிதம்பரத்தில், ஆயிரக்கால் மண்டபத்தில் இந்த ஜய ஆண்டு சித்திரைத் திங்கள் 24-ம் நாள் திருவாதிரை நட்சத்திரத்தில் பெரிய புராணப் பேருரை வெளியீட்டு நிறைவு விழா அமைந்தது மிகவும் பொருத்தமாகும்.

பெரிய புராணப் பேருரை நிறைவு விழாவின் பொருட்டு அம்பலவாணர் கோயிலின் ஆயிரக்கால் மண்டபத்தின் முகப்பிலும், செல்வ நெடுமாடங்கள் நிறைந்த தில்லையின் நான்கு வீதிகளிலும் பல காவணங்கள் (பந்தல்) போடப் பட்டன. ஒவ்வொரு காவணத்துக்கும் ஒரு பெயர் இடப்பட்டது. கிழக்குக் கோபுர வாயிலின் முன்னர் ஸ்ரீ மாணிக்க வாசக சுவாமிகள் காவணமும், மேற்கு வீதியில் திருஞான சம்பந்தர், சுந்தரர் காவணமும், மேற்கு வீதியில் திருநாவுக்கரசர் காவணமும் அமைந்திருந்தன. இவைகளேயன்றி வடக்கு வீதியில் மெய்கண்டார், அருணந்தி சிவம் காவணங்களும் போடப் பட்டன.

மே மாதம் ஆறும் நாள் வியாழக்கிழமை காலையில் திருவிழா தொடங்கியது. அலங்கரித்த யானைமீது பெரிய புராணப் பேருரைச் சுவடிகள் வைக்கப் பட்டன. அதன் முன்னர் சேக்கிழாரின் திருவுருவப் படம் விமானத்தில் புறப்பட்டது பல வித வாத்தியங்கள் முழங்கத் தமிழ்நாடெங்கிலுமிருந்து வந்திருந்த பெரியார்கள் புடைசூழ ஆயிரக்கால் மண்டபத்திலிருந்து ஊர்வலம் புறப்பட்டது. பெரிய புராணப் பேருரை ஆசிரியர் சிவக்கவிமணி திரு. சி. கே. சுப்பிரமணிய முதலியார் அவர்கள் முன்னர் நடந்துவர அவரைச் சூழ்ந்து பல அடியவர் வந்தனர். இதற்குப் பின்னர் பல கோயில்களின் ஓதுவா மூர்த்திகள் பக்க வாத்தியங்களுடன் பன்னிரு திருமுறைகளை மிக உருக்கமாய்ப் பாடி வந்தனர். நூற்றுக்கணக்கான மக்கள் ஊர்வலத்தில் கலந்து கொண்டனர்.

காலை பத்து மணிக்கு அடியார் பலரும் பொன்னம்பலம் வந்து சேர்ந்தனர். ஸ்ரீ நடராஜப் பெருமான் சன்னதியில் ஸ்ரீ கல்யாணசாமி தீக்ஷிதர் பெரிய புராணப் பேருரை ஆசிரியர் சிவக்கவிமணி திரு. சுப்பிரமணிய முதலியார் அவர்களுக்குப் பொன்னுடை போர்த்தி ஆசி கூறினர். அன்று பகல் ஆயிரக் கணக்கான ஏழை மக்களுக்கு அன்னதானம் வழங்கப்பட்டது.

மாலை ஐந்துமணிக்கு ஆயிரக்கால் மண்டபத்தில் விழா மீண்டும் தொடங்கியது. திருஞானசம்பந்தர் மடாலயம் இளவரசுப் பட்டம் ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தர தேசிக அடிகளார் விழாவுக்குத் தலைமை வகித்தார். செயற்குழுவின் தலைவரான திரு. பி. டி. ராஜன் அவர்கள் வந்தவர்களை வரவேற்றுப் "பெரிய புராணம் சைவ சமயத்தின் கருவூலம். இது ஒரு வரலாற்று நூல். இத்தகைய அரிய நூலுக்குப் பேருரை எழுதிய சிவக்கவிமணியவர்கள் தமிழ் நாட்டில் பொன்றாப் புகழ் பெற்றுள்ளனர்" எனக் கூறி முடித்தார். தலைமை வகித்த ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தர தேசிக அடிகளார் தமது தலைமையுரையில் "சேக்கிழார் அரங்கேற்றிய தலத்தில் அதே நாளில் பெரிய புராணப் பேருரை அரங்கேற்று விழா நடைபெறுவது மிகவும் பொருத்தமாகும்" எனக் கூறிச் சிவக்கவிமணி அவர்களுக்குப் பொன்னுடை போர்த்தினர்.

அதன் பிறகு திருப்பனந்தாள், தருமபுரம், திருவாவடுதுறை, குன்றக்குடி, மயிலம், பேரூர் முதலிய மடங்களின் பிரதிநிதிகள் சிவக்கவிமணி அவர்களுக்குப் பொன்னுடை போர்த்தி வாழ்த்தினர். செந்தமிழ்ப் புலவரும் புரவலரும் ஆகிய தேவகோட்டை மெய்யப்பச் செட்டியார் அவர்கள் பொன் கட்டுக் கட்டிடம் அமைத்த

பெரிய புராண புத்தகம் ஒன்றைப் பரிசளித்தனர். திரு மெய்யப்பச் செட்டியார் அவர்களின் விருப்பப்படி பேராசிரியர் திரு தெ. பொ. மீனாட்சிசுந்தரனார் அவர்கள் அப் புத்தகத்தினைச் சிவக்கவிமணி அவர்களுக்கு வழங்கினார்.

பின்னர்ப் பல சங்கங்களும் அன்பர்களும் சிவக்கவிமணி அவர்களுக்குப் பல பரிசுகளும் பாராட்டுரைகளும் வழங்கினர். இறுதியில் சிவக்கவிமணி அவர்கள் தம்மைப் பாராட்டிய நண்பர்களுக்கும் இப் பேருரை வெளிவருவதற்கு உதவி செய்த நண்பர்களுக்கும் தமது நன்றியைத் தெரிவித்துக் கொண்டார். முதல் நாள் விழா முடிவுற்றது.

இரண்டாம் நாள் விழா மறுநாள் காலை பன்னிரு திருமுறையோடு சேக்கிழார் உலா, தேவார பாராயணத்துடன் நடைபெற்றது. காலை பத்து மணிக்குச், திருஞானசம்பந்த நாயனார் திருஞானப் பாலுண்டருளிய திருவிழாவும் நடைபெற்றது. மாலை ஆறு மணிக்கு ஆயிரக்கால் மண்டபத்தில் விழா ஆரம்பமாயிற்று. அப்போது வரவேற்புக் குழுவின் சார்பில் சீர்காழி திரு சுப்பராய முதலியார் அவர்கள் வரவேற்புரை கூறினார். ஸ்ரீ டி. எம். நாராயணசாமிப் பிள்ளை அவர்கள் பாராட்டுரை கூறிச் "சென்னைப் பல்கலைக் கழகச் சார்பில் ஆயிரம் ரூபாயை திரு. முதலியார் அவர்களுக்கு வழங்கினார். பேராசிரியர் திரு. ரா. பி. சேதுப் பிள்ளை அவர்கள் சிவக்கவிமணியின் பெருமுயற்சியைப் பாராட்டினார்.

அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தைச் சார்ந்த திரு வ. இராமநாதப் பிள்ளை, தமிழ்ப் பேராசிரியர் திரு அ. சிதம்பரநாதச் செட்டியார், பேராசிரியர் திரு ஜீ. சுப்பிரமணியப் பிள்ளை, திருவாசகமணி கே. எம். பாலசுப்ரமணியம், திரு எம். எஸ். பழனியப்ப முதலியார், திரு மீனாட்சி சுந்தர முதலியார், திரு எஸ். சின்னைய முதலியார், திரு தண்டபாணிப் பிள்ளை, ஸ்ரீமதி புஷ்பம் நடராஜன் முதலியோர் சிவக்கவிமணி அவர்களின் தொண்டினைப் பாராட்டிப் பேசினார்கள்.

அதன் பின் தமிழ்நாடு அறநெறித் திருக்கூட்டம், தில்லைத் திருமுறைக்கழகம், குடந்தைச் சிவனடியார் திருக்கூட்டம், சீர்காழி திருஞான சம்பந்தர் கழகம், மதுரை பன்னிரு திருமுறைக் கழகம் முதலிய கழகத்தினர் திரு. முதலியார் அவர்களுக்குப் பாராட்டுரைகள் வழங்கினர். இறுதியில் சிவக்கவிமணி அவர்கள் இப்பேருரை வெளி வருவதற்குத் துணையாக இருந்த அன்பர்களுக்குத் தமது நன்றியைத் தெரிவித்துக் கொண்டார். விழாக் குழுவின் செயலாளர் திரு. சி எம். இராமச்சந்திரன் செட்டியார் விழாவில் கலந்து கொண்டு, சிறப்பித்த அனைவர்க்கும் நன்றி கூறக் கூட்டம் இனிது முடிந்தது.

சிவக்கவிமணி அவர்களின் பெரிய புராணப் பேருரை உயர்ந்த காகிதத்தில் 160 பக்கங்கள் கொண்ட சஞ்சிகைகளாக 1935-ம் ஆண்டு முதல் வெளிவந்துள்ளது. இதுவரை வெளிவந்த நாற்பத்துநாலு சஞ்சிகைகளும் 5,424 பக்கங்கள் கொண்டுள்ளன. நாற்பத்துநாலு சஞ்சிகைகளையும் ஆசிரியர் ஏழு பகுகளாகப் பிரித்து வெளியிட்டுள்ளார். கடந்த பத்தொன்பது ஆண்டுகளாகச் சிவக்கவிமணி அவர்கள் இப் பேருரை வெளியீட்டில் ஈடுபட்டுள்ளார்கள். இப்பேருரையினைத் தமிழ்ப் பெருமக்கள் பலரும் வாங்கிப் படித்துப் பயன் பெறுவார்களாக. - பு, ஆலால சுந்தரம்

## 9. "கலைமகள்" (14–5–54)

பெரிய புராணம் தமிழில் தோற்றிய காவியம். பக்திச் சுவை சொட்டும் பனுவல். நாயன்மார்களின் வரலாற்றை விரிவாகச் சொல்வதோடன்றித் தமிழிலக்

கியப் பண்பும் நிறைந்து விளங்குவது. அதற்கு முன்பே சிலர் உரை வரைந்திருக்கிறார்கள். கோயம்புத்தூர்ப் பேரறிஞர் திரு. சிவக்கவிமணி சி. கே. சுப்பிரமணிய முதலியாரவர்கள் பல காலம் ஆராய்ந்து விரிவாக ஓருரையை எழுதி முடித்திருக்கிறார்கள். அவ்வுரையின் அரங்கேற்றம் மே மாதம் 6, 7-ஆம் தேதிகளில் சிதம்பரத்தில் மிகச் சிறப்பாக நிறைவேறியது. பெரிய புராணத்தைச் சேக்கிழார் பாடி அரங்கேற்றிய இடமும் சிதம்பரமே. ஆதலின் இப் பேருரையை அங்கே அரங்கேற்றம் செய்தது மிகவும் பொருத்தமான காரியம்.

பல நூல்களின் ஆராய்ச்சியினாலும் தம்முடைய நுண்ணுணர்வினாலும் பக்தியினாலும் பெரிய புராணத்திற்குள் ஆழ்ந்து ஆழ்ந்து நுகர்ந்து தேர்ந்து இவ்வுரையைச் சிவக்கவிமணியவர்கள் எழுதியிருக்கிறார்கள். தலங்களைப் பற்றிய வரலாறுகளும் படங்களும் பிற செய்திகளும் இதற்காக முதலியாரவர்கள் எவ்வளவு உழைப்பை மேற்கொண்டிருக்கிறார்கள் என்பதைப் புலப்படுத்தும். இந்த நூலைத் தமிழ் நாட்டுச் செல்வர்கள் தாமும் வாங்கலாம் ; வாங்க முடியாத புலவர்களுக்கு வாங்கி வழங்கலாம். இலக்கிய முயற்சிகள் வளர வேண்டுமானால் இப்படித்தான் வளரவேண்டும். வெறும் கூட்டம் போட்டுக் கை தட்டினால் போதாது.

## (5) உரை நிறைவு விழாத் தொடர்ச்சி

1. திருப்பேரூர் என்கிற மேலைச்சிதம்பரம்.

தில்லையில் நடந்த நிறைவு விழாவின் தொடர்ச்சியாகக் "குடகத்தி(ல்)லை அம்பலவாணன்" என்று ஆளுடைய நம்பிகள் தேவாரத்தில் அருளியபடி உள்ள திருப்பேரூர் என்னும் தலத்தில் பேருரை நிறைவு விழா 28-5-53-ல் வெள்ளிக்கிழமை சிறப்பாக நடைபெற்றது. கோவை மாநகரிலிருந்து அன்பும், கல்வியும், செல்வமும் நிறைந்த பெரியோர்கள் பலரும் வந்து சிறப்பித்தார்கள். காலை 8-மணிக்கு புராணப்பேருரைச் சுவடிகளை யானையின்மேல் வைத்துக் கோவில் ஸ்தானீகர் சுந்தரகுருக்கள் அவர்கள் தாங்கி வந்தார்கள்.

அலங்கரித்த அழகிய ரதவிமானத்தில் சேக்கிழார் நாயனார், சுந்தரமூர்த்தி நாயனார், திருநாவுக்கரசு நாயனார், திருஞான சம்பந்த நாயனார் ஆகிய மூர்த்திகளை எழுந்தருளப் பண்ணிச் சிறப்பான அலங்காரங்கள் செய்யப்பட்டிருந்தன.

மேற்படி நாயன்மார்களுக்கும், உரைச்சுவடிகளுக்கும் முன்னமே திருக்கோயிலில் சிறப்பாக வழிபாடுகள் செய்யப்பட்டன. அதன்பின் நாயன்மார்களுடன், உரைச்சுவடிகளை திருவீதியில் சிறப்பாக நகர்வலம் செய்யப்பட்டது. நகர்வலத்தில் பெருந்திரளான மக்கள் கலந்துகொண்டனர். முன்னே சிவனடியார்கள் ரிஷபக்கொடிகளைத் தாங்கிக்கொண்டு சிவநாம முழக்கத்துடன் வந்தார்கள். பின்னால் தேவாரத் திருமுறைகளை ஓதிக்கொண்டு தேவாரப் பாராயணத்திருக்கூட்டத்தார் வந்தார்கள்.

இப்போது உரைச்சுவடிகளைத் தாங்கி வந்த யானைதான் (ஜானகி என்னும் பெயருடைய மேற்படி கோவில் யானை) 32 ஆண்டுகளுக்கு முன்பு 1922-ம் வருஷத்தில் கோவைமாநகரில் உயர்பெருஞ் சைவத்திருவாளர் சென்னை கப்பாக்கம் திரு. சதாசிவம் செட்டியார் அவர்கள் பெரியபுராணப் படனம் நிறைவாக்கி விழாக் கொண்டாடினபோது கோவைமாநகர்ப் பெருந்தேர்வீதி நான்கிலும் திருமுறைகளைத் தாங்கிக்கொண்டு வந்த சிறப்புப் பெற்றது. அதை எண்ணும்போது மனம் மிக மகிழ்ச்சியடைகின்றது.

ஊர்வலம் முடிந்து கோயிலுக்கு வந்தபின்னர் உரைச்சுவடிகளை நடராஜர் திருவடிகளில் சார்த்தி வழிபடப்பட்டது. கோயில் அர்ச்சகர்களாகிய ஆதிசைவ மூர்த்திகள் தங்கள் சார்பாக உரையாசிரியரை ஆசீர்வதித்து ஸ்ரீ நடராஜருக்கு சாத்திய பொன்னாடை பரிவட்டமும், திருநீறும் அளித்து ஆசி கூறினார்கள். அதன்பின் ஸ்ரீ பட்டிப் பெருமானுக்கும், ஸ்ரீ பச்சை நாயகி அம்மனுக்கும் அபிஷேகம், மஹாதீபாராதனை, திருப்பாவாடை நிவேதனத்துடன் சிறப்பாக நடைபெற்றன. அதன்மேல் பிராம்மண சந்தர்ப்பணையும், மாஹேஸ்வரபூஜையும், அடியார்க்கமுதளித்தலும் கூடிய அன்ன தானச் சிறப்புக்கள் நடைபெற்றன. ஏறக்குறைய 1000 பேர்கள் அமுதுண்டு களித்தார்கள்.

மாலையில் 5 மணி அளவில் திருக்கல்யாண மண்டபத்தில் திரு. வித்துவான் S. அருணாசலம்பிள்ளை யவர்கள் கடவுள் வணக்கமும், தேவாரமும் ஓதினார்கள். வாழ்த்துரைக் கூட்டம் நடைபெற்றது. ஆதிசைவ மூர்த்திகளாகிய கோவில் ஸ்தானீகர்கள் வாழ்த்துப் பத்திரமும், திருவருள் பிரசாதமும் வழங்கினார்கள். ஸ்ரீ பட்டீஸ்வரஸ்சுவாமி தேவஸ்தான டிரஸ்டிகள் சார்பில் மானேஜிங் டிரஸ்டி திருவாளர், C. R. சதாசிவ முதலியார் அவர்கள் உரையாசிரியருக்கு வாழ்த்துப்பத்திரம் வாசித்துக் கொடுத்துப் பொன்னாடை போர்த்தினார்கள். கோயமுத்தூர் கோனியம்மன் தேவஸ்தானம் தர்மகர்த்தாக்கள் உரையாசிரியருக்கு வாழ்த்துப்பத்திரம் வாசித்துக்கொடுத்து, உயர்ந்த பட்டுப் பொன்னாடையும் சாத்தினார்கள்.

பேரூர் ஸ்ரீ சாந்தலிங்க மடாலயம் அடிகளார் உரையாசிரியருக்குச் சிவபூஜைக்கு உபயோகம் ஆகும் பொருட்டு ஒரு வெள்ளித் தட்டு வழங்கினார்கள். உரையாசிரியர் எல்லாருக்கும் தகுந்த மொழிகளால் நன்றி கூறினார்கள். ராவ்பஹதூர் திரு. ராமச்சந்திரன் செட்டியார் அவர்கள் இக்கூட்டத்திற்குத் தலைமை தாங்கி, நன்றி கூறிச் சிறப்பாக நடத்தினார்கள். அதன்பின் உரையாசிரியர் அவர்கள் புராணத்துக்கு அரிய சேவை செய்த கோவை வித்வான் - திரு. S. அருணாசலம்பிள்ளை யவர்களுக்கு சிவபூஜை செய்வதற்குரிய வெள்ளி அர்க்கப்பாத்திரங்கள் வழங்கினார்கள். நீண்ட காலமாக புராண உரைச் சுவடிகளுக்கு கட்டிட வேலை செய்த கோவை திரு. D. சோமசுந்தர முதலியாருக்குப் பொன்னாடையும், பரிசும் வழங்கினார்கள். கடவுள் வாழ்த்துடன் விழா இனிது முடிந்தது.

2. தென்சித்தூர் (பொள்ளாச்சி தாலுகா.)

6-6-54 அன்று கோவை ஜில்லா பொள்ளாச்சி தாலுகா தென் சித்தூரில் ஸ்ரீ மீனாக்ஷிசுந்தரேஸ்வரர் தர்மபரிபாலன சபையின் சார்பில் பெரிய புராணப் பேருரை நிறைவு விழா நடைபெற்றது. தென்சித்தூர் ஸ்ரீ மீனாக்ஷி சுந்தரேஸ்வரர் கோயிலானது மேற்படியூர் பெருநிலக்கிழார்களாகிய சித்தூர் முதலியார்களின் குடும்பத்துக்குப் பாத்தியப்பட்ட சொந்தக்கோயிலாகும். மேற்படி முதலியார்கள் குடும்பத்தின் முன்னோர்கள் குடும்ப பாகப்பிரிவினை ஏற்பாடு செய்கின்ற காலத்தில் தங்கள் குடும்ப வழிபாட்டுக்காக ஷை கோயிலை ஸ்தாபித்து ஸ்ரீமீனாக்ஷி சுந்தரேஸ்வரரை தங்களுடன் ஒரு பாகஸ்தராக வைத்துச் சாசனம் செய்தபடி கோயில் நடைமுறையில் நடந்து வருகின்றது. இக்கோயில் ஷை குடும்பக்கோயில் என்று கோர்டில் வழக்கிட்டு வெற்றிபெற்றதுமன்றிக் கோயில் நடைமுறைத் திட்டத்தை ஒழுங்கு செய்து கொடுத்தவர் உரையாசிரியர் ஆவர். அதன்பின் கோயில் திருப்பணிகளிலும், கும்பாபிஷேக நிகழ்ச்சிகளிலும் பெரும்பங்கு எடுத்துக்கொண்டு சிறப்பித்தவரும்

உரையாசிரியர். உரையாசிரியர் வகுத்துக்கொடுத்த கோயில் நடைமுறைத் திட்டமானது மிக அருமையானது. அதனால் அந்தக் குடும்பத்தின் பிரிவினர்கள் எல்லாம் இம்மையில் உள்ள சாதனங்களையும், மறுமைச் சாதனங்களையும் இக்கோயிலின் மூலம் அடைந்து வருதல் யாவரும் கண்கூடாகக்கண்டு மகிழத்தக்கது.

நிறைவு விழாவைத் தங்கள் ஊரில் தனியாக வைத்து உரையாசிரியரைச் சிறப்பிக்க வேண்டுமென்ற கருத்தினால் மேற்படி குடும்பத்தவர்களாகிய மேற்படி தர்ம பரிபாலன சபையார்கள், விழாவைத் தங்கள் கோயிலில் வைத்துச் சிறப்பாகக் கொண்டாடினார்கள். காலை 10 மணி அளவில் தென்சித்தூர் கிராமத்து எல்லையில் விருந்து இன்னிசை வாத்யங்களுடனும், கோவில் விருதுகளுடனும் உரையாசிரியரை வரவேற்று அழைத்துச் சென்றார்கள். மேற்படி நகர்வலத்தில் விமானத்தில் நால்வர் திரு உருவப் படங்களுடன், உரைச்சுவடிகளையும் அலங்கரித்து வைக்கப்பட்டு எழுந்தருளச்செய்யப்பட்டன. இரண்டு யானைகள் ஊர்வலத்தின் முன்னே வழிகாட்டிச் சென்றன. பெருந்திரளான மக்கள் தேவாரபாராயணத்துடன் பின்னே வந்தார்கள். ஊர்வலம் திருக்கோயில் வாயிலை அடைந்தவுடன் பூர்ணகலச மரியாதையோடு கோயில் அர்ச்சகர்களான ஆதிசைவ மூர்த்திகள் எதிர்கொண்டு வரவேற்றார்கள். திருக்கோயில் சந்நிதானத்தை அடைந்தவுடன் நால்வர் திரு. உருவப்படத்துடன், உரைச்சுவடிகளையும் கோயிலில் எழுந்தருளச் செய்யப்பட்டன. ஸ்ரீ மீனாக்ஷிசுந்தரேஸ்வரருக்கும், ஸ்ரீ மீனாக்ஷி அம்மையாருக்கும் அபிஷேக வழிபாடுகள் செய்யப்பட்டு யாவருக்கும் அருள் பிரசாதங்கள் வழங்கப்பட்டன. மேற்படி கோயில் சொந்தக்காரர்களான முதலியார்கள், ஆண் பெண் அடங்கலாகக் குழுமிவந்து கூடிக் கடவுள்வாழ்த்து ஓதிய பின் உரையாசிரியரைச் சிறப்பித்தார்கள். வரவேற்புப் பத்திரங்களும், வாழ்த்துப் பத்திரங்களும் வாசித்து அளிக்கப்பட்டன.

உரையாசிரியருக்குப் பூசைசெய்வதற்குரிய வெள்ளியினாலான பூஜை வேதிகையும் ஒரு விலையுயர்ந்த சால்வையும், ஒரு பொன்னாடையும், ஒரு ஊற்றுப்பேனாவும் பரிசாக அளித்தார்கள். உரையாசிரியரின் மனைவியாருக்குப் பட்டுப்புடவையும் வழங்கிச் சிறப்புச் செய்தார்கள். உரையாசிரியர் நன்றி கூறும் முகத்தால் மேற்படி கோயில் நடைமுறை சிறப்புப்பற்றியும் கோயில் வழிபாட்டின் பயனாக மேற்படி கோயில்சொந்தக்காரர்கள் அனைவரும், கண்கூடாக அடைந்துவரும் இகபர சாதனங்களான நன்மைகளைப்பற்றியும், மேற்படி கோயில் சுமார் 30 ஆண்டுகட்கு முன் நீதிமன்றத்தில் விவகாரம் நடந்தபோது, கோயில் குடும்ப பாத்தியத்தின் சார்பாக அவற்றை வெற்றிகொண்டு பின்னே நடைபெறவேண்டிய ஒழுங்குகளைத் திட்டம் செய்து கொடுத்தும், பின்பு நடந்த கும்பாபிஷேகச் சிறப்புகளில் ஊழியம் செய்தும் தாம் செய்த சிறு பணிவிடைகள் இப்போது பெரும்பயன் தந்து விளங்குகின்ற சிறப்பைப் பற்றி தாம் அடைந்துள்ள பெரு மகிழ்ச்சியைப் பற்றியும் சிறப்பித்துப் பேசினார்கள். அதனோடு புராண உரையையும், புராணத்தின் சிறப்புக்களையும் பற்றியும் பேசி நன்றி கூறினார்கள். அதன்பின் கடவுள் வாழ்த்துடன் கூட்டம் நிறைவேறிற்று. மாலையில் நிழற்படம் எடுக்கப்பட்டன.

### 3. கோயமுத்தூர்

(1) கோயமுத்தூர் இடையர் வீதி மாரியம்மன் திருவிழாச் செயலாளர்கள் உரையாசிரியருடைய பேருரையின் அரிய சிறப்பைப் பாராட்டி 15-5-54ல் பாராட்டு நல்லிதழ் அளித்தார்கள்.

(2) கோயமுத்தூர் சைவப்பிரசங்க சாலையில் 1-6-54 அன்று சேக்கிழார் திருவிழாவின்போது திருமந்திரமணி நடிசைகிழார் அ. சிதம்பரனுர் அவர்கள் தலைமையில் கூடிய பெருஞ்சபையில் கோவைத் தமிழ்ச்சங்கத்தார் உரையாசிரியருக்கு உரையின் சிறப்பைப் பற்றி ஒரு வாழ்த்துரை வழங்கினுர்கள். அதன்பின் கோவை நகராண்மை உயர்நிலைப்பள்ளித் தலைமைத் தமிழாசிரியர் திரு. S. அருணுசலம்பிள்ளையவர்கள் ஒரு வாழ்த்துரை வழங்கிச் சிறப்பித்தார்கள். உரையாசிரியர் அவர்களுக்குத் தக்க மொழிகளால் நன்றி கூறினுர்கள்.

(3) கோவை ரத்னசபாபதிபுரம் ஸ்ரீ ரத்தின விநாயகர் கோயிலில் 16-6-54 அன்று கிருத்திகை விழாத்திருக்கூட்டத்தில் மேற்படி விழாக் கூட்டத்தார் உரையாசிரியரைப் பாராட்டி ஒரு வாழ்த்துப்பா வழங்கினுர்கள். அதற்கு உரையாசிரியர் ஏற்ற மொழிகளால் நன்றி கூறினுர்கள்.

(4) கோட்டை ஸ்ரீ சங்கமேசுவரர் கோயிலில் கந்தபுராணச் சொற்பொழிவு நிறைவு விழாவில் ஞானவிநாயகர் கோயில் அபிமானிகளால் உரையாசிரியர்க்கு ஒரு வாழ்த்துப்பத்திரம் வாசித்தளிக்கப்பட்டது.

## (6) செயற்குழுவினர் அறிக்கை

முன்னுரை : கோவை சிவக்கவிமணி திரு. C.K. சுப்பிரமணிய முதலியார் அவர்கள் ஏறக்குறைய 50 ஆண்டுகளாகப் பெருமுயற்சி செய்து வெளியிட்டிருக்கும் பெரியபுராணப் பேருரை கோவைத் தமிழ்ச் சங்கத்தின் வெளியீடாக வந்திருப்பது யாவரும் அறிந்த செய்தியாகும். அப்பேருரையானது அணிமையில் நிறைவாகும் நிலையைப் பெற்றிருந்ததினுல் அதன்பொருட்டு தக்கதொரு நிறைவேற்று விழா கொண்டாடவேண்டுமென்று கோவைத் தமிழ்ச்சங்கம் தீர்மானித்தது. அந்தவகையில் செயல் நடத்துவதற்காக கோவைத்தமிழ்ச்சங்கமானது ஒரு பொதுக்கூட்டம் கூட்டுவதற்கு முயற்சி எடுத்துக்கொண்டது 20 - 11 - 1953ல் சங்க அமைச்சர் ஒரு பொதுக்கூட்ட அறிவிப்பை வெளிப்படுத்தினுர். 1953 நவம்பர் 25-ம் தேதி புதன்கிழமை மாலை 6-30 மணிக்கு வைசியர் தெருவில் சைவப் பிரசங்கசாலை மண்டபத்தில் தமிழ் அன்பர்களின் பொதுக்கூட்டம் ஒன்று நடைபெறும் என்றும் அதில் பெரியபுராணப் பேருரை நிறைவேற்று விழா கொண்டாடப்படுவதைப் பற்றி வழிவகைகள் ஆலோசித்துத் தீர்மானிக்கப்படும் என்றும் அக்கூட்டத்திற்குக் கோவை திரு.C.S. இரத்தினசபாபதி முதலியார் அவர்கள் தலைமை தாங்குவார்கள் என்றும் அறிவிக்கப்பட்டது. அவ்வறிக்கை அன்பர்களுக்கு அனுப்பப்பட்டது.

மேற்கூறிய அறிக்கையின்படி 25-11-53ல் கோவைத் தமிழ்ச்சங்க மண்டபத்தில் திரு C.S. இரத்தினசபாபதி முதலியார் அவர்கள் தலைமையில் ஒரு பொதுக்கூட்டம் கூடிற்று. அக்கூட்டத்திற்கு 27 அன்பர்கள் வந்திருந்தார்கள். அப்பொழுது நிறைவேற்றிய தீர்மானங்களாவன : 1. பெரியபுராணப் பேருரையின் நிறைவேற்று விழாவைச் சிதம்பரத்தில் அடுத்த சித்திரைத் திங்களுக்கு முன்பாகத் தக்க முறையில் கொண்டாடவேண்டியது. 2. அதற்காக அடியிற்கண்ட கனவான்கள் செயற்குழுவினராக தேர்ந்தெடுக்கப்பட்டார்கள்.

**அருள் ஆணையாளர்கள்**

1. ஸ்ரீலஸ்ரீ மகா சந்நிதானங்கள், திருவாவடுதுறை ஆதீனம், திருவாவடுதுறை.
2. ,, மகா சந்நிதானங்கள், தருமபுர ஆதீனம், தருமபுரம்.

3. ,, மகா சந்நிதானங்கள், திருஞான சம்பந்த சுவாமிகள் மடாலயம், மதுரை.

4. ,, மகா சந்நிதானங்கள், திருவண்ணாமலை ஆதீனம், குன்றக்குடி.

5. ஸ்ரீமத் காசிவாசி அருள் நந்தித் தம்பிரான் சுவாமிகள், ஸ்ரீகாசிமடம் அதிபர், திருப்பனந்தாள்.

**புரவலர்கள்**

உயர்திரு. இராஜா, சர், எம். ஏ. முத்தையா செட்டியார் அவர்கள், செட்டி நாட்டு அரசர், சென்னை,

உயர்திரு. திவான்பகதூர், டாக்டர், சர், ஏ. இலட்சுமணசுவாமி முதலியார் அவர்கள், துணை வேந்தர், சென்னைப் பல்கலைக் கழகம்,

உயர்திரு. டாக்டர், சர், சி. பி. இராமசாமி ஐயர் அவர்கள், துணைவேந்தர், அண்ணாமலைப் பல்கலைக் கழகம்.

உயர்திரு. சர், கந்தையா வைத்தியநாதன் அவர்கள், அமைச்சர், கொழும்பு.

உயர்திரு. நடேசம் பிள்ளை அவர்கள், அமைச்சர், கொழும்பு.

**தலைவர் :**

திரு. சர். பி. டி. ராஜன் அவர்கள், பார்அட்லா, மதுரை.

**துணைத் தலைவர்கள் :**

திரு. எஸ். சுப்பராய முதலியார் அவர்கள், பெருநிலக்கிழார், சீர்காழி.

திரு. டி. எஸ். தியாகராஜ முதலியார் அவர்கள், எம். ஏ., பெருநிலக்கிழார், வடபாதிமங்கலம்.

திவான்பகதூர் சி. எஸ். இரத்தினசபாபதி முதலியார் அவர்கள், நூல் ஆலை அதிபர், கோவை.

திரு. ஏ. இராமசாமி நாயுடு அவர்கள், சென்னை முன்னாள் மேயர், சென்னை.

திரு. டி. எஸ். அவிநாசிலிங்கம் செட்டியார் அவர்கள், பி.ஏ., பி.எல்., எம்.பி. தலைவர், சென்னை தமிழ் வளர்ச்சிக் கழகம், ஸ்ரீ இராமகிருஷ்ண வித்யாலயம்,

**செயலாளர் :**

இராவ்பகதூர் திரு. சி. எம். இராமச்சந்திரன் செட்டியார், அவர்கள், பி.ஏ., பி. எல். கோவை நிலையம், கோவை.

**துணைச் செயலாளர் :**

குடிசைகிழார் திரு ஏ. சிதம்பர முதலியார் அவர்கள், (ரிட்டயர்ட் சர்கில் இன்ஸ்பெக்டர் ஆப் போலிஸ்) கோவை.

**பொருட்காப்பாளர் :**

திரு. எம். எஸ். பழனியப்ப முதலியார் அவர்கள், பி.ஏ., இராஜவீதி, கோவை.

**உறுப்பினர்கள் :**

பேராசிரியர் திரு. ஏ. இராமநாதம் பிள்ளை அவர்கள், எம்.ஏ., அண்ணாமலை பல்கலைக் கழகம், அண்ணாமலைநகர்.

திரு. கே. அரங்கசாமி முதலியார் அவர்கள், பி. ஏ., முன்னாள் டிப்டி கலெக்டர், பழனி.

திரு. எஸ். சச்சிதானந்தம் பிள்ளை அவர்கள், பி. ஏ., எல். டி., சென்னை.

பன்மொழிப்புலவர் திரு. டி. பி. மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்கள், எம்.ஏ. பி. எல்., எம். ஓ. எல். சென்னை.

டாக்டர் திரு. மு. வரதராசனார் அவர்கள், எம்.ஓ. எல் , பிஎச். டி. சென்னை.

பேராசிரியர் திரு. ஆர். பி. சேதுப் பிள்ளை அவர்கள், பி.ஏ., பி.எல்., சென்னைப் பல்கலைக் கழகம், சென்னை.

திவான்பகதூர் திரு டி. எம். நாராயணசாமி பிள்ளை அவர்கள், எம்.ஏ.,பி.எல்., எம். எல். சி., திரிசிரபுரம்.

திருமதி ஈ. த. இராஜேசுவரி அம்மையார், எம்.ஏ., எல்.டி. பேராசிரியை, குயின் மேரிஸ் காலேஜ்,சென்னை.

இராவ்சாகிப் திரு. டி. ஆர். சுந்தரம் பிள்ளை அவர்கள், பி.ஏ., பி.எல்., "இராமலிங்க நிலையம்", கோவை.

திருமதி. புஷ்பம் நடராஜ நாடார் அவர்கள், சிவகாசி.

திரு. டாக்டர் சி. நஞ்சப்பா அவர்கள், முன்னாள் நகராட்சித் தலைவர்,கோவை.

திவான்பகதூர் திரு.ஆர்.வி. கிருஷ்ணய்யர் அவர்கள்,பி.ஏ.,பி.எல்.மயிலாப்பூர்.

திரு. வி. சி. சுப்பைய கவுண்டர் அவர்கள், ஸ்ரீ ஞானம்பிகை மில் அதிபர், வெள்ளக்கிணறு.

திரு. பி. முத்துக்குமாரசாமி முதலியார் அவர்கள், பெருநிலக்கிழார், கோவை.

மேடை தளவாய் திரு. எம். டி. டி. குமாரசாமி முதலியார் அவர்கள், பெரு

திரு. கே. கைலாசம் பிள்ளை அவர்கள், பெருநிலக்கிழார், மாயூரம்.

டாக்டர் திரு. எம். ராஜமாணிக்கம் அவர்கள், எம்.ஓ.எல். பிஎச்.டி, மதுரை.

டாக்டர் திரு. எ. சிதம்பரநாத செட்டியார் எம்.ஏ., பிஎச்.டி. அண்ணாமலைநகர்.

திரு. கரு. முத்து. தியாகராஜ செட்டியார் அவர்கள், மீனாட்சி மில்ஸ்,மதுரை.

தமிழ்ப்புரவலர் திரு. மெய்யப்ப செட்டியார் அவர்கள், திருவையாறு.

திரு. எ. ஆர். எல். வி. நடராஜன் செட்டியார் அவர்கள், கோயமுத்தூர்.

திரு. எம்.டி. குழந்தைவேல் செட்டியார் அவர்கள், பெருநிலக்கிழார், சீர்காழி.

குளித்தலை, திரு. பி. வைத்தியலிங்க முதலியார் அவர்கள்,நிலக்கிழார், கொரூர்.

திரு. பழனியப்ப முதலியார் அவர்கள், அதிபர்,தேவாரப் பாடசாலை,சிதம்பரம்.

திரு. எஸ். தருமலிங்க முதலியார் அவர்கள், மதுரை.

3. செயற்குழு விழாவினை தக்கமுறையில் நடத்துவதற்கு வேண்டிய செயல்களைச் செய்யவேண்டியது.

இம்மூன்று தீர்மானங்களையும் நிறைவேற்றியபிறகு கூட்டம் கலைந்தது.

மேற்கண்ட தீர்மானங்களின்படி செயற் குழுவினர் 10-12-1953ல் ஒரு அறிக்கையை வெளியிட்டனர். அந்த அறிக்கையில் மேலே கண்ட தீர்மானங்கள் எழுதப் பட்டுப் பொதுமக்களுக்கு ஒருவேண்டுகோள் முறையில் திருவிழா நடத்துவதற்குத் தங்களால் ஆன அன்புகூர்ந்த உதவிகளைப் புரியும்படி அவர்கள் கேட்டுக்கொள்ளப்பட்டார்கள்.

அந்த இரண்டாவது அறிக்கை தமிழ்நாடு முழுவதும் பரப்பப்பட்டது.

மேற்படி அறிக்கையின் பலனாகத் தமிழ்நாட்டிலிருந்து பல பெரியார்கள் திருவிழா நடத்த உத்தேசித்ததைக் குறித்து மிகவும் பாராட்டித் தங்கள் சம்மதத்தைத் தெரியப்படுத்தினார்கள். பிறகு மேற்கொண்டும் பணியாற்றுவதற்காக 14-2-54ல் மூன்றாவது அறிக்கை வெளியிடப்பட்டது. அவ்வறிக்கை பொதுமக்கள் திரு

விழாவில் ஆர்வம் எடுத்துக்கொண்டு செயல்புரியும் முறையில் எழுதப்பட்டது. அந்த அறிக்கை தமிழ்நாடு முழுவதும் பரப்பப்பட்டது. வெளியிடுவதற்கு வேண்டிய அச்சுக்கடிதங்கள் சுவரொட்டிகள், அட்டைகள் முதலியவைகளெல்லாம் அச்சடிக்கப்பட்டன. அன்பர்கள் மிகுந்த ஆர்வம் கொண்டு தங்களாலான உதவிகளை அனுப்பவும் தொடங்கினார்கள்.

சேக்கிழார் பெருமான் பெரியபுராணத்தை நிறைவேற்றி அனபாயச் சோழர் முன்னிலையில் சுவடிகளை யானைமீது ஊர்வலம் நடத்தின பெரும் திருநாளான சித்திரைத் திங்கள் திருவாதிரையின்போது இப்பெருவிழாவும் நடத்தவேண்டுமென்று யாவராலும் ஒத்துக்கொள்ளப்பட்டு 6-5-54ல் வைதீக விழாவும் 7-5-54ல் லௌகீக விழாவும் நடத்தவேண்டுமென்று முடிவுசெய்யப்பட்டது. அந்தச் செய்தி அன்பர்களுக்கெல்லாம் வெளியிட்டதன் பயனாக பொதுமக்களெல்லாரும் திருவிழாவில் கலந்துகொள்ள மிகுந்த ஆர்வத்துடன் எழுதத் தொடங்கினார்கள். தமிழ்நாட்டில் உள்ள தமிழ்ச் சங்கங்களும் சமயச் சங்கங்களும் மிகுந்த ஆர்வத்துடன் ஒத்துழைத்தார்கள். தனிப்பட்ட தமிழன்பர்களும், சமய அன்பர்களும் மிகுந்த ஊக்கத்தோடு ஒத்துழைத்தார்கள். ஆதீனங்களிலிருந்தும், பல்கலைக் கழகங்களிலிருந்தும், சிதம்பரம் பொது தீட்சதர் கழகத்திலிருந்தும் ஆதரவு கிடைத்தது. திருவிழாவின் நிகழ்ச்சிகள் விவரமாக எழுதப்பட்டு எல்லா அன்பர்களுக்கும் வெளியிடப்பட்டன. செயற்குழுவின் பொருளாளர் திரு.எம். எஸ். பழனியப்ப முதலியாரும், செயலாளர் சி. எம். இராமசந்திரன் செட்டியாரும் சிதம்பரம் முதலிய இடங்களுக்குச் சென்று அண்ணாமலைப் பல்கலைக் கழகத் தலைவர்கள், சிதம்பரம் பொது தீட்சதர்கள் முதலானவர்களைக்கண்டு நடத்தவேண்டிய திட்டங்களை ஒழுங்குபடுத்தினார்கள். செயலாளர் 8-4-53ல் விருத்தாசலம் சென்றபோது 5-நாட்கள்வரை வேண்டியவர்களுக்கெல்லாம் கடிதங்கள் எழுதியும் 11-4-54ல் சிதம்பரம் சென்று அங்கே எல்லாப் பெரியவர்களையும் கண்டு செய்யவேண்டிய ஏற்பாடுகளை யெல்லாம் செய்தும் முடித்தார்கள். தமிழ்நாடு, ஈழநாடு, வடநாடு முதலிய இடங்களில் உள்ள சங்கங்கள், பெரியார்கள் முதலியவர்களுக்கெல்லாம் நூற்றுக்கணக்கில் கடிதங்கள் அனுப்பப்பட்டன. மேலும் ஆங்கிலம், தமிழ், தினசரிகள், மாசிகைகள் முதலியவைகள் எல்லாவற்றிலும் திருவிழா நிகழ்ச்சி வெளியிடப்பட்டன.

பொருளாளரும், செயலாளரும் சிதம்பரத்திற்கு மூன்று நாட்களுக்கு முந்தியே சென்று அங்கு நடத்தவேண்டிய செயல்களை யெல்லாம் கவனித்து வந்தார்கள் இந்த முயற்சிகளின் பயனாகப் பேருரைப் பெருவிழாவானது சிதம்பரத்தில் 6 5-54, 7-5-54 என்ற இரண்டுநாள்களிலும் வெகுவிமரிசையாக நடந்தேறியது. கணக்கற்ற மக்கள் நேரில் வந்திருந்து ஆசிகள் கூறினதன்றி அடியிற்கண்டபடி அஞ்சல் மூலமாகவும், தந்தி மூலமாகவும் வாழ்த்துக்களும் செய்திகளும் அனுப்பினார்கள்.

1. தந்திகள் பதினொன்று. 2. அட்டை அஞ்சல் எட்டு. 3. அச்சடித்த செய்யுள்வாழ்த்து பதினெட்டு. 4. கையெழுத்துச் செய்யுள் இருபது. 5. உரைநடை அச்சு எட்டு. 6. உரைநடை எழுத்து அறுபத்தைந்து. 7. ஆங்கிலம் பதினொன்று. ஆக 141 வாழ்த்துக்கள் வந்தன. விழாவின் பின்னரும் பல வாழ்த்துக்கள் வந்தன.

மேற்கூறிய வாழ்த்துக்கள் இலங்கை திருநெல்வேலி, இராமநாதபுரம், மதுரை, தஞ்சை, திருச்சி, சேலம், கோவை, நீலகிரி, ஆற்காடு, செங்கல்பட்டு, சென்னை, திருவிதாங்கூர், ஆந்திரம், டெல்லி, பம்பாய், புதுச்சேரி, முதலிய இடங்களிலிருந்

தெல்லாம் வந்தன. மேலும் அரசாங்க அமைச்சர்கள், நீதிபதிகள், ஆதீனங்கள், தமிழ்ப் பேராசிரியர்கள், அலுவலாளர்கள், ஆராய்ச்சியாளர்கள், துறவிகள், சிலப் பெரியார்கள் முதலான பலசிறப்பட்டோர்களும் தங்கள் ஆசிகளைத் தெரியப்படுத்தினார்கள். பத்திரிகைகளும், பேருரையின் சிறந்த பகுதிகளை விளக்கி எழுதின. இந்த வகையில் செயற்குழுவானது தன்னுடைய கடமையை நிறைவேற்றியது.

சிதம்பரத்தில் நடந்த பேருரைத் திருவிழா நிகழ்ச்சிகள் அடியிற்கண்டவை:—

6-5-54 காலை 5 மணி முதல் 7 மணி வரை சிவகங்கைக் கரையில் சிவபூஜா துரந்தரர்கள் 80 பேர் சிவபூஜை செய்து பாராயணம் செய்தனர். அவர்களுக்கு வேண்டிய வசதிகள் செய்யப்பட்டன.

7-மணி முதல் 8-மணிவரை திருவிழாவிற்கு வந்த அன்பர்களுக்குச் சிற்றுண்டி வழங்கப்பட்டது.

8-மணி முதல் 10 மணிவரை பேருரைச் சுவடிகள் ஆயிரக்கால் மண்டபத்திலிருந்து யானைமீது வாத்திய கோஷத்துடன் ஊர்வலம் நடத்தப்பட்டது. திருவெண்காட்டு திரு. சுப்பிரமணியப்பிள்ளை அவர்களுடைய வாத்தியமும், கும்பகோணம் கோபால்சாமி செட்டியார் பாண்டு வாத்தியமும், அடியார்கள் பாடல்களும், தேவார பஜனையும், சாதுக்கள் கோஷ்டியும் சென்றன. ஊர்வலத்தில் பெருந்திரளான சிவனடியார்கள் கொடிகளுடன் கலந்துகொண்டது கண்கொள்ளாக் காட்சியாக இருந்தது.

10 முதல் 12 வரை திருக்கோயில் ஆராதனை, நடராஜா அபிஷேகம், பாவாடை வழிபாடு முதலியன. ஆராதனை இடையில் தேவசபையில் பொது தீக்ஷிதர்கள் உரை ஆசிரியருக்குப் பொன்னாடை போர்த்திப் புகழ்மாலை சூட்டினார்கள். உரையாசிரியர் அதற்கு நன்றி கூறினார்.

12 முதல் 3 வரை வந்த அன்பர்களுக்கெல்லாம் மாகேசுவர பூஜை நடந்தது. தேவார பாடசாலை அதிபர் திரு. பழனியப்ப முதலியாரும் அவர்களது சகோதரர் சின்னையா முதலியாரும் திரு. வைத்திலிங்கஞ் செட்டியாரும் அந்தக் கைங்கிரியத்தை மேற்கொண்டார்கள். ஏழைமக்களுக்குத் திருப்பனந்தாள் மடாதிபதிகள் அன்னதானம் செய்தார்கள். தேவாரப்பாடசாலை முதலியார்கள் மூவர் சகோதரர்களும் பெருமுயற்சி எடுத்துக்கொண்டு 2 நாட்களிலும் மகேசுவரபூஜையும் அன்னதானமும் மிகச் சிறப்பாக நடத்தி வைத்தார்கள்.

மாலை 5 மணி அளவில் ஆயிரக்கால் மண்டபத்தில் திருக்கூட்டம் கூடிற்று. மண்டபத்து முன்னணியில் இறைவன் திருவுருவப்படமும் அதற்கு முன்னர்ப் பேருரைச் சுவடிகள் அலங்காரத்துடனும் வைக்கப்பட்டிருந்தன. படிகளில் அன்பர்கள் வீற்றிருந்தனர். திருக்கூட்டம் தேவார வோதுதலுடன் தொடங்கப்பெற்றது. மதுரை ஞானசம்பந்தராதீனம் ஸ்ரீ சோமசுந்தர தேசிகர் தலைமை வகித்தனர். திருக்கூட்டத்தாரை, வரவேற்புத் தலைவர் திரு. பொன்னம்பலத் தியாகராஜன் (பி. டி. ராஜன்) அவர்கள் வரவேற்றுப் பேசினார்கள். பிறகு குன்றக்குடி தவத்திரு அருணாசல தேசிகர் சார்பில் சபாபதித் தம்பிரான் அவர்கள் ஆசியுரை வாசித்துப் பிரசாதம் வழங்கினார்கள். பிறகு திருக்கூட்டத்தலைவரவர்கள் தங்கள் தலைமையுரையை வாசித்தார்கள். அதன்பின் அடியிற்கண்ட பெரியார்கள் ஆசியுரைகளை அருளிச் செய்தார்கள்.

1. தருமபுர ஆதீனத்துச் சார்பில் திரு. இராமலிங்கத் தம்பிரான் ஆசியுரை வாசித்துப் பொன்னாடை போர்த்தினார்கள்.

2. குன்றக்குடி அடிகளார் சார்பில் சபாபதித் தம்பிரான் பொன்னாடை சாத்தினார்கள்.

3. மயிலம் திருமடத்துச் சார்பில் வித்வான் சிவசுப்பிரமணியனார் ஆசியுரை நிகழ்த்திப் பொன்னாடை சாத்தினார்கள்.

4. திருப்பேரூர் சாந்தலிங்க அடிகளார் ஆதீனச் சார்பில் திரு. இராமசாமி அடிகளார் வாழ்த்துரை வழங்கினார்கள்.

5. முப்பொழுதும் திருமேனி தீண்டுவார் சார்பில் திருவாடானை ஈசான சிவாச்சாரியார் வாழ்த்துரை வழங்கினார்கள். பிறகு தமிழ் வள்ளல் மெய்யப்ப செட்டியார் சார்பில் வித்வான் திரு. டி. பி. மீனாட்சி சுந்தரனார் அவர்கள் பொன்தகடு வேய்ந்த திருத்தொண்டர் புராணப் பதிப்பை உரையாசிரியருக்குப் பரிசாக வழங்கினார்கள். அதன்பின் உரையாசிரியர் அவர்கள் நன்றி கூறினார்கள். செயற்குழுவின் செயலாளர் எல்லாருக்குமாக நன்றி கூறின பிறகு இறைவணக்கத்துடன் முதல்நாட் கூட்டம் முடிவுபெற்றது. திருவிழாவிற்கு வந்திருந்த அன்பர்களுக்கெல்லாம் இரவு உணவு பழனியப்ப முதலியார் தேவாரப் பாடசாலையில் வழங்கப்பட்டது.

7-5-54 காலையில் திருக்கோயிலில் திருமுறைப் பாராயணம் செய்யப்பட்டது. 7 முதல் 8 வரை அன்பர்களுக்குச் சிற்றுண்டி வழங்கப்பட்டது.

8-10. ஞானப்பிரகாசத் திருக்குளத்துக் கரையில் உள்ள சேக்கிழார் ஆலயத்திலிருந்து சேக்கிழார் திருவுருவம் திருஉலா கொண்டு செல்லப்பட்டது. யானையின் மீது பேருரை எழுந்தருளச் செய்வித்து ஆலயத்திலிருந்து திருவீதிகள் வழியாக எழுந்தருளப் பெற்றன. இன்னிசை, தேவார பஜனை முதலிய சிறப்புக்களோடு தேவாரபாடசாலை வந்ததும் அறுபத்துமூவர் திருவுருவப் படத்துடன் திருஉலா நடைபெற்றது.

10-12. திருக்கோயில் வழிபாடு, அபிஷேக ஆராதனைகள், திருஞானசம்பந்தத் திருஉலா, ஞானப்பால் வழங்கின ஐதீகம் முதலியவைகள் நடைபெற்றன.

பகல் 1 மணி. வந்த அன்பர்களுக்கெல்லாம் முந்தியநாள் போலவே மகேஸ்வர பூஜையும் அன்னதானமும் செய்யப்பட்டது.

மாலை 5 மணிக்கு ஆயிரக்கால் மண்டபத்தில் பொதுக்கூட்டம் கூட்டப்பட்டது. முதலில் பெரியார்களுடைய நிழற்படம் எடுக்கப்பட்டது. திருக்கூட்டமானது தேவார ஓதுதலோடு தொடங்கிற்று. முதலில் திரு. சீர்காழி சுப்பராய முதலியார் அவர்கள் வரவேற்புரை நிகழ்த்தினார்கள். உரையாசிரியருக்குப் பொன்னாடை போர்த்தினார்கள். பிறகு தவத்திரு தலைவரவர்கள் முன்னுரை நிகழ்த்தினார்கள். சென்னைப் பல்கலை கழகத்தின் சார்பாக திரு. டி. எம். நாராயணசாமி பிள்ளையவர்கள் உரையாசிரியர் அவர்களுக்கு ரூ. 1000/-பொற்குவியல் அளித்தார்கள். பிறகு பி. டி. ராஜன் அவர்கள் வாழ்த்துரைகளைத் தொடங்கிப் பேசினார்கள். அடியிற் கண்டவர்களும் வாழ்த்துரை வழங்கினார்கள்.

| | | |
|---|---|---|
| திரு. ஆர். பி. சேதுபிள்ளை | — | சென்னைப் பல்கலைக் கழகம் |
| ,, டி. எம். நாராயணசாமி பிள்ளை | — | ஷை |
| ,, எ. ராமநாதம் பிள்ளை | — | அண்ணாமலை பல்கலைக் கழகம் |
| ,, எ. சிதம்பரநாதன் செட்டியார் | — | ஷை |
| ,, ஜி. சுப்பிரமணிய பிள்ளை | — | ஷை |
| ஈரோடு-பி. மீனாட்சி சுந்தர முதலியார் | — | அருள்நெறித்திருக்கூட்டம் |
| மதுரை-திருமதி புஷ்பம்மாள் நடராஜன் | — | சமயச் சார்பில் |
| சென்னை-திருமதி பாப்பாத்தி அம்மாள் | — | ஷை |
| திருவாசகமணி-கே. எம். பாலசுப்பிரமணியம் | — | சொற்பொழிவாளர் சார்பில் |

சிதம்பரம்-என். தண்டபாணி பிள்ளை — சிதம்பரப் பெரியார்கள் சார்பில்
பி. இராமய்யா பிள்ளை முதலியோர் — வெளியூர் புலவர்கள் சார்பில்.

அதன்பிறகு கோவை திரு. B. முத்துக்குமாரசாமி முதலியார் அவர்களும் ஆனைமலை திரு. எ. எஸ். வெங்கடாசல முதலியார் அவர்களும் உரையாசிரியருக்குப் பொன்னாடை போர்த்திப் பேசினார்கள். திருக்குடந்தைச் சிவநேசர் திருக்கூட்டச் சார்பில் வாழ்த்துப் பாக்கள் வழங்கப்பட்டன.

மேலும் பல அன்பர்கள் தாங்கள் கொண்டுவந்திருந்த வாழ்த்துப்பாக்களைப் படித்து மாலை சூட்டினார்கள். பின்னர் உரையாசிரியர் சிவக்கவிமணியவர்கள் பெரிய புராணப் பேருரையில் கண்ட சில சிறப்புப் பொருள்களை எடுத்துரைத்து எல்லாருக்கு மாக நன்றி கூறினார்கள். அவ்வாறு அவர்கள் கூறியபோது சிற்சில இடங்களில் சில சொற்களுக்குப் பொருள் விளங்காதபோது மறுநாள் இறைவனைச் சிந்திக்க உய்த்து உணர்வித்த வரலாறுகளை எடுத்துக் கூறினார்கள். அவைகளை மிகவும் உணர்ச்சி ததும்ப கூறினவிதம் அவையோர்களை உருகச் செய்தது. தள்ளாத வயதில் வேறு எவராலும் இயற்றவொண்ணாத அருஞ்செயலை இயற்றிய பெரியார் திருவுருவமானது அச்சபை யில் திவ்விய தோற்றத்தோடு விளங்கிற்று.

பிறகு முடிவாகச் செயலாளர் அவர்கள் எல்லாருக்கும் நன்றி கூறினார்கள். திரு விழாவில் பங்கு எடுத்துக்கொண்ட ஒவ்வொருவருக்கும் மிகுந்த பாராட்டுகள் கூறித் தக்கவாறு நன்றியுரையை நிகழ்த்தினார்கள். பிறகு கடவுள் வாழ்த்தோடு பொதுக் கூட்டம் முடிவு பெற்றது.

இந்த வகையில் பெரிய புராணப் பெருவிழா வெகு பெருமையோடு நடை பெற்றது. தமிழ்நாட்டிலிருந்து பல பகுதிகளிலிருந்தும் கணக்கற்ற மக்கள் திருவிழா விற்கு எழுந்தருளி அதில் ஈடுபட்டார்கள். திருக்கோயில் சோழர் காலத்தில் இருந்த பெருமையை இந்த ஆண்டில் மீண்டும் கொண்டிருந்தது என்றால் அது மிகையல்ல என்று கூறவேண்டும். இதற்குக் காரணம் சைவ மக்களின் ஒத்துழைப்பும் இறைவன் பேரருளுமே என்று கூறலாம்.

பேருரைப் பெருவிழாவிற்குத் தமிழ் மக்கள் எல்லாருமாக உதவிபுரிந்திருக் கின்றார்கள். பணமாகவும், மற்றும் பொருள்களாகவும், ஊழியமாகவும் துணைபுரிந்திருக்கின்றார்கள். இரண்டு பல்கலைக் கழகத்தினர்களும் செய்த உதவி களுக்கு அளவில்லை. அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தார்கள் சிறப்பாக அதன் உதவித் துணைவேந்தர் திரு. இராமநாதன் பிள்ளையவர்கள் செய்த உதவி எழுதற்பாலதன்று. அண்ணாமலை நகரில் தங்கியிருந்த பெருமக்களுக்கு இடம், உணவு, முதலிய எல்லா வசதிகளையும் தந்தார்கள். சிதம்பரப் பெருமக்கள் செய்த உதவி மிகப் பெரியது. தீக்ஷி தர்கள் மிக ஆர்வத்தோடு இதில் ஒத்துழைத்தார்கள். சிவபூஜை, பந்தல் முதலிய வசதி களுக்காக திரு. கணபதியா பிள்ளை மிகவும் பாடுபட்டார்கள். தருமபுரம் ஆதீனத்தார் கள் யானையும், திருக்கடவூர் கே. கைலாசம் பிள்ளையவர்கள் நாயனம் முதலியவற்றிற் குப் பல உதவிகள் புரிந்தார்கள். திருச்சி கொசூர்-கர்ணம் திரு. பி. வைத்தியலிங்க முதலியார் எலக்ட்ரிக் விளக்குகளுக்கும் நாதசுரம் வித்வானுடைய வசதிகளுக்கும் உதவி புரிந்தார்கள். மாகேசுவர பூஜை, அன்னதானம் முதலிய வசதிகளைச் செய்த பெரியார்களை ஒருபோதும் மறக்கமுடியாது. அலங்காரம், விளக்கு முதலிய வசதி தந்தவர்கள் நன்றாக உழைத்தார்கள் எதிர்பாராத அளவில் பொன்னாடை போர்த்தின பெருமக்களை ஒருகாலமும் மறக்கமுடியாது. அளவுகடந்த வாழ்த்துப்பாக்களை அனுப்பிய பெருமக்களின் ஆர்வம் மிகப் பெரியது. இவைகளெல்லாவற்றுக்கும்

பெரிய புராணத்தின் பெருமையும் அதன் பேருரையின் அருட்பொருளுமே காரண மாகும். இந்த இருபதாவது நூற்றாண்டில் பனிரெண்டாவது நூற்றாண்டைப் போலவே மக்களிடையே தெய்வம் கொள்கையும், அதில் ஈடுபாடும் இருக்கிறது என்று இந்தத் திருவிழாவின் வெற்றியே நன்கு புலப்படுத்தும். இதற்கெல்லாம் அடிப் படைக் காரணம் பேருரையின் அருள்மிகு உரையாசிரியர் அவர்களின் தளரா ஊக்க மும், குறையா அன்பும், மறையா அருளும், முன்னின்று உணர்த்தியதே யாகும்.

சைவம் தழைக்க, தமிழ் மொழி வளர, பொருள் இலங்க, இறைதாள் பொலிய, அடியார்கள் வரலாறுகள் பரக்க, ஆஸ்தீகம் நிலைக்க, உரையாசிரியர் நன்மொழி விளங்க, இறைவன் திருவடி போற்றுவாம்.

பேருரை வாழ்க!

செயலாளன் (C. M. R.)

## பெரிய புராணப் பேருரை விழாக்கமிட்டி வரவு செலவு கணக்கு

| நன்கொடைகள் | | ரூ. | அ. |
|---|---|---|---|
| 1. திரு. பி. முத்துக்குமாரசாமி முதலியார், கோயமுத்தூர் | ... | 250 | 0 |
| 2. ,, சி. எஸ். ரத்தினசபாபதி முதலியார், ,, | ... | 250 | 0 |
| 3. ,, எம். எஸ். பழனியப்ப முதலியார், பி.ஏ. ,, | ... | 250 | 0 |
| 4. ஸ்ரீமதி எம். அன்னபூரணி அம்மாள். ,, | ... | 250 | 0 |
| 5. சிவக்கவிமணி. சி.கே சுப்பிரமணிய முதலியார் ,, | ... | 101 | 0 |
| 6. திரு. சி. என். நாகப்ப கவுண்டர், ,, | ... | 100 | 0 |
| 7. ,, என். மகாலிங்கம் எம்.எல்.ஏ. பொள்ளாச்சி | ... | 50 | 0 |
| 8. ,, வி.இராமசாமி முதலியார், ஆனைமலை. | ... | 50 | 0 |
| 9. ,, டி. எஸ். அவினாசிலிங்கம், எம்.பி., கோயமுத்தூர் | ... | 25 | 0 |
| 10. ,, சிவசுப்பிரமணிய பிள்ளை, தூத்துகுடி | ... | 25 | 0 |
| 11. ,, கே. டி. வெற்றிவேலு முதலியார், கோயமுத்தூர் | ... | 25 | 0 |
| 12. ,, எஸ். பஞ்சாத முதலியார், சென்னை. | ... | 25 | 0 |
| 13. ,, அருணாசல முதலியார், ஆனைமலை | ... | 25 | 0 |
| 14. ,, ஏ. ஆர். மல்லப்ப முதலியார் ,, | ... | 20 | 0 |
| 15. ,, சீர்காழி. எஸ். சுப்பராய முதலியார் | ... | 20 | 0 |
| 16. ,, ஆர். கந்தசாமி மூப்பனார், கும்பகோணம் | ... | 20 | 0 |
| 17. ,, சி. எம். குப்பண்ண முதலியார், ஆனைமலை | ... | 20 | 0 |
| 18. ,, ஆர். வி. கிருஷ்ண ஐயர், சென்னை | ... | 15 | 0 |
| 19. ,, சி. கிருஷ்ணமூர்த்தி முதலியார், சீர்காழி | ... | 15 | 0 |
| 20. ,, ச. முத்துசாமி பிள்ளை | ... | 11 | 0 |
| 21. ,, வி. எம். எஸ். பி. சுப்பிரமணிய செட்டியார் | ... | 10 | 0 |
| 22. ஸ்ரீமதி சிலம்பாத்தாள், ஆனைமலை | ... | 10 | 0 |
| 23. ,, சீனிவாச முதலியார், சீர்காழி | ... | 10 | 0 |
| 24. ,, ஏ. எஸ். இரத்தினவேலு, வேட்டைக்காரன் புதூர் | ... | 10 | 0 |
| 25. ஸ்ரீமதி சூரியம்மாள், ஆனைமலை | ... | 10 | 0 |
| 26. ,, அபிராமி அம்மாள் | ... | 5 | 0 |
| 27. திரு. எம். ஆர். வெங்கடாசல முதலியார், கோயமுத்தூர் | ... | 5 | 0 |

| | | | | ரு. | அ. |
|---|---|---|---|---|---|
| 28. | ,, | எம். வானமாமலை பிள்ளை | ... | 5 | 0 |
| 29. | ,, | பி. பழனிசுந்தரம், கோயமுத்தூர் | ... | 5 | 0 |
| 30. | ,, | சே. ராமலிங்கம், ,, | ... | 5 | 0 |
| 31. | ,, | எஸ். திருநாவுக்கரசு முதலியார், கோயமுத்தூர் | ... | 5 | 0 |
| 32. | ,, | ஆறுமுகக் கவுண்டர் | ... | 3 | 0 |
| 33. | ,, | என். முத்தையா முதலியார், மாயவரம் | ... | 2 | 0 |
| 31. | ,, | தங்கவேலுபிள்ளை | ... | 2 | 0 |
| | | ஆகமொத்தம் | | 1634 | 0 |

விழாச் செலவு

| | | ரு. | அ. | பை. |
|---|---|---|---|---|
| பிரயாணச் செலவுகள் | ... | 43 | 3 | 0 |
| பூமாலைகள் முதலியன | ... | 464 | 0 | 0 |
| அச்சுக்கூலி | ... | 170 | 5 | 6 |
| ஊர்வலம் பாண்டு செலவு | ... | 132 | 12 | 0 |
| சிவனடியார், தீக்ஷிதர் முதலியோர் சம்பாவனை, ஆட்கள் வெகுமானம் | ... | 269 | 8 | 0 |
| போட்டோ செலவு | ... | 175 | 12 | 6 |
| சாபபாடு, காப்பி செலவுகள் | ... | 337 | 4 | 0 |
| தபால், தந்தி | ... | 11 | 0 | 3 |
| கோயில் செலவுகள் | ... | 430 | 2 | 9 |
| ஆகமொத்தம் | | 1634 | 0 | 0 |

C. M. இராமச்சந்திரன் செட்டியார்
செயலாளர்.

M. S. பழனியப்ப முதலியார்,
பொருட்காப்பாளர்.